# மகாத்மா காந்தி நூல்கள்

## 16

மீராபென், ராஜகுமாரி அமிருத் கௌர், மணிபென் பட்டேல், எஸ்தர் ஃபேரிங் ஆகிய சகோதரிகளுக்கு குறிப்பாக அவரவர் சொந்தப் பிரச்னைகளையும், பொதுவாக அரசியல் பிரச்னைகளையுமொட்டி மகாத்மா காந்தி எழுதிய சற்றேறக் குறைய ஆயிரம் கடிதங்கள் அடங்கி யுள்ளது இந்நூல்.

வெளியிடுவோர் :

**காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்**

[தமிழ் நாடு காந்தி நினைவு நிதி ஆதரவில்]

சர்க்கார் எஸ்டேட், மவுண்ட் ரோடு,

சென்னை–2

# பதிப்புரை

இத் தொகுப்பில், மீராபென் (மிஸ் ஸ்லேடு), ராஜகுமாரி அமிருத் கௌர், மணிபென் பட்டேல், ஈஸ்தர் ஃபேரிங் ஆகிய நான்கு சகோதரிகளுக்கும் காந்தியடிகள் எழுதிய சுமார் ஆயிரம் கடிதங்கள் அடங்கியிருக்கின்றன.

அவர்கள் காந்திஜியைத் தங்களுடைய தந்தையாகக் கருதி, அவரது புத்திமதியை நாடி தங்கள் சொந்த வாழ்க்கையை வகுத்துக் கொண்டார்கள் என்பதை அந்தக் கடிதங்கள் நமக்குக் காட்டுகின்றன. காந்திஜி தம்முடைய மகளைப் போல் அவர்களிடம் காட்டிய பரிவும் அன்பும் எவரது மனதையும் உருக்குவதாக இருக்கின்றன. அவர்கள் தங்களுடைய உள்ளத்திலுள்ள ஆசாபாசங்களையும், விருப்பு வெறுப்புகளையும் ஒளிவு மறைவின்றி காந்திஜியிடம் கூறத் தயங்கவில்லை. அவர்களுடைய குடும்பங்களின் சுக துக்கங்களிலும் காந்தி அடிகள் பங்கு கொண்டு அவர்களுக்குக் கூறியுள்ள ஆறுதல் மொழிகளும் நம்மை உணர்ச்சி வசப்படுத்துகின்றன.

சுதந்திரப் போராட்டத்தின் சூறாவளிகளுக்கு இடையே சற்றேறக்குறைய இருபத்தைந்து ஆண்டுகள் வரையில் அவர்களுடைய சொந்த வாழ்க்கை பற்றியும், குடும்பச் சிக்கல்களைத் தீர்க்கும் முறைகள் பற்றியும் காந்திஜி எழுதியுள்ள கடிதங்கள் ஈடு இணையில்லாத அவரது அன்பை வெளிப்படுத்துகின்றன.

அவர்களிடம் குற்றம் குறைகள் தென்பட்ட போது, அவற்றை காந்திஜி வன்மையாகக் கண்டித்து அவர்கள் சீரிய முறையில் நடந்து கொள்ளும்படி வற்புறுத்துவதையும் அக் கடிதங்கள் பலவற்றிலும் காண்கிறோம்.

குழந்தைப் பருவத்தில் தாயை இழந்த மணிபென் பட்டேலுக்கு (சர்தார் பட்டேலின் மகள்), தாயின் ஸ்தானத்தில் இருந்து காந்திஜி கூறும் பரிவுரைகள் வாசகர்களின் மனதை நெகிழச் செய்வனவாக இருக்கின்றன.

இக் கடிதங்கள் குறிப்பிட்ட நால்வருக்கே எழுதப் பட்டவையெனினும், அவற்றில் நம் அனைவருக்கும் ஏராளமான படிப்பினைகள் அடங்கியிருக்கின்றன.

இது வரை வெளி வந்த பதினைந்து தொகுதிகளையும் தமிழ் மக்கள் அன்புடன் ஏற்றுப் பயன் அடைந்தது போல், காந்தி அடிகளின் நூற்றாண்டு விழாவின் மத்தியில் வெளிவரும் இந்த நூலையும் ஏற்றுக் கொள்ளக் கோருகிறேன்.

காந்தி நூல் வெளியீட்டுக் கழகம்,
சென்னை, *15-10-1968*

தி. சு. அவினாசிலிங்கம்
(தலைவர்)

# பொருளடக்கம்



இந்தியா வைஸ்ராயாக இருந்த லார்டு இர்வினின் கோரிக்கைக்கு இணங்க லண்டனில் எடுக்கப்பட்ட புகைப்படம். அவரது வேண்டுகோளுக்கு இசைந்து காந்திஜி அதில் கையெழுத்திட்டு லார்டு இர்விடம் கொடுத்தார்.

# மீராவின் முன்னுரை

இக் கடிதங்களுக்கு ஒரு முன்னுரை எழுத முற்படும்போது பயபக்தியுடன் என் சிரம் தாழ்கின்றது. பாபுவின் எல்லையற்ற அன்பை எண்ணி யெண்ணி என் இதயம் பெருக்கெடுக்கின்றது. சொற்களால் நான் இதை எப்படிச் சித்திரிக்க முடியும்? பல வாரங்களாக இவ்வாறு நிலையிழந்து நின்றேன். இதை எழுதி முடிக்காமல் பேனாவைக் கீழே வைப்பதில்லை என்று 1948 நவம்பர் 7ந் தேதியாகிய இன்று உறுதி கொண்டுள்ளேன். 23 ஆண்டுகளுக்கு முன், இதே நாளன்று தான் நான் சாபர்மதிக்கு வந்து சேர்ந்தேன். பாபுவின் அருள் தரிசனம் அன்று கிட்டியது. சென்ற ஆண்டு இதே நாளன்று வழக்கம் போல், குறித்த நேரத்தில் நான் பாபுவிடம் சென்று 'பிறந்த நாள்' ஆசிவேண்டினேன்.

அவர் அருகே முழங்காலிட்டு, "இன்றுடன் இருபத்திரண்டு ஆண்டுகள் ஆகின்றன" என்று கூறினேன்.

"இருபத்திரண்டு ஆண்டுகள் என்பது எளிதான காரியமல்ல" என்று பாபு அமைதியாகப் பதிலளித்தார், தம் கரத்தை என் தலை மேல் வைத்து.

இனி அந்த அன்புக் கரத்தை ஊனிலே தொட இயலாது. ஆனால் ஆன்ம உணர்வில் அது நின்று நிலைக்கிறது. பாபுவை ஆண்டவனிடம் நாடி, அவருடைய பிறந்த நாள் ஆசியைக் கோரிப் பெற்றுள்ளேன்.

தம்மைக் குருவாகப் போற்றக்கூடாது என்றும், அவ்வாறு போற்றுதற்குரிய அருகதை எந்த மனிதனுக்கும் கிடையாது என்றும், இறைவன் மட்டுமே ஒரே, உண்மையான, குரு என்றும் பாபு எப்பொழுதுமே எங்களுக்குக் கூறியதுண்டு.

"இறைவனை உங்கள் குருவாக்குங்கள். அவர் உங்களை ஒரு போதும் கைவிடமாட்டார்."

ஆயினும், இறைவனை நாடுவதற்கும் அவரையே நம்புவதற்கும் வழிகாட்டிய பாபு, உண்மையில் குருக்களில் குரு ஆவார். 'இறைவனையே நாடி நம்பு', என்ற போதனை தான் இக் கடிதங்கள் அனைத்திலும் ஊடுருவி நிற்கும் உண்மை,

இலக்கிய நடை, அல்லது தத்துவ சஞ்சாரங்கள் என்ற பேச்சுக்கு இங்கு இடமில்லை. மிக எளிய முறையில், நேருக்கு நேர், அந்தரங்கமாக, ஆன்மீகத் தந்தை, தடுமாறும் குழந்தைக்குச் செய்கின்ற உபதேசம் இது. இதில் தான் எத்துணை பொறுமையும் அன்பும் புலப்படுகின்றன!' அந்த அன்புக்கு அருகதை உள்ள

வளாக எனக்கு ஆண்டவன் உதவ வேண்டும் என்பதே என் ஓயாத பிரார்த்தனை.

பாபுவின் வாழ்வின் கடைசி இருபத்திரண்டு ஆண்டுகளை இக் கடிதங்கள் படம்பிடித்துக் காட்டுகின்றன. இதில் சித்திரிக்கப் பட்டுள்ள வாழ்க்கை, அனைவரும் காணமுடிந்த, வெற்றியும் கவர்ச் சியும் நிறைந்த புற வாழ்க்கை அல்ல; புற உலகின் குழப்பங்களா லும் கொந்தளிப்புகளாலும் பதட்டமடையாமல், அமைதியாகச் சீரான ஆன்மீக வேட்பில் ஈடுபட்ட அந்தரங்க அக வாழ்க்கையே இதில் சித்திரிக்கப்பட்டுள்ளது. சாதாரண நடப்புகளைப் பற்றி இக் கடிதங்களில் வரும் குறிப்புகளைக் கூட—அவை ஒரு முறைக்கு மேல் மீண்டும் மீண்டும் கூறப்பட்டிருந்தால் கூட—நான் இக் கடிதங்களி லிருந்து நீக்காததற்குக் காரணம், பாபுவின் அரிய குணவியல்பு களை அவை புலப்படுத்துகின்றன என்பது தான். வாழ்க்கையில் சாதாரணமாக ஒரு பொருட்டாய்க் கருதாதவற்றைக் கூட பாபு முக்கியமாக மதித்தார் என்பதும், அவர் நிலைக்கு உயராத மற்ற வர்கள் சிறியவை என்று கருதியவற்றில் கூட பாபு மிகுந்த கவனம் செலுத்தி, ஈடுபாடு கொண்டிருந்தார் என்பதும் இக் கடிதங்களி லிருந்து புலனாகும். தம் கூர்ந்த கவனத்திற்கு அருகதை அற்றது என, அவர் எந்த அற்ப அம்சத்தையும் புறக்கணிக்கவில்லை. தம் அன்பின் அணைப்பிலிருந்து, தாழ்வானவர் என்று எவரையும் அவர் விலக்கியதில்லை. அதே வேளையில், வாய்மையின் வேட்பிலே அவர் இடையறாது ஈடுபட்டிருந்ததால், நேரம் எதையும் வீணாக் கவோ, வெறும் உணர்ச்சி வசப்பட்டு உறுதி தளரவோ, அவர் மனம் ஒப்பவில்லை.

பல ஆண்டுகளாக நான் திரட்டிப் போற்றிவந்த 650 கடிதங் களிலிருந்து 386 கடிதங்கள் இந்நூலில் வெளியாகியுள்ளன. கைதாகிச் சிறைப்பட்ட போதும், அப்பொழுது அதிகாரிகள் சோத னைகள் நடத்திப் பல ஆவணங்களை அழித்த போதும், பாபுவின் கடிதங்கள் பற்றித்தான் எனக்குக் கவலையாய் இருந்தது. நான் கைது செய்யப்படக் கூடுமென்ற நிலை ஏற்பட்ட போதெல்லாம், சந்தேகத்திற்கு ஆளாகாத ஒரு நண்பரிடமோ, சோதனை செய்யப் படாதென்று நான் எதிர்பார்த்த ஆராய்ச்சி நிலையத்திலோ, அக் கடிதங்களை விட்டுச் செல்வது வழக்கம். சென்ற மூன்று ஆண்டு களாக, அவற்றை ஒரு சிறு தகரப் பெட்டியில் என்னுடனேயே வைத்துப் பாதுகாத்துள்ளேன். இத்தனை சோதனைகளுக் கிடையே, அவை பத்திரமாய் இருந்துள்ளது, பெரும் பேறு ஆகும். இப்பொழுது அவை பிரசுரமாகிவிட்டால், என் மனத்திலிருந்து ஒரு பெரும் சுமை நீங்கும். இக் கடிதங்கள் தனியொருவருக்கு எழுதப்பட்டவை தான்; ஆனால் இவற்றில் அடங்கியுள்ள ஆன்ம அறிவுச் செல்வமும் உபதேசக் களஞ்சியமும் அனைவருக்கும் கிட்ட வேண்டும்.

இக் கடிதங்களை வாசகர்கள் மேலும் தெளிவாகப் புரிந்து கொள்ளும் பொருட்டு, நான் பாபுவிடம் எவ்வாறு ஈர்க்கப்பட்டேன் என்பதைக் காட்ட, என் வாழ்க்கையில் ஒரு சில நிகழ்ச்சிகளைச்

சித்திரிக்க வேண்டும். இங்கிலாந்தில் ஒரு பண்ணை வீட்டில் வளர்ந்த எனக்குக் கிராம வாழ்க்கை நன்கு அறிமுகமாகியிருந்தது. மேலும், தொடக்கத்திலிருந்தே எனக்கு இயற்கையிடம் அளவற்ற ஈடுபாடு உண்டு. என் பதினைந்தாவது வயதில், நான் பெத்தோவனின் இசையை முதன் முதலாகக் கேட்டேன். அதன் பயனாக இறையருள் என்னை ஆட்கொண்டதை நான் உணர முடிந்தது. இறைவழிபாடு எனக்கு உயிருள்ள அனுபவமாயிற்று. பெத்தோவன் இசை, என்னை ரோமெய்ன் ரோலந்துக்கு அழைத்துச் சென்றது; நான் ரோமெய்ன் ரோலந்து மூலம் பாபுவை வந்தடைந்தேன். இந்த ஆன்ம யாத்திரையில் முன்னேற்றம் எளிதாக இல்லை. இருள், ஏக்கம், கொந்தளிப்பு, நம்பிக்கை ஆகியவற்றையெல்லாம் அனுபவித்தபின் தான், வாய்மையின் ஒளி, சஞ்சலம் மிகுந்த என் உள்ளத்தில் உதயமாகி, நிறைவுக்கு என்னை அழைத்துச் சென்றது.

என் வாழ்க்கை முழுவதுமே ஒரு அபூர்வ சக்தி என்னை உந்திச் சென்றுள்ளது. நீண்ட நாட்கள் நான் அதை உணரவில்லை. ஆனால் ரோமெய்ன் ரோலந்து எனக்கு அறிமுகமான நாள்முதல் இச் சக்தியை நான் அறியத் தொடங்கினேன். வில்லேனேவ் என்ற ஊரில் எங்களிடையே ஏற்பட்ட முதல் சந்திப்புகளிலிருந்து, இதமான இன்ப உணர்வு என்னை ஆட்கொண்டது. ஏதோ ஒரு புதுமை தோன்றப் போகிறது என்பதை அறிந்தேன். அப் புதுமை எதுவாயிருக்கும் என்பதை ஒரு சிறிதும் அறிந்தேனில்லை. ஆனால் அனைத்தும் நன்மைக்கே என்ற உணர்வு மட்டும் இருந்தது. ரோமெய்ன் ரோலந்து முதன் முதலாக என்னிடம் பாபுவைப் பற்றிப் பேசித் தாம் அவரைப் பற்றி எழுதியுள்ள ஒரு சிறு நூல் அச்சில் உள்ளது என்று சொன்னபோதும், அந்த நூலைப் படிக்க வேண்டுமென்ற எண்ணத்தைத் தவிர எனக்கு வேறெதுவும் தோன்றவில்லை. அதன்பின் ஒரு நாள், அப் புத்தகம் வெளிவந்தது. நான் அப்பொழுது பாரிஸ் நகரில் இருந்தேன். அந்நகரில் லத்தீனப் பகுதியில் இருந்த அந்நூல் பதிப்பாளரின் கடைக்குச் சென்றேன். கடைச் சாளரம் முழுவதும், ஒரே புத்தகத்தின் பல படிகள் அடுக்கப்பட்டிருந்தன. செம்மஞ்சள் நிற அட்டையில் 'மகாத்மா காந்தி' என்று கருப்பில் அச்சிடப்பட்டிருந்தது. நான் ஒரு புத்தகம் வாங்கித் தங்கியிருந்த அறைக்கு எடுத்துச் சென்று படிக்கத் தொடங்கினேன். புத்தகத்தைக் கீழே வைக்க என்னால் இயலவில்லை. நான் படித்தேன்; மேலும் படித்தேன். படிக்கப் படிக்க, என் உள்ளத்தில் எழுந்த விடிவெள்ளி மேலும் மேலும் ஒளிவீசிப் படர்ந்தது. நான் படித்து முடித்த வேளையில், வாய்மையெனும் கதிரவன் தன் கதிரொளியை என் உள்ளத்தினுள் பாய்ச்சி நின்றான். என் வாழ்க்கை பாபுவுக்கு அர்ப்பணம் செய்ய உரியதென்று, அக்கணம் முதற்கொண்டு நான் உணர்ந்தேன். நான் எதற்காகக் காத்துக் கொண்டிருந்தேனே, அது எனக்குக் கிட்டிவிட்டது. நான் காத்துக் கொண்டிருந்தது, இதற்காகத் தான்.

நேராக நான் லண்டனுக்குச் சென்று பி அண்டு ஒ கப்பல் அலுவலகத்தில், இந்தியாவிற்குக் கப்பலில் செல்லக் கட்டணச்

சீட்டு வாங்கினேன். பற்பல நூல்களையும் தேடிப்பிடித்து, என்னால் படிக்க இயன்றதனைத்தையும் படித்தேன்—பாபுவின் நூல்கள், தாகூரின் எழுத்துக்கள், பகவத்கீதையின் ஆங்கில, பிரெஞ்சு மொழி பெயர்ப்புகள். உபநிடதங்களையும் வேதங்களையும் கூடப் புரட்டிப் பார்த்தேன். நான் இருந்த நிலையிலேயே, பாபுவிடம் செல்ல முடியுமென்று எண்ணியது மடமையென்று எனக்கு வெகு சீக்கிரமே புலனாகிவிட்டது. ஆன்மீக அருகதையோ, உடல் வலிமையோ சற்றும் அற்றவள் நான். முதலில் நான் மிகக் கடுமையான கட்டுப்பாடும் பயிற்சியும் மேற்கொள்ள வேண்டும். இதை உணர்ந்த நான் கப்பல் அலுவலகத்திற்குச் சென்று, என் பயணப் பதிவை ஓராண்டு காலத்திற்குப் பின்னால் ஒரு நாளுக்கு மாற்றிக் கொண்டேன்.

அதன் பின்னர் நான் முறையாகவும்—மும்முரமாகவும் ஆயத்தங்களை மேற்கொண்டேன். முதலில், சபர்மதி ஆசிரமத்தின் விதிகளையும் முறைகளையும் நான் உன்னிப்பாகப் படித்தேன். அதன் பின்பு, என் உணவு முறைகளை மாற்ற முற்பட்டு, ஒவ்வொரு உணவு வகையாக மாற்றி, முழுவதும் சைவ உணவு சாப்பிடும் நிலைக்கு வந்தேன். தரையில், சம்மணம் போட்டு உட்காரப் பழகினேன். தொடக்கத்தில், சேர்ந்தாற்போல் பத்து நிமிடங்களுக்கு மேல் என்னால் உட்கார முடியவில்லை. ஆனால் பழக்கத்துடன், சற்றும் சிரமமின்றி அவ்வாறு உட்காரக் கற்றுக்கொண்டேன். உருதுவில் பாடம் பயிலத் தொடங்கினேன். பஞ்சடித்தல், நூற்பு, நெய்தல் ஆகியவற்றையும் பழகினேன். கம்பளி நூலைக் கொண்டு தான் பழக முடிந்தது; ஆயினும் இது நல்ல பயிற்சியாக அமைந்தது. அதே சமயத்தில், நூல்களைத் தொடர்ந்து பயின்றேன். இந்தப் பயிற்சிக்கிடையே, இந்து—முஸ்லிம் ஒற்றுமைக்காகப் பாபு இருபத்தோரு நாள் உண்ணா நோன்பு மேற்கொண்ட செய்தி பத்திரிகைகளில் வந்தது. நாட்கள் செல்ல, அநேகமாக பாபு பிழைக்க மாட்டாரென்று பத்திரிகைகள் ஊகம் செய்தன. வெதும்பிய என் உள்ளத்தை இறைவனிடம் கொட்டினேன். நாட்கள் கழிந்தன. ஆனால் என் பயிற்சியை நான் தளர்த்தவில்லை. பாபுவின் ஊனுடல் மறைந்தாலும், அவர் குறிக்கோள்களுக்காகத் தொண்டாற்ற நான் இந்தியா செல்ல வேண்டுமென்பதை உணர்ந்தேன். ஒரு யுகம் கழிவது போல் தோன்றியது; இறுதியில் அந்த இருபத்தோரு நாட்கள் முடிந்தன. உண்ணா நோன்பு இனிது நிறைவேறியது என்ற செய்தி வந்தது.

அதுவரை நான் பாபுவுக்கு ஒரு எழுத்து கூட எழுதியது கிடையாது. ஆனால் உண்ணா நோன்பு வெற்றிகரமாய் முடிந்த போது, என் உள்ளத்தை நன்றியும் இன்பமும் ஆட்கொண்டிருந்ததால், நான் அவருக்கு எழுத உந்தப் பெற்றேன். நன்றிக் காணிக்கையாக, நான் அக்கடிதத்துடன் 20 பவுண்டுக்கு உரிமைச் சீட்டு அனுப்பியிருந்தேன். இப்புத்தகத்தின் தொடக்கத்தில் இடம் பெற்றுள்ள அஞ்சலட்டைதான், அக் கடிதத்திற்குப் பாபு அனுப்பிய பதில்.

கோடை மாதங்களில், ஸ்விஸ் நாட்டுக் குடியானவர்களுடன் சேர்ந்து வயலில் நான் வேலை செய்தேன். அதன்மூலம் இந்தியாவில் எனக்குக் காத்திருக்கக்கூடிய உடல் உழைப்புக்கு நான் என்னை ஆயத்தம் செய்து கொண்டேன். என் ஓராண்டுப் பயிற்சி முக்கால் பகுதி முடிவுறும் தருவாயில், நான் பாபுவுக்கு மீண்டும் எழுதினேன். என் பயிற்சியில் நான் அடைந்திருந்த முன்னேற்றத்தை அவருக்குத் தெரியப்படுத்தியதோடு, நான் நூற்ற நூல் சிறிதை அவர் பார்வைக்கு அனுப்பி, ஆசிரமத்தில் நான் ஏற்றுக்கொள்ளப் படுவேன் என்று எதிர்பார்க்கத் துணியலாமா என்றும் அவரைக் கேட்டிருந்தேன். முதல் அஞ்சலட்டையைத் தொடர்ந்து இந்நூலில் வெளியாகியுள்ள கடிதம்தான், பாபுவிடமிருந்து கிடைத்த பதில். அப்பொழுது முதற்கொண்டு என் இன்பம் எல்லையற்றதானது. ஆன்மப் பரவச நிலையில் நான் வாழ்ந்து வந்தேன்.

நான் இந்தியாவிற்குச் செல்லும் உத்தேசத்தைக் கைவிட வேண்டுமென என் பெற்றோர்கள் என்னைத் தூண்டுவார்கள் என்றுதான் எதிர்பார்த்திருக்க முடியும். அதிலும் குறிப்பாகக் கடற்படைத் தளபதியாகவும், கிழக்கிந்திய கப்பல் படைத் தலைமைத் தளபதியாகவும் முன்னாள் பணியாற்றியிருந்த என் தந்தை, பல உயர்தர ஆங்கிலேய அதிகாரிகளுடன் தொடர்பு கொண்டிருந்தார். என் அன்னையும் நானும் ஒத்த இயல்பினராய், ஆழ்ந்த அன்பால் பிணைக்கப்பட்டிருந்தோம். ஆனால் என் அகத் தூண்டுதலின் ஆன்ம வலிமையை எப்படியோ அறிந்துகொண்ட அவர்கள், என் உத்தேசத்தைக் கண்டித்து ஒரு வார்த்தைக் கூடக் கூறவில்லை.

இலையுதிர் காலத்தில் நான் வில்லேனேவுக்குக் கடைசி முறையாகச் சென்று, ரோமெய்ன் ரோலந்திடமிருந்தும் அவர் சகோதரியிடமிருந்தும் விடைபெற்றேன். பிறகு, லண்டனுக்கு மீண்டும் சென்று, ஒரு சில பொருட்களைத் திரட்டிக்கொண்டு, புறப்பட்டேன். விக்டோரியா இரயில் நிலையத்தில் என் அன்னையிடமிருந்து விடைபெற்றேன்; பாரிஸில் என் தந்தையிடமிருந்து விடைபெற்றேன். அவர்கள் இருவரையும் நான் காணக்கொடுத்து வைத்தது, அதுதான் கடைசி தடவை.

1925 அக்டோபர் 25ந் தேதி, மார்சேய்ல்ஸ் துறைமுகத்திலிருந்து, பி அண்டு ஓ கப்பலில் ஏறினேன். பயணம் முழுவதும், ஆன்மப் பரவசம் ஆட்கொண்ட நீண்டதோர் இன்பக் கனவாய் அமைந்தது. ஒவ்வொரு இரவும், கிழக்குத் திக்கில் கிளர்ந்து எழுந்த வெண்மதி, கடல் மீது தன் வெள்ளிக் கதிர்களை வீசியது, ஒப்புயர்வற்ற என் இலட்சியத்துக்கு ஒளிமயமான பாதையை வகுத்து, அதில் என்னை அன்புடன் அழைப்பது போலிருந்தது.

பன்னிரண்டு நாட்களுக்குப் பின், நான் பம்பாய் வந்து சேர்ந்தேன். நவம்பர் 7ந் தேதி அதிகாலையில், இரயில் மூலம் ஆமதாபாத் அடைந்தேன். இரயில் நிலையத்தில், நட்பு முகங்கள் இரயில் சாளரத்தின் மூலம் என்னை வரவேற்றன. என்ன நடக்கிறது

என்று எனக்கு விளங்குவதற்கு முன்பே, நான் இரயிலிலிருந்து இறக்கப்பட்டு, ஒரு காரில் உட்காரவைக்கப்பட்டேன். என்னைக் காரில் உட்காரவைத்தவர், தம் பெயர் வல்லபபாய் பட்டேல் என்று தம்மை எனக்கு அறிமுகம் செய்துகொண்டார். மகாதேவ் தேசாய் என்று அறிமுகம் செய்துகொண்ட மற்றொரு நண்பர், என் பெட்டிகளை எடுத்துவரத் திரும்பிச் சென்றார். கார் விரைந்தது. என்னுடன் அமர்ந்திருந்தவரை நோக்கி நான் ஒரு கேள்விதான் கேட்டேன்—ஆசிரமம் எவ்வளவு தூரத்தில் உள்ளது? எவ்வளவு சீக்கிரம் அங்குபோய்ச் சேர்வோம்? அந்நாள் முதற்கொண்டு இன்றுவரை நான் சர்தாரைச் சந்திக்கும் போதெல்லாம், அந்தக் கேள்வியில் என் உணர்வனைத்தும் லயித்திருந்த ஒரு சில நிமிடங்கள்தான் என் மனக் கண்முன் மீண்டும் வருகின்றன. சாபர்மதி ஆற்றுப் பாலத்தை நாங்கள் கடந்தபின், அக் கேள்வியை மீண்டும் நான் கேட்டேன். அதன் பின்பு சில வயல்களைக் கடந்தோம்; தொலைவில் சில வீடுகள் தெரிந்தன. அப்பொழுது நான் மீண்டும் விசாரித்தேன். இன்னும் சற்று தொலைவில் உள்ளோம் என்று அவர் அமைதியாகப் பதிலளித்தார். ஆர்வத் துடிப்பிலே லயித்து, அசையாது அமர்ந்தேன். 'அதோ, அங்கு மரங்களும், அதற்குப் பின் சில வீடுகளும் தெரிகின்றன அல்லவா! அதுதான் ஆசிரமம்' என்று உடனிருந்த நண்பர் திடீரெனக் கூறினார். மறுகணம், கார் ஒரு பெரிய புளிய மரத்தின் கீழ் நின்றது. தோட்டத்தில் கற்களால் பாவப்பட்ட ஒரு குறுகிய பாதை வழியாக, என்னை அறியாமலே நான் நடந்து சென்றேன். ஒரு சிறிய வாயிற்கதவு வழியாகச் சென்று, இரண்டு படிகள் ஏறி ஒரு தாழ்வாரத்திற்கு வந்து, அதன் பின் ஒரு கதவு வழியாக ஓர் அறைக்குள் புகுந்தோம். உள்ளே சென்றபோது, சிறிய, ஒல்லியான உருவம் ஒன்று ஒரு வெள்ளைச் சமக்காளத்திலிருந்து எழுந்து, என்னை நோக்கி வருவதை உணர்ந்தேன். அதுதான் பாபு என்று நான் அறிவேன். ஆனால், பக்தியும் பரவசமும் என்னை முற்றிலும் ஆட்கொண்டுவிட்டதால், தெய்வீக ஒளியைத் தவிர என்னால் வேறெதையும் காணவோ, உணரவோ, முடியவில்லை. பாபுவின் பாதங்களில் நான் மண்டியிட்டேன். அவர் என்னை வாரி அணைத்து ''நீ என் மகளாய் இருப்பாய்'' என்று கூறினார். அன்றுமுதல், அவ்வாறே நான் அவர் மகளாக வாழ்ந்துள்ளேன்.

என் இலட்சியப் புகலிடத்தை நான் அடைந்துவிட்டேன்; அப் புகலிடத்திலிருந்து இனி என் யாத்திரையைத் தொடங்க வேண்டும். முந்திய பிறவி யொன்றைச் சேர்ந்தது போல், பழைய வாழ்க்கை தீர்ந்துவிட்டது. நான் வாழ்க்கையைப் புதிதாகத் தொடங்கினேன். அன்றிருந்துதான், உண்மையான போராட்டம் தொடங்கியது. பழைய வாழ்க்கையில், என்னால் விளக்க முடியாத அகத்தூண்டுதலால் உந்தப்பெற்று, நான் மூடுபனியிலும் மேகத் திரையிலும் சிக்கித் தடுமாறிக் கொண்டிருந்தேன். ஆனால் இப்பொழுதோ, ஒளிமயமான சூரிய வெளிச்சத்திற்கிடையே வந்துவிட்டேன். செங்குத்தான, குறுகலான, வாய்மை வழி, தெளிவாக

எனக்குப் புலனாகி, மேலும் மேலும் உயர்ந்துவர என்னை உந்தியது. எழில் மிக்க பாதை; ஆயினும் ஏறிச் செல்ல எத்தனை சிரமம்!

எல்லையற்ற மகிழ்ச்சியுடனும் ஊக்கத்துடனும் நான் இந்த யாத்திரையைத் தொடங்கினேன். கணக்கற்ற முறை நான் பாதையிலிருந்து தவறித் தடுமாறி, இடறியதுண்டு. நான் புண்பட்டதற்கும் அடிபட்டதற்கும் அளவேயில்லை. வேதனைக் கண்ணீர் சிந்தி, அப்பாதையை நான் கழுவியது எத்தனையோ தடவை. ஓரிரு முறைகள் கருமேகங்கள் மலையைச் சூழ்ந்துகொண்டதால், நான் வழியை அடியோடு இழக்கும் கட்டத்திற்கே வந்துவிட்டேன். ஆனால் இறைவனின் அமைதி தோய்ந்த இனிய மலைத் தென்றல் வீசும் பசும்புல் வெளிக்கு என்னைப் பாபுவின் அருள் இறுதியில் அழைத்துச் சென்றுள்ளது.

ஆசிரமம், பசுலோக், ரிஷிகேசம். மீரா

# சிரஞ்சீவி மீரா

## 1

அஞ்சல் அட்டை

[இக்கடிதத்திலும் அடுத்த கடிதத்திலும் குறிப்பிடப்பட்டுள்ள நிகழ்ச்சிகள் விவரம் அறிய, முகவுரையைக் காண்க.]

அன்புக்குரிய நண்ப,

முன்பே பதில் எழுதாததற்கு நான் உன்னிடம் மன்னிப்பு கேட்டுக்கொள்ள வேண்டும். ஓயாமல் நான் பயணம் செய்து கொண்டே இருக்கின்றேன். நீ அனுப்பின £20 தொகைக்கு நன்றி. நூற்பு ராட்டையை மக்களிடம் பரப்புவதற்கு அந்தத் தொகை பயன்படும்.

உன் உள்ளத்தில் உடனடியாகத் தோன்றிய உணர்ச்சித் தூண்டுதலின் வயப்படாமல், இங்குள்ள வாழ்க்கைக்கு உன்னைப் பக்குவப்படுத்திக் கொள்ளவும், சிறிதுகாலம் பொறுத்திருக்கவும், நீ முடிவு செய்தது கண்டு உண்மையில் எனக்கு மகிழ்ச்சி. ஓராண்டு சோதித்துப் பார்த்த பின்னும், வரவேண்டும் என்று உள்ளம் உந்துமானல், இந்தியாவுக்கு நீ வருவதுதான் சரியான முடிவாக இருக்கக்கூடும்.

இரயிலில்,
*31-12-24.*

உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

மிஸ். மேடலீன் ஸ்லேட்
63, பெட்போர்டு கார்டன்ஸ்,
காம்ப்டன் ஹில்
லண்டன், மேற்கு 8.

## 2

(காந்தி அடிகள் சொல்ல இன்னெருவரால் எழுதப்பட்டது.)

*148,* ரூஸ்ஸா சாலை,
கல்கத்தா,
ஜூலை *24, 1925.*

அன்புக்குரிய நண்ப,

உன் கடிதம் கிடைக்கப்பெற்று பெரு மகிழ்ச்சி அடைந்தேன். அக்கடிதம் என் உள்ளத்தைத் தொட்டுவிட்டது. நீ அனுப்பியுள்ள கம்பளி நூல் வகைகள் மிக நேர்த்தியானவை.

நீ எப்பொழுது விரும்புகிருயோ, அப்பொழுது தாராளமாக வரலாம். எந்தக் கப்பலில் வருவாய் என்று எனக்குத் தெரிவித்தால், கப்பலில் உன்னை ஒருவர் வரவேற்று, சாபர்மதிக்கு அழைத்துச் செல்லும் இரயிலில் ஏற்றிவிட ஏற்பாடு செய்ய முடியும். ஆசிரம வாழ்க்கை, எல்லாம் இன்பமயமாக இருக்காது என்பதை மட்டும் தயவுசெய்து நினைவில் கொள்ளவும். அது சற்று கடுமையாகவே இருக்கும். ஆசிரமவாசி ஒவ்வொருவரும் உடல் உழைப்பு செய்கிருர்கள். இந்த நாட்டின் தட்பவெட்ப நிலையையும் நீ பொருட்படுத்தாமல் இருக்க முடியாது. நான் இவற்றை எல்லாம் குறிப்பிடுவது, உன்னை அச்சுறுத்துவதற்கு அல்ல, எச்சரிக்கை செய்வதற்குத் தான்.

உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

எனது வலது கைக்கு ஓய்வு தேவைப்படுவதால், என்னுடைய கடிதங்கள் அனைத்தையும் நான் சொல்ல, இன்னொருவர் எழுத ஏற்பாடு செய்துள்ளேன்.

* * *

மிஸ் மேடலீன் ஸ்லேட்
63, பெட்போர்டு கார்டன்ஸ்,
காம்ப்டன் ஹில்,
லண்டன், மேற்கு 8.

# 3

[ஆசிரமத்தை விட்டு மூன்று நாட்கள் வெளியே சென்றிருந்தார் பாபு. அப்பொழுது என் ஓய்வு நேரத்தை, அவருக்கு இந்துஸ்தானிக் கடிதம் ஒன்றை எழுதுவதில் பயன்படுத்தினேன். அதைத் தேவனகரி, உருது லிபிகள் இரண்டிலும் எழுதினேன். ஆசிரமத்திற்கு நான் வந்த பின் பாபுவிடமிருந்து பிரிந்திருந்தது இதுதான் முதல் தடவை. இதனல் எனக்கு மிகுந்த மனவேதனை ஏற்பட்டது.

கான்பூர் காங்கிரசுக்குச் செல்ல வேண்டியிருந்ததால், கம்பளி உடைகள் தேவையாயிருந்தன. என்னிடமிருந்த கம்பளி உடைகள் ஆலையில் நெய்யப்பட்டவையாதலால், கப்பலில் வரும்போதே, அவற்றை ஒதுக்கிவிட்டு, டில்லியிலிருந்து முன்கூட்டியே வாங்கிய கதரில் லண்டனில் தயாரித்த உடைகளை அணிந்து கொண்டு கப்பலிலிருந்து இறங்கினேன்.]

அன்புள்ள மீரா, *

உன் அன்பான பரிசு கிடைக்கப் பெற்றேன். சங்கர்லால் பாங்கர் அதைப்பற்றி முன்னதாகவே என்னிடம் சூசகமாக அறி

* நான் வந்து சேர்ந்தவுடன் பாபு எனக்களித்த இந்தியப் பெயர்.

வித்திருந்தார். எதிர்பாராத மகிழ்ச்சியை எனக்கு நீ அளிப்பாய் என்று அவர் என்னிடம் கூறினர். நான் குறிப்பை உணர்ந்து கொண்டேன். உருது, இந்தி, இரு மொழிகளிலும் உன்னுடைய கையெழுத்து நன்ருக உள்ளது; என் கையெழுத்தை விட நிச்சய மாக நன்ருக உள்ளது. அவ்வாறுதான் இருக்க வேண்டும். உனக்குக் கிட்டிய ஆஸ்தியை நீ விரயம் செய்து வீணுக்கி விடாமல், ஆயிரம் மடங்கு போற்றிப் பெருக்குவாயாக!

நீ ஓயாது என் எண்ணத்தில் குடிகொண்டுள்ளாய். இம் மூன்று நாட்களாக நாம் பிரிந்திருப்பது, கட்டுப்பாட்டு உணர்வை வளர்ப்பதில் நமக்கு நல்ல பயிற்சியாகும். இந்த வாய்ப்பை நன்கு பயன்படுத்தியுள்ளாய்.

உன் குரல் நன்கு திருந்திவிட்டது என்று தேவதாஸ் என் னிடம் கூறுகிருன்.

உனக்குக் குளிர்காலத்துக்குத் தேவையான உடைபற்றி நானே நீ விவரமாகக் கூறவேண்டும்.

ஆண்டவன் உனக்கு அருள் புரிந்து, இன்னல் அண்டாது காப்பாராக.

*4-12-'25.*

அன்பு,
பாபு

## 4

[மீண்டும் நாங்கள் பிரிய நேரிட்டது. என் மனவேதனையை உணர்ந்து பாபு எனக்கு உயர்ந்ததோர் உபதேசம் செய்தார். அதன் உண்மையைப் பலப்பல ஆண்டுகள் சென்ற பின் தான், என் ஞல் அனுபவித்து உணர முடிகிறது. நான் பாபுவிடமிருந்து பிரிந் திருந்த ஒவ்வொரு முறையும், தாங்க முடியாத வேதனை அனுபவித் தேன். பிரிவு நீண்ட நாட்களுக்கு நீடித்தால், என் உடல் நலன் கெட்டு, முறிவு ஏற்படுவதுண்டு.

தம்முடைய சுய சரிதமான 'சத்திய சோதனை'யைப் பாபு அந்த நேரத்தில் எழுதிக் கொண்டிருந்தார். ஒவ்வொரு அதிகாரமாக அது 'யங் இந்தியா'வில் பிரசுரமாகியது. பாபு அதைக் குஜராத்தி மொழி யில் எழுதினர். மகாதேவ் ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தார். நான் மொழி பெயர்ப்பைப் படித்துத் திருத்துவதுண்டு.]

சி. மீரா,

இன்றைய அஞ்சலில் சேரும்படி அஞ்சலட்டை ஒன்று எழுதி னேன். நான் பம்பாய்க்குப் புறப்பட்டுக் கொண்டிருக்கின்றேன். இக்கடிதத்தைப் பம்பாயில் அஞ்சலில் சேர்ப்பேன்.

உன் இந்திக் கடிதம் மிக நன்ருக எழுதப்பட்டுள்ளது.

பிரிவாற்ருமையால் நீ வேதனைப்படுவதை நான் அறிவேன். அதைத் தாங்கிக்கொள்வது அவசியம் என்பதால், அதைத் தாங்கக் கற்றுக்கொள்வாய் என்று நம்புகிறேன். சில நாட்களுக்குப் பிரிந்திருப்பது, மரணத்தினுல் பின்னர் ஏற்படவிருக்கும் நீண்ட பிரிவினைக்கு ஒத்திகையாகும். உண்மையில் அப்பிரிவு வெளித்தோற்றத்தில்தான். மரணம் நம்மை ஒருங்கு சேர்க்கின்றது. யாக்கை அறிமுகத்திற்கு ஒரு சாதனம் என்றபோதிலும், அது உண்மையில் நம்மைப் பிரித்துவைக்கும் வேலியாகவும் உள்ளதல்லவா?

............ ............ ............

அன்பு,

உன்னுடைய

பாபு

தியோலாலி (இந்தியில்)

*15-5-26.*

இதை அஞ்சலில் சேர்க்கும் நேரத்திலேயே, ‘சுயசரிதை’யின் அதிகாரமும் அஞ்சலில் சேர்க்கப்படும். உன் விருப்பப்படி அதைத் திருத்தி சாமியிடம் கொடுக்கவும். தட்டெழுத்துப் படியில், நான் செய்துள்ள திருத்தங்களைக் காணலாம். மூலத்தையும் உனக்கு அனுப்ப முயற்சிக்கின்றேன்.

பாபு

## 5

[அந்த நாட்களில் வார்தாவில் பிரம்மச்சாரி ஆசிரமம் ஒன்றை வினேபா நடத்தி வந்தார். இப்பொழுது மகிலா ஆசிரமம் உள்ள இடத்தில் அது நடந்து வந்தது. காங்கிரஸ் மாநாட்டிற்குச் செல்லு முன் ஒவ்வொரு ஆண்டும் ஒரு சில நாட்கள் ஓய்வுக்காக அங்கு பாபு செல்வதுண்டு.]

வார்தா,

திங்கள், *6-12-’26.*

சி. மீரா,

இன்று உன்னிடமிருந்து கடிதம் வருமென்று எதிர்பார்த்தேன். இது உனக்கு நான் எழுதும் இரண்டாவது கடிதம்.

முதலாவது, ஓர் அஞ்சற்றுண்டு. நான் இம்முறை செய்துள்ளது போல் திங்கட்கிழமை 'சுயசரித'த்தை எழுதினல் உனக்கு அதை அனுப்ப முடியுமென்று எண்ணுகிறேன். அதன் மொழி பெயர்ப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். அதைத் திருத்தி, அன்றே திருப்பி விட்டாயானல், இங்கு நேரத்தில் கிடைக்கும். அன்றே திருத்த முடியாவிட்டால், நீ நேராக சாமிக்கு அனுப்பிவிடலாம். இக் கடிதம் உனக்குப் புதன்கிழமையன்று கிடைக்கவேண்டும். நீ வியாழக்கிழமை அஞ்சலில் சேர்த்தாலும், சனிக்கிழமையன்று நேரத்தில் எனக்குக் கிடைத்துவிடும். 'யங் இந்தியா'வை இங் கிருந்து அஞ்சலில் ஆமதாபாத்திற்கு அனுப்புவதற்கு ஞாயிற்றுக் கிழமை கடைசி நாள். என்ன செய்ய வேண்டும் என்பதை இப் பொழுது அறிவாய். நான் இங்கிருக்கும் வரை, இந்த ஏற்பாடு தொடரும்.

ரோலந்து எழுதிய கடிதத்தை இத்துடன் அனுப்புகின் றேன். அதை 'ஸ்பாரோ' எனக்காக மொழி பெயர்த்திருக்கின்ருர். அதையும் அனுப்புகின்றேன். மொழி பெயர்ப்பு முறையாக இருக் கிறதென்று நீ எண்ணினல், அதை எனக்காக மீண்டும் மொழி பெயர்க்க வேண்டாம்.

அன்பு,

பாபு

# 6

[சாபர்மதி ஆசிரமத்தில் நான் ஓராண்டு முழுவதும் தங்கியபின், அப்பொழுது டில்லி, தார்யாகஞ்சில், நடந்துவந்த கன்யா குரு குலத்திற்கு, இந்தி கற்பதற்காக, பாபு என்னை அனுப்பியிருந்தார். அதே சமயத்தில் பருத்தியடிப்பதிலும் நூற்பதிலும் நான் மாணவர் களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டியிருந்தது.]

சி. மீரா,

உன்னுடைய இரண்டு கடிதங்களும் ஒரே நாளில் எனக்குக் கிடைத்தன. நீ முழு விவரத்துடன் எழுதியதில் எனக்கு மகிழ்ச்சி. அப் பழக்கத்தை விடாதே. இங்கு நான் நடக்கச் செல்லும்போது, நீ கூட இராதது எனக்கு ஏமாற்றமாய் இருக் கிறது. அதே பழைய பாதையில்தான் நாங்கள் நடந்து செல் கின்ருேம். என் இரு கடிதங்களும் உனக்குக் கிடைத்தன என்று நம்புகிறேன். கௌஹாத்தி செல்வதுபற்றி இன்னும் ஒன்றும்

நிச்சயமாகவில்லை. ஹகீம்ஜி[1], எம். மஹமத் அலி[2] இருவரையும் அவசியம் சந்திக்க வேண்டும். அவருடைய மனைவியையும் மகளிரையும் கூட நீ பார்க்க வேண்டும்.

வார்தா,
9-12-26

அன்பு,
பாபு

ஸ்ரீமதி மீராபாய்
கன்யா குருகுலம்,
தார்யாகஞ்ச்,
டில்லி.

## 7

வார்தா.
11-12-'26
(அஞ்சல் முத்திரை)

சி. மீரா,

உன்னுடைய நான்கு கடிதங்களும் கிடைத்தன. இரண்டு கடிதங்களுக்கு முன்பே பதில் எழுதியுள்ளேன்.

'சி' என்பதன் பொருள் உனக்குத் தெரியும் என்று எண்ணுகின்றேன். 'நீண்ட ஆயுளுடைய' என்று பொருள்படும் **'சிரஞ்சீவி'** என்ற சொல்லை அது குறிக்கும். குடும்பத்தில் பெரியவர், இளையோர்க்கு ஆசி கூறும்வகையில் அவர்கள் பெயர் முன்பாகச் சேர்க்கும் மங்களச் சொல் அது.

உன் கடிதங்கள் எல்லாம் எனக்குப் பிடித்தமாக உள்ளன. முஸல்மான் நண்பரைக் காணும் வாய்ப்பு உனக்குச் சீக்கிரமே கிடைத்தது கண்டு மகிழ்ச்சி அடைகின்றேன்.

* * *

நாள் முழுவதும் நீ செய்வதனைத்தையும் எனக்கு விவரமாகக் கூறி, இறைவழிபாடு, பாடப் பயிற்சி, உணவு வேளை, அனைத்தையும் சித்திரிக்க வேண்டும். என்ன உண்கிறாய் என்று சொல். எவ்வளவு பால் சாப்பிடுகிறாய்? உன் உணவு வேளைகள் எவை? அங்கு கொசுக்கள் இருக்கின்றனவா? நாள்தோறும் நடக்கின்றாயா? இந்தி எதுவும் எழுதுகிறாயா? யாரும் உனக்கு முறையாகப் பயிற்சி அளிக்கின்றார்களா? என்ன பழம் உனக்குக் கிடைக்கின்றது?

நீ திருத்தி அனுப்பிய அதிகாரம் எனக்கு உரிய நேரத்தில் கிடைத்தது. அஞ்சல் நேரத்தை நீ அறிந்து கொள்ளவேண்டும்.

1. ஹகீம் அஜ்மல் கான். 2. மௌலானா.

இம்மாதம் 2ந் தேதி நான் வார்தாவிலிருந்து புறப்படுகின்றேன். நான் கௌஹாத்திக்குச் செல்ல வேண்டுமென மோதிலால்ஜி வற்புறுத்துகிறுர். 'யங் இந்தியா' உனக்கு ஒழுங்காகக் கிடைத்து வருமென்று நம்புகிறேன். கிடைக்காவிடில், நீ சுவாமியைக் கேட்டு, அதைக் கவனிக்கும்படி மிருத்யுஞ்சேக்கு எழுதவேண்டும். இந்தி 'நவஜீவ'னும் உனக்கு வருகிறதென்று நம்புகின்றேன்.

தயவுசெய்து, உருது லிபியையும் நீ மறந்துவிடக் கூடாது.

அந்த அமெரிக்க நண்பர்கள், தாயும் மகளும், இன்னும் இங்குதான் இருக்கின்றுர்கள். அவர்கள் வருகைபற்றி நான் உனக்குக் கூறினேன் என்று எண்ணுகின்றேன். மகள், ஒரு முக்கியமான பள்ளிக்கூடத்தில் ஆசிரியையாகப் பணியாற்றுகின்றுள். அவர்கள் நாளை இங்கிருந்து புறப்படுவார்கள். என்னை முன்னிட்டு, நாற்பதுக்கு மேற்பட்ட அதிதிகளை ஜம்னுலால்ஜி உபசரித்து வருகிறுர். பாவம், ஜானகிபென்! *

என் உடல் நலம் மிகச் செம்மையாக உள்ளது. காலையிலும் மாலையிலும் தவருமல் உடற்பயிற்சி.

இக்கடிதம் குறுகியது என்று நீ குறைகூற முடியாதல்லவா?

அன்பு,
பாபு

சனிக்கிழமை

ரோலந்து கடிதத்தில் நீ ஒரு பகுதியை இப்பொழுது திருத்தியுள்ளாய். முன்பு மொழி பெயர்க்கப்பட்டிருந்தது சரிதானு என்று சந்தேகப்பட்டேன். திருத்தத்திற்குப் பின், பொருள் தெளிவாகப் புலப்படுகிறது. மூலத்தை நீ திருப்பி அனுப்ப வேண்டாம். உன் பதிவேடுகளில் பத்திரமாய் வைத்துக்கொள்.

பா.

## 8

அஞ்சல் அட்டை

சி. மீரா,

மகிழ்ச்சியூட்டும் உன் கடிதங்கள் கிடைக்கப்பெற்றன. நீண்ட கடிதமொன்று இப்பொழுது எழுதத் துணியமாட்டேன். ரோலந்துக்கு நான் கடிதம் எழுதும்போது உன் வழியாக

* ஜம்னுலால்ஜியின் துணைவியார்.

அதை அனுப்புவேன். ஆனல் கடிதம் எழுதுவது அவசியமென்று நீ நினைக்கின்ருயா?......நீ தினமும் நீண்டதூரம் நடக்கவேண்டும்.

அன்பு,

உன்
19-12-26 பாபு.

## 9

[பாபு கௌஹாத்தி காங்கிரசில் கலந்துகொண்டிருந்தார்.]

திருத்தப்படாதது.*

27-12-26
(அஞ்சல் முத்திரை)

சி. மீரா,

உன் அன்புக் கடிதங்கள் அனைத்தும் கிடைக்கப்பெற்றன.***

நீ அங்கு செய்து கொண்டிருப்பதுதான் சரியானது. அனைத்தையும் உற்று நோக்கு. இயன்றபோது, திருத்திச் சீர் செய். ஒன்றும் இயலாதபோது, அமைதியாய் இரு. பயிற்சி பெறத்தான் நீ அங்கு சென்றுள்ளாய். இந்தியில் தேர்ச்சி பெறுவதுதான் உனக்கு இடப்பட்டுள்ள பணி. பாடம் சொல்லிக் கொடுப்பதும் சீர்திருத்தம் செய்வதும் அப் பணிக்கு அடுத்த படியாகத்தான்.*** இதுவரை நீ செய்துள்ளது எதையும் குறை கூறுவதல்ல இதன் நோக்கம். உன் முயற்சி பலனுனது என்று உனக்கு ஊக்கமளிக்கவே எழுதுகின்றேன்.

செலவுகள் பற்றி ஏன் வருத்தம் தெரிவிக்க வேண்டும்? சிக்கனமாக இருக்கத்தான் நாம் விரும்புகின்ருேம். ஆனல் சேவை செய்ய நம்மை ஆயத்தம் செய்து கொள்வதற்கு அவசியமான பொருள்களை நாம் புறக்கணிக்க வேண்டியதில்லை. உனக்குத் தேவையான நிதி வசதியை ஸ்ரீ கடோடியாவிட மிருந்து பெற்றுக் கொள்ளலாம் என்பதை நீ அறிவாய்.

ரீதா என்பது அரீதா—சீயக்காய்.

இன்னும் பல .............. பேரை நீ காண்பாய். உன் தொடர்பு அவர்கள் கண்களைத் திறக்கட்டும். 'ரெய்ஸீனியா*' நீ சித்திரிப்பது போலவே, ஏன், அதைவிடக் கூட, பயங்கர மானது தான். இரத்தக்கறை படிந்த பணத்தினல் அது கட் டப்பட்டுள்ளது. இரத்த ஓட்டம் பாதங்கள் நோக்கிப் பாயா

---

* தம் கடிதங்களைத் திருப்பிப் படிக்க நேரமில்லாமல், கையெழுத்து மட்டும் இடும்போது, 'திருத்தப்படாதது' என்று கடிதத்தின் தலைப்பில் பாபு குறிப்பிடுவது வழக்கம்.

* புதுடில்லி.

மல், அனைத்தும் தலையால் உறிஞ்சப்படுகிறது. சீக்கிரமே மூளைக் காய்ச்சலும் இன்னும் எத்தனையோ நேரிடும்.***

இங்கு இயற்கைக் காட்சி இன்பமாய் உள்ளது. வீறு கொண்ட பிரும்மபுத்திராவின் கரையோரத்தில் உள்ளது எங்கள் குடில். இங்கு மழையும் குளிருமாக உள்ளது; காற்றும் அதிகம். ஆனால் கடுமையான உடற்பயிற்சி செய்தால், இந்தக் குளிர் நிலை உடலுக்கு மிகவும் நல்லது. காங்கிரஸ் குடில் வரை— ஒரு மைலுக்குச் சற்று அதிக தூரம் — நான் பொதுவாக நடந்தே சென்றுவிடுகிறேன்.

நாளை கல்கத்தாவுக்குப் புறப்படுகிறேன். நான்கு நாட்கள் அங்கு தங்குவேன் என்று எதிர்பார்க்கின்றேன்.

அன்பு,

பாபு

## 10

*—12—'26*

சி. மீரா,

இன்னும் இரு கடிதங்கள் உன்னிடமிருந்து வந்துள்ளன. சரி, எப்பொழுது விரும்புகிறாயோ, அப்பொழுது ஹரித்துவாரம்* செல்லலாம். நீ இந்தி கற்றுக் கொள்ள வசதியாய் இருந்தால் ஒழிய, பஞ்சடிப்பதும் நூற்பதும் சொல்லிக் கொடுப்பதற்காக நீ அங்கு** தங்கியிருக்க வேண்டாம். அங்கு நீ இந்தி அதிகம் கற்றுக் கொள்ள வசதி இல்லாதது போல் தோன்றுகிறது. ஆகவே அங்கிருந்து உடனே போய்விடுவது நல்லது. எந் நிலையிலும், உன் உடல் நலம் கெட இடம்தரக் கூடாது. ஆகவே நீயே நிதானித்து முடிவு செய்து, எது நல்லது என்று எண்ணுகின்றாயோ, அதைச் செய்வாய்.***

கொலைபற்றி[1] எழுதியுள்ள கடிதம் எனக்கு வேதனை அளிக்கின்றது.***

சுவாமிஜியின் இல்லத்திற்கு நீ சென்றாயா?

அன்பு,

உன்,
பாபு

---

* கங்கையின் இடது கரையோரத்தில் அப்பொழுது இருந்த 'கங்க்ரி குருகுலம்'.

** கன்யா குருகுலம். 1. சுவாமி சிரத்தானந்தர் கொலைசெய்யப்பட்டது.

## 11

சி. மீரா,

உன்னுடைய இரு கடிதங்களும் கிடைத்தன. நீ அனுபவித்து வருவதை என்னுல் அறிய முடிகிறது. அது குறித்து எனக்கு மகிழ்ச்சி தான். மனித சமுதாயம் இடம் கொடுக்காவிடில் கூட, அதன்மேல் அன்பு கொள்ள நாம் பழகவேண்டும். உண்மையில், ஆசிரமம் சாபர்மதியில் இல்லே; உன் அகத்தே தான் உள்ளது. கயமையில் தோய்ந்தவர்களும் அங்கு புகுந்த பின், களங்கத்திலிருந்து விடுதலே பெறவேண்டும். அனேவரையும் ஒன்ருகப் பாவித்து, நீரின் நடுவில் நின்றும் அமிழ்ந்தும் விடாத தாமரை போல், முரண்பாடுகள் நிறைந்த உலகில், அதில் அமுந்தி விடாமல் வாழ்வது என்பதன் பொருள் அது தான்.

உன்னுடைய வேலேத் திட்டம் எனக்கு விளங்குகிறது. அதை நீ செயல்படுத்தலாம்.

* * *

கல்கத்தாவின் சுற்றூர்களில் ஒன்ருகிய சோதேபூரில் இதை நான் எழுதுகிறேன். அங்குதான் சதீஷ்பாபு அவருடைய கதர் தொழிற்சாலேயை நிறுவியுள்ளார். அதற்கு ஏறக்குறைய எண்பதாயிரம் ரூபாய் செலவாகியுள்ளது.

உனக்கு அனுப்பிய பயணத் திட்டத்தின்படி, நாளே நாங்கள் கோமில்லாவிற்குப் புறப்படுகின்ரேம். ஆனல் ஏதேனும் ஐயப்பாடு எழுந்தால், நாங்கள் கடைசியாகக் கொடுத்திருந்த முகவரிக்குக் கடிதம் அனுப்புவதுதான் எப்பொழுதும் நல்லது.

* * *

அன்பு,

ஜனவரி 3, '27. பாபு

## 12

திருத்தப்படாததது.

சி. மீரா,

உன் கடிதம்,—இல்லே, கடிதங்களா?—கிடைத்தது. இரயில் நிலேயத்திற்குப் புறப்படும் அவசரத்தில், நேரத்தை நெருக்கி, இக் கடிதத்தை எழுதுகின்றேன்.

உனக்குப் பல்வேறு அனுபவங்கள் ஏற்பட்டு வருவது குறித்து மகிழ்ச்சி அடைகின்றேன். உன் உடல் நலனேயும் உள்ளத்தின் நிதானத்தையும் பாதுகாத்துக் கொள்ளும்

வரை, உன்மேல் எனக்குக் கோபம் வராது. மற்றப்படி, நாம் தவறுகள் செய்து தெளிவு பெறமுடியும். நீ தவறு எதுவும் செய்துள்ளதாக நான் கேள்விப்பட்டேன் என்று எண்ணிக்கொள்ளாதே. ஆனுல் தவறு இழைத்துவிட்டோம் என்ற உணர்வு எழும்போது, திருந்துவதற்குச் சித்தமாயிருப்பதே, போதிய பிராயச்சித்தமாகவும் பரிகாரமாகவும் அமைந்துவிடும்.

காசியில், வளமான பல அனுபவங்கள் எனக்கு ஏற்பட்டன. ஆனுல், அவற்றை எடுத்துச்சொல்ல அவகாசம் இல்லே.

அன்பு,

காசி என்ற வாரணுசி,
*10—1—27.*

பாபு

# 13

[ இக்கடிதத்தில் கண்டுள்ள உபதேசமொழி, நான் அதைப் படித்த போது, என்னேத் தகித்து என் ஆன்மாவில் குடிபுகுந்தது இன்றும் என் நினைவில் பசுமையாக உள்ளது.

வாழ்க்கையில் வழிகாட்டிய ஒளிவிளக்காய் என்றும் எனக்குத் துணை நின்றுள்ள கடிதங்களில் இது ஒன்று. ]

சி. மீரா,

ஹகீம்ஜியுடன் உலாவச் சென்றதைச் சித்திரிக்கும் உன் கடிதம் கிடைத்துள்ளது. பிருஜ்கிஷன் வீட்டில் விருந்து வகைகளேயோ, ஹகீம்ஜி வீட்டில் வெற்றிலேயையோ சுவைத்ததில் எனக்கு வருத்தம் ஒன்றுமில்லே. ஹகீம்ஜி வெற்றிலே போட உனக்குச் சொல்லிக் கொடுத்தது எனக்கு வேதனே அளிக்கின்றது. அது கெட்ட பொருள். அதை அவர் உனக்கு ஒருபோதும் தந்திருக்கக் கூடாது. ஆனுல் இதுபற்றி மாறுபட்ட கருத்துக்கள் உண்டு. அதனுல் தீங்கில்லே என்று அவர் கருதுகிருர் போலும். ஆயினும் விருந்துணவையும் வெற்றிலேயையும் சுவைத்ததற்குக் கூறும் காரணங்களும் சமாதானமும் பொருத்தமற்றவை. தனக்குத் தேவையில்லாத, தனக்கு விருப்பமில்லாத, பொருளின் சுவை எவ்வாறிருக்கிறது என்பதை ஒருவர் ஏன் அறியவேண்டும்? தீய பழக்கம் ஒவ்வொன்றிற்கும் சமாதானம் கூற, இத்தகைய காரணம் தான் கூறப்படுகிறது என்பதை நீ அறிவாயா? தடை செய்யப்பட்டதால் கவர்ச்சியூட்டும் ஆப்பிள் பழக் கதைதான் இது. கோடிக்கணக்கான முறை சொல்லப்பட்டுள்ள பழைய கதை இது. நான் உண்ணக்கூடாது, தொடக்கூடாது, என்று தடுக்கப்பட்டுள்ள பொருளின் சுவையை நான் ஏன் அறியக்கூடாது? ஆனுல் நீ கவலேப்படக் கூடாது. என்னுடைய வாதம் உனக்கு விளங்காவிடில்

நீ பொறுமையாக என்னுடன் வாதிடவேண்டும். என்னுடைய வாதம் உனக்குப் பொருத்தமாகத் தோன்றினல், வருங்காலத்திற்கு அது எச்சரிக்கையாக அமையவேண்டும். ஆனல் உன்னை நீயே பழித்துக் கொள்ளும் மனநிலையை அது உண்டாக்கக் கூடாது. அதற்கு அவசியமே இல்லை. இந்தச் சம்பவம் மிகச் சிறியது. ஆனல் அற்ப நிகழ்ச்சிகளிலும், பயங்கர ஆபத்து பொதிந்து நிற்கக்கூடும். ஆகவேதான் தந்தை என்ற முறையில் எச்சரிக்கை.

* * *

ஓடும் இரயிலில், பேசா நோன்பு வேளையில், இதை நான் எழுதுகிறேன். இரவு 9 மணியுடன் பேசா நோன்பு முடிந்துவிடும்.

அன்பு,

10-1-27

பாபு

* * *

என்னுடைய கையெழுத்தைப் புரிந்து கொள்ள உன்னல் முடிகிறதா?

ஸ்ரீமதி மீராபாய்,
கங்க்ரி குருகுலம், ஹரித்வாரம் (வழியாக)
பீஜ்னேர் மாவட்டம்.

# 14

[பாபு சுற்றுப்பயணம் செய்துகொண்டிருந்தார்.]

திருத்தப்படாதது.

சி. மீரா,

கங்க்ரியிலிருந்து நீ அனுப்பியுள்ள சுவையான சிறு நூல் கிடைத்தது. வேகமாக ஒரு மோட்டாரில் செல்கையிலேயே அதைப் படித்து முடித்துவிட்டேன். எனக்கு ஓய்வு கிடைப்பதில்லை. ஆனல் நீ சரியாக நிதானித்துள்ளபடி, இச் சுற்றுப் பயணம் முழுவதும் உற்சாகம் ஊட்டுவதாக அமைந்துள்ளது. சம்பாரணை எண்ணும்போது, புனித நினைவுகள் பல என் உள்ளத்தில் எழுகின்றன. உண்மையில், என்னை இந்தியாவுக்கு அறிமுகப்படுத்தியதே சம்பாரண்தான். சித்திரிக்க முடியாத நம்பிக்கை ஒளியால் பொலிவு பெற்றுக் குழந்தை முகம் போல் திகழும் பல்லாயிரக்கணக்கான மக்களின் முகங்களைப் பார்ப்பது மட்டற்ற மகிழ்ச்சி ஊட்டுவதாகும். செப்புக் காசுகளையும் ரூபாய்களையும் தாராளமாகத் தர அவர்கள் சித்தமாயிருக்கின்றனர். தங்கள் இயல்போடு இணைந்துவிட்ட சோம்பலை மட்டும் எளிதில்

விட்டுக் கொடுக்க அவர்கள் சித்தமாயில்லை. ஆனால் அதுவும் சிறிது சிறிதாக மாறுகிறது என்றே தோன்றுகிறது.

துளசி மெஹெர்[1] என்னுடன் இருக்கின்றார். நாங்கள் இப்பொழுது நேப்பாளத்திற்கு அருகாமையில் இருக்கின்றோம் என்பது உனக்குத் தெரிந்திருக்கும். நான் எங்கெந்த இடங்கள் வழியாகச் செல்கிறேன் என்பதை உன் பூகோளப் படத்தில் குறித்துக்கொள். 'து. மெ.' மலைக்குப் போவதற்கு முன் உன்னைச் சந்திக்க ஆவலாய் இருக்கின்றார். ஆனால் நீ வெகுதூரத்தில் இருப்பதாக அவர் எண்ணுகின்றார்.

கவர்னர் மாளிகைக்கு நீ ஒரு வண்டியில் சென்றது கேட்டு நான் ஆச்சரியப்படவில்லை. அந்த நண்பர்களுக்குச்* செய்ய வேண்டிய கடமையை நீ செய்துள்ளாய்.

உன்னைச் சுற்றியுள்ள காடுகளிடையே, அங்குள்ள இளைஞருடன் நீ உலவச் செல்லுவாயென்று எண்ணுகிறேன். அந்த இடத்தைத் தேர்ந்தெடுத்தது சிரத்தானந்த்ஜி என்று அவர்கள் உனக்குச் சொல்லியிருப்பார்கள். குருகுலமே அவர் வகுத்த அடிப்படையில்தான் அமைந்துள்ளது.

இன்று நாங்கள் பெட்டையா என்ற ஊரில் உள்ளோம். மக்களுக்குத் தொண்டாற்றியபோது நான் அதிக நாட்கள் தங்கியது இந்த ஊரில்தான்.

உன் கடிதங்களில் பெரும்பாலானவற்றை ஆசிரமவாசிகளுக்கும் படித்துக் காட்டுவதற்காக அங்கு அனுப்புகிறேன் என்பதை உனக்கு நான் சொல்ல வேண்டும். அவை அத்துணை அருமையாக இருக்கின்றன.*** இனிமேல் அவ்வாறு செய்யக் கூடாதென்றால், நீ எனக்குத் தயவுசெய்து தெரிவிக்க வேண்டும். மற்றவர் கண்களிலும் உன் கடிதம் படும் என்பதற்காக நீ உன்னைக் கட்டுப்படுத்திக் கொண்டு எழுதக் கூடாதென்று விரும்புகிறேன். எங்கு முடியுமோ, அங்குதான் நமது இதயங்களைத் திறந்து கொட்ட முடியும். ஆனால் அந்த வெள்ள நீர் எங்கு வேண்டுமாயினும் பாயட்டும். இதுதான் நம்முடைய கொள்கையாக இருக்கவேண்டும். இந்தக் கொள்கையைப் பின்பற்றுவதோ, போற்றுவதோ எல்லோர்க்கும் எளிதில் இயலாததாக இருக்கலாம். நீ இதைப்பற்றி என்ன எண்ணுகிறாய் என்று என்னிடம் சொல்ல வேண்டும்.

---

1 நேப்பாளத்தைச் சேர்ந்த துளசி மெஹர், சாபர்மதியில் முதன் முதலில் எனக்குப் பஞ்சடிக்கச் சொல்லிக் கொடுத்த ஆசிரியர்.

* பெர்லினில் எனக்கு அறிமுகமான இரு முஸ்லிம் நண்பர்கள், நாடு கடத்தப்பட்டிருந்தனர். அவர்கள் சார்பில் நான் 'ஹோம் மெம்பரை' சந்தித்தேன்.

உன் உடல் வலிவு பெற்று வருகிறதா?

நான் ஒவ்வொரு திங்கட்கிழமையாவது உனக்கு ஒழுங்காகக் கடிதம் எழுதுவேன். ஆகவே கவலை கொள்ள வேண்டாம். அக்கடிதம் உனக்கு எப்பொழுது வந்து சேரும் என்பது, நான் எங்கிருக்கிறேன் என்பதைப் பொறுத்தது.

சுயசரிதையின் அதிகாரங்கள் உனக்கு வந்து சேரச் சேர நீ திருத்தங்கள் செய்து கொண்டிருக்கின்றாய். சுற்றுப்பயணம் முடிந்தபின், அத்திருத்தங்களைப் பார்க்கும் சுவையான வாய்ப்பு எனக்குக் கிட்டும்.

பெட்டையா, அன்பு,
24—1—27 உன் பாபு.

## 15

சி. மீரா,

உன் கடிதங்கள் அனைத்தும் உரிய காலத்தில் எனக்குக் கிடைத்தன. அஞ்சல் ஏற்பாடுகள் மிகத் திறமையாகச் செய்யப்பட்டுள்ளன. ஓயாது பயணம் செய்து கொண்டிருந்த போதிலும், எந்தக் கடிதமும் தவறிவிடவில்லை.

இன்றிரவு பீஹாரை விட்டுப் புறப்படுகிறோம். அதில் எனக்கு வருத்தம் இல்லாமலில்லை. எனக்கு பீஹாரிடம் தனி ஈடுபாடு உண்டு.

எனக்குள்ள குறுகிய அவகாசத்தில் பலவற்றைப் பற்றி நான் எழுத வேண்டுமாதலால், எல்லாவற்றையும் சுருக்கமாக எழுதுகிறேன்.

அங்குள்ள நண்பர்களுக்கு வருத்தம் உண்டாகாத வகையில், முக்கியமான நண்பர்களை ஒன்றுகூட்டி, நீ பின்வரும் நோன்புகளை மேற்கொள்ள அவர்கள் முன்னிலையில் முடிவு செய்யலாம். நாளைக்கு மூன்றுவேளை உணவுடன் நிறுத்திக்கொள். கடைசிவேளை உணவை இரவு ஏழு மணிக்கு முன்பே முடித்துவிடு. பகாரி ரொட்டிமேல் நெய் தடவவேண்டாம். காய்கறிகளை எதுவும் சேர்க்காமல் வேகவைத்துச் சாப்பிடலாம்; உப்பு மட்டும் வேண்டுமானால் சேர்த்துக் கொள்ளலாம். இனிப்பு சேர்க்காத பாலும், வேளைக்கு இரண்டு காய்கறி வகைகளுக்கும் மூன்று பழங்களுக்கும் மேற்படாமல் உட்கொள்ளலாம். எலுமிச்சை ரசம், தேன், சர்க்கரை, உப்பு, சோடா முதலியவற்றுடன் சேர்த்து நீர் பருகுவதில் தடை எதுவும் வேண்டியதில்லை.

* நெய்யும் உப்பும் சேர்த்துத் தயாரிக்கப்படும் ரொட்டிகள்.

† பாபுவின் அனுமதியுடன் நான் இந்த நோன்பை ஓராண்டுக் காலம் நீடித்தேன். அதன் பின்பு, எளிய உணவு, இயல்பான பழக்கமாகி விட்டது.

இப்பொழுதைக்கு மார்ச்சு 20-ந்தேதி வரை இந்த நோன்பு தொடரலாம். மருந்துக்காக சாப்பிட வேண்டியது எதற்கும் விலக்கில்லை. நோய் ஏற்பட்டால், முழுவதையுமே மாற்றி அமைத்துக் கொள்ளலாம்.

இந்த நிபந்தனைகள் போதுமென்று நான் நினைக்கின்றேன். நோன்புக் காலத்தை நீடிப்பது நல்லதா என்பது பற்றி நாம் நேரில் சந்திக்கும் போது கலந்து பேசலாம்.

உடல்நலம் மிகுந்துவிட்டது என்பதைப் பற்றிக் கவலைப்பட வேண்டிய அவசியமில்லை. சுறுசுறுப்பாய் வேலை செய்வதற்குத் தடையாய் இருக்கும் அளவு தடித்துவிடாமல் மட்டும் பார்த்துக் கொள்ள வேண்டும். அவ்வாறு ஏற்பட்டு விடுமென்ற ஆபத்துக்கு இடமே இல்லை. தப்பித் தவறி ஏற்படக் கூடுமென்ற அச்சத்தையும் இந்த நோன்பு அகற்றி விடும்.

***தனக்கு உடன்பாடு இல்லாதது அனைத்தையும் பற்றிக் குறைகூறும் பழக்கம், சுயமாக முடிவு செய்யும் ஆற்றலையும், அம்முடிவை வெளிப்படுத்தும் துணிவினையும் நெரித்துவிடும். அதிலும் குறிப்பாக, அன்புக்குரியவர்கள் அவ்வாறு குறைகூறும் போது, தீங்கு அதிகம். ஆனால் நீயே உன்னைத் திருத்திக் கொள்வது கண்டு நான் மகிழ்கின்றேன். இதையெல்லாம் எண்ணியெண்ணி, வீணாகப் பதட்டம் அடையக்கூடாது என்று மட்டும் கூறுவேன். தன்னைத் தானே திருத்திக் கொள்வது, உற்சாகப் பெருக்கை உண்டாக்க வேண்டும்.*

மேலும் எழுதுவதற்கு அவகாசமில்லை. மூன்று மைல் தூரமுள்ள இரயில் நிலையத்துக்கு நடந்து செல்ல நான் இப்பொழுது புறப்பட்டால் தான், வசதியாக இரயில் ஏற முடியும்.

அன்பு,

பாபு

*21—1—27*

# 16

*[கணக்கு வைப்பது, எப்பொழுதுமே எனக்குச் சிம்ம சொப்பனம் தான். இறுதியில் எல்லாவற்றையும் எழுதிவிட்டுக் கூட்டிக் கணக்கைச் சரிபார்க்கும் பொறுப்பை மற்றவர்களிடம் ஒப்படைத்து விடுவது தான், நான் கையாண்ட பழக்கம்.]*

*சி. மீரா,*

நேற்று சுருக்கமான ஒரு கடிதம் எழுதினேன்.

உன் செலவுக் கணக்கை நீ எனக்கு அனுப்புவது பற்றிக் கவலைப்பட வேண்டாம். நீ செலவு செய்யும் ஒவ்வொரு பைசா

---

* நான் முன்னர் எழுதிய கடிதமொன்றில் தமக்குப் பிடித்தமில்லாத ஒன்றைக் குறை கூறாமல் பாபு பொறுத்தருளியிருந்தார்.

வுக்கும் கணக்கு எழுதி வைத்துக் கொள்வது மிக முக்கியம். அதுவும் அவ்வப்போது துண்டுக் காகிதங்களில் குறிக்காமல், முறையாக ஒரு கணக்குப் புத்தகத்தில் குறித்துக் கொள்ள வேண்டும். கணக்கு வைத்துக் கொள்ளக் கற்றுக்கொண்டபின், அது இவ்வளவு எளிதானதா என்று நீயே வியப்பாய். வரவினக் குறிப்புகளும் செலவினக் குறிப்புகளும் உண்டு. பணம் கிடைக்கப் பெறும் அளவுக்கு ரொக்கம் கடன் பட்டிருக்கிறது. பணம் மற்றவர்களுக்குக் கொடுக்கப்படும் அளவுக்கு, ரொக்கத்தில் அதைக் கணக்கெடுத்துக் கொள்ளலாம். ஆகவேதான் பெறுகின்ற தொகை கடன் பற்றிலும், செலவுகள் ரொக்கப் பொறுப்பு இனத்திலும் காட்டப்படுகின்றன. எடுத்துக்காட்டாக:

| தேதி | கடன்பற்றில் வைக்க வேண்டியது | தொகை | தேதி | ரொக்கப் பொறுப்பில் சேர்க்க வேண்டியது | தொகை |
|---|---|---|---|---|---|
| *12/8* | ஆசிரமத்திலிருந்து கிடைக்கப் பெற்ற தொகை | *150-0-0* | — | வண்டிச்சத்தம் | *1-8-0* |
| | | | | தபால் செலவு | *3-8-0* |
| | | | | கையிருப்பு | *145-0-0* |
| | | *150-0-0* | | | *150-0-0* |

ஆங்கிலேய முறைப்படி ரொக்கக் கணக்குப் புத்தகம் இவ்வாறு தான் வைக்கப்படுகிறது. நீ எழுதி வருவதும் இதுபோன்ற ரொக்கக் கணக்குப் புத்தகம் தான். ரொக்கக் கணக்குப் புத்தகத்திலும் நாட்கணக்குப் புத்தகத்திலும் குறிக்கப்பட்டுள்ள பல்வேறு கணக்குகளுக்கும் குறியீடாய் அமைவதுதான், பதிவேடு எனப்படும். ரொக்கக் கைமாற்று இல்லாத வரவு செலவுகள் நாட்கணக்குப் புத்தகத்தில் குறிக்கப்படும். ரொக்கம் தராமல், கடன் பொறுப்பில் வாங்குவதும் விற்பதும் நாட்கணக்குப் புத்தகத்தில் பதிவு பெறும். இதுதான், கணக்குப் பதிவு நடைமுறையின் சாரம்.

அங்கு ராட்டை இல்லை என்றறிந்து ஆச்சரியப்படுகிறேன். என்னிடம் இருப்பதுபோல், பயணச் சர்க்கா ஒன்றை உனக்குத் தரவேண்டும். அது போன்ற ஒரு சர்க்காவை உனக்கு அனுப்ப, 'காதி பிரதீஸ்தா'னுக்குச் சொல்லி ஏற்பாடு செய்துள்ளேன். உனக்கு அதில் நூற்கத் தெரியாவிடில், நான் அங்கு வரும் போது சொல்லித் தருவேன்.

தூலியா மிகவும் அமைதியான இடம். நான் சம்பாரணில் பணியாற்றிய போது என்னுடன் சேர்ந்த ஒரு தொண்டர் வீட்டில் நாங்கள் தங்கியுள்ளோம். இங்கு ஒரு பெரியவர் எங்களுடன் தங்கியுள்ளார். ஆண்ட்ரூஸ் முகத்தைவிட அருள் நிறைந்த முகம் எவருக்கும் இருக்க முடியுமானல், இப் பெரிய

வருக்குத்தான் இருக்கிறது என்று கூற வேண்டும். அகோலாவும் இதைப் போலவே, அமைதியான ஊர். மணிலாலுக்கு மணப் பெண்ணைத் தேடித் தந்துள்ளது அகோலா. பெண் கிஷோரி லாலின் உடன் பிறந்தார் மகள்; வயது பத்தொன்பது. திருமணம் உடனே நடக்கவிருக்கிறது. மணிலால் தென் ஆப்பிரிக்கா செல்லும்போது அவளும் உடன் செல்வாள். பெண், தெய்வ பக்தி உள்ள குடும்பத்தைச் சேர்ந்தவள்.

அன்பு,

தூலியா, பாபு

*14—2—27*

ஸ்ரீமதி மீராபாய்,
கிருஷ்ண நிவாஸ்,
கத்ரா குஷால் ராய்,
டில்லி.

## 17

திருத்தப்படாதது.

சி. மீரா,

***நாம் மற்றவர்களை மதிப்பிடும் போது, அவர்கள் ஏற்றுக் கொண்டுள்ள நெறியினைக் கொண்டே மதிப்பிட்டு, அதற்கு உண்மையாய் இருக்கிறார்களா என்று காணவேண்டும். உனக்கு இந்த எச்சரிக்கை அவசியமில்லை. ஆனால் மிகவும் கடுமையான கட்டுப்பாட்டை நீ விரும்பி ஏற்றுக் கொண்டுள்ளதாலும், பழக்க மில்லாத சூழ்நிலையில் தங்கியுள்ள காரணத்தாலும், ஒரு மயிரிழை கூட நிதானம் தவறிவிடக் கூடாதென்ற கவலையில் இதை எழுது கின்றேன்.

இன்று மேலும் எழுதுவதற்கு அவகாசம் இல்லாத அளவுக்கு வேலை நெருக்கடி அதிகம்.

அன்பு,

உன்

ஷோலாப்பூர், பாபு,

*21-2-27*

ஸ்ரீமதி மீராபாய்,

கங்க்ரி குருகுலம், பீஜ்னோர் மாவட்டம்

## 18

சி. மீரா,

உன்னுடைய கடிதங்கள் இரண்டும் கிடைத்தன.

இப்பொழுது அதிகாலை வேளை. பா, சுசீலா, மணிலாலின் மனைவி, மணிலால், ராம்தாஸ், மகாதேவ், திருமணச் சடங்கை நடத்தி வைக்க வந்திருக்கும் பண்டிட்ஜி ஆகியோருடன் புசாவாலில் மூன்றும் வகுப்பு இரயில் பெட்டியில் உட்கார்ந்து கொண்டிருக்கின்றேன். திருமணத்தை இதைவிட எளிய முறையில் நடத்தியிருக்க முடியாது. பரிசுகள் எதுவும் ஏற்றுக் கொள்ளவில்லை; செலவு எதுவும் செய்யவில்லை.

இன்னும் ஒரு நாளை மிச்சப்படுத்த, பேசா நோன்பு நாளிலேயே பயணம் செய்ய முடிவு செய்தேன். மணிலாலுக்கும் அவன் மனைவிக்கும் இரண்டாம் வகுப்புக் கட்டணத்திற்காகச் செலவு செய்ய நான் விரும்பவில்லை. குடும்பத்தில் புதிதாகச் சேர்ந்துள்ள பெண் சேர்ந்த முதல் நாளே, அவளிடமிருந்து நான் ஒதுங்கியிருக்கவும் விரும்பவில்லை. ஆகவே நானும் மூன்றும் வகுப்பில் செல்ல முடிவு செய்தேன். அடுத்த ஆறு நாட்கள் ஆசிரமத்தில் ஓய்வாகத் தங்கலாம். மேலும் இந்த மூன்றும் வகுப்புப் பயணம் அவ்வளவு கடினமாக இல்லை. ஆகவே இதில் எனக்கு வருத்தமில்லை; இன்னும் சொல்லப்போனல் இது எனக்குப் பிடித்திருக்கிறது.*

நான் ஆசிரமத்திற்குப் போய்ச் சேர்ந்தபின், 'சுயசரிதை'யில் நீ செய்துள்ள திருத்தங்களைப் படிப்பேன். முன்பு நீ பார்க்காத அதிகாரங்களில், நீ பல திருத்தங்கள் செய்துள்ளது நான் எதிர் பார்த்தது தான்.[1]

அன்பு,

உன்
பாபு

7-3-27

---

* இப்பொழுதிருந்து அடிக்கடி மூன்றும் வகுப்பில் செல்லத் தொடங்கினர். நாளடைவில் அது மீறமுடியாத விதியாகிவிட்டது

1. அஞ்சலில் தாமதம் ஏற்பட்டதால், சில அதிகாரங்கள் நான் பார்க்கும் முன்பே 'யங் இந்தியா'வில் பிரசுரமாயிருந்தன. நூல் வெளியீட்டிற்காக அவற்றை நான் பின்னர் திருத்த வேண்டியதாயிற்று.

# 19

14-3-27

சி. மீரா

உன் கடிதங்கள் அனைத்தும் கிடைத்தன. ஆசிரமத்தில் நான் தங்கியிருந்த ஒரு சில நாட்களில் இன்றுதான் கடைசி. நாம் விரைவில் சந்திப்போம். ஆகவே நீண்டதோர் அன்புக் கடிதம் எழுத வேண்டிய அவசியமில்லை. இழந்த உடல் நலனை நீ மீண்டும் பெறவேண்டும்..................

19ந் தேதிக்கு முன்பு அங்கு நான் வருவது சாத்தியமில்லை.[2] தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மாநாட்டில் 17ந் தேதியன்று நான் கலந்து கொள்ள வேண்டும். மாநாட்டுத் தேதிகளை மாற்ற முடிந்திருந்தால், ஆசிரமத்தில் தங்கும் நாட்களில் ஒன்றைத் தடையின்றிக் குறைத்திருப்பேன். ஆனால் தேதிகளை மாற்றுவதற்கு இடமில்லை. அவர்கள் வேறுயாரையும் ஏற்பாடு செய்திருந்தால் ஒழிய ஹரத்வார் கண்காட்சியை, 'பா' அல்லது மகாதேவ் திறந்து வைக்கலாம் என்று நான் இப்பொழுது யோசனை கூறியுள்ளேன்.

கல்கத்தாவிலிருந்து ராட்டை வந்து சேர்ந்திருக்கும் என்று நம்புகிறேன்.

என் எடை இன்னும் 5 பவுண்டு அதிகமாயிருக்கிறது என்று நான் உனக்குச் சொன்னேனா? நான் இங்கு வந்தபோது, என்னுடைய எடை சுமார் 108 பவுண்டு இருந்தது. இது மிகவும் திருப்திகரமாக உள்ளது. இன்று மாலை மீண்டும் என் எடை எடுப்பார்கள்.

அன்பு,

பாபு

# 20

[கங்க்ரி குருகுலப் பட்டமளிப்பு விழாவிற்குப் பாபு வந்து, சில நாட்கள் தங்கிவிட்டுச் சென்றார். மீண்டும் நீண்ட நாட்கள் அவரிடமிருந்து நான் பிரிந்திருக்க வேண்டியிருந்தது. குருகுலத்தை விட்டுப் பாபு புறப்பட்ட போது, நானும் கூடப் புறப்பட்டேன். ஆனால் இந்துஸ்தானியில் மேல் படிப்புக்காக ரேவாரியில் பகவத்பக்தி ஆசிரமத்திற்குச் செல்ல வேண்டியிருந்ததால், நடு வழியில் அவரிடமிருந்து விடைபெற்றேன்.

ஓயாத சுற்றுப் பயணத்தாலும் வேலையாலும் பாபுவுக்கு ஓய்வே இல்லை. அவர் உடல் நலன் கெட்டுத் திடீரென மோசமான நிலை ஏற்படக் கூடுமென்ற அச்சம் என்னை அறியாமலே என் மனத்தில் எழுந்தது. அதனால் பிரிவின்

*(2) பட்டமளிப்பு விழாவுக்காக குருகுலத்திற்கு

வேதனை வளர்ந்தது. இரயிலில் ரேவாரி நோக்கிச் செல்கையில் துயரக் கண்ணீரால் என் மூச்சுத் திணறியது. இந்தக் கடிதத்திற்குப்பின் காணப்படும் தந்தி ஐந்து நாட்களுக்குப் பின் வந்தது.]

இரயிலில்.
பரத்பூர் தாண்டியபின்

சி. மீரா,

இன்றைய பிரிவு உனக்கு மிகுந்த வேதனை அளித்தது என்று நான் கண்டதால், எனக்கும் மிகவும் வருத்தமாகத் தான் இருந்தது. ஆயினும் அதைத் தவிர்த்திருக்க இயலாது. நீ ஓர் இலட்சியப் பெண்மணியாக விளங்க வேண்டுமென்பது என் அவா. ஒவ்வா இயல்புகள் அனைத்தையும் நீ களைய வேண்டு மென்று நான் விரும்புகின்றேன். அளவுக்கு மீறிய அடக்கம் கொண்டு ஒதுங்கி யிருப்பதைத் தவிர்க்க வேண்டும். ஆசிரமம் தான் உன் இல்லத்தின் மையம். ஆனால் நீ எங்கு இருக்கின்றாயோ, அதுவே உன் இல்லமாக வேண்டும். நம்முடன் தொடர்பு கொள்ளும் நண்பர்களுக்கு சுமையாக இராமல், நமக்குத் தேவையான பொருட்களை அவர்களிடமிருந்து பெற வேண்டும். அனைவருடனும் நாம் ஒன்று என்ற உணர்வு நமக்கு வரவேண்டும். நாம் பிறருக்கு வழங்கும் போதெல்லாம், அறிந்தோ அறியாமலோ, நாமும் பிறரிடமிருந்து பெற்றுக்கொள்கிறோம் என்பதை நான் உணர்ந்துள்ளேன். நம் அனைவருக்கும் ஒரு வகையான அடக்கம் வேண்டும் என்று தான் நான் விரும்புகிறேன். ஆனால் அந்த அடக்கம், தன்னை அடக்கி ஆளும் கட்டுப் பாட்டின் கனிவாக உண்டாக வேண்டுமே அல்லாது மிதமிஞ்சிய கூச்சத்தினால் உண்டானதாக இருக்கக் கூடாது. உன்னுடைய அடக்க உணர்ச்சி, கூச்சத்தினால் எழுவது. அது அகலவேண்டும். ஆகவே தான் இதை உன் கவனத்திற்குக் கொண்டு வர விரும்பினேன். நான் சற்று பொறுத்திருக்க வேண்டும் என்பதை உணர்ந்தேன். எப்படியோ, நடந்தது நடந்து விட்டது.

கூச்சத்தையும் பதட்டத்தையும் நீ களைந்தெறிய வேண்டும். இந்த உடலில் காணும் என்னை நீ பற்றி நிற்கக்கூடாது. ஊனுக்கு அப்பாற்பட்ட உணர்வு, உன்னைவிட்டு அகலாது, என்றும் உன்னுடன் நிற்கும். ஊனின் களங்கங்களுக்குக் கட்டுப்பட்டு, ஊனிலே அடங்கி, சிறைப்பட்டுக் கிடக்கும் வலிமையற்ற உணர்வை விட, ஊனுக்கு அப்பாற்பட்ட ஆன்ம உணர்வு மேம்பட்டது. ஊனுக்கு அப்பாற்பட்ட ஆன்ம உணர்வு இலட்சியமானது. அது தான் நமக்குத் தேவையானது. பற்றற்ற நிலையை நாம் பயிலும் போதுதான், இந்த உணர்வு வளரும். இச் சாதனையை நோக்கி, நீ இப்பொழுது பாடுபட வேண்டும்.

நான் நீயாக இருந்தால், இவ்வழியில்தான் வளர்ச்சி அடைய விரும்புவேன். ஆனால் நீ உனக்கு உகந்த வழியில் வளர்ச்சி

பெறவேண்டும். ஆகவே நான் இப்பொழுது சொன்னதில் எதுவும் உன் அறிவுக்கோ உணர்வுக்கோ ஒவ்வாததாகத் தோன்றினல், அதை நீ ஒதுக்கிவிட வேண்டும். எப்படியும், நீ உன் தனித்துவத்தைக் காப்பாற்றியே தீரவேண்டும். அவசியம் ஏற்பட்டால், என்னையும் நீ எதிர்க்க வேண்டும். உன்னிடம் நான் அளவற்ற அன்பு கொண்டுள்ளபோதும், உன்னை நான் தவருக மதிப்பிட முடியுமல்லவா? என் கருத்துக்கள் எதுவும் தவருகவே இருக்க முடியாது என்று நீ எண்ணிவிடக் கூடாது.

அன்பு,

உன்
பாபு.

ஸ்ரீமதி மீராபாய்,
பகவத்பக்தி ஆசிரமம்,
ராம்புரா,
ரேவாரி.

## 21

[இந்த உடல்நல முறிவுக்குப் பின்தான், பாபுவுக்கு இரத்த அழுத்தம் சரியாக இல்லை என்பது தெரியவந்தது. அதிக இரத்த அழுத்தம் கொஞ்சகாலமாகவே இருந்திருக்கும். ஆனல் ஓயாது உற்சாகமாக உழைக்க பாபு பெற்றிருந்த தனியான ஆற்றலினல், அந்நிலை எவருக்கும் புலப்படாமலே போயிற்று.]

தந்தி.

கொடுக்கப்பட்ட இடம்: நிபானி. தேதி 27-3-27.

மீராபாய்-பகவன் பக்தி ஆசிரமம்-ராம்புரா-ரேவாரி.

சன்னித் தாக்குதலிலிருந்து பாபு அதிர்ஷ்டவசமாக தப்பியுள்ளார். இரத்த அழுத்தம் இன்னமும் மிக அதிகமாகவே உள்ளது. மிதமிஞ்சிய வேலைப்பளுவும் நரம்புத்தளர்ச்சியும் காரணம் என்றும் பூரண ஓய்வு அவசியம் என்றும் குறைந்தது கோடை மாதங்களுக்காவது எல்லா நிகழ்ச்சிகளையும் ரத்துசெய்யவேண்டும் என்றும் டாக்டர்கள் ஆலோசனை. இருபத்தெட்டன்று பெல்காம் புறப்படுகிறோம்.

மகாதேவ்.

## 22

சி. மீரா,

உன் கடிதமும் தந்தியும் கிடைத்தன. நீ கலங்கக்கூடாது. என்ருவது ஒருநாள் இந்த முறிவு ஏற்பட்டுத்தானிருக்கும். உடலில் என்னை நீ மறந்துவிடவேண்டும். அது என்ருவது உன்னை விட்டுப்போக வேண்டியது தானே? உன்முன் காத்திருக்கும் வேலையைச் செய்யவேண்டும். அதிகம் எழுதினல் வைத்தியர் களும் என்னைச் சுற்றியுள்ள நண்பர்களும் வருத்தப்படுவார்கள். எவ்வளவு அவசியமென்று நான் எண்ணுகிறேனே, அவ்வளவு ஓய்வு எடுத்துக்கொண்டுதானிருக்கின்றேன். ஆனல் உடம்புக்கு அதிகமாகச் செல்லம் கொடுத்துவிடக்கூடாது. கவலைப்படாம லிருப்பதாக நீ உறுதிகூற வேண்டும். உழைப்பில் இரண்டறக் கலந்துவிடு.

அன்பு,

உன்

பாபு.

1-4-27.

(அஞ்சல் முத்திரை)

## 23

சி. மீரா

உனக்கு எழுதும் பொறுப்பிலிருந்து எனக்கு நீ விடுதலை அளித்துள்ள போதும், ஒவ்வொரு திங்கட்கிழமையும் உனக்குக் கடிதம் எழுதுவதால் பெறும் மகிழ்ச்சியை நான் கைவிட முடியாது. அன்புக் கடிதங்கள் எழுதுவது மனத்திற்கு மகிழ்ச்சி ஊட்டுவது ; தட்டிக்கழிக்கக் காரணம் கண்டுபிடிக்கும் அளவுக்குச் சுமையல்ல. இன்னும் பலவீனமாக இருந்த போதிலும், உடல் நிலை இப்பொழுது தேறியுள்ளது.

உடம்பைப் பரிசோதிக்க டாக்டர் மேத்தா, பம்பாயிலிருந்து தொலைவைப் பொருட்படுத்தாமல் வந்திருந்தார். அடுத்த சில மாதங்களுக்குச் சுற்றுப் பயணத்தை அடியோடு நிறுத்திவிட வேண்டுமென்று அவர் கண்டிப்பாகக் கூறிவிட்டார். படுக்கையி லேயே படிப்பதையோ, அவ்வப்போது நண்பர்களுக்குக் கடிதம் எழுதுவதையோ அவர் தடுக்கவில்லை. முழு ஓய்வு எடுத்துக் கொண்டால், இழந்த பலத்தை அநேகமாக மீண்டும் பெற்றுவிட முடியுமென்று அவர் எண்ணுகிருர். ஆனல் சென்ற மாதம் 25ந் தேதியன்று திடீரென்று நிறுத்தப்பட்ட சுற்றுப் பயணத்தைப் போல் கடுமையான சுற்றுப் பயணத்தை மேற்கொள்ளும் அள வுக்கு இனி எப்பொழுதுமே பலம் திரும்பாதாம். பார்க்கலாம். சுற்றுப் பயணம் முடிவில் ரத்து செய்யப்பட்டால், நான் ஆசிர

மத்தில் ஓய்வெடுக்க வேண்டும். இன்றல்லது, நாளை, இதுபற்றி ஒரு முடிவு செய்வேன். அநேகமாக, சுற்றுப் பயணம் ரத்துசெய்யப்படும். அவ்வாறானாலும், அடுத்த வாரம் செவ்வாய்க் கிழமைக்கு முன்பு, நான் இங்கிருந்து புறப்படமாட்டேன்.

ஆனால் நீ ஏன் இவ்வாறு வேதனைப்படுகிறாய்?* அது வெறும் ஆன்ம வேதனை தானா, அல்லது வெப்ப நிலையினால் இந்த வேதனை வளர்ந்துள்ளதா? இன்னும் சற்று இதமான தட்பநிலை உனக்கு அவசியமானால், அங்கிருந்து நீ வேறிடம் செல்ல வேண்டும். அங்கு வெப்பம் எப்படி உள்ளது!......

அன்பு,

பாபு.

4-4-27.

## 24

சி. மீரா,

உன் கடிதங்கள் கிடைத்தன. உன் ஆன்மா அனைத்தையும் என்னிடம் நீ ஒப்படைத்துள்ளதுதான் சரி. அமைப்பு ஒன்றை உருவாக்க வேண்டுமென்றும், ஆகவே முறையாகக் காரியங்களைச் செய்ய வேண்டுமென்றும், நீ கூறுவதை நான் முற்றிலும் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் என்மேல் கொண்ட அன்பின் காரணமாக, என் சுற்றுப் பயணங்களை ஏற்பாடு செய்தவர்களிடம் நீ சற்று பொறுமை இழந்துள்ளதுபோல் தோன்றுகிறது. இப்பொழுது கிடைத்துள்ள எச்சரிக்கையின் படிப்பினையை அனைவரும் உணர்ந்து பலனடைவார்கள். எழில்மிக்க இச்சூழ்நிலையில், எனக்குத் தேவையான ஓய்வு முழுவதும் பெற்றுவருகிறேன். மைசூருக்கு என்னை அழைத்துச் செல்லும்போது, இன்னும் அதிக ஓய்வு பெற வாய்ப்பிருக்கும். ஆசிரமத்தில் ஓய்வு பெறுவதற்கில்லை. குளிர்ச்சியான இடமொன்றைத் தேர்ந்தெடுக்க வேண்டுமென்று டாக்டர் மேத்தா வற்புறுத்தினர். ஏப்ரல் மாதத்தில் சுற்றுப் பயணம் செய்வதாக இருந்த இடத்திலேயே நான் இப்பொழுது தங்க ஏற்பாடாகியுள்ளது.

நாளுக்கு நாள் என் பலம் அதிகரித்து வருகிறது என்பதை என் கையெழுத்திலிருந்தே நீ தெரிந்து கொள்ளலாம். சிறிது தூரம் நேற்று நான் நடக்க முடிந்தது, திருப்திகரமாக இருக்கிறது. என்னைப் பொறுத்த வரையில் செய்தி இவ்வளவுதான்.

நீ குதிரை சவாரி செய்வது எனக்குப் பிடித்திருக்கிறது. உன்னை உற்சாகப்படுத்துவதுடன், கிராமங்களுக்குச் சென்று கிராம வாழ்க்கை பற்றி ஒரு சிறிதறிய, அது உனக்கு வாய்ப்பளிக்கும்.

* நெஞ்சில் போராட்டம் ஓயவில்லை.

வசதியான சேணம் தந்திருக்கிருர்களா? கிராமத்தில் பேசப்படும் இந்தியின் பல்வகை நுட்பங்களேயும் நீ புரிந்து கொள்ள முயலவேண்டும். கிராமத்தார் இந்தியைப் புரிந்து கொண்டு, அதையே பேசும் அளவிற்கு நீ இந்தியில் தேர்ச்சி பெறும்வரை நான் திருப்தி அடையமாட்டேன். அதற்காகப் பயப்பட வேண்டாம். உழைப்பில் உனக்குள்ள உண்மையான ஈடுபாட்டிஞல், அது தாஞக வரும். நானும் அவசரப்படப் போவதில்லே. ஆனல் உன் வேலேக்கு, இந்தியில் நல்ல தேர்ச்சி பெற்றிருப்பது மிகவும் அவசியம். ஆகவே இந்தி பேசுவதற்கும் பயில்வதற்கும் வாய்ப்பு ஏற்படுத்திக் கொள்ள நீ முயற்சி செய்ய வேண்டும். உன்னேச் சுற்றி நடப்பதனைத்தையும் புரிந்து கொள்ளும் முயற்சியைக் கைவிடாதே.

* * *

அன்பு,

பாபு

மகாதேவும் தேவதாசும் கதர் விற்க வெளியில் சென்றுள்ளார்கள்.

*11—4—27*

## 25

சி. மீரா,

பெத்தோவன் வாசகங்களிலிருந்து மேற்கோள்கள்[1] தந்து நீ எழுதிய கடிதத்திற்கு, இன்று உண்ணு நோன்பு நாளன்று பதில் எழுத வேண்டுமென்று எனக்குத் தோன்றியது. அவை ஆன்மாவிற்கு ஊட்டமூட்டும் உணவு. உன் இசை ஞானத்தையோ, இசையில் உனக்குள்ள ஈடுபாட்டினேயோ மறந்துவிடக் கூடாதென்று விரும்புகிறேன். இசைக்கு நீ பெரிதும் கடமைப் பட்டிருப்பதோடு மட்டுமல்லாமல், உன்னே எனக்கு அறிமுகப் படுத்துவதற்கு இசையே உண்மையில் காரணமாக இருந்த நிலேயில்,[2] அதை மறப்பது பெருந் துரோகமாகும்.

அவர்களுடைய அன்பான அழைப்பிற்காக, மகராஜ்ஜிக்கும் நண்பர்கள் அனேவருக்கும் நன்றி தெரிவி. ஆனல் தற்போதைக்கு நான் மைசூரில் நந்தி மலேக்குத்தான் செல்ல வேண்டும். அங்கு நான் வரமுடிந்தால், அது எனக்குப் பெரிதும் மகிழ்ச்சி அளிக்கும்.

சென்ற வாரத்தை[3] நாங்கள் இங்கு மிகவும் சிறப்பாகக் கொண்டாடிேனம்.

---

1. ரோமெயின் ரோலந்து எழுதிய 'பெத்தோவன் வாழ்க்கை'யிலிருந்து மேற்கோள்கள் காட்டியதாக எனக்கு நினைவு. "வேதனேயின் மூலம் இன்பம்" என்ற பெத்தோவனின் இலட்சிய வாசகத்தையும் மேற்கோளாக அளித்திருந்தேன்.

2. முகவுரையைக் காண்க—

3. தேசிய வாரம்.

ஒரு ராட்டை தினமும் 16 மணி நேரமும் இயங்கிவருகிறது. ஒரு நாளுக்கு, 4 அடி கொண்ட 3000 சுற்று நூல் நூற்கப்பட்டுள்ளது. 6-ந் தேதியும் 13-ந் தேதியும் அநேகமாக அனைவரும் உண்ணு நோன்பு மேற்கொண்டனர்.

இங்கு நான் இருக்கையில், உன்னிடமிருந்து இன்னும் அதிகக் கடிதங்கள் வருமென்று எதிர்பார்க்கின்றேன்.

ரோலந்து கடிதத்திற்கு உன் மொழிபெயர்ப்பின் படியொன்றை 'காகா' அனுப்பியுள்ளார். மொழிபெயர்ப்பு மிகவும் சிறப்பாக உள்ளது. மூலம் அதைவிட அருமையாக இருக்க முடியாது.

அங்கு நீ கமிஷனரை சந்தித்தது கேட்டு மகிழ்ச்சி அடைகிறேன். உன் நிலையில் உள்ளவர்க்குக் கிடைக்க வேண்டியது கிடைத்து வருகிறது — தோட்டியால் தத்தெடுக்கப்பட்டுள்ள பெண்ணுக்கு வேறென்ன கிடைக்க முடியும்? நீ என்னவாய் இருந்தாய் என்பதை நீ மறந்துவிட வேண்டும். நீ இப்பொழுது என்னவாய் இருக்கிறாய் என்பதைத் தான் உணர வேண்டும். உன்னைக் காணும்போது, நீ யார் என்று நிதானிக்க, இந்த அதிகாரிகளால், பாவம், இயலவில்லை. உன் பூர்வீகத்தை அவர்களால் மறக்க இயலவில்லை; ஆகவே திகைப்படைகின்றனர். அவர்கள் பரபரப்படையாமலிருக்க நீ தான் உதவ வேண்டும். இன்று ஆளும் அரசர், மாலுமியாகக் கடற்படையில் சேர்ந்த போது, மாலுமி போல்தான் நடத்தப்பட்டார் என்று சொல்லப்படுகிறது. மற்றவர்களுடன் சேர்ந்து, காலையில் பாலில்லாத காப்பியும், கருப்பு ரொட்டியும் தான் சாப்பிட்டாராம். அது மட்டுமல்ல. அவர் சாதாரண மாலுமி தான் என்று மற்றவர்களாலும் மதிக்கப்பட்டார். அது போலவே, நீயும் ஒரு நாள் சாதாரண கிராமப் பெண்ணாக மதிக்கப்பட வேண்டும். அதுதான் உனக்கும் எனக்கும் பெருமை.

அன்பு,

பாபு

*13—4—27*

## 26

*சி. மீரா,*

உன் கடிதங்கள் கிடைத்தன.

கடுமையாக முயற்சி செய்து, உடலைக் கெடுத்துக் கொள்ளாதே. பயிற்சி அதிகச் சுமையாக இருந்தால், பயிற்சியையும் பாட போதனையையும் குறைத்துக் கொள்ளவேண்டும். அங்குள்ள நண்பர்களிடம், உன் உடல் வலிமை பற்றித் தெளிவாகக் கூறி

விடு. எக்காரணம் கொண்டும், உன் உடல் நலனை இழக்கக் கூடாது. நல்ல பாலும் பழமும் கிடைக்கின்றனவா?

நான் மிகவும் நலமாக உள்ளேன். சென்ற இரு நாட்களாகக் காலையிலும் மாலையிலும் உலாவச் சென்றேன். அதனால் தீங்கு எதுவும் ஏற்படவில்லை. ஒரு பழத்திற்குப் பதிலாக இப்பொழுது ஒரு காய் சாப்பிடுவதுடன் 'பகாரி'யும் சாப்பிடுகிறேன்.

அம்போலி யிலிருந்து இன்று புறப்பட்டு, தடை எதுவும் நேரிடாவிடில் நாளை பெல்காமிலிருந்து புறப்படுகிறோம். அடுத்த இரு மாதங்களுக்கு எங்கள் முகவரி, நந்திமலை, மைசூர்.

இந்த ஊரை விட்டுப் புறப்படுவதில், எனக்கு அதிக வருத்தம் இல்லாமலில்லை. இனிமையான இடம் என்பது மட்டுமல்ல; என்னைப் பெரிதும் கவர்ந்துள்ளது, இவ்வூர் ஆட்சித் தலைவரின் அற்புதப் பண்பு. எனக்குக் கிடைத்துள்ள தகவல்கள் அனைத்தையும் கொண்டு பார்த்தால், அவர் இலட்சிய ஆட்சித் தலைவர் என்று தோன்றுகிறது. தம் சொந்தச் செலவுக்காகக் குறிப்பிட்ட ஒரு தொகையை அவர் அரசாங்க நிதியிலிருந்து பெறுகிறார். தம் குடிமக்களுடன் தடையின்றிப் பழகுகின்றார். 125 கிராமங்களில் ஒவ்வொன்றிற்கும் சென்றுள்ளார். அவர் கட்டுப்பாடான வாழ்க்கை நடத்துகிறார். அவருடைய துணைவியாரும் அவருக்கு ஏற்றாற்போல் உயர்ந்த பண்புடையவர். அவரை நான் அடிக்கடி சந்தித்ததுண்டு. அவருடைய எளிய, இனிய, நேர்மையான நடத்தை எனக்கு மகிழ்ச்சி அளித்துள்ளது. ஆகவேதான் இந்த ஊர் எனக்குப் பெரிதும் பிடித்திருக்கிறது. ஆனால் நமக்குப் பிடித்தமானதையே நாம் எப்பொழுதும் செய்து கொண்டிருக்க முடியாதல்லவா? இன்னும் சில மணி நேரங்களில் நாங்கள் இங்கிருந்து புறப்படுவோம்.

புது சர்க்கா எவ்வாறு வேலை செய்கிறது என்றறிய விரும்புகிறேன்.***

அன்பு,

பாபு

*18—4—27*
*ஸ்ரீமதி மீரா,*
*ரேவாரி,*

## 27

*திருத்தப்படாதது*

*சி. மீரா,*

உன் நான்கு கடிதங்களும் கிடைத்தன. அவற்றில் மூன்று ஒன்றாய் நேற்று வந்து சேர்ந்தன.

நாங்கள் புறப்பட்டதைத் தெரிவிக்க 19-ந் தேதி பெல்காமிலிருந்து அனுப்பிய தந்தி உனக்குக் கிடைத்திருக்கும்.

நேற்று உன்னிடமிருந்து வந்த கடிதமொன்றைப் படித்ததும் நந்திக்கு உடனே புறப்பட்டு வருமாறு உனக்குத் தந்தி அனுப்ப வேண்டுமென்று தோன்றியது. ஆனால் நான் என்னைக் கட்டுப் படுத்திக் கொண்டேன். மற்ற இரண்டு கடிதங்களும் அவ்வளவு சோர்வாகத் தோன்றவில்லை. ஆயினும், பிரிவு, தாங்கமுடியாத வேதனையாகி விட்டால், என் பதிலுக்குக் காத்திராமலும், என் அழைப்பை எதிர்பாராமலும், நீ புறப்பட்டு வந்துவிட வேண்டும். உன்னைச் சுற்றியுள்ள நண்பர்கள் உன்னிடம் காட்டும் அன்பு, உனக்கு உறுதி அளித்து அங்கேயே தங்குவதற்கு உந்த வேண்டும். அங்குள்ளவர்கள் காட்டும் அன்பைச் சித்திரிக்கும் உன் கடிதம் மிகவும் உருக்கமாயுள்ளது. அத்தனை அன்புக்கிடை யிலே, நீ மன அமைதியுடன் அங்கு தங்க முடியாது போனால், அது வருத்தத்திற்குரியது. ஆனால் எவரும் தம் இயல்பைத் திடீ ரென மாற்றிக் கொள்ள முடியாது. அங்கு அமைதி காண உன் முயற்சிகள் பலனளிக்காவிடில், அங்குள்ள நண்பர்களிடம் அதைத் தெளிவாக எடுத்துச் சொல்லிவிட்டுத் தயக்கமின்றி வந்து விட வேண்டும். எந்தக் காரணம் கொண்டும் அங்கு ஒரு முறிவு ஏற் படும் நிலைக்கு இடம் தரலாகாது. மன முறிவு ஏற்படும் வரை, உன் பொறுமையை நீ சோதித்துக் கொள்ளக் கூடாது.

இங்கு வந்து இன்று 6-வது நாள். இந்த ஊருக்கு இன்னும் நான் பழக்கமாக வில்லை. அம்போலியில் உடலில் இருந்த பலமும் ஆற்றலும் இங்கு இன்னமும் வரவில்லை. ஆனால் இறுதியில் அம் போலியை விட நந்தியில் தங்குவது அதிக நன்மை பயக்குமென்று வைத்தியர்கள் எனக்கு உறுதியளிக்கின்றனர். இரத்தக் கொதிப்பு உள்ளவர்களுக்கு இது உகந்த இடம் என்று அவர்கள் கூறுகிறார் கள். கவலைக்கோ வருத்தத்திற்கோ சற்றும் இடமில்லை.

இரண்டு உண்ணா நோன்பு நாட்களன்று மறதியாய் இருந்து விட்டது குறித்து நீ பெரிதும் வருந்தினதால், நீ உண்ணா நோன்பு மேற்கொண்டது நல்லதுதான்.* உடல் நலனைப் பொறுத்தவரை யிலும் கூட, மன வேதனை அதிகமாயிருக்கும் போது, உண்ணா நோன்பு மேற்கொள்வது நல்லது என்பதில் ஐயமில்லை. என் உடல் நலம் மோசமாவதற்கு முன் நான் உண்ணா நோன்பு மேற்கொண் டிருந்தால், நிச்சயமாக நன்மை ஏற்பட்டிருக்கும். அன்று ஏற்பட்ட வேதனை தாங்க முடியாததாய் இருந்தது. ஆனால் வேளை கடந்தபின் விவேகம் தோன்றிய கதைதான், இது. என்னுடைய மடமையின் படிப்பினைகளால் மற்றவர்களாவது பலனடையலாம். அந்த வேதனையை நான் உணர்ந்திருந்தேன் என்பதாலும், அந்த நிலையில் உண்ணா நோன்பு மேற்கொள்வதன் நன்மையையும் அறிந்திருந்தேன் என்பதாலும் தான், மடமை என்று குறிப்பிடுகின்றேன். ஆனால் சைத்தான் எப்பொழுதும் நம்மைப் பின்தொடர்ந்து கொண்டிருக் கிறான். நிலைதவறுகிற நேரத்தில் நம்மீது பாய்ந்து நம்மைப் பற்றிக்

---

* ஏப்ரல் 6-ந்தேதி தொடங்கி, 13-ந் தேதி முடிகின்ற தேசிய வாரத் தின் துவக்க, இறுதி நாட்களன்று உண்ணா நோன்பு மேற்கொள்ள நான், மறதி யால், தவறிவிட்டேன்.

கொள்ளக் காத்திருக்கிறுன். நான் நிலையிழந்து உறுதி குலைந்து நின்ற நேரத்தில், சைத்தான் தன் சூழ்ச்சியால் என்னைச் சிக்க வைத்து விட்டான். ஆகவே உன்னுடைய உண்ணு நோன்பைப் பற்றி எனக்குக் கவலை ஒன்றுமில்லை. உண்ணு நோன்பை எப் பொழுது எப்படி மேற்கொள்ள வேண்டுமென்பது உனக்குத் தான் தெரிய முடியும்.

இரும்பு நரம்புகளை நீ உருவாக்கிக் கொள்ள வேண்டும். நம் முடைய பணிக்கு அது அவசியமானது.

ஆண்டவன் உனக்குத் துணை செய்வாராக.

அன்பு,

பாபு

நந்திமலை (மைசூர்)
25-4-27

## 28

சி. மீரா,

தற்போதைக்கு, நான் கூடியவரை அடிக்கடி கடிதம் எழுத வேண்டும். நேற்று நான் எழுதிய கடிதத்திற்கு உன் பதிலை ஆவலுடன் எதிர்பார்ப்பேன்.

அங்கு தச்சர்கள் இருந்தால், பயணச் சர்க்காவை பழுது பார்த்துக் கொள்ள வேண்டும். நீயே பழுது பார்த்துக் கொள்ள முடியுமானுல், அவ்வாறே செய்ய வேண்டும். தேவையான கருவி களை நண்பர்களிடமிருந்து வாங்கிக் கொள்ளலாம்; அல்லது விலைக்கு வாங்கி வைத்துக் கொள்ளலாம். இக் கருவிகளால் எப் பொழுதும் பலன் உண்டு.

நேற்றுவிட இன்று உடல் நன்கு தேறியுள்ளது. அஞ்சலில் கடிதத்தைச் சேர்க்க சுப்பையா காத்துக் கொண்டிருக்கிறுன்.

அன்பு,

உன்
பாபு.

செவ்வாய்
26-4-27

திருத்தப்படாதது.

## 29

சி. மீரா

உன் உற்சாகமான கடிதம் கிடைக்கப் பெற்றது. நீ எழுதியுள்ள சொல் ஒவ்வொன்றையும் உணர்ந்து செயல் படுத்திவிட்டால், உன் வேதனை அனைத்தும் நீங்கிவிடும்; என் கவலையும் தீர்ந்து விடும். நம் வாழ்வு உண்மையில் நிற்பதும் நிலைப்பதும் நம் உழைப்பில் தான். அழியும் இந்த யாக்கையைத் தற்காலிகமாக ஒரு கருவியாகப் பயன்படுத்தாமல், அத்துடன் நாமும் இரண்டறக் கலந்து விட்டால் அத்துடன் நாமும் அழிந்து படுவோம்.

பிரிவு குறித்தும் மரணம் குறித்தும் வேதனைப் படுவது தான் மிகக் கொடிய மாயை என்ற உண்மை, வாழ்வில் நடக்கும் நிகழ்ச்சிகளைக் கூர்ந்து நோக்கி ஆராய்கையில் எனக்கு மேலும் மேலும் தெளிவாகிறது. அது மாயை என்பதை உணர்ந்து விட்டால், அப்பொழுதே நாம் விடுதலை பெற்று விடுகிறோம். மரணம் என்பதே கிடையாது; உட்பொருள் பிரிந்து நீங்குவது கிடையாது. நம் நண்பர்களின் உயிர்ச் சாரத்திற்காக அவர்களிடம் அன்பு கொள்கிறோம் எனினும், அந்த உட்பொருளுக்கு மேல் மூடியாகத் தற்காலிகமாகப் பயன்படும் ஓடு அழிவதைக் கண்டு நாம் வருந்துகிறோம், வேதனைப் படுகிறோம். இது உண்மையில் பரிதாபமானது. சிதறிய சிறு துண்டினைத் தாண்டி, அதற்கப்பால் உள்ள முழுமையை உணர்ந்து போற்ற உண்மையான நட்பு நம்மை உந்த வேண்டும். நொடிப் பொழுதுக்கு அந்த உண்மை விளக்கத்தை உன்னால் காண முடிந்தது என்று எண்ணுகின்றேன். அது என்றும் உனக்குத் துணைநின்று வழிகாட்டட்டும்.*

* * * *

அன்பு,

பாபு

27-4-17

## 30

திருத்தப்படாதது.

சி. மீரா

உன்னிடமிருந்து கடைசியாக வந்த கடிதம் மேலும் உற்சாகமாக இருக்கிறது. இவ்வாறே உற்சாகம் குறையாமல் இருப்பாயென்று நம்புகிறேன். இன்று இந்தியில் உனக்கு ஒரு அஞ்சலட்டை அனுப்ப வேண்டுமென்றிருந்தேன். ஆனால் அவகாசம் இல்லாமல் போயிற்று. இங்கு அஞ்சலில் கடிதங்கள் நமக்கு வந்து சேருமுன்பே நாம் எழுதும் கடிதங்கள் தான் அன்றைய கட்டில் சேரும்.

---

* உண்மையை அறிவால் உணர்ந்திருந்தேன்; ஆனால் அதற்குப் பல ஆண்டுகளுக்குப் பின்பும் நெஞ்சு பின்தங்கியே நின்றது.

என் உணவில் நான் ஒரு சிறு மாறுதல் செய்துள்ளேன்: அருகாமையில் வசிக்கும் பிரபல மருத்துவ நிபுணர் ஒருவர் அந்த மாறுதலுக்கு ஒப்புக் கொண்டுள்ளார். பச்சைப் பாலே, அவ்வப் போது ஒரு சில வேப்பிலைகளின் சாறைச் சேர்த்துக்கொண்டு குடிக்கின்றேன். தற்போதைக்குச் சப்பாத்தியும் காய்கறிகளும் சாப்பிடுவதை நிறுத்தியுள்ளேன். அவசியம் ஏற்பட்டால் பிந்திய இரண்டையும் மீண்டும் சாப்பிடத் தொடங்குவேன். இரத்தக் கொதிப்புத் தாக்குதல் ஏற்பட்டபின் முதன் முறையாக இரத்தக் கொதிப்பு குறைந்துள்ளது. மொத்தத்தில் என் உடல் நலன் தேறியுள்ளதாகவே எனக்குத் தோன்றுகிறது

மற்றவை மகாதேவ் மூலம்.

அன்பு,

பாபு

28-4-27

29-ந் தேதி காலை

* * *

உன் கடிதம் ஒன்றில் கேட்டிருந்த கேள்விக்குப் பதில் சொல்ல மறந்துவிட்டேன் என்று எண்ணுகின்றேன். தினமும் கடைசிச் சாப்பாட்டை இரவு 7 மணிக்கு முன்போ, இருட்டு வதற்கு முன்போ, நீ எடுத்துக் கொண்டுள்ள நோன்புக்கிணங்க, முடித்துக் கொள்ள வேண்டுமென்பதுதான், உன் நோன்பின் பொருள். ஆகவே உன் விளக்கம் பொருத்தமானதுதான். நோன்புகளைப் பொறுத்தவரை, ஐயப்பாடு எதுவும் எழுந்தால், நமக்குச் சாதகமாக விளக்கம் கூறிக்கொள்ளக் கூடாது என்பது தான் பொதுவான விதி.[1] அதாவது விதிகளை மேலும் கண்டிப்பாக ஏற்றுக்கொள்ள வேண்டுமே அல்லாது தளர்த்திக் கொள்ளக் கூடாது.

பாபு

என்னைப் பற்றிய அக்கறைக்கு, ஸ்லேட் சீமாட்டிக்கு[2] நான் கடமைப் பட்டிருக்கின்றேன் என்று அவர்களிடம் கூறவும்.

பாபு

---

1. உண்ணா நோன்புகளை மட்டுமல்ல, ஐயப்பாடு எழும் எல்லாப் பிரச்னைகளையும் பொறுத்தவரை, எனக்கு வழிகாட்டிய ஒளிவிளக்காய் விளங்கியது இக் கோள்கை.

2. என் அன்னை.

# 31

*திருத்தப்படாதது*

சி. மீரா,

எந்நேரமும் உன்னைப்பற்றி எண்ணிக்கொண்டிருக்கின்றேன் என்பதை உனக்கு எடுத்துச் சொல்லவும், என்னுடைய இந்தியைப் படிக்கவும் புரிந்துகொள்ளவும் உன்னால் முடிகிறதா என்று பார்க்கவும்தான், நான் உனக்கு இந்தியில் அஞ்சல் துண்டு ஒன்று எழுதினேன். அது குறித்து அச்சம் கொள்ளாதே. எப்பொழுதும் இந்தியில்தான் எழுதுவதென்ற எண்ணம் எனக்கில்லை. ஆனால் என் இந்தி உனக்கு விளங்கினால், வழக்கமாக எழுதும் கடிதங்களுக்கு மேலாக, சில கடிதங்களை இந்தியில் எழுதலாமென்று எண்ணியிருக்கின்றேன் — உனக்கு இந்த யோசனை பிடித்திருந்தால் மட்டுமேதான். இல்லாவிடில் அவ்வாறு செய்யப் போவதில்லை.

உன் தந்தி எனக்குக் கவலை அளித்தது. அந்தத் தந்தி அனுப்பும் அவசியத்தை உண்டுபண்ணும்படி நான் என் கடிதங்களில் என்ன எழுதியிருந்தேன் என்பது எனக்கு விளங்கவில்லை. என் உடல் எவ்வளவு நன்றாகத் தேறியுள்ளது என்பது உனக்கு விளங்கவில்லை. நவஜீவனுக்கு இந்த வாரம் நான்கு கட்டுரைகள் எழுதியுள்ளேன். 'யங் இந்தியா'விற்குச் சென்ற வாரம் மூன்று கட்டுரைகள் எழுதினேன். எல்லாப் பத்திரிகைகளுக்கும் வழக்கமாகச் செய்ய வேண்டிய வேலையில் ஏறக்குறைய முழுவதையும் மீண்டும் செய்யத் தொடங்கிவிட்டேன். 'காதற்கடிதங்கள்' எழுதுவதிலும் குறை வைக்கவில்லை.

ஆனால் இவை அனைத்துக்கும் மேலாக, நேற்று நடந்த மருத்துவப் பரிசோதனையின் முடிவு மிகவும் உற்சாகம் ஊட்டுவதாய் உள்ளது. இரத்த அழுத்தம் 188ஆக இருந்தது, 155க்குக் குறைந்துவிட்டது. என் வயதுக்கு, சாதாரணமாக இருக்கக்கூடிய இரத்த அழுத்தம் 155 முதல் 160 வரை. சென்ற மூன்று நாட்களாக, நாளைக்கு இரு முறை, அரைமணி நேரத்துக்கு மேற்படாமல், மொத்தம் ஒரு மைலுக்கு மேல் நடக்கின்றேன். அம்போலியில் நடந்ததைவிட இது அதிகம். ஆகவே என் உடல் நலனைப்பற்றி இப்பொழுது எவ்விதக் கவலையுமில்லை. நந்தியை விட்டு இப்பொழுது புறப்படுவதற்கில்லை. இழந்த உடல் வலிமையை மீண்டும் பெறுவது சாத்தியமென்றால், அவ்வாறு பெறும் முன்போ, நந்தியில் தங்குவதற்கேற்ற காலம் ஜுலையில் முடியுமுன்போ, இங்கிருந்து புறப்படுவது மடமையாகும்.

நீ மன அமைதியுடன் இருந்ததாக உன் கடைசிக் கடிதத்திலிருந்து தோன்றியது. ஆனால் உன் தந்தியைப் பார்த்தால், ஊசலாடும் உன் உள்ளம் மீண்டும் சஞ்சல நிலைக்கு வந்துவிட்டதென்று தோன்றுகிறது. இது குறித்து நான் வியப்படையவில்லை. சிற்சில வேளைகளில் ஏற்படும் சிந்தைத் தெளிவு எப்

பொழுதுமே நிலைத்து நின்றுவிட்டால், அதற்குமேல் நாம் செய்வதற்கு எதுவுமே இராது. நம் நல்லகாலமோ, கெட்டகாலமோ, நம் உணர்ச்சிகள் பலமுறை பொங்கி அடங்கி, ஓங்கி ஓய்ந்த பின்தான், நாம் நிலையான அமைதி காண முடிகின்றது.

ஆகவேதான் உன் விருப்பப்படி நடக்க உனக்குச் சுதந்திரம் அளித்துவிட்டேன். அமைதியாக உன்னால் அங்கு தங்க முடிந்தால் நல்லதுதான். மன அமைதியுடன் அங்கு இருக்க இயலாவிடில், நீ அங்கிருந்து வந்துவிடுவதுதான் நல்லது. நீ எந்த முடிவுக்கும் வரலாம். ஆனால் அந்த முடிவு என் உடல் நலனை உத்தேசித்துச் செய்யப்பட்டதாக இருக்கக் கூடாது. நீ இங்கு வந்தால், கங்க்ரியில் நீ என்னைப் பார்த்தபோது இருந்த நிலைக்கும் இப்பொழுதுள்ள நிலைக்கும் அதிக வேறுபாடு காண மாட்டாய். உள்ளத்தின் ஆழத்தில் துருவி, உன் உண்மை நிலையை உணர்ந்து கொண்டு அதற்கேற்ப நடக்க வேண்டுமே ஒழிய, நீ என்ன செய்ய வேண்டுமென்று நான் விரும்புவேன் என்பதைப் பற்றிக் கவலைப்படக் கூடாது. அதையே வேறு விதமாகச் சொல்ல வேண்டுமானால், உன் உள்ளுணர்வின் தூண்டுதலுக்கேற்ப நீ நடக்க வேண்டுமென்றுதான் நான் விரும்புவேன்.

நந்திமலை அன்பு,

2-5-27 பாபு

# 32

சி. மீரா,

உன் இனிய தந்தியும் கடிதமும் கிடைத்தன. அது வீழ்ச்சி தான்.[1] ஆனால் நான் சஞ்சலப்படவில்லை. எழுச்சி பெறவே நீ வீழ்ச்சி அடைந்தாய் என்பதை நான் அறிவேன். இதய எக்களிப்பு ஏற்படும் சிற்சில வேளைகள், நம் வாழ்வின் நிலையான அம்சங்களாகிவிட்டால், நமக்குக் குறை எதுவும் இராது. காற்றழுத்தமானி மாறுதல் காட்டக்கூடும் என்பது நான் எதிர்பார்த்ததுதான். நீ எப்பொழுது வரவேண்டுமென முடிவு செய்கிறாயோ, அப்பொழுது வரவேண்டும். தீர ஆலோசிக்காமல் மட்டும் எதையும் செய்யாதே.

ஏறக்குறைய முன்பு நடந்த வேகத்தில், இப்பொழுது என்னால் மீண்டும் நடக்க முடிகிறது. நான்கு நாட்களுக்கு முன் நான் நடந்துவந்த சுற்றைக் காட்டிலும் இப்பொழுது இருமடங்கு நடக்கின்றேன். படிப்படியாக உடல் தேறிவருகிறது. உடல் நலம் வளர்கிறது என்று ஒவ்வொரு முறையும் நான் சொல்ல வேண்டு

---

1. அறிவினால் நான் உண்மையை உணர்ந்திருந்தபோதிலும், என் இதய உறுதி தளர்ந்துவிட்டது.

மென்று நீ இப்பொழுது எதிர்பார்க்கக்கூடாது. முன்னேற்றத்தில் தடையெதுவும் ஏற்பட்டால் மட்டுமே தெரிவிப்பேன்.

பத்திரிகைச் செய்திகளை எப்பொழுதுமே நம்பவேண்டாம். என்னிடமிருந்துதான் நேரடியான தகவல் உனக்குக் கிடைக்கின்றதே.

அன்பு,

உன்,

பாபு

# 33

*திருத்தப்படாதது*

சி. மீரா,

சென்ற சில நாட்களாக நான் உனக்கு எழுதிவரும் கடிதங்கள் அனைத்தும் உனக்கு வந்து கிடைக்கின்றன என்று நம்புகின்றேன். அநேகமாக, இரண்டு நாட்களுக்கு ஒரு கடிதம் எழுதிவருகிறேன்.

நீ தொடர்ந்து எழுதிய கடிதம் கிடைத்தது. நீ மீண்டும் நிதான நிலைக்கு வர இன்னும் சிறிது காலம் செல்லுமென்று தோன்றுகிறது. வளைந்து கொடுக்கும் தன்மை உன்னிடம் இருக்கும்வரை, ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவது குறித்து நான் கவலைப்படவில்லை. உனக்கு ஒதுக்கப்பட்டுள்ள பணியை நிறைவேற்றிய பின்பு, அது எப்பொழுதாயினும் சரி, நான் எங்கிருந்தாலும், என்னிடம் வந்து சேர்வதுதான் உனக்கு ஏற்ற வழி என்பது என் சொந்தக் கருத்து. தானாக விரும்பி ஏற்றுக் கொண்டுள்ள ஒரு கட்டுப்பாட்டை சாதாரணமாக ஒருவர் கைவிடுவது நல்லதல்ல. ஆனால் நீ உணர்ச்சி வசப்பட்டு, அமைதியற்ற, ஒரு பதட்ட நிலையில் இருந்தாயானால், உன் பயிற்சி முடியாவிடினும் நீ வந்து விடுவதுதான் நல்லது.

உன் பயிற்சியை நீ முடிக்க வேண்டுமென்று தான் நான் விரும்புகிறேன். அது உன் ஆற்றலுக்கு அப்பாற்பட்டதாய் இருந்தது என்று நான் எண்ண விரும்ப மாட்டேன். ஆனால் உன் படிப்பையும் வேறெந்தப் பயிற்சியையும் விட உன் உடல்நலமே எனக்கு மிக முக்கியம்.

என் உடல் நலனைப் பேணுவதற்காக நீ என்னிடம் வர வேண்டுமென்று எண்ணக்கூடாது. என் உடல் நலன் சீராகவே இருக்கின்றது. நீ இங்கு வந்தாலும் இதைவிட நன்றாக என்னைக் கவனித்துக் கொள்ள முடியாது. என்னைக் குணமாக்குவதில் உதவி செய்ய நீ வரவேண்டுமென்று நான் கருதினால், உனக்குத் தந்தி அனுப்புவேன். ஆனால் அந்த அவசியம் ஏற்படாது. எனக்குப் பணிவிடை செய்ய இங்கு கிடைப்பவர்களைப் பயன்படுத்திக்

கொள்ளப் பழக்கப் பட்டுவிட்டேன். புதிதாக வரும் தாதியருக்கு என் தேவைக் கேற்ப, பயிற்சி அளிக்கின்றேன். தேவைக்கு மிகை யாகவே, இங்கு அதிகத் தாதிகள் இருக்கின்றனர். ஆகவே எனக்குச் சொந்த முறையில் பணிவிடை செய்யலாம் என்று எதிர் பார்த்து நீ வந்தால், இங்கு உனக்கு வேலே எதுவும் இல்லாததால் சோம்பலாய்க் கொட்டாவி விட்டுக் கொண்டுதான் இருக்க வேண்டும்.

நமக்கு வேண்டியவர்களின் சொந்தப் பணிவிடை, ஆரம்ப கட்டங்களில் அவசியமானது என்பதுதான் என் சொந்தக் கருத்து. பின்பு ஒன்ருகச் சேர்ந்து செய்யும் வேலேயில் உறவு வளர்கிறது. என் வேலேயை உன் வேலேயாகவே கருதிச் செய்யும்போது நீ என்னுடன் அன்ருடம் உறவு கொள்கிருய். என் உடல் இல்லாத பின்பும், இந்த உறவு நிலேக்கக் கூடும்; நிலேக்க வேண்டும்; நிலேக்கும். நான் உயிருடன் இருந்தாலும் சரி, இறந்து விட்டாலும் சரி, என்னுடன் நீ உறவு கொண்டிருப்பாய். இவ்வாறு இருப் பதைத் தான் நான் விரும்புகிறேன். நீ என்னிடம் வந்துள்ளது எனக்காக அல்ல; என் குறிக்கோள்களுக்காக—நான் வாழ்க்கை யில் அவற்றைக் கடைப்பிடிக்கும் அளவுக்கு. நான் ஏற்றுக்கொண் டுள்ள குறிக்கோள்களே எந்த அளவுக்கு வாழ்ந்து காட்டுகிறேன் என்பது இப்பொழுது உனக்குத் தெரிந்து விட்டது. இக்குறிக் கோள்களே ஏற்றுக் கொண்டு, அவற்றிற்கு உண்மையாய் இருப் பதில் நான் கண்ட வெற்றியைவிட மேலான வெற்றி பெறும் வாய்ப்பு உனக்குண்டு. அதில் வெற்றி காண்பவர், ஆணுயினும் பெண்ணுயினும், அவரே என் முதல் வாரிசும் பிரதிநிதியுமாவார். தொலேவிலிருந்தே என்னேக் கூர்ந்து நோக்கிப் பின்னர் என் னுடன் இருக்க முடிவு செய்த நீ, என் முதல் வாரிசாக வர வேண்டு மென்று நான் பிரியப் படுகின்றேன். நம் வேலேயின் போது நம் இருவரையும் இறைவன் ஒரே இடத்திற்கு அழைத்து வந்தால் அது நல்லது. ஆனுல் பொதுக் குறிக்கோளேக் கருதி, நம் இரு வரையும் அவர் பிரித்து வைத்தால், அதுவும் சரிதான்.

ஆனுல் இது இலட்சிய வழி பற்றிய ஆலோசனே. இதை நீ கேட்டு உணர்ந்து கொண்ட பின்பு, உன் விருப்பப்படி செய்ய உனக்கு உரிமை உண்டு. உன்னுல் அங்கு அமைதியுடன் இருக்க இயலவில்லேயென்ருல், நீ இங்கு வர வேண்டும். நான் வருத்தப் படுவேனே என்று தயங்கக் கூடாது. உன் உள்ளத்திற்கு ஊறு செய்து, அமைதியைக் குலேத்துக் கொண்டால் தான் நான் வருத்த மடைவேன்.

அன்பு,

ஞாயிறு, பாபு
8-5-27

# 34

*சி. மீரா,*

மீண்டும் இரு கடிதங்கள் கிடைத்தன. வெவ்வேறு தேதி யிட்ட கடிதங்கள் வெவ்வேறு கட்டுகளில் ஒரே நாளன்று வந்து கிடைப்பது எப்படியென்று எனக்கு விளங்கவில்லை.

இன்று நான் மேலும் சொல்லவேண்டியது எதுவுமில்லை. உன் குழப்பம் தீர்ந்து, மீண்டும் உள்ளம் ஒரு நிலைக்கு வந்து விட்டது கண்டு மகிழ்ச்சி அடைகின்றேன்.

* * *

வலூஞ்கர், கங்காபாய் இருவரும் அங்கு என்ன காரியமாக வந்திருக்கிறார்கள்? நான் அவர்களைக் கேட்டதாகச் சொல். அவர்கள் அங்கு வந்துள்ளது உனக்கு நல்லது என்றெண்ணி மகிழ்ச்சி அடைகின்றேன்.

அன்பு,

*திங்கட் கிழமை* பாபு

*9-5-27*

# 35

*சி. மீரா*

மீண்டும் உன் கடிதங்கள் இரண்டும் ஒரே நாளில் கிடைக்கப் பெற்றேன். நீ மன அமைதி அடைந்துள்ளது கண்டு மகிழ் கின்றேன். ஆனால் எப்பொழுது மன அமைதி இழந்தாலும் என் னிடம் சொல்லத் தயங்க வேண்டாம். நான் மிகப் பொறுமையாக இருப்பேன் என்பதை உன் அனுபவத்திலிருந்து அறிந்திருப்பாய். உன் உண்மையான இயல்பு ஒரு வகையாய் இருக்க, உன் தோற்றம் வேறுவகையாக இருக்கக் கூடாது என்பதுதான் என் கவலை. நீ எந்த நிலையில் இருக்கின்றாயோ அப்படியே ஏற்றுக் கொண்டு, நீ என்ன நிலையை அடைய வேண்டுமோ, அந் நிலையை அடைவதற்கு, நான் உதவ வேண்டும். அவ்வாறு நான் உதவ வேண்டுமென்றால், என்னிடம் நீ அச்சம் கொள்ளக் காரணம் எதுவும் நான் தரக்கூடாது. ஆகவே தான் நான் ஒரு முறை உன் னிடம் கூறினேன்—உனக்குத் தந்தையாக மட்டுமல்ல, தாயாகவும் நான் இருக்க விரும்புகிறேன் என்று.

உன்னுடைய கடிதத்தை ஏற்றுக் கொள்ள மறுக்கும்வரை நீ மாவட்ட அதிகாரியைச் சும்மாவிட மாட்டாய் போலும். அவரு டைய கேள்விகளுக்கும் ஐயப்பாடுகளுக்கும் மரியாதையாகப் பதில் சொல்ல வேண்டும். *இராமச்சந்திரா ஏற்றத்துக்கும் நம்மிடமுள்ள

---

* இராமச்சந்திரா ஏற்றம் என்பது, எருதுகளைக் கொண்டு, கிணற்றி லிருந்து தண்ணீர் இறைக்க இராமச்சந்திரன் என்பவரால் கண்டுபிடிக்கப் பட்டது.

பாரசீகச் சக்கரத்திற்கும் உள்ள வேறுபாடு உனக்குத் தெரியுமானால், அதை அவருக்கு விளக்குவாய். நூற்பு, இந்நாட்டின் கைத் தொழில்களில் ஒன்று என்பது மட்டு மல்ல, இந்நாட்டின் உயிர்நாடியான தொழில் என்பதையும் அவருக்கு விளக்க வேண்டும்.

நான் அங்கு வருவது பற்றி இன்னமும் சிறிது தவறான எண்ணம் இருப்பது போல் தோன்றுகிறது; இரண்டு காரணங்களுக்காக அங்கு வரவேண்டுமென்று எனக்கு ஆசை. நான் அதிகம் கேள்விப்பட்டிருக்கும் அந்த இடத்தை நேரில் பார்க்க விரும்புகின்றேன். உன்னுடன் இருக்க விரும்புவது மற்றொரு காரணம். ஆனால் எப்பொழுது வர முடியுமென்பது நிச்சயமில்லை. இன்னும் நான்கு மாத காலத்திற்கு தெற்குப் பகுதியை விட்டு வர இயலாதென்று அஞ்சுகின்றேன். ஆனால் வரும் நாட்களில் நடக்கப் போவதை முன்னதாகக் கணிப்பதில் பலனில்லை. ** ** **

நான் நலமாக இருக்கின்றேன்.

அன்பு,

பாபு

*12—5—27*

## 36

*திருத்தப்படாதது*

சி. மீரா,

உன்னுடைய கடிதம் கிடைத்தது. சிகிச்சைக்குப் பின் குணமாகியுள்ள நோயாளி நிலையில் இப்பொழுது நீ உள்ளாய். ஆகவே அன்புக் கடிதங்கள் அனுப்புவதைச் சற்று தளர்த்தியுள்ளேன்.

என் உடல் நலன் ஒழுங்காகத் தேறி வருகிறது. பெங்களூர் டாக்டர்கள் இன்று வந்து பரிசோதித்ததில், இரத்த அழுத்தம் 150 தான் இருக்கிறதென்றும், பொதுவாக உடல்நிலை திருப்திகரமாய் உள்ளதென்றும் கண்டனர். நான் அதிகம் சாப்பிட வேண்டுமென்று அவர்கள் இப்பொழுது விரும்புகிறார்கள். அது குறித்து என்னால் என்ன இயலுமென்று பார்க்க வேண்டும். கனமான உணவு என்ற காரணத்திற்காக ரொட்டியும் காய்கறிகளும் சாப்பிடுவதை நிறுத்த வேண்டியதாயிற்று. இப்பொழுது மீண்டும் ஒரு முயற்சி செய்ய வேண்டும். ஆனால் உடல் தேறி வருகிறது என்பதில் ஐயமில்லை.

உன்னுடைய வேலையில் முன்னேற்றம் கண்டு வருவது குறித்து மகிழ்ச்சி. எத்தனை பெண்களும் எத்தனை சிறுமிகளும் உள்ளனர்? எத்தனை ஆண்களும் சிறுவரும் உள்ளனர்? உனக்கு வசதிப்படும்

போது, ஆசிரமத்தையும் அங்குள்ளவர்களையும் எனக்குச் சித்தரித்துச் சொல்லவேண்டும்.

கொஞ்ச காலமாக, சாபர்மதி திருடர்களின் கவனத்தை அதிகம் ஈர்த்துள்ளது என்ற செய்தியை உனக்கு யாரும் தெரியப் படுத்தியுள்ளனரோ, என்னவோ? ஒருமுறை திருடர்களுடன் கைகலப்பில் எங்கள் காவல்காரனுக்குப் பலத்த காயங்கள் ஏற்பட்டன. நம் கடமை என்ன என்பதை அந்நிகழ்ச்சி எனக்கு உணர்த்தியது. பொதுவான சமையல் ஏற்பாடு செய்வது நம் கடமை என்பது போலவே, காவல் செய்வதும் நம் கடமை என்ற எண்ணம் எனக்குத் தோன்றியது. ஆகவே ஆண்களும் பெண்களும் தமக்குத் தாமே காவல்காரர்கள் ஆக வேண்டுமென்றும், திருடர்களை ஆசிரமத்திலிருந்து அடித்து விரட்டாமல், அவர்கள் நம் கைக்கு எட்டினால், அவர்களால் நாம் தாக்கப்படக் கூடுமென்ற ஆபத்தையும் பொருட்படுத்தாமல், அவர்களைத் தவறான வழியிலிருந்து திருப்பித் திருத்த முயல வேண்டுமென்றும் நான் யோசனை கூறியுள்ளேன். இந்த யோசனை ஏற்றுக் கொள்ளப் பட்டுள்ளது. ஐந்து பெண்கள் உள்பட, முப்பதுக்கும் மேற்பட்ட தொண்டர்கள் முன்வந்துள்ளனர். இது நல்ல தொடக்கம்.

பொதுச் சமையல் ஏற்பாடு நாளுக்கு நாள் முன்னேறி வருகிறது. சங்கரன் சிறந்த சமையல்காரராகவும் தலைவராகவும் இயங்குகிறார். மடப்பள்ளியில் இருபது பேருக்கு மேல் சாப்பிடுகின்றனர். நீ திரும்பி வரும்போது, இவை அனைத்தும் உன் மனத்திற்கு மிக்க மகிழ்ச்சி ஊட்டும்.

அன்பு,

உன்,
பாபு

நந்தி மலை
*16—5—27*

## 37

*சி. மீரா,*

உன்னிடமிருந்து ஒன்றுக்கு மேற்பட்ட கடிதங்கள் வந்து விட்ட போதிலும், இவ்வாரம் முழுவதும் நான் உனக்கு எழுதவில்லை. தற்போதைக்குக் கூடியவரை வாரத்துக்கு ஒரு முறை மட்டுமே எழுத எண்ணியுள்ளேன். யங் இந்தியா, நவஜீவன், கீதை ஆகியவற்றில் முழுக் கவனம் செலுத்த விரும்புகிறேன். கீதையின் மொழி பெயர்ப்பில் முன்பு செய்து வந்ததைக் காட்டிலும் ஐந்து மடங்கு அதிக வேலை, இப்பொழுது செய்கின்றேன். இயன்றால், ஆகஸ்ட் மாதக் கடைசிக்குள் மொழி பெயர்ப்பை முடிக்க விரும்புகின்றேன். யங் இந்தியா, நவ ஜீவன் ஆகிய பத்திரிகைகளின் பத்திகள் அனைத்தையும் நானே நிரப்பும் பொறுப்பை மேற்கொள்ள விரும்பவில்லை. என்றாலும், இந்த ஓய்வு நேரத்தின்போது இந்த இரு பத்திரிகை

களுக்கும் அதிகக் கவனம் செலுத்த விரும்புகின்றேன். எவ்வாறு யினும், அவசியம் எழுந்தால், அல்லது உள்ளச் சோர்வு உன்னை மீண்டும் வாட்டினால், ஒரு முறைக்கு மேல் கடிதம் எழுதுவேன். ஆனால் உற்சாகம் குன்றிய நிலைக்கு இனியும் இடம் கொடுக்க மாட்டாயென்று நம்புகிறேன்.

'பங்' உட்கொள்ள நீ மறுத்தது குறித்து மகிழ்ச்சி அடைகின்றேன். ஏறக்குறைய மதுவைப் போலவே அதுவும் மோசமானதுதான். ஹகீம்ஜி உனக்குத் தந்த வெற்றிலையைப் பற்றி நான் கூறியதை எப்பொழுதும் நினைவிற் கொள். ஒரு பொருளைப் பற்றியும் அதன் தன்மையையும் பற்றித் தெரியாமல் அப்பொருளை ஒரு போதும் உட்கொள்ளாதே. ஐயப்பாடு எழும்போதெல்லாம், அந்தப் பொருளைத் தவிர்த்துவிட்டு, அவசியம் ஏற்பட்டால் என்னைக் கலந்து ஆலோசிக்கவும். * * *

ரோலந்து உனக்கு எழுதிய கடிதத்தை நீ மொழி பெயர்த்து அனுப்புவதை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன்.

ரொட்டி அல்லது பகாரியும், ஒரு காயும் மதிய உணவோடு சேர்த்துச் சாப்பிட மீண்டும் தொடங்கியுள்ளேன். இன்றோடு ஐந்தாவது நாளாகச் சாப்பிடுகின்றேன்; இதுவரை அசம்பாவிதமாக எதுவும் நடக்கவில்லை. முன்பைவிட நன்றாக இப்பொழுது நடக்கவும் செய்கின்றேன்.

அன்பு,

உன்,
23—5—27 பாபு

## 38

நந்தி மலை
மே 28, 1927

சி. மீரா,

உன் இரு கடிதங்களும் உன் தந்தியும் கிடைத்தன. பதில் எழுதுவது இரண்டு நாட்கள் தாமதமாகக் கூடாது என்பதற்காக, இக் கடிதத்தை நான் சொல்ல வேறொருவர் எழுதுகிறார். பேசா நோன்பு வேளையில் தவிர மற்ற நேரங்களில் நானே கடிதம் எழுதுவதில்லை என்ற விதியைக் கூடியவரை மீறாமலிருக்க விரும்புகிறேன். உன் கடிதங்கள் இரண்டும் அற்புதமானவை. ஆசிரமத்தைப் பற்றி முன்பு எப்பொழுதும் அறிந்ததைவிடத் தெளிவாக உன் கடிதங்களைப் படித்த பின் உணர முடிந்தது. நானே அங்கு வந்திருந்து நேரில் பார்த்தது போல் தோன்றுகிறது. உன்னுடைய வர்ணனை அத்துணை இயற்கையாக உள்ளது. வலூஞ்கரின் கடிதம் மேலும் சில விவரங்களைத் தந்து, உன்னுடைய கடிதத்தை நிறைவு செய்கிறது.

இரு தரப்பாரின் உயர்வு தாழ்வுகளை ஒப்பிடும் ஆராய்ச்சியில் ஈடுபட நீ மறுத்தது நலமே. உன் மனத்திற்கு ஒப்பாத முறையில், பிறர் ஒப்பிட்டு விமர்சனங்கள் செய்தாலும், அது குறித்து நீ பதட்ட மடையாமல் இருப்பாயென்று நம்புகிறேன். ஒருவரோடு ஒருவரை ஒப்பிட்டுப் பிறர் விமர்சனம் செய்யும்போது, நியாயமாகச் செய்ய வேண்டுமென்று தான் அவர்கள் எண்ணுகிறார்கள். இவ்வாறு ஒப்பிடுதலே தவறானது என்பதை அவர்கள் அறியவில்லை. உண்மையாகவே ஒருவர் நம்புகின்ற கருத்தை அவர் தெரிவிக்கும் போது, அதைக் கேட்டு ஆத்திரம் அடைவதில் பலனென்ன?

*  *  *  *

தலையாயது இந்தி; அதற்குப் பின் தான் மற்றதனைத்தும் என்பதுதான் நமது கொள்கை ** ** ** நீ இருக்கும் இடத்திலேயே பயனுள்ளதாகச் செய்யக்கூடிய பணிகள் எண்ணற்றவை உண்டு. நாம் செய்ய வேண்டிய கடமைகள் பல உண்டு. அவற்றில் தலையாய கடமை எது என்று தேர்ந்தெடுக்கும் ஆற்றலைப் பெற்றிருப்பதுதான், உண்மையான சமய உணர்வு கொண்டிருப்பதன் அறிகுறியாகும். 'தன்னுடைய கடமை எத்துணை இழிவானதாய் இருந்தாலும் அதைச் செய்கையில் இறப்பதுகூட, பிறருடைய மேலான கடமையைச் செய்ய முயல்வதைக் காட்டிலும் உத்தமமானது' என்று கூறும் பகவத் கீதையின் பொருள் இதுதான். எந்தப் பொறுப்பை நிறைவேற்ற சாபர்மதியை விட்டுச் சென்றாயோ, அதைப் புறக்கணிக்க அல்லது தியாகம் செய்ய வேண்டிய நிலை உருவானால், நீ எளிதில் செய்யக்கூடிய மற்ற பல காரியங்களை ஒதுக்கிவிட்டு, அம்முக்கிய பணியில் முனைந்திருப்பது உன்னுடைய கடமையாகும் என்பதில் எனக்கு எள்ளளவும் ஐயமில்லை. அந்த இடத்திலோ, வேறிடத்திலோ, அந்தப் பணியை நிறைவேற்ற முனைவதால், நீ அங்கிருப்பது பிறருக்குப் பிடிக்கவில்லை என்றால், அந்த இடத்தைவிட்டு உடனே வெளியேறுவதற்குச் சித்தமாக வேண்டும். அவ்வாறு அகத்தூண்டுதலின் ஆக்கினை தெளிவாகும்போது, நீ வேறெந்த யோசனைக்கும் செவிசாய்க்க வேண்டியதில்லை. ஆனால் உன் உள்ளத்தில் கொழுந்துவிட்டு எழுந்து உன்னை ஆட்கொள்ளும் அந்த ஆசை உன் அகத்தேயிருந்து எழவேண்டும். நான் உன்னைத் தூண்டக்கூடாது; தூண்டமாட்டேன். உன் வேலையில் நீ மிக மந்தமான வளர்ச்சியே கண்டாலும், அத்துடன் நான் திருப்தி அடைவேன். உனக்கு எது சிறந்ததென்று தோன்றுகிறதோ, அவ்வழியில் நீ இந்தியைப் பயிலவேண்டும். இந்தி பயிலும் நேரத்தில், இன்னும் வேறு பல பணிகளிலும் ஈடுபடுவது உன் மன அமைதிக்கு உகந்ததென்று நீ கருதினால், அப்பணிகளை நீ மேற்கொள்ளலாம். ஆகவே நான் எதை விரும்புவேன் என்பது பற்றித் தயவுசெய்து ஓயாது எண்ணாமல், உன்னுடைய உடல் நலனுக்கும் உள்ள அமைதிக்கும் ஊறு செய்யாமல், எளிதில் நீ என்ன செய்யமுடியுமென்று நம்புகிறாயோ, அதைச் செய்ய வேண்டும். உன் திட்டத்தை நிறைவேற்றும் முயற்சியில் என்

உதவியோ ஆலோசனையோ உனக்கு அவசியமானல், அதை நீ தயங்காது தேடிக்கொள்ள வேண்டும். ** ** **

அன்பு,

உன்,
பாபு

# 39

சி. மீரா,

உன் இரு கடிதங்களுக்கும் தந்திக்கும் நீண்டதொரு பதில் அனுப்பியுள்ளேன். உன் தந்தியைத் தொடர்ந்து கடிதம் வர வில்லை. நானே எழுதாமல், நான் சொல்வதைப் பிறர் எழுது வதன் மூலம் அதிகக் களைப்பின்றி வேலையைப் பெருமளவு முடித்துக் கொள்ள முடிகிறது. படுத்துக் கொண்டேதான் இக் கடிதங்களைச் சொல்கிறேன்.

இங்கு பலமான காற்று வீசத் தொடங்கியுள்ளது. குளிரும் சற்று அதிகமாகவே உள்ளது. ஆகவே அடுத்த சில நாட் களில் நாங்கள் இங்கிருந்து பெங்களூருக்குச் செல்லக் கூடும். நான் இனியும் வேகமாக நடக்கக் கூடாதென்கிருர்கள். நீ உன் கடிதங்களை பெங்களூர் முகவரிக்கே அனுப்புவது நல்லது. அநேகமாக 'குமர பார்க்'கில்தான் தங்குவோம். முகவரி எழுதும் போது பெங்களூர் நகரம் என்று தெளிவாக எழுது. பெங்களூரில் கண்டோன்மென்ட், நகரம் என்று இரு பிரிவுகள் உண்டு. நகரம் என்று குறிப்பிட்டால் ஒழிய, முதலில் கடிதங்கள் கண்டோன் மென்டுக்குத்தான் செல்லும். இந்தியா முழுவதுமே எங்கெங்கு கண்டோன்மென்ட் இருக்கிறதோ, அங்கெல்லாம் இவ்வாறுதான் நடக்கின்றது.

என் உடல் நலனைப் பொறுத்தவரை, புதிதாகச் செய்தி ஒன்றுமில்லை. 'பகாரியும்' காய்கறியும் மீண்டும் சாப்பிடத் தொடங்கியுள்ளேன் என்பதை உனக்கு எழுதிவிட்டேன் என்று எண்ணுகிறேன்.

நந்தி அன்பு,

*29-5-27* பாபு.

# 40

[நான் பகவத்பக்தி ஆசிரமத்தை விட்டுவந்து, பெங்களூருக்குப் பாபுவைப் பார்க்கச் சென்றுவிட்டு, சாபர்மதியில் சில நாட்கள் தங்கியிருந்தேன். சில நாட்களுக்குப் பின்பு, இந்திப் படிப்பைத் தொடர, வர்தாவில் விநோபா ஆசிரமத்திற்குச் செல்ல ஏற்பாடாகி யிருந்தது.]

*4-7-27*

*சி. மீரா,*

இன்று உன்னிடமிருந்து ஒரு கடிதம் வருமென்று எதிர் பார்த்தேன். ஆனால் இதுவரை ஒன்றும் வரவில்லை. இன்னு மொரு தபால் இன்று வரக்கூடும். இரயிலில் கூட்ட நெரிச்சல் அதிகம் இல்லாதிருந்ததா? குண்டக்கல்லில் உனக்குச் சிரமம் எதுவும் இருந்ததா?

நீ எவ்வளவு அழகாய் எண்ணத்திற்கு எழுத்து வடிவம் தந்திருக்கின்றாய்? இன்னும் நெருங்கி வருவதற்காகத்தான் பிரிகின்றாய் என்று கூறுகிறாய். அது முழுதும் உண்மையே. நீ வந்ததும் நல்லதே. நீ இங்கிருந்து புறப்பட்ட அன்று புறப்பட் டதும் நல்லதுதான்.

பிரியும்போது நான் சொன்னதை நினைவிற்கொள். இரண்டு மாதங்களில் இந்தியை படித்து முடிக்க வேண்டுமென்பதற்காக, உன் உடம்பைக் கெடுத்துக் கொள்ளாதே. இரண்டு மாதங் களுக்குள் முடிப்பாய் என்று நம்புவோம். ஆனால் உன்னால் இயல வில்லை என்றால், அதைப்பற்றி ஒரு சிறிதும் கவலைப்பட வேண்டாம். முயல்வதே உன் கடன். மேலும், அவசியம் ஏற் பட்டால் ஒழிய, வார்தாவில் இந்தியில்தான் பேசுவதென்று முடிவு செய்யாதே. அது ஒரு பொருட்டல்ல. நான் என்ன விரும்புவேன் என்பதுபற்றி நீ கவலைப்பட வேண்டாம். இது போன்ற பிரச்னைகளில் என் கருத்தையோ விருப்பத்தையோ மனதிற்கொண்டு முடிவு செய்வது கூடாது. இந்தி பயில்வதற்கு எது சிறந்தவழி என்று தேர்ந்தெடுப்பதுதான் உன் முன்னுள்ள பிரச்னை. உனக்குப் பொருத்தமான வழிதான் உனக்கு உகந்ததே ஒழிய, வேறு வழியல்ல.

அன்பு,

*4-7-27* பாபு

தொடக்கவிழா நேற்று இடைஞ்சல் எதுவுமின்றி இனிது நடந்தது. என் உடலும் தாங்கிக் கொண்டது. விழாவுக்குப் பின் வந்து பரிசோதித்த மருத்துவர், நாடியில் மாற்றம் எதுவும் இராதது கண்டு திருப்தி அடைந்தனர். மலச் சிக்கல் உன்னை

அங்கும் தொடர்ந்து வந்துள்ளதா? இல்லை, இங்கு விட்டுச் சென்றுயா?

பாபு

இதை அஞ்சலில் சேர்க்கக் கொடுத்ததும், நான் எதிர்பார்த் திருந்த உன் அருமைக் கடிதம் கிடைத்தது.[1] நன்ருக விளங்கு கிறது. ஒரு சில தவறுகள்தான் இருந்தன. உனக்கு எவ்வளவு அடிக்கடி எழுதவேண்டுமென்று தோன்றுகிறதோ, அப்பொழு தெல்லாம் எழுது.

பா.

ஸ்ரீமதி மீராபென்,
சத்யாக்கிரக ஆசிரமம்,
சாபர்மதி.

## 41

*சி. மீரா*

தந்திக்குப் பின் நீ எழுதிய கடிதம் கிடைத்தது. நான் வழக்கமாக எழுதும் வாராந்திரக் கடிதம் உனக்குக் கிடைத் திருக்கும். வர்தாவுக்கு நான் ஒரு அஞ்சலட்டையும் அனுப்பி யிருந்தேன். ஆனல் கடிதத்தை சாபர்மதிக்கு அனுப்பியுள்ளேன் என்பதைத் தவிர வேறு செய்தி அஞ்சலட்டையில் இல்லை. நீ அங்கேயே தங்கி, மருத்துவரின் அறிக்கையைப் பெறுவதென்று முடிவு செய்தது நல்லதே. இயற்கையின் நியதிகள் அனைத்தும் நமக்குத் தெரிந்திருந்து, சிந்தையிலும் சொல்லிலும் செயலிலும் அவற்றிற்குக் கீழ்ப்படியும் ஆற்றல் நமக்கிருந்தால், நாம் இறைவ ஞகவே ஆகிவிடுவோம். வேறென்றுமே செய்யத் தேவையில்லை. உண்மையில், இயற்கையின் நியதிகளை நாம் அறியவுமில்லை; அவற்றை ஏற்று நடக்கும் ஆற்றலும் நமக்கில்லை. ஆகவேதான் பிணியும் அதன் கேடுகளும். ஒவ்வொரு நோய்க்கும், நாம் அறியாத இயற்கை நியதி ஒன்றை மீறியதுதான் காரணமென்று உணர்ந்து, நியதிகளை அறியப் பாடுபட்டு, அவற்றிற்குக் கீழ்ப் படியும் ஆற்றல் வேண்டுமென இறைஞ்சுவதுதான் நம் கடன். ஆகவே நோய்வாய்ப்பட்டிருக்கும் வேளையில், இதய வழிபாடுதான் வேலைமட்டுமல்ல, மருந்தும் ஆகும்.

நேற்று அலுப்பு அதிகம். ஆனல், சென்ற ஞாயிற்றுக் கிழமையைக் காட்டிலும்கூட, நன்கு தாங்கிக் கொண்டேன். உன்னிடமிருந்து இந்திக் கடிதங்கள் பெறவேண்டுமென்று அவசரம் ஒன்றுமில்லை.

அன்பு,

*9-7-27* பாபு

---

1. இந்தியில் எழுதப்பட்டது.

## 42

குமர பார்க்,
பெங்களூர், ஜுலை 17, '27

சி. மீரா,

* * * *

நூற்பு, வழிபாடு, சமையல் போன்றவற்றில் என்னென்ன சீர்திருத்தம் செய்யலாமென்று நீ எண்ணுகிருயோ, அந்த ஆலோசனைகளை என்னிடம் கூறு. நீ அவசரப்பட்டு முடிவுக்கு வந்திருந்தால், அதை நான் திருத்த முடியும். உன் முடிவை நான் ஏற்றுக் கொண்டால், சீர்திருத்தம் செய்வது எப்படியென்று நான் கூற முடியும்.

நம்முடன் இருப்பவர்களிடம் நாம் கொண்டுள்ள அன்பை அவர்கள் உணரும்படி செய்ய வேண்டும். நாம் செய்யும் முடிவு நியாயமானது என்ற நம்பிக்கை அவர்களுக்கு ஏற்பட வேண்டும். நம் முடிவு ஏற்றுக் கொள்ளப்படாவிடில், அல்லது செயலில் கொண்டு வரப்படாவிடில், நாம் அதனால் சற்றும் பதட்டம் அடையக் கூடாது. அப்பொழுதுதான், பிறரைக் கடுமையாகக் குறைகூறும் உரிமை நமக்குப் பிறக்கும். சுருங்கச் சொன்னல் தெளிவான உணர்வுக்கு அன்பின் ஆற்றல் வேண்டும். பிறரைக் குறை கூறுவதற்கு முன், நம்மிடம் சகிப்புத் தன்மை வேண்டும்.

* * * *

அன்பு,

பாபு

## 43

பாதி திருத்தப்பட்டது.

சி. மீரா,

நேற்று உனக்கு ஒரு கடிதம் எழுதினேன். ஆகவே இன்று அதிகம் எழுத விரும்பவில்லை.

* * * *

உன் உடல் நலனுடன் பலவிதப் பரிசோதனைகள் நடத்திக் கொண்டிராமல், தேவையான அளவு உணவு அருந்தவேண்டும். ஆசிரமத்தில் இருந்த போது செய்தது போலவே, உனக்குத் தேவையான அளவு பழங்கள் கிடைக்க ஏற்பாடு செய்து கொள். எவரும் உனக்குப் பழங்கள் அனுப்பினல், உனக்குத் தேவையானதை வைத்துக் கொண்டு, மற்றவற்றை மடப்பள்ளிக்கு, வினேபாவிற்கு அனுப்பிவிடு. உனக்குத் தேவை என்பதால் மற்றவர்களுக்கும் தேவையாயிருக்கும் என்று எண்ணதே. மற்றவர்களுக்குத் தேவையான சோள ரொட்டி உனக்குத் தேவையாயிராது. பழங்கள் உணவாக மட்டும் இராமல், இனிய பொருட்களாகவும் இருப்பது ஒரு சோதனையாக இருக்கலாம். இனிய பொருட்

களையும் மருந்து சாப்பிடுவது போல், அளவோடு சாப்பிட நாம் கற்றுக் கொண்டால் போதும். அவ்வாறு செய்யக் கற்றுக் கொண்டால், நம் மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு மற்றவர்களுக்கு அப்பொருள்கள் கிடைக்காவிடினும், நாம் அவற்றை உண்ணலாம். இக் கொள்கையைக் கடைப்பிடிப்பதில் ஆபத்துக்கள் இருக்கத் தான் செய்கின்றன. அவசியம் என்ற எண்ணத்தில் தீய பழக்கங்களை மேற்கொள்ளவும் சிலர் துணிந்து விட்டனர். ஆனால் நம்மை நாமே கட்டுப்படுத்திக் கொள்வதில் நாம் ஓயாது விழிப்பாக இருந்தால், இதனால் எழக்கூடிய சிக்கல்களுக்கு அஞ்ச வேண்டியதில்லை. எவ்வழியைப் பின்பற்றினாலும், அதில் சோதனைகள் இருக்கத்தான் செய்கின்றன. ஆனால் என்ன துன்பம் நேரிட்டாலும், நம் அகத் தூண்டுதல்களுக்கும் உள்ளார்ந்த இயல்புகளுக்கும் நாம் கட்டுப் பட்டு நடக்க வேண்டும்.

நான் நினைத்ததைவிட, இக் கடிதம் நீண்டுவிட்டது.

நான் நலமாகவே இருக்கின்றேன்.

அன்பு,

*18—7—27*

பாபு

ஸ்ரீமதி மீரா பென்,
சத்யாக்கிரக ஆசிரமம்.

## 44

*7—9—'27*

சி. மீரா,

உன் தந்திகளுக்காக ஆவலுடன் காத்திருக்கின்றேன். அவை வருகின்றன. ஆனால் எனக்கு மன அமைதியைத் தரவில்லை.* ஆனால் நாம் குறைபட்டுக் கொள்ளக் கூடாது. நோயைக்கூட நாம் நமக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு உற்சாகமாக இருக்க வேண்டும். கடைசியாக நீ அனுப்பிய தந்தி இப்போது வந்தது. சுரம் அடங்கிவிட்டது என்று அதிலிருந்து தெரிகிறது. சுரம் இத்துடன் நின்றுவிடும் என்று நம்புவோமாக. உனக்குத் தந்தி அனுப்ப வேண்டுமென்ற ஆசை அடிக்கடி எனக்கு எழுவதுண்டு. ஆனால் அவ்வாறு செய்ய எனக்கு உரிமை இல்லை என்று சொல்லி, என்னை நானே கட்டுப்படுத்திக் கொள்கிறேன். என் பிரார்த்தனையும் ஆசிகளும் எப்பொழுதும் உன்னுடன் உள்ளன.

'இன்பத்திலும் துன்பத்திலும் ஒரேவாறு'—இதுவே கீதையின் உபதேசம்.

அன்பு,

பாபு

---

* கடுமையான மலேரியா சுரம் என்னைத் தாக்கியிருந்தது. 105 டிகிரிக்கும் மேல் சுரம் ஏறியிருந்தது.

# 45

[கடுமையான மலேரியா சுரத்திற்குப் பின், உடலைக் தேற்றிக் கொள்ள நான் புனாவிற்குச் சென்று கொண்டிருந்தேன்.]

திருத்தப்படாதது

சி. மீரா,

நன்றி தெரிவிக்கும் முறையில் நான் உனக்கு ஒரு தந்தி அனுப்பாமல் இருக்க முடியவில்லை. சென்ற சில நாட்கள் கவலை நிறைந்தனவாய் இருந்தன. நான் அதிகம் எழுதவில்லையெனினும், தந்தி அனுப்பவில்லை யெனினும், என் உள்ளம் உன்னுடனேயே இருந்து, உன் உடல் நலன் தேறுவதைக் கவலையுடன் கவனித்துக் கொண்டிருந்தது. ஒவ்வொரு நாளும் ஒரு தந்தி அனுப்பி இருந்தேனென்றால், உனக்கு ஆறுதலாகத்தான் இருந்திருக்கும். ஆனால் அவ்வாறு செய்யக்கூடாது என்று எண்ணினேன். சோதனைமிக்க இச்சில நாட்களில் கடிதம் எழுதுவதே இயலாததாக இருந்தது.

எனக்காக வகுக்கப்பட்டுள்ள நிகழ்ச்சி நிரலை நிறைவேற்றுவதற்கே அவகாசம் போதவில்லை. கணக்கற்ற கூட்டங்களில், மக்களிடம் என் உள்ளத்தை ஊற்றி வருகின்றேன். அதன் பின்பு, வேறெதற்கும் ஆற்றல் இல்லை. போதாக் குறைக்கு, மிஸ் மேயோ புத்தகத்தைப் படித்து, அதுபற்றி ஆராய்ந்து ஒரு கட்டுரை எழுத வேண்டியுள்ளது.

ஆனால் இவற்றிற்கெல்லாம் இடையில், ஜம்னுலால்ஜி உன்னுடன் இருக்கின்றார் என்ற எண்ணம் எனக்கு மிகுந்த ஆறுதல் அளிக்கின்றது. இறைவன் அருளால், சோதனை இப்பொழுது நீங்கி விட்டது போல் தோன்றுகிறது. கடுமையான இச்சோதனையும் நல்லதற்கே.

இராம நாமம்! அது உனக்கு உயிர் நாடியான உண்மையாகி விட்டால், அது மகத்தான சாதனையாகும். உன் அனுபவங்களை, உன் உடல் நன்கு தேறிய பின்பு கூறினால் போதும். அவை அனைத்தையும் நான் அறிய விரும்புகிறேன். நீ சித்தப் பிரமை கொண்டதும் மனநிலை தடுமாறியதும் எதனால் என்பதையும் நான் அறிய விரும்புகிறேன். பெரும்பாலும் அதன் காரணங்கள் நமக்கே தெரிவதில்லை என்பது உண்மைதான். இனி நீ நிதானமாகச் செல்ல வேண்டும். வேண்டிய அளவு ஓய்வு எடுத்துக்கொள். உடம்பை நன்றாகக் கவனித்து, உணவு முறைகளில் மாற்றம் எதுவும் அவசியமானால், அதைச் செய்துகொள். மண்ணீரல் பெருத்ததன் காரணங்களைக் கண்டுபிடி. எத்தனை நாள் வேண்டுமானாலும், நீ புனாவில் தங்கலாம். உனக்குத் தேவையான வசதிகளையெல்லாம் செய்து தரச்சொல். வேறு எவரிடமும் சொல்ல முடியாதது எதுவும் இருந்தாலும், என்னிடம் நீ தாராளமாகச் சொல்ல வேண்டும். நான் நலமாக இருக்கிறேன். ஒரு மனிதப் பிறவியால் எவ்வளவு இயலுமோ, அவ்வளவுக்கு இராஜகோபாலாச்சாரி

என்னைக் கவனித்துப் பாதுகாத்து வருகிறார். என்னைக் காக்கும் முயற்சியில், தாம் நலிவதையும் அவர் பொருட்படுத்தவில்லை இப்பணி, அவரால் தாங்கமுடியாத அளவுக்கு அதிகமாகிவிட்டதை நான் உணர்கிறேன்; ஆனால் நான் தலையிட்டுத் தடுப்பதில்லை. இச் சுற்றுப் பயணம் இனிது நிறைவேறுவதை இறைவன் விரும்பினால், அதற்கு அவசியமானவர்களுக்குத் தீங்கெதுவும் நேரிடாது அவன் காப்பான். ஆகவே நீ என்னைப் பற்றிக் கவலைப்படக் கூடாது.

நீ வேண்டாமென்று நினைத்தாலொழிய, இக் கடிதத்தை அம்மாவுக்கு அனுப்பு.

அன்பு,

பாபு

*12-9-27*

ஸ்ரீ மீராபென்,
(பொறுப்பு) சேத் ஜம்னாலால் பஜாஜ்
கல்பாதேவி ரோடு, பம்பாய்.

## 46

[நான் புனாவில் தங்கியிருந்த போது, தமது தென்னிந்தியப் பயணத்தில் பாபு கடுமையான அலுப்புக்கு ஆளாக்கப் பட்டது குறித்துச் செய்திகள் அடிக்கடி வந்த வண்ணம் இருந்தன. இதைத் தாங்க முடியாமல், நான் அவரைக் காணச் சென்றிருந்தேன்.]

சி. மீரா,

இங்கு வந்து சேர்ந்தவுடன், உனக்கு ஒரு அன்புச் செய்தி அனுப்பாமல் இருக்க முடியவில்லை. உன்னைப் போகவிட்டு விட்டு நான் மிக்க வேதனையுற்றேன். நான் உன்னிடம் அதிகக் கடுமையாக இருந்து விட்டேன். ஆனால் வேறுவிதமாய் நான் நடந்திருக்க முடியாது. நான் அறுவை சிகிச்சை நடத்த வேண்டிய நிலையிலிருந்தேன்; அதற்காக என்னை நானே நிதானப் படுத்திக் கொண்டேன். இனி எல்லாம் இனிது நடக்கு மென்றும், பலவீனம் அனைத்தும் மறைந்து விட்டதென்றும் நாம் எதிர்பார்க்கலாம்.

தவறிவிட்ட உன் கடிதங்கள் இரண்டும் இப்பொழுதுதான் வந்து சேர்ந்துள்ளன. ஆனால் அவை குறித்துப் பின்னர் எழுதுவேன். கட்டில் சேர்க்கும் அவசரத்தில் இக் கடிதத்தை எழுதுகிறேன். எக்காரணம் கொண்டும் என்னைப் பற்றிக் கவலைப் படாதே.

அன்பு,

*28-9-27*

பாபு

ஸ்ரீமதி மீராபென்
சத்யாக்கிரக ஆசிரமம்,
சாபர்மதி

# 47

*அஞ்சலட்டை*

*சி. மீரா,*

உன்னை என் உள்ளத்திலிருந்து விலக்க என்னால் இயல வில்லை என்பதை உனக்குச் சொல்லவே இதை எழுதுகிறேன். கடுமையான அறுவை சிகிச்சைக்குப் பின் எரிச்சலைப் போக்கக் களிம்பை அறுவை மருத்துவர் தடவுவார். இதுதான் நான் தரக் கூடிய குளிர்ச்சியான களிம்பு.

* * *

அன்பு,

பாபு

*29-9-27*

# 48

*சி. மீரா,*

உன் அஞ்சலட்டையும் இரயிலில் நீ எழுதிய கடிதமும் கிடைத்தன. உன்னிடமிருந்து செய்தியை ஆவலுடனும் கவலை யுடனும் இன்று போல் நான் என்றும் எதிர்பார்த்ததில்லை. கடுமை யான அறுவை சிகிச்சைக்குப் பின் குணமாவதற்கு முன்பே உன்னை அனுப்பிவிட்டேன். ஆனால் உன்னை என்னிடமிருந்து அனுப் பியதே, அந்த அறுவை சிகிச்சையில் ஓரம்சம்தான். பாவம், அண்ணா! நீ முகவாட்டமாக இருந்தாயென்றும் நான் உனக்கு ஆறுதல் கூறவேண்டுமென்றும் அவரும் என்னிடம் கூறுகிறார். உன்னை என்னுடனேயே தங்க வைத்திருக்க வேண்டுமென்று ஜம்னாலால்ஜி கூறுகிறார். நீ என்ன செய்ய வேண்டுமென்றால், அவர்கள் அச்சத்தைப் பொய்யாக்கி, நலமாகவும் உற்சாகமாகவும் இருக்க வேண்டும். நேற்றிரவு என் உறக்கத்திலும் என்னை நீ தொடர்ந்தாய். உனக்குச் சன்னியென்றும், ஆனாலும் ஆபத்து ஒன்றுமில்லை என்றும், எந்த நண்பர்களிடம் உன்னை அனுப்பியிருந் தேனோ, அவர்கள் கூறியதாகக் கனவு கண்டேன். "நீங்கள் கவலைப்படாதீர்கள். மனித முயற்சிக்கு எட்டியது அனைத்தும் செய்து வருகிறோம்" என்று அவர்கள் கூறினார்கள். அக்கட்டத் தில், விழித்துக்கொண்ட என் உள்ளம் வேதனையில் ஆழ்ந்தது. உனக்குத் தீங்கெதுவும் நேரிடக் கூடாது என்று வேண்டி வழி பட்டேன். உன் கடிதம் கண்டதும் எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி ஏற்பட்டது.

நீ வெட்கி வருந்தும்படி நடந்துகொள்ளவில்லையே! உன்னைக் கண்காணித்துக் காவல் செய்யவும் அங்கு எவருமில்லை. உனக்கு உதவி செய்யவும் ஆறுதல் அளிக்கவும் தான் சகன்லாலும் கிருஷ்ண தாசும் அங்கு இருக்கின்றார்கள். பதட்டமுற்றுத் தடுமாறி நிற்கும் நிலையை நீ விரைவில் தாண்டி விடுவாய் என்ற நம்பிக்கை எனக்கு

உண்டு. இந்தக் கிலி உன்னை இனி அச்சுறுத்த வேண்டியதில்லை. உன்னால் இந்தியில் ஒரு சொல் கூடப் பேச முடியவில்லை என்றாலும் கூட, நான் அதைப் பற்றிக் கவலைப்படப் போவதில்லை. ஆனால் நீயோ இந்தியில் நல்ல பயிற்சி பெற்றுள்ளாய். ஆகவே இதிலும் ஏமாற்றம் அடைவதற்கு இடமே இல்லை. உன்னுடைய உடல் வலிமையில் நான் கொண்டிருந்த நம்பிக்கை தளர்ந்து விட்டதே ஒழிய, என் அன்பு தளரவில்லை. உண்மையாகவும் உறுதியுடனும் முயற்சி செய்யும் உனக்கு உடல் வலிமையும் வருவது நிச்சயம்.

நீ தனியாகச் சமையல் செய்து கொள்ள வேண்டுமென்று சுரேந்திராஜி யோசனை கூறுகிறார். அது அவசியமென்றால், நீ அவ்வாறே செய்யலாம். ஆனால் எந்தக் காரணத்தைக் கொண்டும், எதிலும் அளவுக்கு மீறிய முயற்சியினால் அலுப்பை வரவழைத்துக் கொள்ளாதே.

அன்பு,

பாபு

*2-10-1927*

## 49

அஞ்சலட்டை

*சி. மீரா,*

தூத்துக்குடியிலிருந்து இதை எழுதுகிறேன். உன்னிடமிருந்து இங்கு செய்தி கிடைக்குமென்று எதிர்பார்த்திருந்தேன். ஆசிரமத்திற்கு நீ பத்திரமாய் வந்து சேர்ந்துள்ளாய் என்று அங்கிருந்து எனக்குச் செய்தி கிடைத்துள்ளது. ஆண்டவன் உனக்கு அருள் புரிவாராக!

அன்பு,

*6—10—27* பாபு

## 50

*சி. மீரா,*

ஒவ்வொரு நாளும் உனக்கு நான் எழுதப் போவதில்லை. ஆறுதல் அளிக்கும் மருந்தை இனி உனக்குத் தடவவேண்டிய அவசியமில்லை என்று எண்ணுகிறேன். இதற்குள் புண் குணமாகியிருக்கும். ஆசிரமத்திலிருந்து நீ எழுதியுள்ள கடிதம் எனக்கு நம்பிக்கை ஊட்டுகிறது.

சரி, நீ பால்பண்ணை வேலையையோ, உனக்குப் பிடித்தமான வேறெந்த வேலையையோ எடுத்துக் கொள்ளலாம். நீ இப்பொழுது என்ன உணவு உட்கொள்கிறாய்? ** **

அன்பு,

*8—10—27* பாபு

# 51

* * *

சி. மீரா,

எனக்கு ஓய்வு அவசியம் என்பதில் ஐயமே இல்லை. ஆனால் யார் எனக்கு ஓய்வளிப்பார்கள்? நாம் விரும்புவதெல்லாம் நமக்குக் கிடைக்கிறதா? அப்படிக் கிடைத்து விட்டால், பக்திக்கு வேலை எதுவும் இருக்குமா? ஆண்டவன் ஆணையின்றி சிறு துரும்பும் அசையாது என்பதை நாம் உணர்ந்து விட்டால் போதும். நாம் மட்டும் அவரை நம்பினால், அவர் நம்மைக் காத்தருள்வது நிச்சயம். சிலர் செய்வது போல், பணத்தால் தங்களுக்குக் கிடைக்கக்கூடிய வசதிகள் அனைத்தையும் செய்து கொண்டு, பின்பு ஆண்டவனை நம்புவதாகக் கூறுவதில் பயனில்லை. நம்மை நாமே ஓரளவு கவனித்துக் கொள்ள வேண்டுமென்பது உண்மையே. ஆனால் பக்தி கொண்டவர்கள், தங்கள் சொந்த இயல்புக்கே துரோகம் செய்யும் வகையில், பொது நியதிக்கு மாறாக முன்னெச்சரிக்கையான ஏற்பாடுகள் செய்வதிலோ, சாதாரண மக்களுக்குக் கிட்டாத பரிகாரங்களைத் தேடுவதிலோ, ஈடுபட மாட்டார்கள். ஆகவே எவ்வளவு குறைந்த அளவு நம்மைப் பற்றி நாம் கவலைப்படுகிறோமோ அந்த அளவு நல்லது என்பதும், நம்மில் கடையரும் நியாயமான முயற்சி மூலம் தம்மை எந்த அளவு கவனித்துக் கொள்ள முடியுமோ, அதற்குமேல் யாரும் தன்னைப்பற்றி அதிகம் கவலைப்படக் கூடாது என்பதும் நம்முடைய கோட்பாடாக இருக்க வேண்டும். இந்த அடிப்படையில் நோக்கினால், நான் என்மீது செலுத்தும் கவனமும் மற்றவர்கள் அன்புடன் பேணும் ஆதரவும், மிகையானவை என்பது மட்டுமல்ல, இறைவனிடம் பக்தி கொண்டுள்ளதாகக் கூறும் என் கூற்றுக்கு முரண்பட்டவையாகும். என்னைக் கவனித்துக் கொள்ள நான் எடுக்கும் முயற்சி அனைத்தும் மிகையானது என்பதை நீ உணர்வாய். சிறிது காலத்திற்கு நான் பொருட்படுத்தப்படாமல் புறக்கணிக்கப்பட்டிருக்க முடியுமானால், அதுவே எனக்கு மிகச் சிறந்தது என்று நான் அடிக்கடி எண்ணுவதுண்டு.

என் பயணத் திட்டத்தில் மீண்டும் ஒரு குறுக்கீடு ஏற்படும் என்றெண்ணுகிறேன். ஓரிரு நாட்களுக்கு நான் டில்லி செல்ல வேண்டியிருக்கும். அதுபற்றி இன்று தெளிவாகத் தெரியக்கூடும்.

அன்பு,

*24-10-27* பாபு.

## 52

சி. மீரா,

ஓடும் இரயிலில் இதை எழுதுகிறேன்; ஆட்டம் அதிகம். இன்று எழுத்து வேலை எதுவும் செய்ய எனக்கு உற்சாகமில்லை. இப்பொழுது மாலை நான்கு மணி; திங்கட்கிழமைக் கடிதங்களை எழுதத் தொடங்கியுள்ளேன். கணிசமான அளவு இன்று தூங்கி னேன். அதே அளவு நேரம், இரண்டு நண்பர்களின் உரை யாடலைக் கேட்டுக் கொண்டிருந்தேன்.

பால் பண்ணையிலும், முது பசுக்கள் ஓய்வில்லத்திலும், நீ கண்டதனைத்தையும் எனக்கு விவரமாகச் சொல்ல வேண்டும்......* பெயர்களையும் எழுதவேண்டும். ஆனால் உன் பதில் டில்லியில் எனக்கு வந்து சேரும்படி எழுதுவதற்கு உனக்கு அவகாசம் இருக்காதென்று எண்ணுகின்றேன். வைஸ்ராயுடன் பேச்சு வார்த்தைகளை முதல் பேட்டியிலேயே 2ந் தேதி முடித்துவிட்டால், அன்றே சாபர்மதிக்குப் புறப்பட உத்தேசித்துள்ளேன். எப்படி நடக்கிறதென்று பார்க்கலாம். பேட்டியிலிருந்து அதிகம் எதிர் பார்க்க இடமில்லை. ஆனால் அந்தக் காரணத்திற்காக, அவர்கள் காட்டியுள்ள நல்ல சமிக்ஞையைப் புறக்கணிக்க விரும்பவில்லை.

அன்பு,

திங்கட்கிழமை. பாபு

## 53

[கதர் வேலையை ஒட்டி நான் பர்தோலி ஆசிரமத்துக்குச் சென் றிருந்தேன். புகழ் பெற்ற பர்தோலி சத்தியாக்கிரகம் நடந்து கொண் டிருந்த வேளை.]

சி. மீரா,

உன் சுரம் நீங்கிவிட்டது அறிந்து மகிழ்ச்சி அடைகின்றேன். நீ நல்ல வலிவுடன் இருக்கவேண்டும். உன் எடையைக் குறித்து எழுது. அங்கு வல்லபாய் ஆதீனத்தில் நீ இருக்கின்றாய். அவர் விரும்பினால், நீ அங்கு தங்கி, அவர் விரும்புமளவு போராட் டத்தில் பங்கு கொள்ளலாம். முதலில் வகுத்த திட்டத்திற்கு மேலாக நீ அங்கு தங்க வேண்டியிருந்தால், எப்பொழுது வேண்டு மானாலும் இங்குவந்து உன் பொருட்களை எடுத்துச் செல்லலாம்.

அன்பு,

*11-5-28* பாபு

ஸ்ரீமதி மீராபென்,
பர்தோலி.

---

* கடிதத்தில் பாபுவின் எழுத்து விளங்கவில்லை.

## 54

[நான் சாபர்மதிக்குத் திரும்பியிருந்தேன். பாபு பர்தோலியில் இருந்தார்.]

வேறொருவர் கையால் எழுதியது

சுயராஜ்ய ஆசிரமம்,
பர்தோலி, *10-8-28.*

*சி. மீரா,*

சுயராஜ்ய ஆசிரமத்தில் இருந்த வீர இளம்பெண் ஒருத்தி இறந்துவிட்டாள். நேற்று அவள் நலமாகவே இருந்தாள். சாபர்மதி சிறையிலிருந்து அண்மையில் விடுதலை பெறவிருக்கும் தன் தந்தையைக் காண அவள் இங்கு வந்திருந்தாள். வயிற்றுப் பகுதியில் அவளுக்குக் கடுமையான வலி உண்டாயிற்று. மருத்துவர்கள், அது இன்ன நோயென்றே கண்டுபிடிக்கவில்லை. இன்று காலையில் அவள் அமைதியாக இறந்துவிட்டாள். இன்று செய்ய வேண்டிய வேலைகளை நான் இயந்திரம்போல் செய்து வருகின்ற போதிலும், மரண தெய்வத்துடன் மௌன உரையாடல் நடத்தி, மரணத்தின் பொருளை எனக்கு மேலும் தெளிவாக்கிக் கொண்டிருக்கின்றேன்.

மற்றவை, நாம் நேரில் சந்திக்கும்போது.

அன்பு,

பாபு

## 55

[பாபு சாபர்மதியில் இருந்தார். காதி வேலைக்காக நான் சுற்றுப் பயணம் மேற்கொண்டிருந்தேன்.]

திருத்தப்படாதது

*27-10-28*

*சி. மீரா,*

காலை இரண்டரை மணியிலிருந்தே எழுதிக் கொண்டிருக்கின்றேன். குசும் மலேரியா சுரமாய்ப் படுத்திருக்கிறாள். பல பேர் இப்போது நோய்வாய்ப்பட்டிருக்கின்றனர். சகன்லால் குடும்பத்தினர் அனைவருக்குமே நோய். நாரணதாசுக்குச் சுரம் மீண்டும் வந்துவிட்டது. பாவுக்குக் கடுமையான சோதனைக் காலம். பியாரிலால் படுத்த படுக்கையாய் இருக்கின்றார். சோட்டேலாலுக்கு மீண்டும் சுரம் வரும்போல் இருக்கிறது. வலிமை மிக்க சுரேந்திராகூட தப்பவில்லை. நான் குறிப்பிடாத

இன்னும் பலருக்கும் சுரம். ஸ்டாங்தேநாத்தை நான் மறக்கக் கூடாது. அவருக்கும் கடுமையான தாக்குதல். ஆகவே என் பாடு எப்படியிருக்கும் என்பதை நீ புரிந்து கொள்ளலாம். மகாதேவ், பர்தோலியில் இருக்கின்றூர்.

துயர அட்டவணை இவ்வளவு நீண்டிருந்தும், நான் தொடர்ந்து பணியாற்ற வேண்டுமென்று இறைவன் விரும்புகிறுர் போலும். ஆகவே நான் நலமாகவே இருக்க அவர் பார்த்துக் கொள்கிறுர். ஆனல் என்ன நடக்கவிருக்கிறது என்பது யாருக்குத் தெரியும்?...

வேலைகள் நிதானமாக நடந்து வருகின்றன. கன்றுக்குட்டி சம்பவம்[1] என் ஆழ்ந்த கவனத்தைப் பெரிதும் ஈர்த்தது. பலபேர் சிந்தனையைக் கிளறிவிட்டிருக்கின்றது என்பதால், அதுவும் நன்மைக்கே.

(இங்கு வழிபாட்டிற்காக நான் கடிதத்தை நிறுத்தினேன்.)

மாலை *4-15* மணி.

இத்துடன் காணும் தந்தியை ஹர்ஜீவன் கோடக் ஸ்ரீநகரி லிருந்து அனுப்பியுள்ளார். நேப்பாளம் செல்லவில்லையானல்,

---

1. சாபர்மதி ஆசிரமத்தில் கன்றுபோடா ஓர் இளம் பசு நோய்வாய்ப் பட்டது. நோய்க்குக் குணமில்லை என்று தெரிந்தது. பல நாட்கள் ஒரு பக்கமாக சாய்ந்து படுத்துக் கிடந்த அப் பசு தாங்கமுடியாத வேதனை அனுபவித்து வந்தது. அந்தச் சித்திரவதையிலிருந்து அதற்கு விடுதலை அளிக்க, அதன் உயிரைப் போக்குவதே அதற்குக் காட்டக்கூடிய கருணை என்ற முடிவுக்குப் பாபு வந்தார். ஆனல் ஆசிரமவாசிகளின் ஒப்புதலைப் பெருமல், அந்த நடவடிக்கையை எடுக்க பாபு விரும்பவில்லை. இரண்டு, மூன்று நாட்களுக்குப் பலமாக விவாதம் நடந்தது. பசுவின் உயிரைப் பறிக்க, பாவுக்கும் காசி பென்னுக்கும் மனம் ஒப்பவில்லை. "அப்படியானல் நீங்கள் இருவரும் மாட்டுத் தொட்டிலுக்குச் சென்று, உங்கள் குழந்தையைக் கவனிப்பதுபோலவே இளம் பசுவைக் கவனியுங்கள்", என்று பாபு கூறினர். அவர்கள் இருவரும் சென்று பசுவுடன் பல மணி நேரம் உட்கார்ந்திருந்தனர். அதன் வேதனையையும், அதைத் தணிக்க தங்களால் ஒன்றும் செய்ய இயலாமையையும், கண்டு பாபு சொன்ன யோசனைதான் சரியானது என்று அவர்களும் உணர்ந்தனர். அவர் களும், அவர்கள் கருத்தை ஆதரித்த மற்றவர்களும், தங்கள் எதிர்ப்பை நிறுத்திக்கொண்டனர். அதன்பின்பு, பசுவின் உயிரை, வேதனையில்லாத வகையில் போக்க எது சிறந்த வழியோ, அதை மேற்கொள்ளும் பொறுப்பு சேத் அம்பாலால் சாராபாயிடம் விடப்பட்டது. அவரும், தம் சொந்தக் குடும்ப மருத்துவரை அழைத்து வந்தார். பசு படுத்திருந்த கொட்டிலுக்கு பாபுவும், பால்பண்ணை உதவியாளரும், நானும் அவர்களுடன் சென்றோம். பாபு குனிந்து, பசுவின் முன்னங்கால் ஒன்றை மென்மையாகத் தூக்கி ஒரு சில நிமிடங்கள் பிடித்துக் கொண்டார். மருத்துவர் ஒரு ஊசி போட்டதும், எல்லாம் முடிந்துவிட்டது. பாபு ஒரு துணியை எடுத்து, மௌனமாக இளம் பசுவின் முகத்தின் மேல் மூடினர். நாங்கள் அனைவரும் மௌனமாகத் திரும் பினேம். இதன்பின்பு, பல வாரங்களுக்கு, இது குறித்துப் பல கடிதங்கள் வந்து குவிந்த வண்ணமிருந்தன.

நீ திரும்பி, காஷ்மீருக்குச் செல்ல வேண்டுமென விரும்புகிறேன். அங்கு நடக்கும் கதர் வேலைக்காக மட்டுமல்ல, அங்குள்ள மலைகளைக் காணவும் நீ காஷ்மீர் செல்ல வேண்டும்.

பண்டித மோதிலால்ஜி இங்கு இன்று வந்துள்ளார்.

நவம்பர் கடைசி வாரத்தில் நான் வர்தா செல்வேனென்று எதிர்பார்க்கின்றேன்.

அன்பு,

பாபு

ஸ்ரீமதி மீராபாய்,
காதி காரியாலயம்,
முசாபர்பூர்,
பீகார்.

# 56

சி. மீரா,

காய்கறிகளை நறுக்க ஆயத்தம் செய்யுமுன் ஒரு நிமிட நேரம் எனக்கு இப்பொழுது அவகாசம் கிடைத்துள்ளது.[1]

* * *

சோட்டேலால்ஜி ரொட்டி தயாரிக்கும் வேலை நன்ருக முன்னேறி வருகிறது. சமையல் வேலை இதனுல் மிகவும் சுலபமாகியுள்ளது.[2]

தேவதாசுடனும் ஜாமியாவுடனும் நெருங்கிய தொடர்பு கொண்டிரு.

அன்பு,

பாபு

நானே பஞ்சடிக்கத் தொடங்கியுள்ளேன் என்பதை உனக்குச் சொல்ல மறந்துவிடக் கூடாது. நடுத்தர வில்லைப் பயன்படுத்தி வருகிறேன்.

பாபு

ஸ்ரீமதி மீராபாய்,
காதிக்கடை,
முசாபர்பூர்,
பீகார்.

---

1. பொதுச் சமையல் நடந்த மடப்பள்ளியில் காய்கறிகளை நறுக்கும் வேலையில் பாபு பங்கு கொள்வதுண்டு.

2. செங்கல் அடுப்பு ஒன்றைக் கட்டி, பொங்க வைக்கும் புளிப்புச்சத்தை உபயோகிக்காமலே, ரொட்டி தயாரிக்கும் முறையில் சோட்டேலால்ஜி வெற்றி கண்டிருந்தார்.

## 57

வேறொருவருக்குச் சொல்லி எழுத வைத்தது

சத்தியாக்கிரக ஆசிரமம்,
சாபர்மதி,
*31—10—'28*

சி. மீரா,

ஆசிரமத்தைப் பற்றிய உன் கடிதமும், உன் மீரட் பயணம் பற்றிய கடிதமும், இரண்டும் ஒரே நேரத்தில் வந்து சேர்ந்தன. உன் முசாபர்பூர் முகவரிக்கு, ஞாயிறன்று ஒரு கடிதமும் திங்கள‌ன்று ஒரு கடிதமுமாக இரண்டு கடிதங்கள் நான் அனுப்பியிருந்தேன்.

ஆசிரமத்தைப் பற்றிய செய்தி பத்திரிகைகளில் எப்படி வெளியாயிற்று என்று எனக்குத் தெரியவில்லை. எப்படியும் அதில் பெரும்பகுதி பொய்யானது. தீவிர மாறுதல் எதுவும் இருந்திருந்தால், நான் உனக்கு எழுதியிருப்பேனே. பெயர் மாற்றத்தைப் பத்திரிகைகளுக்கு வெளியிடக் கூடாதென்று மகாதேவும் மற்றவர்களும் கண்டிப்பாகக் கூறியதால், பெயர் மாற்றத்தைப் பற்றிக்கூட பத்திரிகைகளில் நான் குறிப்பிடவில்லை. இப்பொழுது பத்திரிகைகளுக்குச் சொல்லித்தானாக வேண்டிய அவசியம் எனக்கு ஏற்பட்டுள்ளது.* ஆனால், பிரம்மச்சரியம் பற்றிய விதியைத் தளர்த்தக் கூடாதென்று உத்தியோக மந்திர் குழு முடிவு செய்துள்ளது. ஆகவே பிரம்மச்சரியம் பற்றிய அடிப்படை விதியும் மற்ற அடிப்படைகளும் முன்பிருந்தது போலவே தொடர்ந்து நிற்கும். அது போலவே, பொதுச் சமையலறை பற்றிய விதியும் இன்னும் ஓராண்டிற்காகிலும் மாறுதலின்றி நிலைக்கும். அந்த ஆண்டின் முடிவில்தான், நமக்குக் கிடைத்த அனுபவத்தைக் கொண்டு, பொதுச் சமையல் பற்றி மறுபரிசீலனை செய்ய முடியும். சமையலறை இனிது இயங்கி வருகிறது.

நவம்பர் 21-ந் தேதி நடக்கவிருக்கும் விழாவின் போது, பஞ்சடிக்கும் முறை பற்றிச் செய்முறை விளக்கங்கள் நடத்த வேண்டுமென மீரட்டில் காந்தி ஆசிரம அமைப்பாளர்கள் விரும்புகிறார்கள். நீ நேப்பாளம் செல்லாவிடில், திரும்பி வந்து, இவ் விழாவில் கலந்து கொண்டு, உன்னால் முடிந்த உதவியை அவர்களுக்குத் தந்துவிட்டு, அதற்குப் பின்பு காஷ்மீருக்குச் செல்வது நலம். மற்றவை எப்படியானாலும், நீ காஷ்மீருக்குச் செல்ல வேண்டுமென்று நான் விரும்புகிறேன். அங்குக் கதர் வேலை எதுவும் நடந்து கொண்டிருந்தால்தான், நீ காஷ்மீருக்குச் செல்வாய். அந்த செய்

---

* இவ்வேளையில் சாபர்மதி ஆசிரமத்தில் பெரிய கொந்தளிப்பு ஏற்பட்டிருந்தது. 'சத்தியாக்கிரக ஆசிரமம்' என்ற பெயர் தொடர்வதற்குரிய வகையில் ஆசிரம வாழ்க்கை உயர்வாக அமையவில்லை என்ற கருத்தைப் பாபு ஆசிரமவாசிகள் முன்பு வைத்தார்.

முறை விளக்கங்களை ஏற்பாடு செய்ய, தேவதாஸ், ரசீக், நவீன் ஆகியோர் உதவியை நீ பெற்றுக் கொள்ளலாம். அப்படியானல், இங்கிருந்து யாரையும் அனுப்ப வேண்டிய அவசியம் இருக்காது. இப்போது இங்குள்ள வேலைகளைச் செய்யவே ஆட்கள் போத வில்லை. ஆசிரமத்திலிருந்து எவரையும் அனுப்ப வசதி இருக்காது. இருந்தாலும் மீரட் அமைப்பாளருக்கு நான் உதவி செய்ய விரும்பு கிறேன். என் கருத்தை நீ தெரிந்து கொண்டு, உனக்கு எது வசதியோ, அதைச் செய். உனக்குக் கடிதம் எழுதப் போகும் மஜும்தாருக்கு நான் உறுதி எதுவும் அளிக்கவில்லை.

அன்பு,

பாபு

## 58

*சி. மீரா*

உன் குறிப்பு கிடைத்தது. நாளை கிறிஸ்துவின் பிறந்த நாள். கிறிஸ்துமஸ் உனக்குச் சிறப்பான, புனிதமான நினைவுகள் கொண்ட நாளாயின், வாழ்க்கையின் உண்மையை மேலும் விளக்க மாகவும் தூய்மையாகவும் அறிந்து கொள்ள அந்நாள் உனக்கு ஒரு வாய்ப்பாக இருக்க வேண்டும். நீ உறுதியான உள்ளம் படைத் தவள். ஆகவே உனக்கு எல்லாம் இனிதே நடக்கும். வர்தாவில் மகிழ்ச்சியுடனும் மன அமைதியுடனும் நீ இருந்ததை நான் அறி வேன். அது கண்டு எனக்கும் மனமகிழ்ச்சி ஏற்பட்டது.

நான் இரயில் நிலையத்துக்கு வந்து சேர்ந்த நேரத்திலிருந்து, சரியாக வேலை வைத்திருந்தார், மோதிலால்ஜி. ஆகவே இரவில் தான் தூற்க முடிந்தது.

அன்பு,

பாபு

*24—12—28*

## 59

*என் அன்புள்ள மீரா,*

நீ உன் உடல் நலனை நன்கு பேண வேண்டும். அதற்கு அவசிய மானது எதையும் நீ குறைத்துக் கொள்ளக்கூடாது. சமையலறை இரைச்சல் உனக்குக் கஷ்டமாயிருந்தால், நீ சமையல் வேலை செய்ய வேண்டாம். எதிலுமே, உன் ஆற்றலுக்கு மிஞ்சிய வேலையை ஏற்றுக் கொள்ளாதே. அதுவும் ஒருவகையில் வாய்மையை மீறு வதேயாகும். நான் உன்னுடன் இல்லாதது குறித்து நீ கவலைப் படக் கூடாது.

இங்கு வேறு செய்தி எதுவும் இதுவரை இல்லை. வல்லபாய் நலமாக இருக்கின்றார். புனாவுக்குச் செல்லும்படி அவருக்கு உத்தரவு எதுவும் இதுவரை வரவில்லை.

அன்பு,

பாபு

## 60

[பாபு சாபர்மதியில் இருந்தார். சாந்தி நிகிதேனம் சென்றுவிட்டு நான் பீகாருக்குத் திரும்பியிருந்தேன்.]

*திருத்தப்படாதது*

*14-1-29*
மௌன நாள்.

சி. மீரா,

உன் அன்புக் கடிதங்கள் அனைத்தும் கிடைத்தன. கவி தாகூரையும் அவருடைய மகத்தான படைப்பையும் உனக்குப் பிடித்திருந்ததுகண்டு மகிழ்கிறேன். உன் கடிதங்கள் எனக்கு ஆறுதல் அளித்தன. அவற்றை மகாதேவிடம் அனுப்பியுள்ளேன். அவை அவருக்குப் பிடிக்குமென்று நான் அறிவேன். நீ அங்கு மீண்டும் செல்ல வேண்டுமென்று விரும்புகிறேன். பிடித்தமானால், நீ வீடுதிரும்புமுன், அங்கு மீண்டும் சென்றுவா.

என்னிடமிருந்து நீ நீண்ட கடிதங்கள் எதிர்பார்க்காதவரை, எனக்குத் திருப்திதான். ஆனால் எனக்கு அலுப்பு தரக்கூடாதென்று, உன் கடிதங்களைச் சுருக்கிக் கொள்ள வேண்டாம். அவை எனக்குப் பயனான பல தகவல்களைத் தருவது மட்டுமல்ல; உன் மனநிலையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன.

இங்கு எல்லாம் நன்றாக நடந்து வருகிறது. சமையலறை முன்னைவிடத் திறமையாக இயங்குகிறது. ரொட்டி மிகவும் நேர்த்தியாக உள்ளது. ரொட்டி தயாரிக்கும் நிலையங்கள் பற்றிப் பல தகவல்கள் சேகரித்துக் கொண்டு சோட்டேலால் திரும்பியுள்ளார். சுரேந்திரா இன்னும் சில நாட்களில் திரும்பி வருவார்.

இங்கிருந்து இம்மாதம் 31ந் தேதி சிந்துக்குப் புறப்பட்டு, பிப்ரவரி 15ந் தேதி திரும்புவேன். சிந்துப் பயணத் தேதிகள் முடிவானதும் குறித்து அனுப்புகின்றேன்.

இழந்த எடையை நான் மீண்டும் பெற்றுவிட்டேன். $\frac{1}{2}$ பவுண்டு கூடியிருக்கிறது. நேற்று என் எடை $95\frac{1}{2}$ பவுண்டு ஆக இருந்தது. பழங்களுக்குப் பதிலாகத் தக்காளி சாப்பிடுகின்றேன். எலுமிச்சையினமும் சேர்ப்பதில்லை.

அன்பு,

பாபு

## 61

*2-2-'29*

*அஞ்சலட்டை*

*சி. மீரா,*

*அசாத்தியக் குளிரின் காரணமாக, இரண்டு நாட்கள் தள்ளி வரும்படி சிந்து நண்பர்கள் கூறிவிட்டார்கள். ஆகவே பயணத் திட்டத்தின் தொடக்கமும் முடிவும் இரண்டு நாட்கள் தள்ளிப் போகும். டில்லியில் நோய்வாய்ப்பட்டிருக்கும் ரசீக்[1] நிலை கவலை யூட்டுவதாய் உள்ளது. பாவும் காந்தியும் அங்கு சென்றுள் ளார்கள். அவன் ஐந்து நாட்களாகத் தன் நினைவில்லாமல் இருக் கின்றான். ஆண்டவன் சித்தப்படி நடக்கும். இம்மாதம் 15ந் தேதி நான் மந்திருக்குத் திரும்புவேன். நாங்கள் அனைவரும் மூன்றும் வகுப்பில் பயணம் செய்கின்றோம். சுகாதார வசதிகள்தான் மோசமாக இருக்கின்றன; மற்றப்படி மூன்றும் வகுப்புப் பயணம் சரியாகத் தானிருக்கின்றது. பேராசிரியர் கிருபளானி என்னுடன் இருக்கின்றார்.*

அன்பு,

பாபு.

*ஸ்ரீமதி மீராபாய்,*
*காதிக் கடை,*
*சாத்வான்,[2]*
*சோதைப்பதி அஞ்சல், பீகார்.*

## 62

*சி. மீரா,*

*இன்று தற்செயலாகக் காலை மூன்று மணிக்கே விழித்துக் கொண்டேன். இப்பொழுது ஐந்து மணி ஆகப்போகிறது. உத்யோக் மந்திர் தபாலை அநேகமாக முடித்துவிட்டேன்.*

*அதிக இடைஞ்சலோ, அசம்பாவிதமோ இல்லாமல், மீண்டும் மூன்றும் வகுப்பில் பயணம் செய்தேன். அது என் மன அமைதியை அதிகரிப்பதாகவே அமைந்தது. இரண்டாம் வகுப்பில் பயணம் செய்யும்போது, எனக்கு மன அமைதியே இருப்பதில்லை.*

---

1. *பாபுவின் பேரன்; ஹரிலாலின் இளைய மகன்.*

2. *பீகாருக்கு வடக்கே ஒரு சிறிய கிராமத்தில் நான் கதர் வேலையைத் தொடங்கியிருந்தேன். இராமதேவ பாபுவும், முசாபர்பூரில் இராசேந்திர பாபுவின் ஆசிரமத்திலிருந்து ஒரு சில இளைஞர்களும் எனக்கு உதவியாக இருந்தனர்.*

ரசீக் பற்றி வேறு செய்தி ஒன்றுமில்லை. கராச்சிக்கு நான் வந்தபோது தந்தி எதுவும் வந்திருக்கவில்லை. இக் கடிதத்தைக் கட்டில் சேர்க்குமுன் இன்று செய்தி எதுவும் வராது. காலை ஒன்பது மணிக்கே இங்கு கட்டு எடுத்துவிடுகிறார்கள்.

நான் உனக்குச் சொன்னேனோ, இல்லையோ, சென்ற வாரம் உத்யோக் மந்திரில் தாங்கமுடியாத குளிர். வாளிகளில் ஊற்றிய நீரும் சிறிய தண்ணீர்த் தேக்கத்தில் இருந்த நீரும் உறைந்து விட்டது. குளிர் 28 டிகிரியை எட்டியது. சாபர்மதியில் இது போன்ற குளிர் எப்போதுமே இருந்ததில்லை. காய்கறிகள், பருத்தி, ஆகியவை மிக நன்றாகப் பயிராகி இருந்தன. பாவம், சோமாபாய் தம் உயிரையே கொட்டிப் பயிரை வளர்த்திருந்தார். அத்தனையும் பயங்கரப் பனியால் பாழாகிவிட்டது. அழகான பப்பாளி தோட்டம்கூட அழிந்து போனது. கழனி முழுவதும் கண்ணீர் விடுவதுபோல் காட்சியளித்தது. காணவே சகிக்க வில்லை. ஆயினும் இத்துன்பச் சோதனையை உருவாக்கியதிலும், இயற்கை ஏதோ நல்லெண்ணம் கொண்டுதான் செய்திருக்கும். அது நமக்குப் புலனாகாமல் இருக்கலாம்; ஆனால் பக்தியுடன் அதில் நாம் நம்பிக்கை கொள்ள வேண்டும். காணாதது, கண்ணுக்குப் புலனாகாதது, ஆகியவற்றின் சான்று பக்தியே.

உன் இயல்பான உடல் நலனை மீண்டும் முற்றிலும் பெற்று விட்டாயென்று நம்புகிறேன். உன் உடலின் பலவீனங்களை உணர மறுக்கக் கூடாது—மறுக்க மாட்டாயென்று நம்புகிறேன். தம் பராமரிப்பில் இருக்கும் ஒருவரை தர்மகர்த்தா எவ்வளவு அக்கரையுடன் பேணுவாரோ, அதே அக்கரையுடன் உன் உடல் நலனுக்கு வேண்டிய வசதிகளை நீ செய்துகொள்ள வேண்டும். உடலுக்கு அதிகச் செல்லம் கொடுக்க வேண்டிய அவசியமில்லை. நீ நிறைவு பெறுவதற்கு உதவியாக, இறைவன் உன்னிடம் ஒப்படைத்துள்ள சொத்தாக, உடம்பைக் கருதவேண்டும். அவ்வாறு கருதினால், உடலின் அடிப்படைத் தேவைகளை நிறைவு செய்வது நியாயம் என்பது மட்டுமல்ல, உன் கடமையுமாகும்.

* * *

அன்பு,

*4-2-29* பாபு

ஐரோப்பா பயணம் பற்றிய என் கட்டுரையைப் படித்திருப்பாய் என்று நம்புகிறேன். அக்கருத்தை நீ ஏற்றுக் கொள்கிறாய் அல்லவா? ரோலண்டுக்கு நீ அது குறித்து எழுதவும்.

பாபு

*ஸ்ரீமதி மீராபாய்,*
*பீஹார்.*

## 63

ஜேக்கோபாபாத்

சி. மீரா,

உன் கடிதங்கள் அனைத்தும் கிடைத்தன. அவை எல்லாம் நன்ருக இருக்கின்றன. இம்மாதம் 2ந் தேதி நீ எழுதியுள்ள கடிதம் நீ அன்று வரை செய்து வந்துள்ளவற்றை விவரமாகக் கூறு கின்றது. நீ செய்துள்ள ஏற்பாடு மிகச் சிறப்பானது. ஆனல் வேலைச் சுமையினல் நீ அலுப்படையக் கூடாது. அதிக வேலையை ஏற்று, உடலைக் கெடுத்துக் கொள்ளாதே. காலை 3-45 மணிக்குத் தொடங்கி நீ வகுத்துள்ள கடுமையான வேலைத் திட்டத்தை உன்னல் தாங்கிக்கொள்ள முடியுமென்ருல், அது மிகச் சிறந்தது. ஆனல் தாங்க இயலவில்லை யென்ருல், திட்டத்தைத் திருத்தி வேலையைக் குறைத்துக் கொள்ளத் தயங்காதே.

ரசீக் நாளுக்கு நாள் நலிந்து வருகின்ருன். இன்னும் தன் நினை வில்லாமல், அவன் மிக மோசமான நிலையில் ஊசலாடிக் கொண் டிருக்கின்ருன். நிலைமை மிகவும் வேதனையளிப்பதாய் உள்ளது. இச் சோதனையைத் தேவதாஸ் மிகவும் உறுதியுடன் தாங்கி வரு கின்ருன். அவனைப் பேணிக் காத்து வருவதுடன், வேறென்றும் செய்ய முடியாமல் கூடவிருக்க டில்லி சென்றுள்ளவர்களையும் அவன் கவனித்து வருகின்ருன். இப்போதைக்கு ரசீக்கின் அத்தை அங்கு சென்றிருக்கின்ருள். ஹரிலாலின் குழந்தைகள் மேல் அவளுக்கு உயிர்.

வேலைப் பளுவை நான் கஷ்டமில்லாமல் சமாளித்து வரு கிறேன். பாலைத் தவிர்த்து மற்ற உணவைத் தொடர்ந்து உட் கொண்டு வருகின்றேன். பயணத்தின்போது ஆரஞ்சுப் பழங்கள் சாப்பிடுகின்றேன். மற்றப்படி, உணவு, சாபர்மதியில் நான் உட் கொள்வதைப் போன்றதுதான். குளிர் தாங்கமுடியாமலில்லை.

அன்பு,

பாபு

7-2-'29

## 64

சி. மீரா,

ரசீக் இறந்து விட்டதாக இப்பொழுதுதான் தந்தி வந்தது. இறைவன் சித்தமே, நமக்குச் சட்டம். என்னுடைய அன்ருட வேலையைத் தொடர்ந்து செய்து வருகின்றேன். என் உணர்ச்சிகள், என் சுயநலனிலிருந்து எழுபவை. இந்த உடலைத் தாங்கி நிற்கும்

போதே, ரசீக் எவ்வளவோ சாதிக்க முடியுமென்று நான் நம்பி யிருந்தேன். ஆனல் அவ்வாறு நடப்பதற்கில்லை. ரசீக்கின் ஆன்மா இன்னும் உயர்நிலைக்குச் சென்று விட்டது. சென்ற இரு மாதங் களில் அவன் அந்த அளவு உருமாறி உயர்ந்துவிட்டான்.

புதன் கிழமையன்று நான் ஐதராபாத் போய்ச் சேர்வேன். வெள்ளிக்கிழமை காலையில் அங்கிருந்து புறப்பட்டு, மிர்பூர்காசில் நாளைக் கழித்துவிட்டு, மாலையில் டில்லிக்கு—சாபர்மதிக்கு அல்ல—இரயில் ஏறுவேன். அங்கு ஓரிரு நாட்கள் இருக்க வேண்டுமென்று மோதிலால்ஜி விரும்புகிறார். செவ்வாய்க்கிழமை இரவில் மந்திர் வந்து சேருவேன் என்று எதிர்பார்க்கின்றேன். ஆனல் நிச்சய மாகச் சொல்வதற்கில்லை. ஞாயிற்றுக்கிழமைக்கும் செவ்வாய்க் கிழமைக்கும் இடையே நீ அனுப்ப விரும்புவதை. (பார்வை) பண்டித மோதிலால் நேரு, கிளைவ் தெரு, புது டில்லி என்ற முகவரிக்கு அனுப்பவும்.

இப்பொழுது மேலும் எழுதுவதற்கு அவகாசமில்லை. உன் கடி தங்கள் தொடர்ந்து நன்ருக இருக்கின்றன; எனக்குப் பல விவ ரங்களைத் தெரியப்படுத்துகின்றன, ரசீக் பற்றி உனக்குத் தந்தி அனுப்பக் கூடாதென்று வேண்டுமென்றே தான், நான் என்னைத் தடுத்துள்ளேன். நமக்கு எவ்வளவோ வேலை காத்திருக்கிறது.

அன்பு,

பாபு

லர்கான,
*9—2—'29*

## 65

*சி. மீரா,*

உன் கடிதங்கள் அனைத்தும் கிடைத்தன. இதைப் புதுடில்லி யிலிருந்து எழுதுகிறேன். நாளை மந்திருக்குப் புறப்படுகின்றேன். அநேகமாக, மார்ச்சு முதல் தேதி மந்திரை விட்டுப் புறப்பட்டு ரங்கூன் சென்று, மார்ச்சு 27 ந் தேதி வாக்கில் சாபர்மதி திரும்பு வேன். பர்மா முகவரி, (பார்வை) டாக்டர் மேத்தா, 8, பகோடா தெரு, ரங்கூன்.

உன் கடிதங்கள் அனைத்தும் எனக்கு மிகுந்த ஆறுதல் அளிக் கின்றன. உன் வேலை மிக நல்ல முறையில் முன்னேறி வருவது போல் தோன்றுகிறது. ஓரளவு தெளிவுடன் கூறமுடியுமென்று நீ எண்ணும் போது, உன் வேலையைப் பற்றி யங் இந்தியாவில் நீ எழுத வேண்டும். ஆனல் நான் அவசரப்படமாட்டேன். சர்க்காவில் மென்மையான நூற்புக் கதிர்களில் நீ காணும் முன்னேற்றம் பற்றி எனக்கு அவ்வப்போது தெரிவி. கேஷுவுடன் நான் அதைப் பற்றி

விவாதித்தேன், ஆனால் அவருக்கு அதில் நம்பிக்கை ஏற்படவில்லை. ஆசிரம வேலைக்கிரம அட்டவணைக்குக் கீழ்ப்படிவதை ஆசிரம வாசிகள் அனைவரும் பழக்கமாக்கிக் கொண்டார்களானால், அது நன்றாக இருக்கும்.

உணவு முறையில் நான் செய்துள்ள பரிசோதனைகளின் வெற்றி கண்டு டாக்டர் அன்சாரி வியப்படைகின்றார். என் எடை குறையாதவரை, எடையைப் பற்றி அவர் கவலைப்படவில்லை.

தேவதாஸ் துயரத்தை மன உறுதியுடன் தாங்கிக் கொண்டான். பாவும் காந்தியும் இன்னமும் இங்குதான் இருக்கின்றார்கள். ஒரு வேளை, அவர்கள் நாளை என்னுடன் வரக்கூடும்.

அன்பு,

பாபு

*18—2—'29*

பின் குறிப்பு.

ஆம்; 'சுயசரிதம்' திருத்தும் வேலையை நீ வேகமாக முடிக்க வேண்டும். ஆண்ட்ரூஸ் இப்பொழுது நியூயார்க்கில் இருக்கின்றார்; கிரெக் கூட அங்குதான்.

பாபு

ஸ்ரீமதி மீராபாய்,
ஆசிரமம்,
சாத்வான்,
சோதைப்பதி அஞ்சல் (பீஹார்)

# 66

சி. மீரா,

பயனுள்ள உன் கடிதங்கள் தினமும் கிடைக்கின்றன. உன் வேலையின் பயனாகச் சிறப்பான எதிர்காலம் உருவாகுமென்று நம்புகிறேன். நிலைமையை எதிர்த்துப் போராடாமல், அனுசரித்துச் செல்லும் போக்கில் நீ வேலை செய்வது நல்லதுதான். யோகேந்திர பாபுவின் மனைவியையும் நீ வேலையில் சேர்த்துக் கொண்டுள்ளதன் பயனாக, சிறிய ஆசிரமமாக உருவாகி வரும் உன் அமைப்பு நல்ல வழிகாட்டியாக வளருமென்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

திங்கட்கிழமை, *25—2—29*

## 67

கல்கத்தா,
4, மார்ச்சு '29

*திருத்தப்படாதது*

*சி. மீரா,*

இந்தத் தாளைப் பார்த்ததுமே நான் எங்கிருந்து இதை எழுதுகிறேன் என்பதை நீ அறிந்து கொள்வாய்.

நாளை நான் உன்னிடமிருந்து வெகு தூரம் சென்றுவிடுவேன். ஒரு விதத்தில், என் மூன்றாம் வகுப்புப் பயணம் ஒரு மோசடியாகி வருகிறது, டில்லியிலிருந்து, எனக்கும் என்னுடன் வருபவர்களுக்கும் சேர்த்து, ஒரு தனிப் பெட்டியே இரயிலில் ஒதுக்கி விட்டனர். ஆகவே இரண்டாம் வகுப்புப் பயணத்தில் கிடைப்பதை விட அதிக வசதியும் சுதந்திரமும் எனக்குக் கிடைத்தன. கூட வரும் நண்பர்களும் என்னுடனேயே இருக்க வசதியும் கிடைத்துள்ளது. பிரிந்து தனியாகச் செல்வது மனத்திற்கு வருத்தத்தைத் தரும். ஒன்றாயிருப்பது உள்ளத்திற்கு மகிழ்ச்சி அளிக்கின்றது.

மந்திர் நல்ல வளர்ச்சி அடைந்து வருகிறதென்று தான் எண்ணுகிறேன். பொது மடப்பள்ளிக்கு ஆதரவு மேலும் மேலும் வளர்ந்து வருகிறது. ஆண்டு இறுதியில் அதைக் கலைத்துவிட எவருமே விரும்ப மாட்டார்களென்று எண்ணுகிறேன். ஆனால் பொறுத்திருந்து பார்ப்போம்.

என்னைப் பற்றிக் கவலைப்படாதே. ரங்கூனிலிருந்து வாரத்திற்கு மூன்று முறை போக்குவரவு வசதி உள்ளது. ஆகவே வாரம் மூன்று முறை உனக்குக் கடிதம் எழுத முடியுமென்று எதிர்பார்க்கின்றேன்.

இன்னும் சில நாட்கள் கழித்து, இதுவரை நீ செய்துள்ள வேலையை விமர்சனம் செய்து எழுத மறந்துவிடாதே. சர்க்காவில் மென்மையான நூற்புக் கதிர்களைப் பற்றி உன் முடிவான கருத்தைத் தெரிவிக்க வேண்டும். வில்லுக்கு நீ செய்துள்ள திருத்தங்கள் பற்றியும், முன்பு அவர்கள் பயன்படுத்தி வந்த பஞ்சுக்கும் இப்பொழுது நன்றாகப் பட்டை போட்டுப் பயன்படுத்தி வரும் பஞ்சுக்கும் உள்ள வேறுபாடு பற்றியும் நீ எழுத வேண்டும். இந்தப் பரிசோதனைகள் பற்றிய விவரங்களை நீ ஒரு குறிப்புப் புத்தகத்தில் பதிவு செய்து வருகிறாயென்று எண்ணுகிறேன். இச்சோதனையை, ஆராய்ச்சி முறைக் கேற்ப நீ நடத்த வேண்டும்.

காலை, மாலை வழிபாடு பற்றியும், அதில் நீ பாடும் பாட்டுக்கள் பற்றியும், அவ்வப்போது எனக்கு நீ தெரிவிக்க வேண்டும். உணவு பற்றி நீ இறுதியாகச் செய்துள்ள மாறுதல்கள் பற்றியும் எழுது. இப்பரிசோதனைகளை நீ மிக்க கவனத்துடனும் நுட்பமாகவும்

நடத்துவாயென்றும், எளிதில் உன்னை நீயே ஏமாற்றிக் கொள்ள மாட்டாயென்றும் எனக்கு நம்பிக்கை உண்டு. ஆகவே உன் பரிசோதனையை நான் மேலும் மேலும் முக்கியமாகக் கருதுகின்றேன்.

சமைக்கப்படாத உணவைச் சாப்பிடும் பழக்கத்தை நான் மேலும் மேலும் ஏற்று வருகிறேன். பயணத்தின்போது, பச்சைக் காய்கறியை நறுக்கி, ரொட்டியுடன் சேர்த்துச் சாப்பிட்டேன். ரொட்டி ஒன்றுதான், நான் சாப்பிட்ட உணவில், சமைக்கப் பட்டது. பழம், வரவர அவசியமற்ற பொருளாகி வருகிறது. பச்சையான, பசுமையான காய்கறி, அதே அளவு சத்துள்ள, விலை குறைவான உணவாகும். முட்டைக்கோசு, காலிபிளவர், அல்லது வேறெந்தப் பச்சைக் காய்கறியும் நல்ல பயன் தரும். பச்சையாகச் சாப்பிடும்போது, நமக்கு வேண்டியது மிகக் குறைந்த அளவே யாகும்.

அன்பு,

பாபு

## 68

*16-3-29*

*சி. மீரா*

இதற்குப் பின்பு பர்மாவிலிருந்து நான் உனக்கு இன்னும் ஒரு கடிதம் தான் அனுப்பமுடியும். அதற்குப்பின் நானே கல்கத்தா வந்து சேர்ந்து விடுவேன். தினமும் நீ சிறிது கொய்னு சாப்பிடுவது நல்லது தான். உடல் நலமாக இருக்கும்போதே, அவ்வப்போது உணவருந்தாமல் இருக்கவோ, உணவை ஒருசில வேளைகளில் குறைத்துக் கொள்ளவோ உன்னைப் பழக்கப்படுத்திக் கொள். சிலவேளைகளில் நெய்யையும் வேறு சில வேலைகளில் பாலை யும் விலக்கவும். சில வேளைகளில் சாறு நிறைந்த பழங்களைச் சாப்பிடு. அவ்வாறு செய்தால், சுரம் வராமல் தடுக்க முடியும்.

இங்கு ஒரு லட்ச ரூபாய் திரட்ட இயலுமென எதிர்பார்க் கின்றேன். வாணிபத் துறை மந்தமாக இருக்கும் இக் கட்டத்தில் பர்மா தருவதற்கு, இது குறைவான தொகையல்ல.

இதுபோன்ற பயணங்களில் நீ என்னுடன் இருந்தால் நன்ருக இருக்குமென்று நான் அடிக்கடி எண்ணியதுண்டு. ஆனல் நீ இப் பொழுதுசெய்து வரும் வேலை இதைவிடப் பெரிது, முக்கியமானது என்பதை நான் அறிவேன். இறைவன் உனக்கு உடல் நலனை நல்கினல், இந்த ஊர்களுக்கு நீயே வரலாம். அப்படி வரும்போது நீ இன்னும் அதிகப் பக்குவமும் பயிற்சியும் பெற்றிருப்பாய். நான் போன பின்பு, இப்பொழுது நீ பெற்றுவரும் பயிற்சியும் அனுபவங் களும் உனக்கு உறுதுணையாக நிற்கும்.

சர்க்காவில் மென்மையான நூற்புக் கதிர்கள் பற்றி உன் கருத்துக்களை லக்ஷ்மிதாசுக்கு அனுப்பியுள்ளேன். உன் வாதம் என்னைக் கவர்ந்துள்ளது. ஆனால் அவ்வாருயின், மென்மையான நூற்புக் கதிர்களை முதலில் பயன்படுத்திய மகன்லால் திண்மையான கதிர்களுக்கு ஏன் மாறினர் என்று ஓயாது என்னை நானே கேட்டுக்கொள்கிறேன். நீ கண்டுள்ளதை லக்ஷ்மிதாசு ஏன் காணவில்லை? ஆனல் இதைக் கொண்டு, உன் கண்டுபிடிப்பை உதாசீனம் செய்வதற்கில்லை. மிகவும் கனமாகவும் நிதானமாகவும் முடிவு செய்வதன் அவசியத்தைத் தான் அவை உணர்த்துகின்றன.

ஆசிரமத்தில் பெண்கள் தங்க விடுவது பற்றி உன் கருத்துக்களையும் கவனித்தேன். இது போன்ற பிரச்னைகள் அனைத்திலும் நீ விரும்பும் அளவு மெதுவாகவும் நிதானமாகவும் செல்லவேண்டும். எதிலும் உனக்கே நம்பிக்கை இல்லையென்ருலோ, ஐயப்பாடு உள்ளதென்ருலோ, அதைச் செய்ய முயலக் கூடாது. நிதானமாக ஆனல் உறுதியாகச் சென்ருல்தான், பந்தயத்தில் வெற்றி கிட்டும்.

ஆண்ட்ரூஸ் இன்னும் அமெரிக்காவில் இருக்கிருர். தாம் இனிதே இருப்பதாக கிரெக் தெரிவித்துள்ளார். ஆண்ட்ரூஸ், என் சுய சரிதையைச் சுருக்கி, மாக்மில்லன் கம்பெனி வெளியிடுவதற்குத் தயார் செய்யும் பொறுப்பை ஏற்றிருக்கிருர்.

அன்பு,

பாபு

## 69

திருத்தப்படாதது

சி. மீரா,

இன்று மௌன நாள். இந்தியாவின் உத்தமச் செல்வர்களில் ஒருவராகிய திலகர் உயிரோடு புதைக்கப்பட்ட கோட்டை நிழலில் நான் இதை எழுதுகிறேன். லாலாஜியும்[1] மாண்டலே கோட்டையில் பல ஆண்டுகள்[2] அடைபட்டுக் கிடந்தார். மௌன நாளன்று இதை நான் எழுதுகிறேன் என்ற போதிலும், இன்றைய கட்டில் இதைச் சேர்க்க முடியவில்லை. கட்டெடுக்கும் நேரத்தில் எனக்குத் தூக்கக் கலக்கம் அதிகமாயிருந்தது. ஆனல் சனிக்கிழமைத் தபாலில் நான் உனக்கு ஒரு கடிதம் அனுப்பியிருந்தேன். என்னைக் கல்கத்தாவிற்கு அழைத்துச் செல்லும் அதே இரயிலில் தான் இக்கடிதமும் வரும்.

---

1. லாலா லஜபதிராய்

2. பாபுவுக்குத் தூக்கக் கலக்கமாக இருந்திருக்க வேண்டும். மாதங்கள் என்பதற்குப் பதிலாக ஆண்டுகள் என்று எழுதிவிட்டார்.

ரங்கூனிற்கு இந்தியாவிலிருந்து தபால் வந்து சேரும் நாள் இன்று. உன்னிடமிருந்து கடிதம் எதுவும் வந்திருந்தால், நான் புதன்கிழமையன்று ரங்கூனுக்குப் போய்ச் சேரும் போது எனக்குக் கிடைக்கும்.

சுவைமிக்க இச் சுற்றுப் பயணம் முடியுந்தறுவாயில் உள்ளது. டாக்டர் மேத்தாவிடமிருந்து பிரிவது எனக்கு வருத்தத்தைத் தரும். நான் அங்கிருந்தால் அவருக்கு ஆறுதலாயிருக்கும் என்பதை அறிவேன். ஆனால் இதில் நான் என் மகிழ்ச்சியை நாடுவதற்கில்லை.

இச் சுற்றுப் பயணத்திற்கு ஒத்துப் போவது முதலில் சற்று கடினமாக இருந்த போதிலும், மொத்தத்தில் என் உடல் நலனுக்குக் குறைவில்லை. இதமான குளிரின்போது, செரிக்கும் சக்தி நன்கு இயங்குவது போல் இங்கு இயங்குவதில்லை. இங்கு தட்பவெப்ப நிலையும் இயற்கையாகவே ஓதம் நிறைந்ததாகவும் உள்ளது.

என்னுடைய பயணத்திட்டத்தின் விவரங்கள் இப்பொழுது உனக்குத் தெரியும். 26ந் தேதியன்று உனக்கு ஒரு தந்தி அனுப்ப உத்தேசித்துள்ளேன். மாலை இரண்டு மணிக்கு ஹௌராவிலிருந்து செல்லும் இரயிலில் எப்படியும் புறப்பட பகீரத முயற்சி செய்ய வேண்டும்.

இச்சுற்றுப் பயணத்தில் முதன்முறையாக இன்று என்னால் நன்கு பஞ்சடிக்க முடிந்தது. தினமும் அவ்வாறு செய்ய முடிந்தால் எனக்கு மிகவும் மகிழ்ச்சியாக இருக்கும். * * *

இப்பொழுது ஒரு கூட்டத்திற்குச் செல்ல வேண்டும். ஆகவே மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

உன்
பாபு

ஸ்ரீமதி மீராபாய்,
பீஹார்.

# 70

திருத்தப்படாதது

சி. மீரா,

நாங்கள் கல்கத்தாவை நெருங்கிக் கொண்டிருக்கின்றோம். 23 ந் தேதி இரண்டாவது வேளை உணவுக்குப் பின் இதை நான் எழுதுகின்றேன். மூன்றாம் வகுப்புக் கப்பல் பயண அனுபவம் இம்முறைதான் உண்மையாக எனக்குக் கிட்டியது. சென்ற முறை,

எனக்குத் தனியிடம் ஒதுக்கியதோடு, இரண்டாம் வகுப்புக் குளிப் பறைகளை நான் உபயோகிக்க ஏற்பாடு செய்திருந்தார்கள். இந்த அனுபவத்தை 'யங் இந்தியா'வில் எழுதப் போகின்றேன்.

பாலில்லா உணவு தொடர்ந்து பயன் தருகிறது.

* * *

பர்மாவில் வசூல் $1\frac{1}{2}$ லட்சத்துக்கு மேல் கணிசமாக உள்ளது.

நாளை உன்னிடமிருந்து பல கடிதங்கள் கிடைக்குமென்று எதிர்பார்க்கின்றேன். இராஜேந்திர பாபுவையும் நாளைக் காண முடியுமென்று எண்ணுகின்றேன்.

தோல் பதனிடு வேலையில் சுரேந்திரா முனைந்திருக்கிறார். படிப் படியாக அவருக்கு அதில் அனுபவம் அதிகரித்து வருகிறது.

* * *

அன்பு,

பாபு

*23—3—'29*

அரோண்டா கப்பலில்

## 71

சி. மீரா,

* * *

கட்டிடத்தை விரிவாக்க நீ முயன்று வருவது கண்டு மகிழ்ச்சி. உன்னுடன் நிறையப் பேர் தங்கியிருந்தால், இடவசதியை அதிகரிப்பது அவசியம் தான்.

உணவு செரிப்பதில் சிறிது கோளாறு ஏற்பட்டாலும், உணவைத் தவிர்ப்பது எப்பொழுதும் நல்லது. அதனால் பலவீனம் ஏற்பட்டாலும் பரவாயில்லை. உணவு உட்கொள்ள இயலும்போது பலம் திரும்பும். ஆனால் உணவைச் செரிக்கவே உடல் மறுக்கும் போது, உணவே பலவீனத்தைத் தான் ஏற்படுத்தும்.

அன்பு,

பாபு

## 72

வேறொருவர் கையால் எழுதியது

சாபர்மதி,
*3—4—29*

சி. மீரா,

மேலும் உன் கடிதங்கள் கிடைத்தன. நோயாளிகள் அனைவரும் உன் உதவியை நாடி வருவது எனக்கு மகிழ்ச்சி அளிக்

கின்றது. என்ன செய்ய வேண்டுமென்பது உனக்குத் தெரியும். மருந்துகள் பற்றி நிலைமையை விளக்கவே இதை எழுதுகிறேன். விளக்கெண்ணெயும் அதிமதுர வேரின் பொடியும் கூட இந்திய கிராமங்களைப் பொறுத்தவரை விலை அதிகமான பொருட்கள் தான். இங்கிலாந்திலோ ஜெர்மனியிலோ செய்யப்பட்ட அதிமதுரவேர்ப் பொடிக்குப் பதிலாக நீ உபயோகிக்கக் கூடிய உள்நாட்டு மருந்துகள் இருக்கின்றன. அதிமதுர வேரையே நீ பயன்படுத் தலாம். அது நல்ல பலன் தருவது; ஒவ்வொரு கிராமத்திலும் எளி தில் கிடைக்கக் கூடியது. ஒரு குச்சிபோல் அது இருக்கும்; குச்சியி லிருந்து பசை போன்ற பொருள் கிடைக்கும். இதில் ஒரு தோலாவை, இளஞ்சூடான சிறிது பாலுடன் கலந்து, படுக்கப் போகும் பொழுதோ, இன்னும் உசிதமாக, அதிகாலையில் நான்கு மணிக்கோ உட்கொண்டால், நோயாளிக்கு மலச்சிக்கலே இராது. இதற்கு அதிகச் செலவாகாது. தண்ணீரிலும் கலந்து இதைச் சாப்பிடலாம். அதிமதுர வேரைக் காட்டிலும், விலை குறைவான சேனா இலைகள் எங்கும் கிடைக்கக் கூடியவை. சேனா இலைகளைப் பொடியாக்கியும் கொடுக்கலாம்; சாருகவும் கொடுக்கலாம். ஓரளவு நாணயமாகவும் திறமையாகவும் உள்ள மருத்துவர்கள் சிலரைக் கண்டுபிடித்து, அவர்கள் உதவியைக் கொண்டு இந்த எளிய மருந்துகளைப் பெற முடியும். ஒரு மருந்தை மட்டும் நீ வைத்துக் கொள்வது அவசியமென்று எண்ணுகிறேன்—மலேரியா சுரத்திற் குக் கொய்னு. இவற்றைத் தற்செயலாகத்தான் குறிப்பிடு கின்றேன். உன்மீது அதிகப் பளுவை நான் சுமத்த விரும்பவில்லை. இந்த மருந்துகளைப் பற்றி மேல்வாரியாக ஆராய்ச்சி செய்வதென்ருலும், அதற்காகும் நேரத்தைச் செலவு செய்து, உன் வேலையி லிருந்து கவனத்தைத் திருப்ப நீயும் விரும்பாமல் இருக்கலாம். ஆகவே நீயே நிதானித்து முடிவு செய்து, எது இயலுமென்று நீ கருதுகிருயோ, அதைச் செய்ய வேண்டும்.

அன்பு,

பாபு

## 73

ஹைதராபாத் (டெக்கான்)

*7—4—1929*

சி. மீரா,

உன் கடிதம் பம்பாயில் எனக்குக் கிடைத்தது. பெஜவாடா விற்கு நீ அனுப்பிய கடிதம் ஹைதராபாத்திற்குத் திருப்பி அனுப் பப்பட்டுள்ளது. இன்று மாலை ஹைதராபாத்திலிருந்து நான் புறப் படுகின்றேன்.

உன் கடைசிக் கடிதம் கவலையூட்டுவதாய் இருக்கிறது. உனக்கு விட்டுவிட்டு சுரம் வந்து கொண்டிருக்கின்றது. அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டாம்; ஆனல் அதே சமயத்தில் அதை

அசட்டை செய்துவிடாதே. அங்கு உன் உடல் நலனைக் கவனித்துக் கொள்ள இயலவில்லையென்றால், நீ இடத்தை மாற்றிக் கொள்ள வேண்டும். சில நாட்களுக்குக் கொய்னா சாப்பிடுவது நன்மை பயக்கக்கூடும். பாட்னாவிலிருந்தோ கல்கத்தாவிலிருந்தோ, வேறு எங்கு கிடைக்கின்றதோ அங்கிருந்து, எலுமிச்சை இனப் பழங்களைப் பெற ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும்.

கொசு வலையை ஒழுங்காக உபயோகிக்கின்றாய் என்று நம்புகிறேன். எண்ணெய் உனக்கு ஒத்துக் கொள்ளவில்லையென்றால், அதைச் சேர்த்துக்கொள்ள வேண்டாம். அங்கு நல்ல நெய் உனக்குக் கிடைக்காவிடில், நான் அனுப்பமுடியும். மொத்தத்தில், உன்னிடம் ஒப்படைக்கப் பட்டுள்ள சொத்தான உன் உடலை நன்றாகப் பேணி, அதற்குத் தேவையானதை உட்கொள்ள வேண்டும்.

ஆம், மென்மையான நூற்புக் கதிர்களைப் பொறுத்தவரை, என்னைத் தவிர, குஜராத்தில் வேறு யாரும் உனக்கு ஆதரவாயில்லை. என் ஆதரவும் அறியாமையினால் எழுந்ததென்றாலும், எனக்கு அது பிடித்திருப்பதால், அதை ஆதரிக்கின்றேன்.

என்னைப் பார்க்க சிலர் காத்துக் கொண்டிருக்கின்றனர்.

நான் ஸ்ரீமதி நாயுடுவின் வீட்டில் தங்கியுள்ளேன்.

அன்பு,

பாபு

## 74

*8—4—'29*

சி. மீரா,

(டெக்கான்) ஹைதராபாத்திலிருந்து நேற்று உனக்கு ஒரு கடிதம் அனுப்பினேன். பெஜவாடாவுக்கு அருகே வந்துகொண்டிருக்கின்றோம்; ஆனால் இன்னும் தூரம் இருக்கிறது. தந்தி அலுவலகம் கூட இல்லாத ஒரு சிற்றூரில் இருக்கின்றோம். பெஜவாடாவிலிருந்து தபாலை இங்கு கொண்டுவந்திருக்கிறார்கள். 2-ம் தேதி, 3-ஆம் தேதி, நீ எழுதிய இரு கடிதங்களும் இங்கு கிடைத்துள்ளன. உனக்கு முற்றிலும் குணமாகாவிடில், வேறு ஊருக்கு நீ செல்லவேண்டும். கடலோரமாகவோ, மலைச்சாரலிலோ, உள்ள ஊருக்கு நீ செல்லலாம்.

ஜூன் மாதம் வரை உன்னால் சமாளித்துக்கொள்ள முடியுமானால், நீ என்னுடன் அல்மோராவிற்கு வரக்கூடும். ஜூன் மாதத்தில் அல்மோரா செல்லும் திட்டம் உண்டு என்று எண்ணுகிறேன்.

பலவீனமான உன் நிலையில்[1] உன்னை மூன்றும் வகுப்பில் ஏற்றிச் செல்லத் துணியமாட்டேன். ஆகவே நீ இரண்டாம் வகுப்பில் தான் வரவேண்டும். ஆனால் இப்போது, இது ஆகாயத்தில் கோட்டை கட்டுவதைப் போல் தான். உடனடியாகச் செய்ய வேண்டியது, உன் உடலைத் தேற்றிக் கொள்வது. பழங்களுக்காகத் தாராளமாகச் செலவு செய்வது, உண்மையில் சிக்கனத்திற்கு ஒரு வழியேயாகும். பசுங்கனிகளைச் சாப்பிடாமல், உடல் நலனை வளர்க்க முடியாது. எலுமிச்சை இனப் பழங்கள் பழங்களிற் சிறந்தவை. ஒரு எலுமிச்சை, ஆறு ஆரஞ்சுப் பழங்களுக்குச் சமமானது என்று டாக்டர் இராஜபாலி கூறுகிறார். அதில் எனக்கும் நம்பிக்கையுண்டு. ஆனால் உனக்கு என்ன பழங்கள் விருப்பமோ, அவற்றையெல்லாம் சாப்பிடு. பசும் இலைகளைப் பச்சையாகச் சாப்பிடுவது நல்லது. ஆனால் அளவோடு சாப்பிட வேண்டும். வேளைக்கு ஒரு தோலாவிற்கு மேல் சாப்பிடக் கூடாது. அதுவும் உடம்புக்கு ஒத்துக் கொண்டால்தான் சாப்பிட வேண்டும். ஒரு வேளை எண்ணெய் கூட உனக்கு ஒத்துக் கொள்ளாமல் இருக்கலாம். குறைந்த செலவில் உணவு சாப்பிடுவது உன் முக்கியக் குறிக்கோளாக இருக்கக்கூடாது. ஆண்டுக்கு ஒரு முறை மலைவாசம் செய்யும் அவசியமில்லாமல், கிராமத்தில் வாழக் கற்றுக் கொள்வதே முக்கியமாக இருக்க வேண்டும். ஆகவே, அதனால் எவ்வளவு அதிகச் செலவு ஏற்பட்டாலும் பொருட்படுத்தாமல், உன் பரிசோதனைகளில் வெற்றி காண நீ முனைய வேண்டும். தந்தி அலுவலகம் உள்ள ஊருக்கு வந்து சேர்ந்ததும், உனக்கு ஒரு தந்தி அனுப்பப் போகின்றேன். இரு கோடியிலும் தந்தி அலுவலகம் இல்லாதிருப்பது எவ்வளவு நல்லது! தந்தி அனுப்புவது அவசியமில்லை என்பதை நான் அறிவேன். உண்மையில் நான் ஏழையாக இருந்தால், தந்திக்காகச் செலவு செய்ய முடியாது. பொறுமை இழக்காதிருந்து, இறைவனிடம் முழு நம்பிக்கை கொண்டிருந்தால், நான் தந்தி அனுப்பக் கூடாது. ஆனால் இயந்திரம்போல் நான் செயல்படப் போவதில்லை. அந்த நம்பிக்கை வந்தவுடன், நான் தந்தி அனுப்புவதையே நிறுத்திக் கொள்வேன். தற்போதைக்கு, நீ நோய்வாய்ப்பட்டிருப்பது பற்றிக் கடிதங்கள் வந்த போதும், தந்தி அலுவலகம் இங்கில்லாத நிலையில், நான் பதட்டமடையாமல் இருப்பதே போதும்.

உணவில் நான் செய்து கொண்டுள்ள மாறுதல்கள், மூன்றும் வகுப்புப் பயணம், இடைவிடாது நிகழ்ச்சிகளில் கலந்து கொள்வது, இவையனைத்தும் எனக்கு நன்றாக ஒத்துக் கொண்டு விட்டன. இவ்வளவு சுமையில் என் உடல் முறிந்து விடாமல் இருப்பது எனக்கே வியப்பாக இருக்கின்றது. அவ்வப்போது வேண்டிய அளவு ஓய்வு எடுத்துக் கொள்கிறேன். நினைத்த மாத்திரத்தில் தூங்க எனக்குள்ள ஆற்றல் என்னைக் காப்பாற்றி வருகிறது.

---

1. என்னைக் கடுமையான மலேரியா சுரம் தாக்கியிருந்தது. கிராமம் முழுவதும் மலேரியா தொத்து நோயாகப் பரவியிருந்தது. ஒன்றிரண்டு பேராவது மலேரியாவால் தாக்கப்படாத வீடே இல்லை.

ஆனல் உண்மை என்னவென்றல், இந்த யாக்கையை நான் தாங்கி நிற்க வேண்டுமென இறைவன் விரும்பும் வரை, அவர் என்னைக் காப்பாற்றுகின்றார். அவர் தேவை நிறைவான மறுகணமே, நான் என்ன தான் முன்னெச்சரிக்கையாக நடவடிக்கை எடுத்துக் கொண்டாலும், அது என்னைக் காக்கப் பயன்படாது.

பூகோளப் படத்தில் பெஜவாடா இருக்குமிடத்தை நீ கண்டு கொள்ளலாம். இன்னும் ஐந்தாறு மாவட்டங்களுக்கு நான் செல்ல வேண்டியிருக்கிறது.

அன்பு,

பாபு

## 75

சி. மீரா,

நேற்று நான் உனக்கு ஒரு கடிதம் எழுதினேன். இன்று நீண்டதொரு தந்தி அனுப்பியுள்ளேன். இப்போது நோய் முற்றிலும் குணமாகி விட்டது அறிந்து மகிழ்கின்றேன். ஆனல் அடிக்கடி வரும் சுரம், நீ அசட்டை செய்யக்கூடாத அபாய எச்சரிக்கையாகும்.

ரோலண்டின் கடிதத்தின் மொழி பெயர்ப்பு ஆமதாபாத்தில் கிடைத்ததென்று எண்ணுகிறேன். கல்கத்தாவில் கிடைக்கவில்லை என்பது நிச்சயம். அவருக்கு அனுப்புவதற்குப் பதிலும், மொழி பெயர்ப்பும் விரைவில் அனுப்புவேன்.

உன் உடலுக்கோ நரம்புகளுக்கோ அதிக அலுப்பைத் தேடிக் கொள்ளாதே.

என் முடிவான பயணத் திட்டத்தை உனக்கு இன்னும் அனுப்புவதற்கில்லை. எந்தெந்த ஊர்களுக்கு என்னை அழைத்துச் செல்வதென்று வரவேற்புக் குழு இன்னமும் முடிவு செய்யவில்லை. ஆகவே பெஜவாடாவைத்தான் இன்னமும் தலைமையிடமாக அமைத்துக் கொண்டிருக்கிறோம்.

அன்பு,

பாபு

*9-4-'29*

உன் சுரம் காரணமாக 6ந் தேதி உண்ணாவிரதமிருக்க நீ தவறி விட்டாய். என் நிகழ்ச்சிகளின் கெடுபிடியில் உண்ணாவிரதம் பற்றிய நினைப்பு முன்பு இருந்த போதிலும் அதை மேற்கொள்ள நானும் தவறி விட்டேன். இந்த அவசரமும் கெடுபிடியும் நல்லதல்ல. இந்த மறதி, கெட்ட அறிகுறி.

# 76

அஞ்சலட்டை

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. தந்தி எதுவும் வராததால், நேற்று சுரம் சற்று ஏறியது தற்காலிகமானது தானென்று எண்ணு கிறேன். உடலை அதிகம் அலட்டிக் கொள்ளாமல், கவனமாயிரு. நான் நலமாக இருக்கின்றேன்.

அன்பு,

பாபு

*10-4-'29*

# 77

சி. மீரா,

நான் இடைவிடாது உன்னைப்பற்றி எண்ணிக் கொண்டிருக் கின்றேன். உடல் இவ்வளவு மெலிவாக இருப்பது நல்லதல்ல. உன் பெரிய உடல் கூட்டைத் தாங்கிக் கொள்ளும் அளவுக்கு உடம்பில் சதை இருக்க வேண்டும். ஆனால் இதில் அவசரப்பட வேண்டிய அவசியமில்லை. உனக்கென்று ஒரு தனி அறை ஒதுக்கித் தரவேண்டுமென்று வற்புறுத்து. அப்பொழுதுதான் நீ தனியாக இருக்க விரும்பும்போது அறையில் அடைத்துக் கொண்டு ஒதுங்கியிருக்கலாம்.

அன்பு,

பாபு

*12-4-'29*

# 78

சி. மீரா,

உன் இரு கடிதங்களும் கிடைத்தன. எனக்கு எதுவும் நேரிட்டால், உனக்குத் தந்தி மூலம் தெரிவிப்பேன் என்று உறுதி கூறவிரும்புகிறேன். ஆகவே நான் உறுதிப்படுத்தினால் ஒழிய, வதந்திகள் ஆதாரமற்றவை என்று நீ தள்ளிவிட வேண்டும்.

உன் உடலைச் சீராக்கி, சாத்தியமானால், நோயின் தாக்குத லுக்கு அது இலக்காகாத வகையில் வலுவாக்க வேண்டும். ஆனால் இதைப்பற்றிக் கூடக் கவலைப்பட்டு அலட்டிக் கொள்ளக் கூடாது.

நீ சித்திரித்துள்ள மக்கள் நிலை எனக்குப் புதிதானதொன்று அல்ல. அவர்கள் நிலை பற்றி ஏன் நான் பொறுமை இழக்கின்றேன் என்று இப்பொழுது உன்னல் புரிந்து கொள்ள முடியும்.

இன்று மேலும் எழுதுவதற்கில்லை. இன்னும் பெஜவாடாவைத் தான் தலைமையிடமாகக் கொண்டுள்ளோம்.

அன்பு,

பாபு

*15—4—'29*

இன்று மசூலிப்பட்டணத்தில் உள்ளேன்.

## 79

*20—4—'29*

(தந்தி)

*மீராபாய், காதி கடை, மதுவாணி.*

உன் தந்தி. பலவீனம் நீடித்தால் அம்பாலால் ஆலைக்கோ உசிதமான வேறிடத்திற்கோ சென்று ஓய்வெடுக்க வேண்டும். இராஜேந்திர பாபுவையோ, அவர் இல்லாவிடில் லக்ஷ்மிபாபுவையோ, கலந்து முடிவு செய். இறுதி முடிவை பெஜவாடாவுக்குத் தெரிவி.

பாபு

## 80

*சி. மீரா,*

ஆசிரமம்* நிலை பெறுவதற்கு முன்பே அதைக் கலைக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது வருந்தத்தக்கது. ஆனல் உன் இயற்கையான பலவீனங்களை எதிர்த்துப் போராட முடியாது. இட்ட வித்து பலன் தருவது நிச்சயம். உன்னை அலட்டிக் கொண்டு களைப்படையாதே. நேரில் நாம் சந்திக்கும் போது, மேலும் விவாதிப்போம்.

அன்பு,

பாபு

*20—4—'29*

---

* சாத்வான் நிலையம்.

## 81

*தந்தி* *25—4—'29*

*மீராபாய், காதி கடை, முசாபர்பூர்.*

ஆசிரமக் கவலேயிலிருந்து நீ விடுவித்துக் கொண்டது குறித்து மகிழ்ச்சி. அம்பாலால் ஆலேக்குச் செல்கிருயா? பானுவுக்குத் தந்தி மூலம் பதில் அனுப்பு.

பாபு

## 82

*வேருெருவர் கையால் எழுதியது.*

தூனி, மே 2, *1929*

*சி. மீரா,*

நான் விரும்புமளவு உனக்கு அதிகம் எழுத சில நாட்களாக இயலவில்லே. எனக்குக் கிடைக்கும் சிறிது அவகாசத்தை, பல நாட்களாகத் தங்கிவிட்ட வேலேயை முடிக்கப் பயன்படுத்தி வருகிறேன்.

ரோலண்டுக்கு என் பதிலே இத்துடன் அனுப்பியுள்ளேன். மூலத்தையே நான் திருத்தவேண்டுமென்று நீ நிணைத்தாலொழிய, அதை மொழிபெயர்த்து அவருக்கு அனுப்பிவிடு.

என்னுடைய விரிவான பயணத்திட்டம் உனக்கு இதற்குள் கிடைத்திருக்கும். *28*ந் தேதி வரை ஒவ்வொரு நாளும் நான் எந்த ஊரில் இருப்பேன் என்பதை அதிலிருந்து தெரிந்து கொள்ளலாம். முசாபர்பூரிலிருந்து உன் கடிதத்தை ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன். இழந்த பலத்தை மீண்டும் பெறுமளவிற்கு உன் உடல் நன்கு தேறிவிட்டது என்பதை உறுதிப்படுத்திக் கொள்ள விரும்புகிறேன்.

அன்பு,

பாபு

## 83

*சி. மீரா,*

உன் கடிதமும் உன் தந்தியும் கிடைத்தன. மறுத்துப் பதில் அனுப்ப வேண்டியிருப்பது எனக்கு மனவேதனே தருகிறது.

இரண்டு இரவுகள் சேர்ந்தாற் போல் ஓரிடத்தில் நான் தங்குவ தில்லை. நாளுக்கு நாள் வெப்பம் அதிகரித்து வருகிறது. ஓய்வுக்கு வசதியில்லை. என்னைத் தவிர மற்றவர்களுக்கு உணவு வசதி யும் திருப்திகரமாயில்லை. நான் பால் சாப்பிடாததால், நல்ல பாலும் கிடைக்க இங்கு ஏற்பாடு செய்யப்படவில்லை. பழங்கள் சாப்பிடு வதை நான் குறைத்துக் கொண்டிருப்பதால் ஆரஞ்சுகளும் கிடைக்கவில்லை. இங்கிலையில் பலவீனமாய் உள்ள உன்னை இங்கு வரவழைப்பது நல்லதல்ல என்று நினைக்கின்றேன். மோட்டார் வசதி செய்ய வரவேற்புக் குழுவுக்கும் சிரமமாயிருக்கும். நெல்லூருக்குப் பின் பயணமும் மிக அலுப்பாக இருக்கும். உனக்கு நான் செய்து தரவேண்டிய வசதிகளை, என்னைச் சுற்றி யுள்ள மற்றவர்களுக்கு அதிகத் தொந்தரவில்லாமல் செய்து தர முடியாது. நான் அவர்களுக்குத் தொந்தரவு தருவதை நீ விரும்ப வும் மாட்டாய். ஆகவே மே 23 ந் தேதி வரை நீ பொறுத்திருக்க வேண்டும். அதற்குப் பின், உன்னை வரவழைத்து மகிழ்ச்சியுடன் பொறுப்பேற்றுக் கொள்வேன். இதனால், இங்கு எனக்கே அதிக வசதிக் குறைவாக இருக்கிறதென்று நீ எண்ணிவிடாதே. என்னைக் கவனித்துக் கொள்ள எத்தனையோ பேர் காத்துக் கொண்டிருக் கின்றனர். மேலும், எனக்குத் தேவையானவற்றை நானே கேட் டுப் பெற்றுக் கொள்கிறேன். இச்சுற்றுப் பயணம் முழுவதும் நான் சமாளித்துக் கொள்ள வேண்டுமானால், அவ்வாறு செய்தால் தான் முடியும். ஆகவே என்னைப் பற்றி நீ ஒரு சிறிதும் கவலைப்பட வேண்டாம். என் உடல் நலன் முதல் தரமாக உள்ளது. ஆனால் என்னைக் கவனித்துக் கொள்வதே, இங்குள்ளவர்களுக்குப் பெரிய பொறுப்பாகும். இப்பொழுது நான் புறப்படுவதற்கு எல்லோரும் காத்துக் கொண்டிருக்கின்றனர்.

அன்பு,

பாபு

காலை 5-30 மணி

5-5-'29

# 84

அஞ்சலட்டை

சி. மீரா,

வெகு தொலைவில் உள்ள ஒரு சிற்றூரில், பங்காவின் அடியில் உட்கார்ந்து எழுதுகின்றேன். ஆனால் வெப்பக் காற்று தான் வீசிக் கொண்டிருக்கிறது. 80 மைல் தூரப் பயணத்திற்கு 5-30 மணிக்கே புறப்பட வேண்டியுள்ளது. இமாம் சாஹிபினால் இந்த அலுப்பைத் தாங்க முடியவில்லை. எப்படியோ சமாளித்து வருகிறார். பிரபாவதி

யும் வெப்பக் கொடுமையால் வேதனைப்படுகிறார். இந்தக் கடைசி பத்து நாட்களை எப்படியாவது தாங்கிக் கொள்ள வேண்டுமே என்று இறைவனை இறைஞ்சி வருகின்றேன். நம் சந்திப்பில் தாமதம் ஏற்பட்டதன் அதிர்ச்சியை நீ சமாளித்துக் கொண்டாயென்று நம்புகிறேன். தாமதத்துக்குப் பின் நம் பம்பாய் சந்திப்பு நமக்கு மிகுந்த மனநிறைவு தரும். எனக்குத் தேவையானவற்றை நான் வற்புறுத்திக் கேட்டுப் பெற்று வருகிறேன். ஆகவே என் நலனுக்குக் குறைவில்லை.

அன்பு,

பாபு

*11—5—'29*

ஸ்ரீமதி மீராபாய்,
சதாகத் ஆசிரமம்,
திகாகாட் அஞ்சல்,
பாட்னா.

## 85

சி. மீரா,

உனக்கு அனுப்பப்பட்ட விரிவான பயணத்திட்டம் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன். இன்று உன்னிடமிருந்து கடிதம் வரவில்லை. வித்யா பீடத்தில், உனக்குப் பிடித்தமான வேலை நிறைய இருக்குமென்று எண்ணுகின்றேன்.

டிலைட்டின் (De Ligt) இரண்டாவது பகிரங்கக் கடிதத்திற்குப் பதில் கூறும் வகையில், நான் 'யங் இந்தியா'வில் எழுதியுள்ள கட்டுரை பற்றி நீ உன் கருத்தைத் தெரிவிக்க வேண்டும். என் உணவில் ஒரு மாறுதல் செய்துள்ளேன். நாம் விரைவில் சந்திக்கப் போவதால், அதைப் பற்றி இப்பொழுது எழுதப் போவதில்லை. பரீட்சார்த்தமாகத் தான் இந்த மாறுதலைச் செய்துள்ளேன். எனக்குப் பிடித்தமாயிருந்ததால், இம் மாறுதலைச் செய்தேன். அதுபற்றி நன்கறிந்த ஒருவரைச் சந்திக்க நேர்ந்ததால், அவருடன் பேசிவிட்டுத் தான் செய்தேன். இதில் கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை. மாறுதல் எனக்கு ஒத்துக் கொள்ளவில்லையென்றால், அதைக் கைவிடுவேன்.

அன்பு,

பாபு

நெல்லூர்,
*13—5—'29*

## 86

[பயணத்தின் அலுப்பு கடுமையாக இருந்ததால் பாபுவின் உடல் நலன் கெட்டு விடுமோ என்ற கவலை மேலிடவே, நான் அவசரமாக அவர் இருக்குமிடத்திற்குச் சென்று விட்டேன். அதனால் மீண்டும் நல்ல திட்டுதல் கிடைத்தது. எப்பொழுதுமே பாபு திட்டினால் நான் மன முடைந்து விடுவேன்.]

*திருத்தப்படாதது*

*சி. மீரா,*

இரயில் இரண்டு மணிநேரம் தாமதமாக வந்ததால், நிகழ்ச்சித் திட்டம் முழுவதிலும் குழப்பம் ஏற்பட்டு விட்டது. பிற்பகல் ஓய்வு நேரத்தை விட்டுக் கொடுத்து, இரவில் தங்குமிடத்தில் குளித்துக் கொள்ளலாமென்று ஒத்திப் போட்டதால், ஓரளவு தாமதத்தை ஈடு செய்ய முடிந்தது. இரவு *9-30* மணிக்குத் தான் நூற்பை முடித்தேன். இப்பொழுது இரவு *10* மணியாகிவிட்டது. ஆனாலும் இதை எழுதி முடித்தபின் தான் தூங்கச் செல்வேன்.

நாள் முழுவதும் உன்னைப் பற்றி எண்ணிக் கொண்டிருந்தேன் என்பதை உனக்குச் சொல்வதற்காகத் தான் இந்த நீண்ட முகவுரை. இப்பொழுது நீ என்னுடன் இல்லாத நிலையில், உன்னை வருத்தப்படுத்தி விட்டேனே என்ற மனவருத்தம் அதிகமாகியுள்ளது. எந்தக் கொடுங்கோலனும், தான் பிறருக்கு உண்டாக்கும் துன்பத்திற்குத் தானே வேதனை அனுபவித்தே தீருவான். தானே அதிக வேதனையுறாமல், பிறரை வருத்தியுள்ள காதலனும் இருக்க முடியாது. அது தான் என் நிலையும். நான் செய்ததைத் தவிர்த்திருக்க முடியாது. ஆத்திரப்பட்டுவிட்டது குறித்துத்தான் வருந்துகிறேன். ஆனால் நான் எவர்களிடம் அதிகப் பிரியம் கொண்டுள்ளேனோ, அவர்களிடம் இப்படித்தான் கடுமையாக நடந்துவிடுவதுண்டு. ஆனால் இப்பொழுது நீ இங்கில்லாத வேளையிலே, ஈடற்ற உன் விசுவாசத்தை எண்ணி வியக்காமல் வேறெதையும் எண்ணவே இயலவில்லை. உன்னுடைய மோகம் என்று நான் கருதுவதை இறைவன் போக்க வேண்டும். அல்லது என் கண்களைத் திறந்து, எனக்குத் தெளிவு ஏற்படச் செய்து, என் தவறுதலை நான் உணர இறைவன் எனக்கு உதவவேண்டும்.

நீ நலமாக இருக்க வேண்டும்.

அன்பு,

பாபு.

பண்டா,

*20—11—'29*

## 87

சி. மீரா,

உன் மூன்று கடிதங்களும் கிடைத்தன. என்னை எடை போட்டதில், 100½ பவுண்டு இருந்ததாகக் கண்டார்கள். நீ கடைசியாகக் குறிப்பிட்டிருந்தபடி,[1] என் எடை 89 பவுண்டு 15 தோலா. ஆகவே மொத்தம் 11 பவுண்டு கூடியிருக்கின்றேன். என் பாடு யோகம் தான்! மற்றப்படியும், எல்லாம் நலம்.

அன்பு,
பாபு

சபர்மதி
26—11—'29

## 88

[முந்திய கடிதத்துக்கும் இக்கடிதத்துக்கும் இடையே, என்றுமே மறக்க முடியாத சில நிகழ்ச்சிகள் சபர்மதியில் நடந்தன. தேசியப் போராட்டம் நடத்தியே தீர வேண்டுமென்ற நிலை ஏற்பட்டதன் பயனாக அப்போராட்டத்திற்கு எங்களனைவரையும் ஆயத்தம் செய்யும் பணியில் தமது நேரம், சக்தி முழுவதையும் பாபு ஈடுபடுத்தினர். ஆக்கப் பணியிலே ஆர்வமும் ஆன்ம உறுதியும் ஆசிரமத்தை ஆட்கொண்டன. காலையிலும் மாலையிலும் பிரார்த்தனைக் கூட்டங்களில் பாபு பேசினர். இலட்சிய வேகம் ஆசிரமம் முழுவதும் குடிகொண்டது. கடற்கரையிலே உப்புக் காய்ச்சி, உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தைத் தொடங்க, வரலாற்றிலே அழியாத இடம் பெற்றுவிட்ட தண்டி யாத்திரையை மேற்கொள்ள பாபு ஆசிரமத்திலிருந்து புறப்பட்ட மறுநாள் இக்கடிதம் எழுதப்பட்டது. ஆயிரமாயிரம் ஆண்களும் பெண்களும் குழந்தைகளும் ஆமதாபாத்திலிருந்து இரவோடு இரவாய் வந்து, காலை வரை ஆசிரமம் முழுவதையும் சுற்றிக் காவல் காத்து வந்தனர். சாத்துவிக எழுச்சி என்று பாபு கடிதத்தில் குறிப்பிடுவது இதைத்தான். பாபுவைக் கைது செய்ய அரசாங்கம் தீர்மானித்து விட்டதென்ற வதந்திகள் எங்கும் பறந்தன. ஆனல் கணக்கிலடங்கா அந்த பக்தர்கள் கூட்டத்தின் முன்னிலையில் பாபுவைக் கைது செய்யும் துணிச்சல் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கே ஏற்பட்டிராது. அன்றிரவு பாபு ஒருவர் தான் தூங்கினர் என்றெண்ணுகிறேன். எப்பொழுதுமே அவரைக் கைவிடாத இனிய துயிலில் அவர் அமைதியாக ஆழ்ந்திருந்தார். மறுநாள் காலை, தமது சிறிய சீடர் குழாத்துடன் பாபு யாத்திரையைத் தொடங்கிய போது, இம்மக்கள் திரள் பல மைல் தூரம் அவருடன் அணிவகுத்துச் சென்றது].

சி. மீரா,

வாய்ப்பில்லாமல் போவதற்கு முன்பு,[2] நீ கடிதம் எழுத வேண்டும். அதுவும் விவரமாக எழுத வேண்டும்; இருக்கும் அவ

1. ஒரு பதிவேட்டில் நான் பாபுவின் எடையைக் குறித்து வைப்பதுண்டு.
2. பாபு எந்த நிமிடமும் கைது செய்யப்படுவார் என்று எதிர்பார்த்திருந்த வேளை.

காசத்தில் எவ்வளவு விவரமாக எழுத முடியுமோ, அவ்வளவு எழுத வேண்டும். நேற்று நாம் கண்ட எழுச்சி, சாத்துவிகத்திற்கே ஒரு வெற்றி. போராட்டத்தின் போது, எல்லா இடங்களிலும், எல்லாக் கட்டங்களிலும், இவ்வளவு எழுச்சியைக் காண முடியாது என்பதை நான் அறிவேன். ஆனல் அது மிகச் சிறந்த, மகத்தான ஆரம்பமாக அமைந்துவிட்டது.

நீ பொறுமையாக இருக்க வேண்டும். எது குறித்தும் கவலை கொள்ளக் கூடாது. நீ விரும்பும்படி நடக்கத் துணிவற்றவர்களிடமும் நீ அனுதாபம் காட்ட வேண்டும். உன் தலையாய வேலை, பெண்களிடையேயும் குழந்தைகளிடையேயும் தான்.

ரெஜினல்ட்[1] அசட்டுத் துணிச்சலில் எதுவும் செய்துவிடாமல், தன்னை நன்ருகக் கவனித்துக் கொள்ளும்படி பார்த்துக் கொள்.

ஒரு சிறிதும் குழப்பமின்றி எல்லாம் ஒழுங்காக இருக்க வேண்டும்.

உன் நாட்குறிப்புப் புத்தகத்தில் ஒழுங்காக எழுதத் தவறி விடாதே.

என்னைப் பற்றிக் கவலையே கொள்ளாதே. அவருக்கு நான் தேவையாயிருக்கும் வரை, அவர் என்னை நலமாகக் காப்பார்.

அன்பு,

பாபு

*13—3—'30*

## 89

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. என்னைக் காணத் துடித்துக் கொண்டிருந்த மலர்களும் வந்து சேர்ந்தன. இதுவரை எனக்கு உண்டான அலுப்பு, என் உடலுக்கு நல்லதாகவே தோன்றுகிறது. அதன் பயனுக ஒரு முறைக்குப் பதிலாக, இருமுறை பால் அருந்துவதுடன், நிறைய பழமும் சாப்பிடுகின்றேன். சென்ற ஐந்து நாட்களின் களைப்பின் காரணமாக, இன்று பகலில் ஐந்து தடவை தூங்கி விட்டேன். அடுத்த வார யாத்திரையையும், வேறெதுவும் எனக்குக் காத்திருந்தால் அதையும், தாங்கிக் கொள்ளும் அளவுக்கு நல்ல பலம் வந்துவிட்டது. ஆகவே என்னைப் பற்றிக் கவலைப்படாதே. இப்பொழுது அங்கு மனநிறைவு பெறும் நிலைக்கு நீ வந்திருக்கின்ருய். இந்தப் போராட்டம் நம் அனைவருக்குமே நன்மை பயக்

1. ரெஜினல்ட் ரைனல்ட்ஸ்

கும் வாய்ப்பாக அமைந்துவிட்டது. நம்மை நாமே தூய்மைப்படுத்திக் கொள்ள இது ஒரு வாய்ப்பு; அவ்வாறு அமைவதுதான் அதன் அழகு. நாம் தளர்வுக்கு ஒரு போதும் இடம் தராமல் இருக்க வேண்டும்.

அன்பு,

பாபு

*மார்ச்சு, 17, 1930*

# 90

*சி. மீரா,*

* * * *

யங் இந்தியாவில் உன்னைப் பற்றி நான் ஒரு பத்தி எழுதியிருப்பதை நீ பார்ப்பாய்.

இப்பொழுது நீ பின்பற்றி வரும் வேலைக்கிரம அட்டவணையைத் தெரிவி. **

பெண்களின் பிரார்த்தனை தினமும் பாடப்படுகிறதா?

நான் என்னுடைய யாத்திரையை வெகு நன்றாகத் தாங்கிக் கொண்டிருக்கின்றேன். ஆனால் 15க்கு மேற்பட்டவர் சுகமில்லாமல் இருக்கின்றனர். நாளை நலமாகி விடுவார்கள் என்று எதிர்பார்க்கிறார்கள். அவர்கள் அனைவரும் ப்ரோச்சில் தங்கியிருக்கின்றனர். நாளை காலை அங்கு நாங்கள் போய்ச் சேருவோம்.

இப்பொழுது எனக்குத் தூக்கக் கலக்கமாக இருக்கின்றது.

அன்பு,

பாபு

டிரெல்ஸா,
*25—3—'30*

# 91

*சி. மீரா,*

* * * *

நான் நல்ல சுகமாக இருக்கின்றேன். 2 பவுண்டு எடை கூடியிருக்கிறது. பிரோச்சில் எங்கள் அனைவருடைய எடையையும் எடுத்தார்கள்.

அன்பு,

பாபு

## 92

சி. மீரா,

பென்சிலில் கடிதங்கள் எழுதுவதில் எனக்கு அருவருப்பு. ஆனால் பிரார்த்தனைத் திடலில் மற்றவர்கள் வருவதற்குக் காத்திருக்கும் வேளையில் இதை எழுதுகிறேன். இப்பொழுது நேரம் 4-20ஐ நெருங்கிக் கொண்டிருக்கிறது

* * * *

ரெஜினல்ட் இப்போது எப்படி இருக்கிறார் ?

நான் ஊர் ஊராகச் சென்று கொண்டிருக்கின்றேன். நூற்பதில் முழுக் கவனம் செலுத்தி வருகிறேன். நூற்காமல், அன்னியத் துணியை பகிஷ்காரம் மட்டும் செய்வது, ஆபத்தில் சிக்குவதாகும். அனைவரும் நூற்கச் செய்வதற்கு ஒரே சாதனம், தக்ளி. மேலும் அதிகக் கதரை உற்பத்தி செய்ய, இயன்றதனைத்தையும் நீ செய்ய வேண்டும்.

உன்னைப் பற்றிய ஒரு பத்திரிகைக் குறிப்பை உனக்கு அனுப்பியுள்ளேன்.

அன்பு,

பாபு

*21—4—30*

மையால் எழுதப்பட்ட பகுதி, பிரார்த்தனைக்குப் பின் எழுதப் பட்டது.

## 93

சி. மீரா,

உன் கடிதமும் இப்பொழுதுதான், மகாதேவ் பற்றிய செய்தி வந்த அதே தபாலில், வந்து சேர்ந்தது.

* * *

தெளிவான முடிவு ஏற்படுத்தக் கூடிய இறுதி நடவடிக்கை எடுப்பது பற்றிச் சிந்தித்து வருகிறேன். ஆனால் அது முழுதும் ஆண்டவன் கையில் இருக்கிறது.

அன்பு,

பாபு

## 94

என் அன்புள்ள மீரா,

உன் நீண்ட காதல் கடிதம் வந்து சேர்ந்தது என்று தெரிவிக்கவே இதை எழுதுகிறேன். இப்பொழுது இரவு பத்து மணியாகப் போகிறது. ஆகவே தற்போதைக்கு என் நல்லிரவு வாழ்த்துக்கள்.

அன்பு,

பாபு

மௌன இரவா? மௌன நாளா? நடுநிசியுடன் மௌன நேரம் முடிகிறது.

## 95

[பாபு கைது செய்யப் பட்டுவிட்டார்.]

சி. மீரா,

சிறையிலிருந்து நான் எழுதும் முதற் கடிதம் உனக்குத்தான். அதுவும் மௌன நாளன்று எழுதுகின்றேன்.

இங்கு நான் மகிழ்ச்சியுடனேயே இருக்கின்றேன். முன்பு ஓய்வெடுக்கத் தவறியதற்கெல்லாம் சேர்த்து, இப்பொழுது ஓய்வெடுத்துக் கொண்டிருக்கின்றேன். இரவு நேரம் நல்ல குளிர்ச்சியாக இருக்கிறது. திறந்த வெளியில் படுத்துத் தூங்குவதற்கு என்னை அனுமதித்திருக்கின்றனர். அமைதியாகத் தூங்க முடிவதால், உடலுக்கு உற்சாகமாயிருக்கிறது. உணவு முறையில் நான் செய்துள்ள மாற்றம் பற்றி என் பொதுக் கடிதத்திலிருந்து நீ தெரிந்து கொள்ளலாம்.

மிகுந்த அக்கரையுடன் அனுப்பியுள்ள சர்க்கா, எனக்கு வந்து சேர்ந்துள்ளது; மிகுந்த உற்சாகம் அளித்துள்ளது. அதற்கு வேண்டிய பொருள்களனைத்தும் அத்துடனே சேர்த்து கவனமாக அனுப்பப்பட்டுள்ளன. சர்க்காவைக் கொண்டு வந்த நண்பர்கள் பஞ்சடிக்கும் வில்லை வழியில் தொலைத்துவிட்டதாகச் சிறை அதிகாரி கூறுகிறார். உடனடியாக அது வேண்டுமென்ற அவசியமில்லை. தற்போதைக்கு எனக்கு வேண்டிய அளவு பஞ்சுப் பட்டைகளைத் தான் நீ அனுப்பியிருக்கின்றாயே.

இயன்ற அளவு நேரம், தக்ளிக்கு ஒதுக்கியுள்ளேன். அதில் என்னால் வேகமாக நூற்க இயலவில்லை. ஒரு மணி நேரத்தில் முப்பது சுற்றுகள் கூடச் சுற்ற முடியவில்லை. முதல் நாள் 160 சுற்றுகள் நூற்கச் சுமார் ஏழு மணி நேரமாயிற்று. நூற்று முடிப்

பதற்குள் ஒரே அலுப்பாகிவிட்டது. இன்னும் வேகமாக நூற்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

உன் அன்னையிடமிருந்து, அவர்கள் உடல் நலன் பற்றியும் மற்றவை பற்றியும் நல்ல செய்தி கிடைத்திருக்குமென்று நம்புகிறேன்.

சிறை அதிகாரிகள் மிகுந்த பரிவுடனும் அக்கறையுடனும் என்னைக் கவனித்து வருகின்றனர்.

அன்பு,

பாபு

எரவாடா,
*12—5—'30*

ஆசிரமத் தபால் எனக்கு ஒழுங்காகக் கிடைக்க வசதி இருக்குமென்று எண்ணுகிறேன். ஆகவே நீ ஆசிரமத் தபாலுடன் சேர்த்து வாரமொரு முறை கடிதம் எழுதலாம்.

# 96

*திருத்தப்படாதது.*

*சி. மீரா,*

சென்ற மௌன தினத்தன்று நான் எழுதிய கடிதம் உனக்குக் கிடைத்திருக்குமென்று எண்ணுகிறேன். அது வெள்ளிக்கிழமை தான் அஞ்சலில் சேர்க்கப்பட்டதென்று அஞ்சுகிறேன். இக் கடிதம் சீக்கிரம் தபாலில் சேரும். இன்று ஞாயிற்றுக்கிழமை; இரவு எட்டு மணிக்கு மேலாகிவிட்டது. ஞாயிற்றுக்கிழமை மாலை மூன்று மணியிலிருந்து வழக்கமாய் மௌனம் மேற்கொள்கிறேன்.

இங்கு என் வாழ்க்கை எப்படி நடக்கிறது என்பதை என் பொதுக் கடிதத்திலிருந்து நீ அறிய முடியும். இப்பொழுது இரட்டிப்பு மடங்கு நூல் நூற்கிறேன். சர்க்காவில் 400 சுற்றுகளும், தக்ளியில் 55 முதல் 60 வரையும் நூற்கிறேன். நூலை நனைத்து, நல்ல முறையில் கட்ட முடிகிறது. சர்க்கா நூலைப் பொறுத்தவரை, ஒவ்வொரு நாளும் 75 சுற்றுகள் கொண்ட 5 கண்ணிகள் நூற்கிறேன். தக்ளி நூலில், 160 சுற்றுகள் கொண்ட ஒரு கண்ணி நூற்கிறேன். மொத்தத்தில், நாளுக்கு 6 மணி நேரம் நூற்கிறேன். அவ்வளவு நேரம் செலவு செய்வது பற்றி நான் வருந்தவில்லை. இம்முறை அவ்வளவாக, நான் புத்தகங்கள் படிப்பதில்லை. சென்ற முறை செய்தது போல், அதிகப் புத்தகங்களைச் சேகரிக்கவும் விரும்பவில்லை. முடிந்தால், செம்மையாக நூற்கக் கற்றுக்கொள்ள விரும்புகிறேன். இன்னும் பத்து நாளைக்கு வேண்டிய பட்டைகள் கைவசமிருக்கின்றன. மேற்கொண்டு பஞ்சடித்துத் தயார் செய்து கொள்ள வேண்டியிருக்கும்.

ரெஜினல்ட் எப்படி இருக்கிறார்? இந்த வெப்பம் அவருக்கு ஒத்துக் கொள்கிறதா? அவருக்கு என் அன்பைத் தெரிவி. உன் வாராந்திரக் கடிதத்தில், அரசியல் தவிர மற்ற செய்திகள் அனைத்தையும் தெரிவி.

தோத்திரப் பாடல் புத்தகத்தில் உள்ள செய்யுள்களையும் பாடல்களையும் நான் மொழிபெயர்க்கத் தொடங்கியுள்ளேன் என்று சென்ற முறை உனக்கு எழுதினேன் என்றெண்ணுகிறேன். காலைப் பாடல்களை முடிக்கும் கட்டத்தில் உள்ளேன்.

உன் உடல் நலனை நன்கு போற்றி வருகிறாய் என்று நம்புகிறேன். எக்காரணத்தைக் கொண்டும், சக்திக்கு மேற்பட்ட வேலையை இழுத்துக் கொண்டு உடலை வருத்திக் கொள்ளாதே.

அன்பு,

பாபு

*18—5—'30*

## 97

சி. மீரா,

மீண்டும் ஞாயிற்றுக்கிழமையன்று மௌன வேளைக்குப் பின்பும் மாலை வழிபாட்டுக்குப் பின்னும் இக்கடிதத்தைத் தொடங்குகிறேன்.

நீ என்னைச் சந்திக்க வந்த போது, நேரம் வேகமாகப் பறந்து சென்றுவிடும் போல் தோன்றியது. ஆகவே தான் நான் பேசிப் பல கேள்விகளைக் கேட்பதில் காலத்தைச் செலவு செய்யாமல், நீங்களனைவரும் பேசும்படி விட்டேன். உன்னைப் பார்த்த போது உன் உடல் நலன் அவ்வளவு நன்றாக இல்லாதது போல் தோன்றியது. நீ மெலிவாகவும் வாட்டமாகவும் காணப்பட்டாய். அவ்வாறு இருக்கக் கூடாது. நன்றாக உடற்பயிற்சி செய்து, போதிய உணவருந்த வேண்டும். தேவையான அளவு பழம் சாப்பிட்டு, உடல் நலனைப் பார்த்துக்கொள்.

பஞ்சடிக்கும் பெரிய வில் பற்றிய விவரங்கள் அனைத்தையும் அறிந்து கொள்ளாததில் எவ்வளவு கவனக் குறைவாக இருந்து விட்டேன் என்பதை இப்பொழுதுதான் தெளிவாக உணர்கிறேன். இயந்திரங்களில் ஓரளவு எனக்குப் பயிற்சி இருப்பதால், அதைப் பயன்படுத்துவதை நிறுத்திவிட்டு, சென்ற வியாழக்கிழமை முதற்கொண்டு அதைச் சரிசெய்வதில் முனைந்துள்ளேன். ஆனாலும் இன்னும் அது சரியாக இயங்கவில்லை. நீண்ட கயிறு கூரையிலிருந்து தொங்குகிறது. மூங்கிலிலிருந்து இரு நூல்கள் தொங்குகின்றன. அவை இரண்டையும் சேர்த்து, இணைக்கப்பட்ட நூல்களுக்கு மேலாக மெல்லிய நூலிழையைச் சுற்றிப் பார்த்தேன்.

மூங்கிலமைப்பு உறுதியாக நிற்பதில்லை; சுற்றிச்சுற்றி வருகிறது. சுவர் அதைத் தடுத்து நிறுத்துகிறது என்பது உண்மைதான். ஆனால் தடுப்பதற்குச் சுவர் இல்லாவிடினும், அது சுற்றாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும். நான் சொல்வது உனக்கு விளங்குகிறதென்றால், இந்த ஏற்பாட்டில் குறையெதுவும் இருந்தால், அதை நீ எடுத்துச் சொல்ல வேண்டும்.

உன்னுடைய தக்ளி நன்றாகச் செய்யப்பட்டுள்ளது. ஆனால் மெல்லிய நூல் நூற்பதற்கு அது சற்று கனமாக உள்ளது. மூங்கில்தான் முக்கியமானது என்பதை நான் உணர்கிறேன். இப்பொழுது முன்பைவிட வேகமாக நூற்க முடிகிறது. இன்று ஒன்றரை மணி நேரத்தில் 65 சுற்று நூற்றுள்ளேன்; என் திறமைக்கு இது நல்ல வெற்றிதான். ஆனால் நூல் அறுந்துவிடுமோ என்ற பயமும் பதட்டமும் இல்லாமல் நான் நூற்கக் கற்றுக் கொண்டால், இன்னும் நன்றாக நூற்க முடியும்.

தோத்திரப் பாடல் புத்தகத்திலிருந்து, நாளுக்கு ஒரு பாடலைத் தொடர்ந்து மொழிபெயர்த்து வருகிறேன். இன்னும் அதிகம் செய்ய முடிந்தால் நன்றாக இருக்கும். ஆனால் நூற்பதிலும் பஞ்சடிப்பதிலும் ஈடுபட்டிருப்பதால், இன்னும் அதிக அவகாசம் கிடைப்பதில்லை. இனி, தையல் இயந்திரத்திற்கும் சிறிது நேரம் ஒதுக்க வேண்டும்.

அன்பு,

பாபு.

*25-5-'30*

எரவாடா இன்பநிலையம்.

நூற்புக் கதிரில் உள்ள சிறிய சக்கரம் கழன்றுவிடும்போது, அதை எப்படி உறுதியாக்குவது?

## 98

*திருத்தப்படாதது*

சி. மீரா,

பல வாரங்களுக்குப் பின் மீண்டும் ஆசிரமக் கடிதங்கள் எழுதத் தொடங்கியுள்ளேன். உனக்கு நான் சென்றமுறை அனுப்பிய கடிதக் கட்டு சில நாட்கள் நிறுத்தி வைக்கப்பட்டது என்பதை அறிவேன். ஆசிரமத்திலிருந்து வந்த கடிதக் கட்டும் நிறுத்தி வைக்கப்பட்டது. அந்நிலையில், நான் எழுத விரும்பவில்லை. இப்பொழுது சிக்கல் ஓரளவு தீர்க்கப்பட்டுள்ளது. அப்படியும், வாராந்திரக் கடிதங்கள் அனைத்தும் எனக்கு வந்து சேர

வில்லை என்பதும் சிலவற்றை எனக்குத் தராமல் நிறுத்தியுள்ளனர் என்பதும் எனக்குத் தெரியும். குழந்தைகளிடமிருந்து வந்த கடிதங்கள் அவை. அவற்றைப் பெற நான் முயன்று வருகிறேன். இது சிறை வாழ்க்கை என்பதை நினைப்பூட்ட அவ்வப்போது சில நிகழ்ச்சிகள் நடக்கத்தான் செய்யும்.

இப்பொழுதிருப்பதுபோல், தடைகள் தொடரும்வரை, நான் எவரையும் பேட்டிகாண விரும்பவில்லை. கௌரவமான முறையில் பேட்டிகள் நடத்த முடியாதென்றால், நாம் கடிதங்கள் எழுதுவதுடன் திருப்தி அடைய வேண்டும்—அவற்றையாவது கௌரவம் குறையாமல் எழுத முடியுமென்றால். ஆகவே என்னிடமிருந்து கடிதம் ஒழுங்காக வராவிடில், நான் கைதி என்பதை நீ உணர்ந்து கொள்ள வேண்டும். எனக்கு உடல்நலக் குறைவு எதுவும் உண்மையாக ஏற்பட்டால், சுவர்களே அச் செய்தியை எடுத்துரைக்கும். சென்றமுறை செய்ததுபோல, அதிகாரிகளே அச் செய்தியைத் தெரியப்படுத்துவார்கள். வதந்தி எதுவும் உன் காதில் விழுந்தால், அதிகாரிகளிடம் விசாரி. அவர்கள் முழுத் தகவலையும் தாமதமின்றித் தருவார்களென்று எதிர்பார்க்கின்றேன். ஆனால் கடிதங்கள் எழுதுவதைப் பொறுத்தவரை, இடைஞ்சல் எதுவும் இராதென்று நம்புகிறேன். தற்போதைக்கு என் உடல் நலனில் குறைவு எதுவுமில்லை—மலச்சிக்கல்தான் ஓரளவு உள்ளது. கவலை கொள்வதற்குக் காரணமேயில்லை.

நீ எழுதிய கடைசிக் கடிதம்—இம்மாதம் 9ந்தேதியிட்டது—எனக்குக் கிடைத்துள்ளது. அதற்குப்பின் எதுவும் வந்து சேரவில்லை. வில் பற்றி நீ தந்துள்ள குறிப்புகள் போதுமானவையாகவும் தெளிவாகவும் உள்ளன. தலைகீழாகத்தான் நான் அதைத் தொங்கப் போட்டுள்ளேன்; இருந்தபோதிலும், சற்றும் தடையின்றி நன்றாக இயங்குகின்றது. வில்லைப் பொறுத்தவரை, நான் அதில் செய்ய வேண்டியது ஒன்றுமில்லை. நரம்பு இன்னும் அறுந்துவிடவில்லை. வேப்பிலையை நான் பயன்படுத்தவில்லை; புளிய மரத்தைப் போலிருந்த வேறொரு மரத்தின் இலைகளைப் பயன்படுத்தினேன். அவை நன்றாகத்தான் பயன்பட்டன. புனாவுக்குச் செல்பவர்கள் மூலம் இரண்டு பவுண்டு பஞ்சு அனுப்பு. அவசரமில்லை. குறைந்தது ஜூலை 15ந்தேதி வரையிலுமாவது வேண்டிய அளவு பஞ்சுப் பட்டைகள் கைவசம் இருக்கின்றன. அதுவரை வில்லைத் தொடவேண்டிய அவசியமில்லை. வில்லைப் பயன்படுத்தத் தொடங்கும்போது, நீ கூறியிருக்கும் யோசனைப் படிச் செய்வேன்.

கதிரில் உள்ள சக்கரத்தைச் சரியாகப் பொருத்துவது பற்றியும் நீ தந்திருக்கும் குறிப்பு எனக்கு விளங்குகிறது. ஆனால், இதிலும் இயற்கை எனக்குச் சாதகமாய் அமைந்துள்ளது. சக்கரத்தை நான் என்னுடைய வழியிலேயே பொருத்தினேன்; அது நன்கு பொருந்திவிட்டது. ஏதாவது தொந்தரவு ஏற்பட்டால், நீ சொன்ன வழியைப் பின்பற்றுவேன்.

உன் வேலையைப் பற்றி நீ சொன்னது அனைத்தையும் மனத்திற் கொண்டுள்ளேன். இறைவன் உன்னை அழைத்துச் செல்லும் வழியில், உன் உடல்வலிமை இடந்தரும் அளவுக்கு, நீ இயங்குவாய். ஆண்டவன் உனக்கு அருள் புரிவாராக. மற்றவை பொதுக் கடிதத்தில் காண்பாய்.

அன்பு,

பாபு

*22-6-'30*

## 99

திருத்தப்படாதது

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது.

ஆசிரமக் கடிதங்கள் எனக்கும், என் கடிதங்கள் உங்களை வருக்கும் இனி ஒழுங்காகக் கிடைக்குமென்று எண்ணுகிறேன். இருதரப்பிலும், அரசியலை விவாதிக்கக் கூடாது என்பதே நிபந்தனை. ஆனால் மீண்டும் கடிதங்கள் தடைப்பட்டால், மீண்டும் ஏதோ தலையீடு எழுந்துள்ளது என்பதை நீ அறிவாய்.

நீ நலமாக இருப்பது குறித்து மகிழ்ச்சி. குறைந்தபட்ச எடைக்கும் கீழாக உன் எடை குறையக்கூடாது. உன் உடற் கட்டுக்கு, *116* பவுண்டு எடையாவது இருக்க வேண்டும்.

ஆம், நான் இப்பொழுது சிறிது தையல்வேலை ஒழுங்காகச் செய்து வருகிறேன். இது சிறையில் தரப்படும் வேலைதான். கதர்விலையைக் குறைப்பதற்கு இது பயன்படுமென்று மாதுர்தாஸ் யோசனை கூறியபோது, அந்த யோசனை என்னைக் கவர்ந்தது. இங்கு தரப்பட்டுள்ள தையல் இயந்திரத்தில் தையல் பழகிக் கொள்வது நல்லதென்று எண்ணினேன்.

இப்பொழுது என்னைப் பார்க்க யாரும் வருவதற்கு வாய்ப் பில்லையாதலால், எனக்கு மூன்று பவுண்டு பஞ்சு அனுப்புவது நல்லது. காகாசாஹிபுக்கும் பட்டைகள் தேவைப்படும். பஞ்சைக் காகிதத்தில் சுற்றியபின் சாக்கிலே தைப்பது நல்லது. கதர்த் துணியை மிச்சப்படுத்துவதற்காகத்தான் இந்த யோசனை.

எல்லா நண்பர்களுக்கும் என் அன்பு.

அன்பு,

பாபு

எ. ம.

*30-6-'30*

## 100

சி. மீரா,

உன் கடிதம் தடையின்றியும், உரிய நேரத்திலும் எனக்குத் தரப்பட்டது. இருதரப்பிலும் கடிதங்கள் தாமதமின்றி வந்து சேர்வதற்கு இனித் தடையிராதென்று எண்ணுகின்றேன்.

லண்டனிலிருந்து உனக்கு நல்ல செய்தி கிடைத்துள்ளது குறித்து மகிழ்ச்சி. அறுவை சிகிச்சை[1] திறமையாக நடந்துள்ளதெனத் தெரிகிறது. அறுவை சிகிச்சை முறையில் அரிய கண்டு பிடிப்புகளுக்கும், அத்துறையில் எல்லாவழிகளிலும் ஏற்பட்டுள்ள முன்னேற்றத்திற்கும் மேலே நாடுகள் எப்போதுமே என் பாராட்டுதலைக் கவர்ந்துள்ளன.

உன் உணவுத் திட்டப்படி, நீ எவ்வளவு நெய் சாப்பிடுகிறாய் என்பதையும், ஆரஞ்சுப் பழங்களைச் சாப்பிடுகிறாயா இல்லையா என்பதையும் நீ தெரிவிக்கவில்லை. நெய்யும், அதுபோலவே ஆரஞ்சுப் பழங்களும் உனக்கு அவசியமானவை. இந்த இரண்டையும் நீ தவிர்க்கவோ, குறைத்துக் கொள்ளவோ கூடாதென்பது என் விருப்பம்.

இதுவரை நீ பஞ்சு அனுப்பவில்லையென்றால், உடனடியாக அதை அனுப்ப வேண்டும். ஜூலை 15, கடைசித் தேதி என்று உனக்கு நான் சொல்லியுள்ளேன்.

நான் நலமாக இருக்கின்றேன். 375 சுற்றுகள் நூற்பது இப்பொழுதெல்லாம் சற்று அலுப்பாக இருக்கின்றது. அதற்குக் காரணமென்ன என்று ஆராய முயற்சிக்கின்றேன். இதனால் தக்ளியில் பயிற்சி பெரிதும் குறைந்துள்ளது.

என் கடிதங்களிலிருந்து சில பகுதிகளைப் பத்திரிகைகளில் பிரசுரித்து வந்ததை நிறுத்திவிட்டது குறித்து எனக்குப் புகார்கள் வந்துள்ளன. ஆகவே பொதுப்படையாக உள்ள பகுதிகளை மீண்டும் பிரசுரிக்கத் தொடங்கலாம். இது குறித்துச் சிறை அதிகாரியுடனும் நான் கலந்து பேசியுள்ளேன். என் கடிதங்களிலிருந்து ஒரு பகுதியையும் பார்க்க முடியவில்லையென்றால், மக்களுக்குக் கடுமையான அதிருப்தி ஏற்படும்.

பேட்டிகள் பற்றி இன்னும் ஒன்றும் முடிவாகவில்லை.

நான் கடிதம் எழுதாவிடினும் ஓயாது நான் எண்ணிக்கொண்டிருக்கும் நண்பர்கள் அனைவருக்கும் என் அன்பு.

அன்பு,

பாபு.

எ. ம.
*7-7-'30.*

1. என் அன்னைக்கு அறுவை சிகிச்சை நடந்திருந்தது.

## 101

[பீஹார் முறைப்படி ஒரு சர்க்காவைத் தயாரித்திருந்தேன். நேரில் விளக்கினால் ஒழிய, அதை எப்படிப் பொருத்துவது என்பதைத் தெரிந்து கொள்ள பாபுவுக்குக் கடினமாக இருக்கும் என்றெண்ணியதால், அதை எரவாடா சிறைக்கு நானே எடுத்துச் சென்றிருந்தேன். ஆனால் பாபுவைப் பார்க்க முடியவில்லை. சிறை அதிகாரியின் அறையில் காத்திருந்த எனக்குப் பாபு இந்தக் குறிப்பை அனுப்பினர்.]

சி. மீரா,

எனக்கு இது வேதனை அளிக்குமென்றாலும், நான் எனக்கு உண்மையாய் இருக்க வேண்டுமானால், உன்னைக் காணும் இன்பத்தைக் கைவிடத்தான் வேண்டும். சர்க்காவை அங்கு விட்டுச் செல். என்னால் இயன்ற அளவு அதைப் புரிந்து கொண்டு இயக்குவேன். இது போன்ற வேளைகளில் தான் நாம் நம்மைச் சோதித்துக்கொள்ள முடியும்.

இறைவன் உன்னுடன் இருப்பானாக.

அன்பு,

பாபு

## 102

திருத்தப்படாதது

சி. மீரா,

உன்னைப் பார்க்க மறுக்க வேண்டியிருந்தது எனக்கு மன வேதனை அளித்தது. ஆனால் நான் செய்தது தான் சரி என்பது மறுநாள் காலை நடந்த நிகழ்ச்சிகளால் நிரூபிக்கப்பட்டது. நான் முன் வந்து கூறிய யோசனையை அரசாங்கம் நிராகரித்து விட்டது. ஆகவே இனிச் சிறையில் பேட்டிகள் நடக்க முடியாது. என் கருத்தை நான் மேலும் வற்புறுத்துவது அழகல்ல. ஒரு நூற்றாண்டுக்கு முன்பு வரையிலும், அதற்குப் பின்னும் கூட உலகெங்கும் கையாளப்பட்டு வந்த வழக்கப்படி, சிறைக் கைதிகளுக்கு எவ்வித வசதியும் செய்து தர மறுப்பதற்கு அவர்களுக்கு உரிமையுண்டு. கடிதப் போக்குவரத்து அனுமதிக்கப்பட்டிருப்பதே போதும். ஆனால் இதற்கும் எந்தநேரமும் ஆபத்து நேரிடக் கூடுமென்பதை நீ உணர வேண்டும். எந்த நிமிடமும் அவர்கள் கடிதப் போக்குவரத்தை நிறுத்தக்கூடும்; அல்லது ஏற்றுக்கொள்ள இயலாத நிபந்தனைகளை விதிக்கலாம். ஆகவே இந்தப் பேட்டிகள் நிறுத்தப்பட்டது குறித்து நாம் மனக் கொதிப்பு அடைய வேண்டியதில்லை. ஆன்மாவும் ஆன்மாவும் சந்திப்பதே சிறந்தது. அந்தத் தூய்மையான தொடர்பை உலகில் எந்த சக்தியும் தடுக்க முடியாது.

நீ விட்டுச் சென்ற பரிசுப் பொருட்கள் கிடைத்தன. ஒவ்வொரு சிறு நுணுக்கம் பற்றியும் அதிகக் கவனம் செலுத்தப்பட்

டுள்ளதைக் காண்கிறேன். புது இராட்டினத்தைப் பயன்படுத்த உடனடியாகத் தொடங்கினேன். இன்று இரண்டாவது நாளாக அதைப் பயன்படுத்துகின்றேன். மௌனம் மேற்கொள்ளத் தொடங்கிய பின் இது முதல் ஞாயிற்றுக்கிழமை. இந்த அன்பு, ஆழ்ந்த அன்பு; ஆனால் விவேகமானதாகத் தோன்றவில்லை. இந்த இராட்டினத்தால் அலுப்பு குறையவில்லை. மாதுர்தாசிடம் நான் கூறியதுபோல், அலுப்புக்கு முக்கிய காரணம், ஐந்து மணி நேரம் ஒரே நிலையில் அமர்ந்து நூற்க வேண்டியிருப்பது தான். நூற்கும் நேரத்தைக் குறைத்துக்கொண்டு, அதே அளவு நூலை உற்பத்தி செய்ய முடிந்தால், அவ்வளவு அலுப்பு தோன்றாது. ஆனால் புது சர்க்காவில் அந்தப் பலன் கிடைக்குமென்று தோன்றவில்லை. மேலும் புது இராட்டினத்தைப் பயன்படுத்துவதில், இடது கைக்கு அலுப்பு அதிகமாகிறது. ஏனென்றால் இதில் மேல் கையை தூரத்திற்கு எடுத்துச் சென்று உயரவும் தூக்க வேண்டியிருக்கிறது. பெட்டி இராட்டினத்தைப் பொறுத்தவரை, கிடைநிலையில் இருக்கும் மேல் கை நம்மை நோக்கியே வருகிறது. மேலும் இந்த இராட்டினம் எனக்குத் தேவையாயிருந்தால் ஒழிய, இது போன்ற ஒரு காரியத்திற்காக உன் நேரத்தையும் தேர்ச்சி பெற்ற தொழிலாளரின் நேரத்தையும் செலவு செய்வது உசிதமல்ல. என்னை நானே கவனித்துக் கொள்ளவும், எனக்குத் தேவையானவற்றை நானே கேட்டுப் பெற்றுக் கொள்ளவும் என்னை அனுமதிக்க வேண்டும். மூன்றாவதாக, பெட்டி இராட்டினத்தில் நூற்பது போல், அவ்வளவு மெல்லிய இழையை என்னால் இதில் இன்னமும் நூற்க இயலவில்லை. முடிவில் கண்ட பலன், ஒன்றுக்குப் பாதி அதிகப் பஞ்சுப் பட்டை செலவாவது தான்—இது நாட்டின் சொத்தையே விரயம் செய்வதாகும். குறை கூறுவதை இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன். இத்துணை அன்பு தோய்ந்து வந்த ஒரு பொருளை அசட்டையாக ஒதுக்கி வைத்துவிட மாட்டேன். ஆகவே இந்த இராட்டினத்தை நான் தொடர்ந்து பயன்படுத்துவதோடு அவ்வப்போது உனக்கு அதைப் பற்றித் தெரிவிப்பேன். பிடிப்புகளுக்கும் இருசுக்கும் நீ என்ன எண்ணெய் பயன்படுத்துகின்றாய்? மாலுக்கு மரப்பிசினை எத்தனை முறை தடவுவாய்?

தக்ளிகளை நான் பயன்படுத்திப் பார்த்து விட்டேன். நான் இங்குச் செய்துள்ள தக்ளிகளைப் போல், அவை அவ்வளவு நன்றாக வில்லை. வட்டு மிகப்பெரிதாக இருக்கிறது; மூங்கிலில் நல்ல மெருகு ஏறவில்லை. வட்டின் சுற்றளவுக்கும் தண்டின் திட்பத்திற்கும் இடையே அளவுப் பொருத்தம் இருக்கும் போல் தோன்றுகிறது. கனம் குறைவாக இருந்தால், வட்டின் திட்பத்தை அதிகமாக்கி ஈடு செய்ய வேண்டும்; நீ மறுமுறை ஒரு தக்ளி செய்யும்போது, இந்த அம்சங்களை ஆராய்ந்து, உன் கருத்தை எனக்குத் தெரிவிக்க வேண்டும்.

என் உடல் நலன் பற்றிப் புதிதாகச் செய்தி ஒன்றுமில்லை. எடை மாறாமல் இருந்து வருகிறது.

சுற்றுப் பயணத்தின்[1] போது உன் உடல் நலனை அசட்டை செய்துவிடாதே.

பஜனைப் பாடல்களை மொழி பெயர்ப்பதில் இப்பொழுது அதிக நேரம் செலவு செய்து வருகின்றேன். சமஸ்கிருதச் செய்யுள்களை முடித்துவிட்டேன். இப்பொழுது பஜனைப் பாடல்களை மொழி பெயர்த்துக் கொண்டிருக்கின்றேன்.

அன்பு,

பாபு.

எ. ம.
*20—7—'30*

# 103

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. உன் இராட்டினத்தையே நான் தொடர்ந்து பயன்படுத்தி வருகிறேன்.

இப்பொழுது அதில் அலுப்பு சற்று குறைந்துள்ளது. மால், சற்றும் தொந்திரவு தரவில்லை. அந்த வகையில் உன் சர்க்கா, மற்ற வற்றை விடச் சிறந்தது. அதில் மெல்லிய இழை நூற்பது எனக்கு இன்னும் சிரமமாகவே உள்ளது. எவ்வாறுயினும், அதை எளிதில் கைவிட மாட்டேன். வேகம் இன்னமும் வெகு குறைவாகவே உள்ளது. இன்று முதன் முறையாக, 65 நிமிடங்களில் 154 சுற்று கள் நூற்றேன். இது எனக்கு உற்சாகம் ஊட்டுவதாகவே இருந் தது. பயணச் சர்க்காவில் இடைவிடாது நூற்ற போது, ஒரு மணி நேரத்தில் 200 சுற்றுகள் வரை வேகமாக நூற்கப் பழகியிருந்தேன்.

துதிப் பாடல்களை உனக்காக மொழி பெயர்ப்பதில், நான் எனக்கே மிகுந்த மகிழ்ச்சியைத் தேடிக் கொள்கிறேன். இனிய அன்புமழையாகப் பொழிவதைக் காட்டிலும், சூறுவளியாக வீசித் தானே, நான் பெரும்பாலும் என் பிரியத்தை வெளிப்படுத்துவ துண்டு? இந்தச் சூறுவளிகளின் நினைவு, இத்துதிப் பாடல்களை உனக்கெனத் தனியாக மொழி பெயர்ப்பதில் ஏற்படும் மகிழ்ச்சி யைப் பெருக்குகின்றது. ஆனால் இது நீண்ட நேரம் தேவைப்படும் முயற்சி. இன்று பத்தாவது துதிப்பாடலை, மொழி பெயர்த் தேன். செய்யுள்களின் மொழிபெயர்ப்பு அதிக நேரம் பிடித்தது. துதிப்பாடல்களை நாளுக்கு ஒன்று வீதம் மொழி பெயர்த்து வருகின்றேன். இன்னும் மொழி பெயர்க்க எஞ்சியிருப்பவை, 170-க்கும் மேற்பட்டவை. இங்கிலையில், கீதை வேலையை நான் இப்பொழுது தொடங்குவது சாத்தியமென்று தோன்றவில்லை.

1. கதர் வேலையை முன்னிட்டு, அனைத்திந்திய சுற்றுப் பயணத்திற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தேன்.

உன் சுரம், சஞ்சலமூட்டுகிறது. சிறிய மாறுதல் கூட உன் உடல் நலனைப் பாதிக்கும் அளவுக்கு நீ பலவீனமாய் இருக்கிறாய். உன் உடலை நன்றாகக் கவனித்துக் கொள்ள வேண்டும். அவசியம் ஏற்பட்டால், இரண்டாம் வகுப்பில் பயணம் செய்யத் தயங்காதே. இவ்வாரக் கடிதத்தை நான் ஆவலுடன் எதிர்பார்க்கின்றேன்.

அன்பு,

பாபு

*ஜுலை 27, 1930*

## 104

*சி. மீரா,*

இவ்வாரம், நான் சுருக்கமாக எழுத விரும்புகிறேன். அதற்குச் சிறப்பான காரணம் ஒன்றுமில்லை. இன்னும் சொல்லப் போனால், பொதுக் கடிதத்தை நீளமாகவே எழுதியுள்ளேன்.

சுற்றுப் பயணம் முழுவதும் உன் உடல் நலமாகவே இருந்தது என்று நம்புகிறேன்.

* * *

சர்க்கா இப்பொழுது முன்பைவிட நன்றாக இயங்குகிறது. இன்று, ஒரு மணி நேரத்தில் *160* சுற்றுகளுக்கும் மேலாக, வேகமாக நூற்றேன். வில்லை மாற்றி அமைத்துள்ளேன்; அது முன்பைவிட நன்றாக வேலை செய்கிறது. வேகமாக நூற்பதற்கு நல்ல பஞ்சுப் பட்டைகள் இன்றியமையாதனவென்று நான் மேலும் மேலும் தெளிவாக உணர்கிறேன். ஒவ்வொரு சிறு நுணுக்கத்திலும் கவனம் செலுத்துவது எவ்வளவு முக்கியம் என்பது வியக்கத் தக்கது.

உடல் நலம் நன்றாகவே உள்ளது.

அன்பு,

பாபு

எ. ம.

*4-8-'30*

## 105

*சி. மீரா,*

பாட்னாவிலிருந்து நீ எழுதிய காதல் கடிதம் கிடைத்தது. கிடைத்தற்கரிய அனுபவங்கள் உனக்குக் கிட்டியுள்ளன. வயிற்று அளைச்சலின் அறிகுறிகள் முற்றிலும் ஓய்ந்து விட்டனவென்று நம்புகின்றேன்.

புது சர்க்காவைத் தொடர்ந்து பயன்படுத்தி வருகின்றேன். நூற்பு வேகம் முன்னைப் போல் தானிருக்கின்றது. ஆனால் அதை நான் கைவிடப் போவதில்லை. அந்தச் சர்க்கா விலை மதிப்பற்ற உடைமையாகும்.

துதிப்பாடல்களின் மொழி பெயர்ப்பு தவறாமல் ஒழுங்காக நடந்து வருகிறது; ஆனால் அதற்கு மேலும் அதிக நேரம் செலவு செய்ய என்னால் இயலவில்லை. ஆகவே என் கடிதங்களில் ஒன்றில் நான் குறிப்பிட்ட கால வரையறைக்குள் தான் இந்த வேலையை முடிக்க முடியும்.

* * *

என்னுடைய எடை இரண்டு பவுண்டு குறைந்துள்ளது. ஆனால் அது குறித்துக் கவலை கொள்வதற்கில்லை. பிடிவாதமான மலச்சிக்கலின் காரணமாகப் பாலைக் குறைத்துக் கொள்வது அவசியமாயிற்று. முன்பு சாப்பிட்ட அளவு, மீண்டும் பால் சாப்பிடத் தொடங்கினால், இழந்த எடையை மீண்டும் பெற்று விடுவேன். உடல் நலனை இழப்பதைவிட எடையை இழப்பது நல்லது. உடலாற்றல் குறையாமல் இருக்கிறது. இச் செய்தி பிரசுரத்திற்கல்ல. உண்மையைச் சொல்ல வேண்டுமென்பதற்காகவே உன்னிடம் இதைக் கூறியுள்ளேன். என் உடல் நலன் பற்றி உனக்குத் தெரிவிக்க நான் கடமைப்பட்டிருப்பதால், எடைக் குறைவு பற்றிய செய்தியை ஒளிக்க விரும்பவில்லை.

அன்பு,

பாபு

எ. ம.
*10-8-'30*

## 106

சி. மீரா,

ஓடும் இரயிலில் எழுதப்பட்டிருந்த போதிலும், உன் கடிதம் வியக்கத்தக்க அளவு தெளிவாக இருந்தது. நீ குறிப்பாக அதை என் கவனத்துக்குக் கொண்டு வந்திராவிடில், நான் வேறுபாடு எதையும் கவனித்திருக்கவே மாட்டேன்.

பயணச் சர்க்காவில் இப்பொழுது நல்ல தேர்ச்சி பெற்று விட்டேனென்று எண்ணுகிறேன். முன்பைவிட வேகமாக நூற்க முடியுமென நம்புகிறேன். இப்பொழுதே, ஒரு மணி நேரத்தை மிச்சப்படுத்துகின்றேன்; அலுப்பும் மிகக் குறைவாக உள்ளது.

---

1. இதை மூலமாகக் கொண்டுதான், இன்றைய பெட்டி சர்க்கா உருவாகியுள்ளது. பாபு குறிப்பிடும் பயணச் சர்க்கா, அல்லது பெட்டிச் சர்க்கா என்பது, மடிக்கக்கூடிய கம்பிச் சக்கரம் கொண்டு, நட்டமாய் நிற்கும் சர்க்கா, அது மிகவும் சிக்கலானது.

ஆனால் உன் முயற்சி வீண் போகவில்லை. காகாசாகிப் காண்டீபத்தைப் பயன்படுத்தி வந்தார். ஆனால் அவருக்கு அது திருப்தியாயில்லை. ஒரு கண்ணி, அதாவது *160* சுற்று கூட அவரால் எப்பொழுதும் நூற்க முடியவில்லை. அந்த இரண்டு மணி நேரமாவது, சர்க்காவிற்கு ஒதுக்கக் கடமைப்பட்டுள்ள அவர், அந்த இரண்டு மணி நேரத்திற்குள் உன்னுடைய சர்க்காவில் சிரமமின்றி ஒரு கண்ணி நூற்றுவிடுகிறார்.

இரயிலில் இரண்டாம் வகுப்புக்கு மாற்றிக் கொண்டது தான் சரி. மூன்றாம் வகுப்பில் பயணம் செய்வது இயலவே இயலாததென்ற நிலையோ, ஏறக்குறைய இயலாததென்ற நிலையோ ஏற்படும்போது, இரண்டாம் வகுப்பில் செல்வதில் தீங்கு இருக்க முடியாது; நிச்சயமாக அது குறித்து வெட்கப்பட வேண்டியதில்லை.

* * *

அன்பு,

பாபு

# 107

சி. மீரா,

சென்ற வாரம் எழுதியதையும் விடச் சுருக்கமாக இந்த வாரம் நான் எழுத வேண்டும். இப்பொழுது இரவு பத்து மணி அடித்துக் கொண்டிருக்கிறது. இது என் வழக்கத்துக்குப் பெரிதும் மாறானது. நேரம் தவறாமல் நான் வேலைகள் அனைத்தையும் செய்ய வேண்டுமானால், இன்றிரவுதான் கடைசி இரவு. எனக்கு அதிகம் எழுதுவதற்கும் இன்று ஒன்றுமில்லை.

நேற்று நான் பயணச் சர்க்காவை மீண்டும் பயன்படுத்தினேன். அலுப்பு குறைவாய் இருந்தது; அதே சமயத்தில், நேர விகிதப்படி, அதிகமாகவே—மிக அதிகமில்லை என்ற போதிலும்—நூல் நூற்க முடிந்தது. ஆனால் இன்னும் வேகமாக அதில் நூற்க முடியுமென்று நம்புகிறேன். நீ எந்த நோக்கத்தில் சர்க்காவை அனுப்பினாயோ அந்த நோக்கம் நிறைவேறாமல், உன் சர்க்காவைத் தொடர்ந்து பயன்படுத்துவது, உண்மையான அன்பை வெளிப்படுத்தும் முறை அல்ல என்பதை நான் உணர்ந்தேன். அதே சமயத்தில், அதில் நூற்றுப் பழக முழுமுயற்சி செய்யாமல் அதை விட விரும்பவில்லை. என் உடல் நலன் நன்றாகவே உள்ளது; ஆனால் எடை மட்டும் குறைந்த வண்ணம் உள்ளது. அதுபற்றிக் கவலையில்லை. மலச்சிக்கல் தீர்ந்துவிட்டால், எடை கூடிவிடும். இவ்வாரம் எடை கூடுமென்று எதிர்பார்க்கிறேன்.

அன்பு,

பாபு

எ. ம.
*18-8-'30*

## 108

சி. மீரா,

சென்னைக்குச் செல்லும் வழியில் நீ எழுதின காதல் கடிதம் கிடைத்தது. இந்தப் பளு உன்னால் தாங்க முடியாததாகக் கூடாது என்றுதான் விரும்புகிறேன்; உன் வர்ணனைகள் மிகவும் பயனுள்ளவை. இரு நேருக்களும் இங்கு வந்திருந்ததை ஒட்டி, வேலை மும்முரமாக இருந்தது.[1] மிகவும் சிரமப்பட்டுத்தான் 375 சுற்றுகள் நூற்க முடிந்தது. அவ்வளவு கூட நூற்காவிடில் எனக்கு மன அமைதி இராது.

* *

பஞ்சடிக்கும் வில் செம்மையாக வேலை செய்து வருகிறது. எனக்கு அதில் அலுப்பே தோன்றவில்லை. காகாசாகிப் பட்டைகளை உருட்டுகிறார். பஞ்சடிக்க அவர் இன்னும் கற்றுக்கொள்ளவில்லை. அண்மையில் தொடங்க உத்தேசித்துள்ளார். பஜனைப் பாடல்களின் மொழி பெயர்ப்பு முன்பு போல ஒழுங்காக, ஆனால் மெதுவாகவே தொடர்ந்து வருகிறது. அண்மையில் இதைவிட அதிகம் மொழி பெயர்க்க முடியுமென்று நான் எதிர்பார்க்கவில்லை. நான் நலமாக இருக்கின்றேன். எடைதான் எனக்கு கூடிக் குறைந்து ஊசலாடி வருகிறது. நான் இழந்துவிட்டதாக எண்ணிய இரண்டு அல்லது மூன்று பவுண்டில், ஒரு பவுண்டு எடை சென்ற வாரம் மீண்டும் கூடியது. உடலில் பலம் குறையவில்லை. இங்கு தண்ணீர் ஓரளவு உப்பு நீராக இருக்கிறது. ஆகவே மலச்சிக்கலைப் போக்குவதில் கவனமாக இருக்க வேண்டும்.

அன்பு,

எ. ம. பாபு

*24-8-30*

தந்தி[2] ஒரு முறை கூட அறுந்து விடவில்லை என்பதை அறிய உனக்கு மகிழ்ச்சி ஏற்படும்.

## 109

சி. மீரா.

திருப்பூரிலிருந்து உன் கடிதம் கிடைத்தது. எங்கள் சமாதானப் பேச்சுக்கள் பற்றி முழு விவரங்களையும் நீ அறிந்திருப்பாய். இங்கு இழந்த எடை மீண்டும் கூடிவிட்டது. சென்ற வெள்ளிக்கிழமை என் எடையை எடுத்த போது, 104 பவுண்டு இருந்தது. உலர்ந்த பழங்களைச் சாப்பிடுவதையும் நிறுத்திவிட்டேன். புளிப்பான எலுமிச்சைகளை மட்டும் இன்னும் சேர்த்துக் கொள்கிறேன். சர்க்கரை வள்ளிக் கிழங்கையும் பச்சைத் தக்காளியையும் ஒழுங்காகச் சாப்பிட்டு வருகிறேன். சர்க்கரை வள்ளிக் கிழங்கை வறுத்துச் சாப்பிடு

---

1. சமரச முடிவுகாணும் பொருட்டு, பண்டித மோதிலால் நேருவையும் ஜவாஹர்லால்ஜியையும் நைனி சிறையிலிருந்து எரவாடா சிறைக்குத் தனி இரயிலில் சில நாள் பேச்சுவார்த்தை நடத்தக் கொண்டு வந்திருந்தனர்.

2. பஞ்சடிக்கும் வில்லில் உள்ள நரம்பு.

கிறேன். முட்டைக்கோசு, சுரைக்காய் போன்ற பச்சைக் காய்கறி ஒன்றை வேகவைத்துச் சாப்பிடுகிறேன். இம் மாறுதல் செய்ததன் பயனாக இழந்த எடை கூடி வருகிறது; மலச்சிக்கல் தொந்தரவும் இல்லை. இம் மாறுதல் நாளடைவில் நல்ல பலனளித்தால், இதற்காகும் செலவும் வெகுவாகக் குறையும். பொறுத்திருந்து பலனைப் பார்க்க வேண்டும். பழங்களைத் தவிர்க்க வேண்டுமென்று கண்டிப்பாக விதி விதித்துக் கொள்ள வில்லை. ஆனால் இப்போதைக்குப் பழங்களை விட்டதால் இழப்பு ஒன்றும் ஏற்படவில்லை; அது உடல் நலனுக்கு உகந்ததாக இருக்கவும் கூடும்.

சர்க்காவில் என் தேர்ச்சி அதிகரித்து வருகிறது. இப்பொழுதெல்லாம் அலுப்பு தோன்றுவதில்லை. நூலை இழுக்கும்போது 'பூனி' முனையில் கவனம் செலுத்தி, நூலைக் கண்டுக்கு மாற்றும் போது கதிர் நுனியில் கவனம் செலுத்தி, கண்டில் சுற்றும் போது கண்டிலேயே கவனம் செலுத்தி நூற்றால், 'பூனி' உறுதியாக இருந்தால், நூல் அறுவதில்லை என்பதைக் கண்டுள்ளேன். வெகு விரைவில், வேகமாக நூற்க முடியுமென எதிர்பார்க்கிறேன். இப்பொழுதே, முன்பைவிட வேகமாகத்தான் நூற்கிறேன். ஆனால் இன்னும் வேகமாக நூற்கக் கற்றுக் கொள்ள முடியும். எவ்வாறாயினும், என் முழுக் கவனத்தையும் இப்பொழுது ஈர்த்துள்ளது சர்க்காதான்; மற்ற பயிற்சிகளுக்கு நேரமேயில்லை. ***

நீ எங்காவது சற்று ஓய்வு எடுத்துக் கொண்டாய் என்று நம்புகிறேன். ஓயாமல் அலையாதே.

அன்பு,

பாபு

எ. ம.
*7-9-30*

# 110

சி. மீரா,

உன் கோயம்புத்தூர் கடிதம் இப்பொழுது என் முன்னால் இருக்கிறது. இந்த ஓயாத அலைச்சலுக்கு இடையிலும், நீ உடல் நலனைக் காப்பாற்றிக் கொண்டது ஆச்சரியமே. இது உன் மன அமைதிக்குச் சான்று என்று கருதுகின்றேன். சர்க்கா திறமையாகவும் வேகமாகவும் இயங்குவது, மால் கயிற்றையும், அது சரியாகப் பொருத்தப்படுவதையும் பொறுத்தது என்று காண்கிறேன். ஒருவகையாகப் பயிற்சி பெற்று வருகிறேன். மனச்சோர்வு அடைந்து விடவில்லை. முன்பிருந்த மிகையான அலுப்பு இப்பொழுதில்லை. ஆகவே சர்க்காவைப் பற்றிக் கவலை வேண்டியதில்லை. காகா உன்னுடைய சர்க்காவில் நூற்றுக் கொண்டிருக்கிறார். ஒரு மணிக்கு 80 சுற்றுகளுக்கு மேல், அவரால் இன்னும் நூற்க முடியவில்லை. * * * * * *

குறிப்பிட்ட ஒரு இடத்திற்குள்ளாகத்தான் நான் நடக்க அனுமதிக்கப்பட்டுள்ளேன். ஆனால் உடல் நலனைக் காப்பாற்றி வருகிறேன். சர்க்காவில் நூற்பதிலும், அதைப் பற்றிய சிந்தனையிலுமே நேரம் பறந்து விடுகிறது. நாள் முடிவில் நல்ல தூக்கம் வருகிறது; இது எனக்கு உணவைக் காட்டிலும் அதிக முக்கியம். 65-வது பஜனைப் பாடலை மொழிபெயர்த்து முடித்துவிட்டேன். இன்னும் எஞ்சியுள்ள வேலை எவ்வளவோ இருக்கின்றது. நாளைக்கு ஒரு பாடலுக்கு மேல் மொழிபெயர்க்க எனக்கு நேரம் கிடைப்பது அரிதாக இருக்கின்றது. ஆனால் நாளுக்கு ஒரு பாடல் மொழி பெயர்ப்பதில் இன்னும் தவறவில்லை. ஆகவே வேலை நிற்கவில்லை என்ற போதிலும், மெதுவாகத் தான் நடக்கிறது என்பதில் ஐயமில்லை.

அன்பு

பாபு.

எ. ம

*14-9-30*

## 111

*சி. மீரா*

உன் கல்கத்தா கடிதம் கிடைத்தது. பலவகையான அனுபவங்கள் உனக்குக் கிட்டி வருகின்றன.[1] மெய்யறிவை நாடுவோர் இவை அனைத்தையுமே நல்லதற்குப் பயன்படுத்திக் கொள்வார். உன் சுரம் சீக்கிரமே அடங்கி, நீ மீண்டும் உடல் நலன் பெற்று விட்டாயென்று நம்புகிறேன். உனக்குத் தேவையான ஓய்வும் கிடைத்ததென்று நம்புகிறேன். பயணச் சர்க்காவில் தினமும் நான் சில திருத்தங்கள் செய்து வருகின்றேன்; அதனால் தொந்தரவு இப்பொழுது நாளுக்கு நாள் குறைந்து வருகிறது. நமக்குக் கிடைத்துள்ளது முற்றிலும் சீரான இயந்திரமாக இல்லாமல், நம் கைவண்ணத்திற்குத் துணை செய்யும் கருவியாக இருக்கும்போது, எத்தனை சிறிய நுணுக்கங்களில் கவனம் செலுத்த வேண்டியுள்ளது என்பது வியக்கத் தக்கது. ஆனால் சர்க்காவில் தேர்ச்சி

---

1. நான் கல்கத்தாவிற்குச் சுரத்துடன் வந்து சேர்ந்தேன். பரபரப்பான, பெருந்திரள் இரயில் நிலையத்தில் காத்திருந்தது. ஆனால் எவரும் என்னருகில் வருவதற்கு முன்பே, ஓர் ஆங்கிலேயப் போலீசு அதிகாரி என் பெட்டிக்குள் தள்ளிக் கொண்டு வந்து என்னை வரவேற்பதற்காக ஏற்பாடு செய்யப்பட்டிருந்த பெண்கள் ஊர்வலத்தில் சேரக்கூடாதென்று எனக்கு ஒரு தடையுத்தரவு விதித்தார். அந்த உத்தரவை மீற வேண்டியிருக்கும் என்று நான் விளக்கிய போது, அப்படியானால், தடியடிப் பிரயோகம் நடக்கு மென்று அவர் எச்சரித்தார். இரண்டுமே நடந்தன. நான் கைது செய்யப்பட்டு, போலீசு கமிஷனர், சர் சார்லஸ் டேகார்ட்டிடம் அழைத்துச் செல்லப் பட்டேன். சுமார் அரைமணி நேரம் என்னுடன் பேசிவிட்டு, அவர் என்னை விடுதலை செய்தார். ஆனால் இதற்கிடையில், நகரில் பெரும் பரபரப்பு ஏற்பட்டிருந்தது.

பெறப் பெற, நூற்பில் மகிழ்ச்சி பெருகுவதுடன், அலுப்பும் குறைகிறது. உன் சர்க்காவுடன் காகா இன்னும் போராடிக் கொண்டிருக்கிறார். முன்பு நீண்டகாலம் அதைப் புறக்கணித்து விட்டதால், அதற்கெல்லாம் அவர் இப்பொழுது ஈடு செய்ய வேண்டியிருக்கிறது. தாம் இங்கு வந்த பின் தான் நூற்பாள ராகியுள்ளதாக அவர் கூறுகிறார். முன்பும் அவர் நூற்பதுண்டு. ஆனால் நூற்பாளர் ஆகவில்லை. என் பொருள் உனக்கு விளங்கு கிறதென்று எண்ணுகிறேன். மரச்சாமான்கள் செய்யும் தொழிலில் ஈடுபடாதவன் கூட ஒரு மேசையைச் செய்யமுடியும். உணவு முறையை மாற்றித் தொடர்ந்து காய்கறிகள் சாப்பிட்டு வருகிறேன். இம்மாறுதலால் நலக்குறைவு ஏற்படவில்லை; அதே சமயத்தில் கண்ணுக்குப் புலனாகும் முன்னேற்றம் ஏற்படவுமில்லை. போதிய காலம் இதைக் கடைப் பிடித்து, இதனால் பலன் ஏற்படுகிறதா என்று பரிட்சித்துப் பார்க்க வேண்டும். சர்க்கரை வள்ளிக் கிழங்கினால், மலச் சிக்கல் ஏற்படக்கூடும் என்று டாக்டர் மேத்தா சொல்லி அனுப்பினார். ஆகவே இன்றிலிருந்து அவற்றை விலக்கிவிட்டேன். தினமும் தவறாமல் தக்காளிப் பழங் களையும் ஒரு பச்சைக் காய்கறியையும் சேர்த்துக் கொள்கிறேன்.

நீ எங்கிருந்தாலும், நண்பர்களுக்கு என் அன்பைத் தெரிவிப் பாயாக.

அன்பு.

பாபு

எ. ம.
*22-9-30*

# 112

*சி. மீரா,*

உன் கடிதம் கிடைத்தது. முசாபர்பூரில் நான்கு நாட்கள் ஓய்வு கூட உனக்கு முழுவதும் கிட்டவில்லை; நீ அதைப் பயன் படுத்திக் கொள்ளவுமில்லை. மறுமுறை, நான் தரும் இது போன்ற வாக்குறுதிகளைக் காப்பாற்ற வேண்டும். தொண்டாற்றும் உணர் வுடனேயே ஏன் ஓய்வெடுத்துக் கொள்ளக் கூடாது? ஓய்வு தவறான வழியில் பயன்படக்கூடும் என்பதும், பயன்படுகிறது என் பதும் உண்மைதான். ஆனால் அதனால் நாணயமாக உழைப்பவர்கள் மேலும் உழைப்புக்குத் தங்களை ஆயத்தம் செய்து கொள்ள ஓரளவு ஓய்வெடுத்துக் கொள்ளக் கூடாது என்பது உண்மையாகாது. தொண்டாற்றுவதிலேயே தான் தேய்ந்து நலிந்துள்ளதாக ஒருவன் கூறினால், அவன் தன்னைத் தானே ஏமாற்றிக் கொள்கிறான், அல்லது இன்னும் பெரிய மோசடி செய்கிறான் என்றே நான் கருதுவேன். நிதானமாகவும் உறுதியாகவும், பற்றற்ற முறையில் ஆற்றப்படும் சேவையைவிட இத்தகைய சேவை இறைவனுக்குப் பிடித்தமானதாக இருக்க முடியுமா? நம் உடல் ஒரு இயந்திரம்

போன்றது; திறமையாகப் பணியாற்றுவதற்கு அதை நல்ல முறையில் பாதுகாத்துப் பராமரிக்க வேண்டும். நான் பத்திரமான இடத்தில் ஒதுங்கிக் கொண்டு உபதேசம் செய்வது இத்துடன் போதும். ஆனால் எனக்குத் தேவையான ஓய்வெடுத்துக் கொள்வதில் நான் வெட்கப்பட வேண்டியது ஒன்றுமில்லையென்றுதான் கருதுகின்றேன். என்னைச் சுற்றியுள்ளவர்கள் வேறுவிதமாக நினைத்துள்ளனர் என்றால், ஓய்வின் நியதியும் நெறியும் பற்றி அவர்கள் அறியாமைதான் காரணம். உரிய காலத்தில் போடும் தையல் உடையைக் காக்கிறது என்பது முதுமொழி. அதுபோலவே உரிய காலத்தில் போதிய அளவு ஓய்வு எடுப்பது உடலைக் காப்பதாகும்.

* *   * *   * *

நூற்பதிலும் பஞ்சடிப்பதிலும் நான் மிக நல்ல தேர்ச்சி பெற விரும்புகிறேன். ஒரு மணி நேரத்தில் 160 சுற்றுக்கள் நூற்பதுடன் நான் திருப்தி அடையக் கூடாது. அதைவிட நன்றாக நூற்க முடியுமென்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டுள்ளது. என்னிடம் ஒப்புவிக்கப்பட்டுள்ளது, இறைவன் இட்ட பணியென்று நான் கருதுகின்றேன். அவருக்கு விருப்பமிருந்தால் அப்பணியை நிறைவேற்ற ஆற்றலையும் வலிமையையும் அவர் தருவார். * * *

என் எடை 103, 104 பவுண்டுக்கு இடையே நிற்கிறது. உணவில் மாறுதல் இல்லை.

அன்பு,

பாபு

28-9-30

## 113

சி. மீரா,

பேசா நோன்பு மேற்கொண்ட பின் இதை எழுதுகிறேன். ‘டைம்ஸ் வாரப் படப்பத்திரிகையில்’ இன்னும் சிலரும் நீயும் சேர்ந்திருக்கும் படத்தை இப்பொழுதுதான் பார்த்தேன். நீ தக்ளி நூற்றுக்கொண்டிருக்கிறாய். உன் உடல் நலனும் நன்றாக உள்ளதாகவே தோன்றியது. பெண்கள் ஊர்வலத்தில் நீ பங்கு கொண்டு, அவர்கள் கூட்டத்தில் பேசினையென்ற செய்தியை, அதற்குப் பிறகு, ‘பம்பாய் கிரானிக்கிள்’ பத்திரிகையில் பார்த்தேன். ஆகவே நான் தங்கியுள்ள இடத்துக்கு அருகாமையில் மீண்டும் வந்துவிட்டாய். இக்கடிதம் உனக்குக் கிடைக்கும்போது, நீ ஆசிரமத்திற்கு வந்திருக்கக்கூடும். * * * சென்னையில் நீ எங்கு தங்கினாய்?

சென்ற வாரம் ‘காகா’வுக்கு என் இராட்டினம் கொடுக்கப்பட்டிருந்ததால், நான் நூற்கவேண்டியதை உன் சர்க்காவில் நூற்று முடிக்கலாமென்று எண்ணினேன். நான் சிரமப்பட்டு

முயன்றேன். ஆனால் அதை இயக்க இயலவில்லை. கதிர் சுற்ற வில்லை. மரப்பிசின் பயனில்லாமல் போயிற்று, அல்லது வேறு காரணமா என்று என்னால் அறிய முடியவில்லை. ஆனால் அது பிடிவாதமாகச் சுற்ற மறுத்துவிட்டது. அப்பொழுதுதான் சூரத் 'காண்டீப' இராட்டினம்பற்றிய எண்ணம் வந்தது. அது மிகவும் திறமையாக இயங்கும் மிக நல்ல இராட்டினம். சென்ற இரண்டு நாட்களாக, அதில் நூற்றதால், நான் தினமும் நூற்கவேண்டிய அளவை நிறைவு செய்ய முடிந்தது. அலுப்பு ஒரு சிறிதும் தோன்றவில்லை. அது என்னைப் பெரிதும் கவர்ந்துவிட்டது. நீயும் அதில் நூற்றுப் பார்க்கவேண்டும். அது உண்மையில், ஓர் ஏழைக் கேற்ற இராட்டினம். அதைக் கண்டுபிடித்தவருக்குப் பொறி யியல் நுட்பம் தெரியாது. அப்படியிருந்தும், இது எப்படி அவருக்கு உதித்தது என்பது எனக்கு வியப்பாக இருக்கிறது. ஆனால் அந்த இராட்டினத்தின் ஒவ்வொரு பாகமும், பசியால் வாடும் மக்களிடம் காட்டும் பரிவின் சின்னமாக விளங்குகிறது. அதன் கிரயம் ஒன்றரை ரூபாய். ஆனால் எட்டணுவுக்குக்கூட அதைச் செய்ய முடியுமென்று நான் நம்புகிறேன். இந்தியா விலேயே உள்ள இராட்டினங்களில் மிக இலேசானது, இதுதான். இதற்குப் பராமரிப்பு ஒரு சிறிதும் தேவையில்லை. எனக்குத் தெரிந்த இராட்டினங்கள் அனைத்திலும், மிகக் கொஞ்சம் இடத்தை எடுத்துக் கொள்வது இந்த இராட்டினம்தான். ஒரு சிறு குழந்தைகூட அதில் நூற்க முடியும். வட்டத் தகடுகளையும் கதிர் களையும் நாம் கைவசம் வைத்துக்கொண்டால், ஆயிரக்கணக்கான சர்க்காக்களை ஒரு நாளில் உற்பத்தி செய்யமுடியும். எளிமையே உருவெடுத்தது, இந்த இராட்டினத்தின் இயக்கம். நூற்கும் நூலும் இயற்கையாகவே மிகத் துல்லியமானதாக வருகிறது. நான் முதன் முதல் நூற்ற நூலே 30ம் எண்ணிக்கை நூலாக இருந்தது. நூற்பு வேகத்தில், இது எந்தச் சர்க்காவுக்கும் ஈடு தரும். அதில் ஒருசில திருத்தங்கள் செய்ய வேண்டியிருக்கிறது. உற்பத்திச் செலவில் ஒரு காசுகூட சேர்க்காமல், இந்தத் திருத் தங்களைச் செய்யமுடியும். நான் இரண்டு திருத்தங்கள் செய் துள்ளேன். அதனால் உற்பத்திச் செலவு குறைந்துள்ளது. மூல சர்க்காவில் மரப்பிடிகள் இருந்தன. அவற்றை நீக்கிவிட்டுக் குப்பையிலிருந்து எடுத்த தென்னை நாற்றுக் கயிற்றைப் பயன் படுத்தியுள்ளேன். கதிரில், கலகலப்பாய் ஒலித்துக் கொண் டிருந்த கண்ணாடி மணிகளை நீக்கிவிட்டுக் கதிரைப் பொருத்த நூலில் சில சுற்றுகள் சுற்றினேன். இதனால் இப்பொழுது ஒரு சிறிது சத்தம்கூட இல்லை. சென்ற நான்கு நாட்களாகத்தான் இதை நான் பயன்படுத்தியுள்ளேன். ஆகவே இது, புது மோகம் கொண்டவனின் கருத்தாகும். இக்கருத்தை ஓரளவு திருத்திக் கொள்ளவேண்டியிருக்கும். ஆனால் இதில் நம்பிக்கை கொண்ட வர்கள், இதைப் பயன்படுத்திப் பலனை ஆய வேண்டும். சில திருத்தங்கள் செய்யலாமென்று யோசனைகூறி, நான் இதைக் கண்டுபிடித்தவருக்கு எழுதியுள்ளேன். இதைப் பயன்படுத்திப் பார்த்து, என் பூர்வாங்க மதிப்பீடு பொருத்தமானதாக இருந்தால்

அதில் சில முன்னேற்றங்கள் செய்ய முயலுமாறு நான் கேஷுவுக்கும் எழுதியுள்ளேன். இச் சர்க்காவினால் இன்னும் சில நன்மைகள் உண்டு. ஆனால் நான் இன்னும் பல கடிதங்கள் எழுதவேண்டியிருப்பதால், அவற்றை நான் விவரிக்கப் போவதில்லை. உன் சர்க்காவில், கதிர் சுற்றத் தவறிய காரணத்தை உன்னால் கண்டுபிடிக்க முடிந்தால், கூறு.

* * *

எங்களிருவர் உடல் நலனும் நன்றாக உள்ளது. சொல்லப் போனால், என் எடை சிறிது கூடியேயுள்ளது. காய்கறிகள் சாப்பிடும்முறை நல்ல பலனளித்துள்ளது. உலர்ந்த பழங்களையும் நீக்கிவிட்டால், உணவின் விலை மிகக் கணிசமாகக் குறைவது கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். காய்கறிகளில், சென்ற இரண்டு நாட்களாக நான் பசலைக் கீரை சேர்த்து வருகிறேன். இதனால் நன்றாக வெளிக்குப் போகிறது. விட்டுவிட்டுச் சர்க்கரை வள்ளிக் கிழங்கைச் சேர்த்துக் கொள்கிறேன். இப்பொழுது என் கடிதங்கள் எல்லாம் உனக்குக் கிடைத்திருக்கும் என்று எண்ணுகிறேன். நான் ஒரு வாரம்கூட எழுதத் தவறவில்லை.

அன்பு,

பாபு

எ. ம.
5-10-'30.

# 114

சி. மீரா,

வழிதவறிய கடிதங்கள் இப்பொழுது கிடைத்திருக்குமென்று நம்புகிறேன். அவற்றை யாரும் தடுத்து நிறுத்தியிருக்க மாட்டார்கள். ஓர் இடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் செல்கையில் தாமதம் ஏற்பட்டிருக்கக்கூடும். நான் உன்னைத் திட்டியதாக நீ கூறுகிறாய். அது திட்டுதல் என்றால், அது முற்றிலும் நியாயமானதே. நீ சீர்குலைந்து திரும்பியிருக்கிறாய். அதற்கும் மேலாக, ஒரு மோசமான விபத்தும் ஏற்பட்டிருக்கிறது. இப்பொழுதாவது நீ உன் சொல்லைக் காப்பாற்றி, ஓய்வெடுக்க வேண்டும். நீ சர்தாரைப் பார்க்கச் சென்றிருந்தாய் என்று அறிந்து நான் மிகுந்த மனநிறைவு அடைந்தேன். பயணம் செய்யும் அளவுக்கு உன் உடல் நலன் இடம்கொடுத்தது என்பது அதிலிருந்து தெரிகிறது. 'காண்டீப' இராட்டினத்தில்தான் நான் இன்னமும் நூற்கிறேன். அதில் எனக்கு ஏற்பட்டிருந்த இன்பம் நீடிக்கிறது; இன்னும் சொல்லப்போனால், அதிகமாகியுள்ளது. நான் இப்பொழுது விஞ்ஞான முறைப்படி நூற்றுவருகிறேன். நூலை இழுக்கும்போது, அதன் கீழ் ஒரு கெஜ அளவுகோல் வைத்துக் கொள்கிறேன். நூலை ஒருதரம் இழுக்கும்போது,

குறைந்தது இரண்டு அடியாகிலும் நூற்க முடியும். அதுபோல் 8 நூலிழைகளை, ஒரு நிமிடத்தில் நூற்கமுடியும். ஆகவே ஒரு மணி நேரத்தில் 240 சுற்று அல்லது 300 கெஜம் நூற்க முடியும். ஆனால் நான் நூற்பதற்கும் இதற்கும் வெகுதூரம். அதற்குக் காரணம், காண்டீபத்திலுள்ள குறைபாடு அல்ல. நூல் அறுந்து விடுவதாலும், அதனால் நேரம் வீணுவதாலும், உற்பத்தி குறைகிறது. ஆனால் இப்பொழுது நூற்பிலேயே நான் முழுக்கவனம் செலுத்துவதால், நூல் அறுவது பெரிதும் குறைந்துள்ளது. ஆகவே ஒரு மணியில் 200 கெஜங்கள்வரை நூற்கிறேன். எனக்கு, இது நல்ல சாதனைதான். காண்டீபத்தைப்பற்றி என் கருத்து எதையும் இப்பொழுது பத்திரிகைகளில் வெளியிடாதே. ஆசிரமத்தில், அச்சர்க்காவைக் கொண்டு நூற்பவர்களின் அனுபவத்தையும் நான் அறியவேண்டும். எல்லாவற்றிற்கும் மேலாக, அச்சர்க்காவில் நூற்றுப்பார்க்க உனக்கு நேரமும் விருப்பமும் இருந்தால், உன் கருத்தையும் அறிய நான் பெரிதும் விரும்புவேன். இப் பரிசோதனைகளை நடத்திப்பார்க்க எனக்குள்ள அவகாசம் உனக்கு இராதென்று நான் அறிவேன். ஆகவே உன்னால் எவ்வளவு இயலுமோ, அதை மட்டுமே, நீ அவசியமென்று கருதினால் செய்வாய். இங்கு எனக்கு வேறெதுவும் செய்ய வாய்ப்பில்லாததால், முன்பு நான் பொருட்படுத்தாத ஒரு பொருள்கூட, இப்பொழுது எனக்கு ஓரளவு திருப்தி அளித்தால், அதை மிகையாகப் பாராட்டிவிடவும் கூடும். சென்ற இரண்டு நாட்களாகக் காய்ந்த திராட்சைப்பழமும், பேரீச்சம்பழமும் சாப்பிடுகின்றேன். எனக்கு இப்பொழுதுள்ள நீர்க்கோப்புக்கும் நான் சாப்பிட்டுவரும் காய்கறிகளுக்கும் எதுவும் தொடர்பு இருக்கிறதா என்றறியவே இதை மேற்கொண்டேன். அது தற்செயலாக நேரிட்டதோ என்னவோ, நீர்க்கோப்பு இன்று அனேகமாக போய்விட்டது. எப்படியும் உடல் நலன் நன்றாக உள்ளது. எடை 104.

அன்பு,

பாபு

*12-10-'30*

இன்று 100-வது தோத்திரப் பாடலை முடித்தேன். இந்துஸ்தானிப் பாடல்களில், மொழிபெயர்க்க இரண்டுதான் எஞ்சியுள்ளன. ஆகவே மொத்த மொழிபெயர்ப்பு வேலையில் சற்றேறக் குறைய, பாதி முடிந்துவிட்டது.

## 115

*சி. மீரா,*

பம்பாயிலிருந்து உன் கடிதம் கிடைத்தது.

உன் உடல் தேறியுள்ளது அறிந்து மகிழ்கிறேன். நீ சித்திரித்துள்ள சஞ்சல நிலையை மனம் அடைய இடம் கொடுக்கக் கூடாது. பற்றற்ற நிலையில் நீ பணியாற்றினால், பதட்டமடைய

மறுப்பாய்; எரிச்சலுக்கும் இடம் தரமாட்டாய். நம்மிடம் ஒப் படைக்கப்பட்டுள்ள, அல்லது நாம் ஏற்றுள்ள பணியில் முழு மனதுடன் ஈடுபட்டபின், அதன் பலாபலன்களை இறைவனிடம் விட்டுவிடவேண்டும். அங்கிலையில் பதட்டமோ, கவலையோ கொள்ள முடியாது. ஜனக மன்னரின் கதை உனக்குத் தெரியும். அவர், கடமையே உருவெடுத்தவர். அவர் தலைநகரம் பற்றி எரிந்துகொண்டிருந்தது. அது அவருக்குத் தெரியும். வதந்திப் பிரியர் ஒருவர் அதை அவரிடம் எடுத்துச் சொன்னர். 'என் தலைநகரம் சாம்பலாய்ப் போனல் எனக்கென்ன, பத்திரமாய் இருந்தால் எனக்கென்ன' என்பதுதான் அவர் தந்த பதில். அதைக் காப்பாற்றத் தம்மால் இயன்றதனைத்தையும் அவர் செய் திருந்தார். தீ பற்றிய இடத்துக்கு அவர் சென்று பதட்டம் காட்டு வதால், தீ அணைப்புப் படையினர் கவனத்தையும் மற்றவர்கள் கவனத்தையும் அவர் கலைத்துக் குழப்பம் தான் உண்டாக்கியிருப் பார். அவர் கடவுளின் கருவியே; ஆகவே தான் அவர் பதருமல், நிம்மதியாக இருந்தார். நம் பணியைச் செவ்வனே ஆற்றிய பின், அது தழைத்தாலும் சரி அழிந்தாலும் சரி, நாமும் நிம்மதியாக இருக்க முடியும்; இருக்க வேண்டும்.

காண்டீப சர்க்கா எனக்குத் தொடர்ந்து திருப்தியும் இன்ப மும் அளித்து வருகிறது. அச்சர்க்கா தடையின்றி இயங்கி வரு கிறது. முன்பு எனக்கு ஐந்து மணி நேரம் ஆகும்; இப்பொழுது மூன்று மணி நேரத்திற்குள் நூற்று முடிக்கின்றேன். மாலை முழு வதும் வேறு வேலை செய்ய அவகாசம் கிடைக்கின்றது; அப் பொழுது தக்ளியில் மட்டும் தான் நான் நூற்கிறேன். எனக்குக் கிடைக்குமளவு திருப்தி உனக்கு காண்டீபத்திலிருந்து கிடைக்கு மானல், நீ உன் பயணங்களின் போது, அதை எடுத்துச் செல்ல லாம். நான் வைத்திருக்கும் சர்க்காவின் விலை ஒரு ரூபாய் தான். அதிலேயே கதிரும், மேல்தட்டிலேயே குடைந்த ஒரு பெட்டியும், ஒரு பக்கத்தில் கதிரைப் பொருத்த, நம்ப முடியாத அளவு எளிய ஓர் ஏற்பாடும் சேர்ந்துள்ளன. எளிமையிலும் விலையிலும், இந்தச் சர்க்காவுக்கு ஈடுகிடையாது.

* * *

அன்பு,

பாபு

எ. ம.
*19-10-30*

## 116

[நான் சபர்மதி ஆசிரமத்திற்குத் திரும்பியிருந்தேன்]

சி. மீரா,

உன் கடிதமும், அத்துடன் பீஹார் சர்க்காவைப் பற்றி நீ அனுப்பியிருந்த விவரமான செய்முறைக் குறிப்புகளும் கிடைத்தன. மால் கயிறு எங்கு மாறவேண்டும் என்பது தவிர, நீ குறிப்பிட்டுள்ள மற்றவை அனைத்தையும் நான் கவனித்தேன். மால் கயிறு, சர்க்கா

வின் மேல்தட்டுக்கு அருகே மாறியதா, அல்லது தொலைவில் மாறியதா என்பது எனக்குத் தெரியவில்லை. அந்தச் சர்க்கா வேலை செய்கிறதா, இல்லையா என்பதைப் பரிசீலனை செய்ய மற்றுமொரு முயற்சி செய்வேன். அது வேலை செய்யுமென்று எதிர்பார்க்கிறேன். அதற்கிடையில், காண்டீபச் சர்க்கா, மிகவும் திருப்திகரமாக இயங்கி வருகிறது. * * *

நீ இப்பொழுது உடனடியாகச் சுற்றுப்பயணம் செய்யப் போவதில்லை என்பதறிந்து மகிழ்கிறேன். உன் உடம்பில் புது வலிமையை நீ ஊட்டி வளர்க்க வேண்டும். காகாவும் நானும் நன்றாக இருக்கின்றோம். சென்ற வியாழனன்று என் எடை 105; காகாவின் எடை 117. காய்கறிகளைக் கணிசமாகக் குறைத்துக் கொண்டு மீண்டும் பேரீச்சம்பழம் உட்கொள்கிறேன். இன்னும் சில மாறுதல்களும் செய்யப் போகிறேன்.

அன்பு,

பாபு

எ. ம.
*26-10-'30*

# 117

*சி. மீரா,*

உன் கடிதம் கிடைத்தது. எனக்குக் கிடைத்த காண்டீபச் சர்க்கா எனக்கென்று தனியாகச் செய்யப்பட்டதென்று நான் எண்ணவில்லை. அதில் காகா நூற்ற போது, உனக்கு ஏற்பட்ட இடைஞ்சல்கள் போலவே அவருக்கும் உண்டாயின. சிக்கலின் காரணத்தை நான் அறிந்து நீக்கியபின், ஒருமுறை கூட எனக்குத் தொந்தரவு ஏற்படவில்லை.

மற்றெல்லாப் பொருள்களைப் போலவே சர்க்காவைப் பொறுத்த வரையிலும் கூட, ஒருவருக்குப் பிடித்தமானது, மற்றவர் அனைவருக்கும் பிடித்தமாயிருக்குமென்ற நிச்சயமில்லை. பல்வேறு வகைகளில் உள்ள சாதக பாதகங்களை ஆராய்வது, நிபுணர்களின் பொறுப்பு. குறைவான சிரமத்துடன் அதிகப் பலன் தருவதுடன் நம் போன்ற ஊழியர்கள் திருப்தி அடையவேண்டும். எனக்குத் தேவையான பொறிநுட்பப் பயிற்சி இருந்தால், அல்லது கலையில் நான் ஒரு மேதையாக இருந்தால், பஞ்சடித்தல், நூற்றல், வில், இராட்டினம், தக்ளி ஆகியவற்றில் நிபுணனாக விரும்புவேன். இதில் முயற்சியைக் கைவிட வேண்டியதில்லையென்ற போதிலும், நான் கொள்ளக் கூடாத ஆசையாகவே இதைக் கருத வேண்டும். இங்கு நான் முயன்று நாடுவதெல்லாம், கடமையைத் தான்.

தினமும் ஒரு பஜனைப் பாடலை, அது நீண்டதாயினும் சிறியதாயினும், மொழிபெயர்க்க விரும்புகிறேன். காகாவின் உதவியுடன் மராத்திப் பாடலை மொழிபெயர்த்து முடித்தேன். வங்காளப்

பாடலையும் தொடங்கினேன். ஆனால் அப்பாடல்கள் கவிஞராலோ அல்லது அவர் மேற்பார்வையிலோ, ஏற்கனவே மொழிபெயர்க்கப் பட்டன என்பதைக் கா...விடமிருந்து அறிந்தபின் நான் முயல்வது அவற்றின் புனிதத் தன்மையைப் பாழ்படுத்துவதாகுமென்று கருதி, அம்முயற்சியைக் கைவிட்டேன். ஆகவே, இப்பொழுது நான் 42 பஜனைப் பாடல்களைத் தான் மொழி பெயர்க்க வேண்டும். மராத்திப் பாடல்கள் சிறிதாக இருந்ததால், சில இரவுகளில் மூன்று கூட செய்யமுடிந்தது. 42 நாட்களாகு முன்பே இதை முடித்துவிட இயலுமென்று எண்ணுகிறேன்.

* * * *

அன்பு,

பாபு

எ. ம.

*6-11-'30*

# 118

*சி. மீரா*

உன் கடிதம் கிடைத்தது. உன் உடல் மீண்டும் தேறி விட்டதறிந்து மகிழ்கிறேன். காண்டீபச் சர்க்காவில் நீ கட்டாய மாக நூற்க வேண்டுமென்று எண்ண வேண்டாம். உனக்கிருக் கும் பல்வேறு வேலைகளுக்கிடையே, நீ நூற்றுப் பழகிய சர்க்கா வில் நூற்றால், தினமும் நூற்பு நோன்புக்கு நீ நூற்க வேண்டிய அளவைச் சிரமமின்றி முடிக்க இயலும்.

ஆண்ட்ரூஸுக்கு என் அன்பைத் தெரிவி. நான் அவருக்கு உபசாரத்திற்கு ஒரு சாதாரணக் கடிதம் எழுத முடியும். ஆனால் அத்தகைய கடிதத்தை அவருக்கு நான் எழுத விரும்பவில்லை. அதைவிட, என் மௌனமே அவருடன் உரையாடட்டும். பல வேளை களில், பேனா அவசியமற்றது என்பது மட்டுமல்ல, இதயப் பெருக் குக்குத் தடையே யாகும்.

மகாதேவ் அதிகவேலை செய்து அலுப்பை வரவழைத்துக் கொள்ளக் கூடாது. நானும் அவருக்குக் கண்டிப்பாக எழுதி யுள்ளேன். ஆனால் தம் உடல்நலனை அவர் அசட்டை செய்யும் போதெல்லாம், நீ அவரைக் கண்டிக்க வேண்டும். சென்ற வாரமே என் நீர்க்கோப்பு அடியோடு போய்விட்டது; ஆகவே தான் உனக்கு எழுதிய போது, எனக்கு அது உதிக்கவேயில்லை. இப்பொழுது காய்கறிகள் குறைவாகவும் பேரீச்சம்பழம் அதிக மாகவும் சாப்பிட்டு வருகிறேன். நீர்க்கோப்பைத் தள்ளிவிட்டுக் காய்கறிகள் சாப்பிடும்போது என் உடல் நன்றாகவே இருந்தது.

இவ்வாரம், இதற்கு மேல் உனக்குக் கடிதம் எழுதுவதில் நேரம் செலவு செய்வதற்கில்லை.

அன்பு,

எ. ம. பாபு

*7-11-30*

நான் எண்ணியதற்கு முன்னதாகவே தோத்திரப் பாடல்களின் மொழி பெயர்ப்பை முடித்து விடுவேன் என்று எதிர்பார்க்கிறேன்.

## 119

*சி. மீரா,*

உன் கடிதம். கீதை அதிகாரங்கள் பற்றிய என் குறிப்புகளை மொழிபெயர்க்கும் ஏற்பாடு நல்லதுதான். இருவரும் சேர்ந்து செய்யும் வேலையை ஆவலுடன் எதிர்பார்க்கின்றேன். இந்த அதிகாரங்களில் என் உள்ளத்தைக் கொட்ட விரும்புகிறேன். ஆகவே உனக்கு வேலை கூடுதலாகும். உன் நேரத்தில் பெரும் பகுதியை நான் எடுத்துக் கொள்வேன். ஆனால் அந்த வேலை உனக்குப் பிரியமாயிருப்பதால், உனக்கு அலுப்பு தோன்றாது என்பதை நான் அறிவேன்.

ஆண்ட்ரூஸ் எனக்கு எழுதியிருந்த கடிதத்தை உனக்கு இத்துடன் அனுப்புகிறேன். நேராக எனக்கு எழுதாமல், அவரால் இருக்க முடியவில்லை. நான் அவருக்கு ஒரு சில வரிகள் பதில் எழுதியுள்ளேன். கேஷு, காண்டீபச் சர்க்காவில் நல்ல தேர்ச்சி பெற்று, நன்றாக வேலைசெய்யும் ஒரு சர்க்காவைச் செய்து உனக்குத் தரும் வரை நீ அதைப் பற்றிக் கவலைப்படாதே. என்னைப் பொறுத்தவரை, அது புத்தம் புதிய இன்பங்கள் தந்த வண்ணமுள்ளது. விசைச் சக்கரத்துக்குப் பயன்படுத்தி வந்த மூல மால் கயிற்றை இறுதியில் எடுத்துப் போட வேண்டியதாயிற்று. அதை இறுக்க, மேலும் வெட்ட இயலவில்லை. அந்த மால் கயிறு நல்ல கனமாகவும் உறுதியாகவும் இருக்க வேண்டும். போதிய அளவு கனத்தில், கையால் திரித்த மால் கயிறு என்னிடம் இல்லை. இச்சிறிய, சில்லரைப் பொருட்களை நானே செய்யக் கற்றுக் கொள்ளாதது, பெருந்தவறு. கையால் திரித்த மால் கயிற்றைத் தான் பயன்படுத்துவதில் நானும் உறுதியாக இருந்தேன். முதல் முயற்சியில் எனக்கு இரண்டு மணிநேரம் செலவாயிற்று. சிறிதளவுக் கயிறுதான் தேவைப்பட்டதால், அதைச் செய்வது சாத்தியமாயிற்று; முயற்சி வெற்றிகரமாகவும் முடிந்தது. இரண்டாவது தடவை செய்யப்போன போது, அரை மணி நேரத்தில் முடித்துவிட்டேன். அவசரத்திற்குக் கையில் இன்னுமொன்று வைத்துக் கொள்ள எண்ணினேன். அந்த அவசியமும் எனக்கு உடனே ஏற்பட்டது. ஏனென்றால், முதலில் நான் மால் கயிறு திரிக்கப் பயன்படுத்திய நூல்கள் மிகப் பலவீனமானவை. எத்தனை நூல்களாயினும், அவற்றைப் போதிய அளவு பல முள்ளதாக விரைவில் திரிக்கும் ஒரு வழியை இப்பொழுது நான் கண்டுபிடித்

துள்ளேன். ஆகவே மூன்றாவது தடவை மால் கயிறு செய்யும் போது, இன்னும் சீக்கிரமாகவே முடித்துவிடுவேன். அதற்கிடையில் கையால் திரித்த சிறு சிறு நூல் கயிறுத் துண்டுகளைச் சேகரித்து வைத்துள்ளேன். அதைத் தடுப்புக்குப் பயன்படுத்திக் கொள்ள முடியும். இவற்றால் சர்க்காவில் நூற்பதில் எனக்குத் தேர்ச்சி வளர்வதால், எனக்கு மிகுந்த மகிழ்ச்சியும் மனநிறைவும் ஏற்பட்டுள்ளன. * * * என் மகிழ்ச்சியை உன்னுடன் பங்கு கொள்ளத் தான் இந்த விவரங்களை உனக்கு எழுதியுள்ளேன். சர்க்கா, தக்ளி, வில், இவை என்னைப் பரவசத்தில் ஆழ்த்துகின்றன. அவற்றில் எனக்குச் சலிப்பு ஏற்படுவதேயில்லை. ஒவ்வொருநாளும், அவற்றிற்காக இன்னும் அதிக நேரம் செலவு செய்ய அவகாசம் இல்லையே என்று வருந்துகிறேன். இம்மூன்றினாலும் உற்பத்தியைப் பெருக்க விரும்புகிறேன். ஆனால் எனக்குக் கைத்திறனும் சாமர்த்தியமும் வேகமும் போதவில்லை. முதுமையின் வளையாத் தன்மையினால் தான் என்னால் வேகமாகவும் அதிகமாகவும் நூற்க இயலவில்லையென்று நான் ஏனோ எண்ணுகின்றேன். இதற்குத் தேவையான சாமர்த்தியம் எனக்கில்லை என்று அஞ்சுகிறேன். ஆனால் இந்த அற்பக் காணிக்கையையும், என் சக்திக்குள் நான் அளிக்கக் கூடிய சிறந்த காணிக்கையாக ஆண்டவன் ஏற்றுக் கொள்வாரென்ற நம்பிக்கையில் எனக்கு மனநிறைவு ஏற்படுகிறது.

குளிர்காலத்திலும் பச்சைத் தண்ணீரில் குளிப்பதை நீ தாங்கிக் கொள்ள முடியுமென்றால், அதைவிட இதமானதாகவும் நல்லதாகவும் வேறெதுவும் இருக்க முடியாது. ஆனால் இயற்கையை எதிர்த்து நீ போராடக் கூடாது. பச்சைத் தண்ணீரால் உடனடியாக உடலில் இதமான உணர்வு ஏற்படாவிடில், நீ வெந்நீரிலேயே குளிக்கவேண்டும். இரு கைகளையும் ஒன்றாய்த் தேய்த்தால், சூடு பிறக்கிறதா என்று பார்க்க வேண்டும். *1914*ல் லண்டனில், நுரையீரற் சவ்வின் அழற்சியால் தாக்கப் பட்டதன் விளைவாகத் தான் நான் மிகுந்த வருத்தத்துடன் பச்சைத் தண்ணீரில் குளிப்பதைக் கைவிட வேண்டியதாயிற்று. நீ உட்கொள்ளும் உணவு நன்றாகத் தானிருக்கிறது. இன்னும் அதிக நெய் சேர்க்க வேண்டியிருக்கும். பலத்தையும், எடையையும், உடல் சூட்டையும் காக்க நீ நிறைய நெய் சாப்பிட வேண்டுமென்பதை முந்திய அனுபவம் உணர்த்தியுள்ளது.

* * *

கல்யாணம் செய்துள்ள இந்தச் சிற்றப்பா, வயதானவரல்லவா? அறிவு மிக்கவராயினும், எழுத்துப் பிழைகளில் உன்னுடன் போட்டியிடுகிறார். உன் பிறந்த தேதியைக்* கொண்டு கணக்கிட்டால் நீ சிறு வயதுக் குழந்தைதான். ஆகவே இன்னும் பல்லாண்டுகள் உனக்குக் காத்திருக்கின்றன.

அன்பு,

எ. ம. பாபு

*13—11—'30*

---

* நவ 7; 1925. முகவுரை முதல் பக்கம் காண்க.

## 120

சி. மீரா,

உனக்கு மீண்டும் சுரம் வந்துள்ளது வருந்துதற்குரியது. ஆனல் அது குறித்துப் பதறிப் பயனில்லை. உன் இரத்த ஓட்டத்திலே நச்சு கலந்துள்ளது. ஒரு சிறிய காரணம் கிட்டினல் கூட, அது உன் உடல் நலனைக் கெடுத்து விடுகிறது. முடிந்தவரை, காரணத்தைக் கண்டு பிடித்து, அதை விலக்கி விடு. உனக்குத் தேவையானது ஓய்வு என்ருல் ஆசிரமத்தில் ஓய்வெடுக்க முடியாதென்று நீ எண்ணினல், எங்கு ஓய்வெடுக்க முடியுமென்று எண்ணுகிருயோ, அங்குச் செல்ல வேண்டும். சகன்லால் தங்கியுள்ள விஜயபுரிக்கு, அல்லது அதைப்போல் அமைதியான ஓரிடத்திற்கு நீ செல்லலாம். வேருேரிடத்திற்குப் போய் ஒரு வாரம் தங்கினல் கூட அது உனக்கு நன்மை பயக்கும்.

பீஹார் சர்க்கா இறுதியில் இயங்கச் செய்துவிட்டேன் என்று அறிய மகிழ்ச்சி அடைவாய். நீ சொன்னபடி செய்தேன்; அது வேலை செய்யத் தொடங்கியது. பிடிகளைப் பழுது பார்க்க வேண்டியிருந்தது. * * * இன்னுமொரு நல்ல செய்தி. நீ இங்கு விட்டுச் சென்ற தக்ளிகளில் ஒன்றில் சென்ற மூன்று நாட்களாக நூற்றுப் பார்த்தேன். நானே செய்து, நான் சுற்றிக் கொண்டிருந்த தக்ளியை விட, இது எனக்கு அதிகத் திருப்தி அளிக்கிறது. நான் செய்த தக்ளியில், கொக்கி மோசமாக உள்ளது. உன் தக்ளியில் அது மிக நன்ருக உள்ளது. கீதையின் முதல் அதிகாரத்தைச் சுருக்கி நான் எழுதியுள்ள தன் மொழி பெயர்ப்பை இன்று படித்தேன். உன் எழுத்துச் சாயல் அதில் இருந்தது. பொருள் முற்றிலும் காக்கப் பட்டிருந்தது.

அன்பு,

*23-11-'30* பாபு

## 121

சி. மீரா,

*29-11-'30* அன்று காலை வழிபாட்டுக்குப் பின்னுள்ள நேரத்தில் இதை எழுதுகின்றேன். இப்பொழுது குளிர் சற்று அதிகமாகவே உள்ளது. வழிபாட்டுக்குப் பின்னும், 5-30 மணிக்கு எக்காளம் ஒலிக்கும் போது நடக்கச் செல்வதற்கு முன்னும், கொஞ்சம் எழுத்து வேலை செய்கிறேன்.

நீ சென்ற கடிதம் எழுதியபோது நன்ருக இருந்தாயென்று அறிய மகிழ்ச்சி. மற்றெல்லாவற்றையும் போலவே, உடல் நலனைப் பொறுத்த வரையிலும் கூடப் பல முறை செய்யும் தவறுகளின் படிப்பினையை உணர்ந்துதான் பலன் பெற முடியும். நான் செய்த

தவற்றை ஒப்புக்கொள்வதற்கு இது பீடிகையே ஒழிய உனக்கு, எச்சரிக்கையல்ல. சென்ற வியாழனன்று எனக்குத் திடீரெனக் கடுமையான வயிற்றுவலி உண்டாயிற்று. அதை நான் தவிர்த்திருக்க முடியும். ஆனல் மடத்தனமாகச் சும்மா இருந்துவிட்டேன். கொஞ்சகாலமாக, நான் தயிரையே முக்கிய உணவாகச் சாப்பிட்டு வருகிறேன் என்பது உனக்குத் தெரியும். அது என் உடலுக்கு ஒத்துவந்தது: ஆனல் நீரேற்றிக் குடல் கழுவினல் தான், வெளிக்குப் போக முடிந்தது. எடை கூடி வந்தது. என் உடல் நலனும் மொத்தத்தில் நன்ருக இருந்தது. ஆகவே, தயிரைத் தொடர்ந்து சாப்பிட்டேன். அதுவும் கெட்டிப் பகுதியைச் சாப்பிட்டு வந்தேன். அதனல், குடல் கழுவிய போதிலும், மலச்சிக்கல் ஏற்பட்டது. அந்த நேரத்தில் நான் எச்சரிக்கையை ஏற்றுக்கொண்டு, ஒரு நாளுக்குத் தயிர் சாப்பிடாமல் இருந்திருக்க வேண்டும்; உணவு எதுவுமே ஒரு நாள் முழுவதும் சாப்பிடாமல் இருந்தால், இன்னும் நன்ருக இருந்திருக்கும். ஆனல் அதைச் செய்யவில்லை; ஆகவே துன்பப்பட்டேன். சாப்பிட்டதை நானே வெளியில் கொணர்ந்தேன். அதன் பின் சில மணி நேரத்தில், வலி குறைந்தது. உலர் திராட்சைத் தண்ணீரைத் தவிர, வேறெதுவும் நாள் முழுவதும் சாப்பிடவில்லை மூன்று பவுண்டு எடை குறைந்த போதும், உடல் நன்ருகிவிட்டது. எனக்கு எப்பொழுதும் இப்படித்தான் நேரிடுகிறது. 95 பவுண்டுக்கு மேல், என் எடை, உறுதியானதல்ல; அதில் பெரும் பகுதி விஷச் சத்தாகவும் இருக்கலாம். சாத்தியமானல், மலச்சிக்கலைத் தவிர்க்க முடிவு செய்தேன்; ஆகவே தயிரை நிறுத்தியதைத் தொடர்ந்துள்ளேன். (எக்காளம் இப்பொழுது ஒலிக்கிறது. இப்பொழுது இக்கடிதத்தை நிறுத்தி வைக்கிறேன்) இரவு எட்டு மணிக்கு இதைத் தொடர்ந்து எழுதுகிறேன். சமைத்த இலைகள், தக்காளி, பேரீச்சம்பழம் அல்லது உலர் திராட்சை ஆகியவற்றை இப்பொழுது உண்கிறேன். குடல் தானகச் சுத்தமாகிறது; பலமும் நிலையாக உள்ளது; எடையும் மேலும் குறையவில்லை. நேற்று சர்க்கரை வள்ளிக் கிழங்கையும், இன்று பன்னிரண்டு பாதாம் பருப்புகளையும் சேர்த்துக் கொண்டேன். இம் மாறுதல் பற்றி எவரும் கவலை கொள்ளத் தேவையில்லை. எனக்குப் பலவீனமாகத் தோன்றினலோ, எடை குறைந்து வந்தாலோ, நான் உடனே மீண்டும் பால் சாப்பிடத் தொடங்கி விடுவேன். பாலைச் சிறிது காலம் தவிர்த்திருந்ததனல் நன்மையே ஏற்படும். இம் மாறுதல் எனக்கு ஒத்துக் கொண்டாலோ, எனக்கு அது கூடுதலான இன்பம் தரும். ஆகவே இம் மாறுதல் பற்றி நீங்கள் அனைவரும் மகிழ்ச்சி அடைய வேண்டும். இம்மாறுதல் பலனளித்தால், நல்லதுதான். பலனளிக்காவிடினும் நல்லதுதான். நான் இடர் துணிந்து எதுவும் செய்யப் போவதில்லை.

காகா சென்று விட்டார். செல்கையில் அவர் அழுதுவிட்டார். நாங்கள் இருவரும் ஒருவர்க்கொருவர் அவ்வளவு நெருக்கமாகி விட்டோம். அவர் சென்ற இரண்டு மணி நேரத்தில், பியாரிலாலை என்னிடம் அனுப்பினர்கள். அவர் எனக்கு முழுவதும் பொறுப்பு

ஏற்றுக் கொண்டுள்ளார். உன் சர்க்காவை அவரிடம் கொடுத்தேன். அதில் 83 சுற்றுகள் நூற்ருர். நான் அதை ஏற்பாடு செய்து வைத்திருந்தபடியே நன்கு இயங்கியது. பிடியில் சில சீர்திருத்தங்கள் செய்யத் திட்டமிட்டுள்ளோம். நான் இதை எழுதும் நேரத்தில் அவர் இத்தகைய சீர்திருத்தம் ஒன்று செய்து கொண்டிருக்கிருர். ஏனே, சர்க்காவையும் அதன் தத்துவத்தையும் பற்றி மட்டுமே என்னுல் சிந்திக்க முடிகிறது. காண்டீபச் சர்க்காவிலும் பல முன்னேற்றங்களும் மாறுதல்களும் செய்துள்ளோம். சீர்திருத்தப்பட்ட சர்க்காவில் நாளை நூற்றுப் பார்க்க எண்ணியுள்ளேன். இடம் மாறக்கூடிய ஒரு சக்கரத்தையும் இழுப்பு விசைக்கு ஒரு விசையையும் வைத்துக் கொள்ளப் போகிறேன். அது நன்ருக வேலை செய்தால், உற்பத்தி பெருக வேண்டும். தக்ளியில் நூற்பதில் நான் படிப்படியாகத் தேர்ச்சி பெற்று வருகிறேன். உன் தக்ளியில், நான் மணிக்கு 87 சுற்று வரை நூற்கக் கற்றுள்ளேன். எஃகுத் தக்ளியில் நான் முதலில் நூற்றுப் பார்க்க வேண்டுமென்று விநோபா கூறுகிருர். அவர் இரண்டு தக்ளி அனுப்பியுள்ளார்; அதில் நூற்றுப் பழகி வருகிறேன். எதிர்பார்த்த திருப்திகரமான பலன் இன்னும் எனக்குக் கிட்டவில்லை. ஆனல் ஒவ்வொரு நாளும் எனக்கு நம்பிக்கை வளர்ந்து வருகிறது. வெகு விரைவில், தக்ளியில் மணிக்கு நூறு சுற்று நூற்க முடியுமென்று எதிர்பார்க்கிறேன்.

* * *

அன்பு,

பாபு

பின்குறிப்பு :

பீஹார் சக்கரத்தில் நன்கு நூற்க பியாரிலால் தொடங்கினர். ஆனல் இறுதியில் அது தோல்வியில் முடிந்தது. மற்ற காண்டீபச் சர்க்காவை ஏற்பாடு செய்து தந்தேன். அது தடையின்றி, மிக நன்ருக இயங்கியது. சிறை அதிகாரியின் தயவால், காண்டீபச் சர்க்காவில், நான் விரும்பிய திருத்தங்களைச் செய்துள்ளேன். அது நன்ருக வேலை செய்யுமென்று எதிர்பார்க்கிறேன். இப்பொழுது (1-12-30 அன்று இரவு 8-45 மணிக்கு) முதன் முறையாக அதில் நூற்றுப் பார்த்தேன். உணவுப் பரிசோதனையும் தொடர்ந்து நடந்து வருகிறது.

பாபு

## 122

அஞ்சலட்டை.

சி. மீரா,

நேற்று மாலை வந்த ஆசிரமக் கட்டில், சஞ்சலமூட்டும் உன் கடிதம் இருந்தது. அது எனக்குக் கவலை அளிக்கவில்லை. ஆனல் என் சிந்தனையைத் தூண்டுகிறது. இப்படி உடல் நலம் முறிவதன் காரணமென்ன? எப்படியும் நீ பூர்ண ஓய்வு எடுத்துக் கொள்ள

வேண்டும். உடலும் உள்ளமும் நிம்மதியாக இனிதிருக்க வேண்டும். ஆகவே வேலைகளை நிதானமாக மேற்கொள். கீதையின் ஆரு வது அதிகாரத்தைப் படி. யோகம் மேற்கொள்ளும் போது. பதட்டமின்றி, அமைதியாக மேற்கொள்ள வேண்டும். நாம் செய்யும் வேலை யோகமே. தினமும் எனக்கு ஓர் அஞ்சலட்டை எழுது.

அன்பு,

*4-12-30* பாபு

# 123

சி. மீரா,

உன் உடல் நலன் பற்றி விசாரித்து வியாழக்கிழமை நான் உனக்கு ஓர் அஞ்சலட்டை அனுப்பினேன். அது உனக்குக் கிடைத்திருக்கும். அதற்கு உன் பதில் திங்கட்கிழமைக்கு முன்பு, அல்லது அன்ருவது கிடைக்குமென்று எதிர்பார்த்து அதைப் பார்த்துவிட்டு இக் கடிதத்தை எழுதலாமெனக் கடைசிவரை ஒதுக்கி வைத்திருந்தேன். மலச்சிக்கல் பிடிவாதமாய் இருப்பது, சஞ்சலம் தருகிறது. இக் கடிதம் உனக்குக் கிடைக்கும்போது, சுரத்தின் விளைவுகள் எல்லாம் அடங்கியிருக்கும் என்று எதிர் பார்க்கின்றேன். சில நாட்களுக்குப் புரதச் சத்துணவை அடி யோடு விலக்கியதன் மூலம் எளிதில் என் மலச்சிக்கலைத் தீர்த் துக் கொண்டேன். பாதாம் பருப்பு மூலம் புரதச் சத்து பெறுகிறேன். மீண்டும் பால் சாப்பிடாமலே இருக்க முடியு மானல், அது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும். சற்று பலவீனம் ஏற்பட்டுள்ளது வெளிப்படையாகவே தெரிகிறது. அதைத்தவிர, இதனல் நல்ல பலன் கிட்டியுள்ளது. பாதாம் பருப்பை எச்சரிக்கையாகச் சாப்பிடுகிறேன். வெறும் காய்கறிகளும் ஓர் அவுன்சு பாதாம் பருப்பும் சாப்பிடுவதால், வேண்டிய பலம் பெறமுடியாது. அதுவும் சென்ற இரு நாட்களாகத்தான் ஒரு அவுன்சு சாப்பிடுகிறேன். ஒரு உணவு தான்யம் சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று எண்ணுகிறேன். எதைச் சேர்த்துக் கொள்வது என்று இன்னும் தீர்மானம் செய்யவில்லை. கூட்டும் ரொட்டியும் சாப்பிட்டுப் பார்க்க விரும்புகிறேன். சிறையில் அன் றன்று என்ன உணவு தயாரிக்கிருர்களோ, அதையே சாப்பிட்டு, அது எனக்கு ஒத்துக் கொண்டுவிட்டால், இப்பிரச்னை எனக்கு முற்றிலும் திருப்திகரமாகத் தீர்ந்துவிடும். ஆனல் நான் அவசரப் படக்கூடாது; அதிலும் முக்கியமாகப் பிடிவாதம் காட்டக்கூடாது. எனக்கு அவசியமென்று தோன்றியவுடன், நான் நிச்சயம் மீண்டும் பால் சாப்பிடத் தொடங்குவேன்.

இன்னும் பத்து நாட்களில் 'பஜனவளி'யின் மொழி பெயர்ப்பை முடித்துவிடுவேன். அது எனக்கு மிகுந்த இன்பம்

அளித்துள்ளது. மொழிபெயர்ப்பு எனக்குத் திருப்தியாயில்லை. அது அன்புக் காணிக்கை என்பதைத்தவிர, அதில் வேறு அருமை கிடையாது; இலக்கிய நயம் நிச்சயம் கிடையாது. ஆனல் அந்தப் பஜனைகளின் பொருள் உனக்கு விளங்கச் செய்யும். அதுதான் என் குறிக்கோளாக இருந்தது. இதை முடித்தவுடன், குஜராத்தி கீதைக்கு முன்னுரையின் மொழிபெயர்ப்பைத் தொடங்க விரும்பு கிறேன். கீதையின் செய்யுள்களை நான் மொழிபெயர்க்கப் போவ தில்லை. ஏற்கனவே உள்ள ஒரு மொழிபெயர்ப்பை எடுத்துக் கொண்டு, என் மொழிபெயர்ப்பு அதிலிருந்து எங்கு வேறுபடு கிறது என்பதைச் சுட்டிக்காட்டி, விளக்கக் குறிப்புகளை மட்டும் மொழிபெயர்க்க விரும்புகிறேன். இது என் வேலையை எளி தாக்கி, உழைப்பைப் பெரிதும் மிச்சப்படுத்தும். காகாவுக்கும் இதைத் தெரிவிக்கவும். இந்த யோசனையில் அவருக்கும் ஆர்வம் இருக்கும்.

காண்டீபத்தில் நாங்கள் செய்த சீர்திருத்தங்கள், நாங்கள் எதிர்பார்த்ததைவிட மிக நன்ருக அமைந்துள்ளன. சர்க்கா மிகவும் லாகவமாக இயங்குகிறது. முன்பு இல்லாத இழுப்பு, விசை, இப்பொழுது போதிய அளவு உள்ளது. இந்த மாறு தல்கள்பற்றிய விவரங்களை எல்லாம் சொல்லி, உனக்கு அலுப்பு உண்டாக்கப் போவதில்லை. கேஷுவுக்கு எழுதியுள்ள கடிதத்தில் விவரமாகச் சொல்லியுள்ளேன். வேகத்தைப் பொறுத்தவரை, வேறெந்தச் சர்க்காவும் அதை மிஞ்சமுடியாதென்று நான் நம்பு கிறேன். ஆனல் இதைப் பரிசோதித்துப் பார்க்கவேண்டும். என் நம்பிக்கை அதிக நூலை உற்பத்தி செய்யாதல்லவா?

நீ நிறைய ஓய்வு எடுத்துக் கொள்ளவேண்டும். உணர்ச்சி அழுத்தத்துடன் வேலை செய்யாதே. இழுத்துப் பிடித்து இயக்குவது, இராட்டினத்துக்கு நல்லது; ஆனல் மனிதருக்கு நல்லதல்ல.

அன்பு,

பாபு

*8-12-'30*

## 124

*13-12-'30*

சிரஞ்சீவி மீரா,

உன்னுடைய அஞ்சல் அட்டை கிடைத்தது. உன்னிடமிருந்து வேறு செய்தி எதுவும் வராததால் நீ நலமாக இருக்கிருய் என்று எண்ணுகின்றேன். ஒவ்வொரு முறையும் உனக்குச் சுரம் வரும் போது அதைத் தீர்க்க இயற்கையை ஒட்டிய சிகிச்சை செய்து கொள்வதால் சீக்கிரமாகவே நீ நலமாகி விடுகிருய். ஆனல் ஒவ்

வொரு தாக்குதலுக்குப் பின்பும் உடலில் பலவீனம் ஏற்படுகிறது. இதைப்போக்க வேண்டுமானல், நீ நிறைய ஓய்வு எடுத்துக் கொண்டு மன நிம்மதியான நிலையில் இருக்கவேண்டும். மனதைக் கட்டுப்படுத்துவதுதான் மிகக் கடினமென்று எண்ணுகிறேன். இதற்கு தலையாய வழி, கீதையைப் பின்பற்றுவதுதான். மன திற்கு அதிர்ச்சி ஏற்படும்போதெல்லாம் கீதையைக் கடைப் பிடிக்கத் தவறிவிட்டாய் என்றுதான் கூறுவேன். வாத்தின் முதுகின் மேலே நீர் நிற்காமல் செல்வதுபோல, நல்ல செய்தியும் கெட்ட செய்தியும் உன்னைப் பாதிக்காமல் கடந்து செல்ல வேண்டும். எந்தச் செய்தி நமக்குக் கிட்டும்போதும், நாம் ஏதும் நடவடிக்கை எடுத்துக் கொள்ள வேண்டுமா என்று ஆராய்வது மட்டுமே நம்முடைய கடமை. அவ்வாறு நடவடிக்கை அவசிய மானல் இயற்கையின் கருவி என்ற முறையில் நாம் அந்தக் கடமை யைச் செய்துவிட்டுப் பலாபலன்களைக் கருதாமலும் அவற்ருல் பாதிக்கப்படாமலும் இருக்க வேண்டும். பலன் எதையும் உரு வாக்குவதில் பல கருவிகளுக்குப் பங்கு உண்டு என்பதை உணர்ந்தால் இப்பற்றற்ற நிலையை மேற்கொள்வது விஞ்ஞான முறைப்படியே அவசியமாகுமென்பது தெளிவாகும். நானே எதையும் செய்துவிட்டேன் என்று துணிந்து எவரால் சொல்ல முடியும்? இவை அனைத்தும் உனக்குத் தெரியும் என்பதை நான் அறிவேன். இருந்தபோதிலும் அறிவால் உணரப்படுவது இதயத்திற்கு ஊடுருவ வேண்டும் என்பதனல் இந்த உண்மையை வற்புறுத்த விரும்புகின்றேன். அறிவில் பதிவதுடன் நிற்கும் உண்மை எதுவும் அறிவை அழுத்தும் ஒரு சுமையாகத்தான் இருக்கும். அறிவால் உணர்கின்ற உண்மை எதையும் உடனடி யாக இதயத்திற்கும் அளிக்கவேண்டும். அவ்வாறு அளிக்கா விட்டால், உண்மையின் கரு சிதைந்து, அறிவிலே நச்சுப் பொருள்போல பரவிவிடுகிறது. அறிவில் புகும் நச்சு, உடல் முழுவதும் பரவிவிடும். ஆகவேதான் மூளையை, மற்ற உறுப்பு களுக்குச் செய்தி அனுப்பும் நிலையமாகப் பயன்படுத்தும் அவ சியம் எழுகிறது. அதுதான் மூளையின் வேலை. அறிவில் படும் எதையும் செயல்படுத்த இதயத்திற்கு அனுப்பிவிட வேண்டும்; அல்லது அதன் மேல் வேறு நடவடிக்கை தேவையில்லை யென்று உடனடியாக நிராகரித்துவிட வேண்டும். இப் பொறுப்பை நிறைவேற்றுவதில் அறிவு தவறுவதால்தான், நம் ஊனை வருத்தும் ஊறுகள் பலவும் உள்ளத்தில் சோர்வும் ஏற்படுகின்றன. அறிவு தன்னுடைய பொறுப்பை சரிவர ஆற் றினல் மூளை அலுப்படைய அவசியமேயில்லை. ஆகவே ஒவ் வொரு முறையும் நமக்கு நோய் ஏற்படும்போது நாம் தவருன உணவு உட்கொண்டு விட்டோம் என்பது மட்டும் காரணமல் லாமல், மூளை தன்னுடைய பொறுப்பைச் சரிவர ஆற்றவில்லை என்பதும் காரணமாகும். கீதையின் ஆசிரியர் இந்த உண்மையை உணர்ந்துதான் மிகத் தெளிவான சொற்களிலே இந்த அரு மருந்தை உலகிற்கு அளித்தார். உன் மனதை எதுவும் வாட்டும் போதெல்லாம் நீ கீதையின் அடிப்படை உபதேசத்தைப்பற்றிச்

சிந்தித்து அச்சுமையைக் களைய வேண்டும். உன்னை வருத்து கின்ற மலச்சிக்கல் மீண்டும் நேரிடாது என்று நாம் நம்புவோமாக.

* * *

பாலைத் தவிர்க்கும் பரிசோதனையை இனியும் தொடர்ந்து நடத்தி வருகின்றேன். அதனால் தீமை எதுவும் ஏற்படவில்லை. எடையில் 3 பவுண்டு மேலும் குறைந்துள்ளது. ஆனால் வலிமை குறையவில்லை. உணவு தானியங்களையும், பாதாம் பருப்பையும் சாப்பிடுவதில் நான் மிகவும் கண்டிப்பாகவும் நிதானமாகவும் இருப்பது, என் எடை குறைவதற்கு ஒரு காரணமாகும். 3 தோலாக்கள் அளவுதான் பாதாம் பருப்பு சாப்பிட்டு வருகிறேன். 11 மணிக்கு ஒரு முறையும், 5 மணிக்கு ஒரு முறையும், ஒவ்வொரு முறையும் 2 தோலாக்கள் கம்புச் சோள ரொட்டி உட்கொள்ளு கிறேன். எடை விரைவில் கூடலாம். மலச்சிக்கல் எதுவும் ஏற் படுவதேயில்லை. குடலில் நீர் ஏற்றிக் கழுவுவது நல்லமுறை யல்ல என்றும், சாத்தியமானல் அதைத் தவிர்க்க வேண்டு மென்றும் நீ கருதுவதுபோலவே நானும் கருதுகின்றேன். பாலைத் தவிர்த்துவிட்டதால் இது சாத்தியமாயிற்று. வார்தாவிற்கு நான் சென்றபோது பாலைத் தவிர்த்தபோதும் இந்த முன்னேற்றம் ஏற்பட்டது, உனக்கு நினைவு இருக்கலாம்.

* * *

வார்தாவில் உட்கொண்ட உணவில் ஒரு சில மாறுதல்களைச் செய்து இப்போது உணவு உட்கொண்டு வருகிறேன்.

உனக்கு உடல் நலக் குறைவு ஏற்பட்டால் அதை எனக்கு உடனே தெரிவிக்கத் தயங்காதே. வாரம் ஒரு முறைதான் கடிதம் எழுதவேண்டுமென்று காத்திருக்க வேண்டாம்.

அன்பு,

பாபு

## 125

மாலை 4-30 மணி

சி. மீரா,

என் உடல்நிலை பற்றி நீ கவலை கொண்டுள்ளாய் என்று உன் கடிதத்திலிருந்து தெரிகிறது, இதற்குச் சற்றும் அவசியமில்லை. வியாழக்கிழமை எடை எடுத்த போது. $1\frac{1}{2}$ பவுண்டு கூடியிருந் தது; ஏழு நாட்களில் இவ்வளவு கூடியுள்ளது மிக நல்ல முன் னேற்றம். எனக்குப் பலவீனம் எதுவும் தோன்றவில்லை. தினம் இரண்டு மணிநேரம், அதிக அலுப்பு தோன்றாமல், நின்று கொண்டே தக்ளியில் நூற்கிறேன். தக்ளியில் நூற்று முடித்து விட்டு, இப்பொழுது தான் கடிதம் எழுத உட்கார்ந்துள்ளேன். சென்ற முறை செய்த தவறுகள் அனைத்தும் தவிர்க்கப்

பட்டுள்ளன. *** உணவு நன்கு சமைக்கப்படுகிறது—காய்கறியும் சப்பாத்தியும் எனக்குக் கிடைக்கும்போது, சப்பாத்தி மீண்டுமொரு முறை சுடப்படுகிறது; சென்ற முறை, உணவு தான்யங்கள், பருப்பு வகைகள் உட்பட, அனைத்தையும் பச்சையாகச் சாப்பிட்டு வந்தது உனக்கு நினைவிருக்கலாம்.* பச்சையாக உணவு தான்யங்களைச் சாப்பிடத் தொடங்குமுன் நான் என்ன சாப்பிட்டு வந்தேனோ, அனேகமாக அதைத் தான் இப்பொழுது சாப்பிட்டு வருகிறேன். கோதுமைக்குப் பதிலாக, கம்பு அல்லது சோளம் சாப்பிடுகிறேன் என்பதுதான் வேறுபாடு. இந்த மாறுதலும் நன்மைக்கே. ஒருமுறை கொதிக்கும் தண்ணீரில் எலுமிச்சையும் உப்பும் சேர்த்துக் குடிக்கின்றேன். இவ்வாறு உடல்நலன் தேறியுள்ளது போல் தோன்றிய போதிலும், மலச்சிக்கல் எதுவும் ஏற்பட்டாலோ, பலவீனம் தொடர்ந்தாலோ, எடை வரவரக் குறைந்தாலோ, இவை மூன்றில் எது நேரிட்டாலும், நான் மீண்டும் பால் சாப்பிடத் தொடங்குவேன். ஆனால் இப்பொழுது, ஆரோக்கியத்தின் நிறைவை அனுபவிக்கும் நேரத்தில், பாலைத் தவிர்த்துக் கம்பும் சோளமும் சாப்பிடும் இன்பத்தை நான் கைவிட முடியாது. மேலும் இந்தச் சப்பாத்திகளின் ருசி எனக்குப் பிடித்திருக்கிறது. இவ்வளவு விரிவாகவும் விளக்கமாகவும் நான் எழுதியதற்குப் பின்பாகிலும் நீயும் மற்ற நண்பர்களும் திருப்தியடைந்து, எதிர்காலத்தைப் பற்றிக் கவலை கொள்ளாமல் இருப்பீர்களென நம்புகிறேன்.

உன்னைப் பொறுத்தவரை. உன் உணவைப் பற்றிக் கவனமாய் இருப்பது அவசியமென்ற போதிலும், உனக்குள்ள முக்கியமான தொந்தரவு, உன் மனநிலையைப் பற்றியதுதான் என்று கருதுகிறேன். உன் உள்ளம் வருந்தினால், உடனே அதன் அதிர்ச்சி உன் உடலில் தெரிகிறது. இந்த அதிர்ச்சி நிலையை நீ அகற்ற வேண்டும். 'எதையும் பற்றிக் கவலைப்படாதே'. 'வயலில் உள்ள அல்லி மலர்களைப் பார்; அவை பாடுபடுவதுமில்லை ; நூற்பதுமில்லை; ஆயினும் அவற்றில் ஒன்றுக்குள்ள அணியும் அழகும், மாட்சிமை மிக்கச் சாலமனுக்குக் கூட இருக்காது'. நான் இந்த மேற்கோளைச் சரியாகக் கையாண்டுள்ளேனோ, என்பதறியேன். ஆயினும், வெளிப் பார்வைக்குத்தான் அல்லி மலர்கள் நூற்காமலும் உழைக்காமலும் இருப்பதாகத் தோன்றுகின்றனவே ஒழிய, உண்மையில் இரண்டையும் அவை செய்கின்றன. ஆனால் அத்துணை இயற்கையாக அவை செய்கின்ற காரணத்தால், அவை பாடுபட்டுச் சுற்றுவது நம் கண்ணுக்குப் புலனாவதில்லை. அவை பாடுபடாவிடில், பட்டுப்போய்விடும். நமக்குள்ள ஆணவமும், அதை ஒட்டிய பற்றுதல்களும், விருப்பு வெறுப்பும், அவற்றிற்கு இல்லை என்பதுதான் வேறுபாடு. ஆனால் நாமும் அவற்றைப்போல் பற்றற்ற முறையில் பாடுபடும்போது, நம் உழைப்பு புலப்படாமலும், ஆகவே உடலைக் கெடுக்காமலும் இருக்கும். இரவு ஏழரை மணி. நீயும், நானும், நாம் அனைவரும், இந்த அருள் நிலையை அடையத்

---

* சபர்மதி ஆசிரமத்தில் முன்பொருமுறை உணவு முறையில் மாறுதல் செய்து சோதனை நடத்தியபோது, அவருக்குக் கடுமையான வயிற்று அளைச்சல் கண்டிருந்ததை நான் பாபுவுக்கு நினைவுபடுத்தியிருந்தேன்.

தெளிவுடனும் துணிவுடனும் முயல வேண்டும். இல்லாவிடில், நாம் கீதையைப் படிப்பதெல்லாம் வீண் தான்.

கணப்பு (ஸ்டவ்) அடுப்பு உன்னைச் சுட்டுவிடாமல் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இந்த அடுப்பைப் பயன்படுத்திக் கூர்ஜரப் பெண்கள் தங்களைச் சுட்டுக் கொண்டுள்ளது உனக்குத் தெரியும். புடவைகள் காற்றில் பறப்பதால், அடுப்பை ஏற்றும்போது ஆபத்து அதிகமாகிறது. அடுப்பு தரையில் இருப்பதால், அவர்கள் குனிய வேண்டியிருக்கிறது. கொழுந்து விட்டு எரியும் சுடர் மிக எளிதில் புடவை மடிப்பில், அல்லது முனையில் பற்றிக் கொள்கிறது. ஆகவே உலோகத் தகடு இட்ட முக்காலிமேல் அந்த அடுப்பை நீ வைத்துக் கொள்வது நல்லது. மேலும் உன் சிறிய அறையில், மிகக் கொஞ்ச இடமே உள்ளது. எவ்வாறாயினும், உனக்கு நான் எச்சரிக்கை செய்து விட்டேன். முன்னெச்சரிக்கையாக, என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமோ, அவற்றை நீ எடுத்துக் கொள்வாய்.

* * * *

என் கீதையின் மொழி பெயர்ப்புக்கு முன்னுரையின் முதல் பகுதியை இப்பொழுது தான் முடித்துள்ளேன். தினமும் ஒரு பாராவாகிலும் எழுத உத்தேசித்துள்ளேன்; அம்முயற்சியில் நான் வெற்றி பெற்றால், முன்னுரையை எழுதி முடிக்க நெடுநாட்கள் ஆகாது.

நான் செய்ய விரும்பிய சீர்திருத்தங்களில் அனேகமாக அனைத்தும், புதிய காண்டீபச் சர்க்காவில் இடம் பெற்றுள்ளன. இரு 'மால்'களுக்கு இரண்டு விசைகள் உள்ளன. இசைக் கருவி போல், அது இனிது இயங்குகிறது. அதற்கு அதிகக் கவனம் தேவையில்லை. இந்த மாறுதல்கள் செய்ய முடிந்ததற்கு, சிறை அதிகாரிக்கும், என்னுடன் சக கைதியாக உள்ள ஆங்கிலேய நண்பருக்கும் நான் கடமைப்பட்டிருக்கிறேன். அந்த ஆங்கிலேய நண்பர் பொறிநுட்பத் திறமை பெற்றவர்; இவ்வேலையில் மிகுந்த அக்கரை காட்டியுள்ளார். பிடியில் அவர் விசையைப் பொருத்தியிருக்கும் விதம், மிகவும் சாமர்த்தியமானது. இவ்வளவு எளிதானது என்று சொன்னால் எவரும் நம்பமாட்டார்கள்; அதே சமயத்தில் மிகத் திறமையாகவும் இயங்குகிறது. ஆனால் இதைப் பற்றியே பேசி உன் நேரத்தை எடுத்துக் கொள்ளக் கூடாது.

சுரேந்திராவை நீ கவனித்துக் கொள்வது அறிந்து நான் மகிழ்கிறேன். அவன் தன் உடல்நலனைப் புறக்கணிக்கும் விதம், பெரும் பாவமாகும். தம் யாக்கையைக் கழுதையென்று கூறிய புனிதர் பிரான்சிஸ் கூட, உடலை ஓரளவு பேணினர். சொல்லப்போனால், கழுதை, பொறுமை மிக்கப் பயன்தரும் பிராணி அல்லவா? கழுதையின் உடன் பிறப்பான மனித உடலும் நல்ல முறையில் பயன்படும்—அதற்குச் செல்லம் கொடுத்துக் கெடுக்காமலோ, அடியோடு புறக்கணிக்காமலோ இருந்தால்.

காலை வழிபாட்டின் முதல் செய்யுளை இங்கு தருகிறேன்:

"இதயத்தில் உணரப்படும் உட்பொருளை, அழிவற்றதும் (சத்) அறிவானதும் (சித்), இலட்சிய மனிதரால் எய்தப்படும் நிலையாக, ஒப்பற்ற உச்ச நிலையாக உள்ள ஆனந்தமானதும் (சுகம்) ஆன பொருளை, நான் அதிகாலைப் பொழுதிலே அர்ச்சிக்கின்றேன். கனவு, நனவு, ஆழ்ந்த உறக்கம் ஆகிய நிலைகளை எப்பொழுதும் உணரும், பரிசுத்தப் பிரும்மா நான்; மண், நீர், விசும்பு, ஒளி, வளி ஆகிய தனிமங்களின் சேர்க்கையான யாக்கை அல்ல நான்". சென்ற மாதம் 6ந் தேதி முதல் செய்யுளைத் தொடங்கினேன் என்பது உனக்குத் தெரியுமா?

முதல் செய்யுளையே திருத்தும் அவசியம் ஏற்பட்டது எனக்கு வருத்தத்தைத் தந்தது. நான் சிந்தனை செய்யச் செய்ய, அதன் பொருள் எனக்குத் தெளிவாயிற்று. மொழி பெயர்ப்பில் எத்தனை முறையும் மாறுதல் செய்வது பற்றி நான் கவலைப்படவில்லை. முன் பெல்லாம் நான் இச் செய்யுளை உச்சரிக்கவே கூசுவேன். அதன் கூற்றில், ஆணவம் மிகுந்திருக்கிறது என்று கருதினேன். ஆனால் அதன் பொருளை மேலும் தெளிவாக நான் அறிந்த போது, ஒரு நாளைத் தொடங்குவதற்கு இதுதான் மிகவும் பொருத்தமான சிந்தனை என் பதை உடனடியாக உணர்ந்தேன். நிலையற்ற, உறங்கும் ஊனுடல் அல்ல நாம், எண்ணற்ற அந்த உடல்களிலே ஊடுருவி நின்று, அகனமர்ந்த ஆன்ம உணர்வுதான் நாம், என்ற புனித அறிவிப்பே, அச் செய்யுள். உயிர்த் தத்துவத்தை உள்ளத்துக்கு நினைப்பூட்டு வது, செய்யுளின் முதற்பகுதி; நாமே அந்த உயிர்த் தத்துவம் என்று அறிவுறுத்துவது செய்யுளின் இரண்டாம் பகுதி. அப்பரம் பொருளின், பிரும்மாவின், வர்ணனையும் மிகப் பொருத்தமானது. அதுவே உள்ளது; வேறெதுவும் உள்ளது அல்ல. (சத்). அது அனைத்தும் அறிவு அல்லது ஒளி (சித்); ஆகவே அது இன்பம் (சுகம்); அல்லது பொதுவாகச் சொல்வது போல், ஆனந்தம். மற்றதெல்லாம் எளிதானது. இந்த மொழி பெயர்ப்பை, உன்னிடம் உள்ள வால்ஜி பாயின் மொழி பெயர்ப்புடன் ஒப்பிட்டுப் பார். முக்கிய மான வேறுபாடு இருக்கும் இடத்தில், அவருடைய மொழி பெயர்ப்பை நான் ஏற்றுக்கொள்வேன். அறிவுப் புலமையில் அவ ருக்கு நான் நிகரல்ல. ஆண்டவன் அருளால், ஒவ்வொரு வாரமும் உனக்கு இது போன்ற அன்புப் பரிசு ஒன்றை அளிப்பேன். இதோ எக்காளம் ஒலிக்கிறது; இரவு ஒன்பது மணி ஆகப்போகிறது என் பதன் அறிகுறி.

அன்பு,

பாபு

எ. ம.

*20—12—'30*

# 126

சி. மீரா,

உன் கடிதம். இம்முறை, கடிதக் கட்டு இரண்டுநாட்கள் கழித்து வந்ததால், நான் மிகச் சுருக்கமாக எழுத வேண்டும். ஆகவே இரண்டாம் செய்யுளின் மொழிபெயர்ப்புடன் தொடங்கு கிறேன். ''பேச்சு அனைத்துக்கும் தம் அருளே காரணமாக உள்ள போதிலும், எண்ணத்துக்கும் பேச்சுக்கும் அப்பாற்பட்டவனாய் நிற்பவனும், 'நேதி, நேதி' (இது அல்ல, இது அல்ல) என்று மறைகளால் போற்றப்படுபவனும், தெய்வங்களிற் தெய்வமாகவும், பிறப்பு அற்றவனாகவும் வீழ்ச்சியற்றவனாகவும் அனைத்துக்கும் மூல ஆதாரமாகவும் உள்ளவனாய் (முனிவர்களால்) ஏத்தப்படுபவனாகவும் உள்ளவனை அதிகாலையில் நான் வணங்குகிறேன்.''

இதற்கு விளக்கம் எதுவும் தேவையில்லை என்றெண்ணு கிறேன். முன்னுரையின் மொழிபெயர்ப்பு வேகமாக நடந்து கொண்டிருக்கிறது. ஆசிரமத்திலிருந்து கடிதக் கட்டு வெள்ளிக் கிழமை வரை வராததால், அப்போது கிடைத்த ஓய்வு நேரத்தையும் இன்னும் அதிகமான பாராக்களை மொழி பெயர்ப்பதில் செலவு செய்தேன். ஆகவே இப்பொழுது இன்னும் பத்துப் பாராக்கள் தான் எஞ்சியுள்ளன. அதற்குப் பிறகு, ஆசிரமவாசிகளுக்காக நான் எழுதிவரும் கீதைக் குறிப்புக்களை மொழிபெயர்க்க முடியுமா என்பது பற்றி யோசிக்கலாம். இப்போது, நான் தக்ளியில் நூற்கும் 100 சுற்றுக்களே அதிக நேரம் பிடிக்கின்றன. இப்போது, முன்பை விடச் சற்று வேகமாக நூற்கிறேன். இன்று காண்டீபச் சர்க்காவில் நாற்பது நிமிடங்களில் 169 சுற்றுகள் நூற்றேன். அப்படியானால் 60 நிமிடத்திற்கு 255 சுற்றுகளாகும். இது எனக்குப் பெரிய சாதனையாகும். இவ்வளவு வேகமாக நூற்க முடிவதற்கு முக்கிய காரணம், நாங்கள் செய்த திருத்தங்களே. இன்னும் வேகமாக நூற்கக் கற்றுக் கொண்டால், என் எழுத்து வேலைக்கு அதிக அவகாசம் கிடைக்கக் கூடும். நூல் உற்பத்தியைப் பெருக்குவதில் இப்போது பேராசை பிடித்தவனாய் இருக்க விரும்ப வில்லை. நூற்பு வேகத்தில் குறிப்பிடத்தக்க அளவு நிரந்தரமான முன்னேற்றம் ஏற்படும் வரை, சர்க்காவில் 300 சுற்றுகளும் தக்ளி யில் 100 சுற்றுகளும் நூற்பதுடன் நிறுத்திக் கொள்ளப் போகிறேன்.

அயல்நாட்டுக் கடிதங்கள் உனக்கு ஒழுங்காக வந்து சேருமென் பதில் எனக்குச் சந்தேகம் இருந்ததேயில்லை.

என் உடல்நலன் மிகவும் நன்றாக உள்ளது. அதைப்பற்றிப் பொதுக் கடிதத்தில் விரிவாக எழுதியுள்ளேன். * * *

அன்பு,

பாபு

*29/30-12-'30*

## 127

சி. மீரா,

காலை வழிபாட்டின் முதற்செய்யுளுக்கு நீ அனுப்பியிருந்த மொழிபெயர்ப்புக்களைப் படித்தேன். அவற்றைவிட என்னுடைய மொழி பெயர்ப்பில் பொருள் தெளிவாக இருக்கிறதென்று கருது கின்றேன். படிப்பதற்கும் அதுதான் ஏற்றதாக உள்ளது. எந்த இடத்திலாவது பொருள் விளங்காமலிருந்தால் தயவு செய்து எனக்குச் சொல்லவும். இரண்டாவது செய்யுளை சென்ற கடிதத் துடன் அனுப்பியிருந்தேன். மூன்ருவது செய்யுளை இங்கு தரு கிறேன். "இருளுக்கு அப்பாற்பட்டவனுய், கதிரவன் போன்ற வனுய், களங்க மற்றவனுய், புராதனமானவனுய், புருஷோத்தமன் (மனிதரில் சிறந்த நம்பி) என்று அழைக்கப்படுபவனை நான் அதிகாலையில் வணங்குகிறேன். (இருளில்) கயிற்றையும் பாம்பாக நாம் எண்ணுவது போல, உலகம் முழுவதுமே அவனிடம் (இருளின் திரையின் மூலமாக) வெளிப்படுகிறது."

பிரபஞ்சம் நிலையானது அல்ல என்பதால் உண்மையானதும் அல்ல என்பது தான் பொருள். அது இறைவனின் படைப்பாதலால் அதைப் பற்றுடன் நாடவும் வேண்டியதில்லை; அதைக்கண்டு பயப்படவும் தேவையில்லை. உண்மையில் கயிற்றிலே நாம் பாம்பைக் காண்பதுபோலவே அது நம்முடைய கற்பனை யில் பிறந்தது. உண்மையான பிரபஞ்சம் உண்மையான கயிற்றைப் போல உள்ளது. திரை நீங்கி, இருள் அகன்ற பின்பு, இரண்டும் நமக்குப் புலப்படும். "நான் நீண்டகாலம் நேசித்து நடுவிலே இழந்துவிட்ட தேவதைகளின் முகங்கள் பொழுது விடிந்ததும் புன்னகை செய்கின்றன" என்ற வாசகத்துடன் இதை ஒப்பிட்டுப் பார். இம்மூன்று செய்யுள்களையும் ஒன்ருகப் படிக்க வேண்டும். அவை சங்கரரால் இயற்றப்பட்டவையென்று நான் எண்ணுகின் றேன். உனக்கு சங்கரரைப் பற்றித் தெரியுமல்லவா? இன்னும் 5 நாட்களில் நான் முன்னுரையின் மொழி பெயர்ப்பை முடித்துவிடு வேன். செய்யுள்களையும், பஜனைகளையும் எனக்கு அவ்வப்போது தோன்றுகின்ற குறிப்புகளுடன் உனக்குத் தொடர்ந்து அனுப்ப விரும்புகின்றேன். உன்னுடைய திருப்திக்காகவே, எவருடைய உதவி உனக்குக் கிடைக்கின்றதோ அந்த உதவியுடன் கீதையைப் பற்றிய வாரக் குறிப்புகளை நீ மொழி பெயர்க்கவேண்டும். நான் இப்போது பின்பற்றி வரும் திட்டம் ஆழ்ந்த யோசனைக்குப் பின் தீட்டப்பட்டது. அதன்படி என்னுடைய உரையை மனதிற்கொண்டு கீதையின் மொழி பெயர்ப்பு முழுவதையும் ஆராய்ந்து குறிப்புகளை யும் மொழிபெயர்க்க விரும்புகின்றேன். இதனுல் இன்று நாம் அறியவோ எதிர்பார்க்கவோ முடியாத ஒரு நன்மை ஏற்படலாம். வாரக் குறிப்புகளை மொழி பெயர்க்க நான் தொடங்கினுல் இத் திட்டமானது அடியோடு கெட்டுவிடும். அது சரியாகவே இருக் காது. உணவு முறையில் நான் செய்துவரும் பரிசோதனைகளைப் பற்றி நாரணதாசிடமிருந்து விவரங்கள் அனைத்தையும் நீ தெரிந்து

கொள்ளவும். அவசியமேற்பட்ட மறு கணமே மீண்டும் பாலை உட்கொள்ளத் தொடங்குவேன் என்பதால் கவலை எதுவும் கொள்ள வேண்டிய நியாயமில்லை.

பயணச் சர்க்கா என்று நீ குறிப்பிடும்போது பிரதீஸ்தான் பெட்டி சர்க்காவைக் குறிப்பிடுகின்றாய் என்று எண்ணுகின்றேன். எதுவாயினும் நீ மிகவேகமாக நூற்கக் கற்றுள்ளாய் என்று எண்ணுகிறேன். காகா புதிதாக எதுவும் கூறினாலொழிய காண்டீபச் சர்க்காவைப் பற்றி நீ கவலைப்பட வேண்டாம்.

* * * *

ரோலண்டின் உடல் நிலையைப் பற்றி அறிந்து நான் மிகுந்த வேதனை அடைந்தேன். என்னுடைய அன்பை அவருக்குத் தெரிவிக்கவும். அவரைப் பற்றி நான் அடிக்கடி எண்ணுகின்றேன் என்றும், மனித சமுதாயத்திற்குத் தொண்டாற்ற அவர் நீண்ட நாள் வாழ வேண்டுமென நான் இறைஞ்சுகின்றேன் என்றும் அவருக்குக் கூறு. * * *

* * * *

அன்பு,

பாபு

*தேதி : 3-1-'31*

## 128

*ஜனவரி 7, 1931.*

சி. மீரா,

சாதாரணமாக ஆசிரமத்திலிருந்து வரும் கடிதக்கட்டு இதற்குள் வந்துவிடும். ஆனால் இன்று இன்னும் வரவில்லை. பின்னர் அவகாசம் கிடைக்காதே என்று அஞ்சி இப்போதே கடிதங்களை ஆரம்பிக்கின்றேன். நான்காவது செய்யுளை இங்கு தந்துள்ளேன். "பூமாதேவியே, ஆழி ஆடையாகவும், மலைகள் மார்பகங்களாகவும் கொண்ட விஷ்ணுவின் (காப்பவன்) துணைவியாக உள்ள உனக்கு அடிபணிகின்றேன்; என்பாதங்கள் உன் மேல் பட்டதைப் பொறுத்தருள்வாயாக."

பூமிக்கு அடி பணிவதன் மூலம், பூமி எவ்வளவு பணிவாக உள்ளதோ, அவ்வளவு பணிவாக நாமும் இருக்கக் கற்றுக் கொள்ளுகிறோம்; கற்றுக் கொள்ள வேண்டும். தன்னை மிதித்து, தன் மேல் நடமாடுகின்ற உயிர்களைக் காத்து இரட்சிக்கின்றது பூமி. ஆகவே தான் அவள் ஆண்டவன் துணைவி ஆகின்றாள். இக்கருத்து உண்மைக்கு ஊறு செய்ய வில்லையென்று நான் எண்ணுகின்றேன். மாறாக இது அருமையான கருத்து; இறைவன் நம்மிடையே உள்ளான் என்ற கருத்துக்கு முற்றிலும் பொருத்தமானது. கடவுள் கண்களுக்கு உயிரற்ற பிறவி எதுவுமே கிடையாது. நாம் இந்த மண்ணில் பிறந்து மண்ணோடு சேர்ந்தவர்கள்.

மண் இல்லாவிட்டால் நாமே இல்லை. பூமியின் மூலமாக பகவானை உணர்வதன் மூலம் இறைவனை அணுகி நெருங்க முடியுமென்று எனக்குத் தோன்றுகிறது. பூமிக்குப் பணிந்து வணங்குவதன் மூலம் இறைவனுக்கு நான் கட்டுப்படுவேன் என்பதை உடனடியாக உணர்கின்றேன். அன்னை பூமிக்கு விசுவாசமான குழந்தையாக நான் இருந்தால் நானும் மண்ணோடு மண்ணாக, என்னைப் பாவித்து, மனிதப் பிறவிகளிலே கடை நிலைகளிலே உள்ளவர்களுடன் மட்டுமல்ல, படைப்பின் அடிநிலையிலே உள்ள எல்லாப் பிறவிகளுடனும் நான் ஒன்று என்ற உணர்வு ஏற்படும். அப்பிறவிகள் அனைத்தும் முடிவில் மண்ணோடு மண்ணாகின்றன. அதே கதி தான் எனக்கும் நேரிடும். மண்ணோடு ஒட்டிய வாழ்க்கையை மறந்துவிட்டு, உயிராக மட்டும் கருதினால் தான் நான் என்றும் அழிவற்றவன் என்பது விளங்கும். என்னுடைய ஆன்மா அழிவற்றது போலவே படைப்பில் மிகத் தாழ்ந்த பிறவியும் அழிவற்றது தான்.

வயிற்று அலைச்சல் ஏற்பட்டுள்ளது உண்மையிலேயே எனக்கு நன்மையாகவே முடிந்துள்ளது. அதனால் எனக்கு வேதனையோ, வலியோ ஏற்படவில்லை; என்னுடைய வேலையும் தடைப்படவில்லை; ஆயினும் அது எனக்குச் சில படிப்பினைகளை உணர்த்தியுள்ளது. உணவில் பேராசைப்பட்டவன் நான் என்று உணர்கிறேன். கம்பும், சோளமும் எனக்குப் புதிய உணவு வகைகள். அவற்றைக் குறைந்த அளவில் நான் சாப்பிட்டு, அவ்வப்போது தவிர்த்தும் இருக்க வேண்டும். ஒரு நாளைக்கு ஒரு ரொட்டி சாப்பிடுவது கூட எனக்கு அதிகமென்று தோன்றுகிறது. ஆனால் அவ்வாறு நான் குறைத்துச் சாப்பிடவில்லை. இழந்த எடையை மீண்டும் விரைவிலே ஈடு செய்ய முடியும் என்று நான் எண்ணி விட்டேன். என்னுடைய சக்திக்குள்ளாக நான் எவ்வளவு தான் சாப்பிட்டாலும், பசி முற்றிலும் தீர்ந்து நிறைவு ஏற்படும் நிலையை நான் அடையவில்லை. எப்பொழுதுமே காலி வயிற்றுடன் தான் நான் எழுகின்றேன். பின்பு தான் நான் என் தவறுதலை உணர்கின்றேன். மேலும் எல்லா உணவுமே எனக்குச் சுவை உள்ளதாக தோன்றுகிறது. என்னுடன் சிறையிலுள்ள மற்றக் கைதிகளைப் போலவே நானும் இருக்க வேண்டுமென்பதற்காகத்தான், கம்பும் சோளமும் சாப்பிடத் தொடங்கினேன். ஆனால் இந்த ரொட்டி எனக்கு மிகவும் சுவையாகவும், ருசியாகவும் இருக்கிறது. இந்த நிலையில், உணவில் நிதானமாக இருப்பதோடு, குறைவாகச் சாப்பிடுவது என்பது கடினமாக இருக்கிறது. அவ்வப்போது, மாதத்திற்கு ஒரு முறையாகிலும் உண்ணா நோன்பு இருப்பது ஒல்லியாக உள்ளவர்களுக்குக் கூட நல்லது தான் என்று தோன்றுகிறது. ஆனால் இந்த நிலையை என்னால் சமாளித்துக் கொள்ள முடியும் என்றே தோன்றுகிறது. இந்த முயற்சியை நான் அடியோடு நிறுத்தப்போவதில்லை. ஆனால் அவசியத்திற்கிணங்க அவ்வப்போது அதை மாற்றிக் கொள்ளப் போகின்றேன். நேற்று நான் தயிர் சாப்பிட்டேன் என்

பது உனக்குத் தெரியும். 11 மணிக்கு உடலில் அதிக தெம்பு இருந்ததால், நுண்ணியமாக அரைக்கப்பட்டு, இரு முறை சமைக்கப்பட்ட பாதாம் பருப்புக்களையும் தண்ணீரில் ஊற வைத்த உலர் திராட்சைகளையும் சாப்பிட்டேன். இன்று (புதன் கிழமை) உள்ள நிலை இதுதான். இக்கடிதத்தை 6 நாட்களுக்குப் பின்பு தான் தபாலில் சேர்ப்பேன். இதற்குப் பின் நடப்பவை பற்றி இக் கடிதம் மூலமாவது, என்னுடைய பொதுக்கடிதத்தின் மூலமாவது, நீ அறிந்து கொள்ளலாம். நீயும் மற்றவர்களும் கவலைப்படாம லிருக்க வேண்டும் என்பதற்காகத்தான் இந்த விவரங்களையெல் லாம் சொல்கின்றேன். என் உடல் நலனில் ஒரு சிறிது நலிவு ஏற் பட்டாலும் உங்கள் அனைவருக்கும் கவலை ஏற்படுகின்றது என்று அறிவதனால் எனக்கு ஏற்படும் கவலை, அந்த நலிவினால் ஏற் படும் கவலையைவிட அதிகமாக இருக்கிறது. உணவு முறைகளில் புது முயற்சிகள் செய்வதை அடியோடு நிறுத்தி விட்டால் அது எனக்கு என்றும் தீங்காக முடியும். என்னுடைய சத்திய சோதனையில் இது ஒரு அம்சம். தீங்கு அந்த முயற்சியில் அடங்கிய தல்ல; அத்தீது என்னுள்ளே தான் இருக்கிறது. உணவை மருந்து போலப் பாவித்து உட்கொள்ளும் கலையை நான் இன்னும் கற்றுக் கொள்ளவில்லை. அவ்வாறு செய்ய வேண்டுமென்றால் சுவையை அடி யோடு வெல்ல வேண்டும். அந்நிலையிலிருந்து நான் இன்னும் வெகு தூரத்தில் இருக்கின்றேன். அக்கலையைக் கற்றுக் கொண்டால் பாலைத் தவிர்ப்பது கடினமாக இருக்காது என்று நம்புகின்றேன். ஆரோக்கியமுள்ள மனிதனுக்குப் பால் ஏற்ற உணவு அல்ல என் பதில் எனக்கு ஒரு சிறிதும் ஐயமில்லை. பால் சாப்பிடாமல் நான் ஆரோக்கியமாக 6 ஆண்டுகள் வாழ்ந்துள்ளேன். என்னுடைய மடமையினால் தான் அந்த ஆரோக்கியம் பாழாகியது. அந்த மடமையின் விளைவுகளைப் போக்குவதற்கு என்னுடைய உயிரையே ஈடு கொடுப்பதற்குப் பதிலாகப் பாலைச் சாப்பிட்டு நிலைமையை சமாளித்துக் கொள்ளலாமென்று எண்ணினேன். இந்தப் போராட்டம் தொடர்ந்து நடக்கும். ஒவ்வொரு தோல்வியும் என்னைத் திருத்தித் தூய்மையாக்கிப் பணியச் செய்து இன்னும் புது விளக்கங்களைத் தருகின்றது. தோல்வி ஏற்படும்போது போராட்டத் துடிப்பு வலுக்கின்றது. போராட்டம் தொடருவதால் தான் எனக்கு அமைதி ஏற்படுகின்றது. இரு வாரங்களுக்கு ஒரு முறை மருத்துவ நிபுணரான கர்னல் **ஸ்டீல்** என்னை வந்து பரி சோதனை செய்கிறார். இன்று மேஜர் மார்டின் வந்து பார்த்தார். என்னுடைய உடல் நலம் மிகச் சிறப்பாக உள்ளது என்பது தான், அவர்கள் என்னைப் பார்த்த மாத்திரத்தில் சொன்ன சொல். மூன்று நாட்கள் கிட்டத்தட்ட உணவே சாப்பிடாத பின்னும் நான் இருந்த நிலை இது தான். அவர்கள் சொன்னது சரிதான். இந்த சோதனையால் எனக்குத் தீங்கு எதுவும் ஏற்படவில்லை. மேலும், எந்த நிலையிலும் எதைப்பற்றியும் கவலைப்படாமல் இருக்க வேண்டும்.

*12—1—'31*

7ம் தேதி எழுதி விட்ட இடத்திலிருந்து கடிதத்தைத் தொடர்கின்றேன். என்னுடைய உடல் நலம் நன்ருகவே இருக்கிறது. தினமும் ஒழுங்காக வெளிக்குப் போகின்றேன். பாதாம் பருப்பை அரைத்துத் தண்ணீரிலே கலக்கி, பேரீச்சம் பழத்துடன் காலையிலே சாப்பிடுகின்றேன்; நடுப்பகலிலே தயிரும் பேரீச்சம் பழமும்; மாலையிலே பாதாம் பருப்பை அரைத்துத் தண்ணீரிலே கலக்கிப் பேரீச்சம் பழத்துடன் சாப்பிடுகின்றேன். காலை $7\frac{1}{2}$ மணிக்குத் தண்ணீரிலே எலுமிச்சம் பழமும் உப்பும் சேர்த்துச் சாப்பிடுகின்றேன். நடுப்பகல் $1\frac{1}{2}$ மணிக்கு எலுமிச்சை ரசமும், சோடாவும் சேர்த்துக் குடிக்கின்றேன். **** ஆகவே இதைப்பற்றிய செய்தி வேறு ஒன்றும் இல்லை. என் உடல் நலனில் ஏதும் மாறுதல் ஏற்பட்டால் அதைப் பற்றிய செய்தியை பிரசுரிக்கக்கூடாது என்று உனக்கு எச்சரிக்கை செய்ய விரும்புகிறேன். அவ்வாறு செய்தால் பொதுமக்கள் மிகைபடுத்தி எண்ணுவார்கள்; அவசியமில்லாமல் கவலை கொள்வார்கள். நியாயமில்லாமல் அரசாங்கத்தின்மீது குறை கூறுவதாகவும் அது அமையும். இந்த ஒரு வகையிலாவது, அரசாங்கத்தின்மீது குறை கூறுவதற்கு இடமில்லை.

உன்னுடைய கடிதமும் அஞ்சல் அட்டையும் கிடைத்தன. ரோலண்டுக்கு இப்பொழுது ஆபத்து ஒன்றுமில்லை என்பதற்காக கடவுளுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டும். இன்னும் பலப்பல ஆண்டுகளுக்கு அவர் இந்த உலகத்தில் இருக்க வேண்டும். நமக்குத் தெரிந்தவரையில் அவர் பணி இன்னும் முடியவில்லை. என்னுடைய அன்பான வணக்கங்களை அவருக்குத் தெரிவித்து, இன்னும் சில காலம் அவர் தாக்குப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்று அவரிடம் கூறு.

முன்னுரையின் மொழி பெயர்ப்பை இரண்டு நாட்களுக்கு முன்னதாகவே முடித்து விட்டேன். வேறு எந்த வேலையும் இப்பொழுது எடுத்துக் கொள்ளவில்லை. ஆனால் முந்தைய திட்டப்படி வேலையை எடுத்துக் கொள்ளலாம் என்று தோன்றுகிறது. நாளை ஆசிரமத்திற்கு எழுத வேண்டிய கடிதத்தையெல்லாம் முடித்து விட்டு இதைப் பற்றி முடிவு செய்ய வேண்டும்.

* * * *

எதையும் இரகசியமாக வைத்துக் கொள்ளவேண்டும் என்பதைப் பொறுத்தவரை, நீ சொல்வதிலிருந்து பார்த்தால், உன் எண்ணத்தில் ஏதோ குழப்பம் இருப்பது போலத் தோன்றுகிறது. கசாப்புக் கடைக்காரன் ஒருவன் என்னிடம் வந்து, பசு எந்தத் திக்கில் சென்றது என்று கேட்டால் அதை அவனுக்கு சொல்ல நான் கடமைப்பட்டவன் அல்ல. அவனுக்கு நான் தவருன செய்தி சொல்ல வேண்டியதில்லை. ஆனல் பசுவைக் கண்டுபிடிக்க அவனுக்கு நான் உதவி செய்ய வேண்டியதும் இல்லை. அது மட்டுமல்ல, பசுவை நான் அவனிடமிருந்து ஒளித்துக்கூட வைக்கலாம்.

உண்மையில் அது என்னுடைய கடமையாகும். இந்த உதாரணத்தை மனத்திற் கொண்டு நிலைமைக்கு ஏற்றபடி நீ நடக்கத் தீர்மானித்துக் கொள்ள வேண்டும்.

*12—1—'31* பாபு

தோட்டக்கலையில் தோத்தாராம்ஜி கொண்டுள்ள ஆர்வத்தை நீ சித்திரித்துள்ளது எனக்குப் பரவசமூட்டியது. இளைஞர்கள் சிலர் இக்கலையை அவரிடமிருந்து கற்றுக் கொள்ள வேண்டும் என்று விரும்புகிறேன். இது குறித்து நீ நாரணதாசுடன் பேச வேண்டும்.

# 129

*14-1-'31*

சி. மீரா,

இன்று ஆசிரமத்திற்கு எழுதும் கடிதங்களில் உன் கடிதம் தான் முதலாவது. காலை வழிபாடு முடிந்தவுடன் இதை எழுது கிறேன். 5வது செய்யுள் பின்வருமாறு:

"இருள் நிறைந்த அறியாமையை அடியோடு அழிக்கின்ற சரஸ்வதிதேவி (கல்வித் தெய்வம்) என்னைக் காப்பாளாக! குண்டு மல்லிகைபோலவும், திங்கள் போலவும், பனிக்கட்டிமாலை போலவும் வெண்மையாய் இருப்பவளும், வெள்ளை ஆடை அணிபவளும், வீணையின் வண்ணத்தண்டு அணி செய்யும் கரங்களை உடைய வளும், வெள்ளைத் தாமரையில் வீற்றிருப்பவளும், பிரம்மா, விஷ்ணு, சிவன் ஆகியோராலும் மற்றக் கடவுளராலும் என்றும் போற்றப்படுபவளும் அவளே".

*18-1-'31*

இந்தக் கருத்து மிக அருமையானதென்று நான் மதிக் கின்றேன். பனி, திங்கள், மலர் ஆகியவற்றின் வெண்மையையும், ஆடையின் வெண்மையையும், இருக்கையின் வெண்மையையும், ஆக மூன்றுவகை வெண்மையையும் வற்புறுத்துவது, அறிவு அல்லது விவேகத்திற்குக் களங்கமற்ற தூய்மை மிக இன்றியமையா அம்ச மென்பதை வலியுறுத்துகிறது. இந்தச் செய்யுள்களையும் இது போன்ற செய்யுள்களையும் ஆராய்ந்து, அவற்றின் உட்கருத்தை நாடும்போது, ஒவ்வொரு அறப்பண்பையும் அகராதியில் உயிரற்ற ஒரு சொல்லாக ஆக்காமல், ஒவ்வொன்றையும் உருவகம் செய்து, உயிருள்ள உண்மை ஆக்கப்பட்டுள்ளதை உணர்வாய். நம் ஐம் புலன்களுக்குப் புலப்பட்டு, வெளிப்பார்வைக்கு உண்மையெனத் தோற்றமளிக்கும் பொருட்களைவிட, இந்தக் கற்பனைக் கடவுள்கள் உண்மையானவை. எடுத்துக்காட்டாக, இச் செய்யுளை நான் பாராயணம் செய்யும்போது, ஒரு கற்பனைச் சித்திரத்திடம்

பேசுவதாக எண்ணமே உதிப்பதில்லை. இப் பாராயணம், அனுபூதிமயமான செயல். அறிவுபூர்வமாக இச் செயலை ஆராயும் போது, இத் தெய்வம் கற்பனைப் படைப்பு என்பதை நான் உணர்கிறேன் என்பதால், வழிபாட்டு நேரத்தில் இதைப் பாராயணம் செய்வதின் பெருமை குறைவதில்லை. இதெல்லாம் உனக்கு விளங்காவிடில், நீ தயங்காமல் விளக்கம் கோரவேண்டும். நீ மீண்டும் சுற்றுப்பயணம் செய்யப்போகிருய் என்று அறிகிறேன். 'அளவுக்குமீறிப் பயணத்தை மேற்கொண்டு, தாங்கமுடியாத அளவுக்கு அலுப்பு தேடிக்கொள்ளாதே' என்றுதான் நான் உனக்குக் கூறுவேன்.

சுரேந்திரா பற்றித் தந்தி அனுப்பினேன். அவர் தம் உண்ணு விரதத்தை நிறுத்தியிருக்க வேண்டும். என்னைப் பொறுத்தவரை, நான் நன்ருக இருக்கின்றேன். மீண்டும் காய்கறிகளோ, ரொட்டியோ சாப்பிட இன்னும் தொடங்கவில்லை. பாதாம் பருப்பு, பேரீச்சம் பழம், சிறிது பால் அல்லது தயிர், எலுமிச்சை இவை என்னை நல்ல ஆரோக்கியமாக வைத்துள்ளன. இரண்டு மணிநேரம் நின்றுகொண்டு தக்ளியில் நூற்க முடிவது என்னைப் பொறுத்தவரை ஒரு சாதனைதான். சர்க்காவில் ஏறக்குறைய இரண்டு மணிநேரம் நூற்கும்போதும், முதுகு எதிலும் சாயாமல் தான் உட்கார்ந்து நூற்கிறேன். அத்துடன் பஞ்சடிக்கவும் பட்டை போடவும் செலவு செய்யும் சற்றேறக்குறைய 45 நிமிடங்களையும் சேர்த்துக்கொள்.

அன்பு,

பாபு

## 130

[நான் மீண்டும் கதர் யாத்திரை செய்யத் தொடங்கியிருந்தேன்.]

சி. மீரா,

மீண்டும் புதன்கிழமை காலை வந்துவிட்டது. வழிபாடு இப்பொழுதுதான் முடிந்தது. சென்ற வாரம்போல் எனக்கு அதிர்ஷ்டம் இருந்தால், இன்றும் காலை எட்டு மணிக்கே அஞ்சல் வந்துவிடும். இவ்வாரக் கடிதங்களை எழுதத் தொடங்குமுன், உனக்காக செய்யுள்களை (இவ்வாரம் இரண்டு செய்யுள்கள் தரப் போகிறேன்) எழுதுவதில் எனக்கு அதிக மகிழ்ச்சி. 6வது, 7வது செய்யுள்களை, அப்போது நான் எழுதிய குறிப்புகளுடன் தருகிறேன்.

6. 'வளைந்த வாயும் விம்மிய உடலும் கொண்டு, ஒரு கோடிக் கதிரவன்கள்போல் ஒளிமயமான கடவுளே, நன்மையைச் செய்யும் நேரத்திலே, தீங்கெதுவும் நேரிடாமல் என்னை என்றும் காப்பாயாக'.

குறிப்பு : 'ॐ' 'ஓம்' என்ற அனுபூதிச் சொல்லால் குறிக்கப் படும். ஆண்டவனை நோக்கி இது பாடப்படுகிறது. அந்த எழுத்தின் வளைந்த வாயையும் விரிந்த உடலையும் பார். அதன் அனுபூதிச் சிறப்பை உபநிடதங்களும் பாடியுள்ளன.

7. குருவே (ஆசான்) பிரம்மா, அவரே விஷ்ணு, அவரே மகாதேவர்; அவரே மாண்பு மிக்க பரம்பொருளான பிரம்மமே. அக்குருவுக்கு நான் தாள்பணிகின்றேன்!

குறிப்பு : ஆன்மிக ஆசிரியரைத்தான் இது குறிக்கிறது. இது உணர்வற்ற, அல்லது செயற்கையான உறவு அல்ல. உண்மையில் ஆசான் அத்தனையும் ஆகான். ஆனால் மாணவனே ஆசிரியரிடம் மனநிறைவு கண்டு, களங்கமற்ற பரிபூர்ணராய் அவரைக் கருதுகிறார். உயிருள்ள இறைவனிடம் உயிர்ப்புள்ள பக்தி கொள்ளக் குருவிடமிருந்து அவர் கற்றுக்கொள்கிறார். இத்தகைய குருவை இப்பொழுது காண்பது அரிதுதான். ஆகவே இறைவனையே குருவாக மதித்துப் பக்தியின் ஒளியை நாடுவதே சிறந்தது.

இக் குறிப்புகளில் தந்துள்ளதற்கு மேல் விளக்கம் தேவை யில்லை என்று கருதுகிறேன்.

மேலும் மொழிபெயர்ப்பு பற்றி முடிவு செய்தாகிவிட்டது. என் சொந்தத் திருப்திக்காக, அந்த மொழிபெயர்ப்பு வேலையை நான் ஏற்றுச் செய்ய வேண்டும். குறுக்குவழி எதையும் கையாண்டால், அது இறுதியில் நீண்டதாகி விடுகிறது. வேலை யைத் தொடங்கியபின், நடுவில் நிறுத்தக் கூடாது. ஆகவே மற்ற வேலைகளின் சுமை இவ்வளவு அதிகம் இருக்கும்போது, இந்த வேலையைத் தொடங்குவதற்கே அச்சமாக இருக்கிறது. உள்ளபடி அச்சத்திற்கு இடமில்லை; உள்ளத்தில் தான் அச்சம் உள்ளது. ஆனால் உள்ளதை, உள்ளம் வென்றுவிடுகிறதல்லவா?

* * *

*25-1-'31*

சிந்துவிலிருந்து நீ எழுதிய கடிதம் கிடைத்தது. 2-வது அதி காரத்தின் மொழியாக்கம் மிகச் சிறப்பாக உள்ளது. இரு திருத் தங்கள் செய்யலாமென்று நான் யோசனை சொல்வேன். முதல் பக்கத்தில் 'எண்ணக் கற்பனை' என்பதற்குப் பதிலாகப் 'பலவீனம்' என்ற வார்த்தை பொருந்தும். 7-ம் பக்கத்தில், 'வேதங்களைப் பின் பற்றுவோர்' என்பதற்குப் பதிலாக, 'வேதவாசகங்களை அப்படியே ஏற்றுக்கொள்பவர்கள்' என்ற சொற்றொடர் ஏற்றது. இரண்டாவது திருத்தம் மிகமுக்கியமானது ; முதல் திருத்தம் அவ்வளவு முக்கிய மானதல்ல. கீதையைப் பின்பற்றுவோர், வேதவாசகங்களையும் பின் பற்றுபவர்கள் தான். வேதங்களை அப்படியே ஏற்றுக் கொள்பவர் கள், அதன் வாசகத்திலிருந்தும் சிறிதும் வழுவாதவர்கள், என்பதை அச்சொல்லே குறிக்கும். நீ அனுப்பிய குறிப்புகளைத் திருப்பி அனுப்ப வேண்டுமா? உன் கடிதத்தைத் திரும்பவும் படிக்கமாட்

டேன்; ஆனால் உன்னிடமிருந்து மறு கடிதம் வரும்வரை, நான் அக் குறிப்புகளை வைத்திருப்பேன். அவை உடனடியாகப் பிரசுரத்திற்குத் தேவையல்ல; ஆனால் அவை மிக நன்றாக இருப்பதால், எப்பொழுதும் பிரசுரம் செய்வதற்கு ஏற்றவை. அந்த முக்கிய திருத்தத்தை மட்டும் செய்து கொள்ள வேண்டும். மறுபிறப்புப் பற்றி நீ சொல்வது, பொருத்தமானதுதான். முந்திய பிறவிகள் நமக்கு நினைவில் நிற்காமல் செய்தது, இயற்கையின் கருணையாகும். இவ்வளவு பெரிய நினைவுச் சுமையை ஒரு மனிதன் தூக்கிச் செல்ல வேண்டுமானால், வாழ்க்கை தாங்க முடியாத சுமையாகி விடும். வழக்குகள் முடிந்தவுடன், அவற்றையும் அவை பற்றிய விவரங்களையும் வழக்கறிஞர் மறந்து விடுவது போல, விவேகமுள்ள மனிதன், வேண்டுமென்றே பலவற்றை மறந்துவிடவேண்டும். ஆம், 'மரணம் ஒருவகை உறக்கமும், மறதியும் தான்'. என் உடல் நன்றாக உள்ளது. என் உடலாற்றலைக் கண்டு சில வேளைகளில் எனக்கே வியப்பு ஏற்படுகிறது. ஆசிரமத்தில் நான் இருந்த போது, இரண்டு மணி நேரம் நின்று கொண்டே தக்ளியில் நூற்பதைத் தாங்கியிருக்க முடியாது. வியாழனன்று என் எடையை எடுத்த போது, 98 பவுண்டாக இருந்தது. ஒரு வாரத்தில் $2\frac{1}{2}$ பவுண்டு கூடியிருந்தேன். அது ஒரு சாதனையாகும். சென்ற ஐந்து நாட்களாக, நான் காய்கறிகளும், கோதுமை ரொட்டியும், பாதாம் பருப்புக் கஞ்சியையும், பேரீச்சம் பழமும், புளிப்பான எலுமிச்சையும் சாப்பிட்டு வருகிறேன். பேரீச்சம்பழத்தை முக்கியமாகக் காலையில் சாப்பிடுகிறேன். கோதுமை ரொட்டியை நன்றாக வாட்டிச் சாப்பிடுகிறேன். பாலோ, தயிரோ, அவசியமென்று எனக்கு இன்னும் தோன்றவில்லை. அவசியமென்று எண்ணினால், அவற்றில் ஒன்றைச் சேர்த்துக் கொள்வேன். ஆகவே கவலை எதுவும் கொள்வதற்கு நியாயமே இல்லை என்பதை நீ உணர்வாய். அவ்வப்போது, பாலோ, தயிரோ, சாப்பிடும் அவசியம் ஏற்படலாம். அப்படியானால், மருந்து சாப்பிடுவது போல, நான் அதைச் சாப்பிடுவேன்.

அன்பு,

*25-1-'31* பாபு

## 131

[சென்ற கடிதத்திற்கும் இக் கடிதத்திற்குமிடையே, பல முக்கிய நிகழ்ச்சிகள் நடந்து மாதங்கள் சில கடந்துவிட்டன. பாபு சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டிருந்தார். பண்டித மோதிலால் நேரு காலமானார். காந்தி—இர்வின் ஒப்பந்தம் கையெழுத்திடப்பட்டது; கராச்சி காங்கிரஸ் மாநாடும் நடந்திருந்தது.]

சி. மீரா,

உன் அன்புக் கடிதங்கள் ஒழுங்காகக் கிடைக்கின்றன. இம் மாதம் 16ந் தேதி, என்னை நிச்சயமாய் பம்பாயில் சந்திப்பாய் என்

பதைக் குறித்துக் கொண்டேன். ப்ரோச் ஊரில் நிகழ்ச்சி ரத்து செய்யப்பட்டுள்ளது; ஆகவே 15ந் தேதி ஆமதாபாத்தை விட்டுச் செல்வேன். அநேகமாக, நான் பயணம் செய்யும் இரயிலில் தான் நீயும் வருவாய். நான் முதல் மெயிலில் புறப்படுவேன்.

நீ கராச்சியிலிருந்து புறப்படும் நாளன்று தான் இக் கடிதம் உனக்குக் கிடைக்கும். உன் உடல் நலன் பற்றியும் என் உடல் நலன் பற்றியும் விசாரித்து ரோலண்டு, அம்பாலால் பாய்க்குத் தந்தி அனுப்பியிருந்தார். பத்திரிகை நிருபர்களால் வந்த வினை என்றெண்ணுகிறேன். நாம் இருவரும் நலமாகவே உள்ளோம் என்று அவர் பதில் தந்தி அனுப்பியுள்ளார். உன் அன்னையிடமிருந்து உனக்குச் செய்தி எதுவும் வந்ததா? அவர்களுக்குச் சில நாட்கள் வீண் கவலை ஏற்பட்டிருக்கும். தட்டம்மை* வந்ததன்பின் உன் இரத்தம் தூய்மைப் பட்டிருக்கும்.

என் இரத்த அழுத்தம் 160க்கும் குறைவாக இருந்ததென்று உனக்குச் சொல்ல மறந்துவிட்டேன். இது சென்ற முறை இருந்ததை விடத் திருப்திகரமாயுள்ளது. நரம்புகள் நன்றாக வேலை செய்கின்றன. இரண்டிலும் நலிவு ஏற்பட்டிருக்குமென்று டாக்டர் அ. அஞ்சியிருந்தார். ஆனால் நான் இன்னும் பலவீனமாகத் தான் இருக்கின்றேன்; வேலை செய்யவும் உற்சாகமில்லை. ஆனால் இது இயற்கை தானே. கராச்சியின் கடுமையான அலுப்பு இன்னும் தீர்ந்தபாடில்லை.

* * *

அன்பு,

பாபு

## 132

சி. மீரா,

நீ என் மனதில் குடி கொண்டுள்ளாய். என்னைச் சுற்றிலும் பார்த்து, நீ என் அருகிலே இல்லாதது குறித்து வேதனைப்படுகிறேன். சர்க்காவைத் திறக்கும்போது நீ என் பக்கத்தில் இல்லாதது உணர்ந்து வருந்துகின்றேன். இப்படியே தான் எல்லா நேரங்களிலும். ஆனால் என்ன பலன்? நீ செய்ததுதான் சரி. உன் இல்லத்தையும் குடும்பத்தையும், சாதாரணமாக மக்கள் அரிதாக மதிக்கும் அனைத்தையும், துறந்து நீ வந்துள்ளது, தனிப்பட்ட முறையில் எனக்கு சேவை செய்வதற்கு அல்ல; நான் கொண்டுள்ள இலட்சியத்திற்காகத் தொண்டாற்றுவதற்குத் தான். தனிப்பட்ட முறையில் என் மீது நீ உன் அன்பை வீணாக்கும் போதெல்லாம், எனக்கு உரிமையில்லாத ஒரு சொத்தை நான் கையாடும் எண்ணம் தான் எனக்கு ஏற்பட்டது. ஆகவே தான் சிறு காரணத்திற்கும்

---

* கராச்சி காங்கிரஸ் மாநாட்டு முகாமில் எனக்குத் தட்டம்மை வந்தது. என்னை மருத்துவ மனைக்கு எடுத்துச் செல்ல வேண்டியதாயிற்று.

கோபம் கொண்டு நான் பதட்டமடைந்தேன். நீ என்னுடன் இல்லாத இந்த நேரத்தில், உன்னைக் கடுமையாகத் திட்டியதையெல்லாம் நினைத்து, என் மீதே நான் கோபம் கொள்கிறேன். ஆனால் உன் சேவையை நான் ஏற்றுக்கொண்ட நேரத்திலெல்லாம், சுட்டுப் பொசுக்கும் சாம்பல் படுக்கையின் மீது நான் படுத்துக் கொண்டிருந்தேன்.** மன மகிழ்ச்சியுடன் இலட்சியத்திற்கு நீ தொண்டாற்றுவது தான், எனக்குச் செய்யும் உண்மையான சேவை. "சிறுவர்களே, நீங்கள் உற்சாகமாக ஆரவாரமிடுங்கள்; வீண் வேதனையும் வருத்தமும் இனி வேண்டாம்".

அன்பு,

*24-6-'31.* பாபு

** குறிப்பு : மிகக்கடுமையான போராட்டத்தில் நான் சிக்கியிருந்தேன். பாபு வேதனைப்பட்டார் என்று அறிந்து கொதிக்கும் அனல் மீது நானும் படுத்துக் கொண்டிருந்ததாகவே எண்ணினேன். எப்படியோ மனத்தைத் திடப் படுத்திக் கொண்டு அவரிடமிருந்து வேதனையுடன் நான் பிரிந்த வேளைகளில் இதுவும் ஒன்று.

## 133

*திருத்தப்படாதது*

**சி. மீரா,**

உன் கடிதங்களெல்லாம் கிடைத்தன. அன்னை சிறிது சிறிதாக நலிந்து கொண்டு இருக்கின்றாள். முடிவு விரைவில் வந்தால் கருணையாக இருக்கும். உடலை மீறி நாம் வளர்ந்த பின்பு அதிலிருந்து விடுதலை பெறுவது தான் நல்லது. நமக்கு மிகவும் பிரியமானவர்களை ஊன் உடலிலே நீண்ட காலம் பார்க்க வேண்டும் என்று எண்ணுவது சுயநல ஆசையே. உடல் மறைந்த பின்பு ஆன்மா நிலைத்து நிற்கும் என்பதில் நம்பிக்கையில்லாத காரணத்தால் தான், அல்லது பலவீனத்தால் தான், இந்த ஆசை எழுகிறது. உருவம் எப்பொழுதும் மாறிக்கொண்டேயிருக்கிறது; எப்பொழுதும் அழிந்து கொண்டே இருக்கிறது. ஆனால் அவ்வுடலை ஆட்கொண்ட ஆன்மா மறைவதும் இல்லை; மாறுவதுமில்லை. ஊன் உடலைத்தாண்டி உறைகின்ற சக்தி மீது அன்பு கொள்வது தான் உண்மையான அன்பு. எண்ணற்ற உடல்களில் குடியிருக்கும் சக்தியின் ஒருமையை அப்பொழுதுதான் நாம் உணர முடியும். நீ லண்டனுக்குச் செல்லவேண்டுமென்று நான் இப்பொழுது சொல்லாததன் காரணம் உனக்கு விளங்கும். உன் அன்பு உன்னை உந்தினால், நீ தாராளமாக அங்கு செல்லலாம் என்பதை நீ அறிவாய். நீ போகவேண்டுமென்று உனக்கு ஆசை ஏற்படுவதில் தவறு எதுவும் இல்லை. .........

*போர்சாத்,*

*6—7—'31* அன்பு,

பாபு

# 134

சி. மீரா,

எப்பொழுதும் போலவே பம்பாயில் கடிதங்கள் எழுதுவதற்கு எனக்கு அவகாசமே கிடைப்பதில்லை. இம்முறையும் நிகழ்ச்சிகள் காலை $4\frac{1}{2}$ மணிக்கு ஆரம்பமாகி, இரவு 11 மணிக்குத்தான் ஒவ்வொரு நாளும் முடிந்தன. அதற்கு முன் ஓய்வு எடுப்பதற்கு அவகாசமே கிடைக்கவில்லை. இருந்தாலும் உடல் நலம் நன்றாகவே இருந்தது.

இன்று அதிகாலை சூரத் நகருக்கு வந்து சேர்ந்தோம். ஒரு மணி நேரத்திற்கு மேல் தூங்கியதால் உடல் தெம்பாக இருக்கிறது. இப்பொழுது நான் தனியாகத்தான் இருக்கின்றேன். சூடு அதிகமில்லாமல் காலநிலை மிகவும் இதமாக இருக்கின்றது. வானம் சற்று மப்பும் மந்தாரமுமாகவுள்ளது. இனிய தென்றல் காற்று எப்பொழுதும் வீசிக்கொண்டு இருக்கிறது. பம்பாயிலும் இப்படித்தான் இருந்தது. நீ எப்படி இருக்கின்றாயோ? பாதிரியார் எல்வின் அவர்களுக்கு ஆசிரம வாழ்க்கையும், தட்ப வெட்ப நிலையும் ஒத்துக் கொள்கின்றனவோ, என்னவோ.

இன்று இரவு நாங்கள் சிம்லாவுக்குப் புறப்படுகிறோம்.* என்னுடன் பாவும் வருகின்றாள். சிம்லாவில் மூன்று நாட்களுக்கு மேல் தங்க வேண்டிய அவசியமிருக்காது என்று எண்ணுகின்றேன். நான் லண்டனுக்கு செல்ல வேண்டுமா, இல்லையா என்பது நாளை நிச்சயமாகத் தெரியுமென்று எண்ணுகின்றேன்.

மகாதேவ் இப்பொழுது வந்துள்ளதால் கடிதம் எழுதுவதை நிறுத்தினேன். உங்களைப் பற்றியெல்லாம் செய்தி அவர் எனக்குத் தந்தார்.

இறுதியில் உன் அன்னை உன்னை விட்டுப் பிரிந்து விட்டாள். உன் வேதனையை நீ அடக்க முயன்றுள்ள போதிலும், உன் கடிதத்தின் ஒவ்வொரு சொல்லிலும் வேதனையின் சாயல் காணப்படுகிறது.

நாம் அனைவரும் மனிதப் பிறவிகள் தானே? உணர்ச்சிகளை அடக்கிக் கொள்ளும் ஆற்றல், உணர்ச்சிகளிடமிருந்து அடியோடு விடுதலை பெறுவதற்கு முதற்படியாகும். இறைவன் உனக்கு இந்த வலிமையை அருள்வாராக. உன் அன்னையைப் பொறுத்தவரை, இம்முடிவு அவளுக்கு நல்ல முடிவே. உன் அன்புக்குப் பாத்திரமாய் இருந்த ஒருவரின் பிரிவு எதிர் காலத்தில் உனக்குள்ள நம்பிக்கையை வளமாக்கி, எல்லா உயிர்களும் ஒன்று என்ற உண்மையை வலியுறுத்த வேண்டும். உயிரின் ஒருமை மிக உண்மையானதாக இல்லாவிடில், நமக்குப் பிரியமானவர்களின் பிரிவையும் மறக்கும்

* வட்டமேசை மாநாட்டில் பாபு கலந்து கொள்வது பற்றி வில்லிங்டன் பிரபுவுடன் பேச்சு வார்த்தைகள் நடத்தும் பொருட்டு.

ஆற்றல் நமக்கு வராது. சேவைக்கு உன்னை அர்ப்பணம் செய்ய இம்மரணம் உன்னை மேலும் உந்த வேண்டும்.

நீ கேட்ட பேரீச்சம் பழங்கள் கிடைத்தன என்று எண்ணுகின்றேன். ஆனல் அவையே ஒரு பழக்கமாக்கி விட வேண்டாம். உலர்ந்த திராட்சையும் அவ்வப்போது சாப்பிடுவது நல்லது தான்.

அன்பு,

பாபு

## 135

*சொல்லி வேறு ஒருவரால் எழுதப்பட்டது.*

சிம்லா,
*ஜூலை 19, 1931*

சி. மீரா,

வழக்கம்போல் குஜராத்தை விட்டு வந்தால், கடிதங்கள் எழுதவே எனக்கு அவகாசம் கிடைப்பதில்லை. பம்பாயை விட சிம்லாவில் சற்றே அதிக அவகாசம் கிடைத்துள்ளது. இங்கு என்னைப் பார்க்க அவ்வளவு அதிகம் பேர் வராவிடினும், எமர்சனை ஓயாது கவனிக்க வேண்டி இருப்பதாலும், உள்நாட்டு அமைச்சரையும், வைசிராயையும் தனித்தனியாகவும், நான் எதிர் பார்த்ததற்கு அதிகமாக, நீண்ட நேரம் பல முறை பார்க்க வேண்டியிருப்பதாலும், வேறு எதற்குமே எனக்கு அவகாசம் கிடைக்கவில்லை. இரு முறை மாலை உணவை மிகவும் அவசரமாக முடித்துக் கொள்ள வேண்டியதாயிற்று.

நீ சொன்ன யோசனையைப் பின்பற்றிப் 'புத்தக அறையில்' முன்னுரையைப் படித்தேன். மூலம் மிக அழகாக இருக்குமென்று எண்ணுகின்றேன். எதை எழுதினலும், எவ்வளவு ஈடுபாட்டுடனும், மிகுந்த கவனத்துடனும் ரோமெய்ன் ரோலண்டு எழுதுகின்றார் என்பதைக் கண்டு நான் வியக்கின்றேன். முன்பு அவர் எழுதிய சிறு கட்டுரை போலவே, இம் முன்னுரையும் அமைந்துள்ளது; தம்முடைய கருத்தில் ஏற்பட்டுள்ள யாறுதல்களை இதில் அவர் சித்திரித்துள்ளார். உன்னுடைய மொழி பெயர்ப்பு படிப்பதற்கு நன்ருக உள்ளது. பல இடங்களில் அதைத் திருத்தம் செய்வது அவசியமாகத் தோன்றுகிறது. ஆனலும் மூலம் எவ்வாறு இருக்குமென்பதை, அதிலிருந்து நான் தெளிவாகத் தெரிந்து கொள்ள முடிகிறது. மூல வாசகத்திற்கு உண்மையாக இருக்கிறது என்பது தான் உன்னுடைய மொழி பெயர்ப்பின் அருமை.

நான் லண்டனுக்கு செல்கிறேனு, இல்லையா என்பதை நிச்சயமாக அறிந்துகொள்ள, நீ குறிப்பிட்டுள்ள காரணங்களுக்காக, நீ ஆர்வமாக இருப்பது இயற்கைதான். ஆனல் சிம்லாவை விட்டுப் புறப்படும் நேரத்தில் கூட இதைப்பற்றி உறுதியாக முடிவு செய்யும்

நிலையில் நான் இருக்கமாட்டேன் என்று அஞ்சுகிறேன். இதில் பல சிரமங்களும், இடைஞ்சல்களும் இருக்கின்றன. இப்போதுள்ள திருப்தியற்ற நிலைமை தொடர்ந்தால் நான் அங்கு செல்ல முடியாது என்பதை அதிகாரிகளுக்குத் தெளிவாக உணர்த்தியுள்ளேன் என்று எண்ணுகிறேன். ஆனால் என்னைத் திருப்திப்படுத்துவது அதிகாரிகளுக்குச் சிரமமாக இருக்கலாம்; அல்லது அவ்வாறு செய்ய அவர்களுக்கு விருப்பம் இல்லாதிருக்கலாம். இங்கிருந்து இன்று புறப்பட முடியும் என்று எண்ணி எதிர்பார்த்திருந்தேன். ஆனால் செவ்வாய்க்கிழமை அல்லது புதன் கிழமைக்கு முன் புறப்பட முடியாது என்று தோன்றுகிறது. என் வாழ்நாள் முழுவதும் இதைப் போன்ற தாமதங்கள் தொடர்ந்து வந்துள்ளதால் இதைப்பற்றி நான் கவலைப்படுவதில்லை. கீதையின் படிப்பினையைத் தன் வாழ்க்கையில் உறுதியாகக் கடைப்பிடிக்க விரும்புபவன், 'நாளை பற்றிக் கவலைப்படாதே' என்ற வாசகத்தைக் கண்டிப்பாகப் பின்பற்றித் தான் ஆக வேண்டும். ஆகவே இங்குள்ள நிலைமை எவ்வளவு தெளிவற்றது என்பதையும், லண்டனுக்கு நான் செல்வதைப் பற்றி வெகு நாட்களுக்கு முன்பாகவே முன்னறிவிப்பு தருவது எவ்வளவு கடினம் என்பதையும் ரோமெய்ன் ரோலண்டுக்கும் உன்னுடைய சகோதரிக்கும் நீ எடுத்துச் சொல்ல வேண்டும். நாம் கப்பலில் ஏறும் வரை நம்மை நிச்சயம் எதிர்பார்ப்பதற்கில்லை.

ஊனுடல் கலந்து விட்ட பின்பும் நம் அன்புக்குப் பிரியமானவர்கள் உண்மையான வாழ்விலே நின்று நிலைக்கின்றார்கள் என்பதையும், அவர்கள் மேல் நாம் கொள்ளும் அன்பு உயிருள்ள எல்லாப் பிறவிகளையும் தழுவும் என்பதால், உண்மையான, நிலையான, சுயநலமற்ற அன்பு என்பதையும், நீ உணர்ந்து மன நிறைவு பெற்றிருப்பாய் என்று எண்ணுகின்றேன். நம் நண்பரோ, சுற்றத்தாரோ மரணம் அடைந்தால், எல்லோர்மீதும் நாம் கொண்டுள்ள அன்பை அதிகரித்து வளமாக்க அந்த மரணம் பயன்பட வேண்டும்.

அன்பு,

பாபு

## 136

*சி. மீரா,*

தட்டெழுத்தில் என் நேற்றைய கடிதம் உனக்குக் கிடைத்திருக்க வேண்டும். கடைசி நேரத்தில் அது அனுப்பப்பட்டதால், வந்து சேர்ந்ததா என்று சற்று சந்தேகமாய் உள்ளது. இன்று உன்னிடமிருந்து கடிதம் வருமென்று எண்ணினேன். பாதிரியார் எல்வினின் உடல்நலக் குறைவு எனக்குக் கவலை அளிக்கிறது. இப்பொழுது முற்றிலும் குணமாகியிருக்குமென்று நம்புகிறேன். அவர் அதிகம் வேலை செய்து அலுப்பைத் தேடிக் கொள்ளக்கூடாது. ஜூலை மாதத்தில், ஆமதாபாத்தில், இவ்வளவு

வெப்பமும் வியர்வையும் இருப்பது வழக்கத்துக்கு மாறான நிலை. இதற்குள் அங்கு மழை பெய்திருக்குமென்று நம்புகிறேன். புதன் கிழமைக்கு முன் புறப்படுவதற்கு வழியில்லையென்று அஞ்சுகிறேன். அன்றாகிலும் புறப்பட முடிகிறதோ, என்னவோ?

அன்பு,

பாபு

## 137

சி. மீரா,

நாங்கள் இப்பொழுது சூரத்தில் உள்ளோம். இப்பொழுது காலை *5-30* மணி. வழிபாட்டுக்குப் பின் நான் உறங்க முயன்றேன்; ஆனால் கொசுக்கள் அதற்கு இடம் தரவில்லை. ஐந்து, பத்து நிமிடங் களுக்கொரு முறை இலேசாக மழை பெய்கிறது. காலை எட்டுமணி அளவில் நாங்கள் பர்தோலாய்க்குச் செல்கிறோம். அங்கு இரண்டு நாட்கள் தங்கிவிட்டுப் போர்சாதுக்குச் செல்ல வேண்டியிருக்கும். சிம்லாவில் எதுவும் முடிவாகவில்லை. லண்டனுக்குப் போகும் வாய்ப்பு முன்பிருந்ததை விடக் குறைவாகவே உள்ளது போல் தோன்றுகிறது. அரசாங்கம் எந்த வகையிலும் என்னைத் திருப்தி செய்ய முன்வரவில்லை. பேச்சுக்களை மிக எளிதில் முறித்திருக்க லாம். ஆனால் முறிவைத் தவிர்க்க முடியுமானால், தவிர்க்க வேண்டு மென்று விரும்புகிறேன். பர்தோலியில் நிலைமை மிகவும் மோசமாகி யுள்ளது.*

நேற்று டில்லியில் என் எடை எடுக்கப்பட்டது. அங்கு தங்கிய சில மணி நேரத்தில் டாக்டர் அன்சாரியிடம் சென்றேன். காலையில், எதுவும் சாப்பிடாமலே, என் எடை $95\frac{1}{2}$ பவுண்டாக இருந்தது. முடிந்தால் பாலின் அளவை உயர்த்த முயல வேண்டும். மற்றெல்லா வழிகளிலும் உடல் நலன் நன்றாக உள்ளது.

நீ, இப்பிரிவு பற்றியே எண்ணி வருந்தக்கூடாது. எல்வின் பாதிரியார் நன்றாக இருப்பாரென்று நினைக்கின்றேன்.

அன்பு,

பாபு

சூரத்,
*24—7—'31*

பர்தோலிக்கு வந்து சேர்ந்ததும் உன் கடிதம் கிடைத்தது. உன் அன்னையை நீ சித்திரித்துள்ளது தத்ரூபமாகவும் உருக்கமாக வும் உள்ளது. லண்டனுக்குச் செல்லும் வாய்ப்பு ஒரு சிறிதுமில்லை என்று அஞ்சுகிறேன். இன்று அரசாங்கத்துக்கு இறுதி நிபந்தனை அனுப்பியுள்ளேன். இவை உன் தனித் தகவலுக்கு மட்டும் தான்.

---

* காந்தி—இர்வின் ஒப்பந்தத்தை அரசாங்கம் சரிவர அமல் செய்யவில்லை.

# 138

*சொல்லி வேறொருவரால் எழுதப்பட்டது*

பர்தோலி,
*25, ஜூலை 1931.*

சி. மீரா,

நேற்று அவகாசம் கிடைக்காததால், உனக்கு அதிகம் எழுத முடியவில்லை. ஒரு சில நிமிடங்கள் கிடைக்கும் போது, மற்ற செய்திகளை நான் சொல்ல இன்னொருவரை எழுதச் சொல்ல வேண்டும். உன் வருத்தம் இன்னும் தீர வில்லையென்றால், அதை என்னிடமிருந்து மறைத்து, அடக்கி வைக்கும் அவசியமில்லை. அறிவுத் தெளிவு ஏற்படும் போதுகூட, உணர்ச்சிகளை உடனடியாகக் கட்டுப் படுத்த எளிதில் முடிவதில்லை. அறிவால் உணரப்படுவதையும் உள்ளம் மெதுவாகத் தான் ஏற்றுக் கொள்கிறது. ஆகவே தான் கீதையின் 12வது அதிகாரத்திலும், வாழ்க்கைக்கு வழிகாட்டி நூலான அதில் இன்னும் பல பகுதிகளிலும், உபதேசிக்கப்படும் நெறியினைக் கடைப்பிடிப்பது அவசியமாகிறது. மனவேதனை உன்னை ஆட்கொள்ள இடம்கொடுத்து, மீண்டும் பதட்டமடையாமல் இருந்தால் போதும். எப்பொழுது உன்னால் தாங்க முடியாத நிலை ஏற்படுகிறதோ, அப்பொழுது என்னிடம் நீ தாராளமாக ஓடி வரலாம் என்று நான் உனக்குச் சொல்லியுள்ளேன். அதனால் எனக்கு வருத்தம் ஏற்படலாம்; ஆனால் அதற்கு நான் ஆயத்தமாயுள்ளேன். எனக்கு அது அதிர்ச்சியைத் தராது; நீ எனக்கு அளித்த வாக்குறுதியை மீறி விட்டாயென்றும் நான் குறை கூற மாட்டேன். ஆகவே மன நிம்மதியுடன் நீ உன் நெறியினைக் கடைப்பிடித்து நடக்க வேண்டுமே ஒழிய வேதனை உன் உள்ளத்தை அரிக்க நீ இடம் தரலாகாது. இவ்வாறு உணர்ச்சிகளுக்கு அடிமைப்படுவது பலவீனம் என்பதையும், உன் வளர்ச்சிக்கு அது உதவியானதல்ல என்பதையும் மேலும் மேலும் தெளிவாக உணர்ந்து, அப் பலவீனத்தை வெல்ல, நீ இயன்றவரை முயல்கிறாய் என்பதே போதும்.

பர்தோலாயில் நடந்துள்ள, தாங்க முடியாத நிகழ்ச்சிகள் பற்றிக் கலெக்டருக்கு நான் கடுமையான கடிதம் ஒன்று அனுப்பியுள்ளேன். அதற்குத் திருப்திகரமான பதில் கிடைத்தால், லண்டனுக்குச் செல்ல சிறிது வாய்ப்பு ஏற்படலாம். நான் ஊகிப்பது போல், பதில் திருப்தியாயில்லையென்றால், லண்டன் பயணத்தைப் பற்றிய எண்ணத்தை உன் மனத்திலிருந்து நீ அடியோடு அகற்றிவிடலாம். கடைசி நிமிடத்தில் நாம் போக வேண்டியிருந்தாலும், அதைப் பற்றி நாம் ஏன் கவலைப் படவேண்டும்? தேவையான கதர்த்துணி வாங்க முடியும். உனக்கு என்னென்ன ஆடைகள் தயாரிக்க வேண்டுமோ, அவற்றை நானும் பியாரிலாலும் சேர்ந்தே தயாரித்து விடுவோம். சிங்கர் தையல் இயந்திரம் ஒன்

றைக் கடன் வாங்குவது கடினமாக இராது. உனக்குத் தேவையான உடைகளை* ஒருசில மணிநேரத்தில் தயாரித்துவிடலாம். போது மான துணி இருந்தால், மற்றதை லண்டனிலேயே தயாரித்துக் கொள்ளலாம். நம் மனத்துக்கு ஒப்பும் வகையில் செய்யப்பட்டுள்ள[1] தோல் பாத அணி கிடைப்பது தான் முக்கியம். பாத உறையுடன் அணியக் கூடிய செருப்புகளும், பூட்சுகளும் வேண்டியிருக்கும். நான் தென்னுப்பிரிக்காவில் அணிந்து வந்த பாத அணியின் மாதிரி யொன்று ஆசிரமத்தில் எங்கோ இருக்கின்றது. அவற்றைச் சுலப மாகச் செய்துகொள்ளலாம்; சிரமமில்லாமல், அவற்றுடன் காலுறை யையும் அணியலாம். இப்பாத அணிகளை இப்பொழுது செய்து கொள்ளலாம்; அவை தேவைப்படாவிடில், அவற்றை விற்று விடலாம். அளவுகளைக் குறித்து வைத்துள்ளோம்.

கலெக்டர் பதில் எழுதுவதற்கு, நாளை நண்பகல் வரை அவ காசம் கொடுத்திருக்கிறேன். ஆகவே திங்கட்கிழமைக்குள் ஏதாகி லும் தீர்மானமாகத் தெரியும். முடிந்தால் போர்சாத் வேலையை முடிப்பதற்காகச் செவ்வாயன்று அங்கு செல்ல விரும்புகிறேன். ஆகவே இப்போதுள்ள ஏற்பாட்டின்படி, செவ்வாய்க்கிழமை காலை போர்சாதில் இருப்பேன் என்று நீ கொள்ளலாம்.

அன்பு,

பாபு

## 139

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. * * * வரட்சி நிலை இவ்வாறு நீடிப்பது, தனிப்பட்ட முறையில் இதனுல் நமக்குள்ள சிரமங்கள் ஒரு புறமிருக்க, பெரிய ஆபத்தாகவும் முடியக் கூடும். ஒவ்வொரு நாளும் உன் கண்ணில் படும் மேகங்களில் ஒன்ருவது மழை பொழியுமென்று எதிர்பார்க்கிறேன். காலில் சாதாரணமாகப் போட்டுக் கொள்ளும் பட்டைச் செருப்பு, அகலமான முகப்பு கொண்ட பூட்சு, இரண்டும் வேண்டுமென்றுதான் நான் கூறியிருந் தேன். நம் இருவருக்கும் சேர்த்துத்தான் அவற்றைக் கேட்டுள் ளேன். எனக்குச் செருப்பு, பூட்சு இரண்டும் தேவையில்லை.

உன் இறக்கை[2] நண்பர்களின் எண்ணிக்கை பெருகி வரு வதைக் காண்கிறேன். அவைதான் நமக்குக் கிடைக்கக் கூடிய சிறந்த நண்பர்கள் என்று கூடத் தோன்றுகிறது. உன் மௌன

---

* பாபு குறிப்பிடுவது இந்திய ஆடைகளை, ஐரோப்பிய அங்கிகளையல்ல.

1. இயற்கையாக இறந்த விலங்குகளின் தோலிலிருந்து செய்யப்பட்டவை.

2 ஒரு மைனு என் அறைக்குள் வழக்கமாக வந்துகொண்டிருந்தது. என் கையிலிருந்து அது சிறு திராட்சைப் பழத்தைக் கொத்தித் தின்னும். என் தலைமேல் வந்து உட்கார்ந்தால்தான், திராட்சைப் பழம் கிடைக்குமென்றறிய,

மான செய்தியை மற்றவர்களுக்கு விரைவிலும் விசுவாசமாகவும் எடுத்துச் சொல்வதில் மற்றவர்களைவிட இவை உனக்கு உதவி செய்யும். காரியக்கமிட்டி கூட்டத்திற்காக நான் பம்பாய் செல்லு முன்பே ஆமதாபாத்துக்கு வரமுடியுமென்று எண்ணுகிறேன். ஆனால் இந்தப் பர்தோலி வேலை மிகக் கடினமாக உள்ளது. இருளை நீக்க ஒளி எதுவும் எனக்கு இன்னமும் புலப்படவில்லை.

அன்பு,

பாபு

*இரயிலில்,*
*27-7-'31*

## 140

[மீண்டும் இடையே நீண்ட நாட்கள் சென்றுவிட்டன. அந்நாட்களில் எவ்வளவோ முக்கிய நிகழ்ச்சிகள். சென்ற கடிதத்துக்குப் பின், வட்டமேசை மாநாட்டில் கலந்து கொள்வதுபற்றி வில்லிங்டன் பிரபுவுடன் இறுதிப் பேச்சு வார்த்தைகள் நடத்த பாபு மீண்டும் சிம்லாவுக்குச் சென்றார். லண்டனுக்குப் புறப்பட ஆயத்தம் செய்ய வேண்டுமா என்று பாபுவிடமிருந்து தந்திமூலம் செய்தி எதிர்பார்த்துக்கொண்டே நான் போர்சாதில் இருந்தேன். இறுதியில், அடுத்த கப்பலில் நாங்கள் புறப்பட வேண்டுமென்று தந்தி வந்தது. எல்லா ஆயத்தங்களையும் செய்து முடிக்க எங்களுக்கு இரண்டு மூன்று நாட்கள் அவகாசம்தான் கிடைத்தது. அடுத்த இரயிலில் அவசரமாக நான் பம்பாய்க்குச் சென்றேன். கடவுச் சீட்டுக்கள் பெறுவதிலும், பி. அண்டு. ஓ. கப்பலில் அறைகள் அமர்த்துவதிலும், பெட்டிகள், துணிமணிகள் சேர்ப்பதிலும் நான் அடுத்த இரண்டு நாட்களைச் செலவு

---

அதைப் பழக்கியிருந்தேன். ஆகவே அது என் அறைக்குள் பறந்து வந்து, நேராக என் தலைமேல் அமர்ந்து கொண்டு, பழங்கள் வேண்டிக் கீச்சல் சத்தமிடும். சில நாட்களுக்குப் பின், தன் பெட்டை மைனாவை அழைத்து வந்து, அவளை எனக்கு அறிமுகம் செய்து வைப்பதுபோல், என் முன்னால் தரையில் நின்றது. பெட்டை முதலில் கூச்சப்பட்டது. ஆனால் சில நாட்களுக்குப் பின், அதுவும் என் கைகளிலிருந்து பழம் கொத்தித் தின்னத் தொடங்கியது. ஒரு வாரம்போல் சென்ற பின், அவை யிரண்டும் பழங்களைத் தாமே சாப்பிடாமல், அவற்றை எடுத்துக்கொண்டு, தோட்டத்திற்குப் பறந்து செல்வதைக் கண்டேன். பதினைந்து நாட்கள் இவ்வாறு நடந்து வந்தது. அதன் பின் ஒருநாள், அம்மா, அப்பா, மூன்று குஞ்சுகள் அனைவரும் குடும்பமாய் என் அறைக்குள் வந்து, என்னைச்சுற்றி அரை வட்டமாய் நின்றுகொண்டு பழம் வேண்டின. அப்பொழுது முதல், நான் வட்ட மேசை மாநாட்டிற்கு லண்டனுக்குச் சென்றவரை, அவை ஒழுங்காக என் அறைக்கு வரும்.

செய்தேன். அன்புள்ள நண்பர்கள் பலர், அன்புப் பரிசுகள் பல எடுத்து வந்தனர்—கம்பளிக் காலுறைகள் (பாபு அவற்றை அணியவேயில்லை), சால்வைகள் போன்றவை. கப்பல் புறப்படும் நேரத்தில்தான் பாபு நேராக சிம்லாவிலிருந்து வந்து சேர்ந்தார். அவர் வரும்வரை, கப்பலின் புறப்பாடு நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. பயண ஆயத்தங்கள் செய்வதிலேயே, நான் முந்திய இரவு முழுவதையும் கழித்திருந்தேன். நான் பெட்டிகளை அடுக்கி முடிக்கும் நேரத்தில், பாபுவுடன் வந்திருந்த மகாதேவும் தேவதாசும், வட இந்தியாவில் தாங்கள் நண்பர்களிடமிருந்து சேகரித்திருந்த கம்பளி ஆடைகள் நிறைந்த பெட்டிகளையும் தோற்பைகளையும் மிகுந்த உற்சாகத்துடன் கொண்டு வைத்தனர். ஆடைகளைப் பார்த்து, எவற்றை எடுத்துச் செல்வது, விட்டுச் செல்வது, என்று முடிவு செய்ய நேரம் இல்லை. ஆகவே அனைத்தும் கப்பலுக்கு நேராகச் சென்றன.

மிகுந்த ஆர்வத்துடனும் ஆரவாரத்துடனும் பம்பாய் அன்று காலை பாபுவை வழியனுப்பி வைத்தது. கப்பல் அரபுக் கடலிலே புகுந்த பின்தான் நாங்கள் (பாபு, மகாதேவ், தேவதாஸ், பியாரிலால், நான்) மூச்சுவிட அவகாசம் கிடைத்தது. நாம் எத்தனை பெட்டிகள் கொண்டு வந்துள்ளோம் என்று பாபு அப்பொழுது விசாரிக்கத் தொடங்கினர். இக் கேள்வி எங்களுக்குக் கவலையளித்தது. பெட்டிகள், தோற்பைகள் ஆகியவற்றின் எண்ணிக்கையைக் கூறி, அவ்வளவு அதிகமாக எடுத்துவர வேண்டி ஏற்பட்டது ஏன் என்று சமாதானம் கூறினோம். ஆனால் பாபு திருப்தி அடையவில்லை. பெட்டிகள் அனைத்தையும் திறந்து, பொருட்களைப் பிரித்துப் பார்த்து, எவையெல்லாம் இல்லாமல் தாக்குப்பிடித்துக் கொள்ளமுடியுமோ அவற்றை ஏடனிலிருந்து திருப்பி அனுப்ப வேண்டுமென்று அவர் வற்புறுத்தினர். அதற்குப் பின் மறுபேச்சுக்கு இடமேது? இதற்கிடையில் மழையும் காற்றும் அடித்துக் கப்பல் தூக்கிப் போடத் தொடங்கியது. இதெல்லாம் பாபுவுக்கு அமோகமாக ஒத்துக்கொண்டது; மகாதேவுக்கு எதுவும் சிரமமாகவேயில்லை. தேவதாஸ் ஒருவாறு சமாளித்துக் கொண்டார். பியாரிலாலை இது மிகவும் உலுக்கிவிட்டது. நான் உடல் நலமில்லாமல் படுத்துவிட்டேன். ஆனல் உடைகளைப் பிரித்துப் பார்த்து, வேண்டாதவற்றைத் திருப்பி அனுப்பும் வேலை காத்திருந்தது. மகாதேவும் மற்றவர்களும் தங்கியிருந்த அறைக்கு நான் தள்ளாடிச் சென்றேன். நாங்கள் எல்லோருமாகப் பெட்டிகளுடன் போராடினோம். நாங்கள் கொண்டு வந்ததில் ஏறக்குறையப் பாதி ஏடனிலிருந்து பம்பாய்க்குத் திரும்பியது.

ஆனல் இதற்கும், வட்டமேசை மாநாடு முடிந்து நாங்கள் பம்பாய்க்குத் திரும்பியதற்கும் இடையில் ஏற்பட்ட பல நிகழ்ச்சிகளை விவரமாகச் சித்திரிக்க நான் முயலக்கூடாது. வட்டமேசை மாநாட்டிலிருந்து நாங்கள் திரும்பிய ஒரு சில நாட்களில் பாபு பம்பாயில் கைது செய்யப்பட்டவுடன் எழுதப்பட்டது கீழேயுள்ள கடிதம் என்பதை மட்டும் குறிப்பிட்டால் போதும்.]

*சி. மீரா,*

வெறும் செய்திக் கடிதமாகத்தான் இதை எழுதுகின்றேன். ஆகவே இதுபற்றிப் பத்திரிகைகளில் குறிப்பு எதுவும் வரக் கூடாது.

பெரிய அளவு சூடுகாப்புக் கலத்தை (பிளாஸ்க்) அனுப்பு. வெந்நீரை ஊற்றி வைத்துக்கொள்ள அது பயன்படும். அதனல் அதிகாலையில் சிறைக் காவல் அலுவலரின் வேலை மிச்சமாகும்.

ரூ 800க்குக் காசோலையை மகாதேவிடம் கொடுத்து, என்ன செய்யவேண்டுமென்று அவரிடம் கூறினேன். அதில் பின்புறம் நான் கையெழுத்திட அவசியமில்லை என்றெண்ணுகிறேன். அது அவரிடம் இருக்கிறதா என்று பார்த்துக்கொள். அதில் பின்புறம் கையெழுத்திட வேண்டுமா என்றும் பார்.

நாங்கள் இருவரும்* நலமாக உள்ளோம். அனைவருக்கும் அன்பு.

பாபு

*எரவாடா சிறை*
*5-1-'32*

## 141

*சி. மீரா,*

உன் கடிதம் கிடைத்தது. இப்பொழுது நீ வழக்கம்போல் கடிதம் எழுதலாம். நான் தேர்ந்தெடுத்து வைத்திருந்த பஞ் சடிக்கும் வில்லை எனக்கு அனுப்ப நீ மறந்துவிட்டாய் என்பது உனக்குத் தோன்றிற்று? பெரிய வில்லுக்கு இன்னும் பல துணைக் கருவிகள் தேவையாயிருந்ததால்தான், கைக்கு அடக்கமான இவ் வில்லைக் கேட்டேன். நீயாகிலும், வேறு யாராகிலும் இங்கு வரும்போது பெரிய வில்லை எடுத்து வரலாம். நீ முன்னெச் சரிக்கையாகப் பஞ்சுப்பட்டைகள் அனுப்பியிருந்ததால், என்னிடம் போதிய அளவு பட்டைகள் உள்ளன. ஆகவே வில் இல்லாதது பற்றி உடனடியாகக் கவலையில்லை. நான் இன்னும் நிறைய ஓய் வெடுத்து வருகிறேன்; இயன்ற அளவு அதிகம் உறங்கியும் வருகிறேன். என்னைப்பற்றிய மற்ற செய்திகளை, நாரணதாசுக்கு நான் எழுதியுள்ள கடிதத்திலிருந்து அறிந்து கொள்ளவும்.

ப்ரீவத் குடும்பத்தினர் எங்குள்ளனர்? அவர்கள் உடல் நலன் எப்படியுள்ளது? அவர்களுக்கு என் அன்பைத் தெரிவி. அவர்கள் எனக்கு எழுதட்டும். ஆசிரமத்தில் அவர்கள் தங்கியிருந்த போது வசதியாக இருந்ததென்று எண்ணுகிறேன். ஜெர்மானிய

---

* எரவாடா சிறையில் பாபுவுடன் சர்தார் வல்லபபாய் பட்டேல் கூட இருந்தார்.

நண்பர்கள் வந்துவிட்டனரா? மிஸ் பார்க்கர்* வந்துள்ளாரா? பெர்ரியர், ஷாம்ராவ், ஆகியோரைப்பற்றி என்ன செய்தி? ஈவான்ஸ், ரோஜர்ஸ்[2] இருவருக்கும் பியாரிலால் பார்சல்களை அனுப்பிவிட்டாரா? அவர் எங்கேயுள்ளார்? தேவதாஸ் எங்கே? பெர்னூர்டு பற்றி என்ன செய்தி?

அன்பு,

பாபு

எ. ம. சி.
*12—1—'32*

## 142

*சி. மீரா,*

நீ அனுப்பிய பொருட்கள் கிடைத்தன. செருப்புகள் ஓரிரு மாதங்கள் கூடத் தாங்காது; அடிப்பாகம் தேய்ந்துவிடும். அடிப்பாகத்தில் தோல் இருப்பது இதனுல்தான் அவசியமாகிறது. அடியில் தோல் தைத்த செருப்பு கிடைக்காவிடில், ரப்பர் போட்ட செருப்பை வைத்துச் சமாளித்துக் கொள்வேன்.

* * *

நாங்கள் இருவரும் நலமாகவே உள்ளோம். வெளியில் இருந்தபோது சாப்பிட்ட உணவையே இப்பொழுதும் சாப்பிடு கிறேன். மாலே உணவுடன் மட்டும் தயிரைச் சேர்த்துக் கொள் கிறேன். காலே, மாலே இரண்டு நேரங்களேயும் சேர்த்து, குறைந்தது தினம் இரண்டு மணி நேரமாகிலும் நடக்கின்றேன். 200 சுற்று நூலுக்குமேல் இன்னும் நூற்பதில்லே. ஆனுல் உறங் காமல் விட்ட பாக்கியை அடுத்த வாரத்துக்குள் தீர்த்து விடுவேன் என்றெண்ணுகிறேன். 24 மணி நேரத்தில் மொத்தம் சுமார் 9 மணி நேரத்தைத் தூக்கத்தில் செலவு செய்கிறேன். சுமாராகப் படிக்கவும் செய்கிறேன்.

ஆசிரமக் கடிதக் கட்டு இதற்குள் வந்துவிடுமென்று எதிர் பார்த்தேன். இன்னெரு பஞ்சடிக்கும் வில்லே இப்பொழுது அனுப்பிவிட வேண்டாம்.

அன்பு,

பாபு

எ. ம.
*17—1—'32*

---

* சரியான பெயர்—பார்?

2. வட்டமேசை மாநாட்டிற்குப் பாபு சென்றிருந்தபோது, அவருடன் ஓயாது இருக்குமாறு, பிரிட்டிஷ் அரசு, ஈவான்ஸ், ரோஜர் என்ற இரு அனு பவமிக்கத் துப்பறியும் அதிகாரிகளே ஏற்பாடு செய்திருந்தது. அவர்கள் பெயரைப் பொறித்து இருவருக்கும் ஒவ்வொரு கைக்கடிகாரம் அனுப்ப பாபு ஏற்பாடு செய்திருந்தார்.

வில்லைப் பாயில் சுருட்டி அனுப்பியிருந்தாய் என்பதை இன்றுதான் பார்த்தேன். தவறுக்கு வருந்துகிறேன்.

*18-1-'32*

# 143

*சி. மீரா,*

நீண்ட நாட்கள் எதிர்பார்த்த ஆசிரமத் தபால் நேற்றுத்தான் வந்து சேர்ந்தது. இனிமேல் எனக்கு ஒழுங்காகக் கிடைக்குமென்று எதிர்பார்க்கின்றேன். நீ பம்பாய்க்குப் போனது சரிதான். எங்கு தங்குவாய், என்ன செய்வாய் என்பதை இறுதியாக முடிவு செய்யும் பொறுப்பு உன்னைச் சார்ந்ததாகவே இருக்க வேண்டும்.

* * *

தொங்குகின்ற வில்லைக் கொண்டுவர வேண்டாம், அனுப்பவும் வேண்டாம் என்று நான் ஏற்கனவே உனக்கு எழுதியுள்ளேன். நீ எனக்கு ஏராளமான பஞ்சுப் பட்டைகள் அனுப்பியிருப்பதால், இன்னும் சில வாரங்களுக்கு நான் பஞ்சடிக்க வேண்டியிராது. அதுபற்றி எனக்கு மகிழ்ச்சிதான். இழந்த உடல் வலிமையை நான் முழுவதும் மீண்டும் பெறவில்லை. இரவு 9 மணியிலிருந்து காலை 3-45 மணிவரை, முழுநேரம் தூங்குவதற்கும் மேலாகப் பகல்வேளையில் மூன்று முறையாகிலும் உறங்குகின்றேன். இன்னமும் உறக்கமும் ஓய்வும் எனக்கு அதிகம் தேவைப்படுகின்றன. சென்ற ஆண்டு நூற்றதுபோல் 500 கெஜங்கள் நான் நூற்பதில்லை. இரண்டு நாட்களில் அந்த அளவு நூற்க முடிகிறது. ஆனால் விரைவில், நாளுக்கு 500 கெஜங்கள் நூற்க முடியுமென்று எதிர்பார்க்கின்றேன். இப்பொழுது அதைச் செய்து முடிக்க முயன்று, நான் அலுப்பைத் தேடிக் கொள்ள மாட்டேன். என்னிடம் எஞ்சியுள்ள ஆற்றலை நான் சேமித்து வைத்துக் கொள்ள விரும்புகிறேன். இதனால், இன்னும் அதிகப் பஞ்சுப் பட்டைகளை நீ கொண்டுவரவேண்டும், அல்லது அனுப்ப வேண்டும் என்று பொருளில்லை. எனக்கு அது தேவைப்பட்டால், நான் விரைவில் உன்னிடம் சொல்வேன். என் உடல் நலம் நன்றாக இருக்கிறது. சர்தார் வல்லபபாயும் நன்றாக இருக்கின்றார். எவ்வளவு ஓய்வு எனக்குத் தேவைப்படுகிறது என்று மட்டும்தான் உனக்குக் குறிப்பிட்டேன். லண்டனில் அலுப்பும் அலைச்சலும் மிகக் கடுமையாக இருந்தன. அதையொட்டி, உடல் நீண்ட நாட்கள் ஓய்வு வேண்டுகிறது போலும். கப்பல் பயணத்தால் நன்மை நிச்சயம் ஏற்பட்டிருந்தது. ஆனால் லண்டனில் அலைச்சலுக்கு மேலாகப் பம்பாயில் ஏற்பட்ட அலைச்சலில் அந்த நன்மையும் இழக்கப்பட்டது.

பேட்டிகளைப் பொறுத்தவரை, இம்முறை சிரமமில்லை. நான் சென்றமுறை கேட்டதற்கு அவர்கள் இம்முறை இசைந்துள்ளனர். ஆகவே வாரம் ஒருமுறை வந்து என்னைப் பேட்டி காணலாம். ஆனால் அதற்காக ஒவ்வொரு வாரமும் யாராவது வந்து தீர வேண்டுமென்ற அவசியமில்லை. நான் தடையெதுவும் விதிக்க விரும்பவில்லை. ஆனால் நாம் ஏழைகள் என்பதை மனத்திற் கொண்டு, அன்பைத் தெரிவிக்கப் பேட்டி காண்பதில் நிதானமாய் இருக்க வேண்டுமென்ற எச்சரிக்கை மட்டும் செய்ய விரும்புகிறேன். அப் பேட்டிகளில் நாம் எதையும் பேசித் தீர்த்து முடிவு செய்யமுடியாது. மேலும் நாமே விரும்பிக் கட்டுப்பாடுகளை ஏற்றுக் கொள்வதன் மூலம், அன்பு தழைக்கத்தான் செய்யும். நான் இனியும் தத்துவம் பேச விரும்பவில்லை. எது சிறந்ததோ, அதைத்தான் நீங்கள் செய்வீர்களென்ற நம்பிக்கை எனக்குண்டு. அரசியலில் பிரபலமானவர்கள் மட்டும் தனியாக அனுமதி வாங்காமல் வந்து பார்க்க முடியாது.

சகோதரிகளுக்கும், கமலாவுக்கும், உனக்கும் என் அன்பு.

பாபு

*23-1-'32*

## 144

சி. மீரா,

நீங்கள் அனைவரும் நேற்றுத்தான் வந்து போனதுபோல் தோன்றுகிறது.

* * * மாலை வழிபாட்டு நேரங்களை ஒழுங்காகப் பின்பற்ற இயலவில்லை என்று கூறுகிறாய். அப்படியானால், நீ அந்த நேரத்தை மாற்றிக்கொண்டு, அதை ஒழுங்காகப் பின்பற்ற வேண்டும். ஆசிரம வழிபாட்டு நேரத்தின்போது, அந்த எண்ணத்துக்கு ஒரு சில விநாடிகள் ஒதுக்க வேண்டும். இது ஒரு யோசனைதான். இதைச் செய்து கொள்ளும் சிறந்தமுறை உனக்குத்தான் நன்கு தெரிய முடியும்.

* * *

நாங்கள் நன்றாக இருக்கின்றோம். உறக்கத்துக்கு, எனக்கு எவ்வளவு வாய்ப்பு கிட்டுமோ, நான் எவ்வளவு அதைப் பயன்படுத்திக் கொள்வேனோ, அவ்வளவும் எனக்கு இன்னும் தேவைப்படுகிறது.

அன்பு,

பாபு

எ. ம.
*31-1-'32*

## 145

திருத்தப்படாதது

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. இதை நேராக அஞ்சலில் சேர்க்க எண்ணியுள்ளேன். உன் உடல் நலன் பற்றி தாமோதர தாஸ் சொன்னது எனக்குச் சஞ்சலம் ஊட்டியது. முக்கிய வேலையில் நீ முனைந்து ஈடுபட்டுள்ளாய்[1] என்று தாமோ தரதாஸ் கூறினர்; உன் கடிதத்திலிருந்தும் அது அறியக் கிடக் கின்றது. உன் வேலைப் பளுவை நீ குறைத்துக்கொள்ள வேண்டும். எப்பொழுதும் நடுநிசிவரை விழித்திருந்து, மீண்டும் காலை 4 மணிக்கு எழுந்திருக்க முடியாது. நடுநிசிவரை வேலை செய்வது அவசியமென்றால், வழிபாட்டுக்குப்[2] பின் நீ பூரண ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும்.

எரவாடா சிறைக்கு வாரம் ஒருமுறை வருவது உனக்கு ஆறுதல் தருமென்றால், நீ ஒவ்வொரு வாரமும் வரவேண்டும். நான் அதற்குத் தடை எதுவும் விதிக்கவில்லை. இதுபற்றி என் கருத்தை மட்டும் உனக்குத் தெரிவித்தேன். கைதி, என்ன விருந்தாலும் கைதிதான். தற்போதைக்கு அதிகாரிகள் வார மொருமுறை பேட்டி காண எனக்கு அனுமதி தந்துள்ளனர். அதை நான் பயன்படுத்த மறுக்க வேண்டிய நியாயமில்லை. ஆனால் அந்தச் சலுகையை நாம் பெரிதாக மதித்துவிடக் கூடாது; அது எத்தனை நாள் நிற்கும் என்பது நிச்சயமல்ல. சுயக் கட்டுப்பாடே, ஒரு கைதிக்கும், அவன் நண்பர்களுக்கும், அவனுக்குப் பிரிய மானவர்களுக்கும் ஏற்ற வழி. ஆனால் சுயக் கட்டுப்பாடு உண்மை யானதாக இருக்க வேண்டுமானால், அது ஒருவரை உற்சாகப் படுத்த வேண்டும். ஒருவன் மனநிலையைக் குலைத்து, அது சோர்வை உண்டாக்கினால், அது உணர்வற்ற செயலாகி விடு கிறது; அயலாரால் சுமத்தப்பட்டதாகிறது. சுயக் கட்டுப்பாட்டின் அருமையை நீ உணர்ந்து, அதன் பயனாய், இயற்கையாக அதைப் பின்பற்ற முடியுமானால்தான், நீ இங்கு வருவதைக் குறைத்துக் கொள்ள வேண்டும். அம்முயற்சியால், உனக்குச் சோர்வு ஏற் பட்டால், அம்முயற்சி இயற்கைக்கு மீறியதென்றும் அதனால் உனக்குத் துன்பம்தான் ஏற்படுமென்றும் அறிந்துகொள். அந் நிலையில், நீ சிறிதும் தயக்கமின்றி வரவேண்டும்.

நான், எடையில் ஒரு பவுண்டு கூடியுள்ளேன். இப்பொழுது என் எடை 107 பவுண்டு. வல்லபபாய் எடை மாறாமல் $144\frac{1}{2}$ பவுண் டாக உள்ளது. தேன் பயனுள்ளதாக இருக்கும்.

* * * *

---

1. சட்ட மறுப்பு இயக்கம் பற்றிய அதிகார பூர்வமான செய்திகள் அனைத் தையும் என்னால் இயன்றவரை சேகரிக்க முனைந்தேன். இவற்றைத் தேர்ந் தெடுத்துத் தொகுத்துக் கையெழுத்துப் படிகள் எடுத்து அயல்நாடுகளுக்கு அனுப்பி வந்தேன்.

2. காலை 4 மணி வழக்கமான வழிபாட்டு நேரம்.

ஆசிரமத் தபாலில் என்னிடமிருந்து இன்னொரு கடிதத்தை எதிர்பார்க்காதே.

அன்பு,

பாபு

எ. ம.
*4-2-'32*

## 146

*சி. மீரா,*

உன் கடிதம் எனக்கு ஆறுதல் அளிக்கின்றது. ஆண்டவன் வழிகாட்டுவான் என்பதில் நம்பிக்கை கொண்டவர்கள், தங்களால் இயன்றதைச் செய்துவிட்டுப் பின்பு கவலைப்பட மாட்டார்கள். கதிரவனைப் போல் கடமையில் இம்மியும் தவருது உழைப்பது வேறு யார்? ஆயினும் அவனுக்கு அலுப்போ சோர்வோ ஏற்பட்டு எவரும் அறியார். கதிரவன் உயிரற்ற பொருள் என்று நாம் ஏன் எண்ண வேண்டும்? அவனுக்கும் நமக்கும் இடையே உள்ள வேறு பாடு, தன் கடமையை ஆற்றுவதைத் தவிர்த்து அவனுக்கு வேறு வழியே கிடையாது என்பதுதான். நமக்கு ஓரளவு செயலில் சுதந்திரம் உள்ளது—அந்த சுதந்திரம் உண்மையானதும் நிச்சயமானதும் அல்ல என்ற போதிலும். ஆனல் இது போன்ற தத்துவ சஞ்சாரங்களை இத்துடன் நிறுத்திக் கொள்வோம். அயராது உழைக்கும் ஆற்றலில், கதிரவன் நமக்கு ஓர் இலட்சிய எடுத்துக்காட்டாக விளங்குகின்ருன் என்பதை மட்டும் உணர வேண்டும். இறைவனின் ஆணைக்குப் பூர்ணமாக நம்மை அர்ப்பணம் செய்து கொண்டு, பூஜ்ய மாகி விட்டால், செயலாற்றுவதில் நமக்கு உள்ள சுதந்திரத்தை நாமே விட்டுக் கொடுப்பவராவோம். அந்த அளவுக்கு நாமும் தேய்ந்து நலிய வேண்டியதில்லை.

பாலுக்குப் பதிலாகப் பாதாம் பருப்புக் கஞ்சியைச் சாப்பிட இப்பொழுது தான் தொடங்கியுள்ளேன். பால் எனக்கு ஒத்துக் கொள்ளவில்லை யாதலால், பாலின் அளவை தினமும் சிறிது சிறிதாகக் குறைத்து வந்தேன். நான் ஓய்வெடுத்துக் கொண்டிருக்கும் போது, விலங்குப் புரதச் சத்து தேவையில்லை என்றிருக்கலாம். நான் முயற்சி செய்துதான் பார்க்கின்றேன். நாம் லண்டனில் சாப்பிட்டு வந்த பாதாம் கஞ்சி உன்னிடம் இன்னும் இருந்தால், அந்தப் புட்டிகளை உன்னுடன் எடுத்து வா. தற்போதைக்குப் பேரிச்சம் பழம், தக்காளி, பாதாம் பசை ஆகியவற்றைச் சாப்பிடுவதுடன், 24 மணி நேரங்களில் இருமுறை எலுமிச்சை ரசமும் தேனும் சேர்த்துச் சாப்பிடுவதால், உடல் நலன் நன்ருகத் தழைத்துள்ளது. பால் சாப்பிடாமல், உடல் நலன் எவ்வாறிருக்கும் என்று இப்பொழுது சொல்வதற்கில்லை. பாலை அடியோடு தவிர்ப்பதையே நான் விரும்புவேன் என்ற போதிலும். என் உடல் நலனைப் பாதிக்கக் கூடியது எதையும் தெரிந்து செய்ய மாட்டேன்.

கம்பளிப் போர்வைகளை எப்படிச் சலவை செய்தாய் என்பது பற்றி என்னைப் பேட்டி காணும் போது சொல்ல நேரம் இராது

என்பதால், கடிதத்தில் விளக்கிக் கூறு. பச்சைத் தண்ணீரில் ஊற வைத்தாயா, வெந்நீரிலா? எவ்வளவு நேரத்திற்கு? எவ்வளவு லக்ஸ் தூளைக் கலந்தாய்? 'அபனு' சோப் தூளைப் பயன் படுத்த உத்தேசித்துள்ளேன். இதில் எனக்கு அவசரம் ஒன்று மில்லை.

உனக்கு நான் எழுதும் கடிதங்களை ஆசிரம வாசிகளுக்கும் படித்துக் காட்டுகிறாய் என்று எண்ணுகிறேன். அது போலவே, முக்கியமான செய்தி எதுவும் ஆசிரமக் கடிதத்தில் இருந்தால், அது உனக்குக் கிடைக்கிறது என்றும் எண்ணுகிறேன்.

* * * *

எங்கள் இருவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*11-2-'32*

# 147

[சட்ட மறுப்பு இயக்கத்தைப் பற்றிய செய்திகளை வாரந்தோறும் அறிக்கைகளாகத் தயாரித்து நான் வெளி நாடுகளுக்கு அனுப்பிக் கொண்டிருந்ததன் பயனாக, பம்பாய் நகரத்தைவிட்டு உடனே வெளி யேற வேண்டுமென்று அதிகாரிகள் எனக்கு உத்தரவிட்டார்கள். அந்த உத்தரவை நான் ஏற்க மறுத்ததால் நான் கைது செய்யப்பட்டு, விசா ரணை செய்யப்பட்டு, 3மாத வெறுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டேன். முதல் வகுப்புக் கைதியாகப் பாவித்து ஆர்தர் சாலையிலுள்ள பம்பாய் பெண்கள் சிறைக்கு என்னை அனுப்பினர்கள். கடன்காரர்கள் சிறையைத் தற்காலிகமாக அரசியல் பெண் கைதிகள் சிறையாக மாற்றியிருந்தார்கள். அதில் முதல் வகுப்புக் கைதிகளுக்கு இடமில் லாததால் முதல் இரண்டு இரவுகளுக்கு என்னை மூன்றும் வகுப்புக் கைதிகளுடன் வைத்திருந்தார்கள். அதன் பின்பு சிறை முற்றத்தி லிருந்த ஒரு சிறு சமையலறையை மாற்றி அதில் என்னை அடைத் தார்கள். அந்த அறையில் பல அடுப்புகள் கொண்ட நீண்டதோர் வரிசை இருந்ததால், உள்ளே தங்குவதற்கு எனக்கு இடமேயில்லை. இதுவும் எனக்கு நல்லதாகவே முடிந்தது. இதன் காரணமாகப் பக லிலே சிறை முற்றத்திலுள்ள கைதிகளிடையே நடமாடுவதற்கும், இரவிலே மற்ற கைதிகள் அறைகளில் அடைக்கப்பட்ட பின்பு வெளி முற்றத்தில் நான் படுத்துக் கொள்வதற்கும் அனுமதிக்கப்பட்டேன். மூன்றும் வகுப்பு அரசியல் கைதிகளில் பல பேர் நன்கு படித்த பெண்கள்; உயர்வான வாழ்க்கைத்தரத்துக்குப் பழக்கப்பட்டவர்கள். ஆசிரமத்தில் உள்ளதைவிட வசதியான வாழ்க்கை நடத்தப் பழக்கப் பட்டவர்கள். ஆனாலும் கைதிகளைப் பாகுபாடு செய்வதில் பம்பாய் அரசாங்கம் மிகக் கடுமையாக இருந்தது. எனக்கு நினைவு இருக்கும் வரை, பா, திருமதி நாயுடு, நான் ஆகிய மூவரும் தான் அந்த மாநிலம் முழுவதிலுமே முதல் வகுப்பு தரப்பட்டோம். மற்றவர்களில் ஒரு சிலரை இரண்டாம் வகுப்புக் கைதிகளாகவும், மிகப் பெரும்பான்மை

யோரை மூன்றும் வகுப்புக் கைதிகளாகவும் நடத்தி வந்தார்கள். இந்தப் பாகுபாட்டில் முக்கிய வேறுபாடு உணவைப் பொறுத்தது தான்.]

சி. மீரா,

உன் இனிய கடிதம் இன்று காலை கிடைத்தது. அதற்காக நான் காத்துக் கொண்டிருந்தேன். நீ அங்கு மகிழ்ச்சியுடன் இருக்கின்றாய் என்பதை அறிய எங்கள் அனைவருக்கும் திருப்தி. வேலைப் பளுவின் கீழ் உன் உடல் நலம் முறிந்துவிடுமோ என்று நான் எண்ணிய நேரத்தில் நீ சிறைக்குக் கொண்டு வரப்பட்டுள்ளாய். 12 அவுன்சு பால் உனக்குப் போதாது என்று தான் நினைக்கின்றேன். 24 அவுன்சு பாலாவது நீ சாப்பிட வேண்டும். ஆனால் சிறையிலே அதிக வேலை இராது என்பதால் ஒரு வேளை 12 அவுன்சே உனக்குப் போதுமானதாக இருக்கலாம். எனினும் பாலில் சிக்கனம் கையாளக்கூடாது என்று எச்சரிக்கை செய்ய விரும்புகின்றேன். போதுமான உடற்பயிற்சிக்கு அங்கு வாய்ப்பு இல்லாதது போல் தோன்றுகிறது. ஆகவே அடிக்கடி நடந்து அதை ஈடு செய்து கொள்ள வேண்டும்.

உன்னுடன் நிறைய பெண்கள் இருப்பது அறிந்து மகிழ்கின்றேன். அவர்களைப்பற்றிய விவரங்கள் தர உன்னை அனுமதிப்பார்களென்றால், அந்த விவரங்களைத் தயவு செய்து கொடு.

என்ன புத்தகங்கள் சிபாரிசு செய்வேன் என்று கேட்டு எழுதியிருந்தாய். நிவேதிதா சகோதரி எழுதிய புத்தகங்களை நீ படிக்க வேண்டும். மகாபாரதம், இராமாயணம் இரண்டையும் சுருக்கிக் கவிதை வடிவிலே 'தத்' இயற்றியுள்ளதையும், 'இந்திய இன்பக் காட்சிகள், விசுவாச அருள்மணிகள்' என்று ஆர்னல்ட் எழுதிய புத்தகங்களையும் நீ படிக்க வேண்டுமென்று நான் விரும்புகின்றேன்.

நூற்பது, பஞ்சடிப்பது போன்ற வேலைகளுக்கு உன் சகாக்களுக்கு நேரம் தருவார்களாயின், அவர்கள் அதைச் செய்யுமாறு நீ தூண்ட வேண்டும்.

நிறைய இந்தி படித்துக் கொள்ள அங்கு உனக்கு வாய்ப்புக் கிடைக்கும். ஆனால் எக்காரணம் கொண்டும் அலுப்பை வரவழைத்துக் கொள்ளாதே. நீ கேட்காமலே கிடைத்துள்ள இந்த ஓய்வு விலைமதிப்பிட முடியாதது. உன் உள்ளத்தை உயர்த்திப் பண்படுத்தும் வகையிலே இந்த ஓய்வை நீ பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

பாதாம் பருப்பு சாப்பிடும் முயற்சியைத் தொடர்ந்து வருகின்றேன். என் எடை இன்னும் 106 பவுண்டாகவே உள்ளது. இது மிகவும் திருப்திகரமானது. ஆகவே இது குறித்து நீ எதுவும் கவலை கொள்ளவேண்டாம்.

எங்கள் இருவர் அன்பும் உனக்கு உரியதாகுக.

எ. ம. பாபு

25-2-32

## 148

சி. மீரா,

நீ கடிதம் எழுதுவதாக வாக்களித்திருந்தாய். ஆனால் கடிதம் எதுவும் இன்று வரவில்லை. இது குறித்து நான் வியப்படைய வில்லை. இதுபோன்ற கடிதங்களைத் தடுத்து நிறுத்தியிருந்தார்கள். ஆனால் என்னைப் பொறுத்தவரை மட்டிலும், இந்தத் தடைக்கு இப்போது விலக்கு அளிக்கப்பட்டுள்ளது. ஆகவே எனக்கு வரும் கடிதங்களுக்குத் தடை இருக்காது என்று எண்ணுகின்றேன். எனவே மறு தபாலிலேயே இதற்கு பதில் கிடைக்குமென்று எதிர் பார்க்கின்றேன். நீயும் உன்னுடைய நண்பர்களும் எவ்வாறு பொழுது போக்குகின்றீர்கள்? அங்கு என்ன செய்கின்றீர்கள், நேரத்தை எவ்வாறு பயன்படுத்துகின்றீர்கள் என்பதையெல்லாம் விவரமாகக் கூறு.

மகாதேவ் இப்பொழுது எங்களுடன் சேர்ந்து விட்டார். இதனால் எங்களுக்குக் கொண்டாட்டம் தான். எங்களில் மிகவும் சுறுசுறுப்பாக நூற்கக் கூடியவர் அவர் தான். அவரை மிஞ்சிவிட, பலமில்லாத என்னுடைய கைகள் இடம் தர மாட்டா. பாலைத் தவிர்த்துவிட்டு நான் என் உணவை உட்கொண்டு வருகிறேன். உணவு முறையில் மாறுதல் எதுவும் செய்யவில்லை. ரொட்டியைச் சேர்த்துக் கொண்டது பற்றி உனக்குச் சொல்லிவிட்டேன் என்று எண்ணுகிறேன். அதனால் இதுவரை தீங்கு எதுவும் ஏற்பட்டதாகத் தோன்றவில்லை. $105\frac{1}{2}$ பவுண்டு முதற்கொண்டு $106\frac{1}{2}$ பவுண்டு வரை என் எடை ஊசலாடிக் கொண்டிருக்கிறது. இதில் அதிருப் திப்படுவதற்கு ஒன்றுமில்லை. மற்றவர்கள் நலமாகவே இருக் கின்றார்கள்.

எங்கள் அனைவருடைய அன்பும் உனக்கு உரித்தாகுக.

எ. ம. சி.
*26—3—'32.* பாபு

## 149

சி. மீரா,

முந்தைய கடிதத்தை நான் அனுப்பும் தருவாயில் உன்னுடைய அருமையான இரு கடிதங்களும் கிடைத்தன. நான் இதை எழுதி முடிக்கும் வரை கடிதக் கட்டை அனுப்புவதை நிறுத்தி வைத் துள்ளேன். நான் ஏன் எழுத முடியவில்லை என்பது இப்போது உனக்கு விளங்கும். என்ன இருந்தாலும் நாம் கைதிகள் தானே? சுதந்திரமாய் உள்ளவர்களுக்குத் தாராளமாகக் கிடைக்கக்கூடிய வசதிகளையெல்லாம் நாம் எதிர்பார்க்கக் கூடாதல்லவா? இந்தத்

தாமதங்கள் தவிர்க்க முடியாதவை என்று ஏற்றுக் கொள்ள வேண்டும். இது குறித்து வருத்தப்படுவதற்கு இடமில்லை. இனி யாவது இடைஞ்சலின்றி எல்லாம் இனிது நடக்குமென்று நாம் எதிர்பார்ப்போமாக. ஆனல் எதிர்பாராத விதமாக இடைஞ்சல் எதுவும் ஏற்பட்டால் கவலை கொள்ள வேண்டாம்; நாம் கைதிகள் தான் என்று நீ சொல்லிக்கொள்.

உன் எடை கூடியுள்ளது கண்டு மகிழ்கின்றேன். உன் உயரத் திற்கும், பருமனுக்கும் நீ 132 பவுண்டு எடையைத் தாராளமாகத் தாங்க முடியும். இவ்வளவு வெப்பம் உடலுக்கு நல்லதில்லை தான். உப்பு சேர்த்துக் கொள்வதை தவிர்த்தது நல்லதே. இரண்டு, மூன்று நாட்களுக்குப் பால், வெண்ணெய் சேர்ப்பதையும் தவிர்த் துப்பார். அப்போது சூடு குறையக்கூடும்.

படிப்பதில் உனக்குப் பற்றுதல் ஏற்பட்டு வருவது கண்டு மகிழ் கின்றேன். கிரிப்பித்ஸ் செய்துள்ள இராமாயண மொழி பெயர்ப்பு முழுவதையும், 11 முக்கிய உபநிடதங்களின் மொழி பெயர்ப் பையும் உனக்கு வாங்கித்தர யாரிடமாவது சொல். இந்தச் சிறை வாசத்திற்கு இப்புத்தகங்கள் போதும்.

இந்தியைப் பொறுத்தவரை பால இராமாயணப் புத்தகம் கிடைக்க ஏற்பாடு செய்து கொள். கதை உனக்கு இப்போது தெரியுமாதலால் இந்தியில் கதையைப் படித்துப் புரிந்து கொள்வது உனக்குச் சிரமமாக இருக்காது.

இர்வின் பிரபு எழுதிய கடிதத்தின் படி ஒன்றை நீ முன்பே அனுப்பியிருந்தாய்.*

ரோலண்டு பற்றி எனக்குச் செய்தி எதுவும் வரவில்லை. ஆனல் அதைப்பற்றி நான் கவலைப்படவில்லை. இவ்வாறு அடிக்கடி தாமதங்கள் ஏற்படுவது சாதாரணமாக எதிர்பார்க்கக் கூடியதே.

இக்கடிதம் இங்கிருந்து இன்றே செல்ல வேண்டுமென்று நான் விரும்புவதால் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*26—3—'32*

---

* இர்வின் பிரபு, இப்போது ஹாலிபாக்ஸ் பிரபு, எனக்கு எழுதி யிருந்த ஒரு கடிதம் பற்றி பாபு குறிப்பிட்டுள்ளார் என்று எண்ணுகின்றேன்.

## 150

மீரா பாய்க்கு, (ஸ்லேடு)

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. வலது கையில் தொந்தரவு தொடர்ந்து இருக்குமென்று எண்ணுகின்றேன். இங்கு வந்தவுடன் வலது கையைக் கொண்டு தாராளமாக எழுதத் தொடங்கினேன். ஆனால் அது பலன் தராது என்று விரைவில் புரிந்து கொண்டேன். முதுமை என்னைக் கவர்ந்து வருவதற்கு இது ஓர் அறிகுறியாக இருக்கலாம். அவ்வாறாயின் அது குறித்து, வருத்தமோ வியப்போ கொள்வதற்கில்லை. சேவை செய்வதற்கு ஒரு சாதனமாக மட்டும் இந்த உடலை மதித்து, இறைவனின் ஆலயமாக அதை நான் நடத்தியிருந்தால் முதுமை என்பது கனிவான, அழகு நிறைந்த, வளமும் சத்தும் உச்சநிலையிலுள்ள, ஒரு கனிபோல் இருந்திருக்கும். இதைப்போன்ற சிறு சிரமங்களுடன் நான் தப்பித்துக் கொண்டேனால் அதைப் பெரும் பேறாகவே ஏற்றுக் கொள்ளவேண்டும். ஆனால் இதையெல்லாம் பற்றி இப்போது எண்ணிப்பார்ப்பதில் பலன் எதுவும் இல்லை. இதைப்போன்ற எண்ணங்கள் கொள்வது தவறு. கஷ்டங்கள் வரும்போது அவற்றை ஏற்றுக் கொண்டு கூடியவரை முன்னெச்சரிக்கையாக நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டால் போதும். ஆகவே கையைப்பற்றி நீ கவலைப்படக்கூடாது.

என்னுடைய எடை 106 பவுண்டாகவே உள்ளது. உண்ணா நோன்பு நாளன்று மட்டும் 103½ பவுண்டுக்குக் குறைந்தது. 24 மணி நேரத்தில் நான் 5 அல்லது 6 துண்டு நன்கு சுடப்பட்ட வெள்ளை ரொட்டி, 30 பேரீச்சம் பழங்கள், ஒருமுறை நன்கு வேகவைத்த காய்கறிகள் ஒரு கிண்ணம் நிறைய, காலை 4-15 மணிக்கு 2 கரண்டி தேன், அத்துடன் சிறிது சோடாவும், வென்னீரும், இருமுறை சோடாவும் எலுமிச்சை ரசமும் ஆகியவற்றைச் சாப்பிட்டுவருகிறேன். ஏறக்குறைய 2 அவுன்சு பாதாம் பருப்புக் கஞ்சி சாப்பிடுகிறேன். இவை என்னைத் திருப்தி செய்கின்றன என்றே எண்ணுகின்றேன். இவை பலனளிக்காவிட்டால் மீண்டும் பால் சாப்பிடத் தொடங்குவேன். மருந்து சாப்பிடாமலும், வேறு எந்த உதவியும் இல்லாமலும், இரண்டு மூன்றுமுறை தாராளமாக வெளிக்குப்போகிறது. இரவு 9 மணி முதல் காலை 3-40 வரை நான் தூங்குகின்றேன். பகலில் இருமுறை, ஒவ்வொரு முறையும் 20 நிமிடங்களுக்குத் தூங்குகின்றேன். 2 நாட்களில் 375 சுற்று நூல் நூற்கின்றேன். நான் பஞ்சடிக்க இன்னும் தொடங்கவில்லை. நீ அனுப்பியிருந்த பஞ்சுப் பட்டைகள் இன்னும் தீரவில்லை. எஞ்சியுள்ள நேரத்தைப் படிப்பதிலும் எழுதுவதிலும் செலவு செய்கின்றேன். இப்போது ரஸ்கின் எழுதிய 'FORS CLAVIGEON' என்ற நூலைப்

படித்து வருகிறேன். மனிதாபிமானம் ததும்பும் நூல் அது. இலட்சிய ஆர்வம் அவருக்கு நிறைய உண்டு. தம் உள்ளக்கிடக்கையைச் சொல்லிலும் செயலிலும் வெளிப் படுத்த அவர் மேற்கொண்ட முயற்சிகளில் இக்கடிதங்கள் மிகச் சிறந்தவை. எழுதுவதிலும், பிறருக்குச் சொல்லிக் கடிதங்களை எழுத வைப்பதிலும், அதிக நேரம் செலவாகி விடுகிறது. சக கைதிகளுக்கு எழுதுவதற்கும் எனக்கு அனுமதி அளிக்கப்பட் டுள்ளதால் சென்ற முறையைவிட இம்முறை எழுத்து வேலை அதிகமாக உள்ளது. இது குறித்து எனக்கு மகிழ்ச்சிதான். ஒழுக்கப் பிரச்னைகள் பற்றி ஒவ்வொரு வாரமும் ஆசிரமத்திற்குச் சில கருத்துக்களை அனுப்பி வருகிறேன். ஆசிரமத்தின் வர லாற்றை எழுத 5 நாட்களாகத் தொடங்கியுள்ளேன்.

என்னைப்பற்றி நீ கேட்டிருந்த கேள்விகளுக்கெல்லாம் பதில் கிடைத்து விட்டது என்று எண்ணுகின்றேன். வல்லபபாய், மகாதேவ் ஆகியவர்கள் நலமாக இருக்கின்றார்கள்.

... ... ... ...

(இப்பகுதி சிறை அதிகாரிகளால் நீக்கப்பட்டு விட்டது)

இவற்றில் எல்லாம் நாமே நம்மீது விரும்பிச் சுமத்திக் கொள்ளும் நிபந்தனைகளைவிட, அதிகமான நிபந்தனை எதுவும் விதிக்கப் படவில்லை.

சிறிது காலத்திற்கு உப்பைத் தவிர்ப்பது ஒரு தீங்கும் செய்யாது. அதனால் நன்மை ஏற்படும் என்பதை நீயே அனுப வத்தில் கண்டுள்ளாய். பலவீனம் ஏற்படுவதுபோல் தோன்றுவது தற்காலிகமாகத்தான். பச்சை எலுமிச்சையை ஏதாவது ஒரு வகையில் சேர்த்துக் கொள்வதன் மூலம் இப்பலவீனத்தைப் பெரிதும் போக்க முடியும். தொடர்ந்து 7, 8 ஆண்டுகளுக்கு உப்பே சேர்க்காமல் நான் உணவருந்தி வந்துள்ளேன் என்பது உனக்குத் தெரியுமென்று எண்ணுகின்றேன். இதனால் எனக்கு எந்தவிதத் தீங்கும் ஏற்படவில்லை. இந்த முயற்சியிலே இன்னும் பலர் என்னுடன் சேர்ந்து கொண்டனர். ஆகவே உனக்கு நன்மை ஏற்படும்வரை, உப்பைத் தவிர்த்து உணவை உட்கொள்ளும் முயற்சியை மேற்கொள்ளலாம். பாலிலும் உப்பு சத்து அதிகம் உள்ளது. பச்சைப் பாலில் உப்பின் ருசி தெரியும்.

நீ மகாதேவுக்கு அனுப்பிய தோத்திரப்பாடல்கள் அவருக்கு வந்து சேர்ந்தன. அந்த வேலையை அவர் எடுத்துக் கொள்ளப் போகிறார்.

வானத்தை ஆராயும் பழக்கத்தை புதிதாக மேற்கொண் டுள்ளேன் என்பதை உனக்குச் சொல்ல மறந்துவிட்டேன். என் னுடைய பேனாவில் மை காலியாகிவிட்டது. இது மகாதேவின் பேனா. இப்போது இரவு 9¼ மணி; படுக்கை வேளைக்குமேல் நேர

மாகிவிட்டது. ஆனல் உன் கேள்வி ஒன்றுக்கும் நான் பதில் சொல்லத் தவறவில்லை என்று எண்ணுகின்றேன். * * *

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம
8-4-'32.

## 151

சி. மீரா,

உன்னிடமிருந்து நான் எதிர்பார்த்த கடிதம் இப்போதுதான் வந்தது. பதில் எழுத நீ செய்ததைப்போல் நான் தாமதிக்க வேண்டியதில்லை.

கமலா தேவி* உன்னுடன் இருக்கிறார் என்பதையும், காலை வழிபாட்டில் உன்னுடன் சேர்ந்து கொள்கிறார் என் பதையும், மாலையில் பஜனைகள் பாடுவதில் கலந்துகொள்கிறார் என்பதையும் அறிந்து நான் மிகுந்த மகிழ்ச்சி அடைகிறேன். அவர்கள் வேகமாகத் தவ்வு கயிறு ஆட்டம் ஆடுவதை நினைக்கும் போது, அதே காரணத்திற்காக, நானும் முன்பு ஆட்டம் ஆடிய நாட்கள் நினைவுக்கு வருகின்றன. என்னுடைய மகன்களுக்கும் இதை நான் பழக்கப்படுத்தியிருந்தேன். அவர்கள் அனைவரிலும், மிகவும் அழகாக ராமதாஸ் அதைக் கற்றுக் கொண்டிருந்தான். குறிப்பாக மாரி காலத்தில் இது நல்ல உடற்பயிற்சியாகும்.

உப்பைத் தவிர்த்து உணவை உட்கொள்ளும் முறையை நீ தொடர்ந்து வருவது நல்லது. அது உன் உடம்புக்கு ஒத்துக் கொள்கிறது என்பதில் எனக்குத் திருப்தி.

இங்கு ஒரு புதிய வைத்தியர் வந்துள்ளார். பார்சி இனத் தைச் சேர்ந்த அவர் இராணுவத்தில் மேஜராக இருக்கின்றார். அவருக்கு வேலையில் மிகுந்த ஈடுபாடு. பண்பட்ட பார்சி கன வான்கள் அனைவரையும் போலவே, மிகுந்த இங்கிதத்துடனும்

---

* கமலா தேவி 'பி' வகுப்புக் கைதியாகச் சிறைப்பட்டிருந் தார். மற்ற 'பி' வகுப்புக் கைதிகளைப் போலவே அவரும், கடன்காரர் சிறையில் 'சி' வகுப்புக் கைதிகளுடன் வைக்கப்பட்டிருந்தார். மற்றக் கைதிகள் நலனில் நானும் அவரும் அதிக அக்கறை எடுக்கத் தொடங் கியதால், எங்கள் இருவரையும் அங்கிருந்து அகற்றி, பெரிய ஆர்தர் சாலைச் சிறைக்குள் இருந்த பெண்கள் சிறைக்கு மாற்றினர்கள். அங்கு மூன்று சிறிய கூடங்கள்; பொதுவான ஒரு தாழ்வாரம். இக் கூடங்கள் ஒன்றில் எங்களை வைத்தார்கள். மற்ற இரு கூடங்களிலும் அரசியல் கைதிகளல்லாத பெண் கைதிகள் இருந்தனர்.

மரியாதையாகவும் அவர் நடந்துகொள்கிறார். வலது கைப் பெருவிரலுக்கும் இடது முட்டிக்கும் அவர் மின்விசை கொண்டு வருடிவிடும் சிகிச்சை அளித்துள்ளார். கை முட்டி சிறிது காலமாக வலித்துக் கொண்டிருந்தது. ஆனால் குறிப்பிட்ட ஒரு விதமாக வேலை செய்யும்போதுதான் வலி தோன்றுகிறது. தேசீய வாரத்தின்போது சாதாரணமாக நூற்பதைவிட இரு மடங்கு நூற்பு வேலை நான் செய்ததால் ஒரு சில நாட்களுக்கு நூற்பதை நிறுத்திக் கொள்ள வேண்டுமென்று அவர் கருதுகிறார். இப்போது நாள் ஒன்றுக்குச் சுமார் 85 சுற்றுக்கள் நூற்கின்றேன். டாக்டர் மேத்தா ஆட்சேபணை கூறுவார் என்பதை அறிந்து, சர்க்காவைச் சுற்றுவதற்கு இடது கையைப் பயன்படுத்தி வருகிறேன். சென்ற 3 நாட்களாக இவ்வாறு செய்து வருகிறேன். இதில் நல்ல முன்னேற்றம் கண்டுள்ளேன். இதன் பயனாக வலது கையில் நல்ல நிதானமாக நூலை இழுக்க முடிகிறது; நூலும் துல்லியமாகவும் சீராகவும் உள்ளது.

இவ்வாறு இடது கைக்கு அதிக வேலை தந்து பயின்று வருவதையொட்டி, வலது கைக்கு எவ்வளவு வேலை கொடுக்கின்றோமோ, அதற்குச் சமமாகவே இடது கைக்கும் கொடுப்பது அவசியம் என்பதைப் பற்றி நான் எண்ணி வருகின்றேன். இரு கைகளாலும் வேலைகள் செய்வதற்கு ஆசிரமக் குழந்தைகளுக்குப் பயிற்சி தரவேண்டும். இதைப்பற்றி நான் நாரணதாசுக்கு ஏற்கனவே எழுதியுள்ளேன்.

எடையில் 2 பவுண்டுகள் இழந்துள்ளேன். இருநாட்களுக்கு உண்ணா நோன்பு இருந்ததுதான் இதற்குக் காரணம் என்று எண்ணுகிறேன். தொடர்ந்து எடை குறையாவிடில் இது குறித்து கவலைப்படுவதற்கில்லை. அவ்வாறு எடை குறைந்தால், சிறிதும் தயங்காமல் நான் மீண்டும் பால் சாப்பிடத் தொடங்குவேன். உனக்குத் தகவல் தெரிந்திருக்க வேண்டுமென்றே இதை உனக்குச் சொன்னேன். எடை குறைந்தது குறித்து நீ கவலை கொள்ளக்கூடாது.

ஆசிரமத்தின் வரலாற்றை எழுதும் வேலை மெதுவாகத்தான் நடந்துகொண்டு இருக்கிறது. பாக்கியிருந்த பல கடிதங்களை நான் எழுதியாக வேண்டியிருந்ததால், இவ்வேலையைச் சென்ற மூன்று நாட்களாக நிறுத்தியுள்ளேன். விரைவில் இதைத் தொடர்ந்து மேற்கொள்வேன்.

வானத்தை ஆராய்ச்சி செய்வது பழக்கமாகி விட்டது. இதைப்பற்றி ஒரு சில புத்தகங்களை சேகரித்துள்ளேன். இந்த ஆராய்ச்சியின் பயனாக, எல்லையற்ற பரம்பொருளுடன் என் உறவு இன்னும் இணக்கமாகியுள்ளது.

நூற்பதற்கு நான் பஞ்சடிக்கத் தேவையில்லை. இவ்வேலையை மகாதேவ் ஏற்கனவே ஆரம்பித்துவிட்டார். எப்போதும் நூற்பதற்கு அதிகமாகவே அவர் பஞ்சடிப்பது உண்டு. ஆகவே எனக்கும் சேர்த்து அவர் பஞ்சடிக்கின்றார். பஞ்சுப் பட்டைகள்

குறையும் போதெல்லாம் அவர் மேலும் பஞ்சடித்துக் கொண்டு இருப்பதால் பட்டைகள் காலியாகவே ஆகாது. * * *

ஏழைகள் வாழ்க்கை முறையை நாம் கற்றுக் கொள்ள வேண்டும். அந்தக் குறிக்கோளை நோக்கி நாம் முன்னேறுவதற்கு நான் தான் பெரிய தடை என்பதை உணர்கின்றேன். என்னுடன் தொடர்பு கொண்ட காரணத்தால், சீரான நிலையில் இல்லாத பல வற்றையும், இனிமேல் சீரற்ற நிலையில் நான் விட்டுச் செல்லக் கூடிய பலவற்றையும், சீர் செய்து திருத்துவது, உன்னைப் போல் இந்த இலட்சியத்தில் இன்னும் உறுதியாய் நிற்பவர்களின் பொறுப்பாகும்.

நாங்கள் அனைவரும் நலமாக இருக்கின்றோம். வல்லபபாய்க்கு மட்டும் முன்போலவே மூக்கு வலியும் மலச்சிக்கலும் தொந்திரவு தருகின்றன. இவ்விரு கோளாறுகளுக்கும் டாக்டர் மேத்தா சிகிச்சை செய்து வருகிறார்; விரைவில் நிவாரணம் கிடைக்கு மென்று எதிர்பார்க்கிறார்.

பல்வேறு குறுக்கீடுகளுக்கிடையே இக்கடிதத்தை எழுதிக் கொண்டிருக்கையில், கமலாதேவியைப் பெல்காம் சிறைக்கு மாற்றி விட்ட செய்தியைப் பத்திரிகைகளில் படித்தோம். கைதியின் விருப் பப்படி எதுவும் நடக்காது. கைதியின் உடம்பே, அவன் அல்லது அவள் உடைமையாக இருப்பதில்லை.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

(தேதியிடப்படவில்லை. சிறை அதிகாரி கையெழுத்திட்டது—எரவாடா—22-4-'32)

பாபு

## 152

சி. மீரா,

உன் கடிதம் எதிர்பார்த்த நேரத்தில் கிடைத்தது.

* * * *

என் எடை 104 பவுண்டுக்கும் 106 பவுண்டுக்குமிடையே ஊசலாடிக் கொண்டிருக்கிறது. ஆகவே நான் உணவில் மாறுதல் எதுவும் செய்யவில்லை. பாதாம் பருப்புக் கஞ்சிக்குப் பதிலாக, வேர்க்கடலைக் கஞ்சியைச் சாப்பிட உத்தேசித்துள்ளேன். பாதாம் பருப்பைப் போலவே அதுவும் என் உடம்புக்கு ஒத்துக் கொண் டால், நல்லது. மற்றவர்களும் நலமாகவே இருக்கின்றனர்.

மகன் சர்க்கா நேற்று கிடைத்தது. அதில் நூற்றுப் பார்க்கப் போகின்றேன். இடது கை முட்டிக்குப் பூர்ண ஓய்வு தர அது

உதவும். தான் கண்டு பிடித்த சர்க்காவில்* நான் நூற்கிறேன் என்றறிய பிரபு தாசுக்கு மகிழ்ச்சியாய் இருக்கும். வலது கையில் நூலை இழுக்க அண்மையில் நான் பழகிக் கொண்டது, மிகவும் உதவியாக இருக்கும்.

வலது கைக்குப் பதிலாக இடது கையை நீ பயன்படுத்தத் தொடங்கியுள்ளது குறித்து நான் மகிழ்கிறேன். எழுதுவதற்கு மட்டுமல்லாமல், மற்றவற்றிற்கும் அதைப் பயன்படுத்த வேண்டும். இடது கையால் சாப்பிடவும் முயற்சி செய்து பார். சிறிது கவனம் தவிர, சிறப்பான முயற்சி எதுவும் அதற்குத் தேவையில்லை.

சரோஜினியுடன்[1] ஒரு சில நாட்கள் தங்கும் வாய்ப்பு கிடைத்தது குறித்தும், அவருக்கு நீ உதவியாய் இருக்க முடிந்தது குறித்தும் நான் மகிழ்ச்சி அடைகின்றேன்.

நானே பெரிய இடைஞ்சலாய் இருப்பதுபற்றி நான் சொன்னது, முற்றிலும் உண்மையே. ஒரு காரியத்தைத் தொடங்குவதில் நான் உதவியாய் இருக்கலாம்; ஆனால் அதற்குப் பிறகு அந்த இலட்சியத்துக்கு உண்மையாய் இருக்க முடியாதது, மேலும் முன்னேறுவதற்குத் தடையாகவே இருக்கும். நாமாக விரும்பி வறுமையை ஏற்றுக் கொள்வது, மிகக் கவர்ச்சிகரமான குறிக்கோள்தான். நாம் அதில் ஓரளவு முன்னேற்றம் கண்டுள்ளோம். ஆனால் என் வாழ்விலேயே அக்குறிக்கோளில் நிறைவு காணும் ஆற்றலற்ற நிலையில் நான் இருப்பதால், ஆசிரமத்தில் மற்றவர்கள் அதில் வெற்றி காண்பது கடினமாக உள்ளது. அவர்களுக்கு மன உறுதி இருக்கின்றது; ஆனால் அவர்களுக்கு இலட்சிய முன் மாதிரியாக அமைய எவருமில்லை. இங்கு இரு அருமையான பூனைக்குட்டிகள் உள்ளன. தாய்ப் பூனை அவற்றை விட்டு எங்குமே செல்வதில்லை. தாய்ப் பூனையின் உதாரணமே அவற்றிற்கு உபதேசம்; அதிலிருந்து அவை நல்ல படிப்பினைகளைக் கற்றுக் கொள்கின்றன. நாம் நடைமுறையில் நடந்து காட்டுவதே சிறந்தது. நானோ, இப்பொழுது பலவகைகளிலும் தோல்வியே அடைந்து வருகின்றேன். ஆனால் தவிர்க்க முடியாதது குறித்து வருந்துவதில் பலனில்லை.

கங்காதேவி காலமாகிவிட்டார் என்று நாரணதாசிடமிருந்து இப்பொழுது தான் அஞ்சலட்டையில் செய்தி வந்தது. இராம நாமத்தை உச்சரித்துக் கொண்டே அவர் உற்சாகத்துடன் உயிர் துறந்தார். அவரும் தோத்தாராம்ஜியும் உண்மையான ஆசிரம வாசிகள்.

---

* காலால் இயக்கக் கூடிய நூற்பு இராட்டினம்; இரு கதிர்கள் கொண்டது. இதில், பாபு ஒரு கதிரை மட்டுமே பயன்படுத்தியதால், மற்றொரு கைக்குப் பூரண ஓய்வு அளிக்க முடிந்தது.

1. *திருமதி சரோஜினி தேவி கைது செய்யப்பட்டு, ஆர்தர் சாலைச் சிறைக்கு அழைத்து வரப்பட்டார். நாங்களிருவரும் ஒரு சில நாட்களே ஒன்றாக இருக்கும் வாய்ப்புக் கிடைத்தது. பிறகு அவர் எரவாடா மத்திய சிறையில், பெண்கள் சிறைக்கு மாற்றப் பட்டார்.*

நாம் விரைவில் சந்திக்கக் கூடும்[1]
எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*6-5-'32*

மகன் சர்க்காவில் 24 சுற்றுகள் நூற்றேன். 18ந்தேதி நீ என்னைப் பார்க்க முடியுமா என்று நாரணதாசு கேட்டுள்ளார். என்னைப் பொறுத்தவரையில், நீ தாராளமாக வந்து பார்க்கலாம்.

பாபு

## 153

*சி. மீரா,*

எதிர்பாராமல் இன்று கிடைத்த உன் கடிதத்திற்கு நான் இன்று எழுதும் பதில் உனக்குத் திங்கட்கிழமையாவது, அதற்கு முன்பாவது கிடைக்குமென்ற எண்ணத்தில் இதை எழுதுகிறேன்.

பவுண்டன் பேனு இல்லாமலே நீ சமாளிப்பது நல்லதே. சரியான நோக்கைக் கடைப்பிடிப்பதே நம் குறிக்கோளாக இருக்க வேண்டும். இது தான் நிலையான, தீவிரமான மாறுதல்களுக்கு வழி செய்யும். மேல் வாரியாகத் தோன்றும் அறிகுறிக்கு நாம் சிகிச்சை செய்யும் அதே நேரத்தில், அடிப்படைக் காரணமான, உடைமையில் உள்ள மோகத்தைக் கண்டறியவும், நாம் துருவி ஆராய வேண்டும். ஒருவனுக்கு உடைமை ஒன்றுமில்லாமல் இருக்கலாம்; ஆனாலும் உடைமை கொண்டவர்களிடம் அவன் பொறாமை கொள்வானுகில், அவன் உண்மையில், உணர்வில், ஏழையாக மாட்டான். அவனுக்கு உடைமை இல்லை; ஆனால் இல்லையென்ற ஏக்கம் அவனுக்கு உள்ளது. இன்னொருவனிடம் பொன்னால் செய்த முக்காலி இருக்கலாம். சுடும் சாம்பலில் கால் படாமலிருக்க மட்டுமே அதைப் பயன் படுத்திக் கொண்டு, மறுநிமிடமே அதை விற்று, ஏழைகளின் நலனுக்காக அப்பணத்தை அவன் செலவு செய்யக்கூடும். உடைமை எதுவும் இல்லாததனால் கிட்டும் உண்மையான உவகையை அவன் உணரக் கூடும். நீ செய்துள்ளதைக் குறை கூறுவது என் நோக்கமல்ல; அவசியம் ஏற்படும்போது அதை நீ இயன்ற வரையிலும் உறுதியாகக் கடைப்பிடிக்க வேண்டும் என்று வற்புறுத்துவதே என் நோக்கம்.

* * * *

---

1. என் மூன்று மாத சிறைத் தண்டனைக் காலம் முடியுந் தருவாயில் இருந்தது.

இடது கையால் நீ எழுதுவது, நான் எழுதுவதை விட நன்ருகவும் தெளிவாகவும் உள்ளது. வெகுவிரைவில், வலதுகையால் எழுதுவதற்குச் சமமாகவே இடது கையாலும் நீ எழுதக் கற்றுக் கொள்வாய்.

மகன் சர்க்கா எனக்குச் சிறிது தொந்தரவு கொடுத்து வருகிறது. ஆனல் சிறிது சிறிதாக, அதில் தேர்ச்சி பெற்று வருகிறேன். வேர்க் கடலேகளே விலக்கிவிட்டேன். வல்லபபாயும் மகாதேவும் அதைப் பற்றி எனக்குப் பயம் காட்டினர். அவர்கள் பயம் காட்ட நானும் இடம் கொடுத்து விட்டேன். என் எடை மீண்டும் 105½ பவுண்டாக உயர்ந்துள்ளது.

எங்கள் அனேவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.

*13—5—'32*

## 154

சி. மீரா,

நீ என்னேப் பார்க்க முடியாத நிலே திடீரென ஏற்பட்டது குறித்து நான் மிகவும் வேதனேயடைந்தேன். உன்னேப் பார்க்க முடியாவிட்டால், வேறு எவரையும் பார்க்க மறுத்துவிட வேண்டு மென்று தான் முதலில் எனக்குத் தோன்றியது.* ஆனல் என்னே நானே கட்டுப்படுத்திக் கொண்டு மற்றவர்களேப் பார்த்தேன். தங்கள் முடிவை மாற்றிக் கொள்ள வேண்டுமென, இப்பொழுது நான் அரசுக்கு எழுதியுள்ளேன். அவர்கள் மறுத்தார்களானல், மற்றவர்களேயும் பார்ப்பதை நான் நிறுத்திக்கொள்ள வேண்டுமென எண்ணுகிறேன். அதை அரசுக்கு எழுதியுள்ள கடிதத்திலும் குறிப்பாக உணர்த்தியுள்ளேன். அத்தடையை விதிப்பதற்கு அவர்களுக்கு நியாயமான காரணமிருந்தால் பரவாயில்லே. இதற்கிடையில் நீ எனக்குக் கடிதம் எழுத வேண்டும். எதிர்பாராத இந்நிகழ்ச்சியால் நீ அதிர்ச்சி அடையவில்லே என்று நம்புகிறேன். பின்னல் அதிகம் எழுதுவேன்.

---

* என் விடுதலேக்குப் பின், பாபுவைப் பார்க்க எனக்கு அரசாங்கம் அனுமதி மறுத்தது. நாங்கள் ஒரு சிலர் பாபுவைப் பார்க்கச் சென்றபோது, சிறைவாயிலில் எனக்கு மட்டும் அனுமதி மறுக்கப்பட்டது.

பம்பாய் நிகழ்ச்சிகள்* என் இதயத்தைப் பிளக்கின்றன. இறைவன் சித்தப்படியே எல்லாம் நடக்கும்.

அன்பு,

பாபு

எ. ம.

*18-5-'32*

*19 ந் தேதி:*

இதை நான் சிறை அதிகாரியிடம் கொடுத்த போது, உன் கடிதத்தை எனக்கு அனுப்பிக் கொண்டிருப்பதாக அவர் என்னிடம் கூறினர். இப்பொழுது அது எனக்குக் கிடைத்துள்ளது. இக்கடிதத்தில் மேலும் எதுவும் இப்பொழுது சேர்க்கத் தேவையில்லை. உண்மையில் பேரடி[1] என்று குறிப்பிடும்படி எதுவும் நடக்க முடியாது. ஆண்டவனிடம் நம்மை ஒப்படைத்த பின்பு, பேரடிக்கு இடம் ஏது? ஆகவே, துன்பத்திலும் நாம் இன்பமே காண வேண்டும்.

அன்பு,

பாபு

## 155

சி. மீரா,

உன் கடிதத்திற்காக நான் காத்துக்கொண்டிருந்தேன். இன்று அது வந்தது. தங்கள் மனச்சாட்சிக்கு உண்மையாய் நடப்பவர்களுக்கு இது போன்ற இன்னல் நேரிடுவது இயல்பானது என்றே, உனக்கு ஏற்பட்டதை நீ ஏற்றுக் கொள்ள வேண்டும். அவசரப்பட்டு நான் எதையும் செய்யப் போவதில்லை. என் சொந்த உறவு ஒரு புறமிருக்க, உன்னைப் பார்க்க முடியாத நிலையில் மற்றவர்களைப் பார்க்க மறுப்பது என் கடமை என்று நான் கருதாவிடில், அத்தகைய நடவடிக்கையை நான் மேற்கொள்ள மாட்டேன். ஆனல் நாம் பொறுத்திருந்து பார்ப்போம்.

---

* நான் விடுதலையான சமயத்தில், இந்து-முஸ்லிம் கலவரங்கள் கடுமையாக நடந்து கொண்டிருந்தன.

1. சிறை வாயிலில் எனக்கு அனுமதி மறுக்கப்பட்டதால் ஏற்பட்ட அதிர்ச்சியைப் பாபு குறிப்பிடுகிருர்.

துளசிதாசர் இராமாயணம், சமய உணர்வும் நயமும் நிறைந்தது என்பது என் கருத்து. கிரிஃப்ஃபித் மொழி பெயர்ப்பை* நான் இன்னும் படித்ததில்லை. ஆனால் எல்லா மொழி பெயர்ப்புகளிலும் அது சிறந்தது என்று நான் அறிவேன். உனக்கு அது மிகவும் பிடித்திருந்தது கண்டு மகிழ்ச்சி.

அங்கு கடித உறைகள் செய்யும் முயற்சியை[1] நீ மேற்கொள்ள வேண்டாம். அவகாசம் கிடைத்தால், அது மிக்க மகிழ்ச்சி ஊட்டக் கூடிய வேலை. வேறு தொழில் இல்லாமல், பலவீனமானவர்கள் எவரும் அங்கு இருந்தால், அவர்கள் அதில் ஈடுபடலாம். ஆனால் நீ அதைச் செய்ய வேண்டியதில்லை. உன்னைப்பொறுத்தவரை, அம் முயற்சி உன் நேரத்தைப் பயனுள்ள வழியில் செலவு செய்வதாகாது.

இன்று மீண்டும் என் எடை 105½ பவுண்டு ஆக இருந்தது. ஆகவே கவலைக்கு இடமில்லை என்பதைக் காண்பாய்.

மகன் சர்க்காவில் நூற்பது மகிழ்ச்சியாய் இருக்கும் அளவுக்கு நான் இப்பொழுது தேர்ச்சி பெற்றுவிட்டேன். 82 நிமிடங்களில் 202 சுற்றுகள் நூற்றேன்; ஒரு மணிக்கு 147 சுற்றுகிறது. எனக்கு இது நல்ல சாதனை. இன்னும் நன்றாக நூற்கக் கற்றுக் கொள்ள முடியுமென்று எதிர்பார்க்கின்றேன்.

ரோலண்டு தம்பதிகளுக்கு என் அன்பைத் தெரிவி. அமெரிக்க நண்பருக்கு அவர் எழுதிய கடிதத்தைப் படித்து இன்புற்றேன் என்று அவர்களுக்குக் கூறவும். அதில் நிச்சயமாகத் தவறெதுவும் இல்லை. ஒருவருடைய உண்மையான கருத்தை வெளிப்படுத்துவதில் தவறு என்ன இருக்க முடியும்?

உங்கள் அனைவருக்கும் எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

* * *

[தேதியிடப்படவில்லை. எரவாடா அஞ்சல் முத்திரை 26-5-'32]

ரோமெயின் ரோலண்டு எழுதிய கடிதம் பத்திரிகையில் வெளியாகியிருந்தபடி அப்படியே கீழே தருகிறேன். பிரசுரமாகுமென்று சிறிதும் எதிர்பார்க்காமல், ரோலண்டு இக் கடிதத்தை நெருங்கிய நண்பர் ஒருவருக்கு எழுதியிருந்தார். அதை அந்த நண்பர் பத்திரிகைகளுக்குத் தந்துவிட்டார் என்றறிந்தவுடன், அவர் பாபுவுக்கு எழுதி, வருத்தம் தெரிவித்தார். ஆனால் பாபுவோ, அக் கடிதத்தைப் படித்து வருத்தம் கொள்வதற்குப் பதிலாகப் பெரிதும் மகிழ்ச்சிகொண்டார்.

---

* வால்மீகி இராமாயணத்தின் மொழிபெயர்ப்பு.

1. பாபு எழுதும் கடிதங்களுக்கான மேலுறைகளைப் பாபுவும், குறிப்பாக சர்தார்ஜியும் தயாரித்துக் கொண்டிருந்தனர்.

## காந்திஜி—ரோமெயின் ரோலண்டு சந்திப்பு

### ரோலண்டு கூறும் விவரங்கள்

காந்திஜி தம் இல்லத்துக்கு வருகை தந்தது குறித்து, ரோலண்டு அமெரிக்க நண்பர் ஒருவருக்கு எழுதிய கடிதம், நியூ யார்க் 'நேஷன்' பத்திரிகையிலிருந்து எடுக்கப்பட்டுள்ளது. அக் கடிதம் பின்வருமாறு:

இந்திய நண்பர்கள் இங்கு வந்த போது நீயும் எங்களுடன் இருந்தால், எவ்வளவு நன்ருக இருந்திருக்கும்! டிசம்பர் 5 ங் தேதி முதல் 11 ங் தேதி வரை ஐந்து நாட்கள் அவர்கள் 'வயனெட் வில்லா'வில் தங்கியிருந்தார்கள். அந்த ஒல்லி மனிதர், கண்ணுடி போட்டுக் கொண்டு, பொக்கை வாயுடன், வெள்ளை ஆடையைத் தம்மைச் சுற்றிப் போர்த்திக் கொண்டிருந்தார். கொக்கின் கால்கள் போல ஒல்லியாக இருந்த அவர் கால்களில் பாத அணி எதுவும் அணியவில்லை. மொட்டையடித்த தலையில் ஒரு சில முரட்டு ரோமங்கள், தலையில் அவர் எதுவும் அணியாததால், மழையில் நனைந்திருந்தன. களைப்புச் சிரிப்புடன், மூச்சுத் திணறிக் கொண்டு அன்புடன் நம்மிடம் வரும் நல்லதொரு நாய் போலத் திறந்த வாயுடன், அவர் என்னிடம் வந்து, ஒரு கையால் என்னை அணைத்துக் கொண்டு என் தோள் மீது தம் கன்னத்தைச் சாய்த்தார். சரசரப்பான அவர் தலை என் கன்னத்தில் உராய்ந்தது. புனிதர் டோமினியும் புனிதர் பிரான்சிசும் கட்டியணைத்து முத்தமிட்டது போல் இக்காட்சி இருந்தது என்று நான் வேடிக்கையாக எண்ணி மகிழ்கிறேன்.

அதன் பின்பு, கம்பீரமான தோற்றமும், டெமீட்டர் போல் மாட்சிமை நிறைந்த உருவும் கொண்ட மீரா (மிஸ் ஸ்லேட்) வந்தார். அவருடன் இன்னும் மூன்று இந்தியர்கள். காந்தியின் இளைய குமாரர், தேவதாசு; உருண்டையான, உற்சாகமான முகம் உடைய அவர் இனியவராகக் காணப்பட்டார்; ஆயினும் தம் பெயரின் பெருமையைத் தாம் சிறிதும் உணராதது போல் அவர் நடையில் தோன்றியது. மற்றவர்கள் செயலாளர்—சீடர்கள்; அரிய பண்பும் ஆற்றலும் உடைய இளைஞர்கள்—மகாதேவ் தேசாய், பியாரிலால் என்று பெயர்.

ஒரு சில நாட்களுக்கு முன்பு கடுமையான நீர்க்கோப்பு எனக்கு ஏற்பட்டிருந்ததால், என்னுடைய வீட்டிற்கும், ஆல்கா வில்லாவில் இரண்டாவது மாடியில் நான் தூங்கும் அறைக்கும்—அந்த அறை உனக்கு நினைவிருக்குமே—ஒவ்வொரு நாள் காலையிலும் காந்தி வந்து நீண்ட நேரம் என்னுடன் உரையாடிச் செல்வார். மீராவின் உதவியுடன் என் சகோதரி இந்த உரையாடல்களை மொழி பெயர்த்தார். என் ரஷ்ய நண்பரும் காரியதரிசியுமான மிஸ் கொண்டாசேவ், எங்கள் உரையாடல்கள் பற்றிக் குறிப்புகள் எடுத்துக் கொண்டார். மாண்ட்ரீக்ஸ் ஊரைச் சேர்ந்த எங்கள் அண்டை வீட்டுக்காரரான ஷ்லெம்மர், சில நல்ல புகைப்படங்கள் எடுத்து, நிகழ்ச்சிகளை நினைவில் பதிவு செய்ய உதவினர்.

இரவு ஏழு மணிக்கு, முதல் மாடி விருந்து அறையில் பிரார்த்தனைகள் நடைபெற்றன. விளக்கொளி தணிக்கப்பட்ட அறையில், இந்தியர்கள் சமக்காளத்தில் கீழே அமர்ந்திருக்க, சீடர்கள் குழாம் சூழ்ந்திருக்கப் பிரார்த்தனை நடந்தது. முதலில் கீதையிலிருந்து ஒரு பகுதி. இரண்டாவதாகக் காந்தி மொழி பெயர்த்திருந்த சமஸ்கிருத மறைகள் பற்றிய புராதன தோத்திரப் பாடல்; மூன்றாவதாக, உணர்வு ததும்ப நிதானமான குரலில் மீரா, இராமர், சீதை பற்றிப் பாடிய துதிப்பாடல்--ஆகியவை பாராயணம் செய்யப்பட்டன.

மற்றப் பிரார்த்தனைகளைக் காந்தி காலையில் மூன்று மணிக்கு நடத்துவதுண்டு. இரவு ஒரு மணிக்கு முன் உறங்கச் செல்லாவிடினும் காலை மூன்று மணிக்கே இவர் விழித்துத் தம் அலுவலரையும் எழுப்பிவிடுவார். அவர்களும் மிகுந்த வேலைப் பளுவுக்கிடையே உற்சாகமாக வேலை செய்து வந்தனர். ஒல்லியாகவும் ஒடிசலாகவும் உள்ள இந்த மனிதரின் ஆற்றலும் வலிமையும் எல்லையற்றதாக உள்ளது. அலுப்பு என்பது அவர் அகராதியிலேயே இல்லாத ஒரு சொல் போலும். முகத்தில் ஒரு சிறு தசையும் ஆடாமல், சிறிதும் பதட்டமில்லாமல், அமைதியாக மணிக்கணக்கில், கூட்டத்தினர் குறுக்கிட்டுக் கேட்ட கேள்விகளுக்கு இவர் சமாதானம் கூறி வந்தார். லூசேன், ஜெனீவா ஊர்களில் இவ்வாறு தான் நடந்தது. ஒரு மேசையின்மேல் அமர்ந்து கொண்டு அமைதியாக, நேராகவும் மறைமுகமாகவும் தாக்கிய எதிரிகளுக்கு—ஜெனீவாவில் அத்தகைய எதிரிகளுக்குப் பஞ்சமில்லை—அவர் தகுந்த பதில் தந்தார். வெளிப்படையாகவும் கண்டிப்பாகவும் அவர் கூறிய உண்மைகள், அவர்களைத் திணறச் செய்து, அவர்கள் வாதத்தை முறியடித்து, அவர்களை அதிர்ச்சியில் ஆழ்த்தின.

தொடக்கத்தில் சூதான, குயுக்தியான பார்வையுடன் அவரை வரவேற்ற ரோம் நாட்டுச் சில்லறை முதலாளி வர்க்கத்தினரும் தேசியவாதிகளும், அவர் போன போது ஆத்திரத்துடனும் சினத்துடனும் துடித்தனர். இன்னும் சிறிது காலம் அவர் தங்கியிருந்தால், பொதுக் கூட்டங்கள் நடத்தக் கூடாதென தடை விதிக்கப்பட்டிருக்குமென்றே நினைக்கின்றேன். நாடுகள் இராணுவத் தளவாடங்களைப் பெருக்கிக் குவிப்பது, முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்குமிடையே போராட்டம்—ஆகிய இரு பிரச்னைகளையும் குறித்து அவர் தம் கருத்துக்களை அழுத்தம் திருத்தமாகத் தெரிவித்தார். இவை பற்றிப் பேச அவரைத் தூண்டியதில் எனக்கு முக்கிய பொறுப்பு உண்டு.

### "வாய்மையே கடவுள்"

கடவுள் என்றால் என்ன என்பது பற்றித் தம் கருத்தை விளக்குமாறு, லூசேனில் அவரைக் கேட்டார்கள். இறைவனின் ஒப்பற்ற, உயர்ந்த குணநலன்கள் என்று இந்து மறைகள் எடுத்துக் கூறியவற்றில், அடிப்படை அம்சத்தை உண்மையாகச் சித்திரிக்கும் சொல் 'வாய்மை' என்று தாம் இளமையிலேயே தேர்ந்தெடுத்த

தாக அவர் விளக்கினர். 'கடவுளே வாய்மை' என்று அவர் கூறினர் அன்று. அவர் மேலும் விளக்கினர். "ஆனல் இரண்டு ஆண்டு களுக்கு முன்பு நான் மேலும் ஒருபடி முன்னேறினேன். 'வாய்மையே கடவுள்' என்று இப்பொழுது நான் கூறுவேன். நாத்திகர் கூட வாய்மையின் வல்லமையில் சந்தேகம் கொள்ளவில்லை. வாய்மையை நாடும் ஆர்வத்திலே, கடவுள் இல்லை என்று கூறவும் நாத்திகர்கள் தயங்கவில்லை. அவர்கள் நோக்கிலிருந்து அவர்கள் சொல்வதும் சரி தான்." இந்த ஒரு பண்பிலிருந்தே, கீழை நாட்டிலிருந்து வந்துள்ள இச் சமயத் தலைவரின் துணிவையும் சுதந்திரத்தையும் நீ விளங்கிக் கொள்ளலாம். விவேகானந்தரிடம் நான் கண்ட பண்புகளை இவரிட மும் கண்டேன்.

அப்படியிருந்தும் கூட, எந்த அரசியல் தந்திரத்தையும் சமாளிக்க அவர் ஆயத்தமாய் உள்ளார். அவருடைய அரசியல் ஒன்றுதான்—தாம் நினைப்பதனைத்தையும், சற்றும் ஒளிவு மறைவு இன்றி, அனைவருக்கும் கூறுவதுதான்.

கடைசி நாள் மாலையில், வழிபாட்டுக்குப் பின், பெத்தோவனின் இசையில் சிறிது வாசித்துக் காட்டும்படி என்னிடம் காந்தி கேட் டார். அவருக்குப் பெத்தோவன் பற்றித் தெரியாது. ஆனல் மீரா வுக்கும் எனக்கும் உறவு ஏற்படுத்தியவர் பெத்தோவன் என்பதால், மீராவுக்கும் தமக்கும் உறவு ஏற்படுத்தியவர் அவரே என்றும், இறு தியில் நாம் அனைவரும் பெத்தோவனுக்குக் கடமைப்பட்டவர்கள் என்றும் அவர் அறிவார். ஐந்தாவது 'சிம்போனி'யில் மந்த கதிக் குரிய இசைப் பகுதியை வாசித்தேன். அதன் பின்பு 'கிளக்' இயற் றிய 'லே சாம்ப்ஸ் எலிசீஸி'ல் வாத்ய கோஷ்டிக்குரிய பகுதியையும் புல்லாங்குழலுக்குரிய மெட்டையும் வாசித்தேன்.

நம் கிரிகோரிய கீதங்களை ஓரளவு ஒத்திருக்கும் அவர் நாட்டுத் துதிப் பாடல்களில் அவருக்கு மிகுந்த ஈடுபாடு உண்டு. அவற்றை ஒன்று திரட்டுவதிலும் அவர் ஈடுபட்டுள்ளார். கலை பற்றியும் நாங் கள் கருத்துக்கள் பரிமாறிக் கொண்டோம். கலை வாய்மையோடு இணைந்ததென்பதும், வாய்மை, அதிலிருந்து பிறக்கும் இன் பத்தோடு இணைந்ததென்பதும் அவருடைய கோட்பாடு. முயற்சி யின்றி இன்பம் கிட்டாது என்று மட்டுமல்ல, துன்பமின்றி வாழ்வே இல்லை என்றும் எண்ணுகின்ற வீர உணர்வு, இவ ருடைய இயல்பு. "வாய்மையை நாடுபவன் இதயம், தாமரை போல் மென்மையானதாகவும், கருங்கல் போல் உறுதியானதாகவும் இருக்கும்."

என் இனிய நண்ப, நாங்கள் இருவரும் ஒன்ருய்க் கழித்த நாட் களைப் பற்றி ஒரு சிறு குறிப்புகளே இக்கடிதத்தில் தந்துள்ளேன். இன்னும் விவரமாகப் பல குறிப்புகள் தயாரித்துள்ளேன். இவர் வருகையை ஒட்டி, அழையா விருந்தாளிகள், அரைப் பைத்தி யங்கள், வேடிக்கை பார்க்கும் வீணர்கள் ஆகியோர் இரு பங் களாக்களையும் சூழ்ந்து கொண்டு சூருவளிபோல் வீசியதைப் பற்றி நான் விவரிக்கப் போவதில்லை. டெலிபோன் மணி ஒரு சிறிது

நேரம் கூட ஓயவில்லை. ஒளிந்து கொண்டிருந்த புகைப்படக்காரர்கள், ஒவ்வொரு புதருக்குப் பின்னிருந்தும் தங்கள் ஆயுதங்களைக் கையாளத் தொடங்கினர். 'இந்தியாவின் மன்னன்' என்னுடன் தங்கியுள்ள நாட்கள் முழுவதும், அவர் 'உணவுப் பண்டங்களுக்கு' முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளப் போவதாக, லேமான் பால் விநியோக சிண்டிகேட் எனக்குத் தகவல் அனுப்பியது. ''கடவுள் புத்திரர்''களிடமிருந்து எங்களுக்குக் கடிதங்கள் வந்தன. தேசிய வாராந்திர குலுக்குச் சீட்டுப் பரிசுப் போட்டியில், அடுத்த வாரம் எந்தப் பத்து எண்களுக்கு அதிர்ஷ்டம் அடிக்குமென்று தங்களுக்குத் தெரிவிக்குமாறு இறைஞ்சி இத்தாலியர் சிலர், மகாத்மாவுக்குக் கடிதம் எழுதினர்!

இத்தனையையும் சமாளித்த என் சகோதரி, பத்து நாள் ஓய்வு பெற்று உடலைத் தேற்றிக் கொள்ள ஸூரிச் ஊருக்குச் சென்றுள்ளாள். சீக்கிரமே திரும்பி வருவாள். உறங்கும் ஆற்றலையே நான் இழந்து விட்டேன். அதை நீ எங்காகிலும் கண்டு பிடித்தால், பதிவு அஞ்சல் மூலம் எனக்கு அனுப்பு!

## 156

சி. மீரா,

உன் கடிதம் இன்று கிடைத்தது. அதிகாரிகள் முடிவு செய்வதில் இன்னும் தாமதம் ஏற்பட்டுள்ளதால், அடுத்த வாரத்திலிருந்து பேட்டிகள் காண்பதை நிறுத்திக் கொள்ள நான் முடிவு செய்துள்ளேன்.

வலது கையில் ஏற்பட்ட வலியைக் காட்டிலும் இடது கை முட்டியில் அதிக வலி ஏற்பட்டுள்ளது. ஆகவே இடது கை முட்டியினால் செய்யும் வேலை அனைத்தையும் நிறுத்தி விட்டேன். முட்டியைத் தாங்குவதற்கு கட்டு போடப்பட்டுள்ளது. நாள் தவறாமல் சர்க்காவை ஓயாது நூற்றுக் கொண்டிருந்ததால் ஏற்பட்ட அலுப்பு தான் இதற்குக் காரணம் என்று மருத்துவர் கருதுகின்றனர். மகன் சர்க்காவில் தேர்ச்சி பெற்றதைக் குறித்து நான் உண்மையில் மகிழ்ச்சி அடைகின்றேன். அதன் பயனைத் தொடர்ந்து நூற்க முடிகிறது. வலது கை முட்டியும் அனுதாப வேலை நிறுத்தம் செய்யும் வரை நூற்பதை உற்சாகமாகத் தொடர்ந்து நடத்தலாம்.

இன்று என் எடை 106½ பவுண்டாக இருந்தது என்று அறிய நீ மகிழ்ச்சியுறுவாய். இது நல்ல சாதனை. ஆகவே கை முட்டியைக் குறித்துக் கூடக் கவலைப்படுவதற்குச் சிறிதும் இடமில்லை என்பதை நீ காண்பாய்.

உப்பைத் தவிர்த்து உணவை உட்கொள்ளும் முறையை நீ மேற்கொண்டதன் பயனாக ஏற்பட்டுள்ள விளைவுகள் சிந்தனையைக்

கிளறுவதாய் அமைந்துள்ளன. ஆனல் இந்த நன்மைகளெல்லாம் உப்பைத் தவிர்த்ததால் தான் ஏற்பட்டன என்று முடிவாகக் கூறு முன் நான் இன்னும் சிறிது பொறுத்து இருக்க விரும்புவேன்.

*　　　*　　　*

உப்பு இல்லாத உணவு சுவை இல்லாத உணவு என்பது மூடக் கருத்து. உப்பு உண்மையில் ருசியை அழிக்கின்றது. உப்பு ஒரு சிறிதும் இருந்தால் அந்த உணவுப் பொருளைத் தொட மறுக்கும் பலரை நான் அறிவேன். சுவை என்பது பழக்கத்தில் வருவது. நீ ரொட்டியும், வெண்ணெயும் சாப்பிடுகிருய் என்று எண்ணுகின் றேன். இவற்றில் உப்பு இருக்கத்தான் செய்கிறது. ஆகவே தனியாக உப்பைச் சேர்த்துக் கொள்வதன் அளவைத்தான் நீ குறைத்துள்ளாய். உனக்குக் கிடைத்துள்ள நன்மைகள் உப்பை உன் உணவிலிருந்து அடியோடு விலக்கி விட்டதால் ஏற்பட்டவை அல்ல; உப்பின் அளவைக் குறைத்துக் கொண்டதால் ஏற்பட்டவை தான். ஆனலும் அது பரவாயில்லை. ஏதாவது ஒரு வகையில் சிறிது உப்பு சேர்க்கப்படுவது பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அதில் மாறுதல் எதுவும் செய்ய முற்படாதே.

*　　　*　　　*

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

*1—6—'32*　　　　பாபு

ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் மாலைப் பிரார்த்தனையின் போது கிறிஸ்துவ துதிப்பாடல் ஒன்றைப் பாட வேண்டுமென்று வெரீயர் யோசனை கூறினர். அதையொட்டி "ஒளியே அன்புடன் அழைத்துச் செல்" என்று பாடலை குஜராத்தி மொழியில் பாட மகா தேவ் தொடங்கினர். இதை ஒவ்வொரு வெள்ளிக் கிழமையும் தொடர்ந்து பாடுவோம். என்னுடைய கடிதம் வெரீயருக்குக் கிடைக்கவில்லையென்ருல் நீ அதை அவரிடம் கூறு.

## 157

சி. மீரா,

உன் கடிதம் இன்று வந்து சேர்ந்தது. ஆம், இடது கை இப் பொழுது கட்டுகளில் உள்ளது. இதற்கு என்ன காரணமென்று அறியாதவர்கள் இதைப் பார்க்கும்போது என் மீது இரக்கம் கொள் வார்கள். முட்டியைத் தாங்கக் கட்டுப் போட்டதால் முன்னேற்றம் ஏற்படாவிட்டால், நான் பாலை சேர்த்துக் கொள்ள வேண்டி யிருக்கும். அவ்வாறு சேர்த்துக் கொண்டால் உப்பு இல்லாமல் உணவு அருந்தும் முறையை நானும் பரீட்சித்துப் பார்ப்பேன். உப்பை அடியோடு விலக்கிவிட்டு உணவு உட்கொள்ளுவதற்கு இடமில்லை என்பதை அறிந்த பின்பு தான், மருத்துவ நண்பரின் ஆலோசனையை ஏற்று உப்பை சேர்த்துக் கொள்ளத் தொடங் கினேன். * * * உப்பு இல்லாமல் உணவு சாப்பிடுவது தான்

எனக்கு விருப்பமானது. ஆனல் அவசியம் ஏற்படும் வரை அதை அடியோடு தவிர்க்க வேண்டியதில்லை. இதற்கிடையில் நீ செய்த முயற்சிகளைப் பற்றி மேலும் மேலும் கிடைத்துவரும் விவரங்கள் மிகவும் பலன் தரும்.

*　　　*　　　*

உன்னைப் பற்றி அரசாங்கத்திடமிருந்து பதில் வந்துள்ளது. அதுவே இறுதியான பதில் என்று கொள்ளலாம். நீ கைது ஆவதற்கு முன்பு இயக்கத்தை நடத்த ஆலோசனைகள் கூறிக் கொண்டு இருந்ததாக அவர்களுக்குத் தகவல் கிடைத்துள்ளது என்றும், ஆகவே நீ என்னைப் பார்க்க முடியாது என்றும் அரசாங்கம் கூறியுள்ளது. அந்தக் கூற்றை நான் மறுத்து, சட்ட மறுப்பு இயக்கத்தில் கலந்து கொள்ளக்கூடாது என்று கண்டிப் பாக உனக்கு உத்தரவிட்டிருந்தது என்றும், நீ கதர் வேலையில் மட்டுமே ஈடுபட்டு இருந்தாய் என்றும், அது குறித்துதான் நீ அறிக் கைகள் அனுப்பி வந்தாய் என்றும் எடுத்துக் காட்டியுள்ளேன். [1]நீ இதிலிருந்து தவறியிருந்தால் தயவு செய்து என்னைத் திருத்த வேண்டும். நானும் என் கூற்றைத் திருத்திக் கொள்வதில் தயங்க மாட்டேன். என் கடிதத்தினல் பலன் எதுவும் ஏற்படுமா என்று அறியேன். அரசாங்கத்தின் பதிலை அவர்களுடைய இறுதியான தீர் மானமாகக் கருதி இனி என்னைப் பேட்டி காண எவரையும் அனுப்ப வேண்டாமென்று நா.[2] க்கு தகவல் அனுப்பியுள்ளேன். இதை எதிர்பார்த்து முன் கூட்டியே சென்ற வாரத்திலிருந்து பேட் டிகளை நிறுத்தி விட்டேன்.

*　　　*　　　*

இந்த புதிய சோதனை ஏற்பட்டுள்ளது குறித்து மகிழ்ச்சி யடைய வேண்டும். நாம் ஒருவருக்கொருவர் கடிதமாவது எழுதிக் கொள்ள முடிகிறதே என்று நினைத்துத் திருப்தி அடைந்து கொள்ள வேண்டும். ஆனல் அதுவும் நின்ருல்கூட நாம் மகிழ்ச்சியே அடைய வேண்டும். இறைவனின் அனுமதியில்லாமல் எதுவுமே நடப் பதில்லை. அவன் அனுமதிப்பதைக் குறித்து நாம் எவ்வாறு வருந்த முடியும்?

*　　　*　　　*

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

எ. ம.　　　　　　　　　　பாபு

*8-6-'32*

## 158

*திருத்தப்படாதது*

*சி. மீரா,*

...　　...　　...　　...　　...

ஆம். ஞாயிற்றுக் கிழமை முதல், நான் உப்பு இல்லாத உணவு தான் அருந்தி வருகிறேன். வைத்தியர்கள் கட்டை அவிழ்த்த

1. இதுதான் உண்மை.

2. நாரணதாசு காந்தி அப்பொழுது சபர்மதி ஆசிரம மேற்பார்வையாளராக இருந்தார்.

போது கட்டுப் போட்டதால் பலன் எதுவும் இல்லை என்று கண்டனர். உடனடியாக உன்னைப் பற்றித் தான் எண்ணினேன். உப்பை நான் தவிர்த்தால் உனக்குச் சற்றுத் திருப்தி ஏற்படு மென்று நினைத்தேன். அதைத் தவிர்ப்பதால் எனக்குச் சிரமம் எதுவும் இல்லை. ஆகவே அதை உடனடியாக நீக்கிவிட்டேன். அதன் பயனாக ரொட்டி சாப்பிடுவதை விட்டு சப்பாத்தி சாப்பிடத் தொடங்கியுள்ளேன். சப்பாத்தி சாப்பிடுவதனாலோ அல்லது உப்பை நீக்கினதாலோ, அளவுக்கு மீறியே வெளிக்குப் போகத் தொடங்கியது. ஆகவே நேற்றிலிருந்து திராட்சைப் பழங்கள், மாம்பழங்கள், காய்கறி ஆகியவற்றைச் சாப்பிடத் தொடங்கி யுள்ளேன். இதனால் வயிற்றுப்போக்கு கட்டுப்படுத்தப்பட்டது; ஆகவே இன்னும் சில நாட்களுக்கு, சப்பாத்தியோ, பாதாம் பருப்போ சேர்க்காமல் உணவு உட்கொண்டு அதன் பலனைப் பார்க்க விரும்புகின்றேன். நேற்று எடை எடுத்த போது ½ பவுண்டு எடை குறைந்து இருந்தது; இதைப் பற்றி அதிருப்தி கொள் வதற்கு ஒன்றுமில்லை. உடல் வலிமை குறையாது உள்ளது. உப்பைத் தவிர்த்ததையொட்டிப் பாலைச் சேர்த்துக் கொள்ள வேண்டிய அவசியம் ஏற்படக்கூடாது. பாலைச் சேர்க்கத் தொடங்கி, கைமுட்டி வலியும் போய்விட்டால் பாலினால் தான் பலன் ஏற்பட்டது என்று ஊகிக்க இடமுண்டு. பாலைச் சேர்த்த பின்னும் முட்டியில் வலி நீங்காமல் இருந்து, உப்பைத் தவிர்த்த பின்பு நீங்கி விட்டால், இம்முயற்சி வெற்றி பெற்றதாக நாம் கொள்ளலாம். உடல் நலனில் சீர்கேடு எதுவும் இல்லை என்றும், வலி ஏற்பட்ட பகுதிக்கு ஓய்வு மட்டும் தேவையென்றும் டாக்டர் மேத்தா நிச்சயமாகக் கருதுகிறார்.

சர்க்காவைப் பொறுத்த வரையில் முட்டிக்கு ஓய்வு தந்துதான் வருகிறேன். எவ்வாறாயினும் உப்பு இல்லாத உணவைச் சாப் பிடும் முயற்சியை மேற்கொண்ட பின்பு தான், மற்ற பலன்களையும் ஆராய்ந்து விட்டு அவசியமானால்தான், பாலைச் சேர்த்துக் கொள் வேன். என்னை மிகவும் உன்னிப்பாக நான் கவனித்து வருகிறேன். ஆகவே ஒரு சிறிதும் கவலைக்கு இடமில்லை. இதைத் தவிர மற்ற எல்லாவகைகளிலும் உடல் நலம் மிக நன்றாக உள்ளது. வல்லப பாய் மிகப் பொருத்தமாக எடுத்துக் காட்டியுள்ளது போல், உண் மையில் உடல் சீர்கேடு எதுவுமிருந்தால் உடலின் மற்றப் பகுதி களுக்கும் இது பரவியிருக்கும். நான் உனக்கு எழுதும் கடிதத்தை நீ ஆசிரமவாசிகளுக்கும் காட்டுவதால், ஆசிரமத்திற்கு எழுதியுள்ள கடிதத்தில் இந்த விவரங்களையெல்லாம் குறிப்பிடவில்லை.

உன்னுடைய நடவடிக்கைகள் பற்றி நீ கூறியுள்ளது எனக்கு விளங்குகிறது. இந்தச் செய்தியை நான் பயன்படுத்திக் கொள்ள முடியுமா என்று பார்ப்பேன்.

தேவதாசு சுரத்தோடு படுத்துவிட்டான் என்பது உனக்குத் தெரியுமென்று நினைக்கின்றேன். கவலைப்படுவதற்கு ஒன்றுமில்லை என்று இச்செய்தியைத் தெரிவித்த தந்தி விளக்கியது. மேலும்

விவரங்களைத் தெரிவிக்குமாறு நான் தந்தி அனுப்பியுள்ளேன். மணிலால், சுசீலா, அவர்கள் மகள், பிராக்ஜி அனைவரும் கொடிய மலேரியா சுரத்தால் தாக்கப்பட்டிருந்தனர். ஆனால் பலவீனம் மிக அதிகமாக ஏற்பட்டதேயொழிய, வேறு ஒன்றும் தீங்கு ஏற்படாமல் அவர்கள் தப்பிக்கொண்டார்கள் போலும். சர் ஜேம்ஸ் ஜீன் எழுதியுள்ள நூலில் மிக அருமையான வாசகம் ஒன்றுள்ளது: “வாழ்க்கையே மரணத்தை நோக்கிய யாத்திரைதான்”. இவ் வாசகத்தை இன்னொரு வகையில் மொழி பெயர்த்தால் வாழ்க்கையே மரணத்திற்கு ஒரு ஆயத்தம் தான் என்றே நாம் கூறலாம். எப்படியும் நிச்சயம் ஏற்பட்டே தீரப்போகும் ஒரு மகத்தான இறுதி முடிவைப் பற்றிச் சிந்திக்கவே நாம் அஞ்சுகின்றோம். முந்தைய வாழ்க்கையை விட உயர்ந்த வாழ்க்கைக்குச் செய்துகொள்ளும் ஆயத்தமாக மரணத்தைக் கருதினால் கூட, அது மகத்துவம் நிறைந்தது தான். ஆண்டவனுக்குப் பயந்து வாழ்பவர் அனைவரும் அதை அத்தகைய ஆயத்தமாகவே கருத வேண்டும்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*16-6-'32*

காகித மேலுறையில் வல்லபபாயின் கலைத் திறனைக் காண்பாய்.

## 159

சி. மீரா,

உன் கடிதம் நேற்றுக் கிடைத்தது. நான் தோல்வி அடைந்து விட்டேன். பாலையும், ரொட்டியையும், அதன் மூலம் உப்பையும் சாப்பிட்டுவிட்டேன். என் உடல் நலனுக்கு ஊறு செய்யக்கூடிய வகையில் உணவுப் பரிசோதனைகள் நடத்தக் கூடாதென்று மேஜர் பண்டாரி* கவலை கொள்கிறார். பாலும் ரொட்டியும் மட்டுமல்ல, பழமும் சாப்பிடத் தொடங்குவது அவசியமென்று அவர் கருதினார். உப்பைத் தவிர்ப்பதால் எடை குறையுமென்றும், எடை குறைய நான் இடம் கொடுக்கக் கூடிய நிலையில் இல்லை என்றும் அவர் கருதினார். அப்பேச்சுக்கு நானும் பலியாகி விட்டேன். உப்பைத் தவிர்த்து உணவு உட்கொள்ளும் முயற்சியைப் பின்னால் ஒரு நாளுக்குத்தான் ஒத்தி வைக்க வேண்டும். சிறிது காலம் இப்பரிசோதனையை நடத்திப் பார்த்ததில், எனக்கு நன்மை ஏற்படாவிடினும் தீங்கு எதுவும் ஏற்படவில்லை. இதன் விளைவுகள் பற்றிச் சில குறிப்புகள் கிடைத்துள்ளன. ஆனால் மிகக் குறுகிய காலப் பரிசோதனையின் அடிப்படையில் அக்குறிப்புகள் சேகரிக்கப்பட்டுள்ளதால், அவற்றால் பலன்

---
* சிறைத் தலைமை அதிகாரி.

அதிகம் கிடையாது. நீ நடத்தும் பரிசோதனையின் பயனாக, வேறு உண்மைகள் தெளிவாகியிருந்தால், அவற்றை எனக்குத் தெரிவி.

என் கடிதத்தை உறுதிப்படுத்தும் முறையில் அமைந்துள்ள உன் முந்திய கடிதத்தை நான் அரசாங்கத்திற்கு அனுப்பியுள்ளேன். என்ன நடக்கிறதென்று பார்க்கலாம்.

மின்சார சிகிச்சை என்னவென்று நீ கேட்டிருந்தாய். உயர் அதிர்வு அலைகளைக் கொண்டு செய்யும் சிகிச்சை அது. செங்கரு நீலநிறக் கதிர்கள் செலுத்தப்பட்ட, தட்டைவடிவமான கண்ணாடிக் குமிழைக் கொண்டு உடலை வருடுகிறார்கள். அதிகாலையில் கதிரவனின் கதிர்கள் நம்மீது பட்டாலும், இந்தப் பயன் கிடைக்கும். ஆனால் கருவிகள் மூலம் பிறக்கும் இக்கதிர்கள் மிக வெப்பமாக இருக்கும்.

ஆசிரம வரலாறு பற்றியும் நீ கேட்டிருந்தாய். ஆசிரம வேலைகளின் பல்வேறு அம்சங்களையும் தழுவி எழுத முயல்கிறேன். ஆனால் அந்த வேலை மிகவும் மந்தமாகத்தான் முன்னேறுகிறது. ஏதோ ஒரு காரணத்தினால், ஒவ்வொரு நாளும் சிறிது நேரமாகிலும் அதற்குச் செலவு செய்ய இயலாமல் போகிறது. அவ்வேலைக்கென்று உறுதியாக ஒரு மணி நேரம் ஒதுக்கி வைக்க முடிவு செய்ய நான் இன்னும் விரும்பவில்லை. ஆனால் இங்கு நான் அதிக நாட்கள் தங்கினால், ஆண்டவன் அருளுடன் வரலாறு நிச்சயம் முடிந்துவிடும்.

தேவதாசுக்குக் குடற்காய்ச்சல் வந்துள்ளது; அவ்வளவு கடுமையான தாக்குதல் அல்ல. நீ அவனுக்கு எழுதவேண்டும். மாவட்ட சிறை, கோரக்பூர், ஐ. மா. என்பது அவன் முகவரி.

'வீரர்கள் மரணத்தை ஒருமுறை மட்டுமே அனுபவிக்கின்றனர்' என்ற வாசகத்துக்கு ஆழ்ந்த உட்பொருள் உள்ளதை நீ உணர்ந்திருக்க மாட்டாய். மோட்சம் பற்றிய இந்துக் கோட்பாட்டுக்கு ஏற்ப, முழுமையான உண்மையை அது வெளிப்படுத்துகின்றது. பிறப்பு, இறப்பு என்ற சுழலிலிருந்து விடுதலையை அது குறிக்கிறது. 'வீரர்' என்ற சொல், இறைவனை நாடும் முயற்சியில் உறுதியாக இருக்கின்றவர்களைக் குறிக்கும் என்று கொண்டால், அவர்கள் ஒருமுறை மட்டுமே மரணம் அடைகிறார்கள்; அவர்கள் மீண்டும் பிறக்கவேண்டிய அவசியமில்லையாதலால், ஊனுடலின் பிடிப்பில் அவர்கள் சிக்க மாட்டார்கள்.

ஆண்டில் இந்த நேரத்தில் எப்பொழுதும் குளிர்ச்சியாகவே இருக்கும். இங்கும் மழை பெய்தது.

* * * *

ஆம்; ஐந்து நிமிடம் மௌனம் மேற்கொள்ள வேண்டுமென யோசனை கூறி, நாரணதாசுக்கு நான் கடிதம் எழுதினேன். அதைப்பற்றி உனக்கு எழுத மறந்துவிட்டேன். இங்கு நான்

பேசா நோன்பு மேற்கொள்ளவில்லை. இங்கு அது அவசியமில்லை. உன்னைப் பொறுத்தவரையில், அதை மேற்கொள்வது சாத்தியமுமில்லை. புதியதொரு கூட்டத்தினிடையே, இராம நாமத்தை வேகமாகத் தொடர்ந்து உச்சரிப்பது நல்லதுதான். மிகவும் வேகமாக, ஓயாது உச்சரிப்பதற்கு, இராமா, இராமா, இராமா, இராமா என்று அடிக்கடி கூறப்படுகிறது. ஏற்ற சந்தத்துடன் அதை உச்சரித்தால் பரவசம் உண்டாகும். ஆம்; நாங்கள் காலை 3-40க்கு எழுகின்றோம். வழிபாடு 4 மணிக்கும் 7-30 மணிக்கும்.

* * * *

நீ அளவுக்கு மீறி உழைத்து அலுப்பு தேடிக்கொள்ள மாட்டாயென்று நம்புகிறேன்.

பாபு

எ. ம.
20-6-'32

பி. கு: ஆரம்பகாலத்தில், மௌன நோன்பின்போது, கண்களை மூடவேண்டிய அவசியமில்லை. அப்பொழுது நேரம் பற்றிய சிக்கல் தீர்ந்துவிடுகிறது. ஆனால் உனக்கு இதெல்லாம் அவசியமில்லை.

## 160

சி. மீரா,

... ... ... ...

உன்னுடைய உருது—ஆங்கிலம், ஆங்கிலம்—உருது அகராதிகள் எங்கேயிருக்கின்றன? அவை எனக்கு மிக அவசியமாகத் தேவைப்படுகின்றன. நான் இப்பொழுது உருது அதிகம் பயின்று வருகிறேன். நிறையப் புத்தகங்கள் படிக்கின்றேன். ஆகவே உருதுப் புத்தகங்களை அதிகம் திரட்டி வைத்துக் கொள்ள வேண்டும். ஆசிரமத்தில் பல புத்தகங்கள் இருக்கின்றன. அவற்றை எனக்கு அனுப்புமாறு கேட்க உத்தேசித்துள்ளேன்.

என் உடல்நிலை பற்றி இப்போது செய்தி எதுவும் இல்லை.

உன் உடல் நலனில் முன்னேற்றம் கண்டுள்ளது உற்சாகம் அளிப்பதாய் உள்ளது. பாலும் பழமும் அதிகம் சேர்த்துக் கொண்டது அவசியம்தான்.

... ... ... ...

உன்னைப்பற்றி நான் எழுதிய கடிதத்திற்கு பதில் வரவில்லை. ஒரு வேளை பதில் வராமலே போகலாம்.

... ... ... ...

இராம நாமத்தின் சந்தம் பற்றி பம்பாய்க்கு வரும்போது பண்டிட்ஜியை* நீ கேட்க வேண்டும். நீ அவருக்கு எழுதினால், கந்தர்வ மகாவித்யாலயத்தில் உள்ள சக ஆசிரியர்களில் ஒருவரை உனக்கு, அவர் ஒத்தாசை செய்ய ஏற்பாடு செய்யக் கூடும். அரை மணி நேரத்தில் அதை நீ கற்றுக்கொள்ள முடியும்.

சர்வதேச சகோதரத்துவ அமைப்பில் முக்கிய உறுப்பினர் இப்போது யார்?

ஐரோப்பாவிலுள்ள நண்பர்களுக்கும், ஆக்ஸ்போர்டிலுள்ள உன் மாமாவிற்கும், அவர் மனைவிக்கும் என்னுடைய அன்பையும் — மகாதேவின் அன்பையும் கூட — தெரிவி. அழகான அக் குழந்தைக்கு என் முத்தங்கள். அங்கு நான் சென்று இருந் ததையும், அமைதியான அந்த இல்லத்தையும், இல்லத்திலிருந்த எழில் மிக்க ஆலயத்தையும் நான் எப்பொழுதும் மறக்கவே முடியாது.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

*30—6—'32*

## 161

*சி. மீரா,*

இம்மாதம் ஏழாம் தேதி நீ எழுதிய கடிதம் இன்று காலை யில்தான் (*14*ம் தேதி) கிடைத்தது. என் கடிதப் போக்குவரத் தைப் பொறுத்தவரையில் இப்பொழுதெல்லாம் தலைகீழாய் உள்ளது. நான் எழுதும் கடிதங்கள் எல்லாம் அரசாங்கத்திற்குச் செல்கின்றன. அதன் பின்பு அவை என்ன ஆகின்றன என்பதை நான் அறியேன். அதைப்பற்றி விசாரித்துக் கொண்டிருக்கிறேன். சிறை வாழ்க்கை என்றால் அப்படித்தான் இருக்கும். பொறுமை யில் நல்ல பயிற்சி கிடைக்கிறது.

... ... ... ...

என் உடல் நலன் நன்றாகவே உள்ளது. இப்போது என் எடை *105½* பவுண்டாக உள்ளது. கை முட்டியிலிருந்த வலி இன்னும் அப்படியேதான் இருக்கிறது. இப்பொழுது ஒரு களிம்பு தடவிக்கொண்டு இருக்கிறார்கள்; அதனால் குணம் ஏற் படலாம்; ஆனால் குணம் ஏற்பட்டாலும், ஏற்படாவிட்டாலும், கவலைப்படுவதற்கு எதுவும் இல்லை.

ஆம்; தற்காலிகமாக உப்பைத் தவிர்ப்பதால் பியாரிலா லுக்கு நிச்சயம் நன்மை ஏற்படும். உன்னுடைய முயற்சியின் பல னைத் தொடர்ந்து நன்மைகள் ஏற்பட்டால், அந்த முயற்சியை இன்னும் பலரும் மேற்கொள்வார்கள். பியாரிலால் நிச்சயம்

---

* பண்டித காரே; சபர்மதி ஆசிரமத்தில் இசை ஆசான்.

அதைச் செய்து பார்ப்பார். ஆனால் ஓராண்டு காலத்திற்காவது நீ அம்முறையைத் தொடர்ந்து மேற்கொண்டாலொழிய அதைப் பற்றித் தீர்மானமாக எதுவும் கூற முடியாது.

நீ பயணம் மேற்கொண்டுள்ளாய் என்று பத்திரிகைகள் கூறுகின்றன. நீ பம்பாயைவிட்டுப் புறப்படவிருக்கின்றாய் என்பது காவல் துறையினருக்குத் தெரிந்திருக்க வேண்டும். அப்படியிருந்தும் அந்த நேரத்தில் அந்த உத்தரவு வந்தது வேடிக்கையாகத்தான் இருக்கிறது. நீ அங்கிருந்து செல்ல உத்தேசித்திருப்பது அவர்கள் கவனத்திற்கு வரும் முன்பே, அவர்களுக்கு அந்த உத்தரவு கிடைத்திருக்க வேண்டும்.*

காகித மேலுறைகள் செய்வதோடு இப்பொழுது வல்லபபாய் சமஸ்கிருதம் பயிலுவதிலும், நூற்பதிலும் ஈடுபட்டுள்ளார். அவர் மிகுந்த உற்சாகத்துடன் சமஸ்கிருதத்தைப் பயின்று வருகிறார். காண்டீபச் சர்க்கா அவருக்குப் புதிதென்ற போதிலும் 20ம் எண்ணிக்கை நூல் 180 சுற்றுக்கள் எளிதாக நூற்கின்றார்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*14-7-'32*

## 162

சி. மீரா,

உன் கடிதமும் அஞ்சல் அட்டையும் என் முன் இருக்கின்றன. உடம்பு நமக்கு அளிக்கும் தண்டனையைத் தவிர்க்க முடியாது. உடல் நலனுக்கு ஆதாரமாய் உள்ள விதிகளை எப்பொழுது மீறுகின்றோம் என்பதை நாம் அறியவே முடியாது. மனிதரின் சட்டத்தைப் போலவே இயற்கையின் சட்டத்திலும் அறியாமை என்பது ஒரு சமாதானம் ஆகாது. ஆகவேதான் உன் சுரத்தைப் பற்றிய செய்தி எனக்கு வியப்பைத் தரவில்லை.**

நீ தீவிரமாக சிகிச்சை செய்து கொண்டதன் பயனாக மலேரியா சுரம் மேலும் வளர்வதைத் தடுக்க முடிந்தது என்று எதிர்பார்க்கின்றேன். ஆம், இதைப்போன்ற நேரங்களில், நண்பர்களின் சேவை நமக்கு என்றும் வரப்பிரசாதமாக அமைந்து, விரைவில் குணம் அடையத் துணை செய்கிறது.

---

* ராஜேந்திர பாபுவைப் பார்க்க நான் புறப்பட்டுக் கொண்டிருந்த நேரத்தில் பம்பாயை விட்டு உடனே புறப்படவேண்டுமென்று எனக்கு உத்தரவு வந்தது. நான் என் பயணத் திட்டத்தை மாற்றிக்கொள்ளாமல் செல்வதென்று முடிவு செய்திருந்த நாளன்றே புறப்பட்டேன்.

** சாப்ராவிலிருந்து காசிக்கு வந்த ஓரிரு நாட்களில் எனக்குக் கடுமையான மலேரியா சுரம் கண்டது.

சிவப்பிரசாத் பாபுவின் வீட்டில் அதிதிகளை எல்லையற்ற அன்புடன் உபசரிக்கிறார்களென்பது எனக்குத் தெரியும். உனக்கு இந்த இனிய அனுபவங்கள் கிடைத்துள்ளது குறித்து மகிழ்கின்றேன். இவ்வளவு அன்புக்கிடையே உனக்கு வந்தது போன்ற சுரத்தை தாங்கிக் கொள்ள முடியும் என்பது மட்டுமல்ல; மனித இயல்பின் உச்ச நிலையை உணர்ந்து கொள்ள வாய்ப்பு கிடைக்கின்றது என்ற வகையிலே இச்சுரமே அரியதொரு வரமாகிவிடுகிறது. எல்லோரையும் சமமாகப் பாவித்து எல்லா நிலைமைகளிலும் அந்த அன்பு செலுத்தப்படும்போது, அது தெய்வீக அன்பாகிவிடுகிறது.

கங்கையைப் பற்றிய உன்னுடைய வர்ணனை ஒரு கவிதையைப் போலவே அமைந்துள்ளது. உனக்கு ஏற்பட்டதைப் போன்ற உணர்ச்சிகளே எனக்கும் ஏற்பட்டன. ஒரு வேளை நான் நடந்து கொண்டிருந்த அதே இடத்திற்கு நீயும் சென்றாயோ என்னவோ? அப்பொழுது ஏற்பட்ட உணர்ச்சிகளைப் பற்றி நவ ஜீவனுக்கு ஒரு கட்டுரை அனுப்பியிருந்தேன். அது 10 ஆண்டுகளுக்கு முன்பு என்று எண்ணுகின்றேன்.

பால் உணவு இன்னும் தொடர்ந்து வருகிறது. இப்பொழுது என் எடை 105½ பவுண்டு. பால் சாப்பிடுவதனால் கை முட்டியில் பலன் எதுவும் தெரியவில்லை. பாதாம் பருப்பும், ரொட்டியும் நான் சாப்பிட்டுக் கொண்டிருந்த நேரத்தைவிட உடல் நிலையில் இப்பொழுது முன்னேற்றம் எதுவும் தெரியவில்லை. வெளிக்குப் போவதைப் பொறுத்தவரையில், பாலைத் தவிர்த்திருந்த நேரத்திலிருந்த நிலையே திருப்திகரமாக இருந்தது.

இக்கடிதம் உனக்கு எப்போது கிடைக்கும் என்பது எனக்குத் தெரியாது. என் கடிதப் போக்குவரத்தில் ஏற்பட்டுள்ள சிக்கல் இன்னும் தொடர்கின்றது. எனக்கு வந்து சேரும் கடிதங்கள் இப்போது ஓரளவு ஒழுங்காகக் கிடைக்கின்றன. ஆனால் வெளியில் அனுப்பும் கடிதங்களைப் பொறுத்தவரையில் அதிகத் தாமதம் ஏற்படுகின்றது. இதைப்பற்றி நான் அரசாங்கத்துடன் கடிதப் போக்குவரத்து கொண்டுள்ளேன். ஏன் இந்தத் தடைகள் என்பதே எனக்கு விளங்கவில்லை. ஆனால் ஏற்பட்டுள்ள நிலைமையை நான் ஏற்றுக் கொள்ள வேண்டியது தானே? நல்ல வேளையாக என்னுடைய சிறை வாழ்க்கை தென் ஆப்பிரிக்காவில் தொடங்கியது. கைதி என்றால் ஒரு சிறிதும் உரிமை கிடையாது என்ற எண்ணம் எனக்கு அங்கு பழக்கமாகிவிட்டது. ஆகவே இப்போதும் என் மன அமைதி அவ்வளவாகக் குலைவது இல்லை. நீ இன்னமும் சிறைக்கு வெளியிலிருந்தால், என் கடிதங்கள் உனக்கு ஒழுங்காக வந்து சேரவில்லையென்பதற்கு என்ன காரணம் என்பதை உன்னால் புரிந்து கொள்ள முடியும்.

அன்பு,

எ. ம.
21-7-'32

பாபு

நண்பர்கள் அனைவரையும் விசாரித்ததாகச் சொல்லவும். முடிந்தால் தேவதாசைப் பார்க்க முயற்சி செய். அவன் உனக்கு வெகு அண்மையில்தான் இருக்கின்றான்.

# 163

அஞ்சலட்டை

சி. மீரா,

உன்னுடைய அஞ்சல் அட்டைகள் மிகுந்த நிம்மதியை அளிக்கின்றன. சுரம் ஏன் இன்னும் அடங்கவில்லை என்பது எனக்கு விளங்கவில்லை. கொசு வலையை ஒழுங்காகப் பயன்படுத்துகின்றாய் என்று நம்புகிறேன். எனக்கு வரும் கடிதங்கள் எல்லாம் இன்னமும் ஒழுங்காக வந்து சேருகின்றன. நான் அனுப்பும் கடிதங்களைப் பொறுத்தவரை அதிகத் தாமதம் ஏற்படுகிறது. இதுகுறித்து அரசாங்கத்திற்கு எழுதியுள்ளேன். என்னிடமிருந்து கடிதம் வரவில்லை என்றாலோ, தாமதமாகக் கடிதம் வந்தாலோ, நீ சஞ்சலம் அடையக்கூடாது.

அன்பு,

எ. ம. பாபு

*26-7-'32*

# 164

அஞ்சலட்டை

சி. மீரா,

உன் உடல் நலம் பற்றி நீ ஒவ்வொரு நாளும் எனக்கு செய்தி அனுப்பி வருவது மிகுந்த ஆறுதல் அளிக்கின்றது. ஒவ்வொரு முறையும் சுரம் வந்ததற்குப் பின்பு உடலின் பலவீனம் உன்னைப் பற்றிக்கொள்வது, உன் உடலில் வலிமை அதிகமில்லை என்பதைக் காட்டுகின்றது. ஆனால் இதற்குப் பரிகாரம் ஒன்றுமில்லையென்று அஞ்சுகின்றேன். தேவதாசைப் பார்க்க உனக்கு வசதிப்படுமா என்று முந்தைய கடிதம் ஒன்றில் கேட்டிருந்தேன். இப்பொழுது நீ அதைப்பற்றி நினைக்க வேண்டாம். உள்ளத்திற்கோ, உடலுக்கோ அலுப்பு தரும் எல்லா வேலையையும் தவிர்த்து நீ நீண்ட ஓய்வு எடுக்க வேண்டும். பாபு சிவப்பிரசாத்துக்கும் அவர்களுடைய குடும்பத்திற்கும் என்னுடைய அன்பைத் தெரிவி.

அன்பு,

எ. ம. பாபு

*27-7-'32*

# 165

சி. மீரா,

நீ உண்மையில் அருமையானவள். உன் உடலில் மிகுந்த பல வீனம் ஏற்பட்டிருந்த போதிலும் கூட உன்னுடைய கையெழுத்து எப்பொழுதும் போலவே நிதானமாகவும், தெளிவாகவும் இருக் கின்றது. மாளவியாஜிக்கு நான் தந்தி அனுப்பியிருந்தேன். உன் உடல் தேறும்வரை உன்னை அங்கேயே நிறுத்தி வைக்கப் போவ தாக அவர் கூறியுள்ளார். உனக்கு அந்த வெப்ப நிலை ஒத்துக் கொண்டால், சிவப்பிரசாத் பாபுவின் அன்பு இல்லத்திலே, மாளவியாஜியின் பரிவான பராமரிப்பில் இருப்பதைவிட வேறு எதுவும் சிறந்ததாக இருக்க முடியாது. அவ்வாறு இருந்தால் எனக்குக் கவலை இருக்காது. துளசி இலையால் தயாரிக்கப்பட்ட 'தேனீரை' நீ அருந்தினாய் என்று கூறியுள்ளாய். நான் அதைச் சாப்பிட்டதே கிடையாது. அதன் பல குணங்களைப் பற்றி நான் கேள்விப் பட்டு இருக்கின்றேன். வென்னீர் தான் இந்த நன்மைக்கு முக்கியமான காரணம் என்பது என் கருத்து. ஆனால் பல மருத்து வர்களும், நோயாளிகளும் சிறந்தது என்று சொன்னதை நான் மறுத்துச் சொல்ல முடியாது. தீங்கு செய்யும் கொய்னாவைச் சாப்பிடாமலே உன் உடல் வலிமையை நீ பெறவேண்டும் என்பது தான் என்னுடைய விருப்பம். துளசி இலையால் தீங்கு எதுவும் நிச்சயம் ஏற்படாது; மேலும் மென்மையான, இனிமை யான மணமும் அதற்கு உண்டு.

அங்குள்ள எல்லா நண்பர்களுக்கும் எங்கள் அன்பைத் தெரிவி.

அன்பு,

எ. ம. பாபு
*31-7-'32*

என்னுடைய முந்தையக் கடிதங்கள் கிடைத்தன என்று எண்ணுகின்றேன். அவற்றைத் தபாலில் சேர்க்க அரசாங்கம் அனுமதி அளித்தது. ஆனால் அதில் மிகவும் தாமதம் ஏற்பட்டது. சமீப காலமாகக் கடிதங்களைத் தபாலில் சேர்க்க ஓரளவு சீக்கிரமே அனுமதி அளிக்கின்றனர்.

பாபு

# 166

சி. மீரா,

உன் இரண்டு அஞ்சல் அட்டைகளுக்கும் ஒரு கடிதத்திற்கும் நான் பதில் எழுத வேண்டும். வல்லபபாய் தயாரித்துள்ள காகித

1 நான் சிறைக்குப் போக நேரிட்டால், அப்போது படிப்பதற்காக கேட்டிருந்தேன்.

மேலுறைகளின் எண்ணிக்கை பெருகியுள்ளது. அவற்றில் சிறந்தவற்றை அவர் தேர்ந்தெடுத்து அனுப்புகிறார். ஆகவே, அவர் கலைத் திறனை நீ பாராட்டுவதில் வியப்பில்லை. வீணாகப் போகும் பொருள்களிலிருந்தும் செல்வத்தை உருவாக்கும் கலை, அது.

உன்னுடன் இராஜேந்திர பாபு இருக்கின்றார் என்று அறியப் பெருமகிழ்ச்சி. நான் அவருக்குக் கடிதம் எழுதத் தவறினால், அவருக்கு என் அன்பைத் தெரிவி. அதில் வ. ம. இருவரும் சேர்ந்து கொள்கின்றனர். சாத்தியமான போதெல்லாம் நீ இந்தியில் தான் பேசுகிறாயென்று நம்புகிறேன். உனக்கு அதிக ஓய்வு[1] கிடைக்கும் நேரத்தில், படிக்கக் கூடிய புத்தகங்களைப் பரிந்துரை செய்ய வேண்டுமென்று நீ சில நாட்களுக்கு முன்பு கேட்டிருந்தாய். பாபு சிவப் பிரசாத்திடம், நல்ல நூல்கள் நிறைய உள்ளன. அவற்றில் சிலவற்றை உனக்காகத் தேர்ந்தெடுக்க அவரும் இராஜேந்திர பாபுவும் உதவக் கூடும். உனக்கு இராமாயணம் பிடித்திருப்பதால், மகாபாரதமும் பிடித்திருக்கும். அதைப் பயில்வது பெரும் வேலை; ஆனால் நல்ல பலனளிக்கும். அதற்குப் பிறகு வேதங்களும் உபநிடதங்களும் உள்ளன. வேதங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட ஒரு சில பகுதிகளையும், உபநிடதங்களில் முக்கியமானவை அனைத்தையும் நீ படிக்கலாம். அதன் பயனாய் இந்து சமயத் தத்துவங்களைப் பற்றி அரியதொரு தெளிவு உனக்குக் கிட்டும். இப்பொழுது இந்து சமயத்திடம் உனக்கு அகத் தூண்டுதலாய்ப் பிறந்த அன்பு உள்ளது. நீ இவற்றைப் படித்தபின், அந்த அன்பிற்கு அறிவின் ஆதாரம் துணையாக அமையும். அதன் பயனாக, உனக்கு ஏற்கெனவே ஏற்பட்டிருந்த சில எண்ணங்களை மாற்ற வேண்டியிருக்கலாம். இதற்கு முழுமை தர, 'திருக்குர்-ஆன்', அமீர் அலி எழுதிய 'இஸ்லாம் சமய உணர்வு' ஆகியவற்றையும் படிக்க வேண்டும். 'திருக்குர்-ஆன்' மொழி பெயர்ப்புகளில், பிக்ட்ஹால் செய்துள்ள மொழி பெயர்ப்புதான் சிறந்ததென்று எண்ணுகிறேன். நான் நிச்சயமாகச் சொல்ல முடியாது. அதில்லாவிடில், டாக்டர் முகமது அலியின் மொழி பெயர்ப்பைப் படிக்கலாம். நான் இப்பொழுது சொன்ன யோசனைகளே, ஓராண்டு காலத்திற்கு நல்ல, பயனான படிப்புக்குப் போதும்.

தேவதாசுக்கு நான் தனியாக எழுதுகிறேன். ஆகவே அவனைப் பற்றி நான் ஒன்றும் குறிப்பிடவில்லை. நோய் அடங்கி உடல் தேறிக் கொண்டிருப்பவருக்கு நல்ல காட்டமான தேநீர், காப்பி ஆகியவை நச்சுக்குச் சமமானவை. சீன முறைப்படி தயாரிக்கப்படும் தேநீரால் தீங்கு ஏற்படாதென்று எதிர்பார்க்கலாம். அது எவ்வாறு தயாரிக்கப்படுகிறது என்பது உனக்குத் தெரியுமல்லவா?

* * இப்பொழுது கொஞ்ச நாட்களாகவாவது, நான் எழுதுகிற கடிதங்களிலும் எனக்கு வருகிற கடிதங்களிலும் தாமதம் இல்லாமல், எல்லாம் ஒழுங்காக நடக்கின்றது.

சென்ற ஒரு வாரமாகச் சப்பாத்திகளுக்குப் பதிலாக, நாளுக்கு 4 வாழைப் பழங்கள் சாப்பிடுகிறேன். மலச்சிக்கல் ஏற்படுமோ என்று தோன்றிற்று; அதைத் தடுக்கவே நான் இதைச் சேர்த்துள்ளேன். இப்பொழுது முன்பைவிடத் தெம்பாக இருக்கிறது. இதன் பயனாய் உணவில் சிறிது உப்பு சேர்ந்துவிட்டது. ஆரஞ்சுகளை இப்பொழுது சாப்பிடுகின்றேன்—உப்பு சேர்க்காமல். ஒரு காயும் சாப்பிடுகிறேன்; அதன் மேல் மாலைப் பாலை ஊற்றி உண்கிறேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

எ. ம. பாபு
7-8-'32.

# 167

அஞ்சலட்டை

சி. மீரா,

நீ மீண்டும் உன் பழைய கூண்டுக்கு[1] வந்து விட்டாய் போலும்! நீ இழந்திருந்த உடல் வலிமையையும் ஆற்றலையும் மீண்டும் பெறுவாயென்று நம்புகிறேன். எதைப்பற்றியும் கவலைப் படக் கூடாது. உன் நூற்பிலும், சிரமமின்றி நீ மேற்கொள்ளக் கூடிய மற்ற பயிற்சிகளிலும் கவனம் செலுத்தினால் போதும். நாங்கள் அனைவரும் நலமாக உள்ளோம்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு. கடவுள் உனக்குத் துணை நிற்பாராக.

அன்பு,

எ. ம. பாபு
19-8-'32

ஸ்ரீ மீராபாய்,
விசாரணைக் கைதி,
ஆர்தர் சாலைச் சிறை,
பம்பாய்.

---

1. பம்பாயை விட்டு வெளியேற வேண்டுமென்று முதலில் எனக்கு உத்தரவிடப்பட்டிருந்தது. இதை வலியுறுத்தும் வகையில், நான் ஆமதாபாத் சென்ற போது, பம்பாய்க்குள் எப்பொழுதும் நுழையக் கூடாது என்று தடையுத்தரவு விதிக்கப்பட்டது. நான் என் சுற்றுப்பயணத்தை முடித்துக் கொண்டு, அரசின் உத்தரவுகளை மீறி பம்பாய்க்குத் திரும்பினேன். இரயில் நிலையத்தில் இரயில் வந்து நின்றவுடனே நான் கைது செய்யப்பட்டேன். ஒரு வாரம் விசாரணை நடந்தது. அதன் பின்பு, ஓராண்டுத் தண்டனை விதிக்கப்பட்டது.

# 168

சி. மீரா,

உன் புது முகவரிக்கு ஒரு கடிதம்—அஞ்சலட்டை என்று சொல்ல வேண்டும்—எழுதினேன்.

உனக்கு மீண்டும் உடல்நலக் குறைவு ஏற்படும் போது, மனத்தில் கூட உன்னைக் கடிந்து கொள்ளக் கூடாதென்று நான் முடிவு செய்திருந்தேன்; உன் சுரம் பற்றிக் காசியிலிருந்து செய்தி வந்த போது, ஒவ்வொரு முறையும் உனக்குச் சுரம் வரும்போது உன்னைக் குற்றம் கண்டுபிடிப்பது சரியல்ல என்று எனக்கு நானே சொல்லிக் கொண்டேன். நம் தவறுகளால் தான் நம் உடல் நலன் குறைகிறது என்பதில் ஐயமில்லை. நாம் நம் தவறுகளை முன்பே அறிவது எப் பொழுதும் சாத்தியமில்லை என்பதால் தான் சிரமம் ஏற்படுகிறது. நமக்கு முன்பே தெரியும் போது கூட, அத் தவறுகளைத் தடுக்க எல்லா நேரங்களிலும் இயல்வதில்லை என்பது மற்றொரு சிரமம். ஆகவே நம் தவறுகளால்தான் நமக்கு நோய் வருகிறது என்பதை நாம் உணர்வது போதும்; நமக்கு நோய் வரும் போதெல்லாம் நம்மை நாமே கடிந்து கொள்வது அவசியமில்லை. அதனால்தான் நீ அண்மையில் செய்துள்ள தவறு குறித்து நான் வியப்படையவில்லை. நீ சொல்லும் சந்தர்ப்பங்களில், அதைத் தவிர்த்திருக்க முடியாது. இந்த நோய்களால், உனக்கு நீண்டகாலத் தீங்கு எதுவும் ஏற் படாமல், அவ்வப்போது சமாளித்துக் கொள்ள முடிகிறது என் பதற்கே நாம் நன்றி செலுத்த வேண்டும். இயற்கையை ஒட்டிய சிகிச்சை மூலம் நோய்க் கிருமிகளை அகற்றுவதால், உடல் வலிமை யும் தூய்மையும் அதிகரிக்கின்றன. உனக்கு இப்பொழுது கிடைத் துள்ள ஓய்வு, தெய்வாதீனமானது. பேட்டிகள் காணவோ, கடி தங்கள் எழுதவோ உனக்கு அனுமதி அளிக்கப்படாவிடில் கூட, நீ அதுபற்றிக் கவலைப்படக் கூடாது. இப்பொழுதெல்லாம், சாதாரணச் சிறை வாழ்க்கை குறித்து அஞ்சி நடுங்க வேண்டிய அவசியமில்லை. ஹோவார்டு தொடங்கிய இயக்கம் மகத்தானது. அது இப்பொழுது ஆரம்பக் கட்டத்தில் தான் உள்ளது. சிறை என்ற பெயரையே மாற்றி, அந்தந்த அரசுகளின் கோட்பாட்டின்படி ஒழுக்க, சமூக, அரசியல் தீங்கு எதுவும் செய்யாமல் தடுக்கச் சில ரைக் காவலில் மட்டும் வைக்கும் நாள் வெகு தொலைவில் இல்லை. ஆனால் சிறை வாழ்க்கையின் நிலைமை எவ்வாறிருந்தாலும், அதை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ள வேண்டும்; அதே சமயத்தில், சாத்தியமான வகைகளில் நிவாரணம் பெற முயல வேண்டும்.

இப்பொழுது என் உணவு பற்றிக் குறிப்பிடுகிறேன். பாலும் சாறு நிறைந்த பழமும் நான் இங்கு எரவாடாவில் சாப்பிட்ட போது மலச்சிக்கலைப் போக்க முடியவில்லை என்பது உனக்கு நினை வில்லையா? பாலைத் தவிர்த்த பின்தான் அதைப் போக்க முடிந்தது. பாலும் பழமும் சாப்பிட்டு உடல் நலனைக் காக்க முடியாததால் தான், நான் இம்முறையும் பாலை மட்டும் விலக்கினேன். இம்முறை முதலில் பாலும் வாழைப் பழமும் சாப்பிடத் தொடங்கினேன்.

அதனால் ஓரளவு முன்னேற்றம் ஏற்பட்டது; ஆனால் அது போத வில்லை. ஆகவே ஒரு சில நாட்களுக்குப் பாலை நிறுத்திவிட்டுக் கோதுமை சப்பாத்திக்குப் பதிலாகக் கம்பு சப்பாத்தி சாப்பிடு கிறேன். இதனால், அதிசயமான பலன் கிடைத்துள்ளது. சென்ற சிறை வாசத்தின் போது, கம்பு தான் என் மலச்சிக்கலைப் போக் கியது. சிறைவாசத்தில் எஞ்சிய பகுதியை, ரொட்டி, காய்கறி, பாதாம் பாகு ஆகியவை சாப்பிட்டுச் சமாளித்துக் கொண்டேன். பாலை மீண்டும் சேர்த்துக் கொண்டு, கம்பு சாப்பிடுவதால் மலச்சிக் கலைத் தவிர்க்க முடியுமா என்று பார்க்கப் போகிறேன். என் உடல் நலன் மிக நன்றாக உள்ளது. வலது கையால் எழுதி வருகிறேன் என்பதை நீ காண்பாய்; அதனால் வலி ஏற்படவில்லை. இடது கை முட்டியைக் காக்க, நான் மகன் சர்க்காவில் மீண்டும் நூற்று வரு கிறேன்; இம்முறை 30-வது எண்ணிக்கைக்கும் மேலாகத் துல்லிய மான நூல் நூற்று வருகிறேன். இது எனக்குத் திருப்தி அளிக் கின்றது. ஆனால் நூற்பின் அளவு இன்னும் மோசமாகத் தான் உள்ளது. மணிக்கு 100 சுற்றுக்கள் கூடத் தேறுவதில்லை.

சமஸ்கிருதப் படிப்பில் வல்லபபாய் மிக வேகமாக முன்னேறி வருகிறார். பிரெஞ்சு, உருது, இருமொழிகளையும் மகாதேவ் பயின்று வருகிறார். இவ்வாறு எங்கள் நேரம் பயனுள்ள வழிகளில் தான் செலவு செய்யப்பட்டு வருகிறது. திடீரென இங்கு ஒரே வெப்ப மாகவும் வெளிச்சமாகவும் இருக்கிறது. ஆண்டின் இப்பகுதியில் இந்நிலை வழக்கத்துக்கு விரோதமானது. உனக்குக் குறைவு ஒன்று மில்லை என்று நம்புகிறேன்.

உன்னிடம் கொசு வலை இருக்கிறதல்லவா?

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

*23—8—'32* பாபு

# 169

சி. மீரா,

நீ வழக்கமாக எழுதும் கடிதம் இன்று கிடைத்தது. இன்று உன் உடல் நலன் தேறியுள்ளது குறித்து மகிழ்ச்சி. உணவு தயாரிக்க நீ கூறியுள்ள வழி, எனக்குப் பயன்படாது. அதற்கு ஆட்டுப் பால் வெண்ணெய் வாங்க வேண்டும். அந்தச் சிரமம் எடுத்துக் கொள்ள நான் விரும்பவில்லை. அது இல்லாமல் என் உடல் நலன் சிறப்பாக உள்ளதால், அது அவசியமுமில்லை. ஆகவே அதைத் தயாரிக்க எனக்கு நியாயமான காரணம் ஒன்றுமில்லை. ருசியை மட்டும் நாடி, உணவு வகைகளைத் தயாரிக்கக்கூடாது. பல ஆண்டுகளுக்கு, அவ்வாறு ருசிக்குக் கட்டுப்பட்டு நான் வாழ்ந்து விட்டேன். உனக்கு, அதிலும் குறிப்பாக அங்கே, இந்த மாறுதல் தேவையாக இருக்கலாம். உடலுக்கு அவசியமென்று கருதுவதை

நான் பெறத் தயங்குவதில்லை. இன்று பால் சாப்பிட்டேன். ஆனல் தொடர்ந்து கம்பு சாப்பிட உத்தேசித்துள்ளேன். பாலோடு கம்பு சேர்த்துச் சாப்பிடும் போது, குடல் ஒழுங்காக வேலை செய்கிறதா என்று பார்க்கப் போகிறேன். பாலைச் சாப்பிடாமல் கம்பு மட்டும் சேர்த்துக் கொள்ளும் போது, மிகச் சிறந்த பலன் ஏற்பட்டுள்ளது. எல்லோருடைய உடம்புக்கும் இது ஒத்துக் கொள்ளும் என்று கூறுவதற்கில்லை. ஒவ்வொரு உடம்பிலும், சிறப்பான சில இயல்புகள் உண்டு என்பதை நான் கண்டுள்ளேன். அத் தனி இயல்புகளை நாம் ஆராய்ந்தறிய வேண்டும்.

* * *

அங்கிருந்து உன்னை அகற்ற மாட்டார்களென்ற செய்தி நான் எதிர்பார்த்தது தான். அங்கும் நீ உன் உடல் நலனைக் காத்துக் கொள்ள இயலும். நெய், பேரீச்சம் பழம் ஆகியவை வேண்டுமென்று நீ கேட்டு எழுதியிருந்தாயென்று நாரணதாசு தம் கடிதத்தில் குறிப்பிட்டிருந்தார். அவையிரண்டும் உனக்குக் கிடைக்குமென்று எதிர்பார்க்கின்றேன். புழு விழாத பேரீச்சம் பழம் எனக்குக் கிடைக்காததால், அதைச் சாப்பிடுவதை நிறுத்தினேன்.

'காரேக்' என்று சொல்லப்படும் காய்ந்த கடினமான பழங்களை உன்னல் சாப்பிட முடிகிறது. என்னல் முடியவில்லை.

ஒரு சில நண்பர்களைக் காண்பதற்காகிலும் உனக்கு அனுமதி வழங்குவார்கள் என்று நம்புகிறேன். ஆனல் அது கிடைக்காவிட்டால் பரவாயில்லை. நமக்குப் பழக்கமில்லாதவர் என்று எவருமே கிடையாதே. நமக்கு அறிமுகமாகாத அனைவரும், குற்றவாளிகளும் சிறைக் காவலரும் உட்பட, நம் நண்பர்களே. இங்கு விலங்குகளிலும் நண்பர்களைக் காண நாங்கள் கற்றுள்ளோம். இங்கு எங்களோடு ஒரு பூனை இருக்கின்றது; அது எங்களுக்கு எத்தனையோ உண்மைகளை உணர்த்தியுள்ளது. நம்மிடம் போதிய ஞானத் தெளிவு இருந்தால், செடிகள், மரங்கள் பேசும் மொழியைக் கூட நாம் அறிந்து, அவற்றின் நட்பை மதித்துப் போற்றவேண்டும்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

*31—8—'32* பாபு

## 170

*சி. மீரா,*

உன் கடிதத்திற்காக நான் காத்துக்கொண்டிருந்தேன். அது இன்று கிடைத்தது. நான் உண்ணவிரதம்* இருந்ததன் கார

* அப்பொழுது பிரிட்டிஷ் பிரதமராயிருந்த இராம்சே மாக்டனல்ட் கொண்டு வந்த வகுப்புத் தீர்ப்பை எதிர்த்து பாபு, 20-9'-32 அன்று உண்ணு நோன்பு மேற்கொண்டார்.

ணத்தை நீ விளங்கிக்கொண்டது கண்டு நான் மகிழ்ச்சி அடைகிறேன். அதைத்தவிர எனக்கு வேறு வழியே இல்லை. உண்ணு நோன்பு இருப்பது கடமையும், அரியதொரு உரிமையும் ஆகிவிட்டது. அதைப்போன்றதொரு வாய்ப்பு ஒரு தலைமுறையிலே, ஏன் பல தலைமுறைகளில்கூட ஒருவருக்கு மிக அரிதாகத்தான் கிட்டும். அகிம்சை உணர்வுடன் உண்ணு நோன்பு ஏற்கும்போதும், கோரிக்கைகளில் சுயநலம் சிறிதும் கலவாதபோதும், உண்ணு நோன்பு அகிம்சை உணர்வின் தலையாய கடமையாகிவிடுகிறது. இத்தகைய வாய்ப்பு எனக்குக் கிட்டியுள்ளதுபோல் தோன்றுவது குறித்து நீ மகிழ்ச்சியடைய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறேன். தோன்றுவது என்று நான் குறிப்பிடுவது, என்னுடைய விசுவாசமும், நம்பிக்கைகளும் இனிமேல்தான் சோதிக்கப்பட வேண்டும் என்பதனுல்தான். வாழ்வா, மரணமா என்ற உயிர்ப் பிரச்னை ஒன்றில் தன் வலிமை பற்றிப் பேச எவரும் துணிய முடியாது. தேவையான வலிமை பெறும் அருகதை எனக்கு உண்டா, நான் கொண்டுள்ள குறிக்கோளும் தேவையான அளவு தூய்மையானதா, இந்த நோன்பை மேற்கொள்வதில் வன்முறை ஒரு சிறிதும் என்னிடம் கலவாமல் உள்ளதா என்ற மூன்றும் தான் முக்கியமான கேள்விகள். இவை மூன்றும் அமைந்துள்ளன என்று நான் கூறும்போது என்னுடைய நம்பிக்கையைத்தான் நான் தெரிவிக்கின்றேன். உண்ணு நோன்பு நிறைவு பெற்ற பின்பு தான் தீர்ப்புக் கூற முடியும். சிறிதும் சஞ்சலம் அடையாமல் இந்த நோன்பை நீ கவனித்து வர வேண்டும். எந்தக் கட்டத்திலும் நீ அனுதாப உண்ணுவிரதம் மேற்கொள்ளக் கூடாது. உன் சிறைத் தண்டனை முழுவதையும் அமைதியாக ஏற்று, உனக்குக் கிடைத்துள்ள ஒவ்வொரு நிமிடத்தையும் நல்ல முறையில் பயன்படுத்தி உன்னுடைய வேலைகளில் முழு ஈடுபாடு கொண்டிருப்பதே உன் கடமையாகும்.

உன் உடல் நலன் நன்ருக இருந்து, உடலிலும் வலிமை இருந்தால் உன் எடை குறைந்தது பற்றி நீ கவலைப்பட வேண்டாம். அந்தச் சூழ்நிலைக்கு பழக்கமாகி, வெப்ப நிலையிலும் முன்னேற்றம் ஏற்பட்டால் எடை தானுகக் கூடி வரும். இன்னும் ஒரு மாத காலத்திற்கு வெப்ப நிலையில் முன்னேற்றம் எதுவும் காண முடியாது.

என்னைப் பொறுத்த வரையில் உடல் நலன் மிக நன்ருக இருக்கிறது. கோதுமை, ரொட்டி, பால், ஒரு காய்கறி, உள்ளூர் பேரீச்சம் பழங்கள் (தரம் பரவாயில்லை), முஸாம்பி ஆகியவற்றை சாப்பிட்டு வருகிறேன்.

மரங்களையும், விலங்குகளையும் நண்பர்களாகப் பாவிக்கும் உணர்வு உனக்கு இயல்பாகவே அமைந்துள்ளது என்பதை நான் அறிவேன். இந்தக் கோட்பாட்டை விரிவுபடுத்திக் கொண்டால் வெளியிலிருந்து நண்பர் எவரும் வரவில்லையே என்ற குறையை நீ அறியமாட்டாய். ஆக்வே தான் அதே இனத்தில் புதியவர்களையும் நான் சேர்த்துக் குறிப்பிட்டேன். மனிதக் குடும்பத்தைச் சேர்ந்த

அனைவரும், நமக்குப் பழக்கம் இல்லாதவர்களாயினும் சரி, பறவைகளும், விலங்குகளும், தாவரங்களும், நம்முடைய அந்தரங்க நண்பர்களையும் உறவினர்களையும் போலவே நமக்கு நெருங்கிய நண்பர்கள் என்ற உணர்வும், தெளிவும் ஏற்பட வேண்டும். அவர்கள் அனைவரும் ஒன்றே. அந்த உண்மையை உணர்ந்து கொள்ள நமக்கு மட்டும் பக்குவம் இருந்தால் அவர்கள் அனைவரும் இறைவனின் தோற்றம் என்பதை அறிவோம். இந்தத் தெளிவு உறுதியாக ஏற்பட்டு விட்டால், சிறையில் நாம் அடைபட்டு இருக்கும்போது வெளியிலுள்ள நண்பர்களைக் காண முடியவில்லையே என்ற ஏக்கம் அடங்கி விடும்.

இங்கிலாந்திலிருந்து குடும்பத்தைப் பற்றி உனக்கு வந்துள்ள செய்தி உற்சாகம் ஊட்டுவதாய் உள்ளது. அவர்களுக்கு நீ கடிதம் எழுதும்போது என்னுடைய அன்பையும் தெரிவி.

எங்கள் பூனைக் குடும்பத்தில் உள்ள சிலவற்றிற்கு இராட்டினத்தின் மால் கயிற்றின் மீது தனிப்பற்றுதல் ஏற்பட்டுள்ளது! சில நாட்களுக்கு முன்பு ஒரு பூனை மால் கயிற்றை இழுத்து அழித்து விட்டது. சாப்பாட்டு வேளைகளில் இப்பூனைகள் சங்கீதப் பயிற்சியை ஆரம்பித்து விடுகின்றன; வல்லபபாய் அவற்றுக்கு உணவு பரிமாறிய பின்பு தான் இக்கோஷ்டி கானத்தை நிறுத்துகின்றன. தாய்ப் பூனைக்கு சைவ உணவின் மேல் ஆசை. பருப்பு, அரிசி, அதிலும் குறிப்பாக காய்கறிகள் ஆகியவற்றை ருசித்துச் சாப்பிடுகிறது. இப் பூனைக் குடும்பத்தில் புதிய குட்டி ஒன்று பிறந்துள்ளது என்பதை நான் உனக்குச் சொன்னேனா? தாய்ப் பூனை பிரசவ வேதனையில் இருந்த போதும், குட்டி போட்ட இரண்டு மூன்று நாட்கள் வரையிலும், தாய்ப் பூனைக்கு மனிதர்களைப் போலவே மிகுந்த பாசமும் பரிவும் இருந்தன. எங்களிடம் அன்புடன் அணைந்து கொள்ளும்; அதை அணைத்து அன்புகாட்ட வேண்டுமென்று வற்புறுத்தும். அதைப் பார்ப்பதற்கே பரிதாபமாய் இருந்தது. "குழந்தை" மீது தாய்ப் பூனை காட்டும் அன்பு வியக்கத்தக்கது.

எங்கள் அனைவரிடமிருந்தும் உங்கள் அனைவருக்கும் அன்பு.

*15-9-'32* பாபு

## 171

*சி. மீரா,*

இன்று காலை 2½ மணிக்கு எழுந்து விட்டேன். முதலில் குருதேவருக்கும் பிறகு சாஸ்திரிக்கும் அதன் பின்பு உனக்கும் கடிதம் எழுதத் தொடங்கினேன். உருக்கமான உன்னுடைய கடிதம் கிடைத்தது. அதைக் கவர்னருக்கு அனுப்ப வேண்டுமென்று

முதலில் நான் எண்ணினேன். ஆனால் அந்த எண்ணம் தோன்றிய வுடன் அதை நிராகரித்து விட்டேன். அனல் அடுப்பிற்குள் நுழைய நீ மனம் விரும்பி முடிவு செய்தாய். அதன் பின்பு அங்கு தான் நீ இருக்க வேண்டும். என்னுடன் இருப்பது அவ்வளவு எளிதான காரியமல்ல என்பதை நீ இந்த சில ஆண்டுகளில் தெரிந்து கொண் டிருக்க வேண்டும். ஆகவே மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு நஞ்சைக் கடைசித் துளி வரை குடித்து விடு.

என்னுடைய உண்ணு நோன்பு பற்றிய செய்தி தெரிவித்து முதற் கடிதம் நான் எழுதியபோது உன்னையும் பாவையும் பற்றியே எண்ணினேன். சிறிது நேரத்திற்கு எனக்கு மயக்கமே வந் தது. நீங்கள் இருவரும் இதை எவ்வாறு தாங்கிக் கொள்வீர் களென்று சஞ்சலப்பட்டேன்.

"நீ உள்ளே வரவேண்டுமென்றால் பற்றுகள் பற்றிய எண்ணத்தை அகற்ற வேண்டும்" என்று என் அந்தராத்மா கூறியது. அதன் பின்பு கடிதத்தை எழுதி முடித்தேன். தீண் டாமை என்னும் கொடிய பாவத்தைக் கழுவித் துடைக்கும் முயற்சி யில் எவ்வளவு கடுமையான வேதனையும், சோதனையும் ஏற்பட்டா லும், அவற்றைத் தாங்கிக் கொள்ளவே வேண்டும். ஆகவே இந்த வேதனையில் நீ மகிழ்ச்சி கண்டு திடமான மனதுடன் அதைத் தாங் கிக் கொள்ள வேண்டும். இதெல்லாம் எவ்வளவு கடினம் என்பதை நான் அறிவேன். இருந்தாலும் கடினமாக இருப்பதால் தான் அதை நீ செய்ய முயல வேண்டும். கடைசித் தடவையாகப் பார்ப்பது என் பதில் அர்த்தமில்லை என்பதை நீயே சிந்தித்துப் பார்த்தால் உணர் வாய். நீ எந்த ஆன்மா மீது அன்பு கொண்டுள்ளாயோ அது எப் பொழுதும் உன்னுடனேயே உள்ளது. ஆன்மா மீது அன்பு கொள் வதற்கு ஒரு கருவியாகப் பயன்பட்ட யாக்கை, அந்த அன்பை வளர்ப்பதற்கு இனி அவசியமில்லை. அந்த யாக்கைக்குப் பயன் இருக்கும்வரை அது நிலைக்கும் என்பதும், பயன் இல்லாதபோது அது அழிந்துவிடும் என்பதும் நன்மைக்கே. இந்த உடம்பு எப்பொழுது பலன் இல்லாமல் போகும் என்பது நமக்குத் தெரி யாததால், எந்தக்காரணத்தினால் மரணம் ஏற்பட்டாலும், உடம் புக்கு இனிமேல் வேலையில்லை என்றுதான் புரிந்து கொள்ள வேண்டும். வல்லபபாய், மகாதேவ், ராமதாசு, சுரேந்தர், தேவ தாசு ஆகியோரை நான் சந்தித்தேன். அவர்கள் அனைவரும் இதை மிகவும் உறுதியுடன் தாங்கிக் கொண்டிருக்கின்றார்கள் என்பது உனக்கு ஆறுதல் அளிக்கும்.

உன்னுடைய தோழிகளுக்கு என் அன்பு. கிஸன் உன் னுடன் இருப்பது குறித்து மகிழ்கின்றேன். அவள் மிக நல்ல வீரமான பெண். ஆண்டவன் உன்னைக் காப்பாற்றுவாராக.

அன்பு,

*20—9—'32*

பாபு

## 172

சி. மீரா,

உன்னைப் பற்றிய சிந்தனை என்னை அரித்துத் தின்கிறது. நீ மன அமைதி பெற்ற நிலையில் இருந்தால், எவ்வளவு நன்றாக இருக்கும்? தினமும் எழுது. உன் நிலைபற்றி நாளை தந்தி அனுப்பு. உண்ணா நோன்பை நான் மிக நன்றாகத் தாங்கிக் கொண்டிருக்கின்றேன். குடலைக் கழுவ நீரேற்றும் சிகிச்சைக்குப் பின், படுத்துக் கொண்டே நான் இதை எழுதுகிறேன். நீ உறுதி தளராமலும் நிதானம் தவறாமலும் இருக்கவேண்டும். இறைவனிடம் நம்பிக்கை கொண்டிரு. மகாதேவ் மூலம் தினமும் செய்தி அனுப்புவேன். நானே எழுத இயலாமல் போகலாம்.

அன்பு,

*23—9—'32* பாபு
*இரவு 11-30 மணி.*

## 173

[பாபு உடல்நிலை திருப்திகரமாகவே இருந்ததென்று மகாதேவிடமிருந்து கடிதம் வந்தது. அக்கடிதத்தின் மேல் பாகத்தில் தம் கையெழுத்தில் பாபு இந்த வார்த்தைகளை எழுதியிருந்தார்.]

என் அன்புக் குழந்தை,

நீ முறிந்துவிடக் கூடாது. முன்பு ஒருபோதும் இல்லாதவாறு இப்பொழுது இறைவனின் அருள் வரையறையின்றிச் சுரப்பதை நீ காண்கிறாயல்லவா?

அன்பு,

*24-9-32* பாபு

## 174

25ந் தேதிக் கடிதம் எனக்கு வந்து சேரவேயில்லை.

ம.

## 175

*தந்தி:*

இன்று கடிதம் அனுப்பவில்லை. கடவுள் அருளால், குருதேவ், மற்ற அன்பார்ந்த நண்பர்கள் முன்னிலையில் 5–15 மணிக்கு உண்ணா நோன்பு முடிக்கப்பட்டது.*

அன்பு,

பாபு

## 176

*சி. மீரா,*

இறைவனின் மாண்பும் கருணையும் எல்லையற்றவை. தாங்க முடியும் அளவுக்கு மேல், அவன் தன் பணியாளரைச் சோதிக்க மாட்டான். ஆகவேதான் நேற்று மாலை 5 மணிக்கு நான் உண்ணா விரதத்தை நிறுத்துவதற்கு உதவியாக, அரசாங்கத்தின் பதில் அந்த நேரத்திற்குள் வந்தது. கவி தாகூர் வழிபாட்டைத் தொடங்கினார். அதற்குப் பின், ஆசிரமத்தில் சிலகாலம் இருந்து, தொழு நோயால் கஷ்டப்படும் கைதி பர்ச்சுரே சாஸ்திரி வழிபாட்டைத் தொடர்ந்து நடத்தினார்.

இன்று இவ்வளவு போதும்.

அன்பு,

எ. ம. பாபு
*27-9-32*

## 177

*சி. மீரா,*

நேற்று உன்னிடமிருந்து இரு கடிதங்கள் வந்தன. நான் ஒரு சிறு குறிப்பு எழுதி அனுப்பினேன். அது உனக்குக் கிடைத்திருக்கும் என்று நம்புகிறேன். இங்கிருந்து ஒவ்வொரு நாளும் ஏதாவது ஒரு வடிவில் உனக்குச் செய்தி அனுப்பப்பட்டுள்ளது. என் கடிதங்கள் உன்னிடம் உடனே கொடுக்கப்படும் என்று சிறை அதிகாரி எனக்கு உறுதி கூறினார். அப்படியிருக்க, என் கடிதங்கள் உனக்கு ஏன் வந்து சேரவில்லை என்று தெரியவில்லை.

எவ்வாறாயினும், இப்பொழுது எல்லாம் முடிந்துவிட்டது. நிறைய ஆரஞ்சு, திராட்சை முதலியவை சாப்பிட்டு, உடலைத்

---

* அரசாங்கத்திடமிருந்து தமக்குக் கிடைத்த பதில் திருப்திகரமாய் இருந்ததால், பாபு உண்ணா விரதத்தை நிறுத்தினார்.

தேற்றி வருகிறேன். உறக்கம் நன்ருக வருகிறது. ஆகவே கவலை கொள்ள இப்பொழுது இடமில்லை.

நீ சித்திரித்துள்ள ஒரிஸ்ஸா காட்சியும், மலபார்க் காட்சிகள் இரண்டும், சென்ற சில நாட்களாக உள்ளத்தை உருக்கி, என்னை ஆட்கொண்டுவிட்டன. வேதனைகளைத் தாங்குவதற்கு அவை உதவின. குருதேவர் வந்தது பெரும் ஆறுதலாக இருந்தது, இருக்கின்றது. அவர் தம் ஆதரவை வரையாது வழங்கியுள்ளார்.

நீ இப்பொழுது உற்சாகமாய் இருக்கின்ருய் என்று நம்பு கிறேன். உன் நண்பர்களை விசாரித்ததாகச் சொல்.

உனக்கும் கிஸனுக்கும் அன்பு.

பாபு

*28—9—'32*

# 178

*சி. மீரா,*

உண்ணு நோன்பு முடிந்த பின் இது மூன்ருவது கடிதம். முதல் வேளை உணவாக, ஆரஞ்சுப் பழங்களும் திராட்சை ரசமும் சாப்பிட்டபின் உடனடியாக இதை எழுதுகின்றேன். அதுதான் என் முக்கிய உணவாக அமைந்துள்ளது. நேற்று 'துரை' கஞ்சியைப் பெருக்கிக் குடித்தேன். இன்று பால்சாப்பிட உத் தேசித்துள்ளேன்.

உன் கடிதங்கள் ஒழுங்காகக் கிடைத்துள்ளன. என் கடிதங்கள் ஏன் உனக்கு வந்து சேரவில்லை என்பது விளங்க வில்லை. அதைப்பற்றி விசாரித்துக் கொண்டிருக்கின்றேன்.

உடல் வேகமாகத் தேறி வருகிறது. நேற்று $1\frac{1}{2}$ பவுண்டு கூடி, எடை 95 பவுண்டாக இருந்தது.

ரொமெயின் ரோலண்டுக்கு நான் கடிதம் எழுதியிருந்தேன். உண்ணு நோன்பை முடித்தபோது, அவரிடமிருந்து ஒரு தந்தி வந்தது.

* * * *

இங்கு வந்ததும், பா, தன் துன்பம் அனைத்தையும் மறந்து விட்டாள். இச் சோதனையை மிகுந்த துணிவுடனும் உறுதி யுடனும் அவள் தாங்கிக் கொண்டதுபோல் தோன்றுகிறது.

நீங்கள் அனைவரும் இப்பொழுது நிம்மதியாக இருப்பீர்க ளென்று நம்புகிறேன். பல காலமாகத் தீண்டாதார் அனுபவித்து வந்துள்ள வேதனையை நினைத்தால், இந்த உண்ணு நோன்பு ஒரு பொருட்டல்ல.

உனக்கும் கிஸனுக்கும் அன்பு.

எ. ம. பாபு

*29-9-'32*

# 179

சி. மீரா,

என் கடிதங்கள் உனக்கு ஒழுங்காக வந்து சேராமலிருப்பதால், வேண்டுமென்றே தான் நான் நேற்று உனக்குக் கடிதம் எழுதாம லிருந்தேன். அதிகாலையில், ஆரஞ்சும் திராட்சை ரசமும் சாப்பிட்ட பின்பு, இதை நான் எழுதுகிறேன். நான் நன்றாகப் பூரித்து வருகி றேன். திங்கட்கிழமை $93\frac{1}{2}$ பவுண்டாக இருந்த என் எடை, நேற்று $99\frac{3}{4}$ பவுண்டாக இருந்தது. இது வியக்கத்தக்க முன்னேற்றம். இன்னும் ஓரிரண்டு நாட்களில் நான் ஒரு சிறிது நடப்பேன். இன் னும் குடலைக் கழுவ நீரேற்ற வேண்டியுள்ளது. ஆனால் விரைவில் சாதாரண நிலை வந்து விடுமென்று எதிர்பார்க்கின்றேன். எட்டு ஆரஞ்சுகள், திராட்சைகள், குளுகோஸ் மாவு நாலு சின்னக் கரண்டி, $\frac{1}{4}$ பவுண்டு பால், தெளிவான காய்கறிச் சாறு, சுரைக்காய், தக்காளி, இவைதான் என் உணவு. இதில் ஒரு பகுதி உணவைச் சராசரி $2\frac{1}{2}$ மணி நேரத்துக்கொரு முறை நான் சாப்பிடுகின்றேன். நேற்று அதிகக் களைப்பு தோன்றாமல், நான் 235 சுற்றுகள் நூற் றேன். இரு தவணைகளில் நூற்பு நடந்தது. இங்கிலாந்துத் தபாலில் சேர்க்கவும், இங்கு நண்பர்களுக்கும் பல கடிதங்கள் எழுதி முடித்தேன். உணவுக்கும் ஓய்வுக்கும் இடைவேளைகள் தவிர, நேற்றிரவு எட்டு மணி வரை நான் வேலை செய்த போதி லும், இப்போது அலுப்பாகத் தோன்றவில்லை. இவை யெல்லாம் நல்ல முன்னேற்றமாகும். ஆகவேதான் "இறைவன் மாண்பும் கருணையும் மிக்கவர்" என்று நான் ஓதி வருகிறேன். உண்ணா நோன்பின் சாதனைகளுடன் ஒப்பிட்டுப் பார்க்கும் போது, உண்ணா நோன்பு ஒரு பொருட்டல்ல. அது மனித சாதனையல்ல; அது இறைவன் செயல். இவை அனைத்தும் உன் வருத்தத்தைப் போக்கும்.

பேட்டிகள் போன்றவற்றைப் பொறுத்த வரை, உண்ணா நோன்புக்கு முன்பிருந்த தடைகள் அனைத்தும் மீண்டும் அமலில் உள்ளன என்பதை நீ பத்திரிகைகளில் பார்த்திருக்க வேண்டும். பகல் வேளையில் பா என்னைப் பார்க்க முடியும்.

உனக்கும் கிஸனுக்கும் என் அன்பு.

எ. ம. பாபு

*31-9-'32*

உங்களுக்குத் துணை வேறு யாருமில்லை என்றறிகின்றேன்.

# 180

சி. மீரா,

உன் கடிதம் இன்று (புதன் கிழமை) கிடைத்தது. வலது கையால் தான் நான் கடிதம் எழுதியிருந்தேன். உடல் பலவீனத்தால், நான் மெதுவாக எழுத்துக்களை வரைய வேண்டியிருந்ததால் தான் என் எழுத்து உனக்குத் தெளிவாகத் தோன்றியுள்ளது. இடது கை முட்டி தொந்திரவு கொடுத்தது. நேற்று வரை வலியே இல்லை. ஆனால் சதைப்பற்று ஏற்படுவதுடன் வலியும் திரும்புமென்று இன்று எனக்குத் தோன்றுகிறது. வலி திரும்பினாலும், கவலை கொள்ள வேண்டிய அவசியமில்லை. நான் எனக்கு நிர்ணயித்துள்ள அளவு நூற்று முடிக்கின்றேன்;—குறைந்தது 200 சுற்றுகள். ஒரு புதிய காண்டீப சர்க்காவைக் கேஷு கொண்டு வந்தார். அது மிக நன்றாக வேலை செய்கிறது. நூற்று முடிக்க ஒன்றரை மணிக்கு மேல் பிடிப்பதில்லை. என் எடை இப்பொழுது 99 பவுண்டாகவே இருக்கிறது. இப்பொழுது நான் சிறிது உடற்பயிற்சி செய்வதால், எடை ஒரேயடியாய் ஏறாது; ஏறவும் கூடாது. இன்று பால் 2 பவுண்டும், முதன் முறையாக 20 பேரீச்சம் பழமும் சாப்பிட்டேன். பா பகலில் என்னுடன் இருந்து, உணவு கொடுத்துப் பணிவிடை செய்கின்றாள். கடிதங்கள் வந்து குவிந்துள்ளதால், பதில் எழுத அதிக நேரம் செலவு செய்ய வேண்டியுள்ளது.

* * * * * *

ஒரு சில நாட்கள், ஏன் ஒரு சில மாதங்கள்கூட, அனுபவத்தைக் கொண்டு மட்டும் நாம் ஒரு முடிவுக்கு வந்துவிட முடியாது என்பதை நீ இப்பொழுது காண்பாய். கணக்குப் போட்டு இவ்வளவு தான் உப்பு சேர்த்துக் கொள்ள வேண்டுமென்று நிர்ணயிக்காதே. அளவு தானாக அமைந்து கொள்ளும். அவ்வப்போது சற்றுக் குறைத்துக்கொள்வது எப்பொழுதுமே நல்லது. பச்சைத் தண்ணீர் உனக்கு ஒத்துக் கொள்ளுமென்றால், இரண்டு மூன்று முறை வேகமாகப் பச்சைத் தண்ணீரில் குளிக்க வேண்டும். மூச்சை உள்ளிழுத்து விடவேண்டும். அதனால் உடம்பு உடனடியாகக் குளிர்ச்சியாகி விடுகிறது. சீட்டி அடிக்கும்போது செய்வது போல், வாயினால் மூச்சை இழுக்க வேண்டும். வெளியிடத்தில் நின்று இதைச் செய்து காற்றைச் சுவாசித்தால், உடல் குளிர்ச்சி அடைவது உடனே தெரியும். பசுமையான கனிகளைச் சாப்பிடுவதில் குறை வைக்காதே. உன்னால் எத்தனை சாப்பிட முடியுமோ, அத்தனை ஆரஞ்சு கனியும், (பழுத்த) தக்காளிகளையும் சாப்பிடு.

நீ அனுப்பியிருந்த செய்தியைக் குருதேவருக்குத் தெரிவிக்க மகாதேவ் மறந்துவிட்டார்; ஆகவே உன் சார்பில் அவர் குருதேவர் பாதங்களைத் தொட்டு வணங்கவும் தவறிவிட்டார். உன் கடிதம் என்னருகே இருந்ததால், நான் குருதேவருக்கு அப்பகுதியைப் படித்துக் காட்டி உன் சார்பில், அவர் பாதங்களைத் தொட்டு வணங்கினேன். அவருக்குத் தர்ம சங்கடமான நிலை.



வில்லெனூவில் (பிரான்ஸ்) வசித்துவந்த ரோமெயின் ரோலண்டை
காந்திஜி காணச் சென்றபோது, மீராபென்னுடன்
காலையில் உலாவும் காட்சி.



ரோமெயின் ரோலண்ட் பங்களாவில் காந்திஜி (டிசம்பர் 6, 1931)

பேச வகையறியாது அவர் வீற்றிருந்தார்; அவர் விழிகளிலே நன்றி யுணர்வு ததும்பியது.

மாசு மருவற்ற பஞ்சுப் பட்டைகளைத் தயாரிப்பதில் நீயும் கிஸனும் ஈடுபட்டிருக்கிறீர்கள் என்றறிய மகிழ்ச்சி. நேர்த்தியாக நூற்பதற்கு அவைதான் முக்கியம். இப்பொழுது மிக எளிதாக 45-வது எண்ணிக்கை நூல் நூற்கின்றேன். நூல் இன்னும் துல்லிய மாகவும் இருக்கக் கூடும். நாளை சோதித்துப் பார்க்கப்படும்.

ஹொரேஸ், எஸ்தர், முரியல் உள்பட எனக்குக் கடிதம் எழுதும் பல நண்பர்கள் உன்னைப் பற்றிக் குறிப்பிடுகிறார்கள். அவர்கள் அன்பை உனக்குத் தெரிவிக்க வேண்டுமென்று கூறுகிறார்கள். இச் செய்திகளைப் பரிமாறுவதில் நான் பழக்கப்பட்டவனல்ல. அழகான கடிதங்கள் எழுதிவரும் இத்தாலியச் சகோதரிகள் பற்றி நான் குறிப்பிடத் தவறக் கூடாது.

உங்கள் இருவருக்கும் என் அன்பு.

எ. ம. பாபு

*6—10—'32*

## 181

*சி. மீரா,*

உன் வாராந்திரக் கடிதம் இன்று வந்து சேர்ந்தது. அங்கு வெப்பநிலை சீராகியுள்ளது என்பதையும், உன் உடல் தேறியுள்ளது என்பதையும் அறிய மகிழ்ச்சி. உன் படிப்பை ஊக்கத்துடன் தொடங்கி விட்டாயா என்று நீ எனக்குச் சொல்லவில்லை. உன் உடல் நலன் இடம் கொடுக்காவிடில், உன்னைப் பயிற்சி பெறுமாறு உந்த விரும்பவில்லை. ஆகவே தகவலை அறிந்து கொள்ள வேண்டு மென்ற ஆசையில் தான் இதைக் கேட்கிறேன். உன் படிப்பில் நீ காணும் முன்னேற்றம் பற்றி நீ வழக்கமாக என்னிடம் கூறுவாயே.

என் எடை கூடாவிடினும், உடல் நலனில் நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. முன்பு ஒரு கம்பை ஊன்றிக் கொண்டு நடந்தேன். இரண்டு நாட்களுக்கு முன் கம்பை விலக்கிவிட்டேன். உடல் எல்லா வகைகளிலும் தெம்பாகவே தோன்றுகிறது. ஆம்; பா என் உணவைக் கவனித்து வருகிறார். இன்னும் பெரும்பாலும் பழமே சாப்பிட்டு வருகிறேன். ஆனல் அந்தப் பழ உணவைத் தயாரிக்க அதிக நேரமும் முயற்சியும் தேவை என்பது தான் உன் அனுபவத்திலிருந்தே உனக்குத் தெரியுமே. அதனல் உனக்கு ஏற்பட்ட கஷ்டத்திலேயே நீ மகிழ்ச்சியும் கண்டாய். பல்வேறு பழங்களைச் சேர்த்துக் கொள்ளும் அளவு ஏறக்குறைய முன் போலவேதான். மணிலாலும் சுசீலாவும் இங்கு வந்துள்ளனர். உண்ணு நோன்பு பற்றிய செய்தியைக் கேட்ட பின், அவர்களால்

வராமல் இருக்க முடியவில்லை.*** தென் ஆப்பிரிக்காவிலிருந்து மிக நேர்த்தியான ஆப்பிள்களும் சான்சிபாரிலிருந்து ஆரஞ்சுகளும் அவன் கொண்டு வந்துள்ளான். அவற்றை அங்கு உனக்கு அனுப்ப முயல்வதில் பலனில்லை.

*** இளவரசி அரிஷ்டார்ஷி பற்றி உனக்கு நினைவிருக்கலாம். அவர் என்னுடன் ஒழுங்காகக் கடிதப் போக்குவரத்து நடத்துகிறார். புனிதச் சின்னங்களின் திருவுருவப் படங்கள் தாங்கிய அழகான அஞ்சல் பட அட்டைகளை அவர் அனுப்புகிறார். அவர் படத்துக்குப் பொருத்தமாக வாசகங்களைத் தேர்ந்தெடுத்து அப் படங்களுக்கு மேலும் அணி செய்கிறார்.

உங்கள் இருவருக்கும் எங்கள் அனைவரிடமிருந்தும், பா உள்பட, அன்பு.

*12-10-'33* பாபு

## 182

சி. மீரா,

உன் கடிதம் இன்று வந்தது. என் உடல் நலனில் தொடர்ந்து முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது. உணவில் மாறுதல் எதுவும் செய்யவில்லை. எடை $99\frac{1}{2}$ பவுண்டுவரை எட்டியுள்ளது. சாதாரணமாக உள்ள உடல் வலிமையை மீண்டும் எய்திவிட்டேன் என்றே எண்ணுகின்றேன்.

உன்னுடைய நடவடிக்கைகளைத் தத்ரூபமாகச் சித்திரித்துக் கிஸனிடமிருந்து நீண்டதோர் கடிதம் எனக்கு வந்தது. அவள் உன்னுடன் இல்லாதது குறித்து நீ வருந்துவதிலும், நீ அவளுடன் இல்லாதது குறித்து அவள் வருந்துவதிலும் வியப்பில்லை. உன்னுடன் இருந்ததால் அவளுக்கு நிறைய நன்மைகள் ஏற்பட்டதாக அவள் கருதுகிறாள்.

குற்றவாளிகள்தான் உன்னுடைய தோழர்கள் என்று நீ குறிப்பிட்டுள்ளாய். குற்றவாளி என்ற சொல்லை நம் அகராதியிலிருந்தே நீக்கிவிட வேண்டும்; அல்லது நாம் அனைவருமே குற்றவாளிகள்தான் என்பதை உணர வேண்டும். "உங்களில் எவர் பாவம் செய்யாமல் இருக்கின்றாரோ அவர் முதலில் கல்லை எடுத்து எறியட்டும்". இவ்வாறு சொன்னபின், பாபம் செய்த வேசி மீது கல் எடுத்து எறிய எவருக்குமே துணிவு வரவில்லை. எல்லோருமே அந்தரங்கத்தில் குற்றவாளிகள்தான் என்று சிறை அதிகாரி ஒருவர் என்னிடம் கூறினார். அவர் பாதி வேடிக்கையாக அதைச் சொன்ன போதிலும், அதில் ஆழ்ந்த உண்மையுள்ளது. ஆகவே அவர்களையும் நல்ல நண்பர்களாகவே நாம் கருத வேண்டும். இவ்வாறு செய்வது, சொல்வதைப்போல அவ்வளவு எளிதல்ல

என்பதை நான் அறிவேன். கீதையும், ஏன், எல்லாச் சமயங்களும் நமக்குப் போதிக்கின்ற உண்மை இதுதான்.

உண்ணு நோன்பின்போது நாங்கள் தனிமையாக இருக்க வேண்டுமென்று கருதி எங்களை வேருெரு கூடத்திற்கு மாற்றினுர்கள் என்பதை உனக்கு நான் சொல்லவில்லையா? நாங்கள் அங்கிருந்து போகும்போது எங்கள் பூனைத் தோழர்களை விட்டுச் சென்ருேம். இப்பொழுது பழைய கூடத்திற்கே திரும்பி எங்களைக் கொண்டு வந்துவிட்டார்கள். எங்கள் நான்கு கால் நண்பர்களுக்கு ஒரே கொண்டாட்டம். கத்திக்கொண்டு எங்களைச் சுற்றிச்சுற்றித் திரிகின்றன. உன் படிப்பைப்பற்றி நீ சொல்வது எனக்கு விளங்குகிறது. நீ நிதானமாகவும் உன் விருப்பப்படியும் பயிற்சியை மேற்கொள். அதனுல் உடம்புக்கோ, உள்ளத்திற்கோ அலுப்பு ஏற்படக்கூடாது.

... ... ... ...

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

எ. ம. பாபு

*19-10-'32*

## 183

சி. மீரா,

உன் கடிதம் தவருமல் ஒழுங்காக வந்து சேருகிறது. திருக்குர்-ஆனில் இன்னும் பல முத்துக்களை நீ கண்டெடுப்பாய். அந்த உபதேசங்களில் சில ஆழ்ந்து ஊடுருபவை............யாருடைய மொழி பெயர்ப்பை நீ படித்துக் கொண்டிருக்கின்ருய்?

என்னுடைய எடையும் உடல் நிலையும் நிதானமாகவே உள்ளன. இரண்டு நாட்களுக்கு ரொட்டி சாப்பிட்டுப் பார்த்தேன். மீண்டும் பழம், பால், ஒரு காய்கறி என்ற உணவுக்கு வந்துவிட்டேன். சுரைக்காய் அல்லது பூசணிக்காய், இதையே மாற்றி மாற்றிக் காய்கறியாக நான் சாப்பிடுகிறேன்; காய்கறியின் மீது பாலை ஊற்றிக் கொள்கின்றேன். சிறைத் தோட்டத்திலே இப்பொழுது இந்த இரண்டு காய்கறிகள்தான் கிடைக்கின்றன. இங்கு பயிராகும் காய்கறிகளை மட்டுமே சாப்பிட நான் முயற்சி செய்து வருகிறேன். இவை உடம்பிற்கும் நன்ருக ஒத்துக் கொள்கின்றன. மீண்டும் மீண்டும் அதே காய்கறியைச் சாப்பிடுவதனுல் எனக்குச் சலிப்பு ஏற்படவில்லை.

வெப்பம் குறையத் தொடங்கியதும் உன் உடல் நலன் தேறி வருகின்றது என்பதைக் காண்கிறேன். இந்த முன்னேற்றம் மேலும் உறுதியாக இருக்குமென்று எதிர்பார்க்கின்றேன்.

7 ஆண்டுகளும்* ஒரு கனவுபோல் கழிந்துவிட்டன. உன்னைப் பயங்கரமாக திட்டியதையெல்லாம் நினைத்துப் பார்க்கும்போது நானே நடுங்குகின்றேன். அந்தத் திட்டுதலுக்கு ஆதாரமாய் இருந்தது அன்புதான் என்று எண்ணிப் பார்த்துக் கூடியவரை நான் ஆறுதல் அடைந்து கொள்கின்றேன். ஆயினும் இதைவிடச் சிறந்த வழியை நான் கையாண்டிருக்க முடியும் என்பதை நான் உணர்கிறேன். என்னுடைய அன்பு பொறுமையிழந்து பதட்டமானது என்பதைச் சென்ற காலத்தை எண்ணிப் பார்க்கும்போது இப்பொழுது உணர்கிறேன். அந்த அளவுக்கு, அது அறியாமையில் தோய்ந்த அன்பாகும். அறிவின் விளக்கம் பெற்ற அன்பு எப்பொழுதும் பொறுமையைப் பேணும். அறியாமை நிறைந்த அன்பு என்பது சமஸ்கிருதத்திலுள்ள 'மோஹ' என்ற சொல்லின் பக்குவமற்ற மொழி பெயர்ப்பாகும். நான் பொறுமையாக இருக்கக் கற்றுக் கொள்ளவேண்டும். சிறிய சிறிய விஷயங்களில் என்னை நானே கவனிக்கும்போது உண்மையான அன்புக்குத் தேவையான அளவு பொறுமை எனக்கு இன்னும் வரவில்லை என்பதை நான் உணர்கின்றேன். அப்பொறுமை வரும்.

ஷாந்தி என்ற சீன இளைஞனை உனக்கு நினைவு இருக்கின்றதா? உண்ணுநோன்பின்போது அவனிடமிருந்து எனக்கு ஒரு தந்தி வந்தது. இப்பொழுது வருத்தம் நிறைந்த கடிதம் ஒன்று அவனிடமிருந்து வந்துள்ளது. பாவம், அவனால் தான் எடுத்துக் கொண்ட நோன்புகளுக்கு உண்மையாக இருக்க முடியவில்லை. ஆகவேதான் நமக்கு எதுவும் தெரிவிக்காமல் இருந்துவிட்டான். இப்பொழுது பல குழந்தைகளுக்கு அவன் தந்தையாய் உள்ளான். சீனாவைப்பற்றி மிகச் சோகமான சித்திரத்தை அவன் தீட்டியுள்ளான். முன்பு தான் செய்த தவறுகளுக்குப் பிராயச்சித்தம் செய்யும் வகையில் இந்தியாவிற்குத் திரும்பி வரவேண்டுமென்று துடிக்கின்றான். அவன் ஆங்கிலத்தில் அடைந்துள்ள முன்னேற்றம் வியக்கத் தக்கது.**

நேற்று தேவதாஸ் இங்கு வந்திருந்தான். அவன் உடல் நிலை இப்போது நன்றாக உள்ளது. பாலும் பழமும் சாப்பிட மாட்டேன் என்று பியாரிலால் பிடிவாதமாக மறுக்கின்றார்; எண்ணெயோடு நிறுத்திக் கொள்கின்றார். பழம்கூட சாப்பிட மாட்டாராம். இவற்றின் விளைவாக அவருக்குத் தொண்டை புண்ணாகியுள்ளது. இவ்வளவு பிடிவாதமாக இருக்கக்கூடாதென்று அவருக்கு புத்திமதி கூறியுள்ளேன்.

... ... ... ...

கிஸன் அங்கிருந்தால் உங்கள் இருவருக்கும் அன்பு.

*26-10-'32* பாபு

இது சிறப்பான மேலுறையில் அனுப்பப்படுகிறது. உனக்கு வந்து சேருமென்று நம்புகிறேன்.

---

* 1925ம் ஆண்டு நான் வந்தது முதற்கொண்டு.

** அவன் சபர்மதியில் என்னுடைய மாணவனாக இருந்தான்.

# 184

சி. மீரா,

உன் கடிதம் நேற்று பிற்பகல் எனக்குக் கிடைத்தது. இப்பொழுது காலை 5-15 மணி; வழிபாட்டை முடித்து விட்டோம். அதன்பின்தான் வெந்நீர், சிறிது சோடா ஆகியவற்றை சாப்பிட்டோம். பிறகு நாங்கள் மூவரும் சேர்ந்து என்னுடைய பழ உணவைத் தயாரித்தோம். இரு சாத்துக்குடிப் பழங்கள்; இவற்றை மகாதேவ் உரித்தார். இரண்டு ஆரஞ்சுப் பழங்கள்; இவற்றை நான் உரித்தேன். மாதுளம் பழம்; இதன் சாற்றை சர்தார் பிழிந்தார். மாதுளைச் சாறுக்கு சிறிது உப்பு சேர்த்து, சாத்துக்குடிப்பழத்தையும் ஆரஞ்சுப் பழத்தையும் நன்ருக மசித்து, அந்தச் சாற்றிலே நான் கலந்தேன். அவர்கள் இருவரும் நடக்கச் சென்ருர்கள். அதன் பின்பு நான் இந்தப் பழக்கூட்டைச் சாப்பிட்டேன். அப்பொழுது மணி 5-15. உடனே இக்கடிதம் எழுதத் தொடங்கினேன். சற்று மாறுதலுக்காகவும், வலது கைக்கு ஓய்வு கொடுப்பதற்காகவும் இடது கையால் எழுதுகின்றேன்.

பழக்கூட்டு பற்றிக் குறிப்பிடும்போது என்னுடைய கண்டுபிடிப்பை உனக்குத் தெரிவிக்கின்றேன். பழத்தைத் தனியாகவும், வேறு எந்த உணவு உட்கொள்வதற்கு முன்பும் சாப்பிட்டால்தான் அதிகப் பலன் ஏற்படும். சாறு நிறைந்த பழங்களைச் சாப்பிடுவதற்கு உள்ள விதி, மருந்துகளைச் சாப்பிடுவதற்குள்ள விதியைப் போன்றது என்று கூடச் சொல்லலாம். உண்மையில் எல்லா உணவையும் மருந்துபோல் சாப்பிட வேண்டும். உணவு, மருந்து இவை இரண்டையும் சமஸ்கிருதத்தில் 'ஔஷத' என்ற ஒரே வார்த்தைதான் குறிக்கின்றது. இதை உனக்கு கிஸன் இன்னும் விரிவாக விளக்குவாள். மருந்து என்ருல் அது கசப்பாக இருக்க வேண்டுமென்று அவசியமில்லை. அதே சமயத்தில் ருசிக்காகச் சாப்பிடுவதும் அல்ல அது. அதே போல்தான் உணவையும் நாம் மதிக்க வேண்டும். தகுந்த உணவை, தகுந்த அளவில், தகுந்த வகையில், தகுந்த வேளைகளில் சாப்பிட வேண்டும். இக்கட்டத்தில் கடிதம் எழுதுவதை நிறுத்தி விட்டு நான் காலையில் உலாவச் சென்றேன் திரும்பி வந்து இப்பொழுது 6-45 மணிக்கு மீண்டும் தொடர்ந்து எழுதுகின்றேன்.

நபிகள் நாயகம் வாழ்க்கையைப் பற்றிப் பல புத்தகங்கள் வெளியாகியுள்ளன. இவற்றில் சிறந்தது அமீர் அலி எழுதிய 'இஸ்லாம் சமய உணர்வு' என்ற நூல்தான். 'முகமது நபியும் அவர் சீடர்களும்' என்ற தலைப்பில் வாஷிங்டன் இர்விங் எழுதியுள்ள நூலும் மிக நல்ல முறையில் எழுதப்பட்டுள்ளது. 'வீரர் முகமது' என்று கார்லைல் எழுதிய புத்தகமும் படிக்கப் பயன் தரும்.

உன்னுடன் கிஸன் இருக்கிருள் என்பது குறித்து மகிழ்கின்றேன். உன்னுடன் பழகுவதால் அவள் அதிகப் பலன் பெற்று,

அவளுடன் பழகுவதால் நீயும் அதிகப் பலன் பெறவேண்டும். அவள் எழுதியிருந்த கடிதத்திற்கு நான் அனுப்பிய பதில் அவளுக்குக் கிடைத்ததோ என்னவோ. அவள் கொடுத்த முகவரிக்குத்தான் அனுப்பினேன். அவளுக்குக் கிடைத்தாலும் சரி, கிடைக்காவிட்டாலும் சரி, எவ்வளவுதான் அவசரத்தில் எழுதினாலும், கையெழுத்து மோசமாக இருக்கக்கூடாதென்று அவளிடம் கூறு. என்னுடைய துரதிர்ஷ்டத்திலிருந்து ஒவ்வொருவரும் உணர்ந்துகொள்ள வேண்டிய படிப்பினை இதுதான். மோசமான எதையும் போல், மோசமான கையெழுத்தும் உண்மையில் இம்சையாகும். பொறுமையின் பெருமையை உணரச் சிறை வாழ்வில் அரியதொரு வாய்ப்பு நமக்குக் கிடைக்கிறது............

அமீர் அலியின் புத்தகத்தைப் பதிவு அஞ்சலில் அனுப்பியுள்ளேன். அதைப் படித்து முடித்ததும் ரெஹனாவுக்கு அஞ்சலில் அனுப்பிவிடு. தயாப்ஜி குடும்பத்திற்குச்சொந்தமான புத்தகம் அது.

எங்கள் அனைவரிடமிருந்தும் உனக்கும், கிஸனுக்கும் அன்பு.

பாபு

*3—11—'32*

## 185

சி. மீரா,

வழக்கம் போல் உன் கடிதம் கிடைத்தது.

உன் எடை ஒரு பவுண்டு குறைந்துள்ளது. இதற்கு மாறாக என் எடை மூன்று பவுண்டு கூடியுள்ளது; இன்று என் எடை ஏறக்குறைய 102 பவுண்டு ஆக இருக்கிறது. அதிகப் பால் சாப்பிட முடிவதால் இவ்வாறு ஏற்பட்டுள்ளது. பாலில் ஒரு பகுதியை, பால் கட்டி போல நான் மாற்றிக் கொண்டு ரொட்டியுடன் சேர்த்து சாப்பிடுகிறேன். எவ்வளவு நாட்கள் நான் பால் உணவைப் பிரியமாகச் சாப்பிட முடியுமென்பது எனக்குத் தெரியாது.

உன் மலச்சிக்கலை உடனடியாகப் போக்கிவிட வேண்டும். இதற்கு நல்ல வழி, காலி வயிற்றில் பழம் சாப்பிடுவதுதான். அதன் பின்பும் 2, 3 மணி நேரத்திற்கு வேறு உணவு எதுவும் சாப்பிடக் கூடாது. மலச்சிக்கல் இருக்கும்போது ரொட்டி, பால் போன்ற புரதச் சத்துள்ள உணவுகளைத் தவிர்க்கவேண்டும். பச்சைக் காய்கறிகளைச் சமைத்தோ, பழத்தோடு சேர்த்தோ சாப்பிடவேண்டும். உண்ணா நோன்புக்குப் பின்பு அப்படித்தான் உடலை நான் தேற்றினேன். ஊட்டமில்லாத, கொழுப்பு சத்தில்லாத, மாவு சத்தில்லாத இதைப்போன்ற உணவைச் சாப்பிட்டுத்தான், அண்மையில் வல்லபபாய் தமக்கிருந்த மலச்சிக்கல், மாந்தநிலை, தொண்டைப் புகைச்சல் முதலியவைகளைப் போக்கிக்கொண்டார். இந்த உணவினால் எடையும் குறைவதில்லை. உலர்ந்த

பழத்தையும் சாப்பிடலாம். உலர்ந்த பழத்தையும், பசுமையான பழத்தையும் கலந்து சாப்பிடுவது நல்லதல்ல. ஆகவே ஒருவர் நான்கு வேளை உணவு அருந்தலாம். ஒரு வேளை மாதுளை, சாத்துக்குடி; இரண்டாம் வேளை 'தூதி', தக்காளி போன்ற காய்கறிகள்; மூன்றும் வேளை காய்ந்த அத்திப்பழம் அல்லது பேரீச்சம் பழம் அல்லது உலர் திராட்சை. இவற்றை முந்தைய நாள் இரவே நீரில் ஊற வைத்துச் சூடாகவோ குளிராகவோ சாப்பிடலாம்; நான்காவது வேளை உணவுக்கு அதே காய்கறியைச் சாப்பிடலாம்; அல்லது பூசணியோடு சிறிது எலுமிச்சை பிழிந்து சாப்பிடலாம். அல்லது தக்காளிகளை மீண்டும் சாப்பிடலாம். அல்லது, கீரை, தக்காளி, சீவிய காரட்கள் ஆகியவற்றைக் கொண்டு பச்சடி செய்து சாப்பிடலாம். இந்த உணவைத் தொடர்ந்து ஒரு சில நாட்கள் சாப்பிட்டு வந்தால் எவ்வளவு கடுமையான மலச்சிக்கலையும் போக்கிவிடலாம். சில சமயங்களில் ரொட்டியையும், பாலையும் தவிர்த்து விட்டால் கூட பலன் ஏற்பட்டு விடும். ரொட்டி என்னும் போது முழுக் கோதுமையால் செய்த ரொட்டியைக் குறிப்பிடுகின்றாய் என்று நினைக்கிறேன். சப்பாத்தி என்று சொல்லும் போது சலிக்காத முழுக் கோதுமை மாவினால் செய்யப்பட்டதாக இருக்க வேண்டும். கோதுமையை அரைப்பதற்கு முன்பு நன்கு சுத்தமாக்க வேண்டும். கோதுமையினால் முழுப் பலனையும் பெற வேண்டுமென்றால் தவிடு முழுவதும் அதில் தங்கியிருக்க வேண்டும். உனக்கு உதவியாக இருக்குமென்று எண்ணித்தான் இவற்றைக் குறிப்பிடுகின்றேன். ஆனால் உன் அனுபவத்தைக் கொண்டு இவை சரிதானா என்று பார்த்துக்கொள்.

ஆம், நான் என்னுடைய முழு நேரத்தையும் தீண்டாமையை விலக்கும் தொண்டில் ஈடுபடுத்தி உள்ளேன். ஒரு நிலையில் வேலை செய்யும்போது இன்னமும் கையில் வலி ஏற்படுகின்றது. என்னுடைய கடிதங்களில் பெரும்பாலானவற்றை இப்பொழுது நான் சொல்லி மற்றவர்களை எழுத வைக்கின்றேன். நான் எழுதும் ஒரு சில கடிதங்களை மாறி மாறி இடது கையாலும், வலது கையாலும் எழுதுகின்றேன். இவ்வாறு செய்து நிலைமையை இப்பொழுது சமாளித்துக் கொள்ள முடிகிறது. தற்போது நூற்பதை 200 சுற்றுக்களிலிருந்து 100 சுற்றுக்களாகக் குறைத்துள்ளேன். முட்டியில் வலி ஏற்பட்டுள்ளது குறித்து கவலை கொள்வதற்கு சிறிதும் இடமில்லை. முட்டிகளுக்கு ஓய்வு தேவையே யொழிய வேறு எதுவுமில்லை. உடல் வலிமை மீண்டும் கூடி, சதையும் வைத்து விட்டால் வலி அநேகமாக மறைந்து விடும்.

கிஸன் இன்னும் உன்னுடன் இருக்கின்றாள் என்பது குறித்து மகிழ்கின்றேன். உனக்குச் சரியான உச்சரிப்பைச் சொல்லித் தரும்படி அவளிடம் சொல்.

நாங்கள் அனைவரும் நலமாக உள்ளோம். உங்கள் இருவருக்கும் எங்கள் அனைவருடைய அன்பும்.

*9—11—'32* பாபு

* * *

# 186

சி. மீரா,

என் வலது கையைப் பயன்படுத்த முடியாது என்பதில்லை; இடது கையைப் பயன்படுத்துவது அதைவிட நல்லது என்ற எண்ணத்தில் எழுதுகிறேன். காலை வழிபாட்டுக்கு முன், எங்கள் சிறு குடும்பம் ஒன்ருகக் கூடுவதற்கு முன்னுள்ள ஒரு சில நிமிட அவகாசத்தைப் பயன்படுத்தி, இதை எழுதுகின்றேன். வழக்கத்தை விட என் கடிதங்கள் சுருக்கமாக இருந்தால் நீ வியப்படையக் கூடாது. ஹரிஜன் வேலை மிக அதிகமாகி விட்டதால், வேறெதற்கும் அவகாசம் கிடைக்கவில்லை. வந்து குவிகின்ற கடிதங்களைப் படிக்கவே இரண்டு மணி நேரத்திற்கு மேலாகிறது. (இதோ மகாதேவ் வந்துவிட்டார்.) (வழிபாட்டுக்குப் பின் தொடர்ந்து எழுதுகிறேன்.) பேட்டிகள் இரண்டு, மூன்று மணி நேரம் பிடிக்கின்றன. ஆகவே நான் மற்ற வேலையைக் குறைத்துக் கொள்ள வேண்டும். கைமுட்டிகளில் கோளாறு ஒன்றுமில்லையென்றும், நூற்பில் ஏற்படும் அசைவிலிருந்து அவற்றிற்கு ஓய்வு வேண்டுமென்றும், மருத்துவர் கண்டிப்பாகக் கூறுவதால், இராட்டினத்தில் நூற்பதை அடியோடு நிறுத்திவிட்டுச் சுமார் அரை மணிநேரத்திற்குத் தக்ளியில் மட்டும் நூற்கின்றேன். தக்ளியில் நூற்பதில் மற்றத் தசைகள்தான் பயன்படுகின்றன. சந்தர்ப்பங்களின் நிர்ப்பந்தத்திறல் இவ்வாறு கிடைத்துள்ள ஓய்வு, மிகவும் தேவையான நேரத்தில் தான் கிட்டியுள்ளது. (இக்கட்டத்திலும் கடிதத்தை நிறுத்தி விட்டு பானம் பருகுவதற்கும் பழங்களைத் தயார் செய்வதற்கும் சாப்பிடுவதற்கும் சற்று நேரம் எடுத்துக் கொண்டேன்.)

உப்பை நீ விலக்கியது குறித்து நான் வருந்தவில்லை. அதை விலக்குவதால் உண்டாகும் நன்மை தீர்ந்தபின், அதை மீண்டும் சேர்த்துக் கொள். சோளச் சப்பாத்தி அல்லது கம்புச் சப்பாத்தி உனக்கு ஒத்துக் கொள்ளுமா என்பது எனக்குத் தெரியவில்லை. முழுக் கோதுமையைச் சிறையில் அரைத்து மாவு தயாரிப்பதில்லையா? எவ்வாருயினும் சோள அல்லது கம்புச் சப்பாத்தி ஒன்று சாப்பிடுவதால், தீங்கு எதுவும் ஏற்படாது. உலர்கனிகளையும் பசுமையான பழங்களையும் தாராளமாகச் சேர்த்தால், உடல் நலன் சிறப்பாக அமையும்.

* * *

என்னைப் பொறுத்தவரை, மேலும் முன்னேற்றம் பற்றிய செய்தி உண்டு. இன்னும் ½ பவுண்டு கூடி, இப்பொழுது என் எடை 103½ பவுண்டாக உள்ளது. உணவுமுறையில் மாறுதலைப் பற்றிய கண்டுபிடிப்பினுல் இது ஏற்பட்டது என்பது என் எண்ணம். தீண்டாமைத் தொண்டை மேற்கொண்டுள்ள நேரத்தில் எடை கூடியுள்ளது. ஆனல் எடை கூடியதற்கும் இதற்கும் சற்றும் தொடர்பு இல்லை. பசுமையான பாலை வற்றக் காய்ச்சி ஏறக்குறைய ஓர் அவுன்சு சாப்பிட்டு வருகிறேன். இது 'மாவோ'

என்று மராத்தியிலும் குஜராத்தியிலும் கூறப்படுகிறது. நீரை ஆவியாக்கி அகற்றிவிடவேண்டும். அது சாதாரணமாய்க் கனமான உணவாக இருக்கும். ஆனல் என்னைப் பொறுத்தவரை, இது வரப்பிரசாதமாய் வந்துள்ளதுபோல் தோன்றுகிறது. அதன் பலன் பற்றித் தீர்ப்புக்கூற இது நேரமல்ல. ஆனல் இப்பொழுது எடையில் ஏற்பட்டுள்ள உயர்வுக்கு இதுதான் காரணம் என்பதில் ஐயமில்லை.

* * *

நாங்கள் அனைவரும் நலம். உங்கள் இருவருக்கும் வண்டி நிறைய அன்பு.

*17-11-'32* பாபு

இப்பொழுது காலை *5-30* மணிக்கு மேலாகிவிட்டது. இப்பொழுது நான் "நூல் நிலைய"த்துக்குச் சென்றுவிட்டு, சுமார் ஆறரை மணிக்கு ஆடுகள் வரும்வரை, நடக்கச் செல்ல வேண்டும்.

# 187

சி. மீரா,

மீண்டும் காலை வழிபாட்டுக்கு முன், மகாதேவுக்காகக் காத்திருக்கும் நேரத்தில் இதை எழுதுகிறேன்.

இப்பொழுது கிஸன் உன்னுடன் இல்லை என்றறிகின்றேன். பல்வேறு அனுபவங்கள் உனக்கு ஏற்பட்டு வருகின்றன.

அண்மையில் கிடைக்கப் பெற்ற புத்த சமயம்பற்றிய நூல் ஒன்றை உனக்கு அனுப்புகின்றேன். அது சுவை மிக்கதாய் இருக்கும். அதை நீ எனக்குத் திருப்பி அனுப்புகையில், அது நன்ருக எழுதப்பட்டுள்ளதா என்று கூறு. அதைப் புரட்டிப் பார்ப்பதாக நான் ஆசிரியரிடம் உறுதி கூறினேன். ஆனல் அதைத் திருப்பி அனுப்ப அவசரம் ஒன்றுமில்லை. இன்னும் இரு வாரங்களுக்கும் மேலாகவே, நான் புதிதாக எதையும் தொடுவதற்கில்லை.

சலிக்காத கோதுமை பற்றி நீ கூறியதைக் குறித்துக் கொண்டேன். உன் அனுபவத்தை ஆசிரம வாசிகளுக்குத் தெரியப் படுத்துவேன்.

விரைவில் முற்றிலும் குணமடையும் வகையில் என்ன மாறுதல் செய்ய விரும்புகிருயோ, அதைச் செய். நேற்று என் எடை *103* பவுண்டு எனக் குறிக்கப்பட்டது. அத்துடன் நிறுத்திக் கொள்வேன் என்று நினைக்கின்றேன். வற்றிய பாலை நான் மேலும் அதிகம் சாப்பிடப் போவதில்லை. வேலைப் பளு அதிகமாகி வருவதால், எடை இனியும் கூடுவதற்கு இடமில்லை. ஆனல் *103* எனக்கு நல்ல எடையாகும். கை முட்டிகள் இன்னமும் ஒழுங்காக

இல்லை. ஒரு வாரத்திற்கு நூற்பதை அடியோடு நிறுத்த வேண்டு மென்று டாக்டர் விரும்புகிறார். நானும் இசைந்துள்ளேன். நூற்பதினால் ஏற்படும் அலுப்பினாலும் நலிவினாலும்தான் இந்த வலி ஏற்பட்டுள்ளதென்று அவர் நிச்சயமாக நம்புகிறார். ஆகவே ஓய்வு நன்மை அளிக்கும் என்று கருதுகிறார். அடுத்த புதன்கிழமைவரை ஓய்வெடுத்துப் பார்க்கப் போகிறேன்.

நல்ல குளிர் தொடங்கிவிட்டதுபோல் தோன்றுகிறது.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

எ. ம. சி. பாபு

*24-11-'32*

# 188

*திருத்தப்படாதது*

சி. மீரா,

இன்று மீண்டும் வியாழக்கிழமை. இன்னும் காலை 4 மணி ஆகவில்லை. உன்னை அவசரப்படுத்தக் கூடாதென்பதற்காக, மகா தேவ் மெதுவாக வருகிறார்.* எனக்கு எவரும் சொல்லியிருந்தால் ஒழிய, உனக்கு 40 வயதாகிவிட்டது என்று நான் உன்னைப் பார்த்து அறிந்திருக்க முடியாது. நீ ஓராண்டுக் குழந்தையாய் இருந்தபோதைவிட, இப்பொழுது குறைந்தது 40 மடங்காகிலும் உனக்கு விவேகம் வளர்ந்திருக்கிறது என்று எதிர்பார்ப்போமாக. கணத்துக்குக் கணம் நாம் விவேகத்தில் வளர்ந்தால், வளர்ச்சி அளவிடற்கரியது என்பது மட்டுமல்ல, எல்லையற்ற நிலையையே எய்திவிடும். உன்னைப் பொறுத்தவரை, விவேகத்தின் வளர்ச்சி எல்லையற்றதாக இருக்கட்டும்.

உன் உடல் நலனைக் கருதி, நான் புதிதாக அறிந்துள்ள உண்மைகளை உன்னுடன் பகிர்ந்துகொண்டுள்ளேன். உனக்கு எது நல்லது என்று இப்பொழுது நீயே கண்டுகொள்ள வேண்டும். உன் உணவோடு சிறிது பச்சைக் காய் பச்சடி, கீரை, பழுத்த தக்காளி, ஏதாவது காய்கறியின் பசுமையான இலைகள் ஆகியவற்றைச் சேர்த்துக்கொள். இது குடல் சுத்தத்துக்கு மிகவும் நல்லது. ஆனால் உனக்கு நல்லது எதுவென்று நீயே கண்டறிய வேண்டும்.

* * * *

உன் கால அட்டவணையைப் படிக்கும்போது, உனக்கு ஓய்வு சிறிதும் இல்லாததுபோல் தோன்றுகிறது. பொழுதுபோக்குக்கும் ஓய்வுக்கும் நீ இன்னும் சிறிது நேரம் ஒதுக்கியிருக்க வேண்டும்.

---

* எனக்குப் பாபு எழுதிக்கொண்டிருந்த கடிதத்தை அவசரப்படுத்தக் கூடாதென்ற கவலையில்.

உன்னிடமே நீ கடுமையாக நடந்துகொள்ள வேண்டியதில்லை. ஓயாத அலுப்பு உணர்ச்சி ஏற்படாமல், எப்பொழுதும் ஊக்கத்துடனும் பசுமையுடனும் இருக்க வேண்டும். உனக்குப் போதிய தூக்கம் கிடைக்கின்றதா? ஏக்கத்தில் ஆழ்ந்திருப்பது நல்லதல்ல.

என்னைப் பொறுத்தவரை, அபூர்வமான ஒரு மாறுதல் ஏற்பட்டுள்ளது. *103*ஆக இருந்த என் எடை *106*க்குத் திடீரெனத் தாவியது. காய்ந்த பாலைத் தொடர்ந்து சாப்பிடுகிறேன். ஆனல் இந்த அளவுக்கு உடலாற்றலில் உயர்வோ, கைமுட்டிகள் வலியில் குறைவோ ஏற்படவில்லை. நூற்பதை நிறுத்தியும்கூட, இன்னும் அதனல் வேறுபாடு தெரியவில்லை. ஆகவே எடை கூடியதால், கலப்பற்ற நன்மை என்று சொல்லமுடியாது. இந்தத் திடீர்த் திருப்பத்தை நான் எச்சரிக்கையாகக் கவனித்து வருகிறேன்.

படிப்பு அனைத்தும் தற்காலிகமாக நிறுத்தப்பட்டுள்ளது. கடிதப் போக்குவரத்து, பேட்டிகள் ஆகியவற்றையே கவனித்து வருகிறேன். தம்முடன் வேலாபென், பால் ஆகியோரை அழைத்துக்கொண்டு, பா தெற்கே சென்றுள்ளாள்.[2] ஊர்மிளா தேவியும் அங்கு அனுப்பப்பட்டுள்ளாள். இப்பொழுது தங்கள் சமயத்தைப்பற்றி இந்துக்கள் சிந்திப்பதுபோல், வேறெப்பொழுதும் சிந்தித்ததில்லை என்பதில் ஐயமில்லை.

இப்பொழுது நான் எழுதுவதை நிறுத்தவேண்டும். காலை *5-30* மணிக்கு மேலாகிவிட்டது. நான் ''நூல் நிலைய''த்துக்குச் சென்றுவிட்டு, நடக்கச் செல்லவேண்டும்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

எ. ம. பாபு

*1-12-32*

புத்த சமயம் பற்றிய புத்தகம் உனக்கு வந்து சேர்ந்ததென்று எண்ணுகிறேன்.

## 189

(தந்தி)

இறைவனே நமக்குள்ள ஒரே துணை. உண்ணு நோன்பு சனிக்கிழமை தொடங்கியது. நேற்று முடிந்தது. இன்று காலை பால் சாப்பிட்டேன். கவலைக்குச் சிறிதும் இடமில்லை

அன்பு,

எ. ம. பாபு

*5—12—'32*

---

2. பாவும் மற்றவர்களும் தென்னிந்தியாவிற்கு அரிசனத் தொண்டு செய்யச் சென்றிருந்தனர்.

## 190

அஞ்சலட்டை

சி. மீரா,

சனிக்கிழமை தொடங்கி, ஞாயிறு பிற்பகல் ஒரு மணிக்கு முடிந்த சிறு உண்ணாவிரதம் பற்றி நீ பதறக் கூடாது. உத்தம ஊழியர் அப்பா சாகிப்புக்கு* ஆதரவாக அதை மேற்கொண்டேன்? அவரைப் பற்றி உனக்கு நினைவிருக்கிறதா? நேற்று பழம் மட்டுமே சாப்பிட்டேன்; இன்று காலை பால் சாப்பிட்டேன்.

அன்பு,

5-12-'32 பாபு

## 191

சி. மீரா,

உன் வாராந்திரக் கடிதம் கிடைத்தது. உண்ணா நோன்பு பற்றி நான் அனுப்பிய தந்தியும் அஞ்சலட்டையும் உனக்குக் கிடைத்திருக்கும்.

மேலேயுள்ளதை நேற்றிரவு எழுதினேன். இன்று காலை 5 மணி. வழிபாடு முடிந்துவிட்டது. பானம் பருகி, ஆரஞ்சுகளும் சாப்பிட்டாயிற்று. 6 பவுண்டு இழந்தது, ஒரே நாளில் அல்ல; நான்கு நாட்களில். அதில் 2 பவுண்டு மீண்டும் பெற்றுவிட்டேன். எடையில் சில பவுண்டுகளை எவ்வளவு வேகமாக இழக்க முடியுமோ, அவ்வளவு எளிதில் என்னால் கூட்டவும் முடியும் என்று இதிலிருந்து தெரிகிறது. இதையே வேறு வகையில் சொன்னால், இந்த எடை, நான் அவ்வப்போது சாப்பிடும் உணவினாலும் நீரினாலும் மேல்வாரியாகக் கூடுகின்ற எடை. உண்ணா நோன்பு 44 மணிநேரமே நீடித்தது. அதனால் நிலையான தீங்கு எதுவும் ஏற்பட முடியாது. சென்ற உண்ணாவிரதத்தின் போது இழந்த தசையை நான் மீண்டும் புதுப்பித்திருக்க முடியாதென்று நீ சொல்வது சரியானதே.

ஆனால் உண்ணா நோன்பு, என் வாழ்க்கையில் பழக்கமான ஓரம்சமாகி விட்டது. அவ்வப்போது உட்கொள்ளும் ஆன்மிக மருந்து அது; அந்தச் சிகிச்சையில் குணமாகும் நோய்கள் சில உண்டு. அந்த சிகிச்சையை மேற்கொள்ளும் பக்குவம் உடனடியாக எல்லோருக்கும் வந்துவிடாது. எனக்கு அப்பக்குவம் வந்துள்ளதென்றால், நீண்ட காலப் பயிற்சிக்குப் பின் பெற்றது அது.

---

* அப்பொழுது கைதியாகவிருந்த அப்பாசாகிப் பட்டவர்தன், சிறையில் தோட்டி வேலை செய்ய அதிகாரிகள் தம்மை அனுமதிக்க வேண்டுமென்று கேட்டிருந்தார். அவர் அந்தணர், தோட்டியல்ல என்ற காரணத்தைச் சொல்லி, அதிகாரிகள் அவர் வேண்டுகோளுக்கு இணங்கவில்லை. ஆகவே அவர் உண்ணா நோன்பு மேற்கொண்டார். அதைக் கேள்விப்பட்ட பாபு அனுதாப உண்ணா நோன்பு தொடங்கினர். மறுநாள் அதிகாரிகள் இணங்கி விட்டனர்.

என் உண்ணு நோன்பு பற்றிய செய்திகளைக் கேட்டு, என் சக ஊழியர்கள் பதட்டமடையக்கூடாது; ஒரு சிறிதும் நிதானம் தவறக் கூடாது. என் தூய்மையிலும் அறிவுத் தெளிவிலும் அவர்களுக்கு நம்பிக்கை இருந்தால், அவர்கள் அது குறித்து மகிழ்ச்சி கொள்ள வேண்டும். ஆன்மிக சாதனை எதுவும் போலவே, இதனால் நம் அனைவருக்கும் உலகம் முழுவதற்கும் நன்மையே ஏற்படும். நம் இதயத்தைச் சோதித்துச் சுத்தப்படுத்தித் தூய்மை நிலை அடைய நம் அனைவருக்கும் அது துணை செய்ய வேண்டும்.

சாதாரண துணை உனக்கு மீண்டும் ஓரளவு கிடைத்துள்ளது குறித்து மகிழ்ச்சி.

உடனடியாக உப்பைத் தவிர்க்கும் முயற்சியை நான் மேற்கொள்ள விரும்பவில்லை. கை முட்டிகளைக் கவனித்து வருகிறேன். அதனால் தொந்தரவு எதுவுமில்லை. நூற்பதை நிறுத்தி வைத்திருப்பது பெரும் குறையாக உள்ளது. ஆனால் தற்போதைக்கு அதைத் தாங்கிக் கொள்ளத்தான் வேண்டும்.

மணிலாலும் அவன் மனைவியும் அடுத்த வாரம் தென்னாப்பிரிக்காவிற்குப் புறப்படுகிறார்கள். அங்கு அவர்கள் செல்ல வேண்டிய அவசியம் ஏற்பட்டுள்ளது. என் உண்ணு நோன்பு போன்றவற்றால், அவர்கள் கடமையிலிருந்து அவர்கள் கவனத்தைத் திருப்பிக் கலைக்கக் கூடாது. ** ***

பா, ஊர்மிளா தேவி ஆகியோர் தெற்கில் நல்ல தொண்டாற்றி வருகின்றனர்.

இப்பொழுது நான் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*8-12-'32*

## 192

*சி. மீரா,*

உன் கடிதம் உரிய நேரத்தில் வந்தது. இப்பொழுது காலை சுமார் 4-20 மணியாகியுள்ளது. காலை வழிபாட்டை முடித்து விட்டோம். சகன்லால் ஜோஷியுடன் சேர்த்து இப்பொழுது நாங்கள் நான்கு பேர்; பூனைக் குடும்பத்தினரையும் சேர்த்துக் கொண்டால் எங்கள் குடும்பத்தில் ஏழு பேர். ஆனால் பூனைக் குடும்பத்தினர் பிரார்த்தனைக்கு வருவதில்லை. உணவு வேளையில் மட்டும் தான் அவர்கள் எங்களுடன் உறவு கொள்கின்றார்கள்.

சகன்லால் வந்ததற்குப் பின்பு வேலை துரிதமாக முடிகின்றது. ஆனால் நான் வேலை செய்யும் நேரம் குறையவில்லை. அது குறையும் என்று எதிர்பார்க்கவுமில்லை. என் கவனத்திற்கு உரியவற்றை நானே தான் தொடர்ந்து கவனிக்க வேண்டியுள்ளது. ஜனவரி 2ம் தேதி வரையிலாவது இந்த வேலை நெருக்கடி தொடரும்.

அறிவின் ஆணைப்படி நடக்கவும், அறிவோடு ஒத்துழைக்கவும், இதயம் மறுப்பதற்குத் துணையாக இருப்பது எது? விசுவாசமின்மை அதற்குக் காரணமாகும். இதைப்பற்றி நான் இறுதியான முடிவுக்கு வரவில்லை என்றாலும், இப்போக்கில்தான் என் எண்ணம் அமைந்துள்ளது. என்னிடம் அன்பிருந்தால் பாம்பிடமிருந்து கூட ஒதுங்க வேண்டிய அவசியமில்லை என்று அறிவு கூறுகின்ற போதிலும், பாம்புடன் நான் பழக மறுப்பதன் காரணம், எனக்கு நம்பிக்கை குறைவாக உள்ளதுதான். இதைப் போன்று இன்னும் பல எடுத்துக்காட்டுக்களைக் கூறலாம். இது குறித்து நீ மேலும் ஆராய்ச்சி செய்ய வேண்டும். உனக்குத் தெரிந்தவரை, அறிவிற்கும் இதயத்திற்குமிடையே ஏற்படும் போராட்டங்களை ஆராய்ந்து அவற்றுக்கான காரணங்களைக் கண்டு பிடிக்க முயல வேண்டும். அவ்வாறு செய்வதன் மூலம் அறிவுடன் இதயம் ஒத்துழைப்பதற்கு உன்னால் வழி வகுக்கக்கூடும். நாம் உண்ணா நோன்பு இருப்பது, எனக்கும் மற்றவர்களுக்கும் நல்லது என்றால், அது குறித்து மகிழ்ச்சியடைய இதயம் ஏன் மறுக்க வேண்டும்? என் உடல் நலன் நன்றாக இருந்தால் இதயத்திற்கு மகிழ்ச்சி ஏற்படுகின்றது. சில சந்தர்ப்பங்களில் உடல் நலன் நன்றாய் இருப்பதைவிட நான் உண்ணா நோன்பு இருப்பது சிறந்தது என்ற நிலைமை உருவாகலாம். அறிவு அவ்வாறு கூறுகின்றது. ஆனால் அறிவின் துணிவான தீர்ப்பை இதயம் நிராகரிக்கிறது. நம்பிக்கையில்லாத காரணத்தால் அவ்வாறு செய்கிறதா, அல்லது தன்னைத்தானே ஏமாற்றிக் கொள்ளும் நிலை ஏற்பட்டுள்ளதா? உடல் நிலையைக் கட்டுப்படுத்துதல் அவசியமென்பதை அறிவு உணர்ந்துள்ளதைப் போலவே உண்ணா நோன்பு இருப்பது அவசியமென்பதை அறிவு உணரத் தவறி விட்டதா? நான் இப்பிரச்னையை உன் முன் வைக்கின்றேனேயொழிய, அதற்குத் தீர்வு காண முயலவில்லை. நானே தீர்வு காண வேண்டுமென்று விரும்பினால் கூட, அதற்கு ஆதாரமாகப் புதிய தகவல்கள் என்னிடமில்லை. தற்போதைக்காகிலும் இப்பிரச்னையை நான் இத்துடன் விடவேண்டும்.

என்னுடைய எடை இப்பொழுது 103 பவுண்டு. பாலின் அளவைக் குறைத்துள்ளேன்; ரொட்டியை விலக்கிவிட்டேன். 8 ஆரஞ்சுகள் சாப்பிடுவதற்குப் பதிலாக 16 ஆரஞ்சுகள் சாப்பிட்டு வருகிறேன். தற்போதைக்குப் பேரீச்சம் பழங்களைத் தவிர்த்து விட்டேன். பாலைப் பொறுத்தவரை ஒரு பவுண்டு தான் சாப்பிடுகிறேன். போகப் போக இந்த அளவை அதிகரிக்க உத்தேசித்துள்ளேன்.

* * *

'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகை என்னுடைய அறிக்கைகளின் முழு வாசகத்தையும் வெளியிட வேண்டுமென்று நான் எதிர்பார்ப்பதில் பலன் இல்லை. அந்த அறிக்கைகளின் படியை உனக்கு அனுப்ப ஏற்பாடு செய்கின்றேன். நீ அவற்றைப் பெறுவதில் தடை எதுவுமிருக்க முடியாது; உனக்கு அனுமதிக்கப்படும் பத்திரிகைகளிலே அந்த அறிக்கைகள் வெளியாகியிருக்கும்.

பா, தனது சுற்றுப் பயணத்தை 16ம் தேதி முடித்துக்கொண்டு புனைவிற்குத் திரும்புவார் என்று எதிர்பார்க்கப்படுகிறது....... .........நாங்கள் அனைவரும் நலமாக உள்ளோம்............

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.

*15-12-'32*

ஏழாவது அறிக்கையும், எட்டாவது அறிக்கையும் தவிர, முதல் ஒன்பது அறிக்கைகளை நான் அனுப்பியுள்ளேன். இவற்றில் நான் கண்டு பிடிக்க வேண்டியது....................

(சிறை அதிகாரிகளால் இப்பகுதி நீக்கப்பட்டது.)

## 193

சி. மீரா,

உன் வழக்கமான கடிதம் வழக்கமான நேரத்தில் வந்தது. ஆனால் நீ படிக்கும் புத்தகத்திலிருந்து குறிப்புகள் அக்கடிதத்துடன் இல்லை. முதன்முறையாக உன்னுடைய கடிதத்தில் சில பகுதிகள் நீக்கப்பட்டு இருந்தன. நானும், நீயும் கைதிகள் என்பதை நினைவுபடுத்துவதற்கு அவ்வாறு செய்யப்பட்டது போலும். ஆனால் அதை நானோ, நீயோ பொருட்படுத்த வேண்டியதில்லை. எதையும் எதிர்பாராதவர்கள், எதிலும் ஏமாற்றம் அடைய மாட்டார்கள்.

நம்முடைய அச்சங்கள் ஆண்டவனிடம் நம்பிக்கைக் குறைவால் ஏற்பட்டவையல்ல என்றும், நம்மிடமே நம்பிக்கைக் குறைவின் காரணமாக ஏற்பட்டவை தான் என்று நீ கூறுகின்றாய். ஆனால் இவை யிரண்டும் உண்மையில் ஒன்று தானே? ஆண்டவனிடம் நம்பிக்கை குறைவதால் தான், தன்னம்பிக்கை குறைகின்றது. ஆண்டவனை அறியாததனால் எழுகின்ற குறை தானே இது? நம்பிக்கைக் குறைவு, தன்னடக்கம் இல்லாததால் எழுகின்றது என்று நீ கூறுகின்றாய். இது உண்மைதான். ஆனால் இதுவும் அதே உண்மையைத்தான் உணர்த்துகின்றது. கீதையில் இரண்டாவது அதிகா

ரத்தில் 59 வது செய்யுளைப் படித்துப்பார். புலன்களால் அறியும் பொருள்களை விலக்குவதற்கு வழி, ஆண்டவனை நேருக்கு நேர் காண்பது தான், அதாவது ஆண்டவனிடம் நம்பிக்கை கொள்வதன் மூலம் தான். ஆண்டவனிடம் பூரண நம்பிக்கை கொள்வது தான் அவனைக்கண்டு அடையும் வழி. பொருளுக்கு நான்காவது பரிமாணம் உண்டு என்று எண்ணுவதால் மட்டும் பிரச்னை தெளிவாகி விடாது. அது ஒரே முதல் உண்மையைத்தான் உணர்த்துகின்றது. "இறைவனின் சாம்ராஜ்யத்தை முதலில் நாடு ; மற்றவை அனைத்தும் உனக்கு வழங்கப்படும்." அவனைக் காணும்போது, அவனைக் கண்ட எக்களிப்பில், பாம்புகள்பற்றிய அச்சமோ, நமக்குப் பிரியமானவர்களின் மரணம் பற்றிய அச்சமோ எதுவுமிருக்காது. இறைவன் முன்னிலையில் மரணமோ பாம்புக்கடியோ இருக்க முடியாது. எவ்வளவு திட பக்தி கொண்டிருந்தாலும், அது பூர்ண பக்திக்குச் சற்று குறைவாகவே உள்ளது என்பது தான் உண்மை. ஆகவே, சிறைபட்டுக் கட்டுப்பட்டுள்ள ஆன்மாவிற்கு அச்சத்திலிருந்து பரிபூரண விடுதலை என்பதே கிடையாது. உன் உடலைத் தாங்கியிருப்பதே ஒரு பலவீனம். பிரித்து வைக்கும் ஒரு தடுப்புச் சுவர் அது. ஆகவே நாம் செய்யக் கூடியது, அச்சத்தைத் தவிர்க்க முயல்வதுதான் ; அதாவது நம் நம்பிக்கையை வளர்ப்பது.

என்னுடைய எடை இப்பொழுது $103\frac{1}{2}$ பவுண்டு. இப்பொழுது நான் ரொட்டியை மட்டுமல்ல, காய்கறியையும், ஆகவே உப்பையும் தவிர்த்துள்ளேன். இரண்டு பவுண்டுக்கும் சற்று குறைவாகவே பால் சாப்பிடுகின்றேன். வேலைப்பளு அதிகமாக இருப்பதால் பாலும் பழமும் தான் என் முக்கிய உணவு. ... ... .... முதலில் கிடைக்காத குறிப்புகள் இந்தக் கடிதத்துடன் வந்துள்ளன.

எங்கள் [பூனைகள்] இப்பொழுது அவமானப்பட்டுள்ளன. தாய்ப் பூனை அனுமதியில்லாமல் உணவை விழுங்கிக் கொண்டு இருந்ததையும், இரவில் எங்கள் சமக்காளங்களையும் புத்தகங்களையும் அசுத்தம் செய்ததையும் கண்டுபிடித்து விட்டோம். ஆகவே பூனைகளுக்கு உணவு பரிமாறுவதை வல்லபபாய் நிறுத்தி விட்டார். சம பந்தி நின்று விட்டது. வல்லபபாய் இன்னும் என்னென்ன அவசரச் சட்டங்கள் போடுவாரோ தெரியாது. பூனைகளுக்குக் கூட இப்பொழுது அவசரச் சட்டங்களின் ஆட்சிதான்!

இப்பொழுது காலை $5\frac{1}{2}$ மணி.

அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

*22. 12.' 32.*

## 194

காலை வழிபாட்டுக்குப் பின்,

சி. மீரா,

உன்னுடைய குறிப்புகள் எல்லாம் கடைசியில் வந்து சேர்ந்தன. உன் கடிதம் வழக்கமான நேரத்தில் வந்து சேர்ந்தது. துன்ப நிகழ்ச்சி ஒன்றுக்கு அஞ்சி,[1] அதற்கு முன் கூட்டியே ஒத்திகை பார்த்து நமக்கு என்ன என்ன உணர்ச்சிகள் ஏற்படும் என்று முதலிலேயே சோதனை நடத்திப் பார்ப்பது தவறான செய்கையாகும். (உண்மையில் நம் நன்மைக்கு ஏற்படும் காரியத்தையும் நாம் துன்ப நிகழ்ச்சியாக மதிக்கக்கூடும்.) எவ்வளவு துயரம் ஏற்பட்டாலும் அதைத் தாங்கிக்கொள்ள நாம் ஆயத்தமாய் இருக்க வேண்டுமென்பது தான் முக்கியம். அதைச் செய்வதற்கு நாம் அறம், நீதி, கருணை, வள்ளல்தன்மை ஆகியவையே உரித்தான ஆண்டவனிடம்—சிறந்த வலிமை பொருந்திய, அனைத்தையும் அறிந்து எப்பொழுதும் விழிப்பாய் உள்ள, பரிபூரண வாய்மையான, இறைவனிடம்—மேலும் மேலும் உண்மையான பக்தி கொள்ள வேண்டும்.

ஆணவம் அனைத்தையும், தான் என்ற அனைத்தையும், அடியோடு அழிப்பது தான் நிர்வாணம். அந்த நிலையைச் சித்திரிக்க முடியாது. ஆனால் அனுபவத்தால் அதை அறிய முடியும். இவ்வுலகில் நாம் அடையக்கூடிய இன்பம் எதையும் விட, மிக உயர்ந்த, சிறந்த இன்ப நிலை அது என்பதை நாம் அனுபவத்தில் அறிய முடியும்.

டாக்டர் கௌர் புத்தகத்தை இன்னும் சிறிது காலம் வைத்திருக்க வேண்டுமென்றால் வைத்துக்கொள்ளலாம்.

உப்பு இல்லாத உணவு தான் சாப்பிட்டு வருகிறேன். ஆனால் கை முட்டியில் பலன் எதுவும் தெரியவில்லை. வேலைப்பளு மிக அதிகமாக இருப்பதால் பால் சாப்பிடுவது குறைந்து விட்டது. அதன் பயனாக எடையும் தற்காலிகமாக 102 பவுண்டாகக் குறைந்துள்ளது. எனினும் கவலைக்கிடமில்லை.

2ம் தேதி உண்ணாவிரதம் இருக்காது.[2] அதற்குக் காரணங்களைப் பத்திரிகையில் பார்ப்பாய். இப்பொழுது நேரமில்லை.

அன்பு,
பாபு

[தேதியில்லை; தபால் முத்திரை 30-12-'32 என்று இருப்பதால் 29-12-'32 அன்று எழுதியிருக்க வேண்டும்.]

---

1. இக்கடிதத்திலும், 5-1-'33, 19-1-'33 தேதியிட்ட கடிதங்களிலும் உள்ள அறிவுரை, என் உணர்வில் ஆழப் பதிந்தவையில் ஒன்றாகும். மனம் கற்பனைச் சஞ்சாரங்களில் ஈடுபடத் தொடங்கும் போதெல்லாம் நான் இதை எண்ணி மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்வது என் வழக்கமாகிவிட்டது. நல்லதோ, கெட்டதோ, நடக்கக் கூடியதைக் கற்பனை செய்து ஒத்திகை பார்ப்பதை நிறுத்தினால் தான், உள்ளத்தில் அமைதி நிலவமுடியும்.

2. குருவாயூர் ஆலயத்தில் ஹரிஜனங்களையும் அனுமதிக்க வேண்டு

## 195

சி. மீரா,

'நன்னம்பிக்கை வாதியின் நாட்குறிப்பு' என்ற ஏட்டின் ஒரு படியை உனக்கு இத்துடன் அனுப்பியுள்ளேன். இந்த யோசனை என்னுடையதல்ல; வல்லபபாய் கூறிய யோசனை. இந்த ஏட்டின் ஆசிரியர் 12 படிகள் அனுப்பியிருந்தார். யார்யாருக்கு இவற்றைக் கொடுப்பது நல்லதென்று பெயர்களைக் கூறுமாறு வல்லபபாயிடம் கேட்டிருந்தேன். அவர் சில பெயர்களைக் கூறினர். அப்பட்டியலில் உன் பெயரைச் சேர்க்க வேண்டுமென்று எங்கள் இருவருக்கும் ஒரே நேரத்தில் எண்ணம் உதித்தது.

நீ எவ்வளவு நீண்ட கடிதங்கள் எழுதினலும் எனக்கு அவை சுருக்கமாகவே தோன்றுகின்றன. எனக்குக் கடிதம் எழுதும் போது எனக்கு அலுப்பு ஏற்பட்டு விடுமோ என்று நீ எண்ணுதே. உனக்கு அலுப்பில்லாமல் நீ நீண்ட கடிதங்கள் எழுத முடியு மென்ருல் அவற்றையே நான் விரும்புகின்றேன். நானும் நீண்ட கடிதங்கள் எழுத முடிந்தால் நன்ருய் இருக்கும். ஆனல் கடிதங்கள் எழுதுவதில் எனக்கு அவ்வளவு திறமை கிடையாது. நீண்ட கடிதங்கள் எழுத என்னல் இயலுமென்ருலும், இப்பொழுது நேர மில்லை. ஆகவே வியாழக்கிழமை வழிபாட்டை ஒட்டி சுமார் 30 நிமிடங்கள் உனக்குக் கடிதம் எழுதுவதில் செலவு செய்வதோடு இப்பொழுது நான் திருப்தி அடைய வேண்டும்.

உண்ணு நோன்பைப் பற்றி இப்பொழுது நீ நினைக்கத் தேவை யில்லை. நல்லதோ, கெட்டதோ எதுவும் நடப்பதற்கு முன்கூட் டியே அவற்றைக் கற்பனை செய்யத் தேவையில்லை. ஆண்டவனிடம் நம்மை முழுவதும் அர்ப்பணம் செய்து விட்டால் கவலை அனைத்தி லிருந்தும் நாம் முழு விடுதலை பெறலாம். குழந்தைக்கு எதைப் பற்றியும் கவலை இருப்பதில்லை. தன் பெற்ருேர்கள் தன்னைக் கவனித்துக் கொள்வார்களென்ற அகனமர்ந்த நம்பிக்கை அதனிடம் உண்டு. குழந்தைக்கே அவ்வளவு நம்பிக்கை இருக்கிறது என்ருல் வயது வந்தவர்களுக்கு இன்னும் எவ்வளவு அதிகமான நம்பிக்கை இருக்க வேண்டும். அங்கு தான் பக்தி, அல்லது கீதை கூறும் பற்றற்ற நிலை என்பதன் சோதனை எழுகின்றது.

---

மென்று கேளப்பன் எழுப்பியிருந்த கோரிக்கைக்கு அனுதாபமாக ஜனவரி 2ம் தேதிமுதல் உண்ணு விரதம் இருக்கப் போவதாக பாபு அறிவித் திருந்தார். ஆனல் மக்களிடையே பொது வாக்கெடுப்பு நடத்தி, அவர் களில் பெரும்பான்மை வாக்கின் மூலம் ஆலயத்திற்குள் ஹரிஜனங்களை அனு மதிப்பதற்கு முடிவு செய்ததால், கிளர்ச்சி தவிர்க்கப்பட்டது.

தெற்கில் சில ஹரிஜனங்கள், புதுப்பெயரை ஆட்சேபித்தார்கள்.[1] ஆகவே தான் தீண்டாதார் என்ற சொல்லை ஏற்றுக் கொண்டேன். அதில் ஏதோ உட்கருத்து இருக்கிறதென்று அவர்கள் எண்ணினர்கள். ஆகவே அந்த சொல், அவசியத்தினுல் தேர்ந்தெடுக்கப்பட்டது.

பா, ஆசிரமத்திற்குப் புறப்பட்டு விட்டாள்; ஊர்மிளா தேவி நேற்று சென்ருர். சாஸ்திரி குடும்பத்தினரும் போய்விட்டார்கள். ஆகவே இப்பொழுது அவ்வளவு நெருக்கடி இருக்காது. ஆனல் 12ம் தேதி மற்ரொரு விவாதம் நடக்கக் கூடும். அதை நான் கேட்க வேண்டும்.

நேற்று மீண்டும் என் எடை 103 பவுண்டாக உயர்ந்துள்ளது. உப்பில்லாத உணவைத் தொடர்ந்து சாப்பிடுகிறேன். அதில் எனக்கு எவ்வித சிரமமும் இல்லை. உடலுக்கு உப்பு தேவையா, இல்லையா என்பது தான் பிரச்னை. கை முட்டியில் முன்னேற்றம் இல்லை. ரொட்டியையும், காய்கறிகளையும் விலக்கி வைத்துள்ளேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

பாபு

வியாழக்கிழமை காலை
எ. ம.
*5-1-'33.*

# 196

சி. மீரா,

உன் கடிதம் வழக்கம்போல் வந்தது. டாக்டர் கௌர் புத்தகத்தைப் பற்றிய குறிப்புகளும் வந்தன.

நம் பொது நண்பர்கள் உன்னைப்பற்றி என்ன எழுதுகிருர்கள் என்பதை உனக்குத் தெரிவிக்க எப்பொழுதும் நான் மறந்து விடுகிறேன். அவர்கள் அனைவரும் உன்னைப்பற்றி நினைக்கின்ருர்கள்; தவருமல் தங்கள் அன்பை உனக்குத் தெரிவிக்கின்ருர்கள். அவர்கள் கடிதம் உனக்கு வந்து சேருமென்ருல் உனக்கு எழுதவும் விரும்புகிருர்கள். கிங்ஸ்லி ஹால் வாசிகள், ப்ரீவத் குடும்பத்தினர், இத்தாலிய சகோதரிகள், புனிதர் பிரான்சிஸ் வானம்பாடிகள், மேரி பார் ஆகியோர் இந்த நண்பர்களிற் சிலர். எடுத்துக் காட்டுக்காக ஒரு சில பெயர்களைச் சொன்னேனே ஒழிய, நண்பர்களின் பெயர்கள் அனைத்தையும் இப்பட்டியலில் தரவில்லை. அக் கடிதங்களில் சிலவற்றையாகிலும் நான் உனக்கு அனுப்ப வேண்டும். மாடலீனின்[2] கடிதம், அவருக்கு நான் எழுதிய பதிலின் நகல்,

---

1. ஹரிஜனங்கள் என்ற சொல்லை அனைவரும் ஏற்றுக்கொள்ளச் சிறிது காலம் பிடித்தது.

2. மாடலீன் (திருமதி) ரோலண்டு.

ஆண்ட்ரூஸ் கடிதம், கண்பார்வை இழந்த ஜான் மாரிஸ் கடிதம் ஆகியவற்றை உனக்கு அனுப்பியுள்ளேன். அகாதா, எஸ்தர், ஹொரேஸ், உட்ப்ரூக் குழுவினர் ஆகியோரையும் நான் குறிப்பிட மறக்கக்கூடாது. அவர்கள் கடிதம் எழுதும்போதெல்லாம் உன்னைப் பற்றி விசாரிக்கத் தவறுவதில்லை. இத்துடன் ஜான் மாரிஸ் அனுப்பியிருந்த கிறிஸ்துமஸ் வாழ்த்தையும், இராசகுமாரி அரிஷ்டார்ஷி அனுப்பியிருந்த மிக அழகான வாழ்த்து மடலையும் உன் பார்வைக்கு அனுப்பியுள்ளேன். ஆழ்ந்த பக்தியும் அறிவுத்தேர்ச்சியும் பெற்றவராய்த் தோன்றுகிறார் இராசகுமாரி.

கணப்பு அடுப்புபற்றி உன் குறிப்புகள் காலங்கடந்து வந்தன. சென்ற இரண்டு மாதங்களாகவே, அது ஆசிரமத்திலிருந்து அடியோடு விலக்கப்பட்டுளது. அப்பொழுதே அதைப்பற்றி நான் எழுதியிருக்க வேண்டும். கணப்பு அடுப்பை ஏற்றுகையில் பேராசிரியர் திரிவேதியின் சகோதரர் மனைவி உயிரிழந்தார் என்றறிந்தவுடன், அத்துயர நிகழ்ச்சிக்கு அனுதாபம் தெரிவிக்கச் சிறந்த வழி, அந்த அடுப்புக்கு ஆசிரமத்தில் தடை விதிப்பதுதான் என்று நான் நாரணதாசுக்கு எழுதினேன். அது அவசியமான நடவடிக்கை என்பதைப் பெண்களிற் சிலர் ஒத்துக்கொள்ளச் செய்வது மிகவும் சிரமமாய் விட்டது. இறுதியில் அது அவசியம்தானென்று அனைவரும் ஒத்துக்கொண்டனர். கட்டாயமாகத் தடைவிதித்து நீக்கவில்லை. ஒவ்வொருவரும் தாமாகவே அதை விலக்க முன்வந்தார்கள். இந்த நல்ல செய்தியை நான் முன்பே உனக்குத் தெரிவித்திருக்க வேண்டும். ஆனால் ஒவ்வொரு வாரமும் இது போன்ற எத்தனை சுவையான செய்திகளைக் குறிப்பிட நான் மறந்து விடுகிறேனோ? இச் செய்திகளை நான் உனக்குச் சொல்ல வேண்டுமென்று நீ எதிர்பார்க்கமாட்டாய் என்றறிவேன். ஆயினும் நான் அவற்றைச் சொல்லாவிடில் ஆசிரமத்தில் நடக்கும் நிகழ்ச்சிகள் பற்றி நீ அறிய முடியாமல் போகும். இச்செய்திகளை நீ பெறுவது, சிறைவிதிகளை மீறுவதாகாது.[1] இதில் என்னால் இயன்றதைச் செய்யவேண்டும்.

என் எடை சென்றவாரம் இருந்த நிலையிலேயே உள்ளது. உணவிலும் மாறுதல் இல்லை. உப்பை இன்னும் சேர்த்துக்கொள்ளவில்லை. அதை விலக்கியதால் எனக்குச் சிரமம் எதுவுமில்லை. உப்பு சாப்பிட வேண்டுமென்ற ஆசை எனக்குத் தோன்றவில்லை. உப்பைச் சேர்த்துக் கொள்ளும்போது, அது பிடிக்கிறது; அவ்வளவுதான். அதனால் எனக்குத் தீங்கு ஏற்படுகிறது என்று

1. இம்முறை ஓராண்டு சிறைத் தண்டனை விதிக்கப்பட்டபோது, இரு வாரங்களுக் கொருமுறை ஒரு கடிதம் பெறவும் ஒரு பேட்டி காணவும் எனக்கு அனுமதி அளிக்கப்படும் என்று கூறப்பட்டது. நான் விசாரித்தபோது, பேட்டி காண்பதற்குப் பதிலாக இன்னுமொரு கடிதம் எழுத எனக்கு அனுமதி அளிக்கப்படுமென்று கூறியதால், பேட்டியை நான் வேண்டாமென்று சொல்லிவிட்டு வாரமொருமுறை பாபுவுக்குக் கடிதமெழுதி, அவரிடமிருந்து ஒரு கடிதமும் பெற்றுவந்தேன். இதைத் தவிர வேறு கடிதப் போக்குவரத்து எதுவும் அனுமதிக்கப்படவில்லை.

அறிந்த மறுகணமே அது எனக்குப்பிடிக்காமல் போகும். கைமுட்டி வலி முன்புபோல்தான் இன்னமும் உள்ளது; கவலை கொள்ளச் சிறிதும் இடமில்லை.

இத்துடன் அனுப்பியுள்ள கடிதங்களையும் வாழ்த்து மடல்களையும் நீ எனக்குத் திருப்பி அனுப்ப வேண்டியதில்லை.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

பாபு

எ. ம.
*இப்பொழுது காலை 5 மணி*
*13-1-'33.*

# 197

*சி. மீரா,*

காலை வழிபாட்டுக்குப் பின், உடனடியாக இதை எழுதுகிறேன். இன்று வியாழன். வல்லபபாயும் நானும் தேனைக் கலந்து சாப்பிடுவதற்காக வெந்நீருக்குக் காத்திருக்கின்றோம். உன் கடிதம் என் முன் உள்ளது. சென்ற வியாழன், காலை வழிபாட்டுக்குப்பின் வழக்கம்போல் நான் கடிதம் எழுதினேன். அங்கு உன் சிறைத் தலைமை அதிகாரி, அக்கடிதத்தை நிறுத்தி வைத்திருந்தால், உனக்கு அதைப் பற்றிச் சொல்லியாவது இருப்பார். நான் கடிதம் எழுதவில்லை என்று எண்ணிக் கொண்டு என்னென்ன தீங்கோ ஏற்பட்டிருக்கக் கூடுமென்று நீ கற்பனை செய்து கவலைப்படாமலாவது இருப்பாய். இதை மேஜர் பண்டாரியின் கவனத்திற்குக் கொண்டு வந்தேன். அவரும் அது பற்றி விசாரிப்பதாகக் கூறினர். இங்கிருந்து கடிதம், ஒழுங்காகத் தபாலில் சேர்க்கப்பட்டது. குசலம் விசாரித்து மாடலீன் ரோலண்டு, ஆண்ட்ரூஸ் எழுதிய கடிதங்களையும், மாடலீன் ரோலண்டுக்கு நான் எழுதிய கடிதத்தின் படியையும், என் கடிதத்துடன் சேர்த்து முதன் முறையாக அனுப்பியிருந்ததால், ஒருவேளை அதை நிறுத்திவிட்டார்கள் போலும்! தேவகன்னி, தேவமகவு ஆகியோர் திருவுருவப் படம் தாங்கிய அழகான வாழ்த்து மடலையும் அனுப்பியிருந்தேன். அந்தக் காரணத்திற்காகக் கடிதத்தை நிறுத்தியிருந்தார்களானல், நான் நிச்சயமாக வியப்படைவேன். அப்படியிருந்தால் கூட, கடிதத்தை ஏன் நிறுத்தவேண்டும்? ஆகவே தான் இடையில் எங்கோ தவறி விட்டதென்று நான் எண்ணுகிறேன். எவ்வாருயினும் நான் இங்கு விசாரிக்கிறேன்; நீயும் அங்கு விசாரிப்பாய். அரிஷ்டார்ஷியின் வாசகத்தைப் பின்புறத்தில் தாங்கிய அந்த வாழ்த்து மடலை, நான் அருஞ்செல்வமாகப் போற்றுகின்றேன்.

இதிலிருந்து நீ கற்றுக் கொள்ள வேண்டியது ஒன்றுண்டு. இதுபோன்ற சிக்கல் மீண்டும் ஏற்பட்டால், உன் வாராந்திரச் செய்தி எனக்குக் கிட்டாவிடில் கூட நான் வழக்கம்போல் நிச்சயம் எழுதியிருப்பேன் என்று மட்டும் நீ திடமாக நம்பலாம். கடிதம்

உனக்கு வந்து சேராமலிருந்தால், அதற்குக் காரணம், என்னை மீறிய சந்தர்ப்பங்களாகவே இருக்கும். எனக்கு உடல் நலன் கெட்டு, அதனுல் நான் எழுத முடியாமற் போனுலோ, வேறெந்தக் காரணத்தினுலும் நான் எழுதுவது தடைப்பட்டாலோ, அவ்வாரம் உனக்குக் கடிதம் அனுப்பப்படவில்லை என்ற செய்தி உனக்கு நிச்சயம் தெரிவிக்கப்படும். ஆகவே இல்லாத காரணங்களை நீயே கற்பித்துக் கொள்ளாமல், உண்மை உரிய காலத்தில் விளங்கு மென்று பொறுமையாகக் காத்திரு. எப்படியும், ஏதோ பெருந் தீங்கு ஏற்பட்டுவிட்டது என்றெண்ணிக் கவலைப்படாதே. இறைவன், அருட் கடவுள்; ஆகவே கற்பனை செய்ய வேண்டுமென்ருல் நல்லதையே கற்பனை செய்வது நல்லது. கீதையில் உண்மையான நம்பிக்கை கொண்டவன் எதையும் கற்பனை செய்யவே மாட்டான். நல்லது, தீயது என்பவை ஒன்ருேடொன்று ஒப்பிட்டுக் கூறப்படும் முடிவுகள். இயல்பாக நடப்பவற்றை ஏற்றுக் கொண்டு, அவன் இயற்கையான முறையில் அவற்றை அனுசரித்து நடப்பான்; சீராக உள்ள இயந்திரத்தின் உறுப்பு, இயந்திரத்தை இயக்குபவனின் சித்தப்படி ஒழுங்காக நடப்பது போலவே, சர்வ வல்லமை பொருந்திய அந்த இயக்குனரால் இயக்கப்படும் இயந்திரமாகத் தன் பொறுப்பை நிறைவேற்றுவான். விவேகமுள்ள ஒரு மனிதன் இயந்திரம்போல் நடப்பது மிகக் கடினம். ஆயினும் பரிபூர்ண இலட்சிய நிலையை அடைய விரும்புபவன், தன்னைப் பூஜ்யமாக்கிக் கொண்டு, இயந்திரம் போல் தான் இயங்க வேண்டும். இயந்திரத்துக்கும் மனிதனுக்கும் இடையேயுள்ள அடிப்படை வேறுபாடு என்னவென்ருல், இயந்திரம் உணர்வற்றது; மனிதன் உயிர்ச் சக்தி நிறைந்தவன்; ஆனுல் அனைவருக்கும் மேலான அற்புத இயந்திர இயக்குநர் கையில், ஓர் இயந்திரம் போலாகும் நிலையை மனிதனே விரும்பி ஏற்கின்ருன். இயந்திரத்தின் உறுப்புக்களைப் போல, எல்லா உயிர்களையும் இறைவன் இயக்குகின்ருன் என்று பொருள்படக் கிருஷ்ணன் கூறுகிருர்.

இதை நான் வலது கையால் எழுதியுள்ளேன். சிறிதே எழுத்து வேலையாயினும், இடது கைக்கும் ஓய்வு தருவது அவசியம் என்பதை நான் காண்கிறேன். எழுத்தினுலோ, நூற்பினுலோ அல்லது இரண்டினுலுமோ ஏற்படும் வெளிப்படையான அலுப்புக்கும் கைமுட்டியில் உள்ள வலிக்கும் ஏதோ தொடர்பு இருக்கக் கூடும். உப்பில்லாத பத்திய உணவு சாப்பிட்டும் குணம் தெரியவில்லை. இரத்த ஓட்டத்தோடு ஒட்டிய கோளாறு காரணமில்லை என்பதால் தான் குணம் தெரியவில்லை. இரத்த ஓட்டத்தோடு ஒட்டிய கோளாறு உனக்கு ஏற்பட்டுள்ளதால், உடனடியாக உனக்குக் குணம் தெரிகிறது. எனக்கு வாதம் எதுவுமில்லை. இருந்தால், இதற்குள் நான் அறிந்திருப்பேன். எனினும் உப்பில்லா உணவைத் தொடர்ந்து உட்கொள்கிறேன். நேற்று என் எடையில் ஒரு பவுண்டு கூடியது. இப்பொழுது என் எடை 104 பவுண்டு.

முடிந்தால் உனக்கு அவ்வப்போது மயக்கம் வருவதற்குக் காரணமென்ன என்று கண்டுபிடிக்க வேண்டும். அங்குள்ள மருத்துவ

அதிகாரியுடன் நீ இது பற்றிப் பேசினுயா? உலாவச் செல்லும் போது, முடிவில் மயக்கம் வரக்கூடாது. நடப்பதன் பயனுகத் தெளிவும் தெம்பும் ஏற்பட வேண்டும். நடக்கத் தொடங்குவதற்கு முன் முகத்திலும் தலேயிலும் கூடக் குளிர் தண்ணீர் தெளிப்பது நல்லது; மயக்கம் வரும்போல் அறிகுறி தோன்றிஞல், நடக்கையி லேயே சிறிது குளிர்நீர் குடிப்பது நல்லது. நடப்பதை ஒரு நிமிடம் நிறுத்தி, மூச்சை உள்ளிழுத்தால்கூட அது தவிர்க்கப்படும். இவை என் சொந்த அனுபவத்திலிருந்து அறியப்பட்ட சுவையான துணுக்குகள்.

உன்படிப்பைப் பற்றி, நீ சொல்வதைக் கவனித்தேன். மகா பாரதம் நல்ல பயிற்சி. சுருக்கப்படாத இந்தி மொழிபெயர்ப்பு முழுவதையும் ஒரு சிறு சொல்லின் பொருளேக் கூட தவற விடா மல், வாசித்து முடித்தாயாஞல், நீ இந்தியில் நல்ல தேர்ச்சி பெற்ற அறிஞராவாய். அது பெரிய சாதனையாகும். ஆஞல் அன் பைத் தோற்கடிக்கும் ஆற்றல் எதற்கும் கிடையாது என்பதை நான் அறிவேன்.

இக் கடிதம் வந்து சேர்ந்தவுடன் உனக்குத் தரப்பட்டால், அதைத் தெரிவிக்க ஒரு அஞ்சலட்டை எழுத உனக்கு அனுமதி கிடைக்குமென்ருல், அஞ்சலட்டை எழுது.

எங்கள் அனேவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*19-1-'33*

# 198

சி. மீரா,

வியாழனன்று, வழிபாட்டு நேரத்துக்கு முன் இதை எழுது கிறேன். உன் வாராந்திரக் கடிதம் புதன்கிழமை பிற்பகல் எனக்குக் கிடைக்கும். பதிலே நான் வியாழன் காலேயில், வழி பாட்டுக்குப் பின்போ, இப்பொழுது போன்ற சில சமயங்களில் முன்போ எழுதுவேன். ஆகவே வழக்கத்தைவிடத் தாமதமாக என் கடிதம் உனக்குக் கிடைத்தாலும், கிடைக்காமலே போஞலும் கூட, என்ஞல் தாமதம் ஏற்படவில்லே என்று அறிந்து கொள். ஆஞல் எவ்வளவு முறையாக ஏற்பாடுகள் அமைந்தாலும், தற் செயலாகச் சில தவறுகள் ஏற்படுவது இயல்பே. தற்செயலானது என்ற சொல் ஆண்டவன் அகராதியிலேயே கிடையாது. தற்செய லாக ஏற்படும் நிகழ்ச்சித் தொடர் நிரம்பிய ஒரு படலமே, உலகம். தற்செயலாக நிகழ்பவை, நம் கட்டுப்பாட்டுக்கு உட்பட்டவையல்ல; அவை நடந்த பின்பு கூட அவற்றிற்குக் காரணங்கள் கண்டுபிடிக்க முடியாமல் அடிக்கடி போகக்கூடும்.

மீண்டும் நான் வலது கையால் எழுதத் தொடங்கிவிட்டேன் என்பதைக் காண்பாய். நான் அதிகம் எழுதுவதில்லை. ஒவ்வொரு நாளும் இரண்டு மணி நேரத்துக்கு மேல் போகாமல், குஜராத்தி மொழியில் கொஞ்சம் எழுதுகிறேன். அதைத் தவிர, உனக்கு வாராந்திர ஆங்கிலக் கடிதம். இந்த எழுத்து வேலை கைக்குத் தீங்கு செய்ய முடியாது. அது காரணமென்று இதுவரை எவரும் கூறவுமில்லை. சர்க்காவைத் தான் குற்றம் சாட்டினர்கள். ஆனல் அது கூட இப்பொழுது பொய்ப்பிக்கப்பட்டு விட்ட கூற்று. ஓரளவு நூற்பதைச் சென்ற செவ்வாய்க்கிழமை மீண்டும் தொடங்கினேன். ஆனல் அதில் பிடிவாதமாக இருக்க மாட்டேன். வலி அதிகரித்தால், அதை நிறுத்தி விடுவேன். நேற்று எடையில் 2 பவுண்டு குறைந்தது. ஆனல் இச்சிறு மாறுதலைப் பொருட்படுத்தத் தேவையில்லை.

இப்பொழுது உன்னைக் கவனிப்போம். அந்த மயக்கத்திற்குக் காரணம் எதுவாயினும், நீ மருத்துவருடன் கலந்து பேசுவது அவசியம். கெட்ட நாற்றம்தான்[1] அதற்குக் காரணமென்ருல், வேருெரு நல்ல இடத்திற்கு நீ மாற்றப்படவேண்டும். நீ தடை எதுவும் சொல்லாவிடில், நானே இதைப்பற்றி அரசாங்கத்துக்கு எழுதப் பெரிதும் விரும்புகிறேன். உனக்கு மிகக் கூர்மையான நாசி; கெட்ட நாற்றங்கள் மற்றவர்களைப் பாதிப்பதைவிட உன்னை அதிகம் பாதிக்கின்றன. வேறு சிறைக்கு உன்னை மாற்ற வேண்டுமென நானே மனு செய்யட்டுமா? வழக்கமாக வாரமொரு முறை நீ எழுதும் கடிதத்திற்கு மேலாக, இக்கேள்விக்குத் தனியாகப் பதில் எழுத நீ அனுமதிக்கப்படக் கூடும்.

* * *

'உபவாசமின்றி வழிபாடு இல்லை' என்ற கூற்று முற்றிலும் பொருத்தமானதே. இங்கு உபவாசம் என்ற சொல்லுக்கு மிக விரிவான நிலையில் பொருள் காணவேண்டும். உண்ணு நோன்பு மூலம்

1. ஆர்தர் சாலைச் சிறை அபூர்வமான இடத்தில் அமைக்கப்பட்டிருந்தது. ஒரு பக்கத்தில் சலவைப் படித்துறை; பின்னல் குப்பையைக் கொட்டிக் குவிக்க ஒரு களம். அதற்கும் பின்னல், செத்த பிராணிகளின் சடலங்களை, பெரும்பாலும் நாற்றம் வீசும் நிலையில், சிறையைத் தாண்டி எடுத்துச் செல்ல ஒரு நிலையம். இன்னெரு பக்கம் மலக் கழிவுக் கூடங்கள்; அவற்றின் காற்றுத் துவாரங்கள் சிறை மதிலை எட்டிப்பார்த்தன. சிறைக்கு முன்புறம், சாலைக்கு அப்பால், தொத்து நோய் சிகிச்சை சாலை. நீண்ட நாட்களாக, அம்மை நோயின் கடுமையான தாக்குதல் காரணமாக, ஒவ்வொரு நாளும் அந்த சிகிச்சை சாலையிலிருந்து சவ ஊர்வலங்கள் புறப்படும். எல்லாவற்றிற்கும் மேலாக, சிறை மிகத் தாழ்ந்த மட்டத்தில் கட்டப்பட்டிருந்ததாலும், கழிவு நீர்க் குழாய்கள் நேரடியாகக் கடலுக்குச் செல்ல ஏற்பாடு செய்யப்பட்டிருந்ததாலும், அலை பொங்கும் நேரத்திலெல்லாம் கழிவு வாயு, சிறையின் அறையை அடுத்திருந்த கழிவு அறை வழியாக மேலெழும்பும். இந்த அறையில் கதவு இல்லாததால், கெட்டகாற்று அங்கேயே பரவி நிற்கும். இதன் பயனுக, ஆறு மாதங்களில் என் உடல் நலன் சீர்கெட்டு, என் கழுத்தில் நாணங்கள் வீங்கிப் புடைக்கத் தொடங்கின.

உடல் விரதமிருப்பதுடன், புலன்கள் அனைத்துக்கும் உபவாச நோன்பு மேற்கொள்ள வேண்டும். 'அல்பாஹார' என்று கீதை குறிப்பிடும் அல்ப உணவும், ஒருவகையில் உண்ணா நோன்பே யாகும். உணவில் நிதானத்தை உபதேசிக்கவில்லை கீதை; உணவு அல்பமாக இருக்கவேண்டுமென்று அது உணர்த்துகிறது. குறைந்த அளவு உணவும், ஓயாத உண்ணா நோன்பே யாகும். எந்தக் கடமைக்காக உடல் படைக்கப் பட்டிருக்கிறதோ, அதை நிறைவேற்றுவதற்குப் போதிய வலிமையை மட்டுமே உடலுக்கு அளித்து, அதைக் காப்பதுதான், இந்த அல்ப உணவின் பொருள். மருந்து அருந்துவதுபோல் உணவை அளவோடு, குறிப்பிட்ட நேரத்தில், தேவைக் கேற்ப அருந்த வேண்டுமென்றும், உணவை உட்கொள்வது ருசிக்காக அல்ல, உடல் நலத்திற்காகத்தானென்றும் கூறும்போது, இந்த உண்மைதான் வலியுறுத்தப்படுகிறது. அல்ப உணவு என்று கூறுவதைவிட, அளவான உணவு என்று மொழி பெயர்ப்பது இன்னும் பொருத்தமாக இருக்கலாம். ஆர்னல்ட் மொழி பெயர்ப்பு என் நினைவிற்கு வரவில்லை. ஆகவே வயிறார உண்பது ஆண்டவனுக்கும் மனிதனுக்கும் செய்யும் துரோகமாகும். வயிறார உண்பவர்கள், அந்த அளவுக்கு மற்றவர் பங்கைப் பறிப்பதால், அது மனிதனுக்குத் துரோகமாகிறது. இறைவனின் பொருளாதார நியதிப்படி, அன்றாடம் அனைவருக்கும் அல்ப உணவுக்குப் போதுமானதே கிட்டுகின்றது. நாம் அனைவரும் வயிறார உண்ணும் இனத்தைச் சேர்ந்தவர்கள். பெற்றோர்கள் நமக்களிக்கும் பயிற்சிப்படி, நாம் அனைவரும் சாப்பாட்டுப் பிரியர்களாதலால், அல்ப உணவு எவ்வளவு என்பதை உள்ளுணர்வால் அறிவதே, பகீரத சாதனையாகும். உண்டு ருசிப்பதற்கல்ல உணவு, உடம்பை நம் அடிமையாக இயக்குவதற்கே உணவு என்ற அறிவுத் தெளிவு நம்மில் சிலருக்குக் காலம் கடந்த நிலையில் உதிக்கின்றது. அக்கணம் முதற்கொண்டு, பிறப்பாலும் பயிற்சியாலும் நம்மிடம் ஊன்றியுள்ள இன்பத்திற்காக உண்ணும் பழக்கத்துடன் கடுமையான போராட்டம் மூள்கிறது. ஆகவே தான் இடையிடையே பூர்ண உண்ணா நோன்பும், என்றுமே ஓரளவு உணவைக் குறைக்கும் நோன்பும் மேற்கொள்வது அவசியமாகின்றன. உணவைக் குறைக்கும் நோன்பு, கீதையில் குறிப்பிட்டபடி அல்ப அல்லது அளவான உணவை உட்கொள்வதேயாகும். ஆகவே 'உண்ணா நோன்பின்றி வழிபாடு இல்லை' என்ற கூற்று, அனுபவத்தாலும் ஆராய்ச்சிச் சோதனைகளாலும் மெய்ப்பிக்கக் கூடிய, அறிவியல் கூற்றாகும்.

* * *

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

பாபு

எ. ம.

*26-1-'33.*

# 199

சி. மீரா,

பிப்ரவரி 2ந் தேதி வியாழன் காலை வழிபாட்டுக்குப் பின். வழக்கமாகக் கிடைக்கும் உன் வாராந்திரக் கடிதம் எனக்குக் கிடைக்கவில்லை. என்றாலும், ஒவ்வொரு வியாழன் காலையிலும் வழக்கம்போல் உன் உள்ளத்துடன் நான் உரையாட வேண்டும்.

இவ்வாரம் என் எடையில் 1 பவுண்டு கூடியுள்ளது. உப்பில்லா உணவு தொடர்கிறது. உணவுப் பொருட்கள் ஒவ்வொரு நாளும் ஒன்றேதான்: பப்பாளி, 20 பேரீச்சம் பழங்கள், நான்கு ஆரஞ்சுகள், இரண்டு புளிப்பான எலுமிச்சை, நான்கு சிறிய கரண்டி தேன், ஒரு பவுண்டு ஆட்டுப்பால், ஒரு சிறிய கரண்டி பாதாம் பசை. தேனை, வெந்நீருடனும் பத்து மாத்திரை உப்புடனும் சேர்த்து இருமுறை சாப்பிடுகின்றேன். காலையில் பால்; மாலையில் பாதாம் பசை. சில முறை, பாதாம் பசைக்குப் பதிலாக $\frac{1}{2}$ பவுண்டு பால் சாப்பிடுகிறேன். என் உணவைப்பற்றிய முழு விவரங்களையும் இதில் அறிவாய். நேற்று, காய்ச்சாத பசும் பாலைக் குடிக்கத் தொடங்கினேன். காய்ச்சாத பசும் பால் சுத்தமாகவும் புதிதாகக் கறந்ததாகவும் இருந்தால், காய்ச்சின பாலை விடச் சிறந்ததும் சீரணத்திற்கு ஏற்றதும் ஆகும் என்று கூறுகிறார்கள். இந்தப் பரிசோதனையின் பலனை நான் பார்க்க வேண்டும்.

மெருகேறிய சிறந்த பேச்சாளனாக தேவதாஸ் உருவாகியுள்ளான் என்று ராஜாஜி கூறுகிறார். தீண்டாமை ஒழிப்புத் தொண்டை ஒட்டித் தெற்கில் சுற்றுப் பயணம் செய்துவிட்டு அவன் இப்பொழுது தான் திரும்பியுள்ளான்.

நாங்கள் அனைவரும் நலமாக உள்ளோம்.

அன்பு,

பாபு

2-2-'33.

தேவதாசின் இந்திப் பேச்சையும் அதன் மொழிபெயர்ப்பையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். மிகச் சிறந்த பேச்சாக அமைந்துள்ளது.

பி. கு.

உன் வாரக் கடிதம் இறுதியில் வந்து சேர்ந்தது. ஆனால் நடுவில் எழுதிய கடிதம் இன்னும் வரவில்லை. மேலும் எழுத இன்று அவகாசமில்லை. இதன் தொடர்ச்சியாக இன்னுமொரு குறிப்பை அனுப்புவேன். இக்கடிதத்துடன் சேர்ந்ததென்று அதையும் அனுமதிப்பார்களென்று நம்புகிறேன்.

இறைவன் உன்னைக் காப்பாராக.

பாபு

2-2-'33.

# 200

சி. மீரா,

உன் வாரக் கடிதம் ஒழுங்காக வந்தது. அதற்கு இரண்டு நாட்களுக்கு முன்புதான் உன் நிலையை விவரித்து நீ எழுதியிருந்த சிறப்புக் கடிதம் எனக்குக் கொடுக்கப்பட்டது. அதன் பேரில், எரவாடா சிறைக்கு உன்னை மாற்ற வேண்டுமென்றும், நிபுணர்கள் உன்னைப் பரிசோதனை செய்ய ஏற்பாடு செய்ய வேண்டுமென்றும் கோரி நான் உடனே அரசாங்கத்துக்கு ஒரு கடிதம் எழுதினேன். எந்த நோக்கில் ஆராய்ந்தாலும் என் கடமை என்று நான் கருதியதைத்தான் செய்துள்ளேன். சிறைமாற்றம் கோர எந்தக் கைதிக்கும் உரிமை கிடையாது. மிக நெருக்கடியான நிலைமை ஏற்பட்டாலொழிய, தன் சூழ்நிலையையும் தன்மீது விதிக்கப்படும் நிபந்தனைகளையும் அவன் ஏற்றுக்கொள்ளத்தான் வேண்டும். ஹோவார்டு காலத்தில் சிறைவாச நிலைமையை நான் எண்ணிப் பார்த்து, இன்றுள்ள நிலையை நோக்கினால், நிலைமையில் ஏற்பட்டுள்ள முன்னேற்றம் கண்டு வியக்கின்றேன். ஆயினும் மனச்சாட்சியின் காரணமாகச் சிறை செல்வோருக்கு, அந்த வாழ்க்கைக்கும் இதற்கும் வேறுபாடு எதுவும் இருக்க முடியாது. ஹோவார்டு காலத்து வாழ்க்கையை உற்சாகத்துடன் ஏற்றுக்கொள்ள அவர்கள் ஆயத்தமாய் இருக்க வேண்டும். உடல் வசதிகளைக் காட்டிலும், தங்கள் உற்றார் உறவினருடன் கூட விருந்து கலந்து மகிழ்வதைக் காட்டிலும், பெரிதாக அவர்கள் தங்கள் மனச்சாட்சியைப் போற்றுகின்றனர். ஆகவே உடலைச் சீராக வைத்துக்கொள்ளவும், மற்ற வசதிகள் பெறவும், நியாயமான, நேர்மையான முயற்சி அனைத்தையும் ஒருபுறம் செய்யும் நேரத்திலேயே, மறுபுறம் சிறிதும் பற்றற்ற நிலையில் ஏமாற்றத்தை ஏற்றுக்கொள்ள ஆயத்தமாகவும் இருக்க வேண்டும். உன் நிலை பற்றிய முழுவிவரங்களையும் சிவில் சர்ஜனிடம் கூறுவதுடன், முன்பு உன்னைப் பாதித்த சுரப்பிகள் பற்றியும் [1]கூறவேண்டும். அதைப் பற்றி நீ முன்னரே எனக்கு எழுதியிருந்தால் நன்றாயிருந்திருக்கும். எவ்வாறாயினும், பிரச்னை இப்பொழுது அரசாங்கத்தின் கையிலும், அதைக் காட்டிலும், ஆண்டவன் கையிலும் உள்ளது. "அவன் ஆணையின்றி, புல்லும் அசைவதில்லை."

நீ கீதையிலிருந்து மேற்கோள் காட்டும் வாசகம் நிதானமான பழக்கங்களைக் குறிப்பது. நான் மனத்திற் கொண்டிருந்த பகுதி, இதல்ல. நான் குறித்திருந்த பகுதி, கடைசி அதிகாரத்தின் 52வது செய்யுளில் வருகிறது. அதை நான் பின்வருமாறு மொழிபெயர்ப்பேன். "தனிமையை நாடி, அல்ப உணவு அருந்தி, சிந்தை, சொல்,

---

1. நான் பதினைந்து வயதாயிருந்தபோது, கழுத்தில் எலும்புருக்கி நோயைச் சார்ந்த சுரப்பிகளுக்காக எனக்கு ரண சிகிச்சை செய்யப்பட்டது. அந்த முறை கூட, அவை வீங்கியதற்கு உடனடியாகக் காரணமாயிருந்தது, கெட்ட சாக்கடை வாயுதான்.

செயல் ஆகியவற்றைத் தன் வசமாக்கி நிலைநிறுத்துபவன் எவனோ; தியானத்தில் ஈடுபாடு கொண்டு, எப்பொழுதும் பற்றுகளிலிருந்து விடுபட்டு நிற்பவன் எவனோ.''

உன் உணவின் அளவு பற்றி நீ குறைகூற நியாயமில்லை. வெறும் அளவு நிர்ணயத்தை மட்டும் இதில் பின்பற்ற முடியாது. நீ உண்ணும் உணவில் இருமடங்கு கூட, நம் நண்பர்களில் பலருக்கு அல்ப உணவாகவே இருக்கும். உன் உடல் நிலையைக் கருதியே அளவை நிர்ணயிக்க வேண்டுமே ஒழிய, மற்றவர்கள் உண்ணும் உணவுடன் இதை ஒப்பிடக் கூடாது. நாமே விரும்பி ஏற்று, அல்ப உணவு உண்பதென்பது, உலகில் மிகக் கடினமான காரியங்களில் ஒன்று என்பதை நாம் உணர வேண்டும். இடையிடையே, அடியோடு உணவைத் தவிர்க்கும் நோன்புகளை விட, இந்த ஓயாத உண்ணா நோன்பு மிகக் கடினமானது. தாமாக விரும்பி அல்ப உணவு உட்கொண்டால், சீரான நிறைநிலை, அதாவது உடல் நலனும் உள நலனும் இணைந்த சீரான ஆரோக்கியம், உண்டாக வேண்டும். நம்மைப் பொறுத்தவரை, முயல்வதே நம் கடன்.

நான் சென்ற வாரம் குறிப்பிட்டபடிதான் என் உணவும் எடையும் இருக்கின்றன. கைமுட்டி முன்போல்தான் உள்ளது. அதைப் பற்றி நான் இப்பொழுதெல்லாம் எண்ணுவதேயில்லை. நூற்க மீண்டும் தொடங்கியுள்ளேன் என்பதை உனக்குக் கூறினேன் என்று நினைத்தேன். சென்ற வாரம் செவ்வாய்க் கிழமையன்று தொடங்கினேன் என்றெண்ணுகிறேன். பேட்டி காண வருவோரைப் பார்க்கும் நேரத்தில் நூற்கிறேன். குறைந்தபட்ச அளவு எதுவும் நான் நிர்ணயம் செய்யவில்லை. இன்னும் 160 சுற்றுக்களை எட்டவில்லை. நேற்றுத்தான் அதிகம் நூற்றேன்—141 சுற்றுக்கள் வரை.

தேவதாஸ் பற்றி நீ சொல்வது உண்மையே. அவன் திருமணம், நிறைவுள்ளதாய் விளங்குமென்று நம்புகிறேன். இலட்சுமியும் நன்கு மலர்ந்து வருகிறாள் போல் தோன்றுகிறது.

'ஹரிஜன்' இதழ் வெளிவர இருப்பதையொட்டி, நானும் மற்றவர்கள் அனைவருமே வேலையில் முனைந்திருக்கின்றோம். மிகச் சிறந்த ஆசிரியரும், அதுபோலவே சிறந்ததொரு நிர்வாகப் பொறுப்பாளரும் எனக்குக் கிடைத்துள்ளனர். இந்திய ஊழியர் சங்கத்துக்குச் சொந்தமானது அச்சகம். அச்சங்கத்துடன் இன்னும் எனக்கு ஆன்மிக உறவுகள் உண்டென்று கூறலாம். நிர்வாக ஏற்பாடுகள் பற்றி நான் கவலைகொள்ளத் தேவையில்லை. இறைவன் கடுமையானவன் என்ற போதிலும், கருணையும் மகிமையும் நிறைந்தவனும் ஆவான். எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு. இப்பொழுது காலை 5-15 மணி.

9-2-'33

பாபு

# 201

சி. மீரா,

வெள்ளிக்கிழமை காலை 3-15 மணிக்கு இதைத் தொடங்குகிறேன். உன் வாரக் கடிதம் இப்பொழுதெல்லாம் புதன்கிழமை காலையில் கிடைக்காமல், வியாழக்கிழமை பிற்பகலில்தான் கிடைக்கின்றது. இதுவும் எனக்கு முன்னரைவிட வசதியாகவே உள்ளது. புதன், வியாழன் இரண்டு நாட்களும் 'ஹரிஜன்' வேலைக்குத் தேவைப்படுவதால், சொந்தக் கடிதங்கள் எழுத அன்று அவகாசம் கிடைப்பதில்லை. வியாழக்கிழமை மாலை 6 மணிக்குள் ஹரிஜன் கையெழுத்துப் படி முழுவதும் என்னிடமிருந்து சென்றுவிட வேண்டும். ஆகவே மற்ற நாட்களிலும் நான் ஹரிஜனுக்காக எழுத வேண்டுமென்றாலும், புதன், வியாழன் இரண்டு நாட்கள் முழுவதையும் அந்த வேலைக்கே ஈடுபடுத்த வேண்டும். இது, நான் முன்பு செய்து வந்ததைப் போல்தான்.

உன் கடிதத்துடன் ஒரு தனிக் குறிப்பு எழுதுவதாக எண்ணியிருந்தேன். ஆனால் அதை எழுதவில்லை. சிறப்பான முயற்சி எடுத்திருந்தால் ஒழிய, அதை நான் எழுத முடியாது.

இரவில் உன்னை ஓர் அறைக்குள் பூட்டுவதில்லையென்று உன் கடிதத்திலிருந்து தெரிகிறது. அந்த சுதந்திரத்தை நீ நன்கு பயன்படுத்திக்கொள்ள வேண்டும். உனக்கு வேண்டிய மிகச் சிறந்த உணவு, இரவும் பகலும், நல்ல சுத்தமான, இனிய காற்று. நான் நினைப்பது போல், உன்னுடைய முற்றத்தில் பல வேப்ப மரங்கள் இருந்தால், பகல் முழுவதும் நீ வெளியிடத்திலேயே வேலை செய்ய வேண்டும். இரவு முழுவதும் நேரடியாக வானத்துக்குக் கீழே நீ படுத்து உறங்க வேண்டும்; மரங்களின் நிழல் கூடக் கூடாது; பனி பெய்யக்கூடும் என்பதைப் பொருட்படுத்தத் தேவையில்லை. விண் மீன்களுடன் இயன்ற அளவு நேரடியான தொடர்பு கொள்வது மிகவும் அவசியம். பெரு விரலிலிருந்து கழுத்து வரையிலும், அவசியமானால் தலையும் கூட நன்றாக மூடியிருந்து, உன் உதடுகளும் இறுக மூடியிருந்து, மூக்கு வழியாக மட்டுமே காற்றை நீ உட்கொள்ளும் வரை, பனியினால் உனக்கு ஒரு தீங்கும் நேரிடாது. மூக்கு வழியாக காற்று உட்கொள்வதை உறுதிப்படுத்திக் கொள்ளப் படுக்கப் போகுமுன், மல்லாந்து, கால்களை நன்றாக நீட்டிப் படுத்துக்கொண்டு, சில முறை மூக்கு வழியாக ஆழ மூச்சை இழுத்துவிட வேண்டும். இவ்வாறு மூச்சு இழுத்துப் பயிற்சி செய்வதற்குக் குறிப்பிட்ட சில நேரங்களை, ஒவ்வொரு முறையும் சுமார் 5 நிமிடங்களை, நீ ஒதுக்க வேண்டும். அவ்வாறு செய்தால், எப்பொழுதுமே மூக்கின் மூலம் காற்றை உட்கொள்வதை வழக்கமாக்கிக் கொள்வாய். இவ்வாறு பயிற்சி செய்யாமல், தாங்கள் மூக்கின் மூலமாகத்தான் சுவாசிப்பதாக எண்ணிக்கொள்பவர்கள், நினைப்பது எப்பொழுதும் சரியல்ல. வாய் மூலம் எப்பொழுது சுவாசிக்கின்றோம் என்பது அவர்களுக்கே தெரியாது. சுத்தமான இனிய

காற்றைச் சுவாசித்துத் தூய நீர் பருகித் தகுந்த உணவைத் தகுந்த அளவில் தகுந்த முறையில் உண்டு, போதிய உடற் பயிற்சியும் செய்தால், க்ஷயரோகம் நம்மை அண்ட முடியாது.

ஆர்தர் சிறையிலிருந்து உன்னை மாற்றியதற்காக, அரசாங்கத்துக்கு நான் நன்றி தெரிவித்துள்ளேன். அவர்கள் உடனடியாக, உரிய நடவடிக்கை எடுத்துள்ளனர். எரவாடாவிற்கு உன்னை மாற்ற வேண்டுமென்று தெளிவாக நான் கேட்டிருந்தது உண்மைதான். ஆனால் இங்கு உன்னை மாற்றாமல் இருந்ததற்கு, அவர்களுக்குத் தகுந்த காரணங்கள் இருந்திருக்கும். இதற்கு அடுத்தாற்போல் உனக்குச் சிறந்த இடம் சபர்மதிதான் என்று உன்னை நான் அறிந்துள்ளதைக் கொண்டு நிச்சயம் கூறுவேன். என் உடல் எரவாடாவில் இருந்த போதிலும், என் ஆவி சபர்மதியில்தான் உள்ளது என்பதை நீ உணர்ந்தால், சபர்மதியே மிகச் சிறந்த இடம் என்பதை அறிவாய். ஆவி இல்லாத வெறும் யாக்கை, ஷாஜஹான் இல்லாத தாஜ் போன்றது—வெறும் சமாதிதான்.

ஆர்தர் சாலைச் சிறையில் உள்ள வைத்திய நிபுணரிடம் நீ உன் சுரப்பிகள் பற்றிய விவரங்கள் அனைத்தையும் தெரிவித்திருக்க வேண்டும். நாம் சிறைமாற்றம் கோர வேண்டியதில்லை; ஆனால் நம் உடல் நிலையைப் பற்றிய விவரங்களைத் தெரிவிக்கக் கடமைப் பட்டுள்ளோம். நம் உடல் நிலையைப் பற்றிய விவரங்கள் அனைத்தையும் நாம் ஒழுங்காகத் தெரிவிப்போம் என்று எதிர்பார்த்துத் தான், அதிகாரிகள் நம் உடலுக்குப் பொறுப்பேற்கிறார்கள். அவ்வாறு தெரிவிக்கத் தவறினால், நாம் சிறை விதிகளை நேரடியாக மீறாவிடினும், அவற்றை அவமதித்த குற்றத்துக்கு ஆளாவோம். ஆகவே உடலில் ஒழுங்கீனம் எதுவும் ஏற்பட்டால், நீ உடனே சிறை அதிகாரியிடம் தெரிவிக்க வேண்டும். அவர் இந்திய மருத்துவ நிபுணர் பணியமைப்பைச் சேர்ந்த அதிகாரியென்றும், தேர்ச்சி பெற்ற மருத்துவர் என்றும் அரசாங்கம் எனக்குத் தெரிவித்துள்ளனர். நோயின் தாக்குதலுக்குச் சிறிதும் இலக்காகாத வண்ணம், உன் உடலை நூற்றுக்கு நூறு சீராக வைத்துக்கொள்ள முயல வேண்டும்.

உன்னுடன் பா இருக்கிறாள் என்றும் கங்காபென், குசும் ஆகியோரும் கூட இருக்கின்றனர் என்றும் அறிந்து நான் பெரு மகிழ்ச்சி அடைகின்றேன். மற்றவர்களை நீ சந்திக்க முடிவதில்லையா?

கங்காபென், குசும், இருவருக்கும் நான் கடிதங்கள் எழுதினேன் என்று அவர்களிடம் கூறு. அவர்களுக்கும் பாவுக்கும் எழுதியுள்ள கடிதங்களை இத்துடன் அனுப்பியுள்ளேன். கடிதங்கள் அவர்களுக்குக் கிடைக்க உரிமையிருந்து, அனுமதி அளிக்கப்பட்டால், நீ அவற்றை அவர்களிடம் கொடு. உடல் நலன் பற்றிய செய்திகள் தவிர, வேறெதுவும் அவற்றில் இல்லை.

என் எடையும் உணவும் வழக்கம் போல் தான் உள்ளன; கை முட்டிகளும் அவ்வாறே உள்ளன.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.
*17-2-'33*

பி. கு.

நான் இக்கடிதத்தில் சொல்லியுள்ள யோசனைகள் அனைத்தும், சிறை அதிகாரியின் அனுமதி கிடைப்பதற்கு உட்பட்டவையே.

பாபு

* * * *

# 202

சி. மீரா,

இன்று வெள்ளிக்கிழமை. காலை 3-30 மணி. உன்னிடமிருந்து இவ்வாரக் கடிதம் இன்னும் வரவில்லை. சென்ற வாரம் நான் ஒழுங்காக உனக்கு எழுதினேன். உன் கடிதம் வியாழன் பிற்பகல் வந்ததால், வெள்ளியன்று நான் எழுதியிருந்தேன். புதிய இடத்திற்கு நீ குடிபுகுந்துள்ளதாலும், காவல் அதிகாரிகள் புதியவர்களானதாலும், தற்காலிகக் குழப்பங்கள் சிறிது இருக்கக் கூடும். நான் பொறுத்திருந்து, பிரார்த்தனை செய்து, 'கீதா மாதா'வின் உபதேசத்தை மனத்திற் கொள்வேன். அவள் அற்புதமான அன்னை. அவள் அன்னை என்று அழைக்கப்படுவது உனக்குத் தெரியுமென்றெண்ணுகிறேன். 'கீதா' என்பதற்குப் பாடல் என்று பொருள். 'உபநிஷத'த்துடன் சேர்த்து அச் சொல்லைப் பயன்படுத்தும்போது அது பெயர் உரிச்சொல்லாகப் பயன்படுகிறது. 'உபநிஷதம்' என்ற சொல் பெண்பாலைச் சேர்ந்த சொல். நம் ஆசைகள் அனைத்தையும் நிறைவு செய்யும் புனித பசுவுக்கு உபநிடதம் ஒப்பிடப்பட்டுள்ளது. ஆகவே தான் அன்னை. நாம் மட்டும் சிறு குழந்தைகள் போல், பால் நாடிச் சுவைத்துண்ண, அவளை அணுகினால், நம் ஆன்மிக உய்வுக்கு வேண்டிய பால் அனைத்தையும் அழிவற்ற அந்த அன்னை நமக்கு அளிப்பாள். வற்றாத தன் மடியிலிருந்து, கோடிக் கணக்கான குழந்தைகளுக்குப் பால் சுரக்கச் செய்வாள் அவள்.

பொய், புனை, பழிச் சொல் ஆகியவற்றிற்கிடையே, ஏமாற்றங்கள் போல் தோன்றுவதையும் பொருட்படுத்தாமல் ஹரிஜனத் தொண்டை நான் செய்வதற்கு, அவள் தான் என்னை மடியில் இருத்தி ஆறுதல் கூறி, சோர்வெனும் சகதியில் புதையாமல் என்னைக் காத்தருள்கிறாள். ஆகவே தான் நான் சிரித்துக் கொண்டு கவலையில்லாமல் இருக்கக் காண்கிறாய்.

என் எடை இப்பொழுது 103 பவுண்டாக நிற்கிறது. உணவு, அளவிலும் தன்மையிலும் முன்போலவே தான். தற்போதைக்கு,

காய்ச்சாத பசும்பாலேத் தீங்கெதுவுமின்றித் தொடர்ந்து சாப்பிட்டு வருகின்றேன். என்னுடைய நேரத்தில் பெரும்பகுதியும் மகாதேவின் நேரமும், 'ஹரிஜன்' வேலைக்கே செலவாகின்றன. சகன் லாலும் இதில் முனைந்து வேலை செய்கிருர்.

இப்பொழுது இதற்கு மேல் எழுதப் போவதில்லை. மற்றவர்களை வழிபாட்டுக்காக இப்பொழுது எழுப்ப வேண்டும்.

உனக்கும் மற்றவர்களுக்கும் எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

*24-2-'33*

உன் கடிதம் இப்பொழுதுதான் கிடைத்தது. இன்று அதற்குப் பதில் எழுத அவகாசமில்லை.

பாபு

## 203

*சி. மீரா,*

இன்று சனிக்கிழமை. வழிபாட்டுக்குமுன் காலை *3-30* மணி. வெள்ளிக்கிழமை மாலை வரை உன்னிடமிருந்து கடிதம் வரவில்லை. உன் கடிதம் பிற்பகல் கிடைத்தால் கூட, நேற்று அஞ்சலில் சேரும் படி உனக்குப் பதில் எழுத முடியுமென்றெண்ணி, நேற்றுக் கூட உனக்கு எழுதுவதை ஒத்திப் போட்டேன். ஆனல் நான் எண்ணியபடி நடக்கவில்லை. ஒவ்வொரு வாரமும் உன் கடிதம் கிடைப்பதில் தாமதம் அதிகரித்துக் கொண்டே வருகிறது. உன் கடிதத்தை நான் ஆவலுடன் எதிர்பார்க்கின்ற போதிலும், வராத போது கவலைப்படுவதில்லை.

கடிதம் எழுதுவது கைதிகளின் உரிமையல்ல. ஆகவே நமக்கு உரியது எதுவும் பறிக்கப்படுவதில்லை. சாதாரண வாழ்க்கையில் கடமை என்று சமயம் எதைக் குறிப்பிடுகின்றதோ, அது சிறை வாழ்வில் கட்டாயம் ஆகின்றது; அல்லது கட்டாயம் போல் தோன்றுகிறது. ஆனல் நம்மைப் பொறுத்தவரை அவ்வாறில்லை. ஒருவகையில், நாமே விரும்பிக் கைதிகளாகியுள்ளோம். ஆகவே ஓர் அனுமதி மறுக்கப்பட்டாலோ, அதிகாரிகள் வசதிக்கேற்றவாறு ஒரு விதி மாற்றி அமைக்கப்பட்டாலோ, அது நம்மைக் கட்டாயப் படுத்துவதாக நமக்குத் தோன்றக் கூடாது. அவசியம் ஏற்பட்டால், உன்னிடமிருந்து கடிதங்களே வராவிட்டால்கூட நான் சமாளித்துக் கொள்வேன். நீயும் அவ்வாறே உன்னைப் பழக்கிக்கொண்டு, அந்த நிலையிலும் மனநிறைவு காண வேண்டும். நமக்கு வேண்டிய பொருட்கள் கிடைக்காதபோது, அவையில்லாமல் சமாளித்துக் கொள்ள, நம்மில் ஒவ்வொருவரும் ஒரு வகையில் நம்மைப் பழக்கப்

படுத்திக் கொள்கிறோம். விரும்புவது கிடைக்காத போதுகூட, மகிழ்ச்சியுடன் இருக்க, அல்லது கீதையின் மொழியில் சொன்னால் நிறைநிலை எய்த கீதைத் தர்மத்தைப் பின்பற்றுபவன் தன்னைப் பழக்கிக்கொள்வான். கீதையில் இன்பம் என்று குறிப்பிடப்படுவது, துன்பத்திற்கு எதிரிடையான நிலையல்ல; அதைவிட உயர்ந்த பண்பட்ட ஒரு நிலை. கீதை பக்தன், இன்பமோ துன்பமோ அனுபவிப்பதில்லை. அந்நிலையை எய்திய பின், இன்பம், துன்பம், வெற்றி, தோல்வி, உடைமை, இழப்பு, எதுவும் இராது. கீதையின் உபதேசத்தைக் கடைப்பிடித்து வாழ நாம் கற்றுக்கொண்டால், சிறை வாழ்க்கையே உரிமையும் வசதியும் நிறைந்த வாழ்க்கையாகிவிடும். வெளியில் இருப்பதைவிட, சிறையில் இது எளிதாகிறது. வெளியில், நாம் விரும்புவதைத் தேர்ந்தெடுக்க நமக்குப் பல வாய்ப்புகள் இருக்கின்றன. அந்நிலையில் நம்மை நாமே சோதித்துக்கொள்வது எப்பொழுதும் சாத்தியமில்லை. சிறையில் பற்பல வேளைகளில் சிக்கல்களும் சோதனைகளும் ஏற்படுகின்றன. அவற்றை யெல்லாம், நாம் நிறைநிலையுடன் தாங்கிக்கொள்ள முடிகின்றதா? முடிந்தால், நமக்கு ஒரு குறையும் இல்லை.

தனது தாடையைப் பற்றிப்[1] பா கவனித்துக்கொள்ள வேண்டும். தன் பல் வரிசையைப் பயன்படுத்துகிறாளா? போதிய உடற்பயிற்சி செய்கிறாளா? தானே ஏதாவது படிக்கின்றாளா? அவளுக்குக் கடிதங்கள் அனுமதிக்கப்படுவது வாரம் ஒரு முறையா, அல்லது இரு வாரத்திற்கு ஒரு முறையா? சென்ற முறை என் கடிதங்களிற் பல அவளுக்குக் கிடைக்கவில்லை என்றறிவேன். அவை என்னவாயிற்று என்பது எனக்குத் தெரியாது. இம் முறை என் கடிதங்கள் அவளுக்குக் கிடைக்க வேண்டுமேயென்று எனக்குக் கவலையாக உள்ளது. எனக்குத் தெரிந்த வரை, சிறை அதிகாரிகள் அவள் கடிதங்களை நிறுத்தி வைக்கவில்லை.

உன் உடல் நிலைபற்றி டாக்டர் சாண்டர்சுக்கு[2] நான் எழுத உத்தேசித்து உள்ளேன். ஆனால் நோயின் வரலாறு எதுவாயினும், நான் உனக்குக் குறிப்பிட்டுள்ள ஒரே சிகிச்சை முறைதான் உண்டு. ஆகவே அவர் அறிக்கைக்காகக் காத்திருக்க வேண்டியதில்லை. ஆனால் அவர் என்ன சொல்லப்போகிறார் என்பதை அறிய எனக்கும் ஆவலாக உள்ளது. சூரிய வெளிச்சம், உயிர்ச் சத்துக்கள் அழிக்கப்படாத எளிய உணவு, திறந்த வெளியில் உடற் பயிற்சி, இவை எல்லாச் சுரப்பிகளுக்கும் நோய்களுக்கும் பரிகாரம் காணும்.

---

1. பொய்ப் பல் வரிசையைப் பொருத்தாதபோது, கீழ்வாய் தொங்கி, பாவுக்கு வேதனை அளித்து வந்தது.

2. என் ஒன்றுவிட்ட சகோதரர்; ஹார்லி தெரு மருத்துவ நிபுணர்; இங்கிலாந்தில், என் குழந்தைப் பருவம் முதற்கொண்டு அவர்தான் எனக்குச் சிகிச்சை செய்துவந்தார்.

இதோ, வழிபாட்டுக்கு அனைவரும் வந்துவிட்டனர். காலை *4-10* மணி. நான் இத்துடன் நிறுத்திக் கொள்கிறேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

*4-3-'33*

# 204

*சி. மீரா,*

இப்பொழுது *11ந்* தேதி சனிக்கிழமை காலை *3-15* மணி. உன் வாராந்திரக் கடிதம் எப்பொழுது வந்து சேரும் என்பது நிச்சய மற்றதாய் இருப்பதால், உனக்கு நான் எழுதுவதற்கென்று ஒரு நாளை ஒதுக்கிவைத்த ஏற்பாடு குலைந்துவிட்டது. இவ்வாரம் உன்னிடமிருந்து இரு கடிதங்கள் வந்தன. சென்ற வாரக் கடிதம் செவ்வாய்க் கிழமைதான் வந்து கிடைத்தது; இவ்வாரக் கடிதம் புதன் கிழமை வந்தது. ஆனால் உன்னிடமிருந்து இன்னும் கடிதம் வருமென்ற எண்ணத்தில் நேற்று காலை நேரத்தை, மற்ற முக்கியக் கடிதங்கள் எழுதுவதில் செலவு செய்தேன். உன்னிடமிருந்து வர வேண்டிய கடிதங்கள் வந்துவிட்டன என்று எனக்கு உதித்த போது, 'அலுவலக நேரம்' என்று நீ குறிப்பிடுவாயே, அந்த நேரமாகிவிட்டதால், அப்போது உனக்கு எழுத விரும்பவில்லை. இக் கடிதத்தையும் இது போன்ற மற்றக் கடிதங்களையும் அதிகாலையில் எழுதுவதுதான் எனக்குப் பிரியமானது.

பறவைகள், விலங்குகள் ஆகியவற்றோடு வாழும் வாய்ப்பு உனக்கு மீண்டும் கிட்டியுள்ளது. தவளைகளைப் பொறுத்தவரை, அவை மிகவும் பரிதாபத்திற்குரிய பிராணிகளாகவே நான் எப்பொழுதும் ஏனோ கருதி வந்துள்ளேன். அவற்றால் ஓட முடியாது; பறக்க முடியாது; ஆகவே சூதுப் பூனைக்கு அவை எளிதில் இரையாகின்றன. தம் பரிதாப நிலையில், மிகுந்த ஏக்கத்துடன் நம்மை நோக்குவது போல் காணப்படுகின்றன. இதற்கு மாறாகக் குரங்கிடம் எனக்கு எப்பொழுதும் இரக்கம் தோன்றுவதேயில்லை. தந்திரமும் குறும்பும் நிறைந்த குரங்குக்கு, நம்மை ஏமாற்றுவதில் அலாதிப் பிரியம். நன்றியுணர்வு என்பது துளியும் அதனிடம் கிடையாது. ஆயினும் இந்த எண்ணங்கள் அனைத்தும் கற்பனையிலோ, அறியாமையிலோ பிறந்தவையாக இருக்கக் கூடும். நாம் அறிவினால் வளர்ச்சி அடைவது போலவே அறியாமையிலும் கற்பனையிலும் கூடத் தழைப்பது போல் தோன்றுகிறது. "அறியாமையே இன்பமாயிருக்கும்போது, அறிவுடைமையே மடமையாகிறது". மிகச் சுருக்கமானதும், மிகப் பழமையானதுமான உபநிடதத்தில், "அறியாமை மூலம் மரணத்தை வென்று, அறிவின் வாயிலாக அழிவற்ற நிலையை அவன் அடைகின்றான்", என்ற வாசகம் வருகிறது. மூலத்தில் கண்டுள்ள **அவித்யா, வித்யா,**

என்ற சொற்கள் முறையே செயல் நிலை, செயலற்ற நிலை என்றும், யாக்கை, ஆவி என்றும், பற்று, பற்றற்ற நிலை என்றும் பொருள் படும். மூல வாசகத்தைத் திரிக்காமலே, இன்னும் பல பொருட் களை அதில் காணலாம். அந்த உபநிடதம் மிக உயர்ந்தது மட்டு மல்ல, மிக எளிமையானது; அதே சமயத்தில் மிகச் சிக்கலானது. கீதையைப் போல், அறிவனைத்தும் மண்டிக் கிடக்கும் களஞ்சியம் அது. கீதையே, அந்த உபநிடதத்துக்கு விளக்க உரை என்றுகூடக் கூறலாம். கீதை விமர்சகர் ஒருவர்,—கீதை பக்தர் என்று அவரைக் கூறுவதே பொருத்தமானது—உபநிடதங்களைப் பசுக்களுக்கும், கீதையைப் பாலுக்கும், கிருஷ்ணனைப் பசுக்களைக் கறக்கும் மாட்டுச் சிறுவனுக்கும் ஒப்பிட்டுக் கூறுகிறார். இதை இத் துடன் இப்பொழுது நிறுத்திக் கொள்வோம்.

உன் உடல் நிலையில் தொடர்ந்து முன்னேற்றம் காணப்படுகிற தென்றும், வெப்பநிலை வந்துள்ளதால் அது தடைப்படவில்லை என்றும் நம்புகிறேன். நெற்றியில் ஈரமண் கட்டுப் போட்டுக் கொள்; அல்லது, ஈரத் துணியால் கட்டு போட்டுக்கொள். அதனால் ஏற்படும் குளிர்ச்சி, வியக்கத்தக்கது. தலைக்குக் குளிர்ச்சி தருவது உடல் முழுவதற்கும் குளிர்ச்சியைத் தரும். கண் பார்வை பற்றி அமெரிக்க நூலொன்றைக் கிரெக் அனுப்பியிருந்தார். அதில் நேற்று நான் படித்த ஒரு வாசகம், பொருட் செறிவு மிக்கதாயிருந் தது. பொய் சொன்னால் உடலின் வெப்பம் அதிகரித்துக் கண் ணுக்கு ஊறு செய்கிறது என்று அதில் குறிப்பிட்டிருந்தது. ‘பொய்’ என்ற சொல்லுக்கு விரிவான பொருள் கண்டால், இக் கூற்று உண்மையேயாகும். தெரிந்தோ தெரியாமலோ, இயற்கை யின் நியதிகளை மீறுவது, பொய்யேயாகும். தெரிந்த நியதியை வேண்டுமென்றே மீறுவது, நம் ஒழுக்க நிலைக்கும் இயல்புக்கும் பெருந்தீங்கு இழைப்பதாகும். தெரியாமல் மீறுவது, அந்த அள வுக்கு அதிகத் தீங்கு செய்யா தெனினும், இரண்டிலும் உடலுக்கு ஊறு ஏற்படுவது தெளிவு. மூச்சைக் கட்டுப்படுத்தி ஒழுங்குபடுத் துவதன் மூலம், தட்பவெப்ப நிலையில் ஏற்படும் மாறுதல்களையும் மீற முடியுமென்று, ‘ப்ராணயாமம்’ பற்றிய நூலாசிரியர்கள் கூறு கின்றனர். இந்த நம்பிக்கையை கீதையும் வலியுறுத்துவது போல் தோன்றுகிறது. தற்கால அறிவை ஆதாரமாகக் கொண்டு, மேலும் விசாரணை செய்ய வேண்டிய ஒரு துறை, இது. லோனவாலா வைச் சேர்ந்த குவலயானந்தர் இதில் ஈடுபட்டுள்ளார். சீழ்க்கை அடிப்பதற்குப் போல் உதடுகளை வைத்துக்கொண்டு, வெளிக் காற்றை மெதுவாகச் சுவாசித்தால், உடனே குளிர்ச்சி ஏற்படும் உணர்ச்சி உண்டாகும். மல்லாந்து நேராகப்படுக்கும் போது, முதுகுத் தசைகள் விரிவடைதில்லை என்பதை நினைவிற்கொள். ஆகவே நீ மிக மென்மையாக மூச்சுவிட வேண்டும். உடல் முழுவ தும் இதமான உணர்வு ஏற்படச் செய்து, நெகிழ்வும் நிம்மதியும் உண்டாக்குவதற்காகவே இப்பயிற்சி. உடலிலும் உள்ளத்திலும் ஏற்படும் அதிர்ச்சி நிலையைப் போக்க, உறக்கத்தைத் தவிர வேறு

மாற்று கிடையாது. ஆகவே நேர்ப் பலகை போல் உடல் நிமிர்ந்திருக்கக் கால் மேல் கால் போட்டு, நீண்ட மூச்சிழுக்க வேண்டும். இப் பயிற்சிகளனைத்தையும் காலி வயிற்றில், மென்மையாகவும், மன உறுதியுடனும், இசைவுடனும் செய்ய வேண்டும்.

வழிபாட்டிற்காக, எழுதுவதை இக்கட்டத்தில் நிறுத்திவிட்டு, 25 நிமிட இடைவேளைக்குப் பின் 4-35 மணிக்கு மீண்டும் தொடர்கிறேன்.

மற்ற மொழி பெயர்ப்புகளைவிட ஆர்னல்ட் மொழி பெயர்ப்பு மொத்தத்தில் பலனுள்ளது என்பது என் கருத்து. ‘நோன்பு உணவு’ என்பது தவறான சொல். ‘அல்ப உணவு’ என்பது பொருத்தமானது. **‘அல்ப’** என்ற சொல்லுக்குப் போதுமானதற்கும் குறைவானது என்று பொருள். போதுமானது எது என்பது ஊகத்திற்குரியது; ஆகவே அது நம் மனக் கற்பனையைப் பொறுத்தது. மனிதன், உடலுக்கு எப்பொழுதுமே செல்லம் தருகிறான் என்பதை அறிந்த மெய்யறிஞர், அந்தச் செல்லத்தை ஈடு செய்வதற்காகப் போதுமானது என்று கருதுவதற்கும் குறைவாகவே உண்ண வேண்டுமென்று கூறினர். அப்பொழுதுதான் உண்மையிலேயே, அவர் உண்பது போதுமானதாக இருக்கும். ஆகவே நாம் குறைவானதென்றோ அல்பமானதென்றோ எண்ணுவது, பெரும்பாலும் தேவைக்கு அதிகமானதாகவே இருக்கும். குறைவாக உண்பதன் மூலம் பலவீனமாய் இருப்பவர்களைக் காட்டிலும், அதிகம் உண்பதாலும் தவறாக உண்பதாலும் பலவீனமாய் இருப்பவர்கள்தான் அதிகம். சரியான உணவை நாம் தேர்ந்தெடுத்தால், மிக மிகக் குறைவான உணவே நமக்குப் போதுமானதாகும் என்பது அதிசயம், ஆனால் உண்மை ஆகும்.

உன்னுடன் சேர்ந்து பா முன்னேற்றம் அடைந்து வருகிறாள் என்றும் இந்தி கற்றுவருகிறாள் என்றும், உன்னைப் பஜனைப் பாடல்கள் பாடச் செய்கிறாள் என்றும் அறிய எனக்கு மகிழ்ச்சி.

என் எடை இப்பொழுது 104 பவுண்டாக உள்ளது. என் உணவு இன்னமும் பழங்களும் பச்சைப் பாலும்தான். தற்போது ஒரு பவுண்டு பாலுக்கும் குறைவாக சாப்பிடுகிறேன். என் எடை குறையாமல் காப்பது, பழங்கள்தான். கைமுட்டிகள் முன்போலவே இருக்கின்றன. கவலைக்கு இடமில்லை. நூற்பதை மிகவும் குறைத்துள்ளேன்; குறிப்பிட்ட அளவு ஒன்றும் நிர்ணயம் செய்துகொள்ளவில்லை. இப்பொழுது நான் நூற்கும் நூல் சுமார் 55, அல்லது 60ம் எண்ணிக்கை நூலாக இருக்கும். இவ்வளவும் கேஷுவின் கண்டுபிடிப்பான சிறிய சாதனத்தைக் கொண்டு பஞ்சடிக்கப்பட்ட ‘தேவகபாஸ்’ பட்டைகளைக் கொண்டு நூற்பதனால்தான்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

எ. ம.

*11-3-’33*

## 205

சி. மீரா,

வெள்ளிக்கிழமை காலை 3-15 மணி. உன் கடிதம் உரிய நேரத்தில் வந்தது.

இன்று இன்னும் பல முக்கியமான கடிதங்கள் எழுத வேண்டியிருப்பதால், நான் சுருக்கமாக எழுத வேண்டும். நெடு மூச்சு இழுப்பது பற்றியும், நேராக மல்லாந்து படுத்துக்கொண்டு மிக மென்மையாக மூச்சு இழுப்பது பற்றியும் நான் கூறிய விதிகள் உனக்கு விளங்கியுள்ளன என்றால், நீ தொடர்ந்து முன்னேற்றம் காண்பாய் என்பதில் எனக்கு ஐயமில்லை. நல்ல காய்கறிகள் நிறையச் சாப்பிட்டால், மலச்சிக்கல் நெகிழும். ரொட்டியை நீ தவிர்க்க வேண்டும்; ஆனால் பப்பாளி கிடைத்தால், அதைச் சேர்த்துக்கொள்ள வேண்டும்.

சென்ற வாரம், உணவில் வேறு மாறுதல் செயயாமல், உப்பில்லாத உணவை உட்கொள்வதைத் தற்காலிகமாக நிறுத்தி வைத்தேன். பழத்துடன் உப்பைச் சேர்த்துச் சாப்பிடத் தொடங்கினேன்; ஒரு நாளில் மொத்தம் 30 மாத்திரை உப்புக்குமேல் சேர்ப்பதில்லை. இதனால் எனக்குத் தெரிந்த மாறுதல், என் எடை 105 பவுண்டாக உயர்ந்தது என்பதுதான். பழத்தையோ பாலையோ அதிகரிக்கவில்லை. ஆனால் உப்பினால்தான் எடை கூடியதா என்று என்னால் சொல்ல இயலவில்லை. பொறுத்துப் பார்ப்போம்.

* * *

அன்பு,

பாபு

17-3-'33

## 206

சி. மீரா,

இது வியாழன் காலை, வழிபாட்டு நேரத்துக்குமுன். உன் கடிதம் நேற்று, பாவின் கடிதத்துடன் வந்தது.

'வானவியல்' பற்றி உனக்கு ஒரு நூல் அனுப்பப்பட்டுள்ளது. இம் மாதத்தின் வானநிலைப் படம் ஒன்றையும் அனுப்பியுள்ளேன். இத்துடன் டாக்டர் சான்டர்சு கடிதத்தையும் நீ காண்பாய். அது மொத்தத்தில் திருப்திகரமாய் உள்ளது.

பாவுக்கு நான் எழுதியுள்ள கடிதமும் இத்துடன் சேர்ந்து வருகிறது.

ஆசிரம நியதிகள் பற்றிய விவாதத்தை நீ விரும்பும் வரை தொடர்ந்து நடத்தலாம். அது எனக்கு அலுப்பை உண்டாக்காது; எனக்கு உதவியாகத்தான் அமையும். என் கருத்து நோக்கை நீ விளங்கிக்கொள்ள உனக்கு உதவும். என் கருத்து எதுவும் உனக்கு உடனடியாக விளங்கவில்லை என்றாலோ, விளங்கிய பின் உன்னால் அதை ஏற்றுக்கொள்ள முடியவில்லை என்றாலோ, என்னிடமோ என் விவேகத்திடமோ உனக்கு நம்பிக்கைக் குறைவை அது குறிக்கிறது என்று நீ உன்னையே பழிக்கக் கூடாது. நான் களங்கமற்ற இலட்சியப் பிறவியல்ல. என் தவறுகளிலும், நீ என் கருத்தையே ஏன் ஏற்றுக்கொள்ள வேண்டும்? அது கண் மூடித்தனமான பக்தியாகும். குறைகளைக் கண்டுபிடிக்கும் இயந்திரத்தைவிடத் திறமையாகவும் விரைவாகவும் என் உண்மையான தவறுகளைக் கண்டுபிடிக்க, என்னிடம் நீ கொண்டுள்ள நம்பிக்கை உனக்குத் துணை செய்ய வேண்டும். சில வேளைகளில் என் முடிவு தவறென்று நீ எண்ணலாம்; அக்கருத்தை நான் ஏற்றுக்கொள்ள முடியாமலிருக்கலாம்; அப்போது, நான் அப்பிரச்னைகள் பற்றி அதிகம் சிந்தனை செய்து அதிகம் அனுபவப்பட்டிருப்பதன் காரணமாக, உன்னை விடத் தெளிவாக என்னால் நோக்க முடிகிறது என்று நீ நம்பினால் போதும்; என்னிடம் நீ கொண்டுள்ள நம்பிக்கையின் பயனாய் நான் எதிர்பார்ப்பது இதுதான். அதன் பயனாக உனக்கு மன அமைதி உண்டாகும். ஆகவே உன் ஐயப்பாடுகளை அடக்கிச் சிந்தனையை முடக்கிக் குறிப்பிட்ட சில பிரச்னைகளில் என் கருத்தை நீ ஏற்றுக்கொள்ள இயலவில்லை என்றெண்ணி உன்னை நீயே சித்திரவதை செய்துகொள்ளக் கூடாது. ஆசிரமத்தைப் பற்றி என் குறிக்கோள்களை நீ மிகத் தெளிவாக உணரும் வரை, அது பற்றி நீ விவாதத்தைத் தொடர்ந்து நடத்த வேண்டும்.

இருவரில், ஆண்தான் பெரிய பாவம் செய்தவன் என்ற கருத்து குறித்து நீ வாதாடியிருக்கத் தேவையில்லை. இது குறித்துத் தங்கள் கருத்தைத் தெரிவித்துள்ள என் ஆண் நண்பர்கள், அனைவரில்லாவிடிலும் பெரும்பாலோர் கருத்துக்கு மாறாக, நான் அக்கருத்தை எப்பொழுதும் ஆதரித்துள்ளேன். விலங்குப் பிறவியைக் காட்டிலும் மனிதன் உயர்ந்தவனென்றால், அந்த உயர்வு, பிரம்மச்சரியத்தைக் கடைப்பிடிக்க அவனுக்குள்ள ஆற்றலைப் பொறுத்ததுதான் என்ற உன் கருத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆகவே அதை ஆசிரமக் குறிக்கோளாக ஏற்றுக்கொண்டு, இயன்றால் உடனடியாக எய்த முயல வேண்டும்.

ஆகவே அடிப்படை நியதியைப் பொறுத்தவரை, நம்மிடையே கருத்து உடன்பாடு முற்றிலும் உள்ளது. அந்தக் குறிக்கோளை எய்த வழிவகைகளை வகுக்கும் போதுதான் சிரமமும் கருத்து வேறுபாடும் எழுகின்றன.

ஆசிரமம் இப்பொழுது போல் இயங்க வேண்டுமென்றும், புதிதாக உறுப்பினரைச் சேர்ப்பது பற்றி முடிவு செய்ய ஆசிரமப் பொறுப்பாளருக்கு முழுச் சுதந்திரம் அளிக்க வேண்டுமென்றும்

நான் கொண்டிருந்த கருத்து நாளுக்கு நாள் வலியுறுகிறது. நம் வாழ்க்கை நாளுக்கு நாள் எளியதாக வேண்டுமே ஒழிய, சிக்கலாகக் கூடாது. நாளுக்கு நாள் நாம் அதிகத் தன்னடக்கம் பயில வேண்டும். ஆனால் இப்பொழுது போலவே நாம் பலரும் சேர்ந்த ஒரு கூட்டுக் குடும்பமாக இருக்க வேண்டும்.

நமக்குத் தடையாக இருப்பது, இப்போது உறுப்பினர் அமைந்துள்ள விதமல்ல. நம்மிடையே உண்மையான, பூர்ணமான பிரம்மச்சாரிகள் மிகக் குறைவாக உள்ளனர் என்பதுதான் நமக்குத் தடை. அத்தனை பேரும் உடைந்த கலங்கள்; அனைவரும் தங்கள் சொந்த இச்சைகளையும் ஆசாபாசங்களையும் வெல்ல வேண்டியவர்கள். ஆயினும் அவர்களிற் பெரும்பாலோர் மெய்யுயர்வை நாடி உண்மையாகப் பாடுபட்டவர்கள், இன்னும் பாடுபடுபவர்கள் என்று நான் நம்புகிறேன். ஆகவே நாம், கண்ணிழந்தோர் கண்ணிழந்தோர்க்கு வழிகாட்டும் நிலையில், எப்பொழுதும் தடுமாறிக் கொண்டுதான் இருக்கிறோம். உண்மையை நாடி ஓயாது பாடுபடுவதன் மூலம், நம்மில் சிலர் அந்த முயற்சியில் ஓரளவு தேர்ச்சி பெற்றார்களானால், நம் முயற்சி பலன் தரும் என்பதில் ஐயமில்லை. ஆகவே நம் முன்னுள்ள பிரச்னை, குறிக்கோளை அடைய நம்மில் ஒவ்வொருவரும் இயன்றவரை பாடுபட வேண்டுமென்பதுதான். பிரம்மச்சரியத்திற்கு நான் வகுத்த இலக்கணத்தை நினைவிற்கொள். ஓரிரு புலன்களை அடக்குவதல்ல, புலன்களனைத்தையும் கட்டுப்படுத்தி ஆள்வதே, பிரம்மச்சரியம். இவ்விரு நிலைகளுக்குமிடையே, அடிப்படை வேறுபாடு உண்டு. இன்று என் புலன்களனைத்தையும் நான் அடக்கி ஒடுக்கலாம்; ஆனால் அவற்றை வெல்வதற்குப் பல காலம் பிடிக்கலாம். அப்புலன்கள் என் அடிமைகளாக, விரும்பி இயங்கச் செய்வதே, அவற்றை வெல்வதன் பொருள். காதுச் சிறையைத் துளைத்து, எளிதான, வலியில்லாத ஒரு ரண சிகிச்சை மூலம், கேள்விப் புலனையே அடக்கி முடக்கலாம். இது பயனற்றது. அவதூறு, கீழ்த்தரமான பேச்சு, தெய்வ நிந்தனை ஆகியவற்றைக் கேட்க மறுத்து, அதே சமயத்தில் தெய்வீக இசையைக் கேட்கவும், ஆயிரம் காத தூரத்துக்கு அப்பாலிருந்தும் எழுப்பப்படும் அபயக் குரலைக் கேட்கவும் ஆயத்தமாயிருக்கும் முறையில் நான் செவிக்குப் பயிற்சி தர வேண்டும். பக்த இராமதாஸ் அம் முயற்சியில் வெற்றி பெற்றதாகக் கூறப்படுகிறது. படைப்புக் கருவிகளை எப்படிப் பயன்படுத்துவது? நம் ஊனிலிருந்து ஊனை உருவாக்கும் நிலையிலிருந்து மாறி, வாழ்க்கை முழுவதற்கும், அதாவது ஆன்மாவிற்கு, ஆக்கபூர்வமான வேலையை உருவாக்க, நம்மிடமுள்ள படைப்புத் திறன்மிக்க ஆற்றலைப் பயன்படுத்த வேண்டும். மிருக இச்சைகளை அடக்கியாண்டு, தெய்வீக அன்பாக அதை உயர்த்த வேண்டும். கீதையின் இரண்டாவது அதிகாரம், 64வது செய்யுளை இங்கு படிக்கவும். 'போரிலிருந்து பயந்தோடாமல், பற்றுதல் இன்றி அதை எதிர் நோக்குவதே,' அத்தெய்வீகப் பாடலுடைய உபதேசத்தின் சாரம். ஆகவே நீயும், நானும், நம்மில் ஒவ்வொருவரும், பல தரப்பட்ட ஆண் பெண்களுக்குமிடையே கலங்காமல், களங்கமுறு

மல் நிற்க வேண்டும். தற்காலிகமாகச் சிலர் ஒதுங்கியிருக்கலாமே ஒழிய, தனித்து வாழ்வது என்பது இயலாது. ஆசிரமம் இயங்கும் அளவிற்கு, நல்ல முயற்சியே; ஆனால் இன்னும் அதிக வளர்ச்சி அடைய, நாம் நம் முயற்சியை மேலும் விரிவுபடுத்த வேண்டும். ஆனால் இது உரிய காலத்தில், இயல்பாக ஏற்பட வேண்டிய பரிணாம வளர்ச்சியாகும்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

*27-4-'33*

# 207

சி. மீரா,

அந்த அன்பான தந்தியை அனுப்ப நீ அனுமதி பெற்றது குறித்து மகிழ்ச்சி. நான் முயற்சி செய்யவே இல்லை. உனக்கு ஆறுதல் செய்தி அனுப்ப நான் தனியான அனுமதி பெறுவதைக் காட்டிலும், நீ மௌனமாகத் துன்பப்படுவதே நல்லதென்று நான் கருதினேன். பின்னால், உனக்கும் இன்னும் சிலருக்கும் அன்றாடச் செய்தி அனுப்ப அனுமதி எனக்குக் கிடைக்கக் கூடுமென்று எதிர் பார்க்கிறேன்.

நான் எடுக்கவிருக்கும் நடவடிக்கையின் [1] புனித அவசியத்தை நீ உணர்ந்துள்ளாய். பா, என் முடிவை ஏற்றுக்கொண்டுள்ள விதம் பெரிதும் பாராட்டுதற்குரியது. அவள் துணிவு, எனக்குப் பெரும் ஆதரவாகவும் துணையாகவும் அமைந்துள்ளது.

உன் கடிதம் என் முன்னால் இருக்கிறது. என் முடிவுபற்றி உனக்குத் தெரிவதற்கு முன்பு நீ அதை எழுதியிருந்த போதிலும், அதில் சோகத்தின் சாயல் தென்பட்டது. வருத்தத்தை நீ வெல்ல வேண்டும். உயிருள்ள இறைவனிடம், உயிருள்ள நம்பிக்கை உனக்கிருந்தால், என்றும் பொய்க்காத அவர் அருள் உன்னைக் காப்பதை நீ உணர்வாய். அந்நிலையை அடையும்வரை, ஊனும் எலும்பும் தாங்கும் ஒரு மனிதனிடம் நம்பிக்கை கொண்டிருப்பது கூடப் பலன் எதுவும் அளிக்காது. அது, முறிந்த நாணலிடம் நம்பிக்கை கொண்

---

1. தம்மைத் தூய்மைப்படுத்த 21 நாள் உண்ணா நோன்பு மேற்கொள்ளப் பாபு முடிவு செய்திருந்தார். "ஹரிஜனத் தொண்டில் மேலும் கவனமாகவும் விழிப்பாகவும் இருக்கவேண்டி, நானும் என் சக ஊழியர்களும், எங்களைத் தூய்மைப் படுத்திக் கொள்ளச் செய்யும் இதய வழிபாடு" இது, என்று பாபு கூறினார். உண்ணாநோன்பு தொடங்கியதும் அரசு பாபுவை விடுதலைசெய்தது. புனாவில், பர்ண குடியில் உண்ணா நோன்பு தொடர்ந்தது.

டிருப்பதேயாகும். இதை முதலில் நன்ருகச் சிந்தனை செய்து விட்டுப் பின்பு அறிவுக்குத் துணையாய் நிற்க இதயத்தை உந்த வேண்டும்.

*　　*　　*

என்னைப் பற்றிக் கவலையே கொள்ளக் கூடாதென்று பாவிடம் கூறு. அவளும் நானும், நாம் அனைவருமே, ஆண்டவன் கையில் உள்ளோம். நாம் உயிர் வாழ்ந்தாலும் நல்லதுதான்; இறந்தாலும் நல்லதேதான். நாம் பிறந்தால், இறந்தே தீரவேண்டும். இறந்தால் மீண்டும் பிறந்தே தீரவேண்டும். இது அனைத்தும் பழைய தத்துவம் தான். ஆயினும் அதை வலியுறுத்துவது அவசியம். பிறப்பை வரவேற்பதுபோல், இறப்பை வரவேற்க, என்ன காரணத்திற்காகவோ நாம் தயங்குகின்ருேம். ஆன்மா இல்லாத உடலிடம் நாம் பற்றுதல் எதுவும் கொள்ள முடியாதென்றும், உடலுடன் ஆன்மாவும் அழிகிறது என்றெண்ண எவ்விதச் சான்றுமில்லை என்றும், நம் புலன்கள் நமக்கு உணர்த்தும் உண்மையைக் கூட நாம் நம்ப மறுக்கின்ருேம்.

தொடர்ந்து எழுதுவதற்கில்லை. என்னைப் பார்க்கச் சிலர் உள்ளே வந்துள்ளனர்.

வானவியல் பற்றிய நூல் உனக்குக் கிடைத்ததென்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

*4—5—'33.*

# 208

சி. மீரா,

இதை எனக்காக மகாதேவ் எழுதுகிருர். இனி ஒவ்வொரு நாளும் நான் சொல்ல, அவர் தான் எழுதுவார்; இயலும்போதெல்லாம் என் கையொப்பத்தைப் பெறுவார். நீயும் தினமும் எழுதலாம்; பா, கூட எழுதலாம். பாவிற்கு நான் எழுதியுள்ள கடிதத்தை இத்துடன் அனுப்புகின்றேன்.

நான் உன்னிடம் வாதம் செய்யத் தேவையில்லை. வாதம் எதுவும் அவசியமென்ருல், அதை இன்றைய 'ஹரிஜன்' இதழில் காண்பாய். உண்ணு நோன்பு நடந்தே தீர வேண்டுமென்பது எனக்குப் பகலொளிபோல் தெளிவாக விளங்கியது. இந்த முடிவை நான் முன்பே மேற்கொள்ளவில்லை என்பதுதான் வியப்புக்குரியது. இத்தனை நாட்களாக நான் என்னுடன் போராடினேன். சென்ற மூன்று நாட்களாக அப்போராட்டம் வலுத்தது. நடுநிசிக்குச்

சிறிது நேரத்திற்குப் பின், துணிந்து அந்த முடிவை எடுத்தேயாக வேண்டுமென்ற அகக்குரல் எனக்குத் தெளிவாகக் கேட்டது. நீ எத்துணை வேதனை அனுபவிக்கிறாய் என்பது எனக்குத் தெரிகிறது. பா, தைரியமாக இருப்பாள் என்றறிவேன். ஆனால் இந்த யாத்திரையில் எனக்குப் பலமளித்துத் துணை நிற்க, நீங்கள் சேர்ந்து அனுப்பிய கூட்டுத் தந்தியும் கடிதங்களும் உதவியுள்ளன. ஊனுடன் உணர்வு நடத்தும் இப்போராட்டத்தில் நான் வெற்றி பெற்று மீள வேண்டுமென நீ விரும்பினால், இப் போராட்டத்தில் நீயும் பங்கு கொள்ளவேண்டும். இம்முயற்சி உனக்கு எவ்வளவு மன வேதனை அளிக்கும் என்பது எனக்குத் தெரியும். ஆனால் நீ முடிவில் வெற்றி காண்பாய் என்பதும் நான் வெற்றிகாண உதவுவாய் என்பதும் எனக்குத் தெரியும். ஆனால் **நம்** வெற்றி என்பதென்ன? நீ உன் கடிதத்தின் தொடக்கத்தில் குறிப்பிட்டுள்ளது தான் பொருத்தமானது. நீ அதை அங்கு எழுதிய அதே நேரத்தில் தான் நானும் என் கட்டுரைக்கு அதே தலைப்பைக் கொடுத்திருக்கக் கூடும். இதில் நடப்பது நம் செயலல்ல; அவன் செயலே.

நீங்கள் இருவரும் தினமும் எனக்கு ஒரு வரி எழுதுங்கள்.

பாபு

எ. ம. சிறை.
*6—5—'33.*

## 209

சி. மீரா,

இப்பொழுது காலை *3-10*. என் முதல் கடிதத்தை இப்பொழுது தான் எழுதி முடித்தேன். அது ஆண்ட்ரூசுக்கு எழுதிய கடிதம். நான் மட்டுமல்ல, நாங்கள் அனைவருமே உன்னைப்பற்றி எண்ணிக் கொண்டிருக்கின்றோம். உன்னைப்பற்றி என்னிடம் பேசுபவர்களும் எனக்கு எழுதுபவர்களும், உனக்காக, நான் உண்ணா நோன்பை நிறுத்த வேண்டுமென்று யோசனை கூறுகிறார்கள். நீ என்மேல் கொண்டுள்ள அன்புக்கு அது பெரும் பாராட்டாகும். ஆனால் அதே சமயத்தில், தெரியாமலே, அவர்கள் உன் அன்பைக் குறை கூறுவதாகவே நான் கொள்வேன். எவ்வளவு காலமாயினும், ஊனுடலில் பிரிந்திருப்பதைத் தாங்கிக் கொள்ளக்கூடிய அளவுக்கு உன் அன்பு உண்மையானது, ஆழ்ந்த உணர்வு கொண்டது என்பதை நானும் உன்னை அறிந்தவர்கள் அனைவரும் உணர வேண்டுமென விரும்புகிறேன். இது வரும், வந்து கொண்டிருக்கிறது என்பதை நான் அறிவேன். அறிவின்மூலம் அது வர முடியாது. இதயத்தின் மூலமாகத்தான் அது வர முடியும். அடிப்படையான அன்பு, முதலில் புலன் உணர்வு வாயிலாகப் புலப்படுகின்ற போதிலும், முழுவதும் ஆன்மீக அம்சத்தைப் பொறுத்ததே. எனக்கு ஆண்டவனின் அன்பளிப்புகள் அனைத்திலும் தலைசிறந்த பரிசு, இந்த உண்ணா நோன்பு

என்பதை என்னுடன் சேர்ந்து நீயும் உணர வேண்டுமென விரும்பு கிறேன். அச்சத்துடனும் நடுக்கத்துடனும் அதை நான் அணுகு கின்றேன் என்பது, என் நம்பிக்கைக் குறைவின் அறிகுறியாகும். ஆனால் இது காறும் நான் அறியாத ஓர் இன்ப உணர்வு இம்முறை என்னில் எழுந்துள்ளது. அந்த இன்பத்தை நீயும் என்னுடன் பகிர்ந்துகொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன்.

ஆகவே நீ உணவைக் குறைத்துக் கொள்ளக் கூடாது. நன்றி யுணர்வுடன் உணவை உண்டு, தொண்டு செய்ய உன்னை ஆயத்த மாக்கிக் கொள். நீயும் இதுபோன்ற உண்ணா நோன்பு மேற்கொள்ள வேண்டிய வேளை உனக்கு வரக்கூடும். நாம் அடியோடு கதியற் றிருக்கும் வேளைகளில், நமக்கு ஆண்டவன் அளித்துள்ள ஒரே ஆயுதம் இதுதானென்ற நிலை, சிற்சில சந்தர்ப்பங்களில் ஏற்படு கிறது. அதன் பயனை நாம் அறியோம். உடலுணர்வைத் தவிர்ப்ப துடன் உண்ணா நோன்பு தொடங்கி முடிந்து விடுகிறதென்று நாம் எண்ணி விடுகிறோம். அவ்வாறே இல்லை. உணவைத் தவிர்ப்பது, ஓர் இன்றியமையாத அம்சமே ஒழிய, அதன் முக்கிய அம்சமல்ல. தலையாய அம்சம், வழிபாடுதான்—இறைவனுடன் உரையாடிக் கலத்தல். உடலுணவு தரும் வலிமையைவிட அதிகமாகவே, வழி பாடு தரும்.

கூடியவரை ஒவ்வொரு நாளும் மகாதேவ் உனக்கு ஒருவரி எழுதுவார்.

இறைவன் உனக்கு வலிமை அருள்வாராக.

அன்பு,

பாபு

பாவுக்கு ஒரு கடிதம் இத்துடன் வைத்துள்ளேன்.

எ. ம.
*8—5—'33.*

சனிக்கிழமை நான் எழுதிய கடிதம் உனக்குக் கிடைத்த தென்று எண்ணுகிறேன். பாவுக்கும் ஒரு கடிதம் அனுப்பினேன்.

## 210

[உண்ணா நோன்பு நிலையை அறிவித்த கடிதங்களில் பாபு, தம் கையால் இச் செய்திகளை எழுதிச் சேர்த்திருந்தார்.]

இது போன்ற அறிக்கைகள் உனக்கும் பாவிற்கும் தினமும் கிடைக்கும். நீங்கள் தைரியமாக இருக்கின்றீர்கள் என்று நம்பு கிறேன்.

பாபு

*10—5—'33.*

## 211

சி. மீரா,

நீ இறுதிவரைத் தைரியமாக இருக்கவேண்டும். என் மகளாய் இருப்பதென்ருல் விளையாட்டா? நீ அங்கிருப்பதால், நீ அனுபவிக்கும் கடுமையான சோதனை இன்னும் அதிகமாகவே.[1] என் குழந்தைகள் அருகதை உள்ளவர்களாய் இருக்கவேண்டுமென்ருல், என்னைவிட அவர்கள் சிறப்பாக நடக்கவேண்டும். இல்லையா? ஆண்டவன் உன்னுடன் இருப்பாராக.

அன்பு,

பாபு

## 212

உன்னுடன் இருப்பதற்கும் நீ அவளைக் கவனித்துக் கொள்வதற்கும் இப்பொழுது பா அங்கில்லை. கடவுள் உன்னை விடாது சோதித்து வருகிருர். அவர் உனக்கு வலிமை அருள்வார்.[2]

அன்பு,

பாபு

*14—5'—33.*

## 213

நீ காட்டிவரும் தைரியம் பாராட்டத்தக்கது. ஆண்டவனை அடியோடு நம்பி நிற்பதைக் காட்டிலும், உண்மையான வீரம் வேறு கிடையாது.

அன்பு,

பாபு

*21—5—'33.*

---

[1] உண்ணு நோன்பு பற்றிய செய்தியை அறிவித்து, இத்துடன் வந்த கடிதத்தில் மாதுர்தாஸ் பின் வருமாறு எழுதியிருந்தார். "பின்புறம் பாபு எழுதியுள்ளது, வெள்ளிக்கிழமை 2 மணிக்கு எழுதப்பட்டது. கண்ணுடி அணிந்துகொள்ளாமல், அவர் எழுதினர்; ஆகவேதான் அந்த வாக்கியத்தை முடிக்காமலே விட்டுவிட்டார்."

[2] பாபுவுடன் போயிருப்பதற்கு வசதியாக, அரசாங்கம் 'பா'வை விடுதலை செய்திருந்தது.

## 214

சி. மீரா,

இப்பொழுதுதான் நான் உண்ணாவிரதத்தை நிறுத்தியுள்ளேன். அடுத்த பணி ஆரம்பமாகிறது. வழிவகைகளை அவனே வகுப்பான்.

*29—5—'33.*

## 215

சி. மீரா,

ஊனுடலைச் சந்திக்க வேண்டுமென்று நீ கொண்டுள்ள ஆவலை வெல்ல வேண்டியது மிக அவசியம். சுரம் நீங்கிவிட்டதென்று நினைக்கிறேன்.

அன்பு,

புனா, பாபு

*3—6—'33.*

## 216

சி. மீரா,

உனக்குச் சுரம் இவ்வாறு மீண்டும் மீண்டும் வருவது எனக்குச் சஞ்சல மூட்டுகிறது. உண்மையான தன்னடக்கம் பயில நீ கற்றுக் கொள்ளவேண்டும். படிப்பதால், அது வராது. இறைவன் நம்முடன் உள்ளார் என்பதையும், நம்மைக் காப்பதைத் தவிர, அவருக்கு வேறெதிலும் அக்கறை கிடையாது என்பதையும் நாம் தெளிவாக உணர்வதன் மூலம்தான், அது வரும். இத் தெளிவு எப்படி ஏற்படும் என்பது எனக்குத் தெரியாது. ஆனால் அது ஏற்படுகிறது என்பதை மட்டும் நான் அறிவேன். நம்பிக்கை உள்ளவர்கள் தோள்களிலிருந்து கவலைகளென்ற சுமை முழுவதும் இறக்கப்படுகிறது. நம்பிக்கையுடன் சேர்ந்து கவலையும் கொண்டிருப்பதற்கு இடமில்லை. மனக்கவலையைப் போக்கி, நிம்மதி காண்பாய்.

அன்பு,

புனா, பாபு

*5—6'—33.*

# 217

பர்ணகுடி,

சொல்ல, வேறொருவரால் எழுதப்பட்டது. புத, 7—6—'33

சி. மீரா,

நான் எழுதக்கூடாது. நான் உனக்குக் கடைசியாக எழுதிய கடிதத்தால், கைக்கு அதிக வலி ஏற்பட்டது. ஆகவே, 5ந்தேதி நீ எழுதிய கடிதத்திற்கு இப்பதிலை, இன்னொருவரைக் கொண்டு எழுதச் செய்கிறேன்.

மகாதேவ் எழுதிய கடிதத்தின் முடிவில் நான் எழுதியிருந்த சிறுவாக்கியம் உனக்கு மிகுந்த வேதனை ஊட்டியது என்று நீ குறிப்பிடுகின்றாய். காரணம் ஒரு சிறிதும் இல்லாதபோதும், நாமே நமக்கு வேதனையை வருவித்துக் கொள்ள நமக்குள்ள ஆற்றல், உண்மையில் வியப்பதற்குரியது. உன் சுரத்தை குறிப்பிட்டுத்தான் நான் அதை எழுதியிருந்தேன். கவலை மேலீட்டால் சுரம் வந்தது என்று நீயே கூறியிருந்தாய். இப் பிரிவைத் தாங்கிக்கொள்ள உன்னால் இயலவில்லை என்றும் நீ குறிப்பாகக் கூறியிருந்தாய்...... ......நாம் இருவரும் சிறையில் இராமல், நீ என்னுடன் இருப்பது சாத்தியமானபோது கூட, நீ என் கண்ணில் படாமல் தூரத்தில் இருக்க வேண்டுமென்ற எண்ணம் எனக்குச் சிறிதும் இருந்ததே கிடையாது. அப்போது, நீ என்னுடன் தான் இருப்பாய்; அது தான் இயல்பு. ஆனால் சிறைக்கு வெளியில் இருப்பது என்னுடைய இயல்பான வாழ்க்கை அல்ல. என் இயல்பான வாழ்க்கை, ஒரு கைதியின் வாழ்க்கை. ஆகவேதான். என்னுடன் கூட இராததற்கு நீ பழகிக்கொள்ள வேண்டுமென்று கூறுவேன். இது பகலொளி போல் தெளிவாக இல்லையா?

உன் எடை குறைந்துள்ளது எனக்குப் பிடிக்கவில்லை. இந்தக் கவலைச் சுமையை நீ சுமப்பது, உண்மையில் பெருந்தவறாகும். உயிருள்ள இறைவனிடம் உயிருள்ள நம்பிக்கை கொண்டிருப்பதற்கு அது முரண்பட்டதாகும். நாட்கள் செல்லச்செல்ல, உயிருள்ள இப்பரம்பொருளின் இயக்கத்தை, என் ஒவ்வொரு இரத்த நாளத்தின் திசுவிலும் காண்கிறேன். இந்த உணர்வில்லாவிடில், நான் சித்த சுவாதீனமே இழந்து விடுவேன். என் மன அமைதியைக் குலைக்க நேரிடுபவை எத்தனையோ இருக்கின்றன. பரம்பொருளுடன் இருக்கும் அந்த உணர்வு இல்லாவிடில், என் நிலை குலையச் செய்துவிடும் நிகழ்ச்சிகள் எத்தனையோ நடக்கின்றன. ஆனால் அவை அனைத்தும் என்னைச் சற்றும் கலக்காமல் கடந்து விடுகின்றன. அந்த மெய்யுணர்வில் நீயும் என்னுடன் பங்குகொள்ள வேண்டும். அப்படியானால், என்னருகே நீ இருக்க இயலவில்லை என்ற காரணத்திற்காக, நீ கலக்கமுற மாட்டாய். நீயும் நானும் இப்பொழுது பிரித்து வைக்கப்பட்டிருப்பது போன்ற கட்டாயப்

பிரிவைத் தாங்கிக்கொள்ளச் சிறப்பான நெஞ்சழுத்தம் ஒன்றும் தேவையில்லை. பல இலட்சக்கணக்கான பேர், சிரமம் எதுவுமின்றி இத்தகைய பிரிவைத் தாங்கி வருகின்றனர். பிரிவினால் அவர்களுக்குத் துன்பம் ஏற்படாததால், தாங்கிக்கொள்வதில் அவர்களுக்குச் சிரமமில்லை என்று தவருக எண்ணிவிடாதே. உனக்கும் எனக்கும் எவ்வளவு மென்மையான உணர்ச்சிகள் இருக்குமோ, அதே உணர்ச்சிகள் அவர்களுக்கும் உண்டு என்பதை, அவர்களை ஆராய்ந்தால் நீ உணர்வாய். ஆனல் தங்களை அறியாமலே, அவர்களுக்கு இறைவனிடம் இயற்கையான ஒரு நம்பிக்கை உண்டு. அவர்கள் நம்பிக்கையுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது, நம் நம்பிக்கை இயற்கையானதாய் இராமல், வலிய வருவித்துக் கொண்டதாய்க் காணப்படும். ஆகவே தான் பிரிவைத் தாங்கிக் கொள்ள நாம் பகீரத முயற்சி செய்ய வேண்டியிருக்கிறது. உன் மனப்பாங்கை நான் ஆய்ந்து அறிந்துள்ள விதம் இதுதான். இது சரியல்லவென்ருல், நீயே ஆராய்ச்சி செய்து, இப் பயங்கரக் கவலையை எவ்வாருயினும் போக்கி உன்னைக் குணப்படுத்த வகை தேடிக் கொள்ள வேண்டும். கீதையின் இரண்டாவது அதிகாரத்தில் கிருஷ்ணனின் உபதேசம் குறித்து ஆழ்ந்து சிந்தனை செய். அதன் பின்பு, பன்னிரண்டாவது அதிகாரத்திற்குச் சென்று, உண்மையான அமைதியையும் மனநிம்மதியையும் நீ அடைய முடியாதா என்று பார். என்னுடைய இந்த வாதத்திற்கு விவரமாகப் பதில் சொல்ல முயற்சி செய்யாதே. அந்தச் சிரமத்தை உனக்குத் தர நான் விரும்பவில்லை. என்னல் முடியுமென்ருல், உனக்கு ஆறுதல் தர வேண்டுமென்பதற்காகவே இவ்வாதத்தைக் கொண்டு வந்தேன். ஆன்மா தன்னையே எதிர்த்து எழுச்சி கொண்டுள்ள நிலையில், வாதம் எதுவும் பலனளிக்காது என்பதை நான் அறிவேன். நீ வேதனையுடன் இப்போது அனுபவித்து வரும் மனநிலை, ஆண்டவனின் உயிர்ச்சக்தியை உணர்வதற்குப் பூர்வாங்க நிலையாக இருக்கக்கூடும். அவ்வாறே இருக்கட்டும். எப்படியும், நாம் இருவரும் சிறையிலிருந்து வெளியே வந்த பின்னும், என்னிடமிருந்து பிரிந்து நீ தனியாக வாழவேண்டியிருக்கும் என்ற எண்ணத்தின் நிழல்கூட உன் உள்ளத்தில் படர மீண்டும் இடம் கொடுக்காதே.

இப்பொழுது என்னைப்பற்றிய செய்திகள். நான் நன்ருகச் செழிப்பாக உள்ளேன். 64 வயதிலே, உடம்பை மீண்டும் சீராக்குவது என்பது விரைவில் நடக்கக்கூடியதல்ல. நான் எதிர்பார்த்ததையும் விட இன்னும் மெதுவாகவேதான் உடல் தேறுமென்பதை இப்பொழுது காண்கிறேன். ஆயினும் தொடர்ந்து முன்னேற்றம் ஏற்பட்டுத்தான் வருகிறது. 24 அவுன்ஸ் பால் தாராளமாகச் சாப்பிட்டு வருகிறேன். இரண்டு பவுண்டு சாப்பிட முயற்சி செய்கிறேன்; டாக்டர் தின்ஷா மேத்தாவின் பராமரிப்பில், அதைவிட அதிகமும் சாப்பிட முடியுமென்று எண்ணுகிறேன். இப்பொழுது நான் கண்டுள்ள முன்னேற்றம் எனக்கு முழுதும் திருப்தியாகவே

உள்ளது. பாலைத் தவிர, ஆரஞ்சுகளும், 3 அல்லது 4 மாதுளைப் பழங்களின் சாற்றையும் சாப்பிடுகின்றேன். தேனும் கணிசமான அளவு, சுமார் 4 அவுன்சு போல, சாப்பிடுகிறேன். நேற்றுவரைக் காய்கறி ரசம் சாப்பிட்டு வந்தேன். பாலை அதிகரிக்கும் பொருட்டு, அதை இன்றிருந்து டாக்டர் மேத்தா நிறுத்தினார். என் உணவு பற்றியோ என் உடல் நல முன்னேற்றம் பற்றியோ குறை எதுவும் கூறுவதற்கு இடமில்லை என்று நீ காண்பாய்.

மிகவும் புழுக்கமாய் இருக்கிறதென்று நீ கூறுகிறாய். இங்கு, மிகவும் குளிர்ச்சியாகவும் இதமாகவும் உள்ளது. மழைகாலம் புனாவில் மிகச் சுகமானது.

தேவதாஸ் இலட்சுமியை 16ந் தேதி மணந்துகொள்கிறான். வைதீகச் சடங்குகள் நடக்கும் நாள் அது. ஆனால் இது, தற்போதுள்ள இந்து ஆசாரங்களை மீறி நடக்கும் கல்யாணமாகையால், 21ந் தேதி திருமணம் சட்டப்படிப் பதிவும் செய்யப்படும்.

* * *

அன்பு,

பாபு

## 218

சொல்ல, வேறொருவர் எழுதியது.

சி. மீரா,

உன் கடிதம் இப்போதுதான் வந்து சேர்ந்தது. இவ்வாரம் நான் மிகவும் சுருக்கமாக எழுதவேண்டும். பால் உணவு, 8 மணியிலிருந்து ஆரம்பமாகி, மூன்று அல்லது நான்கு மணிவரை நீடிக்கிறது. இந்த நேரத்தில், உள்ளத்துக்கும் உடலுக்கும் பூர்ண ஓய்வு தேவை. ஆயினும், இக் கடிதத்தை நேரத்தில் எழுத வேண்டுமானால், பாலுணவு சாப்பிடும் நேரத்தில் தான் எழுதவேண்டும். இந்தப் பத்தியம்பற்றிய விவரங்களை மகாதேவ் பின்னர் உனக்கு விளக்குவார். இம் முறையின் கீழ், என் எடை கூடியுள்ளதென்று கூறமுடியாவிடினும், பலமும் ஆற்றலும் நிச்சயமாகக் கூடி வருகின்றன. ஆகவே என்னைக் குறித்துக் கவலைகொள்ள இடம் எதுவும் கிடையாது. எனக்குத் தெரியும்வரை, என் உடல் தடையின்றித் தேறியே வருகிறது.

உன் உடல் நலன் பற்றியும், என் கடிதத்தைப் படிப்பதில் நீ செய்த தவறு பற்றியும், நீ சொல்வது எனக்கு விளங்குகிறது. உன் பலவீனம் இப்பொழுது நீங்கிவிட்டதென்றும் சுரமும் அடங்கி

விட்டதென்றும் எண்ணுகின்றேன். பழம் சாப்பிடுவதில் குறை எதுவும் வைக்கமாட்டாய் என்று நம்புகிறேன். உடம்புக்கு என்னென்ன தேவையாய் இருக்கிறதோ, அதையெல்லாம் பெற நீ ஏற்பாடு செய்து கொண்டு, உடம்பை நன்ருகத் தேற்றிப் பலம்பெற வேண்டும்.

அன்பு.

பாபு

புனு,
*14—6—'33.*

# 219

பர்ணகுடி,
புனு, *21-6-'33.*

சி. *மீரா,*

*18ந்* தேதியிட்ட உன் கடிதம் இன்று காலை எனக்குக் கிடைத்தது.

பால் வைத்தியம் என்று சொல்வதை நிறுத்திவிட்டேன். ஆனால் என் வழியில் நான் ஆறு மணிக்குத் தொடங்கி, மூன்று மணி நேரத்திற்கு ஒருமுறை, *4* பவுண்டு பாலும், ஆரஞ்சுகள், திராட்சை, மாதுளைச் சாறு போன்ற சாறு நிறைந்த பழங்களையும் சாப்பிட்டு வருகிறேன். தற்போதைக்கு, மற்ற உணவு முறைகளை விட, இது என் உடம்புக்கு நன்கு ஒத்துக்கொள்ளும் என்று தோன்றுகிறது. என் எடை $93\frac{3}{4}$ பவுண்டாக உயர்ந்துள்ளது. இது கணிசமான உயர்வு. தினமும், மூன்று நான்கு முறை ஒரு சில அடிகள் நடக்க அனுமதிக்கப்படுகிறேன். ஆறுவாரங்களுக்குப் பின் முதன் முறையாகத் தொட்டியில் குளித்தேன். அதற்குப் பின், மிகவும் தெம்பாக உள்ளது. ஆகவே என் உடல் நலனைப் பொறுத்த வரை, கவலைப் படுவதற்கு எதுவுமில்லை என்பதைக் காண்பாய். பால் வைத்தியம் என்று சொல்வதில், என் உயரத்திற்கேற்ப, சிரமம் எதுவுமில்லாமல், தினம் நான் *12* பவுண்டு பால் சாப்பிட வேண்டும். இது ஒரு சிறப்பான வைத்தியமுறை; பலருக்கு நல்ல பலனளித்துள்ளது. என்னைப் பொறுத்த வரையில்கூட, இறுதியில் அது வெற்றிபெறும் என்று எதிர்பார்த்தார்கள். ஆனால் அதுபற்றிய தர்க்கத்தில் நான் ஈடுபட விரும்பவில்லை. ஆகவே தற்போதைக்கு அதை நிறுத்தியுள்ளேன். காகா சாகிப் இவ் வைத்தியம் செய்து வருகிறார் என்றறிய நீ ஆச்சரியப்படுவாய். இப்பொழுது தினமும் *10* பவுண்டு சாப்பிடுகிறார்; *12* பவுண்டுவரை அவர் சாப்பிடவேண்டும். அவர் எடை *120* பவுண்டாக உயர்ந்துள்ளது. பல ஆண்டுகளாக

வழக்கமான மலச்சிக்கலால் வேதனைப்பட்டு வரும் பிரிஜ்கிஷன் கூட இந்த வைத்தியம் செய்து வருகிறார். அவர் சிரமமில்லாமல், ஒரு மணிக்கு ஒரு பவுண்டு வீதம் தினமும் 12 பவுண்டு பால் சாப்பிட்டு வருகிறார். இம்முறை, அனுபவத்தில் பலன் தந்துள்ள முறை. இந்தப் பால் வைத்தியம் செய்து கொள்ளும்போது, படுக்கையில் படுத்திருந்து, பூர்ண ஓய்வு பெற வேண்டுமென்பது, இந்த முறையின் முக்கிய அம்சம். பாலுணவைத் தொடங்குமுன், காலையில் நிறைய உடற்பயிற்சி செய்து கொள்ளலாம்.

* * *

அன்பு,

பாபு

## 220

சி. மீரா,

இப்போது வியாழன் காலையில் 5-30 மணி. உன் கடிதம் என் முன் உள்ளது.

உடல் நலனை மீண்டும் பெற்றுவிட்டாய் என்பதையும், தினமும் பலம் கூடி வருகிறது என்பதையும் அறிய எனக்கு மகிழ்ச்சி. தட்ப வெப்ப நிலை எவ்வாறிருந்தாலும், உடல் நலனைச் சீராகக் காக்கும் திறனை நாம் பயில வேண்டும். இது கடினமானது என்பதை நான் அறிவேன். ஆனால் மனித முயற்சியால் அடைய முடியாததல்ல. இதில் உள்ளத்திற்குப் பெரும் பொறுப்பு உண்டு. 6வது அதிகாரத்தில் கூறியபடி, புறப்பொருள்களிலிருந்து நாம் நம்மை முற்றிலும் விடுவித்துக் கொண்டால், அந்த நிலையை எய்த முடியும். தற்போதைக்கு அந்நிலை நம்மால் அடையமுடியாதது போல் தோன்றுவது, நம்மைத் திகைக்க வைக்கக் கூடாது. இந்த முயற்சியை மேற்கொள்ள வேண்டுமென கீதையின் ஆசிரியர் நம்மை அழைக்கிறார்; அம்முயற்சி எப்பொழுதுமே பலனளிக்காமல் போகாது என்று தம் பரந்த அனுபவத்திலிருந்து அவர் கூறுகிறார். பலன் உண்டாக நீண்ட நாளாகலாம்; ஆனால் வெற்றி கிட்டுவது திண்ணம்.

ஆம்; நான் உண்ணாநோன்பின் போது உப்பு சேர்த்துக் கொள்ளவில்லை. அவசியத்தைப் பயன்படுத்தி, அந்த நல்ல காரியத்தைச் செய்துகொண்டேன். என்னால் உப்பைச் சாப்பிடவே முடியவில்லை. அதன் மீது எனக்கு ஒரு அருவருப்பு ஏற்பட்டதால், அதைச் சாப்பிட நான் முயற்சி செய்யவே இல்லை. சோடா சாப்பிட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. ஆகவே பிடித்ததோ பிடிக்கவில்லையோ, அதைச் சாப்பிட்டேன். அந்த மாதிரி அவசியம் உப்பைப் பொறுத்தவரை ஏற்படவில்லை.

நேற்று என் எடை $97\frac{3}{4}$ பவுண்டாக இருந்தது. மூன்று முறையாக மொத்தம் 44 நிமிடங்கள் களைப்புத் தோன்றாமல் நடந்தேன். ஆகவே அது நல்ல சாதனையாகும். சிறிது உரையாடுவதிலும் சிரமம் எதுவுமில்லை.

* * *

அன்பு,

பாபு

## 221

புனா,
6-7-'33

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது.

என் உடல் நிலையில் தொடர்ந்து முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறது. என் எடை இப்பொழுது 98 பவுண்டுக்கு மேல் உள்ளது. உணவு முன்போலவே தான். தினமும் மூன்று முறை, மொத்தம் 1 மணி 20 நிமிடங்களுக்கு, நடக்க முடிகிறது; பரவாயில்லை, அல்லவா? இதனால் அலுப்பு எதுவும் ஏற்படுவதில்லை. நல்ல ஆரோக்கியம் அடைய என்னுடன் போட்டியிடுவதில், நீ என்னைத் தோற்கடிக்க வேண்டுமென விரும்புகிறேன். அங்கு அதிக வெப்பமாயிருப்பது, உனக்குப் பாதகமானது தான். ஆனால் சீக்கிரமே அங்கு மழை பெய்யத் தொடங்கிவிடும். வெப்பம் அதிகமாயிருக்கும் போது, ஈரத் துணிக் கட்டு போட்டுக் கொண்டால், உடனே குளிர்ச்சி ஏற்பட்டுவிடும். அந்தக் கட்டு எப்படிப் போடுவது என்பது உனக்குத் தெரியுமல்லவா? படுக்கை விரிப்பை எடுத்து, பச்சைத் தண்ணீரில் நனை. நீர் சற்றும் தங்காமல், நன்றாகப் பிழிந்துவிடு. உடுப்பு எதுவும் இல்லாமல், அந்த விரிப்பின் மேல் படுத்துக் கொண்டு, உடலைச் சுற்றி அதை நன்றாகப் போர்த்திக் கொள். கழுத்திலிருந்து கால்வரை அது உன்னை மூடிக் கொள்ளும். ஐந்து நிமிடங்கள் அதில் படுத்திரு; உனக்கு இதமாக இருந்தால், இன்னும் அதிக நேரம் கூடப் படுத்துக் கொள்ளலாம். குளிர் உண்டாகும் வரை விடக்கூடாது. குளிர் ஏற்படும் போலிருந்தால், உடனே நீ அப்போர்வையிலிருந்து எழுந்து விட வேண்டும். இந்த ஈரப் போர்வை இதமாகவும் குளிர்ச்சியாகவும் இருக்கும். அவசியமானால், இம்முறையை நீ அடிக்கடி பின்பற்றலாம். இதை நீயே பரீட்சித்துப் பலனைப் பார்.

* * *

குரங்குகளைப் பற்றி உன் வர்ணனை மிகவும் சுவையாக உள்ளது. உன் கையிலிருந்து உணவைப் பறிக்க அவை இன்னும்

தொடங்கவில்லையா? ஆனல் அவற்றிற்குச் சீற்றம் வந்துவிட்டால், அவை உனக்குப் பெருந்தீங்கு விளைவிக்கக் கூடும் என்பது உனக்குத் தெரியுமென்று நினைக்கின்றேன்.

* * *

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

பாபு

# 222

13-7-'33

புனா

சி. மீரா,

உன் கடிதம் வந்துள்ளது. எவ்வளவு நெருக்கடிக் கிடையில், நான் வேலை செய்ய வேண்டியுள்ளது என்பதை நீ ஊகிக்கலாம். இக்கடிதத்தையும் வேறு ஒன்றிரண்டு முக்கியக் கடிதங்களையும், 'ஹரிஜன்' இதழுக்குக் கட்டுரையையும் எழுதுவதற்காகப் பேசா நோன்பு மேற்கொண்டுள்ளேன். காலை 9 மணிக்கு ஒருவரைப் பார்க்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. அதற்குள் இன்னும் சில நிமிட அவகாசம் தான் உள்ளது. ஆண்டவன் என்னிடம் அதிக அன்பு காட்டுகிருர். என் முன்னுள்ள பணியைச் செய்து முடிப்பதற்குப் போதுமான அளவு மட்டும் வலிமையை எனக்குத் தந்தருள்கிருர்.

எடை கூடிக் குறைகிறது. வேலைப் பளுவில், 101 பவுண்டாக இருந்தது 99க்கும் குறைவாக வந்துள்ளது. இன்னும் சிறிது காலத்திற்கு இது போலவே கூடிக் குறைந்து ஊசலாடும். என் உடல் நலமாகவே உள்ளது.

உடல் நலன், உளநலன், இரண்டிலுமே என்னுடன் போட்டியிட்டு நீ என்னைத் தோற்கடிக்க வேண்டுமென விரும்புகிறேன். ஆனல் அதைப் பற்றிக் கவலைப்படாமல், நீ அதைச் செய்ய வேண்டும். தாயாகவும் தந்தையாகவும் நீ என்னை ஏற்றுக்கொண்ட பின்,பெற்ரோர் இருவருமே ஒருவராய் அமைந்தவரிடமிருந்து, நீ பெற்றுள்ள ஆஸ்தியைப் பெருக்காவிடில் பலன் என்ன? ஒத்த அன்பு உள்ள போது, இவ்வாறு ஆஸ்தி உயரும் என்று நான் உண்மையில் நம்புகிறேன். அதிலும் சுவீகாரம் செய்யும்போது, நாம் பெற்ரோரின் களங்கங்களையும் குறைபாடுகளையும் சுவீகரிப்பதில்லை; அவரிடமுள்ள குணநலன்களைத் தான் சுவீகரிக்கின்ரோம். ஆகவே உண்மையில் என்னிடமுள்ள குணநலன்களையும், நீயாகக் கற்பனை செய்து என்னிடம் கண்டுள்ள குணநலன்களையும், நீ பயின்று மேற்கொள்வதுடன், அவற்றை மேலும் பெருக்கவும் முயல வேண்டும். இப் பொது நியதியை நீ மெய்ப்பித்துக் காட்ட வேண்டும்; காட்டுவாய் என்ற நம்பிக்கை எனக்குண்டு.

தன்னுடைய குரு மச்சேந்திரநாத்தைக் கோரக்நாத் மிஞ்சியது பற்றிய சிறப்பான வரலாறு உனக்குத் தெரியுமா?

* * *

அன்பு,

பாபு

## 223

ஆசிரமம், சபர்மதி,
30-7-'33

சி. மீரா,

ஆசிரமத்திலிருந்து நான் இதை எழுதுகிறேன். இப்பொழுது இரவு 8-45 மணி. பேட்டிக்குப்[1] பின், நீ மிகுந்த பரபரப்பு அடையவில்லை என்று நம்புகிறேன். உடல் நலனைக் கெடுத்துக் கொள்ளாமல், உன் எடையைக் கூட்ட முடியுமானல், நீ அதைச் செய்ய வேண்டும்.

ஆசிரமம் இப்பொழுது கலைந்து விட்டதால், உன் தேவைகளுக்கு நீ ரஞ்சோட் பாயைப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். அவரிடம் நான் பேசியுள்ளேன்.

நான் அதிகம் எழுதுவதற்கில்லை. எனக்கு அதிக அவகாசம் இல்லை. இன்றிரவு இனியும் அதிக வேலைக்கு என் கைவிரல்களும் பயன்படமாட்டா.

அன்பு,

பாபு

## 224

[இங்கும், சென்ற கடிதத்திற்கும் இக் கடிதத்திற்கும் இடையே, பற்பல நிகழ்ச்சிகள் கொண்ட நீண்ட இடைவெளி. சபர்மதிச் சிறையில் என்னைப் பார்க்க வந்த மறுநாளே, மாலையில் பாபு கைது செய்யப்பட்டு, எரவாடா சிறைக்கு அனுப்பப்பட்டார். மறுநாள், அவர் ஏற்பாடு செய்திருந்தபடி, 'ராஸ்' கிராமத்தை நோக்கி யாத்திரை மேற்கொள்வதைத் தடுக்கும் நோக்கத்துடன் இந்த நடவடிக்கை எடுக்கப்பட்டது. ஹரிஜனங்களுக்குச் சேவை செய்ய முந்திய சிறைவாசத்தின் போது பாபுவுக்கு அளிக்கப்பட்ட வசதிகள் இம்முறை மறுக்கப் பட்டதால், பாபு உண்ணு நோன்பு தொடங்கினர். அரசு பிடிவாதமாக இருந்தது. முந்திய இருபத்தோரு நாள் உண்ணு நோன்பின் விளைவாகப் பாபுவின் உடலில் பலம் குன்றியிருந்ததால், அவர் நிலை விரைவிலே சீர்கெட்டு வந்தது. என்னுடைய ஓராண்டுச் சிறைவாசம் முடியுந்தறுவாயில் இருந்தது. சபர்மதிச் சிறைத்

---

[1] சபர்மதிச் சிறையில் என்னைப் பேட்டி காணப் பாபு வந்திருந்தார்.

தலைமை அதிகாரி மிகவும் அனுதாபமாக இருந்தார். தம்மால் இயன்ற உதவியை அவர் எனக்குச் செய்தார். என் தண்டனைக் காலம் முடிவடைவதற்கு ஓரிரண்டு மணி நேரத்திற்கு முன்பே என்னை அவர் விடுதலை செய்ததால், புனாவுக்கு அதி காலையில் புறப்பட்ட இரயிலில் நான் செல்ல முடிந்தது. சிறையிலிருந்து நான் நேராக இரயில் நிலையத்துக்குச் சென்றேன். வழி நெடுக, மக்கள் பாபுவின் உடல் நிலை பற்றிப் பேசிக் கொண்டிருந்ததும், அவர் மரணத்தின் வாயிலில் உள்ளார் என்று குறிப்பிட்டதும் என் காதில் விழுந்தது. பர்ணகுடியை நான் அடைந்த போது, பாவும் மற்றவர்களும் கையைப் பிசைந்து கொண்டு 'பாபு பிழைக்க மாட்டார்' என்று ஏங்கியதைக் கண்டேன். அவரைப் பார்க்க அனுமதிக்கப்பட் டிருந்த பா, அவர் இனி தண்ணீர் கூட சாப்பிட அன்று காலை மறுத்து விட்டா ரென்றும், தமது சில சிறிய உடைமைகளைத் தம்மைக் கவனித்து வந்தவர்களுக்கு வழங்கி விட்டு, முடிவை வரவேற்க ஆயத்தம் செய்து கொண்டிருந்தாரென்றும் கூறினர். என் உள்ளுணர்வைத் தவிர வேறு ஆதாரம் எதுவும் இல்லாத போதும் "பாபு இறக்கப் போவதில்லை என்று எனக்கு என்னவோ தோன்றுகிறது," என்று என்னை அறியாமலே நான் கூறினேன். கடைசி நிமிடத்தில் உடன்பாடு ஏற்படக் கூடுமென்று எதிர்பார்த்து அன்று காலை ஆண்ட்ரூஸ் சிறையை நோக் கிச் சென்றிருந்தார். நாங்கள் மிகுந்த ஆவலுடனும் ஏக்கத்துடனும் காத்திருந் தோம். பாபுவை அரசு விடுதலை செய்கிறது என்ற செய்தி வந்தது. சிறிது நேரத் திற்கெல்லாம், மருத்துவ வண்டியில் பாபுவைப் பர்ணகுடிக்குக் கொண்டு வந் தார்கள்; அவருடன் ஆண்ட்ரூஸ் வந்தார். வண்டியிலிருந்து பாபுவைத் தூக்கி வந்தார்கள், குழிவிழுந்த கண்களுடன். முகத்திலிருந்த ஒளியெல்லாம் மறைந்து, அன்று அவர் காணப்பட்டது போல், என்றுமே அவரை நான் கண்டதில்லை. அந் நிலையிலும் அவர் ஆன்ம பலம் ஓங்கி, உற்சாகம் குறையாமலே இருந்தார். அதன் பின்பு, பாபுவின் உடல் தேற நீண்ட நாட்களாயின. பிறகு பாபு மேற் கொண்ட அனைத்திந்திய சுற்றுப் பயணத்தில், மத்திய, தென்னிந்தியப் பயணங் களின் போது, நான் அவருடன் சென்றிருந்தேன். வடக்கு நோக்கிப் பம்பாய் வரை நாங்கள் வந்தபோது இங்கிலாந்துக்குச் சென்று பாபுவைப் பற்றியும் அவர் செய் தியைப் பற்றியும் பொதுமக்களுக்கும், குறிப்பாகப் பாட்டாளிகளுக்கும் எடுத்துச் சொல்ல வேண்டுமென்ற அகத் தூண்டுதல் என்னிடம் எழுந்தது. நேராகப் பாபுவிடம் சென்று இதைத் தெரிவித்தேன். நான் போக வேண்டுமென்று அவரும் கூறினர். 5 நாட்களுக்குள் நான் கப்பலில் ஐரோப்பாவிற்குச் சென்று கொண் டிருந்தேன். நான் பயணமான பின்பு, பாபு எழுதிய முதல் கடிதம் கீழே தரப் பட்டுள்ளது.]

சி. மீரா,

என்ன பிரிவு! சோர்வு மிக்கப் பிரிவு. ஆனல் இதைவிட ஆழமான, வளமான, சுயநலமற்ற அன்பு எனக்கு என்றுமே வழங்கப்படாதென்று நான் அறிவேன். அந்த அன்பே சில சமயங் களில் எனக்கு மனச் சங்கடத்தை உண்டாக்கியதுண்டு. ஆனல் அது தற்காலிகக் கட்டம். ஆண்டவன் உன்னைக் காத்து, உன் முயற்சிக்கு ஆசி அளிப்பாராக. எவ்வளவு காலம் வெளியே தங்குவது அவசியமென்று கருதுகிருயோ, அவ்வளவு காலம்

நீ தங்கி, எவ்வளவ் சீக்கிரம் இயலுமோ, அவ்வளவு சீக்கிரம் நீ திரும்ப வேண்டும்.

முனிவருக்கும், அவர் சகோதரிக்கும், என் அன்பைத் தெரிவி. எஃபியைப் பார்க்கத் தவறாதே. அவருக்கும் மற்ற நண்பர்களுக்கும் என் அன்பு.

உன் பொருட்கள் நேரத்தில் வந்து சேர்ந்தன என்று நம்பு கிறேன்.

அன்பு,

*20-6-'34* பாபு

## 225

*சி. மீரா,*

உன் கடிதமும் அஞ்சலட்டையும் வந்து சேர்ந்தன. ஆண்டவன் உன்னைக் காப்பாராக. ஓய்வில்லாமல், தொடர்ச்சியாகப் பல பேட்டிகளை நடத்திக் கொண்டிருக்கின்றேன். இறைவன் உன்னுடன் இருப்பாராக. எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

*22-6-34*

## 226

*சி. மீரா,*

உனக்கு வண்டி நிறைய அன்பு என்பதைத் தவிர வேறு செய்தி இல்லை. * * *

*29—6—'34* பாபு

## 227

*சி. மீரா,*

நேரத்துடன் போராடிக் கொண்டே வேலை செய்து வருகிறேன். ஆகவே என்னிடமிருந்து நீ நீண்ட கடிதம் எதிர்பார்க்கக் கூடாது ச... உனக்கு விவரமாக எழுதுவார். இன்று நடந்த வருந்தத்தக்க நிகழ்ச்சி[1] பற்றிய முழு விவரத்தை அவர் உனக்குத் தருவார்.

---

[1]பாபுவின் ஆஜ்மீர் கூட்டத்தில், அவர் ஆதரவாளருக்கும், பண்டித லாலாநாத் தலைமையில் சனாதனக் குழு ஒன்றுக்கும் இடையே கைகலப்பு நடந்தது. இந்த சநாதனக் குழுவினர் பாபுவின் ஹரிஜன சுற்றுப் பயணம் முழுவதுமே அவரைப் பின் தொடர்ந்து, பலவித ஆர்ப்பாட்டங்கள் நடத்தி வந்தனர். இம் முறை, அவர்கள் கருப்புக் கொடி ஆர்ப்பாட்டம் ஒன்று நடத்தினர்கள். அதையொட்டிப் பாபு கூட்டத்திற்கு வந்து சேர்வதற்கு முன்பே நடந்த கைகலப்பில் பண்டித லாலா நாத்துக்குக் காயம் ஏற்பட்டது. நடந்ததைப் பாபு அறிந்தவுடன், அகிம்சை மீறப்பட்டதற்குப் பிராயச்சித்தம் செய்யும் பொருட்டு, ஒரு வாரம் உண்ணு நோன்பு இருக்கப் போவதாக அறிவித்தார்.

## 229

சி. மீரா,

ஓடுகிற இரயிலில் இது எழுதப்படுகிறது.

* * * *

ஆகஸ்ட் மாதம் முடிவுறும் வரையிலுமாவது எனக்கு நிகழ்ச்சிகள் எவையும் கிடையாது. நான் செல்ல வேண்டிய பாதை எனக்குத் தெளிவாகவே தெரியவில்லை. அதைப் பற்றி நான் கவலைப்படவில்லை. அடுத்த படி எது என்பதை அவர் எனக்குக் காட்டுவார். ஆண்ட்ரூஸ் 25ந் தேதி திரும்புவார்.

உன் உடல் நலனைக் காத்துக் கொள்ள வேண்டும். உன் இங்கிலாந்துப் பயணத்தால் உருவான பலன் எதுவும் தெரியாவிடிலும், அதைப் பற்றி நான் கவலைப்படமாட்டேன் என்பதை நீ தயவு செய்து தெரிந்து கொள்ள வேண்டும். என்னைப் பொறுத்த வரை, உனக்கு இதில் கிடைக்கும் அனுபவமே போதிய பலன். ஆகவே உன் மீதோ, உன் சூழ்நிலை மீதோ, நீ அதிருப்தி கொள்ள வேண்டியதில்லை.

என் உடல் நலன் சீராகவே உள்ளது. அலுப்பு இருக்கத்தான் செய்கிறது. ஆனால் அது தவிர்க்க முடியாதது.

அன்பு,

*12—7—'34* பாபு

## 230

சி. மீரா,

மீண்டும் இதை இரயிலில் எழுதுகிறேன். என்னிடமிருந்து நீண்ட, விவரமான, கடிதங்களை நீ எதிர்பார்க்கக் கூடாது. வாரா வாரம் உனக்கு என் அன்பைத் தெரிவிக்க முடிந்தாலே போதுமென்று நான் கருதுகின்றேன். மற்றதைச் சந்திரசங்கர் திறமையாகச் செய்துவிடுகிறார். இப்பொழுது மகாதேவும், அது போலவே, வல்லபபாயும் ஓய்வாக இருக்கின்றனர்; பியாரிலாலும் மகாதேவும் காகாவும் என்னுடன் இருக்கின்றனர். ஜெயராம்தாஸ் கூட ஓய்வாகத் தான் இருக்கின்றார்; ஆனால் என்னுடன் இல்லை. முக்கியமானவர்களில் ஜவாஹர்லாலும் அப்துல் கபார் கானும் இருக்கின்றனர்.

இந்த இரயிலில் கல்கத்தாவுக்குச் சென்று கொண்டிருக்கின்றேன். அங்கு ஆளுனரையும் நான் சந்திக்கக் கூடும்; மூரைச் சந்திப்பது நிச்சயம்.

---

228 என்னுள்ள கடிதம் உண்ணாவிரதத்தைக் குறித்துக் கலங்கவேண்டாம் என்று ஆறுதல் கூறி காந்திஜி எழுதிய கடிதமாகும்.

வரப்போகும் உண்ணு நோன்பு உனக்குக் கவலை தரக் கூடாது. உண்ணு நோன்பிருக்க முடிவு செய்ததையொட்டி, கருப்புக்கொடி ஆர்ப்பாட்டத்தினரைத் தாக்கியதில் நேரடியாகப் பங்கு கொண்டவர்களின் பெயர்கள் தெரிந்து விட்டது கேட்டு நீ வியப்படைவாய்.

* * *

அன்பு,

*19-7-'34* பாபு

## 231

இரயிலில்,
*25—7—'34*

*சி. மீரா,*

நீ என்னுடன் எப்பொழுதும் இருக்கின்ருய் என்று உனக்குச் சொல்வதற்கே இதை எழுதுகின்றேன்.

அன்பு,

பாபு

## 232

*சி. மீரா,*

காய்கறியை ஒரு கையிலும் பேனவை இன்னெரு கையிலும் வைத்துக்கொண்டு இதை எழுதுகிறேன். அஞ்சல் நேரம் நெருங்கி விட்டது. ஆகவே என் அன்பை மட்டுமே உனக்கு அனுப்ப முடியும்.

பாபு

*26-7-'34*

## 233

*சி. மீரா,*

காலை 6 மணிக்கு உண்ணு நோன்பைத் தொடங்கினேன்; இப்பொழுது 7 மணி. இவ்வாரத்தில் உனக்கு மனச் சஞ்சலம் எதுவும் ஏற்படாமலிருக்க வேண்டும். கவலை கொள்ளச் சிறிதும் இடமில்லை. ஆனல் இதையெல்லாம் நான் சொல்லி என்ன பயன்? இது உனக்குக் கிடைப்பதற்குள் ஒருவார உண்ணு நோன்பு முடிந்து, மேலும் ஒரு வாரம் கடந்திருக்கும்.

* * *

இப்போது என் உள்ளத்தில் பல மாறுதல்கள் ஏற்பட்டு வருகின்றன. காங்கிரசில் புகுந்துள்ள ஊழல், இப்பொழுது எனக்கு ஊட்டும் வேதனையைப் போல் எப்பொழுதும் வேதனை அளித்ததில்லை. காங்கிரசிலிருந்து விலகி, வெளியிலிருந்து அதன் குறிக்கோள்களுக்காகப் பாடுபடுவது உசிதமா என்பது குறித்து நண்பர்களுடன் ஆலோசித்து வருகின்றேன். ஊழலைக் கண்டு எனக்கு ஆத்திரம் ஏற்படுவது நல்லது தான். அவசரப்பட்டு நடவடிக்கை எதுவும் எடுக்க மாட்டேன்; ஆனால் அதைப் பொருட்படுத்தாமல் இருக்க முடியாது. இங்கு இயங்கும் பெண்கள் நிலையத்தைப் பொறுத்தவரை, நான் வார்தாவிலே தங்கிக் கவனிக்க முடிந்தால் ஒழிய, அல்லது அதன் நிர்வாகப் பொறுப்பு முழுவதையும் வினோபா ஏற்றுக் கொண்டால் ஒழிய, அதை மூடிவிட வேண்டுமென்று நான் கருதுகிறேன். என் உண்ணா நோன்பின் போது, அவர் இதைப் பற்றிச் சிந்திப்பார். இவையிரண்டும் தான் என் மனத்தை இப்பொழுது பெரிதும் வாட்டும் பிரச்னைகள்.

மற்ற செய்திகளை மகாதேவ் அல்லது பியாரிலால் உனக்குத் தெரிவிப்பார்.

... ... ... ...

அங்கு உன் வேலை அதிகமாகத்தானிருக்கிறது. அதைச் சமாளிக்க நீ காட்டும் ஆற்றல் பாராட்டுதற்குரியது. நீ வேறென்ன செய்ய முடியும்? அவசரப் படவேண்டாம். உடலைக் கெடுத்துக் கொள்ளாதே.

... ... ...

அன்பு,

பாபு

வார்தா,
7-8-'34

மாக்ஸ்வெல்லுக்கு என்னால் எழுத இயலவில்லை. வருந்துகிறேன்.

## 234

சி. மீரா,

உண்ணா நோன்பைத் தொடங்கிய பின் 7ந்தேதி செவ்வாய்க் கிழமை நான் உனக்கு எழுதினேன். இன்று வியாழன்; நோன்பை நிறுத்தி மூன்று நாட்களாகின்றன. கடைசி நாள், உடலுக்குச் சித்திரவதையாக இருந்தது. அவ்வாறு இருந்ததும் ஒரு வகையில் நல்லதே. உடல்வேதனை ஏற்படாவிடில், நோன்பிற்குப் பொருள்

என்ன? 'வேதனையில் இன்பம்' என்ற சொற்றொடர்க்கே பொருளில்லாமல் போகிறது—வேதனையே இல்லாவிடில். சாம்ராஜ்யமே கிட்டுமென்றாலும் இந்த அனுபவத்தால் எனக்குக்கிடைத்துள்ள செல்வக் களஞ்சியத்தை நான் விட்டுக் கொடுத்திருக்கமாட்டேன்.

இதை நான் எழுதும்போதே, பலம் மீண்டும் மெதுவாக ஊற்றெடுத்து வருவதை உணர்கிறேன். வசுமதியின் உதவியுடன் தட்டட்டியில் சில அடிகள் நடந்துவிட்டு, இதை எழுத உட்கார்ந்துள்ளேன்.......பிரபாவதியும் இருக்கிறாள். சென்ற சில நாட்களாக அவள் பம்பரமாய்ச் சுற்றிப் பாடுபட்டுள்ளாள். அவளுக்கு எங்கிருந்து தான் உடல்வலிமை வருகிறதோ எனக்குத் தெரியவில்லை. அவளுக்கு அலுப்பு தோன்றுவதாகவே தெரியவில்லை.

* * *

அங்கு உன் உடல் நலம் சீராக இல்லை என்பது விசித்திரமாய் உள்ளது. கடும் உழைப்புக்கு அவசியமான பசுங் கனிகளையும் பச்சைக் காய்கறிப் பச்சடியையும் போதிய அளவுக்குச் சாப்பிடுகிறாயென்று நம்புகிறேன்.

ஆக்ஸ்போர்டிலுள்ள உன் சிற்றப்பாவைப் பார்க்கச்சென்றதை நீ சித்திரித்துள்ளது நகைச்சுவை நிரம்பியதாய் உள்ளது. ஏனோ தெரியவில்லை, நீள் உருண்டையான இத்தாலிய முகம்[1] என்னைப் பெரிதும் கவர்கிறது. ஆகவே அழகான அக்குழந்தையை நீ சித்திரித்துள்ளது எனக்கு வியப்பளிக்கவில்லை.

* * *

அன்பு,

பாபு

*16—8—'34.*

வேறொருவரைக் கொண்டு எழுதியது.
திருத்தப்படாதது.

# 235

*சி. மீரா,*

இவ்வாரம் உனக்கு நான் எழுத முற்படக்கூடாது. நான் உடனடியாகக் கவனிக்க வேண்டிய வேலை அதிகம் இருப்பதால், உனக்கு நீண்டதொரு கடிதம் எழுத இயலாது. மகாதேவாகிலும் உனக்கு எழுதியிருப்பார். என் உடல் நலமாக உள்ளதென்றும்,

---

[1] "நீள் உருண்டையான இத்தாலிய முகம்' என்பது என் சித்தியைக் குறிக்கும். அவள் ஆங்கிலேய இனத்தைச் சேர்ந்தவளேயாயினும், அந்த நீள் உருண்டையான முகம் அவளுக்கிருந்தது.

நான் முழுவேகத்துடன் செயலாற்றி வருகிறேனென்றும் உனக்குச் சொல்லவே இதை எழுதுகிறேன். என்னைப்பற்றிக் கவலைப்பட இடமில்லை.

* * *

கட்சியின் சட்டமன்றப் பிரிவுக்குழுவின் கூட்டமும் காரியக் கமிட்டிக் கூட்டமும் நடக்க விருக்கின்றன. அவற்றில் நான் கலந்து கொள்ள வேண்டும்......கான் சகோதரர்கள் இங்கு வந்துள்ளனர். அவர்களுடன் மிக்க மகிழ்ச்சியுடன் பொழுதைப் போக்குகின்றேன். அவர்களுடன் அதிகம் பழகப் பழக, அவர்கள் மேல் அன்பு பெருகுகிறது. அவர்கள் அவ்வளவு நல்லவர்கள் ; எளிய இயல்பும், அதே சமயத்தில் கூர்ந்த மதியும் கொண்டவர்கள். அவர்கள் சுற்றி வளைத்துப் பேசுவதேயில்லை.

அன்பு,

பாபு

## 236

அயல்நாட்டுத் தந்தி.

வார்தா 22 *14* (செப்) *15-20*.

மீராபென், மேற்பார்வை காலோப், லண்டன்.

கமலானி விரும்பினால் அவனை உன்னுடன் அழைத்து வா. முடிந்தால், அக்டோபர் 20ந்தேதி ஆண்ட்ருஸ்[1] வரும்வரை, அங்கு இரு.

அன்பு,

பாபு

## 237

அயல்நாட்டுத் தந்தி.

பம் *51* வர்தா *13* *29* (செப்)

மீராபாய், மேற்பார்வை அலக்சாந்தர் உட்ப்ருக், செல்லிஓக், பர்ஹாம்

ஆண்டவன் உனக்கு ஒளியேற்றி வழிகாட்டட்டும். ஆசி.[2]

பாபு

---

1. இதனால் நான் இன்னும் ஒரு மாதம் அங்கு தங்க வேண்டியதாயிற்று. இதைப் பயன்படுத்தி, நான் அமெரிக்காவுக்குச் சென்றேன். அங்கு இரு வாரங்கள் தான் தங்க முடிந்தது.

2. நான் அமெரிக்கா போக முடிவு செய்தது, பாபுவுக்கு அப்பொழுது தான் தெரிய வந்தது.

## 238

சொல்லி, வேறொருவரால் எழுதப்பட்டது.

*வார்தா, 12 அக்டோபர், 1934*

*சி. மீரா,*

உன் கடிதம் கிடைத்தது. நீ அமெரிக்காவுக்குப் போகவிருந்த தால், உனக்கு நான் எழுதிப் பயனில்லை என்று தெரியும். மேலும் என்னிடமிருந்தோ, எங்களில் வேறு எவரிடமிருந்தோ, அமெரிக் காவில் நீ கடிதத்தை எதிர்பார்த்திருக்க மாட்டாயென்று எண்ணு கிறேன்.......அமெரிக்காவில் உன் அனுபவங்களைப்பற்றி உன்னிட மிருந்து தெரிந்து கொள்ள ஆவலாய் இருக்கின்றேன். டாக்டர் ஹோம்ஸுக்கு எழுதிவிட்டு, அமெரிக்காவுக்கு நீ சென்றது, மிகப் பொருத்தமானதாகும். அது உனக்கு மிக அவசியமான அனுபவ மாகும்.

இங்கிலாந்தில் வேலைகள்பற்றி உன் திட்டம் எனக்கு விளங்கு கிறது. நாம் சந்திக்கும்போது, அதைப்பற்றிப் பேசவேண்டும். ஆகவே அதுபற்றி இப்பொழுது கருத்து எதுவும் தெரிவிக்கப் போவதில்லை.

இங்கு எல்லாம் ஒருவகையாக உருவாகி வருகிறது. என்ன நடக்கப்போகிறது என்பது எனக்குத் தெரியாது. காங்கிரசை விட்டு வெளியேற வேண்டுமென்பதுதான் என் திடமான விருப்பம். அதனால் காங்கிரசுக்கும் எனக்கும் நன்மை ஏற்படுமென்று நான் நிச்சயமாக நம்புகிறேன். வெளியே இருப்பதன் மூலம், காங்கிர சுக்குத் திறமையாகத் துணைசெய்ய முடியுமென்று நான் எண்ணு கிறேன்.

அங்கிலையில் இப்பொழுது இருப்பதுபோல், சுமையாக இருக்க மாட்டேன்; அதே சமயத்தில், அவசியம் ஏற்படும்போது, என் கருத்துக்களைக் காங்கிரசுக்குத் தெரிவிக்கமுடியும். இவைபற்றி எழுதுவதில் நான் நேரத்தைச் செலவு செய்யக்கூடாது. இவற்றை மகாதேவும் பியாரிலாலும் கவனிக்கவேண்டும். இப்பொழுது ஒவ்வொரு நிமிடமும் முக்கியம்.

அன்பு,

பாபு

திருத்தப்படவில்லை.
ஸ்ரீமதி மீராபென்.

## 239

*சி. மீரா,*

நீ மேலைநாடுகளில் இருக்கையில் உனக்கு என் கடைசிக் கடிதம் இதுதான். பம்பாய்க்கு என்னை அழைத்துச் செல்லும்

இரயில் மிகுந்த ஆட்டம் கொடுக்கிறது. டாக்டர் கான்சாகிபின் மகளுடன் தொடர்பு கொண்டு, அவளுக்கு இங்குவர விருப்பம் இருந்தால், அவளை உன்னுடன் அழைத்து வரவேண்டும்.[1] கமலா விக்கு என்ன நடக்கப்போகிறது என்பது எனக்குத் தெரியவில்லை. கான்சாகிப் புதல்விக்கு நீ பயணச் சீட்டு வாங்கவேண்டும். அவர் கட்டணத்தை இங்கு செலுத்தியுள்ளார். கட்டணத்திற்கு இன்னும் அதிகப் பணம் தேவைப்படுமானல் அதை உனக்குத்தர அம்பா லால் நிறுவனத்திற்கு ஆணை பிறப்பிக்கப்பட்டுள்ளது.

இங்கு நிகழ்ச்சிகளைப்பற்றிச் சிறிதும் சஞ்சலமடையாதே. எல்லாம் நன்மைக்கே.

அன்பு,

பாபு

பம்பாய் நோக்கி இரயிலில்.
*20-10-'34.*

## 240

[ஐரோப்பாவிலிருந்து நான் திரும்பிய பின் வார்தா ஆசிரமத்தில் பாபுவைச் சேர்ந்தேன். அதற்குச் சிறிது காலத்திற்குப் பின், பாபு மகன்வாடியில் தங்கத் தொடங்கினர். அங்கு, கிராமக் கைத்தொழில் சங்கம் அப்பொழுது நிறுவப்பட்டு, வளர்ச்சி அடைந்து வந்தது. நானும் அங்கு தங்கினேன். பாபு போர்சாதிலிருந்து கீழேயுள்ள கடிதத்தை எழுதினர்.]

சி. மீரா,

இங்கு 5-45 மணிக்கு வந்து சேர்ந்தோம். இப்பொழுது காலை 8-20 மணி. நல்ல குளிர்ச்சியாக உள்ளது. இதமான தென்றல் வீசுகிறது. பம்பாயில் ஆனந்தியும் பாலும் எங்களோடு சேர்ந் தனர். ஆகவே நாங்கள் இப்பொழுது ஐந்து பேர். பால், என்னைக் கவனித்துக் கொள்ளும் முழுப் பொறுப்பையும் ஏற்றுக் கொண்டுள்ளார். பழைய முகங்கள் நிறைய இருக்கின்றன; என் தேவைகளை முன் கூட்டியே அறிந்து வசதிகள் செய்ய அவர்கள் காத்திருக்கின்றனர்கள். ஆகவே என்னைக் குறித்து நீ கவலை கொள்ள வேண்டியதேயில்லை. உன்னை என்னுடன் அழைத்து வராததுதான் சரியான முடிவு என்று எனக்கு இப்பொழுது தெளிவாகத் தெரி கிறது. ஆனல் வருங்காலத்திறகு இதை ஒரு வழிகாட்டியாக ஏற்றுக்கொள்ள வேண்டியதில்லை. எப்படியும், இறுதி முடிவு செய்வது உன் உரிமையேயாகும்.

---

1. அவளை என்னுடன் அழைத்து வந்தேன்.

உனக்கு வேண்டிய அளவு பழம் கிடைக்கிறதென்று நம்பு கிறேன். உனக்கு வேண்டியதைப் பெற ஏற்பாடு செய்து கொள்ளத் தயங்கக் கூடாது.

அன்பு,

பாபு

போர்சாத்,
22-5-'35

## 241

சி. மீரா,

** ** **

சிந்தியைத் துப்புரவு செய்ய ஒரு நாள் கூடத் தவறக் கூடாது*[1] ஆனல் அதே சமயத்தில் குன்றின் உச்சி வரை மௌன மாக நடப்பதையும் விடக் கூடாது.

எனக்கு மிக லேசான நிகழ்ச்சி நிரலையே சர்தார் வகுத் துள்ளார்.

அன்பு,

பாபு

போர்சாத்,
26-5-'35

---

*1. மகன்வாடியில் நாங்கள் குடிபுகுந்த பின்பு, அருகாமையில் உள்ள வயல்களுக்கு அதிகாலையில் உலாவச் செல்வேன். அருகாமையில் உள்ள சிந்தி என்ற சிறு கிராமம் வழியாகத் தினமும் சென்றேன். இது வார்தாவை ஒட்டிய சிற்றூர் என்றே சொல்லலாம். இக் கிராமவாசிகள், ஆண்களும் பெண்களும்; கிராமத்துக்கு வெளியேயுள்ள சாலைகளின் இரு மருங்கிலும் மலசலம் கழிப்ப துண்டு. இதைப் பற்றி நான் பாபுவிடம் குறிப்பிட்டபோது அவர் கூறினர், 'சுகாதார வழிகளைக் கிராமவாசிகளுக்குச் சொல்லிக் கொடுப்பது நம் கடமை, ஆனல் அவர்கள் செவி சாய்க்க மறுத்துப் பொதுச் சாலைகளைத் தொடர்ந்து அசுத்தப்படுத்தினல், நாமே அச்சாலைகளைத் துப்புரவு செய்ய வேண்டும்.' நாங்கள் எவ்வளவோ நயந்து கூறியும், கிராமவாசிகள் எங்கள் பேச்சை ஏற்க வில்லை. ஆகவே வாளியையும் மண்வாரியையும் எடுத்துக் கொண்டு, என்னுடன் சேரத் தயாராயிருந்த தொண்டர்களையும் அழைத்துக் கொண்டு, தினமும் சென்று சிந்தியின் சுற்றுப்புறச் சாலைகளைச் சுத்தம் செய்யும்படி பாபு கூறினர். ஒவ்வொரு நாளும் நானும், இரண்டு மூன்று நண்பர்களும் சென்று மூன்று நான்கு வாளி நிறைய மலத்தை அப்புறப்படுத்தி, ஒரு வயலில் தோண்டியிருந்த குழியில் கொட்டி வந்தோம். ஐரோப்பியர் உள்பட, மகன்வாடிக்கு வந்த நண்பர்கள் அனைவரையும் இக் காலைப் பணியில் என்னுடன் சேருமாறு பாபு அழைப்பார். எனக்கு நினைவிருக்கும் வரை, அவர்களில் அனேகமாக அனைவருமே இந்த அழைப்பை ஏற்றனர். கிராமவாசிகளோ, இதைப் பெரும் வேடிக்கையாகக் கருதித் தினமும் தொடர்ந்து சாலைகளை அசுத்தம் செய்து வந்தனர்.

## 242

சி. மீரா,

சிறந்த வர்ணனைகளைக் கொண்ட உன் இரு கடிதங்களும் கிடைத்தன. உன் அகத் தூண்டுதல்களுக்கு நிறைவு தேடத் தனிமையில் உலாவச் செல்வது உனக்கு எவ்வளவு அவசியமானது என்பதை அவை எடுத்துக் காட்டுகின்றன*[1] தினமும் முடியாவிட்டால் கூட, இன்னும் அடிக்கடி நீ உலாவச் செல்ல வேண்டும். இப்பொழுது ஏறக்குறைய அஞ்சல் நேரமாகிவிட்டது. 2 பவுண்டு பால், இரண்டு தோலா வேப்பிலை, உள்ளூரில் கிடைக்கும் மாம்பழச் சாறு ஒரு பெரிய கிண்ணம், எலுமிச்சை வகைப் பழங்கள்,—இவையே இங்கு என் முக்கிய உணவு அங்கிருப்பதை விட இங்கு மிகவும் குளிர்ச்சியாக உள்ளது என்பது தெளிவு. கடலிலிருந்து இது 15 மைல் தூரத்தில் தான் உள்ளது.

அன்பு,

*27-5-'35*

பாபு

## 243

சி. மீரா,

நீ அங்குள்ள வெப்ப நிலையைச் சித்திரித்திருப்பதைப் பார்த்தால், இங்கு போர்சாத் இன்பலோகம் என்றே கூறவேண்டும். மாலையிலும் காலையிலும் மிகவும் சுகமாகக் குளிர்ச்சியாய் இருக்கிறது. பகலும் இரவும், வார்தா பெரும் உலைக்களமாக இருக்கும் போல் தோன்றுகிறது. எப்படியும், எல்லாம் இனிது நடந்தால், நாங்கள் ஜூன் 2ந் தேதி அங்கு வந்து சேருவோம்.

அம்துல் சலாம், தனக்குரிய வழியிலேயே வளர்ச்சி அடைய நாம் விடவேண்டும். அவள் அதிசயப் பெண்;—இயற்கையின் அபூர்வ வெளிப்பாடு. அவள் நீண்ட நாள் வாழ்ந்தால், மனித சமுதாயத்தின் தலைசிறந்த ஊழியராக விளங்கக் கூடும்.

அன்பு,

பாபு

போர்சாத்,
*29-5-'35*

---

*1. என் குழந்தைப் பருவத்திலிருந்தே தனிமையையும் இயற்கையையும் நான் பெரிதும் விரும்பியதுண்டு. அவை இல்லாமல், என்னில் ஏதோ ஒன்று பசியால் நலிவது போல் தோன்றும். வெட்டவெளியிலும் வயல்களிலும் தனிமையில் நடக்க எனக்கு முதன் முதலாக வாய்ப்பு கிடைத்தது வார்தாவில் தான்.

# 244

[சென்ற கடிதத்திற்கும் இக் கடிதத்திற்கும் இடையே மீண்டும் ஓர் இடைவெளி; அதில் பற்பல முக்கிய நிகழ்ச்சிகள். சிலகாலம் மகன்வாடியில் பாபுவுக்கு நான் பணிவிடை செய்து வந்தேன். பாபுவின் உடல்நிலை பெரிதும் கெட்டு, இரத்தக் கொதிப்பு அதிகமாயிருந்தது. அதே சமயத்தில் பலதரப்பட்டவரும் குடி புகுந்ததன் காரணமாக, மகன்வாடியில் கூட்டமும் அதிகமாயிற்று. சிந்திக் கிராமப் பிரச்னைக்குத் தீர்வு எதுவும் ஏற்படவில்லை. தனியாக வேறெவருடைய துணையுமின்றித் தாம் சிந்தி கிராமத்தில் வசிக்கப் போவதாகவும், தமக்கு வேண்டிய உதவியைக் கிராமவாசிகளிடமிருந்தே பெற்றுக் கொள்ளப் போவதாகவும் திடீரெனப் பாபு அறிவித்தார். பாபுவின் உடல் இருந்த நிலையில், அவர் இவ்வாறு முடிவு செய்ததைக் கேட்டு அனைவரும் அதிர்ச்சி அடைந்தனர். அவருக்குப் பதிலாக நான் சிந்திக்குச் சென்று தங்கினால், அந்த ஏற்பாட்டை அவர் ஏற்றுக் கொள்வாரா என்று நான் பாபுவைக் கேட்டேன். அவரும் அரை மனதாகச் சம்மதித்தார். ஓர் அறை கொண்ட, ஒரு சிறிய குடிசை கட்டப்பட்டது. அங்கு நான் வசிக்கச் சென்றேன். சிந்தி உண்மையில் ஒரு கிராமமே அல்ல வென்றும், கிராம வாழ்க்கையைப் பற்றிய அனுபவங்களையும் நம் பரிசோதனைகளையும் அங்கு நடத்திப் பார்ப்பது பொருந்தாதென்றும் நான் கருதினேன். ஆகவே சிந்தியில் தங்க வேறொருவர் முன்வந்தவுடன், நான் உண்மையான கிராமப் புறத்தில் ஒரு சிற்றூருக்குச் சென்று குடிபுகுவது நல்லதென்று யோசனை கூறினேன். அதன்படியே, சேகான் என்ற கிராமத்தை நான் தேர்ந்தெடுத்து. சிந்தியிலிருந்து அங்கு நான் சென்று தங்கினேன். கீழேயுள்ள கடிதம், சேகானுக்கு எழுதப்பட்டது.]

மகன்வாடி,
*29-11-'35*

சொல்ல வேறொருவரால் எழுதப்பட்டது.

சி. மீரா,

உன் கடிதத்தைக் கொண்டு வந்த ஆள் அவசரமாகத் திரும்பிப் போக விரும்புகிறார். உன் கடிதம் வந்தவுடன் அதை நான் படித்தேன். படித்தவுடன், அதற்குப் பதிலைச் சொல்லி, வேறொருவரைக் கொண்டு எழுத வைக்கின்றேன். நீ கேட்டுள்ள பொருட்களை, நாளை கடிதம் கொண்டு வருபவர் மூலம் கொடுத்தனுப்புவோம். பசுவை வளர்த்தல் நல்ல யோசனை. அங்கு பசு இல்லாவிடில், இங்கிருந்து என்னால் ஒன்று அனுப்பி வைக்க முடியும். அது உனக்கு நல்ல தோழியாக இருக்கும்; பயனுள்ள வேலை செய்ய உனக்கு வாய்ப்பும் அளிக்கும். அதற்கிடையில் அங்கு என்ன பால் கிடைக்கிறதோ, அதை நீ சாப்பிட வேண்டும். அங்கு ஆடுகள் இருக்கின்றனவா? இருந்தால், சில ஆடுகளைக் கடனாகப் பெற ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். உனக்கு எவ்வளவு தேவையோ, அவ்வளவு நெய் சாப்பிட வேண்டும். மகன்வாடியிலிருந்து நெய் பெற ஏற்பாடு செய்து

கொள். ஆரம்ப அனுபவம் உற்சாகமாய் அமைந்துள்ளது குறித்து மிகுந்த மகிழ்ச்சி. இங்கு அனைவரும் சுகம்.

அன்பு,

பாபு

## 245

சி. மீரா,

நீ மீண்டும் உடல் நலன் இழந்து விட்டாயே.*[1] விரைவில் குணமடைந்து, உன் பொறுப்பை மீண்டும் ஏற்றுக் கொள்வாயென்று நம்புகிறேன். மலைகளின் தனிமையை நீ நாடுவது நல்லதே. இரத்தக் கொதிப்பு இருந்த போதிலும் கூட, என் உடல் நலன் தொடர்ந்து தேறி வருகிறது. இப்போது இரத்த அழுத்தம் ஏறியுள்ளதன் காரணத்தைக் கண்டு பிடித்துவிட்டேன் என்றெண்ணுகிறேன். ஆனால் புதன்கிழமை இதைப் பற்றி இன்னும் அதிகம் அறிவேன். கவலைக்கு இடமில்லை. நிறைய உடற் பயிற்சி செய்யவும், கெட்டி உணவு சாப்பிடவும் அனுமதிக்கப்படுகிறேன்.

அன்பு,

பாபு

(பாபுவை இடமாற்றத்திற்காக ஆமதாபாத் அழைத்துச்சென்றிருந்தனர்.)

## 246

சி. மீரா,

உன் கடிதம் என் கவலை அனைத்தையும் போக்கியது. பழைய தவறுகளையே எண்ணி ஏங்கிக் கொண்டிராமல், வருங்காலத்தில் அவற்றை மீண்டும் செய்வதில்லை என்ற நம்பிக்கையுடன் உற்சாகமாக இருக்க நீ தந்த வாக்குறுதியைக் காப்பாற்றுவாய் என்று நம்புகிறேன். நீ முடிவுகள் செய்யும்போது, மற்றவர்கள் என்ன சொல்வார்களென்று நினைக்காமலிருந்தால், உனக்கு ஒரு சிரமமும் இருக்காதென்று நான் உறுதியாக நம்புகிறேன். உன் அகத்தே குடி கொண்டுள்ளவருடன் கலந்து ஆலோசி. அவர் உன்னை எப்பொழுதும் கைவிடமாட்டார். என் உடல் நன்கு தேறி வருகிறது. மருத்துவர்கள் நாளை வருகிறார்கள். அவர்கள் கருத்தை உனக்குத் தெரிவிப்பேன்.

அன்பு,

பாபு

ஆமதாபாத்
*8-2-'36*

---

*1 எனக்கு மீண்டும் சுரம் வந்திருந்தது.

# 247

[என்னகத்தே பெரியதொரு போராட்டம் மூண்டிருந்தது. பாபுவுடன் ஒரு கிராமத்தில் வசிக்கவேண்டும் என்பதே என் பேரவாவாக இருந்தது. சபர்மதியில் தங்கிய நாட்கள் முதற்கொண்டு, கிராமங்களுக்குச் செல்ல வேண்டுமென்பதே என் விருப்பமாக இருந்தது. ஆனால் கிராமத்திற்குச் செல்ல வேண்டுமென்ற ஆசை ஒரு புறமும், பாபுவுடன் இருக்க வேண்டுமென்ற ஆசை ஒரு புறமும் இழுக்க, நான் ஊசலாடிக் கொண்டிருந்தேன். இந்த இரண்டு ஆசைகளும் ஒருங்கே கூடுமென்று இப்பொழுது எதிர்பார்த்தேன். ஆனால் நிலைமையோ வேதனை அளிப்பதாய் இருந்தது. சேகானில் தங்குவதால் பாபுவிடமிருந்து என்றுமே பிரிந்திருக்க நேரிடுமானால், அதை என் உடல் நிலையோ உளநிலையோ தாங்கிக்கொள்ள முடியாது என்பதை உணர்ந்தேன். ஏற்கெனவே இந்த மனவேதனையால் என் உடல்நலன் கெட்டு வந்தது. சேகானில் நான் நிரந்தரமாகத் தங்காவிடில் பாபுவின் இரத்தக் கொதிப்பு மோசமாகுமென்று மற்றவர்கள் சொல்லிவந்ததால், என் வேதனை இன்னும் அதிகரித்தது. இச் சோதனையை என்னால் தாங்க முடியவில்லை என்பதைப் பாபு அறிந்தவுடன், என்னால் சேகானில் தங்க முடியாவிடில், தாமே அங்கு போய்த் தங்குவதாகக் கூறினார். ஆனால் எந்த நிபந்தனைகளின் கீழ் சிந்திக்குப்போக அவர் உத்தேசித்திருந்தாரோ, அதே நிபந்தனைகளின் கீழ்தான் சேகானுக்கும் அவர் போவதாகக் கூறினார். அதாவது, தம் பழைய ஊழிய நண்பர்கள் எவருமில்லாமல், தாம் மட்டும் தனியாக அங்கு தங்குவார்; நான் அண்டைக் கிராமம் ஒன்றுக்குச் செல்லவேண்டும். இது என் இதயத்தைத் தகர்த்தது; ஆனால் எப்படியோ நான் சமாளித்துக் கொண்டு அங்கிருந்தேன். இறுதியில் பாபு சேகானுக்கு வந்து தங்க முடிவு செய்தபோது, அவருடைய குடிசையையும் மாட்டுத் தொழுவத்தையும் அவருக்காக ஆயத்தம் செய்யும் மகிழ்ச்சியில் என் வேதனையை மறந்தேன். எனக்கு, ஒரு மைல் தொலைவில், வரோதா கிராமத்திற்கு மேலிருந்த மேட்டில் ஒரு சிறு குடிசையைக் கட்டிக் கொண்டு, பாபு சேகானில் குடிபுகுந்த ஒரு வாரத்திற்குள், நான் குன்றின் மேலிருந்த என் குடிசைக்குச் சென்றேன். அங்கு என் குதிரை மட்டுமே எனக்குத் துணையாய் இருக்க, நான் தனியாக வசித்தேன். ஆனால் மற்ற ஊழியர்கள் சேகானை விட்டுச் செல்லவில்லை. தனியாக வசிக்க வேண்டுமென்ற தம் குறிக்கோளைப் பாபுவால் எய்த முடியவில்லை. அதற்கு மாறாகப் பாபுவின் குடிசையில் கூட்டம் பெருகிச் சிறிதுகாலத்தில் பாபுவுக்கே அங்கு இடமில்லாமல் போனது.]

சி. மீரா,

சேகானுக்குப் போக நீ அஞ்சுகிறாய் என்பதைக் காண்கின்றேன். அங்கு போக வேண்டுமென்ற அகத் தூண்டுதல் உனக்கு இல்லையென்றால், நீ செல்லாதே. 'நிக்ரஹஹ கிம் கரிஷ்யதி' என்ற

கீதைச் செய்யுள் உனக்குத் தெரியுமல்லவா? கட்டாயப்படுத்துவ தால் என்ன பலன் கிட்டும்? இது தன்னைத் தானே கட்டாயப் படுத்துவதாகும். ஓரளவுவரை எதிர்ப்பது, கடமையேயாகும். அகத் தூண்டுதலும் மகிழ்ச்சியும் இல்லாத போது, அது கட்டாயப் படுத்துவதாகிறது. எதிர்ப்பின் மூலம் நமக்கு உறுதி வளரும் வரை, அது நன்மை என்பது மட்டுமல்ல, கடமையும் ஆகும். ஆனால் ஒவ்வொரு முயற்சியும் நமக்கு அலுப்பை உண்டாக்கினால், அது நிர்ப்பந்தம் என்பது தெளிவாகிறது; அதைத் தவிர்ப்பது அவசியம். உன் விருப்பத்திற்கு மாறாகச் சில காரியங்கள் செய்ய, உன்னை நீயே நிர்ப்பந்தம் செய்துள்ளாய் என்பது தான் உன்னிட முள்ள தீங்கு. இது பொய்மையேயாகும். ஆகவே, அவசியம் போக வேண்டுமென்ற அகத் தூண்டுதலும், போகாவிடில் வேதனை அனுபவிப்பாய் என்ற தெளிவும் உனக்கு ஏற்பட்டால் ஒழிய, நீ சேகானுக்குச் செல்லக் கூடாது.

இது தெளிவாக விளங்குகிறதா? காந்தி, கனு ஆகியோர் மிகுந்த அக்கறையுடனும் அன்புடனும் என்னைக் கவனித்து வரு கின்றனர்.

அன்பு,

பாபு

*13-2-'36*

## 248

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. நீ மேற்கோள் காட்டியுள்ளபடி நான் எழுதவில்லையே. ஆனால் உன் தவறு உன் வாதத்தைப் பாதிக்கவில்லை. என் நேற்றைய கடிதத்தில், நீ இவ்வாறு வாதம் செய்யக் கூடும் என்பதை முன்கூட்டியே எதிர்பார்த்து, அதற்குப் பதிலும் அளித்திருந்தேன். பிராயச்சித்தம் செய்ய நீ சேகானுக்குச் செல்ல வேண்டியதில்லை.[1] போகாவிடில் இன்பமாக இருக்க முடியாதென்றால் தான், நீ அங்கு போக வேண்டும். மகன்வாடியில் நான் இருக்கும்போது, பா எதை விரும்பு கிறாளோ, அதில் அவளுக்கும் பங்கு கொடுத்துவிட்டு, மற்றப் பணிவிடைகள் அனைத்தையும் நீ எனக்குச் செய்யலாம். நான் சேகானுக்குப் போகும்போது—நீ அங்கிராவிடில் அங்கு நான் போகத் தானே வேண்டும்—இப்பொழுது உள்ளவரில் எவரும் என்னுடன் இருக்க முடியாது. சேகானில் புது நண்பர் களுடனும் புது ஊழியர்களுடனும் பழக வேண்டும். என்னருகில் இருக்கும் பொருட்டு, நீ விரும்பினால், அண்டைக் கிராமம் எதிலும்

---

[1] நான் சேகாவில் தான் இருந்தேன்; தற்காலிகமாக, ஜம்னலால்ஜியின் பங்களாவில் மாட்டுத் தொழுவத்தில் தங்கி வந்தேன். 'செல்ல' என்று பாபு சொன்ன போது அங்கு நிரந்தரமாகத் தங்குவது பற்றியே குறிப்பிட்டார்.

குடியேறலாம். நான் அண்மையில் அதிக சுற்றுப்பயணம் செய்வேன் என்று எதிர்பார்க்கவில்லை; இந்தியாவுக்கு வெளியே நிச்சயம் செல்லப் போவதில்லை. "தூரக் காட்சியை நான் நாடவில்லை. ஒரு தடவை ஓர் அடி எடுத்து வைப்பதே எனக்குப் போதும்." என் இதயம் கிராமங்களில் உள்ளது. அங்கு செல்ல ஏதாகிலும் ஒரு காரணம் வேண்டும். நானாக முடிவு செய்து அங்கு செல்லவோ, நண்பர்கள் வாதத்திற்குப் பதில் சொல்லவோ, எனக்குத் துணிவில்லை; ஆனால் சேகானை விட்டுச் செல்ல நீ சம்மதித்தால், எனக்குக் குணமாகி நான் திரும்பியவுடன் சேகானுக்கு மகிழ்ச்சியுடன் செல்வேன். இது உனக்குத் தண்டனை எதுவும் விதிக்கும் வகையிலல்ல; கிராமத்திற்குச் செல்ல, கடவுளே அளித்த வாய்ப்பாக ஏற்றுச் செல்வேன். மழையால் எனக்குச் சிறிதும் தொந்தரவு இருக்காது. எனக்கு அங்கு என்ன வசதி தேவையோ, அதை நான் ஏற்பாடு செய்து கொள்வேன். ஆகவே என் பொருட்டு நீ சஞ்சலம் அடையக்கூடாது. கிராமத் தொண்டு செய்ய அகத் தூண்டுதல் உனக்கு இருந்தால் மட்டுமே, நீ சேகானுக்குச் செல்ல வேண்டும். இல்லாவிடில் நீ அமைதியாக, மகன்வாடியிலேயே தங்கிவிட வேண்டும். உன் குடிசை அங்கிருக்கிறது. அதைவிட வசதியான ஏற்பாடு வேண்டுமென்றால், நீ சொன்னால் போதும்; அது செய்து தரப்படும். சுருங்கச் சொன்னால், எதுவாயினும், உன் அகக் குரலை மீறி நீ எதுவும் செய்யக் கூடாது. நான் நன்றாக இருக்கின்றேன். ஆம்; நாங்கள் பர்தோலியில் இரண்டு நாட்கள் தங்கிவிட்டு, அங்கு 23ந் தேதி போய்ச் சேர்வோம்.

அன்பு,

ஆமதாபாத் பாபு
*14-2-'36*

## 249

[இதற்குள், நான் கிராமவாசிகள் உதவியுடன், கிராமத்தில் எனக்கு ஒரு சிறிய குடிசை கட்டிக் கொண்டேன்.]

சி. மீரா,

** ** **

கிராமங்களில், உண்மையான கிராமவாசிகளுடன் நாம் நெருங்கிய தொடர்பு கொள்ளும் ஒவ்வொரு முறையும், நம் பாதையில் உள்ள சிரமங்களை நமக்குப் புலப்படுத்தும் நேரத்திலே, புத்தறிவும் புதிய நம்பிக்கையும் பிறக்கச் செய்கிறது. என் இதயம் அங்கு உள்ளது. என் முயற்சி எதில் முடியும் என்பது எனக்குத் தெரியாது.

** ** **

அன்பு,

பாபு

## 250

சி. மீரா,

உன் 3-வது கடிதம் வந்துள்ளது. நீ ஒரு குதிரை வாங்கியுள்ளாய் என்றறிந்து மிக்க மகிழ்ச்சி. விலையைப் பொருட்படுத்தாதே. அவர்கள் எது நல்லதென்று நினைக்கிறார்களோ, அவ்வாறு அச் செலவுக்குக் கணக்கு எழுதிக் கொள்வார்கள். எதையுமே, நீ உன்னை அலட்டிக் கொள்ளாமல், நிதானமாகச் செய். வெய்யில் காயும்போது ஓய்வெடுத்துக் கொள். கோடை காலத்தில் காலை பத்து மணிக்கு முன்பும் மாலை நான்கு மணிக்குப் பின்பும் எல்லா வேலையையும் வைத்துக் கொள். நீ இப்பொழுது சாப்பிடுவதை விட அதிகப் பழம் சாப்பிட வேண்டும். தலையில் ஈரத்துணிக் கட்டு போடுவது அவசியம். ஈரத்துணிக் கட்டை விட ஈரமண் கட்டில் ஈரம் அதிகம் நிற்கும்.

வெப்பம் நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. இப்பொழுது மாலை 3 மணியை நெருங்கிக் கொண்டிருக்கின்றது. உடம்பைப் போர்த்திக் கொள்ளவில்லை. பங்காவைத் தாங்கிக் கொள்ள முடிகிறது.

அன்பு,

பாபு

டில்லி,
*16-3-'36*

## 251

[கோடைகாலம் ஆரம்பித்துவிடவே, நான் பகிசாவுக்குத் திரும்பி, சில மரங்களுக்குக் கீழ் தங்கி வந்தேன். வெய்யிலைத் தடுக்க பாய்க் கூரை ஒன்றும் வேய்ந்து கொண்டேன்.]

சி. மீரா,

இம்முறை நீ எழுதியுள்ள கடிதம் சிந்தனையைக் கிளறுவதாய் உள்ளது. ஜ......யின் பண்ணையில் உள்ள கிணறு பற்றி நீ சொல்வது மிகுந்த சஞ்சலமூட்டுகிறது.[1] நம் பாதையில் எத்துணை பெரிய தடைகளும் சிரமங்களும் உள்ளன என்பதைத்தான் அது உணர்த்துகிறது. இவை அனைத்துக்குமிடையே, நலமாகவும் அமைதியாகவும் இருக்க நான் முயற்சி செய்வதுபோலவே நீயும் கற்றுக் கொள்ள வேண்டும். இங்கு எனக்குச் சிக்கல் எதுவுமின்றி, எல்லாம் இனிதாகச் செல்கிறது என்று நீ எண்ணமாட்டாய். கிரா

---

1. *கிணற்றை ஹரிஜனங்கள் பயன் படுத்துவது கூடாதெனச் சாதி இந்துக்கள் தடை கூறி வந்தனர்.*

மத்தில் குடிபுகுவது பற்றி மட்டுமல்ல, அரசியல் அம்சம் பற்றியும், இங்கு எனக்குச் சிரமங்கள் ஏற்பட்டுள்ளன.

* * *

அன்பு,

பாபு

டில்லி,
*20-3-'36.*
*காலை 4 மணி.*

## 252

*சி. மீரா,*

உன் கடிதம் பலவகைகளில் எனக்குச் சஞ்சலமூட்டுகிறது. உனக்கு இன்னும் குணமாகவில்லை. சேகானில் தங்குவது உனக்கு ஒத்துக் கொள்ளவில்லையென்றால், நீ காலம் தாழ்த்தாமல் அங்கிருந்து செல்லவேண்டும். பீஹாரில் ஏற்பட்டதுபோல், உடல் நலன் முறியும்வரைக் காத்திருந்து, பின்னர் செல்லக்கூடாது. என் பலவீனங்கள் எனக்குத் தெரிந்தோ தெரியாமலோ இருக்கலாம். ஆனால் உனக்கு நான் மீண்டும் மீண்டும் எச்சரிக்கை செய்யத் தேவையில்லை. உன் உடல் அடியோடு கெட்டுவிட நீ இடம் கொடுக்கக் கூடாது. இம்முறையும் நோய்க்கு, என்னிடமிருந்து பிரிவே காரணமாக இருக்கட்டும்; ஆனால் சென்ற முறை இருந்த சூழ்நிலைச் சந்தர்ப்பங்கள் இம் முறை இல்லையே.

* * *

அன்பு,

பாபு

டில்லி,
*23-3-'36*

## 253

*சி. மீரா,*

உன் கடிதங்கள் அனைத்தும் ஒழுங்கான கிரமத்தில் வந்து சேர்ந்தன.

இயநிலையிலும் அவ்வப்போது மாறுதல்கள் ஏற்பட்டுள்ளன. மழையும் புயலும் வீசின. மழைக்காலம் வரும்வரை இயநிலை ஒரு சீராக இருக்க வேண்டும்.

நான் உனக்குக் கொடுத்த தேதிகளில் மாறுதல் எதுவுமில்லை. 7ந் தேதி இங்கிருந்து புறப்பட்டு, 8ந் தேதி காலை லக்ஷ்மணபுரியை அடைகிறோம்.

ஆனந்த பவனத்தில், முன்பிருந்த அறையில்தான் நான் இப்பொழுதும் தங்கியுள்ளேன். ஆனால் இம்முறை, மோதிலால்ஜியும் கமலாஜியும் இல்லை. ஈடு செய்ய முடியாத நட்டம். பெரியம்மாவைத் தேற்ற முடியவில்லை. அவர்கள் உடல்நலனும் கெட்டுவிட்டது. ஆனால் அவர்கள் துணிவுமட்டும் குலையவில்லை.

என்ன நேரிட்டாலும், உன் உடல்நலனைக் காத்துக்கொள். செஜிலா[1] அங்கிருப்பது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது. அது ஒரு பெரிய வரப்பிரசாதம்தான்.

ஆம்; இப்போது உன் வாழ்க்கையை எண்ணி நான் பொறாமைப் படுகிறேன். என் உடம்பு நகரங்களில் தங்கித் தழைக்கின்றபோதிலும், என் உள்ளம் கிராமங்களில்தான் இருக்கின்றது.

அன்பு,

அலகாபாத், பாபு

*5-4-'36.*

## 254

சி. மீரா,

சேகானைப் பற்றியே நான் எண்ணிக் கொண்டிருக்கிறேன். ஜம்னாலால்ஜி கூடப் பாதி மனம் மாறிவிட்டார்.[2] செஜிலாபோன்ற ஒரு விசுவாசமான, அறிவுள்ள தோழன் கிடைத்துள்ளது குறித்து எனக்குப் பெரு மகிழ்ச்சி. உன் இரவுப் பயணங்கள்[3] பற்றி எனக்கு உண்மையில் அச்சமாக இருக்கின்றது. அவ்வாறு அச்சம் கொள்வது தவறு என்பதை அறிவேன். நாம் அனைவரும் ஆண்டவன் கையில் உள்ளோம். ஆயினும் தவிர்க்கக்கூடிய துன்பங்கள் பற்றி நாம் எச்சரிக்கையாக இருக்கவேண்டும் என்பதே என் கவலை. உடல் நலனுடனும் உற்சாகமாகவும் உவகையுடனும் நீ இருப்பாயென்று நம்புகிறேன்.

* * *

அன்பு,

*13-4-'36* பாபு

நாங்கள் அனைவரும் இன்று உண்ணாநோன்பு மேற்கொண்டுள்ளோம். என் நோன்பை நான் இப்பொழுதுதான் முடித்துள்ளேன்.

---

1. என் குதிரை.
2. பாபு அங்கு செல்லும் யோசனையை ஏற்பதில்.
3. வீடு திரும்புகையில், இருட்டில், கிராமச் சாலைகளைக் கடந்து நீண்ட தூரம் நான் வரவேண்டியிருந்தது.

## 255

சி. மீரா,

கட்டிட வேலையை ஆரம்பிக்க ஜம்னலால்ஜி எனக்கு முழு அதிகாரம் தந்துள்ளார்.[1] நாளை மாலையிலாவது, 23ம் தேதி காலையிலாவது நீ வந்தால், நான் அனைத்தையும் விளக்குகிறேன். நான் 23ந் தேதி மாலை நாகபுரிக்குச் சென்று, 26ந் தேதி மாலை அல்லது நிச்சயமாக 27ந் தேதி காலை திரும்புவேன்.

மற்றவை நாம் சந்திக்கும்போது.

அன்பு,

*21-4-'36* பாபு

## 256

[மரங்களின் கீழ் நான் அமைத்துக்கொண்டிருந்த முகாமிற்கு வந்து சில நாட்கள் தங்கப் பாபு திட்டமிட்டிருந்தார். அப்போது தம் குடிசையை அமைப்பதற்கு இடம் தேர்ந்தெடுக்கவும், அதைக் கட்டுவது குறித்து விவரமான செய்முறைக் குறிப்புகள் கூறவும் பாபு உத்தேசித்திருந்தார்.]

சி. மீரா,

முடிந்தால், உலைப்பானையை இதைக்கொண்டுவரும் ஆளிடமே கொடுத்தனுப்புகிறோம். இல்லாவிடில் நான் வரும்போது கொண்டு வருகிறேன். பாவுக்கு சிறிது சுகமில்லாமல் உள்ளது. சேகானில் ஆடுகள் இருக்கின்றனவா?[2] இருந்தால், நான் என்னுடன் அவற்றை அழைத்து வரத் தேவையில்லை.

அன்பு,

*27-4-'36* பாபு

## 257

சி. மீரா,

அவசியமான பொருள்களை என்னுடன் நான் கொண்டு வருவேன். நான் நாளை வரமுடியாது. கா. க.[3] வின் கூட்டம் இன்னும் நடந்து கொண்டிருக்கிறது. உறுப்பினர்கள் இங்கிருக்கும்வரை நான் இங்கிருந்து வரமுடியாது. எப்படியும் நான் தொடர்ந்து 10 நாள் அங்கிருக்க முடியாது. ஞாயிறன்று டாக்டர் அம்பேத்

---

1. சேகானில் பாபுவுக்குக் குடில் அமைக்க.

2. ஓர் ஆட்டை ஏற்பாடு செய்து, மரத்தின்கீழ் என் குதிரையுடனும் பசுவுடனும் கட்டிவைத்திருந்தோம்.

3. காங்கிரஸ் காரியக் கமிட்டி.

கார் வருவதானால், 'மே 1, 2, தேதிகளிலும் நான் இங்கிருக்க வேண்டும்.

* * *

அன்பு,

28-4-'36 பாபு

## 258

சி. மீரா,

ஆண்டவனின் சித்தமிருந்தால், நான் நாளை அங்கு வருகிறேன். தாள் அனுப்பப்படுகிறது. மற்றவை நாம் சந்திக்கும்போது. நாளைக் காலை சுமார் 7 மணிக்கு நான் உன்னுடன் இருப்பேன்.

வார்தா, அன்பு,
29-4-'36. பாபு

## 259

சி. மீரா,

உன் இனிய கடிதம். ஆறு மணிக்குப் பின் கிராண்ட் டிரங்க் இரயிலில் நான் புறப்படுகின்றேன். ஐ...வுடன் கிராமத்தின் வழியாகப் பாதைபற்றி நீண்டதொரு பேச்சு நடத்தினேன். அவர் அது பற்றிச் சிந்தித்துக் கொண்டிருக்கின்றார். உடல்நலனை நன்றாகப் பார்த்துக்கொண்டு, உற்சாகமாக இரு. என் குடில் இன்னும் முடிவடையவில்லையென்றாலும்,[2] நீ அதிக வேலையால் அலுப்படையாதே; பதட்டம் அடையக் கூடாது.

திமிசுக் கட்டைகள் கிடைத்தன என்றெண்ணுகிறேன்.

அன்பு,

பாபு

8-5-'36.

---

1. டாக்டர் அம்பேத்கார் வந்தார்; ஆனால் சேகானுக்கு வந்து, மரங்களின் கீழ், பாபுவைச் சந்தித்தார்.

2. குடில், மாட்டுத் தொழுவம் ஆகியவற்றின் கட்டிட வேலை முழு வேகத்துடன் நடந்து கொண்டிருந்தது. குடில், மாட்டுத் தொழுவம், சாலை, குன்றின் மீது என் வீடு ஆகிய அனைத்தையும் கட்டி முடிக்க ஆறு வார அவகாசம் தானிருந்தது. பல்வந்த்சிங், முன்னலால் பாய் ஆகியோரும் நானும் அதிகாலையிலிருந்து இரவு வரை முழு மூச்சுடன் வேலை செய்தோம். ஆயினும் நாங்கள் எல்லா வேலையையும் முடிப்பதற்கு முன், மழை தொடங்கிவிட்டது. ஆனால் ஜூன் 16 ந் தேதி கொட்டும் மழையில் குடிபுக பாபு வந்த போது, வீடு தங்குவதற்கு ஏற்றதாகத் தானிருந்தது.

## 260

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. ஆம்; இங்கு வெகு சுகமாய் இருக்கின்றது. எழில்மிக்க இந்த மலைப்பகுதியின் அமைதியையும் தனிமையையும் நீயும் அனுபவிக்க வேண்டுமென்று எண்ண, என் சொந்த அன்பு என்னைத் தூண்டுகிறது. உன் கடமையை ஆற்றும் இடத்தில் நீ இருப்பதே உனக்கு நல்லது என்று,-என்னை மறந்து விட்டு எண்ணினால்,-உண்மை அன்பு எனக்கு உணர்த்துகிறது.

டாக்டர் அன்சாரியின் மரணம் எனக்குப் பெரும் அதிர்ச்சியாக இருந்தது. அதை என்னால் இன்னும் தாங்க முடியவில்லை. எத்தனையோ சந்தர்ப்பங்களில், அவர் இல்லாதது கை ஒடிந்தது போலிருக்கிறது.

குடில் வேலையில் நல்ல முன்னேற்றம் கண்டு வருவது குறித்து மகிழ்ச்சி. சாலையைப் பற்றி நீ சொல்வது எனக்கு விளங்குகிறது. எது நல்லதென்று நீ எண்ணுகிறாயோ, அவ்வாறே செய்வாய். இப் பிரச்னைகளில் நீ செய்யும் முடிவுதான் சிறந்தது என்ற நம்பிக்கை எனக்குண்டு.

பல்வந்த் சிங், முன்னுலால் ஆகியோர் எந்த வகையிலும், எந்த முறையிலும், உனக்குச் சுமையாக இருக்கக் கூடாது. அவர்களுக்கு நான் எழுதியுள்ள சிறு குறிப்புகளை இத்துடன் அனுப்பியுள்ளேன்.

இது வந்து சேருவதற்குள், வரோதாவில் உள்ள நிலம்[1], உங்கள் கைவசம் வந்திருக்குமென்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

நந்தி மலை,
*14-5-'36*

## 261

சி. மீரா,

நந்தியிலிருந்து நான் எழுதிய கடிதங்கள் உனக்குக் கிடைத்தன என்று நம்புகிறேன்.

ஆம்; டாக்டர் அன்சாரியின் மரணம் எனக்குச் சொந்த முறையில் பெரு நஷ்டமாகும். பிறப்பு, இறப்பு, இரண்டும் பெரிய புதிர்கள். மரணம், மற்றொரு வாழ்க்கைக்குப் பீடிகையாக

---

1. குன்றின் மேலிருந்த நிலம்; என் குடிசைக்காக.

அமையாவிடில், இடையில் உள்ள காலம், நம்மைப் பரிகசிப்பது மட்டுமல்ல, பழிப்பதுமாகும். எப்பொழுது எவருக்கு மரணம் நேரிட்டாலும், அது குறித்து என்றுமே துக்கப்படாமலிருக்கும் கலையை நாம் கற்றுக்கொள்ள வேண்டும். நம் மரணம் பற்றியே நாம் சற்றும் கவலைப்படாமல் இருக்க நாம் உண்மையில் கற்றுக் கொள்ளும் போது தான் அந்நிலையை நாம் அடைய முடியுமென்று எண்ணுகிறேன். எந்தக் கடமையை ஆற்ற நாம் படைக்கப்பட்டோமோ, அதை நாம் ஆற்றி வருகிறோம் என்ற தெளிவு ஒவ்வொரு நிமிடமும் நமக்கு ஏற்பட்டால் தான், நம் மரணத்தைப் பற்றிக் கவலைப்படாத நிலை வரும். ஆனால் அக்கடமை என்ன என்பதை நாம் எப்படி அறிவோம்? ஆண்டவனின் சித்தத்தை அறிவதன் மூலம். அவர் சித்தத்தை அறிவது எப்படி? வழிபாட்டின் மூலமும் நேர்மையான வாழ்க்கை வாழ்வதன் மூலமும்தான், நாம் அறிய முடியும். வழிபாடு என்பதே நேர்மையான வாழ்க்கை வாழ்வதைத் தான் குறிக்கும். ஒவ்வொரு நாளும் இராமாயணம் தொடங்குவதற்கு முன், நாங்கள் பாடும் பஜனை ஒன்றுண்டு. "பிரார்த்தனை என்றுமே எவரையும் கைவிட்டதில்லை. இறைவனுடன் இரண்டறக் கலப்பதே பிரார்த்தனையாகும்'' என்பது அப்பாடலின் பல்லவி.

கட்டிட வேலையில் நீ முன்னேற்றம் கண்டு வருவது குறித்து நான் மகிழ்கிறேன். வரோதாவில் நிலத்திற்கும் கட்டிடத்திற்கும் சேர்ந்து, ரூ 300 போதும். எப்படியும் இப்பொழுது அதற்கு மேல் செலவு செய்யத் தேவையில்லை. அந்தத் தொகைக்குள்ளாகவே, முயற்சி செய்து வேலியும் போட்டுவிட்டால் நல்லது. வேலி போடுவதற்குக் கூலியாட்கள் தேவையில்லை. உன் மேற்பார்வையில், பல்வந்த்சிங்கும் முன்னாலாலுமே வேலியைப் போட்டுவிட முடியும். வேலி போடுவதற்கு வேண்டிய பொருட்களுக்கு விலை ஒன்றுமாகாது. வேலியும் சிறிது நிழலும்தான் முக்கியம்.......

* * * *

அன்பு,

பாபு

நந்தி மலை
*18-5-'36.*

# 262

[என்னைக் கடுமையான மலேரியா சுரம் தாக்கியிருந்தது. எனக்கு 105° சுரம்; வெப்ப நிலையும் 118° ஆக உயர்ந்திருந்தது. நான் இன்னமும் மரங்களின் அடியில்தான் வாழ்ந்து வந்தேன். இப்பொழுது பல்வந்த்சிங்கும் முன்னாலாலும் என் கூட இருந்தனர். நண்பர்கள் என்னை வார்தாவுக்கு அழைத்துச் செல்ல விரும்பியபோது, நான் அதை வன்மையாக எதிர்த்தேன். பட்டணத்தில் ஒரு பங்களாவில் வசிப்பதை விட, மரங்கள், குதிரை, மாடு ஆகியவற்றுடன் என் வாழ்க்கை இனிது நடந்தது.]

*சி. மீரா,*

என் யாக்கை இங்கிருந்த போதிலும், என் இதயம் உன்னுடன் உள்ளது. நான் உன்னிடமிருந்து தகவல் எதிர்பார்த்தேன்; ஆனால் இராமகிருஷ்ணனிடமிருந்து ஒரு கடிதம் வந்துள்ளது. உன்னை வார்தாவுக்கு அழைத்து வரும் உத்தேசம் பற்றி அக் கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. அதற்கு அவசியம் ஏற்பட்டிருக்காது என்று நம்புகிறேன். உன் உடம்பு விரைவில் குணமடைவதற்கு எது அவசியமென்று கருதப்படுகிறதோ, அதைச் செய்ய வேண்டியது தான். கட்டிட வேலையோ, வேறெதுவுமோ, உன் உள்ளத்திற்குச் சுமையாக இருந்து உன்னை வாட்டுவதற்கு நீ இடம் கொடுக்கக் கூடாது. சீரான உடல்நலன் இல்லாமல், எந்தத் திட்டத்தையும் நீ செயல்படுத்த முடியாது. நாளை நல்ல செய்தி வருமென்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

*நந்தி மலை,*
*22-5-'36.*

*நாங்கள் 31ந் தேதி பெங்களூருக்கு இறங்கிச் செல்கிறோம்.*

# 263

*சி. மீரா,*

குடிலில் தடுப்புகள் போட நீ செலவு செய்ய வேண்டாமென்று தான் நான் விரும்புகிறேன். அவசியம் ஏற்படுவதற்கேற்ப, அவ்வப்போது தடுப்பு ஏற்பாடுகளை நாம் எளிதில் செய்து கொள்ளலாம். என் குளிப்பு அறைக்குச் சோட்டாலால் செய்திருந்த ஏற்பாடுகள் உனக்கு நினைவிருக்கலாம். இப்பொழுதே குடிலின் கட்டிடச் செலவை நினைத்தால் எனக்குப் பயமாக இருக்கிறது. நான் விதித்திருந்த வரம்புகளுக்கு உட்பட்டே திவான்ஜி செலவு செய்கிறாரென்று எதிர்பார்க்கிறேன். தளம், நான்கு சுவர்கள், தண்ணீர் சொட்டாத கூரை, வெளித் தாழ்வாரம், சுற்றிலும் வேலி, இவை இன்றியமையாத தேவைகள். இவற்றிற்கு மேலாக, நீ ஒரு சமையலறை, குளிப்பு அறை, தொழுவம், ஆகியவற்றிற்கும் ஏற்பாடு செய்யப் போகிறாய். மேலும் விரிவுபடுத்துவது, நான் வரும்வரை காத்திருக்கட்டும்.

அன்பு,

*24-5-'36.*

பாபு

## 264

சி. மீரா,

23, 24 தேதிகளில் நீ எழுதிய இரு கடிதங்கள் இன்று வந்தன.

நீ சேகாவில் இன்னும் நன்ருகவும் மகிழ்ச்சியாகவும் இருப்பாயென்ருல், அங்கே செல்வாய். உனக்குத் தேவையான உணவும் ஓய்வும் உனக்குக் கிடைக்க வேண்டும். நான் இரு விளக்கப் படங்களையும்[1] திருப்பி அனுப்புகின்றேன்.

திருத்தங்கள் எதுவுமில்லை. தீர ஆலோசித்துச் சீராக அமைத்துள்ளாய். அதை ஏற்றுக் கொள்ளலாம்.

இப்போது எடுக்கின்ற கட்டிலே இக் கடிதம் சேர வேண்டுமென்று விரும்புவதால் நான் இன்று மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

பாபு

26-5-'36

## 265

சி. மீரா,

உன் இரு கடிதங்களுக்கும் நேற்று அவசரமாகப் பதில் எழுதினேன். வேலி போட்ட தோட்டத்திற்கு நீ வரைந்திருந்த இரு வரைபடங்களையும் நான் திருப்பி அனுப்பியிருந்தேன். என் முடிவை விட உன் முடிவே சிறந்ததாயிருக்கும் என்று நான் நம்புவதால், அவ் வரைபடங்களை நான் நுணுக்கமாக ஆராயவில்லை. இது போன்ற பிரச்னைகளை முடிவு செய்ய, உனக்கு இயல்பாகவே நல்ல ஆற்றல் உண்டு.

மகாதேவ் குடில் பற்றி இப்பொழுது யோசிக்க வேண்டாமென்று நான் ஏற்கனவே உனக்குச் சொன்னேனென்று எண்ணுகின்றேன். மேலும் புதிய கட்டிடங்களுக்காகும் செலவை ஏற்றுக் கொள்வதற்கு முன், முதலில் நிலைமையை நன்கு நிதானித்துக் கொள்ள விரும்புகிறேன். இதில் நிதானமாகவே காரியங்கள் செய்வது நல்லது. நல்ல நாட்களின் அனுபவத்தைக் கொண்டு பார்த்தால், மகாதேவ் குழுவினர் மகன்வாடியில் இருந்தால் கூட, அவர்களுடன் எளிதில் தொடர்பு கொள்ள முடியுமென்று தெளிவாகத் தெரிகிறது. நிதானமாகச் செல்வதன் அவசியத்தை வலியுறுத்தவே இதைக் கூறுகிறேன்.

... ... ...

---

1. கட்டிடங்கள், பிரார்த்தனை மைதானம், கட்டிடங்களைச் சுற்றி வெளியிடம் ஆகியவற்றின் அமைப்பைக் குறித்து நான் இரு விளக்கப் படங்கள் தயாரித்து அனுப்பியிருந்தேன்.

நீ சித்திரித்துள்ள புயல், மழை காலத்தில் கிராமத்தில் ஏற்படக் கூடிய நிலைக்கு ஓர் எடுத்துக்காட்டு. பொன்னூர் போல் மேட்டின் மேல் இல்லாததால், ஒரு வேளை சேகானில் நிலைமை இதைவிடச் சற்று நன்றாக இருக்கக்கூடும். எந்த மட்டத்திலும், சாதகங்களும் உண்டு; பாதகங்களும் உண்டு. ஆகவே நிலையற்ற பொருட்களைப் பற்றி விரிவான திட்டங்கள் தீட்டாமல் இருப்பது நல்லது.[1]

அன்பு,

பாபு

*27–5–'36*

# 266

*சி. மீரா,*

நீ ஏற்கெனவே சேகானுக்குப் போய் விட்டாயா? அதில் எனக்குத் தடையில்லை. உனக்குத் தேவையான வசதிகள் அங்கு கிடைத்தால், உன் இதயம் இருக்குமிடம் அதுதான். மழை வந்து விட்டால், கட்டிட வேலை நடக்க முடியாது. ஆகவே கிடைக்கும் தொழிலாளர்களைக் கொண்டு முதலில் கூரையையும் சுவர்களையும் எழுப்புவதில் முனைய வேண்டும். இவை முடிந்து, சுவர்களும் காய்ந்துவிட்டால், மற்ற வேலைகளை மழை காலத்துக்குப் பின்னால் கூட முடித்துக் கொள்ளலாம். ஆனால் இவ்வளவு முயற்சி எடுத்த பின்னும் கூட, நாம் திரும்பி வருவதற்குள் வீடு குடிபுகும் நிலையில் இல்லாவிடில், நான் அதைப் பற்றிக் கவலைப்படமாட்டேன். பலவீனமான உன் உடம்புக்கு மேலும் அலுப்பு வருவிக்கக் கூடாது.

அன்பு,

*29-5-'36* பாபு

# 267

*சி. மீரா,*

... ... ...

உன் 28ந் தேதியிட்ட கடிதம் கிடைத்தது.

கழிப்பிடம் கட்டுவதற்கான செலவை ஏற்றுக் கொள்ளத் தான் வேண்டும். சபர்மதியில் இருந்தது போல் ஒரு குளிப்பு

---

1. பாபுவின் மண் குடிசையை நான் கட்டிக் கொண்டிருந்தபோது, பொன்னூரில், ஜம்னாலால்ஜிக்காக செங்கல் கொண்டு கட்டப்பட்ட நல்லதொரு பங்களா தயார் செய்யப்பட்டு வந்தது. அப்பொழுது வீசிய கடும்புயலில், சிறு மண்குடிசை தப்பியது; செங்கல் வீடு இடிந்து விழுந்தது.

அறையையும் பக்கத்திலேயே அமைத்துக் கொள்வதும் நல்ல தாயிருக்கலாம்.[1]

உன் குடிசை அமைந்திருக்கும் இடத்தை மலை என்று பேருக்குத்தான் சொல்லிக் கொள்ளவேண்டும். எப்படியும் அது குளிர்ச்சியாக இருந்து விட்டால், நீ கடற்கரை ஊருக்குச் செல்ல வேண்டிய அவசியமில்லை.

ஜூன் *14* ந் தேதி இல்லாவிடினும், திங்கட்கிழமை *15*ந் தேதி, நாங்கள் வார்தாவுக்குப் போய்ச் சேருவோமென்று எண்ணு கின்றேன். பேசுகின்ற நாளன்று அங்கு போய்ச் சேர முயற்சி செய்வேன். அது ஞாயிற்றுக்கிழமையாகத்தான் இருக்க முடி யும். ஆனால் அது இயலாவிடில், திங்கட்கிழமை போய்ச் சேர்ந் தால் கூடப் பரவாயில்லை.

ஹரிலால் இஸ்லாம் சமயத்தைத் தழுவியுள்ளது பற்றி நீ இதற் குள் கேள்விப்பட்டிருப்பாய். அதற்குச் சுயநலக் காரணம் எதுவும் தூண்டுதலாக இராவிடில், நான் தடை எதுவும் சொல்லியிருக்க மாட்டேன். ஆனால் அவன் இந்த நடவடிக்கை எடுத்ததற்கு அதைத் தவிர வேறு காரணம் இல்லை என்று அஞ்சுகிறேன். என்ன நடக்கப் போகிறதென்று பொறுத்திருந்து பார்ப்போம்.

நாளை நாங்கள் பெங்களூர் நகரத்திற்கு இறங்கி வருகிறோம்.

அன்பு,

பாபு

நந்தி மலை,
*30-5-'36*

## 268

வேறொருவரைக் கொண்டு எழுதியது.

சி. மீரா,

... ... ...

ஹரிலாலின் சாகசச் செயல்கள் பற்றி குஜராத்திப் பத்திரி கைகள் பத்தி பத்தியாக எழுதுகின்றன.

உன் உள்ளூர் சிம்லாவில்[2] நீ இருப்பாயென்றால், அங்கு உன் னுடன் தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள வசதி செய்து கொள்ள வேண்டும். நான் உள்ள இடத்திற்கும் நீ இருக்கும் இடத்திற்கும் தட்பவெப்ப நிலையில் மாறுதல் இருந்தால் தானே, நான் அங்கு வருவதற்குத் தூண்டுதலாக இருக்கும்!

அன்பு,

பாபு

பெங்களூர்,
*1-6-'36*

---

1. என் குடிசைக்கு.
2. பேருக்கு மலை என்று சொல்லக்கூடிய இடத்தில் அமைந்த என் குடில்.

# 269

சி. மீரா,

... ... ...

வார்தாவிலிருந்து கழுவுக் கலம் (கம்மோடு), சிறுநீர்க் கலயம் ஆகியவற்றையும் சாய்வு மேசையையும் எடுத்து வரும் உத்தேசம் எனக்குப் பிடிக்கவில்லை. ஒரு சின்னக் குந்து மணையின் நடுவிலே பெரிய துவாரம் வைத்துக் கீழே பாதித் தகர டப்பா, வாளி, அல்லது அது போன்ற வேறு பொருளைப் பயன்படுத்திக் கொண்டால் கழிவு வசதிகளைச் செய்து கொள்ளலாம். சிறு நீர்க் கலயத்திற்கு, ஒரு புட்டியையோ, கிராமத்து உலோகப் பானையையோ பயன்படுத்திக் கொள்ளலாம். மேசையைப் பொறுத்தவரை சேகானிலேயே நயமாகவும், பயனுள்ளதாகவும் நாம் ஒன்றைச் செய்து கொள்ளலாம். இந்த வசதிகளைச் செய்து கொள்வதில் அவசரப்படத் தேவையில்லை. எனக்குத் தேவையானது எது என்பது உனக்குச் சரிவர விளங்கவில்லையென்ருல், நான் திரும்பும் வரை நீ காத்திருக்கலாம். மரக் கட்டில் ஒன்றை வாங்கிக் கொள்ளலாம்; ஒரு லோட்டா கூட. குந்துமணை ஒன்றை அங்கேயே ஏற்பாடு செய்துகொள்ளலாம். இன்னுமொரு பசு தேவைப்படும். அதுபற்றிச் சோட்டாலாலுடன் கலந்து பேசு.

* • *

இக் கடிதம் கிடைப்பதற்குள் லீலாவதி அங்கு வந்துசேரக் கூடும். இத்துடன் அனுப்பியிருப்பது அவளுக்கு.

அன்பு,

*6-6-'36.* பாபு

# 270

சி. மீரா,

*3*-ந்தேதி நீ எழுதிய கடிதம் இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது. ஆம்; செஜிலாவுக்குத் தனியாக ஒரு குடில் கட்ட வேண்டும்; அப்பொழுதுதான் உன் தாழ்வாரம் வசதியாக இருக்கும். மீண்டும் யோசித்த பிறகு, ஐரோப்பிய நண்பர்கள் வசதிக்காகக் கழிவுக் கலம், சிறுநீர்க் கலயம் ஆகியவற்றை மகன்வாடியிலிருந்து கொண்டு வருவது நல்லதென்றே நினைக்கின்றேன். நான் சொல்லியிருந்த ஏற்பாடுகளைச் செய்வதுடன், இவற்றையும் கொண்டுவர வேண்டும்.

மயில்கள் உனக்குக் கிடைக்குமானுல், எனக்குத் தடை எதுவுமில்லை. ஆனுல் அவற்றின் பழக்க வழக்கங்கள்பற்றி எனக்கு எதுவும் தெரியாது.

அன்பு,

பாபு

## 271

*சி. மீரா,*

இது, அநேகமாக, இங்கிருந்து உனக்கு நான் எழுதும் கடைசிக் கடிதமாக இருக்கும். இம் மாதம் 14ந் தேதி நாங்கள் வார்தாவில் இருப்போமென்று எதிர்பார்க்கிறோம்.

வண்டிக்காரர்களுக்கு அங்கு யோகம்தான் போலும். ஒரே நேரத்தில், ஒரே வேலைக்காக, 50 வண்டிகள் வேலை செய்வது சேகான் கண்டிராத அதிசயமாக இருக்கும். அவை அனைத்தும் உள்ளூர் வண்டிகள் என்று எதிர்பார்க்கின்றேன். நான் உன்னைப் பார்க்கும்போது, நீ ஆரோக்கியமாகவும் உற்சாகமாகவும் இருப்பா யென்று நம்புகிறேன்.

பல்வந்த்சிங், முன்னலால் இருவரும் அங்கு வந்தது உனக்குப் பெரும் வரப்பிரசாதமாகி உள்ளதுபோலும். முன்னலால் முன்வந்து கூறிய யோசனையை நான் ஏற்றுக்கொள்ள முடிவு செய்தபோதும், உன்னுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளுமாறு நான் பல்வந்த் சிங்குக்கு ஆலோசனை கூறியபோதும், அவர்கள் இருவரும் உனக்கு இன்றியமையாத துணையாக அமைவார்கள் என்று நான் எதிர் பார்க்கவில்லை. எப்படியும், நீ நோய்வாய்ப்பட்டிருந்த போதும், குணமடைந்து கொண்டிருந்த போதும் அவர்கள் உன்னுடன் இருந் தது எனக்கு மிகுந்த ஆறுதலை அளிக்கின்றது.

சென்னைக் கூடையில் ஆப்பிள்கள் இருந்தன. அவற்றைச் சாப்பிட்டாயா? அவை அனைத்தும் ஜானம்மாள் அனுப்பியவை.

அன்பு,

பாபு

பெங்களூர்.
*9—6—'36.*

## 272

[16ந் தேதி அதிகாலையில் பெருமழை கொட்டிக் கொண்டிருந் தது. மழை ஓயும்வரை பாபு வரமாட்டாரென்று நாங்கள் மூவரும்—பல் வந்த்சிங், முன்னலால்பாய் ஆகியோரும் நானும்,—உறுதியாக எண்ணி னோம். புதிதாகக் கட்டியிருந்த மண்குடிசை இன்னும் ஈரம் நிறைந் திருந்ததால், கரி அடுப்புகளை ஏற்றி, பாபு வந்தால் உட்காரப்போகும் மூலையில் வைப்பதில் முனைந்திருந்தோம். இவற்றிற்கிடையில், திடீ ரென, மழையில் தொப்பையாக நனைந்த உடலுடன் பாபுவே உள்ளே புகுந்தார்.]

*சி. மீரா,*

இங்கு இரவு 8 மணிக்கு நாங்கள் வந்து சேர்ந்தோம். இரயில் தாமதமாக வந்தது. உன் கடிதம் எனக்கு வந்து சேர்ந்துள்ளது. என் உள்ளம் அங்கு உள்ளது. ஆனால் 'ஹரிஜன்' வேலைக்காக,

என் உடல் திங்கட்கிழமை வரை இங்குதான் இருக்க வேண்டும். இயங்கிலை இதமாக இருந்தால், செவ்வாய்க்கிழமை காலை 7-30 மணிக்கு அங்கு உன்னுடன் இருக்க முடியுமென்று எதிர்பார்க்கிறேன். வழியிலேயே நான் பால் சாப்பிட்டிருப்பேன். என்னுடன் யார் வருவார்கள், யாராவது வருவார்களா என்பது எனக்குத் தெரியாது. பார்க்கலாம். கவலைப்படாதே. எல்லாம் ஒருவகையாக உருவாகும்வரை, நீ சேகானில் இருக்க வேண்டியிருக்கும் என்பதை நான் உணர்கிறேன். எதைப்பற்றியும் நீ கவலைப்பட வேண்டாம். எவராகிலும் வாயிலில் இருந்து, எந்த வழியாக வரவேண்டுமென்று எனக்குக் காட்டினால் நன்றாக இருக்கும். கோவிந்த் அல்லது தசரத்[1] (அது தானே மற்ற தோழரின் பெயர்?) இதைச் செய்யலாம். ஆனால் எவரையும் அனுப்ப வசதியில்லை என்றாலும் பரவாயில்லை. இத்துடன் சில பழங்களும் வரும்.........

அன்பு,

*14-6-'36* பாபு

## 273

[பாபு சேகானில் தம் குடிலில் இருந்தார்; நான் குன்றின்மேல் என் குடிலில் இருந்தேன்.]

*சி. மீரா,*

இது வெறும் அன்புக் கடிதம்தான். உனக்குக் குணம் உண்டாக வேண்டுமென்பதற்காகப் பிரார்த்தனை செய்து வருகிறேன் என்று சொல்வதைத் தவிர வேறு செய்தியில்லை. புதிய பரிசோதனைகள் எதுவும் செய்யக்கூடாது என்பதுதான் இந்தப் புது அனுபவத்திலிருந்து நீ கற்றுக்கொள்ள வேண்டிய படிப்பினை.[2]

பாபு

## 274

*சி. மீரா,*

சுத்தமான போக்கு இல்லாவிடில், விளக்கெண்ணெய், அல்லது எப்சம் உப்பைச் சாப்பிடுவது தானே? வேறெந்த மருந்து உனக்கு வேண்டுமென்றாலும், என்னால் அனுப்பமுடியும். இங்கிருந்து காய்கறி எதுவும் அனுப்பட்டுமா?

அன்பு,

பாபு

*30-6-'36.*

---

1. இரு ஹரிஜனக் கிராமவாசிகள்.
2. கிராமவாசிகள் நல்லதென்று சொன்ன ஒரு காட்டுச் செடியைக் காய்கறியாகச் சாப்பிட்டுப் பார்த்தேன் என்றெண்ணுகிறேன்.

## 275

*சி. மீரா,*

உன் அறிக்கை நன்ருக உள்ளது. இங்கு மழை பெய்துகொண்டிருக்கிறது. 5ந் தேதி வர முயற்சி செய்யப்போகிறேன். 6ந் தேதி தான் உண்மையான தேதி.

அன்பு,

பாபு

*1—7—'36.*

## 276

*சி. மீரா,*

செய்தி கொண்டுவந்துள்ளவர் என்ன செய்தி கொண்டு வந்துள்ளார் என்பதை ஒருவராலும் விளங்கிக்கொள்ள முடியவில்லை. விளங்கிக் கொள்ளும் அளவுக்கு லீலாவதி போதிய கவனம் செலுத்தவில்லை. நான் பேசமுடியாது.[1] முன்னுலாலுக்குப் பாதி உயிர் போய்விட்டது. ப...வும் அதே நிலையில்தான். ஆகவே உனக்கு வேண்டியதை எழுதி அனுப்புவது நல்லது. இது ஆசிரமமாக உருவாகுமென்று எதிர்பார்த்ததற்குப் பதிலாகக் குழப்பம் நிறைந்த குடித்தனமாகிவிட்டது. இதுதான் என் விதி. என்னகத்தே தான் என் ஆசிரமத்தை நாடவேண்டும்.

பாபு

*20—7—'36*

## 277

*சி. மீரா,*

முன்னேற்றம் தொடருமென்று நம்புகிறேன்.[2] சிக்கல் எதுவும் ஏற்பட்டால், எனக்கு உடனே தெரிவிக்க வேண்டும்.

அன்பு,

பாபு

*10-8-'36*

---

1. மௌன நாள்.
2. எனக்குச் சுரம் இருந்தது.

## 278

சி. மீரா,

இரவு உணவுக்கு மணி அடித்துவிட்டது. இன்று நீ வெளியில் எங்கும் செல்லக் கூடாது. நான் வருகிறேன். நீ நாளை சேகானுக்கு வரலாம்.[1]

அன்பு,

பாபு

*16—9—'36.*

## 279

[தாம் நிறுவியிருந்த பாரதமாதா மந்திரைத் திறக்க சிவபிரசாத் குப்தா விடுத்த வேண்டுகோளை ஏற்றுப் பாபு காசிக்குச் சென்றிருந்தார். நான் சேகானில் என் உடலைத் தேற்றிக் கொண்டிருந்தேன்.]

சி. மீரா,

இதற்கு முன் உனக்கு எழுத என்னால் இயலவில்லை. உங்கள் இருவரையும் பற்றி முன்னாலால் இப்பொழுது தான் நல்ல செய்தி அனுப்பியுள்ளார். உடலிலும் உள்ளத்திலும் நீங்கள் இருவரும் நன்றாக இருக்கின்றீர்கள் என்று நம்புகிறேன். நம் பலவீனங்கள் நமக்கு எச்சரிக்கையாக அமைகின்றன என்பது நமக்கு மகிழ்ச்சி அளிக்கக் கூடியதாகும். ஆகவே கடைசி நாள் நிகழ்ச்சியைப் பற்றிய நினைவு உனக்கு மகிழ்ச்சி தான் தரவேண்டும்.

அன்பு,

பாபு

காசி

*26-10-'36*

---

1. விட்டுவிட்டுச் சுரம் வந்ததால் என் உடல்நிலை மிகவும் கெட்டிருந்தது. மாட்டு வண்டியில் என்னைப் பாபு சேகானுக்கு அழைத்து வந்தார். எனக்கு உடல் தேறிவந்தது; ஆனால் அங்கிருந்த நானாவதிக்கு நச்சுக் காய்ச்சல் (டைபாய்டு) வந்துவிட்டது. பல்வந்த்சிங்குக்கும் கடுமையான மலேரியா. அவர்களைக் கவனிக்கத் தொடங்கி, முடிவில் எனக்கும் நச்சுக் காய்ச்சல் வந்தது. இரண்டு வாரத்திற்குக் கடுமையான காய்ச்சலும். தலைவலியும் இருந்து, உறக்கமே வரவில்லையென்ற போதிலும், நான் அனுபவித்த அமைதியான நிறைவான காலங்களில் ஒன்றாகவே இது என் மனத்தில் பதிந்திருக்கும். குடித்தனத்தில் பெண்கள் யாருமில்லை. எவரையும் அழைக்க விரும்பாமல், எனக்குப் பணிவிடை செய்யும் பொறுப்பைப் பாபுவே ஏற்றுக் கொண்டார். முதலில் நான் தடுத்துச் சொன்னேன். ஆனால் காய்ச்சலினால் ஏற்பட்ட பலவீனத்தினால் மறுக்க இயலாமல், இரவும் பகலும் பாபு வாரி வழங்கிய அன்பையும் ஆதரவான பராமரிப்பையும் மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொண்டேன். அவர் என்னைக் கவனித்துக் கொண்டதன் விளைவாக, சிக்கல்கள் எவையும் ஏற்படாமல், பதினான்காவது நாளன்றே காய்ச்சலிலிருந்து குணமடைந்தேன்.

## 280

சி. மீரா,

இந்தப் பயணத்தின் போது நான் எழுதும் இரண்டாவது கடிதம் இது. நீ என் உள்ளத்தை விட்டு என்றுமே அகலவில்லை என்பதை உனக்குத் தெரிவிக்கவே இதை எழுதுகிறேன். உங்கள் இருவர் உடல் நிலையிலும் தொடர்ந்து முன்னேற்றம் காணப்படு கிறதென்று நம்புகிறேன்.

டில்லியில் எனக்கு நாள் முழுவதும் வேலை இருந்தது. அதை அமைதியாகச் செய்து முடித்தேன். பா எங்களுடன் இருக்கிருள்; மனு, தேவதாசுடன். டில்லியில் இப்பொழுது மிக்க இதமாகவும் குளிர்ச்சியாகவும் உள்ளது. தேவதாஸ் உடம்பு நன்கு தேறி யுள்ளது.

அன்பு,

பாபு

இரயிலில்
*28—10—'36.*
நாளை இராஜ்கோட்; *30* ந் தேதி ஆமதாபாத்.

## 281

சி. மீரா,

உன் இரு கடிதங்களும் என்முன் இருக்கின்றன. உன் வாழ்வில் நீ அகிம்சையைப் போற்ற வேண்டுமானல், பிறர் ஆத்திரத்தையும் சீற்றத்தையும் பொருட்படுத்தாமல் பணியாற்றக் கற்றுக் கொள்ள வேண்டும். அவர்கள் கொள்ளும் ஆத்திரம், தனிப்பட்ட முறையில் உன் மீதோ, உன் வேலை மீதோ, உனக்குப் பிரியமான நண்பர்கள் மீதோ செலுத்தப்பட்டாலும், அதை நீ பொருட்படுத்தக் கூடாது.

அன்பு,

பாபு

திலகர் நகர்.
*26—12—'36.*

## 282

சி. மீரா,

புவியின் முனையிலே-குமரி எல்லையிலே[1]-நேற்றிரவு உன் இரு கடிதங்களும் எனக்குக் கிடைத்தன. உன்னையும், சாந்தாவையும் குமரப்பாவையும் பற்றி விசாரித்து நான் அனுப்பியிருந்த தந்திக்குத் தந்தி மூலம் பதில் கிடைத்தது. மருத்துவ அதிகாரியிடம் நீ உன் காலைக் காட்டினய் என்று நம்புகிறேன். அதைப் பற்றி எனக்குக் கவலையாக இருக்கிறது. அங்கு, நீ இருக்கும் இடத்தில் நல்ல

1. ஆலயப் பிரவேச இயக்கத்தை ஒட்டிப் பாபு தென்னிந்தியப் பயணம் மேற்கொண்டிருந்தார்.

குளிர். இங்கு நாங்கள் அற்ப காரணத்திற்காகவும் உருகிவிடு கிறோம். நீ மன அமைதியும் நிறைவும் கண்டுள்ளாய் என்று நம்பு கிறேன்.....

அன்பு,

பாபு

கன்யாகுமரி,
*15-1-'37*

# 283

*சி. மீரா,*

உன் இரு நீண்ட கடிதங்களும் கிடைத்தன. அவற்றில் நீ சொல்வது எனக்கு விளங்குகிறது. கிராமத் தொண்டிற்கு நான் இப்பொழுது செலவு செய்யும் நேரத்தை விட அதிகம் என்னால் செலவு செய்ய இயலுமென்று நான் எண்ணவில்லை. என் வாழ்வில் எத்தனையோ பெரும் பலவீனங்கள்! அவற்றோடு தான் அதை ஏற்றுக் கொள்ள வேண்டும். நான் இப்போது கிராமத்தில் வசித் துக் கிராம அடிப்படையில் எல்லாப் பிரச்னைகளையும் நோக்கு கின்றேன் என்பதே போதும். வாய்ப்பு ஏற்படுவதற்கு ஏற்ப நான் செயலாற்ற வேண்டும்.

ஹரிஜனங்கள் சமையலறையில் வேலை செய்வதை நான் பொருட்படுத்தவில்லை. ஒரே குடும்பத்தைச் சேர்ந்தவர்களிடம் நாம் எப்படி நடப்போமோ, அதுபோலவே, வரவர ஹரிஜனங் களிடம் நாம் நடக்க வேண்டும். அந்த மனநோக்கு இப்போதே இருப்பதை நான் அறிவேன். அதை மேலும் மேலும் அதிகம் வலியுறுத்துவது தான் அவசியம்.

* * *

அன்பு,

பாபு

*20—1—'37.*

# 284

*சி. மீரா*

இயநிலை இங்கு வெகு சுகமாக இருக்கின்றது. மார்ச்சு மாதம் முழுவதிலும், ஏப்ரல் மாதத்தில் ஒரு பகுதியிலும், எப்பொழுதும் இப்படித் தான் இதமாக இருக்கும்.

விஜயாவின் இதயத்தை நீ கவர்வாய் என்று நம்புகிறேன். அவளை விட நல்ல பெண் ஒருத்தியை நான் உனக்குத் தர முடி யாது. கந்துவையும் மற்றச் சிறுவர்களையும்[1] நீ செல்லம் கொடுத் துக் கெடுக்கக் கூடாது. துரதிருஷ்டவசமாக உனக்கும் எனக்கும்

1. கிராமத்து ஹரிஜனச் சிறுவர்கள்.

இருப்பது போல் மென்மையான தோல் அவர்களுக்கும் வளர்ந்து விட்டால், அவர்கள் கதி அதோகதிதான்.

அன்பு,

பாபு

ஹரிஜன் நிவாஸ், கிங்ஸ்வே,
டில்லி, *15—3—'37*

## 285

சி. மீரா,

டால்ஹவுசிக்குப்[1] போய்ச் சேர்வதில் உனக்குச் சிரமம் எதுவும் ஏற்படவில்லை என்றெண்ணுகிறேன். இரயில் நிலையங்களில் உன்னைச் சந்திக்க யாராவது வந்திருப்பார்களென்று நினைக்கின்றேன். உன் உடல்நலன் முழுவதும் தேறிப் புதிய வலிமையுடன் நீ திரும்ப வேண்டுமென விரும்புகிறேன். ஆனால் விரைவில் குணமடைய வேண்டுமென்ற கவலையில், நீ அலுப்பைத் தேடிக் கொள்ளாதே.

இன்று மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

பாபு

சேகான் (வார்தா)
*13—6—'37*

## 286

சி. மீரா,

டால்ஹவுசிக்கு இப்பொழுதுதான் நீ போய்ச் சேர்ந்திருக்க வேண்டும், அல்லது சேருந்தறுவாயில் இருக்கவேண்டும் என்றெண்ணுகிறேன். வழி, செலவு, நேரம் முதலியவைபற்றிய விவரங்களுடன் போதிய ஆலோசனைகளை சுபாஷ் பாபு கூறியுள்ளார். அது அருமையான கடிதம். நீ தங்களுடன் தங்கலாமென்று அழைப்பு அனுப்பி ரைஸாதா ஹன்ஸ்ராஜ் தந்தி அனுப்பியிருந்தார். ஆனால் சுபாஷ் பாபுவுடன் நீ தங்குவாய் என்று தான் பதில் தந்தி அனுப்பினேன். அவருடன் தங்கினால் உனக்கு நல்ல மருத்துவ வசதியும் கிடைக்கும். உன்னிடமிருந்து இன்று தந்தி வருமென்று எதிர்பார்க்கின்றேன்.

இங்கு இன்னும் கடுமையாக அனல் வீசுகிறது. ரொட்டியை நான் அடியோடு நிறுத்திவிட்டேன்.

அன்பு,

பாபு

*15-6-'37.*

---

1. என் உடல்நிலை கெட்டிருந்ததால் பாபு என்னை டால்ஹவுசிக்கு அனுப்பியிருந்தார். டாக்டர், தரம்வீர் தம்பதிகள் வீட்டில் நான் தங்கினேன். அப்பொழுது சுபாஷ் பாபுவும் அங்கு தங்கியிருந்தார்.

## 287

சி. மீரா,

உன் கடிதம் இப்போதுதான் வந்தது. மலைக்காற்று உன்னைச் சீராக்கி விடுமென எதிர்பார்க்கின்றேன். டாக்டர் தரம்வீருக்கு ஒரு சிறு குறிப்பை இத்துடன் அனுப்பியுள்ளேன். சுபாஷ் பாபுவுக்கு என் அன்பைத் தெரிவி. அவருக்குத் தனியாக எழுத எனக்கு அவகாசமில்லை.

நேற்றுப் பெய்த மழையில், ஓடைப் பாலத்தைச் சார்ந்திருந்த கரை சரிந்து, இரு மருங்கிலும் உள்ள வீடுகள் அழியும் தறுவாயில் இருந்தன என்ற செய்தி உனக்கு வேதனையைத் தரும்.[1] இன்னும் ஐந்து நிமிடங்களுக்கு மழை பெய்திருந்தால், வீடுகள் அழிந்துபோயிருக்கும். என்ன செய்ய வேண்டுமென்று இப்பொழுது யோசித்துக் கொண்டிருக்கின்றேன்.

கான்சாகிப் கூட மெஹர்தாஜ்[2] இன்று வந்தாள்.

மேலும் எழுதுவதற்கு அதிக நேரமில்லை.

அன்பு,

பாபு

சேகான், வார்தா
*19-6-'37.*

## 288

சி. மீரா,

டால்ஹவுசியிலிருந்து நீ எழுதிய இரண்டாவது கடிதம் இப்பொழுதுதான் கிடைத்தது. டால்ஹவுசியில் மந்திர வித்தை எதையும் நான் எதிர்பார்க்கவில்லை. ஆனால் பொறுமையுடன் இருந்தால், நீ முற்றிலும் குணமடைவாய். வைத்தியர் ஆலோசனையை மீறி, நீ உன் விருப்பப்படிதான் நடப்பாயென்று பிடிவாதம் செய்யாதே. உன் நோன்புகளை மட்டும் விட்டுக்கொடுக்க வேண்டியதில்லை. ஆனால் புலால், மதுபானம் இவற்றைத் தவிர்ப்பது தவிர, வேறு நோன்பு கிடையாது.

---

1. சேகான் கிராமத்தில் ஓர் ஓடைமீது சிறிய பாலம் ஒன்று கட்டப்பட்டிருந்தது. அதன் பயனாக மழைத் தண்ணீர் தரை மட்டத்தில் ஓடி வழிவது தடைப்பட்டது. அதன் விளைவாக ஓடையின் இரு கரைகளிலும் இருந்த மண் குடிசைகள் அடித்துச் செல்லப்படும் தறுவாயில் இருந்தன.

2. கான் அப்துல் கபார்கானின் மகள்.

குறிப்பிடும் அளவுக்கு இங்கு மழை பெய்யவில்லை. வெப்பம் சற்று தணிந்துள்ளது. பா 24ந்தேதி திரும்புவாளென்று எதிர் பார்க்கப்படுகிறது.........

கட்டிடம் கட்டுவதில் பல்வந்த்சிங்குக்கு ஒரு மோகம். மாட்டுத் தொழுவம் அனேகமாக முடிந்து விட்டது. ஆனல் விசாலமான வெளிமுற்றத்துக்கு, இடமும் நேரமும் பணமும் அதிகம் செலவாகின்றன. பொறுத்திருந்து பார்ப்போம்.

அன்பு,

பாபு

சேகான், வார்தா.
*21-6-'37.*

## 289

*சி. மீரா,*

நீ வரைந்துள்ள படங்கள் நன்ருக இருக்கின்றன. [1] அப்பயிற்சியைத் தொடர்ந்து மேற்கொள். அது உனக்கு நல்ல பொழுது போக்காக இருக்கும்.

நீ வேகமாக முன்னேறுவதிலும் நிதானமாகச் செல்ல வேண்டுமென்று டாக்டர் தரம்வீர் மீண்டும் என்னை எச்சரித்துள்ளார். நிலையான குணம் ஏற்படுத்த முடியுமென்று அவர் நம்புகிருர்.

* * *

நேற்று முறையாக மழைபெய்யத் தொடங்கியது. இப்பொழுது நல்ல குளிர்ச்சியாக இருக்கிறது. காற்று பலமாக வீசிக் கொண்டிருக்கிறது.

* * *

பல்வந்த் சிங், பர்னேர்கர், இருவரும் பசுக்கள் வாங்கச் சென்றுள்ளனர். மூன்று பசுக்கள் சீக்கிரம் வற்றிப்போகும்.

என் ஆடு மிகக் குறைவாகப் பால் தருகிறது. ஆகவே ஓர் ஆட்டையும் வாங்கவேண்டும். இவ்வாறு குடும்பம் எல்லா வழிகளிலும் பெருகி வருகிறது.

அன்பு,

பாபு

சேகான், வார்தா,
*29-6-'37.*

---

1. என் கடிதங்களுடன் நான் வரைந்த சிறு படங்களைப் பாபுவுக்கு அனுப்புவதுண்டு.

## 290

*சி. மீரா,*

சென்ற சில நாட்களாக என்னிடமிருந்து கடிதங்கள் வராத காரணம் உனக்கு விளங்கும். உன் படங்கள் எனக்கு மிகவும் பிடிக்கின்றன. நீ செழிப்பாக இருக்கிருயென்று நம்புகிறேன்.

* * *

கந்துவும் இன்னும் நான்கைந்து பேரும்[1] வரோதாவிலிருந்து நூற்க வருகிருர்கள். நளவாடி விகிதப்படி, நளவாடி அவர்களுக்கு ஊதியம் அளித்து வருகிறது. அவர்கள் மகிழ்ச்சியுடன் இருக்கிருர்கள். நீ விதைத்த விதை நன்கு முளைத்துத் தழைத்துள்ளது; நல்ல கனிகளும் நிறைய தரக்கூடும்.

இன்று மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

பாபு

சேகான்,
*5—7—'37*

## 291

*சி. மீரா,*

சில நாட்களாக உனக்கு என்னல் எழுத இயலவில்லை. உன் கடிதங்களும் படங்களும் ஒழுங்காக வந்து கொண்டிருக்கின்றன. படங்களை நந்தலால் பாபுவுக்கு அனுப்பி, அவர் கருத்தைக் கேட்டுள்ளேன். அது கிடைத்தவுடன், உனக்குத் தெரிவிக்கின்றேன்.

* * *

எளிய உணவை உட்கொள்ள மருத்துவர் உனக்கு அனுமதி அளித்துள்ளது குறித்து மகிழ்ச்சி. கடலை வகைகள் உனக்கு ஒத்துக் கொள்ளாது.

அன்பு,

பாபு

சேகான், வார்தா
*10—7—'37*

---

1. என்னிடம் பயிற்சி பெற்ற கிராமச் சிறுவர்கள்.

## 292

சி. மீரா,

உன் நீண்ட கடிதம் கிடைத்தது. இங்கு வருவது பற்றி நீ கவலைப்பட்க்கூடாது. மலேரியா சுரமும் மற்ற நோய்களும் உனக்கு வரமுடியாத வண்ணம் உடம்பை உறுதியாக்கிக் கொள்ள வேண்டும். பெருமழை கொட்டுகிறது. கிராமங்களுக்கு வசதிகள் செய்வது பற்றி நான் எவ்வளவோ எண்ணிக் கொண்டிருக்கின்றேன். நீயும் இது பற்றிச் சிந்தனை செய்ய வேண்டும்.

* * *

அன்பு,

பாபு

*12—7—'37*

## 293

சி. மீரா,

சஞ்சலமூட்டும் உன் கடிதம் வந்துள்ளது. உன் மனம் அங்கில்லையென்றால், நீ அங்கு 24ந் தேதி வரை கூடத் தங்க வேண்டாம். மகிழ்ச்சியுடன் அங்கு இருக்க முடியாமல், வெளியிருந்து சுமத்தப்பட்ட ஒரு கடமையைச் செய்வதற்காக அங்கு இருப்பாயானால், அது உனக்கு நிச்சயமாகத் தீங்கு செய்யும். பல முறை அவ்வாறு முயற்சி செய்து, ஒவ்வொரு முறையும் நீ அதில் தோல்வி அடைந்துள்ளாய். ஆகவே உன் அகத்தூண்டுதல் உன்னை எங்கு அழைத்துச் செல்கிறதோ, அதைத் தான் நீ பின்பற்றிச் செல்ல வேண்டும். உன் அகத் தூண்டுதலை ஏற்று நடப்பதால் தவறுகள் ஏற்பட்டே தீருமென்றால், அத் தவறுகளைச் செய்வதன் மூலம் தான் நீ படிப்பினைகளைக் கற்றுக் கொள்ள முடியும்...... என்னைப் பொறுத்த வரை, இக்கடிதம் கண்டவுடன் நீ வரலாம். அதனால் எனக்கு மன வேதனை ஏற்படாது. அதற்கு மாறாக, எவ்விதத் தடையுமின்றிச் சுதந்திரமாக நீ இயங்குகிறாய் என்ற எண்ணத்தில் மகிழ்ச்சி கொள்வேன்.[1]

அன்பு,

பாபு

சேகான், வார்தா

*9—8—'37*

---

1. பழைய போராட்டம் என்னை மீண்டும் ஆட்கொண்டது. நான் சேவா கிராமத்துக்குத் திரும்பினேன்.

## 294

கல்கத்தா,
*22—3—'38*

*சி. மீரா,*

மடத்தனமாக, நான் மைக்கூட்டைக் கொண்டுவரத் தவறி விட்டேன். உன்னைப் போல் கவனமாகவும் பணிவிடை செய்ய ஆர்வமாகவும் இருக்குமளவு பக்குவம் இன்னும் கனுவுக்கு வரவில்லை. ஆகவே நான் உன் கடிதத்தைப் பென்சிலில் தான் எழுத வேண்டும்.

குளிப்பதற்குத் தகரத் தொட்டி மிகவும் பயனுள்ளதாய் இருக்கின்றது.[1] நீ அதைப் பற்றிக் கவனமாக இருந்திராவிடில், அது என்னுடன் வந்திருக்காது. கனுவின் கவனக் குறைவால் ஏற்பட்டது இது. அவன் இன்னும் பக்குவமடைய வேண்டும்.

என் உடல் நலன் மிகச் சிறப்பாக உள்ளது. நல்ல மனிதர் ஒருவருடைய அன்பை முன்னிட்டு நான் ஒரு புதிய பரிசோதனை செய்யத் துணிந்துள்ளேன். இதனால் இரத்த அழுத்த நிலையில் சற்று மாறுதல் ஏற்பட்டுள்ளது; ஆனால் இன்றைக்குள் அது கட்டுப்பட்டுவிடும் என்று நம்புகிறேன். சுசீலா விரும்பினால், இப் பரிசோதனையைப் பற்றிய விவரங்களை உனக்குத் தருவாள்.

சேகானுக்கு வெளியே இன்னும் ஒரு வார காலத்துக்குத் தங்க வேண்டியிருக்குமென்று அஞ்சுகிறேன். காரியக்கமிட்டி கூட்டத்திற்காக நான் கல்கத்தாவிற்குத் திரும்பி வரவேண்டும். நீ சஞ்சலமடையக் கூடாது. ஆண்டவனிடம் அனைத்தையும் ஒப்படைத்து விடு. உன்னை என்னுடன் அழைத்துச் செல்வது பயனாக இருக்குமென்ற போது, நீ வரலாம். மாதக் கணக்கில் நான் வெளியே எங்கு செல்வதானாலும், நீ நிச்சயமாக என்னுடன் வருவாய். உன் உடல்நலன் சீராக உள்ளதென்று நம்புகிறேன். பச்சடிக் கீரைகள் எப்படியிருக்கின்றன?

அன்பு,
பாபு

## 295

*சி. மீரா,*

நான் திரும்பிவருவது, அளவுக்குமீறித் தாமதப்படுவது எனக்கு வேதனை அளிக்கின்றது. நிச்சயமற்ற இந்த நிலை உனக்கும் மிகவும்

---

1. குளிக்கும் தொட்டி இல்லாத ஊர்களுக்குப் பாபு செல்லும் போது இந்தத் தகரத் தொட்டியை எடுத்துச் செல்வது வழக்கம். அதில் வெந்நீரில் படுத்திருப்பது, இரத்தக் கொதிப்புக்குச் சிகிச்சைசெய்வதன் ஓரம்சம்.

துன்பமாக இருக்கும். ஆனால் நீ ஒரு நிதானத்துக்கு வந்திருந்தால், சஞ்சலமடைய மாட்டாய். பத்திரிகைகளிலிருந்தும் மற்றச் செய்திகளிலிருந்தும் உனக்குக் கிடைக்கும் தகவல் எதுவாயிருந்தாலும் சரி, என் உடல் நலன் சீராக உள்ளதென்று நான் சொல்வதை மட்டும் நம்பு. நான் இன்னும் அனுபவிக்க வேண்டிய சோதனைகள் அனைத்தையும் தாங்கிக் கொள்வேன் என்ற நம்பிக்கை எனக்கு உள்ளூர உறுதியாக உள்ளது. பொதுமக்களும் என் சிரமத்தைக் குறைப்பதில் பெரும் பரிவு காட்டுகின்றனர். வெப்ப நிலையும் கடுமையாக இல்லை. நான் திரும்பி வருவதில் ஏற்பட்டுள்ள தாமதம் பற்றியோ, என் உடல் நலன் பற்றியோ நீ கவலைப்படவில்லை என்ற நிம்மதி எனக்கிருந்தால் மகிழ்ச்சியாக இருக்கும். இறுதியில், நாம், எல்லாவற்றிற்கும் ஆண்டவன் கையில் தானே உள்ளோம்.

அன்பு,

பாபு

கல்கத்தா,
*4—4—'38*

# 296

*சி. மீரா,*

இன்று உண்ணா நோன்பு நாள்; உங்கள் அனைவரையும் பற்றி நான் எண்ணுகின்றேன். இங்கு என் வேலையை முடிக்காவிட்டால் கூட, *12ந்* தேதிக்கும் தள்ளிப் போகாமல் இங்கிருந்து புறப்படுவதென்று தற்காலிகமாக நான் முடிவு செய்துள்ளேன். அதற்கு முன்பு புறப்படவும் கூடும். இதுவே நீண்ட காலம் தான்; ஆனால் இதில் என் விருப்பப்படி நடக்கக் கூடிய நிலையில் நான் இல்லை. சேகானுக்கு வெளியே நான் தங்கும் ஒவ்வொரு நாளும், உண்மையில், இழக்கப்படும் நாளேயாகும். ஆனால் அவ்வாறிருந்தும், நான் இங்குள்ள நிலையில் ஒன்றும் செய்வதற்கில்லை. ஆண்டவன், தம் சித்தப்படியே செயலாற்றுவார்....

* * *

அன்பு,

*6—4—'38* பாபு

# 297

*சி. மீரா,*

* * *

உன் மைத்துனர் கடிதம் மிக அருமையாக இருக்கின்றது. உன் சகோதரி மிகப் பண்பட்ட பெண்ணாக—அபூர்வ பிறவியாக—

இருந்திருக்க வேண்டும். அவளை இழந்தது குறித்து நீ வருந்துவது எனக்கு விளங்குகிறது. இந்த இழப்புகள் தான் நம் நம்பிக்கைக்குச் சோதனையாகும். நல்லவர்களைப் பொறுத்தவரை, மரணம் உயர்ந்த தோர் நிலைக்கு அழைத்துச் செல்லும் யாத்திரை என்றும், தீயவர்களைப் பொறுத்தவரை, மரணம் அவர்கள் தப்புவதற்கு உதவி செய்யும் வாய்ப்பு என்றும் உறுதியாக நம்பிக்கை கொண்டிருந்தால்தான், மரணமெனும் புதிரை நாம் மன நிம்மதியுடன் ஏற்றுக் கொள்ளமுடியும்.

அன்பு,

பாபு

பெஷாவார்,
*8-5-'38.*

# 298

சி. மீரா,

இங்கு ஒரே வரட்சி; அங்கு ஒரே குளிர்ச்சி. மழைப்பருவம் நீடிப்பதாலும் பெருந்தீங்கு விளையும். ஆயினும் நாம் அதிருப்திப் படக்கூடாது. அனைத்தும் ஆண்டவன் செயல். நமக்குத்தான் அவரை அறிந்து கொள்ள முடியவில்லை. அதிருப்திப்படுவதும் மனிதருக்குள்ள ஒரு குறைதான். அவரை நேருக்கு நேர் அறியும் வரை அது அடங்காது.

* * *

அன்பு,

பாபு

டில்லி,
*24-9-'38.*

# 299

(புதுடில்லியிலிருந்து *3-10-1938* தேதியிட்ட தந்தி.)

மீரா, மகன்வாடி, வார்தா.

நாளை உத்மன்சாய் புறப்படுகிறோம்.

பாபு

# 300

சி. மீரா,

உங்கள் அனைவருக்கும் முன்னதாகவே ஐரோப்பியக் கடலில் இறங்கிவிட்டேன். கட்டுரைகள்பற்றி உன் கருத்தைத் தெரிவிக்க வேண்டும்; நான் இன்னுமொரு கட்டுரை எழுதியுள்ளேன்.

• • •

நாங்கள் இப்பொழுதுதான் உத்மன்சாய்க்கு வந்துள்ளோம்.

அன்பு,

பாபு

உத்மன்சாய்,
*9-10-'38.*

## 301

*சி. மீரா,*

டாக்டர் பெனஸுக்கு[1] நீ எழுதப்போகும் கடிதத்தின் வரைவு மிக அருமையாக உள்ளது. அதில் ஒரு சொல்லைக்கூட என்னால் மாற்ற இயலாது. காலியாக விட்டிருந்த இடத்தை மட்டும் நிறைவு செய்துள்ளேன்.

பா இன்னும் டில்லியில் நோய்வாய்பட்டு இருக்கிறாள். அவள் குணமடையத் தொடங்கியுள்ளாள் என்று தேவதாஸ் கூறுகிறான்.

சிம்லாவில் தங்குவதனால் மகாதேவ் நன்மை பெறுவாரென்பது நிச்சயம். போதிய வேலையில்லாததாலும், என்னிடமிருந்து பிரிந்து இருக்க வேண்டியதாலும், அவர் உற்சாகமிழந்து சோர்வாக இருப்பார்.

இன்னும் ஓரிரு நாட்களில் நாங்கள் புறப்பட்டு விடக்கூடும்.

தம் பசுக்களிடையே பல்வந்த்சிங் மகிழ்ச்சியாக இருக்கிறாரென்று நம்புகிறேன். நோய்வாய்ப்பட்டுள்ள கன்றுக்குட்டி எப்படி இருக்கிறது?

அன்பு,

பாபு

உத்மன்சாய்,
*13-10-'38.*

## 302

*சி. மீரா,*

உன் கடிதங்கள் அனைத்தும் வந்தன. டாக்டர் பெனஸ் நாடு கடத்தப்பட்டது போன்ற நிலையில் உள்ள போதிலும், உன் கடிதம் இதுவரை போய்ச் சேராவிடினும், இனியாகிலும் போய்ச் சேரும். சரியான உணர்வு அவரிடம் ஓங்கி நிற்கும்வரை, நாடு கடத்தப்பட்டது ஒரு பொருட்டாகாது.

---

1. செக்கோஸ்லவேகியாவை அப்பொழுது ஹிட்லர் விழுங்கிக்கொண்டிருந்தார்.

இங்கு இயநிலை மிக இதமாக உள்ளது. அங்கு வழக்கத்துக்கும் அதிகமாக அடைமழை பெய்கிறது போலும். பம்பாயிலும் அவ்வாறுதான். பயிர்கள் பாழாகிவிட்டன என்றெண்ணுகிறேன்.

* * *

அன்பு,

பாபு

பெஷாவார்,
*15-10-'38.*

# 303

*சி. மீரா,*

எல்லாம் ஒழுங்காகச் சென்றால், மகாதேவ் உள்பட நாங்கள் *11*ந் தேதி அங்கு வந்து சேருவோம். உனக்கு அடிக்கடி நோய் வந்ததன் விளைவாக, நான் உன்னோடு சீக்கிரம் வந்துசேர வேண்டுமென்று எனக்குக் கவலையாக இருக்கின்றது.

டாக்டர் பெனஸுக்கு உன் இரண்டாவது கடிதம் நன்றாகத்தானிருந்தது.

அன்பு,

பாபு

*2-11-'38.*

# 304

அஞ்சலட்டை

*சி. மீரா,*

நான் நேற்று எழுதிய கடிதம் கிடைத்ததென்று நம்புகிறேன். நீ போய்விட்டபின்,[1] இப்பொழுது அனைவருக்கும் உன் நினைவுதான் என்று சொல்லவே இதை உனக்கு எழுதுகிறேன். உன் அறை நிரம்பி வழிகிறது. தற்போதாகிலும், மகாதேவ் எங்கும் செல்லப்போவதில்லை. என் இரத்த அழுத்தம் *160/98.*

அன்பு,

பாபு

சேகான்,
*26-11-'38.*

---

1. நான் வடமேற்கு எல்லைப் பகுதிக்குப் போயிருந்தேன்.

## 305

*சி. மீரா,*

சென்ற மூன்று நாட்களாகக் கடிதம் எழுதுவதைப் பொறுத்த வரை உன்னை நான் புறக்கணித்துள்ளேன். வேலை நெருக்கடியில், உனக்கு இடமே இல்லாது போயிற்று. ஆகவே இதை, காலை வழிபாட்டுக்கு முன் எழுதுகிறேன். ஆனால் நான் எழுதாவிடினும், ஒரு நாளில் பலமுறை உன் நினைப்பை ஊட்ட இங்கு எத்தனையோ இருக்கின்றன.

உடல், உள்ளம், ஆன்மா ஆகியவற்றில் நீ எவ்வாறு இருக்கின்றாயோ? உன் கடிதத்திற்காக ஆவலுடன் நான் காத்திருக்கின்றேன்.

இங்குள்ள செய்திபற்றி நான் சாரதாவை உனக்கு எழுதச் சொல்ல வேண்டும்.

அன்பு,

பாபு

*5-12-'38.*

கடைசியாகப் பெஷாவரிலிருந்து உன் கடிதம் வந்து சேர்ந்தது. நான் நன்றாகவே இருக்கின்றேன். இரத்த அழுத்தம் ஒழுங்காக இருக்கின்றது. இங்கு குளிர்காலம் தொடங்கி விட்டது.

## 306

*சி. மீரா,*

உன்னிடமிருந்து தினம் கடிதம் வருவது, நான் ஆவலுடன் எதிர்பார்க்கும் நிகழ்ச்சியாகிவிட்டது. என் உள்ளமும் உணர்வும் உன்னைச் சுற்றியே சஞ்சரித்துக் கொண்டிருக்கின்றன. நீ தோல்வியை ஏற்றுக்கொள்ளக்கூடாது....

நீ உன் உடல் நலனைக் காத்துக்கொள்ள வேண்டும்;—அதுவும் அங்கே காக்க வேண்டும். அங்கே என்பது எல்லை மாநிலத்தைக் குறிக்கும். நீ வாழ்வதற்குச் சேகானுக்கு வருவதை விட, நீ அங்கேயே மரணமடைவதைக் கூட நான் ஏற்றுக் கொள்ளச் சித்தமாயிருப்பேன்.[1] நீ பெஷாவரில் நன்றாக இருப்பாய். உத்மன்சாயில் உன் உடல்நலனைக் காக்க இயலாவிடில், நீ வாரக் கடைசியைப் பெஷாவரில் கழிக்கலாம்.

---

1. நான் என்ன செய்ய வேண்டுமென்று பாபு விரும்புவாரென்று எனக்குத் தெரிந்ததைச் சாதிக்க, நான் என்னால் இயன்றவரை முயன்றேன். ஆனால் சேகானில் வாழத் திரும்பி வரவேண்டாம் என்றால், பாபுவின் அருகில் நான் இனி வாழ முடியாது என்பது தானே பொருள். இந்த அச்சம் என்னைக் கெட்ட கனவுபோல் ஆட்கொண்டு வாட்டியது.

எவ்வாருயினும் நீ அங்கேயே தங்க வேண்டுமென்றும், செய்வது அல்லது சாவது அங்கேயே இருக்க வேண்டும் என்றும் நான் கூறும் யோசனையை உன்னுல் ஏற்றுக் கொள்ள முடியுமா என்று பார். நான் அங்கு மார்ச்சு மாதத்தில் நிச்சயம் வருவேன். காங்கிரஸ் மார்ச்சு 10ந் தேதிக்கு முன் கூடாது; ஆகவே அம் மாத நடுவிற்கு முன் நான் வருவதற்கு இயலாது....

அன்பு,

பாபு

# 307

சேகான், வார்தா,
*29—12'—38*

*சி. மீரா,*

கான் அப்துல் கபார்கானுக்கு மாநில ஆளுநரைப் பார்க்க அழைப்பு வந்தால், அதற்கு அவர் 'மாட்டேன்' என்று கூறக் கூடாதென, அவரிடம் தெரிவிக்குமாறு நான் உனக்குச் சொன்னேனு? உனக்கும் அழைப்புவரக்கூடும். உனக்கு மாண வர்கள் ஒழுங்காகக் கிடைக்கின்ருர்கள் என்பதறிய மகிழ்ச்சி. இம் முயற்சி, சிறந்த சாதனையாகும்.

... ... ...

அன்பு,

பாபு

# 308

*சி. மீரா,*

உன் கடிதங்கள், நீண்டவையாயினும் சுருக்கமாயினும், அனைத் தும் கலைப்படைப்புகள்.... நீ பொறுமையாக இருந்தால், பத்தானியர் உன் உள்ளத்தை ஆட்கொண்டு விடுவர் என்பதைக் காண்பாய். அவர்கள் மிகச் சிறந்த பண்புடையவர்கள்;—உன்னை நம்பத் தொடங்கி விட்டால், ஒளிவு மறைவின்றிப் பழகுவார்கள்.

என் உடல் நலன் பற்றிக் கவலைப்படாதே. என்னுல் இயன்ற வரை, நான் உடலைக் கவனமாகப் பேணி வருகின்றேன். எவ்வளவு முடியுமோ, அவ்வளவு ஓய்வும் எடுத்து வருகிறேன். இரத்த அழுத்தம் கட்டுக்கடங்கியுள்ளது. வனவாசம் செய்து புறச் செயல்கள் அனைத்தையும் நான் துறந்தால் ஒழிய, இரத்த

2. நூற்கவும் பஞ்சடிக்கவும் நான் 'குதாய் கித்மத்கார்' ஊழியர்களுக்குச் சொல்லிக் கொடுத்து வந்தேன்.

அழுத்தம் அவ்வப்போது கூடிக்குறையத்தான் செய்யும். அவ்வாறு நான் செய்வது தவறாகும். இறுதிவரை செயலில் முனைந்திருந்து நீண்ட நாட்கள் வாழும் கலையை நான் கண்டு பிடிக்க வேண்டும். இளமையில் என் வாழ்வில் எவ்வளவையோ விரயம் செய்துவிட்ட நான், அக்கலையில் முழுவதும் தேர்ச்சி பெறுவது இயலாது. என் வாழ்வின் எஞ்சிய பகுதியில் ஆண்டவன் அளித்தருள்வதற்கே நாம் நன்றி உடையவர்களாக இருக்க வேண்டும்.

அன்பு,

பாபு

பார்தோலி,
*20—1—'39*

# 309

சேகான், வார்தா,
*2-2-39.*

*சி. மீரா,*

நான் பல நாட்களாக உன்னைப் புறக்கணித்து விட்டேன். ஆனால் தினமும் உனக்கு எழுதுமாறு சுசீலாவுக்குச் சொல்லி யுள்ளேன். உடலுழைப்பை அடியோடு தவிர்ப்பதுடன், இயன்ற வரை உள்ளத்துக்கும் நான் ஓய்வளிக்க வேண்டியுள்ளது. நீ கவலைப்படக் கூடாது. உன் வேலையில் மூழ்கிவிடு.

... ... ...

அன்பு,

பாபு

# 310

*சி. மீரா,*

பெஷாவரிலிருந்து வந்துள்ள உன் கடிதத்தில் செய்திகள் குவிந்துள்ளன. நீ முழுமூச்சுடன் வேலையில் முனைந்துள்ளாய். எப் படியும் உன் உடல்நலனை மட்டும் காத்துக் கொள்ள வேண்டும். உன் பாதங்களை நன்றாக மூடிக் கொள். உனக்குத் தேவையான உணவைக் கேட்டுப் பெற்றுக் கொள். அளவுக்கு மீறி வேலை செய் யாதே. உன் ஆற்றலுக்கு மீறிய முயற்சிகளையும் மேற்கொள்ளாதே. அவ்வாறாயின் எல்லாம் இனிது நடக்கும்.

என்னைப் பற்றி எவ்விதக் கவலையும் கொள்ளாதே. ஆண்டவ னுக்கு நான் தேவைப்படும் வரை, அவர் என்னை இப்புவியில் வைத்

திருப்பார். நான் இங்கிருந்தாலும், வேறெங்கிருந்தாலும், சரிதான். அவர் சித்தப்படி நடக்குமே ஒழிய, நம் விருப்பப்படி அல்ல.

அன்பு,

பாபு

## 311

சி. மீரா,

உன் கடிதங்கள் அனைத்தும் நன்ருக இருக்கின்றன; அவை கலைப் படைப்புகள். பேட்டியை நீ தத்ரூபமாகச் சித்திரித்துள்ளாய். அதனுல் பலன் உண்டாகுமென்று எதிர்பார்ப்போமாக.

பணம் உனக்கு நேரத்தில் வந்து சேர்ந்ததென்று நம்புகிறேன்.

என்ஞல் இயன்ற அளவு விரைவில் வர முயல்வேன்.

மற்ற செய்திகள் சுசீலாவிடமிருந்து.

அன்பு,

பாபு

*13—12—'39*

## 312

வீராங்கம்,
*27—2—'39*

சி. மீரா,

பிற்பகல் சுமார் 2-50 மணிக்கு நாங்கள் இராஜ்கோட் போய்ச் சேருவோம். இரயில் புறப்படுகிறது. ஆகவே விடை பெற்றுக் கொள்கிறேன்.

அன்பு,

பாபு

## 313

(இராஜ்கோட்டிலிருந்து 27—2—'39 தேதியிட்ட தந்தி)
மீராபென் மேற்பார்வை பத்ஷாகான் சர்சத்தா.

பயணத்தை நன்கு தாங்கிக் கொண்டேன். பேச்சுக்கள் தொடங்கியுள்ளன.

அன்பு,

பாபு

## 314

(இராஜ்கோட்டிலிருந்து *3—3—1939* தேதியிட்ட தந்தி)

வழிபாட்டுடனும் கொண்டாட்டத்துடனும் உண்ணு நோன்பு தொடங்கியது.[1] நீடித்து நடக்கும் போல் தோன்றுகிறது. நீ கவலைப்படாமல், வேலையைத் தொடர்ந்து செய்ய வேண்டும்.

அன்பு,

பாபு

## 315

(இராஜ்கோட்டிலிருந்து *4-3-1939* தேதியிட்ட தந்தி)

நன்ருக உள்ளேன். கவலை வேண்டாம். கான்சாகிபுக்குத் தெரிவி.

பாபு

## 316

(இராஜ்கோட்டிலிருந்து *7-3-1939* தேதியிட்ட தந்தி)

உண்ணு நோன்பு நின்றது.[2] ஆண்டவன் அருள். டாக்டர் சாகிப், பத்ஷாகானுக்குத் தெரிவிக்கவும்.

பியாரிலால்.

## 317

சி. மீரா,

முந்திய உண்ணு நோன்புகளை விட இது என்னை வளமாக்கியுள்ளது என்று கூறுவேன். இதை நீ உறுதியான மனத்துடன் தாங்கிக் கொண்டாய் என்று நம்புகிறேன். நான் மகிழ்ச்சியுடன் இருக்கின்றேன். பலமும் மீண்டும் வருகிறது. இப்பொழுது வேறு செய்தியில்லை.

அன்பு,

பாபு

இராஜ்கோட்,
*8-3-'39*

---

1. இராஜ்கோட் மன்னர், தம் குடிகளுக்கு அளித்திருந்த வாக்குறுதிகளை மீறியதால், பாபு உண்ணு நோன்பு தொடங்கினர்.

2. இப் பிரச்னையில், அப்பொழுது இந்தியாவின் தலைமை நீதிபதியான சர் மாரிஸ் குவையர் நடுவராக இருந்து சமரசம் செய்து வைக்கலாம் என்று மன்னரின் உடன்பாட்டுடன் வைசிராய் கூறிய யோசனையைப் பாபு ஏற்றுக் கொண்டார்.

## 318

சி. மீரா,

நாளுக்கு நாள் பலம் கூடிவருகிறது. ஆகவே கவலை வேண்டியதில்லை. *15*ந் தேதி டில்லி போய்ச் சேருகிறேன்; எவ்வளவு நாட்கள் அங்கு தங்க வேண்டியிருக்கும் என்றறியேன். இராஜ்கோட்டுக்குத் திரும்பி வர வேண்டிய நிலை ஏற்படவும் கூடுமெனத் தோன்றுகிறது. இராஜ்கோட் ஒரு நிலைக்கு வரும்வரை, நான் வெறெதுவும் பற்றி எண்ணக் கூடாது.

அன்பு,

பாபு

*11—3—'39*

## 319

இரயிலில் கல்கத்தாவுக்குச் செல்கையில்.
*25—4—'39.*

சி. மீரா,

தீச்சட்டியிலிருந்து தீக்குள்ளாகவே குதிக்கும் நிலை எனக்கு வந்துவிட்டது.[1] எனக்கு எவ்வளவு சோதனை? என் இராஜ்கோட் அறிக்கையை நீ பார்த்திருப்பாய். என் மனநிலையை அது ஒரு சிறிது புலப்படுத்தியிருக்கும். முன்பெல்லாம் நான் பம்பாய் செல்ல விரும்ப மாட்டேன்; இப்பொழுதோ பம்பாயில் இருப்பதே, தென்றல் நடுவே வாழ்வது போலிருந்தது.

திராட்சை இரசமும் குளுக்கோசும் சாப்பிட்டு வருகிறேன். அதுதான் சுரத்தையும் மற்ற பல சிக்கல்களையும் தவிர்க்கிறது. எவ்வளவு நாட்களுக்குப் பழ உணவைத் தொடர்ந்து சாப்பிட வேண்டியிருக்குமென்று தெரியவில்லை.

உன் நீண்ட கடிதம் சுவை மிக்கதாய் உள்ளது. நீ முன்னேறி வருகிறாய். உன் உடல்நலனைக் காத்துக் கொண்டால், மற்றத் தடைகளை வென்றுவிடுவாய்.

* * *

அன்பு,

பாபு

---

1. வங்காள அவசரச் சட்டத்தின் கீழ் சிறையிடப்பட்ட அரசியல் கைதிகள் பற்றிப் பஸ்லுல் ஹக் மந்திரிசபையுடன் பேச்சுவார்த்தை நடத்தப் பாபு கல்கத்தா சென்று கொண்டிருந்தார்.

## 320

*சி. மீரா,*

என் கடிதம்—அல்லது கடிதங்களா, நான் மறந்து விட்டேன்—உனக்குக் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன். கான்சாகிப் இங்கிருக்கிருர்; 7ந் தேதி வரை தங்குவார். 8ந் தேதி, காசி வழியாக இராஜ்கோட்டுக்குச் செல்வேன்; மாளவியாஜியைப் பார்ப்பதற்காக இரவு காசியில் தங்குவேன். இராஜ்கோட்டில் எவ்வளவு காலம் தங்க வேண்டியிருக்கும் என்பது எனக்குத் தெரியாது.

நீ மகிழ்ச்சியுடன் இருப்பதாகவும், உன் வேலையைச் செய்து கொண்டிருப்பதாகவும் கான் சாகிப் கூறினர்.

இங்கு எல்லாம் கிராம வேலையோ, கிராமச் சூழ்நிலையோ அல்ல. மோட்டார் கார்களும் நகர வாழ்க்கையின் வசதிகளும் நிறைய. இவற்ருல் ஒருவருக்கு எரிச்சல் தான் வருகிறது. இந்த முகாமில் கொசுக்களே இல்லை என்றறிய நீ ஆச்சரியப்படுவாய். இது மனித முயற்சியால் ஏற்பட்டதல்ல; இயற்கை அமைந்துள்ள விதம்.

அன்பு,

பாபு

பிருந்தாவனம்,
சம்பாரண்,
*4—5—'39*

## 321

*சி. மீரா,*

எதிர்பாராத விதமாக நீண்ட நாட்கள் கடிதம் வராமல், இன்று தான் உன் கடிதம் வந்தது. ஆனல் நான் கவலை கொள்ளவில்லை. இங்கு என் கவனத்தை முழுவதும் ஈடுபடுத்த நிறைய வேலை இருக்கிறது. வெப்பம் தான் உன் விரோதி. துர்நாற்றமும் கூட்டமும் அச்சிரமங்களை அதிகரிக்கின்றன. நீ பத்திரமாக ஹஸாராவில் இருக்கின்ருயென்று, உன் தந்தியிலிருந்து அறிகிறேன். அங்கு குளிர்ச்சையாக, அல்லது வெப்பக் குறைவாகவாவது இருக்கிறதென்று எண்ணுகிறேன், பம்பாயிலிருந்து எல்லை மாநிலத்திற்கு 6ந் தேதி புறப்பட முடியுமென்று எதிர்பார்க்கின்றேன். ஆனல் ஆண்டவன் விருப்பப்படி தானே நடக்கும்.

அன்பு,

பாபு

இராஜ்கோட்,
*29—5—39*

## 322

(இராஜ்கோட்டிலிருந்து 29—5—1939 தேதியிட்ட தந்தி)

மீராபாய், மேற்பார்வை மங்கல்சேன், லேவாதேவி, அபட்டாபாத்.

ஜூன் ஆறு அன்று பம்பாயிலிருந்து புறப்படலாம் என எதிர்பார்க்கின்றேன்.

பாபு

## 323

(பம்பாயிலிருந்து 6—6—1939 தேதியிட்ட தந்தி)

மீராபாய், மேற்பார்வை தபாலதிகாரி, மன்சேரா.

மீண்டும் தாமதம் மாதக் கடைசி வரை.

பாபு

## 324

[எல்லை மாநிலப் பகுதிக்குப் பாபு வருவதில் ஏற்பட்ட நீண்ட தாமதம் என் உடல்நலனைப் பெரிதும் பாதித்திருந்தது. இறுதியில் நான் சேவாகிராமத்துக்குத் திரும்பினேன். நான் சுயேச்சையாக வேலை செய்ய வேண்டுமென்று பாபு விரும்பியதை உணர்ந்து, நான் என்னைத் தைரியப்படுத்திக் கொண்டு, பீகாருக்குச் சென்றேன். இதற்கிடையில் நீண்ட நாளாக ஒத்திவைக்கப்பட்ட பாபுவின் எல்லைப் பகுதிப் பயணம் நிகழ்ந்தது. என் இதய வேதனை மேலும் அதிகமாயிற்று.]

[அபத்தாபாதிலிருந்து 11—7—1939 தேதியிட்ட தந்தி]

மீராபென், காதிபந்தர், மதுவாணி.

உடல் நலன் தொடர்ந்து நன்ருக இருந்தால் நீ அங்கே தங்கலாம்.

பாபு

## 325

சி. மீரா,

செய்திகள் நிரம்பிய உன் சிறு நூல்[1] கிடைத்தது. பீஹாரிகள் இயல்பாகவே பேரன்புக்குரியவர்கள். உன் உடல் நலனைக் காத்துக் கொண்டால். உன்னை அவர்களிடமிருந்து நான் பிரிக்க மாட்டேன். நீ ஆரோக்கியமாக இல்லாத போது, ஆரோக்கியமாக இருப்பதாக எண்ணி உன்னை ஏமாற்றிக் கொள்ளாதே. உன்னை நன்ருகக் கவனித்துக் கொண்டு, உனக்கு வரும் வேலையைச் செய்.

---

1. நீண்ட கடிதம்.

எதுபற்றியும் அவசரமாகத் தீர்ப்புக் கூறுதே. போதிய ஆதாரங்கள் இல்லாத போதே, நீ அரைகுறையான முடிவுகளுக்கு வந்து விடுகிருய்.

நாங்கள் 25ந் தேதி காஷ்மீருக்குப் புறப்படுகிறோம். மிஞ்சிப் போனுல், அங்கு ஏழு நாட்கள் தங்குவோம்.

அன்பு,

பாபு

அபத்தாபாத்,
*17—7'—39*

## 326

[நான் பீஹாரிலிருந்து சேவாகிராமத்துக்குத் திரும்பிப் பின்னர் பஞ்சாபுக்குச் சென்றிருந்தேன்.]

சேகான், வார்தா (ம. மா)

சி. மீரா,

இத்தனை நாட்களும் உன்னைப் பற்றி சிந்தனை செய்து கொண்டிருந்தேன். கண்ணுக்கு எட்டாமலிருப்பதால், நீ கருத்திலிருந்து விலகவில்லை என்று உனக்குச் சொல்லவே இதை எழுதுகிறேன். எனக்கு உன் நினைவாக இருக்கிறது. பண்டிதர்[1] வந்தாரா? நீ எனக்கு ஒழுங்காக எழுத வேண்டும்.

கட்டணம் குறைவாக உள்ள இரயிலில், 15ந் தேதி இங்கிருந்து நாங்கள் புறப்பட்டு 17ந்தேதி காலை கல்கத்தா வந்து சேருவோம். சாந்திநிகேதனத்திற்கு அன்றே சென்று, 19ந் தேதி திரும்பி மாலிகண்டாவிற்கு இரயிலில் புறப்படுகிறோம்.

அன்பு,

பாபு

*9—2—'40*

## 327

சேவா கிராமம், வார்தா
*12—3—'40*

சி. மீரா,

உன் 2வது கடிதம் கிடைத்தது.... நீ எந்த உத்தரவுகளையும் மீறக் கூடாது. எவருக்கும் இன்னும் சட்ட மறுப்பு இயக்கம் தொடங்கவில்லை. அது தொடங்கும் போதும், நிர்மாண வேலைகளில் ஈடுபட்டுள்ளவர்கள் பாதிக்கப்பட மாட்டார்கள். அத்

1. பண்டிதர் ஜகத்ராம்.

தகைய வேலையில் தான் நீ ஈடுபட்டுள்ளாய். என் உத்தரவு கிடைப்பதற்கு முன்பே, நீ ஏன் எதையும் செய்ய உத்தேசிக்கின்றாய்? சென்ற முறை நீ அரசியல் நடவடிக்கைகளில் ஈடுபட்டிருந்தாய். இம்முறை நீ அதில் ஈடுபடவில்லை. அடக்குமுறையைத் தாங்கிக் கொள்ள, சத்யாக்கிரகி எப்பொழுதும் ஆயத்தமாக இருப்பான்; ஆனால் அடக்குமுறையை எதிர்பார்த்து முன்கூட்டியே எதுவும் செய்ய மாட்டான். தன் எதிரிக்குத் தீது எதையும் அவன் கற்பிக்கமாட்டான். நான் மேலும் எழுதுவது தடைபட்டுள்ளது.

அன்பு,

பாபு

## 328

[பாலம்பூரில் (கங்க்ரா) நான் இப்பொழுது இருந்தேன். சுமார் மூன்று மாதங்கள் நான் ஓயல் ஆசிரமத்தில் தங்கி. மண் குடிசைகளைக் கட்டும் கலையில் மேலும் அனுபவம் பெற்றேன். அதிகச் செலவில் செங்கல்லால் பக்கா வீடு கட்டிக் கொண்டிருந்த ஆசிரமவாசிகளுக்குச் செய்முறை விளக்கமாக அமையும் பொருட்டு, இரண்டு மூன்று கிராம வாசிகள், ஒரு தச்சர் ஆகியோர் உதவி கொண்டு நான் 18 ரூபாய் செலவில் எனக்காக ஒரு சிறு குடிசையைக் கட்டினேன். அதன் பின்பு கிராமங்களில் சுற்றி 7 ரூபாய்க்கு ஒரு பசுவும் கன்றுக்குட்டியும் வாங்கி, என் தாழ்வாரத்தின் மூலையில் கட்டினேன். குறைந்த செலவில் பொருட்களை வாங்க முடிந்த காலத்தின் கடைசி நாட்கள் அவை!]

சேவாகிராமம், வார்தா,
*18—5—'40.*

சி. மீரா,

இவ்வளவு நாட்களாக உன்னிடமிருந்து ஏன் கடிதம் வரவில்லை என்று எண்ணிக் கொண்டிருந்தேன். ஒரு வாரத்துக்கு மேலாகி விட்டால், அது எனக்கு நீண்ட நாட்களாகத் தோன்றுகிறது. உன் வர்ணனைகள் நிறைந்த கடிதங்களை (அவற்றில் தான் உனக்குத் தனித்திறமை உண்டே) நான் வரவேற்பேன் என்ற போதிலும், நேரமில்லாத போது ஓர் அஞ்சலட்டை எழுதினால் கூடப் போதும்.

ஓயலை விட்டு நீ நிரந்தரமாக விலகிவிட்டாய் என்று நான் எண்ணலாமா? அவ்வாறாயின், நான் அதைப் பொருட்படுத்த மாட்டேன். நீ சுயேச்சையாக இருந்து, உன் மனநிறைவையே நாட வேண்டும்.

உன் புதிய இடத்தைச் சித்திரித்துள்ளது கவர்ச்சிகரமாய் இருக்கிறது. ஆனால் என்றாகிலும் அங்கு என்னால் வரமுடியுமென்ற நம்பிக்கை இல்லை. நான் சிம்லாவுக்குப் போகும் வாய்ப்பு இப்பொழுது ஏற்படாது. சேவாகிராமம் இப்போது உலைக்களமாய்

இருப்பினும், அங்கிருந்து எங்கும் செல்ல வேண்டுமென்றே எனக்குத் தோன்றவில்லை. என் முன்னுள்ள வேலை என் முழு நேரத்தையும் எடுத்துக் கொள்கிறது.

... ... ...

அன்பு,

பாபு

## 329

அஞ்சலட்டை.

சி. மீரா,

சுவையாக உரையாடும் உன் கடிதம் கிடைத்தது. எழிற்காட்சிகளுக்கு இடையே இருக்கும் உன்மீது எனக்குப் பொறாமை உண்டாகிறது. ஆனால் நான் சூறாவளியின் நடுவில் தான் வாழ வேண்டியுள்ளது. அமைதியாக இருக்கவும், வேலையை முடிக்கவும், நான் நேற்று முதற்கொண்டு காலவரையின்றிப் பேசா நோன்பு மேற்கொண்டுள்ளேன். காரியக் கமிட்டி கூடும் போதோ, விபத்து எதுவும் நடந்தாலோ, அந்நோன்பை நிறுத்த வேண்டியிருக்கும்.

அன்பு,

பாபு

சேவாகிராமம், வார்தா
*25—5—'40*

## 330

அஞ்சலட்டை.

சேவாகிராமம், வார்தா
*28—5—'40*

சி. மீரா,

ஓயலில் நீ தங்கியது வீண் என்று நான் நினைக்கவில்லை. நீ அரிய அனுபவம் பெற்று, உடல் நலனையும் உள நலனையும் காத்து வருகின்றாய். செலவை நான் பொருட்படுத்தவில்லை. உன் அகத் தூண்டுதல் உந்துவதற்கிணங்க, நீ நடக்க வேண்டும். பண்டிட்ஜி உன்னுடன் சேரும்படி நீ செய்தால் நன்றாக இருக்கும். மேற்கில் பயங்கர நிகழ்ச்சிகள் நடந்து கொண்டிருக்கின்றன. இறைவன் சித்தப்படியே நடக்கும்.

அன்பு,

பாபு

# 331

[என்னகத்தே மூண்டிருந்த போராட்டம் வலுத்து, நெருக்கடி நிலைக்கு வந்தது. மலைப்பும் மருட்சியும் ஏற்படும் வண்ணம், மப்பும் மூடு பனியும் என் பாதையைச் சூழ்ந்தன. மனவேதனையில், இறைவனின் உதவியை இறைஞ்சுவதில் ஈடுபட, நான் தனிமையை நாடிப் பேசா நோன்பு மேற்கொண்டேன். இடையில் பயணம் செய்த சில நாட்கள் நீங்கலாக 15 மாத காலத்திற்கு இப் பேசா நோன்பு நீடித்தது. முதலில் சில நாட்களுக்குத் தினமும் ஒரு முறை அவசியமானால் அரை மணி நேரம் பேசி வந்தேன். மற்ற நாட்களில், சேவாகிராம வயல்களில் ஒரு குடிசையில் நான் தங்கியிருந்த போது, வாரமிரு முறை மாலையில் நான் பாபுவைப் பார்க்கச் சென்ற போது பேசுவேன். வேதங்களையும் புராணங்களையும் மட்டுமே நான் படித்தேன். ஒரு நாளுக்கு 1000 கெஜம் நூல் நூற்றேன். பேசா நோன்பு நிறைவுற்ற போது, முன்பு நான் பயனிலாது நாடிய அமைதியையும் உறுதியையும் எனக்கு ஆண்டவன் அளித்திருந்தார்.

சேவாகிராமம்,
வார்தா, ம. மா. *7—9—'40*

சி. மீரா,

உன் நீண்ட கடிதம் கிடைத்தது. உன்னகத்தே நடந்துவரும் போராட்டத்தை உணர உன் கடிதம் எனக்கு உதவியது. எதற்கும் உன்னகத்தே நோக்கும் கலையில் நீ இன்னமும் தேர்ச்சி பெற வில்லை. நூற்பது போலவே பஞ்சடிப்பதும் உனக்கு ஆறுதலா யிருக்கும்;—அவ்வேலைக்கும் ஆண்டவனுக்கும் உள்ள உறவை நீ உணர்ந்து செய்தால். மலையை உடைப்பதன் மூலம் பார்ஹார்டு தம் இறைவனைக் கண்டார். ஆண்டவன் அருளிய பலத்தைக் கொண்டு, ஓயாது ஓங்கி அடித்துக் கொண்டிருப்பதாக அவர் சித்திரிக்கப் படு கிறார். அவர் மலையை உடைத்துக் கடவுளைக் கண்டார்—எழில் மிக்க மணப்பெண் வடிவில். சபர்மதியிலிருந்தோ, வேறிடத்தி லிருந்தோ கிடைத்த பஞ்சுப் பட்டைகளைக் கொண்டு நீ நூற்பது, உனக்கு நீயே செல்லம் கொடுப்பதாகும். ஆனால் பலமாகப் பஞ் சடிக்க இயலாமல், உன் கைகள் பலவீனமாக இருக்கலாம். வேக மாகவும், போதிய அளவும் பஞ்சடிப்பதற்கு அவசியமான வேலை முறைகளின் சுமையையும் சிரமத்தையும் ஏற்றுக் கொள்ளும் அள வுக்கு உன் உடலில் பலமில்லாமல் இருக்கலாம். ஆனால் உன்னைப் பொறுத்த வரையில், இவை இரண்டுமே அவசியமில்லை. ஆண்ட வனிடம் நம்மை அர்ப்பணிக்கும் உணர்வே முக்கியம். உன் புறச் செயல் எதுவாயினும், அது அனைத்தும் ஆண்டவனுக்கே காணிக்கையாகும்,...

இறைவன் உன்னுடன் இருப்பாராக.

அன்பு,

பாபு

## 332

சேவாகிராமம்,
வார்தா, ம. மா. 21—9—'40

சி. மீரா,

சில நாட்களாக உனக்குக் கடிதம் எழுதாமல் இருந்து விட்டேன். ஆனால் பம்பாய் எனக்கு அவகாசமோ, அமைதியோ, அளிக்கவில்லை. நான் வியாழனன்று திரும்பினேன்; ஆனால் இன்று தான் (சனிக்கிழமை) என்னால் உனக்கு எழுத முடிகிறது.

கன்யாலால்[1] இனியதொரு பதில் அனுப்பியுள்ளார். அவர் நிலைமையை அனுதாபத்துடன் அறிந்துள்ளார். ஆகவே உனக்குச் சிரமம் இருக்காது.

பஞ்சுப்பட்டைகள்[2] பற்றி நீ சொல்லும் கருத்து எனக்கு விளங்குகிறது. மிக நேர்த்தியான நூல் நூற்பதற்கு உனக்கு உதவியாக இருக்கச் சிறந்த பஞ்சுப் பட்டைகளை உனக்கு அனுப்புமாறு நான் இலட்சுமிதாசிடம் சொல்லியுள்ளேன். அவை கிடைத்தவுடன் எனக்குத் தெரிவி; அவை முடியுந் தருவாயில் உள்ள போது, முன்னதாகவே என்னை எச்சரித்து விடவும்.

உன் கடிதத்தில் வர்ணனைகள் நிறைந்த பகுதிகள் எப்பொழுதும் போலவே, பசுமையாகவும் சுவையாகவும் உள்ளன. நீ அக அமைதி கண்டுள்ளாய் என்று அதிலிருந்து அறிகிறேன். உனக்கு மேலும் மேலும் மன அமைதி உண்டாகாவிடில், நீ அங்கு செய்யும் 'சாதனத்தினால்' பலன் ஏற்படாது போகும். பறவை, விலங்கு, மரம், கல் ஆகியவற்றோடு உறவு கொள்ள உனக்குள்ள ஆற்றல் தான், உனக்குச் சிறந்த துணையாகும். அவை என்றுமே உன்னைக் கைவிடாத நண்பர்களும் தோழர்களும் ஆவர்.

அன்பு,
பாபு

அரசியல் செய்திகளையும், ஆசிரமச் செய்திகளையும் கூட, நான் உனக்குத் தருவதை நீ விரும்ப மாட்டாயென்று எண்ணுகிறேன்.[3]

---

1. லாலா கன்யாலால் புடேல், என்னை உபசரித்து வந்தவர்; அவர் தான் தமது தேவதாருக் காட்டில் எனக்காக ஒரு குடிசையைக் கட்ட ஏற்பாடு செய்திருந்தார்.

2. நூற்கும் நேரத்திலேயே நான் ஜெபமும் செய்து வந்ததால், நூற்பை நிறுத்திப் பஞ்சடிக்கவும் பட்டை போடவும் விரும்பவில்லை யென்று பாபுவுக்கு விளக்கியிருந்தேன். பஞ்சடிக்கும் போதும் பட்டை போடும் போதும், ஜெபம் செய்ய முடியாது. ஜெபமாலையை உருட்டுவதற்குப் பதிலாக, நூற்கும் போது சக்கரத்தைச் சுற்றி வந்தேன்.

3. ஹரிஜன் உள்பட எல்லாப் பத்திரிகைகளையும், பாபுவின் கடிதங்கள் தவிர மற்றக் கடிதங்களையும் படிப்பதை நிறுத்தியிருந்தேன்.

## 333

அஞ்சலட்டை.

சேவாகிராமம்,
*14—10—'40*

*சி. மீரா,*

நீ உன் புதிய வீட்டில்[1] இருப்பது குறித்து மகிழ்ச்சி. நீ எனக்கு எழுதியுள்ள ஒரு சில வரிகளிலேயே சோகத்தின் எதிரொலி எனக்குக் கேட்கிறது. நீ அக நிறைவும் வலிமையும் அனுபவிக்க வேண்டுமென விரும்புகிறேன். இறைவன் உன்னுடன் இருப்பாராக.

அன்பு,

பாபு

உன் கதர் இப்பொழுது வந்துள்ளது. அதை என்ன செய்ய வேண்டுமென நீ சொல்லியிருப்பின், நான் அதை மறந்து விட்டேன். அதை உனக்காக வைத்திருக்கட்டுமா?

## 334

அஞ்சலட்டை.

சேவாகிராமம்
*20—10—'40*

*சி. மீரா,*

உன் நீண்ட, அருமையான கடிதம் கிடைத்தது. ஆம். நான் சட்ட மறுப்பு இயக்கத்தைத் தொடங்கியுள்ளேன். தற்போதைக்கு விநோபா மட்டுமே அதில் ஈடுபடுவார். நான் கைதாக முன்வரப் போவதில்லை. விநோபா இன்னும் சுதந்திரமாகவே இருக்கின்றார். நான் உனக்குச் செய்திகள் அனுப்ப வேண்டுமென்று நீ விரும்பினால், அனுப்புவேன். உன் நோன்பைக் கலைக்கவோ, தொந்தரவு தரவோ மாட்டேன்.

உனக்கு எல்லாம் இனிதே நடக்கும்.

அன்பு,

பாபு

இன்று காலை 3 மணிக்கு வி. கைது செய்யப்பட்டார். விசாரணை இன்று நடக்கிறது. அவருக்குப் பின் பொறுப்பேற்பவர்

---

1. மலைச்சாரலில் தேவதாருக் காட்டில் தனிமையில் கட்டப்பட்டிருந்த ஒரு சிறு குடில்.

இன்னும் நியமிக்கப்படவில்லை; அவசரப்பட வேண்டிய அவசியமில்லை.

பியாரிலால்

## 335

அஞ்சலட்டை.

சி. மீரா,

உன் அருமையான கடிதம் இப்பொழுது தான் வந்துள்ளது. உன் தபசு உண்மையானது; ஆகவே வேகமும் உற்சாகமும் வந்து தீரும். உற்சாகத்துடன் உடல்வலிமையும் வரும். பஞ்சுப் பட்டைகள் நீ கேட்கும்போது அனுப்பப்படும். நான் எக்கணமும் கைது செய்யப்படலாம்; நீ சொல்வது சரிதான். அதனால் என்ன? ஆசிரமம் தான் நிரம்பி வழிகிறதே.

அன்பு,

பாபு

## 336

அஞ்சலட்டை.

சேவாகிராமம், வார்தா,
2—12—'40

சி. மீரா,

உன் நல்ல, நீண்ட கடிதம் இப்போதுதான் வந்தது. நீ எழுதுவது அனைத்தும் எனக்கு விளங்குகிறது. இறைவன் ஒருவனே உன் வழிகாட்டியாக இருக்க வேண்டும். எனக்கு உடல்நலக் குறைவு ஒன்றுமில்லை. எனக்கு ஓய்வு தேவை; அதைப் பெற்று வருகிறேன். ஆம்; எலிகள் தொந்தரவால் நானும் கஷ்டப்படுகிறேன். அவை தொந்தரவு செய்தால், எனக்குத் தூக்கம் வருவதில்லை. அவை கடிப்பதன் மூலம், உடலில் நச்சு ஏறவும் கூடும். உனக்குக் கட்டில் இருக்கிறதா? உன் கொசு வலையின் மேல்பாகம் மேடுபள்ளமின்றியும் உறுதியாகவும் இருக்க வேண்டும். உனக்கு இரவில் தொந்தரவு கூடாது.[1] உனக்கு வேறெந்தச் செய்தியோ அறிவிப்போ வேண்டுமென்று தான் நான் தரவில்லை. உன் தியானத்தை நான் கலைக்க விரும்பவில்லை.

அன்பு,

பாபு

---

1. காட்டிலிருந்து குறிப்பாக இரவில், பல சிறு சுண்டெலிகள் குடிசைக்குள் வந்தன என்று பாபுவிடம் சொல்லியிருந்தேன். அவை என் படுக்கை மீதேறிச் சில சமயம் என் பாதங்களைக் கொரித்தன; சில சமயங்களில் என் உடம்பின் ஓரத்தில் மேலும் கீழும் ஓடின; சில சமயங்களில் என் முடியில்




ஸ்விட்ஜர்லாந்தைச் சேர்ந்த ஓரிடத்தில் காந்திஜி உணவருந்துகிறார்.
பக்கத்தில் உட்கார்ந்திருப்பது மீராபென்.



வார்தாவில் காந்திஜி ராட்டினத்தைப் பழுது பார்க்கையில்
மீராபென் அவருக்கு உதவி புரிகிருர்.

## 337

அஞ்சலட்டை.

சேவாகிராமம்,
4—12—'40

சி. மீரா,

உன் கடிதத்தைப் படித்ததும் உடனடியாக இதை எழுதுகிறேன். தண்ணீர் பற்றிய சிரமத்தைக் குறித்து, இங்கு தற்செயலாக வந்துள்ள மூன்று மருத்துவரிடம் கலந்து பேசுகிறேன். சுசீலா அவர்களில் ஒருவர். உன் உடல்நலனைக் காத்துக் கொண்டால், நீ மலையில் தங்கலாம் என்பதுதான் நமது ஒப்பந்தம். லௌகீக, ஒழுக்க, ஆன்மீக முயற்சி எதுவாயினும், அதற்குச் சீரான உடல் அடிப்படைத் தேவையாகும்.

* * * *

அன்பு,

பாபு

ஒரு 'காலன்' தண்ணீரில் 6 கிராம் படிக்காரம் போடு. இரவெல்லாம் தண்ணீர் நிற்கட்டும். காலையில் தண்ணீரை எடுத்து, இத் தண்ணீர் ஒரு 'காலனு'க்கு அரைத் தேக்கரண்டி எலுமிச்சைச் சாறைச் சேர்த்துக் கொதிக்க வைத்துப் பயன்படுத்து. ஆனால் பாலம்பூரில் உனக்கு வடித்திறக்கிய நீர் கிடைக்குமே. முடிந்தால் அதையே பயன்படுத்து.

## 338

சேவாகிராமம்
20—12—'40

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. புராணங்கள் அனைத்துமே படிக்கப் பயன் தருபவை. காலமனைத்தின் உண்மை வரலாறுகள் அவை. உனக்கு மேன்மேலும் அமைதி பெருகிவருவது குறித்து மகிழ்ச்சி.

அன்பு,

பாபு

---

சிக்கிக் கொண்டன. நான் தெரியாமல் அவற்றை நசுக்கி விடுவேனோ என்பது தான் என் முக்கிய கவலையாக இருந்தது. இக்கவலை ஒரு புறம்; சுண்டெலிகளின் நடமாட்டம் ஒரு புறம்; உறக்கம் வருவதே அரிதாகிவிட்டது. கொசுவலையைப் பயன்படுத்தத் தொடங்கிய பின் தான் இத் தொல்லை அடியோடு நீங்கி, நிம்மதியாக உறங்க முடிந்தது,

## 339

அஞ்சலட்டை.

சேவாகிராமம், வார்தா,
*24-1-'41*

சி. மீரா,

உன் 2 வது கடிதம் இப்பொழுதுதான் கிடைத்துள்ளது. நீ வரோதாவிற்கு வரவேண்டுமென இறுதியில் முடிவு செய்யப்பட்டால், உன் விருப்பத்தை மனத்திற் கொள்வேன். ஆனால் அங்கு நீண்ட நாட்கள் நீ மகிழ்ச்சியாய் இருக்க மாட்டாயென்று தான் என் மனத்தில் தோன்றுகிறது. அங்கு உன் உடல்நலனைக் காத்துக் கொண்டால்—மனிதர் நடமாட்டத்திற்கு இடையிலும் உனக்கு மன அமைதி கிட்டுமென்ற தெளிவு உனக்கு நிச்சயமாக ஏற்படும் வரை —நீ அங்கேயே இருப்பது நல்லது.

அன்பு,

பாபு

## 340

[வார்தாவிலிருந்து *30—1—'41* தேதியிட்ட தந்தி]

மீராபென், பாலம்பூர்.

வரோதாவிற்கு உடனே வா. அன்பு. நலம்.

பாபு

## 341

[மலையிலிருந்து நான் திரும்பி வந்து மேட்டின் மீதிருந்த என் குடிலில் தங்கியிருந்தேன்.]

சி. மீரா,

நேற்றும் இன்றும் உன்னைப் பார்ப்பேன் என்று உறுதியாக நம்பியிருந்தேன். பார்த்திருந்தால், உன்னுடன் பேசித் தேதியைக் குறித்திருப்பேன். உனக்கு வசதியாக இருந்தால், புதன்கிழமையும் சனிக்கிழமையும் இரவு *8-45* மணியென்று நேரம் குறித்துக் கொள்ளலாம்.[1] இன்றிரவிலிருந்து இதைத் தொடங்கலாம்.

அன்பு,

*12—2—'41* பாபு

1. பாபுவை நான் சந்திக்க நேரம் குறித்துக் கொண்டோம். அந்த நேரங்களில் நான் பேசா நோன்பை நிறுத்திக் கொள்வேன்.

## 342

[மேட்டிலிருந்த என் குடிசையில் தாங்க முடியாத வெப்பமாய் இருந்ததால், ஜுனகாத் சமஸ்தானத்தில் கடலோரத்தில் இருந்த சோர்வாத் ஊருக்கு என்னை அனுப்பப் பாபு ஏற்பாடு செய்திருந்தார். வழியில் நான் நாசிக்கில் தங்கியிருந்தேன்.]

அஞ்சலட்டை.

சேவாகிராமம்,
*6-4-'41*

*சி. மீரா,*

நீ இரயிலில் கஷ்டப்படுவாய் என்று அஞ்சினேன். ஆம்; நீ சோர்வாதுக்குச் செல்லலாம். ஹரக்சந்த்பாயின் கடிதம் கிடைத்துள்ளது. உன்னால் வர முடிந்தது பற்றி அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி. இன்று ஞாயிறு. தந்தி அனுப்பினாலும், கடிதத்திற்கு முன்பு அது கிடைக்காது. ஆகவே நான் தந்தி அனுப்பவில்லை.

அன்பு,

பாபு

## 343

அஞ்சலட்டை.

சேவாகிராமம், வார்தா,
*21-4-'41*

*சி. மீரா,*

உன் கடிதம் முழுவதும் அழகான வர்ணனை நிறைந்துள்ளது.[1] இவ்வளவு மன அமைதி பெற்றிருப்பது குறித்தும், ஹரக்சந்த்பாயின் ஆதரவான துணை உனக்குக் கிடைத்துள்ளது குறித்தும் மகிழ்ச்சி....

அன்பு,

பாபு

## 344

சேவாகிராமம், வார்தா,
*13-5-'41.*

*சி. மீரா,*

உன் பிரிவினைத்திட்டம் படிப்பதற்கு நன்றாகத்தானிருக்கிறது; ஆனால் செயல்முறையில் அதனால் பலன் ஒன்றும் இராது.

---

1. இருபது ஏக்கரா நிலப்பரப்பு கொண்ட அருமையான பழத்தோட்டத்தின் நடுவே ஒரு மண் குடிசையில் தங்கியிருந்தேன். அங்கு அழகான மயில்கள் பல இருந்தன. நான் நூற்கும்போது, அவை அவ்வப்போது என்முன் வந்து நடனமாடும்.

மாட்டுத் தொழுவம் தனியாக இருக்கும்; ஆனால் பலவந்த்சிங் தனியாக இருக்க முடியாது. பால்பண்ணை தனி; ஆனால் பர்னேர்கர் தனியல்ல. உண்மை என்னவென்றால், உலகை என்னிடமிருந்து தனியாகப் பிரிக்கமுடியாது. ஒன்றுக்கு மேற்பட்ட பன்சாலிகள் இருக்கின்றனர். அவர் நடப்பதுபோல், அனைவரும் பண்புடன் நடப்பதில்லை. ஆனால் அவர்களும் இருக்கத்தான் செய்கிறார்கள். நீ இப்பிரச்னையை மேலும் தீர ஆராயவில்லை. நான் கவலைப்படுவது சமையலறைபற்றியல்ல. அதன் வளர்ச்சி தானாக இயல்பாக ஏற்பட்டது. அது போலவே, அதைக் கலைப்பதோ திருத்தி அமைப்பதோ, தானாகவும் இயல்பாகவும் நடக்கவேண்டும். அதற்கு நான் உதவியாகத்தான் இருக்கமுடியும். ஒவ்வோரிடத்திலும் என்னை மீறிய சக்தியால் நான் ஆட்கொள்ளப்பட்டிருந்தேன். இராஜ்கோட் இல்லத்திற்குப் பதில் பம்பாய் இல்லம்; அங்கிருந்து நேட்டால் இல்லம்; அங்கிருந்து மீண்டும் பம்பாய், பின் ஜோஹன்னஸ்பர்கில் இரண்டு இல்லங்கள்: பின்பு போனிக்ஸ், டால்ஸ்டாய் பண்ணை, மீண்டும் போனிக்ஸ், பிறகு கோச்ராப், சபர்மதி, மகன்வாடி, சேவாகிராமம். இடையில் ஏற்பட்ட மாறுதல்களை நான் குறிப்பிடவில்லை. இவை அனைத்தும் தாமாக உரிய காலத்தில் வந்தவை. மீண்டும் நான் எங்கு தள்ளப்படுவேனோ, கடவுளுக்குத்தான் தெரியும். இல்லை; வழிபாட்டில் ஈடுபட்டுக் காத்திருப்பதன் மூலம்தான் நான் உய்யமுடியும்....“நீயே எனக்கு வழி காட்டி அழைத்துச் செல்.”

*　　*　　*

அன்பு,

பாபு

# 345

சேவாகிராமம், வார்தா,
22-5-’41

சி. மீரா,

உன் கடிதம். என்னுடன் உறவு அனைத்தையும் முறித்துவிட்டு என்னைவிட்டுத் தனியாக நீ வாழ்ந்து வருகிறாய் என்ற செய்தி உண்மையானதா என்று லண்டனிலிருந்து ஒரு கேள்வி வந்துள்ளது!!! தங்கள் சொந்த விருப்பத்துக்கு உருக்கொடுத்து எண்ணத்தையே வடித்துவிடுகிறார்கள், பார்த்தாயா?

நீ சொல்வதுபோல், திடீர் மாறுதல் எதுவும் ஏற்பட வேண்டுமென்றிருந்தால், மிக அல்பமான காரணமென்று நமக்குத் தோன்றுவதை ஒட்டியே நடக்கக்கூடும்.[1]

*　　*　　*

1. சேவாகிராமம் ஆசிரமம் பற்றியும், அதை என்ன செய்வது என்பது பற்றியும் நாங்கள் இன்னமும் கடிதப் போக்குவரத்து நடத்திக்கொண்டிருந்தோம்.

பத்திரிகைகளில் நீ படிக்கும் செய்திகளில் பெரும்பாலானவை, அப்பட்டமான பொய்கள்; விற்பனையை உயர்த்த உற்பத்தி செய்யப்படுபவை. நான் ஆமதாபாத்துக்குப் போகப் போவதில்லை; சுற்றுப்பயணம் செய்யவோ, சிம்லாவுக்குச் செல்லவோ, போவதுமில்லை. ஆயினும், இப்பொழுது எதிர்பாராதவையாய் உள்ள போதிலும், இவற்றில் எதுவும் நடக்கக்கூடும். ஆனால் அப்பொழுது இப்பத்திரிகைக்காரர்கள், "பார்த்தீர்களா, நாங்கள் சொன்னது சரியாகிவிட்டது" என்று சொல்லமுடியும்.

* * *

போர்ச் செய்திகள் திகைப்பு ஊட்டுவனவாகவே இன்னமும் இருக்கின்றன. இங்கிலாந்தில் ஏற்பட்டுள்ள நாசம் பற்றிய செய்திகள், இதயத்தைப் பிளக்கின்றன. பாராளுமன்றம், குருமடம், ஏசுநாதர் திருக்கோயில், இவை அனைத்தும் என்றும் அழியாதவை என்று எண்ணியிருந்தோம். எனினும் இதற்கு முடிவில்லை......

அன்பு,

பாபு

## 346

[நான் சோர்வாதிலிருந்து திரும்பி, சேவாகிராமத்திலிருந்து அரை மைல் தூரத்தில், புதிதாக உண்டாக்கப்பட்டிருந்த தோட்டமொன்றில், ஒரு கிணற்றுக்கருகில் குடிசையில் குடியிருந்தேன்].

திங்கள்,
*23-6-'41.*

*சி. மீரா,*

நீ உன் கடிதத்துடன் அனுப்பியிருந்ததைப் படித்தேன். அது நல்ல தொகுப்பு.[1] இச் செய்யுள்களனைத்திலும், நீ கண்டுபிடித்துள்ளதைக் காட்டிலும் அதிக உட்பொருள் பொதிந்துள்ளது. ஆனால் அச் சொற்களின் நேரடியான பொருளையே நாம் ஏற்றுக்கொண்டால்கூடப் போதும்.

அன்பு,

பாபு

## 347

சேவாகிராமம்,
*1-7-'41.*

*சி. மீரா,*

தமக்கு ஒரு நிமிட அவகாசம்கூட தற்போது இல்லையென்று ராம்தாஸ் கூறுகிறார். உன் மேற்பார்வையின்கீழ் உந்த்ரு அந்த

---

1. ரிக் வேதத்திலிருந்து செய்யுள்கள்.

வேலையைச் செய்யமுடியுமா? வரோதாவிலிருந்து தொழிலாளரை ஏற்பாடு செய்ய முடியுமா? உனக்குள்ள சிரமம் உண்மையானதே. ஆனால் என்னால் ஒன்றும் செய்வதற்கில்லை. பணத்தைக் காட்டிலும் தொழிலாளர் தான் முக்கியமென்பதை இதுபோன்ற அனுபவங்கள் உணர்த்துகின்றன...... வார்தாவிலிருந்து தொழிலாளரை நான் ஏற்பாடு செய்வதை விரும்புவாயா?

அன்பு,

பாபு

## 348

சி. மீரா,

உன் கடிதத்துடன் அனுப்பியுள்ளது கடைசி.[1] அது மிகவும் சுவையாக உள்ளது. நற்குணங்களும் பலவீனங்களும் மனிதர்களுக்கும் தேவர்களுக்கும் பொதுவானவை. மனிதர்களும், தேவர்களும் நன்கு பழக்கமான நண்பர்கள்; அவர்கள் தங்களுக்கிடையே அடிக்கடி சண்டை போட்டுக்கொள்ளவும் கூடும். ஆனால் கண்ணுக்குப் புலப்படாத பரம்பொருள், இவர்களால் கட்டுண்டு இராமல், அனைவருக்கும் மேலாய் ஓங்கித் திகழும்.

பல சிரமங்களுடன் போராடி நீ முன்னேற்றம் கண்டு வருகிறாய். சோளமாவில் சப்பாத்திகள் எளிதில் செய்யமுடியும். முயன்று பார்; நீ வெற்றி பெறுவாய்.

அன்பு,

பாபு

## 349

சி. மீரா,

“ நூல் நிலையத்தில் ”, இவற்றை நேற்றிரவு நான் முடித்தேன். முடிவில் இது அருமையான தொகுப்பாக அமையும்.

அன்பு,

பாபு

*31-7-'41.*

---

1. வேதப் பாடல்களில் சில பகுதிகளைத் தேர்ந்தெடுத்து, ஒழுங்காகப் பாபுவுக்கு அனுப்பிக் கொண்டிருந்தேன்.

## 350

சேவாகிராமம், வார்தா,
*20-11-'41.*

*சி. மீரா,*

வேலையின் நடுவே, நான் உனக்கு ஒன்று மட்டுமே கூறி நிறுத்திக்கொள்வேன் : வாய்மையான கடவுள் உனக்கு வழிகாட்டட்டும், பொய்மையல்ல. ஏனெனில் இறைவனில் வாய்மை, பொய்மை, இரண்டும் அடங்கியுள்ளன. இம்மொழி உனக்கு விளங்கவில்லையென்றால், அதன் விளக்கத்தை நீ என்னிடம் கேட்கவேண்டும்.

அன்பு,

பாபு

## 351

பார்தோலி,
*13-12-'41.*

*சி. மீரா,*

நீ என் மனத்தை விட்டு என்றுமே அகலவில்லை என்பதை உனக்குச் சொல்லவே இதை எழுதுகிறேன். எழுத்து வேலையில் ஆழ்ந்திருந்தேன் ; அது இப்பொழுதுதான் முடிந்தது. உன் உடல் வலிமையும் உள்ளத்தின் அமைதியும் மேன்மேலும் வளர்ந்து வருகின்றன என்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

நான் மிகவும் சீராக உள்ளேன்.

## 352

[என் பேசாநோன்பை முடித்துவிட்டு, நான் ஆஷாதேவியின் வீட்டில் தங்கியிருந்தேன். நான் தேர்ந்தெடுத்துத் தொகுத்திருந்த வேதப்பாடல்களின் ஆங்கில மொழி பெயர்ப்பை அவர் உதவியுடன் திருத்தி, முடிக்க உத்தேசித்திருந்தேன். பேசாநோன்பு மேற்கொண்டிருந்த சில மாதங்களாக நான் தங்கியிருந்த குடிசையிலிருந்து 52-க்கும் குறைவில்லாமல் தேள்களைப் பிடித்து, வயலுக்கு அப்புறப்படுத்தியிருந்தேன். ஓரிரண்டு பாம்புகள் கூட அங்கு குடியிருந்தன. ஆஷாதேவியின் வீட்டில், நான் எலிகளைப் பிடிக்கத் தொடங்கினேன் ; ஒரு வாரத்திற்குள் முப்பது எலிகளுக்குமேல் பிடித்துத் தூரத்திலிருந்த மேட்டுப் பகுதிக்கு அவற்றை அப்புறப்படுத்தினேன்.]

சுயராஜ்ய ஆசிரமம். பார்தோலி
*3-1-'42.*

*சி. மீரா,*

நீ தேள்கள், எலிகள், பாம்புகள் அனைத்தையும் பிடிக்கின்றாய். கொஞ்ச நாட்களில் ஒரு பொருட்காட்சி சாலையையே அமைத்து விடுவாய் போலும்!!! தொகுப்பு வேலை முடியுந்தருவாயில் உள்ளது குறித்து மகிழ்ச்சி.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

# 353

*சி. மீரா,*

உன் கடிதம். வேதனைமிக்க உன் கடிதம் காசியில் எனக்குக் கிடைத்தது. நான் புறப்பட்டபோது, நாம் சந்திக்காதது குறித்து நீ ஏன் அவ்வளவு வருத்தப்பட்டிருக்க வேண்டும் என்பது எனக்கு விளங்கவில்லை.[1] நீ காலையில் என்னைச் சந்தித்திருந்தாய், அல்லவா? சந்தித்திருக்காவிட்டால் கூட, அன்பின் புற அறிகுறிகளைப் பொருட்படுத்தாத நிலைக்கு நீ இப்பொழுதாவது வந்திருக்க வேண்டுமே! அன்பு நிரந்தரமானது; புறச் சைகைகளுக்கு அப்பாற்பட்டது. உன் வேலையே உன்னை முழுதும் ஆட்கொள்ள வேண்டும்.

நீ நன்றாக இருப்பது குறித்து மகிழ்ச்சி.

...... நான் நன்றாக இருக்கிறேன்.

அன்பு,

பாபு

# 354

சேவாகிராமம்,
*15-3-'42.*

*சி. மீரா,*

உன் கடிதம் கிடைத்தது. பொய்மையை நீ உணர்ந்துவிட்டது குறித்து மகிழ்ச்சி. ஆபத்து இன்னும் நீங்கவில்லை. ஆனால் இறைவன் உனக்கு உறுதியான நண்பனாகவும் வழிகாட்டியாகவும் இருப்பான். முழுக்க முழுக்க அவனை நம்பு. உன் உடல், உனக்கு நம்பகமான அறிகுறியாகும்.

---

1. சென்ற பல ஆண்டுகளாகப் பாபு ஊருக்குச் செல்வதற்கு முன் அவர் பாதங்களைத் தொட்டு வணங்க நான் என்றும் தவறியதேயில்லை. ஆனால் இம்முறை, என்ன நடக்கிறது என்பதை நான் உணர்வதற்கு முன்பே அவர் புறப்பட்டு விட்டார்.

ஆசிரமத்தில் கூட்டம் அளவுக்கு மீறிவிட்டது; ஆனால் அது நடந்து வருகிறது.

அன்பு,

பாபு

## 355

[பெண்கள் முகாம் ஒன்றை நடத்த ஏற்பாடுகள் செய்வதிலும் நிர்வாகம் நடத்துவதிலும் கமலாதேவிக்கும் மிருதுளா பென்னுக்கும் உதவிசெய்ய நவசாரி அருகில் உள்ள ஒரு கிராமத்திற்கு நான் சென்றிருந்தேன்.]

சேகான்,
*11-4-'42.*

சி. மீரா,

நான் நேற்று உனக்கு எழுதினேன். முகாமுக்கு உன்னால் இயன்ற உதவியை நீ செய்வாயென்று நான் அறிவேன். மற்ற வேலையைப்பற்றித் தற்போது எனக்குத் தெளிவான உத்தேசம் எதுவுமில்லை; திட்டம் எதுவும் எப்பொழுதும் இராமலே போகலாம். ஆனால் மறு கணம் என்ன நடக்குமென்பதை எவரும் அறிய முடியாது.

அன்பு,

பாபு

## 356

['அயல்நாட்டுப் படைவீரர்கள்' என்ற தலைப்பில் பாபு ஹரிஜனுக்குத் தலையங்கம் எழுதிக்கொண்டிருந்தார். அதே மணி நேரத்தில், நானும் அதே கருத்துக்களைத் தெரிவித்துப் பாபுவுக்கு நீண்டதொரு கடிதம் எழுதினேன். பாபு சம்மதித்தால், அண்மையில் அலகாபாத்தில் நடக்கவிருந்த அ. இ. கா. க. கூட்டத்திற்கு நான் சென்று, ஜப்பானியரை எதிர்த்து நாடு முழுதும் அகிம்சா முறையில் எதிர்ப்புக் கிளர்ச்சியை உருவாக்கத் தலைவர்களுடன் இரகசியப் பேச்சுக்கள் நடத்த விரும்புகிறேன் என்றும் அக்கடிதத்தில் குறிப்பிட்டிருந்தேன். "அவ்வாறு எண்ணினால் உடனே புறப்பட்டு வா" என்று பாபு எனக்குத் தந்தி அனுப்பினர். அதே சமயத்தில் இக்கடிதத்தையும் எழுதினர்.]

சேகான்.
*20-4-'42.*

சி. மீரா,

உன் கடிதம் கிடைத்தது. இங்கு வந்து உன்னால் என்ன செய்யமுடியுமென்று பார்க்க, நான் உன்னை அனுமதிக்க வேண்டும்.

நீ ஏற்றுக் கொண்டுள்ள வேலையில் வேறெந்த எண்ணத்திற்கும் இடமில்லை. நான் உனக்கு ஒரு தந்தி அனுப்பியுள்ளேன். அது உனக்கு வந்து சேருமோ என்னவோ. இப்பொழுது, எதுவுமே நிச்சயமற்றதாகி விட்டது.

அன்பு,

பாபு

# 357

[நான் அடுத்த இரயிலில் புறப்பட்டுச் சேவாகிராமத்துக்கு வந்தேன். நான் பாபுவிடம் வந்தவுடன், அவர் தட்டெழுதிய இரண்டு பக்கங்களைத் தந்து, "இதைப் படி. இது உனக்குப் பிடித்திருந்தால், அடுத்த இரயிலிலேயே இதை அலகாபாத்திற்கு எடுத்துச் செல். அதற்கிடையில், உன்னுடன் நான் ஒரு மணி நேரம் பேசி, என் மன நிலையை உனக்கு விவரமாக விளக்குவேன். அதைக் காரியக்கமிட்டி உறுப்பினர்களுக்கு நீ நன்கு தெளிவுபடுத்த வேண்டும்" என்று கூறினார். பாபு என்னிடம் கொடுத்தது, 'வெள்ளையனே வெளியேறு' தீர்மானத்தின் முதல் நகல். நான் அடுத்த இரயிலிலேயே அலகாபாத் புறப்பட்டேன். பாபுவிடமிருந்து இரு கடிதங்களை—ஒன்று பண்டித ஜவாஹர்லாலுக்கும், மற்றொன்று மௌலானா சாகிபுக்கும்—தீர்மானத்தின் நகல்களுடன் எடுத்துச் சென்றேன்.

பாபுவின் மூல தீர்மானம், சில திருத்தங்களுடன் அலகாபாத்தில் நிறைவேற்றப்பட்டபின், நான் நேராக சேவாகிராமத்திற்கு, இராஜன் பாபு, டாக்டர் பிரபுல்லா கோஷ், சங்கரராவ் தேவ் ஆகியோருடன் சென்றேன். தீர்மானத்தைப் பாபு முன் வைத்துப் போராட்ட வேலைகளைத் தொடங்க அவர் அனுமதி கேட்டோம். தெளிவாகவும் உறுதியாகவும் பாபு உத்தரவு தந்தார். ஒவ்வொருவரையும் அவர் சொந்த மாநிலத்திற்கு அனுப்பினார். என்னிடம் கூறினார்: "மூன்று வேலைகளில் நீ தேர்ந்தெடுக்கும் ஒன்றை உன்னிடம் ஒப்படைக்கப் போகிறேன். ஒன்று, சென்னைக்குச் சென்று, இராஜாஜியின் மனத்தை மாற்ற முயலலாம். அல்லது டில்லிக்குச்சென்று வைஸ்ராயுடனும் மற்ற உயர்தர பிரிட்டிஷ் அதிகாரிகளுடனும் பேசி, அவர்களிடம் நியாயத்தை எடுத்துரைக்கலாம். மூன்றாவதாக, ஒரிஸ்ஸாவுக்குச் சென்று, கிழக்குக் கடலோரப் பகுதிகளில் நேரிடக் கூடிய ஜப்பானியப் படையெடுப்பை எதிர்க்க, சாத்வீக ஒத்துழையாமை அடிப்படையில், மக்களைத் திரட்ட ஆயத்தம் செய்வதில் உதவலாம்." ஒரு கணமும் தயக்கமின்றி, நான் மூன்றாவது பொறுப்பைத் தேர்ந்தெடுத்தேன். அதையொட்டி ஒரிஸா வுக்கு வந்திருந்தேன்.]

சேவாகிராமம்,
18-5-'42

சி. மீரா,

உன் முதல் கடிதம் பம்பாயில் கிடைத்தது. நடப்பது பற்றி அவ்வப்போது எனக்குச் செய்தி அனுப்பு. எல்லாம் இனிது முன்னேறி வருகிறது.

அன்பு,

பாபு

## 358

சேவாகிராமம்,
23-5-'42

சி. மீரா,

என்னுடைய கடிதங்கள்—நான் எழுதினது கடிதங்களா, அஞ்சலட்டைகளா, நான் மறந்து விட்டேன்—உனக்குக் கிடைத்திருக்கும். உனக்கு ஹரிஜன் கிடைத்து வந்தால், என் வாரக் கடிதத்தை விட அது உனக்கு அதிகச் செய்தி சொல்லும்.

உன் கேள்விகளை நான் கோபபாபுவுடன் தீர விவாதித்துள்ளேன். இருந்த போதிலும், உன் முக்கிய கேள்விகள் அனைத்துக்கும் ஹரிஜனில் பதில் சொல்லியுள்ளேன். அதன்படியொன்றை முன் பார்வைக்கு நான் உனக்கு இத்துடன் அனுப்புகின்றேன். ஹரிஜனில் வெளியாகும் முன்பு, அவற்றை எங்கும் பிரசுரிக்கக் கூடாது.

உன் கடிதத்தை ஆஷா, மகாதேவ், கிஷோர்லால் ஆகியோருக்கும் காட்டினேன். வர்ணனையில் உனக்குள்ள ஆற்றல் மிகச் சிறந்தது. அதன் பயனாக, உன் கடிதங்கள் படிப்பதற்கு மிகவும் சுவையாக இருக்கின்றன.

நான் வேகமாக, அதே சமயத்தில் நிதானமாகச் செல்ல விரும்புகிறேன் என்பதை என் பதில்களிலிருந்து நீ தெரிந்து கொள்வாய். நான் ஒரு நெருக்கடியை உண்டாக்க விரும்பவில்லை. நம் நடவடிக்கைகள் உறுதியாக இருக்க வேண்டும்; அதே சமயத்தில் படிப்படியாகவும் இருக்க வேண்டும். அப்பொழுது தான் மக்கள் கூடியவரை அதை விளங்கிக் கொள்வார்கள். நிலைமை கட்டுக்கு மீறிச் செல்லும் ஒரு கட்டம் வந்தே தீரும். கட்டு மீறிச் செல்லும் நிலைமையை நாம் வேண்டுமென்றே உருவாக்கக் கூடாது. அது தெளிவாகத் தெரிகிறதா?

அன்பு,

பாபு

[நான் பாபுவுக்கு அனுப்பிய அறிக்கை முழுவதையும் கீழே தருகிறேன். அந்த நேரத்தில் ஒரிஸ்ஸாவில் எங்களை எதிர் நோக்கியிருந்த நிலைமையை அந்த அறிக்கை நன்கு விளக்குகின்றது. அடுத்த கடிதத்தில் பாபு என் கேள்விகளுக்கு அளித்த பதில்களின் முழுப்பொருளைத் தெளிவாக்கவும் இந்த அறிக்கை உதவும்:]

## ஜப்பானியப் படையெடுப்பு, ஆக்ரமிப்புப் பிரச்னை

ஒரிஸ்ஸா கடலோரப் பகுதிகளில் எங்காவது தான் ஜப்பானியர் வந்திறங்குவர் என்று நாம் எடுத்துக் கொள்ளலாம். அவர்கள் இறங்கும் நேரத்தில் குண்டுவீச்சோ, துப்பாக்கிச் சூடோ, அநேகமாக இருக்காது. ஏனென்றால் கடலோரப் பகுதியில்

தற்காப்பு நடவடிக்கைகள் எதுவும் மேற்கொள்ளப்படவில்லை. கடலோரப் பகுதியிலிருந்து, வரட்சியான, மேடு பள்ளமில்லாத நெல் வயல்களின் வழியாக அவர்கள் வேகமாக முன்னேறுவார்கள். அவ்வழியில் தடைகளாக இருக்கக் கூடியவை, ஆறுகளும் கால் வாய்களும் தான்; அவையும் பெரும்பாலும் காய்ந்து போயுள் ளன. எந்த இடத்திலும் அவற்றைக் கடப்பது கடினமில்லை. நமக்குத் தெரியும்வரை, ஒரிஸ்ஸா ராஜ்யங்களின் மலை, காட்டுப் பகுதிகளை அணுகும்வரை, ஜப்பானியர் முன்னேற்றத்தைத் தடுத்து நிறுத்தக் குறிப்பிடத்தக்க முயற்சி எதுவும் செய்யப் படாது. தற்காப்புச் சேனை, எதுவாயினும், இப்பகுதிகளில் உள்ள காடுகளில் மறைவாய் நிற்கிறது என்று கூறப்படுகிறது. ஜாம்ஷெத்பூர் சாலையை எப்படியாவது காக்க அது துணிகரமான முயற்சி செய்யும் என்று எதிர்பார்க்கலாம். ஆனால் அந்த முயற்சி வெற்றி பெறுவதற்கான சாத்தியக் கூறுகள் சொற்பமே. அப்படி யானல், ஒரிஸ்ஸாவின் வடமேற்குப் பகுதியில் ஒரு போர் நடக்கு மென்றும், அதற்குப் பிறகு ஜப்பானிய சேனை பீஹாருக்குள் புகும் என்றும் எதிர்பார்க்கலாம். அக்கட்டத்தில், அநேகமாக, ஜப்பா னியர் நாடு முழுவதும் பரவலாக இருக்க மாட்டார்கள்; கடலுக்கும், முன்னேறிவரும் தங்கள் இராணுவத்திற்கும் இடையே உள்ள தொடர்புப் பாதைகளிலே முழுக் கவனம் செலுத்துவதில் முனைந் திருப்பார்கள். பிரிட்டிஷ் நிர்வாகம் இதற்கு முன்பே அரங்கத்தி லிருந்து வெளியேறியிருக்கும்.

இந்த நிகழ்ச்சிகள் நேரிட்டால், நாம் எப்படி நடக்க வேண்டு மென்பது தான் நம் முன்னுள்ள பிரச்னை.

வயல்களைத் தாண்டியும் கிராமங்களில் புகுந்தும் செல்லும் ஜப்பானிய சேனைகள், மக்களின் பகைவர்கள் என்று பறைசாற்றிச் செல்லமாட்டார்கள். பிரிட்டிஷ், அமெரிக்கப் போர் முயற்சிகளை விரட்டியடித்து முறியடிக்கும் வீரர்களாகவே அவர்கள் காட்சி அளிப்பார்கள். மக்களைப் பொறுத்தவரை, அவர்கள் உணர்ச்சிகளும் உள்ளப்பாங்கும் தெளிவாக இல்லை. அவர்களிடையே ஓங்கியுள்ள உணர்ச்சி, ஆங்கிலேயரிடம் அவர்கள் கொண்டுள்ள அச்சமும் அவநம்பிக்கையும். அவர்கள் நடத்தப்படுகிற விதத்தினல், இந்த உணர்ச்சிகள் நாளுக்கு நாள் வளர்ந்து வலுத்து வருகின்றன. ஆகவே பிரிட்டிஷ் அல்லாதது எதுவும் வரவேற்பிற்குரியது என்ற நிலை ஏற்பட்டுள்ளது. ஒரு வேடிக்கையான எடுத்துக்காட்டைக் காண்போம். “அதிக இரைச்சல் போடும் விமானங்கள் பிரிட்டிஷ் விமானங்கள். ஆனல் நிசப்தமான விமானங்களும் இருக்கின்றன. அவை தான் மகாத்மாவின் விமானங்கள்'', என்று சில பகுதிகளில் கிராமவாசிகள் கூறுகின்றனர். சூதறியாத எளிய இம் மக்களுக்குக் கற்றுக் கொடுக்கக் கூடியது, நடுநிலைமை வகிப்பது தான். நடுநிலைமை வகிப்பது ஒன்றுதான், இச் சூழ்நிலைக்குப் பொருத்த மானதென்பது அவர்கள் ஏற்றுக் கொள்ளக் கூடியது. குண்டு வீச்சிலிருந்து தப்பத் தற்காப்பு நடவடிக்கைகளில் பயிற்சி கூட மக்களுக்கு அளிக்காமல், அவர்களை விதி விட்ட வழிக்குப்

பிரிட்டிஷார் கைவிட்டுள்ளனர் என்பது மட்டுமல்ல; பிரிட்டிஷார் இடும் ஆக்கிஃனகளுக்கு மக்கள் கீழ்ப்படிந்தால், போர் நடக்கும் முன்பே மக்கள் அழிந்து விடுவார்கள். வெறுப்புக்கு ஆளாகியுள்ள இந்த அரசை விரட்ட வரும் ஜப்பானியரைத் தடுக்க மக்கள் எப்படி உற்சாகமாக முன்வருவார்கள்? அதிலும் "உங்களுடன் போராட நாங்கள் வரவில்லை" என்று தானே ஜப்பானியர் மக்களிடம் சொல்கின்றனர். ஆனால் நடுநிலைமை வகிக்கக் கிராமவாசிகள் சித்தமாய் இருப்பார்கள் என்று நான் கண்டுள்ளேன். அதாவது, தங்கள் வயல்களையும் கிராமங்களையும் கடக்க ஜப்பானியருக்கு இடம் கொடுத்துவிட்டுக் கூடியவரை அவர்களுடன் தொடர்பு கொள்ளாமலிருக்க முயல்வார்கள். தங்கள் உணவுப் பொருட்களையும் பணத்தையும் ஒளித்து வைத்து, ஜப்பானியருக்கு ஒத்தாசையாக இருக்க அவர்கள் மறுப்பார்கள். ஆனால் அந்த அளவு எதிர்ப்பு கூட சில பகுதிகளில் ஏற்படுவது கடினம். பிரிட்டிஷ் அரசின் மேல் வெறுப்பு அவ்வளவு அதிகமாக இப்பகுதிகளில் இருப்பதால், பிரிட்டிஷாருக்கு எதிரான எந்த சக்தியையும் மனமுவந்து அவர்கள் வரவேற்பார்கள். சாதாரண மக்கள் எவ்வளவு அதிகப்படியான எதிர்ப்பில் உறுதியாகவும் தொடர்ந்தும் ஈடுபடத் துணிவார்கள் என்பதை நிதானித்து மதிப்பிட்டு, அதையே நமது கண்டிப்பான கொள்கையாக ஏற்றுக்கொள்ள முயல வேண்டும் என்பது தான் என் கருத்து. கடுமையான எதிர்ப்பை சிறிது நேரம் காட்டி, விரைவில் அது முறிய இடம் கொடுப்பதைக் காட்டிலும், நூற்றுக்கு நூறு எதிர்ப்பு இல்லாவிடினும், உறுதியாக, நிலைத்து, நீண்ட நாட்கள் ஒரு கொள்கையைக் கடைப்பிடிப்பது அதிகப் பலன் தரும்.

பாமர மக்கள் தொடர்ந்து உறுதியாகப் பின்பற்றுவார்களென்று நாம் எதிர்பார்க்கக் கூடியது இதுதான் :

1. எவ்வகையான நிலத்தையும் வீடுகளையும் சங்கமச் சொத்துக்களையும் வன்முறையாக ஜப்பானியர் வசப்படுத்துவதை உறுதியாகவும், பெரும்பாலும் அகிம்சை அடிப்படையிலும் எதிர்க்க வேண்டும்.

2. கட்டாயத்தின் கீழ், ஜப்பானியருக்கு எவ்வித வேலையும் செய்யாதிருக்க வேண்டும்.

3. ஜப்பானியர் ஆதீனத்தில் எவ்வித நிர்வாகப் பொறுப்பையும் ஏற்றுக்கொள்ளக் கூடாது.

(நகரவாசிகளில் சில ரகத்தினர், அரசாங்கச் சந்தர்ப்பவாதிகள், மற்றப் பகுதிகளிலிருந்து கொண்டுவரப்படும் இந்தியர் ஆகியோர் இந்தப் பொறுப்புக்களை ஏற்றுக்கொள்ள முன் வருவதைத் தடுப்பது கடினமாக இருக்கலாம்.)

4. ஜப்பானியரிடமிருந்து எதையும் விலைக்கு வாங்கக்கூடாது.

5. அவர்கள் நாணயப் புழக்கத்தை ஏற்றுக்கொள்ள மறுத்து, அரசை நிறுவ அவர்கள் செய்யும் முயற்சி எதையும் எதிர்க்க வேண்டும்.

(போதிய ஊழியர்களும் போதிய அவகாசமும் கிடைக்காததால், அதிகச் சிரமமாக உள்ளது. ஆயினும் வெள்ளப் பெருக்கை அணைபோட்டுத் தடுக்க நாம் பாடுபட வேண்டும்).

இப்பிரச்னையில் எழும் சில சிக்கல்களையும் சிரமங்களையும் கவனிப்போம்.

1. உணவும் பொருள்களும் வாங்குவதற்கும் ஊதியம் தருவதற்கும் பிரிட்டிஷ் நாணயச்செலாவணி நோட்டுகளையே ஜப்பானியர் பயன்படுத்தலாம். அப்பொழுது, நல்ல விலை கிடைக்கும்போது பொருள்களை விற்கவும், நல்ல ஊதியம் கிடைக்கும்போது வேலை செய்யவும் மக்கள் மறுக்க வேண்டுமா? பலமாதங்களாகத் தொடர்ந்து எதிர்ப்பு இயக்கத்தை நடத்த வேண்டுமென்றால், இவ்வாறு மக்கள் பணம் பெறுவதைத் தடுப்பது கடினம். ஜப்பானியரிடம் ஊழியம் செய்யவும், அவர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்கவும் மக்கள் மறுக்கும் வரை, சுரண்டல் என்ற அபாயத்தைத் தடுக்க முடியும்.

2. பிரிட்டிஷார் வெடிவைத்துத் தகர்த்துவிட்டுச் செல்லும் பாலங்கள், வாய்க்கால்கள் முதலியவற்றைச் சீரமைப்பது பற்றி என்ன செய்ய வேண்டும்? பாலங்களும் வாய்க்கால்களும் நமக்கும் தேவைப்படும். ஆகவே ஜப்பானியருடன் சேர்ந்து உழைக்கும் அவசியம் நேரிடுவதையும் பொருட்படுத்தாமல், நாம் அவற்றைச் சீரமைப்பதில் ஈடுபட வேண்டுமா? அல்லது பாலம் கட்டும் ஜப்பானியப் பணியாளர் வந்தவுடன் நாம் விலகி ஒதுங்கிவிட வேண்டுமா?

3. சிங்கப்பூரிலும் பர்மாவிலும் கைது செய்யப்பட்ட இந்தியப் போர்வீரர்கள் ஜப்பானியப் படையெடுப்புச் சேனையுடன் வந்தால், அவர்களிடம் நாம் எப்படி நடந்துகொள்ள வேண்டும்? ஜப்பானியரிடமிருந்து ஒதுங்கி நிற்பதுபோல், அவர்களையும் ஒதுக்கி வைக்க வேண்டுமா? அல்லது அவர்கள் மனத்தை மாற்றி நம் கருத்தை அவர்கள் ஏற்றுக்கொள்ளச் செய்ய முயல வேண்டுமா?

4. (ஜப்பானியர் வருவதைக் கண்டு) பிரிட்டிஷ் அரசு வெளியேறியபின், நாணயச் செலாவணி பற்றி நாம் என்ன செய்ய வேண்டும்?

5. போர்கள் நடந்து ஜப்பானிய சேனைகள் முன்னேறியபின், மடிந்தவர்களும் காயமடைந்தவர்களும் போர்க்களத்தில் சிதறிக் கிடப்பார்களே. இறந்தவர்களைப் புதைப்பதிலும் எரிப்பதிலும், காயமடைந்தவர்களை எடுத்துச் சென்று அவர்களுக்குச் சிகிச்சை செய்வதிலும், நாம் சிறிதும் தயக்கமின்றி ஜப்பானியருடன் சேர்ந்து உழைக்க வேண்டுமென்று நான் கருதுகிறேன். தங்கள் சேனையில் லேசாகக் காயமடைந்தவர்களுக்கு, ஜப்பானியர் அநேகமாக

சிகிச்சை செய்து அழைத்துச் செல்வார்கள். அதேபோல் எதிரி சேனையில் லேசாகக் காயமடைந்தவர்களைக் கைதிகளாக அழைத்துச் செல்வார்கள். ஆனால் மற்றவர்களை அநேகமாக அவர்கள் விட்டுச் செல்வார்கள். அவர்களைக் கவனிப்பது நம் புனிதப் பொறுப்பாகும். இதற்காக, இப்பொழுதிருந்தே உள்ளூர் மருத்துவர்களின் மேற்பார்வையில் தொண்டர்களுக்குப் பயிற்சி அளிக்கத் திட்டமிட்டுள்ளோம். உள்ளூரில் கலவரங்கள், தொத்துநோய்த் தாக்குதல்கள் ஆகியவை நேரிட்டாலும், இத்தொண்டர்களைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

6. போர்க்களத்தில் இறந்தவர்கள், காயமடைந்தவர்கள் ஆகியோர் ஒருபுறமிருக்க, துப்பாக்கிகள், கைத்துப்பாக்கிகள், சிறிய ஆயுதங்கள் ஆகியவையும் போர்க்களத்தில் சிதறிக் கிடக்கலாம். அவற்றை ஜப்பானியர் எடுத்துச் செல்லாமல் போயிருக்கலாம். இவற்றை நாம் சேகரிக்காவிடில், போர்க்களத்தைச் சூறையாட எப்பொழுதுமே கழுகுகள்போல் மொய்க்கும் கொள்ளைக்காரர்கள், திருடர்கள், மற்ற தீயவர்கள் ஆகியோர் கையில் இவை சிக்கிவிடும். இந்தியாவைப்போல் மக்கள் ஆயுதங்கள் தாங்கியிராத ஒரு நாட்டில் இதனால் அதிகத் தொந்தரவு ஏற்படக் கூடும். இந்த ஆயுதங்களையும் குண்டுகளையும் நாம் சேகரித்தால், அவற்றை நாம் என்ன செய்ய வேண்டும்? அவற்றைக் கொண்டுபோய்க் கடலிலே போட்டுவிட வேண்டும் என்பதுதான் என் மனத்தில் உதிக்கும் ஆசை. தயவு செய்து ஆலோசனை கூறி வழி காட்டுங்கள்.

மீரா

# 359

[அப்பொழுது நடந்த 'ஆலோசகர் ஆட்சி'யில் இரு உயர்தர ஆங்கிலேய அதிகாரிகளை நான் பேட்டி கண்டிருந்தேன். ஜப்பானியர் வருகிறார்களென்ற செய்தி கிட்டியவுடன், அரசாங்க அதிகாரிகள், நாற்பது அல்லது ஐம்பது மைல் உள்ளே தள்ளி இருந்த மலைகளுக்குச் சென்றுவிட வேண்டுமென்றும், தங்கள் கார்களில் எடுத்துச் செல்ல முடியாத கோப்புகளை எரித்துவிட வேண்டுமென்றும், பாலங்கள் அனைத்தையும் வெடிவைத்துத் தகர்த்துவிட வேண்டுமென்றும் திட்டம் வகுத்திருந்தது எங்களுக்குத் தெரிந்திருந்தது. ஆகவே அவ்வாறு செல்லும்போது, ஒழுங்கானமுறையில் அவர்கள் விலகி, நிர்வாகப் பொறுப்பை எங்கள் கையில் ஒப்படைத்துவிட்டுச் செல்ல வேண்டுமென்று அவர்களிடம் வேண்டுகோள் விடுக்கவே, அவர்களை நான் பேட்டி கண்டேன். குறிப்பாகச் சிறைச் சாவிகளை எங்களிடம் ஒப்புவிக்க வேண்டுமென்றும், பொது மருத்துவ மனைகளிலிருந்து மருத்துவர்களையும் மருத்துவ சாதனங்களையும் எடுத்துச் செல்லக் கூடாதென்றும் நான் வற்புறுத்தினேன்.]

சேவாகிராமம்,
வார்தா வழி, ம. மா.
*31-5-'42.*

சி. மீரா,

விளக்கமாகவும் கருத்துத் தெளிவுடனும் நீ எழுதியுள்ள கடிதம் கிடைத்தது. பேட்டியைப் பற்றிய அறிக்கை சிறப்பாக உள்ளது; உன் பதில்கள் நேராகவும், தெளிவாகவும், துணிவாகவும் உள்ளன. அவற்றில் நான் குறை கூறுவதற்கு எதுவுமில்லை. "நீ இப்பொழுது போலவே இனியும் செயல்படு," என்றுதான் நான் கூற முடியும். சரியான வேளையில் சரியான இடத்திற்கு நீ சென்றுள்ளாய் என்பதை நான் தெளிவாக அறிய முடிகிறது. ஆகவே வேறொன்றும் கூறாமல், நேராக உன் கேள்விகளுக்கு வருகிறேன். கேள்விகள் அனைத்தும் அருமையானவை; பொருத்தமானவை.

*1.* மக்கள் என்ன செய்ய வேண்டுமென்பதை அவர்களுக்குத் தெளிவாக நாம் எடுத்துக்கூற வேண்டுமென்று எண்ணுகிறேன். தங்கள் ஆற்றலுக்கேற்ப அவர்கள் நடப்பார்கள். அவர்கள் ஆற்றலை நாம் மதிப்பிட்டு, அதற்கேற்ப நாம் ஆலோசனைகள் கூற முற்பட்டால், அவை அரைகுறையாக இருக்கும் என்பது மட்டுமல்ல; கொள்கையை விட்டுக் கொடுப்பதாகவும் இருக்கும். இதை நாம் ஒருபோதும் செய்யக் கூடாது. இந்த அடிப்படையை மனத்திற் கொண்டு, என் ஆலோசனைகளை நீ படிக்க வேண்டும். ஜப்பானிய சேனையுடன் ஒத்துழைக்க மறுப்பதுதான் நமது கொள்கை என்பதை நினைவிற் கொள். ஆகவே எந்த வகையிலும் நாம் அவர்களுக்கு ஒத்தாசை செய்யக் கூடாது. அவர்களுடன் கொள்ளும் தொடர்பு எதனாலும் நாம் எவ்வித நன்மை அடையவும் கூடாது. ஆகவே அவர்களுக்கு நாம் எதையும் விற்க முடியாது. மக்களால் ஜப்பானியரை எதிர்த்து நிற்க முடியவில்லையென்றால், ஆயுதம் தாங்கிய படைவீரர்களைப் போலவே, நின்று போராட முடியாதபோது, விலகி ஒதுங்கிவிட வேண்டும். அவ்வாறு செய்தால், ஜப்பானியருடன் தொடர்பு கொள்வதைப் பற்றிய பிரச்னைக்கே இடமில்லை. மரணம் வரை ஜப்பானியரை எதிர்க்கும் துணிவும், ஜப்பானியர் ஆக்ரமிக்கும் பகுதியைக் காலிசெய்யும் துணிவும் ஆற்றலும் மக்களுக்கு இராவிடில், நான் கூறியுள்ள யோசனைகளை மனத்திற் கொண்டு, தங்களால் எது சாத்தியமோ, அதைச் செய்ய வேண்டும். ஒன்றுமட்டும் அவர்கள் எந்த நிலைமையிலும் செய்யவே கூடாது;—மனமொப்ப ஜப்பானியருக்குப் பணியக் கூடாது. அது சுதந்திரப் பற்றுடைய மக்களுக்குத் தகாத, கோழைத்தனமான செய்கையாகும். ஒரு தீயிலிருந்து தப்பி, இன்னொரு, அநேகமாக இன்னும் பயங்கரமான தீக்குள் அவர்கள் விழக்கூடாது. ஆகவே ஜப்பானியரை எதிர்ப்பதே, எப்பொழுதும் அவர்கள் கொள்கையாக இருக்க வேண்டும். ஆகவே பிரிட்டிஷ் பண நோட்டுகளையோ ஜப்பானிய நாணயங்களையோ ஏற்றுக்கொள்வதென்ற பிரச்னைக்கே இடமில்லை. ஜப்பானியர் கையிலிருந்து மக்கள் எதையும் பெறக் கூடாது. நம் நாட்டுமக்களுடன் தொடர்பைப் பொறுத்தவரை, நாம்

நம்மிடம் இருக்கக் கூடிய பிரிட்டிஷ் செலாவணியைப் பயன்படுத்த வேண்டும்; அல்லது பண்ட மாற்றுதல் செய்துகொள்ள வேண்டும். பிரிட்டிஷ் அரசுக்குப் பதிலாகப் பொறுப்பேற்கும் தேசிய அரசு, தன் சக்திக்கு எட்டியவரை, பிரிட்டிஷ் செலாவணி அனைத்தையும் மக்களிடமிருந்து எடுத்துக் கொள்ளுமென்று நாம் எதிர்பார்க்கலாம்.

2. பாலம் கட்டுவது பற்றிய கேள்விக்குப் பதில், நான் மேலே கூறியுள்ள பதிலில் அடங்கியுள்ளது. இந்த ஒத்துழைப்பு பற்றிய பேச்சுக்கே இடமில்லை.

3. இந்தியப் போர்வீரர்கள் நம் மக்களுடன் தொடர்பு கொண்டால், அவர்களுக்கு நல்லெண்ணம் இருந்தால் அவர்களுடன் பழகி, அவர்களால் முடிந்தால் நம் நாட்டு மக்களுடன் சேருமாறு அவர்களை அழைக்க வேண்டும். அன்னிய ஆட்சியிலிருந்து நாடு விடுவிக்கப்படும் என்ற வாக்குறுதியின் பேரில் அவர்கள் இங்கு அழைத்து வரப்பட்டிருக்கலாம். அன்னிய ஆட்சி இருக்காது. ஆகவே அவர்கள் மக்களின் நண்பர்களாகி, பிரிட்டிஷ் அரசுக்குப் பதிலாக நிறுவப்படும் தேசிய அரசுக்குக் கீழ்ப்பட்டு நடக்க வேண்டும். பிரிட்டிஷ் ஒழுங்காகவும் முறையாகவும் விலகி, இந்தியர் கையில் பொறுப்பை ஒப்படைத்துச் சென்றிருந்தார்களானால், எல்லாம் இனிது நடக்கும். இந்தியாவிலோ, நாட்டின் எந்தப் பகுதியிலோ, ஜப்பானியர் தங்களை நிலை நாட்டிக் கொள்வது எளிதாக இராது. ஏனென்றால், தங்களை எதிர்த்து, மனக்கசப்பு கொண்டுள்ள மக்களுடன் அவர்கள் பழக வேண்டியிருக்கும். என்ன நடக்கும் என்று மதிப்பிட்டுக் கூறுவது கடினம். எந்த வல்லரசு இயங்கினாலும்—பிரிட்டிஷ் ஆயினும் சரி, ஜப்பானியர் ஆயினும் சரி—அதன் ஆதிக்கத்தை எதிர்த்து நிற்க மக்களைப் பக்குவப்படுத்தினால் போதும்.

4. முதல் கேள்விக்குப் பதிலில் அடங்கியுள்ளது.

5. அந்த நிலைமை அநேகமாக வராது. ஆனால் வந்தால், ஒத்துழைப்பு அனுமதிப்பதற்குரியது மட்டுமல்ல, அவசியமாகக் கூட இருக்கலாம்.

6. களத்திலும் வழியிலும் சிதறிக் கிடக்கும் ஆயுதங்கள் பற்றிய உன் வாதம், நியாயமானது மட்டுமல்ல; கவர்ச்சிகரமாகவும் உள்ளது. அதைப் பின்பற்றலாம். பண்புடையவர்கள் அவற்றைக் கண்டு பிடித்தால், பத்திரமான இடத்தில் சேமித்து வைக்கும் யோசனையையும் நான் அடியோடு நிராகரிக்க மாட்டேன். ஆனால் பத்திரமாகச் சேமித்துத் தீயவர்களிடம் சிக்கிவிடாமல் தடுப்பது சாத்தியமில்லையென்றால், உன் யோசனைதான் சாலச்சிறந்தது.

அன்பு,

பாபு

# 360

[மழைகாலம் தொடங்கிவிட்டதால், ஜப்பானியர் உடனடியாகப் படையெடுப்பார்களென்ற அபாயம் சற்று குறைந்தது. ஆகவே காரியக் கமிட்டிக் கூட்டத்தின்போது, நான் ஒரிஸ்ஸாவிலிருந்து புறப்பட்டு ஹரிகிருஷ்ண மேத்தாப் அவர்களுடன் சேவா கிராமத்துக்குச் சென்றேன். 'வெள்ளையரே, வெளியேறு' தீர்மானம் நிறைவேற்றப்பட்ட பிறகு, பாபு என்னை நேராக வைஸ்ராயிடம் அனுப்பி, தம் அகத்தே எழுந்த அந்தரங்கக் கருத்துக்களையும் அவருக்கு விளக்குமாறு கூறினர். என்னைப் பார்க்க இயலாதென்று லின்லித்கோ பிரபு, தம் தனிச் செயலர் (லெயித்வெயிட்) மூலம் செய்தி அனுப்பினர். ஆனல் அதே சமயத்தில், பாபுவின் உள்ளக் கிடக்கையை உணர அவர் விரும்பியதால், நான் லெயித்வெயிட்டுடன் பேச வேண்டுமென்று யோசனை கூறப்பட்டது. நான் அவ்வாறே செய்து, ஒருமணி நேரம் முழுதாக அவருடன் பேசிக் கொண்டிருந்தேன்.]

சி. மீரா,

வர்ணனைகள் நிறைந்த கடிதங்கள் எழுதப் பிறவியிலேயே உனக்கு ஆற்றல் உண்டு என்று நான் அளித்த நற்சான்றுக்கு ஏற்ப, உன் கடிதங்கள் அமைந்துள்ளன. லெயித்வெயிட்டுடன் உன் உரையாடலை நீ சித்திரித்துள்ளது தத்ரூபமாக உள்ளது.

உன்னைப் பார்க்க வைஸ்ராய் காட்டிய தயக்கத்தை என்னல் புரிந்து கொள்ள முடிகிறது; அதற்கான நியாயத்தை உணரவும் முடிகிறது. ஆனல் லெ...வுடன் நீ பேசியதே போதும்.

மௌலான சாகிபையும் ஜவாஹர்லாலையும் நீ சந்தித்தது பற்றிச் சுசீலா என்னிடம் கூறினள். அவர்கள் இருவரும் டில்லியில் இருந்தது நல்லதாயிற்று. மௌலான சாகிப் இன்னும் அங்கிருந்தால், அவருக்கு என் அன்பைத் தெரிவி. அவருக்கு முற்றும் குணமாகிவிட்டதென்று நான் நம்புவதாகவும் கூறு.

ஹரியானவில் நீ தங்கியது வசதியாக இருந்ததென்று நம்புகிறேன். அவகாசம் கிடைப்பதைப் பொறுத்து, நீ இங்கு திரும்பி வரலாம்; அல்லது பம்பாயில் என்னைச் சந்திக்கலாம். நான் இங்கிருந்து 2ந்தேதி புறப்பட்டு, 3ந்தேதி பம்பாய் போய்ச் சேருவேன். நான் நன்ருக இருக்கின்றேன். சுகக்குறைவாயிருந்த பியரிலால் இப்பொழுது குணமடைந்து வருகிருர்.

அன்பு,

பாபு

# 361

[சென்ற கடிதத்திற்கும் இக்கடிதத்திற்குமிடையே மறக்கமுடியாத ஈராண்டுகள் கடந்தன. டில்லியிலிருந்து நான் 1942 ஆகஸ்டு பம்பாய் சென்று பாபுவுடன் சேர்ந்தேன். ஆகஸ்ட் 9ந்தேதி, பாபு,மகாதேவ் ஆகியோரும் நானும் காலை 5 மணிக்குப் பிர்லா மாளிகையில் கைது செய்யப்பட்டோம். நாங்கள் மூவர், காரியக் கமிட்டி உறுப்பினர் அனைவர், பம்பாயில் காங்கிரஸ் தலைவர்கள், முக்கிய ஊழியர்கள் ஆகியோர் ஒரு தனி இரயிலில் அழைத்துச் செல்லப்பட்டோம். திருமதி நாயுடுவைத் தவிர,காரியக்கமிட்டி உறுப்பினர் அனைவரும் ஆமத் நகர் கோட்டைக்கு அழைத்துச் செல்லப்பட்டனர். மற்றவர்களைப் புனுவுக்கு அருகில் ஒரு சிறிய ஊர் இரயில் நிலையத்தில் நிறுத்தி வைத்தனர். பாபுவையும் திருமதி நாயுடு, மகாதேவ் ஆகியோரையும் என்னையும் ஒரு காரில் ஏற்றி ஆகாகான் மாளிகைக்கு அழைத்துச் சென்றனர். மற்றவர்களை எரவாடா சிறைக்கு இட்டுச் சென்றனர். மூன்றும் நாள் பாவும் சுசீலாவும் ஆகாகான் மாளிகையில் எங்களோடு சேர்ந்தனர். மாளிகையைச் சுற்றிலும், உயரமான முள்வேலி போடப்பட்டிருந்தது; அல்லும் பகலும் ஆயுதம் தாங்கிய காவல் துறையினர் பலர் அங்கு காவல் காத்து வந்தனர். எங்கள் சிறை வாசத்தின் முதல் நாளிலிருந்து கடைசி நாள் வரை பல முக்கிய பயங்கர நிகழ்ச்சிகள் ஒன்றன் பின் ஒன்றாகத் தொடர்ந்தன. நாங்கள் வந்து சேர்ந்த ஐந்து நாட்களில், மகாதேவ் மாரடைப்பால் மரணமடைந்தார். (எங்களுடன் இருக்க, அதன் பின்பு பியாரிலால் அனுப்பப்பட்டார்.) ஆறு மாதங்களுக்குப் பின் பாபு, இருபத்தோரு நாள் உண்ணாவிரதம் தொடங்கினர். அது அவரை மரணத்தின் ஓரத்துக்கே அழைத்துச் சென்றது. உண்ணாவிரதம் முடிந்து சில நாட்களுக்கெல்லாம் திருமதி நாயுடு கடுமையான மலேரியா சுரத்தால் தாக்கப்பட்டு, கவலைக்கிடமான நிலையில் விடுதலை செய்யப்பட்டார். பாவின் உடல் நலிவுறத் தொடங்கியது. நீண்ட நாட்கள் நோய் வாய்ப்பட்டிருந்து, வேதனைப்பட்டபின், 1944 பிப்ரவரியில் அவர் மரணமடைந்தார். இதற்குச் சிறிது காலத்திற்குப் பின் பாபுவையே கடுமையான மலேரியா சுரம் தாக்கி, அவர் உடல் நலன் அடியோடு கெட்டது. இறுதியில் பாபுவையும் எங்களையும் அந்த ஆண்டு ஜூன் மாதம் அரசாங்கம் விடுதலை செய்தது.]

சேவாகிராமம்,
வார்தா,
3-8-'44

அஞ்சலட்டை

உன் கடிதங்கள் அனைத்தும் கிடைத்தன. இன்று பெரும் குழாத்துடன் இங்கு வந்து சேர்ந்தேன். நான் நன்றாக இருக்கின்றேன். ஆம்; நீ நிதானமாகச் செல்ல வேண்டும்; இடத்தைத் தேர்ந்தெடுப்பதில் நீ அவசரப்படக்கூடாது.*1 ஆசிரமம்*2 அளவுக்கு மீறிப் பெருகிவிட்டது.

அன்பு, பாபு

*1. ஐக்ய மாநிலத்தின் வடமேற்குப் பகுதியில் நானே ஒரு சிறிய ஆசிரமம் தொடங்க உத்தேசித்திருந்தேன். அதற்கு இடம் தேர்ந்தெடுப்பதில் ஈடுபட்டிருந்தேன்.

*2. சேவாகிராமம்.

## 362

பம்பாய்,
18-9-'44.

சி.மீரா,

ரெவாரியிலிருந்து நீ எழுதிய கடிதம் கிடைத்தது. நீ அனுப்பிய செய்திகளைத் தேவதாஸ் வந்து கூறினன். உன் உடல் தளர்ந்து முறிந்து விட்டதென்றும் அவன் சொன்னன். அதற்கு, முழுவதும் இல்லாவிடினும், ஓரளவுக்கு நான் பொறுப்பேற்க வேண்டுமென அஞ்சுகிறேன். அதைச் சீர் செய்யும் பொறுப்பையும் நான் ஏற்க முடிந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும். தின்ஷாவிடமாவது, சிவ சர்மாவிடமாவது சிகிச்சை செய்து கொள்ளலாமே. இருவரும் இப் போது இங்குதான் இருக்கிருர்கள்......

கசாப்புக்காரரிடமிருந்து பசுக்கள் எப்படிக் காப்பாற்றப்பட் டன என்று கூறு. ஓர் ஆசிரமத்தை நிறுவி, நிர்வகிக்கும் பெரும் பொறுப்பை நீ ஏற்றுக் கொள்வதற்கு முன், உன் உடல் நலனைச் சீர் செய்து கொள்ள வேண்டுமென்று உன்னிடம் வற்புறுத்திக் கூறுவேன்.

என் பேச்சு வார்த்தைகள்[1] இன்னும் நீண்டு கொண்டே செல் கின்றன. அவற்றின் முடிவு, ஆண்டவனுக்குத்தான் தெரியும். இதில் ஒரு நல்ல அம்சம் உண்டு. இந்தச் சுமையை என்னுல் தாங்கிக்கொள்ளமுடிகிறது. என் உடல்நலன் சீராக உள்ளது...... நாமிருவரும் கூப்பிடு தூரத்தில் அருகாமையில் இருப்பது அதிர்ஷ்டவசம்தான்.

இன்று மௌன நாள். வேலையில் எஞ்சி நின்றதை முடிக்க இதைப் பயன்படுத்தி வருகின்றேன்.

அன்பு,
பாபு

## 363

சேவாகிராமம்,
3—12—'44.

சி. மீரா,

உனக்குப் பிடித்தமான இடத்தைத் தேர்ந்தெடுத்தது குறித்து மகிழ்ச்சி. உன் கனவு அனைத்தும் ஈடேறட்டும். நான் டில்லிக்குச் செல்லும்போது, அவகாசம் கிடைத்தால், உன் ஆசிரமத்திற்கு மிகுந்த மகிழ்ச்சியுடன் வருவேன். என்னைப்பற்றிக் கவலைகொள் ளாதே. அன்ருட வேலையிலிருந்து—அன்புக் கடிதங்கள் எழுதுவதி லிருந்தும் தான்—எனக்கு ஓய்வுதான் தேவை. ஆகவே இந்த

1. காயிதே ஆஜம் ஜின்னுவுடன் பேச்சு வார்த்தைகள்.

ஆண்டுக்கு இதுதான் கடைசிக் கடிதம். இன்றுதான் நான் கடிதங்கள் எழுதப்போகும் கடைசி நாள்.

அன்பு,

பாபு

## 364

சேவாகிராமம்
*18—1—'45.*

*சி. மீரா,*

உன் கடிதம் இப்பொழுது கிடைத்தது. நான் விவரமாக உனக்கு எழுதிய கடிதம் இதற்குள் வந்து சேர்ந்திருக்குமென்று எண்ணுகிறேன்.

பல்வந்த்சிங் இங்கில்லை. அவர் சதீஷ்பாபுவுடன் இருக்கிறார். அவர் உன்னிடம் வருவாரென்ற நம்பிக்கை எனக்கில்லை. அவருக்கு அந்த விருப்பமிருந்தால், நான் அதை வலியுறுத்துவேன். உனக்கேற்ற ஆள் அவர்தான் என்பதை அறிவேன். எனினும், நீ இங்கு வந்து, நிரந்தரமாக இல்லாவிடிலும் சிறிது காலத்திற்காவது, யாரையாவது ஏற்பாடு செய்ய முடியுமா என்று பார். இங்கு பலபேர் இருக்கின்றார்கள். உன்னால் எப்பொழுது வரமுடிகிறதோ, அப்பொழுது வரவேண்டும்.

பிப்ரவரி கடைசியில் நான் டில்லி வருவதற்கு வாய்ப்பு அதிகமில்லை. நீ வருவதானால். சீக்கிரமே வா. ஏனென்றால் நாளுக்குநாள் வெப்பம் அதிகரித்து வருகிறது.

அன்பு,

பாபு

## 365

சேவா கிராமம்,
*27—2—'45.*

*அஞ்சலட்டை*

*சி. மீரா,*

கிசான் ஆசிரமம்[1] என்ற பெயரை வைத்துக்கொள்ளலாம். ஆனால் அவ்வாறு எண்ணினால், மஸ்தூர், அல்லது அப்பொருள் கொண்ட வேறு பெயர் ஏன் கூடாது? கிசான், கோடீசுவரனாகவும் இருக்கக்கூடும்; உழைப்பாளியோ, தொழிலாளியோ, அவ்வாறு பணக்காரனாக இருக்க முடியாது. ஆனால் உனக்குக் கிசான் என்ற பெயர் பிடித்திருந்தால், எனக்குத் தடையெதுவுமில்லை.

அன்பு,

பாபு

---

1. என் சிறு ஆசிரமத்திற்குக் கிசான் ஆசிரமம் என்று பெயர் வைக்கலாமென்று யோசனை கூறியிருந்தேன்.

## 366

சேவாகிராமம்,
25-3-'45.

அஞ்சலட்டை
சி. மீரா,

கடிதமே எழுதாமல் இருப்பதைவிட அஞ்சலட்டையாவது எழுதுவது நல்லது. பல இடையூறுகளுக்கும் நடுவே நீ நல்ல முன்னேற்றம் கண்டு வருவது குறித்து மகிழ்ச்சி......அக்டோபரிலாவது நான் உன்னிடம் வரமுடியுமென்று எதிர்பார்க்கலாம்....என் பயணத் திட்டம்பற்றி எதுவும் நிச்சயமில்லை. இம்மாதம் 31ந்தேதி பம்பாய் செல்கிறேன் என்பது மட்டும் முடிவாகியுள்ளது. நாளுக்கு நாள் வெப்பம் ஏறுகிறது. இருந்தபோதிலும் நான் நன்ருகவே இருக்கின்றேன்.

அன்பு,
பாபுவின் ஆசீர்வாதம்

## 367

அஞ்சலட்டை
சி. மீரா,

நான் எதிர்பார்த்துக் கொண்டிருந்த உன் நீண்ட கடிதம் மிகுந்த மகிழ்ச்சி ஊட்டியது. ராமபிரசாத், முன்னுலால் அல்லது வேறு எவரையாவது உனக்கு அனுப்ப நான் தீவிர முயற்சிசெய்து வருகிறேன்.[1] என் வருகையை நீ நிச்சயமாக எடுத்துக்கொள்ளாதே. நான் என் விருப்பத்தைத் தெரிவித்துள்ளேன். ஆனல் நாம் எண்ணுவதற்கும் நடப்பதற்குமிடையே எவ்வளவோ தடங்கல்கள் உண்டு. அவனையன்றி வேறெவர் அறிவார்? விலங்குகளிடம், குறிப்பாகப் பசுவிடம் நீ கொண்டுள்ள அன்பு அளவற்றது. பசுவை நாமே நேராகக் கவனிக்க வேண்டுமென்பதை ஒத்துக்கொள்கிறேன்; அப்பொழுதுதான் அதனிடம் அன்பு சுரக்கும். 20 தேதி வரை நான் இங்கிருப்பேன்; பின்பு மகாபலேஸ்வர் செல்வேன்.

அன்பு,
பாபு

## 368

சிம்லா,
27-6-'45

அஞ்சலட்டை
சி. மீரா,

உன் கடிதம். அளவுக்குமீறி வேலைசெய்து அலுப்பை வரவழைத்துக் கொள்ளாதே. உனக்கு ஒத்துக்கொள்ளாத வெப்ப

---

1. சரியான சக ஊழியர்கள் கிடைப்பதில் எனக்கு அதிகச் சிரமம் ஏற்பட்டிருந்தது.

நிலையுடன் போராடவும் முயலாதே. நான் இங்கிருந்தாலும் இராவிடினும் நீ சிம்லாவுக்கு வா.[1] நான் என்றைக்கும் புறப்பட்டுவிடக் கூடும். உனக்கு உதவிசெய்ய இருவர் இருப்பது குறித்து மகிழ்ச்சி......

அன்பு,

பாபு

# 369

சேவாகிராமம்,

அஞ்சலட்டை. 25-7-'45.

சி. மீரா,

நான் இன்றெழுதினல், சுருக்கமாகத்தான் எழுதவேண்டும். உனக்கு உடல்நலன் சீராக இராவிடில், குளிர்ச்சியான ஊருக்கு நீ உடனே செல்லவேண்டும். பயணத்தை நான் நன்ருகத் தாங்கிக் கொண்டேன். இது உனக்கு வந்து சேருவதற்குள் பலவந்த்சிங் உன்னிடம் வந்திருப்பார்...... இங்கு இதமாக இருக்கிறது. அவ்வப்போது மழை பெய்கிறது. ஆனல் முன்னைவிடப் பூச்சிகள் ஏராளமாக இருக்கின்றன......

அன்பு,

பாபு

# 370

புனு,

அஞ்சலட்டை, 9-10-'45.

சி. மீரா,

உன் கடிதம். இப்பொழுது ஏற்பாடு செய்துள்ளபடி, நான் ஜனவரிக்குமுன் அந்தப் பக்கம் வருவதற்கில்லை. அப்பொழுது உன்னிடம் வராமல் செல்லமாட்டேன். ஆனல் சேவாகிராமத்தை விட்டு நான் புறப்பட்டால் ஒழிய, எதுவும் நிச்சயமில்லை. நீ நன்ருக இருக்கின்ருய் என்று நம்புகிறேன்......

அன்பு,

பாபு

# 371

புனு,

29-10-'45.

சி. மீரா,

இப்பொழுது தான் உன் கடிதம் வந்தது. உடலை வருடும் சிகிச்சைக்கு முன் பதில் எழுதுகிறேன்.

---

1. நான் சிம்லாவுக்குச்சென்று, பாபுவுடன் சில நாட்கள் தங்கியிருந்தேன். அப்போது சிம்லா மகாநாடு நடந்திருந்தது.

நான் சேவா கிராமத்தை விட்டுப் போகப் போவதில்லை. இத்தனை நிலையங்களை இங்குத் தொடங்கி விட்டு, நான் போகமுடியாது. [1]இந்த வதந்தியை மறுத்து, நான் நிலைமையைத் தெளிவுபடுத்த வேண்டும். சர்தாரைக் கைவிட்டு நான் செல்லமுடியாது. எல்லை மாநிலத்துக்குப் போய்விட்டுத் திரும்பும் வழியில் அல்லது போகும் வழியில் நான் உன்னிடம் வருவேன். எல்லா ஏற்பாடுகளும் ஒரு மாதத்துக்கு தள்ளி வைக்கப்பட்டுள்ளன.

இறைவன் நமக்கு வழி காட்டுவாரென்று நம்பவேண்டும். அவர் ஆக்கினையிடும் ஏற்பாட்டின் படி, இறுதியில் நான் உன்னுடன் வாழும்படி ஏற்படலாம். அவர் ஆக்கினையை நிறைவேற்றுவதைத் தவிர எனக்கு வேறு விருப்பமில்லை.

அன்பு,

பாபு

## 372

சரானீமா,
அஸ்ஸாம்,
*10-1-'46.*

சி. மீரா,

இமாலயக் காட்சிகள் பற்றிய உன் சித்திரங்களை ஆராயும் வாய்ப்பு எனக்கு நேற்றுத்தான் கிட்டியது என்பதை உனக்குக் கூறவே இதை எழுதுகிறேன். [2]அவற்றை நான் ஆராய்ந்ததை விட இன்னும் தீர, ஆழ்ந்து ஆராய்வதற்கு உரியவை அவை. ஆனால் அவ்வேலையில் எத்துணை அன்பை நீ குழைத்துள்ளாய் என்பதை என்னால் எளிதில் உணரவும் பாராட்டவும் முடிந்தது.

உன் நீண்ட கடிதத்திற்கு நான் சென்ற முறை எழுதிய பதில் கிடைத்திருக்குமென்று எண்ணுகின்றேன். மனிதர்களாலும் விலங்குகளாலும் உனக்கு இவ்வளவு அதிகத் தொந்தரவு இருக்கக்கூடாதென்று நான் எண்ணுகிறேன். எனக்கு இங்கு ஏற்பட்டுவரும் அதிசய அனுபவங்கள் பற்றி மற்றவர்கள் உனக்கு எழுத வேண்டும்.

அன்பு,

பாபு

## 373

(புனாவிலிருந்து 23-2-46 தேதியிட்ட தந்தி)

மீராபென் மேற்பார்வை அஞ்சலதிகாரி பகத்ரபாத் ஜ்வாலாபூர்.

டில்லி வரும் வாய்ப்பில்லை. மார்ச்சு இருபதுக்குப் பின் எந்த நாளும் நீ புனாவுக்கு வரலாம்.

பாபு

---

1. பாபு சேவாகிராமத்தை விட்டுச் செல்வாரென்று ஒரு வதந்தி பரவியிருந்தது.
2. மலைகளிலிருந்து ரிஷிகேஷ் சித்திரங்கள்.

# 374

(புனாவிலிருந்து 22-3-'46 தேதியிட்ட தந்தி)

வாய்ப்பில்லை. நான் டில்லி செல்லும்போது நீ அங்குவா.

பாபு

# 375

சிம்லா,
*13-5-'46.*

*சி. மீரா,*

நீ முழுமுச்சுடன் வேலை செய்து வருகிறாய் என்பது உன் கடிதங்களிலிருந்து தெரிகிறது. உன் முயற்சிகளுக்கு இறைவன் வெற்றி அருளட்டும்.

...... மாங்கொட்டை பற்றிச் சுவையான ஒரு குறிப்பையும் நீ காண்பாய். அதில் சத்துள்ளது என்று தோன்றுகிறது. அதை நீ உடனடியாகப் பரீட்சித்துப் பார். கொட்டையை வறுத்தபின் அதை நான் தின்றுள்ளேன். ஆனால் இப்பொழுது குறிப்பிடப்படுகிற உணவுச் சத்து அதில் இருப்பது எனக்குத் தெரியாது.

நாளை நாங்கள் டில்லிக்குப் புறப்படக்கூடும்.

அன்பு,

பாபு

# 376

சேவாகிராமம், வார்தா,
*19—8—'46*

*சி. மீரா,*

[உணவு உற்பத்திப் பெருக்க இயக்கத்துக்கு, ஐக்ய மாகாண அரசின் கௌரவ ஆலோசகர் பொறுப்பை நான் ஏற்றிருந்தேன். இதையொட்டிக் கோடையில் நான் அதிக சுற்றுப் பயணம் செய்யவேண்டியிருந்தது. அதனால் உடல் நலன் கெட்டிருந்தது; உடலைத் தேற்றிக் கொள்ள நான் முஸ்ஸோரி சென்றிருந்தேன்.]

ஆசிரமத்திற்கும் கிராமத்திற்கும் கழிவிடங்களை நீ எப்படி அமைப்பாய் என்று உன்னைக் கேட்கவே இதை எழுதுகின்றேன். அடிமண் தண்ணீர், தரைமட்டத்திற்கு மிகவும் அருகில் இருப்பதால், நேற்று இங்குக் கூடிய மருத்துவ நிபுணர்கள் நச்சுத்தடை மலக்குழிகளை அமைக்க வேண்டுமென்று கூறினார்கள். இந்த யோசனையை நீ ஆதரிக்க மாட்டாயென்று அறிவேன். நீ உன் சொந்தக் கருத்தைத் தெரிவிப்பதுடன் கழிவுரம் தயாரிக்கும் முறையையும் சித்தரிக்க வேண்டும். இந்தூரில் செய்வது போல், மலத்தையும் அதில் நீ சேர்ப்பாயா என்பதை மறந்து விட்டேன். எவ்

வாருயினும், அம்முறையை நீ விளக்கமாக எடுத்துக் கூறினல் அந்த விளக்கத்தை அச்சடிக்கவும் முடியும்; மருத்துவ நிபுணர்களிடம் காட்டவும் முடியும்.

முற்றிலும் குணமடைந்து விட்டாலொழிய, வேலையை மீண்டும் தொடங்காதே. முஸ்ஸோரியில் நீ செய்ய வேண்டிய வேலை அதிகமிருக்கிறது.

நான் எழுதிக் கொண்டிருக்கும் போதே, நல்ல மழை பெய்கிறது.

அன்பு,

பாபு

# 377

ஸ்ரீராம்புரி,
ராம்கஞ்ச் வழி, கிழக்கு வங்காளம்,
*1—12—'46.*

*சி. மீரா,*

நவம்பர் மூன்ருந்தேதி நீ எழுதிய கடிதம் இன்றுதான் எனக்குக் கிடைத்தது. வங்காளத்திலிருந்து நான் எழுதிய கடிதம் உனக்குக் கிடைத்திருக்கும். என்னுடைய சளியும் இருமலும் நீங்கி விட்டன. 'உடன்பிறந்த கழுதை'யை நான் அளவுக்கு மீறி விரட்டுவதில்லை. ஆகவே அது குறித்துக் கவலைப்படாதே. என்னல் இயலாத காரணத்தால், நான் காங்கிரஸ் கூட்டத்திலோ, காரியக் கமிட்டிக் கூட்டத்திலோ கலந்து கொள்ளவில்லை. இன்னும் சிறிது காலத்திற்கு நான் இந்த இடத்தை விட்டுச் செல்லமாட்டேன் என்றெண்ணுகிறேன்; எப்பொழுதாகிலும் இதை விட்டு வருவேனு என்பதே ஐயத்திற்குரியது.

நீ வேலையில் தொடர்ந்து முன்னேறி வருவதைக் காண்கிறேன். அது நிலையான முன்னேற்றமாக இருக்குமென்று நம்புகிறேன். முஸ்ஸோரித் தோட்டிகள் பற்றிய உன் கட்டுரை ஹரிஜனில் அப்படியே வெளியாகும்.

நான் டில்லியிலிருந்து அழைத்து வந்தவர்கள் அனைவரும் நவகாளியின் பல்வேறு கிராமங்களுக்குச் சென்று பரவியுள்ளனர். பாபா [1]இத்தொண்டில் என்னுடன் சேர்ந்து விட்டார். ஆகவே அவரும் ஒரு கிராமத்தில் இருக்கின்ருர். அபா அவருடன் இருக்கின்ருர். பேராசிரியர் நிர்மல்குமார் போஸ், பரசுராம் இருவரும் என்னுடன் இருக்கின்றனர். ஓரிடத்திலிருந்து மற்ருேரிடத்திற்கு நடந்துதான் செல்ல வேண்டும். நாட்டு ஓடங்களைத் தவிர வேறு வாகனங்களைப் பயன்படுத்த முடியாது. இந்த ஓடங்களும் இன்னும் பத்து நாட்களில் நின்றுவிடும்—கால்வாய்களில் போதிய தண்ணீர்

1 தக்கர் பாபா

இராதென்ற காரணத்தால். மூன்று நான்கு மைல்கள் கூட நடக்கும் வலிமை எனக்கில்லை. இங்கு தனித்து வாழ்வது எனக்குப் பிடித் திருக்கிறது; ஆனால் அச்சத்தால் ஆட்கொள்ளப்பட்டு வாழும் ஏழை மக்களின் பரிதாப நிலையை உன்னால் கற்பனை செய்யவும் இயலாது.

என் அகத்தூண்டுதல் இந்த இடத்திற்கு என்னை அழைத்து வந்தது குறித்து நான் மகிழ்கிறேன். என்ன நடக்கவிருக்கிறது என்பதைப் பொறுத்திருந்து பார்ப்போம்.

பாபுவின் ஆசீர்வாதம்.

# 378

ஸ்ரீராம்புரி,
நவகாளி மாவட்டம்,
*4, டிசம்பர், 1946.*

சி. மீரா,

நவம்பர் 18ந் தேதியிட்ட உன் கடிதம் எனக்கு நேற்றுத்தான் வந்தது. நீ இருக்குமிடத்தைவிட, நான் இருக்கும் ஊர், எளிதில் அணுக முடியாமல் எட்டவிருக்கும் ஊர் என்பதை அறிவாய். தூரம் அவ்வளவு அதிகமில்லை; ஆனால் வண்டிப் பாதை கூடக்கிடையாது. வாய்க்காலில் பெருக்கெடுக்கும் தண்ணீர் இன்னும் பத்து நாட் களில் வற்றிவிட்டால், முன்னும் பின்னும் நடப்பதைத் தவிர வேறெதுவும் செய்ய முடியாது. சில ஆண்டுகளுக்கு முன்புவரை கத்தியவாடில் செய்து வந்தது போலவும், சில பகுதிகளில் இன்ன மும் செய்து வருவது போலவும், அஞ்சலை ஆட்களே ஓரிடத்தி லிருந்து இன்னோரிடத்திற்கு எடுத்துக்கொண்டு ஓடுகின்றனர்.

என்னைப்பற்றிக் கவலைப்படாதே. ஆண்டவனிடம் உன் நம்பிக் கையையும் விசுவாசத்தையும் வை. நான் அவர் ஆதீனத்தில் பத் திரமாக இருக்கின்றேன். என்னை ஆக்குவதும் அழிப்பதும் அவர் பொறுப்பு. அவரைப் பொறுத்தவரை, காத்தல்தான் எப்பொழுதும் அவர் வேலை; கெடுத்தல் அல்ல.

செய்தித்தாள்கள் இங்கு ஒழுங்காக வருவதில்லை. அவை வந்தாலும், தாமதமாகவே கிடைக்கின்றன. உள்ளூர்ப் பத்திரிகை கள்தான் வருகின்றன. ஆகவே செய்தித்தாள்களில் என்ன வெளி வருகிறது என்பது தெரிவதில்லை. "பத்திரிகையில் வெளிவருவதை நம்பாதே", என்பதுதான் நான் கூறும் ஆலோசனை. செய்தி எதுவும் வராவிடில், அதுவே நல்ல செய்தி என்பதை நினைவிற் கொள். ஏ. ஜி. பால்ஃபர் பிரதமராக இருந்தபோது, தாம் எப் பொழுதுமே பத்திரிகைகளைப் படிப்பதில்லை என்றும், அதனால் தமக்கு நட்டம் எதுவும் ஏற்பட்டதில்லை என்றும், பெருமையாகக் கூறிக் கொள்வாராம்.

என் தோழர்கள் அனைவரும் வெவ்வேறு கிராமங்களில் பரவி யிருக்கின்றனர். பியாரிலால் என்னை அடிக்கடி சந்திக்கிறார்; ஆனால் அவர் என்னுடனில்லை. அவர் தனியாக ஒரு கிராமத்தில், வங்காளி மொழிபெயர்ப்பாளர் ஒருவர் துணையுடன் தங்கியுள்ளார். பரசுராம் என்னுடன் இருக்கிறார்; ஆகவே அவரிடம் சொல்லி எழுத வைக்கின்றேன். வங்காளி மொழிபெயர்ப்பாளர் ஒருவர் உதவியைத் தவிர, வேறெவருடைய உதவியையும் நான் நாடவும் கூடாது, பெறவும் கூடாது என்பதுதான் முதலில் உத்தேசமாக இருந்தது. பரசுராம் எப்பொழுதும் பியாரிலாலுக்கு உதவிவந்தார். ஆனால் இங்கு அவரைத் தனியாக ஒரு கிராமத்திற்கு அனுப்ப முடியவில்லை. அவர் என்னுடன் நேரடியாக இருக்க வேண்டு மென்றுதான் விரும்பினர்; ஆனால் எனக்கு எல்லா வகையான ஒத் தாசையும் செய்து, நான் வேறு வகையான வேலைசெய்துகொண் டிருந்தபோது, அவர் என்னுடன் இருக்க முடியவில்லை. இப் பொழுது அவர் இங்கிருக்கும்போது, என்னைக் கவனித்துக்கொள்வ துடன் சுருக்கெழுத்து வேலையும் செய்கிறார்; ஆகவே நான் எதிர் பார்த்ததற்கு மேலாகவே வரும் வேலையையும் என்னால் சமாளிக்க முடிகிறது. வங்காளி உதவியாளர் ஒரு பேராசிரியர்; பல ஆண்டு களாக என் எழுத்துக்களை ஆய்ந்து படித்துள்ளவர். ஆகவே எனக் குக்கிடைத்துள்ள உதவி சிறந்ததாகும்; ஆனால் செய்தித்தாள் களுடன் சமாளிக்க இயலாது. ஆகவே என் வெளிவேலை, எவ்வளவு இயலுமோ, அவ்வளவு குறைக்கப்பட்டுள்ளது.

இங்குள்ள வேலை புதிதானது; உற்சாக மூட்டுவதாய் இருக் கிறது; அதே சமயத்தில் சிரமமாகவும் உள்ளது. என் அகிம் சைக்குக் கடும் சோதனை ஏற்பட்டுள்ளது. இதைப்பற்றி விவரமாகப் பின்னர் கூறுவேன். என்னைப்பற்றி நீ கொண்டிருக்கக்கூடிய கவலையைப் போக்குவதற்கே இதைக் குறிப்பிடுகிறேன். வழக்க மான உணவைச் சாப்பிடுகிறேன்; அல்லது சாப்பிட முயற்சி செய் கிறேன். ஆனால் இருபத்தோருநாள் மறுத்துவிட்டு, இப்பொழுது மீண்டும் அதைப் பழக்கப்படுத்திக் கொள்ளச் சிறிது காலம் பிடிக்கும்.[1] எவ்வளவு விரைவில் இயலுமோ, அவ்வளவு விரைவில் உடல் வலிமையை மீண்டும் பெற முயல்கிறேன். அவசரப்பட்டால் கெட்டுவிடும்.

நவம்பர் 18ந்தேதி குறிப்பிட்ட பிரச்னையை நீ 22ந்தேதி தொடர்ந்துள்ளாய். உன் பிரச்னைகள் அபூர்வமானவை; ஆனால் அவை அனைத்தும் நீயே வருவித்துக் கொண்டவை. ஆகவே அவற் றைச் சமாளிக்கக் கூடிய அளவுக்கு நீ குறைத்துக் கொள்ளக்கூடும்; குறைத்துக் கொள்ள வேண்டும். நாம் தேடுவதால், நமக்கு வேண் டிய மனிதனையோ மனிதரையோ கண்டு பிடிக்க முடியாது. நாம்

---

1. பாபு அண்மையில் இருபத்தோரு நாளைக்கு நோன்பிருந்தார். அந்த நாட்களில் பழரசம் தவிர வேறெதையும் அவர் சாப்பிடவில்லை. பீகாரில் நடந்த இந்து-முஸ்லிம் கலவரங்களைக் கண்டிக்கும் வகையில் பாபு இந்த நோன்பை மேற்கொண்டார்.

எதற்காக அவரைத் தேடுகிறோமோ, அந்த வேலையை நாம் செய்ய வேண்டுமென்று கடவுள் விரும்பினாலொழிய, அந்த மனிதனோ, மனிதரோ, நம்மை வந்து அடைய மாட்டார்கள். ஆண்டவனிடம் உன் வேண்டுகோளை ஒப்புவித்துவிட்டு உன் ஆன்மாவுக்கு இடைஞ்சல் இல்லாமல் நீ எந்த வேலையைச் செய்ய முடிகிறதோ, அதைச் செய் என்றுதான் நான் உனக்குக் கூறுவேன்...... ஆசிரமம் உன் சொந்தத் திட்டமாகத்தான் தொடக்கத்தில் உருவாகியது. இப்போதுள்ள இடம் உனக்கு ஏற்றதாக இல்லாவிடில், அதை எந்த அளவு பயன்படுத்த முடியுமோ, அந்த அளவு பயன்படுத்திக் கொள்ளவேண்டும். என்னைக் கேட்டால், உன் சொந்த வாழ்க்கையில் ஆசிரம வாழ்க்கையைக் கடைப்பிடித்துவிட்டு ஆசிரமம் நிறுவும் யோசனையை விட்டுவிடு என்று கூறுவேன். அப்போது நீ கட்டுண்ட நிலையில் இராமல், வையம்போல விரிவாகவும் உயர்வாகவும் வளர முடியும். ஆசிரமம் என்ற முறையில் சபர்மதியைக் கலைத்துவிட்டு, ஹரிஜன சேவா நிலையமாக அதை மாற்றினேன் என்பது உனக்குத் தெரியும். மூல அமைப்பாக விளங்கியது சத்தியாக்கிரக ஆசிரமம். அது நிரந்தரமாக மறைந்துவிட்டது. ஆகவே உன் கொள்கைப்படி ஆசிரமத்தை உருவாக்கி, அதை ஒருவரிடம் ஒப்படைப்பதுபற்றி மட்டும் நீ என்றுமே எண்ணக்கூடாது. நீ மேற்கொள்ளப்போகும் நடவடிக்கைகளுக்குத் திறமையாகத் தொண்டாற்றக் கூடியவர்கள் யாராயினும்,—திருமணமானவராயினும் சரி, பிரம்மச்சாரிகளாயினும் சரி,—அவர்களை இப்போதுள்ள அமைப்பில் பயன்படுத்திக்கொள். இல்லாவிடில், இயநிலை எவ்வளவுதான் இதமாக இருந்தாலும், உன் உடல்நலன் சீர்கெடும். நான் மேலே சொல்லியுள்ளது அனைத்தையும், ஆசிரமத்தைப்பற்றி நீ கொண்டுள்ள கொள்கையையும் தத்துவத்தையும் அறிந்துதான் கூறியுள்ளேன் என்பதை நினைவிற்கொள். அதை அறிந்ததால் தான், ஆசிரம இலட்சியத்தை உன்னைப் பொறுத்த மட்டிலும் கடைப்பிடித்துக்கொண்டு, உன் சக ஊழியர்களாகத் திறமையானவர்கள் எத்தனைபேரைத் திரட்டமுடியுமோ, அவ்வாறு செய்வது தான் நல்லதென்று உனக்கு ஆலோசனை கூறியுள்ளேன். அவர்கள் அங்கிருப்பதும் அவர்கள் நடத்தையும் உனக்கு எரிச்சல் உண்டாக்காமலும், உன் வளர்ச்சியில் குறுக்கிடாமலும் இருக்கவேண்டும் என்பதை மட்டும் உறுதிப்படுத்த வேண்டும்.[1]

என் பொருள் முழுவதையும் உனக்கு விளக்கிவிட்டேன் என்று நம்புகிறேன். அப்படியானால் நான் வேறொன்றும் எழுத வேண்டியதில்லை.

---

1. இக் கடிதத்தைக் கண்டதும்தான், கிசான் ஆசிரமத்தைப் பிரம்மச்சாரி ஆசிரமமாக நடத்துவது வேண்டாமென்றும், திருமணமானவர்களையும் அவர்கள் குடும்பத்தினரையும் அங்கு சேர்ப்பதென்றும் நான் நிச்சயமான ஒரு முடிவுக்கு வந்தேன். என் ஆசிரம இலட்சியத்தை என் சொந்த வாழ்வில் கடைப்பிடிப்பதோடு நிறுத்திக் கொள்ள வேண்டுமென்று பாபு கூறிய புத்திமதியை நான் முழுமனதுடன் ஏற்றுக்கொண்டேன். ரிஷிகேஷ் அருகில், பாதுகாப்புக் காடுகளில் கால்நடை வளர்ச்சிக்கான அரசாங்கத்திட்டமொன்று

காலையில் நடக்கச் செல்வதற்குமுன், அதாவது காலை 7-30 மணிக்குப் பின் உடனடியாக, இதை நான் சுருக்கெழுத்துக்காரரிடம் சொல்லி எழுதவைத்துள்ளேன். காலை 4 மணி முதல்—உள்ளூர் நேரப்படி 5 மணி—நான் வேலை செய்து வந்துள்ளேன். வழக்கமான வழிபாட்டு நேரமும் இதில் அடங்கியுள்ளது. வழிபாட்டைப் பரசுராம் நடத்துகிறார்.

பாபுவின் ஆசீர்வாதம்

## 379

[நவகாளி மாவட்டம், ராம்கஞ்ச் அஞ்சல், களீர்கில் ஊரிலிருந்து அனுப்பப்பட்டது.]

முகாம் : சண்டிபூர்
*4—1—'1947*

சி. மீரா,

பதிவு செய்யப்பட்ட உன் அஞ்சல் கடிதம் என் முன் உள்ளது. இக்கடிதத்துடன் பரசுராம் செய்திக் கடிதம் ஒன்றை உனக்கு எழுதுவார். நீ விளக்கியுள்ள நிலைதான் சரியானது என்பதைச் சொல்லவே இக்கடிதத்தை அனுப்புகிறேன். சிந்தை, சொல், செயல் ஆகியவற்றில் நம் தூய்மையைப் பொறுத்தது தான் அனைத்தும்; தூய்மை என்ற சொல்லுக்கு விரிவான பொருள் காணவேண்டும். அப்பொழுது சிக்கல் ஏற்படவே இடமிருக்காது. இந்த அடிப்படை உண்மையை மட்டும் உறுதியாகக் கடைப்பிடி. நாம் 'தூய்மை' என்ற சொல்லை அடிக்கடி, பெரும்போக்காகப் பயன்படுத்திப் பல தவறுகளுக்குச் சமாதானம் காண்கிறோம். நான் எப்படி இருக்கிறேன், என்ன செய்து கொண்டிருக்கிறேன் என்பது பற்றிச் சிறிதும் கவலைப்படாதே. நான் என் மனமலங்களை அடியோடு காலி செய்துவிட்டால், ஆண்டவன் என்னை ஆட்கொள்வார். அப்பொழுது அனைத்தும் நனவாகும்; ஆனால் பூஜ்யம் என்ற நிலைக்கு என்னை எப்பொழுது கொண்டு வரமுடியும் என்பதுதான் பிரச்னை. 'நான்' என்பதையும் 'பூஜ்ய'த்தையும் பக்கத்துப் பக்கத்தில் வைத்துப்பார். அந்த இரு குறியீட்டுகளில், வாழ்க்கையின் பிரச்னை முழுவதுமே அடங்கியுள்ளது. இப்பயிற்சியில் நீ எனக்கு அதிகம் உதவியுள்ளாய். நீ தொலைவில் இருந்தபோதிலும் உன் துறையில் நீ இயலும் அளவுக்கு உன் கடமையை நன்கு நிறைவேற்றி வருகிறாயென்று தோன்றுகிறது.

நான்கு நாட்களுக்குமுன், படுக்கையில் ஓய்வெடுத்துக் கொண்டே இதைச் சுருக்கெழுத்துக்காரரிடம் சொன்னேன். ஆனால் இதுவரை தட்டெழுதாமலே வைத்துவிட்டார்கள். இதற்

---

வகுப்பதுபற்றி நான் அப்பொழுது யோசித்துக்கொண்டிருந்தேன். ஆகவே கங்காஜியின் கரையில், மேய்ச்சல் வெளியின் நடுவிலே ஒரு சிறு குடிசையில் தங்கி, அதையே என் ஆசிரமமாக்க நான் முடிவுசெய்தேன்.

கிடையில் உன் மற்றொரு கடிதமும், காதி ரகங்களின் மாதிரித் துணிகளும் வந்துள்ளன. விற்பனைக்கு, உன்னிடம் உபரியாகக் கதர் இருக்கிறதா? அகதிகளுக்காக இதை விசாரிக்கின்றேன். அலுப்பு வரும்வரை வேலை செய்யாதே. எது பற்றியும் கவலை கொள்ளாதே. பாத யாத்திரை நாளை தொடங்குகிறது. அப்பொழுது உனக்குக் கடிதம் எழுத முடியாது. செய்தி அறிக்கை ஒன்று உனக்கு அனுப் பப்படும். அதிகாலையில் இதை நான் கிறுக்குகின்றேன். "எதையும் எதிர்பாராதவர்களுக்கு முழு ஆசீர்வாதம் கிடைக்கும்.''

அன்பு,

பாபு

# 380

பங்கி காலனி,
புதுடில்லி, 25,மே,'47.

சி. மீரா,

உன் அரிய கடிதம் இப்பொழுதுதான், 5 மணிக்கு வந்து சேர்ந்தது. நூற்றுக் கொண்டே இதைச் சொல்லி எழுத வைக்கின்றேன். பேட்டிகள் அளிப்பதிலேயே நாள் முழுவதும் செலவாகிவிட்டது. ஓய்வுக்காக சிறிய இடைவேளையைத்தவிர. வைஸ்ராய் மனைவியைப் பார்ப்பதற்காக நீ காத்திருக்க வேண்டாம். உத்தராக்ஷி அல்லது முஸ்ஸோரிக்கு நீ உடனே புறப்படவேண்டும். உன் தனிமை, முஸ்ஸோரியிலும் உத்தரகாசியிலும் உள்ள இதமான காற்று, அதன் பயனாகத் தெளிவாகச் சிந்திக்கும் ஆற்றல், இவை, நீ பெரிய மனிதர்களைப் பார்ப்பதைக் காட்டிலும், ஏன், நான் மிக அருகில் இருப்பதுபோல் தோன்றுவதால் என்னைப் பார்க்க வருவதைக் காட்டிலும் கூட எனக்கு மிகவும் முக்கியமானவை; மதிப்புமிக்கவை. நான் அருகில் இருப்பதுபோல் தோன்றுவது, வெறும் தோற்றம் தான். ஊனுடலில், நீ எங்கிருந்தாலும் நான் எங்கிருந்தாலும், நாம் அருகாமையில் தானிருக்கின்றோம். உன் கடிதத்தில் மற்றப் பகுதிகள் பற்றி நான் குறிப்பிட வேண்டிய அவசியமில்லை. உன் திட்டம் முழுவதையும் நான் ஏற்றுக்கொள்கிறேன். வெப்பம் வாட்டுகின்ற போதும், நான் நன்றாகவே இருக்கின்றேன். முஸ்ஸோரி பற்றியோ, குளிர்ச்சியான வேறு ஊர் பற்றியோ நான் எண்ணுவதற்கில்லை. பாதிக்கப்பட்ட பகுதிகளில் தான் எனக்கு வேலை உள்ளது. நான் ஆண்டவனின் வேலையைச் செய்ய வேண்டுமென்று அவர் விரும்பினால், வெப்ப நிலை பாதகமாயிருந்தாலும் என் உடல் நலனை அவர் காத்தருள்வார்.

அன்பு,

பாபு

ஸ்ரீமதி மீராபென்,
ரிஷிகேஷ் அஞ்சல்,
டேராடுன் மாவட்டம்.

## 381

கல்கத்தா,
*29—5—'47*
காலை *2-50* மணி

*சி. மீரா,*

உன் இரு கடிதங்களும் நேற்று வந்தன. இப்பொழுது சுகமாய் இருப்பது குறித்து மகிழ்ச்சி.

கட்டுப்பாடான வாழ்க்கைக்கு உன் 55 வயது ஒரு பொருட்டல்ல. நீ எதைப் பற்றியும் கவலைகொள்ளலாமல் வாழ வேண்டியவள். நாம் சந்திக்கும்போது இது பற்றி மேலும் பேசுவோம்; "வெளி விவகாரங்கள்" பற்றியும் பேசுவோம்.

என் பயணத் திட்டம் நிச்சயமற்றதாக இருக்கின்றது.

நான் மறுநாள் எங்கிருக்கின்றேன் என்பதைச் செய்தித் தாள்களிலிருந்து நீ அறிந்துகொள்வாய். "குருவிகளைப் பார்"; மறுகணம் என்ன செய்வது என்பது அவற்றிற்கே தெரியாது. நாமும் உண்மையாகவே கணத்துக்குக் கணம் வாழ்வோமாக.

அன்பு,

பாபு

## 382

புதுடில்லி,
*15—6—'47*

*சி. மீரா,*

உன்னிடமிருந்து இன்னுமொரு நீண்ட, ஆனால் சுவையான, கடிதம் கிடைத்துள்ளது.

உன் நோய் பற்றி அறிய வருந்துகிறேன். அதற்காக உத்தரகாசியில் நீண்ட காலம் நீ இருக்க வேண்டியிருந்தாலும் பரவாயில்லை; எப்படியும் நோயை அடியோடு போக்கிக் கொள்ள வேண்டும்.

நானே உத்தரகாசிக்கு வருவது பற்றி யோசித்துக் கொண்டிருக்கிறேன். ஆனால் அதெல்லாம் கனவுலகில் தான் இருக்கின்றது. ஆகவே இப்பொழுது நீ அதைக் கணக்கில் எடுத்துக் கொள்ளாதே. ஆனால் அதைப் பற்றிய விவரம் அனைத்தையும் நீ எனக்கு அனுப்ப வேண்டும்.

தர்மபால் பற்றி இப்பொழுது நான் நினைப்பதற்கில்லை. [1]இப்பொழுதே என்னுடன் இருப்பவர்கள் எண்ணிக்கை ஏராளமாகி விட்டது. நான் தனியாக இருக்க விரும்புகிறேன்; ஆனால் தனியாக இருக்க இயலாது என்பதை அறிவேன்.

---

1. பாபுவின் உதவியாளர் குழுவில் அவர் சேருவதாய் இருந்தது.

என் பயணத்திட்டம் இன்னும் நிச்சயமற்றதாகவே இருக்கின்றது.

அன்பு,

பாபு

## 383

புதுடில்லி,
*29/30—6—'47*

சொல்லி, எழுத வைத்தது.

*சி. மீரா,*

உன் இரு தந்திகளும், உத்தரகாசியில் உன் அனுபவங்களைத் தத்ரூபமாகச் சித்திரிக்கும் உன் கடிதங்களும் எனக்குக் கிடைத்தன. இரண்டாவது கடிதம் சஞ்சலமூட்டுவதாய் உள்ளது. இக் கடிதத்தைச் சொல்லத் தொடங்கியபின் எனக்கு உறக்கம் வருவதுபோல் தோன்றியது; நான் கண்ணயர்ந்தேன். கண் விழித்தவுடன், உன் மூன்ருவது கடிதம் கிடைத்தது; தனலூதிக்கு நீ செல்வதுபற்றி அதில் தெரிவித்திருந்தாய். உன் உடல் உள்ள சீர்கெட்ட நிலையில், நீ பயணத்தை உடலுக்குக் கெடுதல் இல்லாமல் தாங்கிக் கொண்டாயென்று நம்புகிறேன்.[1] பல புனித உறவுகள் கொண்ட உத்தரகாசி கூட உன் உடலுக்கு நன்மை செய்ய முடியவில்லை என்பதையும், அங்கு தண்ணீர் கடு நீராகவும், காற்று மூச்சுத் திணறச் செய்வதாகவும் இருந்தது என்பதையும் அறிந்து வருந்துகிறேன். புதிய ஊராகிலும் உன்னிடம் அதிகப் பரிவு காட்டுமென்று நம்புகிறேன். உத்தரகாசிக்குப் போவது பற்றி நான் கொண்டிருந்த எண்ணத்தை நீ அடியோடு அகற்றி விட்டாய். "ஒருமுறை கடிக்கப்பட்டவன், இரு முறை அஞ்சுவான்" என்பதற்கேற்ப, இமாலய ஊர் எதையுமே சற்று அவநம்பிக்கையுடன் தான் இனி நோக்குவேன். ஆயினும் நான் ஆண்டவன் கையில் உள்ளேன். போக வேண்டுமென்றும் விரும்பமாட்டேன்; போகாமலிருக்க வேண்டுமென்றும் விரும்பமாட்டேன். அன்றன்று ஏற்படும் நன்மை அன்றைக்குப்போதும்; தீதைப்பற்றி நான் எண்ணக்கூடாது. எது உண்மையில் நல்லது, எது தீயது என்பது யாருக்கும் தெரியாது. ஆகவே நல்லது அல்லாததை எதையும்பற்றி நாம் எண்ணுமலிருப்போம். இனி லௌகீக விவகாரங்களுக்கு வரு

---

1. குறுகிய பள்ளத்தாக்கின் ஓதம் நிறைந்த வெப்பத்தில், நடந்தும் குதிரை மேலும் நீண்ட பயணம் செய்ததன் பயனுக, என் உடல் நலன் பெரிதும் கெட்டிருந்தது. குளிர்ச்சியான இடத்துக்குச் செல்ல விரும்பிய எனக்கு (தனலூதிக்குப் பதிலாக) பிரதாப்நகர் செல்லும் வாய்ப்பு கிட்டியது. அங்கு நான் வசதியாகத் தங்கி, நான் எடுத்துவந்திருந்த வேலையில் முனைந்தேன். பாபு எனக்கு எழுதிய கடிதங்கள் அனைத்தையும் படித்து, அவற்றில் சிலவற்றைத் தேர்ந்தெடுத்துத் தொகுக்கும் வேலையை மேற்கொண்டேன்.

வோம். இங்கு வேலை முடிந்தவுடன் நான் பீஹாருக்கும் நவகாளிக்கும் செல்ல வேண்டும். அநேகமாக உடனடியாகக் காஷ்மீருக்கும் போக வேண்டியிருக்கும். தேதி ஒருவாரத்திற்குள் முடிவுசெய்யப்படும் என்றெண்ணுகிறேன். ஹரித்துவாருக்கு, அகதிகளைப் பார்க்க, நான் ஒரு சில நிமிடங்களே சென்றிருந்தேன். வெப்பம் கடுமையானதால், அதிகம் நடமாட இயலவில்லை.

... ... ...

பாபுவின் ஆசீர்வாதம்.

# 384

[இமாலயப் பயணத்தால் என்னுடல் கெட்டிருந்ததால், டில்லிக்குச் சென்று இருதயப் பரிசோதனை செய்துகொள்ள முடிவு செய்திருந்தேன் என்று பாபுவுக்கு நான் கடிதம் எழுதியிருந்தேன்.]

கல்கத்தா,
*20-8-'47.*

சி. மீரா,

உன் இரு கடிதங்களும் தந்தியும் கிடைத்தன. என் தந்தி உனக்குப் பிரதாப் நகரில் கிடைத்திருக்குமென்று எண்ணுகிறேன். உன் கடிதங்கள் அனைத்தும் வந்து சேர்ந்தன.

இமாலய மலைப்பகுதியில் தங்கியும் உனக்கு நன்மை ஏற்படவில்லை போலும். உன் உடலைத் தேற்றிச் சீராக்கிக்கொள்ள உன்னால் முடியவில்லை.

பசு பராமரிப்பு உள்பட எல்லா வேலைகளையும் நீ நிறுத்திவிட வேண்டுமென்று நான் யோசனை கூறுவேன்.

நீ ஏற்பாடு செய்துள்ள நிலம் பற்றியும் நீ கட்டியுள்ள கட்டிடங்கள் பற்றியும் என்ன செய்வது? நீ தாராளமாக என்னிடம் திரும்பி வந்து, உன் விருப்பப்படி என்னுடன் தங்கலாம். உன் உடல் சீராகி, எஃகு போன்று உறுதி பெறும்வரை, நீ மற்ற வேலைகளில் முனையாதே. நாம் சில விதிகளுக்கேற்ப நடந்தால், உடலைச் சீராக வைத்துக்கொள்ள முடியுமென்று உறுதியாக நம்புகிறேன்.

உன் இருதயப் பரிசோதனையின் முடிவு திருப்திகரமாக இருக்குமென்று நம்புகிறேன்.

தற்போதைக்கு இங்கு நான் தங்கவேண்டியிருக்கிறது. அதன் பிறகு நவகாளி செல்ல உத்தேசம். அவ்வேளை எப்பொழுது வருமோ, நான் அறியேன்.

இக்கடிதத்தை எழுதிமுடிக்க எனக்கு இரண்டு மணி நேரம் பிடித்துள்ளது. அத்தனைமுறை, ஏதாவது குறுக்கீடு நேர்ந்துகொண்டிருந்தது.

என் வாழ்நாளைப் பாகிஸ்தானில் கழிக்க உத்தேசம் என்று கூறியிருந்தேன். உறுதி ஒன்றும் அளிக்கவில்லை.

அன்பு,

பாபு

சி. மீரா பென்,
பிர்லா மாளிகை, புது டில்லி.

# 385

[சென்ற கடிதத்திற்கும் இக் கடிதத்திற்கும் இடையே, எத்தனையோ நிகழ்ச்சிகள் நடந்து விட்டன. என் இருதயத்தைப் பரிசோதனை செய்துகொள்ள நான் டில்லிக்கு வந்திருந்தேன். சிலநாட்களுக்குள், விஷ மலேரியா சுரத்தால் தாக்கப்பட்டு நான் பிர்லா மாளிகையில் படுத்த படுக்கையானேன். அக்கட்டத்தில், டில்லிக் கலவரங்கள் மூண்டன. கல்கத்தாவில் அப்பொழுது கொழுந்து விட்டெரிந்த கலவரங்களுக்கிடையே பாபு தங்கி, சீர்குலைந்திருந்த அந்த நகரத்தில் அமைதியை மீட்பதில் முனைந்திருந்தார். அமைதியைக் காப்பதாக, கல்கத்தா வாசிகள் வாக்குறுதி அளித்தவுடன், அவர் நேராக டில்லிக்கு வந்தார். அவர் வந்த நிமிடம் முதற்கொண்டு, டில்லிக் கலவரங்களின் வெறி தணிந்தது. பங்கிக் குடியிருப்பில் தங்க பாபு விரும்பினார்; ஆனால் ஒவ்வொரு மூலை முடுக்கிலும் அகதிகள் மொய்த்திருந்தனர். ஆகவே அமைச்சர்களும் மற்றவர்களும் வேண்டிக்கொண்டதன் பேரில், பிர்லா மாளிகையில் தங்க அவர் சம்மதித்தார். நீண்ட நாட்களுக்குப் பின் பாபுவுடனிருக்கும் வாய்ப்பு எனக்கு மீண்டும் கிட்டியது. மதிப்பிட முடியாத மூன்று அரிய மாதங்களுக்குமேல் நான் அவருடன் டில்லியில் இருந்தேன். டிசம்பர் 18ந்தேதி அவரிடமிருந்து விடைபெற்று ரிஷிகேஷ் அருகே என் வேலைக்கு மீண்டும் திரும்பினேன்.]

பிர்லா மாளிகை,
புதுடில்லி,
*16-1-'48.*

சி. மீரா,

உன் கடிதம் நேற்று கிடைத்தது. நீ அதை எழுதியபோது, என் உண்ணா நோன்புகளில் தலைசிறந்ததான இந்த நோன்பு பற்றி உனக்குத் தெரியாதென்று எண்ணுகிறேன்.[1] இறுதியில் அது தலைசிறந்ததாய் விளங்குமா இல்லையா என்பதுபற்றி நீயோ, நானோ, கவலைப்படுவதற்கில்லை. செயல்பற்றித்தான் நாம் கவலைப்

1. "வெளியிலிருந்து நிர்ப்பந்தம் எதுவுமில்லாமல், கடமையுணர்வின் விழிப்பின் பயனாக, எல்லா வகுப்புகளிடையும் இதய ஒற்றுமை மீண்டும் ஏற்பட்டுவிட்டது என்று எனக்குத் திருப்தி ஏற்பட்டால் அப்போதுதான், இந்த நோன்பு நிறைவுபெறும்"—1948 ஜனவரி 12ந்தேதி பாபு வெளியிட்ட அறிக்கையில் ஒரு பகுதி.

படவேண்டுமே ஒழிய, செயலின் விளைவுகள்பற்றி நாம் கவலைப் படக்கூடாது. வழக்கம்போல் வழிபாட்டுடன் உண்ணு நோன்பு தொடங்கியது. ''நான் கண்ணுறும்போது'', என்ற துதிப்பாடலும் வழிபாட்டில் இடம் பெற்றது.[1] அதை சுசீலா நன்கு பாடினர். வழி பாட்டின்போது சில நல்ல நண்பர்கள் கூடவிருந்தனர். அங்கிருந்த வர்களை வைத்துக்கொண்டே வழிபாட்டை நடத்தினேம். எவரையும் தனியாக அழைக்கவில்லை. காலை மூன்றரை மணிக்கு வழிபாட்டிற்குப் பின், உடனடியாக இக் கடிதத்தைச் சொல்லி எழுத வைக்கின் றேன். இப்பொழுது உணவருந்திக் கொண்டிருக்கின்றேன்-உண்ணு நோன்பு இருப்பவருக்கு அனுமதிக்கப்படும் உணவைத்தான். அதிர்ச்சி அடையாதே. என் உணவு 8 அவுன்சு வெந்நீர் ; அதையும் சிரமத்துடன் சிறிது சிறிதாகத்தான் உட்கொள்கிறேன். அதை நச்சுபோல் உட்கொள்ள வேண்டும்—அமுதம்போல் பலன் தரு மென்ற நம்பிக்கையுடன். அதை நான் உட்கொள்ளும் போதெல்லாம், எனக்குத் தெளிவு பிறக்கிறது. நச்சுபோல் ருசிக்கும், ஆனல் அமு தம்போன்ற இந்த உணவை எட்டு முறை உட்கொள்ள என்னல் முடிகிறது. இவ்வளவும் செய்துவிட்டு, உண்ணு நோன்பு இருப்ப தாகச் சொல்லிக் கொள்கிறேன் ; அப்பாவி மக்கள் அதையும் நம்பு கின்றனர். என்ன விசித்திர உலகம் !

... ... ...

உன் வர்ணனை......பசுவை வழிபடுவதாகப் பழிக்கப்படும் ஒரு நாட்டில், செழிப்பின் அன்னையான பசுவுக்கு, உரிய நியாயம் கிடைக்குமா என்று நாம் ஏங்கும்படி அது செய்கிறது. இத்தகைய நாட்டில் சுயராஜ்யம் கிடையாது.

ஆசிரமத்தை 'பசுலோக்' என்று வர்ணிப்பது அற்புதமான யோசனை.[2] அதில் கவிதை நயம் காணப்படுகிறது. 'பசுலோக் ஆசிரமம்' என்று எழுதாதே. 'ஆசிரமம்-பசுலோக்' என்று நடுவில் சிறு கோடிட்டு எழுதுவது நன்ருக இருக்கின்றது. ஆனல் இது பற்றி இன்னும் சற்று ஆழ்ந்து ஆலோசிக்கும்போது, பசுலோக் ஆசிரமம் என்பதுதான் உன் கருத்தைப் பொருத்தமாகச் சித்திரிக் கிறது என்றெண்ணுகிறேன்.

செயல்பட வேண்டிய இச் சிறந்த யோசனை உன்னுடைய தாதலால், நீ செய்யும் முடிவே இறுதியானதாகும்.

* * *

நான் உண்ணு நோன்பு இருக்கும் காரணத்திற்காக, பதட்ட மடைந்து இங்கு வராதே. நான் 'யக்ஞம்' என்று இதைக் குறிப்

1. 'அதிசயச் சிலுவையை நான் கண்ணுறும் போது' என்ற துதிப் பாடல். இது பாபுவுக்கு மிகவும் பிடித்தமானது. ஆகாகான் மாளிகையில் அதை நான் அவருக்கு ஒழுங்காகப் பாடி வந்தேன். சுசீலாவுக்கும் சொல்லிக் கொடுத்திருந் தேன்.

2. ஆசிரமத்தைத் தழுவியிருந்த இடத்தைப் பாபு குறிப்பிடுகிருர்.

பிட்டுள்ளேன். ஒவ்வொருவரும், எங்கிருந்தாலும், தம் தம் கடமையை ஆற்ற வேண்டும் என்பது தான் இந்த யக்ஞத்தின் அம்சம். கணிசமான பேர் இவ்வாறு கடமையை ஆற்றினல், நான் இச் சோதனையிலிருந்து மீள்வது உறுதி. இறைவனை நம்பி, நீ இருக்கும் இடத்திலேயே இரு.......[1]

## 386

அஞ்சலட்டை.

புது டில்லி.
*19-1-'48.*

*சி. மீரா,*

உன் கடிதம். கவலை அனைத்தும் முடிந்து விட்டது. உண்ணு நோன்பின் போது, நான் சொல்லி எழுத வைத்த கடிதம் உனக்குக் கிடைத்ததென்று நம்புகிறேன். நான் முழு வேகத்தில் வேலை செய்து கொண்டிருந்தேன். ஹரிஜனுக்கு நீ அனுப்பியுள்ள குறிப்பு கவனிக்கப்படும்.

அன்பு,

பாபு

---

1. இக் கடிதத்தை தட்டெழுதிய பின், தவறி எங்கோ வைத்துவிட்டார்கள் என்று எண்ணுகிறேன். சில நாட்களுக்குப் பின் அதைக் கண்டெடுத்ததும், பாபு முன் வைத்துக் கையெழுத்து வாங்காமலே அவசரமாக அனுப்பி விட்டார்களென்று எண்ணுகிறேன்.

[ஜனவரி 30 ந் தேதி, சுமார் 7-30 மணிக்குப் படுகொலை பற்றிய செய்தி எனக்குக் கொண்டு வரப்பட்டது. நான் வெளித் தாழ்வாரத்திற்கு வந்திருந்தேன். அச் சொற்கள் என் காதில் விழுந்ததும் நான் செயலற்று நின்று விட்டேன். வானை நோக்கிக் காட்டு மரங்களுக்கு அப்பால் ஒளிவீசிக் கொண்டிருந்த விண்மீன்களைக் கண்டேன். "பாபு, பாபு, கடைசியில் அது நடந்து விட்டதே" என்ற சொற்கள் தான் இதயத்தில் ஒலித்தன. அதன் பின்பு, பொறிகளையே தகர்த்த, அதிர்ச்சிக்கும் மேலான, அமைதி உணர்வு ஓங்கியது.

சில நாட்களுக்குப் பின் பத்திரிகைகளுக்கு நான் எழுதிய கட்டுரையைக் கீழே தருகின்றேன்.]

## அவர்கள் இரண்டறக் கலந்தனர்

எனக்கு இருவர்தான் இருந்தனர்—பகவானும், பாபுவும். இப்பொழுது அவர்கள் இருவரும் ஒன்றாகி விட்டனர்.

அச் செய்தியை நான் கேட்டபோது, என்னகத்தே அந்தரங்கத்தின் அடித்தளத்தில் ஏதோ ஒன்று திறந்தது—சிறைப்பட்ட ஆன்மாவுக்கு வாயிற் கதவு—; பாபுவின் ஆவி அங்கு குடிகொண்டது. அக்கணம் முதற்கொண்டு, அழிவற்ற அமரத்துவம் பற்றிய புதியதோர் உணர்வு என்னுள் குடிகொண்டுள்ளது.

பேரன்பிற்குரிய பாபு, ஊனுடலில் நம்முடன் இனி இருக்க மாட்டாரெனினும், அவர் புனித ஆவி முன்பைவிட நம்முடன் நெருங்கி உள்ளது. "இந்த யாக்கை இல்லாதபோது, பிரிவு நேரிடாது; நான் உனக்கு இன்னமும் அருகாமையில் இருப்பேன். யாக்கை ஒரு தடையேயாகும்," என்று சில சமயங்களில் பாபு என்னிடம் கூறியதுண்டு. விசுவாசத்துடன் அவர் சொல்லுக்கு நான் செவி சாய்த்தேன். இன்றோ, அனுபவத்தின் மூலம் அச் சொற்களின் தெய்வீக உண்மையை நான் உணர்ந்துள்ளேன்.

என்ன நேரிடப் போகிறது என்பது பாபுவுக்குத் தெரியுமா? டில்லியை விட்டு ரிஷிகேஷுக்குப் புறப்படுவதற்கு ஒருசில நாட்களுக்கு முன்பு, டிசம்பர் மாதத்தில் ஒரு நாள் மாலையில், பாபுவிடம் நான் கேட்டேன். "பாபு, மார்ச்சு மாதத்தில், மாட்டுத் தொழுவங்கள் கட்டி முடித்து, வேலையையும் கட்டுப்பாடாக அமைத்த பின், திறப்பு விழாவுக்கு நீங்கள் வந்து, வேதனைப் பட்டுப் பரிதாபத்திற்குரியதாய் உள்ள இந்தியப் பசுவுக்கு உங்கள் ஆசீர்வாதத்தை அளிக்கச் சிறிது அவகாசம் கிடைக்குமா?". "நான் வருவது பற்றி எண்ணாதே," என்று பாபு பதிலளித்து விட்டுப் பாதி தமக்குத் தாமே பேசிக் கொள்வது போல், "பிணத்தை நம்பிப் பயனென்ன" என்று கூறினார். அச் சொற்கள் மிகப் பயங்கரமாக இருந்ததால், அவற்றை நான் எவரிடமும் சொல்லாமல் என் இதயத்தில் மௌனமாக அவற்றைப் பூட்டி வைத்து, இறைவனுக்கு ஒரு பிரார்த்தனையையும் அத்துடன் சேர்த்தேன். உண்ணா நோன்பு தொடங்கி, முடிந்தது. அவர் சொன்ன சொற்களின்

பொருளுக்கு இனிப் பொருத்தமில்லை என்று நான் எண்ணினேன். ஆனால், அவர் சொன்ன சொற்கள் தூர தரிசனத்துடன் சொல்லப் பட்டவை; அந்த ஞானதிருஷ்டி நிறைவேறியும் விட்டது.

அத் துன்ப மாலையிலே, நான் நேராக அமர்ந்து செயலற்றுத் தியானத்தில் ஆழ்ந்திருந்தபோது, உலகம் முழுவதும் வேதனையின் நடுக்கம் பாய்ந்தது போன்ற உணர்வு என்னை ஆட்கொண்டது. மனித இனம் உய்வதற்காக, மீண்டும் ஒரு அவதாரப் பிறவியின் இரத்தம் சிந்தியது. ஒரு கொடிய பாபச் செயலின் சுமையும் பயங்கரமும் தாளாமல், உலகமே ஓலமிட்டது.

அப்பாவம் ஒரு மனிதனின் பாவமல்ல; யுகத்திலிருந்து யுகம் வரை உலகனைத்தும் பெருக்கெடுக்கின்ற பாவம் அது. இறை வனுக்குப் பிரியமானவர் சிலுவையில் அறைபடுவதன் மூலம், அப் பாவப் பெருக்கைத் தடுத்து அணைபோட முடியும்.

பாபு நமக்கு விட்டுச் சென்றுள்ள பணியை இனிது நிறை வேற்ற நாம் பகீரத முயற்சி செய்ய வேண்டும். பாபு வாழ்ந்ததும் இறந்ததும் நம் அனைவருக்காக—ஆண், பெண், குழந்தை ஒவ்வொரு வருக்குமாக. பகைமை, பேராசை, வன்முறை, பொய்மை எனும் தீய வழியிலிருந்து நம்மைத் திருப்பும் பொருட்டுப் பாபு, தம் வாழ் நாளில் ஓயாது உழைத்தார்; அதற்காகவே தியாக மரணத்தையும் தழுவினார். நம் பாவங்களுக்காகப் பிராயச்சித்தம் செய்து, பாபு வின் புனிதக் குறிக்கோளுக்காகத் தொண்டாற்ற வேண்டுமானால், வகுப்பு வாதம், எந்த வடிவில் அது தோன்றியிருந்தாலும், ஒழிய வேண்டும். அத்துடன், கள்ள வாணிபம், லஞ்ச ஊழல், நியாய மற்ற நேசச் சலுகைகள், பொறாமை, பகைமை உணர்வு,—இவை போன்று, பொய்மை, வன்முறை ஆகியவற்றின் எண்ணற்ற இருள் தோற்றங்கள் அனைத்தும் அகல வேண்டும். உறுதியான மனத் துடனும், தயங்காத கையுடனும், அவற்றை எதிர்க்க வேண்டும். பாபு அன்பே உருவானவர்; மென்மையே அவர் பண்பு. ஆயினும் தீயவற்றுடன் போராடுவதில் அவர் சிறிதும் இரக்கம் காட்ட வில்லை.

தம்மகத்தே இருந்த தீமையை வென்றதால்தான், புறத்தே தலை தூக்கிய தீமையுடன் பாபுவால் போராட முடிந்தது. நம் முன்னுள்ள மகத்தான பணிக்கு நம்மை அருகதையாக்கும் வகை யில், இறைவன் நம்மைத் தூய்மைப்படுத்துவாராக.

மீரா.

நிறைவு பெற்றது.

# முன்னுரை

பாபுவிற்கு இவ்வையகமும், குறிப்பாக நம் நாடும் பெரிதும் கடமைப்பட்டவை. நானே அனைத்தும் அவர் அன்பால் பெற்றவள். அவரிடமிருந்து கடிதங்கள் பெறும் பெரும்பேறு எனக்குக் கிட்டியது. அக்கடிதங்களை வெளியிடுவதன் ஒரே நோக்கம், இந்தியாவின் தவப் புதல்வராகிய இவருடைய எல்லையற்ற அன்பினையும் பரிவான பண்பினையும் ஒரு சிறிதாகிலும் காணும் வாய்ப்பை வாசகர்களுக்கு அளிக்கவேண்டும் என்பதே.

அண்மையில் நான் குறிப்பாக அமெரிக்காவுக்கும் மற்ற அயல் நாடுகளுக்கும் சென்றிருந்தபோது, என்னுடன் தொடர்பு கொண்டிருந்த ஒவ்வொருவரும் காந்திஜியைப்பற்றிக் கேட்கவும் கற்கவும் மிகுந்த ஆவலும் ஆர்வத்துடிப்பும் கொண்டிருந்தது, என் உள்ளத்தைத் தொட்டது.

"காந்திஜியிடம் உன்னை ஈர்த்தது என்ன?" என்ற கேள்வி அடிக்கடி என்னிடம் கேட்கப்பட்டுள்ளது. தம் பெரிய குடும்பத்தைச் சேர்ந்தவர்க்கு எழுதிய கடிதங்களைக் 'காதல் கடிதங்கள்' என்று அவர் வேடிக்கையாக அழைப்பதுண்டு. இக்கடிதங்கள் காந்திஜியின் இயல்பில் ஊன்றியிருந்த மனிதாபிமானத்தை நாம் அறிய உதவும். எவ்வளவு தகுதியற்றவராய் ஒருவர் இருப்பினும், அவருக்குத் தம் அன்பு அனைத்தையும் வாரி வழங்கினார் காந்திஜி. ஒருவருடைய அன்றாட அலுவல்களில் அவர் எடுத்த அக்கறை மிகுந்த ஊக்கமளிப்பதாய் இருந்தது. மனிதரின் தேவைகளை அனுதாபத்துடன் அறியும் அரும் ஆற்றலை அவர் பெற்றிருந்தார். ஆகவே அவர் பெருந்தன்மைக்குச் சிறியது எதுவும் அற்பமாகத் தோன்றவில்லை. "வாய்மையே கடவுள்" என்று அவர் கூறினார். உள்ளத்தில் அன்பு ஊற்றெடுக்காவிடில், இறைவனை நாடுவோர் அவரைக் காண்பது இயலாது. ஆண்டவனின் அற்பமான படைப்புமீதும் அளவற்ற அன்பு காந்திஜியின் இதயத்திலே பெருக்கெடுத்தது.

அவர் கடிதங்கள் எனக்கு அளவற்ற ஆறுதல் அளித்ததுடன் நம்பிக்கை ஊட்டி வழிகாட்டின. இச் செல்வக் களஞ்சியத்தை என்னுடன் பகிர்ந்து கொள்ளும் வாசகர்கள், இதன்மூலம் பாபுவைப்பற்றி ஒரு சிறிதாகிலும் அறிந்து கொள்வார்களென்று நம்புகிறேன்.

அமிருத் கௌர்.

# அணிந்துரை

இந்த நூலில் என் பெயரும் இடம்பெறுவதற்கு ஒரே ஒரு காரணம் தான். காந்திஜியிடமிருந்து தனக்குக் கிடைத்த கடிதங்களைப்படித்து, அவற்றில் அமெரிக்க மக்கள் விரும்பிப் படிக்கக்கூடியவற்றைத் தேர்ந்தெடுக்குமாறு, சில காலத்திற்கு முன்பு, ராஜ்குமாரி அமிருத் கௌர் என்னிடம் கேட்டார். தேர்ந்தெடுக்கப்பட்ட இக் கடிதங்கள் எல்லா நாடுகளிலும் உள்ள பொதுவான வாசகர்களுக்குச் சுவையாக இருக்குமென்று பின்னர் தோன்றிற்று. காந்திஜி உயிருடன் இருந்தபோது அவரை அறியாத இளைய தலைமுறை இந்தியாவில் இப்பொழுது வளர்ந்து வருவதால், இக் கடிதங்கள் இந்தியாவிலும் பிரசுரமாவது பொருத்தமானதே. அதே காரணத்திற்காக, அமெரிக்க வாசகர்களுக்குப் பயனுள்ளதாக அமைந்த அணிந்துரை, இப்பதிப்புக்கும் பொருத்தமாக இருக்கும்.

காந்திஜி வாழ்க்கையின் இறுதிப் பதின்மூன்று ஆண்டுகளில் அமிருத் கௌர் அவருடன் நெருங்கியும், அவருக்காகவும் பணியாற்றி வந்தார். அதற்கு முன்பாகவே தம் சமூக வட்டாரங்களில், அவருக்காக அருந்தொண்டு ஆற்றி வந்தார். ஆங்கிலேயருடன் காந்திஜி நடத்திய கடிதப் போக்குவரத்தில் பெரும்பகுதியை அமிருத் கௌர் கவனித்து வந்தார். அமிருத் கௌருக்கு சமூக உறவில் இருந்த செல்வாக்கையும் திறமையையும் கருதி, முன்னாள் இந்திய சமஸ்தானங்களின் ஆட்சியில் அதிகாரிகளுடன் உறவு பற்றிய பிரச்னைகளையும் பேச்சு வார்த்தைகளையும் காந்திஜி அவரிடம் ஒப்படைத்தார். அவர் தந்தை, இந்தியாவின் வடமேற்குப் பகுதியில், பாஞ்சாலத்தில் இருந்த சீக்கிய சமஸ்தானமான கபூர்த்தலாவின் மன்னராக இருந்தவராகையால், அவருக்கு இத்திறமை இயல்பாகவே அமைந்திருந்தது.

அமிருத் கௌரின் தந்தை, ஆர்வமிக்க தேசியவாதி. இந்திய மன்னரிடையே, தம் மகளைக் கல்விக்கு இங்கிலாந்திற்கு முதலில் அனுப்பியது, அவர்தான். ஐந்தாண்டுகள் அமிருத் அங்கு பள்ளிப் பயிற்சி பெற்றார். பள்ளியில் தேர்ச்சி பெற்றபின் இன்னும் மூன்று ஆண்டுகளுக்குக் கல்லூரி விரிவுரைகள் கேட்டுப் பயிற்சிபெற்றார். அவருக்குக் காந்திஜியுடன் தொடர்பு தொடங்கியதுபற்றி அவர் எனக்குப் பின்வருமாறு எழுதினார் :

"என் தந்தையின் நண்பரான ஸ்ரீ கோகலேயிடமிருந்துதான் முதன் முதலாகக் காந்திஜிபற்றிக் கேள்விப்பட்டேன். அக் காலத்திய காங்கிரஸ் தலைவர்கள் அனைவரும் என் தந்தை இல்லத்தில் கூடுவதுண்டு. ஸ்ரீ கோகலே எப்பொழுதும் எங்களுடன்தான் தங்குவார். காந்தி இந்தியாவுக்குத் திரும்பிய பின், இந்திய அரசியலில் ஒரு புரட்சியை ஏற்படுத்துவாரென்று, தம் தென்னாப்ரிக்கப் பயணத்துக்குப் பின் ஸ்ரீ கோகலே என் தந்தையிடம் கூறினார். அவரைப் பற்றி அனைத்தையும் ஸ்ரீ கோகலேயிடமிருந்து அறிந்து கொள்ள நான் முயன்

றேன். 1915–16ம் ஆண்டு மாரிக் காலத்தில் பாபு இந்தியாவுக்கு நிரந்தரமாகத் திரும்பியபோது, பம்பாயில் காங்கிரஸ் மாநாட்டின்போதும், பின்னர் லக்ஷ்மணபுரியிலும் அவரைச் சந்திக்கும் பேறு பெற்றேன். பின்னர் 1919ல் ஜாலியன்வாலாபாக் கொடுமைக்குப் பின் நான் அவரை ஜலந்தரில் சந்தித்தேன். நான் அவருடன் சபர்மதியில் சேர வேண்டுமென்று விரும்பினேன். ஆனால் என் உடல்நலன் சீராகவே இல்லை. ஆகவே என் பெற்றோர்கள் என்ன நினைப்பார்கள் என்று அவர் என்னைக் கேட்டபோது, அதை விரும்பமாட்டார்கள் என்றுதான் நான் கூற வேண்டியிருந்தது. 'அவர்களை நீ புண்படுத்தக்கூடாது; என் ஆசிரமத்தில் சேர வேண்டுமென்ற அவசியமில்லை. உன் சமூகச் சூழ்நிலையிலிருந்து கொண்டே நீ எனக்காக வேலை செய்யமுடியும்', என்று அவர் கூறினர். 1924ல் என் அன்னை இறந்தபோது, என் தந்தையுடன் இருப்பது என் கடமை என்று அவர் வற்புறுத்தினர். 1930ல் என் தந்தையும் மறைந்தார். என் சகோதரர்கள் விருப்பத்திற்கேற்ப எங்கள் குடும்ப விவகாரங்கள் அனைத்தையும் தீர்க்க ஏற்பாடு செய்தேன். பாபுவும் அப்பொழுது மீண்டும் சிறையிலிருந்து வெளியே வந்திருந்தார். அதன் பின்புதான், அவருடன் நெருங்கித் தீவிரமாகத் தொண்டாற்றும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது. பாஞ்சாலத்தில் நூற்பாளர் சங்கத்தின் வேலையில் சீரமைப்பு செய்ய முயன்றேன். அதே மாநிலத்தில் ஜலந்தர் மாவட்டத்தில் ஐந்து கிராமங்களில் கிராமக் கைத்தொழில் தொண்டினை மேற்கொண்டேன்; சிம்லாவில் ஹரிஜன சேவையில் ஈடுபட்டேன். இடையிடையே அவரிடம் சென்று வந்தேன். தம்மிடம் தனிப்பட்ட முறையில் பற்றுதல் கொண்டவர்கள், அதிலும் குறிப்பாகப் பெண்கள், இலட்சியத்திற்காகத் தொண்டாற்றுவதைக் காட்டிலும் தமக்குச் சொந்தப் பணிவிடை செய்வதில், அதிக மனநிறைவும் ஈடுபாடும் கொள்கின்றனர் என்ற முடிவுக்கு அவர் வந்திருந்தார். ஆகவே வார்தாவிலோ, சேவாகிராமத்திலோ, அலுவலக வேலைப்பொறுப்புக்கு மேலாக, என்னிடம் பல்வேறு பணிகளை ஒப்படைத்து என்னை அவர் வெளியே அனுப்புவதுண்டு. ஆனால் எந்த நேரமும் அவருடன் மிக நெருங்கிய தொடர்பு கொண்டிருந்தேன். பாபுவுக்காக வேலை செய்கையில் கடின உழைப்பை மேற்கொண்டு, வெப்பமான மாதங்களையும் தாங்க வேண்டியிருந்ததால் என் உடல் நலன் சீர்கெட்டு விடுமோ என்று என் சகோதரர் ஷம்மி அஞ்சுவதுண்டு. ஷம்மியிடம் பாபுவுக்கு அதிகப் பிரியம். ஷம்மியைத் திருப்தி செய்யப் பாபு என்னை அவ்வப்போது சிம்லாவுக்கு அனுப்பி விடுவதுண்டு.

தம் அகிம்சைச் சேனையிலே பெண்களும் சேர வேண்டுமென பாபுவுக்கு இருந்த ஆசையும், பெண்ணினத்தில் அவருக்கிருந்த நம்பிக்கையும் தான், அவரிடம் என்னை ஈர்த்தன. குழந்தைகளைப் பெற்றெடுத்துத் தங்கள் எசமானர்களுக்கும் அதிபர்களுக்கும் ஊழியம் செய்யத் தான் பெண்களுக்குத் தகுதியுண்டு என்று கருதப்பட்டு வந்த நாட்டில், பெண்களிடம் பாபு இவ்வளவு மதிப்பு வைத்திருந்தது, பெண்களை இதயபூர்வமாகக் கவர்ந்தது. எங்கள் சார்பில் அவர் நடத்திய அகிம்சைப் போராட்டத்திற்காக நாங்கள் எவ்வளவு கடமைப்பட்டிருக்கின்றோம் என்பதை எங்களில் எத்தனை பேர் உணர்ந்துள்ளனர்? அது மட்டுமல்ல, பெண்ணினத்திடமிருந்து அவர் எதிர்பார்த்ததை நிறைவு செய்ய இயலாமல், நாம் எவ்வளவு குறை வைத்துள்ளோம் என்பதை உணர்ந்தவர்கள் எத்தனை பேர்?''

இந்தியா சுதந்திரம் பெற்றபின், அமிருத் கௌர், இந்திய மத்திய அரசில் சுகாதார அமைச்சராகப் பொறுப்பேற்றார். அமைச்ச

ரவையில் அவர் ஒருவர் தான் பெண். பத்தாண்டுகளாக அவர் அப் பொறுப்பை ஏற்று நடத்தினர். அதற்குப் பின்பு இந்திய செஞ் சிலுவைச் சங்கத்தின் தலைவராகப் பணியாற்றுவதுடன், ஐக்ய நாடு களின் சர்வதேச சுகாதார அலுவலகப் பணிகளிலும், இந்தியாவில் பல்வேறு பணிகளிலும் அவர் ஈடுபட்டுள்ளார்.

காந்திஜி அவருக்கு எழுதிய கடிதங்களில் கால் பகுதிக் கடிதங் களே இந்நூலில் இடம் பெற்றுள்ளன. பொது வாசகர்களுக்கு விளங்கக் கூடியதும் சுவையாக இருக்கக் கூடியதுமான கடிதங் களையே இங்கு தேர்ந்தெடுத்துள்ளோம். வேடிக்கையிலும் கேலி யிலும் அவருக்கிருந்த பிரியம், எளிதில் பழகும் இயல்பு, மனி தரிடம் மனிதரென்ற முறையில் கொண்ட அன்பு, மனிதர், நிகழ்ச் சிகள், ஊர்கள் ஆகியவற்றை மறக்காமலிருந்த நினைவாற்றல், சிறு நுணுக்கங்களையும் கண்டறியும் திறமை ஆகியவற்றை இக் கடிதங் களில் காணலாம். "சிறு விவரங்களிலும் சிரத்தை கொள்ளுங்கள்; சிறியவற்றைச் சிறப்பாகக் கவனியுங்கள்." "இன்னொருவருக்கு நன்மை செய்ய விரும்புபவர் சிறிய விஷயங்களில் அவருக்கு நன்மை செய்ய வேண்டும்." "பொது அறிவு, பொதுப்படையானது; சிறு நுணுக்கங்களில் தான் விவேகமும், இன்பமும் அடங்கியுள்ளன" என்ற வில்லியம் பிளேக் பொன்மொழிகளை நினைவுறுத்துவதாக இருந்தது, காந்தி சிறு நுணுக்கங்களிலும் செலுத்திய கவனம்.

குணநலன் நிரம்பிய பெரியோர்கள் பலரைப் போலவே, காந்திஜியிடமும் சில 'கோனஷ்டைகள்' இருந்தன. உணவு முறை யிலும் இயற்கை சிகிச்சையிலும் அவருக்கிருந்த அளவற்ற ஆர்வமும் ஈடுபாடும், நோயாளிகளுக்குப் பணிவிடை செய்வதில் அவருக் கிருந்த பிரியம் போன்றவை இவற்றில் சில. இதை இக்கடிதங்கள் தெளிவு படுத்துகின்றன. புதுப்புது முறைகளைப் பரிசோதித்துப் பார்ப்பதில் அவருக்கு அலாதிப் பிரியம். மற்றவர்களுக்கு அவற்றை அறிமுகப்படுத்துவதற்குமுன் முதலில் தம் மீதே அவர் சோதனை நடத்திப் பார்ப்பார்.

அவருடைய அன்பான பரிவு; மக்களிடம் அவர் கொண்டிருந்த நம்பிக்கை, பிறர் குணத்தைச் சரியாக மதிப்பிடும் மதிநுட்பத் துடன் கலந்த அனுதாப உணர்வு, மகத்தான பொறுப்புகளுக்கும் முக்கிய நிகழ்ச்சிகளுக்கும் இடையிலும் மற்றவர்கள் நலன் குறித்து அவர் காட்டிய அக்கரை, ஆகியவற்றை நாம் இக் கடிதங்களி லிருந்து நேரில் அறியலாம். எடுத்துக் காட்டாக, 1947ல் வங்காளத் திலிருந்து எழுதப்பட்ட கடிதங்கள், பாகிஸ்தான், இந்தியா என்று பிரிவினை செய்யப்பட்ட போது இந்துக்களுக்கும் முஸ்லிம்களுக்கும் இடையே நடந்த படுகொலைகள், பயங்கரச் சூரையாடல் ஆகிய வற்றால் மூண்ட அச்சங்கள், வெறுப்புக்கள் ஆகியவற்றைப் போக்கி மக்களுக்கு ஆறுதல் கொண்டுவர, மாவட்டங்களில் காந்தி சுற்றுப் பயணம் செய்த போது எழுதப்பட்டவை. வளமான அவர் சொந்த உறவுகள் பற்றியும், பிறர் உணர்ச்சிக்கும் குணநல இயல்புக்கும் அவர் அளித்த மதிப்பு பற்றியும், இக் கடிதங்களி

லிருந்து அறிகிறோம். ஊக்க மிகு ஆற்றல், தளராத மன உறுதி, விடாமுயற்சி, எப்பொழுதும் மேலோங்கும் ஒழுக்கப் பண்புகளை அவர் அறிந்து போற்றிய ஆர்வம், தம் ஆண்டவனாக அவர் போற்றிய வாய்மையிடம் கொண்டிருந்த உறுதியும் உணர்வும் மிக்க, நிலையும் நிரந்தரமுமான, அசைக்க முடியாததும் அளவற்றது மான நம்பிக்கை ஆகியவற்றை நாம் அறிய முடிகிறது.

சென்ற 1900 ஆண்டுகளில் இவ்வுலகில் தோன்றியவர்களில் தலை சிறந்த மனிதர் இவர் என்று நான் துணிந்து கூறுவேன். இது உண்மையாயின், அவரைப் பற்றி நாம் இயன்றவரை அறிந்து கொள்வது நமக்கு நன்மையாகும்.

ரிச்சார்டு. பி. கிரெக்

## 1

பாட்னு,
22-3-'1934,

அன்புச் சகோதரி,

ரூ. 38-7-0 க்கு நீ அனுப்பியுள்ள காசோலேக்கு நன்றி. டாக்டர் ராய்டனுக்கு நான் எழுதுகிறேன். அவருடைய ஏழை விசுவாசிகள் கூட்டத்திலிருந்து வந்துள்ள இந்த நன்கொடை மிகச் சிறப்பானது.

உன் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 2

லாகூர்,
17-7-'1934

அன்புச் சகோதரி,

இங்கிலாந்து நாட்டின் இந்திய மருத்துவ சங்கத்தின் சார்பில் பீகார் பூகம்ப நிவாரணத்திற்காக ரூ 54-4-3 க்குக் காசோலேயுடன் அனுப்பியுள்ள கடிதத்திற்கு நன்றி. அதை இராஜேந்திர பாபுவுக்கு அனுப்புகிறேன்; பணம் வந்து சேர்ந்த விவரத்திற்கு டாக்டர் பங்தாரிக்கும் எழுத அவரிடம் சொல்லியுள்ளேன்.

என்னேப்பற்றி நீ கொண்டுள்ள கவலேயை அறிவேன். ஆண்டவன், தம் கருவியாக என்னேப் பயன்படுத்த விரும்பும் வரை, என்னேக் கவனித்துக் காப்பார். லாகூரில் நாம் சந்திக்க முடியுமென்று எண்ணியிருந்தேன். என்ருவது, எங்காவது நாம் சந்திக்க வேண்டும்.

உன் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 3

வார்தா,
20-9-'1934

அன்புச் சகோதரி,

தீனபந்து ஆண்ட்ரூஸ் மூலம் எனக்கு நீ அனுப்பிய தீஞ்சுவை ஆப்பிள்களுக்கும் உலர் திராட்சைகளுக்கும் நன்றி.

உன் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 4

வார்தா,
*14—10—'1934.*

அன்புச் சகோதரி,

உன் கடிதம் கிடைத்தது. நீ இப்பொழுது செய்துள்ளது போல், எனக்கு எழுதியுள்ளது சாலப் பொருத்தமே. கலைஞர் நண்பருக்கு இரண்டு மணி நேரம் கொடுப்பது மிகக் கடினமாக இருக்கலாம். ஆனால் என்ன இயலுமென்று பார்க்கின்றேன். சார்லி ஆண்ட்ரூஸ் தலையின் புகைப்பட நகல் ஒன்றை நீ அனுப்பு வாயென்று ஆவலுடன் எதிர்பார்க்கின்றேன்.

நீ கேள்விப்பட்ட வதந்தி சரியானதே. காங்கிரசிலிருந்து நான் விலக முயன்று வருகின்றேன். ஆனால் அதையொட்டி ஒதுங்கிய அமைதியான வாழ்க்கை நான் நடத்த முடியுமென்று பொருளில்லை. உண்மையில் காங்கிரஸ் மகாநாடு முடிந்த பின் எனக்கு என்ன ஆகுமென்று நானறியேன். ஆனால் நீ கூறுகின்ற பொறுப்பை நான் ஏற்று நடத்தப் பெரிதும் விரும்புவேன். இது போன்ற பொறுப்பில், என்ன எதிர்பார்க்கப்படும் என்பது எனக்குத் தெரியவில்லை. நான் மேற்கொண்ட பல பணி களில் ஒன்றாக, பெண்கள் நலனுக்காகவும், என் பொது வாழ்வைத் தொடங்கியது முதல் நான் உழைத்து வந்தது உனக்குத் தெரியும். அந்தக் குறிக்கோளுக்காகச் சேவை செய்யும் ஆர்வம் இந்த 45 ஆண்டுகளாகத் தொடர்ந்து நிலைத்துள்ளது. நான் என்ன செய்ய வேண்டுமென நீ விரும்புகிறாயோ, அதை நீ எனக்குச் சித்திரிக்க வேண்டும். என்னால் அதைச் செய்ய முடியும் என்ற நம்பிக்கை எனக்கு ஏற்பட்டு, வாய்ப்பும் கிடைத்தால், அப்பொறுப்பை நான் நிச்சயம் ஏற்பேன் என்று நீ நம்பலாம்.

உன் உண்மையுள்ள,
மோ. க. காந்தி

## 5

வார்தா,
*21-10-1934.*

அன்புச் சகோதரி,

மிக வெளிப்படையாகவும் தெளிவாகவும் நீ எழுதியுள்ள கடிதம் கிடைத்தது. உன் உடல் நிலை பலவீனமாக இருப்பதை அறிய வருந்துகிறேன். தங்கள் முழு நேரத்தையும் சக்தியையும் இவ் வேலையில் ஈடுபடுத்திப் பலவிடங்களுக்கும் போய், கிராமங் களுக்குச் சென்று, இப்பொழுது நாம் செய்வதைப் போலல்லாமல் தங்கள் தேவைகள் அனைத்தையும் கிராமங்கள் மூலமாகவே

நிறைவு செய்துகொள்ள முன்வரும் தொண்டர் குழாம் ஒன்று எனக்கு வேண்டும். இவற்றை உன்னிடமிருந்து எதிர்பார்க்கக் கூடாது என்பதைக் காண்கின்றேன். ஆகவே உன்னுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளும் பெருவாய்ப்பினை நான் பெற இயலாது. ஆயினும், பாஞ்சாலத்தில் உன்னால் இயன்றதைச் செய்ய நீ முன் வந்துள்ளதை நான் பயன்படுத்திக் கொள்வேன். ஹரிஜனில் எழுதப்படுவதை நீ தொடர்ந்து படிக்கிறாயா? இல்லாவிடில் எனக்குத் தயவு செய்து தெரிவி. உனக்குப் பத்திரிகை கிடைக்க ஏற்பாடு செய்கிறேன்.

உன் மாநாடு கூடும் நேரத்தில் நான் கராச்சியில் இருக்க மாட்டேன் என்று அஞ்சுகிறேன். லண்டனிலிருந்து இவ்வளவு தூரம் வந்துள்ள டாக்டர் மாட் ராய்டென் என்னைப் பார்க்காமல் செல்ல மாட்டாரென்று நம்புகிறேன். அவருடன் நீயும் வர வேண்டுமென விரும்புகிறேன்.

உன் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 6

வார்தா,
*13-11-1934*

அன்புச் சகோதரி,

அனைத்திந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் செயற் குழுவை அமைக்க முயன்று வருகிறேன். ஒரு சில உறுப்பினர்களையே கொண்ட, அடக்கமான குழுவாக அது இருக்கும். உனக்கு அதில் போதுமான அளவு அக்கறை இருந்து, அதில் வேலை செய்வாயென்றால், குழுவில் உன் பெயரையும் சேர்க்கப் பெரிதும் விரும்புவேன். தயவு செய்து உன் முடிவைத் தந்தி மூலம் தெரிவி. அடிப்படையான ஆட்சேபம் எதுவும் இல்லையென்றால், 'சரி' என்று நீ கூற வேண்டுமென விரும்புகிறேன்.

உன் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 7

வார்தா,
*23-11-'1934.*

அன்புச் சகோதரி,

உன் கடிதம் கிடைத்தது. சமூக சேவை ஊழியர்களுக்குப் பயிற்சி அளிக்க நீ வகுத்துள்ள பூர்வாங்கத் திட்டத்தை நான் படித்துப் பார்த்தேன். அரசாங்கத்தின் அனுமதியைப் பெறாமல்,

நீ குறிப்பிட்டுள்ள நிலையங்களை மாவட்ட வாரியங்கள் அமைக்க முடியாதென்று தான் எண்ணுகின்றேன். ஆனால் அது சட்ட நுணுக்கப் பிரச்னை; அதை ஆராயும் ஆற்றல் எனக்கில்லை. நீ யோசனை கூறியுள்ளது போன்ற, நிலையான நன்மை பயக்கும் திட்டங்களில், மாவட்ட வாரியங்கள், இந்தியாவில் தற்போது அமைக்கப்பட்டுள்ள முறையில், அக்கரை கொள்வதில்லை. அவற்றின் அமைப்பின் அடிப்படையே அவை இது போன்ற திட்டங்களில் அக்கறை கொள்வதற்குத் தடையாக இருக்கின்றது போலும். நீ திட்டமிட்டுள்ள வேலை, இதுவரை மேற்கொள்ளப்படாத புதிய முயற்சியாகும். சீர்திருத்த வாதிகளே இதை முக்கியமாகச் செய்ய முடியும். ஆகவே தனிப்பட்ட நிறுவனங்கள் முதலில் இம் முயற்சியை மேற்கொள்ள வேண்டும். இப் பயிற்சி நிலையங்களை அவை வெற்றிகரமாக நடத்திவிட்டால், அதன் பின்பு மாவட்ட வாரியங்களும் மற்ற அமைப்புகளும் இம்முயற்சியைத் தொடர்ந்து செய்வது எளிதாக இருக்கும். நான் உன் குறிக்கோளைச் சரியாகப் புரிந்து கொண்டிருந்தால், கிராமங்களுக்குப் புத்துயிரளிக்க நீ விரும்புகிறாய் என்றெண்ணுகிறேன். இப்பொழுது காணப்படும் போக்கு, இதற்கு நேர்மாறானது. ஆகவே, நீயும் நானும் விரும்பும் முறையில் மாவட்ட வாரியங்களோ, அரசாங்கமோ, இப்பிரச்னையை அணுக மாட்டா. நாம் விரைவில் சந்திக்க வேண்டுமென விரும்புகிறேன்.

உன் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

ஸ்ரீ ராஜகுமாரி அமிருத் கௌர்,
ஜலந்தர் நகரம்.

## 8

வார்தா,
*17—12—1934.*

அன்புச் சகோதரி,

கராச்சியில் உன் கூட்டம் முழு வெற்றியாக அமைய வேண்டுமென விரும்புகிறேன். அங்குக் கூடியுள்ள சகோதரிகள், ஆண்களின் சிறுமையான சண்டைகளில் சிக்காமல், பல்வேறு பிரிவுகளாகப் பிளவுபட மறுத்து, நல்லதொரு முன்மாதிரியாக அமைவார்களென்று நம்புகிறேன். நம்மிடையே சண்டைகள் மூட்டி விடுவதற்காக ஏற்பட்டவையல்ல, சமயங்கள். புதிதாக அமைக்கப்பட்டுள்ள கிராமக் கைத்தொழில் சங்கத்தின் நடவடிக்கைகளுக்கு இக் கூட்டம் முழு ஆதரவு அளிக்குமென்றும் நம்புகின்றேன். அது முக்கியமாக, பெண்கள் வேலையேயாகும். 7,00,000 கிராமங்களில் வாழும் தங்கள் சகோதரிகள் நலனில் அக்கறை கொள்ளவில்லையென்று பட்டணத்துப் பெண்கள் மீது பழிக்கு இடம்தரக் கூடாது.

டாக்டர் மாட் ராய்டெனுக்கு இத்துடன் ஒரு கடிதம் அனுப்பியுள்ளேன்.

உன் கடிதம் இப்பொழுது தான் வந்துள்ளது. பத்திரிகைக் குறிப்பு படிக்கச் சுவையாயுள்ளது. சி. எப். ஆண்ட்ரூஸ் இன்று இங்கு வருகிறார்.

உங்கள் இருவரையும் சந்திப்பதில் எனக்குப் பெருமகிழ்ச்சி ஏற்பட்டது. இங்கு தங்கியதனால், உங்கள் உடல்நலன் பாதிக்கப்படவில்லை என்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

நான் முதலில் உத்தேசித்திருந்தபடி, 20ந் தேதி டில்லியில் இருக்க மாட்டேன் என்று இப்பொழுது தெரிகிறது. 27-29 தேதிகளுக்கிடையே அங்கிருப்பேன். அங்கு சென்ற பின் குறைந்தது இரண்டு மூன்று வாரங்களாவது, அதிகப்படி நான்கு வாரங்கள், அங்கு தங்குவேன்.

மோ. க. கா.

## 9

வார்தா,
*22-12-'1934.*

அன்புச் சகோதரி,

உன் தீர்மான நகல்களை நேற்றிரவு தான் படித்தேன். அவை நண்பகலில் வந்தன. முதல் தீர்மானம் எனக்கு மிகவும் பிடித்திருக்கிறது. கடைசித் தீர்மானம் எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. என் செய்தியும் டாக்டர் மாடுக்கு ஒரு கடிதமும் சேர்த்து அனுப்பினேன். அத்துடன் நான் உனக்கு எழுதிய கடிதம் ஒழுங்காகக் கிடைத்ததென்று எண்ணுகிறேன்.

அளவுக்கு மீறி வேலை செய்து அலுப்பை வரவழைத்துக் கொள்ளாதே. நீ செல்லுமிடமெல்லாம், கர்னல் உன் கூட வருகிறாரென்று நம்புகிறேன். அவருக்கு இதற்குள் பதில் கிடைத்திருக்கும்.

அன்பு,

பாபு

## 10

வார்தா,
*24—12—1934*

அன்புச் சகோதரி,

உன் பல கடிதங்கள் கிடைத்தன. உன் உத்தமப் பணியில் நீ வெற்றி பெற நான் வழிபட்டு வருகின்றேன்.

ஆண்ட்ரூஸ் இங்கு 26ந் தேதி வரவேண்டும்.

மறைப்படி கையொப்பமிட்டுச் செய்தியை இத்துடன் அனுப்பியுள்ளேன்.

அன்பு,
பாபு

## 11

டில்லி,
*17-1-'35.*

என் அன்புச் சகோதரி,

இன்று உனக்குக் கடிதம் எழுத வேண்டுமென்ருல், நான் சொல்லி, வேருெருவரைக் கொண்டு எழுதச் செய்யவேண்டும். நீ அளவுக்குமீறி வேலை செய்யக்கூடாது. நீ தகுந்த ஓய்வெடுத்துக் கொண்டு, இயன்றவரை உடல் வலிமையை வளர்க்க வேண்டும். இயற்கையோடு இயைந்த வாழ்வு வாழ்வதை நான் உறுதியாக நம்புபவன். இயற்கையின் விதிகளைப் பின்பற்றினல், சீர்குலைந்துள்ள உடலையும் தேற்றி உறுதியாக்க முடியுமென்று நான் கருதுகிறேன். மருத்துவ உதவி பலனளிக்காதபோது கூட, உடல் தேறிக் குணமடைந்துள்ள பல பேரை நான் அறிவேன். டாக்டர் சகோதரரைக் குறைவுபடுத்திக் கூறுகின்றேன் என்று இதன் பொருளல்ல.

அனைத்திந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் விதிமுறைகளின் நகல் உனக்குக் கிடைத்திருக்குமென்றும், உன் பத்திரத்தை நீ குமரப்பாவிடம் அனுப்பிவிட்டாயென்றும் நம்புகிறேன்.

சாரதா சட்டத்தை மீறுவதற்காக ஏழை ஹரிஜனங்கள்மீது சட்ட நடவடிக்கை எடுப்பது பொருத்தமானது என்ற கருத்தை நான் ஏற்றுக்கொள்ளும்படி முதலில் ரெய்சாதா செய்யவேண்டும். அதற்கிடையில் நாம் சட்ட நடவடிக்கைகள் எடுக்கக் கூடாதென்று நான் உறுதியாக நம்புகிறேன். சட்ட நடவடிக்கை எடுப்பதற்கு முன், கொள்கைப் பிரசாரம் செய்யவேண்டும்.

அன்பு,
பாபு

## 12

ராஜகுமாரி அமிருத் கௌர்,
ஜலந்தர் நகரம்.

ஹரிஜன் இல்லம், டில்லி,
21-1-'35.

அன்புச் சகோதரி,

உன் மனுவைக் குமரப்பாவுக்கு அனுப்பியுள்ளேன். உன்னைப் பொறுத்தவரையில் 9, 10 வது விதிகளை அமல் நடத்துவதுபற்றி, நீயே உனக்குத் தீர்ப்பளித்துக் கொள்ளலாம். உன் மாவட்டத்தில் ஒவ்வொரு கிராமத்திற்கும் நீ செல்ல வேண்டுமென்று நான் எதிர் பார்க்கவில்லை. கிராமவாசிகளின் தேவைகளைத் தெளிவாக உணர்ந்து கொண்டு, அவற்றை நிறைவு செய்யக் கட்டுப்பாடான முயற்சி செய்ய வேண்டுமென்றே விரும்புகிறேன். உன் உடல்நிலை சீர்கெட்டிருந்த போதிலும், இப்பொறுப்பை ஏற்று நடத்த நீ மிகவும் பொருத்தமானவள். நாம் சந்திக்கும்போது, உன் உடல்நிலை பற்றிப் பேசவேண்டும்.

என் மௌன நாளான 28ந் தேதி நான் புறப்படுகின்றேன். 26, 27 தேதிகளில் உன்னால் எளிதில் வர முடியுமென்றால், வா.

கடுமையான பனியின் காரணமாகப் பசியால் வாடும் பல கோடி மக்களுக்கு ஒரு கோடி ரூபாய்க்குமேல் நட்டம் ஏற்பட்டுள்ளது.

அன்பு,

பாபு

## 13

வார்தா,
2-2-'35.

திருத்தப்படாதது.

அன்புள்ள அமிருத்,

குழந்தைப் பருவத் திருமணம்பற்றிச் சஞ்சலமடைந்துள்ள ஹரிஜனங்களுக்கு நான் அனுப்பும் செய்தி இதுவே :

" நம்மை நாமே தூய்மைப்படுத்திக்கொள்ளும் இந்நாட்களில், சாதி இந்துக்களின் தீய வழக்கங்கள் அனைத்தையும் தாங்கள் தவிர்க்கவேண்டும் என்பதை ஹரிஜனங்கள் உணரவேண்டும். ஆகவே குழந்தைப் பருவத் திருமணங்களை அவர்கள் தவிர்க்க வேண்டும். ஆனால் சீர்திருத்தவாதிகள் பொறுமை இழக்கக்கூடாது. சாரதா சட்டம் விவேகமான ஒரு நடவடிக்கை என்பது என் கருத்து. ஆனால் சாதி இந்துக்களைப் பொறுத்தவரை இச்சட்டம் சிறிதும் கண்டிப்பாக அமல் நடத்தப்படாதபோது, ஹரிஜனங்களைப்

பொறுத்தவரையில் மட்டும் கண்டிப்பாக அமல் நடத்தப்படுவது சரியல்ல. குழந்தைப் பருவத் திருமணத்தின் தீங்கு குறித்தும், சாரதா சட்டத்தின் விளைவுகள் பற்றியும் சகோதர ஹரிஜனங்கள் உணரும்படி, ஹரிஜனங்கள் தீவிரமாக விளக்கப் பிரசாரம் செய்ய வேண்டும். அதற்குப் பின்பு மக்கள் வேண்டுமென்றே சட்டத்தை மீறுகிறார்கள் என்பது நிச்சயமானால், ஒரு சிலர்மீது சட்ட நடவடிக்கைகள் எடுக்கலாம். அப்பொழுதும் கூட, ஹரிஜனங்கள் மட்டுமே இதைப்பற்றிக் கவலை கொள்ளவேண்டும். இப் பிரச்னையைப் பொறுத்தவரை அவர்கள் சாதி இந்துக்களிடமிருந்து பண உதவி கூட நாடவோ, பெறவோ கூடாது. எப்படியும் தீவிரமான பிரசாரம் ஓராண்டுக்காகிலும் நடக்கவேண்டும்.''

நீ விரும்பும் செய்தி இதுவல்லவெனின், இதைப் பிரசுரிக்காமல் நிறுத்திவிட்டு, நீ என்ன விரும்புகிறாய் என்பதைத் தெரிவி.

இங்கு குளிர் இல்லை. அதற்குப் பதிலாக மழைபெய்து கொண்டிருக்கிறது.

உன் உடல்நலன் தேறியுள்ளதென்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

## 14

வார்தா,
*18—2—'35.*

*திருத்தப்படாதது.*

*என் அன்புள்ள அமிருத்,*

இம்மாதம் 5ந் தேதி நீ எழுதிய கடிதம் இன்னமும் என்முன் உள்ளது.

கடித மேலுறைகள் கட்டு ஒன்று உனக்குச் சில நாட்களுக்கு முன் அனுப்பப்பட்டது.

எழுதுவதற்குத் தடையாக என் கையில் ஏற்பட்ட பிடிப்பு இன்னும் நீங்கவில்லை. இன்று ஹரிஜனுக்காகக் குறிப்புகளும் சில சுருக்கமான கடிதங்களும் எழுதினேன். ஆனால் வலது கையால் இன்று அதற்குமேல் என்னால் எதுவும் செய்ய முடியவில்லை.

கிராம இயக்கத்தில் நீயும் உன்போன்ற பெண்களும் ஈடுபடுவது, அதற்குக் கலையுணர்வும் கவர்ச்சியும் ஊட்டும் என்பதை அறிவேன்.

ஷம்மியின் [1] பெயரை ஆலோசகரின் குழுவில் இப்பொழுது சேர்த்துக் கொள்ளலாமல்லவா? அவர் அறியாமையைப் பொருட்

1. என் சகோதரர், கர்னல் ஷம்ஷேர் சிங்; ஓய்வுபெற்ற அறுவை மருத்துவ நிபுணர்.

படுத்தாதே. விவேகமுள்ளவரால் தான் தம் அறியாமையை உணர முடியும். கிராமங்களில் பணியாற்றுவதென்றால், அதற்குமுன் மருத்துவ நிபுணர்கள் தாங்கள் கற்றதில் பலவற்றை மறந்து புதுப் பாடம் கற்றுக்கொள்ள வேண்டுமல்லவா? சங்கப் பதிவேட்டில் குறிக்க அவர் முழுப்பெயரையும் பட்டங்களையும் குறிப்பிட்டு எழுது. அவருக்கு என் அன்பும் நன்றியும்.

கிராமங்களுக்குச் செல்ல நீ தொடங்கியுள்ளது குறித்து மகிழ்ச்சி. அலுவலக வேலையை நீ குறைத்துக்கொண்டு, உருவான கிராமத் தொண்டை அதிகரிக்க முடிந்தால் நன்றாக இருக்கும். ஆனால் எழுத்து வேலையில் உனக்குத் தனி ஆற்றல் உள்ளதைக் காண்கிறேன். நீ இப்பொழுது செய்யும் அளவு அலுவலக வேலை, உன் நிறுவனம் நடப்பதற்கு இன்றியமையாததாகவும் இருக்கலாம். ஆனால் கிராம வேலையை எடுத்துக்கொண்டதால், அளவுக்கு மீறி உழைத்து அலுப்பை வரவழைத்துக் கொள்ளாமல் மட்டும் கவனித்துக் கொள்.

உன் செய்தியைக் குமரப்பாவுக்குத் தெரியப்படுத்தியுள்ளேன். உறுப்பினர் உறுதிமொழியைக் கண்டவரிடமிருந்தும் நீ வாங்காதது தான் சரி.

ஹரிஜனங்களுக்கு என் செய்தி இதோ:

“நம்மை நாமே தூய்மைப்படுத்திக்கொள்ள இப்பொழுது நடந்துவரும் இயக்கத்தில், சாதி இந்துக்கள் என்று சொல்லப்படுவோரின் தவறுகளையும் களங்கங்களையும் ஹரிஜனங்கள் பின்பற்றமாட்டார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது என்று அவர்களுக்கு எடுத்துச் சொல்லுங்கள். ஆகவேதான், குழந்தைப் பருவத் திருமணம் சில சாதி இந்துக்களிடை வழக்கமாக இருப்பது போலவே, ஹரிஜனங்களிடையேயும் பரவி யிருப்பதைக் கண்டு வேதனைப்பட்டேன். அது கொடியதொரு பழக்கம்; அதனால் சிறிதும் நன்மை பிறவாது. தனியாக நிறைவேற்றப்பட்டுள்ள ஒரு சட்டத்தின்படி, இப்பழக்கம் சட்ட விரோதமாக்கப்பட்டுள்ளது என்பதையும் அவர்கள் அறியவேண்டும். ஆகவே இத் தீய பழக்கத்தைத் தங்களிடமிருந்து அகற்ற ஹரிஜனங்கள் பெருமுயற்சி செய்வார்கள் என்று நம்புகிறேன்.”

இச் செய்தி உன் தேவைகளுக்குப் பொருத்தமா யிருக்குமென்று நம்புகிறேன்.

மீரா ஒரு மோசமான மோட்டார் விபத்தில் சிக்கியுள்ளாள். அவள் கூடச் சென்றவர்கள் அனைவரும் காயமடைந்தனர்; அதில் ஒருவருக்குப் படுகாயம். அனைவரிலும் அவளுக்குத்தான் சொற்ப காயம். கார் தூள் தூளாகிவிட்டது; அனைவரும் தூக்கி எறியப்பட்டனர். தப்பினது தெய்வாதீனம்தான். படுகாயமடைந்த ஒருவர் உள்ளூர் மருத்துவ மனையில் சிகிச்சை பெறுகிறார். அவர் ஆபத்திலிருந்து மீண்டு விட்டார். ஆண்டவன் சித்தமின்றி எவரும் மரணமடைவதில்லை.

அன்பு,

பாபு

# 15

என் அன்புள்ள அமிருத்,

உன் இரு கடிதங்களும் கிடைத்தன. ஆம்; கான் சகோதரர்கள் கடவுளின் உண்மையான தொண்டர்கள். நீ அப்புத்தகத்தை ஒரே மூச்சில் படித்து முடித்தது குறித்து மகிழ்கிறேன். தேவதாசிடமிருந்து அப்புத்தகத்தின் படிகள் சிலவற்றை, விரும்பினல் இலவசமாகப் பெற்று, அவற்றை உன் ஆங்கிலேய நண்பர்களுக்கு அனுப்பவேண்டும்.

ஜுகல் கிஷோர் அனுப்பியுள்ள தாளில் நீ குறிப்பிடும் குறை இருக்கத்தான் செய்கிறது.[1] அதைத் திருத்தமுடியுமா என்பது பற்றி விசாரித்துக் கொண்டிருக்கின்றேன். காகித மேலுறைகளில் சிரமம் எதுவும் இருக்காது. அவற்றைக் கையாலேயே சுத்தமாகச் செய்யலாம். அவற்றைச் செய்வதே ஒரு தொழிலாக வளரக்கூடும். நான் உனக்கு அனுப்பிய மேலுறைகளில் மெருகு குறைவாக இருக்கிறதா?

ஆலையில் தயாரிக்கப்பட்ட புடவைகள் அனைவற்றையும் பயன்படுத்தி முடித்த பின்தான், கதரை அணிவதென்று நீ காத்திருக்க வேண்டியதில்லை. கையால் நெய்த துணிகளில் எல்லையற்ற எழில் உண்டு. கையால் நெசவுசெய்த பட்டு, கதர்தான்.

மகராஜ் சிங்குக்கும் அவர் மனைவிக்கும் என் அன்பைத் தெரிவி. என் இரண்டாவது மகன், 'இந்தியன் ஒபினியன்' என்ற தென்னப்ரிக்கப் பத்திரிகையின் ஆசிரியர் என்பது உனக்குத் தெரியாமலிருக்கலாம். அவன் நல்ல இளைஞன். மகராஜ் சிங்கின் கொள்கை அவனுக்குப் பிடிக்காததால், அவரைத் தன் பத்திரிகையில் கடுமையாகத் தாக்கினன். தாக்கிய முறை தகுந்ததல்ல என்று ஆண்ட்ரூஸும் நானும் எடுத்துச் சொன்னேம்; ஆனல் தான் பின்பற்றிய முறை தவறென்பதை அவன் ஒத்துக்கொள்ளவில்லை. அவன் பிடிவாதமான பையன். ஒரு கொள்கை தனக்குப் பிடிக்காதபோது அதை அவன் கண்டிப்பதை நான் ஆட்சேபிக்கவில்லையென்றும், ஆனல் அவன் அப்பிரச்னையை அணுகியமுறைதான் தவறென்றும் எடுத்துச் சொன்னேன். இன்னமும் அவனுடன் வாதாடிக் கொண்டுதான் இருக்கின்றேன்.

திருமதி B. நேருவின் வாதத்தை நான் இன்னமும் ஏற்றுக் கொள்வதற்கில்லை. சீர்திருத்தவாதிகளாகிய நாம் வழக்கு தொடுப்பதில் ஈடுபடக்கூடாது என்பதுதான் நான் வற்புறுத்துவது. சனதனிகள் அபராதத் தொகைகளைச் செலுத்திவிட்டு, ஹரிஜனங்களை நமக்கு எதிராகத் தூண்டிவிடுவார்கள். உயர் வகுப்பினர் என்று சொல்லப்படுபவர்கள்தான் உண்மையான குற்றவாளிகள் என்பதும், முதலில் அவர்களை நாம் கவனிக்கவேண்டும் என்பதும் எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. தாங்கள் சாரதா சட்டத்தை

1. கையால் செய்யப்பட்ட கிராமத்துத் தாள்.

மீறுகிறார்கள் என்பது ஹரிஜனங்களுக்கும் சில சமயங்களில் தெரிந்திருக்கிறது என்பது என் வாதத்தைப் பாதிக்காது. தவறு செய்கிறார்கள் என்பதை அவர்கள் இன்னமும் உணரவில்லை. சட்டத்தை மீறும் செய்கையே தவறாகும் என்ற நிலை இப்போதில்லை. பெண்கள் நிறுவனத்திற்கும் கூட என் வாதம் பொருந்தும். இதைத் திருமதி B...க்குக் காட்டலாம். ஆனால் என் வாதம் உனக்கே நியாயமாகத் தோன்றாவிடில் அதைப் பொருட்படுத்தாதே.

சில்லறைத் துணிமணிபற்றி நான் விசாரிக்கவேண்டும்.

எப்பொழுது உன்னால் வர இயலுமோ, அப்பொழுது வா. எவ்வளவு விரைவில் வருகிறாயோ, அவ்வளவுக்கு நல்லது,

அன்பு,

பாபு

இந்தத் தாள், குறிப்பாக, மோசமாக இருக்கிறது. எழுத்து விளங்குகிறது என்றெண்ணுகிறேன்.

## 16

காலை 3·45 மணி,
வார்தா,
27—3—'35

என் அன்புள்ள அமிருத்,

நீ சொன்ன சொல்லைக் காப்பாற்றுகின்றாய். எனக்கு ஒரு தந்தி, ஓர் அஞ்சலட்டை, அருமையான ஒரு கடிதம் ஆகியவற்றை அனுப்பியுள்ளாய். ஆகவே குமரப்பா அனுப்பிய அறிக்கையை நீ பொருட்படுத்தாததை உன்மீது குறையாகக் கொள்ளவில்லை. அந்த அறிக்கை உனக்குப் பொருந்தாது. நீ சங்கத்தின் விருந்தாளியல்ல. நீ குடும்பத்தில் ஓர் உறுப்பினராய் வந்தாய்.

ஷம்மியிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள வேலைகளோடு, புளியின் மருந்துச் சத்தையும் உணவுச் சத்தையும் ஆராய்வதையும் ஒன்றாகச் சேர்த்துக்கொள். இதை நான் முன்பே உன்னிடம் குறிப்பிட்டேனோ என்னவோ? நான் அதைப் பெருமளவில் பயன்படுத்தி வருகின்றேன். ஆனால் இப்பகுதிகளில், அதைப் பயன்படுத்துவது பற்றிய ஐதீகம் ஒன்று உள்ளது. ஆகவே, கூடிய சீக்கிரம், அதைப் பற்றி மருத்துவ நிபுணர் கருத்தைப் பெற ஆவலாய் உள்ளேன்.

இங்கு நாளுக்கு நாள் வெப்பம் ஏறி வருகிறது. அது என்னைப் பாதிக்கவில்லை. தலைமேல் ஈரத்துணியை வைத்துக்கொள்வதால், உடம்பு முழுவதும் குளிர்ச்சியாகிறது.

அன்பு,

பாபு

## 17

வார்தா.
*1-4-'35.*

என் அன்புள்ள அமிருத்,

நீ இவ்வளவு ஏராளமான சர்க்கரையையும் பனைவெல்லத்தையும் அனுப்ப வேண்டுமென்று நான் விரும்பவில்லையே. நீ போகிற போக்கைப் பார்த்தால், எனக்குத் தேவையான பொருள்களனைத்தையும் தானம் செய்யும் தர்மப் பிரபு ஆகிவிடுவாய் போலிருக்கிறதே.

அளவுக்கு மீறி வேலை செய்யக்கூடாது என்று நீ எனக்கு விடுத்துள்ள எச்சரிக்கையைப் பார்த்தால், ''மருத்துவரே, முதலில் உம்மைக் குணமாக்கிக் கொள்ளும்,'' என்று மடக்கத் தோன்றுகிறது.

ரைஸ் ஜோன்ஸ் உனக்கு நினைவிருக்கிறதா? ஷம்மியிடமிருந்து என்னால் இயலுமளவு எல்லா வேலையையும் வாங்கிக் கொள்ள வேண்டுமென்று எனக்குக் கூறுகிறார்!! ரைஸ் சொல்வதற்கு முன்பே நான் அதைச் செய்து வருகிறேனல்லவா?

அன்பு,

பாபு

## 18

வார்தா,
*5—4—1935*

என் அன்புள்ள அமிருத்,

பனை வெல்லம், சர்க்கரை, இரண்டுமே நன்றாக இருக்கின்றன. சர்க்கரை பற்றிப் பா முடிவில் என்ன சொல்வாளோ, எனக்குத் தெரியாது. அவள் தன் கருத்தைக் கூறும் போது, உனக்குத் தெரிவிக்கின்றேன்.

பனைவெல்லம் பற்றியும் புளி பற்றியும் ஷம்மி அனுப்பியுள்ள குறிப்பு மிகவும் பயனுடையது. அதை நான் ஹரிஜனில் பிரசுரிக்கப் போகிறேன். அவர் மீது அளவுக்கு மீறிய வேலையை நான் சுமத்தும் போது, அவர், அல்லது அவர் சார்பில் நீ, என்னை எச்சரிக்க வேண்டும். நான் விடை காண விரும்பும் மருத்துவ, இரசாயனப் புதிர்கள் எத்தனையோ என்னிடம் இருக்கின்றன.

நீ எனக்கு அனுப்பிய குறிப்புகளைத் திருப்பி அனுப்பியுள்ளேன். அவை படிக்கச் சுவையாக இருந்தன. ஆனால் நமக்கேற்ற தீர்வை நாமே தேடி அறிய வேண்டும்.

உனக்குப் பழக்கமாகி விட்டபின், பளபளப்பான நார்த் துணிப் படுக்கை விரிப்புகளை விட, இலேசாக நெய்யப்பட்டுள்ள கதர் விரிப்புகளே நல்லதென்று நீ காண்பாய். நான் குறிப்பிடும் கதர் விரிப்புகளில் உள்ள மென்மை, அதற்கே சிறப்பாக உரியது. அது இலேசாகவும் காற்றோட்டமாகவும் இருக்கும். இது மிகை யல்ல. ஆப்பத்தின் அருமை சாப்பிட்டால் தெரியும். நீ சரியான ரகத் துணியை வாங்கு. உனக்கு அது கிடைக்காவிட்டால் என்னிடம் சொல்ல வேண்டும்.

இங்கிருந்து நல்ல பஞ்சுப் பட்டைகள் உனக்கு அனுப்பட்டுமா? நீ மறுமுறை வரும்போது, நான் உனக்குப் பஞ்சடிக்கச் சொல்லிக் கொடுக்க வேண்டும். அது மிக எளிது. பஞ்சுப் பட்டைகளை நீ பெற வேண்டிய தேவையில்லை; கூடாது. அவற்றை நீயே செய்து கொள்ள வேண்டும்.

இப்பொழுது அநேகமாக விடிந்து விட்டது. நான் இத்துடன் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

அன்பு,

பாபு

## 19

வார்தா,
*6—4—1935*

என் அன்புள்ள அமிருத்.

பனைவெல்லம் பற்றியும் சர்க்கரை பற்றியும் நீ சொல்வது எனக்கு விளங்குகிறது.

நான் இந்தூரிலிருந்து நேராகத் திரும்பி வருகிறேன். சுற்றுப் பயணம் பற்றிய செய்தி முழுவதும் தவறு. நான் பின்னர் குஜராத் துக்குச் செல்ல வேண்டியிருக்கும்.

நான் ஜூலையில் உன்னை வரவேற்க இங்கிருப்பேன் என்று எதிர்பார்க்கின்றேன்.

அன்பு,

பாபு

## 20

வார்தா,
*11—4—1935*

என் அன்புள்ள அமிருத்,

பஞ்சுப் பட்டைகளை ஆதம்பூரிலிருந்து பெறுவதில் உனக்குச் சிரமம் இருந்தாலோ, உனக்குக் கிடைப்பது அவ்வளவு நன்றாக இராவிடிலோ, என்னைக் கேட்கத் தயங்காதே.

'வாட்' நூல்களின் *16* தொகுதிகள் பற்றி நீ கவலைப்பட வேண்டாம். சுருக்க நூல் எனக்கு ஏற்கெனவே கிடைத்துவிட்டது. என் தேவைக்கு அது போதும். அத்தனை தொகுதிகளையும் எனக்கு வாங்கித் தருவதாகக் கல்கத்தாவிலிருந்து தகவல் வந்தது. வாங்க வேண்டாமென்று சொல்லி நிறுத்தியுள்ளேன். ஆகவே, தற்போதைக்கு நீ மற்ற நூல்களை எனக்காக வாங்கினால் போதும்.

நீ ஜூலையில் இங்கு வந்து திரும்பும்போது, பஞ்சடிப்பதில் தேர்ச்சி பெற்றவளாய் உன்னை அனுப்ப உறுதி கூறுகின்றேன். வில்லடிப்பதில் சிரமம் எதுவும் இருக்காது.

நான் மீண்டும் ஒருமுறை ஐரோப்பாவிற்குச் சென்றால், உன்னை என்னுடன் அழைத்துச் செல்வதைப் பெரிதும் விரும்புவேன். ஆனால் தற்போது நான் இந்தியாவை விட்டு வெளியே செல்லும் தோது இல்லை. தற்போது என் இதயம் கிராமத் தொண்டில் ஊன்றியுள்ளது.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

அகாதா[1] போன்ற நண்பர்களிடமிருந்து நமக்குக் கிடைக்கும் உதவியை நாம் நன்றியுணர்வுடன் ஏற்றுக் கொள்வோம்.

## 21

வார்தா,
*16—4—1935.*

என் அன்புள்ள அமிருத்,

இரு கடிதங்களுக்கு நான் பதில் எழுத வேண்டும்.

உன் சுற்றறிக்கை நன்றாக இருக்கின்றது. சுகாதாரம் போதிய முக்கியத்துவம் பெறவில்லை. குப்பை எதையும் எரிக்க வேண்டியதில்லை. அது ரூபாய் நோட்டை எரிப்பது போன்றதாகும். என் பொருளை ஷம்மி உனக்கு விளக்க முடியும். நீ இங்கு ஜூலையில் வரும்போது, இதைப் பற்றி இன்னும் அதிகம் தெரிந்து கொள்வாய். குமரப்பா ஆந்திராவுக்குச் சென்றுள்ளார். அவர் அடுத்த வாரம் திரும்புகிறார்.

ஷம்மிக்கே வலி வந்துள்ளது வேடிக்கையல்லவா? 'மருத்துவரே, உன்னைக் குணப்படுத்திக் கொள்.'

உன் நூல் வந்துள்ளது. நூற்க இப்பொழுதுதான் தொடங்கியவருக்கு, நூல் நன்றாகவே உள்ளது. இதே அவகாசத்தில், நீ சாதித்துள்ள அளவுக்கு என்னால் சாதித்திருக்க முடியாது. ஆனால் சராசரி மாணவரை விடக்கூட நான் மந்தமானவன்தான்.

---

1, அகாதா ஹாரிசன்: பாபுவிடம் விசுவாசம் கொண்ட ஆங்கிலேய சீடர். தம் கொள்கையையும் காங்கிரஸ் கொள்கையையும் பிரிட்டிஷாருக்கு விளக்கிச் சொல்ல, காந்திஜி அவரைப் பயன்படுத்தினர்.

இந்திய மக்களில் மிகவும் புறக்கணிக்கப்பட்டவர்களான ஹரிஜனப் பெண்கள் நலனுக்காக,—அதுவும் பட்டினி இப்போது எங்கு கடுமையாக இருக்கின்றதோ அங்கு—2 கினிகளும் பயன் படுத்தப்படுமென்று மிஸ் ரெய்னல்ட்ஸிடம் கூறு.

அகாதாவுக்கு நீ என்ன எழுத விரும்புகிருயோ, அதைத் தாராளமாக நீ எழுதலாம். நீ என்ன எழுதப் போகிருய் என்பது எனக்குத் தெரியும். ஆனுல் உனக்கு ஒன்று தெரியாமலிருக்கலாம். எங்கள் சங்கத் தலைவரும் செயலாளரும் இந்தியாவிலேயே திறமை மிக்க கணக்கர் வரிசையில் இடம் பெறுவார்கள். கணக்கு, பொது மக்களின் சொத்தாகும்.

ஆம்; அகாதா நம் இருவரிடையும் நெருங்கிய உறவு உண்டாக உதவியுள்ளார். ராஜாஜி போன்ற ஒருவரை இங்கிலாந்துக்கு அனுப்பி அகாதாவைத் திருப்தி செய்ய இயலவில்லையே என்பதில் எனக்கு வருத்தம் தான். எல்லாம் ஒரு மனிதர் செய்யும் வேலை என்பதை அவர் அறியவில்லை, ஸர். S. காங்கிரசைத் திருப்தி செய்யவே விரும்பவில்லை. அவர் வீழ்ச்சியை நோக்கி விரைந்து செல்கிருர். அவருடைய விருப்பத்தை நிறைவேற்ற எவ்வளவு கடுமையான வன்முறை பயன்படுத்தப்படுகிறது என்பதை அவர் அறியவில்லை. இத்தீதை எதிர்த்துப் போராட, அகிம்சை தான் வழியென்ருல்—உண்மையில் அதுதான் வழி—நமக்குப் பொறுமை வேண்டும். அப்பொழுது எல்லாம் இனிதே நிறைவேறும். இப்பொழுது எவரையும் அனுப்பிப் பயனில்லை என்பதை அகாதாவுக்கு நீ உணர்த்த வேண்டும்.

சில பஞ்சுப் பட்டைகளை உனக்கு அனுப்புகிறேன். அவை எவ்வாறு பயன்படுகின்றன என்று நீ சொல்ல வேண்டும்.

இம் முறைகளைப் பயின்று, பின்னர் மற்றவர்களுக்கும் சொல்லிக் கொடுக்கக் கூடிய ஒரு சிறுவனையோ, சிறுமியையோ நீ கண்டு பிடிக்க வேண்டும். நீ அனுப்புபவர் யாருக்கும் விரைவில் பயிற்சி அளித்து அனுப்ப முடியும்.

கடிதங்களுக்குப் பதில் எழுதுவதில் எஞ்சியிருந்ததைத் தீர்த்து விட்டேன். என் பேசா நோன்பை நன்கு ரசித்து வருகின்றேன். அதை வெள்ளிக்கிழமை நிறுத்துவதை நினைத்தாலே, அச்சமாக இருக்கிறது. விரைவில் மீண்டும் வேலையில் பாக்கி விழுந்து விடும்.

ஆசிரமப் பெண்களை நீ கவர்ந்து விட்டாய். அவர்கள் அடிக்கடி உன்னைப் பற்றி விசாரிக்கிருர்கள்.

அன்பு,

பாபு

இத்துடன் R-இன் கடிதம்.

## 22

வார்தா,
*18-4-1935*

என் அன்புள்ள அமிருத்,

சாலார் தேவராஜ் குடும்பத்தினருக்கு என் அனுதாபங்களைத் தெரிவி. ஆம்; அவரைச் சந்திக்கும் பெரு வாய்ப்பை நான் பெற்றிருந்தேன். அவர் தனி மனிதரல்ல; அவரே ஒரு பெரு நிறுவனம்,

27ந் தேதியல்ல, தள்ளிப் போனால் 25ந் தேதியே நான் திரும்புகிறேன்.

சீக்கிரமே ஷம்மி தம் சுரத்திலிருந்து குணமடைவாரென்று நம்புகிறேன். பஞ்சுப் பட்டைகள் நேற்று உனக்கு அனுப்பப்பட்டன.

உங்கள் இருவருக்கும் அன்பு,
பாபு

## 23

வார்தா,
*26—4—'1935*

என் அன்புள்ள அமிருத்,

உன் கடிதம் கிடைத்தது. நீ எவ்வளவு சீக்கிரம் சிம்லாவுக்குப் போகிருயோ, அவ்வளவுக்கு நல்லது. அங்கிருந்து என்ன வேலை செய்ய முடியுமோ, அதைச் செய்யலாம். உன் வலிமையின் எல்லையை உணர்ந்து கொள்வது நல்லது. உங்கள் இருவருக்கும் இடமாற்றம் அவசியம் என்று தோன்றுகிறது.

உன் நூல் பயன்படுத்தப்படும். இப்பொழுது நீ நூற்கும் வேகத்தில் நீ பல மாதங்கள் நூற்ருல் தான், பாவுக்கு ஒரு புடவையும் எனக்கு இடுப்புக்கு ஒரு துண்டும் கிடைக்க முடியும். ஆனல் இப்பொழுது அது முக்கியமல்ல. நீ இங்கு இரண்டாவது பயிற்சி பெற்றபின் இவையனைத்தும் தானுக வரும். நூற்பு வேலையின் எல்லா முறைகளையும் தெரிந்த ஒருவர் ஜலந்தரில் உனக்குக் கிடைக்காமல் போனது, பெரும் குறைதான். நினைத்துப் பார்த்தால், பண்பட்ட வகுப்பினர் என்று சொல்லப்படுவோரிடையே நூற்புப் பழக்கம் மிகக் குறைவாகவே பரவியுள்ளது.

பிழைப்புக்கு ஊதியத்தைச் சம்பாதிப்பதற்குப் போதுமான ஆற்றல் ஹரிஜனங்களுக்கு உண்டு. ஆனல் தொழிலாளர் என்ற முறையில், மற்றவர்களைப் போல் அவ்வளவு எளிதாக வேலை வாய்ப்புகள் அவர்களுக்குக் கிடைப்பதில்லை. கைவினைக் கலைஞர்கள் என்ற முறையில் அவர்கள் உற்பத்தி செய்யும் பொருட்களை வாங்குவதற்குப் பலர் முன்வருவதில்லை. ஹரிஜனங்களிடையே வேலை

செய்ய தலீப் சிங் முனையும் போது, அவர் இந்த உண்மைகளை உணர்வார். தோலை அவர்கள் பதனிடும் முறையில் திருத்தங்கள் செய்ய முடியும், செய்வது அவசியம் கூட என்பதில் ஐயமில்லை. தலீப் சிங் இந்த வேலையை மேற்கொண்டபின், இந்த முன்னேற்றங்கள் ஏற்படுமென்று எதிர்பார்க்கலாம். நம் நிறுவனத்தின் பிரதிநிதியாக அவர் பணியாற்ற வேண்டியதில்லை. அவர் சுயேச்சையாகப் பணியாற்றி, அவருக்கு வேண்டிய தொழில் நுட்ப உதவியை, நம் ஆற்றலுக்கு எட்டிய வரை, நம்மிடமிருந்து பெற்றுக் கொள்ளலாம்.

இந்தூரில் நம் வேலையில் மழை குறுக்கிடத் தான் செய்தது; ஆனால் அதிகமில்லை. கிராமக் கைவினைப் பொருட்களின் கண்காட்சியை அது பாழாக்கிவிட்டது; ஆனால் அக் கண்காட்சி, துணை நிகழ்ச்சியாகத் தான் நடந்தது. பெண்கள் கூட்டமும் நன்றாகவே நடந்தது. ஆயிரக்கணக்கான பெண்கள் கூட்டத்திற்கு வந்திருந்தனர்; அவர்களிற் பலர் ஒரு கூட்டத்தில் கலந்து கொள்வது, அவர்கள் வாழ்க்கையில் இதுதான் முதன் முறையாக இருந்திருக்கும்.

அன்பு, உன்
பாபு

கடிதத்தைத் திருப்பி அனுப்பியுள்ளேன்.

## 24

வார்தா,
*1-5-1935*

என் அன்புள்ள அமிருத்,

நான் உனக்கு எழுதிய பின் தான், ஷம்மியின் கடிதம் எனக்குக் கிடைத்தது. அவர் எனக்குத் தந்துள்ள தகவலை மிக நல்ல முறையில் பயன்படுத்தப் போகிறேன். புளியங்கொட்டை பற்றியும், உண்ணக்கூடிய கனிகளின் விதைகள் பற்றியும், அவர் இத்தகைய ஆராய்ச்சி நடத்துவதை நான் பெரிதும் விரும்புவேன்.

தனியாகத் தயாரிக்கப்பட்டுள்ள கடித மேலுறைகளையும், எழுதும் தாளையும் உனக்குச் சீக்கிரம் அனுப்பப் போகிறேன்.

உனக்குப் பஞ்சுப் பட்டைகள் தேவையாயிருக்கும் போது, நீ எனக்கு முன்னதாகவே சொல்ல வேண்டும்.

ஆம்; முதுபெரு மகாராணியைப் பார்த்தோம்; ஆனால் அவருடன் பேசும் வாய்ப்பு கிட்டவில்லை.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

## 25

வார்தா,
13—5—1935

என் அன்புள்ள அமிருத்,

உன் கடிதங்களை ஆண்ட்ரூஸிடம் காட்டினேன். இம்மாதம் 25ந் தேதிக்கு முன் அவர் நீ இருக்குமிடத்திற்கு வருவாரென்று தோன்றவில்லை. செரசோல்,[1] வில்கின்சன் ஆகியோர் 16 ந் தேதி இங்கு வருவார்கள். 23ந் தேதி அவர்கள் ஐரோப்பாவுக்குக் கப்பலில் செல்வார்கள்.

நீ விட்டுச் சென்ற இரு ரகங்களிலும், மேலும் கடித மேலுறைகளும் எழுதும் தாளும் தயாரிக்க ஏற்பாடு செய்துள்ளேன். வேறெந்த ரகமும் உனக்கு வேண்டுமென்றால், மாதிரிப் பொருள்களைத் தயவு செய்து அனுப்பு. நீ கேட்டால் ஒழிய நான் உனக்கு மேலும் அனுப்ப மாட்டேன். உனக்காக அவற்றைச் சேர்த்து வைத்திருப்பேன். இப்பொழுது அனுப்பப்பட்ட கட்டுக்கு நீ இங்கு வரும்போது விலை கொடுத்து விடலாம்.

இன்னும் சில நாட்களில் நிறைய பஞ்சுப் பட்டைகளை உனக்கு அனுப்ப முடியுமென்று எதிர்பார்க்கின்றேன்.

அன்பு,
பாபு

## 26

வார்தா,
17—5—1935

என் அன்புள்ள அமிருத்,

நீ எழுதியுள்ள தாள் பட்டுப்போல் பளபளப்பாகத் தோன்றுகிறது.

தலீப் சிங்கின் கடிதம் அருமையாக இருக்கிறது.

எங்கள் குடும்பத்தில் இப்பொழுது நிறையப் பேர் இருக்கின்றனர். ஆண்ட்ரூஸ், செரசோல், வில்கின்ஸன், மல்கானி, திருமதி மல்கானி, அவர்கள் நண்பர், அவர்கள் மகள், இரு மாணவர்கள் ஆகியோரின் அருமையான சேர்க்கையால் குடும்பம் பெருகியுள்ளது. இங்கு எங்களிடம் உள்ள தட்டுகள், கிண்ணங்கள், ஆகியவை குறைவு என்பது உனக்கு நினைவிருக்கலாம். ஆனால் எப்படியோ சமாளித்துக் கொண்டு மகிழ்ச்சியுடன் இருக்கின்றோம்.

ஆம்; இங்கு வெப்பம் எங்களை மிகவும் வருத்துகிறது.

---

1. பியர் செரசோல் ஸ்விஸ் நாட்டைச் சேர்ந்தவர்; போரில் கலந்து கொள்வது தம் மனச் சாட்சிக்கு விரோதமென்ற கொள்கை உடையவர்; சர்வ தேச சேவா நிலயத்தை நிறுவியவர்.

உனக்கு அனுப்பியிருந்த கடித மேலுறைகளில் தடவியுள்ள பசை, இங்கு தோட்டத்தில் உள்ள மரத்தின் பட்டையிலிருந்து எடுக்கப்பட்டது. அடுத்த கட்டுக்கு என்ன செய்ய முடியுமென்று கவனிக்கின்றேன்.

அன்பு,

பாபு

## 27

வார்தா,
*20-5-1935*

என் அன்புள்ள அமிருத்,

சென்ற ஐந்து நாட்களாக என்னால் உனக்கு எழுத இயலவில்லை. விருந்தாளிகளை உபசரிப்பதிலேயே நேரம் முழுவதும் செலவாகியது.

சார்லியின் தந்தி இப்பொழுது வந்துள்ளது. நீ எவ்வளவு தெய்வாதீனமாகத் தப்பியுள்ளாய் என்பதை, உன் கடிதம் வரும் வரை எங்களில் ஒருவர் கூட உணரவில்லை. நீ இதுவரை செய்துள்ள சேவையைவிட இன்னும் சிறந்த சேவை செய்ய நீ விதியினால் தேர்ந்தெடுக்கப்பட்டவள். மரணத்தில் முடிந்திருக்கக் கூடிய ஒரு விபத்திலிருந்து உன்னை இறைவன் காத்தருளியதிலிருந்து, நாம் விளங்கிக் கொள்ளக் கூடிய பொருள் அதுதானென்று நான் எண்ணுகிறேன். ஒவ்வொரு கணப்பொழுதையும் நாம் போற்ற வேண்டுமென்பதே அந்த விபத்தின் படிப்பினை. அவரே நம்மை உய்விப்பார்.

உனக்காக எழுதும் தாளும் பஞ்சுப் பட்டையும் தயாரிக்க ஏற்பாடு செய்துள்ளேன். அவை சீக்கிரமே உனக்கு அனுப்பப்படும்.

உனக்குப் பூரியை நெடுநாள் தெரியுமென்று நினைக்கின்றேன். அவர் நம்பகமானவரென்று நீ கண்டிருந்தால், உனக்கு அவர் பேருதவியாக இருக்க முடியும். அங்கு அவர் என்ன செய்து கொண்டிருக்கிறார்?

'பல்சா' என்ற பழ மரத்தைப்பற்றி ஷம்மிக்குத் தெரியுமா? கடலை போன்ற அளவுள்ள, சதையால் மூடப்பட்ட விதைகளுள்ள பழம். அப்பழத்தின் சதையையும் விதையையும் ஆராய்ந்து, அவற்றின் சத்துபற்றி அவர் எனக்குச் சொல்லமுடியுமா? தாவரவியலில் அதற்கு வழங்கும் பெயரென்ன? எளிதாகக் கிடைக்கும் பழங்கள், இலைகள் ஆகியவற்றின் உணவுச் சத்தினை ஆராய்ந்தறிய விரும்புகின்றேன். அவற்றால் நிறைய பலன் கிட்டுமென்று நான் கருதுகின்றேன். இந்தத் துறையில் ஷம்மி தேர்ச்சி பெறவேண்டுமென விரும்புகிறேன். பல நிபுணர்களுடன் கலந்து யோசிக்க அவருக்குள்ள வாய்ப்பு, மிகச் சிலருக்கே கிடைக்கும்.

உங்கள் மூவருக்கும் அன்பு,

பாபு

## 28

போர்சாத்,
*24—5—'35.*

என் அன்புள்ள அமிருத்,

*20*ந் தேதி நீ கடிதம் எழுதினபோதுகூட, விபத்தின் விளைவு களால் இன்னும் பாதிக்கப்பட்டிருந்தாய் என்று காண்கிறேன். இப்பொழுது முற்றிலும் குணமடைந்து விட்டாயென்று நம்பு கிறேன்.

கிராம மக்களுடன் நீ தொடர்பு ஏற்படுத்தியுள்ளது குறித்து மகிழ்கிறேன். அவர்கள் குடும்பநிலையை அறியவேண்டும்; அவர்கள் நம் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் போலவே பாவித்து, அவர்களை நன்கு அறிந்துகொள்ள வேண்டும். அவர்கள் ஒழுக்கத்தைப்பற்றி நாம் இப்பொழுது கவலைப்படவேண்டாம்; அது அறியாமையால் எழுந்த குறை. குற்றமுள்ள நெஞ்சு அவர்களை உறுத்துவதில்லை. ஆகவே அவர்களுடன் நாம் தொடர்பு ஏற்படுத்திக் கொண்டால், அவர்கள் பழக்கங்களில் சிலவற்றை விட்டுக் கொடுக்கச் செய்யும் முயற்சி எளியதாகவும் பலனுள்ளதாகவும் இருக்கும்.

இங்கு வெப்பமாகத்தான் இருக்கிறது; ஆனால் அவ்வளவு கடுமையான வெப்பமில்லை.

தனியாகச் சார்லிக்கு எழுதவில்லை.

உங்கள் மூவருக்கும் என் அன்பு,

பாபு

## 29

வார்தா,
*26—5—'35.*

என் அன்புள்ள அமிருத்,

நீ நூற்ற நூல் வந்துள்ளது. அது மோசமில்லை. நல்ல முறுக் குள்ள இழைகளை நூற்க நீ இப்பொழுது கற்றுக்கொள்ள வேண் டும். இல்லாவிடில், நூலில் பலமிருக்காது. சிறு சவரக் கத்திகள் நிறைய அனுப்பியுள்ளாய் என்று காண்கிறேன். இவற்றில் சில புத்தம் புதிதானவை. நூலை அனுப்பச் செலவுசெய்த அஞ்சல் கட்டணத்தை அவை ஈடு செய்துவிடும். இனி அஞ்சல் கட்டு அனுப்புவதற்குள், நீ கணிசமான அளவு பொருட்களைச் சேர்த்துக் கொண்டு அனுப்பவேண்டும்.

கடித மேலுறைகளும் எழுதும் தாளும் கொண்ட கட்டு உனக்கு வந்து சேர்ந்ததா? காகிதம் தயாரிக்கும் வேலையை நிபுணர் இன்ன மும் தொடங்கவில்லை. இந்தூரிலிருந்து கொண்டு வரப்பட்ட

பொருள்களைக் கொண்டு எழுதும் தாள் முதலியவற்றைத் தயாரிக்கும் வேலையை அவருக்குக் கொடுத்தேன். அவர் தாள் செய்யத் தொடங்கியவுடன் உனக்குத் தெரிவிப்பேன்.

ஆம், சிம்லாவில் சந்தைபற்றிச் சொல்லத் தொடங்கினேன். நீ நேரில் அங்கு சென்று, உள்ளூர்க் காய்கறிகளையும் பழங்களையும் ஆராய்ந்து, ஆரோக்கியத்திற்கு அவை ஏற்றவையா என்பதைக் காண்பதுடன், தங்கள் பொருட்களை விற்கத் தொலைவில் மலைகளிலிருந்து வரும் ஏழைகளின் நிலைமையையும் அறிய வேண்டுமென்று நான் உனக்கு யோசனை கூறினேன். சிம்லாவில் கூடுபவர்களுக்குக் காகிதம், கதர் போன்றவற்றையும் நீ விற்கலாம்.

மலைத்தென்றலின் நற்பயனை நீங்கள் இருவரும் ஏற்கனவே அனுபவிக்கத் தொடங்கி விட்டீர்களென்று நம்புகிறேன்.

இவ்வாரத்தில் ஆண்ட்ரூஸ் இங்கு வரவேண்டும்.

அன்பு,

பாபு

## 30

போர்சாத்,
2—6—'35.

என் அன்புள்ள அமிருத்,

2ந் தேதிக்குப் பதிலாக 3ந் தேதி நான் வார்தாவிற்குப் போய்ச் சேருவேன். அங்கு போனபின்பு நான் உனக்கு இன்னும் கொஞ்சம் எழுதும் தாளும் கடித மேலுறைகளும் அனுப்புவேன்.

விபத்தின் விளைவாக ஏற்பட்ட தீங்குகள் அனைத்தும் நீங்கி விட்டன என்று நம்புகிறேன்.

உன் பஞ்சுப் பட்டைகள் பற்றிய நிலைமை என்ன?

ஆம்; கம்பட்டா தம்பதிகளை நான் நன்கறிவேன்.[1] அவர்கள் இருவரும் சிறந்த ஊழியர்கள். அவர்களைப்பற்றிச் சார்லியின் கடிதத்தை ஆவலுடன் எதிர்பார்க்கிறேன். அவர்கள் முகவரியை எனக்கு அனுப்பு; இத்துடன் வரும் கடிதத்தை அவர்களிடம் கொடுக்க ஏற்பாடு செய் அல்லது அஞ்சலில் அனுப்பிவிடு.

வார்தா இப்பொழுது உலைக்களம்போல் கொதிக்கிறதென்று மீரா கூறுகிருள். அத்துடன் ஒப்பிட்டால், பம்பாய் எவ்வளவோ தேவலை.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

கான்சாகிப் தம் அன்பைத் தெரிவிக்கிருரென்று சார்லியிடம் கூறு.

---

1. பம்பாயில் பார்சி வகுப்பைச் சேர்ந்த டாக்டர், திருமதி. கம்பட்டா தம்பதிகள்.

## 31

வார்தா,
7-6-'35

என் அன்புள்ள அமிருத்,

உன் உடல் ஏன் தேய்கிறது என்பது எனக்குப் புரிகிறது. எதையும் இம்மியும் குறையின்றி செய்து முடிப்பதில் நீ பிடிவாதம் கொள்கிறாய். மெய்யறிவு நாடுவோருக்கு அதுதான் சரியான வழி. ஆனால் தன்னால் தாங்கமுடியாத அளவுக்குச் சுமையை எவரும் ஏற்றுக்கொள்ள நியாயமில்லை. என் இயக்கங்களில் நீ பங்கு கொள்ள அனுமதித்ததே சரியா என்று நான் சந்தேகப்படுகின்றேன். இறைவன் உன்னைக்காப்பார். சிம்லாவில் சமூக நிகழ்ச்சிகளில் பங்கு கொள்வதை நீ குறைத்துக்கொள்வது மிக அவசியம். நீ பங்கு கொள்ளும் இயக்கத்திற்கு நீ செய்யக்கூடிய சேவைக்கான வாய்ப்பு அதனால் ஓரளவு குறைந்தாலும் பரவாயில்லை. பல சமூக நிகழ்ச்சிகளில் பங்குகொள்வதைக் குறைத்து, நேரத்தையும் ஆற்றலையும் சேமித்துவைப்பதால், பாமர மக்கள் நலனைக் குறிக்கோளாகக் கொண்ட எந்த இயக்கமும் பாதிக்கப்படாது.

கதரைப்பற்றிக் குறிப்பிட்டுள்ளாய். பாஞ்சாலக் கடைகள் அத்தனையும் நட்டத்தில் நடக்கவில்லை. சிம்லா கடை எப்பொழுதுமே நட்டத்தில்தான் நடந்துள்ளது. நிர்வாகத்தில் குறைகள் இருக்கின்றன என்பது உண்மைதான். ஆனால் சிம்லா வாசிகள் கதரை இழிவாகக் கருதுகின்றனர்; அதை அணிய அஞ்சும் பிரிவினரும் உண்டு. அதை அணிபவர்கள் முத்திரைபெற்ற மனிதர்களாகி விடுகின்றனர். மாலில் சுதேசிக் கடை வைக்கும் உன் யோசனை கவர்ச்சிகரமானது தான்; ஆனால் அதைச் செயல்படுத்துவதில் ஆபத்துகள் உள்ளன. சுதேசிப் பொருட்கள் எவ்வளவு நன்றாக இருந்தாலும், மற்றவற்றுடன் ஒப்பிட்டுப் பார்க்கும்போது அவை மிஞ்சமாட்டா. பகட்டான கவர்ச்சி ஏற்படுத்த முயல்வதில் பலனுண்டா என்றும் நான் ஐயப்படுகின்றேன். கலை, பகட்டு, இவையிரண்டுக்கும் இடையே நான் வேறுபாடு காண்கிறேன். கவர்ச்சியாகக் கடைகளில் விளம்பரம் செய்யப்படும் பொருட்கள் எல்லாம் கலையழகு கொண்டவையல்ல. உண்மையான கலையழகு கொண்ட பொருட்களை உருவாக்கி, சிம்லாவில் மாலிலுள்ள பகட்டான பொருள்கள் பக்கத்தில் வைக்க வேண்டுமென்ற ஆசை பாராட்டுதற்குரியதெனினும், பணச்செலவு அதிகமாகும். ஆகவே இன்னும் கொஞ்சகாலம் அதை அடக்கி வைப்பது நல்லது. இப்பொழுதுள்ள கடையை வைத்தே என்ன செய்ய முடியுமோ அதைச் செய். சில மாறுதல்கள் செய்து, இப்பொழுதிருப்பதை விடச் சிறப்பாக ஏற்பாடு செய். அதில் சுதேசிப் பொருட்கள் இருக்கட்டும். உன் கலையுணர்வுக்கு ஏற்ப அதைச் சோதனை செய்து, அனுபவம் பெறு. அதற்குப் பின், அதிக செலவில் நல்ல இடத்தில் கடை அமைப்பதுபற்றி யோசிக்கலாம். ஜூலை அல்லது ஆகஸ்ட் மாதத்தில் நீ வரும்போது, நாம் கலந்து ஆலோசிக்க வேண்டிய பொருள்களில்

இதையும் ஒன்ருகக் குறித்துக்கொள்ள வேண்டும். எவ்வளவு சீக்கிரம் நீ வருகிருயோ, அவ்வளவுக்கு நல்லது.

குவெட்டா விபத்து குறித்து என் கருத்துக்களையும் நான் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளையும் பற்றிப் படிப்பாய். சார்லிக்கு நான் எழுதியுள்ள கடிதத்தைப் படி. நான் மீண்டும் நடக்கத் தொடங்கிய பின் அவர் என்னை ஒரிஸ்ஸாவிலாவது, அது போன்ற வேறிடத்திலாவது தேடவேண்டும். அதற்கிடையில் மலையில் 12 மைல் நடப்பது நல்ல தொடக்கம் என்று ஏற்றுக் கொள்கிறேன்.

பல்ஸாப் பழ ஆராய்ச்சி முடிவுகளுக்காக நான் காத்திருக்கின்றேன்.

எழுதும் தாளும், கடித மேலுறைகளும் அநேகமாகத் தயாராகி விட்டன. சில பஞ்சுப் பட்டைகளும் தயாராக உள்ளன. முதலில் கணிசமான அளவு சேர்க்க விரும்புகிறேன். பொருட்களை அனுப்பும் நேரத்தில், ஒவ்வொரு பொருளின் அடக்க விலையைக் குறித்து உனக்கு அனுப்ப உத்தேசித்துள்ளேன். தாள், பஞ்சுப் பட்டை இவற்றில் ஏற்கெனவே உனக்கு அனுப்பியதுபற்றி நான் கணக்கு வைத்துக்கொள்ளவில்லை. நீயும் அதுபற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை.

அன்பு,

பாபு

## 32

வார்தா,
13-6-35.

என் அன்புள்ள அமிருத்,

உன் கடிதத்தைப் படித்ததும் என் கண்கள் கலங்கிவிட்டன, சுயநலமற்று, விசுவாசத்துடன் ஆற்றப்படும் இச்சிறந்த சேவைக்கு ஆண்டவன் தம் ஆசியை அருள்வார் என்பது நிச்சயம்.

என்னல் குவெட்டாவுக்குச் செல்ல முடிந்திருந்தால், உங்கள் இருவரையும் மகிழ்ச்சியுடன் அழைத்துச் சென்றிருப்பேன். ஆனல் அது இயலவில்லை.

நல்லது; கதர்க் கடையை மாலுக்கு மாற்றுவது அவசியம்தான் என்ற கருத்துபற்றி என்னுடன் வாதாடி அதை நான் ஏற்றுக் கொள்ளும்படி செய்ய நீ முயலலாம்.

நான் இடது கையால் எழுதிக்கொண்டிருப்பதால், அதிகம் எழுதுவதற்கில்லை. வலது கைக்கு ஓய்வு தேவை.

அன்பு,

பாபு

## 33

வார்தா,
*19—6—'35*

திருத்தப்படாதது

என் அன்புள்ள அமிருத்.

ஒன்றும் இயலாத நிலையில் இருக்கும் நிர்ப்பந்தம் ஏற்பட்டால், அதை வெளிப்படையாக ஒத்துக்கொள்வது, ஒருவரைக் கோழையாக்கிவிடாது ; மாருக வீரம் வளர்வதற்கு வகை செய்வதாகும். நீ சொன்னதை அப்படியே ஏற்றுக்கொண்டு நான் இக் கடிதத்தைச் சொல்லி எழுத வைக்கின்றேன். இடது கையால் எழுதுவது எனக்கு மகிழ்ச்சியைத் தருகிறது ; ஆனுல் வலது கையால் எழுதுவதுபோல், அவ்வளவு எளிதாகவும் விரைவாகவும் என்னுல் எழுத முடிவதில்லை.

உன் கடிதத்தைச் சார்லி கொடுத்துவிட்டார். புகைப்படப் பிரதிகளில் கையெழுத்திட்டு, நீ சொன்னதுபோல் திருப்பி அனுப்புகின்றேன்.

கிருஷ்ணலால் கோஸ்வாமியை எனக்கு நினைவில்லை. நான் இல்லாதபோது அவர் ஆசிரமத்தில் இருந்திருக்கக்கூடும். ஆசிரமத்தில் அவரைப் பார்த்ததாகத் தெளிவாக நினைவிருப்பதாகச் சார்லி கூறுகிருர். மகாதேவுக்கு நினைவில்லை. சர்க்காவைப்பற்றி அவர் உன்னிடம் சொன்னது சரியென்றுதான் தோன்றுகிறது; நூற்புக் கலைபற்றி அவருக்கு ஓரளவு தெரியுமென்று அது காட்டுகிறது. சார்லியுடன் பஞ்சுப்பட்டைகள் அனுப்பியுள்ளேன். அவை எப்படி இருக்கின்றன என்று சொல். கதிர்களை உள்ளூரிலேயே ஏற்பாடு செய்யவேண்டும். நல்ல எஃகு கிடைக்காவிட்டால், இரும்பாலேயே செய்து கொள்ளலாம். கதிர்கள் சரியாகப் பொருந்தும் வரை, எதனுல் செய்யப்பட்டவை என்பதைப்பற்றிக் கவலையில்லை. உறுதியாயில்லாத கதிர்கூட, நன்ருகத்தான் நூற்கும்—சரியாகப் பொருந்துகிறவரை. ஆனுல் அனுபவமற்றவர் கையில், உறுதியில்லாத கதிர், எஃகுக் கதிரைவிடப் பலமுறை தவறக்கூடும்.

*450* நோட்டுத் தாள்களையும் அதே எண்ணிக்கைக் கடித மேலுறைகளையும், ஒன்பது கட்டுகளில் கட்டி உனக்கு அனுப்புகின்றேன். ஐம்பது ஐம்பது தாள்களை நன்ருக அடுக்கி ஒழுங்குபடுத்தி, ஒரு வெற்றுத்தாளில்—கையால் செய்யப்பட்ட தாளில்தான்—அழகாகக் கட்டி அனுப்ப உத்தேசித்திருந்தேன். கடைச் சாளரங்களில் கவர்ச்சிகரமாய் அவற்றை வைக்க ஏற்பாடு செய்வதாக நீ எழுதியிருந்த கடிதம் அப்பொழுது வந்ததால், நான் அவ்வாறு செய்யவில்லை. விலையைச் சொல்லுமாறு நீ கேட்டிருக்கிருய். சார்லியுடன் இப்பொழுது உனக்கு அனுப்பப்படும் கட்டையும் முந்திய கட்டையும் தயாரிக்கப் பயன்பட்ட தாளுக்கு எனக்கு *12* ரூபாய் செலவாயிற்று. என்னுல் சேமித்து வைக்கப்பட்ட சிறுசிறு துண்டுக் காகிதங்களையும் நான்

பயன்படுத்தினேன். இன்னும் 150 தாள்கள் என்னிடம் இருக்கின்றன. இவற்றைத் தயாரிப்பதற்கான உழைப்புக் கூலியை நான் கணக்கெடுக்கவில்லை. கடித மேலுறைகளைச் செய்வதற்காகத் தயாரிக்கப்பட்ட பொருள்களின் விலையையும் நான் இதில் சேர்க்கவில்லை. அவற்றின் விலை சொற்பமாகத்தானிருக்கும். உழைப்பின் மதிப்பை இப்பொழுது நிர்ணயிக்க முடியாது. இரண்டு, மூன்று ஊழியர்கள் சில நாட்களாக அந்த வேலையில் ஈடுபட்டிருந்தனர். இந்த வேலைக்கு அவர்கள் செலவிட்ட நேரத்தைக் குறித்துவைக்க அவர்களிடம் சொல்லவில்லை. நோட்டுத் தாளுக்கும் கடிதமேலுறைகளுக்கும் நீயே விலையை நிர்ணயித்துக் கொள்வதற்கு வேண்டிய தகவல்களை இப்பொழுது உனக்குத் தந்துள்ளேன். குறைந்தது 12 ரூபாய் விலைக்காகிலும் நீ அவற்றை விற்கவேண்டும். ஆனால் அவற்றை வைத்து நீ என்ன செய்ய விரும்புகிறாயோ, அவ்வாறே செய்யலாம். இந்தப் பஞ்சுப் பட்டைகள் பற்றி நான் ஒன்றும் சொல்ல முடியாது. நான் அவற்றிற்காகச் செலவு செய்தது, கதர்க் கடையிலிருந்து நான் வாங்கிய பஞ்சுக்குக் கொடுத்த விலைதான். ஆனால் உனக்கு என்ன அனுப்பப்பட்டது என்று நான் கணக்கு வைத்துக் கொள்ளவில்லை. மூலப்பொருட்களுக்கு, ஒன்றரை ரூபாய்க்குமேல் செலவாகியிருக்காது.

குவெட்டா நிவாரணம் பொறுத்தவரை, நீ வசூல் செய்யும் தொகையைத் தற்போதைக்குத் தனியாக ஒதுக்கி வைத்திரு. பின்னர் நான் உனக்குத் தகுந்த ஆலோசனை கூறமுடியும். நிவாரண வேலைகள் சிறிது காலத்துக்கு நீடிக்கும். நிவாரண வேலை எந்த வகையில் உருவாகவேண்டும் என்பதுபற்றி உனக்குத் தெளிவாகத் தெரியாதவரை, நான் கூறும் இந்த யோசனைக்குக் கட்டுப்பட வேண்டும். உன் நன்கொடையை எந்த வழியில் பயன்படுத்த நீ விரும்புவாய் என்பது உனக்குத் தெளிவாகத் தெரிந்தவுடன், நீ அவ்வாறு செய்யத் தயங்கக்கூடாது.

ஒரு குறிக்கோளுக்காக நீ நிதி திரட்ட வேண்டுமென்று கேட்டுக்கொள்ள நான் தயங்கமாட்டேன்; அது தான் ஹரிஜன கிணறுகள் நிதி. வரும் ஹரிஜன் இதழில் அதைப் பற்றி நான் என்ன சொல்லியுள்ளேன் என்பதை நீ காண வேண்டும்.

புகைப்படங்களைப் பொறுத்தவரை, நீ என்ன செய்ய வேண்டுமென்று எண்ணுகிறாயோ, அவ்வாறே செய். அவை உன் சொத்து. பதில் எழுத எஞ்சியிருந்த உன்னிரு கடிதங்களில் நீ கேட்டிருந்த கேள்விகள் அனைத்துக்கும் நான் இப்பொழுது பதில் சொல்லி விட்டேன் என்று எண்ணுகிறேன். வலது கையில் கோளாறு எதுவுமில்லை. போதிய ஓய்வெடுத்துக் கொண்டால், அது சரியாகிவிடும்.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

# 34

வார்தா,
*4-7-1935*

என் அன்புள்ள அமிருத்,

உன் கடிதம் கிடைத்தது. நீ எனக்கு எழுதும் கடிதங்கள் காதற் கடிதங்கள்; சரளமாகவும் வேகமாகவும் எழுதும் ஆற்றலுடைய உனக்குக் கூட, ஒவ்வொரு முறையும் ஒரு மணி நேரத்துக்குக் குறையாமல் செலவாகும் என்றெண்ணுகின்றேன். நாம் இப்பொழுது ஒருவரையொருவர் நன்கறிந்து கொண்டோம்; ஆகவே இனி, எழுதுவதற்கு அவசியம் ஏற்படும்போது மட்டும் எழுதி, நீ உன் நேரத்தை மிச்சப்படுத்தலாம். உன் நீண்ட கடிதங்களை நான் அரும் பொருளாக, செல்வமாகப் போற்றுகின்றேன்; இருந்த போதிலும் முக்கிய நிகழ்ச்சிகளைக் குறித்து அஞ்சலட்டை அனுப்பினுல் கூட நான் திருப்தி அடைவேன்.

புனுவில் உனக்கு உன் வேலை காத்திருக்கிறது. நீ வழியில் வார்தாவுக்கு வருவது, புனுவுக்குப் போகும் போதா, திரும்பி வரும் போதா, இரு முறையுமா? முன்பை விட இப்பொழுது பெரிதும் குளிர்ச்சியாக உள்ளது.

உன் கடிதத்தைக் குமரப்பாவுக்கும் படித்துக் காட்டினேன். ரிக்ஷா இழுப்பவர்களுடன் நீ தொடர்பு ஏற்படுத்திக் கொள்ள முடியுமானுல், அது மிகப் பெரிய சாதனையாகும். அவர்கள் எளிதில் நூற்று, நெசவு செய்து, தங்கள் சொற்ப வருவாயைப் பெருக்கிக் கொள்ளலாம்.

கிருஷ்ணராவ் உன்னை விட்டுச் செல்வது குறித்து வருந்துகிறேன். இறுதியில் நீ உன் சொந்த பலத்தையே நம்பி நிற்பது தான் நல்லது. வில்லடிப்பதற்கு உன் கைகளில் போதிய பலமில்லாமல் போனுலும், பஞ்சடிக்கும் முறையை நீ தெரிந்து வைத்திருப்பது நல்லது. அப்பொழுது மற்றவர்கள் பஞ்சடிப்பதை உன்னுல் ஒழுங்கு படுத்தவும் கண்காணிக்கவும் முடியும். உன் பெண்கள் நூற்கக் கற்றுக்கொண்டால், அவர்கள் பஞ்சடிக்கவும் கற்றுக் கொள்ள வேண்டுமென்று நீ வற்புறுத்த வேண்டும். அதைக் கற்றுக்கொள்ளாவிடில், அவர்கள் ஒழுங்காக நூற்க மாட்டார்கள். பஞ்சுப் பட்டைகளுக்காக மற்றவர்களை நம்பியிருப்பது நல்லதல்ல. நூற்புக் கழகம் போன்றதை அவர்கள் அமைத்துக் கொண்டால், வெவ்வேறு வேலைகளையும் பங்கு போட்டுக் கொள்ளலாம். சிலர் கொட்டை எடுக்கலாம்; இன்னும் சிலர் பஞ்சடிக்கலாம்; பலர் பட்டை போடலாம்; அனைவரும் நூற்கலாம்.

குவெட்டா நிவாரணத்திற்காக நீ சேகரித்துள்ள துணிமணிகளைப் பாஞ்சாலத்து அகதிகளுக்காக, டாக்டர் கோபிசந்திடம் அனுப்பலாம். சிம்லாவிலேயே அகதிகள் இருந்தால், அவர்களிடையே நீ துணிகளை வழங்கலாம். ஆனுல் சிம்லாவில் இருக்கும் அகதிகள் வசதி படைத்தவர்களாய் இருப்பார்கள். லாகூரில்

ஏழ்மை மிக்கவர்கள் கூடியிருப்பார்கள் என்று நான் நினைக்கின்றேன்.

பணத்தை நான் பத்திரமாக வைத்திருப்பேன். இப்பொழுது உள்ளூரில் வசூல் செய்யப்படுவதைச் செலவு செய்துவிட்ட இடங்களுக்கு அதை அனுப்பலாம். இது போன்ற விபத்துகளில் எப்பொழுதும் நிவாரண வேலைகளின் ஆரம்பக் கட்டத்தில் நிதி வசதிக்குக் குறைவிருக்காது.

நான் உனக்கு அனுப்பியுள்ள தாள்களையும் கடித மேலுறைகளையும் விற்பதற்கு நீ உன் வில்லாவை விட்டு வெளியே செல்ல வேண்டாம். அவற்றின் விலையை வசூல் செய்வதில் எனக்கு அவசரம் எதுவுமில்லை. முடிவில், அவற்றை அங்கு விற்க இயலாமல் போனாலும், அங்கு அவற்றை நட்டம் எதுவுமின்றி விற்பதில் சிரமம் இருக்காது. உனக்குக் கிடைக்கக்கூடிய லாபத்தைப் போல், இங்கு எங்களுக்குக் கிடைக்காது என்பதை நான் அறிவேன்; ஆனால், அதற்காக, அவற்றை விற்பதற்கு நீ அளவுக்கு மீறிய முயற்சி செய்ய வேண்டியதில்லை.

நான் உனக்கு அனுப்பியுள்ள பஞ்சுப் பட்டைகளைக் கொண்டு, 30-ம் எண்ணிக்கை நூலை எளிதில் நூற்கலாம்; நீ குறைந்தது 25-ம் எண்ணிக்கை நூலையாவது நூற்க வேண்டும்.

இத்துடன் அனுப்பியுள்ள கடிதத்தை ஆண்ட்ரூஸிடம் கொடுக்கவும்.

அன்பு,

பாபு

ஸ்ரீ ராஜகுமாரி அமிருத்குன்வார் பென்,
மனோர்வில்லே,
சிம்லா.

## 35

8-7-1935

என் அன்புள்ள அமிருத்,

உனக்கு அனுப்பியிருந்த தாளில் எஞ்சியிருந்தவை இவை. இங்கிருந்து செய்திகள் உறுதிப்படுத்தப்பட்டால் ஒழிய, பத்திரிகைகள் என்னைப் பற்றிச் சொல்வதை எப்பொழுதுமே நம்பாதே. முக்கால் மணிநேரம் வலியால் நான் கதறியது உண்மை தான். ஆனால் இது தீர்ந்த பின் பலவீனமாகத் தோன்றவில்லை; எடையும் குறையவில்லை; வேப்பிலையை, அளவுக்கு மீறிச் சாப்பிட்டுவிட்டேன். அதிகப்படியாக எவ்வளவு சாப்பிட்டால், நன்மை ஏற்படுமென்று பரிசோதித்துக் கொண்டிருந்தேன். இது போன்ற பரிசோதனைகளை நம்மீதே செய்து பார்த்துக் கொள்வது

தான் நல்லது. என் பரிசோதனைகளால், நிரந்தரத் தீங்கு எதுவும் ஏற்பட்டதில்லை. அவற்றின் பயனாக என்னையும் என் நண்பர்களையும் பொறுத்தவரை, பல அரிய உண்மைகளைக் கண்டு பிடித்திருக்கின்றேன். தொடக்க நாட்களில், என் பற்கள் பாதிக்கப்பட்டன. அப்பொழுதும் பரிசோதனை முறையில் தவறு எதுவுமில்லை. தொடக்கத்தில் என் அறியாமையே, அத் தவறுக்குக் காரணமாயிருந்தது. உள்நாட்டு உணவுப்பொருட்கள், மருந்துகள் ஆகியவற்றின் சத்தை நம் மருத்துவ நிபுணர்கள் அறிந்திருந்தால், என்னைப் போன்றவர்களுக்கு எளிதாகவும் வசதியாகவும் இருக்கும்.

உனக்கு, இன்னும் அதிகக் காகிதம் தயாரிக்க ஏற்பாடு செய்வேன்.

என் உடல் நலன் சீராகவே உள்ளது; என்னை நம்பு.

இன்று திங்கட்கிழமை. என் எழுத்து வேலையை நானே செய்துகொள்ள வேண்டியிருக்கிறது.

பாபு

## 36

*18-7-1935*

என் அன்புள்ள அமிருத்,

புனாவில் தங்கும் நாட்களை இன்பமாகக் கழிக்க வேண்டுமென்று உன்னை வாழ்த்தவே இதை எழுதுகிறேன்.

எஞ்சியுள்ள *400* ரூபாயைப் பொறுத்த வரை, இதே போன்ற ஒரு நிலைமை ஏற்பட்டிருந்தால் *400* ரூபாயை வைத்து நீ என்ன செய்திருப்பாயோ, அதையே செய்ய வேண்டும். உனக்கு ஐயப்பாடு இருக்கும்வரை தான், என் ஆலோசனைக்காகக் காத்திருக்க வேண்டுமென்று கூறினேன்.

ஆகஸ்ட் *1*, அல்லது *2* தேதியில் நீ வருவதை எதிர்பார்ப்பேன்.

இத்துடன் சார்லிக்கு ஒரு கடிதம்.

அன்பு,

பாபு

## 37

வார்தா,

*23—8—1935*

என் அன்புள்ள அமிருத்,

வாக்களித்தது போல் தந்தி வந்துள்ளது. உன் இடம் காலியாக இருப்பதைப் பற்றி எனக்கு மகிழ்ச்சி. நான் அமரும்

போதெல்லாம், நீ கூட இல்லாததை உணர்கிறேன். இங்குள்ள அமைப்பில் நீ நிரந்தரமான அம்சமென்ற எண்ணம் எனக்கு ஏற்பட்டிருந்தது. உன்னைப் பற்றி நினைப்பூட்டுவதற்கு எத்தனையோ பொருட்களை விட்டுச் சென்றுள்ளாய். பிளாஸ்க், எப்பொழுதும் உன்னைப் பற்றி நினைவூட்டிய வண்ணமுள்ளது. சிட்ரனெல் சீசாவும் மேசையில் கிடக்கக் கண்டேன். வேண்டுமென்றே அதையும் விட்டுச் சென்றிருந்தாயென்று எண்ணுகிறேன். கூடைகள் இன்னும் அங்கிருக்கின்றன. அக்காரக் கிழங்கு காலியாகவே மறுக்கிறது. அதை நான் மீண்டும் பயன்படுத்திப் பார்க்க வேண்டும். நீ என்னென்ன செய்துவிட்டுச் சென்றிருக்கிறாய் என்பது இப்பொழுது உனக்குத் தெரிகிறதா?

நான் விரும்பிய சான்றிதழை ஷம்மியால் கொடுக்க முடிந்ததென்று எண்ணுகிறேன்.

சிம்லாவுக்கு அவரால் வர முடிந்த போதெல்லாம் உன் விருந்தாளியாகத் தங்க வேண்டுமென்று குமரப்பாவுக்கு நீ அழைப்பு விடுத்துள்ளாய். மருத்துவ அதிகாரி நேற்று அவரைப் பரிசோதித்து, சிறிது சுரம் இருப்பதை முன்னிட்டு, ஓரிரண்டு மாதங்களுக்கு மலைக்குச் செல்வது நல்லதென்று கூறினர். மேலும் பரிசோதனைக்காக அவரைப் பம்பாய்க்கு அனுப்புகின்றேன். அதன் பின்பு அவரை அழைப்பதில் உனக்குச் சிறிதும் சிரமமில்லாதிருந்தால், அவர் சிம்லாவுக்கு வர ஆயத்தமாயிருப்பார். முடிந்தால் எனக்குத் தந்தி அனுப்பு; ஆனால் சிறிதும் உனக்கு வசதிக்குறைவு இருக்குமானால், வேண்டாமென்று சொல்லத் தயங்காதே.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

## 38

வார்தா
*27—8—1935*

என் அன்புள்ள அமிருத்,

கவலைப்படாதே. திங்கட்கிழமை யன்று வலது கை தொந்தரவு கொடுக்கக் கூடாது என்பதற்காக இடது கையால் எழுதுகின்றேன். உன்னிரு கடிதங்களும் தந்தியும் ஒழுங்காகக் கிடைத்தன. அங்கு உன் வீட்டில் இடமிருக்குமானால், தேவதாசையும் நீ உபசரிக்க வேண்டியிருக்கும். பாவம், அவன் வாத நோயால் தாக்கப்படும் ஆபத்து உள்ளது. அவன் சிம்லாவுக்குப் போவது நல்லதென்று அன்சாரி ஆலோசனை கூறியுள்ளதாக, ஜம்னலால்ஜி நேற்று தந்தி அடித்தார். நீ இருப்பதால் தான், சிம்லா என்று சொல்ல அவருக்குத் தோன்றியிருக்க வேண்டும். சிம்லாவில் வேறு தனிச் சிறப்பு என்ன இருக்க முடியும்? இந்த மனு உன் முன்னிலையில் தாக்கல் செய்யப்படுவதற்கு முன் உன்னை ஆயத்தம் செய்வ

தற்காகவே இதை எழுதுகிறேன். மீண்டும் உன்னை எச்சரிக்கிறேன். 'வேண்டாம்' என்று நினைக்கும் போது, 'வேண்டாம்' என்று சொல்லத் தயங்காதே. நட்புறவுகளைக் காத்துக் கொள்ள இது ஒன்று தான் வழி. ஒரு நண்பனிடம் காட்டிலும் நெருங்கிய உறவு எனக்கு உன்னிடம் ஏற்பட்டுள்ளது. ஆனால் நீ என் பிரிய மகளாகத் தொடர்ந்து இருக்க வேண்டுமானால், உன் விசுவாசத்தை நான் அளவுக்கு மீறிச் சோதிக்கக் கூடாது. ஆயினும் என் வாழ்வு இத் தோழமை உறவுகளிலேயே ஊன்றியதால், என்னுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட ஒவ்வொருவருக்குமே என்னால் அதிக சிரமம் ஏற்படத் தான் செய்கிறது. நீயாக வருந்தி ஏற்றுக் கொண்டுள்ள சுமையைத் தாங்கிக் கொள்ள இறைவன் உனக்கு வலிமை அருள்வாராக.

சிம்லா மலை உச்சியில் அமர்ந்து கொண்டு, குமரப்பாவின் வாழ்க்கையைக் கண்காணிக்க ஷம்மி இனி முயல வேண்டிய அவசியமில்லை. இப்பொழுது குமரப்பா, அவருடைய நேரடியான கண்காணிப்பில் இருக்கின்றார். அவர் அனுப்பிய அக்காரக் கிழங்கை நான் பயபக்தியுடன் தினமும் சாப்பிட்டு வருகிறேன் என்று அவரிடம் சொல். அதை நன்றாகச் சமைக்கும் வழியை அப்துல் சலாம் கண்டு பிடித்துள்ளாள்.

கோபிசந்த்ஜியுடன் பூரி பற்றி நான் அதிகம் பேசவில்லை. சிம்லாவில் அவருக்கு ஈடுபாடு அவ்வளவாக இல்லை என்பது நீ அனுப்பியுள்ள பூரியின் கடிதத்திலிருந்து தெரிகிறது. அந்த வேலையை ஏற்றுக் கொள்ளக் கூடிய உள்ளூர் ஆள் எவரும் இல்லையா?

சௌத்ரி உன்னிடம் தந்த காகிதம் எப்படி இருந்தது? உனக்கு வேண்டிய அளவையும் நிறத்தையும் குறிக்க மாதிரித் தாள்களை நீ எனக்கு அனுப்ப வேண்டும்.

குழுவின் கூட்டங்கள் நன்றாக நடந்தன. நீயும் கலந்து கொள்ள வேண்டுமென நான் விரும்பினேன். ஆனால் நீ சென்றது தான் சரியானது என்பதை நான் அறிவேன். நீ இங்கு திரும்பி வரமுடியும் போது, நீ வந்து உன் வேலையைத் தொடருவாய்.

உன்னிரு விசுவாசமான பணியாளருக்கு என் அன்பைத் தெரிவி. அவர்களைப் பற்றி அதிகம் அறிய நான் விரும்பியிருப்பேன்; ஆனால் அது இயலாது போனது குறித்து வருந்துகிறேன். என் வேலை நெருக்கடியில், இத்தகைய விருப்பங்களுக்கு அவகாசம் இல்லாமலே போகிறது.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

பாபு

## 39

வார்தா,
*28—8—1935*

என் அன்புள்ள அமிருத்,

உனக்குக் குரல்வளை அழற்சி இருக்கிறதென்றால், நீ சுத்தமான காற்றை அனுபவித்து, நல்ல தேனையும் பசுங்கனிகளையும் சாப்பிடுவதனால் என்ன பலன்? அந்த அழற்சி இப்பொழுது நீங்கி விட்டதென்று நம்புகிறேன்.

உன் கடிதத்தைக் குமரப்பாவுக்கு அனுப்புகிறேன். தனிமையில் இருக்கும் உணர்வு அவருக்கு அங்கு ஏற்படாதென்பதை அறிவேன்.

இந்த நோட்டுத் தாளும், மேலுறையும் உனக்குப் பிடிக்கின்றனவா? அவை அனைத்தும் இங்கே செய்யப்பட்டவை. ஓரம் மிகவும் முரடாக இருக்கிறதா? நிறத்தைப் பற்றி என்ன நினைக்கின்றாய்?

அரிசியும் சர்க்காக் கதிரும் உனக்கு அனுப்ப நான் மறந்து விடக் கூடாது.

தேவதாஸ் பற்றி இப்பொழுது வந்த செய்திப்படி, முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

## 40

வார்தா,
*1—9—1935*

என் அன்புள்ள அமிருத்,

தொழில் பழகிக் கொள்பவர்கள் தயாரித்து வரும் தாளில் கழிவே, இந்தத் தாள். நிறத்தையும், அது எவ்வளவு மெல்லியதாய் உள்ளது என்பதையும் காணவே உனக்கு அதை அனுப்புகிறேன். அதில் மெருகு குறைவு. இன்னும் கொஞ்ச காலத்தில், இந்தியாவில் செய்யப்படும் காகிதத்தில் மிக நேர்த்தியான காகிதத்தை, நயமான விலையில் நாங்கள் உற்பத்தி செய்ய முடியுமென்று நம்புகிறோம். நான் எதிர்பார்த்ததையும் விடச் சீக்கிரமாகத் தேவதாஸ் உன்னிடம் வருவான். உன் காதல் கடிதத்தை நான் தேவதாசுக்கு அனுப்புகிறேன். குமரப்பா, 4ஆம் தேதி நாகபுரியை விட்டுப் புறப்பட்டு 6ஆம் தேதி உன்னுடன் இருப்பார்.

அவிநாசிலிங்கத்துடன் நான் உனக்கு ஒரு மூட்டை அரிசி அனுப்பியுள்ளேன். விலை குறைவாக இருந்தாலும், தரம் உயர்வாக இருக்கும். இரட்டிப்பு இரயில் கட்டணம் செலுத்தி அதை

அனுப்பியுள்ளேன். கூட்ஸ் இரயிலில் அனுப்பியிருந்தால், கிடைப்பதற்கு ஒரு மாதம் பிடிக்கும்; பொருளும் பாழ்படக்கூடும். நான் செய்தது சரியோ, என்னவோ? சிம்லாவில் அரிசி நீண்ட நாள் கெடாமலிருக்கும்; ஆனால் ஆலையில் அரைக்கப்படாத அரிசியை நெடுநாள் வைத்திருக்கக் கூடாது. நான் அனுப்பியிருக்கும் அளவு உனக்குத் தேவையானதற்கு மேலிருந்தால், நீ அதை விற்க வேண்டும். விலைச் சீட்டை ஏற்கெனவே அனுப்பியிராவிடில், இத்துடன் அனுப்ப முடியுமென்று எண்ணுகிறேன்.

அவிநாசிலிங்கத்துடன் தக்ளியையும் அனுப்பியுள்ளேன்.

தேவதாஸ் அங்கு வந்தால், கதர்ப் பிரசாரத்துக்கு அவனைப் பயன்படுத்த வேண்டும். அவனுக்கு நூற்கத் தெரியும்.

இப்பொழுது இங்கு நாங்கள் நிறையப் பேர் இருக்கின்றோம். ஹரிஜனக் குழுவின் உறுப்பினர் இங்கிருக்கின்றனர்.

ஜானகி பிரசாத் தம் பதினேழு நாள் உண்ணு நோன்பை முடித்தார்; அவர் உடல்நிலை மிக நன்றாக இருக்கின்றது. தேன், எலுமிச்சை ரசம், தண்ணீர் ஆகியவற்றைச் சாப்பிட்டு அவர் உண்ணு நோன்பை முடித்தார்.

உன் ஆப்பிள்களை நான் சாப்பிட முடியவில்லை. என்னைக் காட்டிலும், இங்கு இன்னும் பலருக்கு, ஆப்பிள் அதிகத் தேவையாய் உள்ளது.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

## 41

வார்தா,
*4—9—1935*

என் அன்புள்ள அமிருத்,

இந்தத் தாள் தான் இங்கு செய்யப்படுவதில் மிகவும் மெல்லியது. இரண்டு பக்கங்களிலும் எழுத இயலும் என்பதை நீ பார்க்கலாம். மையொற்றுக் காகிதத்தையும் அவர் தயாரித்துள்ளார். இதில் இன்னும் பல முன்னேற்றங்கள் செய்ய முடியுமென்று அவர் உறுதி கூறுகிறார். இந்தக் காகித உற்பத்தித் தொழில், ஒரு வரப்பிரசாதமாகவே அமையக் கூடும். அவ்வாறாயின், திறமை, உழைப்பு, இரண்டும் சேர்ந்தால், கிராமத்திற்கு எவ்வளவு நன்மை ஏற்படும் என்பதற்கு அது ஒரு சான்றாகும். உன் உதவியுடன், இதை உற்பத்தி செய்தவர்களுக்குத் தினம் 8 அணவுக்கு மேல் ஊதியம் கிடைக்கும்படி செய்ய முடியுமென்று எதிர்பார்க்கிறேன்.

நான் உனக்கு அனுப்பிய அரிசி, அவிநாசிலிங்கத்திடம்தான் இன்னும் இருக்கிறது. உன் இடத்தைக் கண்டுபிடிக்க முடிய

வில்லையென்று அவர் கூறுகிறார். இரயில் கட்டணத்தை நான் தர அவர் சம்மதிக்கவில்லை. முட்டையின் விலை சொற்பமே. இரயில் கட்டணம், பொருளின் விலையைப் போல் இரு மடங்கு. அவ்வளவு அதிகம் உனக்கு நான் அனுப்பியது சரியோ, என்னவோ? ஒரு முட்டையில் எவ்வளவு இருக்கும் என்பது உனக்குத் தெரியாதோ, என்னவோ? முட்டைகளில் பலவிதம் உண்டல்லவா?

குமரப்பா, தேவதாஸ், இருவரையும் உன்னுடன் தங்க ஏற்பாடு செய்த பின், இதற்கு மேல் நான் வேறெதுவும் சொல்லப் போவதில்லை. அவர்கள் உனக்குச் சுமையாக இருக்க மாட்டார்களென்று மட்டும் நினைக்கின்றேன். அவர்களுக்காக உன் நேரம் எதையும் நீ செலவு செய்யத் தேவையில்லை. ஏழைகள், மலைவாச ஊர்களுக்குச் செல்வதுபற்றி நினைப்பதே அநியாயமாகும். இந்த விஷமத்திற்கு நீ தான் பொறுப்பு. என் ஏழ்மை பெயரளவில் தானா?

உண்மையான ஏழைகளை ஷம்மி மறந்துவிடக்கூடாது. வேப்பிலையின் ஆராய்ச்சி எனக்கு அவசியம் தேவை.

அன்பு,

பாபு

## 42

வார்தா,
*6—9—1935*

என் அன்புள்ள அமிருத்,

நோயாளிகள் அங்கு வந்து சேருவதற்கு முன், உன் அன்றாட அறிக்கை தொடங்கிவிட்டது. சாகுந்தல நாடகத்திற்கு நீ நடத்திய ஒத்திகை போல் இது இருக்கிறது. நீ மறுமுறை வரும்போது, உன் அலுவலக வேலையிலிருந்து சிறிது நேரத்தை மிச்சப்படுத்த முடியுமானால், உன் நாடகக் கலையை ஓரளவு இங்குள்ள பெண்களுக்குப் பயிற்றுவிக்க வேண்டும். நீ அங்கு நடத்திய ஒத்திகை ஆங்கிலத்தில் தான் இருந்ததென்று எண்ணுகிறேன். மொழிபெயர்ப்பு எவருடையது? நடிகைகள் யார்?

குறைந்த பட்ச அளவு ஒன்றுக்குக் கதர் வாங்குவதாக உறுதியளித்து, ஆலைத் துணியைக் கடையில் வைப்பதில்லையென்றும் ஒத்துக் கொண்டால், விற்பனை உதவியாளரை நீ அமர்த்திக் கொள்ளலாம் என்பதோடு, குறிப்பிட்ட காலம் வரை, இப்பொழுதுள்ள வாடகையும் செலுத்தப்படும். மற்றெல்லா சுதேசிப் பொருட்களையும் நீ விற்கலாம். ஆனால் நான் கவலைப்படுவதெல்லாம், ஏற்கெனவே உனக்குள்ள பெரும் நிதி நிர்வாகப் பொறுப்புகளுக்கு மேலாக, இச்சுமையையும் ஏற்றுக்கொள்ளக்கூடாது என்பதுதான். உனக்கு உதவி செய்யச் சரியான ஆட்கள் கிடைத்து, உன் நிதிப் பொறுப்பும் தெளிவாக வரையறுக்கப்பட்டால், நீ இச் சுதேசி

முயற்சியை மேற்கொள்ளலாம். நான் தொடர்பு கொண்டுள்ள நிறுவனங்கள், அமைப்பிலும் அளவிலும் மிகப் பெரிதாக இருப்பதால், அவை ஏராளமான பணத்தை விழுங்கக் கூடும். அவை இதுவரை அவ்வாறு செய்யவில்லையென்ருல், அவை கட்டு மீறிச் செல்ல நான் எப்பொழுதும் அனுமதித்ததேயில்லை என்பது தான் காரணம். உள்ளிருந்தே காவலும் கண்காணிப்பும் இருப்பதால், சொந்த லாபத்துக்குச் சிறிதும் இடமில்லை. ஆகவே நான் விரும்புவதெல்லாம், உன் சிறப்பான ஆற்றலும் விசுவாசமும் தூய்மையும், மிக ஏழ்மையானவர்க்கும் அடக்கி ஒடுக்கப்படுபவர்க்கும் சேவை செய்வதற்கு அர்ப்பணிக்கப்பட வேண்டுமென்பது தான். ஆண்டவன் அருளால், என் விருப்பம் ஏற்கெனவே ஈடேறிவிட்டது.

விஜயசிங் கடிதத்தை நான் திருப்பி அனுப்புகிறேன். அது எனக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. ஆனல் தீர்ப்புக் கூற எனக்கு உரிமையில்லை. செலவு செய்யப்படும் ஒவ்வொரு செப்புக் காசுக்கும் ஒழுங்காகக் கணக்கு வைக்க வேண்டுமென நீ வற்புறுத்த வேண்டும்.

ஜவாஹர்லாலைச் சந்திக்க மகாதேவ் சென்றுள்ளார்; ஒரு நாளில் திரும்பவேண்டும். அவர் எதிர்பார்த்ததற்கு முன்பாகவே ஜவாஹர்லால் விமானத்தில் புறப்பட்டு விட்டார். ஆகவே அவர் புறப்பட்ட ஒருசில மணி நேரங்களுக்குப் பின் மகாதேவ் சென்று, அவரைக் காணத் தவறிவிடுவாரென்று அஞ்சுகிறேன்.

அளவுக்கு மீறி வேலை செய்து அலுப்பை வரவழைத்துக் கொள்ளாதே.

அன்பு,

பாபு

## 43

வார்தா,
*9—9—1935*

என் அன்புள்ள அமிருத்,

வலது கையை நான் பயன்படுத்தும் போதே, ஒரு வரி எழுத விரும்புகிறேன். மௌன நாளைத் தவிர மற்ற நாட்களில் நான் வலது கைக்கு ஓய்வு கொடுத்தால்தான், அந்த நாளில் சில ஆண்டுகளுக்கு அதைப் பயன்படுத்த முடியுமென்பதை நான் உணர்கிறேன். முன்னெச்சரிக்கையாகவே இந்த நடவடிக்கை.

உன் ஆப்பிள்களை நான் சாப்பிட்டு வருகிறேன். ஆனல் ஒவ்வொரு முறையும் நீ பழங்களை அனுப்பும்போது அத்துடன் கடுமையான உத்தரவுகளையும் அனுப்பாதே. எனக்குப் பழம் தேவைப்பட்டால், அதைச் சாப்பிடாமல் தியாகம் செய்யமாட்டேன் என்று உனக்கு உறுதி கூறுகிறேன்.

மகாதேவ் அலகாபாத் போனது ஜவாஹரைச் சந்திக்க; அவரைச் சந்திக்க இயலாது போனதால், இப்பொழுது சர்தாரைச் சந்திக்க, அவர் விரும்பியதுபோல் சென்றுள்ளார். மகாதேவ் இல்லாத நேரத்தில் குர்ஷீத் செயலாளர் வேலையைச் செய்கிறாள். அவர் முழுநேரமும் வேலைசெய்து, அந்தப் பயங்கரத் திங்கட்கிழமையில் நீ பட்ட வேதனையை இன்று அவள் அனுபவிக்கின்றாள்.

அம்துல் சலாம் இப்பொழுதுதான் நோய்ப்படுக்கையிலிருந்து எழுந்தாள்; அவள் இடத்தை மீரா எடுத்துக் கொண்டாள். இன்று வேறு அடைமழை பெய்கிறது. அவளுக்குக் கடுமையான நோய் ஒன்றுமில்லை என்று நம்புகிறேன்.

பாவும் தேவதாசும் இன்று உன்னிடம் வந்திருப்பார்கள். இவ்வளவு கூட்டம் இருப்பது உனக்குச் சுமையாக இருக்காதென்று நம்புகிறேன். குமரப்பா, தேவதாஸ், இருவர் பற்றியும் ஷம்மி, தயவுசெய்து தமது நிபுணத்துவ ஆலோசனையைக் கூற வேண்டும்.

அந்த மூட்டை அரிசி உனக்கு எவ்வளவு நாட்களுக்கு வருமோ தெரியவில்லை. அடுத்தமுறை, அருகாமையிலுள்ள ஊரிலிருந்து நெல்லை வருவித்து, உமியெடுக்கச் 'சக்கி'யை நிறுவவேண்டும். அதுதான் குறைந்த செலவாகும் முறை; மேலும் கிராம உணர்வோடு ஒட்டிய முறையாகும்.

ஓயாமல் பெருகிவரும் குடும்பத்திற்கு அன்பு,

பாபு

## 44

வார்தா,
*10-9-'35.*

என் அன்புள்ள அமிருத்,

குமரப்பாவின் சுரம் பற்றி நான் கவலைப்படப் போவதில்லை. ஷம்மியின் கண்காணிப்பில், அவர் பத்திரமாக இருப்பார்.

இராஜேந்திர பாபுவிடம் நான் உன் பெயரைச் சொன்ன நினைவில்லை. அந்தப் பொறுப்பை உன்னால் ஏற்க முடியாதென்று நீ எண்ணினால், 'வேண்டாம்' என்று தயக்கமின்றிக் கூறு. காங்கிரஸ் நோக்கிலிருந்து இந்தப் பிரசுரம் தேவைப்படுமானால், அந்தப் பொறுப்பை நீ ஏற்றுக்கொள்ளக் கூடாது. பெண்கள் நோக்கிலிருந்து அதை எழுதவேண்டுமென்றால், உன்னைவிடச் சிறப்பாக அதைச் செய்யக்கூடியவர் யாரும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை. ஆனால் நீ புதிய சுமைகளை மேற்கொள்வதுபற்றி நானே அஞ்சுகிறேன். ஆகவே பெண்கள் நோக்கிலிருந்து நீ அப்பொறுப்பை ஏற்றுக்கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறே

னென்ருலும், தேவையான அவகாசத்தை ஏற்படுத்திக்கொள்ள முடியுமா என்று தீர்மானம் செய்வது உன் பொறுப்பேயாகும். அது ஒரு புத்தகமாக இருக்க வேண்டியதில்லை. எண்மடிப் புத்தக அளவில் 25 பக்கங்கள் கொண்டு, கோர்வையுடன் எழுதப்பட்ட துண்டுப் பிரசுரமே போதும். உனக்கு விருப்பமிருந்தால், அதிகம் எழுதத் தடையில்லை.

கூடிய விரைவில் உனக்குக் காகிதம் அனுப்பப்படும். மாதிரித் தாள்கள் இன்னும் வந்து சேரவில்லை.

மீரா படுக்கையில் உள்ளாள் என்று நான் நேற்று உனக்குச் சொன்னேனு? குமரப்பா முன்பிருந்த இடத்திற்கு இப்பொழுது அவள் மாற்றப்பட்டுள்ளாள். அம்துல் சலாமுக்கு வேலை கிடைத்து விட்டதென்பதையும், ஓடியாடி வேலை செய்கிருள் என்பதையும் குமரப்பாவிடம் கூறு. நேற்றுதான் நோய்வாய்ப்பட்டிருந்ததை அவள் மறந்துவிட்டாள்.

இலக்ஷ்மி,[1] பங்களாவில் தங்க வேண்டுமென்பதைப் பாவிடம் தயவு செய்து சொல்லிவிடு.

அன்பு,

பாபு

தேவதாஸ் பற்றிய தந்தி இப்பொழுதுதான் கிடைத்தது. ஆண்டவன் அருள்.

## 45

வார்தா,
*14-9-'35.*

என் அன்புள்ள அமிருத்,

தவருமல், முழு விவரமான கடிதங்களை நீ எழுதுவது, எனக்குப் பெரும் வரப்பிரசாதமாகும். இரு நோயாளிகளும் உன் பராமரிப்பில் இருக்கும்வரை, அவர்களைப்பற்றி நான் கவலைப்பட வேண்டியதில்லை. பியாரிலாலின் கடிதங்கள் எனக்கு வந்து சேர்ந்தன என்று அவரிடம் தயவுசெய்து கூறவும். அவர் சொன்ன ஆலோசனையை அப்படியே ஏற்றுக்கொண்டு, உடனே பதில் எழுதாமல், நேரத்தை மிச்சப்படுத்துகிறேன். மகாதேவ் இன்னும் திரும்பவில்லை; திங்கட்கிழமைக்கு முன் அவர் திரும்புவது சந்தேகம்.

டாக்டர் கோபிசந்துக்கு நீ எழுதியுள்ள பதில் முற்றிலும் பொருத்தமானது. நீ விரும்பியதுபோல், அக் கடிதத்தைக் கிழித்து விடப் போகிறேன். உன்னல் தாங்கமுடியாத சுமைகளை ஏற்றுக் கொள்ள நீ உறுதியாக மறுக்கவேண்டும்.

---

1. தேவதாஸ் காந்தியின் மனைவி.

மீரா இன்னும் குணமடையவில்லை. நேற்றிரவு மீண்டும் அவள் உறக்கமில்லாமல் வருந்தினுள். இருந்த போதிலும், சுரம் மெது வாகக் குறைந்து வருகிறது.

இராஜாஜி இங்கு இன்னும் இருக்கின்றார். அநேகமாக அவர் செவ்வாய்க்கிழமையன்று புறப்படுவார்; இலக்ஷ்மியும் புதுக் குழந்தையும் நலமாக இருக்கின்றனர். தாராவுக்கு இன்னும் விட்டு விட்டுச் சுரம் வருகிறது. மனுவுக்கும் அவ்வாறே. அவர்கள் அனைவரும் ஜம்னுலால்ஜியின் பங்களாவில் இருக்கின்றனர்.

அவர்களுக்கு எழுத எனக்கு அவகாசமில்லை என்று பாவுக்கும் தேவதாசுக்கும் சொல். தனித்தனியாகக் கடிதம் எழுதுவதற்குப் பதிலாக உனக்கு எழுதிவிட்டேன்.

அனைவருக்கும் அன்பு,

பாபு

## 46

வார்தா.
*16-9-'35,*

என் அன்புள்ள அமிருத்,

உன் அன்பான கடிதங்கள் என்னை உற்சாகப்படுத்தத் தவறுவதேயில்லை. ஆண்டவன் உன்னை ஆசீர்வதிப்பாராக. உன் கண்களுக்கு அதிக வேலை கொடுத்துப் பிறகு அவற்றைக் கெடுத்துக் கொள்ளக் கூடாது.

தேவதாஸ் விரும்புவதற்கு அதிகமாக அவன் சாப்பிட வேண்டுமென்று கட்டாயப்படுத்தக் கூடாதென்று, அங்கு வீட்டிலேயே மருத்துவர் உள்ளபோது, நான் சொல்லக்கூடாது. அவன் நிதானமாகவே செல்வதற்கு விடவேண்டும். நிபுணரல்லாதவன் சொல்லக்கூடிய யோசனை அதுதான்; அது எந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ளத் தகுந்ததோ, அந்த அளவுக்கு ஏற்றுக்கொள்ளலாம்.

இத்துடன் இரு கடிதங்கள் வருகின்றன.

அனைவருக்கும் அன்பு,

பாபு

மீரா முற்றிலும் குணமடைந்துவிட்டாள்.

## 47

*திருத்தப்படாதது.*

வார்தா,
*23—9—1935*

என் அன்புள்ள அமிருத்,

சௌத்ரிக்கு உன் கடிதம் நன்கு உரைத்துள்ளது. அதை அவர் சரியான முறையில் ஏற்றுக் கொண்டுள்ளார். மன்னிப்பு கேட்க வேண்டிய அவசியமே இல்லை. மகன்வாடி உன் சொந்த வீடு. அங்கேயே, உன் சொந்தக் குடும்பத்தினரிடமே உள்ளதை உள்ளபடி சொல்லக்கூடாதென்றால், வேறெங்கு தான் சொல்ல முடியும்? இது போன்ற வாய்ப்பு மீண்டும் ஏற்பட்டால், அப்பொழுதும் நீ இதே முறையைப் பின்பற்ற வேண்டும்.

இந்த அளவு, உனக்கென்று தனியாகத் தயாரிக்கப்பட்டுள்ளது. இருந்தாலும் இதைப் பற்றி உன் கருத்தை நீ தெரிவிக்க வேண்டும். முந்திய முறை அனுப்பிய கெட்டுப்போன பொருள்களுக்கு நீ விலையொன்றும் கொடுக்கத் தேவையில்லை. காற்றிலும் வெய்யிலிலும் வைத்த பின்பாகிலும் கெட்ட வாசனை போய்விட்டதா?

பூரி, தாமதமின்றி, தமது விரிவான விமர்சனத்தை அனுப்ப வேண்டும். அவர் இங்கு வரும் வரை காத்திருக்கக் கூடாது. என்னிடமிருந்து உண்மையை மறைக்கக் கூடாது.

நான் உன் ஆப்பிள்களை, முன்பு விட்ட பாக்கியையெல்லாம் சேர்த்து வைத்துச் சாப்பிடுகின்றேன். அவையும் சாத்துக்குடியும் சேர்ந்து மருந்து போல் நன்மை செய்துள்ளன.

மீராவுக்கு இப்பொழுது சுரம் போய்விட்டது. ஆனால் அவள் இன்னும் மிகவும் பலவீனமாக இருக்கின்றாள். உணவு இன்னும் சரியாகச் செரிப்பதில்லை. ஈனோ பழ உப்பை அதிகம் சாப்பிட்ட பின்னும் அவளுக்கு வெளிக்குப் போகவில்லை; நீரேற்றிக் குடல் கழுவ வேண்டியுள்ளது. ஆனால் அவளைப் பற்றிக் கவலை கொள்வதற்கு இடமில்லை.

பாலையும், நீ தயாரிக்கும் அருமையான வெண்ணெயையும், பியாரிலாலை சாப்பிடச் செய்வதற்கு உங்கள் இருவராலும் முடியவில்லையென்றால், திறமையான தாதி என்று உனக்கும், நல்ல மருத்துவர் என்று ஷம்மிக்கும், முழு மதிப்பெண்கள் கிடைக்கா.

பாம்புக் கடி பற்றி நான் ஹரிஜனில் வெளியிட்டதற்கு மேலாக, ஷம்மி வேறெதுவும் தகவல் தர முடியுமா? நச்சுப்பாம்பு எது, நச்சில்லாத பாம்பு எது, என்று கண்டுபிடிக்க எளிதான முறை எதுவும் உண்டா? இப்பொருள் பற்றி நல்ல நூல் எதையும் அவர் கூற முடியுமா?

குமரப்பாவின் சிகிச்சை எப்பொழுது முடியுமென்று அவர் நினைக்கிறார்?

சில கடிதங்களை இத்துடன் அனுப்பியுள்ளேன். அவை உன் விருந்தாளிகளுக்கு(!)

அன்பு,

பாபு

மலையிலிருந்து இறங்கி எப்பொழுது கீழே வருவாய்? குண மடைந்து வருபவர்கள் உடல் முழுதும் தேற வேண்டுமென்பதற்காக, நீ சிம்லாவில் தங்க உத்தேசித்திருந்ததற்கு மேல், அங்கு தங்க வேண்டிய அவசியமில்லை.

# 48

வார்தா,
*28—9—1935*

என் அன்புள்ள அமிருத்,

இக் கடிதத்தைச் சொல்லி எழுதச் செய்வதே உசிதமெனத் தோன்றுகிறது. தேவதாஸ் உடல் நலனில் அடிக்கடி ஏற்படும் மாற்றங்கள் எனக்குக் கவலை அளிக்கவில்லை. அங்கு அவன் உடல் நலன் சீராகுமென்ற நம்பிக்கை எனக்குண்டு. இதைவிடச் சிறந்தவர் கண்காணிப்பில் அவர் இருக்க முடியாது என்பதையும் நானறிவேன். பியாரிலாலுக்குச் செய்தியை எவர் கொடுத்திருந்தாலும், அவர் நல்லது செய்யவில்லை என்றே கூறுவேன்.

நீ சென்ற முறை அனுப்பின ஆப்பிள்களில் அநேகமாக அத்தனையையும் நானே சாப்பிட்டு முடித்தேன். கூட சாத்துக்குடிகளையும் நான் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன். ஆகவே அதைப் பற்றிக் கூட கவலைப்படுவதற்கு இடமில்லை. பழம் சாப்பிட வேண்டுமென்ற அவசியம் தோன்றும்போதெல்லாம், நான் அதை நிச்சயம் சாப்பிடுவேன். பச்சை இலைகளைச் சாப்பிடுவதையும் நிறுத்தவில்லை. சில நாட்களுக்கு வேப்பிலைகளைச் சாப்பிடவே வயிற்றில் இடமில்லை. ஆகவே அதை விலக்கினேன். ஆனால் பழமும் பழப் பாகும் சாப்பிடுவதென்றால் காய்கறிகள் அனைத்தையுமே விலக்க வேண்டுமென்று கூறினார்கள். இப்பொழுது நான் வேப்பிலைகளைச் சாப்பிட மீண்டும் தொடங்கியுள்ளேன். மலச்சிக்கலைத் தவிர்ப்பதற்காகக் காய்கறிகளைச் சமைத்துச் சாப்பிட்டுக் கொண்டிருந்தேன்; ஆனால் ஆப்பிள்கள் சாப்பிடும் போது அதை நிறுத்தினேன். ஆகவே என் உடல் நலன் பற்றித் தயவு செய்து கவலைப்படாதே.

பாவைப் பொறுத்தவரை, அவள் அங்கு மகிழ்ச்சியாக இல்லையென்றால், அவள் வந்துவிடுவதால் அங்கு தடையெதுவும் இராதென்றால், அவள் வந்துவிடுவதே நல்லதென்று எண்ணுகிறேன். உன் பராமரிப்பும் கவனமும் தேவதாசுக்குக் கிடைக்கும் வரை, அவனுக்காக அவள் அங்கு தங்க வேண்டுமென்ற அவசியமில்லை. ஆகவே அவள் வார்தாவுக்கு வர விரும்பினால், அவளை வர விடு.

பயணத்தில் அவளுக்குத் துணை தேவைப்படாது. அவள் இறங்கு கிற இரயில் நிலையங்களில் மட்டும் அவளுக்கு ஓரளவு உதவி தேவைப்படும். கல்கா, அம்பாலா, டில்லி இரயில் நிலையங்களில் அதை நீ சிரமமின்றி ஏற்பாடு செய்ய முடியும். யாராகிலும் ஒருவர் அவளை இரயில் நிலையத்தில் சந்தித்துச் சரியான பெட்டியில் ஏற்றி விட்டால் போதும்.

உன் வேலைத்திட்டம் பற்றிய விவரங்களை உன் கடிதத்தி லிருந்து அறிய ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன். தேவதாஸ், அல்லது குமரப்பாவுக்காக நீ உன் சொந்தத் திட் டத்தை மாற்றி அமைத்துக் கொண்டாயானால், அது எனக்கு மிகுந்த வேதனையைத் தரும். நீ சென்ற பின்னும் அவர்கள் மனோர் வில்லாவில் தங்க முடியாதென்றால், அவர்கள் சிம்லாவிலேயே வேறிடத்திற்குச் செல்லவேண்டும்; அல்லது நீண்ட நாட்கள் தங்கு வது அவசியமானல், வேறு மலைவாச ஊருக்குச் செல்ல வேண்டும். அந்த இதமான சூழ்நிலையில் இருவரும் நவம்பர் மாதமில்லாவிடினும் அக்டோபர் மாத இறுதி வரையிலாவது தங்க வேண்டுமென்று தான் நான் எண்ணுகின்றேன். தேவதாஸ் இன்னும் அதிக நாட் களுக்குக் கூட தங்க வேண்டியிருக்கும்.

ஆப்பிள்களும் உன் கடிதமும் இப்பொழுதுதான் வந்துள்ளன. பாவின் பயணச்சீட்டு செல்லாதாயின், அவள், அதாவது, தேவ தாஸ், கட்டணத்தைச் செலுத்த வேண்டும்.

அன்பு,

பாபு

ஸ்ரீ ராஜகுமாரி அமிருத் கௌர்,
மனோர் வில்லா,
சிம்லா

## 49

*30—9—1935*

என் அன்புள்ள அமிருத்,

நீ அனுப்பிய ஆப்பிள்கள் உன் தோட்டத்திலிருந்தல்ல என்று நான் நிச்சயமாக நம்புகிறேன். அவற்றை இரயிலில் அனுப்புவதற்கு எவ்வளவு செலவாகிறது என்பதை நீ எண்ணினாயா? அமுத மாயினும், அது அளவுக்கு மீறக் கூடாதல்லவா? மருந்து போல் அவை அவசியமாக இருந்தால், நான் அவற்றை அனுப்புமாறு உன்னிடம் சொல்லியிருப்பேன். ஆனல் அவை அவ்வாறில்லை. நோய்க்கு அவசியமென்று நான் கருதும் பழங்கள், ஆரஞ்சுகள், அல்லது சாத்துக்குடிகள். அவற்றைத் தொடர்ச்சியாகப் பெறுவ தற்கு நான் ஏற்பாடு செய்துள்ளேன். இது கூட நானகக் கற்பனை செய்துகொண்டதாய் இருக்கலாம்; ஆனல் மருந்துகளின் அளவை நான் குறைத்துக் கொள்ள வேண்டுமானல் தேனும் ஆரஞ்சுகளும்

எனக்கு அவசியம் என்பது என் எண்ணம். இப்பொருட்களை நான் மிகத் தாராளமாகப் பயன்படுத்துகின்றேன் என்று உனக்கு உறுதி கூற விரும்புகிறேன். ஆகவே, எனக்காக ஆப்பிள்களை விலைக்கு வாங்குவதை நீ தயவுசெய்து நிறுத்திக்கொள்ளவேண்டும். உன் சொந்தத் தோட்டத்தில் அடுத்தமுறை கிடைக்கும்போது, அவற்றில் எனக்குரிய பங்கை மகிழ்ச்சியுடன் பெற்றுக்கொள்வேன்.

இன்று மாலை பா வருவாளென்று எதிர்பார்க்கின்றேன். தேவதாஸ் பற்றியும் குமரப்பா பற்றியும் நீ ஒழுங்காகத் தந்துவரும் முழு விவரங்களையும் அவளால் கூற முடியாதெனினும், அவர்கள் உடல் நிலை இப்பொழுது எப்படி இருக்கின்றது என்பதை அவளிடமிருந்து அறியமுடியும்.

குமரப்பாவின் சகோதரர் ஜே. எம். இங்கு வந்திருந்தார். இன்று மாலையில் அவர் பம்பாய்க்குச் செல்கிறார். அவர்கள் இருவரும் ஒரே அச்சில் வார்த்தவர்கள்; தோற்றத்தில் மட்டுமல்ல, வாழ்க்கைபற்றி அவர்கள் கொண்டுள்ள பண்பட்ட நோக்கிலும், நாட்டுப் பற்றிலும், அவர்கள் இருவரும் ஒன்றுதான்.

நீ நலமாக இருக்கிறாயென்று நம்புகிறேன். அளவுக்கு மீறி வேலை செய்யாதே என்று உன்னிடம் சொல்லிப் பலனில்லை. வேண்டுகோளாகவோ, ஆலோசனையாகவோ, உத்தரவாகவோ, அதைச் சொன்னாலும், அதை ஏற்றுக்கொள்ள இயலாத நிலைக்கு நீ உன்னைக் கொண்டுவந்து விட்டாயென்று எண்ணுகிறேன்.

அன்பு,

பாபு

மீராவுக்கு முற்றிலும் குணமாகிவிட்டது. குமரப்பாவின் அலுவலறைக்குப் பின்னால் அவளுக்கு ஒரு சிறு அறை கட்டியிருந்தோம் என்று நான் உனக்குச் சொன்னேனா? அங்கு குடியேற அவள் நேற்று சென்றாள்; இப்பொழுது அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சிதான்.

## 50

*7—10—'35.*

என் அன்புள்ள அமிருத்,

உனக்கு ஒரு வரிகூட எழுத இன்று நேரமில்லை. ஆயினும் நான் எழுத வேண்டும். என் உடல் நலனைக் காத்து, ஓயாமல் பெருகிவரும் பொறுப்புகளை நான் சமாளிக்க வேண்டுமாயின், அன்புக் கடிதங்கள் எழுதும் இன்பத்தை விட்டுக்கொடுக்க வேண்டுமென்ற நிலை நாளுக்குநாள் அதிகமாக ஏற்பட்டு வருகிறது. எதையாவது நான் குறைத்துக் கொள்ளவேண்டும். கடிதம் எழுதும் வேலையில்தான் வெட்டு விழுமென்று பெரிதும் அஞ்சுகிறேன்.

விலைக்கு வாங்காமல், ஆப்பிள்கள் உனக்குக் கிடைக்கும் போது, என்னுடனே, என்னைப் போன்றவர்களுடனே, அவற்றை நீ தாராளமாகப் பகிர்ந்துகொள்ளலாம். அவ்வாறு சொல்வது வாதத்திற்குப் பொருத்தமல்ல என்பதை அறிவேன். ஆனால் என் பேராசைமீதும், சொல்ல வேண்டுமானால், உன் பேராசைமீதும் நாம் ஓரளவு விதிக்கும் தடைகளாகவே அதைக் கொள்ளவேண்டும்; —எனக்குள்ள பேராசை வாங்குவதில்; உனக்குள்ள பேராசை, கொடுப்பதில்—இவை இரண்டிலும் எது மோசமானது என்பது பற்றி நாம் சண்டையிட்டுக் கொள்ள வேண்டியதில்லை. நாம் இருவரும் ஒரே நேரத்தில் அதை விட்டுக்கொடுத்து, நம்மிடையே போராட்டம் மூள்வதற்கான காரணங்களில் இந்த ஒரு காரணத்தையாவது தவிர்ப்பது நல்லது.

ஆம்; தம் பேரன் பேத்திமார்களிடையேயும், அவர்கள் தாயார் கூடவும் இருக்க வாய்ப்பு கிடைத்தது குறித்துப் பாவுக்கு மிகுந்த மகிழ்ச்சி.

இத்துடன் வரும் கடிதங்கள், பியாரிலாலுக்கும் தேவதாசுக்கும்.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

## 51

வார்தா,
*13-10-'35.*

என் அன்புள்ள அமிருத்,

பெண்களின் நிலைபற்றிய உன் குறிப்பு நேற்றுப் பிற்பகல் கிடைத்தது. அதை நான் படித்துவிட்டேன். அதைத் திருத்துவதற்கே இடமில்லை. நீ எப்பொழுதும் முறையுடன் எழுதுகிறாய்; அதைப் புரிந்துகொள்வதும் எளிது. வாதம் கோர்வையாகச் செல்கிறது. ஆனால் நான் எதிர்பார்த்தது வேறு. அனைவரையும் கவரும் வகையில், நிலைமையை ஆணித்தரமாக அது எடுத்துரைக்கவில்லை. இதுபோன்ற வேலையை நீ இதற்கு முன்பு செய்ததில்லை என்று முதலில் கூறியதன் பொருத்தத்தை இப்பொழுது உணர்கிறேன். உன் விளக்கம் கவர்ச்சிகரமாகவும் மனத்தில் பதிவதாகவும் இல்லையென்பது, உன்மேல் குற்றமாகாது. எக்காரணம் கொண்டும் இப்பொழுது நீ இரண்டாவது முயற்சி செய்யக்கூடாது என்பதை வற்புறுத்த விரும்புகிறேன். நீ இங்கு வரும்போது, இதைப்பற்றி நாம் கலந்து பேசுவோம்; அது என்ன முறையில் இருக்க வேண்டுமென நான் விரும்பியிருப்பேன் என்று உனக்குக் கூறுவேன். அப்பொழுது, உனக்கு விருப்பமிருந்தால், நீ சுயேச்சையாக உன் சங்கத்திற்காக ஒன்று எழுதலாம்.

தேவதாஸ் பற்றி நான் கவலைகொள்ளவில்லை. என்னுடன் இருந்திருந்தாலும், அவன் உடல்நலன் இதைவிடச் சீராக இருந் திருக்குமென்று நான் எண்ணவில்லை. நீயும் ஷம்மியும் அவனைக் கவனிக்க முடிந்த அளவு, நான் அவனைக் கவனித்திருக்க முடியாது என்பது உறுதி. நீ அவசியமில்லாமல் கவலைப்படுகிறாய் என்று தான் அஞ்சுகிறேன்

அனைத்திந்திய நூற்பாளர் சங்கம், இந்தி சாகித்திய சம்மே ளனம் போன்ற சங்கங்களின் கூட்டங்கள் பல இப்பொழுது நடை பெற்று வருகின்றன. இங்கிலையில் கடிதம் எழுதுவதிலோ, வேறெ திலுமோ, கவனம் செலுத்த இயலவில்லை.

அன்பு,

பாபு

## 52

என் அன்புள்ள அமிருத்,

நீ எவ்வளவு நீண்டநாள் சிம்லாவில் தங்குகிறாயோ, அந்த அளவிற்கு எனக்கு அதிக மகிழ்ச்சி. உல்லாச நிகழ்ச்சிகளின் கவர்ச்சி இப்பொழுது அங்கு ஓய்ந்திருக்கும்; ஆகவே உண்மை யான ஓய்வு ஓரளவு பெற உனக்கு வாய்ப்பு கிட்டும். இதுதான் சிம்லாவின் உண்மையான பருவகாலம் என்று நான் கருதுவேன்— அமைதியான, இதமான பருவம். ஜலந்தருக்கு இறங்கிவர நீ அவ சரப்பட வேண்டியதில்லை. இன்னும் சற்றுகாலம் கழித்து நீ அங்கு சென்றாலும், வேலை உன்னைவிட்டு ஓடிப்போய்விடாது.

இந்தியாவில் பெண்கள் நிலைபற்றி நீ எழுதிய அறிக்கையை நான் விமர்சனம் செய்ததுபற்றித் தயவுசெய்து கவலைப் படாதே. பொருளடக்கத்தில் குறைவொன்றும் இல்லை; எழுதப்பட் டிருந்த முறையில்தான் குறையிருப்பதாக எனக்குத் தோன்றியது. உன் களைப்பு, அதை எழுத நடுநிசியில் நீ எரித்த எண்ணெய்— அல்லது நடுநிசி மின்சார விளக்கு என்று கூறவேண்டுமா?— இவற்றின் வாசனையை அந்த எழுத்திலே நான் காணமுடிந்தது. அரசியல் அம்சம் இல்லை என்பது எனக்குக் குறையாகத் தோன்ற வில்லை. அதை நான் அங்கு எதிர்பார்க்கவில்லை. ஆனால் இதைப் பற்றிய முழு விவரமும் நாம் சந்திக்கும்போது கூறுவேன்;—இதை முன்னிட்டு நீ சீக்கிரமே இங்கு வந்தாலும், அதை வரவேற்பேன்.

தேவதாசுக்கு அங்கு முற்றிலும் குணம் ஏற்படவில்லையே என்பது குறித்தும் நீ வருந்த வேண்டியதில்லை. டாக்டர் அன்சாரி, அவன் உடல் நிலைபற்றித் திருப்தியே கொண்டுள்ளார். டில்லியில் இப்பொழுது வெப்பநிலை இதமாகவே உள்ளது. தேவதாஸ் வசதி யான ஒரு வீட்டில் குடியிருக்கிறான். 24 மணி நேரமும் அவன் கூடவே இப்பொழுது பி... இருப்பதில்லை. உன் வீட்டில் கிடைத்த

பரிவையும் அன்பையும் விட அதிகமாக வேறெங்குமே அவனுக்குக் கிடைத்திருக்க முடியாதென்று தேவதாஸ் கூறுகிறான். 'எது குறித்தும் கவலை கொள்ளாதே.'

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

## 53

என் அன்புள்ள அமிருத்.

இந்த அஞ்சலட்டை பற்றி என்ன சொல்வாய்? சௌத்ரி இது போல் ஏராளமாகச் செய்து குவித்திருக்கின்றார். நீ இங்கு வரும் போது, இச் சாதனையைக் காண்பாய்.

சிம்லாவில் உனக்குப் பூர்ண ஓய்வு கிடைக்கிறதென்று நம்பு கிறேன். வேலையை வருவித்துக் கொண்டு, அதற்குப் பின்பு, அன்று செய்ய வேண்டிய வேலையைச் செய்து முடிக்கவில்லையே என்று பதட்டமடையும் உன் வழக்கத்தைக் கண்டு நான் உண்மை யில் அஞ்சுகிறேன்.

அன்பு,

பாபு

## 54

வார்தா,
*18—11—1935*

திருத்தப்படாதது.

என் அன்புள்ள அமிருத்,

கிராமத்திற்கு நீ சென்றதைச் சித்திரித்துள்ளது, ஆறுத லளிப்பதுடன் உருக்கமாகவும் உள்ளது. சிந்தியில் இதுவரை எங் களுக்கு ஏமாற்றங்கள் தவிர வேறெதுவும் ஏற்படவில்லை. ஆகவே உன் அறிக்கை, எங்களுக்கு ஏற்பட்ட தோல்வியை ஈடு செய்யும் முறையில் அமைந்துள்ளது. இந்த முன்னேற்றம் தொடர்ந்து நிலைக்குமென்று நம்புகிறேன்.

சகரன்பூருக்கு நீ போகவில்லையா? போக முடியவில்லையா? முடிந்தால், நீ அங்கு போக வேண்டும்.

என்னிடமிருந்து நீ நீண்ட கடிதம் எதிர்பார்க்க முடியாது. திங்கட்கிழமையன்று மட்டும்—எழுதுவதற்கு வலது கையை நான் பயன்படுத்தும் நாளன்று—உன்னுடன் உரையாடுவதற்குப் பெரிதும் விரும்புகிறேன்.

நீ இங்கு வருவதற்கு முன்பே துப்பாக்கி முனையைக் காட்டி, இங்கிருந்து எப்பொழுது புறப்பட வேண்டுமென்று என்னை அச்சுறுத்துகிறாய். நீ என்றைக்குள் நிச்சயமாக வந்து சேருவாய் என்பதைக் கூறினாலாவது, நீ சொல்வது ஓரளவு நியாயமாக இருக்கலாம்.

ஜம்னாலால்ஜியின் வீட்டில் தேவதாஸ் தங்கியிருக்கிறான். அவன் நன்றாகவே தேறி வருகிறான். தானே எதுவும் எழுத முயன்றால், அவனுக்கு இன்னும் களைப்பு ஏற்படுகிறது. ஆகவே அதிகம் பிறரிடம் சொல்லி, எழுத வைக்கிறான்.

இப்பொழுது பியாரிலாலும் அவன் சகோதரியும் இங்கு தங்கியிருக்கின்றனர்.

குழந்தைப் பருவத் திருமணம் பற்றிய குறிப்பு, ஹரிஜனில் இந்த இதழில் வெளியிடப்பட்டுள்ளதை நீ காண்பாய். மற்ற குறிப்பின் ஒரு பகுதி உரிய நேரத்தில் வெளியாகும். மற்றப் பகுதியை உனக்குத் திருப்பி அனுப்ப வேண்டுமா?

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

26ந் தேதி வாக்கில், திருமதி சாங்கர்[1] இங்கு வரும்போது, நீயும் இங்கிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்?

## 55

வார்தா,
*15—1—1936*

என் அன்புள்ள ஷம்மி,

அமிருத்தை இவ்வளவுநாட்கள் இங்கு நிறுத்தி வைத்ததற்காக நீ என்னை மன்னித்துவிட்டாய் என்றறிவேன். அவள் இங்கிருந்தது எனக்குப் பெரிதும் ஆறுதலாக இருந்தது. அவள் அளவற்ற அன்பை நான் அறிந்துள்ளது அருஞ் செல்வமாகும். அவள் உடல் சீராகவே உள்ளதென்று நீ கண்டாய் என்று நம்புகிறேன்.

1. திருமதி மார்கரெட் சாங்கர்; நான் அங்கிருந்த போது அவர்கள் குடும்பக் கட்டுப்பாடு பற்றிப் பேசினார்கள். நினைவில் நிற்கும் பேட்டி, அது.

நான் நன்ருக இருக்கின்றேன். ஆழ்ந்த சிந்தனைக்குப் பின் நீ கூறிய ஆலோசனைகள் அனைத்தையும், அமிருத் என்னிடம் தெரிவித்தாள்.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

இத்துடன் வருவது, பிரபாபென், அமிருத்துக்கு எழுதியது.

## 56

பம்பாய்,
*18-1-1936.*

நன்ருக இருக்கின்றேன். உன்னைப் பற்றியே எப்பொழுதும் எண்ணிக் கொண்டிருக்கின்றேன். புன்சிரிப்பும் அன்பும் ததும்பும் உன் உருவம், என்முன் அடிக்கடி எழுகிறது.

அன்பு,

பாபு

## 57

ஆமதாபாத்,
*26—1—1936*

கொடுங்கோலர்கள் ஓங்கும் போது, புரட்சிக்காரர்கள் அடிமைகளாகின்றனர். நான் தழைத்து ஓங்குகிறேனே? உன்னைப் பற்றி என்ன?

அன்பு,

பாபு

## 58

ஆமதாபாத்,
*13—2—1935*

என் அன்புள்ள புரட்சிவாதி,

புரட்சிகரமான உன் கடிதங்கள் அனைத்தும் எனக்குக் கிடைத்துள்ளன, நீண்ட பதில் எழுத நான் முயலக்கூடாது. தன் கணவனுடன் சேரப் பிரபா நேற்றுப் பாட்னவுக்குச் சென்ருள். நான் நோயிலிருந்து முற்றும் குணமடைந்து விட்டபின், இனியும் இங்கு

அவளை நிறுத்தி வைப்பது தவறு என்று கருதினேன். விவாதங்களில் கலந்து கொள்வதற்கு வேண்டிய பலம் மெதுவாக வரும். இந்தக் களைப்பு புதிதல்ல. இந்தச் சோர்வு ஓராண்டாகவே, ஏன், அதற்கும் முன்பாகவே என்னைப் பற்றியது.

காந்தியும் கனுவும் என்னைக் கவனித்து வருகின்றனர்; அதை மிகத் திறமையாகச் செய்து வருகிறார்கள். மணி பென் அவர்களுக்கு வழிகாட்டி. இது போன்றவற்றில் மணி பென் மிகுந்த தேர்ச்சி பெற்றவள். சுத்தத்திலும் ஒழுங்கிலும் அவளைத் தோற்கடிக்க முடியாது. பா பம்பாயில் இன்னும் லக்ஷ்மியைக் கவனித்துக் கொண்டிருக்கிறாள்.

ஆண்டவன் சித்தமிருந்தால், நாங்கள் இங்கிருந்து 19ந்தேதி புறப்படுவோம். பார்தோலியில் இரண்டு நாட்கள் இருந்துவிட்டுப் பிறகு வார்தாவுக்குச் செல்வோம். நாங்கள் (சர்தாரும் நானும்) மார்ச்சு ஏழு அல்லது எட்டு தேதியில் டில்லி போய்ச் சேர்வோம். டில்லிக்கு வருவதில் தாமதத்திற்கு உன் கடிதங்கள் ஓரளவு காரணமாகும். பிப்ரவரி கடைசிக்கு முன் டில்லி செல்ல வேண்டாமென்று, அண்மையில் நீ எழுதிய கடிதங்கள் அனைத்தும் என்னை எச்சரித்துள்ளன. தொந்தரவை வலிய ஏன் வருவித்துக் கொள்ள வேண்டுமென நினைத்துத் தவிர்ப்பவர் சர்தார்.

ஷம்மி நன்றாக இருக்கிறாரென்று நம்புகிறேன். நாம் சந்திக்கும் போது, கிராமங்களில் உன் வேலையைப் பற்றிய விவரங்களை எனக்குச் சொல்வாயென்று ஆவலுடன் எதிர்பார்க்கின்றேன்.

வண்டி நிறைய அன்பை அனுப்புவது,

**பாபு அல்லது கொடுங்கோலன்**

—நீ விரும்பும்படியே வைத்துக் கொள்.

## 59

ஆமதாபாத்,
*17-2-1936*

என் அன்புள்ள புரட்சிவாதி,

உன் கடிதம் கிடைத்தது. கொடுங்கோலர் புரட்சிவாதிகளை நீண்ட நாள் சகித்துக் கொண்டிருக்கமாட்டார்கள் என்பதை நினைவிற்கொள். புரட்சிவாதியைக் கட்டுப்படுத்தி, அடிமையாக்க வேண்டுமல்லவா?

உன்னால் வார்தாவுக்கு வர முடியுமானால், நீ வரவேண்டும். வார்தாவிலிருந்து 150 மைல் தொலைவில் உள்ள சாவ்லி என்ற கிராமத்திற்கு வர வேண்டும். அனைத்திந்திய கிராமக் கைத்

தொழில் சங்கத்தின் கூட்டமும், மற்றக் கூட்டங்களும் அங்கு நடக்கப் போகின்றன. காந்தி சேவாசங்கத்தின் உறுப்பினர்—100 பேருக்கு மேல்—அங்கு குழுமியிருப்பார்கள். நாம் நான்கைந்து நாட்கள் அங்கிருந்துவிட்டுப் பின்பு டில்லிக்குச் செல்வோம். டில்லியில் நீ என்னுடன்தான் தங்கவேண்டும். அவர்களுக்கு நான் அதைத் தெரியப்படுத்தி விடுகிறேன்.

வித்யாபீடத்திலிருந்து $1\frac{1}{2}$ மைல் தொலைவிலுள்ள ஹரிஜன ஆசிரமத்திற்கு நான் நேற்று நடந்துசென்று, கனிராமையும் அவர் மகனையும் அங்கு சந்தித்தேன் இருவரும் நல்ல வேலை செய்து கொண்டிருக்கின்றனர். தம்முடைய கண்டுபிடிப்பை அவர் எனக்குக் காண்பித்தார். நான் அவருடன் அதிக நேரம் இருக்க முடியவில்லை; அங்கேயே தங்கி வேலைசெய்யும்படி அவரிடம் கூறினேன். பார்தோலியில் முன்பிருந்த தொழிற்கூடம் ஆசிரமத்திற்கு மாற்றப்பட்டுள்ளது. ஆகவே அவர் திறமையை நன்கு பயன்படுத்த வாய்ப்புள்ளது. அவரும் மகிழ்ச்சியுடன் இருப்பதாகவே தோன்றிற்று. லக்ஷ்மிதாஸ்தான் உனக்குத் தெரியுமே; அவர்தான் கனிராமைக் கவனித்து வருகிறார்.

காந்தி, கனு, இருவரும் என் தேவைகளைக் கவனித்துக் கொள்கின்றனர்; மணிபென் அவர்களுடைய மேற்பார்வையாளர்.

அன்பு,

**கொடுங்கோலன்**

விளையாட்டுப் பந்தயங்களைப் பார்த்துக் கொண்டிருப்பதற்குப் பதிலாகக் கிராமங்களுக்கு நீ சென்று வந்தது குறித்து எனக்கு மிகுந்த மகிழ்ச்சி.

## 60

வார்தா,
24-2-'36.

என் அன்புள்ள புரட்சிவாதி,

உன் நீண்ட கடிதத்தைக் குமரப்பா இரயில் நிலையத்தில் என்னிடம் கொடுத்தார்; கடிதம் கண்டு மகிழ்ந்தேன். ப்ளிட் மருந்தடிக்கும் முறைபற்றிய விளக்கம் அனுப்பியிருந்தது எனக்குப் பெரு மகிழ்ச்சி ஊட்டியது. அது எனக்குப் பெரிதும் தேவையாயிருந்தது. உன் பெயரில்லாமல் அது ஹரிஜனில் வெளிவரும். சிப்பம் சீக்கிரமே உனக்கு வந்து சேரும். அரை கெஜம் வெட்டிவிடுவதற்கு உன்னை நான் அனுமதித்தது எவ்வளவு நல்லதாக முடிந்தது! அப்பொருள்கள் வரும்போது, கலையுணர்வில்லாத கொடுங்கோலன், புரட்சிவாதியின் கலை என்று சொல்லப்படும் சாதனையை முறையாகப் பரிசிலனை செய்வான். சில சமயங்களில் இயற்கையின்

ஏற்றத் தாழ்வுகளிலும், ஒழுங்கற்ற வளைவுகளிலும் கோடுகளிலும் தலையிடாமல் இருப்பதே, கலை என்பதைப் புரட்சிவாதி முன்னரே உணரவேண்டும். பூமியை அடித்து நிமிர்த்து, ஒழுங்கு வடிவமான கோளமாகத் திருத்தி அமைத்தால் என்னவாகும் என்று எண்ணிப் பார். அப்பொழுது ஒரு வேளை நாம் அனைவரும் இல்லாமலே போகக்கூடும். ஆகவே நானே உன் கலைக்குப் பாராட்டு தெரிவித்தால், அது உன் மகுடத்தில் ஒரு மாணிக்கமாகும். ஆனால் மாணிக்கம் வேண்டுமானால், முதலில் நீ மகுடம் அணிய வேண்டுமே!

பயணத்தையும் பொருட்படுத்தாது நான் எவ்வளவு நன்றாக இருக்கின்றேன் என்பதை இது காட்டும்.

நீ சாவ்லிக்கு வர முடியாதது குறித்து வருந்துகிறேன்.

நாம் டில்லியில் சந்திக்கும்போது, சேவை செய்யும் வகையில் நீ என்ன செய்யமுடியும், என்ன செய்வாய் என்பது குறித்து யோசிக்கலாம். உன் நிகழ்ச்சிகளுக்குப் பின் வேறெதற்கும் உனக்கு அவகாசமே இராது.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

**கொடுங்கோலன்**

## 61

வார்தா,
*28—2—'36.*

என் அன்புள்ள புரட்சிவாதி,

பசுவின் பாலிலிருந்து நெய்யை நான் சாப்பிட முடியாது. ஆட்டுப் பாலையும் அதன் பொருட்களையும் தான் நான் சாப்பிட முடியும். ஆட்டுப் பாலை நிறையத் திரட்டி வைத்திரு.

வேட்டிகள் வந்துள்ளன. ஓரம் நன்றாக பின்னப்பட்டிருந்தது. ஆனால் அவை வேட்டிகளுக்கு ஏற்றவையல்ல. நாம் சந்திக்கும் போது நீ அதை உணர்வாய். ஆனால் நான் அணியும் மேலாடைகளாக அவற்றைப் பயன்படுத்த முடியும். நூல் மிக நேர்த்தியானது தான். அவற்றைப் பார்த்த அத்தனை பேரும் அவற்றின் இழையமைப்பையும், ஓரம் பின்னிய வண்ணத்தையும் பாராட்டினார்கள்.

சாவ்லிக்கு இன்றுமாலை புறப்படுகிறோம்; அனேகமாக 6ந்தேதி மாலை இங்கு திரும்புவோம். நீ சாவ்லி முகவரிக்கு எழுதினால், ஒரு கடிதம்தான் அங்கு எனக்கு வந்து சேரும். சந்தா மாவட்டம், ம.மா—என்று முகவரி எழுதவேண்டும். பொது மக்களைப் பொறுத்த வரை, சாவ்லி யாருக்கும் தெரியாத கிராமம். நீ அங்கு நிச்சயம் வருவாய் என்று எதிர்பார்த்திருந்தேன்; ஆகவே நீ வராதது

எனக்கு வருத்தம்தான். காந்தியும் கனுவும் என்னுடன் அங்கு வருவார்கள்.

டில்லிபோய்ச் சேரும் தேதி இன்னும் தீர்மானமாகவில்லே. மார்ச்சு எட்டாம் தேதி போய் சேருவோமென்று இன்னும் எதிர் பார்க்கின்றேன்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 62

*2—3—'36.*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நான் இங்கு வந்து சேர்ந்தபோது, உன் கடிதம் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தது.

இன்னும் வெப்பம் தொடங்கவில்லே; ஆனல் குளிரும் இல்லே. ஜான்சி அருகே மழைபெய்தது. நாங்கள் அனைவரும் நன்ருக இருக்கின்ரேம். பா, நவீன் ஆகியோரும் எங்கள் குழுவில் சேர்ந்திருந்தனர். பூரியும் எங்களுடன் இருந்தார்.

நாங்கள் வந்து சேர்ந்தவுடன் ஒரு தந்தி அனுப்பினேம். அது வந்து சேர்ந்ததென்று நம்புகிறேன்.

சால்வைகள் அல்லது கழுத்துப் பட்டிகைகள் என்று தப்பாகச் சொல்லப்படும் மேலாடைகளுக்கு, நீ முடிச்சுப் போட்டு அணி செய்துள்ளது குறித்துப் பெருமை அடையலாம். உன் நூற்பு குறித்தும் நான் பெருமைப்படுகிறேன். நூற்பு உண்மையான கலேயாகும். புதிதாகப் பயிற்சிபெறும் நீ இவ்வளவு திறமையாக நூற்பது பாராட்டுதற்குரியது. ஆகவே அவ்வப்போது புரட்சிவாதிக்கும் பாராட்டுத் தெரிவிக்க வேண்டிய நிலேயில் உள்ள,

**கொடுங்கோலன்**

அடுத்த மாதம் 11ந் தேதி நீ வரும்போது நேராக ஹரிஜனக் குடியிருப்புப் பகுதிக்கு வந்துவிடு.

## 63

லக்ஷ்மணபுரி,
*3—4—'36.*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நீ இன்றுவரை இங்கு இருந்திருக்கக் கூடுமென்ற போதிலும், நீ செவ்வாய்க்கிழமையே சென்றது நல்லதுதான். உன் தந்தி நன்ருக இருந்தது; உன் கடிதமோ முந்திய கடிதங்களின் அருமை

யான தரத்துக்கு ஏற்றதாகவே இருந்தது. ஆம்; இங்கும் மழை பெய்தது; ஆனால் மழையினால் பொருட்காட்சி அதிகம் பாதிக்கப் படவில்லை. மணல் காற்றும் வாடைக்காற்றும் வீசியது நல்ல எச்சரிக்கையாக அமைந்தது. இப்பொழுது பொருட்காட்சிக்கு வருவோரின் எண்ணிக்கை பெருகியுள்ளது. உனக்காகக் கதர் வாங்குமாறு நீ உன் மைத்துனியிடம் சொன்னது நல்லதுதான். அவர் நேற்று சென்று நிறையக் கதர்த் துணி வாங்கினாரென்று அறி கிறேன்; அது அனைத்தும் உனக்காக அல்ல என்று நம்புகிறேன். 35 ரூபாய்க்கு அருமையான ஒரு பாயை உனக்காக வாங்க ஆசைப் பட்டேன். ஆனால் அந்த ஆசையை அடக்கிக்கொண்டேன். அதை வாங்க மகாதேவும் விரும்பினார்.

ஹரிஜன உணவு விடுதியில் ஏன் சாப்பிடமாட்டாரென்று நபி பக்ஸ் உன்னிடம் விளக்கம் கூறியது கேட்டு மகிழ்கிறேன். அது குறித்து அம்துல் சலாமிடம் நான் பேசுகிறேன். காலை வழிபாட்டுக்கு முன் இதை எழுதுகிறேன். அதிர்ச்சி அடையாதே. காலையில் 3-50க்குத்தான் நான் விழித்தேன்.

மற்ற நேரங்களைக் காட்டிலும், உலாவச் செல்லும்போதுதான், நீ இங்கு இல்லையே என்றிருக்கிறது. மற்ற நேரங்களில், நான் உன்னைச் சந்திக்க அதிக வாய்ப்பில்லையே.

மிகவும் தள்ளிப்போனால் ஜூலை மாதத்திலாவது வருவா யென்று எதிர்பார்க்கின்றேன்.

ஷம்மிக்கு நீர்க்கோப்பு நீங்கிவிட்டதென்று நம்புகிறேன். பெரில்கூட நன்கு குணமடைந்திருப்பாள்.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

## 64

*அலகாபாத்,*
*5—4—'36.*

என் அன்புள்ள புரட்சிவாதி,

உன் கடிதம் ஒழுங்காக இன்று வந்து சேர்ந்தது. லக்ஷ்மண புரிக்கு நான் போய்ச் சேரும்போது, அந்தச் சால்வை இன்னும் விற்பனையாகாமல் இருந்தால், அதை உனக்கு வாங்கித் தரு வேன். ஆனால் விலை அதிகமில்லாத, அதே சமயத்தில் உண்மை யழகு பொருந்திய, கிராமக்கலை யொன்றை நீ உருவாக்க வேண்டும். குடும்பக் கட்டுப்பாடு பற்றி நான் கடைசியாக எழுதிய கட்டுரையில், கலையைப் பற்றிய குறிப்பை நீ கண்டிருப் பாய். வீணாகப் போகும் மூங்கிலிலிருந்து நவீன் செய்த மரக்

கரண்டி அழகு நிறைந்ததாயிருந்த அதே சமயத்தில், விலை குறைவானதாகவும் இருந்தது என்று நீயே ஒத்துக் கொண்டாயே.

அவசியத்தைக் கருதி பொருள்கள் விலை குறைவாக இருக்க வேண்டும்; அதே சமயத்தில் அவை கவர்ச்சிகரமாகவும் இருக்க வேண்டும். அவையிரண்டையும் இணைக்க உங்களுக்குள்ள ஆற்றல்தான், உன்னைப்போன்ற பெண்கள் கிராமவேலையை மேற்கொள்வதில் உள்ள சிறப்பு. கலை உண்மையாக இருக்க வேண்டுமானால், விலையைப் பொறுத்தவரை நயமாக இருக்க வேண்டும் போலும்.

இன்று மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 65

லக்ஷ்மணபுரி,
*8-4-1936.*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நான் அனுப்பிய தந்திக்கு உன் பதில் தந்திக்காகக் காத்துக் கொண்டிருக்கின்றேன். இவ்வாறு அடிக்கடி உனக்கு நீர்க்கோப்பு ஏற்பட நீ இடம் கொடுக்கக் கூடாது. முன் கவனமாக, இயற்கையோடு இயைந்த வாழ்க்கை வாழ்வதன் மூலம், நீர்க்கோப்பு அடிக்கடி நேரிடுவதை உன்னால் தடுக்க முடியும் என்று நான் உறுதியாக நம்புகிறேன். உன் உடம்போடு ஒட்டிய உள்ளாடைகள் பட்டுத் துணியாக இருப்பதற்கும், உன் சருமம் இவ்வளவு நுண்ணியதாகவும் ஊறுபாடு பொருததாகவும் இருப்பதற்கும், அதிகத் தொடர்பு உள்ளதென்று அஞ்சுகிறேன். அடிக்கடி குளிப்பதாலும், இன்னும் பலமுறை முகத்தைக் கழுவுவதாலும் உன் சருமத்திற்கு அடிக்கடி எரிச்சலும் உண்டாகிறது. இதற்கும் மேலாக, சோப்பைப் பயன்படுத்தும் தவறான பழக்கத்தால், இயற்கை சருமத்தைக் காக்கப் பயன்படுத்தும் பசைச் சத்து அடியோடு அழிக்கப்படுகிறது. இம்மூன்று புறக்காரணங்களுக்கும், உனக்கு அடிக்கடி நீர்க்கோப்பு உண்டாவதற்கும் நெருங்கிய தொடர்பு உண்டென்று எண்ணுகின்றேன். ஷம்மியுடன் இதைப் பற்றிப் பேசு. என் கருத்தை அவர் மருத்துவ நிபுணத்துவம் ஆதரித்தால், அவசியமான மாறுதல்களைச் செய்; அனைவற்றையும் ஒரேயடியாகச் செய்ய வேண்டாம்; ஒன்றொன்றாகச் செய்யலாம்.

குர்ஷித் இங்கு உள்ளாள்; பெரின் கூட. உன் குறிப்பை அவர்களுக்கு அனுப்பிப் பொருட்களைத் தேர்ந்தெடுக்கும்படி கூறியுள்

ளேன். 600 ரூபாய்க்கு மேற்படாமல் முதலீடு செய்ய அனுமதி அளித்துள்ளேன். இப்பொருட்களால் உனக்கு நட்டம் ஏற்படக் கூடாது. சால்வையும் கத்தியும் மற்றப் பொருள்களுடன் சேர்த்துக் கட்டி அனுப்பப்படும்.

இதை நான் எழுதும்போது, பிரபா என்னருகில் அமர்ந்துள்ளாள். அவள் நான்கு நாட்களுக்கு முன் வந்தாள்.

அன்பு,

பாபு

## 66

*லக்ஷ்மணபுரி*
*13-4-1936*

பதட்டமுறும் என் அன்புள்ள முட்டாளே,

உன்னிரு கடிதங்களும் என் முன் உள்ளன. நாளை நான் புறப்படக்கூடும்; எப்படியும் அதற்கு மறு நாளாகிலும் புறப்படுவது நிச்சயம். ஊர் விட்டு ஊர் மாறிச் சென்றவுடன் எனக்கு அடிக்கடி மறதி வந்துவிடுகிறது. அப்படி மறதி வராவிடில், நான் வார்தா போய்ச் சேர்ந்தவுடன் உனக்கு ஒரு தந்தி அனுப்புவேன்.

உனக்கு அனுப்ப வேண்டிய சிப்பம் தயாராகிக் கொண்டிருக்கிறது.

நான் எண்ணியது அந்த நூறு ரூபாய் பற்றி. கமலா நினைவு நிதிக்கு நீ அளிக்கும் நன்கொடையுடன் அத்தொகையைச் சேர்த்துக் கொள். அதுபற்றிய அறிக்கையை ஓரிரு நாட்களில் காண்பாய். நீ வசதியாக எவ்வளவு அதிகம் கொடுக்க முடியுமோ அவ்வளவு கொடுக்கலாம். அவளை உனக்கு நன்கு தெரிந்திருந்தால், அபூர்வ ஆன்மீக எழில் நிரம்பியவள் அவள் என்பதை நீ உணர்ந்திருந்தால், அந்நிதிக்காக நீ, சிரமமில்லாமல் வசூல் செய். எவ்வழியிலும் அதை ஒரு சுமையாக்கிக் கொள்ளாதே. நான் சொல்கிறேன் என்ற காரணத்திற்காக நீ அதைச் செய்யக் கூடாது.

சேகானிலே நான் குடியேறி விட்டாலும், வெளியுலகமும்—குறிப்பாக முட்டாள்கள், பைத்தியக் காரர்கள் போன்றவர்களும்—என்னுடன் எளிதில் தொடர்பு கொள்ள வசதி செய்வேன். என் உடன் பிறந்த கழுதையை நன்கு கவனித்துக் கொள்வேன் என்பதையும் உறுதியாக நம்பலாம். ஆகவே எதைப் பற்றியும் நீ கவலைப்படாதே.

---

* அனைத்திந்திய கிராமக் கைத்தொழில்கள் சங்கம் என்பதில் கைத்தொழில்கள் என்பதன் ஆங்கிலச் சொல்லைக் குறிக்கும் 'I' என்பதை, முட்டாள்கள் என்பதன் ஆங்கிலச் சொல்லை (இடியட்ஸ்) குறிப்பதாக, வியாக்கியானம் செய்திருந்தேன். அதற்கு எனக்குக் கிடைத்த பட்டம்!

உனக்கு வேண்டிய பொருட்களைச் சீக்கிரம் வாங்குமாறு நான் குமரப்பாவிடம் கூறியுள்ளேன்.

மகன்வாடியில் மருத்துவ மனை கட்டும் செலவை நீ நிச்சயமாக ஏற்றுக் கொள்ளலாம்.

மேலும் அவகாசமில்லை.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 67

வார்தா
*18-4-1936*

என் அன்புள்ள முட்டாள்,

நேற்று இங்கு வசதியாக வந்து சேர்ந்தோம். என் தந்தி உனக்கு நேரத்தில் கிடைத்ததென்று எண்ணுகிறேன். சர்தாரும் இராஜன் பாபுவும் என்னுடன் வந்தனர். ஆகவே எங்கள் குழாம் பெரிது. ஆனல், எங்களால் இரயிலில் மற்ற பயணர்களுக்கு இடைஞ்சல் இல்லாமல் வந்தோம். இடார்சியிலிருந்து மட்டும் பாசஞ்சர் வண்டியில் பயணம் செய்தோம்.

என் திட்டப்படி, மே மாதம் நடுவில் வரை, நான் வார்தாவிலும் அதன் சுற்றுப் பகுதிகளிலும் தங்கியிருப்பேன். அதன் பின்பு, இரண்டு வாரங்களுக்குப் பஞ்சகனிக்குச் செல்லக்கூடும்.

உன் தொண்டை ஒழுங்காக இருக்கிறதென்று நம்புகிறேன். இது போன்ற உடல் ஊறுகளை நீ தவிர்க்க வேண்டும். எவ்வாறு அதைச் செய்வாய் என்பது எனக்குத் தெரியவில்லை. ஆனல் எளிதான, இயற்கையான பரிகாரம் இருக்கிறதென்று நான் நம்புகிறேன்.

ஜவாஹர்லால் இங்கு இம்மாதம் 24ந் தேதி வருவார்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 68

வார்தா,
*20-4-1936*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நான் எதையும் பற்றிக் கவலைப்படுவதில்லை என்று நீ சொல்வது உண்மையே. ஆகவேதான் உன்னைப் பிடிவாதமாக வருத்திய

இருமலை நீ பொருட்படுத்தாமல் இருந்து விட்டதைப் பற்றிக் கூடக் கவலைப்படாமல் இருந்து விட்டேன். ஆனால் கவலைப்படா மல் இருப்பதென்றால், அதைப் பொருட்படுத்தாமல் இருக்க வேண்டுமென்றோ, இத்தகவலை அசட்டை செய்யவேண்டு மென்றோ பொருளில்லை. நீ இவ்வளவு மென்மையாகவும் ஊறு பொறாத வண்ணமும் ஏன் இருக்க வேண்டும்? வெப்பநிலையில் ஏற்படும் சிறுமாறுதலும் உன்னை ஏன் பாதிக்க வேண்டும்? உணவுதான் இதற்குக் காரணமென்றால், பழைய உணவு முறையை நீ மீண்டும் பின்பற்ற வேண்டும். எக்காரணம் கொண்டும் நீ உன் உடல்நலன் கெட இடம் கொடுக்கக்கூடாது. அனைத்தையும் தியாகம் செய்வது அவசியமாகும் கட்டங்கள் சில, ஒவ்வொருவர் வாழ்விலும் எழுகின்றன. திடீரென ஒரு புது முறையை ஏற்றுக் கொள்வது, நிச்சயமாக அத்தகைய கட்டங்களில் ஒன்றாகாது. இயற்கை சிகிச்சையையே நான் எப்பொழுதும் ஆதரிப்பவன். ஆனால் ஷம்மி ஒத்துழைத்து, உனக்கும் அதில் நம்பிக்கை ஏற்பட்டு, முறையாக ஆலோசனை கூறத் தகுந்த வழிகாட்டியும் உனக்குக் கிடைத்தால் ஒழிய, நீ அந்தச் சிகிச்சை முறையை ஏற்றுக் கொள்ள முடியாது. வழிகாட்டியை ஏற்பாடு செய்து கொள்ளலாம்; ஆனால் ஷம்மி சம்மதிக்காமல் போகலாம்; உனக்கு அதில் நம்பிக்கை இல்லாமலும் போகலாம். விருப்பம் இருப்பது போதாது; நம்பிக்கை வேண்டும். உன் உடல் ஊறுகளுடன் மட்டும் தயவு செய்து விளையாடாதே. புரட்சிவாதி கூட, இயற்கை நியதிகளுக்குக் கட்டுப்பட வேண்டும்.

நாளை இதை விட நல்ல செய்தி வருமென்று எதிர்பார்க் கின்றேன்.

தந்தியை ஒட்டி ஏற்பட்ட துன்ப நாடகம் பற்றி எல்லாம் உனக்குத் தெரியும். விடிவதற்கு முன்பே நீ கூவிவிட்டாய். மின் சார நிலைக்கொளுவி இப்பொழுது என் மேசையை அணி செய் கிறது. பரதன் அதை நேற்றுக் கொண்டு வந்தார்.

அன்பு,

கொடுங்கோலன்

## 69

வார்தா,
*24—4—1936*

என் அன்புள்ள முட்டாள்,

முட்டாள்களுக்குத் தான் முட்டாள்தனமான வியாக்கி யானங்கள் தோன்றும். முட்டாள்களின் தலைசிறந்த எடுத்துக் காட்டாய் நீ விளங்குவதாலும், அனைத்திந்தியக் கிராமக் கைத் தொழில் சங்கத்தின் பிரதிநிதியாக இருப்பதாலும், மற்றவர்களும் உன் இனத்தைச் சேர்ந்தவர்களாய் இருக்க வேண்டுமென்று நீ

விரும்புவது இயற்கையே. அவர்களுக்கு வழிகாட்டியாக அமைந் துள்ள என்னை—பாவம்—இறைவன் தான் காப்பாற்ற வேண்டும்.

உலகில், சிரமம் இல்லாமல் எதையும் செய்ய முடியுமென்று நீ எண்ணுகிருயா? உன் பெட்டிகளிலிருந்து சாமான்களை எடுத்து வைப்பதில் கூட ஓரளவு சிரமம் இருக்கத் தான் செய்யும். அப்படி யிருக்க, சிரமமில்லாமல் செய்ய முடியுமானல் மட்டுமே, உனக்குத் தேன் அனுப்புவதாகக் கொடுத்த வாக்குறுதியைக் காப்பாற்ற வேண்டுமென்று நீ சொல்வதில் என்ன பயன்? ஓரளவு சிரமமில் லாமல் அதைச் செய்ய முடியாதென நான் உனக்குச் சொல்வேன். ஆனல் அந்த சிரமத்தை ஏற்றுத் தேனை அனுப்பத் தான் போகிறேன். நீ அடுத்த தடவை பணம் அனுப்பும் போது, இந்தச் செலவுக்கும் சேர்த்து அனுப்பு. அதற்குப் பின்பு அனுப்பும் சிப்பங் களைக் கல்கத்தா அல்லது ஷில்லாங்கிலிருந்து உனக்கு நேராக அனுப்ப ஏற்பாடு செய்யலாம்; கட்டணத்தைச் செலுத்திப் பெற்றுக் கொள்ளும் சிப்ப அஞ்சலில் அனுப்பலாம். அடுத்த சிப்பத்தை எப் பொழுது அனுப்ப வேண்டுமென்று நீ என்னிடம் கூறு. ஆஸ்திரே லியத் தேனைவிட இதை விரும்பினர்களானல், அனைவரும் இதையே சாப்பிடலாம். அயல்நாட்டுத் தேனைவிட, ஷில்லாங் தேன் என்றைக்கும் உயர்ந்தது என்று நான் உறுதியாக நம்பு கிறேன். தேன் உடனுக்குடன் பசுமையாகக் கிடைக்கும் ஒரு காரணமே போதும்.

உன் மெத்தையும், இரு பக்கமும் மாற்றி அணியக் கூடிய உன் புடவையும், இங்கிருந்து அனுப்பப்பட்ட பெட்டியில் இருக்கு மென்று எண்ணுகிறேன். இதற்குள் அப்பெட்டி வந்து சேர்ந் திருக்கும். அதில் ஏதோ குழப்பம் நேரிட்டதென்று அறிவேன். நீ ஒருத்தி தான் முட்டாள் என்று எண்ணிவிடாதே. முட்டாள் களிடையே ராஜகுமாரியாக வேண்டுமானல், நீ இருக்கலாம். அப்படித்தான?

நாளை நான் நாகபுரிக்குச் செல்வேன்; அநேகமாக 25ந் தேதி, நிச்சயமாக 27ந் தேதி திரும்புவேன். இங்கிருந்து 5 மைல் தொலைவிலுள்ள சேகானுக்கு 29 அல்லது 30-ம் தேதி சென்று, தேவைப்படும்போது திரும்புவேன். மே 9ந் தேதி வாக்கில் சர்தாருடன் மைசூரில் நந்தி மலைக்குச் செல்வேன். மகாதேவும் மற்றவர்களும் எனனுடன் வருவார்கள். இல்லாவிடில் மகாதேவ் உன்னுடன் ஒரு மாதம் தங்க வேண்டுமென்று நான் வற்புறுத்தி யிருப்பேன். ஜூன் முதல் தேதி வாக்கில் பெங்களூருக்கு இறங்கி வந்து, 10ந் தேதி வாக்கில் அங்கிருந்து புறப்படுவேன். சர்தார் மலையில் ஓர் ஊருக்குச் சென்று தங்க வேண்டுமென்று டாக்டர் அன்சாரி விரும்புகிருர். நானில்லாமல் அவர் போக மறுக்கிருர். ஆகவே நானும் போக வேண்டியதாகிறது. மைசூருக்குப் போகும் அவசியம் ஏற்பட்டிராவிடில், நான் பஞ்சகனியில் சகோதரிகளுடன் ஒரு வாரம் தங்கியிருப்பேன். அவர்களுக்கு ஏமாற்றம் அளித்த தற்காக வருந்துகிறேன்.

நான் சிம்லாவுக்கு வர நேரிட்டால், நிச்சயம் உன்வீட்டில் வந்திறங்கி, உனக்குத் தான் சுமையாய் இருப்பேன். உடனடியாக அங்கு வர வேண்டிய அவசியம் இராதென்று எண்ணுகிறேன். ஆனால் உன்னைப் பொறுத்த வரையில் மாரி காலத்தில் மூன்று மாதங்கள் என்னுடன் தங்க நீ தந்த வாக்குறுதியை நிறைவேற்ற வேண்டுமென வற்புறுத்துவேன். அப்பொழுது என் மேற்பார்வையில் உணவுக் கட்டுப்பாடுகளை மேற்கொள்வாய். ஷம்மி அதுபற்றி என்ன சொல்வார்?

அன்பு,

பாபு

# 70

சேகான்,
*1-5-1936*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நீ முட்டாளாக இராவிடில், புரட்சிவாதியாகவும் இருக்க மாட்டாயே! ஆகவே இவற்றில் எந்தப் பட்டம் உனக்கு மிகப் பொருத்தமானது என்பது தான் பிரச்னை. தனக்குரிய பட்டங்களைத் தானே தேர்ந்தெடுத்துக் கொள்ள முடியாது. ஆகவே 'புரட்சி வாதி' என்ற பட்டத்தை நீ விரும்புவதால், முட்டாள் என்ற பட்டத்தைத் தான் உனக்கு நான் சூட்ட வேண்டும் என்றெண்ணுகிறேன். ஆனால் கொடுங்கோலன் என்று நான் சொல்லப்படுகிற போதிலும், இன்றையப் புரட்சிவாதி, நாளை மனமுவந்து அடிமை நிலையை ஏற்றுக் கொள்ளும்படி செய்யவே, நான் உனக்குச் செல்லம் தருகின்றேன்.

கடைசியில் நான் சேகான் வந்து சேர்ந்து விட்டேன். பியாரிலால் என்னுடன் இருக்கின்றார். அவர் என்னுடன் இருக்க வேண்டுமென்று நானே சொன்னேன். பா வருவதாக இருந்தது; ஆனால் அவளுக்குச் சுகமில்லை. ஏறக்குறைய முழு தூரமும் நான் நடந்தே சென்றேன் என்றறிய நீ மகிழ்ச்சி அடைவாய். அதனால் எனக்குக் கெடுதல் ஏற்படவில்லை. நாங்கள் வழிதவறிச் சென்று, மற்றவர்கள் என்னைப் பற்றிக் கவலைப்பட்டுக் கொண்டிருந்ததால், எஞ்சிய முக்கால் மைல் தூரத்துக்கு வண்டியில் சென்றேன். நாங்கள் நேற்று வந்து சேர்ந்தோம். இரவு மிகவும் அருமையாய் இருந்தது.

இரு பக்கமும் மாற்றிக் கட்டக் கூடிய புடவையை நீ தான் தேர்ந்தெடுத்தாய். அது சால்வையா, புடவையா, நான் மறந்து விட்டேன். சால்வை உனக்குத் திரும்பி வந்து விட்டதென்றால், தவறுதலாக வந்திருக்கும். அது எனக்குத் திரும்பி வர வேண்டியது.

உன் பணம் உனக்கு வந்து சேர்ந்ததென்று எண்ணுகிறேன். மகாதேவ் இதை எடுத்துக்கொண்டு உடனே புறப்பட வேண்டியிருப்பதால், மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

பாபு

## 71

சேகான்
*5-5-'36.*

என் அன்புள்ள முட்டாள்,

இதற்குள் சேகானிலிருந்து ஒரு கடிதத்திற்குமேல் உனக்கு வந்து கிடைத்திருக்கும். இன்னும் ஓரிரண்டு நாட்களில் உனக்கு ஊரும் அந்த வாழ்க்கையும் பிடித்துப் போகுமென்ற நம்பிக்கை எனக்குண்டு. நேற்று, பா என்னுடன் வந்தாள். நான் வழி முழுதும் நடந்தே சென்றேன். சரியாக இரண்டு மணிநேரம் பிடித்தது. மீண்டும் சிறிது வழிதவறிச் சென்றோம். வழிகாட்டி எவருமில்லாத புதுப் பயிற்சியாளர் நாங்கள். நான் பேசாமல் இருந்தேன். அந்தத் தூரத்தை நான் $1\frac{3}{4}$ மணி நேரத்தில் நடந்து முடிக்க இயலும். நடந்ததால் எனக்குக் களைப்பு எதுவும் ஏற்படவில்லை; மாலையில் மீண்டும் நடப்பதற்கு நான் ஆயத்தமாக இருந்தேன். மகாதேவும் லீலாவதியும் இரவு 8-30 மணிக்கு வந்தனர்; வேலை நடந்துகொண்டிருக்கும் இடத்திலேயே, தரையில் படுத்துக் கொண்டனர். நாங்கள் அனைவரும் அங்குதான் படுத்துக் கொள்கிறோம்; எங்களைச் சுற்றி எல்லாப் பக்கமும், அகழ்ந்தெடுத்த மண் தாங்கி நிற்கும் இரு சாரக் குழிகள். இங்கு பயிராகும் காய்கறிகளையே நாங்கள் சாப்பிடுகிறோம். அதனால் காய்கறிகளில் பல வகைகளைச் சாப்பிட வாய்ப்பில்லை; ஆனால் உள்ளூரிலேயே பயிரான காய்கறிகளைச் சாப்பிடுகிறோமென்ற எண்ணம் அதற்கு ஈடு செய்கிறது. இந்த ஏற்பாட்டை உறுதியாகக் கடைப்பிடித்தால், நாளடைவில் மற்றக் காய்கறிகளும் பயிர் செய்வதற்கு அது தூண்டுதலாக அமையும். சேகானைப் பொறுத்தவரை, செய்தி அவ்வளவுதான்.

லக்ஷ்மணபுரியிலிருந்து வரவேண்டிய சிப்பம், 600 ரூபாய்க்கு மேல் மதிப்புள்ள பொருட்களுடன் அனுப்பப்பட்டு விட்டதென்ற அறிவிப்பு செல்வி அலாவிடமிருந்து கிடைத்ததென்று சில தினங்களுக்கு முன் நீ எழுதினாய். நீ அனுப்பிய சால்வை அதில் இராவிடில் நன்றாக இருக்குமென்றுகூட நீ எழுதியிருந்தாய். அந்தச் சிப்பம் என்னவாயிற்று? முகவரிகளுடன் எங்கு அனுப்ப வேண்டுமென்ற விபரங்களும் ஒழுங்காகத் தெரிவிக்கப்பட்டன. ஆனால் அனைத்தும் தலை கீழாய் ஆயிற்று. அனைவருக்குமே அளவுக்குமீறிய வேலை இருந்தது. அச்சிப்பம் தவறுதலாகச் சிம்லாவுக்குச் சென்றது குறித்து வருந்துகிறேன். தவறான முகவரிக்கு அனுப்

பினல், எவ்வளவு சிரமம் ஏற்படுமென்பதை நான் அறிவேன். இதைப்பற்றிக் குர்ஷிதிடம் ஒருமுறைக்குமேல் சொல்லியிருந்தேன்; பிறகு ஜெரஜானியிடமும் கூறியிருந்தேன். இறுதியில் என்ன நடக்கிறதென்று பார்ப்போம். அச்சிப்பம் வந்து சேர்வதற்குமுன், பணத்தை அனுப்ப வேண்டாம். தவருக முகவரி எழுதினதால் கூடுதலான செலவு எவ்வளவு ஏற்பட்டது என்பதைத் தெரிய விரும்புகிறேன்; தகவல் தெரிவதற்காக மட்டுமேதான்.

ஜலந்தர் நியமனம் உனக்கு வந்தால் அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நான் உறுதியாகக் கருதுகின்றேன்.[1] அதை ஏற்றுக்கொள். கல்லூரிப் பொறுப்பையும் நீ எடுத்துக்கொண்டிருக்கிருய். இவற்றை இலேசாகக் கருதி ஒதுக்கிவிட முடியாது.

குமரப்பா பற்றி நீ சொன்னது சரி. அவர் நந்திமலைக்கு வருகிருர். என்ன செய்வது இயலும் என்பதைக் கவனிக்கின்றேன். அறுவை சிகிச்சை செய்வது அவசியமென்றும் அறுவை மருத்துவர் தேர்ச்சி பெற்றவரென்றும் எனக்கு நிச்சயம் ஏற்பட்டாலொழிய, அறுவை சிகிச்சைக்கு ஏற்பாடு செய்யமாட்டேன். பரதன்கூட அநேகமாகக் கொடைக்கானல் செல்வார்.

நான் புறப்படும் தேதியை—இம்மாதம் 8ந் தேதியை—நினைவிற்கொள். 8ந் தேதி காலை நான் சேகானிலிருந்து புறப்படுகிறேன்.

அன்பு,

**கொடுங்கோலன்.**

## 72

நந்திமலை,
*11—5—1936*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம் இப்பொழுது தான் கிடைத்தது. நேற்று நாங்கள் இங்கு வசதியாகவும் பத்திரமாகவும் வந்து சேர்ந்தோம். நேற்று ஞாயிற்றுக்கிழமை; ஆகவே தான், நான் உன்னைப் பற்றி எண்ணிய போதும், தந்தி அனுப்புவதற்கு முடியாமல் போயிற்று. கிராம மக்களுடன் தொடர்பு கொள்ள விரும்புவோர், தந்தி என்ற வசதி இருப்பதையே மறந்துவிட வேண்டும். வாரத்துக்கு ஒரு முறை தான் கடிதம் அவர்களுக்குக் கிடைக்கும்; பல முறை அது கூடக் கிடைக்காமல் போகும். சேகானில் வாரமொரு முறை கடிதங்கள் விநியோகிக்கப்படுவதாக ஐதீகம். ஆனல் வார்தாவில் உள்ள தபால்காரர், தாம் சந்திக்க நேரிடுகிற, தம் நம்பிக்கைக்கு

1. ஜலந்தர் நகராட்சிக்கு என்னை நியமனம் செய்ய ஒரு யோசனை இருந்தது.

உரிய சேகான் வாசி எவரிடமும் கடிதங்களைக் கொடுத்து விடுவாரென்று கூறப்படுகிறது.

உன் கடிதங்களை நான் படித்துப் பதிலும் எழுதியவுடன் அவை அனைவற்றையும் கிழித்து விடுகிறேன்.

இரயிலில் பயணம் செய்யும் போதே பென்சிலைக் கொண்டு நான் எழுதிய கடிதம் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன். சென்னையில் அதைத் தபாலில் சேர்த்தேன்.

அடிவாரத்திலிருந்து மலை மேல் ஏறி நான் நடந்தேன். ஐந்து மைலுக்கு மேல் நடந்தேன். $2\frac{1}{2}$ மணி நேரம் எனக்குப் பிடித்தது. நான் மெதுவாகவே நடந்தேன்; ஆகவே களைப்பு தோன்றவில்லை. கோடை காலத்தைச் சர்தார் மலையில் கழிக்க வேண்டுமென்று விரும்பியது, டாக்டர் அன்சாரி. அவரே காலமாகி விட்டார். திடீரென அவர் மரணம் அடைந்திருக்க வேண்டும். என்னைப் பொறுத்தவரை, அது பெரிய இழப்பு ஆகும். பல விவகாரங்களில் நான் அவருடைய ஆலோசனையை நம்பியிருந்தேன்.

ஜலந்தர் நகராட்சிக்கு உன்னை நியமனம் செய்வதை நீ மறுக்கக் கூடாதென்று பலரும் வற்புறுத்துவது இயல்புதான். முட்டாள்கள், எப்பொழுதுமே நாணயமானவர்கள்; ஆகவே பாரபட்சம் காட்டமாட்டார்கள். அவர்களுக்கு எப்பொழுதுமே கிராக்கிதான். அதிலும் நீயோ முட்டாள்களிலே, ஒரு ராஜகுமாரி—பரம்பரை அரசகுமாரியல்ல; தகுதியால் அந் நிலைக்கு வந்தவள். ஆகவே உனக்கு அதிகக் கிராக்கி இல்லாமல் போகுமா?

சிம்லாவில் உள்ள சுகாதாரக் கேட்டைக் குறைக்க நீ முயற்சி செய்வதில் எனக்குத் தடையில்லை. ஆனால் நீயே தொத்து நோய்க்கு இரையாகி விடக் கூடாது. நகராட்சிக் குழுவின் மூலம் நடவடிக்கை எடுக்க ஏன் முயலக்கூடாது? சேகானிலும் சிந்தியிலும் உள்ள நிலைமைதான், சிம்லா எனும் கரு நகரத்திலும் இருக்க வேண்டும். சென்னையில் உள்ள பழைய இந்தியப் பகுதிக்கு இன்று வரையிலும் கூடக் கருநகரம் என்ற பெயர்தான் வழங்குவது உனக்குத் தெரிந்திருக்கக் கூடும். தங்கள் தெருக்களில் சில வற்றிற்குத் தேசியப் பெயர்களை அவர்கள் சூட்டுகின்ற போதிலும், இந்தப் பெயரை மாற்ற வேண்டுமென்று நகரத் தந்தை எவருக்கும் உதிக்கவில்லை. சிம்லா மலை உச்சியை நாம் எட்டிவிட்டதால், திடீரெனச் சுகாதார பழக்க வழக்கங்கள் நம்மிடம் தோன்றிவிடாது. ஆனால் நகராட்சிக் குழு, சுகாதார விதிமுறைகளை ஒழுங்காக செயல்படுத்த விரும்பினால், அவ்வாறு செய்ய முடியும். அங்கு எத்தனையோ விதிமுறைகள் கட்டாயமாக அமலாக்கப்படுகின்றன. சுகாதார விதிமுறைகளை அமலாக்குவதற்கு அவ்வளவாக எதிர்ப்பு இருக்காது.

நந்தி மலை, உண்மையில் சுகாதாரத்திற்கு நல்லதோர் எடுத்துக்காட்டு; அந்தச் சுகாதாரம் மேலிருந்துதான் அமல் செய்யப்படுகிறது. காற்று அருமையாக உள்ளது. அமைதி தெய்வீக

மானது. கார்களோ, ரிக்ஷாக்களோ கூடக் கிடையாது. முப்பது குடும்பங்கள் மட்டுமே இங்கு வசதியாக வாழமுடியும். அதற்கு மேற்பட்டவர்களை அனுமதிப்பதில்லை. இதைவிடத் தனிமையான, அமைதியான, சுத்தமான மலை இருப்பதாக எனக்குத் தெரிய வில்லை. ஓசையில்லாத இந்த அமைதி கண்டு சர்தார் பரவசம் கொண்டுள்ளார். நீ இங்கு வந்திருந்தால், இந்த இடம் உனக்கு மிகவும் பிடித்திருக்கும்.

குமரப்பா புதன் கிழமை வந்து சேருகிறார்.

அன்பு,

கொடுங்கோலன்

## 73

நந்திமலை,
*14-5-1936*

என் அன்புள்ள முட்டாள்,

நீ நோயில் படுத்துக் கொள்ளாமல் வேறென்ன செய்வாய்? கொடுங்கோலனின் ஆதிக்கத்தைச் செலுத்தி, உன்னைக் கட்டாய மாக அழகான இந்த ஊருக்கு அழைத்து வந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? இங்குக் கவலை கிடையாது. இரைச்சல் இல்லை; தூசி துளியும் கிடையாது; பரிபூர்ண அமைதி; அடக்க மான செடிகொடிகள்; இதமான குளிர்ச்சி; சமூக உபசார நிகழ்ச்சி களிலிருந்து விடுதலை, நேர்த்தியான டென்னிஸ் மைதானம்; எழில்மிக்க உலவிடங்கள். ஆனாலும் பாவம், ஏழைக் கொடுங் கோலன், ஒரு முட்டாள் புரட்சிவாதியை என்ன செய்ய முடியும்? ஆகவே நீ அங்கேயே இருந்து வேதனைப்பட்டு, சிம்லாவில் தூசியை விழுங்கி, நந்தியில் தூசியில்லாத தென்றல் காற்றினை அனுபவிக்கும் வாய்ப்பை இழப்பாய். உன் அடுத்த கடிதத்தில், இதைவிட நல்ல செய்தி கிடைக்குமென்று எதிர்பார்க்கின்றேன். உன் உடல் நலன் இப்பொழுதுள்ள நிலையில், நீ அந்த அசுத்தமான இடங்களருகில் செல்லாதே.

குமரப்பா, சாந்தா ஆகியோர் உடல்நலன் ஏற்கெனவே தேறி யுள்ளது. நீண்ட தூரம் நன்றாக உலவுகின்றனர்.

நீ சேகானுக்கு வரும்போது, என்றும் விசுவாசமாக இருக்கும் நபி பக்ஸ் உன்னுடன் நிச்சயம் இருப்பாரல்லவா?

அன்பு,

அதிகாரமில்லாத கொடுங்கோலன்

# 74

நந்தி மலை,
*18—5—1936*

என் அன்புள்ள முட்டாள்,

டாக்டர் அன்சாரி பற்றி நான் எழுதியுள்ளதையெல்லாம் பார்த்திருப்பாய். நான் அவர் மரணம் குறித்து அழுவது சுயநலத்தால் தான். ஆனால் அழியும் யாக்கைதான் அழிந்துள்ளதே ஒழிய, அகத்தேயுள்ள அழிவற்ற ஆன்மா அழியாது என்ற தெளிவு, எனக்கு ஏற்பட்டுள்ளது போல் ஏற்பட்ட பின், மரணம் குறித்து வருந்த வேண்டிய அவசியமில்லை. ஆன்மா, பழைய ஆடையைக் களைந்த பின், புதிய, அதைவிடச் சிறந்த ஆடையை அணியும். அவர் சேவை அழிந்துவிடவில்லை. கண்ணுக்குப் புலனாகாமல் இருந்தால் கூட, அவர் இப்பொழுதும் சேவை செய்து கொண்டு தான் இருக்கிறாரென்று நாம் நிச்சயமாக நம்பலாம்—நமக்கு மட்டும் நம்பிக்கை இருக்குமானால். நம் புலன்கள் வாயிலாகக் காணும் உறுதியற்ற, நம்ப முடியாத தோற்றங்களையே உண்மையாகக் கருதப் பழக்கப்பட்டு விட்டோம், நாம். ஆகவே தான், நம் புலன்களுக்கு அப்பாற்பட்டவையாய், நம் புலன்களுக்கு எட்டி நமக்கு மாறி மாறிச் சிரிப்பையும் அழுகையையும் ஊட்டும் சலனக் காட்சிகளைவிட நிலையானதாய் உள்ள பொருள்கள் இருப்பதையே நாம் உணர மறுக்கின்றோம். ஆனால் இந்த விவேகக் காற்றாடிகள் பறக்க விட்டது போதும்!

நீ குறிப்பிட்டுள்ள செலவு வரம்புகளுக்குள்ளாகவே, உனக்குத் தந்தப் பொருட்களையும் மற்றவற்றையும் வாங்க முயற்சி செய்வேன்.

குமரப்பா நன்றாகத் தேறி வருகிறார். 20ந் தேதி வாக்கில், அவரையும் சாந்தாவையும், டாக்டர் சுப்பாராவ் பரிசோதனை செய்வார்.

'ஓய்வெடுத்து, நன்றியுணர்வுடன் அமைதியாக' இருக்க நீ கூறும் ஆலோசனையைத் தலீப் ஏற்றுக் கொள்வாரென்று எண்ணுகிறேன். ஒரு சில வாரங்களுக்கு, ஏன், மாதங்களுக்குக் கூட, நீதிமன்ற வேலை அவரில்லாமலே நடக்கும்.

மீராவை நீ அழைக்க முடியாதது பற்றி ஏன் கவலைப்படுகிறாய்? கூட்டுக் குடும்ப வாழ்வில் சில சிரமங்கள் ஏற்படத்தான் செய்யும்; அவற்றை நீ, நான், இருவருமே உணர்ந்து அனுசரித்துச் செல்ல வேண்டும். சுயநல இச்சைகளை நிறைவு செய்வதில் நட்புகள் ஈடுபடுவதில்லை; ஈடுபடவும் கூடாது. வார்தாவின் வெப்பத்தில் உருகிக் கொண்டிருந்த போதும் மீரா மகிழ்ச்சியாகவே இருக்கின்றாள். என் குடிசையை உருவாக்கும் வேலையில் அவள் இன்பம் காண்கிறாள். சிறு நுணுக்கத்தையும், அவள் மிகுந்த அக்கறையுடன் கவனித்து வருகிறாள். இன்னும் கொஞ்ச நாட்களில் நான் அவள்

அண்டை வீட்டுக்காரனுகி விடுவேன் என்பதில் அவளுக்கு மிகுந்த திருப்தி.

உன்னை வைத்துக் கொண்டு என்ன செய்வதென்றே எனக்கு விளங்கவில்லை. நீ என்னைச் சந்திக்கும்போது, காலென்பாக் பற்றி அடியோடு மறந்து விடுவாய். என்ன பேச்சு நடந்தது என்று சொல்லிவிடுவதுதானே. நான் சொன்னது வேடிக்கையாக உனக்குத் தோன்றியிருந்தால் அதில் நானும் பங்கு கொள்ளவும், அதில் வெட்கப்பட வேண்டியது எதுவுமிருந்தால் அதை ஒத்துக் கொள்ளவும் எனக்கு வாய்ப்பு அளிக்கக் கூடாதா? ஆனல் என்னைப் பற்றி எத்தனையோ செய்திகளை நான் கேள்விப் படுகின்றேன்; அவற்றில் பல, எனக்கே புதிதானவை; புதிரானவை. ஆகவே நீ கேள்விப் பட்டதும் அத்தகைய வதந்திகளில் ஒன்ருய் இருந்தால் ஆச்சரியப்படுவதற்கில்லை.

அனைவருக்கும் அன்பு,

**கொடுங்கோலன்**

# 75

நந்திமலை,
*19-5-1936.*

என் அன்புள்ள கொச்சை மொழிப் பண்டிதரே,

உனக்குரிய பட்டங்கள் நாளுக்கு நாள் பெருகிவருகின்றன. அனைத்தையும் உன் நெஞ்சு தாங்காது. அப்பொழுது நீ சிலவற்றைக் களைந்துவிட வேண்டியிருக்கும். அல்லது, ஒன்றைத் தேர்ந்தெடுத்துக் கொண்டு, மற்றவற்றை நிராகரித்து விடுவாய்.

இப்பொழுது பயங்கர இடியிடித்து, விளக்குகள் எல்லாம் அணைந்துவிட்டன. ஒரே இருளில் நாங்கள் மூழ்கியுள்ளோம். பஞ்சுத் திரிகளையும் சாப்பாட்டு எண்ணெயையும் கொண்டு ஒரு சிறு விளக்கை எனக்காக ஏற்பாடு செய்துள்ளார்கள்.

திருவிதாங்கூர் மகாராணி உனக்கு ஐந்நூறு ரூபாய் கொடுக்கச் செய்தது நல்ல சாதனையாகும்.

உருது ஒலி பரப்பு பற்றி உன் நிபந்தனைகளை அவர்கள் ஒத்துக் கொள்வார்களென்று நம்புகிறேன். உனக்கு நிச்சயமாகப் பாராட்டுதல்கள் உரியவை.

திருமதி மார்ஸ்டெனுக்கு மகாதேவின் மிக நேர்த்தியான நூலை அனுப்புவோம். அவர் நூல்தான் அருமையானது.

சரிகையைக் கண்டுபிடிக்க நான் முயற்சி செய்யவேண்டும். அதை இழந்து விடக்கூடாது.

நீ இப்பொழுது முற்றும் குணமடைந்து விட்டாயென்று நம்புகிறேன்.

குமரப்பா, சாந்தா, இருவரும் செழிப்பாக இருக்கின்றனர்.

அன்பு,

பாபு

## 76

நந்திமலை,
*22—5—1936*

என் அன்புள்ள முட்டாள்,

உன் நோட்டுக் காகிதம் மிக அருமையாகத்தான் இருக்கின்றது. கையால் காகிதம் செய்யும் தொழில் எவ்வளவு தூரம் முன்னேறியுள்ளது என்பதை அது காட்டுகிறது. வெட்டாத தாளை வருவித்து வாங்குவோர் விரும்பும் அளவுக்கு அங்கு வெட்டிக் கொடுக்க நீ செய்துள்ளது, நல்ல ஏற்பாடு. போதிய கிராக்கி ஏற்பட்டால், இதை முன்னிட்டு அங்கு சில ஏழைகளுக்கு வேலை கொடுக்கவும் முடியும். இவ்வளவு சிறு நுணுக்கங்களிலும் நீ உன் நேரத்தைச் செலவு செய்வது சரியா என்ற பிரச்னைதான் எழுகிறது. அதை நீ தானே முடிவு செய்ய முடியும்? சிம்லாவில் உன் நேரத்தை உனக்குள்ள உடல்நலனுக்கு ஊறு நேரிடாத வகையில் பயன்படுத்த எது சிறந்த வழியோ, அதைக் கையாள வேண்டும்.

நாம் சந்திக்கும்போது நேரில் சொல்லிக் கொள்ளலாமென்று பல செய்திகளை முட்டாள்தனமாக நீ நிறுத்தி வைக்கின்றாய். அந்த அரிய சந்திப்பு கைகூடும் போது, நீ கூற விரும்பிய செய்திகளில் பலவற்றை அதற்குள் மறந்திருப்பாய். நிறுத்தி வைத்துள்ள செய்திகளைப் பற்றி நீ குறிப்புகள் எழுதி வைப்பதில்லை என்பது நிச்சயமாக எனக்குத் தெரியும். ஆகவே ஒரு முறையாவது நீ விவேகத்துடன் நடந்து கொண்டு, அடுத்த சந்திப்பின் போது சொல்வதற்கென்று எதையும் நிறுத்தி வைக்காமலிருக்க வேண்டும். நாம் நேரில் சந்திக்கும் போது பேசுவதற்கு எத்தனையோ பொருள்கள் இருக்கின்றன. ஆதர்பூர் மக்களுக்கு எதைச் சொல்வது அவசியமோ, அதைச் சொல்லி வருகிறாயென்று கருதுகிறேன். மோசடி எதையும் நீ சகித்துக் கொள்ளக் கூடாது;— அதனால் எவ்வளவு இன்னல் நேரிட்டாலும் பரவாயில்லை. தூய்மையான ஓரியக்கத்தில் மோசடியை அடக்குவதற்கு, எவ்வளவு பெரிய துன்பத்தைத் தாங்கிக் கொள்ள நேரிட்டாலும், அது தகும்.



ஐலிங்டனிலுள்ள (லண்டன்) ராயல் விவசாய ஆராய்ச்சி ஹாலில் காந்திஜி ஆடுகளைப் பார்வையிடுகிறார். பக்கத்தில் நிற்பது மீராபென்னும், பண்டித மதன் மோகன் மாளவியாவும்.



வலது புறம் கையில் பையுடன் நின்றுகொண்டிருப்பது ராஜகுமாரி அமிருத் கௌர்.

பத்ரி—கேதார் புனித யாத்திரையின் போது தாரா* மரண மடைந்தாரென்ற செய்தியை நான் உன்னிடம் சொன்னேனா? அது பற்றிய விவரங்களை ஹரிஜனில் காண்பாய். நான் சந்திக்கும் பேறு பெற்ற தலை சிறந்த உத்தமப் பெண்மணிகளில் அவர் ஒருவர்.

அன்பு,

கொடுங்கோலன்

## 77

*28—5—1936*

என் அன்புள்ள புரட்சிவாதி,

உன் கடிதம் நேற்றுத் தான் வந்தது. இங்கிருந்து அனுப்பும் கடிதங்கள் கட்டில் சேர்ந்த பின் தான் இங்கு வரவேண்டிய அஞ்சல் வந்து சேருகிறது.

உங்கள் குடும்ப உறுப்பினர்கள் குழுமியிருப்பது வெகு கச்சித மாக உள்ளது. ஒரு நீதிபதி, அரசாங்க உறுப்பினர் ஒருவர், ஒரு மருத்துவர், இவர்களுக்கிடையே புரட்சி வாதியான ஒரு சகோதரி. இப்பொழுதோ, கலெக்டர் சகோதரரும் அங்கு வந்து உங்களுடன் இருந்தால் தான், உன் மகிழ்ச்சி நிறைவு பெறுமென்று கருதுகிறாய். களைத்து சோர்ந்துள்ள சகோதரருக்கு உணவு ஊட்டி, ஊட்டம் வளர்ப்பது ஒன்று தான் சகோதரியின் அன்பைத் தெரிவிக்கும் வழியென்று நீ எண்ணிவிடாதே. அந்த உடம்புக்குத் தேவையான ஊட்டம் எது என்பதை அவள் அறிய வேண்டும். சத்தான, வள மான உணவு, சிலர் உடம்புக்குத் தீங்கு செய்துள்ளதைக் கூட நானறிவேன். ஆனால் பொருத்தமான உணவுப் பொருட்களைத் தேர்ந்தெடுக்க உனக்குத் தெரியவில்லையென்றால், நீ என்னுடன் இருந்ததனால் பலனில்லை என்று தான் பொருள். அந்த உணவுப் பொருட்களை நீ உனக்கே உரிய வழியில் பக்குவப்படுத்திப் படைக்கலாம்.

உன் கடிதத்தில் நீ குறிப்பிட்டுள்ள கூற்றைக் காலென் பாக்கிடம் நான் கூறியிருக்க முடியுமென்று என்னால் நம்ப முடிய வில்லை. அதை மீண்டுமொரு முறை படித்தேன்; எனக்குச் சிரிப்புத் தான் வந்தது. சிறு குழந்தைகளுக்குக்கூட நான் விதிமுறைகளை அவ்வாறு கண்டிப்பாக வகுத்துக் கூறுவதில்லை. காலென்பாக் என்னிடம் எல்லையற்ற நம்பிக்கையும் விசுவாசமும் கொண்டிருந்த போதிலும் கூட, இப்பொழுது சொல்லப்படுவது போல் நான் ஆணவத்துடனும் ஆதிக்கச் செருக்குடனும் நடந்து கொண்டி

* காந்திஜியின் வாழ்க்கை நெறியில் மிகுந்த ஈடுபாடு கொண்ட முது பெரும் ஆங்கிலேயப் பெண்மணி.

ருந்தேனுனல், அதை அவர் ஒருபோதும் சகித்துக்கொள்ள மாட்டார். தவறே செய்ய இயலாத பரிபூர்ண விவேகம் எனக்குண்டு என்று வலியுறுத்துவது, அவர் கொண்டிருந்தது போன்ற உண்மையான நம்பிக்கைக்கு அவசியமுமில்லை. இந்த அதிசயத் தகவலை உனக்குத் தெரிவித்தது யார் என்று நீ இதுவரை கூற வில்லை. அதையும் சொன்னுல், இந்த சிக்கலான பிரச்னையைப் பற்றி நான் மேலும் விளக்கம் கூற முடியும்! ஆனுல் முட்டாள் களுக்கும் புரட்சிவாதிகளுக்கும் நான் ஆக்கினைகள் இடத் தயங்கு வேன் என்றோ, நான் இடும் ஆக்கினை என்பதால், அவர்கள் கீழ்ப் படிவதற்கு விலக்களிப்பேன் என்றோ எண்ணிவிடாதே. கொடுங் கோலன் என்று வாங்கிய பெயருக்கேற்ப நான் நடந்து கொண் டால் தானே, உன் புரட்சி உணர்வை வெளிப்படுத்த உனக்கும் ஒரு வாய்ப்பு கிடைக்கும்! இவ்வாறு கண்டிப்பாக நான் கூறுவதைக் கேட்டுவிட்டு, என் ஆணவச் செருக்குக்கு இதுவே நல்லதோர் எடுத்துக்காட்டு என்று இதையே மேற்கோளாகக் காட்டினுல், இறைவன் தான் என்னைக் காக்கவேண்டும்!!!

நான் மலையிலிருந்து இறங்கிப் பெங்களுருக்கு வந்த பின். இது போன்று பிதற்றுவதற்கு எனக்கு அவகாசம் கிடைக்காது, இங்கு அமைதியாய் உள்ளது; ஓரளவு ஓய்வும் கிடைக்கின்றது. ஆகவே உன்னுடன் பிதற்றுவதற்கு அவகாசம் கிடைக்கின்றது.

உன் உற்றுர் உறவினராயினும், அவர்களை உபசரிப்பது, பலம் குறைந்த உன் உடலுக்குப் பெருஞ்சுமையாக இராதென்று நம்பு கிறேன். அன்பான சேவை செய்யும் போது நீ சிறு நுணுக்கங் களிலும் கவனம் செலுத்த உனக்குள்ள ஆற்றல், அந்த அன்பை அளிப்பவருக்கு எவ்வளவு பொறுப்பைச் சுமத்துகிறது என்பதை நானறிவேன். நீ அளவுக்கு மீறி அதைச் செய்வதைத் தடுப்பதற்கு ஷம்மி அங்கிருப்பது நல்லதாய்ப் போயிற்று.

மீராவுக்குக் கடுமையான நோய் கண்டிருந்தது. ஜம்னுலாலின் பங்களாவுக்கு அவள் அழைத்துச் செல்லப்பட்டாள். அவள் சேகானுக்கு இதற்குள் திரும்பியிருக்க வேண்டும்.

இராமேசுவரி நேரு இன்று இங்கு வந்து மூன்று நாட்கள் தங்குகிருர். ஹரிஜன இயக்கத்தை ஒட்டி அவர் திருவனந்தபுரத் தில் மேற்கொண்ட சுற்றுப் பயணம் மிக வெற்றிகரமாய் அமைந் தது.

லக்ஷ்மணபுரிக் கண்காட்சி பற்றி நீ அனுப்பிய குறிப்பில், அது பிரசுரமாவதை நீ விரும்பவில்லை என்று அறிவிக்கவில்லை. அதைக் கவனமாக நான் படித்து, நீ எழுதியதென்று தெரியா மலிருக்கும் முறையில் அதில் மாறுதல்கள் செய்து, பிரசுரத்திற்கு அனுப்பி விட்டேன். அதைப் படிக்கும்போது எப்படி இருக்கிற தென்று நீ சொல்ல வேண்டும். அதைப் பிரசுரிப்பதை நீ ஏன் விரும்பவில்லை? இனிமேல் நீ எழுதும் போது, உன் விருப்பத்தைத் தெளிவாகக் குறித்து அனுப்ப வேண்டும். கண்காட்சியைப் பற்றிப்

பட்டணத்திலேயே வளர்ந்த ஒரு பெண் என்ன நினைத்தாளென்று மக்களுக்குத் தெரிவிப்பது அதன் நோக்க மல்ல என்றால், அதற்கு வேறு மதிப்பு அதிகம் கிடையாது.

மிஸ்டர் மார்ஸ்டனிடமிருந்து வந்த ஒரு குறிப்பை இத்துடன் அனுப்புகின்றேன். அக்குறிப்புக்கு விளக்கம் தேவையில்லை.

அன்பு,

**கொடுங்கோலன்**

*31ந் தேதி மலையிலிருந்து இறங்கிப் பெங்களூர் நகரத்தை அடைகிறோம் என்பதையும், ஜூன் 15ந் தேதிக்கு மேற்படாமல் அங்கு தங்குவோம் என்பதையும் நினைவிற் கொள்.*

# 78

பெங்களூர் நகரம்,
*1-6-1936*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நேற்று நாங்கள் கீழே வந்தோம்; வேலை தொடங்கியது. தங்கப் பகுதியில் நாள் முழுவதும் பயணம் செய்து, ஹரிஜன இயக்கத்திற்கு *1000* ரூபாய்க்கு மேலாகத் திரட்டி, அதிகக் களைப்பில்லாமல் இரவு *10* மணிக்குத் திரும்பினோம்.

நந்திமலையுடன் ஒப்பிட்டுப் பார்த்தால், பெங்களூர் வெப்பமாக இருக்கிறது. நந்தி மலையின் இதமான தென்றலையும் அமைதியான ஒதுக்கத்தையும் அனுபவித்தபின் வேறெதுவும் உள்ளத்துக்கு உவகை ஊட்டாது. நந்திமலையில் காணும் இனிமையை வேறெந்த மலையிலும் நான் காண்பதில்லை. நான் நந்தியை விட்டுப் புறப்பட்டபோது எனக்கு வருத்தம் இராமலில்லை. சர்தாருக்கு ஆறுதல் சொல்லவே முடியவில்லை. அவர் உலாவச் செல்வதையே நிறுத்திவிட்டார். நான் வழக்கம் போல் ஒரு மணி நேரம் நடந்தேன். இந்த மாதங்களில், பெங்களூர் கூட வெகு சுகமாகத்தான் இருக்கின்றது. நந்தி மலை தான் எங்களுக்குச் செல்லம் கொடுத்துக்கெடுத்துவிட்டது.

நீ மீண்டும் நூற்க முடிவது குறித்து மகிழ்ச்சி.

ஆம். உன் கடிதத்தின் மேலுறை நேர்த்தியாக இருக்கின்றது. ஆனால் மிக அதிக விலை கொடுத்து நீ அவற்றை வாங்கக் கூடாது. குடும்பத்தில் உள்ளவர் எவராவது, வேலையில்லாமல் உள்ள நேரத்தில் செய்ய வேண்டிய வேலை அது. அல்லது நாணயமாக வேலை செய்து ஓரணாவாகிலும் சம்பாதிக்கும் வாய்ப்பு கிடைத்தால் நன்றியுடையவர்களாய் இருப்பவர்களிடம் அந்த வேலையை ஒப்படைக்க வேண்டும்.

இயலாமையின் ஏக்கம் உனக்கு ஏன் ஏற்பட வேண்டும்? நாள் முழுவதும் நீ செய்து முடிக்கக் கூடிய வேலையுடன் ஏன் திருப்தி அடையக் கூடாது? எதையும் புறக்கணித்தால் உன் மீது நீ ஆத்திரம் கொள்ளலாம். ஆனால் நேரம் இல்லாத குறைக்கு நீ என்ன செய்ய முடியும்?

ஹரிலால் இஸ்லாம் சமயத்தைத் தழுவிய செய்தியை நீ பார்த்திருப்பாய். அவனுக்கு விளம்பரமும் வேண்டும்; பணமும் வேண்டும். இரண்டும் அவனுக்குக் கிடைத்துள்ளன. முஸல்மான் நண்பர்களுக்கு ஒரு பொதுக் கடிதம் எழுத நான் உத்தேசித்துள்ளேன். என்ன நடக்கிறதென்று பார்த்துச் செய்ய வேண்டும். பாவம் பா; அவளைவிடப் பரிதாபம், காந்தி.* இருவரும் மிகவும் வேதனையுற்றனர்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 79

பெங்களூர்,
*4-6-1936*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நீ மன்ற உறுப்பினராக நியமனம் பெறாதது குறித்து நான் மகிழ்கிறேன். இப்போது உன்னிடமுள்ள பொறுப்புகளில் சில தாமாக விலகினால், அதனால் உனக்கு நன்மையே.

இளம் பெண்கள் கிறிஸ்தவக் கழகம் பற்றி மேலும் தெளிவான விவரங்கள் எனக்குத் தெரியாமல், நான் ஒரு கருத்தைத் தெரிவிக்க மாட்டேன்.

நீ கேட்ட தந்தப் பொருட்களை இன்று நானே தேர்ந்தெடுத்துள்ளேன். விலைச் சீட்டுடன் கடையிலிருந்தே அப்பொருட்கள் நேராக உனக்கு அனுப்பப்படும். பொருட்கள் நன்றாகத் தேர்ந்தெடுக்கப் படவில்லையென்றாலோ, உனக்குப் பிடிக்கவில்லையென்றாலோ, அறிவிலி ஒருவனிடம் இத் தேர்வுப் பொறுப்பை ஒப்படைத்ததற்காக உன்னைத் தான் நீ குறை கூற வேண்டும். தயக்கமின்றி உன் கருத்தை வெளிப்படையாகத் தெரிவிக்க வேண்டும். முகவரி சரியாகத் தரப்பட்டுள்ளது.

பெங்களூரில் நல்ல குளிர்ச்சியாகவே இருக்கின்றது.

முஸ்லிம் நண்பர்களுக்கு ஓரளவு நீண்டதொரு கடிதம் எழுதியுள்ளேன். அதன் முழு வாசகத்தையும் வெளியிட இங்குள்ள

---

* ஹரிலாலின் மகன்

பத்திரிகைகள் பயப்படுகின்றன என்று காண்கிறேன். வேறெங்கும் முழுக் கடிதமும் வெளியிடப்படாவிடில், அதை உனக்கு அனுப்புவேன்.

அன்பு,
**கொடுங்கோலன்**

# 80

பெங்களூர்,
*5-6-1936*

என் அன்புள்ள முட்டாள்,

1ந் தேதியிட்ட உன் கடிதம் இப்பொழுது தான் வந்துள்ளது. காலிச் சீசாக்கள், மகன்வாடியில் தேவைப்படுவதைக் காட்டிலும் சேகானில் அதிகம் தேவைப்படுமென்று எண்ணுகிறேன். சேகானுக்குச் செல்வதற்கு முன் மகன்வாடியில் எனக்கு எவ்வளவு அக்கறையும் ஈடுபாடும் இருந்ததோ, அந்த அளவிற்கு இப்பொழுதும், சேகானுக்குச் சென்ற பின்னும், மகன்வாடியில் உள்ளது. ஆனால் காலிச் சீசாக்களைத் திரட்டுவதற்குத் தனியாக முயற்சி எதுவும் செய்யத் தேவையில்லை. உன் தேவைக்கு மேலாக உள்ள சீசாக்களை, நீ இங்கு வரும்போது, என்னிடம் தந்தால் போதும். கத்தி அலகுகள், கத்தியாகப் பயன்படுவதற்கல்ல; முகச் சவரத்திற்காக அவை பயன்படுபவை. நீ இங்கு வரும்போது, மாதிரிக் கத்திகளை உனக்குக் காட்டுவேன். வால்டேருக்கு நீ போகும் வழியிலும், திரும்பும் வழியிலும் நான் எங்கிருந்தாலும் என்னுடன் வந்து தங்க உனக்கு ஓரிடம் ஒதுக்கப்பட்டிருக்கும்.

தற்புகழ்ச்சி புகழாகாது. தன்னை எவரும் வன்முறையால் கட்டுப்படுத்த முடியாது என்று ஒரு பெண் எப்பொழுதும் வற்புறுத்திக் கொண்டிருந்தால், கேட்பவர்கள் அக்கூற்று பற்றிச் சிறிது ஐயப்பாடு கொள்ளத் தொடங்குவார்கள். மேலும் நீயோ வன்முறையை அடிப்படையாகக் கொண்ட ஒரு அமைப்பில் சேர்ந்தவள். ஆகவே கட்டாயத்துக்குப் பணியாமல் இருப்பது பற்றி நீ பேச்சைக் குறைத்துக் கொள்வது நல்லது!!

சால்வை உனக்குத் திருப்பி அனுப்பப் பட்டுள்ளது, இருமுறை வடிகட்டிய முட்டாள்தனம். சரிகையும் உனக்குக் கிடைத்ததா? சரிகை உனக்குச் செல்ல வேண்டுமென்றும் சால்வை எனக்கு வர வேண்டுமென்றும் அவர் தம் ஆட்களுக்கு எழுதியிருந்த கடிதத்தின் நகலை ஜெரஜானி எனக்கு அனுப்பினர், பாவம்! இது மடத்தனமான சுழல். மடத்தனம் உன்னிடமிருந்து பரவிய தொத்து நோயா? எவ்வாறாயினும், அதை அனுப்பியவருக்குக் கடுமையான கண்டனக்

கடிதம் ஒன்றை எழுது. அதை அஞ்சலில் அனுப்பப் பணம் செலவு செய்யக் கூடாது. நீயே அதைக் கொண்டு வரவேண்டும். நான் சொல்வதற்கு நீ கீழ்ப்படிய வேண்டும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 81

பெங்களூர்,
*7-6-1936*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

நான் உனக்கு அனுப்பிய பொருட்களின் விலை குறைக்கப்பட்டிருந்ததைக் கண்டு அதிர்ச்சி அடையாதே. அவற்றை சுதேசிப் பிரசாரத்திற்காக நீ விற்கப் போவதாலும், விற்க முடியாமல் போனால் அவற்றால் உனக்கு நட்டம் ஏற்படக் கூடும் என்பதாலும், குறைந்த விலை வேண்டுமென்று நான் கேட்டேன். உன் அரச பரம்பரைக் கௌரவம் அதனால் பாதிக்கப்பட வேண்டாம். முழு விற்பனை விலையுடன் அஞ்சல் செலவு முதலியவற்றைச் சேர்த்து நீ அவற்றை விற்க வேண்டும். தொழில் விவகாரங்களில் முட்டாள் தனத்துக்கு இடமில்லை. இவற்றைப் பொறுத்தவரை நீ இராஜ குமாரி அல்ல, சாதாரண சேவகியும் தர்மகர்த்தாவும் ஆவாய். உனக்கு அனுப்பிய கடிதம், விலைச் சீட்டு ஆகியவற்றின் நகல் என்னிடம் உள்ளது.

நீ முற்றிலும் குணமடைந்துவிட்டாய் என்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

## 82

பெங்களூர்,
*9-6-1936*

என் அன்பான முட்டாளே,

வீட்டு வரவேற்பறைச் செருப்புக்களை அணிந்து கொண்டு, வழி தவறிச் சென்று களைப்படையும் வரை நீ நடந்தது, ஒரு முட்டாளுக்கேற்ற சாகசச் செயலாகும். அந்தப் பட்டத்துக்கு நீ முற்றிலும் அருகதையானவள் என்பதை மெய்ப்பித்து விட்டாய்!

இதுவே, பெங்களூரிலிருந்து நான் எழுதும் கடைசிக் கடித மாக இருக்கும். நாங்கள் இங்கிருந்து 12ந் தேதி புறப்பட்டு, 14ந் தேதி வார்தா போய்ச் சேருவோம்.

ஆம்; மீரா இப்பொழுது நோயின்றி சுகமாக இருக்கின்ருள்; என் குடிசையில் தன்னுலியன்ற வரை கடும் உழைப்பில் ஈடுபட் டிருக்கின்ருள். "வித்யா ஹி சேவா" நன்ருகத் தானிருக்கின்றது*[1] ஆனல் 'சேவா ஹி வித்யா' என்பது இன்னும் அதிகப் பொருத்த மாக இருக்கும். 'சேவைக்காக அறிவு' என்று பொருள்படும்படி, 'வித்யா சேவாயை' என்று கொள்ளலாமே. அதைக் கீழ்க்கண்ட வடிவில் அமைப்பாய் என்று எண்ணுகிறேன்.

என்னல் எவ்வளவு கலையழகுடன் வரைய இயலுமோ, அந்த அளவிற்கு வரைந்துள்ளேன். ஆனல் நான் எதைக் குறிக்க விரும்பு கிறேன் என்பது உனக்கு விளங்கும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 83

சேகான், வார்தா
*12-6-1936*

என் அன்பார்ந்த முட்டாளே,

உன் கடிதம் கிடைத்தது. எனக்கு எழுத வேண்டுமென்று சிரமப்படாதே. நீ மெலிந்து தேயக்கூடாது. உன் ஆற்றலை வீணுக் காதே. எனக்குக் கடிதம் எழுதுவது உனக்கு இன்பமாகவும் பொழுது போக்காகவும் இருக்க வேண்டும். இல்லாவிடில் கடிதமே எழுதக்கூடாது. கடிதங்கள் எழுதும் காரணத்தால், நாம் இன்னும் நெருங்கி வரப் போவதில்லை. அவை எழுதாமலிருப்பதால், நாம் பிரிந்துவிடப் போவதில்லை; அல்லது நம்மிடையே மனத் தாங்கல் ஏற்படப் போவதில்லை. நீ ஏன் தேருத நோயாளியாக என்றும் இருக்க வேண்டும் ?

நீ முட்டாளான போதிலும், உன் இயற்கை அறிவு உன்னைச் சரியான வழியில் தான் அழைத்துச் சென்றுள்ளது போலும். சிம்லாவில் நீ செய்த கதர் முயற்சி, எதிர்பார்த்ததற்கு மேலாக வெற்றி பெறுவது போல் தோன்றுகிறது. அது தற்செயலாக

1. டில்லியில் இர்வின் சீமாட்டி மணியியல் கல்லூரிக்கு முகப்பு மேற் கோள் வாசகம் ஒன்று தேர்ந்தெடுக்க வேண்டியிருந்தது. 'அறிவே சேவை', என்று பொருள்படும் 'வித்யாஹி சேவா'; 'சேவையே அறிவாகும்' என்று பொருள்படும் 'சேவாஹி வித்யா'; 'சேவைக்காக அறிவு' என்று பொருள்படும் 'வித்யா சேவாயை'; இம்மூன்று யோசனைகளும் கூறப்பட்டிருந்தன.

நேரிட்டதென்று நான் சொல்ல வேண்டும் போலும். ஏனென்றால் முட்டாள்கள், திட்டமிட்டு நன்மை செய்ய முடியாதே!

இங்கு என் குடிசை கலகலப்பாகவும் கவர்ச்சியாகவும் உள்ளது. இப்பொழுது என்னுடன் ஓர் இளம் சாது இருக்கின்றார். அவர் பெரிய பஜனைப் பாடகர்;—தாமே இயற்றிய பஜனைப் பாடல் களைப் பாடுகிறார்: அவர் ஒரு மாதம் என்னுடன் தங்குவார். நான் ஒரு மூலையில் தங்குகிறேன்; அவர் ஒரு மூலையில்; மூன்றாம் மூலையில், சக ஊழியரில் ஒருவரான முன்னாலால். முதல் மூலையில் ஒரு பலகைப் படுக்கை இருக்கின்றது; நீதான் அதைப் பார்த்திருக் கின்றாயே. பா வந்தால் அவளும், அவளுடன் நீயும் அந்த மூலையில் தங்குவீர்கள். ஆகவே அசல் கிராம வாழ்க்கைக்கு நீ உன்னை ஆயத்தம் செய்து கொள்ள வேண்டும். குளிக்கும் அறையைத் தவிர வேறெங்கும் தனிமை கிடைக்காது. அது கூட உனக்கும் எனக்கும் பொதுவாயிருக்கும். உனக்காகக் காத்திருக்கும் விதியை நினைத்து நீ அஞ்சி நடுங்குவாய். புதுமையில் உனக்குச் சிறிது மகிழ்ச்சி ஏற் படும். அறையில் கூட்டம் அதிகம் போல் தோன்றுகின்ற போதி லும், இரைச்சலே இராது. சுற்றிலும் நாலா பக்கங்களிலும் எழில் மிக்க திறந்த வெளி. நாள் முழுவதும் பசுந்தென்றல் வீசுகிறது. நல்ல குளிர்ச்சியாக இருக்கின்றது. உலாவுவதற்கு உகந்த இடம். இரண்டு இரவுகள் தங்க ஏற்பாடு செய்து கொண்டு நீ வரும்போது, என்ன மாறுதல்கள் செய்ய நீ விரும்புவாய் என்பதைக் கூற வேண்டும்.

அதிகப் பேர் நடுவே இருப்பதான எண்ணம் இங்கு தோன்று வதை விட, உனக்கு அங்கு தான் அதிகம் ஏற்பட வேண்டுமென்று எண்ணுகிறேன். நாங்கள் அனைவரும் திறந்த வானின் கீழ் படுக் கின்றோம்; வானத்திற்கும் எங்களுக்கும் நடுவே ஒரு கூரை கூடக் கிடையாது. இருந்த போதிலும் நீ உன் கொசு வலையைக் கொண்டு வர வேண்டும். இப்பொழுது நீ என்னுடையதாக்கி விட்ட உன் சூடுகாப்புக் கலத்திற்கான (பிளாஸ்க்) தக்கை திருகியையும் நீ கொண்டு வரவேண்டும். இப்பொழுது அநேகமாகச் செல்லரித்துப் போயுள்ள திருகியை வைத்துத் தான் நான் சமாளித்து வருகிறேன்.

உன்னைப் பொறுத்தவரை நீ விலக்கி வைத்துள்ள இலங்கை மாநாட்டில் கலந்து கொள்ள முடியுமென அகாதா எதிர்பார்க் கின்றாள்.

மகன் வாடியில் செய்யப்படும் காகிதத்தின் மிகப் புதிய மாதிரி இதுதான். மகன்வாடியில் தயாரிக்கப்பட்டுள்ள மேலுறையில் இது உனக்கு அனுப்பப்படும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 84

வார்தா,
*15-6-1936*

என் அன்பார்ந்த முட்டாளே,

புரட்சிவாதி தோல்வியை ஒப்புக் கொள்வது பெரியதொரு சாதனையாகும். கடைசியில் என்னிடமிருந்து ஒரு கத்தைக் கடிதங்கள் உனக்கு வந்திருக்கும்! நீ தலைகுனியச் செய்வதில் எனக்கு அதிக மகிழ்ச்சி. ஆனால் என் கடிதங்களை மிஞ்சிவிட எண்ணி, நீ அலுப்படையக் கூடாது. சிம்லாவில் உனக்குள்ள பல பொறுப்புகளும் வேலைகளும் இங்கு எனக்கில்லை என்பதை நினைவில் கொள்.

இப்பொழுது வேறு விஷயத்திற்கு வருவோம். மெல்லிய ஊசியுடைய அணி ஊக்கை நான் தேர்ந்தெடுத்த காரணத்தை நீ ஊகித்திருந்தால், நீ முட்டாளாக இருக்கமாட்டாய். இந்த அணியை வாங்குபவரோ, அணிபவரோ, சுரண்டும் வர்க்கத்தைச் சேர்ந்தவராய் இருப்பாரென்பதும், இந்த உறுதியற்ற ஊக்குக்குப் பதில் தங்க ஊக்கை அதில் பொருத்திக் கொள்வார் என்பதும் உன் முரட்டு மண்டைக்குள் ஏறாது. அந்த அணி ஊக்கில் வேலைப்பாடு நன்றாக இருக்கின்றதா, இல்லையா என்பது தான் கேள்வி. அது போதிய அளவு கச்சிதமாக உள்ளதா? இந்த இரண்டு அணி ஊக்குகளைத் தேர்ந்தெடுப்பதில் நான் அதிக நேரத்தைச் செலவு செய்தேன். மிகப் பல, பகட்டாக இருந்தன. இந்த இரண்டும் மேன்மை பொருந்திய தங்களுக்குத் திருப்தியாக இருக்குமென்று எண்ணினேன்.

இப்பொழுது மழை பெய்து கொண்டிருக்கின்றது.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 85

சேகான், வார்தா
*26-6-1936*

என் அன்பான புரட்சிவாதி,

கைக்குட்டையின் அளவு, இந்தத் தாளின் $1\frac{3}{4}$ மடங்கு நீளம்; $1\frac{1}{4}$ மடங்கு அகலம். அளவு நாடா அல்லது கோல் இங்கில்லை.

ஆம்; சந்தனமரப் பெட்டியை நீ உனக்கே வைத்துக் கொள்ளலாம். நீ அவ்வாறு தான் செய்வாயென்று பா எதிர்பார்த்திருந்தாள்.

ஜூலை மாதக் கடைசியில் அநேகமாக அதிக மழை இருக்காது. ஒரு வேளை இருந்தாலும், நீ கொஞ்ச தூரம் நடந்து வர வேண்டியிருக்கும். அது வெகு சுகமாக இருக்கும். ஒரு பிரிவினர் தான், தங்கள் மரணத்திற்கு முன்பே பல முறை செத்து மடிகின்றனர். நீ அந்தப் பிரிவில் சேர்ந்தவளல்ல என்பதற்காக ஆண்டவனுக்கு நன்றி செலுத்த வேண்டும். நீ சிம்மப் பிரிவைச் சேர்ந்தவள் அல்லவா? *

இன்று வேறொன்றுமில்லை.

அன்பு,

**கொடுங்கோலன்**

இங்கிருந்து $1\frac{1}{2}$ மைல் தூரத்தில், கோர்டாவில் உள்ள தன் குடிசைக்கு மீரா புதன் கிழமையன்று சென்றாள்.

## 86

சேகான், வார்தா,
*6-7-1936.*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

நேற்று மாலை நான் சேகானுக்குத் திரும்பிவிட்டதால், கடிதங்களுக்குப் பதிலெழுதும் வேலையை இனி கவனிக்க முடியும்.

முதுமை ஊர்ந்து வரும் கட்டத்தில் மனிதர்களிடையே (பெண்களைப் பற்றிப் பேச எனக்கு உரிமை கிடையாது) பிடிவாதம் வலுக்கிறதென்று, 67 வயதான இளைஞனின் அனுபவத்திலிருந்து எப்படிக் கூறமுடியும்?

உன்னைப் போன்று பரிவுடனும் பணிவுடனும் பக்கத்திலிருந்து கேட்பவர்கள் மாளவியாஜிக்கு முக்கியமாகத் தேவை. ஆகவே மாளவியாஜியை முட்டாள் கவனித்துக்கொண்டிருக்கும் வேளையில், அந்த முட்டாளுடன் அஞ்சலில் உரையாடும் மகிழ்ச்சியையும் நான் மனமுவந்து விட்டுக் கொடுப்பேன். அவர் ஓராண்டுக்கு ஓய்வெடுத்துக் கொள்ள வேண்டுமென்று நான் பெரிதும் விரும்புகிறேன். ஆனால் அவர் அவ்வாறு செய்ய மாட்டார். அவர் இறுதிவரை வேலை செய்து கொண்டே இறப்பார். ஆண்டவன் அவருக்கு அருள்புரிய வேண்டும். ஆயினும் உடம்புக்கும் உள்ளத்துக்கும் ஓய்வு தேவைப் படும் போது, ஓய்வெடுக்க மறுப்பதன் மூலம் அவர் தர்மத்திலிருந்து தவறுகிறார். அவரைப் போலவே நீயும் அளவுக்கு மீறி வேலையை வருவித்துக் கொள்கிறாயென்ற போதிலும், நீயும் நானும் இதில் அவரைப் போல் நடக்கக் கூடாது. அளவுக்கு மீறி வேலை செய்வது, மன்னிக்க முடியாத ஒரு குற்றமாகும் என்பதை நீ உணர்ந்து கொள்ள வேண்டும்.

---

1. சீக்கிய குடும்பத்தைச் சேர்ந்தவள் என்பதைக் குறிப்பிடுகின்றார்.

நீ விஜயவாடாவில் எப்பொழுது, எத்தனை மணி நேரம் தங்குவாய் என்பது எனக்கு நிச்சயமாகத் தெரிந்தால், உனக்கு அங்கு வேலை ஏற்பாடு செய்வேன்.

பாவம், உன் தொண்டைக்குச் சிறிது ஓய்வளிக்க, நீ பேசா நோன்பை ஏற்றுக் கொள்ள வேண்டும். ஜவாஹர்லால் ஒரு வாரம் முழுவதும் பூர்ண மௌனம் மேற்கொள்ளாவிடில், உடல் நிலை அடியோடு கெட்டுவிடுமென்று ஒரு நிபுணர் எச்சரித்துள்ளது உனக்குத் தெரியுமா? ஒரு சிறு சொல் மெதுவாகக் கூடப் பேசக் கூடாது. அதற்கு நீ செவி சாய்ப்பாயா? அல்லது எவருடைய பேச்சையும் கேட்க மறுத்துப் பிடிவாதம் செய்யும் முட்டாள்தனமான அரசகுமாரியாகத் தான் இருப்பாயா? நீ வரும் தேதியை உறுதிப்படுத்தி எனக்கு எழுத வேண்டும். மீரா தன் குடிசையில் இன்பமாக இருக்கின்ருள். கிராம வாழ்வில் அவளுக்குள்ள இயல்பான பிடிப்பு எனக்கு அதிசயமாக இருக்கின்றது.

அன்பு,

**கொடுங்கோலன்**

இணைப்பு, மாளவியாஜிக்கு.

## 87

சேகான், வார்தா
*16—7—1936.*

என் அன்புள்ள புரட்சிவாதி,

கொடுங்கோலர்களிலேயே பலவிதம் உண்டு. 22 ந் தேதி உன் மனத்தில் என்ன எண்ணம் தோன்றுகிறதென்று பார். இரவு சுகமாயிருந்து, பாதைகளும் ஈரமாயில்லாமல், உனக்கும் களைப்பில்லாமல் இருந்தால், உணவு அருந்திவிட்டு நீ சேகானுக்குக் காரில் வந்துவிடு. சேகானில் உனக்கு ஒரு நல்ல பாடம் கற்பிக்க நான் ஆயத்தமாயிருப்பேன். ஆனால் விதி உன்னுடன் ஒத்துழைக்காவிடில், மகன்வாடியிலேயே அன்றிரவு உறங்கிவிட்டுக் காலையில் சேகானுக்குக் காரில் வரலாம்; அல்லது நடந்து வரலாம். எப்படியாவது அலுப்படைய இடம் கொடாதே. நீ திரும்பும்போது, இங்கு ஒரு சில நாட்களாகிலும் தங்க வேண்டும். அப்பொழுது, கொடுங்கோலனின் ஆணைக்கு உட்பட்டு, நீ பலவகையான அனுபவங்களையும் தாங்கிச் சமாளித்துக் கொள்ளலாம்.

அன்பு,

பாபு

## 88

என் அன்புள்ள புரட்சிவாதி,

நான் இரயிலில் புறப்பட வேண்டியிருப்பதால், அதிகாலையில் ஜம்னுலால்ஜியின் வீட்டில் இதை நான் எழுதுகிறேன்.

நான் கவலையில்லாமல் உள்ளேன் என்ற உறுதிமொழியை நான் உனக்கு அளிக்க முடியாது. நீ இவ்வளவு எதிர்த்துக் கலகம் செய்யும் போது, நான் கவலையில்லாமல் எப்படி இருக்க முடியும்? கொடுங்கோலன் முன்னிலையில் நீ மிகவும் பவ்வியமாகவும் பணிவாகவும் இருந்தாய். அவன் மறுபுறம் திரும்பியவுடன், உன் புரட்சி உணர்வு கொந்தளித்து எழுகின்றது. ஆகவே கவலையிலிருந்து என்னை விடுவிக்க ஒரே வழி, நீ விரைவில் குணமடைவது தான். மீன் சாப்பிடுவதன் மூலம் நீ விரைவில் தேறுவாயென்ருல், நீ தயக்கமின்றி அதைச் சாப்பிட வேண்டும்.

ஆனல் உனக்கு நான் ஓர் உறுதிமொழி தரமுடியும். ஷம்மி சொல்வது எதுவும் என்னை ஒரு சிறிதும் பாதிக்காது. அவருடைய அளவற்ற ஆத்திரம், உன்னிடம் அவர் கொண்டுள்ள அன்பின் அளவாகும். அவர் வளர்ப்பும் வாழ்க்கையும் அமைந்துள்ள வகையைக் கொண்டு பார்த்தால், நான் உன் உடல்நலனைக் கெடுத்து, உன் வாழ்க்கையின் அமைதியான போக்கைக் குலைத்துவிட்டேன் என்று என் மீது குற்றம் சாட்ட அவருக்கு முழு உரிமை உண்டு. அவர் வேறு விதமாக எப்படி எண்ண இயலும்? உடல் நலன் முற்றும் தேறி, நீ சிம்லாவுக்குத் திரும்புவதைப் பொறுத்தது தான், மற்ற விருப்பங்கள் ஈடேறுவது என்று நான் உன்னிடம் கூறியிருந்தேன். நீ அவ்வாறு திரும்பவில்லை; திரும்பியிருக்க முடியாது. உன் உடல் நலன் தேறி, முன்பு எப்பொழுதும் இருந்ததைக் காட்டிலும் உடல்நலப் பொலிவு உனக்கு ஏற்பட்டபின், நாம் நம்மிடையே கணக்கு தீர்த்துக் கொள்ளலாம். நோய் நீங்காத வரை, நீ ஒவ்வொரு நாளும் கடிதம் எழுதித் தந்தியும் அனுப்ப வேண்டும். நீ முற்றிலும் குணமடையும்வரை, எந்த வேலையையும் எடுத்துக் கொள்ளக்கூடாது. நேற்று நான் அனுப்பிய தந்தி உனக்குக் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன்.

நான் நேற்று வார்தாவுக்கு வந்தேன். இன்று மாலை திரும்பி நடந்து செல்கிறேன்.

பிடுல்லிலிருந்து மீரா இன்று திரும்புகிருள்.

உனக்கும் ஷம்மிக்கும் அன்பு,

**கொடுங்கோலன்**
*கொள்ளைக்காரன்,*
பாபு... இன்னும் பல.

## 89

சேகான் வார்தா,
*29-8-1936*

என் அன்பார்ந்த அமிருத்,

நான் நேற்று எழுதிய கடிதம் உனக்குக் கிடைத்திருக்கும். இதை நான் சேகானில் எழுதுகிறேன். ஆகவே கெடுவுக்குப் பிந்திய கட்டணத்தைச் செலுத்தியும், இதை அஞ்சலில் சேர்க்க முடியாது. நூற்றுக்கு நூறு உண்மையைத் தெரிவித்து நீ தினமும் அனுப்பும் தந்திகளும் கடிதங்களும் என் மன அமைதிக்கு இன்றியமையாதவை. நீ காய்கறிகளையும் ஏன் அனுப்ப வேண்டும்? அது கிராம உணர்வுக்கு முரண்பட்டதாக இருக்கின்றது. எனக்கு உன்னிடமிருந்து எது தேவைப்படுகிறதோ, அதை நிச்சயம் நான் கேட்பேன்.

அறுவை சிகிச்சைக் கருவிகள் பற்றி அவசரமில்லை. ஷம்மி மீண்டும் தன்னிலைக்கு வரும்வரை நான் காத்திருக்க முடியும். அவரைக் கவர்ந்து மீண்டும் உன் வழிக்குக் கொண்டுவர நீ முயல வேண்டும். வீட்டைவிட்டு ஓடிவிடுவது பற்றிப் பேசுவது வடிகட்டிய முட்டாள்தனம். உன் இயல்புக்கே விரோதமான எண்ணம். அன்பு, பொறுமையாகவும் நீண்டகால வேதனையைத் தாங்கிக் கொள்ளச் சித்தமாகவும் இருக்க வேண்டும். நீ அன்பின் உறைவிடம் இல்லையென்றால் வேறென்ன? என்னுடன் பழகும் பெரு வாய்ப்பு கிட்டியதால், நீ காட்டும் அன்பு குறைவதற்கோ, பிறர் உன் மீது கொள்ளும் அன்பு குறைவதற்கோ இடமிருக்காது. உடல்நலனைத் தேற்றிக் குடும்பத்தைத் திருப்தி செய்ய உன்னால் இயலவில்லையென்றாலும், அமைதியான உள்ளத்தாலும் அன்பினாலும் அவர்கள் ஆத்திரத்தைத் தணிக்க முயல்வது உன் ஆற்றலுக்கு உட்பட்டது தானே? ஷம்மியை மீண்டும் வென்று விட்ட செய்தியைத் தந்தி மூலம் தெரிவிக்க வேண்டும். உன் உடல் நலக் கேடு பற்றி அவர் அடையும் வேதனையின் நினைப்பு என்னை நாள் முழுவதும் வாட்டி வருத்துகிறது. முக்கியமான வகைகள் அனைத்திலும், என்னுடன் தொடர்பு கொண்டதால் நீ நட்டம் அடையவில்லை என்பதையும், இன்னும் சொல்லப் போனால் லாபம் அடைந்துள்ளாய் என்பதையும் ஐயத்துக்கு இடமின்றி நீ மெய்ப்பிப்பது ஒன்றைத் தவிர அவரை நான் திருப்தி செய்யக்கூடிய வழி வேறொன்றையும் அறியேன்.

மீரா நேற்றுத் திரும்பினாள். பிடுல்லில் குடியிருப்பு வசதிகள், அவளால் தாங்க முடியாத அளவுக்கு அசுத்தமாக இருந்தன.

உங்கள் இருவருக்கும் அன்பு,

பாபு

## 90

சேகான், வார்தா
*30-8-1936*

என் அன்பார்ந்த அமிருத்,

நீ நல்லவள். விவரமான கடிதங்களும் தந்திகளும் அனுப்பிக் கொண்டிருக்கின்றாய். அவை அனைத்தும் எனக்கு அவசியமாக இருந்தன. உன் கடிதங்கள் உற்சாகமாகவும் இருக்கின்றன. ஆனால் நீ கவலைப்படும் வகையில், நான் கவலைப்படவில்லை என்ற போதிலும், உன் உடல்நலக் கேடு எனக்குப் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கியுள்ளது என்பதோடு, ஷம்மியுடன் மனத்தாங்கல் ஏற்பட்டுள்ளது என்றால் தாங்க முடியாததாகவும் இருக்கிறது என்பதை நான் ஒத்துக் கொள்ளத் தான் வேண்டும். நீ அவர் அறைக்கு நடந்து சென்று, வெல்வதற்காகப் பணிந்து கொடுக்கவும் வேண்டும். உன் கண்ணீரால் அவரைக் குளிப்பாட்டு. என்னை மனப்பூர்வமாக மன்னித்து விட்டதாக அவர் எனக்குத் தந்தி அனுப்ப வேண்டும். உனக்கும் அவருக்கும் இடையே ஏற்பட்டுள்ள மனத்தாங்கலுக்கு நான் தான் காரணம் என்ற எண்ணம் எனக்கு மிகுந்த வேதனை அளிக்கின்றது.

நீ இங்கு பயபக்தியுடன் எனக்குக் கீழ்ப்படிந்து நடந்தாய். இதிலும் மனப்பூர்வமாக எனக்கு நீ கீழ்ப்படிய வேண்டுமென்று விரும்புகிறேன். மனமுவந்து கீழ்ப்படிந்து நடப்பதால், பிறர் மனத்தை மாற்ற முடியும். நீ கீழ்ப்படிந்து நடப்பதன் மூலம் குடும்பத்தில் மீண்டும் அமைதியை நிலைநாட்ட முடியுமென்பதை நானறிவேன். ஷம்மியின் மனத்தை மாற்றுவதற்கு என்ன வழியைக் கையாள்வது என்பதை உன் முடிவுக்கு விட்டு விடுவேன்.

நீ முற்றும் குணமடைந்த பின், உன்னுடனும் ஷம்மி அப்பொழுது அமைதியான நிலையை அடைந்திருந்தால் அவருடனும், உன் உடல்நலன் வேதனைதரும் முறையில் சீர்கெட்டதற்கு, என்ன காரணம் என்பது பற்றி என் கருத்தைத் தெரிவிப்பேன்.

முட்டை சாப்பிடுவதை நிறுத்திவிடாமல், பாலின் அளவைக் குறைத்துக் கொள்வது உனக்கு உசிதமென்று கருதுகிறேன். மந்த உணர்வு ஏற்படுவது முட்டையால் என்று முதலில் முடிவு செய்ய வேண்டியதில்லை. மருத்துவர் உடன்பட்டால், நீ எப்பொழுதுமே சிறிது வெள்ளைப் பூண்டு சாப்பிட வேண்டும். நிச்சயமாக என்னால் சொல்ல முடியாவிடிலும் வெங்காய எண்ணெய், சருமப்படைக்கு நல்லது என்று நான் எண்ணுகின்றேன்.

சுபாஷின் அச்சத்தை நான் வேடிக்கையாக எடுத்துக்கொள்ளவில்லை. அவர் சொல்வதில் நிறைய உண்மை இருக்கிறது. உன் ஆர்வத்தின் காரணமாகவும், நீ என்மேல் கொண்டுள்ள ஆழ்ந்த அன்பின் காரணமாகவும், உடல் பலம் தேறிவிட்டதாக நீ உன்னை

அறியாமலே பாசாங்கு செய்வாயானால் பிரிவினால் உடல்நலன் அடியோடு சீர்கெட்டுவிடும் என்பது இயற்கை தான். உண்மை நிலை பற்றி நீ தான் முடிவு செய்ய இயலும்; உன்னகத்தே நீ துருவி நோக்கி, உண்மையைக் காண முடியும். இன்றிரவு மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

பாபு

## 91

தந்தி

வார்தாகஞ்ச்,
*4—9—1936*

நீ ஒழுங்காக நடக்க வேண்டும். என் உடல்நலக் குறைவு பற்றி வருந்தாதே. சுரமில்லை.

அன்பு,

பாபு

## 92

தந்தி

வார்தாகஞ்ச்,
*5—9—'36*

சென்ற அறுபது மணி நேரமாக முற்றிலும் சுகம். மிகுந்த மகிழ்ச்சி. நினைவுப்பணிப் பொறுப்பை ஜலந்தருக்கு மட்டுமே நீ ஏற்றுக்கொள்ள வேண்டும்.

பாபு

## 93

வார்தா
*6-9-'36*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

சென்ற சில நாட்களாக நான் விளையாடக்கூடிய நிலையில் இல்லை. ஆகவேதான் நீ புரட்சிவாதி, முட்டாள், இத்யாதி இத்யாதி, என்பவற்றை நான் மறந்துவிட்டேன். இப்பொழுது

ஓரளவு நான் அமைதியாக இருக்கின்றேன். உனக்கும் ஷம்மிக்கும் இடையே ஏற்பட்டிருந்த மனத்தாங்கல் சரியாகிவிட்டதென்ற செய்தியை நீ இன்னும் தெரிவிக்கவில்லை. நீ அவரிடம் செல்லவில்லையென்றால், உடனே அதைச் செய்யவேண்டும்.

உன் கைப்பெருவிரலில் ஏற்பட்ட கொப்புளம்பற்றி நான் அப்பொழுதே கவலைப்பட்டேன். அதற்கு நீயே சொந்தமாக சிகிச்சை செய்து கொள்ளக் கூடாது, ஷம்மி உன்னைக் கவனிக்க மறுத்தால், தேர்ச்சி பெற்ற மருத்துவர் ஒருவரை நீ காணவேண்டும். உன் உணவைப்பற்றியும் நான் இங்கிருந்துகொண்டு எதையும் நிர்ணயித்துச் சொல்ல முடியாது; பொதுவான சில யோசனைகளைத்தான் கூறமுடியும். குளிக்கும் நீரின் வெப்பத்தை உயர்த்தியது பொருத்தமே. உடலின் வெப்பத்தைவிட 5 டிகிரி குறைவாக வைத்துக் கொண்டால் போதும்.

உன் உடல்நலக் கேட்டிற்கான காரணம் எதுவென்று நான் கருதுகிறேன் என்பதை நான் உனக்குப் பின்னர் தெரிவிக்க வேண்டும். இதை இரவு 8 மணிக்குப் பின் எழுதுகிறேன். ஆகவே மேலும் எழுதுவதற்கில்லை.

என் உடல் நிலைபற்றிய முழுவிவரங்களையும் மகாதேவ் உனக்குத் தெரிவித்திருக்கின்றார். ஆகவே என் உடல்நிலை முதல்தரமாய் உள்ளதென்று சொல்வதற்கு மேல் நான் வேறெதுவும் சொல்லத் தேவையில்லை.

பாம்புகள்பற்றிய புத்தகத்திற்காக ஷம்மிக்கு நன்றி தெரிவி. படத்தில் சித்திரிக்கப்பட்டுள்ளவற்றில் சிலவற்றை நான் நேற்று நேரிலேயே பார்த்தேன்.

அதிக அன்பை உனக்கு அனுப்புவது

கொள்ளைக்காரன்.

*7—9—'36*

உன் முகத்துக் கெதிராக என் கதவு என்றுமே சாத்தப்படாது.

## 94

வார்தா,
*10-9-'36.*

என் அன்பார்ந்த முட்டாளே,

உங்கள் அனைவருக்கும் எழுதும் உடலாற்றல் எனக்கு இத்தனை நாள் இருக்கத்தான் செய்தது. ஆனால் பேச்சிலேயே என் நேரம் செலவாகி வந்ததால், எழுதுவதற்கு திங்கட்கிழமையன்று தவிர வேறு அவகாசம் கிடைக்கவில்லை. அன்று நான் எழுதிய கடிதம் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன்.

இக்கடிதத்தைக் கூட இரவில் உறங்கச் செல்வதற்கு முன் தான் எழுதுகின்றேன்.

ஷம்மியிடமிருந்து எனக்கு நல்லதொரு கடிதம் வந்தது. என் மலேரியா சுரத்திற்கும், சேகானில் இயங்கலைக்கும் தொடர்பு இல்லையென்ற உன் கருத்தை நான் ஏற்றுக்கொள்ளவில்லை. உண்மையில் சேகானின் இயங்கலை மலேரியா பரவுவதற்கு உகந்தது என்பது பெயர்பெற்றது. அதை நான் வெல்ல வேண்டுமே ஒழிய, வெறுத்து ஒதுக்கக்கூடாது. சனிக்கிழமையன்று அங்கு செல்வேனென்று எதிர்பார்க்கின்றேன். நாளை மருத்துவப் பரிசோதனைப் படம் எடுப்பார்கள். அதுதான் என் தலைவிதியைத் தீர்மானிக்கும்.

மிகவும் ஒழுங்காகக் கிடைத்து வரும் உன் கடிதங்கள், அரும் செல்வக் களஞ்சியமாகும். சருமப்படையோடும், பெருவிரல் கொப்புளத்துடனும் நீ விளையாடக்கூடாது. தேர்ச்சி பெற்ற மருத்துவ நிபுணரிடம் உன்னை ஒப்படைத்து, அவர் சொல்வதுபோல் செய்ய வேண்டும். நீ முட்டைகள் சாப்பிடும்வரை, நீ மாமிசம் உண்ண வேண்டுமென்று எவரும் வற்புறுத்துவார்கள் என்று நான் எண்ணவில்லை. நிபுணரின் கவனிப்பைப் பெற்று வருகிறாய் என்பதை உறுதிப்படுத்த, நீ தந்தி அனுப்ப வேண்டுமென்று விரும்புகிறேன். அது பற்றி ஷம்மியுடன் கலந்து பேசு. அவ்விஷயத்தில் நீ பிடிவாதமாக இருக்கக்கூடாது.

தற்போது வேறொன்றுமில்லை.

அன்பு,

பாபு

## 95

சேகான், வார்தா
*12-9-'1936*

என் அன்புள்ள முட்டாள்,

கடைசியாக நான் பிரியத்திற்குரிய பழைய சேகானுக்குத் திரும்பி வந்து சேர்ந்து விட்டேன். பா, லீலாவதி, மோதி ஆகியோர் இப்போது என்னுடனில்லை. அப்துல் சலாம் ஒரு சில மணி நேரத்திற்கு இங்கு தங்கிவிட்டு, வார்தாவுக்குத் திரும்புவாள். கட்டுப்பாட்டின் பேரில் லீலாவதி மகன்வாடியில் இருக்கின்றாள். அவளுக்கு ஆதரவாக, பா அங்கு தங்கியிருக்கின்றாள். இங்கு எல்லாம் அமைதியாகவும் நேர்த்தியாகவும் உள்ளது. எனக்கு முன்னால் ஒரு கூண்டில், நேற்றுப் பிடிபட்ட உயிருள்ள பாம்புகள் இரண்டு இருக்கின்றன. உன் பச்சை நிறச் சோப்புத் துண்டு, அதற்குரிய இடத்தில் உள்ளது. இன்னும் சில நாட்களுக்கு அதைப் பயன்படுத்தலாம்.

உன் சூடுகாப்புக் கலம் நேற்றிரவு நன்கு பயன்பட்ட பின், சுக்குசுக்காக நொறுங்கி விட்டதென்று அறிய நீ மகிழ்ச்சி அடைவாய். வண்டிக் கதவு திடீரெனத் திறந்ததால், கலம் வெளியே விழுந்துவிட்டது. அதற்குப் பதிலாகப் புதிய கலம் நீ வாங்கக் கூடாது. அதற்குப் பதிலாக இங்குள்ள பொருட்களைப் பயன்படுத்தியே தேவையை நான் சமாளித்துக் கொள்ளவேண்டும். எனக்குத் தேவையான பொருட்களைக் கேட்டுப் பெறுவதில் நான் வெட்கத்தைப் பாராட்டுவதில்லை என்பதை இதற்குள் நீ அறிந்திருப்பாய். எனக்கு வேண்டிய பொருள்களில் ஒன்று, நல்ல, உருப்பெருக்காடி. இதை உனக்கு அவகாசம் கிடைக்கும்போது, வாங்கி அனுப்பினால் போதும்; அஞ்சலில் அனுப்பவேண்டியதில்லை. நேற்று உடைந்த சூடுகாப்புக் கலத்தின் விலையென்ன என்று எனக்குச் சொல். விவரம் தெரிந்து கொள்ள வேண்டுமென்ற ஆசையில்தான், இந்தக் கேள்வியைக் கேட்கின்றேன்.

நான் சொன்னதற்குச் செவிசாய்த்துச் சருமப்படைபற்றி நிபுணரிடம் ஆலோசனை கேட்டுள்ளாய் என்று நம்புகிறேன். அது, பெரும்போக்காக அசட்டை செய்யக் கூடியதல்ல.

என்னைப் பற்றி நீ கவலை கொள்ளக்கூடாது. நான் என்னை நன்கு கவனித்துக் கொள்வேன்.

மீரா இப்பொழுது தன் குடிசையில் இருக்கின்ருள்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 96

சேகான், வார்தா,
*13—9—'1936*

என் அன்பார்ந்த முட்டாள்,

உன் கடிதங்களை உடனே கிழித்துவிட வேண்டுமென்று நீ விரும்புவதால், நான் எப்பொழுதும் என் நினைவில் இருப்பதைக் கொண்டு தான் பதில் எழுத வேண்டியிருக்கிறது. ஆம்; ஷம்மி இனியதொரு கடிதம் எழுதினர். அதற்கு நான் பதில் எழுத வேண்டியதில்லை என்று அவர் கூறியுள்ள போதிலும், நான் பதில் எழுதப் போகிறேன்.

உன் நோய்க்கான காரணத்தை நான் ஆராய்ந்து கண்டுள்ளதைச் சொல்கிறேன். இயற்கை சிகிச்சையின் நடுவில் நீ சென்ருய். அது நிறைவு பெருததால், அடியோடு மாறிவிட்ட இயநிலையில், அதை ஒட்டிச் சில விளைவுகள் ஏற்பட்டன. அதையும் இயற்கை சிகிச்சை முறையில் கவனித்திருந்தால் உடல்நலனுக்கு உகந்த விளைவென்றே அதைக் கூறலாம். இடுப்புக் குளிப்பு மட்டுமல்ல,

நீராவிக் குளிப்பு, ஒளிக்குளிப்பு போன்றவை உண்டு. ஆனால் அவ்வாறு செய்வதற்கில்லை. விளைவுகள் பற்றி நான் கவலைப்படவில்லை. உன் குடும்பத்தில் இது குறித்து, ஓரளவு நியாயத்துடனேயே ஏற்பட்ட ஆத்திரம் பற்றிக் கவலைப்பட்டேன். இயற்கை சிகிச்சை முறைகளில் அவர்களுக்கு அனுதாபம் இருக்க முடியாது.

இப்பொழுது நான் தெளிவாக விளக்கியுள்ளேனா? குடும்பத்தில் மீண்டும் அமைதி ஏற்பட்டுள்ளதற்கு ஆண்டவனுக்கு நன்றி செலுத்தவேண்டும்.

ஆனால் உன் சருமப் படையுடன் நீ விளையாடக்கூடாது. நீ என்னுடன் இருந்தால், நான் உனக்கு நிச்சயம் சிகிச்சை செய்வேன். ஆனால் அது நடக்காது; சிகிச்சைக்காக உன்னால் இங்கு வருவது நிச்சயமாக இயலாது. ஆகவே நீ வழக்கமான முறைப்படி சிகிச்சை செய்து கொள்ளவேண்டும். அது எவ்வளவு விரைவில் செய்து கொள்கிறாயோ, அந்த அளவுக்கு நல்லது.

சம்பிரதாய முறையிலிருந்து நீ மாறுபட்டுள்ளாய். ஆகவே உன் குடும்பத்தினர் குறைகூறுவது கண்டு நீ ஆத்திரம் கொள்ளக் கூடாது. பெரு மனதான பரிவு, மேலும் மேலும் பெருகும் அக மகிழ்ச்சி, அமைதி, உடல்நலப் பொலிவு ஆகியவற்றின் மூலம்தான் நீ உன் புரட்சிக்கு நியாயம் காட்டமுடியும். புரட்சிகள் நியாயமானவை என்று மெய்ப்பிப்பதற்கு வெற்றி ஒன்று தான் வழி. ஆகவே நீ மாறுதல்கள் செய்வதில் பொறுமையாகவும் விவேகத்துடனும் நடந்து கொண்டால், எல்லாம் இனிதே நடக்கும்.

தாய் அங்கிருந்தால், அவருக்கு என் அன்பைத் தெரிவி.

உனக்கு அவகாசம் இல்லையென்றாலோ, எழுதுவதற்குச் சோம்பலாக இருந்தாலோ, நீ தினமும் எனக்குக் கடிதங்கள் எழுதத் தேவையில்லை. எனக்கு எழுதுவது, உன் உடலுக்கோ உள்ளத்துக்கோ சுமையாக இருக்கக்கூடாது.

வண்டிகள் நிறைய அன்பு,

கொள்ளைக்காரன்

## 97

சேகான், வார்தா,
*18-9-1936*

என் அன்புள்ள முட்டாள்,

ஒரு வரி மட்டுமே எழுதப் போகிறேன். உன் ஆப்பிள்களை அனைவரும் சுவைத்துச் சாப்பிட்டோம். இன்னும் அதிகம் அனுப்ப வேண்டுமென்ற வேண்டுகோளல்ல, இது.

நீ, அவர் வீட்டுப் பெண்களைக் கவனித்துக் கொண்டதற்காகக் கான்சாகிப் மிகுந்த நன்றி பாராட்டினர். நீ அவர்களிடம் தனி அக்கறை காட்டி, நட்பு பூண்டு, சரியான வழியில் அவர்களை அழைத்துச் செல்ல வேண்டுமென விரும்புகிறார். அவர் கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன்.

ஷம்மி இப்பொழுது உன்னைக் கவனித்து வருகிறார் என்பது குறித்து எனக்கு மகிழ்ச்சி. இனிமேல் நீ விரைவில் குணமடைவாய். நல்ல முட்டாளாய் இருப்பதற்கேற்ப, நீ மனமுவந்து அவருக்குக் கீழ்ப்படிய வேண்டும்.

வண்டி நிறைய அன்பு,

கொடுங்கோலன்

## 98

சேகான்
20—9—1936

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

என் சாத்துவிகக் கொள்கையை நீ உன் கொள்கையாகவே ஏற்றுக் கொள்ளாதவரை அதை ஆதரித்து நீ பிடிவாதமாக வாதாடுவதால், தாய் கூட உன்னை விலக்கி வைத்துவிடுவாளென்று அஞ்சுகிறேன். நாம் காட்டுமிராண்டிகளாக நடக்கும் போதுகூட நாம் செய்வது தவறு என்பதை நாம் உணரும் வரை, நமக்குச் சோதனை ஏற்படும்போது, நம்மகத்தேயுள்ள காட்டுமிராண்டித்தனம் மேலோங்கக் கூடும் என்பது நம் நிலையைப் பாதிக்காது. உண்மை என்னவென்றால், ஐயப்பாடுகள் சூழ்ந்த இந்த யுகத்தில், நம் நிலை பற்றியே நாம் நிச்சயமாக இருப்பதற்கில்லை. நாம் பதில் சொல்ல முடியாத கவர்ச்சிகரமான வாதம் எதுவும் தோன்றும் போது, நம் அறிவில் கொண்டுள்ள செருக்கு அடங்குவதற்குப் பதிலாக, நமக்குத் திகைப்பு தான் ஏற்படுகிறது. அகிம்சை, குடும்பக் கட்டுப்பாடு போன்றவை முடிவற்ற பிரச்னைகள். ஆகவே மொத்தத்தில் என் கருத்துக்களுக்கு ஆதரவாக நீ வாதாடாமலிருப்பதே நல்லதாகும். அவை உன் கருத்துக்களே ஆகிவிட்டால், உன் கருத்துக்களை உறுதிப்படுத்த உனக்கு நிரம்ப ஆற்றலுண்டென்று நான் அறிவேன். என்னுடன் தொடர்பு கொண்டிருப்பதால், உன் சிறந்த ஆற்றலின் தரம் குறைய நான் விரும்பவில்லை. அதைவிட, நீ வார்தாவுக்கு வரத் தொடங்கிய பின், உன் உடலோ உள்ளமோ சீர்கேடுறவில்லை என்று சொல்லப்படுவதையே நான் விரும்புவேன்.

உன் சருமப் படைக்கு ஷம்மி சிகிச்சை செய்து வருவது அறிந்து மகிழ்கிறேன். பாதங்களைப் பற்றி நீ எரிச்சல் கொள்ளக் கூடாது. உள்ளே இருப்பது வெளியே வருவது நல்லதல்லவா?

நோயின் அறிகுறியை அமுக்கிவைக்காமல், நோயைக் குணப் படுத்தும் மருந்து வேண்டும் என்பதுதான் முக்கியம்.

4-வது பக்கத்தை விளங்கிக் கொள்வதில் உனக்குச் சிரமம் எதுவும் இருக்காதென்று நம்புகிறேன். இதையும் அதன் பகுதி யாக நீ கருதினால், உனக்குச் சிரமம் எதுவும் இருக்காது. நான் குறிப்பிடுவது உனக்கு விளங்கும்.

நம் நெருங்கிய உறவினரில் கூட, சிலர் வெட்கமில்லாமல் நடந்து கொள்ளக் கூடும். நான் அந்த இனத்தைச் சேர்ந்தவன். ஆகவே நான் கேட்கும்வரை. சூடுகாப்புக் கலத்தை எனக்கு அனுப் பாதே. எனக்குச் சூடான பானங்கள் கிடைப்பதில் சிரமமில்லை. அக் காரணத்திற்காக நீ கவலைப்பட வேண்டியதில்லை.

தாதியர் வேலைக்கு ஆண்களைவிடப் பெண்களே சிறந்தவர் களென்றும், சிறு நுணுக்கங்களிலும் அதிகக் கவனம் செலுத்த வல்லவர் என்றும் நீ கொண்டுள்ள கருத்தை நானும் ஆதரிக் கின்றேன். தற்கால நாகரிக நாரீமணிகளுக்கும் இது பொருந்துமா, பொருந்தாதா என்பது பற்றி கருத்து தெரிவிக்க என்னைக் காட் டிலும் உனக்கு அதிக அருகதையுண்டு.

அண்மையில் நீ எழுதியுள்ள கடிதங்கள் எனக்குச் சஞ்சல மூட்டுகின்றன. நீ மீண்டும் அளவுக்கு மீறி வேலை செய்து அலுப்பை வரவழைத்துக் கொள்வாய் போலும். உடலிலோ, உள்ளத்திலோ களைப்பாக இருக்கும்போது, 'மாட்டேன்' என்று மறுத்துச் சொல்லக் கற்றுக் கொள்.

பாவும் மனுவும் நேற்று டில்லிக்குச் சென்றனர். லீலாவதி இன்னும் மகன்வாடியில் தான் இருக்கின்றாள். மீராவுக்கு இன்று தான் சுரம் மீண்டும் வருமென்று அஞ்சிய நாள்; ஆனால் இன்று சுரம் இல்லை.

கான் சாகிபும் நானும் உனது ஆப்பிள்களைப் பெரிதும் சுவைத்து உண்டோம்.

இன்று இவ்வளவு போதும்.

அன்பு,

பாபு

## 99

சேகான், வார்தா,
*21—9—1936*

என் அன்பார்ந்த முட்டாள்,

உன் சருமப்படை போகவேண்டும். எப்படி என்பது எனக்குத் தெரியவில்லை. பாதிக்கப்பட்ட பகுதிக்குச் சுடு நீராவி இலேசாகக்

காட்டி அதன் பின்பு பனிக் கட்டிக் கட்டு போடுவதை ஷம்மி ஒத்துக் கொள்வாரா? இதைப் பற்றி அவருடன் பேச முடியு மென்று நீ எண்ணினல், அவ்வாறு செய்ய வேண்டும்; அதே சம யத்தில் இது சரும நோய் என்பதால், நீ பதட்டமடையக் கூடாது, நீ இந்தப் பாதிப்பு பற்றி எண்ணுமலே இருந்தால், இன்னும் விரை வில் குணமடைவாய். இந்த நேரத்தில் நான் உன்னுடனிருந்தால், எவ்வளவு நன்ருக இருக்கும்? ஆனல் அவ்வாறு செய்வதற்கில்லை.

நியாயமில்லாமல், அளவுக்கு மீறி உழைத்துத் தம் உயிருக்கே ஆபத்து வரவழைத்துக் கொள்கிருர் என்று பீல்டனிடம் கூறு.[1] என் மரியாதையையும் அவருக்குத் தெரிவி. வேலையிலிருந்து விடுப்பு எடுத்துக் கொண்டு, விரைவிலே அவர் குணமடைய வேண்டும். விஷ மலேரியா சுரத்தின் விளைவுகள் மிகக் கடுமை யானவை என்று சொல்லப்படுகிறது.

சென்ற வெள்ளிக்கிழமை காலை 10 மணிக்கு நான் மாரடைப் பினல் மரணம் அடைந்திருக்க வேண்டியவன் என்ற புரளியை மகாதேவ் உனக்குத் தெரியப்படுத்தினரோ, என்னவோ? மிக்க புலமை வாய்ந்த ஒருவர் உண்மையாகவே அஞ்சி, ஜம்னுலால்ஜிக்கு இத் தகவலை அனுப்பினர். அவர் என்னிடம் முழு விவரமும் கூறினர். இத் தகவல் பற்றி அவர் வேடிக்கையாகப் பேசிய போதிலும், இங்கு இரவெல்லாம் மகோதயா தங்க வேண்டுமென அவர் ஏற்பாடு செய்திருந்தார். எனக்கு இறுதிக் கடன்கள் செய் யும் வாய்ப்பு அவருக்குக் கிட்டாது போனலும், அன்று மீராவுக்கு கடுமையான சுரம் இருந்ததால், அவர் அங்கு தங்கியது பயன் பட்டது.

அதிதிகள் அதிகமாக வந்துவிட்டது, உன் குறுகிய வசதி களைப் பெரிதும் சோதித்து விடவில்லை என்றெண்ணுகிறேன். குளிர்காலத்தில் நீ எங்காவது ஒளிந்து கொண்டால் நன்ருக இருக் கும். சிம்லாவை விட வேறெந்த மலையும் வசதியாக இருக்கும். மகாபலேஷ்வர் அல்லது ஊட்டிக்குச் சென்று பார்க்கக் கூடாதா?

அன்பு,

கொள்ளைக்காரன்

## 100

சேகான், வார்தா,
24-9-36

என் அன்புள்ள முட்டாள்,

வலது கைக்குச் சற்று ஓய்வு கொடுக்க இடது கையால் இதை எழுதிப் பார்க்கிறேன்.

---

1. நம் வானொலித் துறையை நிறுவிய லூரியல் பீல்டன்.

நீ அளவுக்கு மீறி அதிக வேலை செய்கிறுயென்றே தோன்று கிறது. அதற்கு நீ ஏதாவது ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டும்

பத்திரிகைக் குறிப்பு வேடிக்கையாக இருக்கின்றது. பொய்கள் இல்லாவிடில், அவற்ருல் வாழவே முடியாது போலும். இன்னும் கொஞ்ச காலம் போனல், நீ காற்ருேடு கலந்து விட்டதாகவே அவை சொல்லக் கூடும். அதற்குப் பிறகு துணை எதுவுமில்லாமலே நீ எங்கும் பறந்து செல்ல முடியும். காற்றிலே மிதந்து நீ சேகானுக்கு வந்தாலும், நீ தங்குவதற்கு நான் ஒரு மூலையை ஒதுக்கி வைக்க வேண்டிய அவசியமிராது. நீ காற்ருேடு கலந்துவிட்ட பின்பு உன்னை எப்படிக் கண்டு பிடிப்பது என்பது தான் கடினம். நீ ஒன்றுமில்லாமல் போவதற்குள் எனக்கு ஆருவது அறிவு வளர்ந் திருக்கும். அதைக் கொண்டு காற்றில் இருக்கும், அல்லது இல்லா திருக்கும் உயிரினங்களை நான் அடையாளம் கண்டு கொள்ளக் கற்றிருப்பேன்.

முட்டாள்தனமாக எழுதிக் கொண்டிருப்பதைத் தவிர எனக்கு வேறு வேலை கிடையாதென்று எண்ணி விடாதே. நான் உன் னுடன் உரையாட விரும்பினேன். உன் சருமப்படை பற்றி உனக்கு எப்பொழுதும் அறிவுரைகள் கூறிக் கொண்டிருக்க விரும்ப வில்லை. நீ அனுப்பியிருந்த அந்த பாழாய்ப் போன பத்திரிகைக் குறிப்பே, இக் கடிதத்திற்கு வாசகமாக அமைந்துவிட்டது.

ஆப்பிள்கள் மீண்டும் வந்து சேர்ந்துள்ளன. அவை உன் தோட்டத்திலிருந்து வந்தவையா?

அன்பு,

**கொள்ளைக்காரன்**

## 101

சேகான், வார்தா,
*26-9-1936*

என் அன்பார்ந்த முட்டாள்,

உடைய முடியாத சூடுகாப்புக் கலம் வந்தால், அதை நான் திருப்பி அனுப்ப மாட்டேன். உன் கடிதங்கள் அனைத்தையும் நான் கிழித்து விடுவதால், மகமுதாபாத் முகவரியையும் தெரி யாமல் கிழித்திருக்கிறேன். அதைத் தனியாக ஒரு தாளில் எழுதி அனுப்பு.

சிம்லாவில் உனக்கு ஒரு வீடு இருக்கிறதென்ற ஒரே காரணத் திற்காக மட்டும் கோடையை அங்கு கழிப்பது நிச்சயமாக முட்டாள்தனம் தான். உண்மையில் உன் உடல் வலிமையை மீண்டும் பெறுவதற்கு உகந்த மலைவாச ஊர் வேருென்றை நீ தேர்ந்தெடுக்க வேண்டும்.

அகிம்சையின் அம்சங்களில் ஒன்றை நினைவிற்கொள். அதிகம் பேசாமல், மௌனமாக, அமைதியாகச் செயலில் ஈடுபடுவது அதன் அம்சம். அது அறிவைக் கவர்வது மட்டுமல்ல; அது இதயத்தையே ஊடுருவி ஆட்கொள்கிறது. பேச்சிலும் வாதத்திலும் அது அதிகம் ஈடுபடும்போது, அந்த அளவுக்கு அதன் பயன் குறைகிறது. ஆகவே வாதம் செய்யாத காரணத்தால், உன் கருத்து ஓங்க முடியாமல் போனாலும் அந்த நிலையை ஏற்றுக்கொள்ளத் தயங்காதே. வெளிப்பார்வைக்குத் தோல்வியாய்த் தோன்றுவது உண்மையில் வெற்றி வேளையாகவும் இருக்கக்கூடும். பேச்சு, பெரும்பாலும் பலவீனத்தின் அறிகுறி.

மாமிசம் சாப்பிடுவது அவசியமென்று ஷம்மி கருதினால், அதை நீ தயவு செய்து சாப்பிட்டுப் பார்க்கவேண்டும். விட்டுக்கொடுப்பதே கடமையாகிவிடும் நேரத்தில், விட்டுக் கொடுப்பதால் உன் சைவ உணவுக் கொள்கை மேலும் உறுதிபெறும்.

அன்பு,

கொள்ளைக்காரன்

## 102

சேகான், வார்தா,
*5-10-'36*

என் அன்புள்ள முட்டாள்,

இரண்டு கூடை ஆப்பிள்களும், இரண்டு உருப்பெருக்காடிகளும், தேனும் வந்து சேர்ந்துள்ளன.

தேஷ்முக் உன்னை மீண்டும் பார்ப்பார் என்று நம்புகிறேன்.

மாமிசம் சாப்பிடுவதுபற்றி மீண்டும் உன்னுடன் மல்லுக்கொடுக்கப் போவதில்லை. உன் கொள்கைகளை நான் மதிக்க விரும்புகிறேன்.

தென்னாப்பிரிக்கக் குழுவினருடன் உன் அனுபவத்தை அறிய ஆவலாய் உள்ளேன்.

இப்போதைக்கு என்னிடமிருந்து நீண்ட கடிதங்கள் எதிர்பாராதே. இரண்டு பேருக்குக் கடுமையான நோய். மீராவுக்கு மீண்டும் உடல் நலன் கெட்டுவிட்டது. உணவை ஒழுங்குபடுத்திக் கொள்ள அவளுக்குத் தெரியவில்லை. யாருக்குத்தான் தெரிகிறது? முட்டாள்களுக்கு ஒருவேளை தெரியக்கூடும்.

அன்பு,

கொள்ளைக்காரன்

# 103

சேகான், வார்தா,
*8—10—'36*

என் அன்பார்ந்த முட்டாளும் புரட்சிவாதியும் ஒன்று சேர்ந்தவளே,

நீ அனுப்பிய வெற்றுக் காகிதத்தை நான் உரியமுறையில் நிறைவு செய்து அனுப்புகின்றேன்.

உருப்பெருக்காடிகள் ஏற்கெனவே பல வழிகளிலும்,—பாம்புகளையும் நோயாளிகளையும் பரிசீலனை செய்வது உள்பட,—பயன் பட்டு வருகின்றன. மீண்டும் உயிருள்ள இரண்டு பாம்புகள் என்னிடம் உள்ளன.

ஆம்; நானாவதி என்னுடன் இருக்கின்றார்; மூன்று படுக்கைகள்; மீரா, நானாவதி, பல்வந்த்சிங். கடைசியாகக் குறிப்பிட்டவர் சுரத்திலிருந்து குணமடைந்துள்ளார். மற்ற இரண்டு பேர் உடல் நிலையும் குணமடையப் பிடிவாதமாக மறுக்கின்றது. சுரம் கூடிக் குறைந்து தொடர்கின்றது. அவர்கள் அனைவரையும் கவனமாகப் பார்த்துக் கொள்ளவேண்டும். நீர் சிகிச்சையை அவர்கள் பெற்று வருகிறார்கள். பழச்சாறு சாப்பிடுகிறார்கள். இப்பொழுது கவலைக்கு இடமொன்றுமில்லை.

மற்ற இடங்களில் இருக்குமளவு சிம்லாவிலும் நோய் இருக்கத் தான் செய்கிறது. அங்கு முதன் முறையாக வந்தபோது, காமநோய்களுக்கு அந்த இடம் பேர்பெற்றது என்று என்னிடம் கூறினார்கள். ஆனால் அதன் மலைத் தென்றலை அனுபவிக்க வேண்டுமென்று விரும்புபவர்கள் அதைத் துய்க்கலாம். ஆகவே இயநிலை உனக்கு ஒத்துக்கொண்டால், நீ எவ்வளவு நாட்கள் தங்க வேண்டுமென்று ஷம்மி விரும்புகிறாரோ, அவ்வளவு நாட்கள் தங்கவேண்டும். அதற்கிடையே மங்குவாலில் கிராமவேலைக்கு ஒரு குறையும் வராது.

நான் ஆமதாபாத் செல்லும்போது, பெண்களிடையே எழுந்துள்ள வேறுபாடுகள் பற்றி என்ன செய்ய முடியுமென்று பார்க்கிறேன். ஆனால் என்னால் எதுவும் சாதிக்க முடியுமென்று உறுதி கூறமாட்டேன். அங்குள்ள நிலவரம் எனக்குத் தெரியும். உன் கடிதத்திற்கு மிருதுளாவிடமிருந்து பதில் எதுவும் உனக்கு வந்து சேரவில்லையென்று, நீ சொல்வதிலிருந்து தெரிகிறது. உன்னை அவள் வீட்டிற்கு அழைத்து எழுதியிருந்ததாக அவள் தெளிவாக என்னிடம் கூறினாள்.

தம் பெண்கள் உன்னுடன் இருக்க விரும்புவதும் அதை நாடுவதுமே போதுமென்று கான்சாகிப் கருதுகிறார். அவர்களுக்கு நிரந்தரமான அழைப்பு அளித்துள்ளதற்காக அவர் உனக்கு நன்றி உடையவராக இருக்கிறார். அவர்களுக்கு நீ பாடம் சொல்லிக்

கொடுக்க வேண்டுமென்று விரும்பவுமில்லை; எதிர்பார்க்கவு மில்லை. கான்சாகிபுக்கு உடல்நலக் கேடு ஏற்படவேயில்லை. பற்களைப் பரிசோதனை செய்ய வேண்டுமென்று யோசனை கூறி, அவரை நாகபுரிக்கு அனுப்பினேன். ஒரு பல் பிடுங்கப்பட்டது.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 104

சேகான், வார்தா,
*10-10-'36*

என் அன்பார்ந்த புர்ட்சிவாதி,

சென்ற சில நாட்களாக உன்னைப் புறக்கணிக்க நேரிட்டுவிட்டது. கடிதங்கள் எழுதுவதை நிறுத்திவிட்டு, என் நேரம் முழுவதையும் நோயாளிகளைக் கவனிப்பதில் செலுத்தினேன் என்பது தான் எனக்கு ஒரே ஆறுதல். அவர்களைப்பற்றிய கவலை என் உள்ளத்திலிருந்து நீங்கிவிட்டதென்று சொல்வதற்கில்லை. நாளுக்கு நாள் சுரம் மெதுவாக ஏறிக்கொண்டிருக்கிறது. இதுவரை ஆபத்து எதுவும் இல்லை. ஆயினும் இருவரும் மிகவும் பலவீனமாக இருக்கின்றார்கள். உடல் வலிமை பெற்றுவிட்டால், அவர்கள் குணமடைந்து விடுவார்கள். எப்படியும் அவர்களுக்கோ எனக்கோ கவலை ஒன்றுமில்லை. அவர்களைப் பரிசோதனைசெய்ய மருத்துவ அதிகாரி இன்று வந்திருந்தார். அவர்கள் நீர் சிகிச்சை மட்டுமே பெற்று வருகின்றனர்.

உன் வானொலிப் பேச்சை இப்பொழுதுதான் படித்து முடித்தேன். கிராமத்தைப்பற்றி உன் அனுபவம் மிகச் சிறந்த முறையில் சித்திரிக்கப்பட்டுள்ளது. மற்றப் பகுதி அவ்வளவு சீராக அமையவில்லை.

'பழைய அமைப்புகள்......அழிந்துவிட்டன' என்று நீ கூறுகிறாய். அவ்வாறாயின் அவை மறுமலர்ச்சி பெற வேண்டிய காரணமென்ன? ஆனால் மிஞ்சிப்போனால் அவை சீர்குலைந்து விட்டனவே ஒழிய, அழிந்துவிடவில்லை என்று நீயே பின்னர் எடுத்துக் காட்டுகிறாய்.

மேலும் நீ தவறான கோடியிலிருந்து தொடங்குகிறாய்—சாலைகளும் வீடுகளும் கட்டச் சொல்கிறாய். அதை யாரால் செய்ய முடியும்? நிச்சயமாக, பொது சுகாதாரம்தானே தலையாயது. நாம் இருவரும்தான் அக்கருத்தை ஏற்றுக்கொண்டோமே. நீயும் அந்த வேலையுடன் தானே தொடங்கினாய்? ஆனால் இவ்வளவு தெளிவான உண்மை உனக்கு நினைவிருந்தால், நீ ஏன் முட்டாளாக இருக்கிறாய்? அது தவிர, மக்கள் தாங்களே செய்துகொள்ளக் கூடிய, செய்யவேண்டிய காரியங்களுக்கும், அரசு செய்யக்கூடிய,

செய்யவேண்டிய காரியங்களுக்கும் இடையே தெளிவாகப் பாகு பாடு செய்து நீ காட்டவில்லை. இதற்குமேல் விமர்சனம் உனக்கு வேண்டாமல்லவா? பாராட்டுதல் உனக்குத் தேவையில்லை. அது தான் அளவுக்குமீறி உனக்குக் கிடைத்துச் சலிப்பு ஏற்பட் டிருக்குமே!

நீ மட்டும் இரண்டு மாதங்கள் என்னுடன் தங்க அனுமதிக்கப் பட்டால், உன் உடலைச் சீராக்கிவிட முடியுமென்று நம்புகிறேன். மருத்துவ நோக்கிலிருந்து, இச் சருமப்படை நிச்சயமாக கவலை ஊட்டுவதுதான். ஆனாலும், நான் நம்பிக்கை இழக்கவில்லை. நீ ஆரோக்கியத்துடன் இராவிடில், நீ ஆமதாபாத்துக்குச் செல்ல வேண்டாம்.

இப்பொழுதெல்லாம் வரும் ஆப்பிள்கள் நல்ல வாட்டமாக உள்ளன; அனைத்தும் நன்றாக உள்ளன. ஒவ்வொரு முறை அனுப் பும் பழங்களும் இரயில் கட்டணமும் எவ்வளவு என்று நீ எனக்குச் சொல்லவேண்டும். தேனும் பத்திரமாக வந்து சேர்ந்தது. முழு வதையும் நான் நேற்றுச் சாப்பிட்டு முடித்தேன். அது மிகவும் சுவை யாக இருந்தது.

லயோனலிடமிருந்து எனக்குச் செய்தி எதுவும் இன்னும் வர வில்லை.

கான்சாகிப் சாப்பிடக் கூடியதற்கு மேலாகவே இங்கு பழம் வந்திருக்கிறது. என் தேவைக்கு மேலாகவே எனக்கு ஆப்பிள்கள் உன்னிடமிருந்தும் அம்புஜத்திடமிருந்தும் வருகின்றன. சாத்துக்குடி கள் பம்பாயிலிருந்து வருகின்றன. ஆரஞ்சுகள் உள்ளூரிலேயே கிடைக்கின்றன.

அன்பு,

**கொடுங்கோலன்**

கான்சாகிப் 14ந் தேதி டில்லிக்குப் புறப்படுகிறார்.

## 105

சேகான், வார்தா,
*16—10—1936*

என் அன்புள்ள முட்டாள்,

எனக்கு ஒரு நிமிட அவகாசம் கிடைத்துள்ளதை, உனக்குச் சில வார்த்தைகள் சொல்லப் பயன்படுத்த வேண்டும். சுரம் இன் னும் நீங்கவில்லையெனினும், நோயாளிகள் நன்றாகவே உள்ளனர். கிராமவாசிகளில் எத்தனை பேர் மருத்துவ மனைக்குச் செல்லமுடி யும்? நான் விரும்பியிருந்தால், இருவருமே மருத்துவமனைக்குச் சென்றிருப்பார்கள். என் கடந்த கால வாழ்வை மறுதலிக்காமலும் அண்மையில் எழுதிய கட்டுரைக்கு முரண்பாடில்லாமலும், நான் அவர்களை அங்கு அனுப்பியிருக்க முடியாது. இம்மண்ணுலகில்,

இந்த ஊனுடலில் நான் பணியாற்ற வேண்டுமென இறைவன் விரும்பும்வரை, அவர் என் உடலைக் காத்தருள்வார். வேளை வந்தவுடன், வையத்திலுள்ள வைத்தியர் அனைவருமே சேர்ந்தாலும் என்னைக் காக்கமுடியாது.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 106

சேகான், வார்தா,
*21-10-1936*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

'ஹரிஜன்' இதழில் குறிப்பெழுதுவதற்கு நல்ல ஆதாரம் நீ தந்துள்ளாய் என்பது மட்டும் உண்மையே. மகாதேவ் உன் கடிதத்தைக் காண்பார். அதில் சில பகுதிகளை, உசிதமான முறையில் பயன்படுத்திக் கொள்வேன். அதன்பின்பு, நீ சிறிது பிரசார வேலை செய்து, பத்திரிகைகளுக்குக் கூட எழுதி, மற்றப் பெண்களும் அவ்வாறு செய்ய அழைக்க வேண்டும். பெண்களாகிய நீங்கள் மட்டும் உங்கள் கௌரவத்தையும் உரிமையையும் உணர்ந்து, மனிதவர்க்கத்தின் நலனுக்காக அவற்றை முழுதும் பயன்படுத்தினல், உலகம் இன்றுள்ளதை விட மிகவும் சீராகிவிடமுடியும். ஆனல் உங்களை அடிமைப் படுத்துவதில் மனிதன் அலாதி இன்பம் கண்டுள்ளான். நீங்களும் அடிமைத்தனத்தை மனமொப்பி ஏற்றுள்ளீர்கள் ; மனித வர்க்கத்தை இழிவு படுத்துவதில் நீங்கள் இருவருமே ஒன்றுசேர்ந்து விட்டீர்கள். பெண் தன் உயர்வை உணரச் செய்வதே, சிறு பிள்ளைப் பருவத்திலிருந்து என் சிறப்பான பொறுப்பு என்று நீ சொன்னல், அது பொருந்தும். நானே ஒரு காலததில் அடிமைகள் மீது ஆதிக்கம் செலுத்துவதில் முனைந்திருந்தேன். ஆனல் பா தன் அடிமைத்தனத்தை மனமொப்பி ஏற்றுக்கொள்ளவில்லை. அவள் தான் என் கண்ணைத் திறந்து, என் பொறுப்பை எனக்கு உணர்த்தினள். அவள் பணி முடிந்துவிட்டது. தன் இலட்சியப் பணியில் வெற்றி காணும் ஆற்றலுடைய பெண் ஒருத்தியை நான் இப்பொழுது தேடிக் கொண்டிருக்கின்றேன். நீ தான் அந்தப் பெண்ணு? அந்த பெண்களில் ஒருத்தியாக நீ இருப்பாயா ?

ஷம்மி ஐரோப்பாவிற்குப் போவதில் இன்பமும் ஆரோக்கியமும் அடைய முடியுமென்ருலும், நீ இல்லாமல் அவர் போகமாட்டாரென்ருலும், அவருடன் நீ செல்வதில் என்ன தடை இருக்கமுடியும்? மேலும் எழுத அவகாசமில்லை. நேற்று உனக்கு நீண்டதொரு கடிதம் எழுதினேன்.

அன்பு,

**கொடுங்கோலன்**

ஆம்; நீ நிச்சயமாக நடேசனுக்கு எழுத வேண்டும்.

## 107

சேகான், வார்தா
*7—11—'1936*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம் கிடைத்தது. இது சிம்லாவில் உனக்குக் கிடைக்குமென்று எண்ணுகின்றேன்.

ஒரு வாரம் முழுவதும் ஆஸ்பிரின் மாத்திரை சாப்பிடும் பழக்கத்தை ஷம்மி நிறுத்தியிருந்தார் என்பதும், சிம்லாவில் தங்கிய நாட்கள் முழுதும் நீ இரண்டு மாத்திரைகள் தான் சாப்பிட்டாய் என்பதும் மகிழ்ச்சிக்குரிய செய்திதான். நூறு ஆண்டுகளுக்குமேல் நீடிக்க வேண்டிய உன் ஆயுள்காலத்தில் இரண்டு மாத்திரைகள் கூட சாப்பிட வேண்டியிராதென்று எதிர்பார்ப்போமாக!

கதர் விற்பனையில் உன் சாதனை நான் எதிர்பார்த்ததையும் மிஞ்சிவிட்டது. உடலில் பலமில்லாமலும் உள்ளத்தில் முட்டாளாகவும் இருக்கும் கேவலம் ஒரு பெண்ணின் சாதனை இவ்வளவு! அடுத்த சிம்லா பருவத்தில் நீ அங்கில்லாமல் போய்விடுவாயோ என்று சிம்லாவில் உள்ள கதர் ஊழியர்கள் நடுங்குவதில் வியப்பொன்றுமில்லை. ஆனால் எதிர்காலம் இறைவன் கையில் உள்ளது: அதைப் பற்றி நாம் கவலைப்பட வேண்டியதில்லை. நீ எங்கிருந்தாலும், பெருமைப்படுவதற்குரிய முறையில் நீ நிச்சயம் நடந்து கொள்வாய்.

நானவதி நன்கு குணமடைந்துவிட்டதால், உடல்தேறுகையில் தம் குடும்பத்தினரிடையும் நண்பர்களிடையும் ஒரு சில நாட்கள் தங்க, இன்று புறப்படுகின்றார். அவர் அற்புதமான ஊழியர். மீரா கலகலப்பாய் இருக்கின்றாள். பல்வந்த் சிங் பலவீனமாக இருக்கின்றார். அவர் அளவுக்குமீறி வேலை செய்வதோ, சப்பாத்தி சாப்பிடுவதோ கூடாது.

சூடுகாப்புக் கலம், நேர்த்தியான அந்த ஆப்பிள்கள் ஆகியவற்றை நீ வாங்கியதில், அதிகச் செலவு செய்துவிட்டாய். அளவுக்குமீறி செலவு செய்யாவிடில், நீ ராஜகுமாரியாய் இருக்க மாட்டாயே! நீ செய்யும் செலவு மற்றவர்களுக்காக என்பதால், அச்செலவு நியாயமாகிவிடாது. உன் உடல் உள்பட உடைமைகள் அனைத்தையும் - நீ தர்மகர்த்தாபோல் காத்துவர வேண்டியவள் என்ற அடிப்படையை ஏற்றுக்கொண்டால், அவற்றை, உனக்குப் பிரியமான இலட்சியத்திற்காகவும், நிதானமாகவும், அளவோடும்தான் பயன்படுத்த வேண்டும். இந்த எளிய உண்மையை, நீ, தத்துவ நோக்குடன் சிரித்து ஒதுக்கிவிடக்கூடாது. ஏழைகளுக்கு ஒரு ரூபாயின் மதிப்பு எவ்வளவு என்பதை நினைவிற்கொள். பல கோடி மக்களுக்குக் கிடைக்காத கணிசமான அறுபத்து நான்கு சாப்பாடுகள் ஒரு ரூபாய்க்குக் கிடைக்கும். சேகானில் பலர் மாதம் ஒரு ரூபா

யில் பிழைப்பு நடத்துகின்றனர்; அவர்களுக்கு ஒரு நாளைக்கு இரு வேளை உணவு; ஒவ்வொரு சாப்பாடும் சாலனு. ஆனால் இது கூடப் பல கோடி மக்களுக்குக் கிட்டுவதில்லை. நான் இதை எழுதும் அளவுக்குத் தெளிவாக இந்த உண்மை உனக்கும் எனக்கும் தெரிந்திருக்க, நாம் ஒரு காசைக்கூட எவ்வாறு வீணாகச் செலவு செய்யமுடியும்? சில காலத்திற்காவது, நீ விவேகத்துடன் நடந்து கொள்வாயா? என் கற்பனையைக் கவரும் ஒரு பெண்ணாகவோ, ஒரே பெண்ணாகவோ நீ விளங்க வேண்டுமானால், கணக்கு வைப்பது உள்பட எல்லா ஆற்றல்களையும் நீ வளர்க்க வேண்டும். உன் இந்தியைப்பற்றி என்ன செய்தி?

இந்தியில் கிரந்த் சாகிபின் நல்ல பதிப்பு ஒன்றை, மொழி பெயர்ப்புடன் கூடியதை, எனக்கு அனுப்புவாயா? அவசரம் ஒன்று மில்லை. விலையுயர்ந்த பதிப்பை அனுப்பவேண்டாம். மலிவுப் பதிப்பை வாங்குவது, ராஜகுமாரியான உன் கௌரவத்திற்கும் ஆற்றலுக்கும் குறைவானால், இந்தப் பொறுப்பை நீ ஏற்றுக்கொள்ள வேண்டாம்.

குமரப்பாவின் கையெழுத்துப்படியை மீராவிடம் விமர்சனம் செய்வதற்காகக் கொடுத்தேன். அவள் அதைக் கவனமாகப் படித்துவிட்டுக் குறிப்புகள் எழுதிக் கொடுத்துள்ளாள். அடக்கமாக இருந்தபோதிலும், படிப்பதற்குச் சுமையாக இருந்ததென்றும், சில பகுதிகள் பொருத்த மற்றவையாகவும் இருந்தனவென்றும் அவள் கூறினாள். மீராவின் குறிப்புகளைக் குமரப்பாவிடம் கொடுக்க நான் விரும்பினேன். ஆனால் எனக்கு நேரமில்லை. அதை இன்னும் அச்சிலேற்றக் கொடுக்கவில்லையானால், எனக்கு அவகாசம் கிடைத்தால், நானே அதைப் படிப்பேன்.

இன்றைக்கு இவ்வளவு போதும்.

அன்பு,

கொள்ளைக்காரன்

இது நல்ல காகிதமல்லவா?

## 108

சேகான், வார்தா,
*12—11—'36*

என் அன்பார்ந்த முட்டாள்,

உன் கடிதம் கிடைத்தது.

சால்வையை எனக்கு அனுப்புவதில் ஏன் அவ்வளவு அவசரம்? அது எப்பொழுது வந்தாலும், அதை நான் அணிவேனென்று உறுதியாக நம்பலாம். ஆகவே நீயே வரும்போது கொண்டு வரலாம்;

அல்லது வேறெவர் மூலமாவது அனுப்பலாம். அஞ்சலுக்காகும் செலவை இதைவிட நல்ல காரியத்துக்குப் பயன்படுத்தலாம்.

நீ உலோபியாவதையும் நான் அனுமதிக்கமாட்டேன்; அதே சமயத்தில் ஏழைகள் நலனுக்குப் பாதகமாக, ஊதாரித்தனமாகச் செலவு செய்யும் குற்றத்தை நான் சகிக்கமாட்டேன். ஆனால் இவை யெல்லாம்பற்றி நாம் சந்திக்கும்போது அதிகம் கூறுவேன்.

உன்னுடைய அழகான பெட்டியிலிருந்து ஒன்றிரண்டு பொருட்கள் காணமல் போயிருக்கும். கதர்த்துண்டுகளில் ஒன்றை ஆண்ட்ரூஸின் குடலிறக்கப் பட்டையைக் கட்டுவதற்குப் பயன் படுத்தினோம். பா இன்று வந்தாள். அவள் மகிழ்ச்சியுடன் இருக் கின்றாள். அவள் குடிசை நன்கு வளர்ந்து வருகிறது. ஆண்ட்ரூஸ் நாகபுரிக்குச் சென்றார்; சனிக்கிழமை வாக்கில் திரும்புகிறார்.

அன்பு,

பாபு

# 109

சேகான், வார்தா,
*14—11—'36*

என் அன்பார்ந்த முட்டாள்,

உன் திருத்தங்கள் அடங்கிய குமரப்பாவின் புத்தகப் படி யொன்றைப் பெறவும் படிக்கவும் முயல்வேன்.

கிரந்த் சாகிபை அஞ்சலில் அனுப்பும்போது, அத்துடன் அந்த விலைமதிப்பற்ற சால்வையைச் சேர்த்து அனுப்பலாம்; அப் பொழுதுதான், உன் ஆன்மா திருப்தியுறும் போலும். இந்தி எழுத்தில் இந்தி மொழி பெயர்ப்பு கிடைக்கிறதென்று அறி கிறேன். அது குருமுகிப் பதிப்பாயின், அதற்கொத்த இந்தி எழுத் துக்களை விளக்கும் குருமுகி ஆரம்பப்பாட புத்தகத்தையும் நீ அனுப்பவேண்டும். குருமுகிக்குப் பதிலாகத் தேவநாகரி லிபியை ஏற்றுக்கொள்ளுமாறு, அறிவுத் தெளிவுள்ள சீக்கியர் மனத்தை மாற்ற நீ முயலவேண்டுமென விரும்புகிறேன்.

நேற்றும் இன்றுமாகச் சேர்ந்து, ஆண்ட்ரூஸ், டாக்டர் அல் லது மிஸ்டர் மாட், இருவருடனும் நான்கு மணி நேரத்துக்குமேல் பேசிக் கொண்டிருந்தேன்.

அன்பு,

கொள்ளைக்காரன்

# 110

டில்லி
*19-3-'37*

என் அன்பார்ந்த முட்டாள்,

நான் உனக்குச் செய்தி சொல்ல வேண்டுமென்று விரும்புகிறேன். ஆனால் ஆற்றல் மிக்க உன் பேனாவைப்போல் என்னிடம் இல்லையே. நீ மணிக்கணக்காய் எழுதிவிட்டு, மேலும் எழுதுவதற்குச் செய்திகள் கண்டுபிடிப்பாய். வெட்டிப் பேச்சு பேசுவதானால், என்னால் ஒரு சில நிமிடங்களுக்குமேல் சயாளிக்கமுடியாது. காலை வழிபாட்டு மணி இதோ அடிக்கின்றது. லண்டன் கடிதத்தில், பொருத்தமான முதல் பகுதியைப் பிரசுரிக்கலாமென்று நீ கருதினால், அதைப் படியெடுத்து அனுப்பு. தத்தார் சிங் நேற்று முன் தினம் என்னைச் சந்தித்தார்; அவர் பால்பண்ணைபற்றி நாங்கள் பேசிக்கொண்டிருந்தோம். நீ சென்று அதைப் பார்க்க வேண்டும். லாகூரிலும் இப்பொழுது ஒரு பண்ணை அமைத்துள்ளார். கவர்னர் ஜெனரலை நான் பார்ப்பேன் என்று எண்ணவில்லை. நான், முடிந்தால் நாளை அல்லது ஞாயிற்றுக்கிழமை புறப்படுகின்றேன். அ. இ. கா. க. வில் அனைத்தும் இனிதே முடிந்துள்ளது. ஆனாலும் ஒரு சில சிறு புயல்கள் இருந்தன; அவை எனக்குத் திருப்தியாக இல்லை. அவை சிந்தனையைத் தூண்டிவிடுகின்றன.

இன்று,—இன்றிரவு என்று சொல்லவேண்டும்—மகாதேவ் திரும்புகிறார். S—விடுதலை அடைந்தவுடன், அரைமணி நேரம் அவருடன் பேசினாராம். அவர் விடுதலை அடையும் நேரம் அவரை வரவேற்க மகாதேவ் சென்றது குறித்து எனக்கு மகிழ்ச்சி. ஆனால் அவர் இப்பொழுது சுதந்திரமாக இருக்கின்றாரா, அல்லது சிறையில் இருந்த போதே இதைவிடச் சுதந்திரமாக இருந்தாரா என்பதை எவர் சொல்ல முடியும்? மங்குவால் கிராமத்தை நீ சித்திரித்துள்ளது, நம்பிக்கை ஊட்டுவதாய் உள்ளது. ஊழியர்கள் கிடைப்பது தான் எங்கும் முக்கிய சிரமமாக உள்ளது. உள்ளூரிலேயே அவர்களைத் தேர்ந்தெடுத்து, அவர்களுக்குப் பயிற்சி அளிக்க வேண்டும். எங்குமே ஊழியர்கள் அதிகமாக இல்லாததால், ஓரிடத்திலிருந்து வேறிடத்திற்கு ஊழியர்களை வருவிப்பது சாத்தியமில்லை.

என்னைப் பார்க்க வந்தவர்கள் என்னைச் சுற்றி சூழ்ந்து கொண்டுள்ளனர். ஆகவே இத்துடன் நான் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

அன்பு,

கொடுங்கோலன்

## 111

சேகான், வார்தா,
*5—4—1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

உன் கடிதம். தம் தங்கையின் திருமணம் பற்றிப் பேச மகாதேவ் தமது சிற்றன்னையிடம் சென்றுள்ளார். அவர் நாளை திரும்புவார்.

S—விடுதலையான பின்பு, மகாதேவ் அவருடன் நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். அவர் சுகமில்லாதது போல் காணப் பட்டார். அவர் விடுதலையான பின்பு, அவருக்கு நீ எழுத வில்லையா?

உன் இந்தி எழுத்து சிறப்பாக உள்ளது. வேகமாக எழுத முடியவில்லையே என்று வருந்தாதே. அது பயிற்சியுடன் தானாக வரும். நீ தொடங்கியது போலவே, தொடர்ந்து பயில வேண்டும்.

எதையும் நினைவில் கொள்ளும் திறமை எனக்குக் கிடையாது. என் மறதியின் சுமையை நீ இப்பொழுது தாங்கிக் கொள்ள வேண்டும். "மற்றவர் சுமைகளை நாம் தாங்க முன்வர வேண்டும்."

நான் அழைக்க வேண்டியவர்களுக்கு இங்கு இடவசதி போத வில்லை. வசுமதி இங்கிருக்கின்றாள்; பாலும், அதைத் தொடர்ந்து அம்துலும் வரவிருக்கின்றார்கள்.

ஆம், கனு என்னுடன் சென்னையில் இருந்தாள்; நான் பெல் காம் செல்லும் போதும் உடனிருப்பாள். மனுவுக்குப் பெல்காமில் திருமணம் நடக்கப் போகிறது. அங்கு என் முகவரி: ஹுத்லி, பெல்காம் மாவட்டம். *15*-ம் தேதி, தள்ளிப் போனால் *16*-ம் தேதி அங்கு போய்ச் சேருவேன். இங்கிருந்து *13* அல்லது தள்ளிப் போனால் *14*ம் தேதி புறப்படுவேன்.

*அன்பு,*

**கொடுங்கோலன்**

## 112

சேகான், வார்தா
*9—4—1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

அனைத்திந்திய நூற்பாளர் சங்கத்தின் உள்ளூர்க் கிளையை ஒழுங்குபடுத்த நீ துணிந்து போராடி வருகிறாய். அதன் விவகாரங்

களை ஒழுங்குபடுத்த இங்கிருந்து எவரையும் அனுப்புவதற்கில்லை. B...யை உன் முன்னுல் வைத்துக் கொண்டு, G...க்கு ஆலோசனை கூறவேண்டும். இதைத் தவிர வேறுவழி எனக்குத் தெரியவில்லை. சிக்கலைத் தீர்க்கும் முயற்சியில், நீ உன்னை வருத்திக் கொள்ளாதே.

உன் இந்தி, வேகப் பாய்ச்சலில் முன்னேறி வருகிறது. வெகு விரைவில் நீ பிழையில்லாமல் தூய இந்தி எழுத முடியுமென்று நம்புகிறேன். நீ எழுதியுள்ள ஒரு சில வாக்கியங்கள், ஒரு சிறு பிழையுமில்லாமல் சிறப்பாக அமைந்துள்ளன. கையெழுத்தும் அதற் கேற்ருற் போல் நன்ருக உள்ளது.

ஜாப்ஜியை மூலத்திலே படித்து உன்னுல் விளங்கிக் கொள்ள முடிகிறதா? அப்படியானுல், ஒவ்வொரு நாளும் ஒரு செய்யுளை நீ மொழி பெயர்க்க வேண்டுமென விரும்புகிறேன். நீ விட்டுச் சென்ற இரு மொழிபெயர்ப்புகளையும் பயன்படுத்துகிறேன். ஆனுல் எதுவும் எனக்குப் பிடித்தமாயில்லை. ஜாப்ஜியை நீ நன்கு அறிந்திருந்தால், இந்த வேலையால் தினமும் உனக்கு ஐந்து நிமிடங்களுக்கு மேலாகாது. அவ்வளவு நல்ல தேர்ச்சி இல்லையென்ருல், அதைப் பற்றிக் கவலைப்படாதே.

தோல் பதனிடும் நிலையம் பற்றி நீ சொல்வது சுவையாக உள்ளது. அவர்கள் தொழில் நிலை அறிக்கை ஒன்று தயாரித்திருந் தால், அதை எனக்கு அனுப்பு.

*14* ந் தேதி பெல்காமுக்குப் புறப்படுவதென்று முடிவாகி யுள்ளது. இரயில் நிலையத்தின் பெயர் சுல்தால். கான் சாகிப் எங் களுடன் வருகிருர். மனுவுக்கு அங்கு *18* ந் தேதி திருமணம்.

கால் கட்டை விரலுக்கு நான் சொன்ன சிகிச்சையைச் செய்து பார்த்தாயா?

உனக்கு இக் கடிதம் வந்து சேருவதற்குள் எழுத்து மங்கி விடா தென்று நம்புகிறேன். தண்ணீரை சற்று அதிகமாகக் கலந்து விட்டேன்.

அன்பு,

கொடுங்கோலன்

## 113

புனு நகரம்,
*15—4—1937.*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

நான் வார்தாவை விட்டுப் புறப்படுகையில், உன் கடைசிக் கடிதம் வந்தது. கிராமங்களுக்குச் செல்ல முடிந்தது குறித்து

மகிழ்ச்சி. சுற்றியுள்ள கிராமங்கள் தாமே கிராமச் சீர்திருத்தப் பணியை ஏற்றுக்கொள்ள முன் வந்துள்ளது மிக நல்ல செய்தியாகும். நல்ல தொண்டு அனைத்தும், ரோஜாப்பூவின் நறுமணம் போல் பரவுவது நிச்சயம்.

புதிதாக ஆளை நியமனம் செய்வதில், கவனமாக இரு. உன் உடலைக் கெடுத்துக் கொள்ளும் அளவுக்கு அதிக வேலையை இழுத்துப் போட்டுக் கொள்ளாதே.

அன்பு,

கொள்ளைக்காரன்

இன்றிரவு நாங்கள் பெல்காமிற்குப் புறப்படுகிறோம்.

## 114

*ஹுத்லி, சுல்தால் அஞ்சல்.*
*17-4-1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

உன் கடிதம்.

இப்பொழுது காலை வழிபாட்டுக்கு முந்திய நேரம். இரவு நல்ல குளிர்ச்சியாக இருந்தது. அழகான, மிருதுவான தரையில் நான் உறங்கினேன். கோசிபென்னும் பியாரிலாலும் இங்கிருக்கிறார்கள். கான் சாகிபும் இருக்கிறார்.

மேனாட்டு நாகரிக நடைக்குப் பழக்கமாகி விட்ட பின், கிராமப் பொருட்களை மீண்டும் புகுத்த வேண்டுமென்றால், நாம் பொறுமையாக மட்டுமல்ல, கற்பனைத் திறனுடனும் செயலாற்ற வேண்டும். பேனாவை அடிக்கடி மையில் தோய்க்க வேண்டியிருக்கிறது என்பது நல்ல வாதம். அது களைப்பைக் குறைக்கின்றது. பவுண்டன் பேனா நேரத்தை மிச்சப்படுத்துகிறது என்பது முழுதும் நன்மையானதல்ல. கிராமப் பேனா, மை, இவற்றில் சீர்திருத்தம் செய்ய வேண்டியது மிக அவசியம் தான். நீயும் நானும் முதலில் இப்பொருட்களைப் பயன்படுத்தினால் தானே, பிறகு சீர்திருத்தம் செய்ய முடியும்.

நீ ஆட்சேபித்த விதி, உன் ஆட்சேபத்தை நீக்கும் வகையில் திருத்தப்பட்டுள்ளது.

டிரான்ஸ்வால், பிரிட்டிஷ் அரசாங்கங்களுக்கிடையே சச்சரவு எழுந்தது. இரு அரசுகளும் அதை மத்யஸ்தத்திற்கு விட்டுள்ளன.

அன்பு, உன்,

கொள்ளைக்காரன்

## 115

அலகாபாத்,
*26-4-1937*

என் அன்புள்ள புரட்சிவாதி,

நான் அலகாபாத் வந்து சேர்ந்ததும் உன் கடிதக் குறிப்பு காத்துக் கொண்டிருந்தது.

ஜவாஹர்லால் நேரு மிகவும் மெலிந்துள்ளார்; வயதானவர் போலவே காணப்படுகிறார். அவர் குரல் பலவீனமாக உள்ளது. களையிழந்து அவருள்ள நிலையைக் காணும்போது, நமக்கு அழுகையே வந்துவிடும் போலிருக்கிறது. இந்து நன்றாக இருக்கிறாள்; முன்பு போலவே அவள் இப்பொழுதும் நொடிந்துதான் காணப்படுகிறாள். பெரியம்மா திருமதி நேரு இன்னமும் படுத்த படுக்கையாகத்தானிருக்கிறார்; எனினும் சில நாட்களுக்கு முன்பு இருந்ததை விட சற்றுத் தேவலை. சுபாஷ் இங்கு வந்துள்ளார்; ஆனால் நான் இன்னும் அவரைப் பார்க்கவில்லை. இன்னும் சிறிது நேரத்தில் 12 மணி அடிக்கும்; அப்பொழுது நான் பேசாநோன்பை நிறுத்துவேன்.

சுபாஷ் ஒரு மணிக்கு என்னைப் பார்க்கவிருக்கிறார். காரியக் கமிட்டி 2-30 மணிக்குக் கூடுகிறது. நான் இங்கிருந்து 28ந் தேதி புறப்பட்டு, 29ந் தேதி வார்தா சேருகிறேன். எல்லா இடங்களிலுமே இயங்லை விபரீதமாக இருந்துள்ளது. இங்கு அதிக வெப்பமாக உள்ளது. மகாதேவ், பியாரிலால், இராதாகிஷன் என்னுடன் உள்ளனர்.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

## 116

சேகான், வார்தா,
*2-5-1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

நான் வார்தாவுக்கு வந்து சேர்ந்த போது, உன் கடிதம் காத்துக் கொண்டிருந்தது.

அலகாபாத்தில் மிகவும் சிரமமாகவும் சோதனையாகவும் இருந்தது. சச்சரவு அதிகமில்லை; ஆனால் நான் ஈடுபட வேண்டியிருந்த விவாதங்களே சிக்கலாகவும் சுமையாகவும் இருந்தன. வெப்பம் மிகக் கடுமையாக இருந்தது. திறந்த மாடியில் இரவைக் கழித்தது வெகு சுகமாக இருந்தது. ஜவாஹர்லால் பலவீனமாகவும் களையிழந்

தும் காணப்பட்டார். அவர் இப்பொழுது பர்மாவுக்குக் கப்பலில் புறப்பட்டிருப்பார். அப் பயணம் அவருக்கு நல்லது செய்யுமென்று நம்புகிறேன். ஒரு மாதத்திற்குக் குறையாமல் வெளியே தங்கி வர வேண்டுமென்று அவரிடம் வற்புறுத்தியுள்ளேன். அதற்குப் பிறகு அவரும் மௌலானா அபுல் கலாமும் நானும் சில நாட்கள் சந்தித்துப் பேச இருக்கிறோம்.

நீ பிரபாவதிக்கு இதற்குள் எழுதாவிடில், இனி எழுத வேண்டும். அவள் முகவரி, பார்வை, பிரிஜ் கிஷோர் பிரசாத், ஸ்ரீநகர், சேவான், பீகார்,

இங்கு வெப்பம் அதிகரித்து வருகிறது. ஆனால் அது என்னை வருத்தவில்லை. குஜராத் விவகாரங்களைத் தீர்க்க 20 நாட்களுக்குக் குஜராத்துக்குச் செல்ல வேண்டியிருக்கிறது. தீத்தால், பல்சார், பி. பி. சி. ஐ. இரயில்வே என்பது என் முகவரி. தீத்தால் கடலோரத்தில் இருக்கின்றது. 10, 11, தேதிகளில் நான் பார்தோலியில் இருப்பேன். 9ந் தேதி இங்கிருந்து புறப்பட்டு 12 ந் தேதி பல்சா போய்ச் சேருவேன்.

உன் சார்பில் மனுவுக்கு அன்பளிப்பாகக் கொடுக்க எனக்கு எதுவும் கிடைக்கவில்லை. ஆகவே அதிகச் செலவு செய்யாமல், பலனுள்ள பொருள் ஒன்றை வாங்குவது பற்றி யோசித்து வை.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 117

சேகான், வார்தா,
*8-5-1937*

என் அன்புள்ள புரட்சிவாதி,

பிரபு தயாள் தயாரித்துள்ள காகிதத்தில் இதை எழுதுகிறேன். கணிசமான அளவு காகிதத்தை அவர் தயார் செய்து என்னிடம் பெருமையாகக் காட்ட வந்துள்ளார். ஆகவே அவர் கைவண்ணத்தை உனக்குக் காட்ட வேண்டுமென்று எண்ணினேன். அவர் தயாரித்துள்ளவற்றில் சிறந்ததல்ல, இது. ஆனால் வெட்டுவதற்கு இது தான் பொருத்தமான அளவாக இருந்தது.

சாதாரண ஆண்கள், சாதாரணப் பெண்களைப் போலவே நல்லவர்களாகவோ, கெட்டவர்களாகவோ தான் இருக்கின்றனர். லயோனல் நடந்து கொண்டது போலவே, ஏன், அதைவிட மோசமாகவும் கூட நீ நடந்ததுண்டு என்பது தெரிந்ததே. உன் உடல் நலன் பற்றி நீ ஒரு செய்தியும் தருவதில்லை என்பதை நீ மீராவுக்கு எழுதியுள்ள கடிதத்திலிருந்து காண்கிறேன். நீ ஒன்றும் சொல்லாததால், நீ நன்றாக இருப்பதாக நான் எண்ணி விடுகிறேன்.

ஆனால் நீ அவ்வளவு நலமாகவில்லை என்று இப்பொழுது அறிகின்றேன். இதெல்லாம் எனக்கு ஏன் தெரியக் கூடாது? நீ மருந்துகள்கூட சாப்பிட்டிருக்கின்றாய். உனக்கு என்ன உடல்நலக் குறைவு என்று எனக்குத் தெளிவாகச் சொல்ல வேண்டும்.

நீ விட்டுச் சென்ற நிலையில் தான் பாலகிருஷ்ணை இருக்கின்றார். இதை நான் உனக்குச் சொன்னேன் என்று நினைத்தேன்.

சமஸ்கிருதத்திற்கு அவ்வளவு அதிக நேரம் நீ செலவு செய்வது பற்றி எனக்கு மகிழ்ச்சி. உன் இந்தி எழுத்துக்கள் சற்று பெரிதாக இருக்கின்றன; ஆனால் மிகச் சிறிதாக இருப்பதை விடப் பெரிதாக இருப்பதே நல்லது. கைக்கு நிதானமான பழக்கம் ஏற்பட்ட பின், எழுத்து சரியான அளவில் அமைந்துவிடும்.

மேத்தாவிடமிருந்து எனக்கு விலைச் சீட்டு வரவில்லை. முழு முகவரியும் அவரிடம் கொடுக்கப்பட்டது. ஆனால் உன் முகவரியைச் சுற்றி ஒரு கெட்ட ராசியே படர்ந்துள்ளது என்றெண்ணுகிறேன்; என்னைத் தவிர எவரும் அதை ஒழுங்காக எழுதுவதில்லை. கூடுதலான கட்டணம் நீ செலுத்த வேண்டி ஏற்படவில்லை யென்று கருதுகிறேன். அது உனக்குப் பயனுள்ளதாக இருக்குமென்று எண்ணுகிறேன். கொதி கலசத்திற்கு விலைச் சீட்டு அனுப்புமாறு நீ தின்ஷா மேத்தாவுக்கு எழுத வேண்டும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 118

*தீத்தால், பல்சார்,*
*13-5-1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

7ந் தேதியன்றும் 11ந் தேதியன்றும் நீ எழுதிய இரு கடிதங்களும் இப்பொழுது தான் வந்து சேர்ந்தன. நாங்கள் நேற்றுப் பிற்பகல் 3 மணிக்கு இங்கு வந்து சேர்ந்தோம்.

நான்கு நாட்கள் இடைவெளி மிக அதிகமா என்பது பற்றிக் கருத்து வேறுபாடு இருக்கலாம். பார்தோலியிலும், நேற்று இங்கும், உன் கடிதம் வராமல் நான் ஏமாற்றமடைந்தது உண்மையே. ஆனால் எப்பொழுதும் உனக்கு விலக்கு அளிக்க ஆயத்தமாயுள்ளேன். உன் உடல் நலனுக்கோ, உன் வேலைக்கோ இடைஞ்சலாய் இருக்கும்போது, நீ கடிதங்கள் எழுத வேண்டுமென நான் வற்புறுத்த மாட்டேன். ஆனால் சிரமமும் சங்கடமும் இல்லாமல் நீ எழுத இயலும் போது, எழுத வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

நகராட்சிக்கு நீ எழுதிய கடிதம் நன்றாக இருக்கின்றது. உடனடியாக நிவாரணம் கிடைக்காவிடில், நகராட்சியை நீ அவசியம் அம்பலப்படுத்த வேண்டும். லின்லித்கோ சீமாட்டிக்குக் கடிதம் எழுதுவதுதானே? அக் குடியிருப்புகளுக்கு வருமாறு அவரை நீ அழைக்க வேண்டும்.

உன் உடல் நலன் சீராகும் வரை, நான் நற்சான்று உனக்கு அளிக்கப் போவதில்லை. கவலையை விலக்கிப் பாலும் சாறு நிறைந்த பழங்களும் பச்சடிகளும் நிறையச் சாப்பிட்டால், உன் உடல்நலன் சிறப்பாக அமையும் என்பதில் ஐயமில்லை. நீ இப்பொழுது எவ்வளவு பால் சாப்பிடுகிறாய்?

நாம் சந்திக்கும் போது சொல்வதற்கென்று சிலவற்றை நீ ஒதுக்கி வைப்பது எனக்குப் பிடிக்கவில்லை. நீ அவற்றை மறந்து விடக்கூடும்; அல்லது அவகாசம் கிடைக்காமல் போகக்கூடும்; அல்லது நீ சொல்வதற்குள் அவை பழங்கஞ்சியாய்ப் புளித்துப் போயிருக்கக்கூடும்.

ஆலங்கட்டி மழை பெய்யும் போது, "ஆண்டவன் சித்தமே சிறந்தது" என்று நீ ஏன் சொல்லக்கூடாது? அவர் அறியாவிடில், வேறெவர் அறிவார்? நல்ல சுகமான இயநிலை நிலவும் போது இறைவனுக்கு நாம் நன்றி செலுத்த வேண்டியது ஏன்? அல்லல் விளைவிக்கும் ஆலங்கட்டி மழை பெய்யும் போது மட்டும் நாம் ஏன் ஆண்டவனுக்கு நன்றி செலுத்தக்கூடாது? எப்பொழுதுமே நன்றி செலுத்தாமலிருந்தால், அது வேறு விஷயம். ஆனால் நமக்கு மன நிறைவு ஏற்படும்போதெல்லாம், சொல்லால் வெளிப்படுத்தாவிடினும் நாம் நன்றி செலுத்துகிறோம் என்று தான் பொருள். மன நிறைவு பெறுவதே, செயலால் நன்றி தெரிவிப்பது என்று தான் பொருள்.

உணவு இதோ வருகிறது. நான் நிறுத்திக் கொள்ள வேண்டும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

இந்திக் கடிதம் முதல்தரமாக உள்ளது.

## 119

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

உன் சிறு கடிதமும் பத்திரிகைக் குறிப்பும் கிடைத்துள்ளன. நீ களைப்பாக இருக்கும்போதோ, வேலைப்பளு அதிகமாக இருக்கும் போதோ, இந்திப் பாடத்தையோ சமஸ்கிருதப் பயிற்சியையோ நீ நிறுத்திக் கொள்ள வேண்டும். இவையெல்லாம் எப்பொழுதுமே உனக்குச் சுமையாக இருக்கக்கூடாது. அவை உனக்குப் பொழுது

போக்காகவே அமைய வேண்டும். உள்ளத்திற்கு உகந்த வேலையைப் பொழுது போக்காக நீ செய்தால் உடல் நிலையும் உள நலனும் செழிக்கும்; நீ படிக்கும் மொழிகளிலும் நல்ல தேர்ச்சி பெறுவாய். எந்தக் காரணத்தைக் கொண்டும் தினசரி உலாவச் செல்வதை நிறுத்தாதே.

நீ அனுப்பியுள்ள பத்திரிகைக் குறிப்பு, தனிப் பாணியில் அமைந்துள்ளது. கிறிஸ்தவ சமயம் என்று சொல்லப்படுவதற்கு ஹரிஜனங்களை இழப்பதைக் காட்டிலும், என் ஆன்மாவைப் பற்றித்தான் அதை எழுதியவர் அதிகம் கவலைப்படுவதாய்த் தோன்றுகிறது.

சர்தார் செய்துள்ள ஒழுங்கின் பயனாக, என் அமைதி குலையாமல் காக்கப்படுகிறது. பார்வையாளர் எவரும் என்னை அணுகவே அவர் அனுமதிப்பதில்லை. ஆகவே கூடியவரை ஒழுங்காகவும் தாமதமின்றியும் என் கடிதப் போக்குவரத்தைக் கவனிக்க முடிகிறது.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

# 120

*தீத்தால், பல்சார்,*
*24-5-1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

அனைத்திந்திய நூற்பாளர் சங்கக் கதர்க்கடை, கல்பாதேவி, பம்பாய் என்ற முகவரிக்கு I-க்கு ஒரு கடிதம் எழுதிச் சரிகையை விற்பனைக்கோ, விற்காவிடில் திருப்பி அனுப்பவோ, உனக்கு அனுப்புமாறு எழுதியுள்ளேன். நீ அவருக்கு ஒரு மாதிரிப் பொருள் அனுப்ப வேண்டும், அல்லது அவருக்கு விளங்கும்படி விமர்சனம் செய்ய வேண்டும்.

அது போலவே காந்தி சேவா சேனைக்கும் உன் கருத்தை நீ அனுப்ப வேண்டும்.

பாவம், டோஃபா![1] நீ ஒவ்வொரு கடிதத்திலும் அவனைப் பற்றிக் குறிப்பிட்டிருந்த போதும் கூட, நான் அவனைப் பற்றி நினைக்கவேயில்லை. உன்னிடமும் அவனிடமும் நான் மன்னிப்பு கோர வேண்டும். நாய்களையும் மனிதர்களையும் நான் சமமாகவே கருதுகின்றேன் என்ற போதிலும், மனிதர்களுக்கு ஏற்படும் நோய் பற்றி நான் கவலைப்படுவது போல் நாய்களுக்கு ஏற்படும் நோய் பற்றிக் கவலைப்படுவதில்லை. ஆனால் நீ கவலையில்லாமல் இருக்க வேண்டுமென்ற காரணத்திற்காகவாவது, அவன் முற்றிலும்

1. என் சிறு நாய்.

சுகமாகி இருப்பான் என்று நம்புகிறேன். வீட்டில் இந்த நோய் ஏற்பட்டதன் விளைவாக நாய்களுக்கும் மனிதர்களுக்கும் நாம் ஒரே சமயத்தில் சேவை செய்ய முடியாது. ஆதலின், அவற்றைச்செல்லப் பிராணிகளாக வளர்க்கக்கூடாது என்பது நாம் கற்றுக்கொள்ள வேண்டிய படிப்பினையாக அமையலாம். கடுமையான வாசகமாகத் தோன்றலாம்; ஆனால் உண்மை அது தான்.

உன் விரலைப் புகுத்தக்கூடிய பெரிய புண்ணைவிட, ஊசிக் கொண்டை போலிருக்கும் புண் அதிக ஆபத்தானதாக இருக்கலாம். ஆகவே அதை அசட்டை செய்துவிடாதே.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

# 121

*தீத்தால், பல்சார்,*
*27-5-1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

உன் கடிதத்தில் ஒரு பகுதிக்குத் தான் மகாதேவ் பதில் சொல்லியுள்ளார்.

அம்முவுக்கு ஜவாஹர்லால் எழுதிய கடிதத்தில் ஆத்திரப்படுவதற்கு எதுவும் இல்லையே. பெண்கள் தொட்டால் சுருங்கியாய் இருக்கக்கூடாது. அவருடைய கருத்தையும் நோக்கையும் புரிந்து கொள்ள வேண்டும். நீ அக் கடிதத்தை மற்றவர்களுக்குக் காட்டாதது நல்லது தான். அவசியமானால் அதை ஒரு கூட்டத்தில் படித்துக் காட்டலாம்; அப்பொழுது அதைத் தவறாக எவரும் எடுத்துக் கொள்கிறார்களா என்று பார்த்து, அதைத் திருத்தவும் முடியும். ஆனால் அவர் கருத்தை நீ புரிந்து கொள்வது அவசியமென்பது போலவே, உனக்குள்ள வரம்புகளையும் நீ உணர்ந்து கொள்ள வேண்டும். இரு பெரும் சக்திகளுக்கு நடுவே நீ நிற்கிறாய். ஆகவே நீ என்றுமே ஜனநாயக அமைப்பாக முடியாது. உன் பட்டமே ஒரு வேளை பொருத்தமற்றதாக இருக்கலாம். அப்பட்டத்தை நீ வைத்துக் கொள்ளலாம்; ஆனால் உன் வரம்புகளைத் தெளிவாக வரையறை செய்து கொள்ள வேண்டும். நாம் ஜூலையில் (சரி தானே?) சந்திக்கும்போது இதைப் பற்றி மேலும் யோசிக்கலாம். ஊசிக் கொண்டை புண் கீழிருந்து மூடியுள்ளதென்று எண்ணுகிறேன். காலென்பாக்கை நீ சந்திக்க முடியுமென்று எதிர்பார்க்கிறேன். அவரை உனக்கு மிகவும் பிடிக்கும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 122

தீத்தால், பல்சார்,
*31—5—1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

உன்னிரு கடிதங்களுக்கும் பதில் எழுதவில்லை. நாய்க்குக் குணமாகி வருவது குறித்து மகிழ்ச்சி; ஆனால் ஊசிக் கொண்டைப் புண் இன்னும் ஆறவில்லை என்று கூறுகிறாயே. அதன் காரணத்தைக் கண்டுபிடிக்க மருத்துவர் உதவியை நாடக் கூடாதா?

ஜவாஹர்லாலின் கடிதத்தைத் திருப்பி அனுப்புமாறு கேட்டுள்ளாய். அதை உன் முதல் கடிதத்திலேயே நீ சொல்லியிருந்தாயா? அது தட்டெழுத்துப்படி என்று தெளிவாகத் தெரிந்ததால், பதில் எழுதிவிட்டு அதைக் கிழித்துப் போட்டேன். மூலக் கடிதம் அம்முவிடம் இருக்குமே. அதுவும் காணாமல் போயிருந்தால் நான் பெரிதும் வருத்தப்படுவேன். இனிமேல் எதையும் திருப்பி அனுப்ப வேண்டுமென்றால், 'திருப்பி அனுப்புக' என்று அதன் மேல் தெளிவாகக் குறிப்பிடு.

குறித்த நேரத்தில் நீ வருவது போலவே, குறித்த நேரத்தில் திரும்பியும், நேரம் தவறாமை பற்றி நீ ஆண்களுக்குப் பாடம் சொல்லித் தர வேண்டும். என் ஆங்கிலேய நண்பர் ஒருவர், ஏற்பாடு செய்திருந்த கூட்டத்திற்கு ஒரே ஒரு ஆள் தான்,—ஆணா பெண்ணா என்று எனக்கு நினைவில்லை-குறித்த நேரத்தில் வந்திருந்த போதும், நேரம் தாழ்த்தாமல் கூட்டத்தைத் தொடங்கினாரென்று நான் உனக்குக் கூறினேனா?

நீ ஜூலையில் வரும்போது, குமரப்பாவும் சேகானில் அநேகமாக இருப்பாரென்று எண்ணுகிறேன்.

*10ந்* தேதி காலை இங்கிருந்து புறப்படுகிறேன் என்று நான் உனக்குச் சொல்லவில்லையா? ஜூன் *9ந்* தேதி வரை, கடிதங்களை இங்கு அனுப்பலாம்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 123

தீத்தார், பல்சார்,
*2-6-1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

உனக்கு என் பாராட்டுதல்கள். எவ்வளவு பெரிய சிராய்![1] ஆகவே நான் கவலைப்பட்டதற்கும், உன் முட்டாள் தனத்திற்கும்

---

1. சேவாகிராமத்தில் காந்திஜியுடன் நடந்து செல்கையில், என் பாதத்தில் ஒரு சிராய் ஏறியது. பல வாரங்கள் உள்ளே தங்கிவிட்டு, இறுதியில் தானே வெளியில் வந்தது. பெரிதாக இருந்த அதைப் பார்ப்பதற்குக் காந்திஜியிடம் அனுப்பியிருந்தேன்.

நியாயம் இருந்தது என்று இப்பொழுது தெரிகிறது. ஊசிமுனைப் புண்களை அலட்சியம் செய்யும் தவற்றை இனியும் செய்ய மாட்டா யென்று எண்ணுகிறேன். இக் கடிதம் வருவதற்குள் உனக்கு முற்றி லும் குணமாகியிருக்குமென்று நம்புகிறேன்.

வன்முறை பற்றி உன் கேள்வி எனக்குப் புரிகிறது. நல்ல பலன்கள் ஏற்படுகின்றன என்பதால் வன்முறை நியாயமாகி விடாது; வன்முறையால் ஏற்படும் கேடுகளுக்கு அவை ஈடு செய் யவும் முடியாது. வன்முறையால் விளையும் கேட்டினை அடையாளம் கண்டு கொள்வது எப்பொழுதும் எளிதல்ல. கொலைகாரரைத் தூக்கிலிடும்போது, அவன் அழிந்துவிட்டதை எண்ணி நிம்மதியில் பெருமூச்சு விடலாம்; ஆனால் அதனால் விளையும் கேட்டினை எடை போட இயலாது. அனைத்துக்கும் நியாயப் பொருத்தத்தைக் காட்ட நம்மால் இயலுமென்றால், நம்பிக்கைக்கே பொருளில்லாமல் போய்விடும். உன் கேள்வியை நான் சரியாகப் புரிந்து கொண்டேனா?

அன்பு,

கொள்ளைக்காரன்

## 124

*தீத்தால், பல்சார்,*
*7—6—1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதியே, முட்டாளே,
இன்னும் என்னென்னவோ,

3ந் தேதி நீ எழுதிய கடிதத்தைக் கண்டுபிடிக்க முடிய வில்லை. அது தவறிப் போய்விட்டது என்று எண்ணுகிறேன். ஆனால் சம்மேளனத்தைப் பொறுத்த வரை, உன் 3-ந் தேதிக் கடி தத்தில் நீ என்ன எழுதியிருந்தாய் என்பதை உன் 4-ந் தேதிக் கடி தத்திலிருந்து அறிந்து கொள்ள முடிந்தது. அதைப் பற்றி ஹரிஜனில் எழுதியுள்ளேன்.

சீழ் வடியவில்லை என்றறிய மகிழ்ச்சி. எதையும் அடக்கி வைப் பது எவ்வளவு பாவமானது என்பதை இப்பொழுதாவது உணர் கிறாயென்று எண்ணுகிறேன். சேகானில்தான் இச்சிப்பு ஏறியி ருக்கவேண்டும். நீ சொல்லியிருந்தால், அதை அங்கேயே வெளியில் எடுத்திருக்கலாம். எதையும் சிறியதென்றோ, அற்பமென்றோ சொல்லக்கூடாது.

சிம்லா கதர்க்கடைமீது பறந்து கொண்டிருந்த காங்கிரஸ் கொடியை யாருக்கும் தெரியாமல் இரு ஆங்கிலேயர் அகற்றிவிட்டது பற்றி உனக்கு எதுவும் தெரியுமா?

சிம்லாவில் சம்மேளனம் கூடும்போது நான் எங்கிருப்பேன் என்பதை இப்பொழுதே நாம் எண்ணிப் பார்க்க வேண்டாம். என்னால் அங்கு வர இயலுமென்றால், நான் வர விரும்புவேன் என்பது உனக்குத் தெரியும்.

ஜாப்ஜியின் மூலம் மிகச்சிறந்த குஜராத்தி மொழியெர்ப்பும் குறிப்புரைகளும் அடங்கிய பதிப்பு ஒன்று எனக்குக் கிடைத்ததென்று நான் உனக்குச் சொன்னேனா? இந்தியில் அதுபோல் ஒன்றுமில்லை என்றால், உண்மையில் அது இழுக்காகும். ஆனால் அதற்காக நீ இப்பொழுது தேடி அலைய வேண்டாம். குஜராத்தி மொழிபெயர்ப்பு என் தேவைகளை முழுவதும் நிறைவு செய்கிறது.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

*10ந் தேதி அதிகாலையில் இங்கிருந்து புறப்பட்டு 11ந் தேதி காலை 7 மணிக்கு வார்தா போய்ச் சேருவோம்.*

## 125

தீத்தால்,
*18—6—'1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

*3*ந் தேதி எழுதிய கடிதம், *6*ந் தேதி எழுதிய கடிதத்துடன் இன்று வந்தது. மகாதேவ் அதுபற்றி விசாரித்துக் கொண்டிருக்கிறார்,

மீரா குணமடைந்து விட்டாள். எனினும், அவ்வப்போது அவளுக்குச் சுரம் வருகிறது. மலை ஊர் எதற்கும் சென்று தங்க அவள் ஆயத்தமாயிருக்கின்றாள். உன்னிடம் அவள் வருவது பற்றி நீ என்ன சொன்னாய் என்பதை மறந்துவிட்டேன். இறுதியில் 'வேண்டாம்' என்று நீ சொன்னதாக எனக்கு நினைவு. 'வரலாம்' என்று நீ சொல்லியிருக்கக்கூடுமென்று அவளுக்கு எண்ணம். அவளை அங்கு வரவழைக்க உனக்கு விருப்பமிருந்தால், நீ ஷம்மியைப் பார்த்து, முடிவு செய்யும் பொறுப்பை அவரிடம் விடவேண்டும். ஒழுங்கான ஏற்பாடுகள் அமைந்த வீட்டில், அவளை உபசரிப்பது மிக எளிது. ஆனால் அது பெரிதல்ல. நீ சிறிதும் தயக்கமின்றி முடிவு செய்ய வேண்டும். 'வேண்டாம்' என்று நீ கூறினால், அது தவறாக எடுத்துக் கொள்ளப்படமாட்டாது.

நான் 'ஹரிஜன்' இதழில் எழுதியுள்ளதைப் பார். அது போதாதென்றால், நீ என்னிடம் சொல்ல வேண்டும். அரசியல் உள்ளுணர்வு உன்னிடம் இருக்கலாம். எனக்கு அது கிடையாது. எனக்கு அகிம்சை உணர்வு உண்டென்று நான் கூறுவேன். 'கற்பூர வாசனைப் பகுதி'[1]யிலிருந்து வரும் உனக்கு அந்த உணர்வு புதிதாக இருக்கும். அகிம்சையை வளர்ப்பதற்கு உகந்த முறையில்தான், நான் பிரச்னைக்குத் தீர்வு கண்டுள்ளேன். அதைத்தான் என் கொள்கையாகக் கடைப்பிடித்து வந்துள்ளேன். அதனால் எனக்கு நன்மையே ஏற்பட்டுள்ளது. என்னிடம் எந்த ஆற்றல் இல்லையென்று தீவிரமாகக் குறைகூறுகிறார்களோ, அது போதிய அளவு என்னிடம் அமைந்துள்ளதென்று நான் கருதுவேன். வேறெதைச் சொல்லி அவர்கள் என் திட்டத்தைக் குறைகூறமுடியும்? ஆனால் நான், எந்த நிறுவனத்துக்கும் கட்டுப்படாமல் சுயேச்சையாக இயங்குபவன் அல்லவா? அந்தக் குற்றச்சாட்டைக் காங்கிரஸ் மறுத்து, பதவி ஏற்க அடியோடு மறுத்துவிடலாம்; அல்லது பின்வாங்கி, நிப்ந்தனை எதுவுமின்றிப் பதவி ஏற்கலாம்.

பின்னல் வேலை பற்றி நீ வித்தல்தாசுக்கு எழுதவேண்டும். அது ஆந்திராவில் செய்யப்படுவது. உனக்கு என்ன மாதிரி வேண்டும் என்பதைக் காட்ட, அவருக்கு மாதிரிப் பொருள் ஒன்றை அனுப்பு.

அன்பு,

பாபு

மீராவைப் பற்றி வார்தாவில் கிடைக்கும்படி எனக்குத் தந்தி அனுப்பு.

## 126

*14—6—1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

உன் கடிதம் இப்பொழுதுதான் வந்தது. 'வேண்டாம்' என்று நீ சொன்னதைப் புரிந்து கொள்கிறேன், ஏற்றுக் கொள்கிறேன் என்று உனக்குச்சொல்லவே இதை உடனடியாக எழுதுகின்றேன். நான் எதிர்பார்த்ததும் அதுதான். சுபாஷின் தந்தி கிடைத்ததும், மீரா நேற்று டல்ஹவுசிக்குச் சென்றாள். 'வேண்டாம்' என்று சொன்னதற்கு எனக்குச் சமாதானம் கூற ஏன் முயலவேண்டும்? 'சரி', 'வேண்டாம்' என்று ஒவ்வொரு முறை கூறும்போதும் அதற்கு விளக்கம் தேவையா? அத்தகைய விளக்கங்களை எதிர்பார்க்கும் அன்பின் தரம் மிகக்குறைவாகவே இருக்கும். என் அன்பு எப்பொ

1. இது காந்திஜி வேடிக்கையாக என்னைப் பற்றிச் சொல்வது. என் ஊர், கபூர்த்தலா. அது 'கபூர்' என்ற சொல்லிலிருந்து வந்ததென்றும், கற்பூரம் என்று பொருள்படும் கஃபூர் என்ற சொல்லின் மருஉ என்றும் காந்திஜி வாதம் செய்வதுண்டு.

முதும் அத்தகையதல்ல. நடுநடுவே 'சரி' என்ற சொல் இடம் பெறும்வரை, 'வேண்டாம்' என்ற சொல்லை எத்தனை முறையும் தாங்கிக் கொள்ள முடியும்.

பிதற்றலுக்கு அவகாசமில்லை. நேரம் பறந்து செல்கிறது.

அன்பு,

கொடுங்கோலன்

## 127

சேகான், வார்தா,
*14—6—1937*

என் அன்புள்ள புரட்சிவாதி,

ஆண்ட்ரூஸ் எழுதிய கடிதத்தை இத்துடன் அனுப்புகிறேன். உற்சாகமடைய மறுப்பவர்களை உற்சாகப்படுத்த முடியாது. நீ மனச்சோர்வு அடையக் காரணம் எதுவும் கிடையாது என்று நான் உறுதியாக நம்புகிறேன். நல்லது செய்யும்போதுகூட, அதனால் எவருடைய உள்ளத்தையும் புண்படுத்திவிடக்கூடுமென்றால், நீ மனச்சோர்வு அடைகிறாய். இத்தகைய முட்டாள்களை எப்படி உற்சாகப்படுத்த முடியும்? மனச்சோர்விலிருந்து தப்புவதற்காகத் தவறு செய்ய வேண்டுமென்று அவர்களிடம் கூறமுடியுமா? கீதையின் 6-வது அதிகாரத்தையோ, ஜாப்ஜியையோ படி. மனச்சோர்வே, அறியாமையின் உருவங்களில் ஒன்று என்பதை எடுத்துக்காட்டி, அதைப் போக்குவதற்கு உதவும் பல உபதேசங்களை ஜாப்ஜியில் காணலாம்.

உனக்கு எழுதிய அதே நேரத்தில் ஜவாஹர்லால் எனக்கு எழுதினாரென்று எண்ணுகிறேன். என் கடிதத்திலும், புண்ணாகியுள்ள தமது தொண்டை பற்றிக் குறிப்பிடுகிறார். இம்மாதக் கடைசியில் அவர் என்னுடன் இருப்பாரென்று எதிர்பார்க்கிறேன்.

அன்பு,

கொள்ளைக்காரன்

## 128

சேகான், வார்தா,
*20-6-'1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

உன்னிரு கடிதங்களும் என் முன்னுள்ளன. கிராமத்து மையில் குறையொன்றும் இல்லை. தவறு என்மேல்தான். கிராமத்து

மையைப் பயன்படுத்துவது பற்றிய விதிகளைக் கவனிப்பதற்கு எனக்கு அதிகச் சோம்பல். சோம்பலை வளர்க்கும் நகரத்து மையைப் மீண்டும் பயன்படுத்தி, அதன் மூலம் என் சோம்பலைத் தவிர்க்க நான் விரும்பவில்லை. நான் தொடர்ந்து கிராமத்து மையையே பயன் படுத்தி, என் கடிதங்களில் எழுத்து விளங்காத அளவுக்கு மங்கி யிருந்தால் உன்னைப் போன்ற நண்பர்கள் என்னைக் கண்டிப்பதன் மூலமாகத் தான் நான், என்றாவது இயலுமென்றால், சோம்பலைக் களைவேன்.

மீரா, டல்ஹவுசியில் மகிழ்ச்சியுடன் இருக்கின்றாள். எந்நாளும் காணும் அழிவற்ற பனிக்கட்டிகள் அவளுக்குப் பரவசம் ஊட்டி யுள்ளன. டாக்டர் தர்மவீர், சுபாஷ் இருவரும் அவரை நன்கு கவ னித்துக் கொள்கின்றனர். அங்கு அதிகக் கூட்டம் இருக்கும் உணர்வு அவளுக்கு ஏற்படாது என்று நீ கூறுவது சரிதான். அவ ளுக்கு நீ கடிதம் எழுதவேண்டும்.

ஹரிஜனங்களின் மண்குடிசைகளை இடித்துவிட்டுப் புதிய வீடுகள் அவர்களுக்குக் கட்டப்படுகின்றன என்று நீ கூறியுள்ள செய்தி நல்ல செய்தி.

அநேகமாகக் காரியக்கமிட்டி இங்கு அடுத்த வாரம் கூடும். இம்முறை அலகாபாத்துக்குப் போவதுபற்றிய பேச்சுக்கே இட மில்லை.

அந்த மூன்று சிறு நூல்களையும் உனக்குச் சிபார்சு செய்தது யார்? அவற்றைப்பற்றி உனக்கு எதுவும் தெரியுமா? நான் புத்த கங்கள் படிக்க வேண்டுமென்று விரும்புவோரிடம், எனக்காக நீ வாதாட வேண்டும். அவகாசமே கிடைப்பதில்லை.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

## 129

சேகான், வார்தா,

*10—7—1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

சென்ற சில நாட்களாக நான் உன்னைப் புறக்கணித்து விட்டது போலவே வெளிப்பார்வைக்குத் தோன்றும். என் தந்தி உனக்குக் கிடைத்ததென்று எண்ணுகிறேன். தந்திக்கு முன்பே உனக்குச் செய்தி கிடைத்துவிட்டதோ, என்னவோ. உன்னைப் பொறுத்த வரையில் நான் அதை மறக்கவில்லை என்பதுதான் முக்கியமாக இருக்கவேண்டும். ஜவாஹர்லால் மிகவும் பரிவாக இருந்தார். சிக்கல் எழுந்த போதெல்லாம், அவருடைய இயல்பான பெருந்

தன்மை ஓங்கி நின்றது. அவர் உண்மையான போர்வீரர்; அச்சம் கொள்வதில்லை; அவதூறு சொல்வதற்கில்லை. அவரை நான் பார்க்கப் பார்க்க, அவர்மேல் எனக்கு அன்பு பெருகுகிறது. அவருடனும் மௌலானாவுடனும் பலமுறை நீண்டநேரம் நான் உரையாடினேன். அடுத்த ஆண்டு. அவருக்குப் பதில் ஒரு தலைவரைக் கண்டுபிடிப்பது மிகக் கடினமாக இருக்கும்.

இராமேசுவரி இங்கு இருக்கின்றார்; அனேகமாக மாத இறுதிவரை என்னுடன் இருப்பார். ஜம்னாலால்ஜியின் விருந்தினர் விடுதியில் அவர் தங்கியுள்ளார். இன்று மேலும் செய்தி இல்லை.

அன்பு,

கொடுங்கோலன்

## 130

சேகான், வார்தா,
*14-7-'37*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

தாக்மார் கடிதத்தை நான் திருப்பி அனுப்புகின்றேன். இந்தியாவில் அரிசி உண்ணும் பகுதிகள், அரிசி உண்பதால் பாதிக்கப்படுகின்றன என்று நான் கருதவில்லை. அவர்கள் பாதிக்கப்பட்டுள்ளதற்குக் காரணம், அவர்கள் ஏழைகளாய் இருப்பதால், வடக்கே வாழும் மக்கள் செய்வதுபோல் மூல உணவுப் பொருட்களுடன் மற்றவற்றையும் சேர்த்துக்கொள்ள இயலவில்லை என்பதுதான். அவசியமான பொருட்களை வாங்க இப்பொழுதைக் காட்டிலும் அவர்களுக்கு அதிக வசதிகள் நூற்றுக்கணக்கான ஆண்டுகளுக்குமுன் இருந்தன என்று நாம் ஒத்துக்கொண்டால், அவர்கள் இப்பொழுதைவிட உயர்ந்த நிலையில் இருந்திருப்பார்கள் என்பது நிச்சயம். ஆனால் பண்டை நாட்களில் புள்ளி விவரங்கள் வைக்கப்படாததால், நம் முடிவுகள் ஊகத்தின் அடிப்படையில்தான் அமைய முடியும்.

ஸ்ரீமான் அவளுக்கு மிகப் பொருத்தமான கணவனைய் அமைவார். அத்தேர்வு குறித்து அவளுக்கே மிகுந்த மகிழ்ச்சி.

நம் அமைப்புகளில் ஒழுங்கீனங்களையோ, திறமைக் குறைவையோ நீ காணும்போதெல்லாம், பொறுப்புள்ளவர்கள் கவனத்திற்கு அவற்றைக் கொண்டுவர வேண்டும். அப்பொழுதுதான் நாட்டுக்கு ஏற்பட்டுள்ள கேட்டினை நீ சமாளிக்க இயலும். கதர்க் கடைகள்பற்றி உன் கருத்தையும் மதிப்பீட்டையும் ஆமதாபாத்தில் சங்கர்லால் பாங்கரிடம் கூறவேண்டும். குறிப்பாக, சிம்லா கடையைப்பற்றி உன் திட்டங்களை அவரிடம் கூறவேண்டும்;—அதா

வது உனக்கு அவகாசம் கிடைத்தால். பயனற்ற வேலை என்றில்லா விடினும், குறைந்த பலனுள்ள வேலையை நீ விலக்கிவிட்டால், உனக்கு அவகாசம் கிடைக்கும்.

உன் நிலையில் நானிருந்தால், இந்தித் தொண்டில் முஸ்லிம்கள் ஒத்துழைப்புபற்றி நான் கவலைப்படமாட்டேன். நாம் உண்மையாக இருந்து, அவர்கள் சந்தேகிக்கக் கூடிய திட்டங்கள் எதுவும் கொண்டிராவிடில், அவர்கள் நிச்சயம் ஒத்துழைப்பார்கள்.

அன்பு,

உன் கொள்ளைக்காரன்

# 131

என் அன்பார்ந்த முட்டாள்,

மாலை உலாவுக்குப் பின் இதை எழுதுகிறேன். என்னைப் பற்றிக் கவலை கொள்ள நியாயம் எதுவுமில்லை. அந்த நிபுணர் கூறிய மருந்தை நான் சாப்பிடுகிறேன் என்பதை அறிந்து நீ அதிர்ச்சி அடையக்கூடாது. அவர் முழு விவரங்களையும் என்னிடம் கூறியுள்ளார். கதிரவன் கதிர்பாய்ச்சிப் பதம் செய்யப்பட்ட ஒரு எளிய மூலிகை அது. நிரந்தர நிவாரணம் அளிக்க அது என்றுமே தவறியதில்லை என்று அவர் கூறுகிறார். அது தீங்கு எதுவும் செய்ய முடியாது. அதைச் சாப்பிடுவதால், நான் ஓர் உணவுப் பொருளைக் குறைத்துக் கொள்ள வேண்டியிருக்கிறது. ஆனால் அது ஒரு பொருட்டல்ல. இந்த மருந்தைப் பரீட்சித்துப் பார்க்காமல் இருந்தால், தவறாகும்.

கான்சாகிப், தம் உயர்ந்த பண்புக்கு ஏற்ப, கடிதம் எழுதியுள்ளார்.

உறை நீர்க்கட்டியையும் நீராவியையும் நீ பயன்படுத்தி வருவது குறித்து மகிழ்ச்சி. அத்துடன் மண் கட்டையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். உன் உடல்நலன்பற்றி ஷம்மி என்ன கூறினார்? அவர் கருத்தை அறிய விரும்புகிறேன். என் அன்பை அவருக்குக் கூறி, இந்தச் செய்தியையும் தெரிவிக்கவேண்டும்.

S. J. இருவரும் சார்லியைப்பற்றிச் சொல்வது எனக்கு விளங்குகிறது. அவர் உன்னுடன் இருக்கும்போது, அவர் உணவைக் கட்டுப்படுத்துவது மட்டும் போதாது; அவர் பலவீனத்தை அவர் கவனத்துக்குக் கொண்டுவரவேண்டும்.

கல்வி பற்றிய அக்குறிப்பைப் பார்த்துக் கொண்டிருந்தேன். அதை நான் படித்து, என் கருத்தைத் தெரிவிக்க வேண்டுமென்று இன்னமும் விரும்புகிறாயா?

மீரா முன்னேறி வருகிருள். இப்பொழுது கொஞ்சம் எழுத்து வேலை செய்கிருள். சலாம் ஓரளவு மகிழ்ச்சியாகவே இருக்கின்ருள். சாரதா பூரித்து வருகிருள். நான் அவளிடம் ஆத்திரப்பட்டு விட்டதால், லீலாவதி கோபத்தில் என்னை விட்டுப் போய் விட்டாள். சில சமயங்களில் அகிம்சைக் கொள்கைக்கு நான் உண்மையாக இருக்கின்றேனு என்ற ஐயம் எழுகிறது. என் கோபத்தை நிரந்தரமாக என்னுல் ஏன் அடக்க முடியவில்லை? என் அகிம்சை உண்மையாக இருந்தால், அது ஆசைகளை வென்று ஆத்திரப்பட மறுக்க வேண்டும். எனக்கு நீ பரிந்து பேசாமல், என்னைக் கண்டிக்க வேண்டும். லீலாவதி என்னைவிட்டுப் போய்விட்டால், அதற்கு நானே பெரிதும் பொறுப்பாவேன். அவள் மிக உயர்ந்த வளாதலால், என்னிடம் திரும்பி வராமல் இருக்கமாட்டாள். அவள் திரும்பி வந்தால், அந்தப் பெருமை அவளையே சாரும்.

அன்பு,

கொடுங்கோலன்

ஜவாஹர்லால் நாளை வரவிருக்கிருர்.

## 132

*17—9—1937* தேதியிட்ட மீராவின் கடிதத்தின் மேல் பாபு சேர்த்த பிற்குறிப்பு.

இன்று வேறென்றும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

பாபு

## 133

*19—9—1937* அன்று மீரா எழுதிய கடிதத்தில் பாபு எழுதிய பின்குறிப்பு.

இன்று நானே உனக்கு எழுத முடியுமென்று எண்ணியிருந்தேன். ஆனல் உறங்கி விட்டதால் இயலவில்லை. வைஸ்ராயினி சீமாட்டியின் கடிதம் இராஜதந்திரம் நிறைந்ததாகவும் சமயோசித மாகவும் உள்ளது. உன் கடிதம் ஒளிவு மறைவின்றி உள்ளது. உறை நீர்க் கட்டி என்னவாயிற்று?

அன்பு,

பாபு

# 134

சேகான்,
20—9—1937

எனது அன்பார்ந்த முட்டாள்,

இன்று வீம்புக்கு வலது கையினுல் எழுதியுள்ளேன். இன்னும் பத்து நிமிடங்களில் வழிபாடு தொடங்குகிறது; பேசா நோன்பு முடிகிறது. அதற்குப் பின்பு, அடுத்த திங்கட்கிழமை வரை, வலது கையினுல் எழுத மாட்டேன்.

மகாதேவ் உனக்குச் சொல்லியுள்ளதைத் தவிர என்னைப் பற்றி வேறு செய்தி இல்லை.

பெண்கள் கூட்டம் நன்ருக நடந்ததென்று நம்புகிறேன். பணக்காரர்களை நீ கைவிட முடியாது. அவர்களையும் அனுசரித்து, என்ன இயலுமோ அதைச் செய்ய வேண்டும். வற்ருத பொறுமை உனக்கிருக்க வேண்டும்

நேரம் தவருமல், எளிய உணவைச் சாப்பிட வேண்டுமென்று சார்லியிடம் கூறு. பாலஸ்தீனச் சுமையை அவர் ஏற்றுக் கொள்வதாலுல், அவர் மீண்டுமொரு முறை நோய் தாக்க இடம் கொடுக்கலாகாது. பணத்திற்காக அவர் எழுதுவது தவறு. பணத்தை நோக்கமாகக் கொள்ளாமல் செய்யும் வேலைகளுக்குச் சிறு அன்பளிப்பை ஏற்றுக் கொள்வது வேறு விஷயம். ஆனுல் லாபத்திற்காக எழுதுவது தவறென்று நான் கருதுகிறேன். பள்ளி ஆசிரியராக அவர் பள்ளிப் புத்தகங்கள் எழுதினுல் அது தவருக இருக்க முடியாது. அந்த உழைப்புக்கு ஊதியம் தேவை. ஆனுல், இந்திய சுதந்திரப் போராட்டம், அல்லது ஏசு நாதர் வாழ்க்கை போன்ற படைப்பு நூலுக்கு ஊதியம் தேவையல்ல.

உன் சருமப்படை பற்றி நீ ஒன்றும் கூருமல் இருக்கின்ருய்.

பாவம், சாரதாவுக்குச் சிறுகுடலில் புண் இருக்கிறதென்று எண்ணுகிறேன். ஆனுல் அவள் தைரியமாகவும் நன்ருகவும் இருக்கின்ருள். அவள் தந்தை இங்கு வந்திருக்கிருர்; அவர் சுரத்தால் படுத்துவிட்டார். லீலாவதி குணமடைந்து வருகிருள். பா இன்னும் நொண்டி நடக்கிருள் என்ருலும், முன்னைவிட நன்ருக இருக்கிருள். பாலகிருஷ்ண முன்போல் தானிருக்கிருர். பத்ரா, பாஞ்சாலத்தில் இருக்கிருர்.

நான் சாப்பிடும் மருந்து, தனியுரிமை பெற்றதல்ல. பலருக்கும் தெரிந்த, கடையில் கிடைக்கக்கூடிய வேர்தான்; கதிரவன் ஒளியால் பதமாக்கப்பட்டது. வேப்பிலையையோ, பட்டையையோ நான் சாப்பிடலாமென்ருல், வேருெரு கசப்பான வேரைச் சாப்பிடுவதில் தவறென்ன? ஆமணக்கு வித்தில் எவ்வளவு கெடுதல் இருக்கிறதோ, அவ்வளவு தான் இந்த வேரிலும் இருக்கிறது. ஆகவே

என் மருந்தைப் பற்றி அச்சம் கொள்ளாதே. நான் எச்சரிக்கையாகவே உள்ளேன்.

நபிபக்ஸுக்கு[1] என் அன்பைத் தெரிவி. இதற்குள் அவர் திரும்பியிருப்பார்.

திடீரென வெப்பம் அதிகரித்து விட்டது. ஒரு வேளை நல்ல மழை பெய்யக் கூடும்.

அனைத்திந்திய நூற்பாளர் சங்கம், அனைத்திந்திய கிராமக் கைத்தொழில் சங்கம் ஆகியவற்றின் கூட்டம் இனிது நடந்தது.

உருது எண்கள் வசதியாக உள்ளன. புரட்சிவாதி எப்பொழுதுமே முன் யோசனையாக ஏற்பாடு செய்வாளல்லவா? இந்த அளவுக்கு நான் தேர்ச்சி பெற்றபின், மேலும் கேட்டுத் தெரிந்து கொள்கிறேன். கருவிகளின் இந்தி பெயர்ப் பட்டியலை நீ தயாரித்துள்ளதை நான் மதித்துப் போற்றுவது போலவே, இவற்றையும் மதித்துப் போற்றுவேன்.

அன்பு,

கொள்ளைக்காரன்

## 135

*24—9—1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

உனக்கு எழுதும் மகிழ்ச்சியை அனுபவிப்பதற்காகவே இதை எழுதுகிறேன். ஷம்மி கூறுவது முற்றிலும் தப்பு. நீ தினமும் நிச்சயம் எழுத வேண்டும்; ஆனல் உன் ஓய்வையோ, வேலையையோ கெடுத்துக் கொண்டு எழுதக் கூடாது.

வாரியர் இங்கு இன்று வந்துள்ளார். அவரிடம் பேசி, ஆவன செய்கிறேன்.

ஏழு கைதிகளும் தங்கள் உண்ணு நோன்பைத் தற்காலிகமாக நிறுத்தியுள்ளனர்.

நாம் சந்திக்கும் போது சொல்லத் துடித்துக் கொண்டிருப்பதை, ஏன் எழுதக் கூடாது? ஆனல் உன் விருப்பப்படியே செய். எதையும் அறிந்து கொள்ளத் துடிக்கும் தன்மை, எனக்குத் தெரிந்த சிலருக்கு இருப்பது போல் எனக்குக் கிடையாது.

---

1. என் தந்தைக்கு விசுவாசமான முஸ்லிம் பணியாளர். என் தந்தை இறந்த பின், என்னிடம் வேலையில் அமர்ந்து தம் உண்மையான ஊழியத்தைத் தொடர்ந்தார்.

சீக்கிய சமூகத்தில் முக்கியமானவர் ஆதரவை நீ உறுதிப்படுத்திக் கொள்ள வேண்டும்; அவர்களுக்கு மற்ற சீக்கியர்களிடையே செல்வாக்கு இல்லையென்றாலும் பரவாயில்லை.

இன்று இவ்வளவு போதும்.

அன்பு,

கொள்ளைக்காரன்

## 136

சேகான், வார்தா,
*27—9—1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

நம்பிக்கை இல்லாதவளே! பிறருடன் பகிர்ந்து கொள்ள வேண்டிய செய்தி இருந்தாலொழிய, உன் கடிதங்கள் அனைத்தும், வேறு எவராலும் படிக்கப்படாமல் கிழிக்கப்படுகின்றன. இங்கு கருவிப் பெட்டிக்கு அருகேயுள்ள உன் மூலையைக் கைவிட்டு நீ போன பின்பு, ஒருமுறை தான் மற்றவர்களுக்கு உன் கடிதத்தில் உள்ள செய்தியைக் கூறியுள்ளேன்.

ஜவாஹர்லால் பற்றியோ, அவரிடம் நீ கொண்டுள்ள பிரியம் பற்றியோ, மற்றவர்கள் சொல்வதைப் பொருட்படுத்தாதே. நம் அண்டை வீட்டுக்காரர் நம்மிடம் அன்பு கொள்ள வேண்டுமென்று நாம் விரும்புவது போலவே, நாம் அவர்களிடம் அன்பு கொள்ள வேண்டுமானால், அவர்கள் நடையிலுள்ள போலி அம்சத்தையும் நாம் சகித்துக் கொள்ள வேண்டும். எவரிடம் போலி அம்சம் இல்லையோ, அவர் முதல் கல்லை எடுத்து எறியட்டும். போலி அம்சம் உன்னிடம் இல்லையா? இல்லாதவர் எவரையும் உனக்குத் தெரியுமா? எனக்கு யாரையும் தெரியாது. சிறியவன், அல்லது பெரியவனாகிய அடியேனையும் இதற்கு நான் எடுத்துக் காட்டாகச் சொல்ல முடியாது.

நாள் கழித்தாவது, நீ கதரை மணந்து கொள்ளும் நாள் வாழ்விலோர் திருநாளாகும். அவ்வாறு செய்யும்போது, உன் மற்ற அன்புகள் அனைத்தும் கதர் மூலம் நிறைவேறுவதை நீ காண்பாய். ஒருமையான, உண்மையான அன்பே, திருமணத்தின் அன்பும் இரகசியமும் ஆகும். மற்றதனைத்தும் கூடாவொழுக்கமும், உருவ வழிபாடும் ஆகும். தேவர்கள் பல இருக்கலாம்; ஆனால் தெய்வம் ஒன்றே. உபதேசம் இத்துடன் போதும்.

சார்லிக்குத் தனியாகக் கடிதம் எழுதியுள்ளேன்.

முற்றிலும் குணமடையுமுன் கல்கத்தாவிற்குச் செல்வதோ, வேலைப் பொறுப்பை ஏற்றுக் கொள்வதோ கூடாதென்று நான்

சுபாஷிடம் கூறியுள்ளேன். அவர் முற்றும் குணமடைந்த பின்னும் கூட, வற்ருத ஆற்றலும், ஒருமனதான ஈடுபாடும் கொண்ட ஜவாஹருக்கு அவர் ஈடு ஆகமுடியாது.

நாகபுரியில் நீ நல்ல பெயர் பெறுவாய்.

மருந்து நன்மை செய்துள்ளதென்றே நான் எண்ணுகின்றேன்; மருத்துவர்களும் அவ்வாறே எண்ணுகின்றனர்.

மீரா நேற்றெழுதிய கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். என் மடத்தனமான மறதியினுல் அதை நேற்று அனுப்ப இயலவில்லை; இந்த மறதி அன்புக் குறைவின் அறிகுறியா? அன்பு, மறதியே அறியாதது.

இன்றைக்கு இவ்வளவு போதும்.

அன்பு,
**கொள்ளைக்காரன், கொடுங்கோலன்,**
இத்யாதி.

# 137

சேகான்,
*11-10-1937*

திருத்தப்படாதது.

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

நீ அமைதியாகப் புகார் செய்துள்ள போதும், வாரக்கிழமை நாட்களில் உனக்கு எழுதவே இயலவில்லை. வலது கையை நான் பயன்படுத்தக்கூடாது. இடதுகையோ மிக மந்தமாக வேலை செய்கிறது. பயிற்சி பெறுவதற்கு எனக்கு அவகாசமுமில்லை. ஒவ்வொரு நிமிடத்தையும் எவ்வளவு பயனுள்ள வழியில் ஈடுபடுத்த முடியுமோ அவ்வாறு கவனமாகச் செய்ய வேண்டியுள்ளது. நீயோ, நான் உன் கடிதங்களைப் படித்தவுடன் கிழித்துவிடவேண்டுமென்று வற்புறுத்துகிறுய். அப்பொழுது, உன் கேள்விகளை ஏழு நாட்கள் முழுதாக நினைவிலிறுத்தி, ஞாயிறன்று பதில் எழுத வேண்டுமென எதிர்பார்க்கக் கூடாது.

புலாபாய் பற்றி நீ எழுதியதைக் குறித்து வைத்துக் கொண்டேன். அது மட்டுமல்ல; எவரிடமிருந்து தகவல் கிடைத்தது என்பதைத் தெரிவிக்காமல், அதுகுறித்து அவருக்கு நான் எழுதவும் செய்தேன். அவரிடமிருந்து பதில் முன்பே வந்திருக்க வேண்டும்; ஆனுல் இன்னும் பதில் வரவில்லை. அதைப்பற்றி நான் முன்பே கேள்விப்பட்டிருந்தேன்; ஆனுல் வதந்திகளின் பேரில் நான் நட

வடிக்கை எடுக்க விரும்பவில்லை. உன் தகவல் தெளிவாக இருந்தது.

நபிபக்ஸ் திரும்பிவிட்டது அறிந்து நான் மகிழ்கிறேன். அவருக்கு என் அன்பு. நீ வரும்போது, அவரையும் அழைத்து வர வேண்டும்.

உன் காசோலை டில்லிக்குச் சென்றுள்ளது. அவர்களிடமிருந்து முறையான ரசீது உனக்குக் கிடைக்கும். எளிதான கணக்கு வைப்பதில் தவறுகள் செய்யாமலிருப்பதால் மட்டும் ஒருவர் கணக்கு நிபுணராகி விடுவதில்லை. படிக்கத் தெரியாத நபிபக்ஸ் கூட, தாம் செலவு செய்வது அனைத்துக்கும் ஒழுங்காகக் கணக்கு தருவார். அவ்வப்போது செய்யும் செலவுகளையும் வரவுகளையும் குறித்துக் கொள்வதில், அவருக்குள்ள அளவு திறமை உனக்கும் உள்ளது என்பதில் நீ ஆன்ம நிறைவு அடையலாம். நீ நம்பகமான குமாஸ்தா தான்.

சர்தார் ஜோகேந்தர் சிங்கின் கடிதம் உன் உறையில் இல்லாமல் போனது பெரும் புதிராகவே உள்ளது. மீரா தேடிக் கொண்டிருக்கிருள். அவள் ஒரு குமாஸ்தாவும் அல்ல, முட்டாளுமல்ல என்பதை நினைவில் கொள். எதையும் நினைவிற் கொள்வதில் முட்டாள்களுக்குத் தனித்திறமையுண்டு. மீரா மலைகளையும் மேகச் சூழல்களையும் சித்திரிக்கும் ஆற்றல் பெற்றவள். ஆகவே உரிய இடத்தில் பொருள்களை வைப்பது போன்ற சிறிய காரியங்களை அவள் அற்பமாக எண்ணுகிருள். ஆனல் நீயும் நானும் இதையறிந்து சமாதானம் அடைய முடியாதல்லவா? அந்த அருமையான கடிதத்தை நீ படிக்க வேண்டுமென்று நான் மிகவும் ஆவலாயிருந்தேன். அதை அவர் உறுதியாகத் தொடர்ந்து வருகிருர். அக்கடிதத்தைக் கண்டு பிடித்து விடலாமென்று நம்புகிறேன்.

நீ அனுப்பியிருந்ததில் 'பாபு' என்று இந்தியில் முறையாகக் கையெழுத்திட்டுத் திருப்பி அனுப்புகிறேன். அது சரிதானே?

விஜயாவைத் திருப்பி அனுப்ப வேண்டுமென அவள் பெற்ருேர்கள் விரும்பினர். ஆகவே அவளை நான் அனுப்ப வேண்டியதாயிற்று. அவள் மிகவும் வேதனைப்பட்டாள்; கண்ணீரை அவளால் அடக்க முடியவில்லை. எனக்கும் அவளில்லாமல் சிரமமாகத் தானிருக்கின்றது; அவள் எப்பொழுதுமே வேண்டிய உதவி செய்ய ஆர்வத்துடன் இருந்தாள். திரும்பி வர அவள் விரும்புகிருள்.

அம்துல் சலாம் இன்னும் பம்பாயில் தான் இருக்கிருள்; அவளுடைய சகோதரருடன் சமரசம் செய்து வைக்க முயன்று கொண்டிருக்கிருள். அவள் என்றும் திரும்பி விடுவாள். லீலாவதி வேலையில் முழுமுச்சுடன் முனையத் தொடங்கிவிட்டாள். பியாரிலாலின் சகோதரி சுசீலா சனிக்கிழமையன்று வந்தாள்; வரும்போதே சுரத்தைக் கொண்டு வந்தாள். ஆகவே அவள் மகன்வாடியில் இருக்கின்ருள். பியாரிலால் அவளைப் பராமரித்து வருகிருர். ஸ்ரீமான் டைபஸ் கிருமி சுரத்தால் படுத்துவிட்டார்.

மாநாட்டு வேலை இப்பொழுது எப்படி நடக்குமென்று எனக்குத் தெரியவில்லை. அதை ஒத்திப்போட நேரிடலாம். அவர் பெறற்கரிய முத்து.

25ந் தேதி நான் கல்கத்தா செல்கிறேன்; பார்வை, காங்கிரஸ் என்பதுதான் அங்கு என் முகவரி. தள்ளிப்போனாலும்கூட, நவம்பர் 2ந் தேதி திரும்பிவிடுவேன் என்று எதிர்பார்க்கிறேன். வந்தபின் கான் சாகிப் ஆனைக்குக் காத்திருப்பேன். நவம்பர் முதல் வாரத்தில் நான் அவருடன் இருக்க முடியுமென அவர் எதிர்பார்க்கிறார்.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

## 138

சேகான், வார்தா
*12—10—1937*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

தேவ நாகரி லிபிக்கும், (பெரிதும் பாரசீக மொழிமயமான உருதுவிலிருந்து வேறுபடுத்தப்பட்ட) இந்தியில் தேர்ச்சிக்கும் இந்துக்கள் முக்கியத்துவம் அளிப்பதில் தவறு ஒன்றுமில்லை தான். ஆயினும் சம்மேளனம் முடியும் வரை தீவிரமாக வேலை செய்வதை நீ ஒத்தி வைக்க முடியுமானால், அது விவேகமுடையதாகும். இதுபோன்றவற்றில், அனுபவத்தை ஆதாரமாகக் கொண்டு தான் நாம் முடிவு செய்ய வேண்டும். சூழ்நிலையையும் உள்ளூர்ச் சந்தர்ப்பங்களையும் புரிந்து கொள்ளாமல், ஆலோசனை கூறுவது மிகக் கடினமாகும். சூழ்நிலையையும் சந்தர்ப்பங்களையும் அறிந்து தீர்வு காண வேண்டிய சிக்கலான பிரச்னையில் முடிவு செய்வதற்கு முன், இவை இரண்டையும் நானே நேரில் கண்டறிய விரும்புகிறேன். இந்த ஆலோசனை உனக்கு ஓரளவு வழிகாட்டியாய் அமையுமென்று நம்புகிறேன். எது எவ்வாறாயினும் எனக்கு இது தெளிவாகத் தெரிகிறது; பஞ்சாபி மொழியும் உருதுவும் தன் மொழிகள் என்று ஒவ்வொரு பஞ்சாபியும் உணர வேண்டும். ஆனால் ஒரு இந்துவோ, அவர் எங்கிருந்தாலும் சரி, தேவ நாகரி லிபி மூலம் இந்தியை அறிய வேண்டும். அப்பொழுதுதான் வேறெந்த மாநில மொழி வழக்கிலும் காணமுடியாத முதல்தர பக்தி இலக்கியத்தை அவரால் பயிலமுடியும்.

இதில் இந்திப் பிரசாரிணி சபையின் நோக்கு என்ன என்பது எனக்குத் தெரியாது. அதன் நோக்கு, என் கருத்திலிருந்து முற்றிலும் மாறுபட்டதாக இருக்கலாம். அப்படியாயின் பிரசாரம் செய்வதன் முறைமை பற்றிய முடிவு, என் முடிவிலிருந்து மாறுபட்டதாக இருக்கும்.

சர்தார் ஜோகேந்தர் சிங்கின் கடிதத்தை நீ எப்படிக் கண்டு பிடித்தாய்? அது காணவில்லையென்று நேற்றைய கடிதத்தில் குறிப்பிட்டிருந்தாயே?

பேசா நோன்பை நிறுத்திவிட்டு, இதைச் சொல்லி வேறொருவரைக் கொண்டு எழுத வைக்கின்றேன். நான் முழு முனைப்புடன் வேலை செய்த போதிலும், களைப்பு தோன்றவில்லை. பேச்சினால் தான் களைப்பு ஏற்படுகிறது. திங்கட்கிழமை வேலையை முடிப்பதற்குத் தேவையான பலம் மட்டுமே என் வலது கையில் இருக்கிறது. இடது கையால் எழுதுவதில் பயிற்சிபெற ஒவ்வொருநாளும் எனக்குச் சிறிது அவகாசம் கிடைத்தால் நன்றாக விருக்கும். ஆனால் தினம் எழுதும் கடிதங்களில் கையெழுத்தைக் கிறுக்குவதற்குத் தவிர எனக்கு வேறு அவகாசம் கிடைப்பதில்லை.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

# 139

*13—10—'37*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

நேற்றிரவு உனக்கு நீண்டதொரு கடிதம் வேறொருவரைக் கொண்டு எழுதவைத்தேன். இப்பொழுது காலை 4-15 மணிக்கு குர்ஷித்பற்றி இதை எழுதுகிறேன். அவள் கடிதத்தையும் உன் கடிதத்தையும் படித்தவுடன் கிழித்துவிட்டேன். அவள் நிலை பரிதாபமானது. எனக்கு அவள் வேறுவிதமாக எழுதுகிறாள்; ஆண்கள் நடமாடும் இடத்திலிருந்து ஒதுங்கிவிடப் போவதுபோல் குறிப்பிடுகிறாள். அவளுக்கு நான் இதமான ஒரு பதில் எழுதியுள்ளேன். அவள் எனக்குப் பழக்கமில்லாத வேற்றாள் போலக் கடிதம் எழுதினாலும், நான் என் கடிதங்களில் பாபு என்றே கையெழுத்திடுகின்றேன். அவள் என்னைக் கைவிட்டால் கூட, நான் அவளைக் கைவிட மாட்டேன் என்று அவளிடம் கூறுகிறேன்.

கோவிந்த் தாஸுடன் ஒரு மணிநேரம் பேசிக்கொண்டிருந்தேன். அவர் ஒத்துக்கொண்டதைப் பார்த்தாலே, அவர் தவறு செய்துள்ளதாகவே தோன்றுகிறது. அவருக்கு எதிராக என்னிடம் புகார் செய்யப்பட்டுள்ளவை உண்மைதானா என்று அவரே விசாரித்தறிய வேண்டுமெனக் கூறியுள்ளேன். நான் அவர் பற்றிக் கொண்டுள்ள எண்ணம் அவருக்குச் சாதகமாயில்லை யென்றாலும், அதனால் நீ அவர்மீது கொண்டுள்ள நல்ல கருத்தை மாற்றிக் கொள்ள வேண்டிய அவசியமில்லை. நாம் சந்திக்கும்போது, நீ எனக்கு நினைவுபடுத்தினால், இதைப்பற்றி மேலும் பேசலாம்.

உன் நீர்க்கோப்பை வெகு நாட்களுக்கு முன்பே விலக்கி விட்டாயென்று எண்ணுகின்றேன். பனி பெய்யும்போது வெளியில் ஏன் உட்கார்ந்திருக்க வேண்டும்? ஏழைக் கிராமவாசிகளாகிய நாங்கள் செய்வதுபோல், கால் மேல் கால் போட்டுக்கொண்டு, போர்த்திக்கொண்டு, உட்கார நீ வெட்கப்படக்கூடாது. குளிரும் போது, நீண்ட உள் மூச்சு எடுத்துவிடுவது நல்லது.

பாலஸ்தீனப் பள்ளிக்கூடங்கள்பற்றி எனக்குத்தெரியும். அவற்றைப் பற்றிய பிரசுரங்கள் பலவற்றைக் குமரப்பா விட்டுச்சென்றுர்.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

## 140

[14-10-1937 தேதியிட்ட மீராவின் கடிதத்தில் பாபு எழுதிய பிற்குறிப்பு.]

என்னைப்பற்றிக் கவலைப்படாதே. இறைவனே தலைசிறந்த மருத்துவர். அவர் எனக்கு வழிகாட்டுகிறுர். உயிரைப் பறிக்கும் அளவில் அவர் எனக்கு மருந்து கொடுத்துவிட்டால் கூட நல்லது தான். விற்பனை விழாவை வெற்றிகரமாய் நடத்தியுள்ளாய்.

அன்பு,

பாபு

## 141

சேகான், வார்தா,
*18—10—1937*

என் அன்பார்ந்த தீண்டாதவளே,

பட்டங்கள் தமக்கு வரும் வரை காத்திருக்கும் பொறுமை சிலருக்கு உண்டு. உனக்கோ பொறுமை கிடையாது; ஆகவே உன் பட்டங்கள் பொதுவாக நல்ல பொருத்தமாகத் தேர்ந்தெடுக்கப்பட்டனவாய் அமைகின்றன. முதலாவதுதான் பொருத்தமற்றதாகப் போய்விட்டது. புரட்சிவாதி என்று உன்னை யார் அழைப்பார்கள்? நான் மாட்டேன். முட்டாள் என்பது பொருத்தமானதுதான். ஆனல் எனக்கு நினைவில்லை. அது உனக்குக் கொடுக்கப்பட்ட பட்டமல்லவா? நீ அதை மனமொப்பி ஏற்றுக்கொண்டாய். தீண்டாதார் என்பது உனக்குப் பொருத்தமானதுதான்; அரச பரம்பரையில் வந்த நீங்கள் அனைவருமே தீண்டாதார்தான். நீ உனக்குத் தேர்ந்தெடுக்கும் அடுத்த பட்டம் என்னவாக இருக்குமோ?

இன்று நான் ஓரளவு ஓய்வாகவே காரியங்களைச் செய்கிறேன். அதிகம் எழுதுவதற்குப் பதிலாக உறங்குகின்றேன். கட்டுரையை நேற்றிரவு எழுதினேன்.

எந்தக் கேள்விக்கும் பதில் சொல்லாமல் விட்ட நினைவு எனக்கில்லை. உன் கடிதத்தில் ஒரு பகுதியை நான் வைத்திருந்தேன். ஆனால் அதை எடுத்துப் பார்க்கச் சோம்பல்.

கத்தியாவாட் ஊரில் இராமேசுவரியின் சுற்றுப்பயணம் மிகச் சிறப்பாக அமைந்ததாம். வர்ணனை மிக்க அவள் கடிதங்கள் அனைத்தும் அருமையாக உள்ளன. அவை நல்ல சரளமான இந்தியில் எழுதப்பட்டுள்ளன. நிருபர்கள் அவளைப் பெரிதும் பாராட்டி எழுதியுள்ளனர். சுற்றுப்பயணம் அனேகமாக முடிந்துவிட்டது.

நாரிமன் உண்மையை ஒத்துக்கொண்டதை நீ பார்த்திருப்பாய்.

சிகிச்சை பெற்று வருபவர்கள் நன்றாகவே உள்ளனர்.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 142

சேகான்,
*18-10-1937*
மாலை *4-30* மணி.

என் அன்பார்ந்த முட்டாள்,

இன்று நான் உனக்கு எழுதும் இரண்டாவது கடிதம் இது. இந்தியில் நீ அடைந்துள்ள முன்னேற்றத்திற்காக உன்னைப் பாராட்டவே இதை எழுதுகிறேன் ; உன் இந்திக் கடிதம் அதற்குப் போதிய சான்றாகும். இன்னும் கொஞ்ச நாட்களில், உன் நடையும் மிகத் தூய்மையாகிவிடும். ஒழுங்காக இராமாயணத்தையும், முடிந்தால் இந்திச் செய்தித்தாள் ஒன்றையும் நீ படிக்கவேண்டும். பத்திரிகை படிக்க முடியாவிட்டால் பரவாயில்லை. ஆங்கிலத்திற்கு ஷேக்ஸ்பியர் போல, இந்திக்குத் துளசிதாஸ். ஆகவே நீ துளசிதாஸை மட்டும் படித்தாலே நான் திருப்தி அடைவேன். ஒரு நல்ல இலக்கண நூலைப் பயில்வதும் அவசியமாகும்.

ஷம்மியை எதிர்க்க வேண்டாம். நீ எவ்வளவு நாள் அங்கு தங்க வேண்டுமென்று விரும்புகிறாரோ, எவ்வளவு நாள் அவர் அங்கு மகிழ்ச்சியுடன் இருப்பாரோ, அவ்வளவு காலம் நீ அங்கேயே தங்குவது நல்லது.

உன் உரையை எழுதவும் உனக்கு அங்கே அதிக அவகாசம் கிடைக்கும். உன் உரை புதுமையாகவும், பொருத்தமாகவும், சொற்

செறிவுடையதாகவும் இருக்கவேண்டும். சுற்றி வளைத்த பேச்சு கூடாது. கடந்தகால வேலைபற்றிப் பேசுவதில் அதிக நேரம் செலவு செய்யாதே வருங்காலத் திட்டத்தில்—துணிவான, ஆக்க பூர்வ வான, அனைவரையும் தழுவும் திட்டம் வகுப்பதில்—கவனம் செலுத்து. எல்லாவற்றிற்கும் மேலாக, அது செயல்முறைக்கு ஒத்த தாகவும் கிராமங்களுக்கு ஏற்றதாகவும், அதே சமயத்தில் உன் உறுப்பினர்களுக்கு எட்டக் கூடியதாகவும் இருக்கவேண்டும். இக் கடிதம் நன்ருயுள்ளதல்லவா?

அன்பு,

**கொள்ளைக்காரன்**

# 143

சேகான்,

*1—11—1937*

என் அன்பார்ந்த தீண்டாதவளே,

நேற்று ஒரு சில வரிகள் வரைந்தேன். நேற்று எழுதியதற்கு மேலாகச் சில வரிகள் இன்று எழுதுகின்றேன். ஆம்; மதுவிலக்குக் கொள்கை அறிக்கையை மேலும் பெயர்களுக்குக் காத்திராமல், பிரசுரம் செய்யலாம். ஆனல் அந்த அறிக்கைக்கு ஆதரவாக, உரு வான வேலை செய்யப்படுமென்று நம்புகிறேன். நீயே தனியாக அத்தனை வேலையையும் செய்யத் துணியாதே!

உன் உரையை இரண்டு நாட்களுக்குமுன் திருப்பி அனுப்பி னேன். ஒரு சில முக்கிய திருத்தங்கள் செய்துள்ளேன் என்பதைப் பார்த்திருப்பாய். அவை உன் மனத்திற்குச் சிறந்தவையாகத் தோன்றினல் ஒழிய, அவற்றை ஏற்றுக்கொள்ளத் தேவையில்லை. உன் யோசனைகள் அனைத்தும் நல்லவையே. ஆனல் அவை ஏற்றுக் கொள்ளப்படுமா? ஏற்றுக்கொள்ளப்பட்டாலும் அவை செயலில் நிறைவேற்றப்படுமா? உன் அவையை உன்னல் தான் அறிய முடியும். எது சிறந்த முறையென்று கருதுகிருயோ, அவ்வாறே திட்டத்தை எடுத்துரைப்பாய்

நான் என்றைக்குக் கலந்து கொள்வேன் என்று அனசூயா காலே, அதற்குப் பின் சரோஜினி இருவரும் கேட்டனர். கடைசி நாள் கலந்துகொண்டால் நன்ருயிருக்குமென்று சரோஜினி கூறி ஞள். நான் தடை சொல்லவில்லை. ஆனல் நீயே இதை முடிவுசெய்ய லாம். மழை பெய்யாமலிருந்தால்தான் நிகழ்ச்சி நடக்கும். என் நிகழ்ச்சித் திட்டம் முழுவதும் சீர்குலைந்துள்ளது. மாநில ஆளு நரைப் பார்க்க நான் 11ந் தேதி இங்கு திரும்பிவரவேண்டும். அவர் இங்கில்லை. என் உடல் இப்பொழுதுள்ள நிலையில் நான் டார்ஜி லிங்குக்குச் செல்ல முடியாது. எல்லை மாநிலத்திற்கு 17ந் தேதி—

எப்படியும் 20ந் தேதிக்கு முன்பு—போய்ச் சேரவேண்டும். நான் அங்கு 20 நாட்கள் தங்க வேண்டுமென்று கான்சாகிப் விரும்புகிறார். அப்படியென்றால், டிசம்பர் 10ந் தேதிக்குமுன் நான் சேகானுக்குத் திரும்பி வரமுடியாது. இதற்காக நான் வருந்துகிறேன். நீ என்ன செய்யப்போகிறாய்? சிம்லா உனக்கு ஒத்துக்கொண்டால், நீ சிம்லாவிலேயே அதுவரைத் தங்கக்கூடாதா? மாரி காலத்தில் சிம்லா வெகு சுகமாய் இருக்குமென்று நான் கேள்விப்பட்டிருக்கின்றேன். ஆனால் உன் உடல் எதைத் தாங்கிக்கொள்ளும் என்பது உனக்குத்தான் தெரியும்.

இந்தக் கட்டத்தில் மேலும் எழுதமுடியாமல் ஏதோ குறுக்கீடு நேரிட்டது. அது தொடர்ந்துள்ளது.

அன்பு,

கொள்ளைக்காரன்

## 144

ஜுஹு
24—12—1937

என் அன்பார்ந்த முட்டாள்,

உன் புதிய பொறுப்பை ஏற்றுப் பணியாற்றத் தொடங்கும் நேரத்தில் உன்னைப் பற்றி நினைக்கின்றேன். அக ஒளி உனக்கு வழி காட்டி, எல்லா இடையூறுகளுக்குமிடையே உன் பாதையைச் செம்மையாக்கட்டும். நீ நன்றாக இருக்கின்றாயென்று நம்புகிறேன். உன்னுடன் யார் இருக்கின்றார்? அநேகமாக 26 ந் தேதி ஜவாஹர் லால் நாகபுரியில் இருப்பார். நீ அவரை அழைப்பாய் என்பதில் எனக்கு ஐயமில்லை. நீ ஜுஹுவுக்குச் சில நாட்கள் வரலாமா என்று அவரைக் கேள். சரியென்று அவர் கூறினால், உனக்கு வேறு வேலை அந்த நாட்களில் இல்லையென்றால், நீ இங்கு வரவேண்டுமென நான் விரும்புகிறேன்.

என் கடிதத்திற்கு உன்னிடமிருந்து விவரமான பதிலை எதிர் பார்க்கின்றேன்.

கிறிஸ்துமஸ்; புத்தாண்டு வாழ்த்துக்களை நீ விரும்புவாயானால் வண்டி நிறைய அவை உனக்கு உரித்தாகுக. இந்த மாதம் முழுவதும் நீ என்னுடன் இருந்திருக்க வேண்டியவள்.[1] ஆனால்—

அன்பு,

கொடுங்கோலன்

---

1. மட்டு மீறிய இரத்த அழுத்தத்தின் விளைவாக, ஜுஹுவில் பூர்ண ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டுமென காந்திஜிக்கு ஆலோசனை கூறப்பட்டது. அவருடன் எத்தனை பேர் தங்கலாம் என்பதும் கண்டிப்பாக நிர்ணயிக்கப் பட்டது.

## 145

ஜுஹு
*27—12—1937*

என் அன்பார்ந்த முட்டாள்,

என்ன நேரிட்டாலும் நான் உனக்கு ஒரு வரி எழுதவேண்டும் ஒன்றும் நேரிடாமலும் போகலாம். அங்கு நல்ல குளிர்ச்சியாக இருக்கிறதென்று எண்ணுகின்றேன். அங்குள்ள சக ஊழியர்கள் உன் வேலையை எளிதாக்குகிறார்களென்று நம்புகிறேன். இந் நாட்கள் முழுவதும் நான் மானசீகமாக உன்னுடன் தான் இருக் கின்றேன். நீ நாகபுரிக்குப் போய்ச் சேர்ந்த போது என் கடிதம் உனக்குக் காத்துக் கொண்டிருந்தது என்றெண்ணுகிறேன். என் உடல்நலன் தேறுவதும் குன்றுவதுமாக இருக்கிறது. அம் மாறுதல் கள் பற்றி நான் கவலைப்படவில்லை. உன் சருமப்படை எப்படி இருக் கிறது? மற்றவைபற்றி மீரா எழுதுவாள்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 146

சேகான்,
*9-1-1938*

என் அன்பார்ந்த புரட்சிவாதி,

உன் கடிதங்கள் அனைத்தும் முறையாகக் கிடைத்தன. நான் தான் இப்பொழுதெல்லாம் அடிக்கடி எழுத முடிவதில்லை. ஐந்தாறு நாள் எழுத்து வேலையே செய்யாமல், நான் எழுதும் முதல் கடிதம் உனக்குத் தான். நான் ஒரு வேளை நலமாக இருக்கின்றேன்; மறு வேளை நிலை மாறுகிறது. இரத்த அழுத்தம், ஆரோக்கிய அளவுக் குக் குறைகிறது. ஆனால் சிறு காரணம் ஏற்பட்டாலும் அதிகமாகி விடுகிறது. பேசவோ, முக்கியப் பிரச்னைகள் பற்றி உரையாடவோ கூட அச்சமாக இருக்கிறது.

பிப்ரவரி *1*-ம் தேதியோ, *2*-ம் தேதியோ, உனக்கு எது வசதி யாக இருக்கிறதோ அதன்படி நீ இங்கு வந்து, எவ்வளவு நாள் தங்க முடியுமோ அவ்வளவு நாட்கள் தங்க வேண்டும். இங்கிருந்து *7*-ந் தேதி புறப்பட்டு, நான் ஹரிபுராவுக்கு *9*ந் தேதி போய்ச் சேர் வேன். நீ என்னுடன் வருவாய். காரியக்கமிட்டி இங்கு பிப்ரவரி *3* ந் தேதி கூடுகிறது.

*15*ந் தேதி வாக்கில் லோதியன் பிரபு என்னைச் சந்திக்க வருகிறார். அதற்குப் பிறகு வங்காளக் கைதிகள் பற்றிப் பேச கனசியாம்தாஸ் வரக்கூடும். இத் தகவல்கள் உனக்குப் போது

மானவை என்றெண்ணுகிறேன். இயற்கை இதமாகத் தான் இருக்கின்றது. இரவில் 60°-64°; பகலில் 72°-76°.

இயற்கை முறையில் சிகிச்சை செய்துகொண்டால் நீ நலமாக இருப்பாய். நீ இன்னும் முன்பாகவே இங்கு வர முடிந்தால், நன்றாக இருக்கும். ஆயினும் இப்பொழுதாவது வர முடிந்ததே என்பதில் மகிழ்ச்சி அடைய வேண்டும் போலும். முன்பாக வருவது இயலுமென்றால், வர முயற்சி செய்.

நீ சென்ற ஆண்டு எனக்குக் கொடுத்த சால்வையை, பா கேட்டதால், அவளுக்குக் கொடுத்துவிட்டேன் என்று சொன்னேனா? நீ அதற்குத் தடை சொல்லியிருக்க மாட்டாயென்பது எனக்குத் தெரியும்.

உனக்கும் ஷம்மிக்கும் அன்பு,

கொள்ளைக்காரன்

# 147

சேகான்,
21—1—1938

எனதன்பார்ந்த முட்டாள்,

பழ வகைகளை மட்டுமே உண்பதென்ற நோன்பை நான் நேற்று மேற்கொண்டேன். உடல் முதல்தரமாக இருக்கின்றது. 8 நாட்களுக்கு அவ்வாறு செய்ய விரும்புகிறேன். ஆனால் என்ன நன்மை ஏற்படுகிறது என்பதைப் பார்த்துக் கொண்டு தொடருவேன். ஆகவே நீ கவலைப்பட வேண்டாம்.

லோதியன் சீமாட்டியின் எலும்புருக்கி நோய்க் குழுவில் உறுப்பினராகச் சேர நீ மறுத்ததற்கான காரணத்தை நேற்று லோதியன் பிரபுவிடம் கூறினேன் என்பதைத் தெரிவிக்கவே இதை எழுதுகிறேன். அந்த முயற்சிக்கு ஆதரவாளரில் என் பெயரையும் சேர்த்துக் கொள்ள நான் சம்மதிக்க வேண்டுமென்று சீமாட்டி அவர் மூலம் செய்தி அனுப்பியிருந்ததால், உன் கருத்தைத் தெரிவிக்க வேண்டியது அவசியமாயிற்று. அரச-சக்கரவர்த்தி அம் முயற்சியுடன் தொடர்பு கொண்டிருப்பது தற்காலிகமானதே என்றும் அம்மையார் கூறியிருந்தார். உன் ஆட்சேபத்தை நானறிவேன் என்பதை அவர்கள் அறிந்திருந்தார்கள் என்று நான் எண்ணினேன். ஆகவே உன் பெயரைக் குறிப்பிட்டு, உனக்கும் எனக்கும் இடையே இரகசியங்கள் கிடையாதென்றும் (அது முற்றிலும் சரி தானே?) ஆகவே என்னிடம் நீ உன் கருத்தைத் தெரிவித்தது பற்றிச் சீமாட்டி தவறாக எண்ண மாட்டாரென்று

நான் நம்புவதாகவும் கூறினேன். இதில் முடிவு செய்த பொறுப்பு உன்னையே முழுதும் சார்ந்ததென்றும், நடவடிக்கையை எடுத்து முடித்த பின் தான் அதைப்பற்றி எனக்குத் தெரியுமென்றும், ஆனால் உன் ஆட்சேபக் கருத்து என் ஆதரவைப் பெரிதும் கவர்ந்தது என்றும் நான் அவரிடம் கூறினேன். நான் செய்தது சரிதானா என்று நீ சொல்ல வேண்டும். பதில் எழுத அவகாசமில்லையென்றால் நாம் சந்திக்கும்போது, இக் கேள்விக்கு நீ பதில் சொல்ல வேண்டும்.

லோதியன் பிரபுவிடம் உன் செய்தியைக் கூறினேன். தம் குழுவும் மற்றக் குழுவும்[1] சந்தித்துப் பேசிய சாட்சிகளில் மிகத் திறமையான சாட்சி நீ தான் என்று அவர் கூறினர்.

மற்றவை நாம் சந்திக்கும் போது.

கொடுங்கோலன்

# 148

கல்கத்தா,
*22-3-1938*

எனதன்பார்ந்த முட்டாள்,

பென்சிலைக் கொண்டு எழுதினால், எழுத வேண்டும்; இல்லாவிடில் எழுதாமலே இருக்க வேண்டும். மைக் கூட்டை கனு எடுத்து வரவில்லை; நானும் மடத்தனமாக மறந்துவிட்டேன். பக்கத்தில் பவுண்டன் பேனா இல்லை; சாதாரணப் பேனாவோ, மையோ, இந்த வீட்டில் இல்லை. ஆகவே இது வெறும் செய்திக் கடிதம் தான்; வேறெதற்கும் அவகாசமில்லை.

காங்கிரஸ் கட்சியில் இடம் எதுவும் காலியாகுமென்று எதிர்பார்ப்பதற்கில்லை. ஆனால் பொறுப்பான பதவிகள் வகிக்க ஆற்றல் உடையவர்கள் என்று நீ கருதும் பெண்களின் பெயர்களைக் குறிப்பிட்டுப் பொதுவான கடிதமொன்றைத் தலைவருக்கும் அந்தந்த மாநில முதலமைச்சர்களுக்கும் அனுப்ப வேண்டுமென்று நான் யோசனை கூறுவேன். அத்துடன், தலைவர் என்ற முறையில் உன் பொறுப்பு முடிந்து விடும்.

டில்லியில் நாணயத்தைப் பொறுத்தவரை, பிரிஜ் கிருஷ்ணவைத் தங்கத்தில் எடைபோட்டு நிறுத்தாலும் தகும். ஆனால் நிகழ்ச்சிகளையும் நடப்புகளையும் பற்றி அவர் மதிப்பீட்டை அப்படியே ஏற்றுக் கொள்வதற்கில்லை. ஆனால் சர்தாரும் சங்கர்லாலும் இப்பொழுது அங்கிருப்பதால், எல்லாம் ஒழுங்காக ஏற்பாடு செய்யப்படும்.

---

1. *தம் குழு-என்றது, 1932ம் ஆண்டு வாக்குரிமைக் குழு; இந்தியப் பெண்கள் சார்பில் நான் சாட்சியம் கூறினேன். மற்றக் குழு என்றது இந்தியாவிற்குப் புது அரசியல் சட்டம் பற்றிப் பரிசீலனை செய்த பிரிட்டிஷ் பாராளுமன்றக் கூட்டுத் தேர்வுக் குழு.*

என் உடல்நலன் நன்றாக இருக்கிறது. ஒரு புதிய பரிசோதனை செய்து, அதைச் சிறிது கெடுத்துக்கொண்டேன். அதை உன்னிடம் விவரமாகக் கூறவேண்டும். இங்கு என் வேலையைப் பொறுத்த வரை, தெளிவான முடிவு ஒன்றும் ஏற்படவில்லை.

அன்பு,

கொடுங்கோலன்

## 149

கல்கத்தா,
*2-4-1938.*

என் அன்பார்ந்த முட்டாள்,

நேற்று உனக்கு ஒரு தந்தி அனுப்பினேன்; அதற்கு இது வரைப் பதில் இல்லை. நீ சுகமாய் இருக்கிறாயென்று நம்புகிறேன். அடிக்கடி இதுபோல் நலக்குறைவு ஏற்படுவது எனக்குப் பிடிக்க வில்லை. மண், நீர், இரண்டும்தான் மருந்துகள் என்பதை நான் அறிவேன். ஒளியும் காற்றும் முக்கியம்; ஆனால் அவை உனக்குப் போதிய அளவு கிடைக்கின்றன. மற்ற இரண்டும் உனக்குப் போதிய அளவு கிட்டவில்லை. இடுப்புக் குளிப்பு, அமர்ந்த குளிப்பு ஆகியவற்றுடன் ஈரமண் கட்டுகள் வயிற்றுக்கும் பாதிக்கப்பட்ட உறுப்புகளுக்கும் போடவேண்டும்.

என் உடல் நலனில் குறைவு ஒன்றும் ஏற்படவில்லை. ஆனால் பா மடத்தனமாகப் பூரிக் கோயிலுக்குள் புகுந்தாள்; அது என்னை மிகவும் வேதனைப்படுத்தி விட்டது. அந்த நிகழ்ச்சியின் வரலாறு முழுவதையும் இப்பொழுது தருவதற்கில்லை. அந்த அதிர்ச்சியி லிருந்து நான் இன்னும் மீளவில்லை. ஆகவே இப்பொழுது இரத்த அழுத்தம் *175-80, 108-104* என்ற அளவில் நிலையாய் நின்றுவிட் டது. நடுவில் நீங்கிய மனச் சோர்வும் அலுப்பும் மீண்டும் வந்து விட்டன. எடையில் சுமார் 5 பவுண்டு குறைந்துள்ளேன். கல்கத்தா விவகாரம் முடிந்தவுடன் இந்த இழப்புகளுக்கு ஈடுசெய்ய முடியும். நீண்டநேரம் பேசா நோன்பு மேற்கொள்கிறேன். தற்போதைக்கு அதைத் தொடர்ந்து மேற்கொள்ளப் போகிறேன். பேசாவேளை யில்தான் இதை எழுதுகிறேன்.

பிரபாவதி என்னுடன் இருக்கின்றாள். தேலாங்கில் ஜெயப் பிரகாஷ் என்னுடன் இருந்தார். பிரபாவதியை என்னுடன் நான் அழைத்து வந்தேன். அவர் டாக்கா சென்றுள்ளார்; திரும்பிய வுடன் அவளை அழைத்துக்கொள்வார். அவள் உனக்கு இரு கடிதம் எழுதி, இத்துடன் அனுப்பக் கூடும்.

தேலாங்கில் உன்னைப்பற்றி அடிக்கடி நான் எண்ணிக்கொண் டிருந்தேன். நீ அங்கிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்குமென்று

நினைத்தேன். காண்பதற்கும் கற்பதற்கும் அங்கு எவ்வளவோ இருந்தது.

அன்பு,

கொள்ளைக்காரன்

தந்தி இப்பொழுது தான் வந்தது.

பாபு

## 150

கல்கத்தா,
*4-4-1938*

என் அன்புள்ள முட்டாள்,

இது வெறும் செய்திக் கடிதமே. நான் நலமாயில்லாதபோது ஓர் அஞ்சலட்டை எழுத வேண்டுமென்ருய். நான் மிகவும் நலமாக உள்ளேன் என்று கூற ஒரு கடிதமே எழுதுகின்றேன். நலக்குறைவு ஏற்பட்டது, உள்ளத்தில் எழுந்த வருத்தத்தினுல்; உடல் நலிவினுல் அல்ல. உள்ளத்தில் ஏற்பட்ட வருத்தத்திற்கான காரணங்களை 'ஹரிஜன்' இதழிலிருந்து நீ அறிந்து கொள்ளலாம். மகாதேவ் என்னைப் பார்த்தபடியும் என்நிலையை அறிந்தபடியும், கூறியுள்ளார். நான் செய்ததனைத்திலும் அவர் அன்பைக் காணவில்லையென்ருல், அன்பில்லை என்பதுதான் பொருள். அன்பு, உண்மையான அன்பென்ருல், அந்த அன்புக்குரியவர், ஏதாவது ஒரு கட்டத்தில் அந்த அன்பை அறிந்து அனுபவிக்கவேண்டும்.

நான் இந்த வேலைச் சுமையை நன்கு தாங்கிக் கொண்டுள்ளேன். நிறைய எழுத்து வேலை செய்தேன்; அதனுல் சிரமம் எதுவும் ஏற்படவில்லை. இன்னும் சில நாட்களில் நான் டில்லிக்குச் செல்ல வேண்டியிருக்கும். நான் போவதானுல், உனக்குத் தெரிவிப்பேன்.

என் வேலைகளில் சிலவற்றிற்குப் பொறுப்பேற்றுப் பஞ்சாபில் நடத்த நீ முன்வந்தது குறித்து நான் எதுவும் சொன்னேனு? சொல்லவில்லை என்றுதான் எண்ணுகிறேன். லாகூர் வெப்பத்தைத் தாங்கிக் கொள்ளுமாறு நான் எப்படி உன்னிடம் சொல்ல முடியும்? ஷம்மி சிம்லாவில் இருக்கும்போது, அவரிடமிருந்து நீ பிரிவதற்கு நான் எப்படி உடன்படமுடியும்? மேலும் எதற்காக நீ அவ்வளவு சிரமப்படவேண்டும்? சற்றும் பலன்தராத, நன்மை பயவாத முயற்சியாக அது முடியக்கூடும். பாஞ்சாலக் குழப்பத்திற்கு உன்னைக் காவு கொடுக்கும் துணிவு எனக்கில்லை. மேலும் உனக்கு அவகாசம் எங்கிருக்கிறது? உனக்குத்தான் ஏற்கெனவே கைநிறைய வேலை இருக்கிறதே.

இங்கு என் வேலையில் முன்னேற்றம் காணவில்லை. எனினும் நான் நம்பிக்கை இழக்கவில்லை.

நான் டில்லிக்குப் போனாலும் ஒரு சில மணி நேரமே தங்கு வேன்.

அன்பு,
**கொடுங்கோலன்**

# 151

கல்கத்தா,
*7-4-1938*

என் அன்புள்ள முட்டாள்,

S இன்று உன்னிடம் சொல்லக்கூடிய செய்திபற்றி நீ சஞ்சலம் அடையக்கூடாது. இரத்தக் கொதிப்பு, மருத்துவர்களுக்கு நல்ல தாக இருக்கலாம்; ஆனால் நோயாளிகளுக்கு அது நன்மை செய்வ தல்ல. சுகக் குறைவுபோல் அவர்களுக்குத் தோன்றும்போது, சுகக் குறைவுதான் ஏற்படுகிறது. நேற்றிரவு என் நிலை அவ் வாறுதானிருந்தது. மண்டையின் பின் பகுதியில் அதே போன்ற தலைவலி. ஆனால் சுசீலா மிக இதமாக வருடிவிட்டதும், ஒரு சில நிமிடங்களில் எனக்குத் தெளிவு ஏற்பட்டுவிட்டது. வலி மீண்டும் வரவில்லை. பகல் 12 மணிக்கு இரத்த அழுத்தம் 154/98 ஆக இருந்தது. பின்னர் 170/98 வாக்கில் அது உயர்ந்தது. ஆகவே நீ அதைப்பற்றிக் கவலைப்படக்கூடாது. உண்மையான ஆபத்து நேரிடும்போது, நிகழ்ச்சிக்குப் பின்தான் உனக்குச் செய்தி கிட்டும். அதற்குப் பிறகு வீண் வருத்தம்கூடாது; இன்னும் அதிக ஆர்வத்துடன் தொண்டுக்கு உன்னை அர்ப்பணம் செய்துகொள்ள வேண்டும்.

அன்பு,
**கொள்ளைக்காரன்**

ஏப்ரல் 6ந் தேதியை நீ கொண்டாடினாயா?

# 152

கல்கத்தா,
*13-4-1938*

என் அன்புள்ள முட்டாள்.

நான் நலமாக இருக்கின்றேன் என்றும், டில்லிக்குச் செல் கிறேன் என்றும், அங்கிருந்து வார்தாவுக்குச் செல்வேன் என்றும் தெரிவித்து உனக்கு ஒரு தந்தி அனுப்பப்பட்டுள்ளது. டில்லியில்

நடப்பதுபற்றி உனக்குப் பத்திரிகைகள் வாயிலாகச் செய்தி கிடைக்கும்; வேலை முடிந்தவுடன் என்னிடமிருந்தோ மகாதேவிடமிருந்தோ செய்தியை அறிவாய்.

நான் மிகவும் நலமாகவே உள்ளேன். இப்பளுவை மிக அற்புதமாகத் தாங்கிக் கொண்டுள்ளேன்.

பேச்சு வார்த்தைகள் மிகச் சிரமமாகத்தான் இருந்தன. ஆனல் அவை வெற்றி பெறுமென்று நம்புகிறேன். நிதானம் வேண்டுமென்று நான் விடுத்துள்ள கோரிக்கையை மக்கள் எப்படி ஏற்றுக் கொள்கிருர்கள், என்பதைப் பொறுத்துத்தான் எல்லாம் முடிவாகும். நான் மீண்டும் வர வேண்டியிருக்கும்.

பெண்களுடன் நடந்த பேட்டிபற்றி என்றைக்காவது மகாதேவ் அல்லது நான் உனக்குச் சொல்லவேண்டும். ஆனல் நாம் சந்திக்கும் போதுதான் சொல்ல முடியும்.

நீ ஊட்டிக்குப் போக முடிந்து, போகும் வழியில் என்னுடன் ஒரு நாள் தங்க முடிந்தால், நன்ருக இருக்கும்.

ஜின்னுவைப் பார்ப்பதற்காக நான் பம்பாய்க்கு 25 ந் தேதி போக வேண்டியிருக்கும் என்பதை நினைவிற் கொள்.

திருமதி சுப்பராயன் சட்ட மன்றத்தில் இருக்கிருரே. அவரை நீ அடிக்கடி சந்திப்பாய் என்று எண்ணுகிறேன்.

ஷஹீத் கஞ்ச் பிரச்னை பற்றி நான் மத்யஸ்தம் செய்வதற்கான வாய்ப்பு நேரிட வழியில்லை. அதற்கு நியாயமான ஒரு தீர்வு காண்பதே அரிதாக உள்ளது.

இந்த ஐக்கிய மாநிலக் கொள்ளை, சஞ்சலமூட்டும் விவகாரமாய் உள்ளது. இந் நாட்டுக்கு என்னென்ன சோதனைகள் காத்திருக்கின்றனவோ, தெய்வம் தான் அறியும்.

அன்பு,

கொள்ளைக்காரன்

## 153

இரயிலில்,
*16-4-1938*

என் அன்புள்ள முட்டாள்.

நாங்கள் வார்தா நோக்கிச் சென்று கொண்டிருக்கின்ருேம். நான் நலமாக இருக்கின்றேன். இன்று தொடக்கத்தில் 160-4/98 ஆக இரத்த அழுத்தம் இருந்தது. இப்பொழுதெல்லாம் இந்த நிலை இருப்பதே அபூர்வமானது. குவாலியர் வரை, கூட்டங்கள்

என்னை ஓய்வெடுக்கவே அனுமதிக்கவில்லை. என் காதுக்குள் வந்து இரைவது போல் சத்தம் போட்டனர்.

தானே நிலைமையை நேரில் கண்டறிய மகாதேவை எல்லைப் பகுதிக்கு அனுப்பினேன். *3* அல்லது *4* நாட்கள் அவர் அங்கு இருப்பார்.

வைஸ்ராயுடன் உரையாடல் இனியதாய் இருந்தது. ஆனால் முடிவு ஒன்றும் ஏற்படவில்லை. முடிவு காண்பது, அதன் நோக்கமல்ல. கருத்துக்களைப் பரிமாறவே பேச்சு நடத்தினோம். நாம் சந்திக்கும் போது மேலும் விவரங்கள் கூறுவேன்.

சிம்லாவில் உன் உடல் நலனைக் காத்துக் கொள்ள வேண்டும். இடுப்புக் குளிப்பு, உடற்பயிற்சி முதலியவற்றைச் செய்ய வேண்டும். மேசையுடன் கட்டுண்டு கிடப்பது பெரும் குற்றம். டென்னிஸ் உனக்கு ஒத்துக் கொண்டால், தினமும் விளையாடு.

சுசீலா டில்லியில் தங்கியுள்ளாள். அவள் உனக்கு எழுதியிருக்க வேண்டும்.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

## 154

சேகான்,
*22-5-1938*

என் அன்பார்ந்த முட்டாள்,

ஒரு பட்டதாரி இளைஞரைப் பற்றி நீ எழுதியிருந்த கடிதத்தைக் கல்கத்தா முகவரிக்கு அனுப்பியிருந்தாய். அது ஊர் ஊராகச் சுற்றி விட்டு, நேற்றுத் தான் கிடைத்தது. இரயிலில் நீ எழுதிய கடிதம் ஒழுங்காகக் கிடைத்தது; அதைப் படிப்பதில் சிரமமில்லை. உன் *19*ந் தேதிக் கடிதம் இப்பொழுது வந்துள்ளது.

சேகானுக்கு வந்தபின், உடல் நலமாகவும் தெம்பாகவும் இருக்கின்றது. ஆனால் உள்ளத்திற்கு ஓய்வு எனக்குத் தேவை. உள்ளத்தை அதிக வேலை வருத்தியுள்ளது. அந்த ஓய்வை இங்குதான் நான் பெற முடியுமென்று அனுபவத்திலிருந்து அறிந்துள்ளேன்.

வெப்பம் கடுமையாகத் தான் இருக்கின்றது. ஆனால் மற்றவர்கள் அனுபவிப்பதை நானும் பங்கு கொள்கிறேன் என்ற மகிழ்ச்சி ஏற்பட்டுள்ளது. இனி தினமும் ஒருசில மணி நேரம் பேசா நோன்பு மேற்கொள்ள உத்தேசித்துள்ளேன்.

என் எடை நேற்று *106* ஆக இருந்தது. என் உடல்நலனை ஓரளவு காத்துக் கொள்ள முடிந்ததற்கு, இந்த இழப்பு ஒரு பொருட்டல்ல.

ஆம்; மைசூர் அறிக்கை மிகச் சிறப்பாக இருந்தது. காரியக் கமிட்டித் தீர்மானம் உனக்குப் பிடித்திருக்கும். நீ மைசூருக்குச் சென்றது நல்லதாயிற்று.

நீ எதை அனுப்பினாலும், அதை மகிழ்ச்சியுடன் திருத்தி அனுப்புவேன்.

பிரித்வி சிங் சம்பவத்தில் என் சாமர்த்தியம் பற்றி நீ என்ன நினைக்கிறாய்?

ஜின்னாவுக்கும் எனக்குமிடையே நடந்தது பற்றிய குறிப்பின் படியை நான் உனக்கு அனுப்ப வேண்டும். அவர் மிகக் கடுமையான பேர்வழி. லீகின் மற்ற உறுப்பினரும் இதே தன்மையினராயின், சமரச முடிவு காண்பதற்கான சாத்தியக் கூறுகளே இருக்காது. ஆனால் ஒருதலையாய் ஒரு தீர்வு காண வழி இருக்கும். முடிவுகள் ஒரு தலையாகவும் இருக்கலாம். இன்றுள்ள சூழ்நிலையில், ஒரு தலையான முடிவு காண்பதே, நிலைமையைச் சமாளிக்கச் சிறந்த வழியாக இருக்காதா என்ற முறையில் நான் சிந்தித்து வருகின்றேன், ஆனால் இரு தரப்பாரிடையும் சமரசம் காண எல்லா முயற்சிகளும் செய்ய வேண்டும்.

மிர்ஸாவிற்கு நான் இன்னும் எழுதவில்லை. இன்னும் ஓரிரண்டு நாட்களில் நான் அவருக்கு எழுதுவேன். என்னைப் பொறுத்தவரை, நீ சொல்வது சரியே. நீயும் மற்றவர்களும் வழிபாட்டின் மூலம் தான் எனக்கு உதவ முடியும். மேகத் திரை அகல்வது போல் தோன்றுகிறது. என் மனச் சுமையைக் குறைப்பதற்கு என்ன நடந்துவிட்டது என்பது எனக்கு விளங்கவில்லை. எப்படியும், நான் ஏன் கவலைப்படவேண்டும்? இறைவனின் வழிகள் பெரும் புதிராக இருக்கும்.

19 ந் தேதி ஜவாஹர்லாலுடன் ஒரு மணி நேரம் உரையாடினேன். உன் மதிப்பீடு தான் சரியானது. ஐரோப்பியப் பயணம் அவருக்கு நன்மை செய்யும். அவர் சமயத்தைப் பழிக்கின்ற போதிலும், இதயத்தின் அந்தரங்கத்தில் அவர் சமய உணர்வு கொண்டவரே. அவர் கீதையைப் படிக்கிறார். தம் படுக்கை அறையைப் புத்தர் தலையின் உருவத்தைக் கொண்டு அணி செய்கிறார். அவர் என்ன செய்தாலும், அவர் எங்கிருந்தாலும், அவருக்கு எல்லாம் இனிதே நடக்கும்.

உன் கடிதத்தை ஜின்னாவிடம் நான் கொடுக்கவில்லை என்று நான் உன்னிடம் சொன்னேனா? அதை நான் எடுத்துச் செல்லவில்லை. என்னைப் பற்றிக் குறிப்பிடாமல், பிரச்னையைக் குறிப்பதோடு அக்கடிதம் நின்றிருக்க வேண்டும். ஆனால் அது ஒரு பொருட்டல்ல.

நீ எப்படி இருக்கின்றாய்? சருமப்படை எப்படி இருக்கின்றது? தொண்டை எப்படி இருக்கின்றது?

அன்பு,

கொடுங்கோலன்

## 155

சேகான், வார்தா
*17—6—1938*

என் அன்பார்ந்த முட்டாளே,

தங்கள் விடுதலைப் போராட்டத்தில், நம் பெண்கள் அயல் நாட்டு உதவியை நாடுவதென்ற கருத்து எப்பொழுதுமே எனக்குப் பிடித்தமானதல்ல. ஆகவே தான் இந்தியப் பெண்களின் நிலையையோ குறைகளையோ லீக் விசாரிப்பதை நான் விரும்பவில்லை. இத்தகைய பிரசாரத்தின் பயனாக, அவர்கள் கவனம் அவர்களிடமிருந்தே மாறிக் கலைகிறது. அவர்கள் போராட்டம், இந்திய ஆண்களோடு கூட அல்ல. தங்களுக்குள்ளாகவும் தங்களுடனும் தான் அவர்கள் போராட வேண்டும். வட்ட மேசை மாநாட்டில் பெண்களுக்காக நடத்திய போராட்டம், எனக்கு என்றுமே பிடிக்கவில்லை. என் கருத்துக்கள் இவ்வளவு முற்போக்காக இருக்கையில், லீக் என்ன செய்கிறது, செய்யவில்லை என்பதை நான் ஒரு பொருட்டாக மதிக்காததை நீ விளங்கிக் கொள்ளலாம். ஆனால் அவர்கள் கருத்தை நான் பரிசீலனை செய்ய வேண்டுமென்றால், அவர்கள் குறிப்பிட்ட ஒரு நடவடிக்கை எடுப்பதற்குப் பொருத்தமான காரணங்கள் எத்தனையோ இருக்கும்போது, நிறத் துவேஷத்தால் அவர்கள் உந்தப் பெற்றார்கள் என்று கருத நான் மறுக்கின்றேன். இது உனக்குப் புரிகிறதோ, என்னவோ. இப்பொழுது உடனடியாக நீ இதை ஏற்க மறுக்கலாம்; ஆனால் முடிவில் அதை நீ ஏற்றுக் கொள்வாய். ஏனெனில் என் வாதத்தின் நியாயத்தை நான் உறுதியாக நம்புகிறேன். தென்னாப்பிரிக்கப் பெண்கள் தங்கள் துணிவான செயலின் மூலமாகவே வீறுகொண்டு எழுந்தனர். அது போலவே, பெண்கள், கிராமத்துப் பெண்கள் இங்கும் எழுச்சியுறவில்லையா?

பார்க்கின்சன் குறிப்பு பற்றி ஆஷாலதாவுடன் நீண்ட நேரம் உரையாடினேன். என் கருத்தை அவள் விளங்கிக் கொண்டாள் என்று எண்ணுகிறேன்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 156

சேகான், வார்தா,
*23-6-1938*

என் அன்புள்ள முட்டாள்,

என் கொள்கைப்படி, பகிஷ்காரம் முற்றிலும் சாத்துவிகமான நடவடிக்கையாக இருக்கும். அது அவ்வாறு அமையும்போது,

கடமை ஆகிவிடுகிறது. ஆகவே ஜப்பான் செய்வது முற்றிலும் தவறு என்று எண்ணுபவர்களுக்கு, ஜப்பானியப் பொருட்களைப் பகிஷ்காரம் செய்வது கடமையாகிறது. கடமையான பின்பு, விளைவுகளை எண்ணிப் பார்ப்பதற்கு இடமில்லை. ஒருவருக்குத் துணை கிடைத்தாலும் சரி, கிடைக்காவிட்டாலும் சரி, கடமையைச் செய்தாக வேண்டும். இப்பொருள் பற்றி ஸ்டான்லி ஜோன்ஸ் ஆய்வுரையை நீ பார்த்திருக்கிறாயா?

இன்று மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 157

சேகான்,
*8-7-1938*

*திருத்தப்படாதது.*

என் அன்பார்ந்த முட்டாள்,

என்ன கேள்வி? பம்பாய்க்கு வார்தா வழியாகத்தான் நீ செல்ல வேண்டும். அப்படியென்றால், காரியக்கமிட்டி கூடும்போது நீ இங்கே இருக்கக் கூடும். நிறையப் பேர் இருக்கும் ஓர் அறையில் நீ இருக்க வேண்டி வரும். அதை நீ பொருட்படுத்த மாட்டாய்.

அவ்வப்போது நீ குரலை இழந்து விடுவது எப்படி என்பது விளங்கவில்லை. உன்னை எவரும் தொந்திரவு செய்ய முடியாத ஓரிடத்திற்கு நீ செல்ல வேண்டும். அத்தகைய இடம் சேகான் தானே? இப்பொழுது உன் தேவைக்கேற்றவாறு நான் ஒரு குடிலைக் கட்டவும் முடியும்.

S-க்கு J-யின் கடிதத்தை நீ பார்த்திருப்பாய். பேச்சு வார்த்தைகள் நின்றுவிட்டன என்று நம்புகிறேன். பதில் காரியக் கமிட்டியிலிருந்து செல்ல வேண்டும்.

ஆம், ஜவாஹர்லால் பயணம் மிகச் சிறப்பாக அமைந்துள்ளது. மேனாடுகளில் இந்தியாவின் மதிப்பை அவர் உயர்த்தி வருகிறார்.

உன் சமாதான அணியில் நீ ஒருத்திதான் உறுப்பினராய் இருப்பதும் நல்லதுக்குத்தான் என்றெண்ணுகிறேன். இந்தத் தொண்டுக்கு ஆயிரக்கணக்கானவர் தேவையில்லை. ஒரு சிலர் உண்மையாகத் தங்களை இத்தொண்டிற்கு அர்ப்பணித்து விட்டால், வெற்றி கிட்டுவது நிச்சயம்.

நீ சொல்வது தவறு. எனக்கு முப்பது வயதுகூட முடியாத போதே, நான் பெண்களிடையே வேலை செய்யத் தொடங்கினேன்.

தென்னப்பிரிக்காவில் என்னைத் தெரியாத பெண் ஒருத்தி கூட இருக்க மாட்டாள். ஆனல் என் தொண்டு ஏழைகளிலும் ஏழைகளுக்கு இடையேதான் இருந்தது. அறிவாளிகளை நான் கவர இயலவில்லை. எப்பொழுதுமே என் பேச்சு, இதயத்திலிருந்து இதயத்திற்குத்தான். அறிவாளிகள் மத்தியில் நான் எப்பொழுதும் நிம்மதியாக இருந்ததில்லை. ஆகவே உன் பொதுப்படையான கூற்று பொருத்தமற்றது. பெண்களிடையே அறிவாளிகளை நான் ஒன்று திரட்டாததற்கு நீ என்னைக் குறை கூற முடியாது. அதற்கான ஆற்றல் என்னிடமில்லை. மேலும் என் இயக்க முறைகள், வழக்கமான முறைகளுக்கு மாறுபட்டவை; அவற்றைவிட எப்பொழுதும் உயர்ந்தவை என்று கூறமுடியாது. சாதனையாக எடுத்துக் காட்டக் குறிப்பாக ஒன்றுமில்லை என்றுதான் நான் கூறுகிறேன். ஆனல் ஏழைகளை நான் அணுகும்போது, அவர்கள் என்னை ஆர்வத்துடன் வரவேற்க மாட்டார்கள் என்ற அச்சம் எனக்கு ஒருபோதும் இருந்ததில்லை; அது போலவே ஏழைப் பெண்களை நான் அணுகும் போதும் அந்த அச்சம் ஏற்படுவதில்லை. அவர்களுக்கும் எனக்கும் இடையே, கண்ணுக்குப் புலப்படாத ஒரு பிணைப்பு உண்டு. நான் அனுபவித்து வரும் வேதனை உனக்கு ஏன் விளங்கவில்லை? பெண்ணினத்திற்காகத்தானே, நான் பாடுபடுகிறேன். அவர்களுக்கும், அவர்கள் மூலம் மனித இனம் முழுவதற்கும், இன்னும் அதிக சேவை செய்யப்போதிய தூய்மை வேண்டுமென்றுதான் என் ஆன்மாவை நான் வருத்திக் கொண்டிருக்கிறேன். என் உயிர்நாடியான அகிம்சை, இப்பொறுப்புகளை எனக்குத் தருகிறது.

நீ நலமாக இருக்கின்ருய் என்று உன் அடுத்த கடிதத்தில் கூறுவாயென்று எதிர்பார்க்கிறேன்.

அன்பு,

பாபு

## 158

என் அன்புள்ள முட்டாள்,

உன் 11ந் தேதிக் கடிதம் எவ்வளவு சோர்வாகவும் வருத்தமாகவும் உள்ளது. நான் மகிழ்ச்சியாக இருக்கின்றேன். நீ காரணமின்றி வருத்தப்படுகிருய். நீ இங்கு வரும்போது, உன் மடமையை எண்ணி நீயே சிரிப்பாய். எனக்குத் துன்பம் எதுவும் எஞ்சியிருந்தாலும், அது மிகவும் மேல் வாரியானது. என் மன அமைதியை, எதுவும், எவரும், நிரந்தரமாகப் பறித்து விட முடியாது. என் அனுபவங்களால் நான் பாழாகிவிட்டேன் என்று நீ எண்ணினல், என்னை நீ அறியவில்லை என்று தான் கூறுவேன். தூய்மையாக உண்மையான முயற்சி செய்தால், அது என்னைப் பலப்படுத்தி எனக்கு மேலும் இன்பம் தான் ஊட்டும். உன் கற்பனை கட்டுக்கடங்காமல் திரிய நீ இடம் கொடுத்தால், உனக்கு நான் எப்படி உதவ முடியும்?

பெண்களைப் பொறுத்தவரை, நீ மன்னிப்புக் கேட்க வேண்டும். பெண்களிடையே அறிவாளிகளாய் உள்ளவர்களை என்னல் ஒன்று திரட்ட இயலவில்லை. ஆண்களிடையேயும், அறிவாளிகளைத் தனியாக நான் ஒன்று திரட்டவில்லை. ஆனல் இதைப் பற்றி வாதம் செய்வதற்கு இடமில்லை. பெண்களிடையே இயக்கத்தைப் பரப்பும் பணியை நான் புறக்கணித்துவிட்டேன் என்ற குற்றச் சாட்டை நான் ஏற்றுக் கொள்ள முடியாது. அதை இன்னும் சிறப்பான முறையில் செய்வதற்கான தகுதி என்னிடம் இல்லை என்றுவேண்டுமானல் சொல்லலாம். ஆனல் அது என்மேல் குற்றச்சாட்டு ஆகாது. எப்படியும் நீ என்மேல் புகார் செய்வது பற்றி நான் வருந்தவில்லை. அது எனக்கு ஒருவகையில் பிடித்தமாகவே உள்ளது. சில பிரச்னைகளில், நம்மிடையே கருத்து வேறுபாடும் உண்டு என்பதை அது காட்டுகிறது. அவ்வாறு ஏன் இருக்கக்கூடாது? எல்லாவற்றிலும் கருத்து ஒற்றுமை இருக்கவேண்டுமென உண்மை அன்பு வற்புறுத்தவில்லை. ஆனல் இதில் கூட நான், இதுவரை சாதித்துள்ளதைவிடச் சிறப்பாகச் சாதித்திருக்க முடியாதென்பதை உனக்கு உணர்த்த முடியுமென்று நம்புகிறேன். பிரம்மச்சரியத்தில் நான் கொண்டுள்ள ஈடுபாட்டுக்கு, அதுதான் பொருள். பெண்ணினத்திடம் எனக்கு உண்மையான அன்பு இருக்குமானல் நான் முற்றிலும் தூய்மையாக இருக்க வேண்டும்.

அன்பு,

கொடுங்கோலன்

சீமை வாதமைப் பழங்கள் வந்தன—அனைத்தும் கெட்டுப் போயிருந்தன, ஆப்பிள்கள் வந்துள்ளன. அவற்றை நான் நிச்சயம் சாப்பிடுவேன். நீ விரைவில் நலமடைய வேண்டும்.

## 159

*23—7—'38.*

என் அன்புள்ள அமிருத்,

தயவுசெய்து இன்றிரவு வராதே. இன்று மழைபெய்து ஒரே மோசமாக இருக்கிறது. ஈரம், ஈரம், எல்லா இடங்களிலும் ஈரம். நாளை நீ எப்படியும் வரவேண்டும்—உனக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டாலோ, அல்லது இப்பொழுது பெய்வதுபோல் கனத்த மழை பெய்தாலோ ஒழிய, மூலையில் இடம் உனக்காக ஒதுக்கப்பட்டிருக்கிறது.

அன்பு,

பாபு

## 160

*20—8—'38.*

என் அன்புள்ள முட்டாள்,

மகன்வாடியில் எனக்கு ஒரு தந்தி காத்துக்கொண்டிருக்கும். நீ அரசின் விருந்தாளியாக இருப்பாயென்று நேற்று கேள்விப்பட்டேன். என் கடிதம் ஒழுங்காக உன்னிடம் வந்து சேர்ந்திருக்குமென்று நம்புகிறேன்.

பியாரிலால் உடல்நிலையில் இன்று நல்ல முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. நேற்று இந்த நேரத்தில் (காலை 8 மணி) வெப்ப நிலை 103° ஆக இருந்ததற்கு மாறாக இன்று 101° தான் இருக்கிறது. அவருக்கு நன்கு குணமாகிவிட்டால், அது பெரிய நன்மையாகும்.

நீ அனைத்தையும் ஒழுங்காக ஏற்பாடுசெய்துகொள்வாய் என்பதில் எனக்கு ஐயமில்லை. திருவாங்கூர் தேசிய காங்கிரஸின் தலைவர் நேற்று என்னைப் பார்க்க வந்திருந்தார். நான் மௌனமாக இருந்தேன். அவர் மிகவும் திறமையானவர். மிக இனிய பண்புடன் அவர் பேசினார்.

நீ உடல் நலனைக் காத்துக்கொள்வாயென்றும், நேரமிருந்தால் குமரிமுனைக்குச் சென்று வருவாயென்றும் நம்புகிறேன். திரும்பும் வழியில் மகரிஷியைப் பார்க்கத் திருவண்ணாமலையில் ஒருநாள் தங்க விரும்புவாயா? இன்று காலை என் இரத்த அழுத்தம் 160-100 ஆக இருந்தது.

**கொடுங்கோலன்**

(சர். சி. பிக்கு)

செப்டம்பர், *1938.*

அன்புள்ள நண்பரே,

R...க்கும், அவர்மூலம் சமஸ்தான காங்கிரசுக்கும் சிறப்பாக வழி காட்டவும், அரசுக்கும் மக்களுக்கும் இடையே பூசலைத் தவிர்ப்பது சாத்தியமானால் அவ்வாறு செய்யவும், நிலைமையை ஆராயவும், நட்பு முறையில் உதவவும் நான் ஸ்ரீ ராஜ்குமாரி அமிருத் கௌரை அனுப்புகின்றேன். அவர் இங்கிருந்து நாளை புறப்பட முடியுமென்று எதிர் பார்க்கிறார். சென்னையில் ஒருநாள் தங்கிவிட்டுத் திருவிதாங்கூர் செல்வார். ராஜகுமாரி பொதுக்கூட்டங்களில் பேசவோ, பொதுப் பிரசாரம் செய்யவோ மாட்டார். அவரது தொண்டை நன்கு பயன்படுத்திக் கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

தங்கள் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி.**

## 161

*6-9-'38.*

இது உன்னைத் திட்டுவதற்கல்ல. என்மேலுள்ள அன்பினால், நல்லெண்ணத்தில்தான் இதையெல்லாம் செய்திருக்கின்றாய். ஆனால் செய்யும் முறையை நாம் அறியாவிடில், நம் அன்பு அனைத்தும் விரயமாகக் கூடும். அன்பு காத்திருக்கும்; வழிபாட்டில் ஈடுபடும்; அளவற்ற பொறுமை காட்டும். நல்லது செய்ய நீ பொறுமை இழந்து துடிக்கின்றாய். இதை நீ விளங்கிக்கொண்டால், எல்லையற்ற அன்பும் அனுதாபமும் கொண்ட ஒரு நண்பனை என்னிடம் கண்டு, ஆனந்தக்கூத்து ஆடுவாய்.

பாபு

## 162

*29—9—38.*

என் அன்புள்ள முட்டாள்,

நீ கடிதம் எழுதுவதில் எப்பொழுதும்போல் அன்பாக இருந்துள்ளாய். இத்தனை பேருடன் பழக உனக்கு வாய்ப்பு கிட்டியது குறித்து மகிழ்ச்சி. உன் விரிவான கடிதத்திற்குக் காத்துக்கொண்டிருக்கின்றேன்.

மகாதேவ் குணமடைந்து வருகிறார். என் உடல்நலன் முதல் தரமாக உள்ளது. நிறைய வேலையை முடித்து வருகிறேன். சுசீலா சுரத்தில் படுத்துவிட்டாள். இன்று அவள் உடல் நிலை பரவாயில்லை.

காரியக்கமிட்டியின் கூட்டம் தொடர்ந்து நடைபெறுவதால், இங்கு நான் தங்க வேண்டியுள்ளது. நீ வரும்போது கூட நான் இங்கேயே இருக்கலாம்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 163

பெஷாவர்,
*6-10-1938*

என் அன்புள்ள முட்டாள்,

நாங்கள் நலமாக வந்து சேர்ந்தோம். இரயில் பயணத்தின் போது இரத்த அழுத்தம் கெடவில்லை.

பெஷாவர் முகவரிக்குக் கடிதங்களை அனுப்புவது நலம்.

இங்கு இன்னும் குளிர் தொடங்கவில்லை. இரவுகள் மிகவும் இதமாக உள்ளன.

என் பேசா நோன்பு எனக்குத் தொடர்ந்து அமைதியைத் தருகிறது. நேரத்தையும் பலத்தையும் நிரம்ப மிச்சப்படுத்துகிறது.

அன்பு,

கொடுங்கோலன்

# 164

*உ'சாய்,*
*14-10-'38.*

என் அன்புள்ள முட்டாள்,

ஒரே நாளில் மூன்று கடிதங்கள்! இன்ப மயம்தான்.

நீ எடுத்துக்கொள்ளும் எந்த வேலையிலும் உன் ஆன்மாவைக் கொட்டுகிறாய் என்பதை நான் அறியவில்லை என்று நீ எப்படி அறிவாய்? ஆனால் அது மட்டும் போதாது. அந்த முயற்சிக்கு விவேகம் ஆதாரமாய் அமையவேண்டும். இமாலய மலைமேல் ஏறும் முயற்சியில் நீ உன் ஆன்மாவைக் கொட்டினால், அந்த முயற்சியில் விவேகம் இருக்குமா? ஆனால் முட்டாள்தனமும் விவேகமும் எப்பொழுதும் ஒன்றாகச் சென்றதில்லை. உனக்கு விவேகம் இருந்திருந்தால், இவ்வளவு போதும், இதற்குமேல் வேண்டாம் என்று நீ J—இடம் கூறியிருப்பாய். உன் நிதானத்தால் அவருக்கும் நன்மை ஏற்பட்டிருக்கும்; உன் உடலும் கெட்டிருக்காது. இன்றையப் பாடம் இத்துடன் போதும்.

கத்தியாவாட்பற்றி உன் குறிப்புகளைத் திருப்பி அனுப்ப வேண்டுமென்று நீ விரும்பினாய் என்பது எனக்குத் தெரியாது. பல்வேறு மாநிலங்களைப் பற்றிய குறிப்பை நேற்றுத்தான் ஜோஷிக்கு அனுப்பினேன். அது மிகவும் பயனுள்ளதாகவும் செயல் முறைக்கு ஏற்றதாகவும் இருந்தது; ஆகவே அவருக்கு அனுப்புவது நல்லதென்று எண்ணினேன். அதை N—க்கும் காட்டிவிட்டுப் பின் பாபாவுக்கு அவர் அனுப்ப வேண்டுமென்று சொல்லியிருந்தேன். இப்பொழுது மூலத்தை உனக்குத் திருப்பி அனுப்ப வேண்டுமென்று சொல்லியிருக்கிறேன்.

தனிப்பார்வைக்கு எழுதப்பட்டிருந்த கடிதத்தை நேற்றுக் கிழித்துவிட்டேன். என் மனக்கண்ணில் அது பதிந்துள்ளது. அது நன்றாகவும் சுருக்கமாகவும் இருந்தது. புதிதாக நீ ஒன்றும் கூறவில்லை. ஆனால் நீ வலியுறுத்தியது அவசியமே. இறப்பது அவர்கள் விதியாயின், எதுவும் அவர்களைக் காக்க முடியாது.

மூன்றாவது கடிதம் என்னிடம் உள்ளது. 'ஹரிஜன்' இதழில் வெளியிடும் அளவுக்கு அது அனைத்திந்தியாவுக்கும் பயனுள்ளதாக இருக்குமா என்று எண்ணிக் கொண்டிருக்கின்றேன். அதைத்

திருப்பி அனுப்ப வேண்டாமே? வேண்டுமென்று விரும்புகிருயா? உன் சுற்றுப் பயணத்தின் போது, சிறப்பானவர் எவரையும் கண்டாயா? நாரணதாஸ் பற்றி உன் மதிப்பீடு என்ன?

மகாதேவ் பற்றி நான் கவலைப்படவில்லை. அவ்வாறு கவலைப் படுவது உன் அன்பையும், தாதி என்ற முறையில் உன் திறமையையும் சந்தேகிப்பதாகும். டென்னிஸ் விளையாடும்படி அவரை அழை. வேடிக்கைக்குச் சொல்லவில்லை. அதில் அவர் திறமையைக் காட்ட முடியாது. ஆனல் அந்தச் சூழ்நிலையில், அந்த விளையாட்டு அவருக்கு நன்மை பயக்கக்கூடும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 165

பெஷாவர்,
*16-10-1938*

என் அன்புள்ள முட்டாள்,

பெஷாவருக்கு நான் திரும்பிய போது, இரண்டு கடிதங்கள் எனக்காகக் காத்துக் கொண்டிருந்தன. வலது கை சிறிது ஓய்வு பெற வேண்டுமென்று உணர்கிறேன். தாங்க முடிந்ததற்கு மேலாகவே, அதற்கு வேலையுள்ளது.

என் உடல் நலன் இன்னமும் சிறப்பாகவே உள்ளது. சுற்றுப் பயணத்தின்போது எப்படி இருக்கும் என்பதை அறியேன். பேசா நோன்பு எனக்கு உதவி செய்யும்.

J-இன் கடிதம், அவரைப் போலவே இருக்கிறது.

சுக்லா இறந்துவிட்டாரென்று நேற்று எனக்குத் தந்தி வந்ததென்று மகாதேவிடம் கூறு. அவர் என் மிகப் பழைய நண்பர்களில் ஒருவர்—இங்கிலாந்து மாணவப் பருவ காலத்திலிருந்து. ராஜ்கோட்டில் அவர் வழக்கறிஞர் தொழில் பயின்று வந்தார்.

சேகானில் இன்னும் மழை பெய்து கொண்டிருக்கிறது. இன்னும் இங்கு காய்ந்து கொண்டுதான் இருக்கின்றது.

காந்தியின் கடிதங்களை இத்துடன் மகாதேவுக்கு அனுப்பியுள்ளேன். அவை மிகவும் சுவையாக உள்ளன. அவற்றில் சொல்லப்பட்டுள்ளதன் சுருக்கத்தை மகாதேவிடமிருந்து கேட்டறிந்து கொள்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 166

சாவாலி,
*17-10-1938*

என் அன்புள்ள முட்டாள்,

என் அன்பைத் தெரிவிக்கவே இதை எழுதுகிறேன். சுற்றுப் பயணத்தின் போது நேரத்தையும் பலத்தையும் நான் மிச்சப்படுத்த வேண்டும்.

ஐரோப்பிய நிலைமை குறித்த இரண்டாவது கட்டுரை பற்றி உன் கருத்தைத் தெரிவி.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 167

*20-10-'1938*

என் அன்புள்ள முட்டாள்,

என் தபால் பை காலியாகவே வந்து கொண்டிருக்கின்றது. நான்கு நாட்களாக உன்னிடமிருந்து செய்தி எதுவும் வரவில்லை. மகாதேவ் நலமாக இருப்பார் என்பதை அறிவேன். இருந்தபோதிலும், கடிதத்தைப் பார்க்கும்போது தான் நிம்மதி ஏற்படுகிறது. பாவின் உடல்நிலை இம்முறை எனக்குக் கவலை அளித்தது; இப்பொழுது அவள் ஆபத்திலிருந்து மீண்டுவிட்டாள். ஒரு வேளை மகாதேவுக்கும் செய்தி தனியாகக் கிடைக்கிறதென்று எண்ணுகிறேன்.

இங்கு எல்லாம் இனிதே உள்ளது. குதாய் கித்மத்கார்களுடன் நான் நல்ல உரையாடல்கள் நடத்தி வருகின்றேன். நான் அவர்களுக்கு நீண்ட உபதேசங்கள் செய்து வருகின்றேன் என்பதுதான் பொருத்தமான வர்ணனையாகும். அந்த உரைகளைக் கான்சாகிப் இணையற்ற ஆர்வத்துடன் மொழி பெயர்த்து வருகிறார். அவர் தம் ஆன்மாவையே அப்பணியில் கொட்டுகிறார். மௌனம் என் இயல்புடன் இரண்டறக் கலந்துவிட்டது.

அன்பு,

**முட்டாள்**

நாளை உத்மன்சாயிலிருந்து புறப்படுகிறோம். இப்பயணத்தின் போது இங்கு திரும்பி வரமாட்டோம்.

## 168

டேரா,
*28-10-1938*

என் அன்புள்ள முட்டாள்,

இன்று ஒருவகையில் சோம்பல் நிறைந்த நாள்; இன்னொரு வகையில் வேலை நெருக்கடி மிகுந்த நாள்.

சில கதர் விரிப்புகளை அனுப்பு என்று நான் ஒரு கடிதத்தில் கேட்டிருந்தேனே, அக்கடிதம் கிடைத்ததா? உனக்குக் கடிதம் கிடைத்திருந்து நீ அவற்றை அனுப்ப மறந்திருந்தாலும் சரி, அக்கடிதம் உனக்குக் கிடைக்கவில்லை என்றாலும் சரி, அவற்றை இப்பொழுது அனுப்பாதே. சந்திரசங்கர் நான்கு விரிப்புகள் அனுப்பியுள்ளார். அவை எனக்குப் போதும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 169

டேரா,
*29-10-1938*

என் அன்புள்ள முட்டாள்,

நான் தினமும் எழுதுவேனென்று எதிர்பார்க்கவில்லை என்று நீங்கள் இருவரும் கூறுகின்ற போதிலும், என்னிடமிருந்து செய்தியை எதிர்பார்க்கிறீர்கள்.

என் உடல்நிலை பற்றிச் செய்தி ஒன்றுமில்லை. இன்றுவிட நலமாக, நான் என்றும் இருந்ததில்லை. தட்ப நிலை, உணவு, அமைதி அனைத்தும் ஒன்று சேர்ந்து இந்தப் பலனைத் தந்துள்ளன. அம்துல் சலாம் தவிர, நான் சண்டை போடுவதற்கு இங்கு யாருமில்லை. ஆனால் என் பேசா நோன்பின் பயனாக அதுவும் கட்டுக்குள் அடங்கியுள்ளது.

மேலே காணும் வரிகளை எழுதி முடித்தபின் ஏதோ குறுக்கீடு நேரிட்டது. இடது கையால் நான் எழுதும்போது, மூளை உள்பட எல்லாமே மெதுவாகத் தான் இயங்குகிறது. அதுவும் நல்லது தான்.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 170

*31-10-1938*

என் அன்புள்ள முட்டாள்,

நாங்கள் புறப்படத் தயாராக இருக்கும்போது இதை எழுது கிறேன்.

வானொலிச் செய்திக்கும் பத்திரிகைச் செய்திக்கும் என்ன வேறுபாடு? இரண்டுமே நம்ப முடியாதவைதான். என் உடல் நல னில் நலிவு எதுவும் ஏற்படவில்லை. மாரிகாலத்தின் நடுவில் கூட நான் தழைக்க முடியுமென்று எண்ணுகிறேன். ஆனால் ஒருவேளை நான் கொண்டிருக்கும் உற்சாகம் அளவுக்கு மீறியதாக இருக்கலாம். மற்ற செய்திகள் மகாதேவிடமிருந்து.

அன்பு,

போர்வீரன் என்ற கொடுங்கோலன் என்ற கொள்ளைக்காரன்;
இன்னுமென்ன?

# 171

ஹரிபூர்,
*7-11-1938.*

என் அன்புள்ள முட்டாள்,

பர்மாவில் மீண்டும் கலகங்கள் ஏற்பட்டுள்ளன என்பதைப் பார்த்தாயா? அது மிகவும் வருந்தத்தக்கது. சந்நியாசிகள் அவற் றில் முக்கிய பங்கு எடுத்துள்ளதன் இரகசியத்தை நாம் எப்பொழு துமே புரிந்துகொள்ள முடியாதென்று எண்ணுகிறேன்.

ஹஸான் அப்தாலில் உள்ள புகழ்பெற்ற குருத்வாரத்திற்கு நாங்கள் சென்றோம். நீ இதுவரை போகவில்லையென்றால், அங்கு நிச்சயம் போகவேண்டும். கட்டிடம் கம்பீரமாக இருக்கிறது; ஆனால் நானக் குருவின் ஆவியை அங்கு காணோம்.

நேற்று உன்னிடமிருந்து கடிதம் எதுவும் வரவில்லை. அபத்தா பாத்தில் உன் கடிதம் கிடைக்குமென்று எதிர்பார்க்கின்றேன்.

தட்சசீலாவில் 9ந் தேதி நாங்கள் இரயில் ஏறுகிறோம்.

அன்பு,

போர்வீரன்

# 172

சேகான், வார்தா,
*14—11—1938.*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம் கிடைத்தது. உன் நேற்றையக் கடிதத்தை நான் தவருகப் புரிந்து கொண்டிருந்தால் நல்லது. நீ தந்ததாக நான் எண்ணும் கடுமையான அடிக்காக, உன்மேல் எனக்கு அன்பு அதிகமாகத்தான் பெருகியுள்ளது. புயல்களேயும் தப்பெண்ணப் பூசல்களேயும் தாங்கிக் கொள்ளக்கூடியது என் அன்பு. நான் அதை ஏற்றுக்கொண்ட விதம், உன்னே வருத்தியது என்பது குறித்துத்தான் நான் வேதனேப்படுகிறேன். அன்புக்குரியவர்கள் விட்டுச் செல்லும் தழும்புகள் நெடுநாள் நிலேப்பதில்லே; அவை உண்டானவுடனே குணமாகி விடுகின்றன. இல்லாவிடில், என் அன்பு குன்றிவிட்டதாகும். ஆகவே உன்னேப் பொறுத்தவரை, நீ எண்ணுத உட்பொருளே உன் கடிதத்தில் புகுத்தியதற்காக என் மடமையையும், அறிவீனத்தையும், நம்பிக்கைக் குறைவையும் கண்டு நீ நகைப்பாய் என்று எதிர்பார்க்கிறேன். தற்காலிகமான இந்த நிகழ்ச்சிபற்றி நீ உன்னே அலட்டிக் கொள்ளக் கூடாது.

ஆரியநாயகம் நடத்திய கூட்டத்திற்கு நீ வர இயலவில்லே என்பதைப் புரிந்து கொள்கிறேன். அடுத்த ஆண்டு உன் வேலேத் திட்டம், இன்னும் ஒழுங்காக அமையப் பெறும் என்று எதிர் பார்க்கலாம்.

திருவிதாங்கூர் தூதுக் குழுவின் செயல்கள்பற்றி நான் உனக்கு நிச்சயம் எழுதுவேன்.

அன்பு,

**போர்வீரன்**

# 173

சேகான், வார்தா
*15—11—'38.*

என் அன்புள்ள முட்டாள்,

அட்டாடர்க் பற்றி நீ சொல்வது முழுதும் உண்மையே. பர்தாவை அவர் நீக்கியதுபற்றி, நீ பொதுக்கடிதம் ஒன்று ஏன் எழுதக்கூடாது?

**J.** திரும்பி வரும் வரை அகாதா அனேகமாக இங்கு இருப்பாள். அவள் நலமாகவே இருக்கிருள். மிக நிதானமாக, நாங்கள் பல பிரச்னேகளேப்பற்றிப் பேசிக் கொண்டிருந்தோம்.

மகாதேவ் 19ந் தேதி உன்னிடமிருந்து புறப்படுகிறாரென்று அறிகிறேன். உன் அன்பான கவனிப்புபற்றி அவர் பரவசம் அடைந்துள்ளார். திருவிதாங்கூர் தூதுக் குழு இப்பொழுது வரவிருக்கிறது. ஆகவே இதை நான் முடித்துக்கொள்ள வேண்டும்.

அன்பு,

**போர்வீரன்**

# 174

சேகான், வார்தா,
*21—11—1938.*

என் அன்புள்ள முட்டாள்,

இன்னும் சில நிமிடங்களில் ஜவாஹர்லால் இங்கு வருவார். அந்த சில நிமிட அவகாசத்தில், இதை அவசரமாக எழுதுகின்றேன். துன்பச் சாயல் இன்னும் உன் கடிதங்களில் தொடர்ந்து காணப்படுகிறது. நீண்டவையோ, சுருக்கமானவையோ, உன் கடிதங்கள் எனக்கு எப்பொழுதும் மகிழ்ச்சி அளிக்கின்றன. எவ்வளவு அதிக வேலைக்கிடையேயும் அவற்றைப் படித்து முடிக்கிறேன்.

கமால்பற்றிய உன் குறிப்பில் நான் சில திருத்தங்கள் செய்தேன். அவற்றை நீ பார்க்கவேண்டும். அவற்றிற்கு நீ ஆட்சேபம் சொல்ல மாட்டாய் என்பதை நான் அறிவேன்.

தன் கண்களின் சிகிச்சைக்காக மீரா பம்பாய்க்கு புதனன்று செல்வாள். அங்கிருந்து எல்லை மாகாணத்திற்குச் செல்வாள். அவள் அங்கு முதலில் செல்வது நல்லதென்று நினைக்கின்றேன்.

அன்பு,

**கொள்ளைக்காரன்**

# 175

சேகான் வார்தா,
*26—11—1938.*

என் அன்புள்ள முட்டாள்,

சிரமமில்லாமல் நன்றாக உறங்க முடிகிறதென்று நீ சொல்ல இயலும் வரை எனக்குத் திருப்தி ஏற்படாது.

நீ சொல்லியிருந்தபடி, இக்கடிதத்தை ஜலந்தருக்கு அனுப்புகிறேன்.

பார்னபாஸுக்கு நீ எழுதிய கடிதம் நன்ருக இருக்கிறது; ஆனல் மிகுந்த அவசரத்தில் எழுதப்பட்டுள்ளது. அவர்கள் ஆயிரக் கணக்கில் காங்கிரசில் சேரலாம். ஆனல் அவர்களைத் தனியாகப் பாதிக்கும் பல பிரச்னைகளை ஆலோசிக்கத் தனி அமைப்பு ஒன்றை அவர்கள் ஏன் வைத்துக்கொள்ளக் கூடாது? சமூக, சமய முன்னேற்றத்திற்கு அவர்களுக்கு ஓர் அமைப்பு அவசியம். அந்த அமைப்பு அவர்களுக்கு இல்லாவிடில், காங்கிரஸ்மீது அவர்களுக்குச் சலிப்பு ஏற்படக்கூடும். ஏனெனில் எல்லாத் துறைகளிலும் அவர்கள் முன்னேற்றத்திற்குக் காங்கிரஸ் உதவாது. ஆகவே அதைப்பற்றி நான் ஹரிஜன் இதழில் எழுதவில்லை. நீ இங்கு வரும்போது, இதைப்பற்றி என்னுடன் பேசவேண்டும். டோகாவை உனக்காக வைத்திருக்க வேண்டும் என்பது எனக்குத் தெரியாமல் போனதற்காக வருந்துகிறேன். ஆயினும், இந்து அதை அணிந்துகொள்வதை நீ பொருட்படுத்த மாட்டாயென்று நம்புகிறேன்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 176

சேகான், வார்தா,
*30-11-1938.*

என் அன்புள்ள முட்டாள்,

காலை *3-30* மணிக்குப் பின் நான் எழுதும் முதற்கடிதம் இதுதான்.

உன் பயணத் திட்டம் என்னிடம் உள்ளது. ஆகவே இதை டில்லிக்கு அனுப்புகிறேன்.

சிம்லாவை விட இங்கு மகாதேவ் இரவுகளைச் சிரமமின்றிக் கழிக்கின்ருர்; முன்னேற்றம் தொடர்ந்துள்ளது என்பதற்கு இது அறிகுறியாகும். சிம்லாவின் கடுமையான குளிர் அவருக்கு ஒத்துக்கொள்ளாமல் போயிருக்கலாம். இங்கு, முன்புபோல் அல்லாமல், அவர் திறந்த வெளியில் படுக்கிருர். இயங்லை மிதமாகத்தான் இருக்கின்றது. மூன்று நான்கு நாட்களாக நான் தாழ்வாரத்தில் படுத்தேன். வெளியில் வரவும் எனக்குச் சுசீலா அனுமதி அளித்துள்ளாள். இந்த அனுமதி எத்தனை நாளுக்கு நிலைக்கும் என்பது தெரியவில்லை.

மீரா சென்றது முதல் நான் ஒரு நாள் இரவு 7 மணி முதல் மறுநாள் பிற்பகல் 2 மணிவரை, பேசாநோன்பை மேற்கொண்டு வருகின்றேன். ஆகவே 5 மணி நேரம்தான் பேசுகிற வேலை.

ஐரோப்பா போவதென்று ஷம்மி இறுதியாக முடிவு செய்தால் நன்ருக இருக்கும். வெளியூர் செல்வது அவருக்கும் நல்லது. நீயும்,

அவரைப்பற்றிய கவலை இல்லாமல் என்னுடன் இருக்க முடியும். ஆனால் நாயை என்ன செய்வது என்று மகாதேவ் கேட்பார். குடும்பத்தின் மதிப்பு மிக்க அந்த உறுப்பினர், எவ்வளவு அன்புடனும் கவனத்துடனும் பராமரிக்கப்படுகிறார் என்பதை அவர் நன்கு சித்திரித்துள்ளார்.

அவுந்த் சமஸ்தானத்தின் அரசியல் சட்டத்தை உருவாக்குவதில் நான் இப்பொழுது ஈடுபட்டுள்ளேன். [1] இராஜாசாகிப் மகன், அருமையான பையன்.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 177

சேகான், வார்தா,
*19-12-38.*

என் அன்புள்ள முட்டாள்,

உனக்கு எழுத எனக்கு இதுவரை அவகாசம் கிடைக்கவில்லை.

எனக்காக நெய்யப்பட்டுள்ள கம்பளியை நான் கொடுத்துவிட மாட்டேன். நான் இப்பொழுது பயன்படுத்தி வருவது, புதிதா அல்லது பழையதா என்று எனக்குத் தெரியவில்லை. விசாரித்துப் புதியதை வாங்கிக்கொள்வேன். பழையதை என்ன செய்ய வேண்டும்?

அவுந்த் அரசியல் சட்டம் தயாரானவுடன், உனக்கு ஒரு படி நிச்சயமாக அனுப்பப்படும்.

கபூர்த்தலா சமஸ்தானத்தில் மக்களுக்குப் பொறுப்பான ஆட்சி நடக்கிறதென்றால், நீ அதன் முதல் அமைச்சராகப் பொறுப்பேற்று, அதன் எதிர் காலத்தையும் ஏன் உருவாக்கக்கூடாது. நீ இங்கு வரும்போது, இதைப் பற்றிப் பேசிக் கொள்ளலாம்.

ஜன. 1ந் தேதி நான் பார்தோலிக்குப் போகத்தான் வேண்டுமென நினைக்கிறேன். 7ந் தேதி அங்கு காரியக் கமிட்டி கூடுகிறது. ஆமதாபாத் வழியாக நீ வரவேண்டும். 3ந் தேதி நீ புறப்பட்டால் 6ந் தேதி பார்தோலியை அடைவாய். மேலும் எழுதுவதற்கு நேரமில்லை.

அன்பு,

**கொடுங்கோலன்**

---

1. காந்திஜிக்கு நண்பராக இருந்த சுதேச மன்னர் ஆண்டுவந்த சிறிய சமஸ்தானங்களில் ஒன்று.

## 178

சோதேப்பூர்,
*29—4—1939*

என் அன்புள்ள முட்டாள்,

உன்னைப் புறக்கணித்துவிட்டதாக நீ எண்ணவில்லை என்று நம்புகிறேன். நான் அனுப்பிய தந்திகள் உனக்குக் கிடைத்திருக்கும்.

G-உடன் நீ நடத்திய பேச்சு பற்றி உன் குறிப்புகளைக் கவனமாக ஆராய்ந்தேன். அது நன்ருக எழுதப்பட்டுள்ளது. இனி நிகழ்ச்சிகள் தாமே செல்லும் போக்கில் போக விடவேண்டும். என்னைப் பிறர் தவருகப் புரிந்து கொள்வதையோ, பழிப்பதையோ நீ பொருட்படுத்தக்கூடாது. அது எனக்கொன்றும் புதிய அனுபவமல்ல.

உனக்குத் தந்தி அனுப்பிய பின், நான் வேறு வழியாகச் செல்ல வேண்டி ஏற்படலாமென்று அறிகிறேன். நீயும் பெட்டையாவிலிருந்து லக்ஷ்மணபுரிக்கு வேறு இரயிலிலேயே வரமுடியும். அது பற்றி ஆலோசிப்பது நல்லது. நான் இன்னொரு தந்தி அனுப்பக் கூடும்.

சுசீலா இன்றிரவு திரும்புகிருள். என் உடல் நலன் பற்றிய விவரங்கள் அனைத்தையும் அவள் சொல்வாள்.

அன்பு,

கொடுங்கோலன்

## 179

ராஜ்கோட்,
*26—5—1939*

என் அன்புள்ள முட்டாள்,

நீ எதையெல்லாம் விளக்க விரும்புகிருயோ, அதற்குப் போதிய அவகாசம் நிச்சயம் தருவேன். ஆனல் வருத்தப்படுவதை நீ நிறுத்திக் கொள்ள வேண்டும். தனக்குச் செய்யப்பட்டுள்ள அநீதிகள் குறித்து அழுவதும், அதையே எண்ணிக் கவலைப்பட்டுக் கொண்டிருப்பதும் நல்ல பண்பு அல்ல; தீய குணமேயாகும். நாம் மற்றவர்களுக்கு அநீதி செய்வதைக் காட்டிலும், மற்றவர்கள் செய்யும் அநீதியை மனமுவந்து ஏற்றுக் கொள்வது நல்லது.

நான் அவரிடம் கடுமையாகப் பேசிய பின், பியாரிலால் இப்பொழுது நன்ருக இருக்கிருரென்று நான் உனக்குச் சொல்ல மறந்துவிட்டேன். எல்லையற்ற அன்பு தான் அவர் நோயைக் குணப்படுத்தும். அது என்னிடம் குறைவாகவே உள்ளது. மற்றவர்களிடம் நான் பொறுமை இழப்பதைக் காட்டிலும் அவரிடம் நான் அதிக

மாகப் பொறுமை இழக்கின்றேன். என்ன காரணத்தினலோ, சோட்டேலால், பியாரிலால், இருவரிடமும் நான் எப்பொழுது பேசினலும், ஆத்திரப்படாமல் பேசுவதில்லே என்று நான் உனக்குச் சொன்னேனு? ஆத்திரப்பட்டு நான் வெடித்ததைக்கண்டு சோட்டேலால் கோபம் கொள்ளவில்லே என்பதுதான் அதிசயம். அவர்போய் விட்டார். அவர் தற்கொலேக்கு நான்தான் பொறுப்பு என்று எனக்குத் தோன்றுகிறது. Y. மேல் கொண்ட அன்பு பற்றி நான் P.யுடன் பேசியபோது, அவரைக் கடுமையாக நடத்தியது மன்னிக்க முடியாத குற்றம். அவரை அனுதாபத்துடன் நடத்தியிருந்தால், எல்லாம் வேறுவிதமாக முடிந்திருக்கும். இப்பொழுது என் செய்கையின் விளேவாக, அவரை ஒரிஸ்ஸாவிற்கு ஊர் கடத்திவிட்டேன் என்று தான் சொல்ல வேண்டும். என் அகிம்சைக் கொள்கையிலிருந்து நான் தவறிவிட்டேன். ஆனல் சோட்டேலால், பியாரிலால், இருவருமே குறைபட்டுக் கொள்ளவில்லே. அதற்கு மாருக, என் செய்கை ஒவ்வொன்றிலும் அவர்கள் அன்பைக் கண்டார்கள். மகாதேவுக்கு நேரமிருந்தால், என் சொல்லின் பொருளே உனக்கு விளக்கிக் கூற வேண்டும்.

அன்பு,

**கொடுங்கோலன்**

# 180

*ராஜ்கோட்,*
*28—5—1939*
*காலே 6-20 மணி.*

என் அன்புள்ள முட்டாள்,

நடுவில் ஒரு நாள் கூட விடாமல், நான் எழுதும் நான்காவது கடிதம் இது. நம் துன்பத்தை உருவாக்குபவர்கள் நாமேதான் என்பதை நான் உனக்கு உணர்த்தும் வரை எனக்கு நிம்மதி ஏற்படாது. நாம் அகிம்சையின் அடிப்படைக் கொள்கைகளே அறிந்திருந்தால், நமக்குப் பிரியமானவர்கள் நமக்குச் செய்யும் அநீதிகளேக் கூட வருத்தப்படாமல், ஏற்றுக் கொள்ள நாம் பழக வேண்டும். நமக்குக் காட்டப்படும் அன்புக்குப் பதிலாக அன்பு செலுத்துவது, இயல்பானது தான். ஆனல் நமக்கு செய்யப்படும் அநீதியையும் மகிழ்ச்சியுடன் ஏற்று சகித்துக் கொள்ளும்போது, நம் அன்பு உண்மையில் வலிமை பொருந்தியதாகிறது. நீதி, அநீதி என்பவை அனேத்துமே நம் உணர்ச்சிகளிலிருந்து பிறப்பவைதான். அதைத் தவிர அவற்றிற்கு வேறு ஆதாரம் கிடையாது என்பதைத்தான் இக்கடிதத்தின் தொடக்கத்தில் அறிவுறுத்த விரும்பினேன். ஆகவே அகிம்சையின் இந்த முதல் படிப்பினேயை நீ உணர்ந்து கொள்ள வேண்டும். அழுகைக்கோ, இரகசியமான மௌன வேதனேயும் வருத்தமும் இதயத்தில் குடிபுகுவதற்கோ இடம்

கொடுக்கமாட்டாயென்று நீ என்னிடம் உறுதி அளிக்க வேண்டும். நீ என்னிடமிருந்து இதைக் கற்றுக் கொள்ள மறுத்தால், எதையுமே கற்கமாட்டாய்.

அன்பு,

**கொடுங்கோலன்**

*காலை 7-30 மணி*

பெண்கள் காங்கிரஸ் பற்றிக் குர்ஷித் உனக்கு எழுதியுள்ளாள். அந்த யோசனை உன்னைக் கவர்ந்தால், என் ஆதரவையும் அது பெறும்.

அன்பு,

**கொ.**

# 181

சேகான், வார்தா,
*15—6—1939*

என் அன்புள்ள முட்டாள்,

பால் பண்ணை நடத்தும் உன் நண்பர் சர்தார் தத்தார் சிங்குக்கு நீ கடிதம் எழுதி, லாகூர் அருகில் உள்ள அவர் பண்ணையில் பல்வந்த் சிங்கை ஏற்று, அவருக்குத் தேவையான பயிற்சி அளிக்கச் சம்மதிப்பாரா என்று கேட்க வேண்டுமென்று நான் உன்னிடம் சொன்னேனா, அல்லது மறந்து விட்டேனா? லாகூர் கிளைப் பண்ணையைச் சீரமைத்தவுடன் மகிழ்ச்சியுடன் இதைச் செய்வதாக அவர் கூறியது உனக்கு நினைவிருக்கலாம். பல்வந்த் சிங் பற்றி எல்லா விவரங்களையும்-அவருக்குக் கால்நடைகளுடன் நல்ல செய்முறைப் பழக்கமும் அனுபவமும் உண்டு என்பதையும், ஆனால் ஆங்கில அறிவு அவருக்குக் கிடையாது என்பதையும்—நீ அவருக்குச் சொல்ல வேண்டும். குர்ஜா அவர் சொந்த ஊர்; ஆகவே அவர் தாய் மொழி, இந்தி. உருதுவை இப்பொழுது கற்று வருகிறார்.

வெட்ரிக் பயிற்சிக்கு லீலாவதி இன்று பம்பாய் சென்றாள். அவள் தயங்கினாள்; ஆனால் அதுதான் சிறந்தது என்று நான் அவளுக்கு உறுதி கூறினேன். சாரதா வந்துள்ளாள். அவள் பிள்ளை உண்டாகியிருக்கிறாள் என்று நினைக்கின்றேன். ஆகவே சில மாதங்களுக்குச் சேகானில் தங்கியிருப்பாள். சங்கரன் அவ்வளவு சுகமாக இல்லை.

உயர் மட்டத்தின் காரணமாக மீராவுக்கு உடல்நலக் குறைவு ஏற்பட்டுள்ளது. பிர்லா மாளிகைக்கு அவள் நாளை வருவாள். என்னைப் பம்பாயில் சந்திக்குமாறு அவளுக்கு எழுதியுள்ளேன்.

நீ நன்றாக இருக்கிறாயென்று நம்புகிறேன். கல்விக் கூட்டங்களை நீ ரசித்திருப்பாய்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 182

சேகான், வார்தா,
*19-6-1939.*

என் அன்புள்ள முட்டாள்,

மகாதேவுக்கு நீ எழுதிய கடிதத்தில் உள்ள சுவையான செய்தித் துணுக்குகளை நான் படித்தேன். சமஸ்தான மன்னர்களை என்ன செய்வது? ஆண்டவன் எவர்களை அழிக்க விரும்புகின்றானோ, அவர்கள் அறிவை முதலில் குழப்புகின்றான். அவர்கள் காலம் முடியுந்தருவாயில் உள்ளது போலும். ஆனால் நாம் அகிம்சையில் நம்பிக்கை கொண்டவர்களாதலால், நேரடியாகவோ, மறைமுகமாகவோ நாம் அவர்கள் அழிவின் கருவிகளாய் ஆகிவிடாமல் செயலாற்ற வேண்டும்.

உனக்காக நான் வழிபட வேண்டுமென்று, இப்பொழுது என் முன்னுள்ள கடிதத்தில் அல்ல, உன் முந்திய கடிதங்களில் நீ என்னைக் கேட்டுள்ளாய். நான் ஒவ்வொரு நாளும் அதைச் செய்கிறேன். உன் வாதப் பொருத்தத்துடனோ, உன் அறிவிலோ, —இரண்டும் ஒன்றுதானே—நான் குறை காண விரும்பவில்லை. ஆனால் நாம் சந்திக்கும்போது, இதைப்பற்றி ஆசை தீர, நாம் பேசித் தீர்க்கவேண்டும்—புயல்களுக்கும் இடிகளுக்கும் அஞ்சாமல். அப்படிப் பேசிவிட்டால், நம் மனத்திலே ஒரு தெளிவு ஏற்படும். ஆகவே நீ கண்ணீரை அதற்குள் சிந்தி முடித்து விடாதே. மூடிய அறைக்குள்ளாகவே உன் வேதனை அனைத்தையும் கொட்டி விடாதே. ஹன்சாபற்றி நீ எழுதியதைப் படித்து நான் எனக்குள்ளாகச் சிரித்துக் கொண்டேன். மற்ற அனைவரிடமிருந்தும் உன் துயரத்தை ஒளித்து வைத்தது போலவே, அவளிடமிருந்தும் மறைத்து வைக்கும் முயற்சியில் நீ வெற்றி கண்டுவிட்டாய். உனக்கு இன்னுமொரு பட்டம் அளிக்கட்டுமா? அது என்ன என்று உன்னால் ஊகிக்க முடியுமா?

அன்பு,

**கொடுங்கோலன்**

## 183

பம்பாய்,
*23—6—1939.*

என் அன்புள்ள முட்டாள்,

இப்பொழுது தான் காலை 6 மணி ஆகியுள்ளது. எப்பொழுதும் போலவே, பயனற்ற வேலையில் முனைந்து ஈடுபட்டிருக்கிருள் அம்துல் சலாம்; என் காலை உணவைத் தயார் செய்வதில் அவள் தன் நேரத்தை வீணுக்குகிருள். மணிக் கணக்காக நேரத்தை அவளுக்கு என்னுல் ஒதுக்க முடியாதது குறித்து அவள் தாங்க முடியாத வேதனை அனுபவிக்கின்ருள். அவளை என்னுல் அறிந்து கொள்ளவே முடியவில்லை. ஆராய்ச்சிக்கு அப்பாற்பட்டவள் அவள்! நான் அவளை நடத்தும் முறையில் ஏதோ தவறு இருக்கவேண்டும்.

மீரா இங்கு தங்கி, அனைத்தையும் மௌனமாகக் கவனித்துக் கொண்டிருக்கிருள். அவள் எல்லைப் பகுதிக்குப் போக வேண்டியதில்லை; ஆகவே அவள் இப்பொழுது வேலையில்லாமல்தான் இருக்கிருள். அவள் ஆற்றலை எந்த வழியில் பயன்படுத்துவது என்பது பற்றி இப்பொழுது ஆலோசித்துக் கொண்டிருக்கின்றேன்.

ராஜ்கோட்டில் என் தவருன செய்கைகளின் விளைவாக முன்னேற்றக் கடிகாரத்தை ஒரு நூற்ருண்டு பின்னுக்குக் கொண்டு வந்துவிட்டேன் என்று ஜவாஹர்லால் உறுதியாக நம்புகிருர். ராஜ்கோட்டில் என் நல்ல சாதனைகளின் பயனுக, நான் சிறப்பான சேவை செய்துள்ளேன் என்று நானும் அதே அளவு உறுதியாக நம்புகிறேன். எங்கள் இருவருக்குமிடையே தீர்ப்புக்கூற ஒரு நடுவரை நாங்கள் இன்னும் கண்டுபிடிக்கவில்லை. ஆகவே நாங்கள் இருவரும் எங்கள் கூற்றையே வலியுறுத்திக் கொண்டிருப்பதால், தெளிவு ஒன்றும் காண இயலவில்லை. கட்டுக்கோப்பான ஓர் அமைப்பில் வேலைசெய்ய நான் ஏற்றவனல்ல என்று அவர் கருதுகிருர். அவ்வாறு அவர் எண்ணுவது சரியே. ஆனுல் நான் இது பற்றி ஒன்றும் செய்வதற்கில்லை. ஒன்று நான் செய்யலாம். எல்லா நட்வடிக்கைகளிலிருந்தும் விரும்பி விலகிக்கொள்ள நானே முன்வரலாம். அந்த முடிவு தோன்றலாம்; ஆனுல் ஆண்டவனின் ஆணையின் பேரில்தான் அது வரும். நான் வழிபட்டு வருகிறேன்.

இச்செய்தி உனக்குச் சஞ்சல மூட்டக்கூடாது. நான் எப்பொழுதும் போலவே உற்சாகமாகத்தான் இருக்கிறேன். கருத்து வேறுபாடுகள்பற்றி நான் கவலைப்படவில்லை. கமிட்டியின் தீர்மானங்களை நான் தயாரித்துக் கொண்டிருக்கின்றேன். ஜவாஹர்லால் அறிக்கையைத் தயாரித்துக் கொணடிருக்கிருர். எங்களிடையே மனத்தாங்கல் ஒன்றுமில்லை. இன்னும் சொல்லப்போனுல், எங்களிடையே இவ்வளவு பெரிய கருத்து வேறுபாடு இருப்பதை

நாங்கள் உணர்ந்ததன் பயனாக, நாங்கள் இருவரும் இன்னும் நெருங்கி வந்துள்ளோம்.

அன்பு,

கொடுங்கோலன்

## 184

விஷ்ராம் வாதிகா, ஜுஹு,
சாந்தா க்ரூஸ் அஞ்சல்,
பம்பாய்,
*29-6-1939.*

என் அன்புள்ள ஏமாற்றுக்காரி,

உன் கடிதங்கள்பற்றி நீ விதித்துள்ள தடையுத்தரவின் விளைவாக, உன் கேள்விகள் அனைத்துக்கும் நான் பதில் சொல்ல முடியாமல் போகிறது. கடிதங்களை மகாதேவிடம் கொடுத்துவிடுகிறேன்; அல்லது படித்து முடித்தவுடன் கிழித்து விடுகிறேன்.

ஜவாஹர்லாலின் அழைப்புபற்றி நான் உனக்கு ஆலோசனை கூறியுள்ளேன். அவர் திட்டமிடுவது முழுவதும் வீணான முயற்சி என்பது என் எண்ணம். ஆனால் எதுவும் பெரிதாக அமையாவிடில், அவருக்குத் திருப்தி ஏற்படாது.

இங்கு ஏதோ குறுக்கிட்டுள்ளது. கட்டில் இக்கடிதம் சேர வேண்டுமானால் இத்துடன் நான் நிறுத்திக்கொள்ள வேண்டும்.

அன்பு,

கொடுங்கோலன்

## 185

இரயிலில்,
*6—7—'39.*

என் அன்புள்ள ஏமாற்றுக்காரி,

நான் விரும்பியவாறு உனக்கு ஒழுங்காக எழுத என்னால் இயலாமல் போய்விட்டது. நூல் நிலையத்தில்கூட வேறு வேலைசெய்ய வேண்டியதாயிற்று. அகிம்சையைப்பற்றி என்னிடம் ஒரு கேள்வி கேட்டதாகக் கூறுகின்றாய். அதை அடியோடு மறந்துவிட்டேன். தயவுசெய்து அக்கேள்வியை மீண்டும் கேள். தம்மால் பதில் சொல்

லக்கூடிய கேள்விகளுக்கு மகாதேவ் பதில் சொல்லியிருப்பார் என்று நான் எண்ணியுள்ளேன். நான் உன் கடிதங்களைப் படித்த வுடன் அவரிடம் கொடுத்து விடுகிறேன். 'படிக்கக் கூடாது' என்று தலைப்பில் குறித்துவிட்டு, நான் அவற்றை வைத்துக் கொள்ள நீ அனுமதித்தால், அப்பொழுது அவற்றை எவரும் படிக்கவும் மாட்டார்கள்; உன் கேள்விகள் அனைத்துக்கும் நான் ஒழுங்காகப் பதில் சொல்லவும் முடியும்.

நோயால் படுத்திருந்தவர்கள் அனைவரும் முற்றிலும் குண மடையாவிடினும், சற்று தேறியுள்ளனர் என்று நம்புகிறேன். உன் 'ப்ளூ' காய்ச்சல், வந்ததும் போய்விட்டதென்று எண்ணுகின்றேன்.

தத்தார் சிங்குக்கு நான் எழுதுகிறேன். முன்பே நான் எழுதி யிருக்க வேண்டும். ஆனால் நீ என்னைப் பாதுகாத்துக் கொண்டிருந்த தால், நான் அவசரப்படவில்லை.

ஜவாஹர்லாலுக்கு நீ எழுதிய கடிதத்தின் படியொன்றை எனக்கு அனுப்பியிருக்க வேண்டும்.

நீ இறந்துவிட்டாயென்று நீ மீண்டும் கூறுவது எனக்குப் பிடிக்கவில்லை. நீ இறக்கவில்லை. எனக்காக நீ இன்னும் எவ் வளவோ வேலை செய்ய வேண்டும். திருவிதாங்கூருக்கோ, அது போன்ற வேறு ஊருக்கோ, நான் எந்த நேரமும் உன்னை அனுப்ப வேண்டியிருக்கும். இப்பொழுதே நீ அங்கு கதர்த் தொண்டு, ஹரிஜனத் தொண்டு ஆகியவற்றில் ஈடுபட்டுள்ளாய். கல்வி வாரி யத்தில் நீ செய்யும் தொண்டு நல்ல பலனை அளித்து வருகிறது. என்னைவிடத் தெளிவாக எல்லாவற்றையும் நீ உணர முடிகிற தென்றால், நான் வேண்டுமென்றே உனக்கு அநீதி இழைக்கின் றேன் என்று நீ எண்ணினால் ஒழிய, இந்த உயிரற்ற உணர்வு உனக்கு ஏற்பட வேண்டிய நியாயமில்லை.

மகாதேவ், பாப்லூ, கனு, நான் ஆகிய நால்வர் தான் பயணம் செய்யப் போகின்றோம். பியாரிலாலுக்குத் தொண்டையில் ஒரு சிறிய ரண சிகிச்சை செய்யப்பட்டுள்ளதால், மூன்று அல்லது நான்கு நாட்களுக்கு அவர் தங்க வேண்டியிருக்கும். சுசீலா இல்லா மல் பா வரமாட்டாள். பியாரிலாலைத் தனியாக விட்டு வர சுசீலா விரும்பவில்லை. எல்லை மாநிலத்தில் நான் நீண்ட நாட்கள் தங்க நேர்ந்தால், அவர்கள் பின்னர் வருவார்கள்.

என் பயணம் பற்றி எதுவும் நிச்சயமில்லை. நான் சேகானுக்குத் திரும்ப வேண்டுமென்பதும், நீ அங்கு என்னுடன் வந்து சேர வேண்டுமென்பதும் தான் என் உத்தேசம். தால்சர் பற்றி எதுவும் நிச்சயமில்லை. வைஸ்ராயிடமிருந்து கடைசியாக வந்துள்ள கடிதத் தின் பொருள், என்னுடன் தொடர்பை அறவே துண்டிப்பது தான். அவர் கடிதத்தின் படியையும் அதற்கு நான் இன்று பதில் எழுதினால், அப்பதிலின் படியையும் மகாதேவ் உனக்கு அனுப்பு வார்.

நான் விலகும் பிரச்னை, தற்போதைக்காகிலும், தூக்கி எறியப் பட்டுள்ளது.

அன்பு,

கொடுங்கோலன்

## 186

*அபத்தாபாத்,*
*14—7—1939*

என் அன்புள்ள முட்டாள்,

ஒரு கேள்விக்கு நேற்றுப் பதில் சொல்ல மறந்துவிட்டேன். ஆ்; உன் இந்தி மிக நன்ருக உள்ளது. கடிதங்கள் நன்ருக, இயற்கையாக அமைந்துள்ளன. அதை நீ ஏன் தொடரக் கூடாது? முழுதும் இந்தியிலே எழுத விரும்பவில்லையாயின், பாதி இந்தியிலும் பாதி ஆங்கிலத்திலும் எழுது.

சர் மிஸ்ராவின் பதில் பெரிய ஏமாற்றமாக அமைந்துள்ளது. ஆயினும் அவர் மனத்தை மாற்ற நாம் தொடர்ந்து முயல வேண்டும். சமஸ்தானக் காங்கிரஸ் வாதிகள் திவானிடம் ஒழுங்காக நடந்து கொள்ளவில்லை என்பதில் சிறிதும் ஐயமில்லை.

மற்றக் கடிதம், தனித் தன்மையுடன் அமைந்துள்ளது. S...உடைய திட்டத்தை நான் இன்னும் ஆராயவில்லை. அன்ருட வேலையைச் செய்து முடித்த பின் அதற்கு அவகாசமில்லை. எப்படியாவது நான் நேரம் கண்டுபிடிக்க வேண்டும்.

மற்ற செய்திகள் மகாதேவிடமிருந்து.

சர் கோகுல் சந்த் என்னைப் பார்க்க உள்ளே வரக் காத்துக் கொண்டிருக்கிருர். நான் நூல் நிலையத்திற்குச் சென்று விட்டு, அவரைப் பார்க்க வேண்டும்.

அன்பு,

கொடுங்கோலன்

தத்தார் சிங்கின் கடிதத்தை இத்துடன் அனுப்புகிறேன். அதைப் படித்துவிட்டு எனக்காக வைத்திரு.

## 187

*அபத்தாபாத்,*
*16-7-1939*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம் இன்று வந்திராவிடில், நான் தந்தி அனுப்பியிருப்பேன். நீண்ட நாட்கள்—உனக்கு இவை நீண்ட நாட்கள்

தானே—நீ மௌனமாக இருந்துவிட்டதன் காரணத்தை அறிய நான் துடித்துக் கொண்டிருந்தேன. தலீப் குணமடைந்து வருகிறார் என்பதறிய மகிழ்ச்சி. உன் உடல் தேற, நீ மீண்டும் சேகானுக்கு வர வேண்டும். இங்கிருந்து புறப்பட்ட பின், நான் வேறெங்கும் தங்காமல் நேராகச் சேகானுக்குச் செல்வேனென்று எதிர்பார்க்கிறேன்.

தாய் எவ்வளவு வற்புறுத்தினாலும், சங்க்லிக்குச் செல்வதை நீ கண்டிப்பாக நிறுத்த வேண்டுமென்று விரும்புகிறேன். நீ சிகிச்சை பெற்று வருகிறாயென்றும், எந்தச் சந்தர்ப்பத்திலும் அதைத் தடுத்து நிறுத்தக் கூடாதென்றும், நீ அவரிடம் கூற வேண்டும். மருத்துவர் உன்னைக் குணப்படுத்த நீ வாய்ப்பு அளிக்க வேண்டுமல்லவா?

சேகானுக்குச் செல்லும் வழியில், நீ ஜெய்ப்பூருக்குச் செல்லலாம். என் பயணத் திட்டம் நிச்சயமாகி விட்டபின், அதைப் பற்றி ஆலோசிக்கலாம். தால்சர் வருகையைத் தவிர, சேகானுக்குச் செல்லாமல் என்னை நிறுத்தி வைக்க வேறொன்றும் நிகழ முடியாது.

அமைப்புகள் அழிய வேண்டுமென்று நாம் விரும்புகிறோமே ஒழிய, அவற்றை உருவாக்கியவர்களோ, அவற்றால் பாதிக்கப்படுபவர்களோ அழிய வேண்டுமென்று நாம் விரும்பவில்லை. உயிருள்ளவரை, நாம் நம்பிக்கை இழக்கக்கூடாது. நான் திடீரெனப் பைத்தியமாகி விட்டால் என் பைத்தியம் தெளிந்து நான் வாழவேண்டுமென்று நீ வழிபடுவாயே ஒழிய, நான் சாக வேண்டுமென்று நீ விரும்பமாட்டாய். உன் கேள்விக்கு இது பதிலளிக்கிறதா? டையர் பற்றி நான் சொன்னதை நினைவு படுத்திக் கொள்.

சமஸ்தானங்கள் பற்றியும் திருவிதாங்கூர் பற்றியும் நீ தரும் தகவல் சுவையானதாகவும் பயனுள்ளதாகவும் இருக்கின்றது.

நேற்று பல்வந்த் சிங்கின் கடிதத்தை உனக்கு அனுப்பினேன். என் கடிதத்திற்குப் பதிலளிக்கும் முறையில் சர்தார் பகதூரிடமிருந்து மீண்டும் ஒரு கடிதம் வந்துள்ளது. பல்வந்த் சிங்கை நான் அனுப்புவதே, அவர் உணவுக்கும் உறைவிடத்திற்கும் ஆகும் செலவை ஈடுசெய்வதாகும் என்று அவர் கூறுகிறார். இது பஞ்சாபிகளுக்கே உரிய பண்பா, சீக்கியருக்கே உரிய பரிவா அல்லது அவருக்குத் தனியாக உரிய சிறப்பா? செலவை நான் கொடுத்து விடுகிறேன் என்று நான் சொல்லியிருந்ததற்கு இது பதில்.

பாவும் மற்றவர்களும் நாளை வருவார்கள். திரும்பி வர பா துடித்துக் கொண்டிருந்தாள். பியாரிலாலைத் தனியாக விட்டுச் சுசீலாவை மட்டும் நான் அழைத்து வர உடன்படாததால் தான், அவள் இத்தனை நாள் தங்க வேண்டியதாயிற்று. சுசீலா இல்லாமல், பாவை மட்டும் தனியாக அழைத்து வருவதற்கில்லை. என்னால் அவளைக் கவனித்துக்கொள்ள இயலாது. அவளுக்கோ அவ்வப்போது மருத்துவ உதவி தேவைப்படுகிறது. சுசீலாவை அவளுக்கு

நன்ருகப் பிடித்துவிட்டது. கனத்தைக்கூடப் பா இந்த முறை தன்னுடன் அழைத்துவரப் போவதில்லை. அவனை, அவன் தாய் மாமனுடன் விட்டு வரப் போகிருள். நிர்மலா, வார்தாவுக்குச் சீக்கிரமே செல்லவிருக்கிருள். அப்படியானல், கனம் அங்கு அவளுடன் இருக்கச் செல்வான். இப்பொழுது ஏதோ குறுக்கீடு.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 188

*அபத்தாபாத்,*
*17-7-1939*

என் அன்புள்ள முட்டாள்,

ஸர் K...யின் விருந்தாளியாக நீ காஷ்மீருக்குத் தாராளமாக வரலாம். நானும் அவருடைய விருந்தாளியாகத் தான் தங்குவேன். ஆகவே நீ என்னுடன் தான் தங்குவாய். ஊருக்கு ஊர் உன்னையும் கூட இழுத்துக் கொண்டு செல்வது தான் வேடிக்கையாக இருக்கும். நீ அந்தச் சொல்லை நினைவில் வைத்திருப்பதிலிருந்து, இது பற்றி என் கருத்தை நீ ஏற்றுக் கொள்ளவில்லையென்று எனக்குத் தெரிகிறது.

ஸர் K... இடமிருந்து இன்று செய்தி வந்தது. அவர் கடிதத்தை இத்துடன் அனுப்புகின்றேன். அவர் உன் பெயரைக் குறிப்பிடுகிருரென்பதை நீ காண்பாய், நாங்கள் இங்கிருந்து 25 ந் தேதி காஷ்மீருக்குப் புறப்படுகிருேம். மிஞ்சிப் போனல் காஷ்மீரில் ஒருவாரம் தங்குவோம். நீ முன்னதாகவே அங்கு சென்று எங்களை வரவேற்காவிடில், வழியில் எங்காவது எங்களைச் சந்திப்பாயென்று எதிர்பார்க்கிறேன். ஸர் K...க்கு இப்பொழுது தந்தி அனுப்புகிறேன்.

சங்க்லி பயணத்தை நிறுத்தி விடுவாயென்று நம்புகிறேன்.

ஆம். நாங்கள் திருமதி பரமானந்தின் விருந்தாளிகள் என்று சொல்லலாம்; அல்லது அவருடன் சேர்ந்து குடியிருப்பவர்கள் என்று சொல்லலாம்.

பல்வந்த் சிங்கின் அனுபவங்கள் பற்றி தத்தார் சிங்கிடம் நீ சொல்லக் கூடாதென்று நான் விரும்புகிறேன். அது தவருகும். இதற்குள் எல்லாம் சரியாகப் போயிருக்கும். இது போன்றவற்றைக் குறிப்பிடுவது நன்றியற்றதாகும். அதைப் பற்றி நான் எண்ணியிருக்கவே மாட்டேன். அவரை எந்த வீட்டிற்கு அனுப்பியுள்ளார்களோ, அந்த வீட்டை தத்தார் சிங் பார்க்காமல் கூட இருந்திருக்கலாம்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 189

அபத்தாபாத்,
*20—7—1939*

என் அன்புள்ள முட்டாள்,

உன் இந்தி தொடர்ந்து நன்ருக இருக்கின்றது.

தாமி பற்றி நீ மேலும் செய்தி தருவாய் என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன். இந்த விவகாரம் பற்றிய உண்மையை நீ அறிய முடிந்தால் எவ்வளவு நன்ருக இருக்கும். எந்த வகையில் பார்த்தாலும், இது மோசமாகத் தான் இருக்கிறது.

காஷ்மீரில் அரசாங்க உபசாரத்தை நான் ஏற்றுக் கொண்டதை இப்பொழுது மாற்ற வேண்டி ஏற்பட்டுள்ளது. அதைப் பொதுமக்கள் சகித்திருக்க மாட்டார்கள். இது வருந்தத்தக்கதுதான். ஆனல் நான் கசப்பை உண்டாக்க விரும்பவில்லே. ஆகவே நான் விட்டுக் கொடுத்தேன். இப்பொழுது நான் மக்களின் விருந்தாளியாகச் செல்வேன்—அதன் பொருள் என்னவோ? உன் பயணத் திட்டத்தில் மாறுதல் எதுவும் அவசியமில்லே. நீ என்னுடன் இருப்பாயெனினும், நீ ஹக்ஸாரின் விருந்தாளியாக இருப்பாய். ஒன்று மட்டும் செய்தால் நல்லது. எனக்கு முன்னல், ஒரு நாளேக்கு முன்பாகிலும், நீ அங்கு செல்ல வேண்டுமென நான் விரும்புகிறேன். தாமி விவகாரத்திலிருந்து உனக்கு ஓய்வு கிடைக்குமென்ருல்தான் நீ இதைச் செய்ய வேண்டும். அந்த விவகாரம் தான் உன் தலேயாய கவனத்தைப் பெற வேண்டும்.

கனத்தின் அன்னே நிர்மலா அவனே அழைத்துச் செல்ல இன்று இங்கு வந்துள்ளாள்.

பல்வந்த் சிங்கிடமிருந்து இன்னெரு கடிதம் வந்துள்ளது. அவர் இப்பொழுது வசதியாக இருக்கிருரென்பதைக் காண்பாய். சர்தார் சாகிப் அனேத்தையும் இனிய பண்போடு எடுத்துக் கொண்டுள்ளது குறித்து மகிழ்ச்சி. வழக்கம்போல் நீ கடிதத்தை சேகானுக்கு அனுப்பி, கிஷோரிலால், நரேந்திரா ஆகியோரிடம் சேர்ப்பிக்கும்படி சொல்.

நல்ல மழை பெய்தது; இருந்தாலும் இன்னும் வெப்பமாகவே இருக்கின்றது.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 190

சேகான்,
*7-10-1939*

என் அன்புள்ள அமிருத்,

நேற்றிரவு நீ இல்லாததற்காக வருந்தினேன். ஆனல் நீ உன் கடமையை நிறைவேற்றச் சென்றிருந்தாய் என்பதறிந்து மகிழ்ந்

தேன். உன் உடல் நலனை ஒழுங்காகவும் செம்மையாகவும் காத்துக் கொள்ள வேண்டும். ஆவணங்களைப் பொறுத்தவரை எல்லாம் ஒரு சிறிதும் குறையின்றி ஒழுங்காக இருந்தன. இம்மாதம் 11 ந் தேதி அங்கிருந்து புறப்பட்டு, 13 ந் தேதி சேகானுக்கு வந்து சேருவாய். இரயில் நிலையத்திற்குக் கார் வந்திருக்கும்.

மகாதேவ் மற்றச் செய்திகளைத் தருவார்.

அன்பு,

பாபு

## 191

சேகான்,
*29—10—1939*

திருத்தப்படாதது.

என் அன்புள்ள முட்டாள்,

கற்றுத் திருந்துவதற்குக் காலம் தாழ்ந்துவிட்டதென என்றுமே கூறமுடியாது. கற்றுத் திருந்த எவருக்கும் வயது மீறி விட்டதென்றும் சொல்ல முடியாது. வயதாகி விட்டதால் கற்க முடியவில்லை போலும் என்று உன்னைச் சொல்லத் தூண்டுவது உன் சோம்பல் தான். திருந்த வேண்டியிருப்பதை எண்ணிப் புண் படுவது உன் ஆணவம் தான். சேகானிலிருந்து உன்னை யாரும் விரட்ட மாட்டார்கள். அந்தச் சாதனையை நீ தான் செய்ய முடியும்; உன்னை விரட்டக் கூடியவள் நீயே தான். முட்டாள்களும் சேகானில் வாழ்வதற்குத் தடையில்லை. பித்தர்கள், பலவீனர்கள், இயற்கைக்கு முரணான பிரகிருதிகள் போன்றவர்களுக்கு இது சரணாலயம் என்பதைக் கண்டு கொள்ளும் அளவுக்கு உனக்குப் புத்திக் கூர்மை இருக்குமென்று எண்ணினேன்.

தயவு செய்து உற்சாகத்துடன் இரு.

அன்பு,

பாபு

விமான அஞ்சல் கடிதம் ஒன்று முகவரி திருத்தி அனுப்பப் பட்டுள்ளது.

மகாதேவ் இன்னும் அங்கிருந்தால், அவர் கடிதம் வந்து சேர்ந்ததென்று சொல்.

## 192

சேகான், வார்தா,
*30-10-1939*

என் அன்புள்ள முட்டாள்,

புதுமையாக இருக்கிறது! கடிதம் காணோம், தந்தி காணோம்! வைஸ்ராயைப் பார்க்க நானும் இராஜன்பாபுவும் நாளை டில்லிக்குப்

புறப்படுகிறோம். வியாழக்கிழமை திரும்புவோமென்று எதிர் பார்க்கிறோம்.

அன்பு,

பாபு

## 193

சேகான், வார்தா,
*12—11—1939*

என் அன்புள்ள அமிருத்,

நீ உன் சொல்லைக் காப்பாற்றியுள்ளாய். படிப்பதற்கு உன் தந்திகள் நன்றாக இல்லையெனினும், விவரமாகவும் தெளிவாகவும் இருந்ததால், அவை எனக்கு மிகுந்த ஆறுதல் அளித்துள்ளன. இவ்வளவு சிரமத்துக்கும் இடையில் நீ உன் நோயிலிருந்து நல்ல குணமடைந்து, திருப்தியான உடல் நலத்துடன் சிம்லா போய்ச் சேர்வாயென்று நம்புகிறேன். உனக்கு உடல் நலமில்லாத போது, நீ தந்திகள் அனுப்ப வேண்டும்.

அன்பு,

பாபு

## 194

சேகான், வார்தா,
*16—11—1939*

என் அன்புள்ள முட்டாளே,

சிம்லாவிலிருந்து உன் தந்தி எனக்குக் கவலை ஊட்டியுள்ளது. எனக்குக் குற்றமுள்ள நெஞ்சு. டுனுக்கு உன்னை அனுப்ப நான் ஏன் உறுதியளித்தேன்? ஆனால் நான் அப்படித் தான். என் சக ஊழியர்களைக் கூடியவரை கசக்கிப் பிழிவது தான் என் இயல்பு. உன் பலவீனமான உடல்நிலை பற்றி எனக்குத் தெரிந்திருக்கவேண்டும். ஷம்மியிடம் பல கோடி முறை மன்னிப்பு கேட்கிறேன். உனக்கு நான் வருத்தம் தெரிவிக்க வேண்டிய அவசியமில்லை. உன்னை நான் வேறெங்கும் அனுப்புவது பற்றி எண்ணினாலே உனக்கு எரிச்சல் வரும். ஆனால் குறிக்கோளுக்காக உன்னை நான் அனுப்பித் தானாக வேண்டும். உனக்கு இப்பொழுது ஒரு தந்தி அனுப்புகின்றேன். நீ பலம் பெற வேண்டும். பலமாக இருக்கவேண்டுமென்று நீ மட்டும் உறுதி செய்துகொண்டால் பலம் பெற்று விடலாம். உன் மனச் சோர்வையும் தொட்டால் சுருங்கித் தன்மையையும் நீ வெல்ல வேண்டும். உன் இயல்பை மாற்ற முடியாது என்று நீ சொல்வதில் பலனில்லை. பரம் பொருளுக்குக் கீழ்ப்படிந்து, நம் இயல்புகளை மாற்றிக் கொள்ளத் தான் நாம் இந்த மண்ணுலகில் தோன்றியுள்ளோம்.

ஷம்மி நன்ருக இருக்கிருரென்று நம்புகிறேன். உன்னை மிகுந்த ஆரவாரத்துடன் டோஃபா வரவேற்றிருப்பானே! நோயாளிகள் அனைவரும் குண மடைந்து வருகின்றனர்.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

**கொடுங்கோலன்**

பசை ஒட்டி அஞ்சலில் சேர்க்க நான் கனசியாம் தாசிடம் கடிதத்தைக் கொடுத்திருந்தேன் என்று நினைக்கிறேன்.

## 195

சேகான், வார்தா,
*4—12—1939*

என் அன்புள்ள முட்டாள்,

நேற்றும் இன்றும் உன்னிடமிருந்து கடிதம் வரவில்லை. இப்பொழுது இங்கு தொலைபேசி உள்ளது. மகாதேவ் நேற்று வந்தார். டாக்டர் ஜாகீர் நேற்றிரவு இந்து-முஸ்லிம் பிரச்னை பற்றிப் பேச வந்தார். அவரை நான் வரச் சொல்லியிருந்தேன்.

ராஜாஜி இங்கு வந்துள்ளார். டெம்ப்ளின் பற்றிய உன்குறிப்பு பிரசுரமாகும். தம் சொந்த வீடான பர்மாவுக்குப் பிருத்வி சிங் நேற்றுப் புறப்பட்டார்.

நோயாளிகள் அனைவரும் குணமடைந்து வருகின்றனர்.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 196

சேகான், வார்தா,
*9—12—1939*

என் அன்புள்ள அமிருத்,

உனக்கும் குடும்பத்தினருக்கும் இரயில் நிறைய அன்பு அனுப்புகிறேன் என்பதைத் தவிர வேறு செய்தி இல்லை.

இன்று உன்னிடமிருந்து கடிதம் வரவில்லை.

பாபு

## 197

*10-1-1940*

என் அன்புள்ள அமிருத்,

நலமாகவும், சுமைகளைத் தாங்கிப் பகிர்ந்து கொள்ள முழு ஆற்றலுடனும் திரும்பி வா.

அன்பு,

பாபு

## 198

சேகான், வார்தா,
*24-1-1940*

சி. அமிருத்,

இன்று காலே நிகழ்ச்சி மறக்க முடியாதது. ஆயினும் இனிது முடிவது, இனிதே. கீழ்ப்படிதலைக் கண்டிப்பாக வற்புறுத்தும் தந்தை என்று தான் நான் என்னைச் சொல்லிக் கொள்ளவேண்டும். என் குழந்தைகளில் பலரையோ அனைவரையுமோ நான் நம்பாமலிருக்கலாம். நான் தவறான தீர்ப்புகள் கூறலாம். ஆனால் அவர்கள் என் மீது அவநம்பிக்கை கொள்ளக்கூடாது. என் தீர்ப்புக்களின் ஏற்புடைமை பற்றி அவர்கள் ஐயப்படக் கூடாது. என் குறைகளைக் காணும் ஆற்றல் அவர்களுக்கு இருக்கக் கூடாது. மற்றவர்கள் அவற்றைக் காண்பது ஒரு பொருட்டல்ல. இத்தகைய சரணாகதி அனேகமாகச் சாத்தியமில்லை என்றே கூறலாம். ஆனால் பெற்ற அம்மையாகவும் அப்பனாகவும் நீ ஏற்றுக் கொண்டுள்ளது போல் என்னை ஏற்றுக் கொண்டுள்ளவர்களுக்கு அது சாத்தியம் தான். இவ்வாறு கீழ்ப்படிந்து பக்தியுடன் என்னிடம் நடந்து கொண்டுள்ளனர். ஒப்புக்காக, உணர்வற்ற முறையில் அவ்வாறு நடக்க முடியாது. ஆனால் தேவையான அந்த பக்தி இருந்தால் ஒழிய, உன்னிடமோ, உன்னை வைத்துக் கொண்டோ, என்னால் எதையும் செய்ய முடியாது.

அன்பு,

பாபு

உனக்கு இயல்பாகவே அந்த பக்தி அமைந்துவிட்டால், நான் கடுமையாக இருப்பதாகத் தோன்றாது. அத்தகைய பக்தி, என்றென்றும் அழகும் ஆனந்தமும் ஊட்டுவதாகும்.

## 199

சாந்திநிகேதனம்,
*18-2-1940*

என் அன்புள்ள முட்டாள்,

உன் தந்திகள் கிடைத்தன. என் கைக்குப் பெரிய காயம் ஒன்றுமில்லை. ஆனால் ஒரு மகாத்மாவுக்கு ஏற்படும் சிறிய காயத்தைக் கூட மிகைபடுத்த வேண்டுமல்லவா? என்னிடம் எவரும் பகைமையாய் நடந்து கொள்ளவில்லை.

அகக்குரலின் ஆணையால் விதிக்கப்பட்ட தடை நியாயமானது தான் என்பது அனுபவத்தால் மெய்ப்பிக்கப்பட்டது. பார்த்தாயா?

நீ நன்றாகவே சமாளித்துக் கொண்டது, எனக்குப் பெரிதும் நிம்மதி அளித்தது. நீ நலமாக இருக்கிறாயென்று நம்புகிறேன். குடும்பம் முழுவதும் குடும்பம் போலவே நடக்கிறதா? வலிய நுழையாமல், சிறு நுணுக்கத்திலும் நீ கவனம் செலுத்த வேண்டுமென்று விரும்புகிறேன். ஸர் கிப்பியின் பாணியில் நீ அக்கரை செலுத்த வேண்டும். "உன் வலது கைக்கு இடது கை செய்வது தெரிய வேண்டாம்." அல்லது அந்த வாக்கியம் "இடது கைக்கு" என்று தொடங்குகிறதா?

இன்பமாக நாட்களைக் கழித்திருக்கக் கூடிய நேரத்தில் பாப்லு நோய் வாய்ப்பட்டு படுத்துக் கொண்டான். மகாதேவ் இன்று அவனைக் கல்கத்தாவுக்கு அழைத்துச் செல்ல வேண்டியதாயிற்று.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 200

சேவாகிராமம், வார்தா,
*15-5-1940.*

சி. அமிருத்,

உன் இரு முக்கிய கடிதங்களையும் படித்தவுடன் கிழித்துவிட்டேன். ஆகவே என் நினைவில் உள்ளதைக் கொண்டுதான் நான் இப்பொழுது எழுதுகிறேன். நீ இவ்வாறு வற்புறுத்துவதால்தான், இதற்கு நான் கீழ்ப்படிய வேண்டியதாகிறது.

கட்டுரைகளை நான் முன்னதாக அனுப்பமுடியும். ஆனால் சுசீலா அவற்றை நன்றாகவும் விரைவாகவும் மொழிபெயர்க்க முடியுமாதலால், நான் அதைப்பற்றிக் கவலைப்படாமல் இருந்துவிட்டேன். அதே வாரத்தில் நீ டில்லிக்கு வந்து சேரவே முடியாது. இங்கு மொழிபெயர்ப்புக்கு ஏற்பாடு செய்ய முடியுமென்றுதான் நான் உனக்குச் சொல்லியிருந்தேனே. ஆயினும் நீ மொழிபெயர்த்துப் பழகிக் கொள்ள வேண்டும். அப்பொழுதுதான் இங்கு வரும்போது, மொழிபெயர்ப்பு வேலையை அனுபவத்துடனும் ஆற்றலுடனும் நீ செய்ய வசதியாக இருக்கும். ஆகவே அச்சுக்கு அனுப்பப் போவதாக எண்ணிக்கொண்டே, மிகுந்த கவனத்துடன் நீ மொழிபெயர்ப்பைச் செய்யவேண்டும். அதற்குப் பிறகு பரிசீலனைக்கு நீ அவற்றை எனக்கு அனுப்பவேண்டும். நீ உன் மொழிபெயர்ப்பை முடிக்கும் வரை சுசீலாவின் மொழிபெயர்ப்பைப் படிக்கக்கூடாது.

ஸர் M. எனக்கு மிகுந்த ஏமாற்றம் அளித்துள்ளார். அவர் கடிதம் புரிந்துகொள்ள முடியாததாக இருக்கிறது. ஆனால் இவர்களைப் போன்றவர்களுடனும் நாம் பழக வேண்டுமென்று நீ சொல்

வது சரியானதுதான். பிற்போக்கில் ஊறியவர்கள் மனத்தையும் நாம் மாற்ற வேண்டும்.

நீ இங்கு இல்லையே என்று நான் ஏங்குவதாகச் சொல்லமுடியாது. நாளுக்கு நாள் நான் பற்றற்ற ஒரு நிலையில் பழகி வருகின்றேன். எவர் இல்லாததையும், எது இல்லாததையும் குறித்து நான் வருந்துவதில்லை. இவைபற்றி நினைக்கவே எனக்கு நேரமில்லை. நான் தாங்கும் சுமையே என் நேரம் முழுவதையும் எடுத்துக்கொள்கிறது. இதனால், நீ இங்கு திரும்பி வருவதை நான் விரும்ப மாட்டேனென்றோ, உனக்கு வேலையில்லை என்றோ பொருளில்லை. ஒரு வகையில் பார்த்தால், வேலை இருக்கிறது; இன்னொரு வகையில் பார்த்தால் வேலை இல்லை. தொடக்கத்திலிருந்தே என் வாழ்க்கை இப்படித்தான் அமைந்துவிட்டது. ஆனால் முன்பு இருந்ததைக் காட்டிலும், இப்பொழுது இந்நிலை அதிகமாகி விட்டது. என்னகத்தே தனிமையில் ஒரு நாட்டம் ஏற்பட்டுவிட்டது. 'ஹரிஜன்' இதழ் இன்று நிறுத்தப்பட்டால் கூட, அந்த இழப்பை நான் பொருட்படுத்த மாட்டேன். அப்படியும், இந்த இடமும் அமைப்பும் பெருகி வளர்ந்துகொண்டிருக்கின்றன.

பெரிய அம்மை இப்பொழுது இங்கு பரவக் காணோம்.

லலித குமாரி இன்று வந்தாள். அவள் என்னுடன் தங்கியிருக்கின்றாள். இரண்டு பணியாளரை அழைத்து வந்துள்ளாள்.

ராம் நாராயணனின் கடிதம் ஏமாற்றமளிக்கின்றது. அவருக்கு இனிமேல் நீ எழுத வேண்டாம். என்னால் இயலும்போது நான் எழுதுகிறேன்.

நரசிங்கருக்கு நீ எழுதியுள்ள கடிதம் நன்றாக இருக்கின்றது அதை அனுப்புகிறோம்.

போர்முனையில் பயங்கரத் திருப்பம் ஏற்பட்டுள்ளது. என்ன நடக்கிறதென்று பார்ப்போம். என்ன காரணத்தினாலோ, நீ எண்ணுவதுபோல் நான் எண்ணவில்லை. நேச நாடுகளின் தோல்வியை நான் காண விரும்பவில்லை. அதே சமயத்தில், ஹிட்லர், சித்திரிக்கப்படுவதுபோல் அவ்வளவு கொடியவரென்று நான் கருதவில்லை. வியக்கத்தக்க ஆற்றலை அவர் வெளிப்படுத்துகிறார். அதிக இரத்தப் பெருக்கு இல்லாமல், அவர் வெற்றிகளைச் சம்பாதிப்பதுபோல் தோன்றுகிறது. சாம்ராஜ்ய சிற்பிகளுக்கு இருக்க வேண்டிய பலத்தை ஆங்கிலேயர் காட்டி வருகின்றனர். இப்பொழுது தோன்றுவதைவிட, இன்னும் சிறந்த நிலைக்கு அவர்கள் உயர்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன். இத்துடன் நிறுத்திக்கொள்ள வேண்டும்.

உன் கேள்விகளில் எதற்கும் பதில் சொல்ல நான் தவறியிருந்தால், நீ எனக்கு நினைப்பூட்டவேண்டும். இங்கு வெப்பமாக இருக்கிறது. ஆனால் நான் நலமாகவே இருக்கின்றேன்.

அன்பு,

பாபு

இது காலை 9-30 மணிக்கு எழுதப்பட்டது. உன்னுடைய இன்றையக் குறிப்பு மாலை 1-30 மணிக்குத்தான் வந்தது. என் கட்டுரைகள் அனைத்தையும் உனக்கு அனுப்பினேன். நான் மிகக் குறைவாகத்தான் எழுதினேன். முக்கியமில்லாத ஐந்து வரிகளைத் தவிர மற்றவை அனைத்தும் இத்துடன் அனுப்பப்பட்டுள்ளன.

## 201

சேவாகிராமம், வார்தா,
24—5—1940

சி. அமிருத்,

உன் மொழிபெயர்ப்புகள் கிடைத்தன. அவற்றைப் படிக்க அவகாசம் தேடிக்கொள்ள வேண்டும். மொழிபெயர்ப்பு இப்பொழுது தேவையில்லை என்று ஹரி கூறுகிறார். இருந்தபோதிலும் நீ அதைச்செய்து பயிற்சி பெறவேண்டும். எப்பொழுது அத்தேவை எழும் என்பதை எவராலும் உறுதியாகச் சொல்ல முடியாது.

எனக்காக அல்ல, என் கண்களை முன்னிட்டு உன் திருத்தங்கள் மையால் எழுதப்படுதல் நலம்.

இவ்வாரக் கட்டுரைகள் இன்று அச்சுக்குப் போகுமென்று எண்ணுகிறேன். கனுவிடமிருந்து கட்டுரைகள் இன்னும்வரவில்லை.

மேலும் எழுத இப்பொழுது நேரமில்லை. நானுபாய் பட் வந்துள்ளார். இன்று காலை 7-30 மணி முதல் கால வரம்பின்றி, நான் மௌனமாக உள்ளேன்.

அன்பு,
பாபு

## 202

சேவாகிராமம், வார்தா,
25—5—1940.

சி. அமிருத்,

பண்ட்லாவுக்கு மீரா சென்றுள்ளாள் என்று உனக்குச்சொல்லியிருந்தேன். அவளிடமிருந்து அதைப்பற்றி உற்சாகமான ஒரு கடிதம் வந்துள்ளது.

லலிதகுமாரி இந்த வெப்பத்தைத் துணிவுடன் தாங்கிக்கொள்கிறாள். இங்கு இருப்பதில் அவளுக்கு மிகுந்த மன மகிழ்ச்சி.

நான் உனக்குக் கூடியவரை ஒழுங்காகக் கடிதம் எழுதி வருகிறேனே; பின் ஏன் நீ சோர்வடைய வேண்டும்? நேசநாடுகளின் கை எல்லா இடங்களிலும் தாழ்ந்து வருவதுபோல் தோன்றுகிறது.

இவை, போரின் ஏற்றத்தாழ்வுகள். இவைபற்றி நீ வருந்தக் கூடாது. படுகொலை பயங்கரமானது; ஆனால் போரில் தவிர்க்க முடியாத அம்சம். இருதரப்பாரும் தெரிந்து, துணிந்துதான் செய்கிறார்கள்.

சொந்த உறவின் விளைவாக, உனக்குச் சோர்வு ஏற்பட்டிருக்கிறதென்றால், அது சிறுபிள்ளைத் தனத்தைக் காட்டிலும் மோசம். இந்த அழிவின் ஊழிக் கூத்தில் நாம் நம்மை மறந்துவிடவேண்டும். உன்னை ஈடுபடுத்துவதற்குத்தான் நிறைய வேலை இருக்கின்றதே.

அன்பு,

பாபு

## 203

சேவாகிராமம், வார்தா,
*28—5—1940.*

சி. அமிருத்,

கடிதத்தைச் சேர்த்து அனுப்ப மறந்துவிட்டதாக அம்துல் சலாம் கூறியபோது நான் திகிலடைந்தேன். ஆகவே மீண்டும் நான்கு நாட்களுக்கு என்னிடமிருந்து கடிதம் உனக்குக் கிடைக்காது. இதற்காக வருந்துகிறேன். அவளுக்கு உடல் நலமில்லை; அமைதியற்ற பதட்டநிலையில் உள்ளாள், பாவம். உன் பிடிவாதம், அல்லது மடத்தனம், அல்லது இரண்டுக்கும் நீ சிரமப்படவேண்டும்.

உன் இரு கடிதங்களும் கிடைத்தன. ஒன்று, அநேகமாய் முழுவதுமே இந்தியில் எழுதப்பட்டுள்ளது. அது நன்றாக உள்ளது. என் கட்டுரைகளின் படிகளை இப்பொழுது வியாழக்கிழமைக்கு முன் அனுப்ப முடியாது. அன்று தான் பத்திரமாக அவற்றை அனுப்பக் கூடிய நாள். கட்டுரைகள் போய்ச் சேரும் வரை, அவற்றின் அலுவலகப் படி இங்கிருக்க வேண்டும். அந்தப் படி தான் இப்பொழுது உனக்கு அனுப்பப்படுகிறது.

இன்று வந்துள்ள உன் கடிதத்துடன், ஆங்கிலேயர் ஒருவரின் சிக்கல் பற்றிய குறிப்பு வந்துள்ளது. அடுத்த வாரம் அதைப் பற்றி நான் கருத்து தெரிவிக்கக்கூடும். அவர் போன்ற மனிதர்களின் ஆணவமும் அறியாமையும் அதிசயிக்கத் தக்கவை. நேர்மையான நியாயத்தைச் செய்ய அவர்கள் விரும்பவில்லை; அதே சமயத்தில் அனுதாபத்தை எதிர்பார்க்கின்றார்கள். ஆனால் எரிச்சலுக்கான காரணம் ஓங்கியிருக்கும் போது தானே, நம் அகிம்சைக் கொள்கையைக் கடைப்பிடிக்க வாய்ப்பு கிடைக்கிறது.

அன்பு,

பாபு

## 204

சேவாகிராமம்,
*1—6—1940*

சி. அமிருத்,

இவ்வாரக் கட்டுரைகளையும் உன் மொழி பெயர்ப்பில் நான் திருத்தியுள்ள மூன்றையும் உனக்கு நூலஞ்சலில் அனுப்பி யுள்ளேன்.

கட்டுரைகள் தாமதமாகச் செல்வது என்னால் தான். நான் எழுதி முடிப்பதில் அவசரப்படவில்லை.

மொழி பெயர்ப்பு திருத்தப்பட்டுள்ளதைப் பார்த்தால், ஓரிரண்டு அசட்டுப் பிழைகள் நீ செய்திருந்தாய் என்பதை அறிவாய். நீ நல்ல முன்னேற்றம் கண்டுள்ளாய் என்பது தெளிவு.

இன்னும் எழுத்தில் ஒரு நிதானம் உனக்கு வரவில்லை. தற் போதைக்கு அவை பிரசுரத்திற்குத் தேவைப்படாதென்ற போதிலும், நீ தவறாமல் மொழிபெயர்ப்பைச் செய்து வர வேண்டும்.

'ஹரிஜன சேவக்' இதழில் இப்பொழுது வெளியாகும் மொழி பெயர்ப்புகளையும் நீ எனக்கு அனுப்புவதுடன், எனக்குப் பயன் படக் குறிப்புகள் தயாரித்து வைத்துக் கொள்ள வேண்டும்.

லலித குமாரி 30 ந் தேதி சென்றாள். அவள் அபூர்வமான பெண். எனக்கு அவளை மிகவும் பிடித்திருந்தது. வெப்பத்தைத் துணிச்சலாகத் தாங்கிக் கொண்டாள்.

அவள் போனாள். சரளாதேவி சௌது ராணி வந்தாள். இன்னும் ஓரிரு நாட்கள் அவள் இங்கு தங்குவாளென்று எண்ணு கிறேன். அவள் ஏற்பாடுகள் பற்றி எனக்குத் தெரியாது.

இப் போரினால் புரட்சிகரமான மாறுதல்கள் ஏற்படும்; ஏற்பட வேண்டுமென நான் விரும்புகிறேன். அது பற்றி நான் சிந்திக்கவே மறுக்கின்றேன். விஞ்ஞான சக்திகளின் போர், இது. ஜெர்மானிய விஞ்ஞானம் இப்பொழுது ஓங்கி வருகிறது.

R...உடைய கடிதத்தின் படியை அனுப்புமாறு நீ கனுவுக்கு எழுதியிருந்தாய். அவருக்கு அக் கடிதம் கிடைக்கவில்லை. ஆனால் அந்தப் படியை அனுப்ப நான் விரும்பவில்லை. அது ஆசிரமத்தை விட்டு வெளியே போகக் கூடாது. இங்கிருப்பதே நல்லது. அக் கடிதத்தில் பிரமாதமாக ஒன்றுமில்லை. காரணத்தை நீ புரிந்து கொள்கிறாயல்லவா? நீ திரும்பி வந்ததும் அனைத்தையும் காண லாம்.

அன்பு,

பாபு

## 205

சேவாகிராமம், வார்தா,
*9—6—1940.*

சி. அமிருத்,

உன் இரு கடிதங்களும் ஒன்ருய் வந்தன. முகவரி சரியாகவே எழுதப்பட்டிருந்த போதும், முதல் கடிதம் சேகானுக்குச் சென்றது. இந்தத் தப்பு இன்னும் தொடர்ந்து நடப்பது ஆச்சரியம் தான். அதை நாம் சகித்துக் கொள்ள வேண்டியது தான் போலும். கடித மேலுறையைப் புகார் செய்ய அனுப்பப் போகிறேன்.

உன் குஜராத்தி நடையில் சிறு குறைகூட இல்லை. காற்றிலிருந்து அதை நீ கிரகித்துக் கொண்டதை அது காட்டுகிறது. பஞ்சாபி மொழி தெரிந்தவர்களுக்கு அது எளிதானதுதான்.

'நம் கடமை'யின் மொழி பெயர்ப்பையும் உன் மொழி பெயர்ப்புகளில் இன்னும் சிலவற்றையும் நான் படிக்கத் தொடங்கியுள்ளேன். அவை அனைத்தையும் முடித்து விடுவேன்.

உன் கைவிரல்களுக்கோ, புஜத்திற்கோ தீங்கு விளைவித்துக் கொள்ளக்கூடாது. என்னைப் போல், வலது கையால் நூலை இழுக்கக் கற்றுக்கொள்ள வேண்டும்.

உன் கெடிகாரம் என் கையில் வேலை செய்ய மறுக்கிறது. இரண்டு நாட்களுக்குப் பிறகு அதற்குச் சாவி கொடுப்பதை நிறுத்தி விட்டேன்.

சொந்த உட்பூசலை நீ ஒரு வகையாகத் தீர்த்துள்ளது குறித்து மகிழ்ச்சி. ஆனல் இது போல் ஒட்டுப் போடுவது எத்தனை நாள் நிலைக்கும்?

பேசா நோன்பு ஏன் என்று கேட்கிருய். எரிச்சலைத் தடுக்கவும் ஆற்றலை மிச்சப் படுத்தவும் தான். இப்பொழுது இரு மடங்கு வேலை என்னல் செய்ய முடிகிறது. எரிச்சல் ஏற்படுவதே இல்லை. இப்பொழுது பேசுவதே சுமையாகும். மௌனத்தில் எனக்கு அதிக ஆசை. மகாதேவ், அம்துல் சலாம், இருவரும் சுவையான செய்தித் துணுக்குகள் இருந்தால் உனக்குத் தருகிருர்களென்று எண்ணுகிறேன்.

அன்பு,

பாபு

## 206

சேவாகிராமம்,
*10-7-1940*

சி. அமிருத்,

உன் இரு கடிதங்கள். கடிதமே எழுதாமல் உன்னை விட்டுவிட மாட்டேன். சமஸ்தானக் காங்கிரஸ் நிர்வாகக் குழுவில் நீ சேரலாமென்று உனக்கு இன்று தந்தி அனுப்பினேன். உண்மையில் உன்னை அக் குழுவில் நியமனம் செய்ததில் எனக்கும் சிறிது பங்கு உண்டு. அதைப் பற்றி என்னுடன் ஆலோசித்த போது, அதை நான் ஏற்றுக் கொண்டேன். அது பற்றி நான் உனக்குச் சொல்ல மறந்து விட்டேன்.

குஜராத்தியில் நான் எழுதும் போது கூட, இந்தியில் அதை மொழி பெயர்க்க வேண்டும். அந்த 'வேண்டுகோளை' எழுதியதை ஒட்டி, இப்பொழுது ஆங்கிலத்திலும் நான் சிறிது எழுதுவேன்.

அன்பு,

பாபு

## 207

வார்தாவிலிருந்து *10—7—1940* தேதியிட்ட தந்தி,
ராஜ்குமாரி அமிருத் கௌர், மனோர் வில்லே, சிம்லா.

சமஸ்தான மாநாட்டு நிர்வாகக் குழுவில் சேரவும்.

அன்பு,

பாபு

## 208

*திருத்தப்படாதது.*

சேவாகிராமம்,
*21—7—1940*

என் அன்புள்ள முட்டாள்,

என்ன வேடிக்கை! சிலர் எப்பொழுதுமே திருப்தி அடைவதில்லை. 'சி. அமிருத்' என்று ஏன் சொல்லக் கூடாது? உன்னைத் திருப்தி செய்யவே விரும்புகிறேன். "இடை

யிடையிலாவது முட்டாள் என்று சொல்லவேண்டும்'' என் கிருய். உன்னைத் திருப்தி செய்ய விரும்பும் இந்த அப்பாவி என்ன செய்ய முடியும்? ஆகவே நாமே, நம்மைத் திருப்தி செய்து கொண்டு மற்றவர்களும் அப்படியே செய்து கொள்ள விடுவது தான் நல்ல வழி. ஆனல் பத்திரமான அந்த வழியை நான் பின்பற்றவில்லை. கடவுள் தான என்னைக் காப்பாற்ற வேண்டும்! முட்டாள்களைத் திருப்தி செய்வது எவ்வளவு கடினமான வேலை?

செல்வி கின்னேர்டு—அது தானே சரியான பெயர்—நேற்று இங்கு ஒரு மணி நேரம் வந்திருந்தார். அவர் குலுங்கிக் குலுங்கிச் சிரிக்கும்படி செய்தேன். என்னைக் கிறிஸ்தவ சமயத்திற்கு மாற்ற அவரால் இயலவில்லையெனினும், மிகுந்த திருப்தியுடன் அவர் சென்ருர். நான் சும்மாயிருக்கும் நேரத்தில், அந்தப் பேட்டியைச் சித்திரிக்கும்படி என்னிடம் கேள். இல்லாவிடில் பியாரிலாலைக் கேள். அவரும் நாயகமும் கூட இருந்தனர்.

உன் முதல் கட்டுரையை நான் ஏற்றுக் கொண்டுள்ளேன். கூட்டத்தைப் பற்றிய விவரம் ஹரிஜனுக்குத் தேவையில்லை. அது நன்ருக எழுதப்பட்டுள்ளது. 'ஹிந்துஸ்தான் டைம்ஸ்' போன்ற வற்றிற்கு அதை அனுப்பு. அதையும் மூன்று பழைய கட்டுரைகளை யும் திருத்தி அனுப்புகின்றேன். மொழி பெயர்ப்புகள் நன்ருக இருக்கின்றன; சில பகுதிகளில் சொல்லாட்சி சிறப்பாக இருக் கிறது. எழுத்து முன்பை விடத் திருந்தியதாகவும் உறுதியாகவும் உள்ளது.

பாப்லாவுக்குச் சுரம் வந்திருந்தது. இப்பொழுதும் சிறிது சுரம் உள்ள போதிலும், முன்பை விடத் தேவலை.

பண்டித குன்ஸ்ரு இன்று இங்கிருக்கின்ருர். கோதண்டராவ் வருகிருர். மௌலான செவ்வாய்க்கிழமையன்று வருகிருர். புன வுக்குச் செல்ல நான் விரும்பவில்லை. ஆனல் அவர் வற்புறுத்தினல் நான் மறுக்கமாட்டேன். நான் 'ஹரிஜன்' இதழுக்கும் எழுத வேண்டும். ஆகவே ஒய்வு நேரமே இல்லை. நீ ஓரளவாகிலும் ஓய் வெடுத்துக் கொள்.

கதரைப் பொறுத்தவரை நீ பல்வேறு கடைகளுக்கும் எழுதி, அவற்றைத் திருத்த வேண்டும். அதைப் பற்றிப் பிரசுரிப் பதில் பலன் எதுவும் இராது. உன்னல் அதை ஒழுங்குபடுத்த இயலவில்லையென்ருல், நான் உனக்கு ஆதரவாக வர ஆயத்தமா யிருக்கின்றேன். காசு கொடுத்துவிட்டுத் தான் பொருளை எடுத்துச் செல்ல வேண்டுமென்ற நிபந்தனையைத் தளர்த்த முடியாது. பிரபல மானவர்களுக்குக் கடனில் விற்பனை செய்து, நாம் அதிக இழப்பை வருவித்துள்ளோம். ஆகவே தவறு செய்த விற்பனை உதவியாளர்

தண்டிக்கப்பட்டது பொருத்தமே. சலுகைகளை தாட்சணியத்திற்காகக் காட்டினால், சட்டங்கள் சீராகச் செய்ய முடியாது.

அன்பு,

**கொடுங்கோலன்**

## 209

*சேவாகிராமம், வார்தா*
*27—7—1940.*

அன்புள்ள முட்டாள்,

உன் மொழிபெயர்ப்புகள் பலவற்றைத் திருத்தி ஒரு கட்டு அனுப்பினேன். இன்னும் இரண்டும், கடைசி மொழிபெயர்ப்புகளும் அனுப்புவதற்குத் தயாராக இருந்தன; ஆனால் அவை விடுபட்டுப் போயின. அவற்றை இன்று அனுப்புகிறேன். அவற்றுடன் அதுலானந்த் அனுப்பியிருந்த துண்டுப் பிரசுரங்களையும் அவர் கடிதத்தையும் அனுப்புகின்றேன். மூன்று மாதங்களுக்கொருமுறை அவர் நோயால் படுத்துக் கொள்கிறார். இவ்வளவு விளம்பரத்துக்குப் பின்னும் அவர் புத்தகங்கள் விற்பனையாகாமல் இருப்பது ஆச்சரியமே. புத்தகம் படிக்கும் பொதுமக்கள் இத்தகைய இலக்கியத்தைப் பயன்படுத்த முன்வரவில்லை என்பதைத்தான் இது குறிக்கின்றது. புத்தகங்களால் கலாச்சார ஒருமையை நிலைநாட்ட முடியாது.

உன் மொழிபெயர்ப்புகளில் சில நன்றாக இருக்கின்றன. எல்லாம் ஒரே சீராக உயர்வாக இல்லை. நடையில் இன்னும் நிதானம் ஏற்படவில்லை. சொற்களைச் சிரமப்பட்டுத் தேடிப் பிடிப்பதுபோல் தோன்றுகிறது. இதில் வியப்பில்லை. இவ்வளவு முன்னேற்றம் அடைந்துள்ளாயே என்பதுதான் வியப்பிற்குரியது. உனக்கு இன்னும் அதிகப் பயிற்சி தேவை. தற்போது வழக்கில் உள்ள இந்தி நடையில் நீ அதிகம் படிக்க வேண்டும். ‘பிரதாப்’ இதழைப் படிப்பது பயன்தருமென்று உனக்கு யோசனை கூறியுள்ளேன். மற்ற நல்ல இந்திச் செய்தித் தாள்களையும் ஒரு நல்ல இலக்கண நூலையும் படிப்பதும் பயன்தரும்.

பாப்லாவுக்கு இன்னும் சுரம் இருக்கிறது; ஆயினும் கவலைக்கு இடமில்லை. குமரப்பா இங்கு வருகிறார். அன்றாட வேலையிலிருந்து அவருக்கு ஓய்வு தேவை.

அம்துல் சலாம் இன்னும் பலவீனமாகவே இருக்கிறாள். பியாரிலால் மேற்பார்வையில் அவள் கடிதப் போக்கு வரத்தைக் கவனித்துக் கொள்வதுடன், உருது மொழிபெயர்ப்புகளும் செய்கிறாள்.

அன்பு,

**கொடுங்கோலன்**

இக்கடிதம் *30*ந்தேதி உனக்குக் கிடைக்கும். நான் இனிக் கடிதங்கள் எழுத வேண்டியதில்லை என்று எண்ணுகிறேன்.

## 210

பம்பாய்,
*15—9—1940.*

என் அன்புள்ள அமிருத்,

அ. இ. கா. க. கூட்டத்தில் இதை எழுதுகிறேன். யாக்கை இங்கிருந்த போதிலும், ஆவி அங்கு இருக்கிறது. நீ அங்கிருப்பது என் மனத்திற்கு நிம்மதியைத் தருகிறது. உன் அறிக்கைகள் நன்ருக இருக்கின்றன; சுற்றி வளைக்காமல், சொல்ல வேண்டிய வற்றை நேராகச் சொல்கின்றன. டைபாய்டு சுரத்தால் தாக்கப் பட்டவர், குணமடைந்து வருகிருரென்று எண்ணுகிறேன். சரளா தேவியைப்பற்றித் தின்ஷாவிடம் விவரமாகப் பேசியுள்ளேன். இயற்கை மருத்துவம் செய்து அவள் குணமடைய வேண்டுமென்ருல், தம் கவனிப்பில் அவள் சிகிச்சைபெற வேண்டுமென்றும் அவர் உறுதியாகக் கூறுகிருர். அவள் எப்பொழுது புனுவுக்குச் செல்ல முடிகிறதோ, அப்பொழுது அவளைப்பற்றிய பொறுப்பை ஏற்றுக் கொள்ள அவர் சித்தமாயிருக்கின்ருர். அவள் அங்கு செல்லாவிடில், நேரடியான கண்காணிப்பில் அவள் கொய்னு சாப்பிடவேண்டும். மண்ணீரல் கோளாறைக் குறைக்கவேண்டும். தன் உடம்புடன் அவள் விளையாடக் கூடாது. இதை அவளுக்குப் படித்துக்காட்டு. தின்ஷாவிடம் செல்ல அவள் முடிவு செய்தால், அவள் உடனே செல்ல வேண்டும். அவருடைய கட்டணம்பற்றி அவள் யோசிக்க வேண்டாம். அவ்வாறு செய்யாவிடில், அவள் சிவில் மருத்துவ மனைக்குச் சென்று, நிச்சயமாகக் குணமடைய வேண்டும். தனக்கு எது உசிதமென்று அவளுக்குத் தோன்றுகிறதோ, அவ்வழியைப் பின்பற்றுவதில் போலி அடக்கம் குறுக்கிடக் கூடாது.

செவ்வாய்க்கிழமைக்கு முன்னல் என்னல் புறப்பட இயலாதென்று எண்ணுகிறேன். ஆகவே புதன்கிழமையன்று எங்களை எதிர்பார்க்கலாம்.

அரசியல் நிலைமைபற்றி, நீ மகாதேவிடமிருந்தும் பத்திரிகைகளிடமிருந்தும் அறிந்துகொள்ளலாம்.

வேலை அதிகமாயிருந்தாலும், சுமையை நான் நன்கு தாங்கிக் கொள்கின்றேன். இறைவனுக்கு நன்றி செலுத்தவேண்டும். ஷம்மியின் உடல் நிலையை முன்னிட்டு நீ சிம்லாவுக்குச் செல்லவேண்டிய அவசியம் ஏற்படவில்லை என்பது குறித்து எனக்கு மகிழ்ச்சி.

உன் குறைந்தபட்ச வசதிக்கு, சிம்லா பணியாளர் இல்லாதது ஒரு குறையாக உனக்குத் தோன்றவில்லை என்று நம்புகிறேன்.

சாரதாவும் அவள் அன்னையும் அங்கு வந்து விட்டார்களென்றும் அவளும் குழந்தையும் நன்றாக இருக்கின்றனரென்றும் எதிர்பார்க்கிறேன்.

பர்சுரே சாஸ்திரியும் அக்பரும் நன்றாக இருப்பது குறித்து மகிழ்ச்சி.

அன்பு,

பாபு

## 211

சேவாகிராமம், வார்தா,
*11—1—1941.*

என் அன்புள்ள முட்டாள்,

உன் தந்தி கிடைத்துள்ளது. நேற்று எழுத வேண்டுமென்று தான் தீவிரமாக உத்தேசித்திருந்தேன். ஆனால் முடியாமல் போயிற்று. பிற்பகல் *3* மணிக்குத் தொடங்கிய பேட்டிகள், இரவு உணவு இரண்டாவது மணி அடித்த பிறகுதான் முடிந்தன. ஆகவே உனக்கெழுத அவகாசம் இல்லாமல் போயிற்று. ஆனால் இங்கு உனக்கு வந்த சில கடிதங்கள் அங்கு உனக்குத் திருப்பி அனுப்பப் பட்டன. அது உனக்கு ஓரளவு திருப்தி அளித்திருக்கும்.

அங்கு பயனுள்ள வழியில் உன் நேரத்தைச் செலவு செய்கிறாயென்று நம்புகிறேன். அம்புஜத்தைப் பார்க்கவும், இந்திப் பிரசார சபைக்குச் செல்லவும் தவறாதே.

நீ கொண்டுவரும் பழங்களின் விலையைத் தெரிந்துகொள். அவசியம் தேங்காய் கொண்டுவரவேண்டும். (புளிப்பான) எலுமிச்சையும் கொண்டு வா. அவை வார்தா சந்தையில் தாராளமாகக் கிடைப்பதில்லை. நாட்டுக்காய்களையே சாப்பிடும் பழக்கம் பரவி வருகிறது. நீ இங்கிருந்தபோது ஈடுபட்டதைக் காட்டிலும் அதிக உற்சாகத்துடன் நான் இம் முயற்சியில் ஈடுபட்டுள்ளேன். சமைக்கப்பட்ட காய்களைச் சாப்பிடுவதை நிறுத்திவிட்டேன். இரத்தக் கொதிப்பும், மிகவும், வியக்கத்தக்க முறையில் குறைந்து விட்டது. மூன்று வேளைகளிலும் குருதிநாள விரிவு இயக்கம் *150* வாக்கிலும், சுருங்கியக்கம் *100*-க்குக் குறைவாகவும் தான் உள்ளது. வாய்வு குறைந்துவிட்டதே காரணம்.

நான் எழுதிக்கொண்டிருந்த குறிப்பு நேற்று முடிந்தது. அங்கு அல்லது நீ திரும்பிவரும் வழியில் அதைப் பார்ப்பாய்.

சாஸ்திரிஜி நன்றாக இருக்கின்றார். உன்னை உபசரிக்கும் அம்மையாரை நான் விசாரித்ததாகச் சொல்லவும்.

அன்பு,

பாபு

## 212

சேவாகிராமம், வார்தா,
*17-3-'41.*

சி. அமிருத்,

இத்துடன் சில இணைப்புகள் அனுப்பியுள்ளேன். உரிய தேதிக்குமுன் வாக்குச் சீட்டை அனுப்பிவிடு. உன் தேர்வுபற்றி நான் உனக்குயோசனை கூறமாட்டேன். உன் விருப்பப்படி வாக்களி.

நேற்று நான் ஒன்றும் அனுப்பவில்லை.

பியாரிலால் நாளை சட்டமறுப்பில் ஈடுபடுகிறார்.

மகாதேவ் வியாழனுக்கு முன்னால் திரும்பமாட்டார். 'ஹரிஜன்' இதழ் அனேகமாக 29ந் தேதி வெளியாகும். சாஸ்திரி தேறி வருகிறார். வெப்பம் தொடர்ந்து கடுமையாக உள்ளது.

இரத்தக் கொதிப்பு கட்டுப்படுத்தப்பட்டுள்ளது. இதை எழுதும் நேரத்தில் எடுக்கவில்லை.

உன் குடை பயன்படுகிறது.

பிரபாவதி நேற்று வந்தாள். நான் ஆயத்தமாக இருந்தால், நாளை ஜயப்பிரகாஷிடம் செல்வாள்.

அன்பு,

பாபு

## 213

சேவாகிராமம், வார்தா,
*19-3-1941.*

சி. அமிருத்,

G. பற்றி ஒரு கடிதம் வந்துள்ளது. என்ன செய்யமுடியும்?

ஜானகிபென்னுக்காக ராதாகிஷன் கொண்டுவந்த சிறு களிம்புப் பெட்டி உனக்கு நினைவிருக்கிறதா? அது எங்கிருக்கும்? பத்திரமாக வைக்கும்படி உன்னிடம் கொடுத்தேன். உனக்கு நினைவிருந்தால், நீ தந்தி கூட அனுப்பலாம், அல்லது எழுது; உன் விருப்பம்போல் செய்.

பியாரிலாலுக்கு 6 மாத தண்டனை கிடைத்துள்ளது.

மகாதேவ் நாளை வருகிறார்.

அன்பு,

பாபு

## 214

சேவாகிராமம், வார்தா,
*21-3-1941*

சி. அமிருத்,

நேற்று எழுதத் தவறிவிட்டேன். உன் இந்தி எழுத்து அருமையாக இருக்கிறது; நடையும் நன்ருக இருக்கிறது. அங்கு இயன்ற அளவு பயிற்சி செய்துகொண்டால், நீ இந்திக்கு நல்லசேவை செய்யமுடியும். ஏப்ரல் 29ந் தேதி முதற்கொண்டு 'ஹரிஜன்' மீண்டும் வெளிவரலாம்.

ராம் நாராயணனின் கடிதங்கள் எனக்குப் பிடிக்கவில்லை. உண்மையை மறைக்க வேண்டுமென்ற ஆசை இருக்கிறது. அவருக்கு நான் எழுதி, என் கடிதத்தை உனக்கு அனுப்பும்படி கேட்டுள்ளேன். அதற்குப் படியொன்று எடுத்து வைக்கவில்லை.

சட்டக் குழுபற்றி நான் ஏற்கெனவே உனக்கு எழுதியுள்ளேன். மிருதுளாவிடமிருந்து இன்று பதில் எதிர்பார்க்கின்றேன்.

சுசீலாவிடம் சிகிச்சை பெற பா டில்லிக்குச் சென்றுள்ளாள். சிகிச்சையை டில்லியில் நன்ருகச் செய்ய முடியுமென்று சுசீலா தந்தி அனுப்பியிருந்தாள். பா மிகவும் தைரியமாக இருக்கிருள். ஒரு நொடியும் வீணுக்காமல் புறப்பட்டுத் துணை இல்லாமலே சென்ருள்.

கல்லூரியில் இந்திய வாழ்க்கை முறையையே நீ உறுதியாகப் பின்பற்றுவது குறித்து மகிழ்ச்சி. நியாயமற்ற எதிர்ப்பு அனைத்தும் உன் உறுதியின் முன் மறைந்துவிடும்.

உன் பாடப் புத்தகம் கிடைத்தது. அதைப் படிக்க உத்தேசித்துள்ளேன். சுசீலாவுக்கும் ஒரு புத்தகம் அனுப்பு.

A. நினைவு நிதிபற்றி என் வேண்டுகோளைப் பார்த்திருப்பாய். சிறியவர், பெரியவர், அனைவரிடமிருந்தும் நீ எவ்வளவு இயலுமோ, அவ்வளவு திரட்டவேண்டும்.

அன்பு,
பாபு

## 215

சேவாகிராமம், வார்தா,
*25-3-'41*

சி. அமிருத்.

உன் கடிதம். நீ கேட்டவாறு, தந்தி அனுப்பியுள்ளேன். ஆண்களின் கூட்டங்கள் போன்றவற்றில் நீ கலந்துகொள்ள வேண்டா

மென்று விரும்புகிறேன். உன் தரத்தைக் குறைக்க இடம் கொடுக்கக்கூடாது. மாணவர்கள் உண்மையில் நீ வரவேண்டுமென்று விரும்பி வற்புறுத்தினுல் சரி. பெண்கள் கூட்டங்களுக்கு எப்பொழுதும் செல்லவேண்டும். குஜராத்திற்கு நீ செல்லவேண்டாம்.

களிம்பு, அந்த இடத்திலேயே இருந்தது. அது ஜானகி பென்னுக்காக.

நான் நலமாக இருக்கின்றேன். நடுப்பகலில் இரத்த அழுத்தம் *142/90*.

பெண்கள்பற்றி நான் இறுதியான கருத்து இன்னும் தெரிவிக்கவில்லை. உனக்கு அவசரமில்லையே?

அன்பு,

பாபு

'ஹரிஜன்'-ஏப்ரல் 5ந் தேதி முதல்—ஆமதாபாத்.

## 216

சேவாகிராமம், வார்தா,
*29—3—1941*

சி. அமிருத்,

நாமொன்று நினைக்கத் தெய்வமொன்று முடிவுசெய்யும். 'ஹரிஜன்' ஏப்ரல் 5ந் தேதி முதல் மீண்டும் வெளிவருமென்று நேற்று அறிவிக்கப்பட்டது. இன்று அரசாங்கத்திடமிருந்து ஒரு கடிதம் வந்துள்ளது. என்னைப் பொறுத்தவரை, அது தடை விதிப்பதற்குச் சமமாகவே உள்ளது. ஆகவே ஏப்ரல் 5ந் தேதி 'ஹரிஜன்' மீண்டும் வெளிவராது என்று இப்பொழுது நான் அறிவித்துள்ளேன்.

உன்னிடமிருந்து இன்று கடிதம் எதுவும் வரவில்லை. நீ தினமும் எழுதுவாயென்று எதிர்பார்க்கவில்லை தான்.

நான் நலமாகவே இருக்கின்றேன். ஒருவகையில், மீண்டும் பத்திரிகை நிறுத்தப்பட்டுள்ளது என் உள்ளத்திலிருந்து ஒரு சுமையை நீக்குகிறது.

அன்பு,

பாபு

## 217

சேவாகிராமம், வார்தா,
*31-3-1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் இரு கடிதங்களும் இன்று கிடைத்தன. நேற்றுக் கடிதம் வராததற்கு அதுதான் காரணமாகும்.

பெண்கள்பற்றி இறுதியான கருத்தை நான் உனக்குத் தெரிவித்துள்ளேன்.

ஷா என் பக்கத்தில் இன்னும் வரவில்லை. என் கடிதத்தை அதிகமாகவோ, நீண்டகாலத்திற்கோ, பருக்கி தவறான வழியில் பயன்படுத்த முடியாது. நான் எடுத்துள்ள நிலை, இதுபோன்ற எல்லாப் பிரச்னைகளுக்கும் பொருத்தமானது. மத்யஸ்தத்திற்குச் செல்வதுபற்றி எப்பொழுதுமே அஞ்சத் தேவையில்லை. நடுவர் அல்லது நடுவர்களைத் தேர்ந்தெடுப்பது எப்பொழுதும் நமக்குக் கட்டுப்பட்டது. மாணவர்களை ஒரு கட்சி அடிப்படையில் ஒன்று திரட்டக் காங்கிரஸ் முற்படக்கூடாது என்ற உன் கருத்தை நான் ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் தனிப்பட்ட சில காங்கிரஸ்வாதிகள் முயற்சியை யாரால் தடுக்கமுடியும்? இதையெல்லாம் எண்ணி நீ மன வேதனை அடையக்கூடாது. நம்மால் செய்யக்கூடியது அனைத்தையும் செய்த பின், நடப்பது நடக்கட்டும் என்று விடுவதே அறிவுடைமையாகும்.

பஞ்சாப் காங்கிரஸ் விவகாரங்களைப் பொறுத்தவரை, உன் அளவுக்கு நான் கலவரம் அடையவில்லை. பெரியதொரு ஜனநாயக அமைப்பில், திடீரென நடவடிக்கை எடுக்கமுடியாது. நல்லவர்கள், கெட்டவர்கள், அனைவருக்கும் அந்த அமைப்பில் இடமுண்டு. மொத்தத்தில் கெட்ட சக்தி ஓங்கினால், அமைப்பு அடியோடு சீர் கெட்டுப்போகும். ஆகவே உன்னை எந்தவகையிலும் நீ வருத்திக் கொள்ளாமல், உன்னால் சேகரிக்க முடிந்த தகவல்கள் அனைத்தையும் நீ கொண்டுவா. என்ன நடவடிக்கை எடுக்க இயலும் என்பதை நான் பார்க்கின்றேன்.

என் வேண்டுகோளை ஒட்டி, அதிக நிதி தேறவில்லை. இதற்காக மல்கானி ஆமதாபாத்திற்கும் டில்லிக்கும் சென்றுள்ளார். அவர் ஓரளவு நிதி திரட்டுவாரென்று நான் உறுதியாக நம்புகிறேன். ஒன்றும் தேறாவிடில், நானே சில ஊர்களுக்குச் செல்ல வேண்டியிருக்கும். பார்க்கலாம்.

நான் இன்னும் நலமாகவே உள்ளேன். அம்துல் சலாம் முன்பைவிடத் தேறியுள்ளாள். பகவதியும் அவ்வாறே. பாவின் இருக்கையில் ஜானகிபென் அமர்கிறாள்; உன் இடத்தில் மதாலஸா. ஜானகிபென் இப்பொழுது சாதாரண உணவு அருந்துகிறார்.

மதாலஸாவுக்கு இன்னும் சற்று கவனம் தேவை. ஆயினும் நோயென்று சொல்லும் அளவுக்கு ஒன்றுமில்லை.

அன்பு,

பாபு

## 218

சேவாகிராமம், வார்தா,
*3-4-1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் இரு கடிதங்களும் இன்று வந்தன. அது ஏன்? இம் மாதிரி நடப்பது இது மூன்ருவது முறை.

நேற்று என்னுல் எழுத முடியவில்லை.

ஸுபேரிக்கு உன் கடிதம் சரியாக இருக்கின்றது. லாலா தூனி சந்துக்கு நீ கூறியுள்ள யோசனைகளும் பதில்களும் பொருத்த மாக உள்ளன. என்ன நடக்கிறதென்று பார்க்கலாம்.

மிருதுளாவிடம் சில குறைகள் இருக்கலாமென்ற போதிலும், அவளிடம் மிகச் சிறந்த பண்புகள் அமைந்துள்ளன. அவள் ஆசிர மத்தின் வாயிற்காப்போன் கொலை செய்யப்பட்டார். ஆனுல் அவள் அச்சமடையவில்லை. மிகவும் நிதானமாகவும் தைரியமாகவும் நிலைமையைச் சமாளித்து வருகிருள். இத்தகைய பெண்களை நாம் போற்றி வளர்க்க வேண்டும். அவள் அரியதொரு பெண்மணி.

'ஹரிஜன்' பற்றி மகாதேவ் உனக்கு விவரமாக எழுதியுள்ளார்.

ஷம்மி முற்றிலும் சுகமடையவில்லை என்ருலும், சற்று தேறி யுள்ளாரென்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

## 219

சேவாகிராமம், வார்தா,
*12—4—1941*

சி. அமிருத்,

தவருமல் வரும் உன் கடிதம் கிடைத்துள்ளது. மொத்தத்தில் வெள்ளை அல்லது பழுப்பு நிறத் தாளைப் போல் அருமையான தாள் வேறு கிடையாது.

நீ சந்தித்திருக்க வேண்டிய பேர்களைச் சந்தித்து வருவது குறித்து மகிழ்ச்சி. (இந்தக் கட்டத்தில் எனக்குத் தூக்கக் கலக்கமாய் வந்ததால், பேனாவைக் கீழே போட்டு, உறங்கிவிட்டேன்.)

உன் தந்தி கிடைத்தது. நீ டில்லிக்குச் செல்வதை நிறுத்திக் கொள்ளவேண்டும். உன் இயலாமை குறித்து அரியநாயகத்திற்குச் செய்தி அனுப்பி விட்டாயென்று எண்ணுகிறேன். அங்கு இன்னும் இரண்டு நாட்கள் இருப்பதால், உன் வேலைக்கு இன்னும் அதிக வாய்ப்பு கிடைக்கும்.

துர்கா சற்று தேறியுள்ளாள். மகாதேவ் பம்பாய் சென்றுள்ளார். அவர் திங்கள் அல்லது செவ்வாய்க்கிழமை திரும்புவார். நீ புதன் கிழமை இங்கு வந்து சேருவாய். ஆகவே இதுதான் உனக்கு நான் எழுதும் கடைசிக் கடிதம்.

அன்பு,

பாபு

## 220

தனிப்பார்வைக்கு

சேவாகிராமம், வார்தா,
*5—7—1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதமும் தந்தியும் இன்று எனக்குக் கிடைத்தன. உன் கடிதத்தின் படி, உன் தந்தி எனக்கு 3 ந் தேதியாகிலும் கிடைத்திருக்க வேண்டும். இந்தத் தாமதம் எப்படி நேரிட்டது என்று நீ விசாரிக்க வேண்டும்.

J...க்கு நாசிக்குக்குத் தந்தி அனுப்பியுள்ளேன். அவரை அடுத்த வாரம் நீ எதிர்பார்க்கலாம். உன் கடிதத்தை அவரிடம் காட்டுவதற்காக வைத்துள்ளேன். மற்றக் கடிதங்கள் அனைத்தையும் படித்தவுடன் கிழித்து விட்டேன்.

சேவாகிராமத்தில் நீ தங்க எவ்வளவு மகத்தான தியாகம் செய்ய வேண்டியிருக்கிறது என்பதை உன் கடிதம் காட்டுகிறது. கோடை மாதங்களை நீ குளிர்ச்சியான மலை ஊர்களில் கழிப்பது அவசியம் என்பது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. உன்னை நீயே வன்முறைக்கு ஆளாக்கிக் கொள்ளக் கூடாது. அவ்வாறு வன்முறை செய்தால், உன் உடல் நிலை திடீரென முறிந்து மோசமாகி விடுமென்று ஷம்மி கூறுவதை நானும் நம்புகிறேன். தன்னைத் தானே அடக்கிக் கொள்வது ஒரு நிலை வரை தான் நல்லது; அந்த உசித நிலையை மீறிச் சென்று விட்டால், அது நன்மை பயவாது.

இம் முறை நீ சிம்லாவில் தங்கி, உன்னை நிதானப்படுத்திக் கொள்ள வேண்டும்; அக நிறைவு ஊட்டுவதாய் அமைந்தால் தான், எந்தத் தியாகமும் நன்மை செய்யும். உன்னுடன் J. இருப்பாரென்பது நல்லது.

S-இன் கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். சிம்லாவில் தங்குவதால், நீ எவ்வளவு தடியாகப் பூரிக்கின்றாய் என்று பார்க்கலாம். நீ திரும்பி வரும்போது, அப்பூரிப்பை இழந்து விடக் கூடாது.

அம்துல் சலாம் இன்னும் சிக்கலான புதிராகவே இருக்கின்றாள். அவளிடம் அலாதித் தன்மை ஒன்று இருக்கின்றது. அவள் ஆஸ்துமா இன்னும் அடியோடு நீங்கவில்லை. அவள் மிகவும் பலவீனமாக இருக்கின்றாள். அவள் முன் கோபம் முன்போலவே தான் இருக்கின்றது.

மகாதேவ் 9 ந் தேதி திரும்புகிறார்.

இங்கு நல்ல குளிர்ச்சியாகத் தான் இருக்கின்றது. மழை இன்னும் பெய்கிறது; ஆனால் ஓயாத அடை மழை இல்லை. தாழ்வாரத்திற்குப் பதிலாக நம் அறையில் நான் உறங்குகின்றேன். தாழ்வாரம் மற்றவர்களுக்குத் தேவைப்படுகிறது. நேற்றிரவு நான் இரு வாயிற்கதவுகளுக்கும் இடைவெளியில் உறங்கினேன். ஆதலால் காற்று அதிகமாக வீசியது. என் தோழர்கள் என்னுடன் இருந்தனர். சங்கரன், பியாரிலால் பக்கத்தில் சுவற்றுக்குப் பின்னுள்ள பாதையில் படுத்திருந்தார்.

அன்பு,

பாபு

## 221

தனிப் பார்வைக்கு

சேவாகிராமம்,
*6—7—1941*

சி. அமிருத்,

உன் கடிதம்.

நான் ஒரு நாள் கூட எழுதத் தவறவில்லை. ஆகவே தவறி விட்ட கடிதம் உனக்கு வந்து சேரும்.

பருக்கியின் வருகை பற்றி நான் உனக்குச் சொல்ல மறந்து விட்டேன். ஒரு மணி நேரம் நாங்கள் கருத்து பரிமாறிக் கொண்டோம். ஆனால் அது பூர்வாங்கப் பேச்சாகவே அமைந்தது. அவர் மீண்டும் வருவதாகச் சொன்னார். அவரைச் சந்தித்ததால் எதுவும்

கெட்டுப் போனதென்று நான் கருதவில்லை. அவர் டில்லி ஆள் ஆதலால், நந்தன் அவரைப் பற்றித் தம் கருத்தைத் தெரிவிக்க வேண்டும்.

நேற்று புருஷோத்தம் திரிகம்தாஸ் இங்கு வந்திருந் தார். கான் சாகிப் 9ந் தேதி வருகிறார். ஜவாஹர்லால் நாளை அல்லது புதன்கிழமை நிச்சயமாக வருவார்.

தலைவலியை வரவழைத்துக் கொள்ள உனக்கு என்ன துணிச்சல்?

குழந்தையை முன்னிட்டு ராஜா விடுதலை செய்யப்பட்டுள்ளார். அவரிடமிருந்து சிறு கடிதம் ஒன்று வந்தது. ராஜாவின் விடுதலைக் காக, போலீஸ் கமிஷனரை தீரு கேட்டிருந்தார்.

உன் பழங்கால வரலாற்றை ஆராயும் கலையை எப்பொழு திருந்து கற்றுள்ளாய்? இலட்சக்கணக்கான உன் முன் பிறவி களில், நீ ஒரு பனியாவை விடவும் மோசமான பிறவி எடுத்திருக்க மாட்டாய் என்பது உனக்கு எப்படித் தெரியும்? எப்படியும் விலைச் சீட்டை அனுப்ப வேண்டாமென்று நீ காகித வியாபாரியிடம் சொல்லியிருந்தால், அவர் உன் வேண்டுகோளை ஏற்றுக்கொள்வா ரென்று நான் உனக்கு யோசனை கூறவில்லையா? அந்தக் காகி தத்தை நான் பயன்படுத்தும்போது என் மனம் என்னை உறுத்து மென்றும் நான் உனக்குச் சொல்லியிருந்தேன். அவர் அனுப்பிய விலைச்சீட்டு, உண்மையானது தானே. யாரிடமிருந்தும் அந்த விலையை அவர் கண்டிப்பாகப் பெற்றிருப்பார். ஆனால் இறுதி முடிவு செய்ய அவசரம் ஒன்றுமில்லை. என்னுடன் நீ வாதாடி, நியாயமென்று நான் உணரும்படி செய்தால், நான் அந்தக் குறிப்பு அட்டைகளை மகிழ்ச்சியுடன் பயன்படுத்துவேன்.

எங்கும் கடுமையாக மழை பெய்துள்ளது. இனிமேல் வரட்சிக் காலம் தொடரும் என்பதற்கு இது அறிகுறி அல்ல என்று எதிர் பார்ப்போமாக.

அன்பு,

பாபு

## 222

*சேவாகிராமம், வார்தா,*
*8-7-1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம். நடை, எழுத்து, இரண்டும் நன்றாக உள்ளன. நீ ஆங்கிலம் எழுதுவதைப்போல் வேகமாக இந்தி எழுதினால், உன் முன்னேற்றம் வியக்கத்தக்கதுதான்.

J. இன்று வந்தார். அவர் நலமாக உற்சாகமாகக் காணப்படுகிறார். 15ந் தேதி வரையாகிலும் இங்கு தங்க விரும்புகிறார். சில வேலைகளைச் செய்து முடிக்க அவர் விரும்புகிறார். அவரை நான் அவசரப்படுத்த விரும்பவில்லை.

நீ உன் தரத்தைக் குறைத்துக் கொள்ளக்கூடாது. அதிகாரிகள் எப்பொழுதும் உனக்கு மரியாதையாக ஒரு மறுப்பு அனுப்புவதை நான் விரும்பவில்லை. நீ இப்பொழுது என் பக்கம் வெளிப்படையாக வந்துவிட்டதால், நீ இனி எதையும் எதிர்பார்க்க முடியாது என்பதற்குச் சூசகமான அறிவிப்பு அது. அவர்கள் நிலையில், அவர்கள் அவ்வாறு நடப்பது நியாயமென்றே நான் கருதுவேன். நீ இரு தரப்பிலும் பேசமுடியாது. அவர்கள் நிலையிலிருந்து, அது நியாயமான வாதம் தானே. அவர்கள் வேறு நிலை எடுக்கமுடியாது. ஆனால் நீ வேறுவிதமாக நினைத்தால், நீ அவ்வாறே நடக்கவேண்டும். அதிகாரிகளுக்கு எழுதுவதே தவறு என்று சொல்லமுடியாது. புல் பிச்சையிலும் இதே வாதம் பொருந்தும். அவள் அறிவிப்புக்குப்பின், தங்களிடமிருந்து தகவல் வரும்வரை காத்திருக்கும்படி அவர்கள் கூறியுள்ளார்கள். அவள் 10ந் தேதி வரை காத்திருக்க இசைந்துள்ளாள். அதிலும் நீயே சுதந்திரமாக முடிவுசெய்து, அதன்படி நடக்கவேண்டும்.

அன்பு,

பாபு

## 223

சேவாகிராமம்,
4—8—'41

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம். இத்துடன் உனக்கு ஒரு கடிதம் அனுப்புகிறேன். அந்தப் பெண் உனக்கு நினைவிருக்கும்.

தற்போதைக்கு நீ ஒன்றும் செய்யவேண்டாம்.

J. மாத நடுவில் சென்றுவிட்டால், நீ வேலையில்லாமல் இருப்பாய்.

திறமையாகச் சிப்பம் கட்டுவதற்கும் பொதுவாக சுத்தமான வேலைக்கும், உனக்கு நற்சான்றிதழ் அளிப்பது பொருந்தும். உடல் நலனைக் காத்துக்கொள்வதிலும் நீ நற்சான்று பெறமுயலவேண்டும். இப்போது நீ உள்ள நிலையில், மிகவும் கவனமாகக் கையாள வேண்டிய கண்ணாடிப் பொருளாகத்தான் உன் குடும்பத்தினர் உன்னைக் கருதுகின்றனர்.

ஈக்களைச் சமாளிக்கும்படி ஷம்மியிடம் கூறு. தற்போது அவை பெரிய தொல்லையாக இருக்கின்றன. நீண்ட நாட்களுக்கு மழை பெய்யாமலிருந்தால், அவை நம்மை விழுங்கிவிடும். இத்தொல்லையைத் தீர்ப்பதில் உறுதியாக வெற்றி அளிக்கக்கூடிய பரிகாரம் எதுவும் உன் கைவசம் இல்லாவிடில், நீ இந்தப் போராட்டத்தில் ஈடுபடுவதை நான் விரும்பமாட்டேன்.

அன்பு,

பாபு

வீரம்மாவும் கரியப்பாவும் கர்நாடகத்திற்குச் சென்றுள்ளனர்.

## 224

சேவாகிராமம், வார்தா.
*10—8—'41*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம் சஞ்சலமூட்டுவதாய் உள்ளது. இவ்வளவு மோசமான தலைவலி உனக்கேன் வரவேண்டும்? நீ என்ன செய்தாய்? நீ நலமாகவும் பலமாகவும் இருக்கவேண்டும்.

ஆப்பிள்கள் வந்து சேர்ந்துள்ளன.

இன்னும் மழை பெய்து கொண்டிருக்கிறது.

கவி தாகூரின் மரணம் ஈடு செய்யமுடியாத இழப்பாகும். நற்குணம், மேதை, இரண்டும் ஒருங்கே அமைந்த அற்புதப் படைப்பு அவர்.

J. தொடர்ந்து தேறிவருவது குறித்து மகிழ்ச்சி.

அன்பு,

பாபு

## 225

சேவாகிராமம்,
*11—8—'41*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம். உன் தலைவலி போய்விட்டதா, ஏன் வந்தது, என்று நீ கூறவில்லை. J...யை நீ ஓராண்டுகாலம் சிறைப்படுத்தி

வைப்பதில் எனக்கு ஒன்றும் தடையில்லை—முழு நேரமும் நீ அவருடன் இருக்க வேண்டியிராத வரை. மாரி காலத்தில்தான் சிம்லா மிகச் சிறப்பாக இருக்குமென்றும், அதே சமயத்தில் அப்பொழுதுதான் செலவும் குறைவாக இருக்குமென்றும் நான் கேள்விப்பட்டதுண்டு. வாடகை மிகச் சொற்பமாம்; காய்கறிகளும் பழமும் மிக நயமாகக் கிடைக்குமாம். மாரிகாலத்தில் லால்ஜி அங்கு தங்கியிருந்தார்; அதனால் மிகுந்த நன்மை அடைந்தாராம்.

உனக்கு இன்னுமொரு வேலை கொடுக்கப் போகிறேன். செல்லரிப்பதைத் தடுக்க என்ன செய்ய வேண்டுமென்று எவரிடமிருந்தாவது கேட்டுச் சொல். இங்கு அதனால் பெருந்தொல்லை. என் குளிப்பறையை இப்பொழுது தாக்கியுள்ளது. நேரத்தில் அதைத் தடுக்காவிட்டால், எல்லா இடத்திலும் படர்ந்துவிடக்கூடும்.

இதற்குப் பரிகாரம் வேளாண்மைத் துறைக்குத் தெரிந்திருக்கலாம்.

தீரென், உடல் வருடும் வேலையையும், அலுவலக வேலையை லக்ஷ்மிதாசும் செய்கின்றனர் என்று நான் உனக்குச் சொல்லவில்லையா?

அம்துல் சலாம் நலமாக உள்ளாள். அவள் எடை ஏழு பவுண்டு கூடியுள்ளது. நாள் முழுவதும் ஓயாமல் வேலை செய்து கொண்டிருக்கின்றாள்.

அன்பு,

பாபு

ஆப்பிள்கள் உன் தோட்டத்திலிருந்து வந்தவையா?

## 226

சேவாகிராமம்,
*23—8—1941*

என் அன்புள்ள முட்டாள்,

உனக்கு இத்துடன் இரு கடிதங்கள்.

சுரம், இருமல், ஆகியவற்றுடன் நீ எப்படிப் போராடி வருகிறாய் என்பதைக் காண்கிறேன். உனக்கு வெற்றி கிடைப்பதாக.

தமக்கே உண்மையாக இருக்க தர்ம யாஷ் தேவ் விரும்பினால், முதலில் தம்மைத் தூய்மைப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று அவருக்கு எழுது.

பம்பாய் செல்லும் வழியில் சுசீலா இரண்டு நாட்களுக்கு இங்கு தங்கினாள். வேலையில் உரிமை விடுப்பில் அவள் இப்பொழுது இருக்கின்றாள். மயக்க மருந்து கொடுப்பதில் அதிக அனுபவம் பெற அவள் பம்பாய்க்கு அனுப்பப்பட்டுள்ளாள். அவள் சென்றமுறை பெற்ற அனுபவத்தின் பயனாக, நீண்டநாள் பயன் படாமல் கிடந்த விலையுயர்ந்த கருவி ஒன்றை அவர்கள் பயன் படுத்த இயன்றது.

காஞ்சனா, தன் தாய் வீட்டிற்குச் சில மாதங்களுக்குச் சென்றுள்ளார்.

முதலில் நான் தேசபந்து நினைவுச் சின்னத்தை முடிக்க வேண்டும். அதுவே ஓரளவு தாகூர் நினைவுச் சின்னமாகவும் அமையும். உன்னிடமிருந்து எவ்வளவு அதிகப்படியான தொகையைப் பெற இயலுமோ, அதை உரிய காலத்தில் பெற்றுக்கொள்வேன். சுசீலாவிடமிருந்து 500 ரூபாய் பெற்றுள்ளேன், தவணைகளில் தான் என்ற போதிலும்.

தெளிப்பு மருந்தை அனுப்பு. அதன் விலை அதிகமானது; ஆனால் நம் உடன் பிறவிகளான இந்த உயிரினங்களைத் தடுக்க அது பெரிதும் பயன்படுகிறது. மாதமிருமுறை ஆப்பிள்களை நீ அனுப்பலாமென்றும் உனக்குச் சொல்லியுள்ளேன்.

இப்பொழுது நான் நிறுத்தவேண்டும். நான் மறந்துவிட்டேனே. சர்தார் பற்றிப் பயந்தது வெறும் பீதியாகப் போய் விட்டது. ஏழு மருத்துவ நிபுணர்கள் 'போலிபஸ்' நோய் எதையும் காணவில்லை. ஆகவே கவலைக்கு இடமில்லை.

அன்பு,

பாபு

போலிபஸ் என்ற ஆங்கிலச் சொல்லில் ஒரு 'L' தான் உண்டு. இரண்டாக எழுதியது என் தவறுதான்.

## 227

சேவாகிராமம்,
27-8-1941

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம்.

என் வாழ்நாளில் சுயராஜ்யத்தைக் காண்பேனென்ற நம்பிக்கையை நான் இழக்கவில்லை.

நீ திரும்பும்போது உன் நெஞ்சு பாதிக்கப்படாமலிருப்பதில் நான் கவனம் செலுத்தவேண்டும்.

பிரகாஷை நீ சந்தித்து அழைத்தது குறித்து மகிழ்ச்சி. அவளுக்கு இன்னும் திருமணமாகவில்லை. திருமணம் ஆனது சத்யாவுக்கு. பிரகாஷ் பெட்டையாவில் இருக்கிறாள்.

குசும் இன்று புறப்படுகிறாள்.

அன்பு,

பாபு

அனைத்திந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்திற்காக கோஸிபென் இங்கு வந்திருக்கிறார். கேஸ்கர் கடிதத்தை இத்துடன் அனுப்புகிறேன். நரேந்திர தேவை உனக்குத் தெரியுமே. மகாதேவுக்கோ, நீ விரும்பும் வேறெவருக்கோ கடிதம் எழுதி, என்ன செய்ய முடியுமென்று பார்.

## 228

சேவாகிராமம், வார்தா,
*5-9-1941*

திருத்தப்படாதது

என் அன்புள்ள முட்டாள்,

பேசா நோன்பு வேளையில், உணவு வேளைக்கும் அஞ்சல் நேரத்திற்கும் முன்பு, நான் இதை எழுதுகிறேன்.

அகாதாவிடமிருந்தோ, ஹென்ரியிடமிருந்தோ எனக்குக் கடிதம் வரவில்லை. ஆனால் அந்தத் தாக்குதலை வெளியிட்ட இதழில் ஹென்ரியின் கட்டுரை ஒன்றையும் பார்த்தேன். அவரைத் திருத்த வேண்டுமென்று எண்ணினேன். அக்கட்டுரையை நீ பார்க்க விரும்பினால், உனக்கு அதை நான் அனுப்ப முடியும். ஹென்ரியின் முகவரி எனக்குத் தெரியாததால், அகாதாவிற்கு எழுதினேன்.

ஹைதராபாத் அழைப்பை நீ மறுத்தது சரியே. மற்ற அழைப்புகளை நீ மறுத்தாலும் சரியாகவே இருக்கும். அதை நீ தெரிந்துகொண்டு, அதற்குப் பதில் அனுப்ப வேண்டுமென்பதற்காகத்தான் உனக்கு அதை அனுப்பினேன். நீ அதை மறுப்பது தவிர வேறு வழியில்லை. நீ எந்தப் பொறுப்பையும் எடுத்துக் கொள்வதற்கு முன்னால், முற்றிலும் குணமடைய வேண்டும். இப்பொழுதே, உன் சாதனை நல்ல திருப்திகரமானது.

பாகிஸ்தான்பற்றி லாகூர் தீர்மானத்தை வெளியிட்ட துண்டுப் பிரசுரம் உனக்கு நினைவிருக்கிறதா? அதன் படிகள் இரண்டு நூல் நிலையத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளன.

நான் தீங்கை எதிர்பார்ப்பதில்லை. ஆகவே அத்தீங்கு நமக்கு நேரிடும்வரை—அது நிச்சயமாக நேரிடாது—பதில் சொல்வது ஒத்திவைக்கப்பட்டுள்ளது. இந்தப் பதிலை நீ திருப்திகரமாகக் கருதுவாயா? இதுவும் ஒரு பதிலா என்று கேட்பாயா?

தற்போதைக்கு நீ நரேந்திர தேவ்பற்றி ஒன்றும் செய்யவேண்டாம். நான் விசாரிக்கிறேன். டேராடூன் விவகாரம் பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது.

உடல்நலக் குறைவுக் காரணத்தைக் காட்டி—அது அனைவருக்கும் தெரிந்ததே—ஜெயப்பிரகாஷை வேறு சிறைக்கு மாற்ற வேண்டுமென பிரபாவதி எழுதினாள். அவள் கோரிக்கை, பரிசீலனையேயின்றி நிராகரிக்கப்பட்டது. வன்முறையை ஒட்டிய எச்சரிக்கைக்குத் தான் அவர்கள் பணிகின்றார்கள். நாரதர் திருத்தப்பட வேண்டியிருந்த கட்டத்தில் அவருக்கு ஏற்பட்ட குழப்பத்தைப் பற்றி இராமாயணம் கூறும் பகுதியை நாங்கள் இப்பொழுது படித்துக் கொண்டிருக்கிறோம். இறைவன் எவரை அழிக்க விரும்புகிறாரோ, அவரது அறிவு குழம்பச் செய்கிறார்.

ரட்லம் பற்றி ஒரு தந்தி வந்துள்ளது. அப்பிரச்னை பற்றி நான் உனக்கு முன்பே எழுதினேன்.

அன்பு,

பாபு

ஆந்திராவிலிருந்து வந்த கடிதத்தின் படி ஒன்றையும் உனக்கு அனுப்புகிறேன். அதன் பேரில் நீ நடவடிக்கை எடுக்கவேண்டுமென்று அவசியமில்லை. அவசியம் ஏற்படும்போது நீ அந்தத் தகவலைப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## 229

சேவாகிராமம்,
*14-9-1941*

என் அன்பார்ந்த முட்டாள்,

சுசீலா நேற்று வந்தாள்; இன்று போய் விட்டாள். தன் மூட நம்பிக்கையை வளர்க்கவே, பிரபா இரண்டு மூன்று நாட்களுக்குத் தன் தாய் வீட்டிற்குச் சென்றாள். அவள் சகோதரருக்கு ஒரு குழந்தை பிறந்துள்ளது. அதை ஒட்டிய வைபவம் ஒன்றுக்கு அவள் சென்றுள்ளாள். அன்னபூரண சிகிச்சைக்காகச் சுசீலாவுடன் சென்றுள்ளாள். காசநோயாக இருக்குமோ என்று அஞ்சினோம். அதன் அறிகுறி ஒன்றுமில்லை என்று டாக்டர் டேவிட் கூறுகிறார். ஆனால் அவளுக்கு மந்த சுரம் வந்து, மிகவும் பலவீனமடைந்திருந்தாள்.

இரு தூதுக் குழுக்கள் என்னைக் காணவந்துள்ளன—அல்லா பக்ஸ், சித்வா, ஒன்று; மற்றொன்று பர்மாவிலிருந்து.

இங்கு சில நாட்கள் தங்க வந்துள்ள முன்ஷியின் பெண் சரளா, பிரபாவின் இடத்தில் இருக்கின்றாள். அவள் மிக உயர்ந்த பெண். இந்தியாவிலேயே உள்ள மூன்று பெண் வழக்கறிஞர்களில் அவள் ஒருத்தி. ஆனாலும் மிக எளிய தன்மைகொண்ட அவள், அனைவருடைய நட்பையும் கவர்ந்து விட்டாள். என்னுடன் சில நாட்கள் தங்க வந்துள்ளாள்.

அன்பு,

பாபு

உன் கடிதம். ஹேன்காக் சந்திப்பு செப்டம்பர் 27, மாலை 4 மணி. உடல் தேறியுள்ளது குறித்து மகிழ்ச்சி.

## 230

சேவாகிராமம்,
*16-9-1941*

என் அன்புள்ள முட்டாள்,

நேற்று நான் எழுதிய கடிதத்திற்குப் பதில் தந்தி வியாழக் கிழமை வருமென்று எதிர்பார்க்கிறேன்.

இங்கு அஞ்சல் வந்து சேருமுன், இதை நான் எழுதுகிறேன்.

இத்துடன் இணைக்கப்பட்டுள்ளதுபற்றி உனக்கு எதுவும் தெரியுமா? சர்க்கா வாரத்திற்காக, ஜாஜுஜி ராஜ்கோட்டுக்குச் சென்றுள்ளார்.

ஐ.மா.விலிருந்து, முன்னாள் கைதி (சத்யாக்கிரகி) ஒருவர் நேற்றிரவு என்னைப் பார்க்க வந்தசர். காசநோயால் அவர் தாக்கப் பட்டிருந்தார். அவரை வெளியே அனுப்ப மனமில்லாமல், சமன் லால் அவருக்குத் தாழ்வாரத்தில் ஒரு படுக்கை தந்தார். அவர் நிலை பரிதாபமாய் உள்ளது. அவருக்குச் சிகிச்சை செய்வது கடினம். எதிர்பாராமல் வரும் இவர்களால், இந்த நிலையத்தை நடத்துவதில் உள்ள சிரமங்கள் அதிகரிக்கின்றன. அதிர்ஷ்டவச மாக, சோதனை நேரிடும் ஒவ்வொரு கட்டத்திலும் ஊழியர்கள் அதைத் தாங்கிக்கொள்ளப் பொறுப்புடன் முன்வருவதால்தான், இதுபோன்ற சிரமங்களைச் சமாளிக்க என்னால் முடிகிறது.

அல்லாபக்ஸ், சித்வா, இருவரையும் இன்று நான் பார்க்க வேண்டியுள்ளது.

அன்பு,

பாபு

தேவதாஸ் தன் வழக்கில் துணிவுடன் போராடி வருகின்ருன். உன் கடிதம் வந்துள்ளது. ஷம்மி சொல்படி நடக்க வேண்டியது தான்.

## 231

சேவாகிராமம், வார்தா,
*19—9—1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம் கிடைத்தது. நலனும் நலிவும் உனக்கு மாறிமாறி வருகின்றன. நம் பாதை கரடுமுரடாயில்லாமல், எப்பொழுதும் சீராகவும் சமனுகவும் இருப்பதில்லை. என்ருவது ஒரு நாள் நீ பூர்ண விடுதலை பெறுவாய்.

இப் பருவத்தில் வரும் ஆப்பிள்கள் தரக்குறைவாக இருக்கின்றன. பார்ப்பதற்கு அவை அருமையாகத் தோன்றுகின்றன. ஆனுல் சில பகுதிகள் மோசமாக இருக்கின்றன. இதற்காக எவரையும் குறை கூருதே. மறுமுறை ரகத்தை மாற்ற வேண்டும். இனி மாதமொருமுறை அனுப்பினல் போதும். இன்னும் சில நாட்களில் ஆரஞ்சுகள் கிடைக்கும். அப்பொழுது ஆப்பிள்கள் தேவைப் படாது.

அன்பு,

பாபு

சிந்துப் பிரதமர் இன்னும் இங்கிருக்கிருர். இன்னும் மூன்று நாட்களில் பிரேமா மீண்டும் சிறை செல்கிருள்.

பா

## 232

சேவாகிராமம்,
*22-9-1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம். எனக்குத் தெரிந்து நான் ஒரு நாள்கூடத் தவறவில்லை. ஏன் அஞ்சல் ஒழுங்காக வந்து சேருவதில்லை என்பது எனக்குத் தெரியவில்லை. நான் எழுதி யிருப்பேன் என்பதை மட்டும் நீ உறுதியாக நம்ப வேண்டும். பிறகு இரண்டு கடிதங்கள் ஒரே நாளில் உனக்குக் கிடைக்கும்போது, நீ நம்பியது சரிதான் என்பதை உணர்வாய்.

உன் உபசாரத்தையும் அன்பையும்பற்றி J. கதை கதையாகக் கூறுகிருர். உன் வீட்டில் தங்கி யிருக்கும் ஐந்தாறு பேர்களைக் கவனிக்க டோஃபாவைச் சேர்த்து முப்பது பணியாளர் இருப்பதைச் சித்திரிப்பதில் அவருக்குத் தனி மகிழ்ச்சி.

மகாதேவ் 27ந் தேதி, துர்கா, பாப்லா, ஆகியோருடன் இங்கு வரவிருக்கிருர்.

அக்டோபர் 1ந் தேதி அவர் ஆள்வார்க்குச் செல்லவேண்டும்.

அன்பு,

பாபு

நான் அஜந்தாவையோ எல்லோராவையோ பார்த்ததில்லை. சர் அக்பர் என்னை என்றுமே அழைத்ததில்லை என்று அவரிடம் கூறு. இப்பொழுது நான் செல்லுவதில் என்ன பயன்?

## 233

சேவாகிராமம், வார்தா,
29-9-1941

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம். கபூர்த்தலா நிபந்தனைகளை நாம் எளிதில் ஏற்றுக் கொள்ளலாம். உள்ளூரைச் சேர்ந்த நல்லவர் ஒருவர் கிடைத்தால், நாம் அங்கு முழுக் கடையைத் திறக்கலாம். சமஸ்தானம், தானே கதரை ஏன் உற்பத்தி செய்யக்கூடாது? அதற்குச் சாதகமான சூழ்நிலை அங்கில்லை போலும்.

J. நன்ருகத் தேறி வருகிருர். அவர் உள்ளம் இன்னும் சோர்வாகவே இருக்கிறது. பசு சேவை சங்கத்தின் பெரும் பொறுப்பை அவர் ஏற்றுள்ளார். நாளை பூர்வாங்கக் கூட்டம் நடக்கவிருக்கிறது. அதில் நானும் கலந்துகொள்ள வேண்டும். நீ வர விரும்புவாயா? அது முக்கியமாகப் பெண்களுக்கு ஏற்ற வேலை. நூற்பதும், பால் கறப்பதும், குழந்தை பெறுவதும், வீட்டை நடத்துவதும் பெண் தானே? துஹிதா என்பதற்கு மகள் என்றும் பால்காரி என்றும் பொருள் உண்டு.

இங்கு வந்த இரண்டு கட்டுகளை உன் முகவரிக்குத் திருப்பி அனுப்பியுள்ளேன். 'புல்' எழுதிய கடிதத்தை நான் கிழித்து விட்டேன். அவள் மீண்டும் ஒரு கடிதம் எழுதியுள்ளாள். எல்லாம் இனிது முடியுமென்று நம்புகிறேன்.

அன்பு,

பாபு

## 234

சேவாகிராமம்,
*30-9-1941*

என் அன்புள்ள முட்டாள்,

கெடுவுக்குப் பிந்திய அஞ்சல் கட்டணத்தைச் செலுத்தி இதை அனுப்புகிறேன். உன் நீண்ட கடிதம் கிடைத்தது. நீ குறிப்பிட்டுள்ள இரண்டு நாட்களும் நான் எழுதத் தவறவில்லை. ஆனால் இங்கு அஞ்சல் விசித்திரமாக இயங்குகிறது. இவைதான் கிராம வாழ்க்கையின் குறைபாடுகள். அவற்றில் நான் திளைக்கின்றேன்.

சம்மேளனத்தின் நடவடிக்கைகளைப்பற்றி நீ உயர்வாக நினைக்காததால், அதற்கு நீ நன்கொடை செலுத்தாதது பொருத்தமே. நானும், வேறு சில சொந்தக் காரணங்களுக்காக மறுத்துள்ளேன்.

சுமன்பற்றி என்ன செய்ய முடியுமென்று நான் பார்க்கிறேன். அவர் ஜாஜுஜிக்கு எழுதட்டும்.

நான் வெளியே சென்றால், நீ சேவாகிராமத்தைக் கவனித்துக் கொள்ள வேண்டுமென விரும்புகிறேன். உன் உடல் நலன் சீராக இருந்தால்தான், அதைச் செய்ய முடியும். சீராக இல்லாவிடில், நான் திரும்பி வரும்வரை நீ அங்கேயே தாராளமாகத் தங்கலாம். இதில் உன் விருப்பப்படியே நீ செய்யலாம். நான் சென்றால், இருபது நாட்களுக்குள் அல்லது ஒரு மாதத்திற்குள்கூட சுற்றுப் பயணத்தை முடிக்க இயலுமென்று நினைக்கவில்லை. என் உடல் நிலையையும், வரும் அழைப்புகளையும் பொறுத்தது அது.

உன் பேனாவை நிரந்தரமாகக் கொடுத்துவிடவில்லை. அது உன்னுடையதென்றும், நான் மட்டும் பயன்படுத்துவதற்கென்று என் மேசையில் அதை நீ குறிப்பாக விட்டுச் சென்றிருந்தாயென்றும் நான் மீராவிடம் கூறினேன். ஆனால் அந்த நேரத்தில் என்னிடம் வேறு பேனா இல்லை. நீ திரும்பி வந்ததும் அவளுக்கு வேறு ஏற்பாடு செய்துவிட்டு, நான் அவளுக்குக் கொடுத்ததைத் திருப்பிப் பெற்றுக்கொள்ளலாம். இப்பொழுது நான் லீலாவதி பேனாவையும், மீரா திரும்பித் தந்துள்ளதையும் பயன்படுத்துகின்றேன்.

புது கோசேவா சங்கத்தின் கூட்டத்தை நல்வாடியில் நடத்தினேன். ஜம்னாலால்ஜியின் முயற்சியினால் அது ஒழுங்காகவும் பயனுள்ளதாகவும் நடந்தது. குறித்த நேரத்தில் தொடங்கி, சீக்கிரம் கூட்டம் முடிந்தது.

அன்பு,

பாபு

## 235

திருத்தப்படாதது.

சேவாகிராமம்,
*11-10-1941*

என் அன்புள்ள முட்டாள்,

லூதியானவைச் சேர்ந்த ராமசரண்தாஸ் நீண்டநாளாக பற்றுதல் கொண்டவர். அவர் ஒழுங்காகப் பணமும் கதரும் அனுப்பி வருகிறார். அவருடைய ஒரு மகன் இங்கிலாந்தில் டாக்டராய் இருக்கின்றார். மற்றொரு மகன் இந்தியாவில் இருக்கின்றார்; ஆனால் ஸ்காட்லந்துப் பெண்ணைத் திருமணம் செய்திருக்கின்றார். தாமும், தம் மாமனாரும் சேவாகிராமத்திற்கு வந்து சில நாட்கள் தங்கிச் செல்ல அனுமதி கோரி, அந்தப் பெண் கடிதம் எழுதியிருந்தாள். அவர் இங்கு வந்ததும் உடல் நலம் இழந்ததால், குணமாகும் வரை அவரைப் பராமரித்து வந்தோம். அவர் பற்கள் அனைத்தையும் எடுக்க வேண்டியதாயிற்று. அவற்றில் தான் நோய் உதயமாயிற்று. பெஸ்ஸி அருமையான, நிதானமான பெண். ஏறக்குறைய என்னளவு வயதான மாமனாரிடம் அதிக அன்பு கொண்டுள்ளாள். தாம் சட்டமறுப்பில் ஈடுபடவேண்டுமென்று அவர் பிடிவாதமாக வற்புறுத்தினார். மீண்டும் ஈடுபட உத்தேசித்துள்ளார். சிறையிலே இறப்பது பற்றிக் கவலைப்படவில்லை என்று கூறுகிறார்.

தற்போதைக்கு என் சுற்றுப் பயணம் நின்று விட்டது. தாம் முயற்சி செய்யப் போவதாக G. கூறுகிறார். அவர் தோல்வியுற்றால் நான் அதை மேற்கொள்ள அனுமதிக்கப் படுவேன். ஆனால் அவர் நிச்சயம் தோல்வியுற மாட்டார்.

அன்பு,

பாபு

## 236

சேவாகிராமம்,
*27-10-1941*

என் அன்புள்ள முட்டாள்,

மீண்டும் நான் அவசரப்படவேண்டும். K. யின் எழுத்தை நீ மொழிபெயர்த்திருப்பதைக் கவனமாகப் படிக்கத் தொடங்கினேன். அந்த முயற்சி சீராகத் தொடங்கவில்லை. ஆங்கில நடை சுமாராக இருக்கிறது. ஆனால் எண்ணம் லாகவமாகச் செல்லவில்லை. மொத்தத்தில் கோர்வையாக அது அமையவேண்டும். நீ திரும்பி வரும்போது, நான் கூறுவதன் பொருளை உணர்வாய். அது மிகக்

கடினமான முயற்சி. அதில் நீ தோல்வியுற்றிருந்தால், அது உன் குறையாகாது.

உன் நெஞ்சைக் கவனிக்கவேண்டும். அவசியமான வரை, நீ ஜலந்தரில் தங்கவேண்டும்.

அன்பு,

பாபு

## 237

சேவாகிராமம், வார்தா,
*28-10-1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதம் கிடைத்தது. உன் மொழிபெயர்ப்பில் இன்னும் சில பக்கங்களை நான் படித்துப் பார்த்தேன். பின்வரும் பகுதிகள் தங்கு தடையின்றிச் செல்லக்கூடும். ஈரமண் கட்டுப் போட்டுள்ளேன். மல்லாந்து படுத்துக் கொண்டு இதை எழுதுகிறேன். என்னைப் பார்க்க வந்திருப்பவர்கள் சூழ்ந்திருக்க இதை எழுதுகிறேன். ஆகவே மேலும் எழுதுவதற்கில்லை.

அன்பு,

பாபு

## 238

சேவாகிராமம்,
*2—11—1941*

என் அன்புள்ள முட்டாள்,

ஆம்; மனிதன் ஒன்று நினைப்பது போல்தான் மனுஷி ஒன்று நினைக்கும் போதும், தெய்வம் தனக்கேயுரிய வகையில் வேறு முடிவு செய்யும். ஆகவே நீ வந்தபின் தான் வந்துவிட்டாய் என்பதை ஏற்றுக்கொள்வேன். ஷம்மியுடன் நீ செல்வது குறித்து மகிழ்ச்சி. இன்பம் அனுபவிக்க முழு வாய்ப்பு அவருக்குக் கிடைத்துள்ளது நல்லதே. நீ திரும்பி வருவதற்குள் குளிர்ச்சியாகவும் இருக்கும். பாவம், பிரபா!

நீ தொட்டால் சுருங்கிபோல் இருக்கிறுய். நடையைப் பொறுத்தவரை, உன் மொழி பெயர்ப்பு நன்ருக இருக்கிறது. எண்ணம் கட்டுக்கோப்பாக அமையவில்லை என்றுதான் குறிப்பிட்டேன். மூலத்தில் அவ்வாறு இருந்தால்கூட, மொழி பெயர்ப்பாளர் அதைத் தெளிவு படுத்தவேண்டும். அது கடினமானது தான்; ஆனல் அதைச் செய்தே தீரவேண்டும். ஆனல் திருத்தங்கள் சொல்லும் போது எரிச்சல் கொள்ளாமல் நீ ஏற்றுக் கொள்ளா

விடில், அதைச் செய்ய முடியாது. இப்பொழுதுதானே அதைப் படிக்கத் தொடங்கியுள்ளேன். மேலும் படிக்கையில் தெளிவாகச் செல்லக்கூடும்.

அன்பு,

பாபு

## 239

சேவாகிராமம், வார்தா,
*7—11—1941*

என் அன்புள்ள முட்டாள்,

உன் கடிதத்தைப் படிக்கும்போது வருத்தம் உண்டாகிறது. ஆனால் நீ அச்சம் கொள்ளக்கூடாது. நடப்பவற்றை அமைதியாக ஏற்றுக் கொள். மாதுரி, லக்ஷ்மிபென், இருவரும் நேற்று இங்கு வந்தனர். லக்ஷ்மிபென் பண்டிட்ஜியின் விதவை. நேற்று மாலை யில், தன் அருமையான குரலில் மாதுரி ஒரு பஜனைப் பாடல் பாடினாள். மனிதன் சுகத்தையும் இன்பத்தையும் நாடுகிறான் என்பதும் ஆனால் அவை என்றுமே அவனிடமிருந்து பறந்து சென்ற வண்ணம் உள்ளன என்பதும் அப்பாடலின் பொருள். துன்பத்திலும் வேதனையிலும்கூட உண்மையான இன்பத்தின், மகிழ்ச்சியின் சாரம் இருக்கின்றது என்பதை அவனால் ஏன் உணரமுடியவில்லை? மனத்தைத் திடப்படுத்திக் கொள்; உன் வருத்தங்கள் அனைத்தையும்— இறைவனிடம், எக்காலத்தும் உறுதியாய் நிற்கும் அம் மலையிடம்— ஒப்படைத்து விடு.

ஆப்பிள்களை இரயில் நிலையத்தில் ஆய்வுசெய்வது பற்றிக் கவனிக்கின்றேன்.

அன்பு,

பாபு

## 240

சேவாகிராமம், வார்தா,
*10—11—1941*

என் அன்புள்ள அ.,

உன் கடிதம். ராஜா சாகிப் மறைவு நல்லதே. அவர் நடைப் பிணமாகவே இருந்தார். உனக்கு ஒரு தந்தி அனுப்ப வேண்டுமென எண்ணினேன். ஆகவே ஒன்று அனுப்பி யுள்ளேன்.

புல் இங்கு சில நாட்களாகத் தங்கியுள்ளாள். இந்துவை யும் ஜவாஹர்லால் நேருவையும் பார்த்துவிட்டு, நேற்றிரவு முஸ் ஸௌரியிலிருந்து கோஸிபென் வந்துள்ளார்.

ஆப்பிள்கள்பற்றி நான் உனக்குத் தகவல் தெரிவித் துள்ளேன்.

வைத்யா அனுப்பியுள்ள பதிவேடு மிக நன்றாக இருக்கின்றது. நீ அவருக்கு எழுத வேண்டும்.

அன்பு,

பாபு

## 241

*1941*

நான் சட்ட மறுப்பில் ஈடுபடுவதற்கில்லை என்று இறுதியாக முடிவு செய்யப்பட்டால், கிராமக் கைத்தொழில் தொண்டை ஒட்டி, எங்காவது பாத யாத்திரை மேற்கொள்ள விரும்புவேன். இறை வனே நம் அனைவருக்கும் முடிவு செய்வார். அந்தராத்மாவின் குரல் என்பது மோசடி அல்ல. அது வரும்போது, எனக்குத் தெரியும், அப்பொழுது எல்லா ஐயப்பாடுகளும் தீர்ந்து தெளி வாகின்றன. சிறையை எதிர்த்து நான் போராடி வருகின்றேன் என்பதை நீ காணவில்லையா? அதற்கும் மீறி அது வந்தால், நீயோ நானோ அதைத் தடுக்க முடியாது. எப்படியும் நான் இறுதி நட வடிக்கை எதுவும் எடுப்பதற்கு முன், உனக்குத் தெரியப்படுத்து வேன். வேறு வழி இல்லை என்று அப்பொழுது நீயே ஒத்துக் கொள்வாய். 21 நாள் உண்ணா நோன்பை நான் மேற்கொண்ட போது, இராஜகோபாலாச்சாரியைத் தவிர யாரும் அதை எதிர்க்க வில்லை. என்னைத் தொந்திரவு செய்யக் கூடாதென்று அவர் மகள் லக்ஷ்மி கூட அவரிடம் மன்றாடினாள்.

## 242

சேவாகிராமம், வார்தா,
*2-2-1942*

சி. அமிருத்,

தன் தலைவர் தவறான வழியில் செல்லும் போதுகூட நேர் வழிக்குத் திருப்புபவளே, இலட்சியக் காரியதரிசி. அவரைச் சுற்றி எப்பொழுதும் இருந்து, தவறுதலாக முக்கியமான காகிதங் களையும் அவர் கிழித்திருக்கக் கூடுமென்ற கவலையில், காகிதங்கள் அனைத்தையும் திரட்டி, அவரிடம் தான் கொடுத்தவை எங்கு

காணப்பட்டாலும் அவற்றைப் பத்திரமாகச் சேர்த்துவைப்பாள், அவள். ஆகவே அவர் சென்றபின்னரே அவள் சென்று, அவர் என்ன விட்டுச் சென்றிருக்கிருரென்று பார்த்து, அது வேறெவருக்கும் சொந்தமாயிராவிடில், அதை எடுத்து வைப்பாள்.

ஆகவே நேற்று நான் உன்னைத் திருத்தியது, சரியானதுதான். ஆனால் ஏமாற்றத்தையோ எரிச்சலையோ காட்டியது முற்றிலும் தவறு. தவறுதலை மறந்துவிட்டுச் சரியானதைப் போற்று. இந்தக் குறிப்பு எந்த உணர்வுடன் எழுதப்பட்டிருக்கிறதோ, அதைப் பின் பற்று. நீ இலட்சியக் காரியதரிசியாவாய்.

இதுதான் உனக்கு நான் தரும் பிறந்த நாள் பரிசு. எனக்கு உதிக்கக்கூடிய எல்லா வகையான நல்வாழ்த்துக்களையும் இத்துடன் சேர்த்து அனுப்புகிறேன்.

அன்பு,

பாபு

# 243

சேவாகிராமம், வார்தா,
20—5—'42

சி. அமிருத்,

உன் கடிதங்கள் அனைத்தும் கிடைத்தன. உன் இந்தி எழுத்தைப் புரிந்து கொள்வதில் சிரமமில்லை. உன் ஆங்கில எழுத்துப் போலவே எளிதாக இருக்கின்றது. உன் மகிழ்ச்சிக்காக இதை ஆங்கிலத்தில் எழுதுகிறேன். நூற்றுக்கு நூறு சுதேசிப் பேனாவைக் கொண்டு இதை எழுதுகிறேன். அது நன்றாகப் பயன்படுகிறது.

நீ எழுப்பியுள்ள கேள்விகளை நான் குறித்துக்கொண்டேன். அவற்றிற்கு அடுத்த வாரம் பதில் அளிக்கவேண்டும்.

பா நலமாக இருக்கிருள்.

வெப்பம் அவ்வளவாக வாட்டவில்லை. இரவுகள் மிகவும் சுகமாக இருக்கின்றன. நான் திரும்பியதும் என் எடை 98½ பவுண்டாகக் குறைந்திருந்ததைக் கண்டேன். எடையில் அவ்வளவு இழந்திருந்தேன். வேலை கடுமையாக இருந்தது. மற்றப்படி நான் நலமாக இருப்பதால், கவலைப்படுவதற்கு இடமில்லை.

இன்று இங்கு வந்த ஒரு கடிதத்தையும், பத்ஷா கானிடமிருந்து வந்த ஒரு கடிதத்தையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். இந்துப் பெண்கள் சிலர் கடத்திச் செல்லப்பட்டாலும், இந்துக்கள் கொலை செய்யப்பட்டாலும், நான் ஆச்சரியப்பட மாட்டேன். அதிகார வர்க்கம் மீது கூறப்படும் புகாரில், எந்த அளவுக்கு உண்மை இருக்

கிறதென்று எனக்குத் தெரியவில்லை. எப்படியும் நாம் காத்திருந்து, கவனித்து, கடவுளை வழிபட வேண்டும்.

அன்பு,

பாபு

## 244

சேவாகிராமம், வார்தா,
*5-6-1942*

சி. அமிருத்,

உன் ஆங்கிலக் கடிதம் கிடைத்தது.

J. இன் கடிதம் இன்று வந்தது. மௌலானா வரும்போது தாமும் வர ஆயத்தமாக இருப்பதாகச் சொல்லியுள்ளார். மௌலானா விடமிருந்து செய்தி இன்னும் வரவில்லை.

ராஜாஜியுடன் பொதுச் சர்ச்சையில் ஈடுபட நான் விரும்ப வில்லை என்று அவரிடம் கூறியுள்ளேன்.

அனல் காற்று வீசுகிறது. இதற்குள் குளிர்ச்சியாகி விடு மென்று நான் எண்ணியிருந்தேன். அவ்வாறு எதிர்பார்த்தபின், எதிர்பார்த்தது நிறைவேறாதபோது ஏமாற்றம் உண்டாகிறது. "எதையும் எதிர்பாராதவர்களே பாக்கியசாலிகள்."

அன்பு,

பாபு

## 245

சேவாகிராமம், வார்தா,
*9-6-1942*

சி. அமிருத்,

ஜவாஹர்லாலுடன் நீண்ட இனிய உரையாடல்கள் நடத்து கிறேன். ஜவாஹர்லால் சிபார்சு செய்த பத்திரிகையாளர் ஒருவர் இங்கு என்னுடன் உள்ளார். அவர் பெயர் லூயி பிஷர்.

குர்ஷித் பென் இங்கு இன்னமும் இருக்கின்றார். அவர்தான் விருந்தாளிகளைக் கவனித்து வருகிறார். மௌலானா இன்றிரவு வருகிறார்.

காசியிலிருந்து வந்துள்ள கடிதத்தை இத்துடன் அனுப்புகின் றேன். அதுபற்றி உனக்கு நினைவிருக்கக்கூடும்.

அன்பு,

பாபு

## 246

[இக் கடிதம் குஜராத்தியில் எழுதப்பட்டிருந்தது. கடிதம் 12-2-42 என்று தேதியிடப்பட்டுள்ளது. ஆனால் அஞ்சல் முத்திரை 12-6-42 என்றிருக்கிறது. கடிதத்தின் வாசகத்தைக் கொண்டு பார்த்தாலும் 12-6-42 தான் சரியான தேதி என்று தோன்றுகிறது.]

சேவாகிராமம், வார்தா,
*12-2-1942*

சி. அமிருத்,

இதை குஜராத்தியில் எழுதுகிறேன். உன் கடிதம் கிடைத்தது.

மௌலானா, ஜவாஹர்லால், இருவருடனும் பேச்சுவார்த்தைகள் நீண்ட நேரம் பிடித்தன. இன்னும் இரண்டு நாட்கள் தொடரும். பேச்சுக்கள் அமைதியாகவே நடக்கின்றன.

இன்னும் வெப்பக் காற்று வீசுகின்ற போதிலும், இன்று இயநிலையில் சற்று முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது.

நான் நலமாகவே இருக்கின்றேன்.

பாபுவின் ஆசிகள்

## 247

சேவாகிராமம், வார்தா,
*15—6—1942*

சி. அமிருத்,

நேற்று உனக்கு எதுவும் அனுப்பமுடியவில்லை. மௌலானா இன்று காலையில் புறப்பட்டார். ஜவாஹர்லால் இன்று மாலை பம்பாய்க்குப் புறப்படுகிறார். அவர் இங்கு இன்றிருப்பார்; மகாதேவுடன் உணவருந்துகிறார். சுருங்கச்சொன்னால், என் கோரிக்கையிலோ, அதை நிறைவேற்றும் முறையிலோ மௌலானாவுக்குத் திருப்தியில்லை. சிந்தனை செய்ய அவர் அவகாசம் கோருகிறார். மௌலானா அளவுக்கு ஜவாஹர்லாலுக்கு அதிருப்தி இல்லையெனினும், அவருக்கு முழுத் திருப்தி இல்லை. காரியக்கமிட்டி ஜூலை தொடக்கத்தில் கூடும்.

இயநிலையில் சற்று முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது; ஆயினும் வெப்பம் இன்னும் வாட்டுகிறது. மழை பெய்யும் அறிகுறிகள் காணோம்.

அன்பு,

பாபு

# 248

[ஸ்ரீ அதுலானந்தர் கடிதத்தின் பின் பக்கத்தில் பாபு எழுதி யிருந்தது.]

*15-6-'42*

உன் கடிதங்களை நான் பிரித்தது நல்லதாகப் போயிற்று. மதாலஸாபற்றிக் கவனித்துவிட்டேன். பிரேமாபற்றி உனக்கு ஆலோசனை கூறிவிட்டேன். இப்பொழுது இந்த அபூர்வக் கடிதம். அதற்கு நீ பதில் எழுதவேண்டும். அது எளிதானது. ஒற்றுமை உருவாகியே தீரும். அது இல்லாமல் உண்மையான சுதந்திரம் கிடைக்காது. ஆனல் மூன்றும் தரப்பினர் அதிகாரத்தில் இருக்கும் வரை, கலாசார, அரசியல், அல்லது வேறெந்த ஒற்றுமையும் சாத் தியமில்லை. ஆகவேதான் ஒற்றுமைக்கு முன்பு, பூர்வாங்க நட வடிக்கையாக, அதிகாரத்தில் உள்ளவர் வெளியேற வேண்டும். ஆனல் இக்கடிதத்தை என்ன செய்ய வேண்டுமென்று நீ விரும்பு கிருயோ, அவ்வாறே செய்யலாம்.

அன்பு,

பாபு

# 249

சேவாகிராமம், வார்தா,
*19-6-1942*

சி. அமிருத்,

உன் கடிதங்கள் வந்தன. ராஜாஜி இப்பொழுதுதான் வந்துள் ளார். அவர் எந்த நிமிடமும் ஆசிரமத்திற்கு வந்து சேரலாம்.

பின்னர் :

அவர் வந்துள்ளார்.

ஜவாஹர்லால் அறிக்கையை நீ பார்த்திருப்பாய். அதுதான் அவர் கடைசியாக விடுத்துள்ள அறிக்கை. ஆண்டவன் நமக்கு என்ன அளக்கப் போகிருர் என்பதைப் பார்க்கலாம். எல்லாம் இப் பொழுது உருவாகிவரும் முறையில், எனக்குத் திருப்திதான். எனினும், எதுவும் கடினமானதுதான்.

அதோ மணி அடிக்கிறது.

பின்னர்:

சி. ஆர். உடன் பேச்சுவார்த்தையில் நாள் கழிந்தது.

அன்பு,

பாபு

## 250

சேவாகிராமம், வார்தா,
*12-6-1942*

[குஜராத்தியில் :]

சி. அமிருத்,

நல்ல மழை பெய்யத் தொடங்கிவிட்டது. மே மாத வெப்பம் நீங்கிவிட்டது. ஆயினும் நீ இங்கு வரவேண்டுமென நான் இன்னமும் ஆலோசனை கூறமாட்டேன். அங்கேயே ஓய்வெடுப்பது நலம். உன் முழங்கால் முற்றும் சரியாக வேண்டும்.

[ஆங்கிலத்தில் :]

நம் பாதை தெள்ளத் தெளிவாக உள்ளது. ஆபத்து இருக்கத் தான் செய்கிறது. ஆனல் ஆபத்தைத் தாங்கச் சித்தமாயிராமல் பெறும் சுதந்திரம், மதிப்பற்றது.

அன்பு,

பாபு

## 251

சேவாகிராமம், வார்தா,
*16-7-1942*

சி. அமிருத்,

இன்று முந்திய நாட்களைவிட ஓரளவு ஓய்வு கிடைத்துள்ளது. கூட்டங்கள், பத்திரிகைப் பேட்டிகள் எல்லாம் முடிந்துவிட்டன. என் களைப்பும், உடல் பலவீனமும் நீங்கிவிட்டன. கவலைக்கு இடமேயில்லை. சாப்பிடும் பாலின் அளவை உயர்த்தியுள்ளதால் இந்த மாறுதல் என்றெண்ணுகிறேன். ரொட்டியையும் வெண்ணெயையும் தவிர்த்துள்ளேன்.

ஆகஸ்ட் 15ந் தேதிவரை நீ அங்கிருக்க வேண்டுமென ஷம்மி விரும்பினல், நீ அங்கு தங்கலாம். அதற்கிடையில் சிறப்பாக ஒன்றும் நடந்துவிடாது. *

அன்பு,

பாபு

---

* வைஸ்ராயுடன் ஒரு பேட்டி கேட்டிருந்தார், காந்திஜி. அதை முன்னிட்டு 1942 ஆகஸ்ட் 11ந் தேதி டில்லிக்கு அவர் வருவதாகத் திட்டமிட்டிருந்தார். அங்கு என்னை வரச் சொல்லியிருந்தார். ஆனல் ஆகஸ்ட் 9ந் தேதி அவர் கைது செய்யப்பட்டார். நான் விடுதலையாகி, அவரும் 1945 ஜூலை சிம்லாவுக்கு வரும்வரை நான் அவரை மீண்டும் சந்திக்கவில்லை.

## 252

சேவாகிராமம், வார்தா,
*17—7—1942*

சி. அமிருத்,

உன் கடிதம்.

அ. இ. கா. க. பம்பாயில் கூடுகிறது. நீ விரும்பினல் வரலாம். 4-ந் தேதி அங்கு போய்ச் சேருவேன் என்று எதிர் பார்க்கின்றேன். *3*-ந் தேதியே போனலும் போவேன்.

பியாரிலாலுக்குச் சுரம். *103°*. சிறுநீர்க் குழாயில் ஏதோ கோளாறு.

ஆசப் அலி, உடல்நலமில்லாததால் சென்ருர். ஆனல் அவர் தீர்மானத்திற்கு எதிர்ப்பாகவே உள்ளார். மௌலானவின் அறிக்கையை நீ பார்த்திருப்பாய்.

தீர்மானம் நான் தயாரித்தது. ஜவாஹர்லாலைத் திருப்தி செய்ய—மௌலானவைத் திருப்தி செய்யவும்தான்—சில மாறுதல்கள் செய்யப்பட்டுள்ளன.

அன்பு,

பாபு

## 253

சேவாகிராமம், வார்தா,
*1-8-1942*

சி. அமிருத்,

உன் கடிதம். நீ கவலைப்படக் கூடாது. ஷம்மிக்காக நீ அங்கு தங்கியுள்ளாய். அந்தத் தியாகத்தில் மகிழ்ச்சி காணவேண்டும். நடவடிக்கை சரியானதுதான என்று நீ ஏன் ஐயப்பட வேண்டும்? பம்பாயில் என்ன நடந்தாலும் சரி, பம்பாய்க்கு வருவதைக் காட்டிலும், நீ உன்னை அடக்கிக்கொண்டு அங்கிருப்பதால் நன்மை அடைவாய். சேவாகிராமத்திற்கு *14*ந் தேதிக்கு முன்பாகவும், *10*ந் தேதிக்குப் பின்பும் போய்ச் சேருவேன் என்று எதிர்பார்க்கின்றேன். தேதி நிச்சயமாக உனக்குத் தெரிந்தபின், நீ புறப்படலாம்.

அன்பு,

பாபு

## 254

பிர்லா மாளிகை, பம்பாய்,
*4-8-1942*

சி. அமிருத்,

எல்லாம் நன்ருக நடந்துவருகிறது. ஜவாஹர்லால் நேற்று, நான் வந்ததற்கு ஒருமணி நேரத்திற்குப்பின் வந்தார். மௌலான இன்று வந்தார். பிரபாவதி வந்துள்ளாள். சில நாட்களுக்கு முன் சேவாகிராமத்தில் என்னைப் பார்த்தபோது இருந்ததைக் காட்டிலும் உடல் நலன் தேறியும், ஆரோக்கியமாகவும் நான் இருப்பதாக மருத்துவர்கள் கூறுகிருர்கள். நம் குழுவில் நீ ஒருத்தி தான் இல்லை. மீரா கூட இங்கிருக்கிருர்கள். ஆனல் இங்கு ஏற்பட்டுள்ள இழப்பு, ஷம்மிக்கு இலாபமாக அமைந்துள்ளது. ஆகவே எனக்குத் திருப்திதான்.

அன்பு,

பாபு

## 255

ஜுஹு,
*3-6-1944*

என் அன்புள்ள அமிருத்,

என் கடிதத்திற்கு நீ எழுதியுள்ள பதில் கிடைத்தது. உன் முதல் கடிதம் இங்கு வந்து சேரவேயில்லை. சுசீலா விவரமாக எழுதுவாள். மெதுவாகவே ஆயினும், நான் தொடர்ந்து முன்னேறி வருகிறேன். நீ கவலைப்படக்கூடாது. நான் மேலும் தொண்டாற்ற வேண்டுமென இறைவன் விரும்பினல், அவர் என்னை நிச்சயம் காத்து, அவர் வேலையைச் செய்ய எனக்குப் பலம் தருவார். உன்னைப் பற்றி என்ன செய்தி? ஷம்மி, பெரில், எப்படி இருக்கிருர்கள். நீ என்னென்ன விவரங்கள் தர அனுமதிக்கப்படுவாயோ, அவற்றை எனக்கு எழுது. பழைய பணியாளர் அனைவரும் உன்னுடன் இருக்கின்றனரா ?

அன்பு,

பாபு

## 256

[26-6-1944 தேதியிட்ட சுசீலாவின் கடிதத்தில் பாபு எழுதிய பின்குறிப்பு]

என் அன்பை அனுப்புவதைத் தவிர வேறெதுவும் எழுதி அனுப்ப இன்று அவகாசமில்லை. நீ எவ்வளவு தாங்கிக் கொள்ள இயலுமோ, அவ்வளவு அன்பு அனுப்புகின்றேன்.

பாபு

## 257

[1944 ஜுலை 10 தேதியிட்ட பியாரிலால் கடிதத்தில் பாபுவின் பின்குறிப்பு]

சி. அமிருத்,

என் முன்னுள்ள வேலைக்கு நான் என் நேரத்தையும் பலத்தையும் சேமித்து வைக்க வேண்டும். இன்று உனக்குச் செய்தி எதுவுமில்லை. என்னை வேலை அழைக்கின்ற நேரத்தில் நான் விளையாடத் துணிய மாட்டேன். தினம் வரும் கடிதங்களைக் கவனிக்கவே எனக்குப் போதிய பலமில்லை.

அனைவருக்கும் அன்பு,

பாபு

## 258

சேவாகிராமம்,
3—9—1944

சி. அமிருத்,

ஒரு சில முக்கிய கடிதங்கள் எழுத நான் இன்று வெகு சீக்கிரம் எழுந்தேன். அவற்றில் இது ஒன்று. அனைத்திந்திய நூற்பாளர் சங்கக் கூட்டத்தினால் பகலில் எனக்கு அவகாசம் கிடைக்கவில்லை. பத்திரிகைகளை நான் படிப்பதேயில்லை; கடிதங்களிலும் சிலவற்றைத் தான் படிக்கின்றேன். இவ்வளவு வேலைச் சுமைக்கிடையே, நான் நலமாக இருக்கின்றேன் என்பதுதான் ஆச்சரியம். நீ இங்கிருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! ஆனால் ஆண்டவன் சித்தப்படி நடக்கும். அதைவிடச் சிறந்தது வேறு எப்படி நடக்க முடியும்?

மருத்துவ மனையை இன்று விரிவுபடுத்த இயலாது. எல்லாம் நிச்சயமற்றதாய் இருக்கின்றது. விலைகள் எல்லாம் உயர்ந்து விட்டன. தொடங்க உத்தேசித்துள்ள மகாதேவ் நினைவு நிதிக்கு உன் நன்கொடை சேரட்டும். நீ யோசனை கூறியபின், அதை எவ்வாறு பயன்படுத்துவதென்று முடிவு செய்யலாம்.

பெண்கள் மாநாடு பற்றிக் கவலைப்படாதே. எல்லாம் குழப்ப நிலையில் உள்ளது.

சுசீலா தேறி வருகிறாள்.

ஸ்ரீமதி சுவாமிநாதன், அவள் உறவினர் ஸ்ரீமதி மேனன் ஆகியோர் இங்கு உள்ளார்கள்.

பெரில் நேர்த்தியான கதர் அனுப்பியுள்ளாள். நீ ஒவ்வொரு வருடமும் அனுப்பும் சால்வைகளும் வந்துள்ளன. நான்கு மணி அடித்துவிட்டது. இனி அதிக நேரம் உன்னுடன் நான் தாமதிக்கக் கூடாது.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

**பாபுவின் ஆசிகள்**

நீ உடல் நலனைக் காத்துக் கொள்ள வேண்டும். பதட்டப்படுவதோ, பொறுமையிழப்பதோ கூடாது.

## 259

சேவாகிராமம்,
*8-11-1944*

சி. அமிருத்,

நான் உன்னைப் புறக்கணித்து விட்டேன். காரணம் உனக்குத் தெரியும். காலை 7 மணி ஆனதும் தொடங்கும் காலை உலாவிற்கு முன்பு இதை எழுதுகிறேன். டாக்டர் ஜீவராஜ் மேத்தா என்னருகே நின்று கொண்டிருக்கிறார். மருத்துவர்களுக்கு உரை நிகழ்த்த சென்னைக்குச் செல்லும் வழியில் அவர் இங்கு ஒரு நாள் வந்துள்ளார்.

ராஜாஜி சுகமாயில்லை. ஆகவே பல்வேறு கூட்டங்களுக்கும் அவர் வரவில்லை.

அம்துல் சலாம் கல்கத்தாவில் நல்ல தொண்டாற்றிக் கொண்டிருக்கின்றாள்.

கனுவின் திருமணம் நன்றாக நடந்தது. சுமார் *300* பேர் உண வருந்தினர். சேவாகிராமத்தைச் சேர்ந்த ஹரிஜனங்களும் சாதிக்காரரும் அதில் கலந்து கொண்டனர். சேவாகிராம வாசிகளும் விருந்தாளிகளும் *150* பேருக்கு மேல் இருந்தனர்.

உன்னு நோன்பு பற்றி நீ கவலைப்படாதது தான் சரி. இறைவன் விரும்பினால் அது நடக்கும்.

அன்பு,

பாபு

## 260

[29-11-1944 தேதியிட்ட சுசீலாவின் கடிதத்தில் பாபுவின் பிற்குறிப்பு]

உங்கள் அனைவருடனும் என் இதயம் உறவாடுகிறது. மாட்டிற்கு என் அன்பைத் தெரிவி. அவள் தைரியசாலி. நடக்கவிருக்கும்

பரிசீலனை, இதைவிட மோசமான நிலை எதையும் புலப்படுத்தாது என்று நம்புகிறேன். பெரில் இதை எப்படித் தாங்கிக் கொண்டாள்? ஷம்மி படைவீரர் போல, இவை அனைத்தையும் தைரியமாகச் சமாளிக்க வேண்டும். உன்னைப் பற்றி நான் என்ன சொல்ல முடியும்? முடிந்தால், உற்சாகமான தந்தி ஒன்று அனுப்பு.

அன்பு,

பாபு

## 261

சேவாகிராமம்,
கிறிஸ்துமஸ் *1944*

இன்று ஒரு சில சொற்கள் பேச முடியுமென்று நான் எதிர் பார்த்தேன். ஆனால் இறைவன் சித்தம் வேறுவிதமாக இருந்தது. இன்று கிறிஸ்துமஸ் தினம். எல்லா சமயங்களும் சமமானவை என்று நம்புவோருக்கு இது போன்ற விழாக்கள் அனைத்துமே கொண்டாட்டத்திற்கு உரியவை. ஆனால் நம் கொண்டாட்டங்கள் பாமர மக்கள் கொண்டாட்டத்திலிருந்து வேறுபட்டவை. நம்மைப் பொறுத்தவரை, இந்த விழாக்கள் தியானத்திற்கும் அகநோக்குக்கும் உரியவை. இது போன்ற தருணங்களில் நாம் நம் உள்ளத்தைச் சோதித்து, தீயது அனைத்தையும் அவிக்க வேண்டும். ஆண்டவன் ஒன்றே, அவன் ஆணை ஒன்றே என்பதை நாம் உணர வேண்டும். வாய்மை என்றும் தூய்மை என்றும் நாம் கருதுவதற்காகப் பிறரை மாய்க்கக் கூடாது. அந்த வாய்மைக்காக நாம் உயிர் துறக்கவும் ஆயத்தமாக இருந்து, அழைப்பு வரும்போது அதற்காக நம் உயிரையே அர்ப்பணம்செய்து, நம் வாய்மைமீது நம் இரத்தத்தின் முத்திரையைப் பொறிக்கவேண்டும். இதுதான் சமயங்கள் அனைத்தின் சாரம் என்பது என் கருத்து. இந்நாளன்று நாம் இதை எண்ணிப் பார்த்து, வாய்மை என அவர்கள் போற்றும் ஏசு அதற்காகச் சிலுவையில் மரணமடைந்தார் என்பதை நினைவில் கொள்ள வேண்டும்.

## 262

சேவாகிராமம், வார்தா,
*1—1—1945*

*சி. ராஜகுமாரி,*

என் மூன்று அஞ்சலட்டைகளும் அனுப்பப்பட்டபின் மாலை நான்கு மணிக்கு வந்த உன் கடிதத்திற்குப் பதிலளிக்கவே இதை எழுதுகிறேன். இதை நான் இன்று எழுதுகிறேன் என்றாலும், நாளைதான் அஞ்சலில் சேரக்கூடும்.

ஆம், உன் புத்தாண்டு இன்பமாக அமையட்டும். அகத்தி லிருந்து பிறக்கும் இன்பத்தை நீ அடைவாய். அக இன்பம் தவிரப் புற இன்பம் எதுவும் எனக்குத் தெரிந்தவரை கிடையாது.

நீ அனுப்பிய இரு வேட்டிகள் கிடைத்தன. அவற்றை நான் அணிகின்றேன். அவை மிக நேர்த்தியாக உள்ளன. ஆனால் நூலைப் பொறுத்தவரை அது உன் கைவண்ணம் என்பதனால்தான் அது நேர்த்தியாக அமைந்துள்ளது.

உன் அன்புள்ள,

பாபு

## 263

சேவாகிராமம்,
*7—2—1945*

சி. அமிருத்,

நான் உனக்கு உருதுவில் எழுத விரும்பினேன். ஆனால் அவ காசம் கிடைக்காததால், அதைக் கைவிட வேண்டியதாயிற்று.

இப்பொழுது உன் ஆங்கிலக் கேள்விக்குப் பதில் கூறுகிறேன். கலப்புத் திருமணங்களின் குழந்தைகளுக்குத் தந்தையின் மதத் தைப்பற்றிய போதனை அளிக்கப்பட வேண்டுமென்று நான் உறுதி யாக நம்புகிறேன். இருதரப்பாரும் நிம்மதியாக இருக்க வகை செய்யவும், பொது அக்கறை எடுத்துக் கொள்ளவும் இதுதான் சிறந்த ஏற்பாடு என்பது வெளிப்படை. அந்த சமய போதனை சமரச உணர்வுடன் அமைய வேண்டும் என்பது அவசியமே. எந்த சமயத்தை அவர்கள் தேர்ந்தெடுப்பது என்ற பிரச்னை எழுகிறது. குழந்தைகள் இரு சமயங்களையும் தழுவ முடியாது. அவர்கள் அன்னையின் சமயத்துக்கு மதிப்புத் தரவேண்டும். அன்னைக்கு அந்த அளவு சமயோசித புத்தியும், தன் கணவனின் சமயத்திடம் மதிப்பும் இல்லாவிடில், திருமணமே உறுதியற்றதாகிவிடும். கணவன் இதைப்பற்றி முழுதும் அசட்டையாக இருந்துவிட்டால், அது வேறு விஷயம். அத்தகைய ஒரு கணவரை நான் அறிவேன். நான் சொல்வது தெளிவாக இருக்கிறதா? மௌனமாக இருந்து விடக் கூடாதென்று B-இடம் சொல்லு.

அன்பு,

பாபுவின் ஆசீர்வாதம்

## 264

சேவாகிராமம்,
*21-3-1945*

சி. அமிருத்,

உன் சிறு நூலைப் படித்துப் பார்த்தேன். அதில் எழுதி யுள்ளதுவரை நன்றாகத்தான் இருக்கிறது. உன் சொந்த அனுப

வங்களுடன் நீ தொடங்கியுள்ளாய் என்பதை நீ அறிகிருயா? நீ வேறுவிதமாகச் செய்திருக்க முடியாது. இந்தியாவின் மூலாதார நோய், அதன் ஆழ்ந்த வறுமையும் அதனினும் ஆழ்ந்த அறியாமை யும்தான். நீ இரண்டையும் குறிப்பிட்டுள்ளாய்; ஆனல் மேல்வாரி யான அம்சங்களாகவே அவற்றைக் குறிப்பிட்டுள்ளாய். நீ எதையும் திருப்பி எழுத வேண்டுமென்று நான் கூறவில்லே. எதையும் திருத்த விரும்பினல், நீ அவ்வாறே செய்யலாம். இல்லாவிடினும், இப்பொழுதுள்ளபடியே அது படிப்பதற்கு நன்ருகத்தான் இருக் கிறது.

அன்பு,

பாபு

## 265

பஞ்சகனி,
*3—6—1945*

சி. அமிருத்,

இப்பொழுது மாலே 5-50 மணி. "இந்தியக் கிறிஸ்துவர் களுக்கு ஒரு வேண்டுகோள்" என்று நீ எழுதியுள்ளதை இப் பொழுதுதான் படித்து முடித்தேன். அதில் சொற்கவர்ச்சி இருக் கிறது; ஆனல் பொருட்செறிவு இல்லே. விவரமாக விமர்சனம் செய்ய நான் விரும்பவில்லே. நீ அங்கு உன் வேலேகளே முடித்துக் கொண்டு, இங்குவரும் அளவுக்கு உடல் தேறியவுடன், தாமதிக் காமல் வருவாய் என்பதை நான் அறிவேன். நீ என்னுடன் இருக் கும்போது நாம் இருவரும் அதைச் சேர்ந்து படித்து, அதை என்ன செய்யலாமென்று தீர்மானிக்கலாம்.

குர்ஷித் இங்கு இருக்கின்ருள். அவள் நர்கீஸுடன் தங்கி யிருக்கிருள். N. சென்றவுடன் அவள் தில்குஷாவில் குடியேறு வாள்.

மேத்தாப், ஸ்ரீமான் இருவரும் என்னுடன் இருந்தனர். ஸ்ரீமான் இன்று சென்ருர். மேத்தாப் நாளே செல்கிருர்.

அனைவருக்கும் அன்பு,

பாபு

## 266

சேவாகிராமம்,
*19—7—1945*

சி. அமிருத்,

நேற்று பிற்பகல் 2-30 மணிக்கு வார்தாவையும் 4 மணிக்கு சேவாகிராமத்தையும் அடைந்தோம். வழியில் பெரும் பகுதி நடந்து சென்ருேம். காலே வழிபாட்டுக்கு முன் இதை நான் எழுது கிறேன்.

நீயும்,—அனைவருமே—எங்கள் மீது வரையற்ற அன்பை வாரி வழங்கினீர்கள். ஆண்டவன் அதற்காக உங்களை ஆசீர்வதிப்பாராக. டோஃபா உன்னைவிட்டுப் பிரிந்தது குறித்து இனியும் நீ வருந்தமாட்டாய் என்றெண்ணுகிறேன்.[1] வருத்தம் கூடாது.

மழை பெய்கிற போதிலும் குளிர் இல்லை. குளிர்ச்சியான சிம்லாவை விட்டு நீ இங்கு கீழே இறங்கி வர வேண்டுமே என்பது பற்றி அஞ்சுகிறேன். நீ இங்கு வரும்போது நேரில் காண்பாய்.

நீ சொன்னவை பற்றி நான் சிந்திப்பேன்.

உங்கள் அனைவருக்கும் அன்பு.

பாபு

## 267

சேவாகிராமம்,
*23—7—1945*

சி. அமிருத்,

ஒரே கட்டில் வந்த உன்னிரு கடிதங்களும் எனக்குக் கிடைத்துள்ளன.

நீ அனுப்பியுள்ள பத்திரிகைக் குறிப்புகள் சுவையாக இருக்கின்றன. அவை அனைத்தையும் நான் படித்தேன்.

டோஃபாவின் மரணம் குறித்து நீ இனியும் வருந்தமாட்டாய் என்றெண்ணுகிறேன். உன்னால் உன் மனத்தை அடக்கிக் கொள்ள முடியுமென்றால், இன்னொரு செல்லப் பிராணியை வளர்க்காதே.

எங்கள் அனைவரையும் நினைந்து நாங்கள் அங்கு இல்லையே என்று ஏங்கிய போதிலும், உனக்கு இப்பொழுது சற்று ஓய்வு கிடைத்துள்ளது குறித்துமகிழ்ச்சி. நீ முன்பு அளவுக்கு மீறி வேலை செய்து கொண்டிருந்தாய்.

நீ உன் கடிதத்தில் குறிப்பிட்டிருந்த பயணம் பற்றி உன் வர்ணனையை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன்.

சுசீலாவுக்கு வயிற்றளைச்சல் ஏற்பட்டது. நேற்று வரை அவள் 4 பவுண்டு இழந்துள்ளாள். சர்தாரைப் பார்க்க நேற்று பம்பாய்க்குச் சென்றாள். அவள் இன்னும் கஷ்டப்பட்டுக் கொண்டிருப்பதாக தொலைபேசிச் செய்தி வந்தது. மருத்துவர்கள், தவிர்க்கக்கூடிய உடற்கோளாறுகளுக்குத் தாங்களே இடம் கொடுக்கக்கூடாதென்று நான் உறுதியாக நம்புகிறேன். இத்தகைய தீங்குகளைச்

---

[1] பாபுஜி சிம்லாவில் எங்களுடன் தங்கியிருந்தபோது என் செல்ல நாய் இறந்துவிட்டது.

சகித்துக் கொண்டிருக்கும் அமைப்பிலேயே அடிப்படைத் தவறு இருக்கிறது என்று நான் கருதுகிறேன்.

அந்த பீஹார் இளைஞர் தூக்கிலிடப் படுவாரென்று வைஸ்ராயிடமிருந்து இன்று செய்தி வந்துள்ளது. அது நல்ல அறிகுறியல்ல. இவ்வாறு நேரிடுமென்ற அச்சம் எனக்கிருந்தது. ஆனல் வேறுவிதமாக முடிய வேண்டுமென்று எதிர்பார்த்திருந்தேன். பொறுத்திருந்து பார்ப்போம்.

உங்கள் அனைவருக்கும் என் அன்பு,

பாபுவின் ஆசீர்வாதம்

## 268

சேவாகிராமம்,
*30-7-1945*

சி. அமிருத்,

உன் கடிதம் இப்பொழுதுதான் எனக்குக் கிடைத்தது.

வைஸ்ராயினியை நீ பார்த்தது குறித்து மகிழ்ச்சி. எனக்கு என்ன கிடைக்கின்றனவோ, அவற்றை நூலஞ்சலில் நான் அனுப்புவேன்.

சர்தார் உடல்நலன் அவ்வளவு திருப்தியாக இல்லை. அநேகமாக, முதலில் அவர் இயற்கை சிகிச்சை பெற்றுக்கொண்டு, பின்னர் அவசியமானல் அறுவை சிகிச்சை செய்து கொள்ள வேண்டியிருக்கும். அவர் புனவிற்குச் சென்றால், நானும் அங்கு செல்ல வேண்டியிருக்கும்.

நம்மைப் பழிக்கவும் சபிக்கவும் ஹரிஜனங்களுக்கு முழு உரிமை இருக்கின்றது. உண்மையில் தவறுக்கு வருந்தும் ஒரு சிலரை, பிற்போக்கில் ஊறிப்போனவர்களிடமிருந்து எப்படிப் பிரித்துப் பார்க்க முடியும்? எப்படியும் நாம் தொடர்ந்து தொண்டாற்ற வேண்டும்.

சுசீலா சர்தாருடன் இருக்கின்றாள். உடலில் கூடிவந்த பலத்தையெல்லாம் அவள் அங்கு இழந்துவிட்டாளென்று எண்ணுகிறேன்.

நீ நலமாக இருக்க வேண்டும். அதன் இரகசியம் உன்னிடம் தான் இருக்கின்றது. உணவு வேளைகளுக்கு இடையிலே எதையும் கொரிக்கக் கூடாது. நடக்கும்போது, பழத்தையோ வேறெதையோ வாயிலே போட்டுச் சுவைக்கக்கூடாது. குறிப்பிட்ட வேளைகளில், ஊட்டத்துக்குத் தேவையான அளவு உணவருந்து.

இவ்வார நடுவில் சுசீலா வரக்கூடும்.

நான் நலமாகவே இருக்கின்றேன். வழக்கத்தை விட அதிகத் தூரம் நடக்கின்றேன். இன்று சரியாக இரண்டு மைல் நடந்தேன்.. வழக்கமாக $1\frac{1}{2}$ மைல் நடப்பேன்.

அன்பு,

பாபு

## 269

சேவாகிராமம்,.
*8-8-1945*

சி. ராஜகுமாரி,

உன் கடிதம். உன் நோய் எனக்குச் சஞ்சல மூட்டுகிறது. ஆனால் காரணம் எதுவாயிருந்தாலும், தவிர்க்க முடியாததை எண்ணி நான் வேதனைப்படுவதில் பயனென்ன?

நீ தந்திகள் அனுப்பியதிலும், தூக்கிலிடப் போவது பற்றி அவற்றில் குறிப்பிட்டதிலும், தவறு எதுவுமில்லை.

ஷம்மி தேறி வருகிறார் என்றறிந்து மகிழ்ச்சி.

பத்திரிகைக் குறிப்பு பொய்யானது, கெட்ட எண்ணம் கொண்டது என்பதில் எனக்கு ஐயமில்லை. ஆனால் நீ சொல்வது தான் சரி. அதைச் சட்டை செய்யக்கூடாது. உண்மைகளை எடுத்துச் சொல்வதன் மூலமாகக் கூட, அதற்குப் பதில் சொல்லமுடியாது. நேர்மையான நடத்தை மூலம்தான் அதற்குப் பதில் சொல்ல முடியும்.

ராஜா டால்ஜித் சிங்குக்கு நேற்று எழுதினேன். அதன் படியொன்றை இத்துடன் அனுப்புகிறேன்.

அன்பு,

பாபு

## 270

புனா,.
*24—8—1945*

சி. அமிருத்,

உன் இரு கடிதங்களும் ஒரே நேரத்தில் வந்தன.

நீ சித்திரித்துள்ளது எவ்வளவு சோகமானது?

சுபாஷ் போஸ் உயர்ந்த மரணம் அடைந்துள்ளார். அவர் தவறான வழியில் சென்றிருந்தபோதிலும் அவர் ஒரு சிறந்த தேசபக்தர் என்பதில் ஐயமில்லை.

உன் பல் ஈறு மிகுந்த தொந்தரவு தந்துள்ளது. பல் வைத்தியரைத் தான் நான் குறைகூறுவேன்.

நீ எந்த இரயிலில் வருவாயென்று எனக்கு எழுது.

பியாரிலால் பம்பாயில் இருக்கின்றார். அவரைப் பற்றிய அனைத்தையும் சுசீலா உனக்குச் சொல்லுவாள்.

அன்பு,

பாபு

## 271

புதுடில்லி,
*20—5—1946*

சி. அமிருத்,

உன் இரு கடிதங்கள்.

உனக்கு மிகவும் தேவையான ஓய்வு சிறிது கிடைத்துள்ளது குறித்து மகிழ்ச்சி. அவசரப்படாதே, அலட்டிக் கொள்ளாதே என்று தான் நான் இன்னமும் உனக்குக் கூறுவேன். நான் உனக்கு முன்னதாகவே அறிவிப்பு தருவேன். நான் எப்பொழுது புறப்பட முடியுமென்று இன்னமும் தெரியவில்லை; எப்படியும் இந்த வாரம் புறப்பட முடியாதென்று அஞ்சுகிறேன். வாய்ப்பு கிடைத்துள்ளபோது, உன் சகோதரர்களுடன் நீண்ட நேரம் இரு. நீ எங்கிருந்தாலும் தொண்டாற்றுவாய் என்பதை நான் அறிவேன். நீ என்னுடன் இருப்பதைத் தான் நான் விரும்புவேன். ஆனால் அதற்காக உன் சகோதரர்களுடன் இருப்பதை விட்டுக் கொடுக்கவேண்டுமென்றோ, உன் உடல் நலனைக் கெடுத்துக் கொள்ள வேண்டுமென்றோ விரும்ப மாட்டேன். தவிர்க்க முடிந்தால், இந்தக் கடுமையான வெப்பத்தில் நீ இங்கு வருவதையும் நான் விரும்பமாட்டேன். நீ எவ்வளவு நாள் இருக்க வேண்டுமென்று தலீப் விரும்புகிறாரோ அவ்வளவு நாள் அவருடன் இரு. நீ எப்பொழுது இங்கு வர விரும்புகிறாயோ, அப்பொழுது தாராளமாக வரலாம்.

சுதீர் முன்பை விட நன்றாக இருக்கின்றார். பேச்சு வார்த்தைகள் பற்றிய செய்தியைப் பியாரிலால் தருவார்.

அன்பு,

பாபு

D. திரும்பி வராவிடில், நான் வேறு ஆள் தேடட்டுமா?

## 272

[டில்லி. 17-7-1946. பெதிக் லாரன்ஸ் பிரபுவைப் பார்க்கச் செல்லு முன்].

நீ எதையும் மறைக்க வேண்டிய அவசியமில்லை. தன்னையும் மீறி தூதுக் குழுவின் வார்த்தையை நம்பி, வெளிப்படையாக இருள் சூழ்ந்திராத நேரத்திலெல்லாம், நம்பிக்கையொளியைக் கண்டதில் அவர் தம்மையும் மிஞ்சிவிட்டாரென்று (நானும் அவ்வாறே செய்தேன் என்று உணர்கிறேன்) அவரிடம் கூறு. நிரம்பி வழிந்த வழிபாட்டுக் கூட்டத்தின் முன், ஒளிமயமான அம்சங்களையே அவர் மிகைபடுத்தி, நம்பிக்கை கொள்வதே குற்றம் இல்லாவிடினும் மடமை என்ற நிலை ஏற்படும் வரை, நம்பிக்கை கொள்ளுமாறு அவர் அழைத்தார். அந்த மூன்று எளிதான வாசகங்களையும் கூறு. அவற்றில் முதலாவதை தற்போதைக்குப் பத்ஷா கான் முடிவு செய்யட்டும். அவர்களிடமிருந்து உடனடியான நிவாரணம் வேண்டுமென இருவரும் வற்புறுத்தினர். லீக் உறுப்பினரல்லாத முஸ்லிமை—அதிலும் ஜாகிர் ஹுசேன் போன்ற மனிதரை—விலக்குவதை அவர்கள் சகிக்கமுடியாது. சரத்பாபுவின் பெயரை விலக்குவது பொருத்தமே என்று காங்கிரஸ் திருப்தி அடையும் வரை, அப்பெயரை விலக்குவதையும் அவர்கள் அனுமதிக்க முடியாது. வாயிலில் புகும்போதே, வைஸ்ராய் அவ்வளவு ஆதிக்கம் செலுத்த இடம் கொடுக்கக் கூடாது. அவரே பேச்சைத் தொடங்கினல் மாத்திரமே நீ அதைச் செய். அவர் வெறும் கதை பேசினல், நீ ஒரு சில நிமிடங்களே பேசிவிட்டு, வந்துவிடு. எப்படியானலும், பேசும் பொருள் பற்றி முழுதும் பிடிப்பில்லாமல் நீ பேசாதே. எவராலும் தடுக்க இயலுமென்ருல், ஒரு தேசிய அரசாங்கம் நிச்சயம் தடுத்தே தீர வேண்டிய இரயில்வே வேலைநிறுத்தத்தைத் தடுக்க விரும்பினல், தீவிர நடவடிக்கை எடுப்பதில் நிதானமாகச் செல்லாமல் தீவிரமாகச் செயலாற்ற வேண்டுமென்றும் நீ அவர்களிடம் கூறலாம்.

## 273

புதுடில்லி,
*21—10—1946*

சி. அமிருத்,

உன் இரு கடிதங்களும் ஒன்ருய் வந்தன.

நீ அனுபவிக்கும் வேதனைக்காக வருந்துகிறேன். அவ் வேதனைக்கு நீ சரியான விளக்கம் கண்டால், அது உனக்கு நன்மையே செய்யும். உடல் வேதனையை ஆன்ம இன்பமாக உருமாற்ற முடியும்; உருமாற்ற வேண்டும். அது கடினமான நிலைதான்; ஆனல் உண்மையான செல்வத்தை நாம் அடைய வேண்டுமென்ருல் அந்தப் பக்குவம் பெற்றே தீரவேண்டும். நீயாக வருவித்

துள்ள இந்த சுகக் குறைவு, உன் சிந்தனைகளை வளமாக்கப் பயன் படவேண்டும்.

ஷம்மி என்மேல் கோபம் கொள்ளவில்லை என்பது அவருடைய பெருந்தன்மையைக் குறிக்குமே ஒழிய, நான் உன்மேல் செலுத்தியிருக்கும் கவனத்தைக் குறிப்பதாகாது. கொப்புளத்தின் முதல் அறிகுறி தோன்றியவுடன், நீ சிம்லாவுக்குச் செல்ல வேண்டுமென நான் வற்புறுத்தியிருக்க வேண்டும். உன்னைப் போன்ற நோயாளிகளைப் பராமரிக்க, இது ஏற்ற இடமல்ல. அதுதான் இந்த இடத்தின் தவிர்க்க முடியாத குறை.

அன்பு,

பாபு

நீ யோசனை கூறுவதுபோல், V-க்கு அப்படிச் சொல்லி அனுப்ப முடியாது. அவரை நீ அறிந்ததைக் காட்டிலும் நான் நன்றாக அறிவேன்.

## 274

புதுடில்லி,
*23—10—1946*

சி. அமிருத்,

உன் கடிதம். பிடிவாதமான கொப்புளத்தினால் நீ பாரிஸ் நகரத்திற்குச் செல்ல முடியாமல் போனால், அது பரிதாபமாக இருக்கும். உன்னைக் கவனித்துக் கொண்டிருக்கும் மருத்துவர் அதைக்கூடச் சொல்லக் கூடாதா? நல்ல நாட்டு வைத்யர் அல்லது, இன்னும் சிறந்தது ஒரு ஹகீம், யாரையும் கேட்டால், கொப்புளத்தைப் பழுக்க வைக்க தீங்கற்ற ஒரு களிம்பைப் போட்டு, அதை சுத்தமாகத் திறந்து, குறிப்பிட்ட நேரத்திற்குள் அதை மூடிச் சரிப்படுத்தவும் முடியுமென்று நம்புகிறேன். ராம நாமம் தான் தலையான மருந்து. ஆனால் அது, இன்னொருவர் தரக்கூடிய மருந்து அல்ல. அது வந்தால், தானாக இதயத்திலிருந்து பிறக்கவேண்டும்.

J-இன் காயம் ஒன்றுமில்லை. ஆனால் பத்ஷாவின் காயம் மோசமானது. மூவரும் தெய்வாதீனமாகத் தப்பினர்.

அன்பு,

பாபு

## 275

கல்கத்தா,
*4—11—1946*

சி. அமிருத்,

உன் சிப்பம் இப்பொழுதுதான் வந்தது. இன்று பேசா நோன்பு நாளெனினும், கண்ணைமூடி வேலையில் மூழ்கியுள்ளேன்.

பீகார் என்னைத் தகர்த்துத் தூளாக்கிவிட்டது. (பாலில்லாமல்) அல்ப உணவை, முக்கியமாக உடல்நலன் கருதி நான் சென்ற ஆறு நாட்களாக அருந்தி வருகின்றேன். இப்பொழுது பீகாரில் முன்னேற்றம் உடனடியாக ஏற்படாவிடில், நான் உணவை அடியோடு விலக்கி நோன்பு மேற்கொள்ள வேண்டியிருக்கும். உண்ணு நோன்புக்குக் காலவரையறை இருக்காது. நீ இதுபற்றிக் கவலை கொள்ளாதே. மாறாக, இச் சோதனையைத் தாங்கிக்கொள்ளவும், என் கொள்கைக்கு உண்மையாய் இருக்கவும் எனக்கு வலிமை இருக்கிறதென்று நான் நம்புவது குறித்து நீ மகிழ்ச்சி அடைய வேண்டும்.

உன் பாரிஸ் பயணத்தை நிறுத்தாதே. அது தானாக நின்று விட்டால், உனக்குப் போதிய பலமுமிருந்தால், நீ தாராளமாக என்னுடன் வரலாம்.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

# 276

கஷீர்கில்,
ராம்கஞ்ச் அஞ்சல்,
நவகாளி மாவட்டம்,
*18—1—1947*

சி. அமிருத்,

உன் கடிதம் கிடைத்தது. சுருக்கெழுத்து வேலை அனைத்தையும் நமது நண்பர் ரங்கசாமி மேற்கொள்ள முன்வந்துள்ளதால், நான் சொல்லி அவரை எழுதிக்கொள்ளும்படி செய்யும் டாம்பீகத்திற்கு இடம் கொடுக்க முற்படுகிறேன். பரசுராமன் போய்விட்டார்,— தற்காலிகமாகத்தானென்று நம்புவோமாக. ஆயினும் என் குறிக்கோள்கள் சிலவற்றை ஏற்றுக்கொள்ள இயலாத அளவுக்கு அவருக்கு உறுதியான சில கருத்துக்கள் இருந்தால், அவர் திரும்பி வருவாரென்று நான் எதிர்பார்க்கவில்லை. அவர் மிகவும் நல்லவர். ஆகவே அவர் உள்ளத்தில் தெளிவு ஏற்பட்டுத் திரும்பிவர அவர் விரும்பினல், தாராளமாக வரலாமென்று அவரிடம் கூறியுள்ளேன்.

தொண்டு செய்ய உனக்கு என்ன வாய்ப்பு கிட்டினலும், அதை ஏற்றுக்கொள்ள வேண்டுமென்று நீ கருதினல், என் முழு ஆதரவும் உனக்குண்டு. மேனடுகளுக்குச் செல்வதுபற்றி என் கருத்தை நீ அறிவாய். அதே சமயத்தில் அயல்நாடுகளுக்குச் சென்று தொண்டாற்ற முடியுமென்று நம்புபவர்களின் நாட்டத்தை நான் அசட்டை செய்ய விரும்பவில்லை. ஆனல் ஒரு நிபந்தனை. நீ உன் உடல் நலனைக் காத்துக்கொள்ள வேண்டும். அளவுக்கு மீறி வேலை செய்து உடலைக் கெடுத்துக்கொள்ளக் கூடாது.

பியாரிலாலுக்கு திருமதி ரோலண்டு இடமிருந்து வந்த கடிதத்தை இத்துடன் அனுப்புகின்றேன். அதில் உன்னைப் பற்றியும் ஒரு குறிப்பு உள்ளது. எப்படியும், நீ அந்தக் கடிதத்தைப் பார்க்க விரும்புவாய். நீ அதைப் படித்தபின் பியாரிலாலுக்குத் திருப்பி அனுப்பு.

பாபுவின் ஆசீர்வாதம்.

## 277

கஷிர்கில், ராம்கஞ்ச் அஞ்சல்,
நவகாளி மாவட்டம்,
*22—2—1947.*

திருத்தப்படாதது.

சி. அமிருத்,

நண்பர் ரங்கசாமியை சுருக்கெழுத்தில் எழுதச் சொல்லிக்கொண்டிருக்கும் நேரத்தில் உன் கடிதம் கிடைத்தது. உன் கடிதத்தைப் படிப்பதற்காகச் சுருக்கெழுத்துக்காரரிடம் சொல்வதை நிறுத்தி வைத்தேன். இப்பொழுது கடிதத்தைப் படித்து விட்டேன்; பதிலை உடனே சொல்லி எழுதவைக்கிறேன்.

நீ குறிப்பிடும் கடிதங்கள் அனைத்தும் எனக்குக் கிடைத்தன. நான் பதிலும் அனுப்பியுள்ளேன். தேதிகள் எனக்கு உடனடியாக நினைவில்லை; ஆனால் குறிப்புகளைப் பார்த்துச் சொல்ல முடியுமென்று எண்ணுகிறேன். இக்கடிதம் உனக்கு வந்து சேருவதற்குள், உன் குரல் மீண்டும் சீராகி இருக்குமென்று நம்புகிறேன்.

உன் இந்தி—ரோமன் உருது அகராதி, உனக்குத் திருப்பிக் கிடைப்பதற்கான வாய்ப்பு இருக்கத்தான் செய்கிறது. நான் அதை எடுத்துச் செல்லவில்லை என்றெண்ணுகிறேன். நான் விசாரித்து, கிடைத்தவுடன் சர்தார் பொறுப்பில் உனக்கு அனுப்புகின்றேன்.

இங்கு குளிராக இல்லை; ஆயினும் காற்றில் ஒருவித இதம் இருக்கின்றது. உண்மையான வெய்யில் இன்னும் தொடங்கவில்லை. இரவுகள் நல்ல குளிர்ச்சியாக இருக்கின்றன; என் கம்பளிகள் அத்தனையையும் அப்பொழுது பயன்படுத்துகின்றேன். ஆனால் என்னைப்பற்றிக் கவலைப்படத் தேவையில்லை. நான் நலமாகவே இருக்கின்றேன். இதுவரை நிமிடம் கூடத் தவறாமல் ஒழுங்காக என் நிகழ்ச்சி நிரலை நிறைவேற்றி வருகின்றேன்.

இந்த யாத்திரையின் இரண்டாவது கட்டம் ஹெயிம்சாரில் திங்கட்கிழமை 24ந் தேதியுடன் முடிகிறது. அது தக்கர் பாபாவின் தலைமைச் செயலகம். மூன்றாவது கட்டத்தைத் தொடங்குமுன், சிலநாட்கள் ஹெயிம்சாரில் தங்கி என்னைக் கவனித்துக்கொள்ள

விரும்புகிறேன். பீஹாருக்கு அவசரமாகச் செல்ல வேண்டிய அவசியமும் நேரிடலாம். பீகாரில் மூன்று நாட்கள் இருந்த சர்தார் நரஞ்சன் சிங் கில் தமது சுற்றுப்பயண அனுபவங்களை என்னிடம் கூறினார். ஒரு சில நாட்களுக்காவது நான் பீகாருக்குச் செல்ல வேண்டுமென்று அவர் வற்புறுத்தினார். பீகார் பிரதம மந்தியுடன் நான் தொடர்பு கொண்டுள்ளேன். அவர் பதிலை எதிர்பார்த்துக் கொண்டிருக்கின்றேன்.

ஒவ்வொரு நாளும் காலை 7-30 அல்லது 7-35 மணிக்கு நான் என் யாத்திரையைத் தொடங்குகின்றேன். அந்தந்த நாள் பயணத்தை சிலசில கட்டங்களாகப் பிரித்துக்கொண்டு, ஒன்றேகால் மணி நேரத்துக்குமேல் நான் நடக்க வேண்டிய அவசியம் இராதபடி ஏற்பாடு செய்து கொள்கிறேன். மிகக் குறைவாக நடந்தபோது, அரைமணி நேரம் நடந்தேன். ஒரே ஒருமுறைதான் ஒன்றரை மணி நேரம் நடக்க வேண்டியதாயிற்று.

இந்த அகராதி வேலை உனக்கு மிகுந்த தொந்தரவு தருவதுடன், உன் நேரத்தையும் அதிகம் எடுத்துக் கொள்கிறது என்பதைக் காண்கிறேன். அந்த வேலையிலிருந்து உனக்கு விடுதலை வேண்டுமா? அப்படியாயின், உன் அகராதியை நான் சிலநாட்களுக்கு வைத்துக்கொள்ள விரும்புவேன்.

கதரைப் பொறுத்தவரை, லைசன்சு நிபந்தனை நீக்கப்பட்டுள்ளது அறிந்து மகிழ்ச்சி அடைகின்றேன். வனஸ்பதியைப் பொறுத்தவரை, பஞ்சாப் பிரதமர் மனத்தை மாற்றி, உன் கருத்தை அவர் ஏற்றுக்கொள்ளும்படி செய்ய முடிந்திருந்தால், எவ்வளவு நன்றாக இருந்திருக்கும். இங்கிருந்து இருபது மைல் தொலைவில் உள்ள அவர் கிராமத்தில் பியாரிலால் இருக்கின்றார். அவர் மிகச் சிறப்பான தொண்டாற்றி வருகின்றார். மகப்பேறு மனை, மருத்துவமனை ஆகியவற்றின் விவகாரங்களை ஒழுங்குபடுத்தச் சுசீலா சேவாகிராமம் சென்றுள்ளாள். அவை பெரிதும் விரிவாகிப் பொது மக்களின் ஆதரவைக் கவர்ந்து மிக நன்றாக வேலை செய்கின்றன. சேவாகிராமத்தில் தன் வேலையை முடித்துக் கொண்டு, அவள் இங்கு தன் கிராமத் தொண்டை மேற்கொள்ளத் திரும்புவாள். ரேணுகா இங்கு என்னுடன் கிராமத்தில் இருக்கின்றாள். அவள் கிராமத்திற்கு இங்கிருந்து இரண்டு மைல் தூரம் கூட இல்லை. தோற்றத்தில் அவள் முன்பு இருந்தது போலவே தான் இருக்கின்றாள். தன்னைக் காத்துக் கொள்வதில் அவள் மிகுந்த கவனமாய் இருக்க வேண்டியுள்ளது. மற்றப்படி அவள் நலமாக உள்ளாள். இன்று காலையில் கூட, அவள் உன்னைப்பற்றி விசாரித்தாள். உன்னிடமிருந்து ஒழுங்காகக் கடிதம் வருகிறதென்றும், ஆனால் கூடியவரை என் நேரத்தை மிச்சப்படுத்த நீ முயன்றுகொண்டிருக்கிறாயென்றும் அவளிடம் கூறினேன். இந்தப் பகுதிகளுக்கு நீ எப்பொழுதாவது வருவாயா என்று அவள் கேட்டுக்கொண்டிருந்தாள். ஒவ்வொருநாளும் நான் ஒவ்வொரு ஊராகச் சுற்றிக் கொண்டிருக்கையில் நீ இங்கு வந்து பயனில்லை

என்றும், ஏதாவது ஓர் ஊரில் நான் சிலநாட்களாவது தங்கும் போது, உனக்கும் உடல்நலமாக இருந்து, சட்டசபை வேலையி லிருந்தும் மற்ற வேலைகளிலிருந்தும் உனக்கு அவகாசம் கிடைக்கு மானால், நீ ஒரு சில நாட்கள் இங்கு வருவதை நான் விரும்புவேன் என்றும் அவளிடம் கூறினேன். அவளும் திருப்தி அடைந்தாள். தன் சிறு ஊழியர் குழாத்துடன், அவள் துணிவுடன் தொண் டாற்றி வருகின்றாள்.

மனுவைப்பற்றிக் கடைசியில் குறிப்பிடலாம் என்று வைத் திருந்தேன். அவளைப்பற்றி முழுதும், அனைவரும் இங்கு அறிவார் கள். ஆகவே உன் தகவலுக்காக ஓரிரு வார்த்தைகள் சொல்ல விரும்புவேன். ஆனால் இப்பொழுது முடியாது. மணி ஒன்றாகப் போகிறது. நான் சிறிது ஓய்வெடுத்துக்கொண்டு, என் பாதங் களுக்கும் பசை தடவிக் கொள்ள வேண்டும்.

அன்பு,

பாபு

## 278

பாட்னா,
*20—4—1947*

சி. அமிருத்,

உன் கடிதம் கிடைத்தது. டாக்டர் அம்பேத்காரின் கோரிக்கை களுக்கு இணங்க முடியாது என்பதை நான் தெளிவாக உணர் கிறேன். இந்திய தேசியத்தை எதிர்த்து ஒரு வஞ்சக சதியில் பிறந்த வட்டமேசை மாநாட்டில் 'மெக்டனல்ட் தீர்ப்பு' என்று சொல்லப்படுவதை எடுத்துப் பார். ஷெட்யூல் வகுப்பினர் என்று சொல்லப்படுவோருக்குத் தனி வாக்காளர் தொகுதிகள் ஏற்படுத் தியதன் மூலம் இந்துக்களுக்கும் இந்துக்களுக்குமிடையே முதன் முறையாக அது ஒரு பிளவு உண்டாக்கியது. இந்த சமுதாயத்தை இவ்வாறு கூறுபோட்டதை எதிர்த்துப் புரட்சி எழுமென்று நான் எச்சரித்திருந்தேன். அதன் பயனாக, இடங்களை ஒதுக்குவதைக் கணிசமாக உயர்த்தி, ஆரம்பத் தேர்தல்கள் பிரிக்கப்பட்டன; ஆனால் முழுதும் தனியாகப் பிரித்திருந்தது மாற்றப்பட்டது. தனித்துச் செல்லும் போக்குக்கும் இந்து சமயத்தைத் தகர்ப்ப தற்கும் செய்யப்படும் முயற்சிக்கு இதற்கு மேல் விட்டுக் கொடுக்க முடியாதென்று நான் கருதுகின்றேன். கூட்டுத் தொகுதிகளில் சாதி இந்துக்கள் எதிர்ப்பார்கள் என்பதும் தலையிடுவார்கள் என் பதும் சுத்த அபத்தம் என்பது என் கருத்து. கூட்டுத் தொகுதி என்றால், எந்தக் கட்சியுடன் வாக்காளர் தொகுதி ஒன்று சேர் கிறதோ, அந்தக் கட்சியின் செல்வாக்கு என்று பொருள். கூட்டுத் தொகுதி முறையில் இருக்கக் கூடிய தீங்கை, சரியான கல்வி மூலமும் அறிவுத் தெளிவு மூலமும்தான் நீக்க முடியும். டாக்டர்

அம்பேத்காரின் ஆட்சேபங்கள் சிறிது காலத்திற்கு ஏற்றுக்கொள்ளப்பட்டாலும்கூட, அது இந்து சமயத்தைப் பலவீனப்படுத்தும். பகிஷ்காரம் குறித்துத் திகில் அடைய வேண்டிய அவசியமில்லை.

அன்பு,

பாபு

## 279

இரயிலில்,
*23—4—1947*

சி. அமிருத்,

ஒரு சில வரிகளே எழுதப் போகின்றேன். கூட்டங்கள் அவ்வளவு அதிகமில்லை; வழக்கத்துக்கு மாறாக அமைதியாகவும் இருந்தன. உறக்கம் கலையாமல், இரவு முழுவதும் தூங்கினேன். அது வளமான, புதிய, இன்பமான அனுபவமாய் அமைந்தது. புதிய நம்பிக்கையை அது ஊட்டியது. போலீசோ, வேறெந்தக் காவலோ எனக்கு இல்லை.

வெப்பம் கடுமையாக இருக்கிறது; ஆனால் தாங்கிக்கொள்ள முடிகிறது.

அன்பு,

பாபு

## 280

பாட்னா,
*27—4—1947*

சி. அமிருத்,

வழிபாட்டையும், என் வங்காளிப் பாடத்தையும், மனுவின் கீதைப் பயிற்சியையும் முடித்துவிட்டு இதை எழுதுகிறேன். இப்பொழுது காலை *5-50* மணி. *6*-மணிக்கு உலாவச் செல்ல வேண்டும். அதற்கிடையில் உனக்கு, ஏற்கெனவே தெரிந்துள்ள செய்தியை அறிவிக்கவே இந்த சில வரிகள் எழுதுகின்றேன். மே முதல் தேதி காலை அங்கு வர முடியுமென எதிர்பார்க்கின்றேன்.

வெப்பம் இங்கு வருத்துகிறது; அங்கும் கடுமையாகத்தான் இருக்கும். பகலில் பல முறை உறங்குவதன் மூலமும், உணவைக் கண்டிப்பாகக் குறைப்பதன் மூலமும் நான் உடல் நலனைக் காத்துக் கொள்கிறேன்.

நீ நலமாக இருக்கிருயென்று நம்புகிறேன். மற்றவை நாம் சந்திக்கும்போது.

அன்பு,

பாபு

## 281

பாட்னு,
*19—5—1947*

சி. அமிருத்,

உன் நீண்ட விவரமான கடிதம் நேற்று வந்தது. அது மிகவும் சுவையாக உள்ளது. என்ன நடக்கப் போகிறது என்பது சீக்கிரமே தெரியும்.

உன் மனத்தை வேலையிலிருந்து திருப்ப, ஓரளவு வாய்ப்பும் சிறிது ஓய்வும் உனக்குக் கிடைத்துள்ளது குறித்து மகிழ்ச்சி.

வெப்பம் இங்கு மிகக் கடுமையாக இருந்தது. இப்பொழுது மழை பெய்துள்ளதால் சற்று குளிர்ச்சியாக இருக்கின்றது. ஒவ்வொரு நாளும் வெவ்வேறு இடத்தில் வழிபாட்டுக் கூட்டங்கள் நடக்கின்றன. இன்று சிறிது தூரம் செல்ல வேண்டும்.

மனுவுக்குக் குடல்முளை அழற்சி ஏற்பட்டுள்ளது என்று கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. இயற்கை சிகிச்சையில் நான் மிகுந்த நம்பிக்கை கொண்டவன் என்ற போதிலும், மருத்துவர்கள் ஆலோசனைக்குக் கட்டுப்பட்டு விட்டுக்கொடுக்க வேண்டியிருந்தது வெட்கத்திற்குரியது. இன்று நான்காவது நாள். அவள் நலமாக இருக்கின்ருள். கவலைக்கு இடமில்லை.

நிகழ்ச்சியில் மாற்றம் இல்லாவிடில், நான் இம்மாதம் 25ந் தேதி டில்லி வந்து சேருவேன்.

உறை நீர்க் கட்டிகளையும் வெற்றிவேர்த் தட்டிகளையும் பயன் படுத்தி, மிருதுளா முன்னறையை மிகவும் குளிர்ச்சியாக வைத் திருக்கிருள்.

'ஹரிஜன்' எழுத்து வேலையை இன்னும் என்னல் சமாளிக்க முடியவில்லை. தங்கிவிட்ட வேலையைத் தீர்ப்பதிலேயே என் நேரம் செலவாகிறது.

சுசீலா அங்கிருந்தால், புது டில்லி முகவரிக்கு நான் அவளுக்கு இரண்டு கடிதங்கள் எழுதினேன் என்றும், புது டில்லி வந்து சேரும் தேதியை அவற்றில் தெரிவித்திருந்தேன் என்றும் அவளிடம் கூறு.

வீட்டில் அனைவருக்கும் அன்பு,

பாபுவின் ஆசீர்வாதம்

## 282

*31—7—1947,*
இரயிலில்

சி. அமிருத்,

உன் கடைசி வார்த்தைகள் மதி நுட்பம் நிறைந்தவை. உலக சேவையுடன் சொந்த சேவை இரண்டறக் கலக்கும் போது, அது தான் செய்வதற்கரிய சேவை. மற்றவை எல்லாம் குப்பைதான்.

உடல் நலனைப் பார்த்துக்கொண்டு உற்சாகமாக இரு.

பயணம் வசதியாக உள்ளது. இரயில் நிலையங்களில் ஒரு ஆள் கூட இல்லை. ஆகவே இரவில் தூக்கம் கெடுவதில்லை.

அன்பு,

பாபு

[டில்லியிலிருந்து காஷ்மீர் செல்லும் வழியில்]

## 283

கல்கத்தா,
*16—8—1947*

சி. அமிருத்,

உன்னிரு கடிதங்களும் ஒரே நாளில் வந்தன. இதற்கு முன் பாக எழுத இயலவில்லை. இதைக் காலை வழிபாட்டுக்குப் பின் உடனடியாக எழுதுகிறேன். உன் கடிதத்தையும் மற்றக் கடிதங்களையும் நான் நேற்று வழிபாட்டுக்குப் பின் படித்தேன். உலாவுவதற்குரிய நேரம் அதற்குள் முடிந்து விட்டது. பகல்வேளையில் அமைதி சிறிதும் இருப்பதில்லை. நான் ஒரு முஸ்லிம் வீட்டில் இருக்கிறேன். அவர்கள் அனைவரும் நல்லவர்கள். சோதேபூரிலிருந்து நான் எவரையும் அழைத்துச் செல்லவில்லை. ஆகவே எனக்குத் தேவையான உதவி முழுவதும் முஸ்லிம் நண்பர்களிடமிருந்து தான் வருகிறது. இது எனக்குப் புதிய அனுபவமில்லை. தென்னாப்பிரிக்காவில் என் பழைய நாட்களையும், இங்கு கிலாபத் நாட்களையும் எனக்கு அது நினைப்பூட்டு கின்றது. தற்போதைக்கு நான் பகைவனல்ல. இது எத்தனை நாட்கள் நீடிக்கும் என்பது யாருக்குத் தெரியும்? இந்துக்களும் முஸ்லிம்களும் ஒரு நாளிலேயே நண்பர்களாகிவிட்டனர்.

சுஹ்ரவர்த்தி உருமாறி விட்டார் போல் தோன்றுகிறது. அவர் கூடச் சேர வேண்டுமென்ற நிபந்தனையின் பேரில் தான், நான் கல்கத்தாவில் பாதிக்கப்பட்ட பகுதிகளில் தங்கினேன்.

இப்பொழுது நீ அமைச்சர் ஆகிவிட்டாய். நீ உறுதியாகவும் விசுவாசமாகவும் இருக்கவேண்டும்.

கல்வியைப் பற்றி என்ன? நீ கவனமாக இருக்க வேண்டும். ஒன்று சேர்ந்து கூட்டுப்பணி ஆற்ற வேண்டுமென நீ வற்புறுத்த வேண்டும். அப்படியானல், பெரும்பாலான விவகாரங்கள் உன் கவனத்தின் கீழ்வரும். மகிழ்ச்சி ஏற்படுகின்றபோதும், என்ன காரணத்தாலோ, அகத்தே சஞ்சலமும் உண்டாகிறது. என்னிடம் தான் எதுவும் கோளாறு உண்டா? அல்லது நம் நிலைமையில் தான் விபரீதம் ஏற்பட்டுள்ளதா?

உன் குடும்பம் முழுவதும் உனக்குப் பொறுப்பாகி விடுமென்று தெரிகிறது. அவ்வாறு இருப்பதும் நலமே.

'ஹரிஜன்' நின்று விடலாம்; ஆனல் அகராதி நிற்கக்கூடாது. அதை உன்னல் சமாளிக்க முடியுமா? உன்னல் தாங்க முடியாத சுமையாகும் போது, நீ எனக்குச் சொல்லவேண்டும்.

இப்பொழுது உலாவச் செல்ல வேண்டும்.

அன்பு,

பாபு

முதல் அரைத்தாளை நான் முழுத்தாளென்று தவருக எண்ணி விட்டேன். அத்தவறுதலைக் கண்டுபிடிப்பதற்குள் நான் ஏற்கெனவே நான்கு வரிகள் எழுதியிருந்தேன்!!!

## 284

கல்கத்தா,
*28—8—1947*

சி. அமிருத்,

உன் கடிதம்.

முதல்தரமான வீட்டைச் சுத்தப்படுத்தப் பத்து நாளா? எவ்வளவு மோசமான நிலைக்கு அறிகுறி!

உடல் நலன் மட்டும் தான் உன் பொறுப்பா? அல்லது ஒழுக்க நலன் கூடவா? நாட்டில் ஆரோக்கியம் கெட்டிருப்பதை விட ஒழுக்கம் கெட்டிருப்பது போல் தோன்றுகிறது. நான் காத்திருந்து கவனித்துக் கடவுளை வழிபட்டு வருகின்றேன்.

பாபுவின் ஆசீர்வாதம்

## 285

கல்கத்தா,
*29—8—1947*

சி. அமிருத்,

உனக்குக் களைப்பாக இருந்த போதும், நீ எழுதிய கடிதம் கிடைத்தது.

மனித இனத்தில் நீ நம்பிக்கை இழக்கக் கூடாது. மனித இனம் ஒரு மகா சமுத்திரம். ஒரு சில துளிகள் அசுத்தமாயிருப்பதால், ஆழியே களங்கமடைவதில்லை. மேலும் நீ உன் உடலை வருத்திக் கொள்ளாதே. அதனிடமிருந்து எவ்வளவோ வேலையை நீ இன்னும் பெற வேண்டியிருக்கிறது. சுசீலா நலமாக இருப்பது குறித்து மகிழ்ச்சி. அங்கிருந்தவர்களுக்கு அவள் சேவை தேவைப்பட்டிருந்தவரை, அவள் 'வா' முகாமில் இருந்தது அவசியம் தானே.

இங்கு வேலை நடந்து கொண்டிருக்கிறது. நவகாளிக்கு நான் இன்னும் செல்ல இயலவில்லை. அங்கும் அவர்கள் கூப்பிடுகிறார்கள். அதுபோலவே, பீகாரிலும் சில்ஹெட்டிலும் கூப்பிடுகிறார்கள். இப்பொழுது டில்லியில் நான் இருக்க வேண்டுமென்று ஜவாஹர்லால் தந்தி அனுப்பியுள்ளார்.

அன்பு,

பாபு

### துண்டுத் தாள்களில் பாபு எழுதிய குறிப்புகள்

## 286

தவறு இழைத்தவனை இறைவன் தண்டிக்க வேண்டுமென சாதாரண மனிதன் விரும்புவதில் தவறு எதுவுமில்லை என்பதுதான் என் கருத்து. அகிம்சை புதியதொரு கொள்கை. மனிதன் அல்லது தெய்வங்களின் சாபத்தை அழைப்பது, அகிம்சையைப் பின்பற்றும் மனிதனுக்கு அழகு ஆகாது. ஆனால் அடக்கு முறைக்கு ஆளாக்கப்பட்ட ஒரு மனிதன் பதிலுக்கு நடவடிக்கைகள் எடுப்பதிலும், மற்றவர்களின் உதவியை நாடுவதிலும், அகிம்சை வாதி தவறு எதுவும் காணமாட்டான். வாதங்களின் நியாயத்தைப் புரிந்துகொள்ள நீ முயல வேண்டும்; முரண்பட்டது என்பது முற்றிலும் பொருத்தமற்றது.

## 287

நன்றாகச் சிந்தனை செய். உன் அகக் குரல் ஆணையிடுவதற்கிணங்கச் செயலாற்று—நான் சொல்வதற்கு இணங்கியல்ல. நான்

உனக்குச் சொல்வது போல் நீ செய்ய விரும்பினால், அது மனப் பூர்வமான, விவேகமான கீழ்ப்படிதலாக இருக்கவேண்டும். வீம்புக்கு நீ இங்கு உணவருந்தாமல் இருந்தால், நீ செய்வது முற்றிலும் தவறாகும்; நீ என்னைப் புரிந்து கொள்ளவில்லை என்று பொருள்படும். கீழ்ப்படிதலும், எதையும் ஏற்றுக் கொள்ளும் மனநிலையும், இது வல்ல.

## 288

நாளடைவில் பத்திரிகைப் பதிப்பு வேலை முழுவதையுமே உன்னிடம் ஒப்படைக்கும் அளவுக்கு நான் உனக்குப் பயிற்சி தர இயலுமென்று எதிர்பார்க்கின்றேன். எழுத்தில் உன் திறமையும் தேர்ச்சியும் வியக்கத் தக்கனவாய் உள்ளன. சிந்தனைக் கோர்வை தான் இன்னும் உருவாக வேண்டும். ஒரு எண்ணத்தை, அதைப் போலவே எடுத்துச் சொல்வதன்றால், தெளிவாக அதை விளங்கிக் கொள்ள வேண்டும். ஒருவர் கருத்தை இன்னொருவர் எடுத்துச் சொல்கையில் கடினமாகிறது. ஆனால் அது உன் ஆற்றலுக்கு அப்பாற்பட்டதல்ல என்பதை நான் அறிவேன். நீ குறிப்புகள் பல எழுதி என் மீது பொழியலாம். மகாதேவ் குறிப்புகளை நான் நிராகரிப்பது போல், உன் குறிப்புகள் அனைத்தையும் நான் நிராகரிக்கக் கூடும்.

## 289

[ஆங்கிலேயர் ஒருவருக்கு]

நீங்கள் கேட்டுள்ளது, இடைஞ்சலான கேள்வி இல்லையெனினும் கடினமான கேள்வியாகும். பிரிட்டிஷ் தொடர்பு பற்றி என் கருத்துக்கள் மிகத் தீவிரமானவை; கண்டிப்பானவை. பிரிட்டிஷ் மக்கள் மீது நான் பேரன்பு கொண்டுள்ள போதிலும், அவர்களின் ஏகாதிபத்தியம் மனித சமுதாயத்திற்கும், குறிப்பாக, வேண்டுமென்றே இழிவு படுத்தி ஆண்மையைப் பறித்து அவமானப்படுத்தியுள்ள இந்தியாவிற்கும் ஒரு பெரும் துரோகமாகும் என்று நான் கருதுகிறேன்.

அந்த அநீதியையே அருஞ்சாதனையாக மாற்ற முயன்று அதில் அவர்கள் பெருமையும் கொள்வதால், அத் தவறு இன்னும் கொடியதாகின்றது. ஆகவே பிரிட்டிஷ் அரசாங்கம் உடனடியாகச் செய்ய வேண்டியது தவறை ஒத்துக் கொண்டு, அதைத் திருத்துவதாகும். திருத்த முயற்சி எடுக்கப்படுமென்பதன் அறிகுறி இந்திய வானில் இன்னமும் தென்படவில்லை. ஆன்மிக உயர்வு கொண்ட நாடு என்று பிரிட்டன் சொல்லிக் கொள்வதற்கு முன், முதல் நடவடிக்கையை அது எடுக்க வேண்டுமென்று என்னால் எண்ணாமல் இருக்க முடியவில்லை. அதற்குப் பிறகு, இரவுக்குப் பின் பகல் தொடர்வது போல், அனைத்தும் தொடரும். செயல்முறையில் என்னென்ன நடவடிக்கைகள் எடுக்க வேண்டுமென்று நான் யோசனை கூற முற்படுவது ஆணவமாகும். தங்கள் தவறை அவர்கள் உணர்ந்து விட்டாலே, பாதை தெளிவாகி விடும்.

## வாசகருக்கு

நான் எழுதியுள்ளவற்றைப் படிப்பவருக்கும், அவற்றில் அக்கறை கொண்டுள்ள மற்றவர்களுக்கும் ஒன்று சொல்ல விரும்புகிறேன். நான் இப்பொழுது சொல்வதற்கும், முன்பு சொன்னதற்கும் முரண்பாடு எதுவும் இருப்பதாகத் தோன்றக் கூடாதென்ற கவலை எனக்குக் கிடையாது. வாய்மையை நாடும் என் யாத்திரையில் நான் பல பழைய கருத்துக்களை ஒதுக்கிவிட்டுப் புதிய பல உண்மைகளை ஏற்றுள்ளேன். எனக்கு வயதாகி விட்டது. ஆனால் என் வளர்ச்சி நின்றுவிட்டதென்றோ, இந்த ஊனுடல் மறைவதுடன் என் வளர்ச்சியும் முற்றுப் பெறுமென்றோ நான் எண்ணுவதில்லை. கணத்திற்குக் கணம், என் இறைவனை வாய்மையை ஏற்று, அதற்குக் கீழ்ப்படிந்து நடக்க வேண்டுமென்பதே என் கவலை. ஆகவே ஒரு பொருள் பற்றி என் இரண்டு கருத்துக்களிடையே முரண்பாடு எதுவும் காண்பவர் எவரும், என் நிதான புத்தியில் இன்னும் நம்பிக்கை கொண்டிருந்தால், ஒரே பொருள் பற்றி நான் பிந்திக் கூறிய கருத்தை ஏற்றுக் கொள்வது நலம்.

‘‘ஹரிஜன்’, மோ. க. காந்தி
29, ஏப்ரல், *1933*

# முன்னுரை

[இக்கடிதங்களை குஜராத்தியிலிருந்து ஆங்கிலத்தில் மொழி பெயர்த்த திரு வி. ஜி. தேசாய் எழுதியுள்ள முன்னுரை:]

இக் கடிதங்களை மொழிபெயர்ப்பதில் நான் மகிழ்ச்சி கண்டதுடன் இதைப் பெரும் பேருகவும் கருதுகிறேன். சபர்மதி ஆசிரமத்தில் என்னுடன் சிறிது சமஸ்கிருதம் பயின்றது முதல் மணிபென் எனக்கு சோதரி போல் இருந்துள்ளார்.

சர்தார் வல்லபாய், ஸ்ரீமதி ஜாவேர்பா பட்டேல் ஆகியோருக்கு ஒரே மகளான மணிபென், கேடா மாவட்டத்தில் கரம்சாதிலிருந்து மூன்று மைல் தூரத்தில் உள்ள கண கிராமத்தில் தன் தாய் மாமன் வீட்டில் 1903 ஏப்ரல் மாதத்தில் பிறந்தார். அவருக்கு ஆறு வயது கூட முடிவதற்குமுன், 1909 ஜனவரி 11-ந் தேதி, தன் அன்னையை இழக்கும் துர்ப்பாக்கிய நிலை ஏற்பட்டது. இந்தத் துன்ப நிகழ்ச்சி அவர் உள்ளத்தில் ஆழப் பதிந்தது. தாயில்லாக் குழந்தையாகப் பம்பாயில் ஸ்ரீ வித்தல்பாய் பட்டேல் வீட்டிலும், சர்தாரின் சோதரியுடன் பரோடாவிலும், தன் பாட்டியுடன் கரம்சாதிலும், அவர் வாழ்ந்தபோது ஏற்பட்ட அனுபவங்கள் இந்தத் துன்பத்தை அதிகரித்தன.

கரம்சாதில் சிறிது காலத்திற்கு அவர் ஒரு குஜராத்திப் பள்ளிக் கூடத்திற்குச் சென்றூர். பின்பு பம்பாயில் மேரி அரசிப் பள்ளியிலும், பந்த்ராவில் ஒரு கான்வென்ட் பள்ளிக் கூடத்திலும் பயின்ரூர். 1917-ம் ஆண்டு ஜூன் மாதத்தில் அவர் ஆமதாபாத்தில் சர்தாருடன் தங்கி, அரசினர் பெண்கள் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தார். சாதாரணமாக அவர் 1921-ல் பம்பாய் பல்கலைக் கழகத்தில் மெட்ரிகுலேஷன் தேர்வு எழுதியிருக்கவேண்டும். ஆனல் ஒத்துழையாமை இயக்கத்தில் சேர்ந்து அவர் அரசினர் பள்ளியிலிருந்து விலகினர். அதன்பின், குஜரத் வித்யா பீடத்துடன் இணைக்கப் பட்ட தனியார் உயர்நிலைப் பள்ளியில் சேர்ந்தார். 1924-ல் வித்யா பீடத்தின் ஸ்நாதக [பி. ஏ.] பட்டம் பெற்ரூர். அத்துடன் முறையான கல்விப் பயிற்சி முடிந்தது. ஆனல் அவருக்கு அரசியல் கல்விப் பயிற்சி அளிக்கவும், வாழ்க்கைக்கு ஆயத்தம் செய்யும் வகையில் பொது அறிவு புகட்டவும், அவர் பட்டம் பெறுமுன்பு, பல ஆண்டுகளாகவே காந்திஜி பொறுப்பேற்றிருந்தார். 1921-ம் ஆண்டு தொடக்கத்தில் காந்திஜி அவருக்கு எழுதிய முதல் கடிதத்திலேயே, சுயராஜ்யம் அடைவதில் நூற்புப் பணியின் முக்கியத்துவத்தை எடுத்துரைப்பதைக்காண்கிரூேம். அவ்வாண்டு கிறிஸ்துமஸ் பண்டிகையின்போது நடைபெறவிருந்த வரலாற்றுச் சிறப்புபெற்ற காங்கிரஸின் ஆமதாபாத் மாநாடு நடத்துவதற்கான ஏற்பாடுகளைச்

செய்வதுபற்றியும் காந்திஜி தம் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளார். அப்பொழுது மணிபென் மாணவியாக இருந்தபோதும், அன்னியத் துணியை பகிஷ்கரிக்கும் இயக்கத்தில் அவர் அப்பொழுதே ஈடுபட்டிருந்தார்.

அன்று தொடங்கி, *1948* ஜனவரியில் நிறைவு பெற்ற வரலாறு, இந்நூலில் அடங்கியுள்ள கடிதங்களில் சித்திரிக்கப்பட்டுள்ளது.

*8*, செப்டம்பர், *1963* வி. ஜி. தேசாய்

## 1

டில்லி,
*12—2—1921*

சி. மணி,

உன் கடிதம் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. நீயும் உன் சகோதரரும் தினமும் ஒழுங்காக நூற்பதால் மட்டும் சுயராஜ்யம் கிடைத்துவிடாது. நீ விரும்பினுல் தாராளமாகத் தினமும் நான்கு மணி நேரம் நூற்கலாம். பயிற்சி அதிகமாக நல்ல தேர்ச்சியும் பெறுவாய்.

ஸ்ரீ [தேசபந்து சித்தரஞ்சன்] தாஸ் இப்பொழுது ஆமதாபாத் செல்லமுடியாது.

அவ்வப்போது எனக்கு எழுது. நீ என்ன படிக்கின்ருய் என் பதையும் எனக்குக் கூறு.

பாபுவின் ஆசிகள்

பி. கு.: நான் இப்பொழுதெல்லாம் அதிகப் பயணம் மேற் கொள்ள வேண்டியுள்ளது. இங்கிருந்து பாஞ்சாலத்திற்கும், அதற் குப் பிறகு, லக்ஷ்மணபுரிக்கும் விஜயவாடாவுக்கும் செல்கிறேன். ஆகவே எப்பொழுது ஆமதாபாத் போய்ச் சேருவேன் என்று என்னுல் கூறமுடியாது. வரவிருக்கும் காங்கிரஸ் மாநாட்டிற்கு ஏற் பாடுகள் செய்யுமாறு அப்பாவிடம் சொல்.

## 2

விஜயவாடா,
பேசாநோன்பு நாள்,
*4—4—1921*

இப்பொழுது காலை ஐந்து மணி. மசூலிபட்டினத்திற்கு என்னை அழைத்துச் செல்லவிருக்கும் காருக்காகக் காத்திருக் கின்றேன்.

காலை ஒரு மணிக்கு நான் எல்லூரிலிருந்து இங்கு வந்தேன். இந்த மூன்று ஊர்களும் இருக்கும் இடத்தை பூகோளப் படத்தில் பார். நான் வந்ததும் உன் கடிதத்தைப் பார்த்துப் படித்தேன்.

டாக்டர் [பல்வந்த்ராய் நரசிம்மலால்] கனுகா சிறந்த பணி யாற்றி வருகிருரெனத் தெரிகிறது, தயாபாய் [மணிபென் சகோ தரர்] கள்ளுக்கடைகளை மறியல் செய்து வருவது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளிக்கிறது. அவனை என் சார்பில் பாராட்டு.

நீ தினமும் நான்கு மணி நேரம் ஒழுங்காக நூற்பது நல்லதே. நூல் உறுதியாகவும் சீராகவும் இருக்கும்படி பார்த்துக்கொள். தினமும் நூற்கின்ற நூலைக் கணக்கு வைத்துக்கொள்.

நூற்பதன் மூலம் தான் சுயராஜ்யம் பெற முடியுமென்ற என் நம்பிக்கை நாளுக்கு நாள் மேலும் மேலும் உறுதிப்பட்டு வருகிறது.

இப்பொழுது எனக்கு வேலை சற்று அதிகமாகத் தானிருக்கின்றது. ஓயாமல் ஊர் ஊராகச் சென்று கொண்டிருக்கிறேன். ஆகவே பென்சிலில் கடிதம் எழுதும் உரிமையைக் கோருகின்றேன். ஆனால் நீ மையில் தான் எழுதவேண்டும்; அதுவும் கையால் செய்த பேனாவைக் கொண்டுதான்.

நீ அப்பாவை நன்கு கவனித்துக் கொள்ள வேண்டும். உங்கள் இருவரையும் பற்றிய கவலை அவருக்கு இராமல் செய்ய வேண்டும்.

குஜராத்தி மொழியில் நீ நாளுக்கு நாள் அதிகத் தேர்ச்சி பெற வேண்டும். ஒவ்வொரு வாரமும் 'நவஜீவன்' இதழைக் கவனமாகப் படிப்பவர், மொழியில் நல்ல தேர்ச்சி பெறுவது நிச்சயம்.

பன்னிரண்டாம் தேதி செவ்வாய்க்கிழமை நான் ஆமதாபாத் போய்ச் சேருவேன். நான் வருவதற்குள், [திலகர் சுயராஜ்ய நிதிக்கு] அப்பா நல்ல வசூல் செய்துள்ளாரென்று அறிய விரும்புகிறேன் என்று அப்பாவிடம் சொல்.

## 3

பம்பாய்,
செவ்வாய்க்கிழமை

[16, ஜூன், 1921]

உன் கடிதம் கிடைத்தது. அவரைச் சந்தித்து, உரையாட விரும்புகிறேன் என்று காகா [ஸ்ரீ வித்தல்பாய் ஜாவேர்பாய் பட்டேல்] விடம் நான் ஏற்கெனவே கூறியுள்ளேன்.

நீயும் உன் சகோதரனும் [தயாபாய்], தேசத் தொண்டிற்கு உங்களை அர்ப்பணம் செய்ய வேண்டும். அதாவது நூற்பு, பஞ்சடித்தல் ஆகியவற்றில் நீங்கள் நல்ல தேர்ச்சி பெற்று, வேறெவரும் அதில் உங்களை மிஞ்ச இடம் கொடுக்கக்கூடாது. மற்ற வேலைத் திட்டங்கள் அனைத்தும் தற்காலிகமானவை தான். இது தான் நிரந்தரமானது, நம் பலத்திற்கு ஒரே ஆதாரம் என்று நான் கூறுவதை நம்பு.

பாய் மகாதேவ் [தேசாய்] நேற்று இங்கு வந்தார். அவர் கணிசமான நிதி திரட்டியுள்ளார்.

பம்பாயில் நல்ல மழை பெய்துள்ளது. கத்கோபாரிலிருந்து நேற்று நமக்கு 55,000 ரூபாய் கிடைத்துள்ளது.

நான் உனக்கு எழுதலாம், எழுத இயலாமல் போகலாம்; ஆனால் நீ எனக்குத் தொடர்ந்து எழுத வேண்டும்.

## 4

திங்கள்
ஜூலை 11, 1921

உன் கடிதம் கிடைத்தது. அயல் நாட்டுத் துணியைக் கொளுத்துவதன் நோக்கம், அதன் மீது மக்கள் மனத்தில் இன்னும் அதிக அருவருப்பை உண்டாக்குவது தான். ஏழைகளுக்கு அதைக் கொடுத்து விடுவதென்பது அறியாமையில் பிறந்த ஒரு யோசனை. இரண்டு லட்ச ரூபாய் மதிப்புள்ள துணி அவர்களுக்குக் கிடைக்கிறதா, இல்லையா என்பது ஒரு பொருட்டா? இத்தனை நாட்களாக இந்தத் துணியை இறக்குமதி செய்ததன் மூலம் நம் நாட்டுக்குப் பெருந் தீங்கு இழைத்துள்ளோம். அந்தத் துணியைத் தானமாகக் கொடுத்து விடுவதில் நமக்கு நன்மை எதுவுமில்லை என்று தான் நான் கருதுகிறேன். அதை அயல் நாடுகளுக்கே அனுப்பக்கூடும். ஆனால் இப்பிரச்னை பற்றி நான் சந்திக்கும் ஒவ்வொருவருடனும் கலந்து பேசி வருகிறேன்; அவர்களில் பெரும்பாலோர் ஏற்றுக் கொள்ளும் நடவடிக்கையை மேற்கொள்வேன். இது பற்றி உனக்கு இனியும் ஐயப்பாடுகள் இருந்தால் என்னிடம் தாராள மாகக் கேட்கவேண்டும்.

தயாபாயின் வானரப் படையினர் [சிறுவர்கள் அணி] நல்ல தொண்டாற்றி வருகிறார்களெனத் தோன்றுகிறது. ஆனால் அவர்கள் ஒன்றை நினைவிற்கொள்ள வேண்டும். அவர்கள் மக்களை மரியாதையுடன் அணுக வேண்டுமே ஒழிய, அவர்களை நிந்தனையோ கேலியோ செய்யவே கூடாது. குடிக்கு அடிமையானவர்கள் நம் பரிதாபத்திற்குத் தான் உரியவர்கள்.

காகாசாகிப் [கலேல்கார்] மிக நல்ல ஆசிரியர். உங்கள் அனைவருக்கும் அவரைப் பிடித்திருப்பது எனக்கு மகிழ்ச்சி தருகிறது.

பெரியப்பாவை [ஸ்ரீ வித்தல்பாய்] பலமுறை சந்தித்தேன். நல்லதொரு தீர்மானத்தை மாவட்ட உள்ளாட்சி வாரியம் ஏற்றுக் கொள்ளும்படி அவர் செய்தார். அவருக்குச் சர்க்காவில் சற்றும் நம்பிக்கை இல்லையென்றும், அதன் மீது தன் வெறுப்பை வெளிப் படையாகக் காட்டிக் கொள்கிறாரென்றும் சிலர் கூறுகின்றனர்

நாங்கள் மறுமுறை சந்திக்கும் போது இதைப்பற்றி நான் அவருடன் பேசுவேன். எங்கள் கடைசிச் சந்திப்பின் பயனாகச் சர்க்கா பற்றி அவர் கொண்டிருந்த சந்தேகங்கள் பெரும் பகுதி நீங்கி விட்டன என்று நான் எண்ணியிருந்தேன்.

## 5

பம்பாய்,
வெள்ளி ஜூலை 15, 1921

உனக்கு நீண்டதொரு பதில் எழுதப் பெரிதும் விரும்புவேன். ஆனால் அதற்கு அவகாசமில்லை. இரவு மணி 11 ஆகப்போகிறது. ஆனால் ஒரு கேள்விக்கு உடனே பதில் சொல்வேன். அயல்நாட்டுத் துணி வியாபாரி எவரும், தம் வசம் உள்ள துணியைக் கொளுத்துவதற்கோ அல்லது தானமாகவோ தர வேண்டுமென்று நாம் எதிர் பார்க்கக்கூடாது.

[மதுவிலக்குப் பிரசார] துண்டுப் பிரசுரங்களை நான் படிக்க முடியவில்லை. ஆனால் கள்ளுக்கடைக்காரர் நம்மை அடித்து நொறுக்கினால், அந்த அளவுக்கு நம் குறிக்கோளுக்கு ஆதரவு பெருகும் என்பதில் ஐயமில்லை.

## 6

திப்ருகாத் (அஸ்ஸாம்)
ஆகஸ்ட் 25,1921

உன் கடைசிக் கடிதத்திற்குப் பதில் எழுதாமல் நீண்ட நாள் தாமதித்து விட்டேன். உன் பெரியப்பாவின் மனத்தை மாற்றி அவர் ஆதரவைப் பெறுவது மிகக் கடினமானது. அவர் வயதில், குறிப்பிட்ட ஒரு துறையில் [சட்டசபைத் தொண்டில்], தாம் வெற்றி கண்டுள்ளதாக அவர் நம்பும்போது, வேறுவகையான தொண்டினை அவர் மேற்கொள்வது கடினம்தான். கருத்து வேறுபாட்டைக் கண்ணியமாக ஏற்றுக் கொள்ள இசைந்து, நாம் நமக்குரிய வழியைப் பின்பற்றத் தான் வேண்டும்.

[அயல் நாட்டுத் துணி] பகிஷ்காரமும், கதர் உற்பத்தியும் நாளுக்கு நாள் முன்னேறி வருகின்றன என்று நம்புகிறேன்.

அஸ்ஸாமில் சூழ்நிலை முற்றிலும் வேறானது. என் பயணம் பற்றிய விவரத்தை நவஜீவனில் வெளியிட்டுள்ளேன்; ஆகவே அது பற்றி இங்கு குறிப்பிட மாட்டேன்.

இந்துலால் [யாக்ஞிக்] பாயுடன் நான் பேசியுள்ளேன். குமுத் பென்னை [அவர் மனைவி] நான் சந்தித்து, ஆறுதல் கூறப் பெரிதும் விரும்புகிறேன்.

அக்டோபருக்கு முன் ஆமதாபாத்திற்கு நான் வர முடியு மென்று எதிர்பார்க்கவில்லை.

நீயும் தயாபாயும் அப்பாவின் வேலையில் அவருக்கு உதவுகிறீர்கள் என்று நம்புகிறேன். அவர் மிகப் பெரும் பொறுப்பைத் தாங்கி வருகிறார்; இறைவன் அருளால், அதைச் செம்மையாக நிறைவேற்று வார்.

முப்பத்தோராம் தேதியிலிருந்து மூன்றாம் தேதி வரை, நான் சிட்ட காங், பாரிசால் ஊர்களிலும், நாலாம் தேதி முதல் பன்னிரண்டாம் தேதி வரை கல்கத்தாவிலும் இருப்பேன்.

## 7

கல்கத்தா,
பேசா நோன்பு நாள், *8*, செப்டம்பர், *1921*

உன் கடிதம் இப்பொழுது தான் வந்தது. கொளுத்துவதற்கு நாம் ஆடைகளைத் தான் கேட்க வேண்டும். சிலர் வீடுகளில் அயல் நாட்டுச் சமக்காளங்கள் இருக்கலாம்; அவற்றை அவர்கள் கொடுக்க விரும்பாமலிருக்கலாம். ஆகவே அதுபோன்ற பொருட்களை நாம் கேட்கவில்லை. அதுபோன்ற அயல்நாட்டுப் பொருட்களை இனிமேல் அவர்கள் வாங்காமலிருந்தால் போதும். இப்பொருள் பற்றி நவ ஜீவனில் நான் ஒரு குறிப்பு எழுதவேண்டும்.

சமணர் கூட்டங்களுக்குச் செல்வது பற்றி நீ யோசித்தது நல்லதே. அங்குக் குழுமியிருந்த பெண்களில் எவரும் தங்கள் அயல் நாட்டுத் துணிகளைக் களைந்தார்களா?

விஜயவாடா புடவைகள் தயாரிப்பதில், ஆலைநூல் இப்பொழுது பயன்படுகிறது என்பது உண்மையாக இருக்கலாம். நேர்த்தியான துணியைப்பற்றிக் கவலைப்படாமல் இருப்பதே நல்ல கொள்கை என்று தோன்றுகிறது.

இங்கும் உன் வயதுப் பெண்கள் இருவர், ஆர்வ மிக்கவர், உள்ளனர். அவர்கள் கதர் மட்டுமே அணிகின்றனர்; நாரீ மந்திர் தொண்டில் தேசபந்துதாஸின் சகோதரிக்குத் துணைபுரிகின்றனர்.

## 8

நீபானி,
அக்டோபர் *1921*

உன் நாட்டுப் பற்றும் தொண்டும் என்னை வியப்பில் ஆழ்த்துகின்றன. தீபாவளியின்போது, நீ அதிகம் திரட்டவேண்டும்.

உன் அப்பாவுக்குப் பணிவிடை செய்வதில் கவனமாய் இருக்கிருயென்று நம்புகிறேன்.

தேசிய இயக்கத்திற்குத் தாராளமாக உதவ ஆமதாபாத் சகோதரிகள் முன்வந்ததைப் புனு பெண்களிடம் எடுத்துக் கூறினேன். அவர்களும், தங்கள் தங்க வளையல்களையும், மோதிரங்களையும், சங்கிலிகளையும் வாரி வழங்கிக் குஜரத் சகோதரிகளுக்குச் சளைக்காமல் உதவினர்.

## 9

ஜுஹு,
திங்கள், ஏப்ரல் *1924*

சுரம் நீங்கிவிட்ட போதிலும், நீ இன்னும் மிகவும் பலவீனமாகவே இருப்பதாகவும், டாக்டர் கனுகாவுடன் தங்கியுள்ளதாகவும், மணிலால் கோத்தாரி எனக்குத் தெரிவிக்கிருர். அப்பாவும் மருத்துவரும் அனுமதித்தால் நீ இங்குவர வேண்டுமென்று விரும்புகிறேன். இங்கு உனக்கு ஓய்வு, மன அமைதி, இரண்டும் கிடைக்கும்; இழந்த பலத்தை மீண்டும் விரைவில் பெறலாம். அதற்குப் பிறகு என் வேலையில் எனக்கு உதவுமாறு நான் உன்னை அழைப்பேன். நீ எனக்குச் சுமையாய் இருப்பாயென்று நீயோ அப்பாவோ அஞ்சக்கூடாது. நீ தரைக்குத்தான் சுமையாய் இருப்பாய்; உன்னைப் போன்ற நூறு பெண்களின் சுமையைத் தாங்கும் அளவுக்குத் தரைக்குப் பலமும் ஆற்றலும் இருக்கின்றன. சமையற்காரருக்கு வேலை சற்று அதிகமாகலாம். ஆனல் தரையைப் போலவே உறுதியான, அனுபவமிக்க ஒரு சமையற்காரரை ரேவா சங்கர் பாய் [ஜகஜீவன் ஜாவேரி] அனுப்பியுள்ளார். நீ இங்கு வந்தால், உன்னைப்பற்றி எனக்குக் கவலை ஒன்றும் இருக்காது. நாட்டுத் தொண்டில் ஈடுபட்ட எவரும், நான் செல்லமுடியாத இடத்தில் நோய்வாய்ப்பட்டால், என் கவலை அதிகரிக்கின்றது. அவரோ, அவளோ, என் கண்காணிப்பில் இருந்தால் என் கவலை குறையும்.

நோயின் காரணமாக நீ நூற்க இயலாதபோது, வழக்கமாக நூற்பதைக் காட்டிலும் இரு மடங்கு நேரம், தயாபாய் நூற்பில் ஈடுபட்டு அதற்கு ஈடுசெய்வானென்ற நம்பிக்கை எனக்குண்டு.

## 10

ஜுஹு,
திங்கட்கிழமை, மே *5, 1924*

சாதகப் பறவை மழையை எதிர்பார்ப்பதுபோல், நானும் உன் கடிதத்திற்காக நேற்று ஆவலுடன் எதிர்பார்த்திருந்தேன். இன்று காலை வழிபாட்டுக்குப்பின் முதலில் நான் படித்தது உன் கடிதத்தைத்தான்.

ஜுஹுவில் இருந்ததைக் காட்டிலும் ஹஜிராவில் உன் உடல் நலன் நன்ருக உள்ளதென்று...கூறுகிருர். இந்த முன்னேற்றம் தொடர்ந்தால், நாங்கள் அனைவருமே ஜுஹுவிலிருந்து விடை பெற்று, நீ இருக்கும் இடத்திற்கு வந்து சேருவோம். துர்க்காவுக்கும் [மகாதேவ் தேசாய் மனைவி] ஹஜிரா ஒத்துக் கொள்ளுமென்று நம்புகிறேன். மகாதேவ் சென்னைக்குச் செல்லவில்லை; சபர்மதி செல்கிருர்.

பம்பாயிலிருந்து உனக்கு எதுவும் தேவையா என்று என்னிடம் கூறவேண்டும். அழுத பிள்ளைக்குத் தான் அன்னை பால் கொடுப்பாள் என்பது பழமொழி. மற்றவர்கள் மரியாதை பற்றிக் கவலைப் படவேண்டும். அன்னைக்கோ மரியாதை பற்றிக் கவலைப் பட நேரம் இராது. ஆனுல் அவளோ இரக்கமே உருவானவள். ஆகவே தான் தாய்போல் உன்னைக் கவனித்துக் கொள்ள நான் முயல்கிறேன்.

ராதா [மகன்லால் காந்தியின் மகள்], கிக்கிபென் [ஆச்சாரியா கிருபளானியின் சகோதரி] ஆகியோர் நலமாக இருக்கின்றனர். மௌலானு ஷௌகத் அலி இங்கு வந்து இரு தினங்கள் தங்கியிருந்தார்.

## 11

ஜுஹு,
*மே 7, 1924*

நீ தவருமல் எனக்கு எழுதுவது பெரும் ஆறுதலாக இருக்கின்றது. பொறுமையும் தன்னம்பிக்கையும் மேற்கொள்ள நீ பழக வேண்டும். தன்னம்பிக்கை, மருந்துகளைக் காட்டிலும், அதிக நன்மை பயக்கும். பிரபுதாஸ் பஞ்சகனிக்குச் செல்லவில்லை. கிரிதாரி [கிருபளானி] நேற்று ஆமதாபாத் சென்ருர்.

## 12

ஜுஹு,
மே *11, 1944*

உன் கடிதம் கிடைத்தது. ஏற்கெனவே உனக்கு ஒரு கடிதமும் இரு அஞ்சலட்டைகளும் அனுப்பியுள்ளேன். ஆகவே இது உனக்கு நான் எழுதும் நான்காவது கடிதம். ஆனுல் அஞ்சலட்டை ஒன்று வந்து சேர்ந்தது பற்றித்தான் நீ குறிப்பிட்டுள்ளாய்.

ஏமாற்றம் நேரிடும் போது கூடக் கலங்காமல் இருப்பது தான் தன்னம்பிக்கை. வாய்மையிலும் அகிம்சையிலும் எனக்கு நம்பிக்கை இருந்தால், துன்பம் நேரிடும் போதுகூட, அவற்றிற்கு நான் உறுதி

யாக இருப்பேன். சுரம் இருப்பதைப் பொருட்படுத்தாதே. அதையும் மீறி நாம் நம்பிக்கை கொண்டிருக்க வேண்டும். அசட்டையாய் இருந்து விடக்கூடாது; ஆனல் அதே சமயத்தில் கவலைப் படவும் கூடாது.

'தியாக மூர்த்தி'* பற்றி நீ என்ன நினைக்கின்ருய்? அதைப் பற்றி எனக்கு எழுத மறந்து விடாதே.

உன் ஆரோக்கிய நிலையத்தில் காலி அறை ஒன்று இருக்கிறதா? இருந்தால் வசுமதியை [திமத்ராம் பண்டிட்) அங்கு அனுப்ப விரும்புவேன்.

## 13

ஜுஹு,
புதன்கிழமை,
*மே 14, 1924*

உன் கடிதங்கள் இரண்டு, நேற்று ஒரே நேரத்தில் வந்து சேர்ந்தன. என் கடிதங்கள் உனக்குக் கிடைக்கின்றனவா, இல்லையா என்பது எனக்குத் தெளிவாகத் தெரியவில்லை. வாரத்துக்கு ஒரு முறை எழுதுவதற்குப் பதிலாக, ஒரு நாள் விட்டொரு நாள் நான் எழுதியுள்ளேன். உன் சுரம் விரைவில் நீங்கி விடும். நீ உணவருந்தவும், அதைச் செரிக்கவும் முடிகிறது. அது நல்ல அறிகுறி. சுகக் குறைவு நீண்ட நாட்கள் இருந்துள்ளதால், அது நீங்குவதற்குச் சில நாட்கள் பிடிக்கும். அவ்வளவு தான்.

'தியாக மூர்த்தி' பற்றி உன் கருத்தை எதிர்பார்க்கின்றேன்.

## 14

ஜுஹு,
*15, மே, 1924*

உன் கடிதம் கிடைத்தது. 20ந் தேதி வாக்கில், ஆரோக்கிய நிலையத்திலிருந்து நீ வருவது நியாயமாயிராது. மே மாத இறுதி வரையிலாவது நீ அங்கு தங்க வேண்டும். 29ந் தேதி நான் சபர்மதிக்குப் போய்ச் சேர வேண்டுமாதலால், ஹஜிராவுக்கு நான் வர இயலாது.

---

* 'பெண்களும் சமூகக் கொடுமையும்' என்ற நூலின் குஜராத்திப் பதிப்பு.

## 15

ஜுஹு,
*17, மே, 1924*

ஆமதாபாத்தில் நாம் சந்தித்த பின்பு, நீ மருந்து எதுவும் சாப்பிடுவது அவசியமா என்று முடிவு செய்யலாம். உடல் நன்கு தேறுவதற்கு முன், நீ ஆரோக்கிய நிலையத்தை விட்டு வரக்கூடாது. வசுமதி திங்கட்கிழமை ஹஜிராவுக்கு வரக்கூடும். வாடகைக்கு அங்கு வீடுகள் கிடைக்குமா? துர்க்கா எப்படி இருக்கின்றாள்? எனக்கு எழுதக் கூடாதென்று அவள் செய்துள்ள முடிவு கண்டிப்பானதா? ஆம்; என் கையில் சிறிது நடுக்கம் இருக்கத் தான் செய்கிறது.

## 16

ஜுஹு,
மே *20, 1924*

உன் கடிதமும் அஞ்சலட்டையும் கிடைத்தன. 'தியாகமூர்த்தி' பற்றி நீ எழுதியுள்ளது எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்துள்ளது. தூய்மையும் தன்னடக்கமும் போற்றிப் பேண வேண்டிய பண்புகள். நாம் சந்திக்கும் போது, அவற்றைப் பற்றி மேலும் விவாதிக்க வேண்டும். உனக்கு இன்னும் தொந்தரவு தரும் சிறு சுரத்தையும் நீ போக்க வேண்டும். வசுமதி, ஹஜிராவுக்கு வரவில்லை; தேவ்லாலிக்குச் செல்கிறாள். ஹஜிராவிலிருந்து விரைவில் வரும் உத்தேசத்தை நீ கைவிடவேண்டும்.

## 17

ஜுஹு,
திங்கட்கிழமை,
*26, மே, 1924*

எனக்கு முன்பாகவே நீ ஆமதாபாத் வந்து சேர்ந்து விட்டாயே! நீயும் தயாபாயும் சொந்த அறை ஒன்றில் சபர்மதி ஆசிரமத்தில் தங்கி, மாணவர் விடுதியிலாவது, பாவுடனாவது உண வருந்துவது தான் நல்லதென்று நான் உறுதியாக நம்புகிறேன். அது உனக்கு வசதியாக இராவிடில், நீயே சமைத்துக் கொள்ளலாம். ஆசிரமத்திலிருந்து நீ கல்லூரிக்குச் செல்லலாம்.

## 18

சபர்மதி,
*1924*

நேற்று வந்து விட்டு, நான் உறங்கிக் கொண்டிருந்ததால் என்னைப் பார்க்காமல் சென்று விட்டது-ரொம்ப ஒழுங்கு! இப்

பொழுது எனக்குச் செய்தி வேறு அனுப்புகின்ருய். உடல் நல மில்லாதவள் விரும்பும் போதெல்லாம் தன் மனத்தை மாற்றிக் கொள்ள உரிமை பெற்றவள் தான். அவளை எந்த வாக்குறுதி களும் கட்டுப்படுத்த முடியாது. ஆகவே வராமலிருக்கவும் உனக்கு உரிமை உண்டு. விரும்பும் போது தாராளமாக வரலாம். எப்படி யாவது உன் உடல் நிலை தேற வேண்டுமென்று தான் விரும்பு கிறேன்.

## 19

டில்லி,
*26*, செப்டம்பர், *1924*

என் உண்ணு நோன்பு [இந்து—முஸ்லிம் ஒற்றுமைக்காக 21 நாள் உண்ணு நோன்பு] பற்றி நீ கவலைப்படாதே. என் பலத்தை நான் இழந்து விடவில்லை. இடுக்கண் எதுவுமின்றி இருபத்தோரு நாளும் கழியுமென்று நம்புகிறேன். மருத்துவர்களும் அதே கருத்து கொண்டுள்ளனர். உன் உடம்பை நன்ருகக் கவனித்துக் கொள். நீண்ட தூரம் உலாவச் செல்வதைப் பழக்கப்படுத்திக் கொள். எனக்கு எழுது.

## 20

[கஸ்தூரிபா காந்தியிடமிருந்து வந்த கடிதம்]

டில்லி,
*24*, அக்டோபர், *1924*

இந்த ஆண்டு, புத்தாண்டு வாழ்த்துக்களை நான் உனக்கு நேரில் தர முடியாது. ஆகவே இக் கடிதம். அருள் நிறைந்த வாழ்க்கை வாழ உன் ஆசைகள் அனைத்தும் நிறைவேறட்டும். முன்னைவிடச் சீரான உடல் நலன் பெற்று, உன் படிப்பை முடித்து விட்டு, நாட்டின் உண்மையான தொண்டராவாயாக. பாபு தேறி வருகிருர்; தம் நல்வாழ்த்தை உனக்குத் தெரிவிக்குமாறு சொல் கிருர்.

நல்வாழ்த்துக்கள்.

பா

## 21

டில்லி,
கார்த்திக் ஷுதி, 2,
*10*, நவம்பர், *1924*

உன் கடிதம் கிடைத்தது. நீ எனக்கு அடிக்கடி எழுத வேண்டு மென்று விரும்புகிறேன். ஹஜிரா ஆரோக்கிய நிலையத்திற்கு நீ

திரும்பிச் சென்றால் என்ன? [குஜரத் வித்யாபீடத்தின் பி. ஏ.] ஸ்நாதக் தேர்வில் நீ வெற்றி பெற்றதற்காக என் பாராட்டுதல்கள் உனக்குத் தேவையா? அவ்வாருயின், அவை உனக்கு உரித்தாகுக. ஒரு பாடத்தில் தயாபாய் தவறிவிட்டது பற்றிக் கவலைப் படாதே. அப்பாடத்தில் இன்னும் அதிகத் தேர்ச்சி பெறுவானென்பதுதான் இதன் பொருள். தேர்வில் வெற்றி பெருத மாணவர்கள் சோர் வுற்று மனம் முறிவது தவருகும். சோம்பேறி அல்லது வேலை தேடித் திரிபவர் மனச்சோர்வு அடையலாம். ஆனுல் ஊக்கமிகு மாணுக்கரைப் பொறுத்தவரை, தோல்வி, மேலும் உறுதியான முயற்சிக்குத் தூண்டுகோலே ஆகும்.

## 22

கல்கத்தா,
வைஷாக் வதி, 6,
வியாழக்கிழமை,
*14, மே, 1925*

உன் நீண்ட கடிதம் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. பெண்களிடையே பணியாற்றுவது கடினமானது தான். ஆயினும் உன்னுல் இயன்றதைப் பொறுமையாகச் செய்யவேண்டும். தயா பாய் ஓய்வு பெற, அபு மலை அல்லது நவிபந்தருக்குச் சென்றிருப் பானென்று நம்புகிறேன். சங்கு வளையல்களை உனக்கு நிச்சயமாக வாங்கி வருவேன். அவை டாக்காவில் கிடைக்கும்; அங்கு நான் சீக்கிரம் போய்ச் சேருவேன். கோடையில் ஆமதாபாத்தை விட்டுச் செல்ல அப்பா உத்தேசித்துள்ளாரா?

## 23

சாந்திநிகேதனம்,
ஜ்யேஷ்ட ஷுதி,
*31, மே, 1925*

உன் கடிதம் கிடைத்தது. நீண்ட கடிதம் எழுத நினைத்தேனுல், கடிதம் எழுதவே இயலாமல் போகலாம். ஆகவே சிறு கடிதம் எழுதுவதுடன் திருப்தி அடைய வேண்டும். கல்கத்தாவிலிருந்து அனுப்பிய வளையல்கள் உனக்குக் கிடைத்திருக்குமென்று எண்ணு கிறேன். டாக்காவில் இன்னுமொரு ஜோடி வாங்கினேன். அதை நான் திரும்பும் போது உனக்குத் தருவேன். ஏதாவது லாபகர மான தொழிலை மேற்கொள்ள தயாபாய் விரும்பினுல், அவ்வாறே அவன் தாராளமாகச் செய்யட்டும். அவன் உடல்நலன் இப் பொழுது நன்ருக இருப்பது அறிந்து மகிழ்ச்சி. [தயாபாய் மனைவி] யசோதாவை எனக்கு எழுதச் சொல். நீங்கள் அனைவரும் அப் பாவை நன்கு கவனித்து, உங்களால் இயன்றவரை, அவர் பொறுப் பில் பங்கு கொள்ளவேண்டும். இன்னும் ஒரு மாத காலத்திற்கு நான் வங்காளத்தில் தங்கவேண்டும்.

# 24

*ஜ்யேஷ்ட வதி, 6, வெள்ளிக்கிழமை,*
*ஜூன் 12, 1925*

உன் கடிதம் கிடைத்தது. இன்று கப்பலில் நான் பயணம் செய்கிறேன்.

தயாபாய் விவசாயத்தை மேற்கொள்ள விரும்புவதாக நான் எண்ணியிருந்தேன். ஆனால் மேல் படிப்புக்கு அவன் அயல்நாடு செல்ல விரும்பினால், என்னைப் பொறுத்தவரை நான் தடைசொல்ல மாட்டேன். ஆனால் ஒரு சிரமம் இருக்கின்றது. பண உதவி எவரிடமிருந்தாவது கேட்க வேண்டியிருக்கும். தானாக விரும்பி அளிக்கப்படும் உதவியைக் கூட ஏற்றுக் கொள்ளாதது தான் சிறப்பான நிலை. ஆனால் அதை நாம் எய்த இயலவில்லையாயின், உதவியைப் பெற்றுப் போவதில் தவறில்லை. நான் ஜூலை 16ந் தேதி வரை வங்காளத்தில் இருப்பேன். தயாபாய் இங்கு வந்து என்னுடன் பேசலாம்; அல்லது நான் ஆசிரமத்திற்குத் திரும்பும் வரை அவன் காத்திருக்கலாம். அவன் விருப்பத்தை ஏற்று, அவனுக்குப் பரிவுடன் வழிகாட்டி அழைத்துச் செல்வதையே நான் விரும்புகிறேன். தனிப்பட்ட நிறுவனத்தில், அவன் விரும்பினால், வேலைசெய்யலாம்; அல்லது உழவுத் தொழிலை மேற்கொள்ளலாம்; அல்லது அமெரிக்காவுக்கு மேல் படிப்புக்குச் செல்லலாம். அவன் எதை விரும்புகிறானோ, அதைச் செய்ய நான் இசைவேன். அவனுக்கு நாலாவது வழியும் இருக்கின்றது; அதாவது நாட்டுக்குத் தொண்டாற்றி, அதற்கு அடையாள பூர்வமாக சிறு ஊதியம் பெறலாம். ஆனால் இது அவனுக்குப் பிடிக்கவில்லை; ஆகவே அதைப் பற்றி நாம் சிந்திக்கத் தேவையில்லை. மருத்துவப் பயிற்சிபெற அவனுக்கு விருப்பம் இருக்குமோ, என்னவோ. விருப்பமிருந்தால், இங்கோ, டில்லியிலோ உள்ள தேசிய மருத்துவக் கல்லூரியில் அவன் சேரலாம்.

என் உடல் நலன் மிகச் சிறப்பாக உள்ளது. சிறு நீர்க்கோப்பு ஏற்பட்டிருந்தது; ஆனால் அது ஒரு பொருட்டல்ல. ஒவ்வோரிடத்திலும் போதிய ஓய்வுக்கு அவர்கள் ஏற்பாடு செய்துள்ளார்கள்.

அப்பாவுக்கு நீ அக்கறையுடன் பணிவிடை செய்ய வேண்டும். ஒருவர் தம் துணைவியை இழக்கலாம்; ஆனால் பக்தி உடைய குழந்தைகளை இறைவன் அளித்திருந்தால், தம் இழப்பையும் அது மறக்கச்செய்யும். என் தந்தைக்குக் கீழ்ப்படிந்த மகன் என்ற முறையில் இதுதான் என் சொந்த அனுபவம். இத்தகைய சூழ்நிலையில் பிள்ளைகளுக்கு எவ்வளவு பலனும் புண்ணியமும் கிடைக்கின்றன என்பதையும் நான் பார்த்துள்ளேன். என்னுடைய பெற்றோரைத் தெய்வமாகப் போற்றி நான் பணிவிடை செய்ததன் பலனை என் வாழ்வில் ஒவ்வொரு நிமிடமும் நான் அனுபவித்து இன்புற்று வருகின்றேன். அப்பா மிகச் சுமையான பொறுப்பைத் தாங்கிக்கொண்டிருப்பதால் தான் இதை நான் சொல்கிறேன். அச்

சுமையைக் குறைப்பதற்கு எதுவும் செய்ய என்னால் இயலவில்லை. அவருக்கு எழுதுவதற்குக்கூட எனக்கு அவகாசமில்லை. ஆகவே எனக்குச் செய்ய ஆற்றல் இல்லாததை நீ செய்ய வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

உன் உடல் நலனை நன்கு கவனித்துக்கொள். உன் மாணவிப் பருவம் இன்னும் சிறிது காலத்துக்கு நீண்டாலும் அதைப்பற்றிக் கவலைப்படாதே. ஆங்கிலச் சொற்களை எழுத்துப் பிழையின்றி உன்னால் எழுத இயலவில்லை என்று மகாதேவ் கூறினார். இக் குறையை நீ சீர்செய்யவேண்டும். நாம் எதைப் படித்தாலும், அதில் சிறந்த முறையில் தேர்ச்சி பெற வேண்டும். ஐயப்பாடு எழும் போது, அகராதியைப் பார்க்க வேண்டும்.

## 25

[காளிகட்டம், கல்கத்தா.]
திங்கட்கிழமை [ஜூன் 29, 1925]

உன் கடிதம் கிடைத்தது. அப்பாவுக்கு என்னென்ன வழிகளிலெல்லாம் உதவ முடியுமென்பதை நீ நாடி அறியவேண்டும். இதை நீ அறிய, அதிக முயற்சி செய்யத் தேவையிராது. ஆயினும் நீ சொல்வது எனக்கு விளங்குகிறது. தயாபாய் 'நவஜீவன்' அலுவலகத்திற்குச் சென்று வருவது நல்லது. அங்கு ஊக்கத்துடன் அவன் வேலை செய்யட்டும். சுவாமி [ஆனந்த்] கீழ், அவனுக்குச் சிறப்பான பயிற்சி கிடைக்கும். பொறி இயக்கியாக வேலை செய்யுமாறு சொன்னாலும், அவன் மன உறுதியுடன் வேலைசெய்ய வேண்டும். இரண்டு நாட்களுக்காகிலும் ஆமதாபாத் செல்ல வேண்டுமென்று தான் நான் விரும்புகிறேன். ஆனால் எப்பொழுது செல்ல இயலுமென்பது எனக்கு விளங்கவில்லை. அப்பாவின் உடல் நலன்பற்றி எனக்கு அடிக்கடி தெரிவித்துக் கொண்டிரு. அப்பா எழுத்துப் பிழையின்றி எழுதுவதில் தேர்ச்சி பெறவில்லையென்றால், அதற்காக நீயும் அதில் பலவீனமாக இருக்க வேண்டுமென்று அவசியமா? அப்பாவின் குணநலன்களை தன் வாழ்வில் ஏற்றுப் போற்ற வேண்டுமே ஒழிய, அவர் பலவீனங்களை அல்ல.

## 26

வியாழக்கிழமை.
ச்ராவண வதி, 2, [6, ஆகஸ்ட் 1925].

மணிலால் [வல்லபஜி கோத்தாரி] பன்னிரண்டு வளையல்களை உனக்கு அனுப்பினார். அதற்குமேல் உனக்குத் தேவைப்படாது என்றெண்ணுகிறேன். இந்த சங்கு வளையல்கள் உடைந்தால், முடிவில் அவற்றால் ஏற்படும் செலவுதான் அதிகமாக இருக்கக்கூடும். பஞ்சு நூல் வளையல், இல்லை, வெள்ளி வளையலால் ஏற்படும் செலவு

கூடக் குறைவாக இருக்கும். நூல் வளையல் கனமாகவும் உறுதியாகவும் இருக்கும்; தினமும் அதைக் கழுவலாம். ஆனால் இதுபற்றி மேலும், நாம் சந்திக்கும்போது பேசலாம்.

அக்டோபரில், ஓரிரண்டு நாட்களுக்கு நான் ஆமதாபாத் வரக்கூடும்.

நீ ஒரு சைக்கிள் வாங்கியிருப்பதால், அதைப் பயன்படுத்தி நல்ல உடற்பயிற்சி செய்ய வேண்டும்.

இன்று நாங்கள் மூர்ஷிதாபாத் மாவட்டத்தில் இருக்கின்றோம். மணிலால் கூட இங்கிருக்கிறார்.

## 27

ச்ராவண வதி, 2, திங்கட்கிழமை
[19, ஆகஸ்ட், 1925]

உனக்கு வளையல்களே இருக்கக் கூடாதென்று நான் விரும்ப மாட்டேன். வெள்ளி வளையல்களை நீ அணிய வேண்டுமென்று கூறுவேன். தேக்கு மரத்தில் செய்த வளையல்கள் என்னைக் கவரவில்லை. சங்கு வளையல்கள் அணிவதில் தீங்கு எதுவுமில்லை. அவற்றால் ஏற்படும் செலவு குறைவல்ல என்பதை மட்டும் நான் கண்டுள்ளேன்.

## 28

[பங்கிபூர்]
சனிக்கிழமை [26, செப்டம்பர், 1925]

[புனா சேவாசதனத்தில் நீ டிசம்பரில் சேர்க்கப்படலாம் என்று கோபால கிருஷ்ண] தேவ்தார் அனுப்பிய தந்தியை நான் இத்துடன் அனுப்பியுள்ளேன். நாம் அதுவரை காத்திருக்க வேண்டும். அல்லது நீ விரும்பினால், தற்போதைக்குப் பம்பாய் சேவாசதனத்தில் உன்னைச் சேர்க்க முயல்வேன். இல்லாவிடில் நீ விரும்பினால், வார்தாவில் பெண்கள் பள்ளியில் நீ வேலைபார்க்க ஏற்பாடு செய்வேன். கல்கத்தா பள்ளிக்கூடம் நல்ல தல்லவென்றும், நீ வார்தாவில் வேலை செய்வதே நல்லதென்றும் ஜம்னாலால்ஜி கூறுகிறார். அங்கு மராத்தி மொழி பயிலப்படுகிறது; ஆகவே வீட்டில் இருப்பது போலவே உனக்குத் தோன்றும். ஆகவே முதலில் செல்வதற்கு வார்தா நல்ல இடம். நீ என்ன செய்ய விரும்புகிறாயென்று எனக்குத் தெரிவி. உன் பதிலைப் பாட்னாவுக்கு அனுப்பு.

## 29

கோட்டடா, கச்சா,
*திங்கட்கிழமை 25, அக்டோபர், 1925*

உனக்குத் தீப்புண்கள் சில ஏற்பட்டன என்று கேள்விப் பட்டேன். உன் கை இப்பொழுது முற்றிலும் குணமடைந்து விட்ட தென்று நம்புகிறேன். நான் தயாபாயுடன் கலந்து பேசிக் கொண் டிருக்கின்றேன்; ஆமதாபாத் வருவதற்கு முன் ஒரு முடிவுக்கு வரு வோம். நீ என்ன செய்ய வேண்டுமென்பது எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. ஆனால் இதைப் பற்றிமேலும், நாம் சந்திக்கும்போது கூறுவேன்.

## 30

சபர்மதி ஆசிரமம்,
*திங்கட்கிழமை 7, டிசம்பர், 1925*

உன் கடிதங்கள் அனைத்தும் எனக்கு ஒழுங்காகக் கிடைக் கின்றன. மற்ற இடங்களில் இருப்பதை விடச் சேவாசதன் சூழ் நிலை முற்றிலும் மாறுபட்டதாய் இருப்பதை நீ உணர்வாய் என்பது எனக்குத் தெரியும். ஆனால் புனா சேவாசதனத்தில் மேற்கொள்ளப் படும் கட்டுப்பாடு, ஒழுங்கு, ஆர்வம், நேர்மை ஆகியவை போற்றத் தக்கவை. மேலும் சேவாசதனத்தில் உள்ள ஊக்கம், உணர்வு, உற்சாகம் ஆகியவற்றை வேறெந்த இடத்திலும் காண்பதரிது. அதில் நம்மைக் கவரும் முறைகளை நாம் மேற்கொள்ள வேண்டும். எல்லாவற்றிலும் உள்ள நல்ல அம்சங்களை நாம் கண்டு போற்ற வேண்டும். நம்முடன் கருத்து வேறுபாடு கொண்டவர்களிடமும் சகிப்புத் தன்மை காட்டி வாழ நாம் கற்றுக் கொள்ளவேண்டும்.

உன் உடல் நலன் சீராக உள்ளதென்று நம்புகிறேன். என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நாளுக்கு நாள் என் வலிமை அதிகரித்து வருகிறது. நான் இன்று பம்பாய்க்குச் செல்கிறேன். அங்கு ஒரு நாள் தங்கிவிட்டு, வார்தாவுக்குச் செல்வேன்.

புனாவில் உன் அனுபவங்களை நினைவுக் குறிப்பேட்டில் குறித்து வைத்துக் கொள்.

தயாபாய், பெரியப்பாவுடன் [வித்தல்பாய் பட்டேல்] சில நாட்கள் தங்கச் செல்கிறான். அதன் பின்பு, அவருடன் காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொள்வான்.

உனக்கு விருப்பமுள்ளவரை நீ புனாவில் தங்க வேண்டும். உன் வளமான மூளையில் உதிக்கும் யோசனை ஒவ்வொன்றையும் நீ எனக்குத் தெரியப்படுத்தவேண்டும்.

## 31

வார்தா,
வெள்ளிக்கிழமை,
டிசம்பர் *12, 1925*

புனா சேவாசதனை விட்டபின்பு நீ சில காலம் பம்பாயில் தங்கலாம்; அல்லது நேராக இங்கு வரலாம். அநேகமாக இங்கு நீண்ட நாட்கள் விடுமுறை இராது. ஆகவே நீ பெண்கள் பள்ளியில் உடனடியாக வேலை செய்யத் தொடங்கலாம். அதே சமயத்தில், ஜம்னாலால்ஜி மகள்களாகிய கமலா, மதாலசா ஆகியோருக்கு நீ பாடம் சொல்லிக் கொடுக்கவும் நாங்கள் ஏற்பாடு செய்துள்ளோம். தற்போது ஜானகிதேவி [பஜாஜ்]யுடன் நீ தங்குவாய். நீ வரும் நாள் முதற்கொண்டு மாதம் *50* ரூபாய் சம்பளம் உனக்குக் கிடைக்கும். ஆகவே நீ விரும்பும் பொழுது வா. காங்கிரஸ் மாநாட்டில் கலந்து கொள்ள நீ விரும்பினால், இங்கிருந்து என்னுடன் நீ வரலாம்; அல்லது நேராகக் கான்பூருக்குச் செல்லலாம். அங்கு நான் இருபத்தி மூன்றாந் தேதி போய்ச் சேருவேன் என்று எதிர்பார்க்கிறேன். எப்படியும் ஜனவரி *1*-ம் தேதி வார்தாவுக்கு வந்து சேர்.

இழந்த ஒன்பது பவுண்டு எடையை* மீண்டும் பெற்றுவிட்டேன். மேலும் ஆறு பவுண்டு கூடவேண்டும்.

## 32

வார்தா.
மார்கசீர்ஷ வதி, *30*,
*16*, டிசம்பர், *1925*

மிகவும் அவசியமானால் நீ ஆமதாபாத் செல்லலாம். ஆனால் ஜனவரி முதல் தேதியிலிருந்தாவது நீ பெண்கள் பள்ளிக்கூடத்தில் வேலைசெய்யத் தொடங்கவேண்டுமென்பதை நினைவில் கொள். எவரையும் சந்திக்க வேண்டுமென்று துடிக்காத அளவுக்கு உனக்கு மனப்பக்குவம் ஏற்பட்டிருக்குமென்று நம்புகிறேன். நான் நலமாக இருக்கின்றேன்.

## 33

சபர்மதி ஆசிரமம்,
ஜனவரி, *1926*

நீ வார்தா வந்து சேர்ந்து விட்டாயென்று ஜம்னாலால்ஜி எழுதுகிறார். எனக்கு ஒழுங்காக எழுது. கமலாவையும் மதாலஸா

---

*ஆசிரமவாசிகள் சிலர் தவறாக நடந்து கொண்டதற்குப் பிராயச்சித்தமாக பாபு மேற்கொண்ட உண்ணாவிரதத்தில் ஒன்பது பவுண்டு இழந்திருந்தார்.

வையும், பள்ளிக் கூடத்தில் உன் வகுப்பில் உள்ள மாணவிகளை யும் நன்கு கவனித்துக் கொள். நன்றி தெரிவித்துத் தேவதாருக்குக் கடிதம் எழுதினாயா? இதுவரை எழுதாவிடில், மராத்தியில் ஒரு கடிதம் எழுது.

நான் வந்த நாளன்றே நந்து பென்னைப் [கனூகா] பார்த்தேன். அதிர்ச்சியைத் தாங்கிக் கொண்டு அவர் பொறுமையாகவே இருக்கின்றார்.*

## 34

சபர்மதி ஆசிரமம்,
புதன் கிழமை *6*, ஜனவரி, *1926*

வினோபாவுக்கு அனுப்பிய கடிதத்துடன் சேர்த்து, உனக்கும் ஒரு கடிதம் எழுதியிருந்தேன். ஆனால் வினோபா இங்கிருப்பதால், அக்கடிதம் உனக்குக் கிடைத்திருக்காது. உன் கடிதம் நேற்று எனக்குக் கிடைத்தது. நீ விரும்புவதையே கமலாவுக்குச் சொல்லிக் கொடு. ஓரிரண்டு இந்திப் புத்தகங் களை அவள் படிக்கும்படி செய். கணக்கில் அவளுக்குப் பயிற்சி மிகக் குறைவு; அதை அவளுக்கு நன்கு சொல்லிக் கொடு. அவளுக்குக் குஜராத்தி மொழி விளங்குகிறது. அவளுக்குப் பிடித்தமான பாடம் வேறெதுவும் இருந்தால், அதைச் சொல்லிக் கொடு. அவளுடன் சேர்ந்து துளசிதாசர் இராமாயணத்தில் ஒரு பகுதியைப் படி. படிப்பில் அவளுக்கு ஆர்வம் உண்டாக்குவதே உன் முக்கிய பொறுப்பாகும். மராத்தி மொழியில் இன்னும் அதிகம் படி; எழுது. ஒவ்வொரு நாளும் ஒழுங்காக உலாவச் செல்; உன் வேலை அனைத்தையும் முறையாகச் செய்.

## 35

சபர்மதி ஆசிரமம்,
திங்கட்கிழமை,
*11*, ஜனவரி, *1926*

எனக்கு நீ எழுதும் கடிதங்கள் நிறைய செய்திகள் தரு கின்றன. தேவதாருக்கு நீ எழுதியுள்ள கடிதம் மிக நன்றாக உள்ளது. அவருக்கு அது மிகுந்த மகிழ்ச்சி தருமென்பதில் எனக்கு ஐயமில்லை.

உனக்கு அந்த ஊர் புதிதாக இருப்பதால், நீ சற்று பதட்டம் அடையலாம்; ஆனால் மனச் சோர்வு அடையக் கூடாது. கமலா, இயன்றவரை முன்னேற்றம் அடையும்படி பார்த்துக் கொள். அவள்

---

* நந்து பென் தம் பன்னிரண்டு வயது மகனைத் திடீரென இழந்தார்.

படிப்படியாகத் தேர்ச்சி பெறுவாள். அவளுடன் உரையாடு. உன்னுடன் உலாவ அவள் வருவாளா என்று பார். அன்பால் அவளை உன்னிடம் ஈர்க்கவேண்டும்.

மராத்தி மொழியில் எழுதுவதிலும் பாடம் சொல்லிக் கொடுப்பதிலும் உனக்கு அனுபவமில்லை. ஆனால் பயிற்சியுடன் தேர்ச்சி வளரும். வார்தாவில் மராத்தியில் நீ இன்னும் அதிகப் பயிற்சி பெற வேண்டியிருக்கும் என்பது உனக்கு முன்பே தெரியுமல்லவா? இந்தியைப் பொறுத்தவரை, இந்தி நூல்களை வீட்டில் படிப்பதன் மூலம் தேர்ச்சி பெறலாம்; அவசியமானால், உனக்கு இந்தியில் உதவி செய்யுமாறு எவரையும் கேட்டுக்கொள்.

கதரையே நாம் ஏன் பயன்படுத்த வேண்டுமென்று பிறருக்கு இதமாகவும் நயமாகவும் நீ விளக்க வேண்டும். அம் முயற்சியில் என்ன பலன் ஏற்படுகிறதோ, அதைக் கண்டு நீ திருப்தி அடைய வேண்டும். பற்றற்ற மனநிலையுடனேயே நீ எப்பொழுதும் நடந்து கொள்ள வேண்டும். முயற்சியை மேற்கொள்வது நம் கையில் உள்ளது; ஆனல் வெற்றி அடைவது நமக்கு அப்பாற்பட்டது. நம் ஆற்றலுக்கு எட்டியவரை முயற்சி அனைத்தையும் செய்துவிட்டு நாம் மன நிறைவு பெறவேண்டும்; தோல்வியை எப்பொழுதும் ஒப்புக் கொள்ளவே கூடாது. உரிய காலம் வரும்போது, நீ தொண்டாற்ற சபர்மதிக்கு வருவது நிச்சயம்.

நான் இங்கிருக்கும் நேரத்தில், நீ சபர்மதிக்கு வர முடியவில்லை என்பதைப் பற்றிக் கவலைப்படாதே. நாம் தான் அடிக்கடி ஒருவருக்கொருவர் எழுதிக் கொள்வோமே.

உடல் நலனைக் காத்துக் கொள்; அதற்காக உற்சாகமாயிரு.

## 36

சாபர்மதி,<br>
புதன்கிழமை,<br>
*3, பிப்ரவரி, 1926*

தேவதாஸ் இங்கில்லை. தேவ்லாலியில் தங்கி அவன் இன்னும் உடலைத் தேற்றிக் கொண்டிருக்கின்றான். நான் நலமாகவே இருக்கின்றேன். இன்னமும் பலவீனம் சற்று இருக்கின்றது; அது நீண்ட நாள் தொடராது. அங்கு நீ இப்பொழுது வசதியாக இருக்கின்றாயென்றும், உடல்நலன் சீராக உள்ளதென்றும் எதிர்பார்க்கின்றேன். எதைப் பற்றியும் கவலைப்படாதே. தினமும் உலாவச் செல். கங்குபாய் உன்னுடன் வரக்கூடும். முடிந்தால் கமலாவின் திருமணத்தின் போது, இங்கு வா. எனக்கு ஒழுங்காக எழுது.

## 37

சபர்மதி ஆசிரமம்,
திங்கட்கிழமை,
*15, பிப்ரவரி, 1926*

உன் அஞ்சலட்டை கிடைத்தது. நீயும் ஜம்னலால்ஜியும் சேர்ந்து ஒரு முடிவுக்கு வந்திருந்தால், அதன்படியே செயலாற்றவும். இல்லாவிடில் நாம் அனைவரும் கூடி, என்ன செய்ய வேண்டுமென்பதை முடிவு செய்யலாம். நீ இல்லாமல், இங்கிருந்து நான் ஒரு முடிவுக்கு வர முடியாது.

வார்தாவில் உன் வேலையை முன்னிட்டு உனக்கு எது வசதியாக இருக்கின்றதோ அதன்படி, நீ இப்பொழுது வந்தாலும் சரி; பின்னல் ஜம்னலால்ஜியுடன் வந்தாலும் சரி.

## 38

தேவ்லாலி,
*15, மே, 1926*

சபர்மதிக்குச் செல்ல, பா இசைந்துள்ளாள்; புதன்கிழமை அங்கு போய்ச் சேருவாள். சூரஜ்பென்னிடம் அதைப்பற்றிக் கூறு, பா ஆசிரமத்தை விட்டுச் சென்றபோது உன் பொறுப்பில் ஒப்படைக்கப் பட்டுள்ள பெண்கள் திருப்தியாக நடந்து கொள்கின்றனர் என்று நம்புகிறேன். அனைவருடனும் இனிது பழகக் கற்றுக்கொள். நந்து பென்னை ஆசிரமத்திற்கு அழைத்து வர முயற்சி செய். திட்டத்தில் மாறுதல் பற்றிக் கிருஷ்ணதாஸ் உன்னிடம் சொல்லியிருப்பார்.

## 39

*1926*

உன்னை மெச்சுகிறேன். திருமணமாகாத பெண்கள் உடல் நலன் கெட்டால், அதைப் பற்றி நான் எங்கு புகார் செய்ய முடியும்? கடலே தீ பிடித்துக் கொண்டது போல் தான் இருக்கும். நாம் தொண்டாற்றுவதற்காகிலும், நம் உடல் நலனைக் காக்கும் கலையில் தேர்ச்சி பெறுவது அவசியம். இரவில் கொசுவலையைப் பயன்படுத்த வேண்டும். மற்றவை பற்றி, ஆசிரமக் குழந்தைகளுக்கு நான் எழுதியுள்ள கடிதத்தைப் பார்.

உன் உடல் நலன் சிறப்பாக இருக்குமென்று நம்புகிறேன்.

## 40

பேசா நோன்பு நாள்,
*1926*

சில நாட்களாக உன்னிடமிருந்து கடிதம் வரவில்லை. நீ நல்ல சுகமாக இருக்கிருயென்று நம்புகிறேன். தேவையில்லாத போதும் கவலைப்படுவதைத் தவிர்த்து, நாம் சிறு குழந்தைகள் போலாகும் போது, நோய் நீங்கும். இக் குறிக்கோளின் உட்பொருளை நீ உணர வேண்டும். நாம் எது குறித்தும் ஆத்திரம் அடையக் கூடாதென் பதும் மற்றவர்கள் தவறு இழைக்கின்றுர்கள் என்று எண்ணுவது கூடாதென்பதும், இதன் பொருள். இது உயர்ந்த, உத்தமமான மனநிலை. நான் அம் மன நிலையை எய்த விரும்பிய போதிலும், அதை இன்னும் நான் எட்டவில்லை என்பதை உடனடியாக ஒத்துக் கொள்கிறேன். உண்மையில், அந்நிலைக்கு வெகு தொலைவில் நான் இருக்கின்றேன். தங்கள் வாழ்நாள் முழுவதும் தூய்மையாய் இருந்தவர்களால் அந்நிலையை விரைவில் அடைய முடியும். அத் தகைய மனிதரை நான் பார்த்ததும் உண்டு. [தீனபந்து C. F.] ஆண்ட்ருஸ் இதற்கு ஓர் எடுத்துக்காட்டு. அவரை ஒரு முட்டாள் என்று மதிப்பவர்கள், தாங்களே முட்டாள்களாவர். நீ எய்த வேண்டிய இலட்சிய நிலை இதுதான்.

## 41

கோண்டியா,
*1926*

நீ என்மேல் கொண்டுள்ள அன்பினை நான் அறிவேன். ஆனல் உன் வாழ்நாள் முழுவதும் என்னுடன் வாழ முடியுமென்று நீ எதிர் பார்க்க மாட்டாயென்று நம்புகிறேன். என் தொண்டுடன் சேர்ந்து தான் நீ வாழ முடியும். ஆகவே அதற்காக, உன்னை நீ ஆயத்தம் செய்துகொள்ள வேண்டும். ஒரு கணத்தையும் நீ வீணுக்காதே. அவ்வப்போது எனக்கு எழுதிக் கொண்டிரு. நானும் கூடியவரை எழுதுவேன்.

## 42

பேசா நோன்பு நாள் [*1926*].

உன் கடிதம் கிடைத்தது. நான் ஏதோ சொன்னபோது, மகாதேவ், உன் அனுமதியைப் பெறக் காத்திராமல் உன் கடி தத்தை எனக்குக் காட்டினர். என்னிடமிருந்து மகாதேவ் எதையும் ஒளித்து வைப்பாரென்று எவரும் எதிர்பார்க்க முடியாது. அது அவருடைய ஆற்றலுக்கு அப்பாற்பட்டது. நமக்குச் சில பழக்கங்கள் ஏற்பட்டு விடுகின்றன; அதற்குப் பிறகு வேறெதுவும் செய்ய நம்

மால் இயலாது போகிறது. நற்பழக்கங்களைப் பொறுத்தவரை இது நன்மையே யாகும். அகிம்சையில் உண்மையான பற்றுதல் கொண்டவர், இறுதியில் வன்முறைச் செயல்கள் எதுவும் செய்யும் ஆற்றலையே இழக்கின்றார். செயலில் மட்டுமல்ல, சிந்தனையிலும் அது சாத்தியமில்லாமல் போகிறது. சிந்தனையே செயலின் தந்தை. சிந்தனை ஒரு வழியாகச் செல்லும்போது, செயலும் தானாக அவ்வழி தொடர்கிறது.

என்னிடமிருந்து பிரிந்திருப்பது உனக்கு வேதனை அளிப்பது போலவே, உன்னிடமிருந்து பிரிந்திருப்பது எனக்கு வேதனை அளித்தது, அளிக்கின்றது என்பதைச் சொல்லிப் பயனென்ன? நீ நல்லதைத் தேர்ந்தெடுத்தாய்; நானும் அவ்வாறே செய்தேன். உன்னுடைய, என்னுடைய, ஏன், உலகத்தினுடைய நலனே அதில்தான் அடங்கியுள்ளது. நல்லதில் இன்பம் காணக் கல்வி நமக்கு உதவ வேண்டும். ஆகவே ஆசிரமத்தில் வசிப்பது நல்லதென்று நீ எண்ணினால், அதில் நீ இன்பம் காணவும் முயலவேண்டும். இதில் என்னையோ, உன்னையோ ஏமாற்ற முற்படாதே. சபர்மதியில் தங்குவது உனக்கு எந்த நிமிடம் பிடிக்காமல் போகிறதோ, அந்த நிமிடமே நீ வேறெங்கும் செல்ல உன்னை அனுமதிக்கச் சித்தமாக இருக்கின்றேன். தயக்கமின்றி எனக்கு எழுது. அதை நான் புரிந்து கொள்ளாமல் உபதேச உரை நிகழ்த்தினாலும், அதைப் பொருட்படுத்தாதே. மூத்தோரின் உபதேசங்களைச் சகிக்கக் கற்றுக் கொள்.

## 43

திங்கள் [*1926*]

உன் கடிதம். பெரியப்பா வந்தபோது, நீ ஆமதாபாத் சென்றது பொருத்தமே. மனு [பாபுவின் பேத்தி], மணிலால் ஆகியோர், நாம் பொறுமை காட்டினால் மாறுவார்கள். ஞாயிறன்று புறப்படுவதாகப் பா கூறினாள். புதன்கிழமையாகிலும் அவள் சபர்மதி வந்து சேருவாள்.

படுக்கச் செல்லும் நேரத்தில் இதை எழுதினேன். ஆகவே இத்துடன் முடிக்கின்றேன்...

## 44

வார்தா,
திங்கட்கிழமை [*6*, டிசம்பர், *1926*].

ஆசிரமப் பெண்கள் சங்கத்திற்கு இத்துடன் ஒரு கடிதம் அனுப்பியுள்ளேன். ஆசிரமச் சூழ்நிலையோடு உன்னால் இன்னும் ஒத்துப்போக இயலவில்லை என்பது கண்டு வருந்தினேன். நீ வசிப்பதற்குச் சபர்மதியைத் தவிர வேறெந்த இடமும் ஏற்றது என்று

நான் எண்ணவில்லை. இங்குகூட உனக்குப் பிடிக்காதவை சில இருக்கலாம். அவ்வாறிருந்தால், அதை நீக்க நீ முயலவேண்டும். உனக்கு மலச் சிக்கல் ஏற்பட்டுள்ளதென்றால், அதற்குப் பரிகாரம் உன் கையில்தான் இருக்கின்றது. அல்லது உனக்குப் பிடித்தால், ஆமதாபாத்திலிருந்து குடிநீரை வரவழைக்கலாம். ஒருவர் குடிப்பதற்குப் போதுமான குடிநீரை, நகரத்திலிருந்து எளிதில் கொண்டு வர முடியும். ஆற்று நீரைக் கொதிக்க வைத்த பிறகு குடித்தால், அதுவும் நகரத்து நீரைப்போல நன்றாகவே இருக்கும். உற்சாகமாக இருப்பதென நீ உறுதியான முடிவு மேற்கொள்ள வேண்டும். 14ந் தேதிக்குப் பிறகு நீ இங்கே வா. உன் சமஸ்கிருதப் பயிற்சியிலாவது எவராகிலும் உனக்கு நிச்சயம் இங்கு உதவி செய்வார்கள். ஒளிவு மறைவின்றி எனக்கு எழுதத் தயங்காதே.

புஞ்சாபாய் [ஹிராசந்த்] உடல் நலன்பற்றி எனக்குச் செய்தி எதுவும் கிடைக்காதது குறித்து, எனக்குக் கவலையாக இருக்கிறதென்று ரமணீக்லாலிடம் [மகன்லால் மோடி] கூறு. அவரைப்பற்றி ரமணீக்லாலுக்கு எதுவும் தெரிந்தால், எனக்கு எழுதச் சொல்.

## 45

வார்தா,
புதன்கிழமை [8, டிசம்பர், 1926]

உன் அஞ்சலட்டை கிடைத்தது. நீ தாராளமாக வரலாம். இரவு இரயிலைவிடப் பகல் இரயில் உனக்கு வசதியாக இருக்கும். ஆனால் உனக்கு விருப்பமானபடி செய். கல்யாணமாகும் வயதை நான் கடந்து நீண்ட பல ஆண்டுகள் ஆகிவிட்டன; ஆகவே நான் ஒவ்வொரு கணமும் என் மனத்தை மாற்ற வேண்டிய அவசியமில்லை. அது திருமணமாகாத பெண்களுக்கும், ஓரளவு பையன்களுக்கும் உற்ற உரிமையாகும்.

## 46

[1, ஜனவரி, 1927]

உன் கடிதம் கிடைத்தது. பின்புறத்தில் உள்ள கடிதத்தைப் படி.[1] இப் பொறுப்பை உன்னிடம் ஒப்படைத்துக் கராச்சிக்கு அனுப்ப நான் விரும்புவேன். நீ அல்லது மீராபென் தான் அங்கு திருப்திகரமாகத் தொண்டாற்ற முடியும். சிந்திப் பெண்களுடன் தொடர்பு கொள்ள, ஆங்கிலம், இந்தி, இரண்டும் தெரிந்திருப்பது அவசியம். ஆசிரமத்திலிருந்து வெளியே அனுப்பப்படுவதற்கு மீராபென் இன்னும் ஆயத்தமாக இல்லை. ஆகவே நீ போனால் நல்ல

1. நகராட்சிப் பள்ளிகளில் பெண்களுக்குத் தக்ளியில் நூற்பு கற்றுக் கொடுக்க ஒரு பெண் தொண்டரை அனுப்புமாறு கராச்சியிலிருந்து ஸ்ரீ நாராயண தாஸ் ஆனந்த்ஜி காந்திஜிக்கு வேண்டுகோள் அனுப்பியிருந்தார்.

தென்று எண்ணுகிறேன். உனக்குப் போக விருப்பமிருந்தால், எனக்குத் தெரிவி.

ஆசிரமத்தில், அதாவது என்னுடன் நீ எவ்வளவு வசதியாக இருக்க இயலுமோ, அவ்வாறிருக்க வேண்டும். ஆகவே அணுக்க மான உன் எண்ணங்களையும் எனக்குத் தெரியப்படுத்தி, அன்னை யின் கடமையை நான் நிறைவேற்ற எனக்கு உதவ வேண்டும்.

உனக்கு எதிலும் ஈடுபாடு இராத காரணம், துணைவன் இல் லாத குறையாக இருக்கலாமல்லவா? உனக்குத் திருமணம் செய்து வைக்க வேண்டுமென்று, உன் நண்பர்களில் ஒருவர் என்னிடம் வற்புறுத்திக் கூறினர். பாடிதார் வகுப்பைச் சேராத, ஆனல் மற்றப்படி எல்லா வகைகளிலும் உனக்கு ஏற்ற ஓர் இளைஞனைப் பற்றிப் பேசுகையில், அந்த நண்பர் அவ்வாறு குறிப்பிட்டார். உன் னைப் பொறுத்தவரை எனக்கு எவ்வித அச்சமும் கிடையாதென்று கூறினேன். திருமணம் செய்துகொள்ள தற்போது உனக்கு ஆசை இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை என்றும் கூறினேன். உன் மன நிலையை நான் அறியவில்லை என்று அந்த நண்பர் குறைபட் டார். ஆகவே நான் கேலி செய்யவில்லை என்பதை நீ காண்பாய். அச்சமின்றி வெளிப்படையாக நீ பேச வேண்டும். ஆனல் வாழ்நாள் முழுவதும் பிரம்மச்சரியம் மேற்கொள்ள விரும்பும் ஒரு பெண் துணி வுடனும் உற்சாகத்துடனும் இருக்கவேண்டும் என்பதை நினைவிற் கொள். இல்லாவிடில், "அவளுக்குத் திருமணம் செய்து முடி யுங்கள்; அவள் சரியாகி விடுவாள்", என்று மற்றவர்கள் சொல்லத் தான் செய்வார்கள்.

## 47

சோதேபூர்,

*திங்கட்கிழமை 3, ஜனவரி, 1927*

உன்னிடமிருந்து கடிதம் வருமென்று எதிர்பார்த்திருந்தேன்; ஆனல் இதுவரை ஏமாற்றம் தான். உள்ளமும் உடலும் சீராக இருக்கின்றன என்று எதிர்பார்க்கின்றேன். சமஸ்கிருதத்தில் நல்ல முன்னேற்றம் அடைந்துள்ளாயென்று நம்புகிறேன். விவர மாக எனக்கு எழுது. ஆறும் தேதி வரை கோமில்லாவிலும், ஒன்பதாம் தேதி வரை காசியிலும் இருப்பேன். அப்பாவுக்கும் கடிதம் எழுது. அவர் உன்னைப் பற்றிக் கவலைப்படுவதாகத் தோன்றுகிறது. நாங்கள் அனைவரும் நலமாக இருக்கின்றோம்.

## 48

(தந்தி)

கயா,

*15, ஜனவரி, 1927.*

உன் சுவையான கடிதம். பஞ்சடித்தல், கொட்டையெடுத்தல் முதலியவற்றில் விரைவில் தேர்ச்சி பெறு.

பாபு

## 49

பீகார்,
பேசாநோன்பு நாள், 17, ஜனவரி, 1927

உன் கடிதம் கிடைத்தது. உலகனைத்துக்கும் பகிரங்கமாய் எடுத்துச் சொல்லக் கூடாதது எதுவும் அதில் இல்லை. ஆனால் மகாதேவ் தவிர வேறெவருக்கும் அதைக் காட்டவில்லை.

உன் விருப்பத்துக்கு மாறாக, உன்னைக் கட்டாயப்படுத்திக் கல்யாணம் செய்து வைப்பது என்ற பிரச்னைக்கே இடமில்லை. என்னைப் பொறுத்தவரை, என்னால் இயலுமென்றால், வாழ்நாள் முழுவதும் பெண்கள் கன்னி நோன்பு மேற்கொள்ள வேண்டுமென்று கட்டாயப்படுத்துவேன்; ஆனால் இதற்கு மாறாக, என் விருப்பத்தையும் மீறிப் பெண்களுக்குத் திருமணம் செய்விக்கும் பொறுப்பை என்னிடம் ஒப்படைக்கின்றனர். ஆகவே என்னைப் பொறுத்தவரை, நீ அஞ்சத் தேவையில்லை. உன் உண்மை மன நிலையை அறியாத வம்புப் பேச்சுக்காரர் சிலர் எனக்குத் தாங்க முடியாத தொந்திரவு தந்தனர். ஆகவேதான் அதைப் பற்றி உன்னிடம் கேட்டேன்-அதுவும் நீ அவ்வளவு நிம்மதியாகக் காணப்படவில்லை என்பதை அறிந்த பின் தான். தங்கள் மன அமைதிக் குறைவு, தங்கள் திருமண ஆசையினால் ஏற்பட்டதுதான் என்பதை அறியாமல் உள்ள இளம் பெண்களை நான் அறிவேன். நீ அத்தகைய பெண்களில் ஒருத்தி என்று நான் என்றும் எண்ணியதில்லை; ஆயினும் நான் உன்னை எச்சரிப்பதில் தவறில்லை என்றெண்ணினேன். திருமணம் செய்ய விரும்பவில்லை என்று ஒரு முறை கூறிய பின், உன் மனத்தை மாற்றிக் கொள்வதில் தவறில்லை என்று உனக்குச் சொல்லவும் விரும்பினேன். நீ ஒரு நோன்பு மேற்கொண்டிருந்தால், அது வேறு விஷயம். அப்பொழுது வானமே வீழ்ந்தாலும், அந்த நோன்பை மீறக் கூடாது. நீ நோன்பு எதுவும் மேற்கொண்டிராத வரை. உன்னிடம் நான் கூட அந்தக் கேள்வி கேட்கலாம். திருமணம் செய்து கொள்வது நல்லது என்று மற்றவர்கள் வற்புறுத்திக் கூறவும் இடமுண்டு. நீ நோன்பு மேற்கொள்ள வேண்டுமென நான் விரும்புகிறேன் என்று பொருள் கொள்ளக் கூடாது. நீ அதற்கான பக்குவ நிலையை அடைந்தால், தானாக அந்த நோன்பை மேற்கொள்வாய். இனிமேல், இப்பொருள் பற்றி நான் உன்னிடம் பேச வேண்டியிராது; மற்றவர்கள் பேசுவதையும் இயன்றால் தடுப்பேன். ஆனால் நீ உன் மனக் குழப்பத்தை வெல்ல வேண்டும். உன் கன்னி நிலையைப் பிறர் மதித்துப் போற்றும்படி செய்ய வேண்டும். பிரம்மச்சரியத்தின் சமய உட்பொருளை உணர வேண்டும். அது நல்ல பலனளிக்க வேண்டுமென்றால், அண்மையில் நவஜீவனில் வெளியாகியுள்ள என் சுயசரிதத்தின் இரு அதிகாரங்களில் நான் விளக்கியுள்ளபடி, அதன் உட்கிடக்கையையும் விளைவுகளையும் உணர்ந்து அதை மேற்கொள்ள வேண்டும்.

'மார்க்கோபதேசிகா' நூலில் நல்ல தேர்ச்சி பெறு. கீதையில் ஒவ்வொரு சொல்லுக்கும் பொருத்தமான விதியைக் கண்டு பிடி.

பஞ்சடித்தல், கொட்டையடித்தல் ஆகியவற்றில் தேர்ச்சி பெறுமாறு நான் உனக்குத் தந்தி அனுப்பியிருந்தேன். கராச்சியில் நாராயணதாஸுக்கும் நான் ஒரு தந்தி அனுப்பியுள்ளேன்; ஆனால் இன்னமும் பதில் வரவில்லை. கராச்சியைத் தவிர மற்ற ஊர்களி லிருந்தும், நூற்பு ஆசிரியர் வேண்டுமென்று கேட்டு எழுதி யுள்ளனர். அப்பொறுப்பில், உன்னைப் பல ஊர்களுக்கு அனுப்ப உத்தேசித்துள்ளேன். 50 ரூபாய் சம்பளமும் பயணப் படியும் உனக்குத் தர வேண்டுமென்று கேட்டுள்ளேன். இதன் மூலம் வள மான அனுபவங்கள் பல உனக்குக் கிடைக்கும்; அவற்றைப் பெற்றுப் பலனடைந்த பின், அடுத்து என்ன செய்ய வேண்டுமென்று யோசிக்கலாம். அங்கு தற்போதைக்கு வேறு பொறுப்புகளை மேற் கொள்ளாதே. மாதம் ரூ 30 மட்டும் செலவுக்கு வைத்துக்கொள். மாதக் கடைசியில் சிறிது தொகை மிச்சமானாலும் அது ஒரு பொருட்டல்ல. பணத்திற்கு உன்னிடம் நான் கணக்கு கேட்பேன்.

## 50

சனிக்கிழமை

என் கடிதம் கிடைத்தது. (சமஸ்கிருத) ஆசிரியராக வால்ஜி பாயை (வி. ஜி. தேசாய்) நீ ஏற்றுக் கொண்டது மிகவும் நல்லது. அவரிடமிருந்து நீ அதிகம் கற்றுக் கொள்ள இயலும்.

ஆசிரியராக நீ பணியாற்றி வந்ததை ஏன் நிறுத்தி விட்டார் களென்று எனக்குத் தெரியவில்லை. அதை ஏன் செய்தார்கள் என்று உனக்குச் சொல்லியிருந்தார்கள் என்றெண்ணினேன். சொல்லவில்லையென்றால், அச்சமின்றி நீ அவர்களைக் கேட்கலாம். என்னைப் பொறுத்தவரை நான் பதட்டமடையவில்லை; ஏனென்றால் நீ ஆசிரமப் பள்ளியில் பாடம் சொல்லிக் கொடுத்தாலும் கொடுக்கா விடினும், நீ ஆசிரமத்தில் தங்கி வழக்கமான ஊதியம் பெற வேண்டியவள். நீ என்னுடைய பொறுப்பு. பள்ளி நிர்வாகிகள் மேல் நீ கோபம் கொள்ளவும் கூடாது. முழு நிர்வாகமும் அவர் களுடைய பொறுப்பு; தங்களுக்கு எது உசிதமென்று தோன்று கிறதோ, அதை அவர்கள் செய்ய வேண்டியிருக்கும். ஆனால் உன்னிடம் அவர்கள் அவ்வாறு நடந்து கொண்டதற்கான காரணத் தைக் கேட்டறிய உனக்கு உரிமை உண்டு.

ஆனால் நீ இப்பொழுது நூற்பில் நல்ல தேர்ச்சி பெற உன்னை ஆயத்தமாக்கிக் கொள்ள வேண்டும். அத்துடன் தொடர்பு கொண்ட அனைத்திலும்-எடுத்துக்காட்டாக, இராட்டினத்தைப் பழுது பார்த்தல், பலவகையான பஞ்சை இனம் கண்டு கொள்தல், கொட்டையெடுத்தல், பஞ்சடித்தல், நூற்றல், நூலை வலிமையாக்க அதை ஈரமாக்குதல், அற்றுப் போன நூல்களைச் சேர்த்துக் கோர்த்

தல், முடிச்சுப் போடுதல், போன்றவற்றிலும்—நீ நல்ல தேர்ச்சி பெறவேண்டும். மால் கயிற்றைத் தயாரிக்கவும், துணியில் கதிரைச் சுற்றி வைக்கவும் நீ கற்றுக் கொள்ள வேண்டும். நீ எங்கு சென்றாலும், இம்முறைகளைப் பற்றி மட்டுமல்ல, இந்தி, சமஸ்கிருதம் உள்பட மற்றப் பாடங்களையும் கற்றுக் கொள்ள வேண்டும். சமஸ்கிருதத்தில், கீதையில் ஒவ்வொரு செய்யுளின் பொருளையும் இலக்கணத்தையும் நீ அறிய வேண்டும். தக்ளியில் நூற்பதிலும் நீ தேர்ச்சி பெற வேண்டும்.

நகராட்சி வாரியத்தின் முன் உன் பெயர் வைக்கப்பட்டுள்ளது என்று கராச்சியிலிருந்து ஒரு தந்தி வந்துள்ளது. இது மிக நல்ல செய்தி.

எனக்கு எழுது; உற்சாகமாக வேலை செய்.

இரண்டாம் தேதி முதல் எட்டாம் தேதி வரை கோண்டியா, நாகபுரி, வார்தா, அகோலா, அமராவதி ஆகிய ஊர்களில் நான் இருப்பேன். ஆனால் வார்தாவுக்கே நீ உன் கடிதங்களை அனுப்பு.

## 51

அகோலாவுக்குப் போகும் வழியில்,
ஞாயிற்றுக்கிழமை 6, பிப்ரவரி, *1927*

உன் கடிதம் கிடைத்தது. உன் கையெழுத்தை நீ திருத்த வேண்டும். எழுத்துக்கள் பெரிதாகவும் தெளிவாகவும் இருக்க வேண்டும். சிறப்பான காலங்களில் மட்டும் நல்ல கையெழுத்து எழுதுவது போதாது. மகாதேவ் எழுதுவதுபோல், எப்பொழுதும் நல்ல கையெழுத்து எழுத வேண்டும்.

தற்போதைக்கு நீ ஹரிஹரபாயின் வகுப்புகளுக்குச் செல்லலாம். இந்தியில் பேசுவதைப் பழக்கமாக்கிக் கொள். உனக்குப் பிடித்திருந்தால், நீ அதை எளிதிற் கற்றுக் கொள்வாய்.

நூற்புக் கலையின் ஒவ்வொரு அம்சத்திலும் நீ நிபுணராக வேண்டும். எந்த அம்சத்தையும் அசட்டை செய்யாதே. நல்ல பண்புடைய பெண்கள் பலர் நூற்பு ஆசிரியைகளாக முன்வருவது நாட்டுக்கு மிகவும் அவசியம் என்பதை நான் சுற்றுப் பயணம் செய்யும்போது ஒவ்வொரு நிமிடமும் தெளிவாக உணர்கின்றேன்.

மணிலால் கோத்தாரிக்கு எழுதப் பட்ட கடிதத்தை நீ படித்திருக்கக் கூடாது. ஆனால் படித்து விட்டால், பரவாயில்லை. இளம் இந்தியப் பெண் ஒருத்தி பிரம்மச்சரியம் மேற்கொள்ள முடியும் என்பதை இப்பொழுது யாரும் நம்பத் தயாராக இல்லை. இந்த ஐயப்பாட்டை நீயும் மற்ற ஆசிரமப் பெண்களும் நீக்கி, மக்கள் மனத்தை மாற்றும் நாள் விரைவில் வரவேண்டுமென்று பெரிதும் விழைகின்றேன்.

## 52

*வியாழக்கிழமை, 10, பிப்ரவரி, 1927*

உன் கடிதங்கள் கிடைத்தன. நீ இந்தி படிக்கத் தொடங்கியுள்ளது நல்லது. நீ என்ன செய்தாலும், உடல் நலனை நன்கு காத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுதுதான் எனக்குக் கவலை இராது.

உன் கையெழுத்தைக் கெடுத்துக் கொள்ளாதே. எழுதுவதற்கு அதிக நேரம் செலவு செய்ய வேண்டியிருந்தாலும் அதைப் பற்றிக் கவலைப்படாதே. விரைவில், நீ திருத்தமாகவும் வேகமாகவும் எழுத முடியும்.

நீ தயாரித்து அனுப்பிய பஞ்சுப் பட்டைகள் மிக நன்றாக இருக்கின்றன. பஞ்சோடு தொடர்பு கொண்ட எல்லா அம்சங்களிலும் நீ முதன்மையான இடம் பெற வேண்டுமென விரும்புகிறேன். பெண்கள் பள்ளிகளில் நூற்பு ஆசிரியையாகவும், அதற்குப் பிறகு உன் உடல் நலன் அனுமதித்தால், ஏழைப் பெண்கள் நல அதிகாரியாகவும் பணியாற்றி நீ எனக்கு மிகவும் உதவியாக இருக்க முடியும். பெண்களிடையே செய்ய வேண்டிய தொண்டுக்கு அளவேயில்லை; ஆனால் மிகக் குறுகிய அளவுக்கே ஆண்கள் இப்பொறுப்பை ஏற்றுக் கொள்ள முடியும்.

[ஆசிரமச்] சமையலறையில் உள்ள குறைபாடுகள் பற்றிய முழு உண்மையும் எனக்குத் தெரிய வேண்டும். சங்கரன் கவனத்திற்கும் இதமாக அதைக் கொண்டுவா. ஓரிரண்டு நாட்களுக்கு—அதற்குமேல் போகக்கூடாது—எவ்வாறு செய்ய வேண்டும் என்பதை நீயே செய்துகாட்டினாலும் நல்லது. மற்றவர்களுடன் சேர்ந்து வாழ நீ கற்றுக் கொள்ள வேண்டும். எடுத்துக்காட்டாக, மகாதேவ் அல்லது தேவதாசிடம், நான் தயக்கமின்றி எப்பொறுப்பையும் ஒப்படைக்க முடியும். அதுபோலவே, உன்னிடமும் எந்தப் பொறுப்பையும் தயக்கமின்றி நான ஒப்படைக்க முடிந்தால், மிகுந்த மகிழ்ச்சி அடைவேன். பிறர் மனத்தைப் புண்படுத்தாமலும், உன்னையே நீ புண்படுத்திக் கொள்ளாமலும் இருந்தால், நான் திருப்தி அடைவேன்.

## 53

*நாசிக் செல்கையில்,*
*புதன் கிழமை 18, பிப்ரவரி, 1927*

உன் கடிதம் கிடைத்தது. எட்டாம் தேதிக்கு முன் நான் சபர்மதி போய்ச் சேரமுடியாதென்று தோன்றுகிறது. கராச்சியிலிருந்து செய்தி ஒன்றுமில்லை.

கங்காதேவிக்கு அடிக்கடி உடல் நலமில்லாமல் போவது ஏன்? வேறு ஊருக்குச் சென்று சிலநாட்கள் தங்கி வருவது நல்லதென்ருல், அதற்கு நாம் ஏற்பாடுகள் செய்யலாம். அவரையும், [அவர் கணவர்] தோத்தாராமையும் இது பற்றிக் கேள். அவர் தேவையான அளவு சாப்பிடுகிருரா?

நான் வந்தபின், சமஸ்கிருதம், பஞ்சடித்தல், நூற்பு ஆகியவற்றில் உனக்குத் தேர்வு நடத்துவேன். குஜராததியில் உன் கையெழுத்தை இன்னும் சீராக்க வேண்டும். குஜராத்தி இலக்கணத்திலும் நீ மேலும் முன்னேற்றம் காணவேண்டும்.

ஆசிரமச் சமையலறையைச் சீராக்கும் திட்டம் இப்பொழுது நிறைவேறியிருக்கும். அதில் உன் பங்கை நீ ஆற்ற வேண்டும்.

## 54

பிவானி,
*28*, மார்ச்சு, *1927*

என் உடல் நலக்குறை [இரத்தக் கொதிப்பு] பற்றி நீ ஒரு சிறிதும் கவலைப் படக் கூடாது. வயதாகிச் செல்வதை நாம் உணர மறுத்தால், அதன் விளைவான நோயை நாம் அனுபவித்துத் தீர வேண்டும். சில சமயங்களில் அந்த நோய் மரணத்தில் முடியலாம். ஆனல் நாம் ஒவ்வொருவரும் இறக்க வேண்டுமாதலால், அதைக் குறித்து வருந்துவதில் பலன் என்ன?

உனக்கு அழைப்பு மிக விரைவில் வருமென்று எதிர்பார்க்கின்றேன். அதற்கு ஆயத்தமாயிரு. சமஸ்கிருதம் எவ்வளவு பயின்றிருக்கின்ருய்? பஞ்சடித்தல், நூற்பு ஆகியவற்றில் உன் பயிற்சியை முடித்துவிட்டாயா?

ஆசிரமப் பெண்கள் குழாத்துக்குக் கடிதம் எழுதின அன்றுதான் இதையும் எழுதினேன். ஆனல் சற்றுக் காலம் தாழ்த்தி இதை அஞ்சலில் சேர்த்ததால், இது ஒரு நாள் கழித்துத்தான் உனக்குக் கிடைக்கும்.

## 55

ஞாயிறு, *1927*

உன் கடிதத்துக்காக நான் காத்துக் கொண்டிருந்தேன். நீ வேண்டுமென்றேதான் எழுதாமல் இருந்துள்ளாய் என்பதை அறிவேன். ஆனல் இனி உன்னை நீ இவ்வாறு கட்டுப்படுத்திக் கொள்ளவேண்டிய அவசியமில்லை. சமஸ்கிருதத்தில் எவ்வளவு தேர்ச்சி பெற்றுள்ளாய்? பஞ்சடித்தலிலும் நூற்பிலும் ஒரு தேர்வு நடத்தினல், நீ முதலாவதாகத் தேறுவாயா?

நாளுக்கு நாள் நான் தேறி வருகின்றேன். கவலைக்கு இடமில்லை.

## 56

*வெள்ளிக்கிழமை, 1927*

உன் கடிதங்கள் கிடைத்துள்ளன. ஆசிரம உணவை நீ சாப்பிடுவது உனக்கு நல்லதே. இது பற்றி நான் சங்கரனுக்கு எழுதியுள்ள கடிதத்தைப் படி. டாக்டர் பிராண்ஜீவன்தாஸ் ஜகஜீவன் மேத்தாவின் மருமகள் சம்பாவின் பொறுப்பை நீ ஏற்றுக்கொண்டது நல்லது.

## 57

நந்திதுர்க்,
பேசா நோன்பு நாள்,
*சைத்ரவதி, 9, ஏப்ரல் 25, 1927*

உன் கடிதம் கிடைத்தது. அதில் கடைசி வாக்கியம் நிறைவு பெறவில்லை; தேதியோ, கையெழுத்தோ, அதில் இல்லை. அதிக அவசரத்திற்கு இது அறிகுறி. ஒரு குஜராத்திப் பழமொழி சொல்வது போல், பொறுமையின் கனிகள் சுவையானவை. ஓரிரவில் மாமரங்கள் வளர்வதில்லை என்பது மற்றொரு பழமொழி. வீண் அவசரத்தால் விரயமே ஏற்படும் என்பது ஆங்கிலப் பழமொழி. உன்னுடைய சொந்த நூலிலிருந்து நீ அப்பாவுக்கு ஒரு வேட்டி தயாரித்தது மிக நல்லது. நீ இந்த சிறந்த பணியைத் தொடர்ந்து செய்து, தயாபாயும் யசோதாவும் உன்னைப் பின்பற்றினால், எவ்வளவு நன்றாக இருக்கும்?

கராச்சி வேலை உனக்குத் தரப்படாது என்று எண்ணக் காரணமில்லை. அப்படியே அந்த வேலை கிடைக்காவிடினும் உன்னை வரவேற்க வேறு பல இடங்கள் காத்திருக்கின்றன. கராச்சியிலிருந்து நிச்சயமாக எனக்கு எதுவும் தெரிந்தபின் தான் இவற்றைப் பற்றி யோசிக்க முடியும்.

## 58

நந்திதுர்க்,
பேசா நோன்பு நாள்,
*2, மே, 1927*

நீ மிகவும் நலிந்து காணப்படுகின்றாய் என்று அப்பா எழுதியுள்ளார். ஏன் அப்படி? நம் உடல், வலிமையும் வனப்பின் ஒளியும் நிறைந்திருக்க வேண்டும். இலட்சியக் கன்னிப்பெண், எல்லா வழிகளிலும் தலை சிறந்து விளங்கவேண்டும்.

நீ கராச்சிக்குப் போக வேண்டியிராவிடில், சம்பாவதிக்குப் பதிலாக உன்னை டில்லிக்கு அனுப்ப விரும்புவேன். அங்கு

நிறையப் பெண்கள் இருக்கின்றனர்; வேலை நிரம்ப இருக்கின்றது. டில்லியின் இயநிலை வெகு சுகமாக உள்ளது. கராச்சியிலிருந்து சீக்கிரமே தந்தி வருமென்று எதிர்பார்க்கின்றேன்.

இரவில் ஆசிரமத்தைச் சுற்றி ரோந்து வரும் பெண்களில் எவரும் திருடர்களைப் பற்றிப் பயப்படுகின்றனரா என்று கூறு.

ராதா [காந்தி] அதிகக் காயம்பட்டு விட்டாளா? அவள் வீட்டுக்குத் திருடர்கள் வந்தபோது, அவள் மருண்டு விட்டாளா? அவளுக்குத் தனியாக எழுத எனக்கு அவகாசம் இல்லை.

## 59

நந்திதுர்க்,
*4, மே, 1927*

மருத்துவர் சொன்னபடியே நடக்க வேண்டுமென்றும், விரும்பினால் பச்சைப்பயறுத் தண்ணீர் சாப்பிடலாமென்றும் கங்காதேவியிடம் கூறு. அவளை நான் பார்த்தாலொழிய, சிகிச்சை பற்றி யோசனை எதுவும் கூறமுடியாது. இந்தப் புதிய மருத்துவர் யார்? எப்பொழுது முதற்கொண்டு அவர் ஆசிரமத்திற்கு வருகிறார்.

இரவு ரோந்து செல்ல, சகோதரிகளில் யார் முன்வந்துள்ளார்கள்?

என் உடல் நலன் தேறி வருகிறது. எனக்கு ஒழுங்காக எழுது. வசுமதியையும் எனக்கு எழுதச் சொல். நீ எப்படி இருக்கின்றாய்?

## 60

*1927*

நோய்வாய்ப்படும்போது ஆசிரமவாசிகள் ஆசிரமத்தை விட்டுச் செல்ல வேண்டுமா? நீ எங்கு சென்றுள்ளாய் என்பது கூட எனக்குத் தெரியவில்லை. எப்படியானாலும், உடலை விரைவில் தேற்றிக் கொள். உனக்கு மன நிம்மதி இல்லையெனில், இங்கு என்னிடம் தாராளமாக வரலாம் என்பதை நினைவிற் கொள். தன்னடக்கம், தாங்கிக் கொள்ளும் அளவுக்குத் தான் நன்மை செய்யும். நன்மை செய்யாத போது, அதனால் பலனில்லை. உன்னைப்

பற்றிய செய்தி வருமென்று ஒவ்வொரு நாளும் காத்திருக்கின்றேன்.

என் பயணத் திட்டம் உனக்குத் தெரியுமல்லவா?

## 61

வியாழக்கிழமை,
*1927*

உனக்குச் சுரம் வந்து அது முதற்கொண்டு நீ பலவீனமாக இருந்துள்ளாய் என்பதைக் கேட்க வருந்தினேன். உன் உடல் வலிமைக்கு மீறிய பொறுப்பு எதையும் ஏற்றுக் கொள்ளாதே. காங்கிரஸ் மாநாட்டுப் பிரதிநிதியாக நீ தேர்ந்தெடுக்கப் பட்டுள்ளாயா என்பதை நான் அறிய விரும்புகிறேன்; இல்லாவிடில் இனித் தேர்ந்தெடுக்கப் படுவதற்கு அவகாசம் இருக்கிறதோ, என்னவோ?

என் உடல்நலன் பற்றிப் பத்திரிகையில் செய்தி எதுவும் பார்த்தால், அது மிகையான செய்தி என்று நிச்சயமாக நம்பு. இச் சுற்றுப் பயணத்தின் போது, இரத்த அழுத்தம் அவ்வப் போது கூடிக் குறைந்துள்ளது.

## 62

நந்திதுர்க்,
*1927*

[கஸ்தூரி பா எழுதிய கடிதம்]

பாபுவின் உடல் நலன் அவ்வளவு திருப்திகரமாக இல்லை. அவரைப் பார்க்கும் மருத்துவர்கள் அவர் ஓய்வெடுக்க வேண்டுமெனக் கூறியுள்ளனர். கோதுமைச் சப்பாத்தி சாப்பிடாமல், பழம் மட்டுமே அவர் சாப்பிட்டு வருகிறார்.

கிருஷ்ட தாஸ் தவிர மற்றவர்கள் அனைவரும் நன்றாக இருக்கின்றனர். ராஜகோபாலாச்சாரிஜியும் கங்காதரராவும் [தேஷ்பாண்டே] இங்கிருக்கின்றார்கள். ஆனால் சில நாட்களில் சென்று விடுவார்கள். [காந்திஜியின் பேரன்கள்] காந்தி, ரசிக் ஆகியோருக்கு நல்ல புத்திமதி கூறு. அதற்கு அவர்கள் செவி சாய்ப்பார்களென்று நம்புகிறேன். சூரஜ்பென் எங்கிருக்கின்றார்? டாக்டர் மேத்தாவின் மகள், ஜெகி பென் இப்பொழுது ஆசிரமத்தில் இருக்கின்றாள். அவளுக்கு இடம் பிடித்திருக்கிறதா?

பெண்கள் வழிபாட்டுக் கூட்டங்களில் கலந்து கொள்கிறாயா? வல்லபாய் நன்றாக உள்ளாரென்று நம்புகிறேன். நந்து பென்னிட

மிருந்து [கனுகா] கடிதம் வந்தது. என் 'ஜய ஸ்ரீ கிருஷ்ண' வாழ்த்துக்களை அவருக்குத் தெரிவிக்கவும்.

தேசீய வாரத்தை உற்சாகமாகக் கொண்டாடியதற்கும், வழிபாட்டுக் கூட்டங்களில் கலந்துகொண்டதற்கும் ஆசிரமப் பெண்கள் குழாத்துக்கு என் பாராட்டுதல்கள்.

பா

## 63

நந்திதுர்க்
*12, மே, 1927*

உன் கடிதம் கிடைத்தது. ஆசிரமத்தைச் சுற்றி இரவில் ரோந்துவர நீ முன்வந்தது பாராட்டுதற்குரியது. உன் உடல் வலிமை இடம் கொடுக்கும் அளவுக்கு, உன் சேவையை அவர்கள் பயன்படுத்திக் கொள்ள வேண்டுமென்று விரும்புகிறேன். அச்சம், நம் கற்பனையில் உதயமாவது தான், அது சிறிதும் மெய்யானதல்ல. அதை அடிக்கடி நாம் எதிர்நோக்குவதாலும், ஆண்டவன் அருளாலும் அது மறைந்து விடும். சம்பளத்துக்கு வேலையில் அமர்ந்துள்ள காவல்காரர்கூடத் தங்களை அடிக்காமல், தங்களிடம் அடிவாங்கிக் கொள்ளத் தயாராக இருக்கின்றார்கள் என்பதையும், ஆசிரமத் தொண்டர்கள் உயர்ந்த தன்மை கொண்ட சாதாரண குடும்ப வாழ்க்கை நடத்துபவர்கள் என்பதையும் திருடர்கள் உணரும் போது, ஆசிரம வாசிகளுக்குத் தொந்தரவு கொடுப்பதை நிறுத்திக் கொள்வார்கள். என்றாவது ஒரு நாள், உங்களில் ஒருவர், ஆன்ம பலத்தைப் பயன்படுத்தி அவர்கள் மனத்தை மாற்றுவீர்கள் என்ற நம்பிக்கை எனக்குண்டு. ஆனால் இது பாம்பு வாழும் பொந்துக்குள் கையை விடுவது போன்றது என்பதில் ஐயமில்லை. எவராகிலும் ஒருவர் அடிபடுவார்; சாகவும் நேரிடலாம். நோயால் தாக்கப்படாத மனிதன் யார் இருக்கின்றார்? ஆண், பெண், குழந்தை அனைவரும் நோயால் வருந்துகின்றனர். அதை நாம் சகித்துக் கொள்ளும் போது, திருடர்களிடமிருந்து துணிவுடன் அடிவாங்கிக் கொள்ள மட்டும் ஏன் தயங்க வேண்டும்? போலீஸ்காரர்களால் காப்பாற்றப்பட வேண்டுமென்று எதிர்பார்ப்பவர்களுக்கு இந்த யோசனை வேடிக்கையாக இருக்கலாம்—; ஆசிரமத்தில் உள்ள நமக்கல்ல.

நீ தயாரித்து அனுப்பிய பஞ்சுப்பட்டைகள் நான் நூற்றுக் கொண்டிருந்த வேளையிலேயே வந்து சேர்ந்தன. அவற்றை உடனே பயன்படுத்தினேன். நூல் ஒரு முறை கூட அறுந்து போகவில்லை. உன் பஞ்சுப்பட்டைகள் நான் பயன்படுத்தியவற்றுள் சிறந்ததற்கும் சளைக்கவில்லை. இதைப் போன்ற உயர்ந்த பஞ்சுப் பட்டைகள் இதற்கு முன் எனக்கு ஓரிரண்டு முறைகள்தான் கிடைத்துள்ளன. உன் பஞ்சுப்பட்டைகளை விட உயர்ந்தவற்றை

எவராலும் தயாரிக்க முடியுமென்று நான் எண்ணவில்லை. இன்னும் சொல்லப் போனால், ஒருமுறை உன் பஞ்சுப்பட்டைகளை வைத்து நூற்றவர், வேறு பஞ்சுப்பட்டைகளை வைத்து நூற்பதே கடினமாக இருக்கும். பஞ்சடிப்பதில் இருப்பது போலவே, நூற்பதிலும், திருந்திய எழுத்து எழுதுவதிலும், நீ முதல் வகுப்பில் முதன்மையான இடம்பெற வேண்டுமென விரும்புகிறேன்; பெறுவாயென்று எதிர்பார்க்கின்றேன்.

கராச்சியிலிருந்து நேற்று ஒரு கடிதம் வந்தது. நாராயணதாஸ் அங்கில்லாததால்தான், உன் நியமனத்தில் தாமதம் ஏற்பட்டிருக்கின்றது போலும். ஆகவே அவர்கள் ஒரு மாத அவகாசம் கேட்டுள்ளார்கள். நீ வரவேண்டுமென்று அவர்கள் உண்மையில் விரும்பினால் நான் இன்னும் ஒரு மாதம் காத்திருக்கத் தயாராய் இருக்கின்றேன் என்றும், ஆனால் என்னைத் திருப்தி செய்வதற்காக மட்டும் அவர்கள் எதுவும் செய்யக்கூடாதென்றும், அவர்களுக்குக் கூறியுள்ளேன். தந்திமூலம் பதில் அனுப்பும்படியும் கேட்டுள்ளேன். உன் சேவை உண்மையாகவே விரும்பப்படுகிற இடத்திற்குத்தான் நீ செல்லவேண்டும் என்பது என் ஆசை. நமக்கு அவசரம் எதுவுமில்லை. அதற்கிடையில் உன் படிப்பில் ஒவ்வொரு துறையிலும் நீ சிறந்த தேர்ச்சி பெறவேண்டும்.

## 64

கதீ நஹீ. ஹார்ணு, பாவே ஸாடீ ஜான் ஜாய் என்ற முதல் வரியுடன் தொடங்கும் பாடலை நீ நிச்சயம் கேட்டிருப்பாய். நாம் உயிரை இழக்கலாம், ஆனால் உள்ளத்தின் உறுதியை இழக்கக் கூடாது என்பது அதன் பொருள். அப்படியிருக்க, நூற்பது, நல்ல கையெழுத்து எழுதுவது போன்றவற்றில்,-அதிலும் நான் உன்னருகே இருந்து உற்சாகப்படுத்தும்போது—நீ தோல்வியை ஒப்புக்கொள்வது அறிவுடைமையாகுமா? "கல்மேல் கல் வைத்துத்தான் அணையைக் கட்டமுடியும்; சிறு துளி சேர்ந்துதான் பெரும் ஏரி நிரம்பும்" என்று குஜராத்தி மொழியில் கூறுவார்கள். ஊக்கத்துடன் உழைத்தால் சாதிக்க முடியாதது எதுவுமில்லை. ஆகவே உள்ளச் சோர்வு அடையாதே. ஒழுங்காக நூற்பதன் மூலம், நீ வேகமாக நூற்கக் கற்றுக்கொள்வாய். தெளிவாகவும் முத்து முத்தாகவும் எழுதத் தொடர்ந்து பயிற்சி பெற்றால், உன் எழுத்தைத் திருத்திக்கொள்ளமுடியும். இவ்வாறு தங்கள் எழுத்தைத் திருத்திக் கொண்டவர்கள் பலரை நானறிவேன். ஆசிரமக் கடைவேலையில் நீ வெற்றி கண்டுள்ளாய். அதை இப்பொழுது கைவிடாதே; அதைச் சிறப்பாகச் செய்யக் கற்றுக்கொள். இதற்குமுன் கணக்கெழுதிப் பழக்கமில்லாதது பற்றிக் கவலைப்படாதே. அதன் பொதுவான, அடிப்படை விதிகளை நீ அறிந்துகொள்ள வேண்டும். கடைவேலை அதிக நேரம் எடுத்துக்கொள்வதால், தினமும் இரண்டு மணிநேரம் உன்னால் நூற்க இயலவில்லை என்றால், நூற்கும் நேரத்தைக் குறைத்துக்கொண்டு, ஆனால் அக்குறுகிய நேரத்தில் ஒரு மனதான ஈடுபாட்டுடன் நூற்கவேண்டும். நீண்டநேரம் பொறுமையின்றி

நூற்பதைவிடக் குறைந்த நேரம் மிகுந்த அக்கறையுடன் நூற்பதே நல்லது. அப்படி நூற்கும்போது நூல் உறுதியாகவும் ஒரு சீராகவும் இருக்கும்; வேகமாகவும் நூற்க முடியும்.

கங்காதேவிபற்றி எனக்கு அவ்வப்போது எழுது.

## 65

பேசா நோன்பு நாள் 1927

உன் அஞ்சலட்டை கிடைத்தது. ஆனால் நீ வாக்களித்திருந்தபடி, கடிதம் வரவில்லை. மட்டாரில் என்னவிதமான வேலை செய்துகொண்டிருக்கின்றாய்?[1] உன் சக ஊழியர்கள் யார்? நீ என்ன வேலை செய்தாலும், உன் மன அமைதியை மட்டும் இழக்காதே.

நாற்காலியில் உட்கார்ந்துகொண்டே தக்ளியை நூற்கப் பெரியப்பா [வித்தல்பாய் பட்டேல்] கற்றுக்கொண்டவுடன், மணிபென் அங்கு அவரிடம் வருவாள் என்று அவருக்கு நான் எழுதினேன். மணிபென் ஒரு பித்துக்குளி என்று அவர் எனக்குப் பதில் எழுதினார். அவள் ஒரு பித்துக்குளி யாதலால்தான், இன்னுமொரு பித்துக்குளிகூட சேர்ந்து வாழ்கிறாளென்று அவருக்கு நான் பதில் எழுதினேன்.

யசோதாவின் [தயாபாய் பட்டேல் மனைவி] ஆண் குழந்தைக்கு என்ன பெயர் வைத்திருக்கின்றார்கள்?

## 66

பேசா நோன்பு நாள் 1927

கிராம வாழ்க்கையில் உன் அனுபவங்களைக் குறித்து வைத்துக்கொள்: அவை பின்னர் உனக்குப் பயன்படும். நீ என்றும் பொறுமையிழக்கவோ, சோர்வுறவோ, மன அமைதியற்றிருக்கவோ கூடாது. நான் உன்னிடம் கேட்க வேண்டிய கேள்விகள் பல இருக்கின்றன; ஆனால் இப்பொழுதல்ல. நாம் சந்திக்கும்போதோ அல்லது நீ இப்பொழுது மேற்கொண்டுள்ள பொறுப்பு முடிந்தவுடனேயோ, அவைபற்றி உன்னிடம் கேட்பேன். எனக்கு ஒழுங்காக எழுது. உன் உடல்நலனைக் காத்துக்கொள்.

பெரியப்பாவை* நீ பார்த்தாயென்று எண்ணுகிறேன். [வெள்ள நிவாரண வேலையில்] அவர் உதவியாக இருக்க முடியுமென்ற

---

1. வெள்ள நிவாரண வேலைகளுக்கு மணிபென் அங்கு சென்றிருந்தார்.

* மத்திய சட்டமன்றப் பேரவைத் தலைவராக வித்தல்பாய் பட்டேல் அப்பொழுது பணியாற்றி வந்தார். அவர் குஜரத் தொகுதியிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்டிருந்தார். வெள்ளத்தால் அந்த மாநிலம் பாதிக்கப்பட்டபோது, அப்பகுதிகளில் விரிவாகச் சுற்றுப் பயணம் செய்தார். அவர் யோசனையின் பேரில் வைஸ்ராயும் குஜரத் பகுதிகளுக்கு வருகை தந்தார்.

பேரார்வத்துடன் அவர் அங்கு வந்துள்ளார். அவர் நம்பிக்கை ஈடேறுவதாக.

## 67

சபர்மதி,

ஞாயிற்றுக்கிழமை, *15*, ஏப்ரல், *1928*

நீ பார்தோலிக்குச் சென்றபின் உன்னிடமிருந்து கடிதம் எதுவும் வரவேயில்லை. இது சரியல்ல. உன் வேலைத்திட்டம் பற்றியும் புது அனுபவங்கள் பற்றியும் எனக்கு எழுது.

இத்துடன் நான் அனுப்பியுள்ளதைப் படி. [கதர்ப் பிரசார வேலைக்கு] நீ இலங்கைக்குச் செல்ல விரும்புவாயா? தேசிய வாரத்தை நீ எப்படிக் கொண்டாடினுய்?

## 68

சபர்மதி,

பேசா நோன்பு நாள் *21*, மே, *1928*

பார்தோலியில் வரிகொடா இயக்கத்தில் நீ சிறந்த தொண்டாற்றினுய் என்று அப்பாவிடமிருந்து அறிய மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன். ஆனல் அத்துடன் நான் திருப்தி அடையமாட்டேன். கடமை உணர்வு, நிதானம், திருப்தி, அறிவைப் பெருக்கும் ஆர்வம், உறுதி, வாய்மையில் விசுவாசமான பற்றுதல், ஊக்கம், கொள்கையில் பிடிப்பு, ஒரு மனதான ஈடுபாடு ஆகிய நற்பண்புகளை நீ வளர்க்க வேண்டும். இப்பண்புகள் இல்லாவிடில், நாட்டுச்சேவைக்குத் தன்னை அர்ப்பணம் செய்துகொண்ட ஒரு கன்னிப் பெண்ணின் வாழ்க்கை நிறைவு பெருது.

## 69

சுயராஜ்ய ஆசிரமம், பார்தோலி,

சனிக்கிழமை [*4*, ஆகஸ்ட், *1928*].

சுவாமி [ஆனந்த்] இங்கில்லை. அவருக்கு உன் கடிதத்தைப் படித்துக் காட்டினேன். இங்கு நீ வரவேண்டுமென்று வற்புறுத்தாதே. உடல்நலனைக் காத்துக்கொண்டு, தளபதியின் சொல்லுக்கு மகிழ்ச்சியுடன் கீழ்ப்படிவதே ஒரு போர்வீரனின் கடமை. நாம் முழு மனதுடன் அதில் ஈடுபட்டால், உடல்நலனை விரைவில் சீராக்கிக் கொள்ள முடியும்.

அப்பா, மகாதேவ், சுவாமி ஆகியோர் புனவில் இருந்தனர். இன்று அங்கிருந்து புறப்பட்டிருக்க வேண்டும். உடன்பாடு ஏற்படுமா, இல்லையா என்று இப்பொழுது சொல்வதற்கில்லை. போராட்டத்தைத் தொடர்ந்து நடத்துவதற்கான வலிமை அரசிடம் இப்போதில்லை என்று எனக்குத் தோன்றுகிறது. அரசு பல தவறான நடவடிக்கைகளை மேற்கொண்டுள்ளதால், பொதுமக்களிடை அதன் கொள்கைகளுக்குப் பலத்த எதிர்ப்பு பரவியுள்ளது.

சர்போனுக்கு இன்று சென்றேன். இப்போது மழை இல்லை. பலர் இன்று சூரத் செல்கின்றனர்.

# 70

ஆக்ரா,
*18, செப்டம்பர், 1929*

உன் கடிதம் கிடைத்தது. யசோதா இப்பொழுது ஆமதாபாத்தில் இருப்பது நல்லது. அவள் உடல்நலக் குறைவு கவலையை உண்டாக்குகிறது. ஆயினும் கவனமான பராமரிப்புடன் அவள் தேற இடமுண்டு.

அப்பா வந்திருந்தால், நான் லக்ஷ்மணபுரியில் 27ந் தேதி அவரைச் சந்திக்க முடியுமென்று எதிர்பார்க்கின்றேன் என்று அவரிடம் கூறு.

என் உடல்நலன் நன்றாக இருக்கின்றது. பால், தயிர் பழங்கள் ஆகியவையே இப்பொழுது என் உணவு.

# 71

சபர்மதி,
*9, மார்ச்சு, 1930*

ஒவ்வொரு நாளும் உன்னிடமிருந்து கடிதம் வருமென்று எதிர்பார்த்தேன். உன்னைப் பற்றி நினைவில்லாமல் கழிந்த நாள் ஒன்று கூடக் கிடையாது ஆனால் உன்னை நான் அசட்டை செய்துவிட்டேன் என்று நீ எண்ணுவது எனக்கு விளங்குகிறது. உண்மை என்னவெனில், எனக்கு வேலை மிக அதிகமாக உள்ளது. எவரையும் ஏறெடுத்துப் பார்க்கக் கூட அவகாசமில்லை. நீ எங்கிருக்கின்றாய், என்ன செய்து கொண்டிருக்கின்றாய் என்பதை அறிவதுடன் திருப்தி அடைந்தேன்.

உனக்கு அப்பா எதுவும் உத்தரவிட்டுச் செல்லவில்லை. [ராசில்] அவர் கைது செய்யப்படுவாரென்று அவர் எதிர்பார்க்கவில்லை. நீ எங்கு மகிழ்ச்சியுடன் இருக்க முடியுமோ, அங்கு தங்க

வேண்டும். உரிய காலம் வரும்போது, நீயும் தாராளமாகச் சிறைக்குச் செல்லலாம். மகாதேவ் அதைப்பற்றி எழுதியுள்ளார். சபர்மதி ஆசிரமத்தில் நீ ஏன் வசிக்க விரும்பவில்லை என்பதை நான் அறிவேன். ஆனால் உன் வெறுப்பு நியாயமில்லை என்றே நான் நினைக்கின்றேன். எனினும், இது போன்றவற்றில் கட்டாயப் படுத்துவதற்கு இடமேயில்லை. ஆகவே அதைப் பற்றி நான் மேலும் எதுவும் சொல்ல மாட்டேன். நீ எங்கு தங்கினாலும், நிம்மதி யாக இருக்க வேண்டுமென்று மட்டுமே விரும்புகிறேன்.

வியாழக்கிழமைக்குள் நான் கைது செய்யப்படுவேன் என்று எதிர்பார்க்கின்றேன். தைரியமாக இரு. உடல் நலனைக் காத்துக் கொள்.

## 72

*வியாழக்கிழமை 1930*

உன் இரு கடிதங்களும் கிடைத்தன. ஓடும் இரயிலில் இதை எழுதுகின்றேன். உன்னால் இயல்வதை உறுதியுடன் செய். உன் இரண்டாவது கடிதத்தில் குறிப்பிடும் நிலைமை எழுந்தால், விலே பார்லிக்காவது அல்லது வார்தாவுக்காவது செல். நீ வந்து என்னைச் சந்தித்தால், இதை இன்னும் விவரமாக விளக்குவேன்; அப்பொழுது உனக்கு ஆறுதலாக இருக்கும். செவ்வாய்க்கிழமை, அல்லது புதன்கிழமையன்று நீ வா. அப்பொழுது அங்கிருந்து நீ அதிக செய்தி கொண்டு வரமுடியும். ஒரு சில பெண்களையாவது சக ஊழியர்களாகக் கொண்டு, நீ என்ன செய்ய முடியுமோ, அதைச் செய்.

## 73

*வியாழக்கிழமை 1930*

உன் கடிதம் கிடைத்தது. நீ கேட்டுள்ள குறிப்பைக் கடைசி யில் என்னால் எழுத இயலாமல் போயிற்று. நீ இப்பொழுது நிச்சய மாகப் போவாய். [கள்ளுக்கடை மறியல் செய்ய கேதா மாவட்டத் திற்கு] இப்போது அவசியமில்லை என்ற போதிலும், குறிப்பை இத்துடன் அனுப்புகின்றேன்.

உனக்கும், அப்பாவுக்கும், எனக்கும், உண்மையாகவும் ஏற்ற தாகவும் உள்ள முறையில் நீ நடந்து கொள்ள வேண்டும். கீதை யையும் வேறு சில குஜராத்தி நூல்களையும் படித்து விளங்கிக் கொள்ள முயற்சி செய்.

எனக்கு ஒழுங்காக எழுது. கேதா கடைகளில் உப்பு நச்சு கலந்து கெடுக்கப்பட்டது பற்றிய வதந்தியை விசாரித்து எனக்கு நிலைமையைத் தெரிவி.

## 74

மே 19, 1930

இறைவனே உனக்கு வழிகாட்டி நடத்துபவராக இருப்பார். நான் தினமும் உன்னை நினைக்கின்றேன். உன் உள்ளச் சோர்வு நீங்கி விட்டதென்று நினைக்கின்றேன்.

## 75

எரவாடா மந்திர் சிறை,
14, ஜூலை, 1930

நீ செய்தது அருமை. உன் உண்மையான அப்பாவை [சர்தார் பட்டேல்] நீ கண்ட மாத்திரத்தில், போலி அப்பாவை [காந்திஜி] மறந்துவிட்டாய். இப்பொழுதோ, பொதுக் கூட்டங்களில் பேச்சாளராக உனக்குக் கிராக்கி ஏற்பட்டுள்ளதால், என்னை மேலும் மறந்து விடக்கூடும். உன் உடல் நலனும் உள நலனும் எப்படி இருக்கின்றது? என் கடிதங்கள் உனக்குக் கிடைத்தனவா?

தயாபாய் எப்படி இருக்கின்றான்? யசோதா எப்படி இருக்கின்றாள்? அவள் உடல் நலன் முற்றும்.சீராகிவிட்டதா?

## 76

எரவாடா மந்திர்,
ஜூலை, 28, 1930

பல வாரங்களுக்குப் பின் நீ அருள் கூர்ந்து எனக்குக் கடிதம் எழுதியுள்ளாய். நீ வேலையில் மும்முரமாக ஈடுபட்டுள்ளாய் என்பதையும், நீயே தேர்ந்தெடுத்துள்ள ஒரு துறையில் நல்ல தொண்டாற்றி வருகின்றாய் என்பதையும் நான் அறிவேன். ஆயினும் நீ ஒழுங்காகக் கடிதங்கள் எழுத வேண்டுமென்று விரும்புகிறேன்.

நீடு வாழ்ந்து நாட்டுக்குத் தொண்டாற்று.

## 77

எரவாடா மந்திர்,
18, ஆகஸ்ட், 1930

உன் கடிதம் கிடைத்தது. அப்பா இங்கு அழைத்து வரப்பட்டு, என்னுடன் நான்கைந்து நாட்கள் தங்கினார். உன்னைப் பற்றி செய்தி கிடைத்தது. உனக்கு எல்லாம் இனிது நடக்க இறைவன் திருவருள் செய்வார். எனக்கு நிச்சயம் எழுது. தயாபாயையும் எழுதச் சொல்.

## 78

எரவாடா மந்திர்,
22, ஆகஸ்ட், 1930

உன் அனுபவங்களைப் பற்றிய நல்லதொரு அறிக்கை அனுப்பி யுள்ளாய். அப்பாவை நீ சந்தித்தாய் என்று இப்பொழுது அறி கின்றேன். பம்பாயில் இருக்கும் போது, பெரின்பென்னையும் லீலாவதி [முன்ஷி] யையும் சந்திக்கவேண்டும்.

## 79

எ. ம.
7, செப்டம்பர், 1930

உன் கடிதம் கிடைத்தது. மீண்டும் அப்பாவும் ஜெயராம் தாஸும் [தௌலத்ராம்] என்னுடன் ஓரிரு நாட்கள் தங்கினர். எனக்கு நீ எழுதிய கடிதம் அதே நேரத்தில் வந்தது; அப்பா அதைப் படித்தார். நீ அவருக்கு எழுதிய கடிதத்தையும் படிப் பதற்கு என்னிடம் கொடுத்தார்.

அம்மாவை நீ சித்திரித்துள்ளது உருக்கமாக உள்ளது. பழங் காலத் தாய்மார்கள் பெரும்பாலோர் அவ்வாறு தான் இருந்தனர். ஆகவே உன் வர்ணனை எனக்கு வியப்பளிக்கவில்லை. ஆனால் அன்னையின் அன்பு, அதில் மோகம் கலந்திருக்கக் கூடுமென்ற போதிலும், ஒளிமயமானதால், எப்பொழுதும் புதிதாகவும் பசுமை யாகவும் தோன்றுகிறது. எனக்கு எழுதுவது பற்றிய விதியை மீறாதே. நீ சிறையில் இருந்து, உன்மீதும் சில தடைகள் விதிக்கப் பட்டிருந்தால், அப்பொழுது நிலைமை வேறு.

## 80

எரவாடா மந்திர்,
14, செப்டம்பர், 1930

நீ விரும்பியதால் இதை எழுதுகிறேன். ஆனால் இது வந்து சேருமா என்பது ஆண்டவனுக்குத்தான் வெளிச்சம். நீ எனக்கு எழுதிய கடிதத்தை அப்பாவும் படிப்பதற்காக அவருக்கு அனுப்ப அதிகாரிகள் அனுமதித்தார்கள். உனக்கு அனுமதி கிடைத்தால் எழுது. கட்டாயமாக இப்பொழுது உனக்குக் கிடைத்துள்ள ஓய்வை நன்கு பயன்படுத்திக் கொள். அதுவும் நம் சேவையில் ஓரம்சமென்றே கருதுகிறேன். உன் உடல் நலனை நன்கு பார்த்துக் கொள். ஒரு முறையான வேலைத் திட்டம் வகுத்துக் கொண்டு அதன்படி செயல்படு. உனக்கு என்ன உணவு கிடைக் கிறது என்பதை எனக்குத் தெரியப்படுத்து.

## 81

எரவாடா மந்திர்,
*27*, செப்டம்பர், *1930*

ஒவ்வொரு வாரமும் நான் எழுத வேண்டுமென்று விரும்புகிருய். ஆனல் அத்தனை கடிதங்களை சிறை அதிகாரிகள் அனுமதிப்பார்களா? நீ எனக்கு எழுத முடியுமா என்பதும் சந்தேகம் தான். உன் உடல் நலனைக் காத்துக் கொள். நேரத்தில் ஒவ்வொரு நிமிடத்தையும் நல்ல முறையில் பயன்படுத்து. உன் வேலையைப் பற்றிக் குறிப்புகள் எழுதி வைத்துக் கொள்.

## 82

எரவாடா மந்திர்,
*14*, டிசம்பர், *1930*

சிறையிலிருந்து நீ இப்பொழுது வெளியே வந்துவிட்டதால், உன் அனுபவங்களைப் பற்றிய முழு விவரங்களுடன் உன் கடிதத்தை எதிர்பார்க்கின்றேன். நீ நலமாக இருக்கின்ருயா?

## 83

எரவாடா மந்திர்,
*21*, டிசம்பர், *1930*

நீ ஒருவரி கூட எழுதாமல் இருக்கும்போது, நான் மட்டும் தொடர்ந்து உனக்கு எழுதிக் கொண்டிருக்க வேண்டுமா? எனக்கு ஒழுங்காக எழுதுவாயென்ற வாக்குறுதியை மறந்து விட்டாயா? எழுதாமலே இருப்பதை விடக் காலந் தாழ்த்தி எழுதினல் கூட நல்லது. நம் வாக்குறுதிகளைக் காப்பாற்றுவது முக்கியம் என்பதை நீ உணர வேண்டும். உன் சிறை அனுபவங்களை எனக்குத் தெரிவி. நீ நலமாக இருந்தாயா? என்ன உணவு சாப்பிட்டாய்?

## 84

எரவாடா மந்திர்,
*27*, டிசம்பர், *1930*

கடைசியில் உன்னிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. இதுவரை என்னைப் புறக்கணித்ததற்கு ஓரளவு ஈடு செய்துள்ளாய். உன் உடல் நலனை எப்படியும் காத்துக் கொள். [பல ரகக் கைதிகளை, இளைஞர்களையும் வயதானவர்களையும், கவனித்துக் கொள்வதில்] உனக்கு அதிக வேலை இருந்திருக்கும். ஆகவே புத்தகங்கள் படிக்க

வேண்டிய அவசியம் இருந்திராது. [பெண் கைதிகள் வளையல்கள் அணிய அனுமதிக்கப்பட வேண்டுமென்பது பற்றிய] உரிமைப் போராட்டத்தை நீ நடத்தியது நல்லதே.

நான் இப்பொழுது நலமாக இருக்கின்றேன். ஒரு நாள் வயிற்று வலி இருந்தது; ஆகவே மறு நாள் காய்கறிச் சாறு மட்டுமே சாப்பிட்டேன். அன்று முதல் நான் பால் சாப்பிடவில்லை. உள்ளூர்ச் சோளம் அல்லது கம்பு கொண்டு தயாரிக்கப்படும் ரொட்டியையும், சில பாதாம் பருப்புகளுடன் காய்கறிகளையுமே சாப்பிடுகின்றேன். என்னைக் குறித்துக் கவலைப்பட இடமில்லை.

## 85

எரவாடா மந்திர்,
*3, ஜனவரி, 1931*

அப்பாவைப் பார்த்தால், அவர் மீது நான் பொறாமைப்படு கிறேன் என்று சொல். ஏனெனில் சிறையில் ஓய்வு பெறவும் அவ ரால் முடிகிறது; ஒவ்வொரு நாளும் மருத்துவரைக் காணச் செல்லவும் முடிகிறது.[1] சுதந்திர மனிதராக அவர் இருந்தவரை, இவ்வளவு கவனமான பராமரிப்பு அவருக்குக் கிடைக்க இயல வில்லை. இதன் மூலம் பல்லிலும் மூக்கிலும் அவருக்கு இருந்த தொந் தரவு நிரந்தரமாக நீங்கிவிடும் என்று நம்புகிறேன். இம்முறையும் அவர் என் அண்டை வீட்டுக்காரராக இருப்பாரா?

இராஜன் பாபுவைச் சந்தித்தால், அவரை எனக்கு எழுதச் சொல். அவர் கடிதத்திற்கு என் பதில் அவருக்குக் கிடைத்ததா?

எனக்கு எழுதவே கூடாதென்று தயாபாய் நோன்பு பூண் டிருக்கிறான் போலும்.

## 86

எரவாடா மந்திர்,
*10, ஜனவரி, 1931*

ஹரிலால் பற்றி நீ எழுதியதை நான் ஏற்கெனவே ஊகித் தறிந்திருந்தேன்.[2] உண்மை விவரங்கள் வெளியிடப்பட்டிருந்தால்

---

1. சர்தார் அப்பொழுது ஆர்தர் சாலைச் சிறையில் இருந்தார். ஒரு மாத காலத்திற்கு ஒவ்வொரு நாளும் அவர் போலீஸ் காவலுடன் டாக்டர் தேசாய் பல் மருத்துவ நிலையத்துக்கு அழைத்துச் செல்லப்பட்டார்.

2. ஆர்தர் சாலைச் சிறையில் சர்தாரைப் பேட்டி காண ஹரிலால் அனுமதி கோரியிருந்தார். ஆனால் அவர் குடிபோதையில் இருந்ததாலும், பிரசார நோக்கத்துடன் பேட்டி, ஆங்கிலேய அரசாங்கத்தால் ஏற்பாடு செய்யப்பட்டிருந்த தாலும், அவரைப் பேட்டி காண சர்தார் மறுத்தார். ஆயினும் நடக்காத பேட்டி நடந்ததாக ஒரு அறிக்கை 'இந்திய மாலைச் செய்தி' என்ற பத்திரிகையில் பிரசுர

தீங்கு ஒன்றுமில்லை என்று எண்ணுகிறேன். அப்பொழுதாவது, தன் வழி தவருனதென்று ஹரிலால் உணர்ந்திருப்பான். அது எவ்வாருயினும் நாம் நேர்வழியிலேயே செல்ல வேண்டும். இவ் வுலகில் ஒவ்வொருவருமே நம் உற்ருர் உறவினர் தான்; இன்னொரு வகையாகப் பார்த்தால், ஒவ்வொருவருமே வேற்று மனிதர் தான்.

உன் எழுத்தில் வரவேற்கத் தக்க மாறுதல் ஏற்பட்டுள்ளது. நீ இப்பொழுது எங்கு தங்கப் போகின்ருய்?

## 87

எரவாடா மந்திர்,
*15, ஜனவரி, 1931*

பல் சிகிச்சைக்காக அப்பா எத்தனை நாள் தங்கக் கூடும்? ஆர்தர் சாலைச் சிறையில் கொசுக்கள் தொந்தரவு அதிகமாயிருந்த போதிலும், இந்த சிகிச்சை நிறைவு பெறுவது நல்லது. அது வரை நீயும் பம்பாயில் இருப்பாயென்று எண்ணுகிறேன். நாங்கள் [காந்திஜியும் ஸ்ரீ கலேல்காரும்] நன்ருக இருக்கின்ருேம். [டாக்டர் கனுகாவின் மகள்] சுமித்ரா எப்படி இருக்கின்ருள்? வித்தல்பாய் அங்கு தொடர்ந்து தங்குகிருரா?

## 88

எரவாடா மந்திர்,
*22, ஜனவரி, 1931*

உன் அழகான, நீண்ட கடிதம் கிடைத்தது. அதைப் போல் நீண்டதொரு கடிதம் நான் எழுதக்கூடிய நிலையில் இல்லை என்று வருந்துகிறேன். எங்கள் சிறையறைகளைச் சுற்றியுள்ள வெளியிடத்தில் தான் இப்பொழுது என் பயணங்கள். சண்டை போட்டுக் கொள்வதற்கு இரயில் காப்பாளரோ, வேறு எவருமோ கிடையாது. எங்கள் இரயிலின் மேல் தளம், வானம் தான். விண் மீன்களைச் சித்திரிக்க நான் முயலலாம்; ஆனல் அது தோல்வியை வருந்தி அழைப்பதாகும். நான் பார்க்கும் விண்மீன்கள் உன் கண்ணுக்குப் புலனுனவை. ஆகவே நான் எழுதுவதற்கு ஒன்று மில்லை. நீ சிறைக்கு வெளியில் இருப்பது ஒரு சில நாட்களுக்குத் தான் என்பதையும் உணர்கிறேன். ஏனென்ருல், இப்பொழுது சிறைதான் உண்மையில் நம் வீடு.

---

மாகி, சர்தார் சொல்லாததெல்லாம் அவர் சொன்னதாகக் கற்பிக்கப்பட்டிருந்தது. இத் தவருன முறைகளைச் சர்தார் வன்மையாகக் கண்டித்தார். அவர் மறுப்பு அறிக்கை மறுநாள் பத்திரிகைகளில் வெளியாயிற்று.

## 89

*பேசாநோன்பு நாள் 16, பிப்ரவரி, 1931*

உன் கடிதங்கள் கிடைத்தன. ஆனால் பதில் அனுப்ப எனக்கு நேரம் கிடைக்கவில்லை. ஆகவே என்னால் எழுத முடிகிறதோ, இல்லையோ, நீ எனக்குத் தொடர்ந்து எழுது. இன்று நாங்கள் டில்லிக்குப் புறப்படுகின்றோம். முகவரி, மேற்பார்வை, டாக்டர் அன்சாரி, தர்யாகஞ்ச். சர்தார் பம்பாய்க்குச் செல்கிறார்.

## 90

*26, அக்டோபர், 1931*

உன் கடிதங்கள் எனக்குத் தொடர்ந்து கிடைக்கின்றன. நான் பதில் எழுத முடியவில்லை என்று நீ எழுதுவதை நிறுத்தி விடாதே. இப்பொழுதெல்லாம் எனக்குக் கடிதம் எழுதவே நேரம் கிடைப்பதில்லை. [லண்டன் வட்டமேசை] மாநாட்டுக் கூட்டங்களிடையே கிடைத்த ஒரு சில நிமிட அவகாசத்தில் இதை அவசரமாக எழுதுகின்றேன்.

தயாபாய் குணமடைந்தது அறிய மிகுந்த மகிழ்ச்சி. அவனுக்கும் யசோதாவுக்கும் என் நல்வாழ்த்துக்களைத் தெரிவி.

லக்ஷ்மிதாஸ் [புருஷோத்தம்தாஸ் ஆஷர்], டாக்டர் மஞ்சுபென் [மஷ்ருவாலா] ஆகியோரை எனக்கு எழுதச் சொல். இன்னுமொரு அஞ்சல் கப்பல் வரும் வரையிலாவது நாங்கள் இங்கிலாந்தில் இருப்போமென்று எண்ணுகிறேன்.

## 91

*எரவாடா மந்திர்,*
*26, மார்ச்சு, 1932*

மற்ற சகக் கைதிகளுக்குக் கடிதம் எழுத இன்று அனுமதி கிடைத்தது. ஆகவே இக் கடிதத்தை எழுதுகின்றேன். எனக்கு இந்த அனுமதி கிடைத்துள்ளதால், என் கடிதத்தைப் பெறுபவர்கள் எனக்குப் பதில் எழுதவும் அனுமதிக்கப் படுவார்களென்று எதிர்பார்க்கின்றேன். இக் கடிதத்திற்கு உடனே பதில் எழுது. லீலாவதி [ஸ்ரீமதி ஹரிலால் தேசாய்], நந்துபென் [கனூகா], மிருதுளா [சாராபாய்] ஆகிய உன் சகக் கைதிகளுக்கு இன்று நான எழுதவில்லை. ஆகவே அவர்களைப் பற்றிய செய்தியையும் எனக்குத் தெரிவி. வேறு யார் உன்னுடன் இருக்கின்றார்கள்?

மகாதேவ் இன்று வந்துள்ளார். நாங்கள் மூவரும் நன்றாக இருக்கின்றோம்.

# 92

எரவாடா மந்திர்,
22, ஏப்ரல், 1932

பெல்காம் சிறையில் உள்ள யாரிடமிருந்தாவது ஒரு கடிதம் வருமென்று ஆவலுடன் நாங்கள் எதிர்பார்த்துக் கொண்டிருந்தோம். அப்பொழுது ஓரிரண்டு கடிதங்கள் வந்தன...[1]நீ விடுதலையானதும் என்னை இங்கு சந்தி. செவ்வாய்க்கிழமை காலை 11-30 முதல் பிற்பகல் 1 மணிவரை, என்னைச் சந்திப்பதற்கு மிகவும் வசதியான நேரம். இந்த நேரத்தில் வந்தால் எங்களில் இருவரையாவது (காந்திஜியையும், சர்தாரையும்) நீ காணலாம். [இங்கு ஒரு பகுதி சிறை அதிகாரிகளால் நீக்கப்பட்டிருந்தது]. மகாதேவ் தேசாயும் நலமாக இருக்கின்றார்.

உன் எழுத்தைத் திருத்திக் கொள்ளும் முயற்சியில் நீ வெற்றி கண்டுள்ளாயென்று காண்கிறேன். முயன்றால், இதை எவரும் செய்ய முடியும். எல்லாச் சாதனைகளுக்கும் இது பொருந்தும்.

கீதையை மனப்பாடம் செய்யும்போது, மனப்பாடம் செய்யப்பட்ட ஒவ்வொரு சூத்திரத்தின் உட்பொருளையும் நாம் உணர்ந்து, அதன் சரியான உச்சரிப்பையும் கற்றுள்ளோம் என்று பொருள். உன் கீதை ஆசிரியர் யார்? நாம் சந்திக்கும் போதுதான் இதை நீ சொல்வாயென்று எண்ணுகிறேன். ஆனால் அவகாசம் இருந்து சிறை அதிகாரிகளும் அனுமதித்தால் விடுதலையாவதற்கு முன் எனக்குக் கடைசிக் கடிதம் எழுது. உன் உடல்நலனைப் பொறுத்த வரை, நீ அதற்கு அருகதை பெற்றிருந்தால், நாம் சந்திக்கும் போது உனக்கு நற்சான்று வழங்குவேன்.

யசோதாவும் அவள் ஆண் குழந்தையும் எங்களை ஒரு முறை பார்த்து விட்டுப் போனார்கள். பையன் ஒரு நாற்காலியில் ஏறிக் கொண்டான். அந்தச் சாதனையில் மகிழ்ச்சி அடைந்தவன், தன் புதுச் சோடுகளை இங்கு மறந்து விட்டுச் சென்றான். அவனுக்கோ, தயாபாய்க்கோ நல்ல காலம், எங்களில் சிலர் அதைக் கவனித்து அவனுக்கு அனுப்பிவிட்டோம். யசோதாவின் உடல்நலன் அவ்வளவு திருப்தியாயில்லை. பல ஆண்டுகளாகவே அவள் சுகமில்லாமல் இருக்கின்றாள். தயாபாய் ஒவ்வொரு வாரமும் வந்து எங்கள் இருவரையும் சந்திக்கின்றான்.

[ஆச்சாரியா] ஜீவத்ராம் [கிருபளானி] இன்னும் சிறைக்கு வெளியிலிருந்து தொண்டாற்றிக் கொண்டிருக்கின்றார். தேவதாஸ் கோரக்பூரில் [சிறை] இருக்கின்றான். அவன் அங்கு தனியாக, ஆனால் மகிழ்ச்சியுடன் இருக்கின்றான். அவன் நிறையப் படிக்கின்றான். லக்ஷ்மி தன் சகோதரியின் [பாப்பா] உடல்நலனை நன்கு

---

1. இப் பகுதிகள் சிறை அதிகாரிகளால் நீக்கப்பட்டிருந்தன.

கவனித்துத் தேற்றி விட்டாள்; அவள், பாவம், கையாலாகாதவள் என்று இனிச் சொல்ல முடியாது. ராஜாஜி நலமாக உள்ளார். இந்து என்னைப் பார்க்க வரவில்லை. அவள் இப்பொழுது எங்கிருக்கிருள் என்று எனக்குத் தெரியவில்லை; அநேகமாகப் புனுவில் இருக்கக்கூடும். பிரயாக்ஜியில் [அலகாபாத்] கமலா [நேரு] இருக்கின்ருள். கமலாபதி [பண்டித ஜவாஹர்லால் நேரு] உடல் நலன் பரவாயில்லை; ஆனுல் இன்னமும் சிறிது சுரம் இருக்கின்றது.

சர்க்கா பற்றி ஆமதாபாத்தில் எவருக்காவது நான் எழுதுவேன். ஆனுல் இங்கிருந்தும் உனக்கு ஒரு நல்ல சர்க்கா அனுப்ப எங்களால் முடியும்......[1]

பாவுக்கு இன்று தான் என் முதல் கடிதம் எழுதினேன். ஆனுல் அவளிடமிருந்து எனக்குக் கடிதம் வந்து கொண்டிருக்கிறது. அவளும், அவளுடைய கைதித் தோழிகளும் இங்கு நலமாக உள்ளனர். மித்து பென் ஒரு தனி வகுப்பு நடத்துகிருள்.

உன் மூக்குக் கண்ணுடி உடைந்து விட்டதென்ருல், சிறையிலிருக்கும் போதே, அதை மாற்றிக் கொள்ளலாமே. ஆனுல் உன் விடுதலை நாள் நெருங்கி வருவதால், இதற்கு அவசியம் இல்லையெனலாம்.

உன் கடிதம் இன்று இங்கு வந்து சேர்ந்து எனக்குக் கொடுக்கப்பட்டது. இப் பதிலையும் இன்றே எழுதுகிறேன். அநேகமாக அது நாளை தான் அஞ்சலில் சேர்க்கப்படக் கூடும். உனக்கு அது என்று வந்து சேர்கிறது என்பது நம்மிருவர் அதிர்ஷ்டத்தையும் பொறுத்தது.

## 93

### தந்தி[2]

புனு
2, மே, 1932

யசோதா நேற்று இறந்துவிட்டாள். வாழ்ந்தே செத்துக் கொண்டிருந்ததிலிருந்து இது விடுதலை என்று தான் கொள்ள வேண்டும்.

---

1. இப்பகுதி சிறை அதிகாரிகளால் நீக்கப்பட்டிருந்தது.
2. இத் தந்தி சிறை அலுவலகத்தில் வந்து சேர்ந்திருந்தது. ஆனுல் மணிபென்னுக்குக் கொடுக்கப்படவில்லை. யாரோ அவரிடம் அதைப் பற்றிச் சொன்னுர்கள். தந்தியைத் தம்மிடம் கொடுக்கும்வரை, சிறை அறைக்குள் தம்மைப் பூட்ட அனுமதிக்க அவர் மறுத்தார். இறுதியில் சிறைப் பொறுப்பாளர் தந்தியைக்கொண்டு வந்து கொடுத்தார்.

# 94

எரவாடா மந்திர்,
ஜூலை 2, 1932

உன் கடிதம் கிடைத்தது. என் செய்தி உனக்குக் கிடைத்த தென்று எண்ணுகிறேன். பஞ்சுப் பட்டைகளை நீ எனக்கு அனுப்ப எண்ணியதே போதும்; அதனால், அனுப்பிய நற்பெயர் உன்னைச் சேர்ந்ததாகவே கொள்ளலாம். நீ அனுப்பாதது நல்லது தான். எங்களிடம் நிறையப் பஞ்சுப் பட்டைகள் இருக்கின்றன; அதுவும் மகாதேவ் தயாரித்த சிறந்த பட்டைகள். சென்ற இரண்டு மாதங் களாக அவர் தயாரித்துள்ள பட்டைகள் என் தேவைக்கு மிஞ்சி யுள்ளன. சக்கத் தாஸ் தயாரித்துள்ள பஞ்சுப் பட்டைகள் முதல் தரமான பஞ்சிலிருந்து மிகக் கவனமாகத் தயாரிக்கப்பட்டவை யாதலால், அவற்றைத் தான் மகாதேவ் பயன்படுத்துகிறார். மகாதேவ் நூற்பது போன்ற மிக மெல்லிய, நேர்த்தியான நூலை என்னால் மகன் சர்க்காவில் ஒருபோதும் நூற்க முடிவதில்லை. காணிக்கையாக நூற்கும் நூலை நூற்பவரே பயன்படுத்தக் கூடா தென்று நான் எப்பொழுதுமே கருதியதுண்டு; அக் கருத்து தான் சரியானதென்று நான் நம்புகிறேன். காணிக்கையாக நூற்பவர் கவனக் குறைவாக நூற்றால், அவர் எடைபோடப்பட்டு, நிறையில் குறை இருப்பதாகப் பொருள். காணிக்கையாக நூற்கும் நூல் மிகுந்த கவனத்துடன் நூற்கப்படவேண்டும். நூல் அனைத்தையும் கொடுத்து விடவேண்டும். அதன்பின், தனக்குக் கிடைக்கின்ற, நல்ல, கெட்ட அல்லது சுமாரான நூலுடன் அவர் திருப்தி அடைய வேண்டும். இதைச் செய்ய அவருக்கு மனமில்லையானால், தினமும் அரை மணி அல்லது ஒரு மணி நேரம், அவர் நூற்று 160 சுற்று நூலையாவது கொடுத்துவிட வேண்டும்.

கூட்டு வழிபாடு நடத்துவதில் உனக்குள்ள விருப்பம் எனக்கு விளங்குகிறது. கூட்டமாகச் சேர்ந்து வழிபாடு செய்ய முதலில் நீ கற்றுக்கொண்டதே இந்த விருப்பத்திற்குக் காரணம். ஆனால் ஒரு நிமிட நேரமாவது, தனிமையில் ஒருவர் வழிபாடுசெய்ய வேண்டும். நாள் முழுவதும் இதயம் வழிபாட்டில் தொடர்ந்து ஈடு பட்டிருக்க வேண்டும்; தனிமையில் வழிபடப் பழகாவிடில், இது சாத்தியமாகாது. படுத்திருக்கும்போதும், குளிக்கும்போதும், சாப் பிடும்போதும், வேறெந்தச் செயலில் ஈடுபட்டுள்ளபோதும், ஒருவர் தனிமையில் வழிபாடு செய்யமுடியும். ஆகவே அது ஒரு சுமை யாகத் தோன்றாது. அதற்கு மாறாக, மற்றச் சுமைகளை மனத்தி லிருந்து அது நீக்கும். அவ்வாறு நீக்காவிடில், அந்த வழிபாடு போலியேயாகும்.

தயாபாய் பிரச்னை சிக்கலானது. ஆனால் அவன் விவேகமுள்ள இளைஞன்; ஆகவே தானாகவே நிதானமான ஒரு முடிவுக்கு வரு வான். இதில் வேறொருவர் அவனுக்குப் புத்திகூறி வழிகாட்ட இடமில்லை. அவன் மீண்டும் திருமணம் செய்ய விரும்பினால், எவரும் அவன் விருப்பத்தில் குறுக்கிட மாட்டார்கள். அவனுக்கே

அந்த விருப்பம் எழாவிடில், எவரும் அவனுக்கு ஆசைகாட்ட மாட்டார்கள். வெளியார் அவனை வற்புறுத்தித் தொந்தரவு செய்யக் கூடும். ஆனால் அவர்களை எப்படி நடத்த வேண்டுமென்பது உனக்குத்தெரிந்தது போலவே அவனுக்கும் தெரியும். நான் இப்பொழுது எவரையும் சந்திப்பதை நிறுத்திக்கொள்ள வேண்டியதாயிற்று. இது போன்ற ஒரு நிகழ்ச்சி ஏற்படும்போது, எவரையும் சந்திக்க இயலாத நிலை எனக்கு இன்னும் அதிக வருத்தத்தை உண்டாக்குகிறது. ஆனால் இது போன்ற இடைஞ்சல்களைச் சகித்துக்கொள்வது நம் கடமையாகும்.

ஒரு நிலையில், இடது கை முட்டி வலிக்கின்றது. ஆகவே சென்ற ஒரு மாதமாகத் துணிகள் வேலைக்காரர் ஒருவரால் துவைக்கப்படுகின்றன. கைதிகளுக்குத் தரப்படுவது போன்றவை என் தட்டுக்கள். பளபளப்பாக அவற்றை வைத்துக்கொள்ள என்னால் இயலவில்லை. ஆனால் அவை சுத்தமாக இருக்கின்றன என்பது மட்டும் நிச்சயம்.

## 95

எரவாடா மந்திர்,
*26, ஆகஸ்ட், 1932*

நீ சிறைக்கு அனுப்பப்பட்ட நாள் முதற்கொண்டு எவருக்கும் நீ கடிதம் எழுதாத காரணமென்ன? சிறைக்குக் கொண்டுவரப் பட்டவுடன் ஒரு கடிதம் எழுத, கைதிக்கு உரிமை நிச்சயமாக இருக்கிறது. இன்னும் எழுதாவிடில், உடனே ஒரு கடிதம் எழுது. இம்முறை சிறையிலிருந்து வெளிவரும் போதாவது, உடல் நலனை தேற்றிக் கொண்டு வா. என்ன உணவு அவசியமோ, அதைக் கேட்கவோ, ஏற்பாடு செய்யவோ, தயங்காதே.

சிறையில் ஒழுங்காகப் பாடம் படிக்க ஏற்பாடு செய்துகொள். அப்பொழுதுதான் நீ இப்பொழுது பலவீனமாக இருக்கும் பாடங்களில் தேர்ச்சி பெற முடியும். எடுத்துக் காட்டாகக் குஜராத்தி இலக்கணத்தைப் பயின்று, மொழியிலும் நல்ல தேர்ச்சிபெறு. அது போலவே, கமலாதேவி [சட்டோபாத்யாயா] உதவியுடன் ஓரளவு படித்துள்ள ஆங்கிலத்திலும் நல்ல தேர்ச்சி பெறு. லீலாவதி பென் [முன்ஷி] சமஸ்கிருதத்தில் உனக்கு உதவக்கூடும். மராத்தியிலும் நீ தேர்ச்சி பெற வேண்டும். பெண்களுக்கே உரிய தனிப் பிரச்னைகள் பற்றியும் நீ தெரிந்து கொள்ள வேண்டும். ஆனால் இதெல்லாம் ஒரு யோசனைதான். இவற்றில் ஏதாவது ஒன்று உனக்குப் பிடிக்கவில்லை யென்றால், அதை விட்டுவிட்டு உனக்குப் பிடித்த பாடத்தைத் தேர்ந்தெடுத்துக் கொள். இந்த அரிய வாய்ப்பை நீ பயன்படுத்திக் கொண்டு, உன் அறிவைப் பெருக்க வேண்டுமென்று தான் நான் விரும்புகிறேன். விதிகள் அனுமதித்தால் நூற்பு, வழிபாடு, நாட்குறிப்பு எழுதுதல் ஆகியவை தவறக்கூடாது.

நாங்கள் மூவரும் நலமாக இருக்கின்றோம். அப்பா சமஸ்கிருதத்தை ஆர்வத்துடன் பயின்று வருகிறார். அவர் ஆர்வம், இளைஞரையும் வெட்கமடையச்செய்யும். 40-ம் எண்ணிக்கை நூல்வரை நூற்கின்றார்; கடித மேலுறைகளையும் அவர் தயாரிக்கின்றார். மகாதேவ் 80-ம் எண்ணிக்கை நூல்வரை நூற்கிறார்; அது தவிர பிரெஞ்சு உருது மொழிகளைப் பயில்கின்றார். நான் மகன் சர்க்காவில் நூற்கிறேன்; ஆனால் மெதுவாகத்தான். கடிதம் எழுதுவதிலேயே அதிக நேரம் செலவாகிவிடுவதால், படிப்பிலும் நான் மந்தமாகத்தான் இருக்கின்றேன்.........[இப்பகுதி சிறை அதிகாரியால் வெட்டப்பட்டது.]

## 96

எரவாடா மந்திர்,<br>*21*, செப்டம்பர், *1932*

உனக்கு எவரும் ஆறுதல் சொல்லத் தேவையில்லை. நீ ஒரு துளி கண்ணீர் சிந்தினாலும்[1] நான் உன்னுடன் சண்டை இடுவேன். எனக்கு மிகச் சிறப்பான பேறு கிட்டியுள்ளது. அது குறித்து மகிழ்ச்சி அடைய வேண்டுமே ஒழிய, வருத்தம் கொள்வதற்கு இடமில்லை. உண்ணு நோன்பு, உனக்கும் மற்றவர்களுக்கும் ஏற்றதல்ல. நீ இப்போது மேற்கொண்டுள்ள பொறுப்புகளை மட்டும் நீ ஊக்கத்துடன் நிறைவேற்ற வேண்டும். நீ எப்பொழுது விரும்பினாலும் எனக்கு நீ எழுதலாமென்று உனக்கு அனுமதி பெற்றுள்ளேன். ஆகவே தவறாமல் எழுது. இக்கடிதம் அதிகத் தாமதமின்றி உன்னிடம் சேர்ப்பிக்கப்படுமென்று எதிர்பார்க்கின்றேன்.

## 97

எரவாடா மந்திர்,<br>*8*, அக்டோபர், *1932*

உன் நீண்ட கடிதம் கிடைத்தது. கடிதம் இன்னும் நீண்டதாக இருந்தால் நன்றாக இருக்குமே என்றுதான் நான் ஏங்கினேன். உண்ணு நோன்பு கடந்த காலத்துடன் கலந்துவிட்ட நிகழ்ச்சியாய் ஆகிவிட்டது. ஆண்டவன் ஆணையின்பேரில் அது மேற்கொள்ளப்பட்டது. ஆகவே அதற்கு வெற்றி கிட்டியது. இழந்த பலத்தை நான் மீண்டும் அனேகமாகப் பெற்றுவிட்டேன். ஒவ்வொரு நாளும், நான் இரண்டு பவுண்டு பாலும், ஆரஞ்சு, மாதுளை, திராட்சைப் பழங்களிலிருந்து பசுமையான சாறு அதிகமும், சுரைக்காய் அல்

---

1. ஹரிஜனங்களுக்குத் தனித் தொகுதிகள் ஏற்படுத்த பிரிட்டிஷ் அரசாங்கம் செய்த முடிவைக் கண்டிக்கும் வகையில் காந்திஜி உண்ணு நோன்பு மேற்கொண்டிருந்தார். அதற்காக வருந்தக் கூடாதென்று காந்திஜி கூறினர்.

லது தக்காளி ரசம் ஆகியவற்றையும் சாப்பிடுகின்றேன்......[இப் பகுதி சிறை அதிகாரியால் நீக்கப்பட்டிருந்தது.] எங்கள் வெளி யிடத்தில் உலாவுகின்றேன். 45-ம் எண்ணிக்கை நூலில் 200 சுற்று கள் நூற்கின்றேன். பல கடிதங்கள் வேறு எழுதுகின்றேன். பகலில் பா என்னுடன் இருக்க அனுமதிக்கப்படுகின்ருள். தேவதாஸ் என் ஊைப் பார்க்க அனுமதிக்கப்படுகின்ருன். அவன் இப்பொழுது நன்ருக இருக்கின்ருன்.

உணவைப்பற்றி நீ கனவு கண்டது, உணவு செரிக்கவில்லே என்பதன் அறிகுறி. ஒருவர் பசியாயிருந்தாலோ, அளவுக்கு மீறி சாப்பிட்டு விட்டாலோ, இத்தகைய கனவுகள் சாதாரணமாகத் தோன்றுவதுண்டு. உண்மைக் காரணத்தைக் கண்டுபிடித்து, உரிய நடவடிக்கை எடுத்து, அதன் பின்பு, கவலேப்படுவதை நிறுத் திக்கொள்ளவேண்டும். எல்லா விதிகளேயும் ஒழுங்காக ஒருவர் மேற்கொண்டால், நாளடைவில் சொப்பனத்தால் கலேயாத நல்ல உறக்கம் வரும். நம்மிடம் நீண்ட நாட்களாக ஒட்டிக்கொண்டிருந்த தீங்குகள் நிஜனத்த மாத்திரத்தில் நீங்கி விடுமென்று நாம் எதிர் பார்க்க முடியாது. எனினும் அதனுல் நாம் மனம் தளரக்கூடாது; சோர்வெனும் சகதியில் சிக்கக்கூடாது; நம் முயற்சியின் வேகம் குறையவும் இடம் கொடுக்கக் கூடாது; இறுதி வெற்றி குறித்து ஐயமோ, கவலேயோ கொள்ளவும் கூடாது. இதுதான் கீதை போதிக்கும் 'அஞசக்தி'.

வெவ்வேறு உடல்நிலேயும் உள அமைப்பும் கொண்டவர்க ளிடம், உண்ணு நோன்பு வெவ்வேறு விளேவுகளே உண்டாக்கும். உண்ணு நோன்புக்குப் பழக்கப்படாத ஒருவர், இருபத்து நான்கு மணி நேர உண்ணு நோன்பு மேற்கொண்டால்கூட, அவருக்குப் பல தொந்தரவுகள் ஏற்படக்கூடும். ஆனல் அவ்வப்போது உண்ணு நோன்பு இருப்பவருக்கு, இது குழந்தை விளேயாட்டாக இருக்கும். அது போலவே ஒருவர் உடலில் கொழுப்புச் சத்து அதிகம் இல்லா விடில், அவரால் நீண்ட நாள் உண்ணு நோன்பு மேற்கொள்ள முடி யாது. ஆனல் தடியாக இருக்கும் ஒருவர், பொறுமையாக இருந் தால் நீண்டநாட்கள் உணணுவிரதம் மேற்கொள்ள இயலும்; அதனுல் அவர் உடலுக்கு நன்மை ஏற்படவும் கூடும்.

அப்பாவும் மகாதேவும் நலமாக இருக்கின்றனர். இது போன்ற தனிமையை நாங்கள் எப்பொழுதும் அனுபவித்ததில்லே; அதனுல் எங்களுக்கு அதிக நன்மை ஏற்பட்டுள்ளது.

முன்ஷியிடமிருந்து அருமையான ஒரு கடிதம் வந்ததென்று லீலாவதியிடம் கூறு. அவளால் முடிந்தால், எனக்கு எழுதச் சொல். நந்து பென்னின் [கனுகா] கடிதத்தை இத்துடன் அனுப்பி யுள்ளேன்.

## 98

*தந்தி:*

புனா,
*28, அக்டோபர், 1932*

நான்கு மணிநேரம் நோய்வாய்ப்பட்ட பின், புதன்கிழமை பிற்பகல் கரம்சாதில் அமைதியாகப் பாட்டி மரணமடைந்தார். விவரங்களுடன் வெள்ளிக்கிழமை அனுப்பிய கடிதம் கிடைத்திருக்கும். நாங்கள் அனைவரும் நலம். அன்பு.

## 99

*தந்தி :*

புனா,
*31, அக்டோபர், 1932*

பாட்டியின் மரணம் குறித்து எவரும் பொறுமைப் படுவார். அதற்காக நீ வருந்தவில்லையென்று எண்ணுகிறேன். நீண்ட நாட்களாக உன்னிடமிருந்து கடிதமில்லை. அன்பு.

## 100

*தந்தி:*

புனா,
*19, நவம்பர். 1932*

சென்ற ஏழு நாட்களாகத் தயாபாய் சுரத்தால் வருந்துகிறான். டைபாய்டு சுரமெனக் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது. வேறு சிக்கல் எதுவுமில்லை. தனித் தாதிகள் கவனித்து வருகின்றனர். கவலைக்கு இடமில்லை. தினமும் தகவல் அனுப்ப முயல்வேன்.

## 101

புனா,
*20, நவம்பர், 1932*

தயாபாய் சுரம் பற்றி அனுப்பிய தந்தி கிடைத்திருக்கும் என்று எதிர்பார்க்கின்றேன். ஒவ்வொரு நாளும் உனக்குச் செய்தி அனுப்பவும், தயாபாய்க்கோ, அவரைப் பற்றியோ நீ விரும்பும் போது எழுதவும் அனுமதி பெறப்பட்டுள்ளது. உன் கடிதங்களை நான் தயாபாயிடம் சேர்ப்பிப்பேன். நானும் உனக்கு ஒவ்வொரு நாளும்

கடிதம் எழுதுவேன், டாக்டர் மதன் கடிதத்தை இத்துடன் அனுப்புகிறேன். இன்று பாய் கரம்சந்திடமிருந்தும் கடிதம் வந்துள்ளது. பம்பாயிலிருந்து இது வரை நல்ல செய்தியே வந்துள்ளது. இன்று சுரத்தின் பதினன்காவது நாள். சுரம் 100° லிருந்து 103° வரையுள்ளது. ஒரு சமயம் 99.5 ஆகக் கூடக் குறைந்தது. நுரையீரல்கள் தெளிவாக இருக்கின்றன. பழச்சாறு, பார்லி தண்ணீர், சில சமயங்களில் தெளிவான மோர், இவை தான் தயாபாயின் உணவு. அவனைக் கவனிப்பதற்கென்றே தனியாகத் தாதியர் அமர்த்தப்பட்டுள்ளனர். அவசியமான எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டுள்ளன. ஆகவே கவலை கொள்வதற்கு இடமில்லை.

## 102

எரவாடா மந்திர்,
22, நவம்பர், 1932

உனக்குத் தந்தியும் அனுப்பியுள்ளேன்; கடிதமும் எழுதியுள்ளேன். நீ தினமும் எனக்கு ஒரு கடிதம் எழுதலாம்; அது தயாபாயிடம் சேர்ப்பிக்கப்படும். இன்றும் அவன் உடல் நிலை பற்றி நல்ல செய்தியே வந்துள்ளது. தேவதாஸ் அவனைப் பார்க்கச் சென்றுள்ளான். தயாபாயைப் பார்ப்பவர் எவரும் அவருக்கு விஷ சுரம் என்று சொல்ல மாட்டார்களென்று தேவதாஸ் எழுதுகிறுன்; அவ்வளவு துணிவும் உடல் உறுதியும் தயாபாய்க்கு உள்ளன.

## 103

எரவாடா மந்திர்,
25, நவம்பர், 1932

உன் நீண்ட கடிதங்கள் கிடைத்தன. தயாபாய் சுரம் பற்றி உனக்குத் தகவல் அனுப்பிய பின் நீ எழுதியுள்ள முதல் கடிதங்கள் இவை. நீ அவசியமில்லாமல் கவலைப்படுகின்றுய். நீயும் அப்பாவும் சிறையில் இருக்கும் நேரத்தில், உன் சகோதரன் பற்றிச் செய்யவேண்டியது எதையும் செய்ய வெளியில் உள்ளவர்கள் தவற மாட்டார்கள் என்பதை நீ அறிய வேண்டும். விஷ சுரம் என்று கண்டுபிடிக்கப்பட்டவுடன், பகலிலும் இரவிலும் நோயாளியைக் கவனிக்கத் தனியாகத் தாதிகள் அமர்த்தவும், ஒவ்வொரு நாளும் அவருக்குச் சிகிச்சை செய்ய மருத்துவர்களை ஏற்பாடு செய்யவும், வால்சந்த்[ஹிராசந்த்], கரம்சந்திடம் கூறினர். ஒவ்வொரு நாளும் ஆகும் முப்பது, நாற்பது ரூபாய்ச் செலவை அவரே ஏற்றுக் கொள்கிறர். ஆகவே மருத்துவ மனையில் கிடைப்பதைவிடச் சிறந்த சிகிச்சை அவருக்கு வீட்டிலேயே கிடைத்து வருகிறது. கரம்சந்த், சோட்டுபாய் [சர்தாரின் ஒன்றுவிட்ட தம்பி,] ஆகியோர் அவனைப் பராமரித்து வருகின்றனர். அவனைக் கவனிக்க

அமர்த்தப்பட்டுள்ள இரு தாதியர் மிகவும் பரிவானவர்; அவர்களை தயாபாய்க்குப் பெரிதும் பிடித்திருக்கிறது. ஜம்னாதாஸ் பக்ஷியும் மற்ற நண்பர்களும் அங்கிருக்கின்றனர். நீ பம்பாயில் இந்த நேரத்தில் இருக்க முடியாதது குறித்து வருந்துவது இயல்பே. ஆனால் தம் அன்புக்குரியவர்களை ஆண்டவன் கடுமையான சோதனைக்கு ஆளாக்குவான். கரம்சந்திடமிருந்தும் மற்றவர்களிடமிருந்தும் அன்றாட அறிக்கை எங்களுக்கு வருகிறது. சுரம் தொடங்கி, இது மூன்றாவது வாரம். இப்போது 102°க்கு மேல் சுரம் ஏறுவதில்லை; நேற்று சுரம் இல்லை. அடுத்த திங்கட்கிழமையோடு சுரம் அடியோடு நீங்கி விடுமென்று மருத்துவர்கள் எதிர்பார்க்கின்றனர். மருத்துவர்கள் மிகுந்த அன்புடன் தயாபாயைப் பராமரிக்கின்றார்கள் என்பது டாக்டர் மதன் கடிதங்களிலிருந்து உனக்குத் தெரிய வரும். விஷ சுரம் வந்தால், தொடக்கத்தில் வயிற்றுப்போக்கு ஏற்படுவது வழக்கம். ஆனால் அத்தகைய கஷ்டம் தயாபாய்க்கு ஏற்படவில்லை. ஆகவே கவலைப்படுவதற்கு இடமேயில்லை. நீ பக்தியுடன் உன் கடமையைச் செய்து, தயாபாய் விரைவில் குணமடைய வேண்டுமென்று வழிபட வேண்டும். [90வது வயதில்] பாட்டி இறந்தது குறித்துத் துயரப்பட வேண்டியதில்லை. இத்தகைய மரணம் கிட்டும் பேறு நம்மில் சிலருக்குத்தான் கிடைக்கும். நம் உற்றாரையும் பிரியத்துக்கு உரியவர்களையும் கடைசி நாட்களில் பணிவிடை செய்து பராமரிக்கும் வாய்ப்பு நமக்குத் தவறிவிட்டதே என்று வருந்தினால், வருங்காலத்தில் இனி எவருக்கும் அவ்வாறு பணிவிடை செய்யும் வாய்ப்பைத் தவறவிடக் கூடாதென்று நாம் உறுதி செய்து கொண்டு, அதில் ஆறுதல் காண வேண்டும்.

நாங்கள் அனைவரும் நலமாக இருக்கின்றோம். உறங்கும் நேரத்தைத் தவிர, மற்ற நேரம் அனைத்தையும் ஹரிஜனத் தொண்டில் ஈடுபடுத்தி வருகின்றோம்.

## 104

எரவாடா மந்திர்,
26, நவம்பர், 1932

இன்று தயாபாய் உடல்நிலை பற்றி வந்துள்ள செய்தி, முன்னிலும் மிகத் திருப்திகரமாக உள்ளது. 100·5° க்கு மேல் சுரம் ஏறவில்லை; 98·5° வரை கூடக் குறைந்தது. ஆகவே சுரம் நீங்கிக் கொண்டிருக்கிறது என்பது தெளிவாகத் தெரிகிறது. நாளை, அல்லது மறுநாள் இயல்பான நிலை வந்து, அதற்குப் பின் சுரம் ஏறாது என்று மருத்துவர்கள் எதிர்பார்க்கின்றனர். தயாபாய் இன்னும் பலவீனமாகவே இருக்கின்றான்; ஆனால் இந்தப் பலவீன நிலை எதிர்பார்க்க வேண்டியதே. அதில் கவலை கொள்ள இடமில்லை.

ஆகவே இனி நீ நிலைமையை விசாரிக்கத் தந்தி அனுப்ப வேண்டியதில்லை. நானும் உனக்குத் தந்தி அனுப்ப மாட்டேன்.

உனக்குக் கொஞ்சம் பணம் அனுப்பச் சொல்லி, அப்பா கரம் சந்துக்கு நேற்று தந்தி அனுப்பினர். நாங்கள் அனைவரும் நலமாக உள்ளோம். உன் கடிதத்தைத் தயாபாய்க்கு அனுப்பியுள்ளேன். உன் உடல் நிலை பற்றி நீ ஏன் எதுவும் எழுதவில்லை?

## 105

எரவாடா மந்திர்,
*27, நவம்பர், 1932.*

இன்று வந்த செய்தி நேற்றையச் செய்தியைக் காட்டிலும் கூட மிகவும் திருப்திகரமாக உள்ளது. *97·5°* வரை சுரம் வந்தது; *101·5°*க்கு மேல் ஏறவில்லை. தயாபாய் நன்கு தூங்குகிறுன். நீ பக்தியுடன் உன் கடமையைச் செய்.

## 106

எரவாடா மந்திர்,
*30, நவம்பர், 1932*

இன்று வந்த டாக்டர் கனுகாவின் கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். தயாபாய் பற்றிக் கவலைக்கு இடமே இல்லை என்பதை அதிலிருந்து நீ காண்பாய். இன்னும் சில நாட்களுக்குச் சுரம் தொடரலாம்; ஆனல் அதைப் பொருட்படுத்த வேண்டிய தில்லை.

## 107

எரவாடா மந்திர்,
*6, டிசம்பர், 1932.*

சனிக்கிழமையன்று தயாபாய் சுரம் நீங்கி விடுமென்று எதிர் பார்க்கப்பட்டது; ஆனல் அது ஈடேறவில்லை. இப்பொழுது உடல் வெப்பம் இயல்பாகத் தான் உள்ளது; ஆனல், *99°*, *100°* வரை உயர்கிறது. ஆகவே சுரம் இன்னும் ஒரு வாரம் தொடரக்கூடும். ஆனல் மருத்துவர்கள் கவலையை விட்டுள்ளனர். ஊட்ட மருந்தாக சானடோஜன் சிபார்சு செய்துள்ளனர்; ஒன்றரைப் பவுண்டு பாலும் சாப்பிடச் சொல்லியுள்ளனர்; அது நன்ருகச் செரிக்கின்றது. அம்பாலால் [சாராபாய்], தக்கர் [பாபா], பா ஆகியோர் தயா பாயைப் பார்க்கச் சென்றனர். தயாபாய் உற்சாகமாக இருப்

பதாக அவர்கள் அனைவரும் கூறுகின்றனர். அவனைப் பார்ப்பவர் எவரும், அவன் விஷ சுரத்தால் நான்கு வாரங்களாக வருந்துகிறான் என்று சொல்லமாட்டார்கள். ஆகவே கவலை கொள்ளாதே.

என் உண்ணா நோன்பு,* நடந்து முடிந்து சிறு வரலாற்றுத் துணுக்காகி விட்டது. 'டைம்ஸ் ஆப் இந்தியா' பத்திரிகையில் அதைப் பற்றி நீ படித்தறிந்தாய் என்று எண்ணுகிறேன். இத் தகைய உண்ணா நோன்புகள் என் வாழ்வின் இன்றியமையாத அம்சங்களாகி விட்டன. ஆகவே அவை சாதாரணமான நிகழ்ச்சிகள் என்று கருதி, உன் வழக்கமான வேலைகளிலிருந்து கவனத்தைத் திருப்பக் கூடாது. நீ நலமாக இருக்கின்றாயென்று நம்புகிறேன்.

## 108

எரவாடா மந்திர்,
*9*, டிசம்பர், *1932*

பம்பாயிலிருந்து உனக்கு அன்றாடம் செய்திகள் ஒழுங்காக வருகின்றன என்று எண்ணுகிறேன். ஆகவே நான் ஒவ்வொரு நாளும் உனக்கு எழுதவில்லை. தயாபாய் தேறி வருகிறான் என்பதில் ஐயமில்லை. ஒவ்வொரு நாளும் இரண்டுமணி நேரத்துக்குக் காய்ச்சல் சற்று ஏறுகிறது. ஆனால் அவன் தன் பலத்தை விரைவில் மீட்டு வருகின்றான். தேவதாஸ் இன்று இங்கு வந்தான். தான் பம்பாயில் தயாபாயைப் பார்த்ததாகவும், அவன் உடல்நிலை நன்றாக இருந்ததாகவும் கூறினான். பாலுடன் காய்கறிச் சாறும் அவனுக்குக் கொடுக்கப்படுகிறது; அவன் மிகவும் உற்சாகமாக இருக்கின்றான்.

நடராசனும் அதே தகவலைத்தான் தருகின்றார். ஆகவே கவலையை அடியோடு விட்டொழி. எனக்கு இன்னும் அதிகம் அவகாசம் கிடைக்கும்போது, உன் நீண்ட கடிதத்திற்குப் பதில் எழுதுவேன்.

## 109

எரவாடா மந்திர்,
*3*, ஜனவரி, *1933*

ஒரு நிமிட நேர அவகாசம்கூட எனக்கில்லை. ஒவ்வொரு நாளும் நாம் எழுதுவதை இப்பொழுது நிறுத்திக் கொள்ள வேண்டுமென்று எண்ணுகிறேன். தயாபாய் நலமாக இருக்கின்றான்.

---

* சிறையில் அப்பாசாகிப் பட்டவர்தன் தோட்டி வேலை செய்ய விரும்பினார். அவர் அந்தணராதலால், அதற்குச் சிறை அதிகாரிகள் அனுமதி மறுத்ததைக் கண்டித்து பாபு உண்ணா நோன்பு மேற்கொண்டார்.

## 110

[இக்கடிதம் மணிபென்னுக்கு எழுதப்பட்டதல்ல; பெல்காமில் அவர் சக கைதி ஒருவருக்கு எழுதப்பட்டது.]

ஒழுங்காகவும் சுத்தமாகவும் செயல்படும் பண்பு மணிபென் தன் தந்தையிடமிருந்து பெற்ற ஆஸ்தி என்பதை இங்கு தான் நான் கண்டு பிடித்தேன். சபர்மதியில் அவள் அறையில் தங்கிய மோதிலால்ஜி அந்த ஒழுங்கைக் கண்டு வியந்தார். அவ்வளவு ஒழுங்கு ஆனந்த பவனத்தில் கூட காணப்படுவதில்லை என்று அவர் கூறினர். இது நீ மணிபென்னிடமிருந்து கற்றுக் கொள்ளக் கூடிய நற்பழக்கம். எவருக்கும் பணிவிடை செய்ய அவள் விரும்பினல், அச்சேவையில் உறுதியுடன் ஈடுபட அவளுக்குள்ள ஆற்றல் வியக்கத்தக்கது. துணிவில் அவளுடன் உங்களில் சிலர் போட்டியிடலாம்; ஆகவே அதைப்பற்றி நான் ஒன்றும் சொல்லவில்லை.

## 111

எரவாடா மந்திர்,
4, ஏப்ரல், *1933*

எங்கள் கடிதங்கள் உனக்குக் கிடைக்கவில்லை என்ற புகார் எனக்கு விளங்கவில்லை. ஒழுங்காக எழுதப்படும் கடிதங்கள் ஏன் உரிய இடத்திற்குப் போய்ச் சேரவில்லை என்பதை இப்பொழுது நான் விசாரித்துக் கொண்டிருக்கின்றேன். அப்பா உனக்குக் கடிதம் எழுதிய போது, நான் உனக்குத் தனியாக ஒரு கடிதம் எழுதவில்லை. அப்பொழுது கூட அக்கடிதத்தில் நான் பொதுவாக ஓரிரு வரிகள் சேர்த்து எழுதித் தான் அனுப்புவதுண்டு. எங்கள் இருவரில் ஒருவரிடமிருந்தும் கடிதம் வராவிடில் நீ குறைப்படுவதற்கும், கோபப்படுவதற்கும் கூட நியாயமுண்டு. ஆனல் நாங்கள் எழுதாமல் இருக்க மாட்டோம் என்பது உனக்கு உறுதியாகத் தெரிந்திருக்க வேண்டும். ஆகவே உனக்கு ஒரு கடிதம் வந்து சேராவிடினும், அது எங்கோ தற்செயலாக ஏற்பட்ட தவறு என்று நீ அறிய வேண்டும்.

நாங்கள் அனைவரும் நலமாக இருக்கின்றோம். அப்பா, தம் சமஸ்கிருதப் பயிற்சியை மீண்டும் தொடங்கி ஓரளவு வெற்றியும் கண்டுள்ளார். தாம் முன்பு படித்த பாடத்தை மீண்டும் மீண்டும் நினைவுபடுத்திக்கொள்ள அவர் எப்பொழுதும் முயல்கிறார். அநேகமாக ஒவ்வொரு வாரமும் தயாபாய் பேட்டிகாண வருகிறான்.

என் முழங்கை முன்போல்தான் இருக்கின்றது; ஆனல் அது என் வேலையில் குறுக்கிடவில்லை. மகாதேவ் உடல்நலன் மிக நன்ருக உள்ளது. சகன்லால் ஜோஷியும் சுகமாக இருக்கின்ருர். நல்ல பஞ்சுப் பட்டைகள் உனக்குத் தேவைப்பட்டால், நாங்கள் சிலவற்றை உனக்கு அனுப்ப முடியும்; எங்களிடம் ஏராளமாக

உள்ளன. மிருதுளா, கமலாதேவி, லீலாவதி ஆகியோர் உன்னைப் பற்றிய செய்தி தந்தனர். நீ நடந்து கொள்ளும் விதம் அவர்கள் அனைவருடைய பாராட்டுதலையும் கவர்ந்துள்ளது. பா, மீராபென் இருவரும் நன்றாக உள்ளனர். மீராபென் எனக்கு ஒவ்வொரு வாரமும் எழுதுகின்றாள். காகா சாகிப் இப்போது இங்கிருக்கின்றார்; 'ஹரிஜன்' வேலையில் எனக்கு உதவி செய்கிறார். இப்பொழுது ஆங்கிலத்தில் தவிர, குஜராத்தி, வங்காளி, இந்தி, ஆகிய மொழிகளிலும் 'ஹரிஜன்' வெளியிடப்படுகிறது:

மகாதேவ் தேசாயின் பின்குறிப்பு :

நரர்கள் உலகில் அடுத்த மாதம் 4ந் தேதி புகுவேன். இதுவரை நான் தேடி வைத்திருந்த புண்ணியம் அனைத்தும் அநேகமாகக் காலியாகி விட்டது.

## 112

எரவாடா மந்திர்,
*26, ஏப்ரல், 1933*

உன் கடிதம் இரண்டு மூன்று நாட்களுக்கு முன் தான் வந்தது. உன் கடிதங்கள் எவ்வளவு நீண்டவையாய் இருந்தாலும் இன்னும் நீண்டவையாய் இருக்கக் கூடாதா என்று தான் எங்களுக்குத் தோன்றும். ஆனால் நானோ, அப்பாவோ, அவ்வளவு நீண்ட கடிதங்கள் எழுதவேண்டுமென்று நீ எதிர்பார்க்கக் கூடாது. பெல்காமில் உங்களுக்குப் பழக்கப்படாத பல வசதிகளையும், சலுகைகளையும் கூட நாங்கள் இங்கு அனுபவித்து வருகின்றோம். இந்த வசதிகளை நாம் பொதுக் காரியங்களுக்குத் தவிர மற்றவற்றிற்குப் பயன்படுத்தினால், நாம் நாட்டின் உண்மையான ஊழியர்களென்ற, அல்லது நல்ல குழந்தைகளின் பெற்றோர்களென்ற அருகதையை இழந்துவிடுவோம். நூற்றுக்கணக்கான குழந்தைகளின் அப்பா என்று பெருமையுடன் சொல்லிக் கொள்பவர், தம் நேரத்தை வீணாக்கத் துணிய இயலாது. எங்கள் நல்ல பேற்றினைக் கண்டு நீ எவ்வளவு வேண்டுமானாலும் பொறாமைப் படலாம்.

அப்பாவின் கடமை என்ன? தம் குழந்தைகள் ஒவ்வொன்றுக்கும் தேவைப்படுவதை அவர் கொடுக்கவேண்டுமா? அல்லது எல்லாக் குழந்தைகளுக்கும் சமமான பங்கைத் தர வேண்டுமா? அவ்வாறு செய்தால், சில குழந்தைகளின் நற்சான்றிதழை அவர் பெறலாம். ஆனால் மற்றக் குழந்தைகளைவிட அதிகம் தேவைப் படும் ஒரு குழந்தையைச் சாகடிப்பதற்கு அவர் பொறுப்பேற்க வேண்டியிருக்கும். நோய்வாய்ப்பட்டிருக்கும் ஒரு குழந்தைக்குக் கம்பு ரொட்டியும், வெண்ணெய் இல்லாத மோரும் தர வேண்டியிருக்கும். கோதுமை ரொட்டியின் மேல் எப்பொழுதும் வெண்ணெய் அல்லது தேன் தடவிச் சாப்பிட்டுப் பழக்கப்பட்டுள்ள ஒரு குழந்தைக்கு அது ஏற்ற உணவாக இருக்குமா? ஒரு குழந்தையின் நலனுக்கு அவசியமானது அனைத்தையும் அளிப்பது

அப்பாவின் கடமையாகும். அதன் நலனுக்கு முரணின்றி, அக்குழந்தைக்கு அவசியத்தைவிட அதிகம் செய்வது அப்பாவின் கடமையாகாது. ஆனால் அவ்வாறு செய்ய அவருக்கு உரிமை உண்டு. இத்தனை ஆண்டுகளுக்குப்பின் இது அனைத்தையும் உனக்கு விளக்கிச் சொல்லவேண்டிய தேவையில்லை. ஆனால் எப்படியோ நீண்டதொரு கடிதம் உனக்கு எழுதவேண்டும் அல்லவா?

சில நாட்களாக எங்கள் கடிதம் உனக்கு வந்து சேராதபோது, எங்கள் இருவரில் ஒருவராவது உனக்கு எழுதியிருப்போம் என்ற நம்பிக்கை உனக்கு இருந்திருக்கவேண்டும். முடிந்தால், இருவரும் எழுத வேண்டும் என்பதை ஒத்துக் கொள்கிறேன். ஆனால் எழுதும் கடிதங்கள் போய்ச் சேருகின்றன என்ற நிச்சயம் இல்லாதபோது, எழுத ஆர்வம் இராது. ஒழுங்காக ஒரு கடிதம் உனக்கு அனுப்பப்பட்டுவருகிறது; அதாகிலும் உனக்கு வந்து சேருமென்று எதிர்பார்த்துத்தான் அனுப்புகின்றோம். உன் கடிதங்களுக்கு விரிவாகப் பதில் அனுப்பும் பொறுப்பை அப்பா ஏற்றுக் கொண்டுள்ளார். பதில் எழுத எனக்கும் விருப்பம் தான்; ஆனால் அந்த ஆசையை அடக்கிக் கொண்டேன்.

ஆனந்திக்கு [புராதன் புச்] அறுவை சிகிச்சை வெற்றிகரமாய் நடந்துள்ளது. அவர் சபர்மதி சென்றுள்ளார்.

காலை பதினோரு மணிக்கு, நாங்கள் வசிக்கும் சிறை அறைக்கு எங்களை அழைத்துச் செல்ல ஆயத்தமாகக் காவல்காரர் என் முன் காத்து நிற்கிறார். நான் குளித்துச் சாப்பிட்டபின், 12 மணிக்கு என்னை ஹரிஜன் சேவை அறைக்கு மீண்டும் அழைத்து வருவார்கள்.

[இக் கடிதத்தில் எஞ்சிய பகுதி சர்தார் எழுதியது.]

உன் புத்தகப் பட்டியலைத் தயாபாய்க்கு அனுப்புகிறேன். அவன் நலமாக இருக்கின்றான்; சென்றவாரம் இங்கு வந்திருந்தான். பேரப் பிள்ளையும் நன்றாக இருக்கின்றான். அவன் தேர்வில் வெற்றி பெற்றுள்ளான்; முதல் வகுப்பில் சேர்க்கப்பட்டுள்ளான். இப்பொழுது அவன் படிப்பில் ஓரளவு கவனம் செலுத்தி வருகிறான். [டாக்டர் கனுகாவின் மகன்] ஜிது எம். பி. பி. எஸ். பட்டத்திற்கான முதல் பரீட்சையில் தேர்வு பெற்றுள்ளான். சரளாதேவி [சாராபாய்]யிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அவர்கள் அனைவரும் முஸ்ஸூரிக்குச் சென்றிருப்பார்கள். இந்துமதியும் [சிமன்லால்] அவள் தாயாரும் அவர்களுடன் செல்வதாயிருந்தது. நிர்மலாபென் பின்னர் சென்று அவர்களுடன் சேர்ந்து கொள்வார். ஓரிரு நாட்களுக்கு முன் பாபுவைப் பார்க்கக் கமலாதேவி இங்கு வந்திருந்தார். தேவதாஸ் நாளை இங்கு வருவார். மதுரதாஸ் [திரிகம்ஜி] நேற்று வந்தார். ஜம்னாலால்ஜிக்குச் சுகமில்லை; மருத்துவர் ஆலோசனையின் பேரில் இரண்டு மாதங்களுக்கு ஜானகி தேவி

யுடன் அவர் அல்மோரா சென்றுள்ளார். குர்ஷித் பென், அவள் சகோதரிகளுடன் நேற்று மகாபலேஸ்வரம் சென்றுள்ளார்; அங்கு இரண்டு வாரங்கள் தங்குவார். அவர்கள் உடல் நலன் தேறிய வுடன் அவர்களில் இருவர் தங்களுக்குரிய இடத்திற்குச் (சிறை) செல்வது நிச்சயம். சிறையில் ஊட்டமில்லாத உணவின் காரண மாக, நந்துபென் [கனுகா] ஒரு கண்ணை இழந்துவிட்டார். ஆனல் அவர் அடக்கமானவர்; அளவற்ற பொறுமை வாய்ந்தவர். உன்னுடன் கூட இருக்க முடியாதது, அவருக்கு அதிக வருத்தம்.

எங்கள் கடிதங்கள் உனக்குத் தாமதமாகக் கிடைத்தாலோ, கிடைக்காமலே போனலோ, கவலைப்படாதே. இங்கிருந்து நாங்கள் ஒழுங்காகக் கடிதங்கள் அனுப்பிக் கொண்டிருக்கின்றோம். இக்கடிதத்தைப் போலவே, இனி எல்லாக் கடிதங்களையும் பதிவு அஞ்சலில் அனுப்புவோம்.

தாதாசாகிப் [மாவ்லங்கர்] ரத்னகிரியில் தான் இன்னமும் இருக்கின்றார். அங்கு அவர் வாடகைக்கு ஒரு வீடு எடுத்துக் கொண்டிருக்கிறார்; அவர் குடும்பத்தினரும் அவருடன் அங்கு தங்கியுள்ளனர். அவர் உடல் நலன் அவ்வளவு திருப்தியாக இல்லை [அவர் மகள்] காமு, தனியார் உயர்நிலைப் பள்ளிக்குச் சென்று வருகிறாள்.

[சர்தாரின் தாய் மாமன் மனைவி] ஹிராமாமி 20ம் தேதி இறந்து விட்டார். நடைப் பிணமாய் இருந்த நிலையிலிருந்து அவருக்கு விடுதலைதான்; ஆனல் உறவினருக்கு வேதனையும் வருத்தமும் இருக்கும்.

நீ சிறையில் மன அமைதியுடன் இருப்பது குறித்து நாங்கள் இருவரும் மகிழ்ச்சி அடைகின்றோம். நம் கடமையைச் செய்யும் போது, நமக்கு மனநிறைவு இல்லையென்றால், நம்மிடம் ஏதோ குறை இருக்கிறதென்று தான் பொருள். சிறைவாசத்தில், வேளைக்கு உணவருந்தி, நல்ல சுத்தமான காற்றையும் அனுபவிக்க வாய்ப்பு இருப்பதால், நம் உடல் நலனை நன்கு காக்க முடியும். உடலில் ஊறு எதுவும் ஏற்பட்டிருந்தால், அதைப் போக்கிக் கொள்ளவும் சிறையில் அவகாசம் கிடைக்கிறது. வெளியில் இருக்கும்போது, நமக்கு அவகாசம் கிட்டாமல் போகும். சிறையில் மருத்துவரைக் கலந்து உரிய சிகிச்சை பெற்றுக் கொள்ளலாம். நடப்பது போன்ற உடற் பயிற்சியும் செய்ய வேண்டும். அதிகம் படிக்க முடியவில்லையென்றால் அதைப் பற்றிக் கவலைப்படாதே. ஆனல் எப்படியும் உடல் நலனைக் காத்துக் கொள்ளவேண்டும். மிருதுளாவுக்கும் [சாராபாய்] இது பொருந்தும். நான் நலமாக இருக்கின்றேன்.

இடையில் உன்னிடமிருந்து கடிதம் வராவிட்டாலும், இங்கிருந்து அடுத்த கடிதம் அடுத்த மாத நடுவில் அனுப்பப்படும்.

## 113

எரவாடா மந்திர்,
6, மே, 1933

உண்ணு நோன்பின் போது* உனக்கு ஒவ்வொரு நாளும் கடிதம் எழுத என்னை அனுமதித்துள்ளார்கள். நீயும் எனக்குத் தினமும் எழுதலாம். உனக்குத் தினமும் நானே எழுதவோ, சொல்லி எழுத வைக்கவோ முடியாமல் போகலாம். ஆனால் மகாதேவ் நிச்சயமாக எழுதுவார். இக் கடிதம் உனக்கும் மிருதுளாவுக்கும். நான் சொல்ல மகாதேவ் எழுதுகிறார்.

நீங்கள் இருவரும் தைரியமான பெண்கள். நீங்கள் மனம் தளர மாட்டீர்கள் என்ற உறுதி எனக்குண்டு. போன உண்ணு நோன்புக் காலத்தில் இருந்ததைக் காட்டிலும், இப்பொழுது எனக்கு உடல் வலிமையும் உற்சாகமும் இருக்கின்றன. ராஜா [ராஜகோபாலாச்சாரி] என்னுடன் நீண்ட நேரம் வாதாடினார். இப்பொழுது அவர் அமைதியாக இருக்கின்றார்; இன்று திரும்பு கிறார். வல்லபபாய் மிகுந்த மன உறுதியுடன் அனைத்தையும் தாங் கிக் கொண்டுள்ளார்; என்னுடன் வாதாடாமல் மௌனமாக ஒத்துழைக்க அவரும் மகாதேவும் முடிவு செய்துள்ளனர். அவரு டைய இந்த முடிவு எனக்கு மிகவும் பிடித்தமாய் உள்ளது. சில நாட்களுக்கு அவர் தம் மௌன நோன்பில் அளவுக்கு மீறிய உறுதி காட்டிவிட்டார். வற்றாத அவர் நகைச்சுவை ஊற்று கூட வற்றி விட்டது போல் காணப்பட்டது. ஆனால் அது மீண்டும் ஊற் றெடுக்கத் தொடங்கிவிட்டது.

உண்ணு நோன்பு மேற்கொள்வது மிகவும் அவசியமாயிற்று. இதுதான் அதற்குரிய நேரம். கணிதத்தில் ஒரு புதிர் போல, என் முடிவை நான் சோதித்துப் பார்த்து அதுதான் சரி யானது என்று கண்டுள்ளேன். எவருக்கும் எதிராக இந்த உண்ணு நோன்பு மேற்கொள்ளப்படவில்லை. எந்தக் குறிப்பிட்ட ஒரு நிகழ்ச்சி, இந்த முடிவுக்கு என்னை உந்தியது என்பதைக் கூட நான் அறியேன். ஆனால் பல நிகழ்ச்சிகள், தெரிந்தோ தெரியா மலோ. இந்த முடிவுக்கு ஆதரவாக இருந்தன. உண்மை என்ன வெனில், ஹரிஜன ஊழியர்கள் பத்தரை மாற்றுத் தங்கமானவர் களாய் இராவிடில், அதற்கு என்னகத்தே உள்ள குறைதான் காரணமாகும். பல தலைகளும் தோற்றங்களும் கொண்ட தீண் டாமை, பத்துத் தலை அரக்கனான இராவணனை விடக் கொடிய தாகும். அதற்கு எதிராக எண்ணற்ற பல நிறுவனங்களை அமைப் பதாலோ, ஏராளமான நிதி திரட்டி அதனுடன் போராடுவ தாலோ, அதை அழிக்க முடியாது. ஹரிஜனங்களுக்காக உரிமைகள் பெறுவதுமட்டும் போதாது. சாதி இந்துக்களும்

* ஹரிஜன சேவைக்குத் தம்மை ஆயத்தம் செய்து கொள்ள அகத் தூய்மைக்காகப் பாபு மே 8 முதல் 29 வரை, 21 நாட்கள் உண்ணு நோன்பு மேற் கொண்டிருந்தார்.

ஹரிஜனங்களும் ஒருவரையொருவர் இரத்த சகோதரர்களாகத் தழுவி நிற்க வேண்டுமானால், சாதி இந்துக்களிடையே மன மாற்றம் ஏற்பட வேண்டும். நம்மிடம் உள்ள ஆன்மிக மூலதனம் அனைத்தையும் முதலீடு செய்தால் தான், இந்த ஆன்ம யாத்திரையில் நாம் வெற்றி காண இயலும். உண்ணாநோன்பு பன்னெடுங்காலமாக மேற் கொள்ளப் பட்ட கட்டுப்பாடு; இறைவன் வாழும் நகரத்திற்கு நம்மை அழைத்துச் செல்லும் உறுதியான பாதை, அது. அப்பாதையில் இது வரை எவரும் செல்லவில்லை என்பது தான் வியப்பிற்குரியது.

நீங்கள் இருவரும் அமைதியாக இருக்கவேண்டும்; உரிய நேரம் வரும்போது, நீங்கள் உங்கள் காணிக்கையைச் செலுத்தச் சித்தமாயிருக்க வேண்டும். எனக்கு அனுதாபமாய் உண்ணா நோன்பு மேற்கொள்வதென்ற பிரச்னைக்கே இடமில்லை.

## 114

எரவாடா மந்திர்,
*8, மே, 1933*

நான் ஞாயிறன்று உனக்குக் கடிதம் எழுதினேன். நீயும் மிருதுளாவும் கூட, விரும்பினால் எனக்கு ஒவ்வொரு நாளும் எழுதலாம். என் உண்ணா நோன்பு பற்றிச் சிறையில் உள்ள சகோதரிகள் எவரும் மனக் கவலை கொள்ளக்கூடாது. தம்மிடம் உள்ள களங்கங்களைக் களைய ஒவ்வொருவரும் முயற்சி செய்வது அவசியம். இங்கிருந்து எவராவது உனக்குத் தினமும் எழுதுவார்கள். நான் நிரம்ப மன நிம்மதியுடன் இருக்கின்றேன். நாங்கள் அனைவரும் நலம்.

## 115

பர்ணகுடி, புனா,
*15, செப்டம்பர், 1933*

நாசிக் சிறையிலிருந்து அப்பாவின் கடிதங்கள் இடைஞ்சலின்றி உனக்குக் கிடைத்து வருமென்றும், அதற்குமேல் வேறு கடிதங்கள் உனக்கு அனுமதிக்கப்பட மாட்டாவென்றும் நான் எண்ணினேன். நான் கடிதங்கள் அனுப்பியிருந்தால், அவையும் உனக்குக் கொடுக்கப்பட்டிருக்குமென்று இப்பொழுது காண்கிறேன். நீ விடுதலையாகும்போது, நான் வெளியில் இருந்தால் நீ வந்து என்னைச் சந்திப்பாயென்று நிச்சயமாக நம்புகிறேன். ஓரிரு நாட்கள் பெல்காமில் தங்கிவிட்டு நாசிக் செல்வாய் என்பதை அறிவேன். நான் இன்று பம்பாய்க்குப் புறப்பட்டு, 21ந் தேதி ஆமதாபாத் சேர்ந்து, 23ந் தேதி வார்தா செல்கிறேன்.

## 116

வார்தா,

*29*, செப்டம்பர், *1933*

உன் உடல் நன்கு தேறும்வரை அங்கு தங்கிவிட்டு, அதன் பின்பு வா. அப்பாவிடமிருந்தும் ஒரு கடிதம் எனக்கு வந்துள்ளது. [டாக்டர் சந்துலால் தேசாய்] சந்துபாய் அவருடன் இப்பொழுது இருக்கின்றாரென்பதை அதிலிருந்து அறிகிறேன். இது அப்பாவுக்கு நல்லது.

## 117

வார்தா,

*7*, அக்டோபர், *1933*

நீ பார்க்க விரும்புபவர்கள் அனைவரையும் பார்த்துவிட்டுப் பிறகு வா. ஆனால் இதிலிருந்து நீ அடுத்த யுகத்தில் வந்தால் போதுமென்று பொருள் கொள்ளாதே. பாபாவை [தயாபாய் மகன்] உன்னுடன் தாராளமாகக் கூட்டி வரலாம். அவன் இங்கு மகிழ்ச்சியுடன் இருப்பான் என்பதில் ஐயமில்லை. என் உடல் வலிமை மீண்டு வருகிறது. நவம்பர் 7ந் தேதிவரை இங்கிருப்பேன்.

## 118

வார்தா,

*4*, நவம்பர், *1933*

தயாபாய் உறுதியுடன் வாதாடுகிறான். களங்கமும் போலியும் காணுமிடமெல்லாம் அவன் எதிர்த்துப் போராடவேண்டும்.[1] வார்தாவிற்குப் பாபாவின் வருகை பெரும் வெற்றியாக முடிந்தது. எனக்குப் பிறகு, பா சிறைக்குச் செல்வாள். ஆனால் அதற்கான ஆயத்தங்களை முன் கூட்டியே செய்யவேண்டும்.

## 119

வார்தா,

*5*, நவம்பர், *1933*

பா, *13*ந் தேதி புறப்படலாம். நாகபுரிக்குச் சென்றுவிட்டு நான் வார்தா திரும்பவேண்டும். ஆகவே அதுவரை பா இங்கு தங்கியிருக்க விரும்புகிறாள். ஆமதாபாத்தில் ரஞ்சாட் பாயுடன் [ரஞ்சாட்லால் அமிருத்லால்] தங்குவாள்; அல்லது சிவப்பு பங்களாவில் தங்குவாள். [சபர்மதி ஆசிரமத்தருகில் இருந்த டாக்டர் பிராண்

1. வித்தல்பாய் பட்டேல் அயல் நாட்டில் மரணமடைந்திருந்தார். அவர் உடலை அடக்கம் செய்வதுபற்றிய பேச்சு வார்த்தைகளில் தயாபாய் பங்கு கொண்டு வாதாடினார்.

ஜீவன் ஜகஜீவன் மேத்தாவின் வீடு]. நீ என்ன யோசனை கூறு வாய்? உன் கால்பற்றி என்ன செய்ய முடியுமோ அதைச் செய். அனுவசியமாக அவசரப்படாதே.

## 120

நாகபுரி,

*9*, நவம்பர், *1933*

உன் கடிதம் கிடைத்தது. நீ ஒளிவு மறைவின்றி எனக்கு எழுதியது விவேகமான செயல். இனியும் அவ்வாறே செய். எல் லோரிலும் குறிப்பாக உன்னிடமிருந்து நான் கபடமற்ற பேச்சை எதிர்பார்க்கின்றேன். தயாபாய் தப்பெண்ணத்திற்குப் பலியாகி ஆத்திரம் கொண்டது குறித்து வியப்படைந்தேன். ஆனல் நான் என்ன நினைத்தேன் என்பது பெரிதல்ல. அவனுக்கு முழு உண்மை கூடத் தெரியாமலிருக்கலாம். அவன் ஏன் தவருகப் புரிந்துகொண் டான் என்பது எனக்கு விளங்குகிறது. அனைத்தையும் நீ அவனுக்கு விளக்கிச் சொல். நீ விரும்பினல், நானும் அவனுக்கு எழுதி, அவன் மனச் சஞ்சலத்தைப் போக்குவேன். நீ விரும்பினல், அவன் இக்கடி தத்தையே படிக்கலாம்.

பா வார்தாவிலிருந்து செவ்வாய்க்கிழமையன்று புறப்படு கிருள். ஒரு சில மணி நேரம் அகோலாவில் தங்கிவிட்டுப் பின் பம்பாய்க்குச் செல்வாள். இப்பொழுது ஐயப்பாடுகளும் கவலையும் அவளை வருத்துகின்றன. ஆனல் சிறைக்குப் போவதென்ற முடிவை அவள் தானே விரும்பிச் செய்து வெளியிட்டாள். அம்முடிவில் அவளை நீ உற்சாகப்படுத்த வேண்டும்.

ஊட்டமுள்ள உணவை உண்டு, உன் உடலை உறுதியாக்கிக் கொள். உன் பற்கள் எப்படி இருக்கின்றன?

ஜவாஹர்லாலும் மற்றவர்களும் சனிக்கிழமையன்று வார்தா வுக்கு வருகிருர்கள்.

நாகபுரியில் எங்கள் கூட்டம் நன்ருக நடந்தது. [ஹரிஜன] சுற்றுப் பயணம் இவ்வாறு நன்கு தொடங்கியுள்ளது. [வித்தல் பாயின்] இறுதிச் சடங்குபற்றிச் செய்தி அனுப்பு.

## 121

சந்தா,

*14*, நவம்பர், *1933*

உன் நீண்ட கடிதம் கிடைத்துள்ளது. உன் மனத்தில் உள் ளதை ஒளிவு மறைவின்றிச் சொன்னதுதான் நல்லது. என்னிட மிருந்து உன் எண்ணங்களை ஒளித்து வைத்தால், நீ உனக்குத்

தான் தீங்கு செய்வாய். ஒருவர் இறந்தபின், அவர் குறைகளை எண்ணிக்கொண்டிராமல், அவர் நற்பண்புகளை மட்டுமே நினைவிற் கொள்ள வேண்டும். நான் [வித்தல்பாயின்] ஈமச் சடங்குக்கு வராததற்கும், பொருளாதாரம் அல்லது அரசியல்பற்றி அவர் கொண்டிருந்த கருத்துக்களுக்கும் சம்பந்தமே இல்லை. அவர் தங்க மான தன்மையையும் பண்புகளையும் நான் மதிக்கத் தவறிவிட் டேன் என்று பொருளில்லை. நான் ஈமச் சடங்குக்காகப் பம்பாய் வராத காரணம், இப்பொழுது நான் இருக்கவேண்டிய இடம், ஒன்று சிறையில் அல்லது ஹரிஜனங்களிடையே என்பதால்தான். ஹரிஜன இலட்சியத்திற்காகத் தான் நான் சிறைக்கு வெளியே இருக்கின்றேன். இது என் இதயபூர்வமான உணர்வு; அரசாங் கத்திற்காகவோ, நம் மக்களுக்காகவோ நான் ஆடும் நாடகமல்ல. வேறெந்த இயக்கத்திலும் நான் இப்பொழுது பங்குகொள்ள முடி யாது. இதை மக்களும் புரிந்துகொண்டனர். பம்பாய்க்கு நான் வந்திருந்தால் அரசாங்கம் விதித்த நிபந்தனைகளை நான் சகித்துக் கொள்ள முடியாமல் போயிருக்கலாம். அப்பொழுது நான் என் விருப்பப்படி நடக்கவோ, உனக்கோ, தயாபாய்க்கோ வழிகாட்டி யிருக்கவோ முடியாது. ஆகவே ஒதுங்கி இருப்பதே நல்லதென்று நான் முடிவு செய்தேன்.

மேலும் என் உள்ள அமைப்பில் இன்னொரு அம்சமும் இருக் கின்றது. ரசீக் [காந்திஜியின் பேரன்] டில்லியில் மரணப் படுக் கையில் கிடந்தான்; நான் அவனருகே இருந்திருந்தால் அவனுக்கு எவ்வளவோ நிம்மதியாக இருந்திருக்கும். ஆயினும் நான் செல்ல வில்லை; பா மட்டுமே சென்றாள். இறுதியில் ரசீக் இறந்தான்; ஆனால் அவனுக்காக நான் ஒரு துளி கண்ணீர்கூடச் சிந்தவில்லை. அவன் இறந்த செய்தி அறிவித்துத் தந்தி வந்தபோது, நான் சாப் பிட்டுக் கொண்டிருந்தேன். சாப்பிடுவதை முடித்துவிட்டு, என் வேலையை நான் தொடங்கினேன். இதுபோன்ற நிகழ்ச்சிகள் என் வாழ்நாளில் நிறைய நடந்துள்ளன. மரணம்பற்றி நான் சில கருத்துக் களை உருவாக்கியுள்ளேன்; நாளுக்கு நாள் அவை தெளிவு பெற்று வருகின்றன. மரணம், ஒரு பயங்கரமான நிகழ்ச்சி என்று நான் கருதவில்லை. வேண்டுமானால், சில சமயங்களில் திருமணம் பயங் கரமான நிகழ்ச்சியாய் இருக்கலாம்; மரணம் ஒருபோதும் அவ் வாறு இருக்க முடியாது. உன் ஐயங்களை இப்பொழுது தீர்த்துள் ளேனா? இல்லாவிடில் என்னை நீ மீண்டும் கேட்கவேண்டும்.

ஈமச் சடங்கை நீ மிகவும் தத்ரூபமாகச் சித்திரித்துள்ளாய். மக்க ளின் உணர்ச்சிக் கொந்தளிப்பை நாம் சரியாகப் புரிந்துகொள்ள வேண்டும். மக்கள் தனி மனிதனுக்காக வருந்தவில்லை; அவரிடம் தாங்கள் எதிர்பார்க்கின்ற, ஆகவே அவரிடம் இருப்பதாக நம்பு கின்ற நற்பண்புகளுக்காகவே அவர்கள் வருந்துகின்றனர். ஆகவே அவர்களின் உணர்ச்சி தூய்மையானது; பொது மக்களிடை பரவி யுள்ள விழிப்புணர்ச்சிக்கு அது அறிகுறியாகும்; உலகுக்கு உண் மையை உணர்த்துவதாகும். வித்தல்பாய் விடுதலை வேட்கை கொண்டிருந்தார் என்பதில் எவரும் ஐயப்பாடு கொள்ள முடியாது.

பாவின் மன உறுதி தளர்ந்துள்ளது. சிறைக்குச் செல்ல வேண்டுமென்ற ஆசையும் இருக்கிறது; செல்லக் கூடாதென்ற எண்ணமும் இருக்கிறது. சிறைக்குச் செல்வது தன் கடமை என்பதைத் தன் உள்ளத்தின் அடித்தளத்தில் அவள் உணர்கிறாள். ஆனால் நான் சிறைக்கு வெளியே இருக்கும் வரை, தான் சிறை செல்ல விரும்பவில்லை. நானும் அவள் சிறைக்குச் செல்ல வேண்டுமென்று வற்புறுத்த விரும்பவில்லை; அவள் விருப்பப்படியே செய்ய விட்டு விட்டேன். உன் மேல் அவளுக்கு அன்பும் நம்பிக்கையும் இருப்பதால், கடமையை ஆற்றும் உற்சாகத்தை அவளிடம் வளர்க்க நீ உதவ வேண்டுமென்பது தான் என் விருப்பம். நான் இதுபற்றிப் பாவிடம் பேசினால், அது அவளுக்கு நான் ஆக்கினை இடுவதாகி, அவள் உணர்வை முடக்கி நசுக்குவதாக முடியும். ஆகவே நான் எதுவும் சொல்லப் போவதில்லை. நான் இது பற்றி ஒன்றும் சொல்லாததால், அவள் சிறை செல்ல வேண்டுமென்று நான் எதிர்பார்ப்பதாக அவள் எண்ணிக் கொள்கிறாள்.

பல் சிகிச்சையும் மற்ற சிகிச்சையும் முடியும் வரை, நீ அவசரப்பட்டுச் சிறை செல்ல முன்வர வேண்டிய அவசியமில்லை.

# 122

சிகல்தா,<br>*19*, நவம்பர், *1933*

உன் கடிதங்களில் உன் கருத்துக்களையும் உன் உறவினர் கருத்துக்களையும் நீ வெளிப்படையாகத் தெரிவிப்பது நல்லது. தயாபாய் அல்லது கோவர்தன்பாய் என் நிலையைத் தவறாகப் புரிந்துகொண்டால், அதை என்னால் தாங்க முடியாது.

பத்திரிகைகளுக்கு நான் எழுதுவது அவசியமென்று தோன்றவில்லை. பத்திரிகைக்காரர்கள் என்னைத் தவறாகப் புரிந்துகொள்ளும் போதெல்லாம், அல்லது வேண்டுமென்றே தவறான எண்ணத்தைப் பரப்பும் போதெல்லாம், நான் பத்திரிகைகளில் விளக்கம் தர விரைவது நல்லதல்ல. இருப்பினும், நீயும் தயாபாயும் விரும்பினால் பத்திரிகைகளுக்கு எழுதச் சித்தமாயிருக்கின்றேன். அவன் சொல்வதில் நிரம்ப உண்மை இருக்கின்றது. பொதுவாழ்வில் உள்ள மற்றப் பிரமுகர்கள் மீது நாம் குறைகூறுவது எளிது; குறையில்லாதவர் ஒருவருமே இல்லை. ஆனால் ஈமச் சடங்குக்கு நான் வர மறுத்ததற்கும், வித்தல்பாயின் குறைபாடுகளுக்கும் சம்பந்தமில்லை. மற்றத் தலைவர்களுக்கு எவ்வளவு மரியாதை காட்டப்பட்டதோ, அதே மரியாதையை வித்தல்பாய்க்கும் அளிப்பது அவசியம். தியாகம், விடாமுயற்சி, திறமை, [காங்கிரசிடம்] விசுவாசம் ஆகியவற்றில் அவர் எவருக்கும் சளைத்தவரல்ல.

உன் தாராள சிந்தை என்னைக் கவர்ந்துள்ளது. ஆனால் அது உன்னிடம் மட்டும் நான் கண்ட புதுமையல்ல. இன்னும் பல பெண்

களிடம் அதைக் கண்டுள்ளேன். தாங்கள் தவருக நடத்தப்பட்டதை மறந்து மன்னிக்க அவர்கள் எப்பொழுதும் சித்தமாயுள்ளனர். இப் பண்பு பெண்களுக்கு ஓர் அணிகலன்; ஆனல் ஆண்கள் அதை அவ மதித்துள்ளனர். விஷயத்தை விட்டு எங்கோ சென்றுவிட்டேன்.

நீ இப்பொழுது ஆற்றி வரும் சிறந்த சாதனையில் நானும் பெருமை கொள்ளலாமா?

## 123

கட்கா,
வழிபாட்டுக்கு முன்—காலை 4 மணி,
2, ஜனவரி, *1934*

நீ இப்பொழுது மீண்டும் சிறைக்குச் சென்று விட்டதால், நேராக எனக்கு எழுத உன்னை அனுமதிப்பார்களோ, என்னவோ. அப்பாவிடமிருந்து உன்னைப்பற்றி எனக்குச் செய்தி கிடைக்கத் தான் செய்கிறது; ஆனல் அத்துடன் நான் திருப்தி அடைய முடி யாது. முடிந்தால், எனக்கு நீ எழுது. உடலையும் உள்ளத்தையும் சீராகவும் செம்மையாகவும் வைத்துக் கொள். நான் நலமாக இருக் கின்றேன். ஒவ்வொரு வாரமும் பாவிற்கு நீண்டதொரு கடிதம் எழுதுகின்றேன்.

உன் கடிதங்களை வார்தா முகவரிக்கு அனுப்பு.

## 124

*23*, ஜூலை, *1934*

இப்பொழுது போலவே எனக்குத் தொடர்ந்து எழுது. ஆனல் பதிலுக்கு என்னிடமிருந்து கடிதங்களை எதிர்பார்க்காதே. மகாதேவ் என்னுடன் இப்பொழுது இருக்கின்ருர்; எனக்காக அவர் சில கடிதங்கள் எழுதுகிருர்; ஆகவே எனக்கு ஓரளவு ஓய்வு கிடைக் கின்றது. சர்தார் சாகிபுக்குக் [அப்பா] கூட, நான் எழுத வேண்டிய தில்லை. அங்குள்ள இதமான இயனிலை தான் உனக்குச் சிறந்த அருமருந்து என்று நீ நம்புவது போலவே நானும் நம்புகிறேன்.

நாம் இப்பொழுது விரைவில் சந்திக்கக் கூடும்.

## 125

*25*, ஆகஸ்ட், *1934*

நீ உன் கைப்பட எழுதிய ஓரிரு வரிகளை நான் படித்தேன். தற்போதைக்கு நீ எனக்கு எழுதாமலிருப்பது பொருத்தமே. உன் உடலை அசட்டை செய்யாதே; நன்கு தேற்றிக் கொள். எனக்கு

முக்கியமாக எதுவும் தெரிவிக்க விரும்பினால், கடிதம் எழுது. என் மனம் புண்பட்டு விடுமோ என்று நீ அஞ்சத் தேவையில்லை.

## 126

வார்தா,
31, அக்டோபர், 1935

நீ அடிக்கடி உடல் நலன் இழப்பது ஏன்? அப்பாவுக்குச் சுகமில்லாது போகும் போதெல்லாம் மகளுக்கும் சுகமில்லாமல் போவது தான், அப்பாவிடம் மகள் காட்டும் விசுவாசம் என்று நீ கருதுகிறாயா? தன் பெற்றோர்களுக்கு நடக்க இயலாது போன போது, சிரவண் தன் உடலை உறுதிப்படுத்திக் கொண்டு, ஒரு கோலின் உதவியால், அவர்களைத் தன் தோள்களில் தாங்கிப் புனித யாத்திரை ஊர்களுக்கு அவனே தூக்கிச் சென்றான். லியர் அரசரின் மகள் தன் உடல் நலனைச் சீராகக் கவனித்துக் கொண்டு, அவருக்கு நல்ல பணிவிடைகள் செய்தாள். நீ வயதுக்கு மீறி மூப்படைந்து, ஒன்று மாறி மற்றொரு நோயை வருவித்துச் கொள்வது ஏன்? இந்த நோயின் காரணத்தை நீ கண்டறிந்து, அதற்கு நல்ல பரிகாரம் தேடி, உறுதியான உடலை வளர்த்துக் கொள்ள வேண்டும்.

## 127

வார்தா,
12, நவம்பர், 1935

பின்புறத்திலிருக்கும் கடிதத்தை அப்பாவுக்குப் படித்துக் காட்டு. ஜவாஹர்லால் நடந்து கொண்ட விதம் அனைவருடைய பாராட்டுதலையும் கவர்ந்தது என்று அறிகிறேன்.

அப்பா நலமாக இருக்கிறாரென்று நம்புகிறேன்.* அவர் தமக்குச் சிகிச்சை செய்யும் மருத்துவர்களைத் தம் நகைச் சுவையால் குலுங்கச் சிரிக்க வைத்துக் கொண்டிருப்பாரென்று எதிர்பார்க்கின்றேன்.

## 128

டேரா இஸ்மாயில்கான்,
28, அக்டோபர், 1938

நீண்ட நாட்களுக்குப் பின் எனக்கு நீ கடிதம் எழுதியுள்ளாய். அதில் பயனான பல தகவல்கள் நிறைந்துள்ளன. நாசிக் போலீஸ் பயிற்சிப் பள்ளியில் மாணவர்களுக்குச் சாப்பாட்டு நேரத்தில் மது பானம் வழங்கப் படுகிறது என்று நீ சொன்ன தகவலை நம்பி,

* மூக்கில் தொந்திரவு இருந்ததால், சர்தாருக்கு அறுவை சிகிச்சை செய்யப்பட்டிருந்தது.

நான் அது பற்றி [ஹரிஜனில்] ஒரு குறிப்பு எழுதியுள்ளேன். கேர் அல்லது முன்ஷியைச் சந்தித்தால், இது பற்றி அவர்களிடம் பேசு. மதுவிலக்கு பற்றி அதிகார வர்க்கம் அசட்டையாயிருந்தால், அது குறித்து அமைச்சர்கள் ஆளுநரிடம் உறுதியாக வற்புறுத்த வேண்டும்.

[தேசியப் போராட்டத்தின் போது விவசாய சத்யாக்கிரகிகளிடமிருந்து பறிமுதல் செய்து ஆங்கிலேயே அரசாங்கத்தால் விற்கப்பட்ட] நிலங்களைப் பொறுத்தவரை, அப்பாவிடமிருந்து செய்தி வருவதற்கு முன், நான் எழுதியிருந்தேன். இதுபற்றி மாநில சட்ட மன்றத்தில் நடந்த விவாதக் குறிப்பை எனக்கு அனுப்பு.

ஆபாச இலக்கியம் பற்றி ஒன்றும் செய்ய முடியாதென்று நான் எப்போதுமே கூறுவதில்லை; ஆனால் ஒன்றும் செய்ய முடியாதென்று தான் நான் நினைக்கின்றேன். இது போன்ற அசிங்கத்தை மக்களும் விரும்புகிறார்களென்றுதான் அஞ்சுகிறேன். ஆகவேதான் இதில் கடுமையான நடவடிக்கை எடுப்பதற்கில்லை. எழுத்தாளர்களிடையே இது பற்றி அச்சமும் அருவருப்பும் ஏற்படும்போது தான் இந்த மாசு நீங்கும். இயன்றால் சட்டம் இயற்றி, இத்தகைய எழுத்தைத் தடை செய்ய வேண்டுமென்று நான் உறுதியாக நம்புகிறேன். ஆனால் இதை மாணவர்கள் படிப்பது பற்றிக் கட்டாயப்படுத்துவது வேறு; இது பத்திரிகைகளில் பிரசுரமாவது வேறு.

ராஜ்கோட்டில் நடக்கும் சத்யாக்கிரக இயக்கம் மிகச் சிறப்பானது; இறுதி வரை உறுதியாக நடந்தால், அது தன் குறிக்கோளில் வெற்றி பெறுவது நிச்சயம். திருவிதாங்கூர் பற்றி அப்பா எடுத்துள்ள நிலைதான் சரியானது.[1] அப்பாவின் கடிதம் வருவதற்கு முன்பே என் அறிக்கை பிரசுரமாயிற்று.[2] ஆகவே அவர் இராமச்சந்திரனை அழைத்ததில் தவறு ஒன்றுமில்லை. அந்த அறிக்கை பிரசுரமாவது அவசியமாக இருந்தது. தற்போதைக்குத் திருவிதாங்கூர் போகும் பிரச்னை எழவில்லை.

15ந் தேதி வாக்கில் நான் வார்தா போய்ச் சேருவேன் என்று எண்ணுகிறேன். 9ந் தேதியன்று வடமேற்கு எல்லைச் சுற்றுப் பயணம் முடியும்.

சுபாஷ் பாபு பற்றி நடந்து கொண்டிருப்பது எனக்குத் தெரியும். ஆகவே தான் காரியக் கமிட்டி கூட்டத்தில் அதைப்பற்றிக்

1. சமஸ்தானத்துக்கு வரும்படி திவான் சர்தாரை அழைத்திருந்தார். ஆனால் சத்யாக்கிரகிகளைச் சிறையில் சந்திக்க அனுமதி தந்தால் தான் வரமுடியுமென்று சர்தார் பதிலளித்தார்.

2. மாணவர் கிளர்ச்சி பற்றி பாபு விடுத்த அறிக்கையில், சிந்தையிலும் சொல்லிலும் செயலிலும் அகிம்சையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்றும், வன்முறைச் செயல்களைத் தடுக்க இயலாவிடில் இயக்கத்தையே நிறுத்த வேண்டுமென்றும் வற்புறுத்தியிருந்தார்.

குறிப்பிட்டேன். ஆனால் ஜவாஹர்லால் நாட்டுக்குத் திரும்பும் வரை நாம் பொறுத்திருக்க வேண்டுமென்று அப்பா கருதினர். ஆகவே அப்பிரச்னையை நான் அத்துடன் விட்டேன். இவ்வாண்டு [காங்கிரஸ்] தலைவர் தேர்தலில் சிக்கல் நிச்சயமாக ஏற்படும். நான் ஹரிஜனில் வெளியிட்டுள்ள குறிப்பு பற்றி அப்பாவை யோசிக்கச் சொல். போகிற போக்கில் விடுவது அபாயகரமானது என்று நான் கருதுகிறேன்.

இந்தச் சுற்றுப் பயணம் முழுவதும் என் உடல் நலன் மிக நன்றாக இருந்துள்ளது. மௌலானாவுடன் [ஆஜாத்] அப்பா இந்த மாநிலத்திற்கு வர வேண்டும்.

## 129

சேகான், வார்தா,
*28*, நவம்பர், *1938*

உன் கடிதம். [ராஜ்கோட் சத்யாக்கிரக இயக்க] வேலையில் நீ மும்முரமாக ஈடுபட்டுள்ள போது நீ எழுதுவாயென்று நான் எதிர்பார்க்கவில்லை. தொலைவிலிருந்து உன் சாதனைகளை மெச்சுகின்றேன். உனக்கு நல்ல சாதகமான வாய்ப்பு கிட்டியுள்ளது. உன் துணிவு பற்றி நான் என்றும் ஐயம் கொண்டதில்லை. ஆனால் நீ சிறை செல்லக்கூடாது. அதற்கு உள்ளூர் ஊழியர்கள் முன்வர வேண்டும்.

## 130

சேகான், வார்தா,
*5*, டிசம்பர், *1938*

[ராஜ்கோட் நிகழ்ச்சிகளைப் பற்றி] நீ சித்திரித்து எழுதியுள்ள அருமையான கடிதம் கிடைத்தது. உன் தொண்டுக்கு எத்துணை பாராட்டும் தகும். குளிரால் உடம்பில் வெடிப்பு ஏற்பட்டுள்ள பகுதிகளில் எண்ணெய் தடவு. தன் உடலைச் சீராக வைத்துக் கொள்ளாத போர் வீரன் தண்டனைக்கு உரியவன். அது தான் பொருத்தமானதும் கூட.

அகிம்சையின் படிப்பினைகளை மக்கள் உணர்ந்து, பதில் நடவடிக்கை எடுக்காமல் தாக்குதல்களைத் தாங்கிக் கொண்டால், அவர்களுக்குத் தோல்வியே ஏற்படாது என்பது உறுதி.

மகாதேவ் இங்கு நலமாகவே இருக்கின்றார். [இரத்தக் கொதிப்பால் பாதிக்கப்பட்டுள்ளதால்] அவர் மிகக் குறைவாகவே எழுத்து வேலை செய்கிறார். இவ்வார 'ஹரிஜன்' இதழில் அவர் அதிகம் எழுதியுள்ளார்; ஆனால் ஒவ்வொரு முறையும் அவ்வாறு

நடவாதபடி நான் பார்த்துக் கொள்வேன். அவர்மேல் இப்பொழுது எந்தச் சுமைகளும் சுமத்தப்படாமல் இருந்தால், மிகவும் நலமாக இருக்கும்.

## 131

சேகான், [வார்தா]

*22, டிசம்பர், 1938*

நீயும் மிருதுளாவும் [சிறையில்] சந்தித்துள்ளது நல்லது. உன் இரு கடிதங்களும் எனக்குக் கிடைத்துள்ளன. நல்ல ஓய்வெடுத்துக்கொள். நீ நூற்பது பாராட்டுதற்குரியது. நீ விவரமாக எழுத அனுமதிக்கப்படுவாயானல், உன் உணவு, எடை முதலியவைபற்றி எழுது. மிருதுளா தன் நேரத்தை எப்படிப் பயன்படுத்துகிருள்?

ஒரு கோசாலையைப் பார்வையிடுவதற்கு மகாதேவ் கல்கத்தாவிற்கு நான்கு நாட்கள் வரை தங்கியிருந்து வரச் சென்றுள்ளார். அநேகமாக 24ந் தேதி திரும்பி வருவார். [சத்தியாக்கிரகத்திற்காக] ராஜ்கோட் செல்ல பாவை [நான்] இன்னும் அனுமதிக்கவில்லை. டேராடுனில் பெண்கள் குருகுலத்திற்கு அவள் செல்கிருள்.

முதல் தேதி நான் பார்தோலி செல்கிறேன்.

## 132

சேகான், [வார்தா]

*16, பிப்ரவரி, 1939*

உன் கடிதங்கள் அனைத்தும் கிடைத்தன. நீ நடந்துகொண்டுள்ள விதம் என்னை மகிழ்ச்சியில் ஆழ்த்தியுள்ளது.[1] நீ எந்த இடத்திலும் குறைக்கு இடம் கொடுக்கவில்லை. சத்தியாக்கிரக தத்துவத்தை நீ செவ்வனே உணர்ந்துள்ளாய் என்று அறிகிறேன்; ஆகவே நான் சிறிதும் கவலை கொள்ளவில்லை.

---

1. மணிபென் கஸ்தூரிபாயுடன் ஒருநாள் வைக்கப்பட்டு, பிறகு ராஜ்கோட் சிறைக்கு அழைத்துச் செல்லப்பட்டார். நோயின்போது பாவுக்குப் பணிவிடை செய்யக்கூடிய வேறு அரசியல் கைதியோ, தானோ, பாவுடன் தங்க அனுமதிக்கப்படாதவரை, தாம் உண்ணு நோன்பு மேற்கொள்ளப்போவதாக மணிபென் முடிவு செய்தார். இதற்கிடையில் பா திரம்பா கிராமத்திற்கு எடுத்துச் செல்லப்பட்டார். மூன்றும் நாள் மணிபென்னும் அங்கு அழைத்துச் செல்லப்பட்டார். பா பரிமாறிய உணவை ஏற்று, மணிபென் உண்ணு நோன்பை நிறுத்தினர். மிருதுளா [சாராபாய்] கைது செய்யப்பட்ட பின், அவரும் திரம்பா கிராமத்திற்கு அழைத்து வரப்பட்டார். அதன்பின் அவர்கள் மூவரும் அங்கிருந்தனர்.

## 133

சேகான் [வார்தா]
*18, பிப்ரவரி, 1939*

நீங்கள் இருவரும் பாவுக்குத் துணையாக அங்கிருப்பது பெரும் பேறு. மற்றக் கைதிகள் இருக்கும் இடத்திலேயே உங்கள் மூவரையும் வைத்திருந்தால், நான் இன்னும் மகிழ்ச்சி அடைந்திருப்பேன். ஆனுல் இறைவன் சித்தப்படியே நடக்கும்.

கைதிகளாய் இருக்கும் நீங்கள் சுபாஷ் பாபுவைப் பற்றியெல்லாம் கவலைப்பட வேண்டியதில்லை. இறைவன் எனக்கு வழிகாட்டுவதற்கு இணங்க நான் நடப்பேன்.

## 134

ராஜ்கோட்,
*5, மார்ச்சு, 1939*

நீ ஏன் சஞ்சலம் அடைந்துள்ளாய்? இத்தகைய அனுபவம் உனக்கு ஏற்படுவது இதுதான் முதன் முறையா? இந்த வகையில், நான் எதிர்பார்த்ததைவிட நீ அதிக முன்னேற்றம் அடைந்துள்ளாய். நானுக, என் சொந்த விருப்பத்தின்பேரில்தான் இங்கு வந்துள்ளேன்; அது என் கடமை, இறைவன் காட்டும் வழி என்ற நம்பிக்கையில் தான் இதைச் செய்துள்ளேன். நீ கவலைப்படாதே. தற்போது, நான் பாவுக்கு ஒரு கடிதத்தையும், உனக்கு எழுதும் இக் கடிதத்தையும் தவிர, வேறு கடிதம் எழுதவில்லை.

## 135

சேவாகிராமம், [வார்தா]
*4, மே, 1940*

நீ அனுப்பியுள்ள புள்ளி விவரங்கள் சிறப்பாக உள்ளன. எனக்கு இரண்டு கடிதங்கள் எழுதுவதைக் காட்டிலும் நீ நூற்பது நல்லது. அப்பா எப்படி இருக்கின்ருர்?

## 136

சேவாகிராமம், [வார்தா]

நீ இங்கு வரும்போது, பல்வந்த் சிங்குக்காக அறிவிப்பு மணியடிக்கும் கடிகாரம் ஒன்று கொண்டுவா.

## 137

சேவாகிராமம், [வார்தா]
*7, மே, 1941*

நந்துபென் [கனுகா] உன்னைப்பற்றிப் புகார் செய்தார். உன் பிடிவாதத்தினுல் உன் உடல்நலனைக் கெடுத்துக்கொள்கிருயாம்;

ஒழுங்காக உண்பதில்லையாம். இது நல்ல அறிகுறியல்ல. ஒரு சத்தியாக்கிரகி எப்பொழுதும் தன் உடலைச் சீராக வைத்துக் கொள்ள வேண்டும். ஆகவே நீ உன் உடல்நலனை நன்கு கவனிக்கவேண்டும்.

உன் சகக் கைதிகள் அனைவருக்கும் என் ஆசி. உன் தொண்டு பற்றி எனக்குச் செய்தி கிடைத்து வருகிறது.

பா டில்லியில் இருக்கிறாள். அவள் உடல்நலன் கெட்டுள்ளது போல் தோன்றுகிறது.

## 138

சேவாகிராமம், [வார்தா]
*19, மே, 1941*

உன் கடிதம் இன்று கிடைத்தது. நீ சிறையில் இருக்கும் போதே இது உனக்குக் கிடைக்குமென்று எதிர்பார்க்கிறேன். உனக்காக தயாபாய்க்கு ஒரு கடிதம் அனுப்பினேன். நீ உடல் நலனைச் சீராகக் காத்துள்ளது கண்டு எனக்கு மிகுந்த மகிழ்ச்சி.

உன் விடுதலைக்குப் பின் நீ விரும்பினால் பம்பாயில் சில நாட்கள் தங்கிவிட்டு, அதன் பின்பு என்னைப் பார்க்க நிச்சயம் வர வேண்டும். ஆமதாபாத் [கலகங்கள்] பற்றி எனக்கு விவரங்கள் சொல்ல, மிருதுளாவும் குல்ஜாரிலால் நந்தாவும் இங்கு வந்துள்ளனர். நீயும் அப்பாவும் கைதிகளாய் இருக்கும்போது அதைப் பற்றிக் கவலைப்படக் கூடாது. ஜம்னாலால்ஜிபற்றிக் கவலைப்பட இடமில்லை. மனு [பேராசிரியர் ஜயசங்கர் பீதாம்பர் திரிவேதியின் மகன்] நன்றாக இருக்கின்றான். இன்னும் சில நாட்களில் பா டில்லியிலிருந்து புறப்பட்டு இங்கு வருவாள். லீலாவதி [ஆஷர்] அவளுடன் இருக்கின்றாள்.

## 139

சேவாகிராமம், [வார்தா]
*20, மே, 1941*

நான் எழுதிய ஒரு கடிதம் உனக்குச் சிறையிலேயே கிடைத்திருக்க வேண்டும். இது உன் கடிதத்திற்குப் பதில். நேற்றுத்தான் அது கிடைத்தது; இரவில்தான் அதைப் படிக்க முடிந்தது.

நான் ஆமதாபாத்தில் இருந்திருந்தால், கலகங்கள் ஏற்பட்டிருக்காது என்று நீ கருதுவதுபோல் நான் கருதச் சித்தமாயில்லை. அத்தகைய நல்ல செல்வாக்கு இப்பொழுது எவருக்கும் இருப்பதாகத் தோன்றவில்லை. இறைவன் என்னை அழைத்துச் செல்லும் இடத்திற்கு நான் செல்கிறேன். நான் இப்பொழுது இங்கிருக்க வேண்டுமென்பது அவர் சித்தம். குஜராத்தில் உள்ள எத்தனையோ கிராமங்களில் நான் வாழ்ந்திருக்கக்கூடும்.

தன் தந்தையை இழந்ததை மனுபாய் மிகுந்த தைரியத்துடன் தாங்கி வருகிருன். குடும்பத்தினர் அனைவரும் நேற்று வழிபாட்டில் கலந்து கொண்டனர்.

சீத சன்னிக் காய்ச்சலோடு பா இப்பொழுது டில்லியில் படுத் திருக்கிருள். ஆனல் கவலைக்கு இடமில்லை என்று எனக்குச் சொல் கிருர்கள். லீலாவதியை நான் அங்கு நேற்று அனுப்பினேன். ஜானகிபென் [பஜாஜ்] நன்ருகவே இருக்கிருர். அவருக்குச் சுக மில்லை என்று நந்துபென் எப்படிக் கூறினர் என்பது எனக்கு விளங்கவில்லை. முன்பு எப்பொழுதைக் காட்டிலும் அவர் அதிக தூரம் நடக்கிருர்; கணிசமான அளவு உணவும் சாப்பிடமுடிகிறது.

மீராபென் கோடைக்காகச் சோர்வாட் சென்றுள்ளாள். துர்காபென் [ஸ்ரீமதி மகாதேவ் தேசாய்] தேறி வருகிருர்.

நீ அங்கு நிலைமையைச் சீர்திருத்திய பின், இங்கு வந்து என் னுடன் ஓரிரு நாட்கள் தங்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

## 140

சேவாகிராமம், [வார்தா]
*11*, ஆகஸ்ட். *1941*

நீ எனக்கு எழுதிய கடைசிக் கடிதத்திற்குக் கிஷோர்லால் [மஷ்ருவாலா] பதில் எழுதினர். [தயாபாய் மனைவி] பானுமதி இதுபோன்ற தொந்திரவில் எப்படிச் சிக்கினுள்? மருத்துவர்கள் இதுபற்றி என்ன சொல்கிருர்கள்? அவள் குழந்தை பிழைப்பது துர்லபம்; அவ்வாறே பிழைத்தாலும் ஆயுள் முழுவதும் நோஞ்சா னுக இருக்கும்.

என் கடிதங்கள் அப்பாவுக்குக் கிடைத்தன என்று எண்ணு கிறேன். அவை அவருக்கு விரைவில் கிடைக்க வேண்டுமென்று தனி முயற்சி எடுத்துக் கொண்டேன்.

நீ கவலைப்படவே கூடாது. சாத்தியமான எல்லாத் தருணங் களிலும் சிறைக்குச் செல்வது ஒருவர் கடமையாக இருக்க முடி யாது. நீ சிறைக்கு வெளியே இருந்தாலும், அப்பாவின் வேலையைச் [குஜரத் வெள்ள நிவாரண நிதி திரட்டுதல்] செய்து வருகிருய். இப்பொழுது நீ சிறைக்குச் செல்வது, போலியான மனத் திருப்தி பெறுவதேயாகும். நீ சிறை செல்ல வேண்டிய நேரம் வரும்போது, நான் ஒரு கணம் கூட உன் பாதையில் குறுக்கிட மாட்டேன். தொண்டு செய்யும் திறமை கொண்ட குஜராத்தியர் இப்பொழுது வேலையைத் தொடர்ந்து செய்ய வேண்டும்.

நல்ல, உலர்ந்த அத்திப் பழங்கள் ஐந்து பவுண்டு அனுப்பு. இலக்கண நூல் எனக்குக் கிடைத்தது.

மகாதேவ் அங்கிருக்கிருர் என்று எதிர்பார்க்கின்றேன். மொத்தம் திரட்டப்பட்டுள்ள நிதி எவ்வளவு?

## 141

சேவாகிராமம், [வார்தா]

*31, ஆகஸ்ட், 1941*

வேண்டுமென்று தான் உனக்கு எழுதாமலிருந்தேன். தற்போதைக்கு உன்னை நான் சிறைக்கு அனுப்ப விரும்பவில்லை. உரிய நேரம் வரும்போது, உன்னை நிச்சயமாக அனுப்புவேன். நீ சிறைக்கு வெளியிலும் தொண்டாற்றிக் கொண்டு தான் இருக்கின்றாய். நீ சிறை செல்ல வேண்டிய வேளை வந்தே தீரும். அதுவரை மன அமைதியுடன் தொண்டாற்றி, உன் உடல்நலனைக் காத்துக் கொள்.

## 142

சேவாகிராமம், [வார்தா]

*3, செப்டம்பர், 1941*

உன் கடிதம் கிடைத்தது. [அப்பாவின் உடல் நலன் பற்றி] நீ முழு விவரங்களை எனக்குத் தந்துள்ளது நல்லது. டாக்டர் ஜஸ்ஸாவாலாவின் கடிதத்தை நேற்று நான் அனுப்பியுள்ளேன். தற்போதைக்கு அப்பா அவர் மேற்பார்வையின் கீழ் சிகிச்சை பெற வேண்டுமென வற்புறுத்துவேன். காலந்தாழ்த்தி சிகிச்சை பெறுவது பலனளிக்காமல் போகலாம். டாக்டர் நாத்துபாயையும் [பட்டேல்] நீ கலந்து ஆலோசிக்க வேண்டுமென்று என்னைப் பொறுத்த மட்டில் நான் விரும்புவேன்.

## 143

மகாபலேஸ்வர்,

*27, பிப்ரவரி, 1945*

நாளை நீ விடுதலை பெறுவாயென்றும் உன் உடல்நலன் அவ்வளவு திருப்திகரமாக இல்லையென்றும் தயாபாய் கூறுகிறான். முடிந்தால் என்னை வந்து பார். வர இயலாவிடில், விரிவான கடிதம் எழுது. நாம் சந்தித்து நீண்ட நாட்களாகி விட்டதால், உன்னைப் பார்க்க நான் பெரிதும் விரும்புவேன்.

## 144

மகாபலேஸ்வர்,

*22, ஏப்ரல், 1945*

உன் அருமையான கடிதம். [ஆமத்நகர் கோட்டை சிறையில்] அப்பாவுக்குப் பால் முதலியன கிடைக்குமென்று நான் உறுதியாக நம்புகிறேன். ஆகவே கவலை கொள்ளச் சிறிதும் இடமில்லை.

நீ உன் உடல்நலனை நன்கு தேற்றிக் கொள்ள வேண்டும். நீ அவ்வப்போது மேற்கொள்ளும் உண்ணா நோன்புகள் அவசியம் தானா என்பது பற்றி எனக்கு ஐயப்பாடுதான். இது பற்றி நான் உன்னுடன் கலந்து பேசவில்லை; ஆனால் என் கருத்து இது தான்.

நீ ஆமதாபாத்தில் வேலையை முடித்தபின், இங்கு வர வேண்டு மென்பதை நினைவிற் கொள்.

## 145

மகாபலேஸ்வர்,

*27, ஏப்ரல், 1945*

உண்ணா நோன்புகளைப் பொறுத்தவரை, நம் குழாத்தில் வேறு எவரையும் விட அதிகமாக உண்ணா நோன்புகளை மேற்கொண்டவன் நான் தான். தென்னாப்பிரிக்காவில் இருந்த போது, அதற்கான எந்த வாய்ப்பையும் நான் ஆர்வத்துடன் ஏற்று, உண்ணா நோன்பு மேற்கொண்டேன். ஓராண்டுக்கு மேலாக, நான் ஒரு வேளை உணவே அருந்தினேன். ஆனால் உண்ணா நோன்பை விட, அள வாக உணவருந்துவது இன்னும் கடினமான கட்டுப்பாடு என்று நான் கருதுகிறேன். உண்ணா நோன்புக்கு ஏற்ற பல சந்தர்ப்பங்கள் இருக்கலாம்; ஆனால் உறவினர் ஒருவருடைய மரணம் உண்ணா விரதத்திற்குக் காரணமாக இருக்க முடியாது என்பது நிச்சயம். மரணத்தை ஒட்டி உண்ணா நோன்பு மேற்கொள்வதென்றால், பிறப்பை ஒட்டியும் உண்ணா நோன்பு மேற்கொள்ளலாமல்லவா? நானும் இவ்வாறெல்லாம் தான் முதலில் உண்ணா நோன்பு மேற் கொண்டேன். ஆனால் தீர ஆலோசித்த பின் அவ்வாறு செய் வதைக் கைவிட்டேன். இதிலிருந்து உன் உண்ணா நோன்புகள் சரி யானவையா, தவறானவையா என்பதை நீ நிதானித்துக் கொள்ள லாம். மனித யாக்கை ஆண்டவனின் ஆலயம்; அவ்வாறே அதை மதித்துப் போற்ற வேண்டும்.

ஒழுங்காகவும் சுத்தமாகவும் வேலை செய்வதில் மோதிலால்ஜி உனக்கு முதலிடம் அளித்தார்; அதை நானும் மெச்சுகின்றேன். ஆனால் உன் சக ஊழியர்களிடம் நீ சற்று தாராளமாகவே இருக்க வேண்டும். இவ்வாறு தாராளமாய் இராவிடில், நீ உன் நண்பர் களுக்குச் செய்ய வேண்டிய கடமையிலிருந்து தவறுவாய். அது உன் தவறு என்று நீ கருதலாம். அவ்வாறு கருதுவது, அத்தவறு தலைத் தொடர்ந்து செய்வதற்காகவும் இருக்கலாம்; அல்லது அதி லிருந்து நீவிடுதலை பெறுவதற்காகவும் இருக்கலாம். உன் பல வீனங்களை நீ வெல்ல விரும்பவில்லையா? உன் ஒழுங்கு மற்றவர்களை யும் கவர்ந்து அவர்களுக்கும் பரவுகிறது. ஆகவே அந்தப் பழக் கத்தை நீ தொடர்ந்து மெற்கொள்வது நல்லதே. என்னைப் போல் நீயும், உன்னைச் சுற்றியுள்ள பகுதிகளைச் சுத்தமாக வைக்க முயல வேண்டும். சிறையில் நீ இந்தப் பாடத்தைப் படித்திருப்பாய். மகாதேவ் மற்றவர்களிடம் எவ்வளவு பெரிய மனதுடனும் பரிவுட

னும் நடந்து கொள்கிறார் என்பதை நீ பார்த்ததில்லையா? அவர் வாழ்க்கையிலிருந்து நீ ஒரு பாடம் ஏன் கற்றுக் கொள்ளக் கூடாது?

நீ இங்கு வா; ஆனால் என்னைத் திருப்தி செய்வதற்காக மட்டும் வராதே. உன் நோக்கை விரிவாக்கிக் கொண்டு, அல்லது விரிவாக்குவதற்காக நீ இங்கு வரவேண்டும். மனச் சஞ்சலத்துடன் இங்கு வந்தால், அதனால் நீ நன்மை எதுவும் அடைய மாட்டாய். நம் குறைகள் மடுவாய் இருந்தாலும் அவற்றை மலைபோல் மதித்து,மற்றவர்களின் குறைகள் மலைபோல் இருந்தாலும்அவற்றை மடுவாகக் கருத வேண்டும். அப்பொழுது தான் நாம் உண்மையான, நடைமுறைக்கு ஒத்த, மதிப்பீடு செய்ய முடியும்.

பிறரிடமிருந்து எதையும் ஒளித்து மறைக்காமலிருப்பதை ஒரு விதியாக மேற்கொள்ள வேண்டும். அதை நீ ஏற்றுக் கொண்டால், இக் கடிதத்தின் படியொன்றை எடுத்து எனக்கு அனுப்பு. இதில் கண்டுள்ள படிப்பினை நம்மில் பலரும் ஏற்றுக் கொள்ளத் தகுந்தது.

## 146

மகாபலேஸ்வர்,
*3, மே, 1945*

உன் உண்ணா நோன்புகளைப் பொறுத்தவரை, உடல்நலனை முன்னிட்டு மட்டுமே நீ அவற்றை மேற்கொள்ள வேண்டுமென்று கூறுவேன். அவ்வாறு செய்யும்போது, நீ உன்னையே அறியவும், ஆன்மிக லாபம் அடையவும், மூடநம்பிக்கையிலிருந்தும் வெளிவேடத்திலிருந்தும் விடுதலை பெறவும் வழி பிறக்கும். பா, மகாதேவ் ஆகியோர் நினைவாக, நாம் வேறு அதிகமாகச் செய்யாவிடினும், உண்ணாநோன்பாகிலும் மேற் கொள்ள வேண்டுமென்று எண்ணுவது மடமையாகும். இதை அவர்கள் அறிய முடியுமானால், மிகுந்த வேதனை அடைவார்கள். நம் உற்றார் உறவினரை நாம் இழக்கும் போது, கடினமான, அதே சமயத்தில் அவர்கள் மனத்துக்குப் பிரியமான காரியத்தை நாம் செய்ய வேண்டும். எடுத்துக்காட்டாக, மகாதேவின் இனிய பண்பையும், பாவின் கபடமற்ற விசுவாசத்தையும் நாம் மேற்கொள்ள வேண்டும். இதை ஓர் எடுத்துக்காட்டாகத் தான் சொல்கின்றேன். நம் உடல் இறைவனின் ஆலயமென்றோ, இறைவனை அடைய ஒரு சாதனமென்றோ நாம் கருதினால், அனைத்தும் இனிதே நடக்கும். அந்நிலையில், இப்பொழுது சமயம் என்ற பெயரில் செல்லும் கபடத்திற்கும் ஆஷாடபூதித் தனத்திற்கும் இடம் இருக்காது. நீ எளிய பழக்க வழக்கங்களை மேற்கொண்டு, ஆசைகள் பலவற்றை அடக்கக் கற்றுள்ளாய். மேலும் உன்னை உயர்த்திக் கொண்டால் இன்னும் அதிக சேவை செய்ய முடியும் என்பதால் தான் இதை உனக்கு விளக்க விரும்பினேன்.

அதே காரணத்திற்காகத் தான், நீ இங்கோ, சேவாகிராமம் ஆசிரமத்திலோ இருக்க வேண்டுமென்று விரும்புகிறேன். அப்பாவின் விருப்பமும் அது தான்; ஆகவே தான் உன்னை ஈர்க்க முயல்கிறேன். அப்பா சிறைக்கு வெளியே இருந்தால், ஒரு கணம் கூட நீ அவரருகில் இல்லாது வேறெங்கும் இருப்பதை அவரோ, நானோ விரும்பமாட்டோம். நீ என்னுடன் இருந்தால், உன் சகிப்புத் தன்மை வளரும்; வெவ்வேறு மனப்பாங்கு கொண்டவர் பலருடன் வேலை செய்ய வேண்டிய நிலையிலும், பற்றற்ற நோக்குடன் பணியாற்ற நீ பழகிக் கொள்வாய். நாம் மற்றவர்களைக் கவனித்து, அவர்களின் நல்ல அம்சங்களைக் கிரகித்து, அவர்களின் பலவீனங்களைப் பொறுத்துக் கொள்ள வேண்டும். அது தான் அவர்களைத் திருத்தும் வழி. ஆகவே சீக்கிரமே வா.

டாக்டர் கனூகா, நந்து பென், ஸ்ரீ [ஜீவன்லால்] திவான் ஆகியோர் பற்றி நீ செய்தி அனுப்பியது நல்லதே.

இப்பொழுது காலையாகி விட்டது. விளக்கை அணைக்கப் போகிறேன். ஆகவே இத்துடன் முடிக்கின்றேன்.

## 147

மகாபலேஸ்வர்,
5, மே, 1945

நீ எழுதியது நல்லதே. உன் கடிதத்தில் கண்ட செய்தி வேறு எவரிடமிருந்தும் எனக்குக் கிடைத்திராது. இத்துடன் அனுப்பியுள்ள குறிப்பு கஞ்சிபாய்க்கு [கனையலால் நானுபாய் தேசாய்]. நீ இங்கு வருவதால் நான் மேலும் ஒன்றும் சொல்லவில்லை.

## 148

சேவாகிராமம்,
25, ஜுலை, 1945

நீ இப்பொழுது எனக்கு எழுதுவதில்லை. நீ எழுத வேண்டுமென்று நான் எதிர்பார்க்கவும் கூடாது.

உன்னிடம் ஒரு பொறுப்பை ஒப்படைக்கவே இதை எழுதுகிறேன். பம்பாயில் புஷ்பா என்ற ஒரு பெண் மிகுந்த துன்பத்தில் உள்ளாள். என்னை வந்து பார்க்குமாறு அவளுக்குச் சொல்லியுள்ளேன். அதற்கிடையே, நவி ஹனுமான் கல்லியில் மணிலால் போபத்லால் டோஷியின் வீட்டில் அவளைத் தயவு செய்து நீ சந்திப்பாயா?

## 149

புனே,
27, நவம்பர், 1945

உன் இரு கடிதங்கள். எரவாடா உடன்படிக்கை பற்றிய ஒரு பிரச்னையில் சட்ட நிபுண ஆலோசனை எனக்குத் தேவையாய் இருக்

கிறது. [மங்களதாஸ்] பக்வாஸா அதைப் பற்றி ஆலோசித்து, அவசியமானுல் வழக்கறிஞருடன் கலந்து பேச வேண்டும். அந்த உடன்படிக்கையில் பத்தாண்டு வரம்பு குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனுல் 1935-ம் ஆண்டுச் சட்டத்தில அது இடம் பெறவில்லை. அதைச் சட்டப்படி செயல்படுத்த முடியுமா, முடியாதா? சட்டம் இதற்குத் துணை செய்யாது என்பது தான் எனது தெளிவான கருத்து. இதை அரசியல் பிரச்னையாக எழுப்ப முடியும் என்பதில் ஐயமில்லை. இப்போது அவ்வாறு எழுப்புவது உசிதமா என்பதை நாம் யோசித்து முடிவு செய்ய வேண்டும். அப்பா இங்கு வந்தபின், இதைப் பற்றி நாம் மேலும் விவாதிக்கலாம்.

## 150

வால்மீகி மந்திர், புது டில்லி,
*1946 ஆம் ஆண்டு முற்பகுதியில்.*

கனு [காந்தி]விடம் சொல்லி ஒரு படியெடுக்குமாறு உன்னிடம் சொல்லியிருந்தேன். நீ எடுத்துள்ள படியில் குறைகள் இருந்த போதிலும், அதை நான் ஏற்றுக் கொண்டுள்ளதற்குக் காரணம், அது உன்னுடையது என்பது தான். ஒவ்வொரு பக்கத்தின் ஓரத்திலும் சிறிது இடம் விட வேண்டும். நமக்கு வரும் கடிதங்களை நீ பார்த்தால். அவை அனைத்திலும் ஓரம் விடப்பட்டிருப்பதைக் காண்பாய். வேறெதற்கும் இப்பொழுது படி எடுக்க வேண்டிய அவசியமில்லை. இதை நீ வருங்காலத்தில் நினைவிற் கொள்ள வேண்டும்.

## 151

சேவாகிராமம்,
*14, பிப்ரவரி, 1946*

விவரங்கள் நிறைந்த உன் கடிதம். 'சட்ட சபை மோகம்' [இத் தலைப்பில் பிப்ரவரி 10ந் தேதி 'ஹரிஜன பந்து' இதழில் வெளி வந்த கட்டுரை] குஜராத்தி மொழியில் எழுதப்பட்டுள்ள போதிலும், நாடு முழுவதற்கும் பொருந்தும்; பத்திரிகைக் குறிப்பை இத்துடன் திருப்பி அனுப்புகின்றேன்.

நாம் விரைவில் சந்திக்கவிருப்பதால், மேலும் எழுதவில்லை.

## 152

*ஜூலை 18, 1947*

இத்துடன் அனுப்பியுள்ள கடிதத்தைப் பார். விரும்பினுல், அப்பாவுக்கும் அதைக் காட்டு. அப்பாவுக்கு அவகாசமில்லையெனில், விட்டுவிடு. நடக்கிறபடி நடக்கட்டும்.

அக்பர் [சாவ்தா] கடிதத்தைத் திருப்பி அனுப்பு.

## 153

ஜுலை 31, 1947,

காலை 4-30 மணி இரயிலில்.

[அகதிகள் பற்றி] இத்துடன் அனுப்பியுள்ள கடிதத்தைப் படித்துத் தேவையானதைச் செய். தந்தையிடம் நீ கொண்டுள்ள இணையற்ற பக்தியின் காரணமாக, நாட்டுக்குச் சேவை செய்ய உனக்கு மகத்தானதொரு வாய்ப்பு கிட்டியுள்ளது. அதை நீ விரும்புவதற்கிணங்கப் பயன்படுத்திக் கொள்.

நான் கக்சார்கள் பற்றி எழுதிய கடிதத்தில் எதுவும் இருக்கின்றதா?

## 154

சோதேபூர்,

11, ஆகஸ்ட், 1947

இத்துடன் இணைக்கப்பட்டுள்ளதில் தயாபாய் கையொப்பம் இட வேண்டுமென்று எண்ணுகிறேன். இந்தக் கணக்கு பற்றி எனக்கு ஒன்றும் தெரியாது. ஒரு வேளை, ஆசிரமத்தின் சார்பில் அதில் வேறு எவரும் கையெழுத்திட வேண்டியிருக்கும். இதைக் கவனித்து, என்ன செய்ய வேண்டுமென்று எனக்குக் கூறு.

காஷ்மீர் பற்றி நான் எழுதிய கடிதம் சர்தாருக்குக் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன். அதைவிட நீண்டதோர் அறிக்கை அனுப்பியுள்ளேன். அது சர்தாருக்கும் ஜவாஹர்லாலுக்கும்.

இங்கு நிலைமை சிக்கல் நிறைந்ததாக உள்ளது; ஆனால் அதைத் திருப்திகரமாகச் சமாளிக்க முடியுமென்று நம்புகிறேன். நான் இங்கு இன்னும் சில நாட்கள் தங்க வேண்டியிருப்பதன் காரணத்தை, நான் நேற்று நிகழ்த்திய சொற்பொழிவிலிருந்து நீ அறிவாய்.

கக்ஸார்கள் என்னை லாகூரில் சந்தித்தனர். அவர்களிடம் நான் கொடுத்த குறிப்பு உனக்குக் கிடைத்திருக்குமென்று எதிர்பார்க்கின்றேன். வேலையிலிருந்து ஓய்வு என்றாகிலும் கிட்டுமா?

## 155

கல்கத்தா,

13, ஆகஸ்ட், 1947

என் கையொப்பம் தேவையில்லை என்று நான் எண்ணியதால், கையொப்பத்திற்காக அனுப்பப்பட்ட பத்திரங்களை அப்படியே திருப்பி அனுப்பினேன்.

காலத்தில் மழை பெய்யாததால், நமக்கு நெருக்கடியான நிலை உருவாகியுள்ளது. நமக்குக் கிடைத்துள்ள சுதந்திரத்திற்கு நாம் எவ்வளவு விலை கொடுக்க வேண்டியிருக்கிறது!

அளவுக்கு மீறி வேலை செய்வதால், சர்தார் உடல் நலன் முறிந்து விடுமென்று அஞ்சுகிறேன்,

இத்துடன் அனுப்பியுள்ளதைப் படி; சர்தாரையும் படிக்கச் சொல். கண்டிப்பாக அவசியமில்லாவிடில் அவருடைய நேரத்தில் ஒரு நிமிடத்தைக் கூட எடுத்துக் கொள்வது, பெரும் குற்ற மாகும்.

## 156

கல்கத்தா,

*26, ஆகஸ்ட், 1947*

உன்மேல் நான் இரக்கப்படுகிறேன். ஆனால் இந்த இரக்கம் உனக்குத் தேவையில்லை. சுமையைத் தாங்கிக்கொள்ளும் ஆற்றல் உன்னிடம் உள்ளது. ஆகவே அச்சுமையைத் தொடர்ந்து தாங்கி, சர்தாரின் சுமையைக் குறை.

[சி. பி.] இராமசாமி படுகாயமடைந்தார் என்ற செய்தியை உன்னிடமிருந்து தான் நான் அறிந்தேன். யாரோ எனக்கு அவ் வாறு எழுதியிருந்தார்கள். ஆனால் அதை நான் நம்பவில்லை. ஆகவே நான் எழுதவில்லை ; இப்பொழுது நிச்சயமாக எழுதுவேன்.

## 157

கல்கத்தா,

*30, ஆகஸ்டு, 1947*

இத்துடன் அனுப்பியுள்ள கடிதங்களை அவரவர் முகவரிக்கு அனுப்ப ஏற்பாடு செய். உன்மேல் தாங்க முடியாத சுமையை ஏற்ற வில்லை என்று எண்ணுகிறேன். இந்த ஏற்பாட்டின் மூலம் தான் கடிதங்கள் உரிய நேரத்தில் போய்ச்சேரும்படி செய்யமுடியும். ஜவாஹர்லால்ஜிக்கு எழுதியுள்ள கடிதத்தை சர்தார் படித்தவுடன், வெகு சீக்கிரமே அனுப்பிவிட வேண்டும்.

## 158

கல்கத்தா

*1, செப்டம்பர், 1947.*

உன்மேல் அதிகப் பளு சுமத்தப்பட்டுள்ளது என்று நீ எண் ணுவது நல்லதே. நூற்றுக்கு நூறு உடல் நலமாயுள்ளவர் ஒருவ ராவது சர்தாருடன் இருக்கவேண்டும்.

அவருக்கு அவகாசம் கிடைக்கும்போது, என் கடிதத்தை அவர் படிக்கும்படி செய்.

நேற்றிரவு, இங்கு எதிர்பாராத சில நிகழ்ச்சிகள் நடந்தன. கத்தியால் குத்தப்பட்டதாகச் சொல்லப்பட்டவன், குத்தப்படவே யில்லை. கைகலப்பு நடந்தது உண்மையே; அதில் அவன் தரையில் விழுந்தான். மேலும் செய்தி விரைவில் கிடைக்குமென்று எதிர் பார்க்கிறேன்.

குளித்துவிட்டு, உடனே இதை எழுதத்தொடங்கினேன்.

## 159

கல்கத்தா,

*2, செப்டம்பர், 1947*

இத்துடன் அனுப்பியுள்ள ஆவணங்களை என்ன செய்ய வேண்டுமோ, அவ்வாறு செய். நான் உண்ணுநோன்பு மேற்கொண் டது ஏன் என்பதை நீ விரைவில் புரிந்துகொள்வாய். ராஜாஜி என்னுடன் கடுமையாக வாதாடினர்; அவர் எவ்வளவு வன்மை யாக வற்புறுத்தினரோ அந்த அளவுக்கு என் முடிவில் நான் மேலும் உறுதியானேன். இங்கு இருவாரங்களாக இருந்த அமைதி, தோன்றி மறைந்த ஒளிக் கற்றை தானு?

## 160

*8, செப்டம்பர், 1947*

துரித இரயிலில் நான் டில்லிக்குப் புறப்படுகிறேன். ஆகவே தான் இச்சிறு கடிதம். உன் ஆட்சேபங்கள் பொருத்த மற்றவை. இவ்வளவு வருந்தி அழைத்த பின் நான் டில்லிக்குப் போய்த்தான் தீர வேண்டியதாயிற்று. ஆனல் நான் அங்குபோன பின், என்ன செய்ய வேண்டுமென்பதை சர்தாரும் ஜவாஹரும் முடிவுசெய் வார்கள். நான் எங்கு தங்க வேண்டுமென்று அவர்கள் விரும்பு கிருர்களோ, அதன்படியே அவர்கள் செய்யட்டும். பிர்லா மாளி கையில் தங்கக்கூடாது என்பதல்ல; ஆயினும் அங்கு வசதிகள் மிகக் குறைவாக இருக்கக் கூடுமென்பதையும் பொருட்படுத்தாது நான் தோட்டிகள் குடியிருப்பில் தங்கவே விரும்புவேன். நகரத்தில் அமைதியையும் ஒழுங்கையும் நிலைநாட்ட சர்தாரின் ஆற்றலுக்கும் இது ஒரு சோதனையாகும். இரவில் என்னைப் பார்க்க எவரும் வரமுடியாதென்ருலும் பரவாயில்லை.

பிரஜ்கிருஷ்ணுவுக்குத் தகவல் தெரிவி.

## 161

பிர்லா மாளிகை, புதுடில்லி,

*29*, செப்டம்பர், *1947*

நாரணதாஸ் காந்தியின் கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். என்னிடமிருந்து செய்தி கிடைக்கும்வரை, நடவடிக்கை எடுக்கக் கூடாதென்று அவருக்குத் தந்தி அனுப்பியுள்ளேன். ஆனால் சர்தாரைக் கேட்டு, என்ன செய்ய வேண்டுமென்று எனக்குத் தெரிவி.

[அனந்த்ராய்] பட்டாணியின் தந்தியையும் இத்துடன் அனுப்பியுள்ளேன். அதுபற்றி என்ன செய்யவேண்டும்? சமல்தாஸ் [காந்தி] எது செய்தாலும், சர்தாரின் சம்மதம் பெற்றுத்தான் செய்கிறார் என்று நான் எண்ணுகிறேன்.

இத்துடன் அனுப்பியுள்ள இரு கடிதங்களையும் திருப்பி அனுப்பி விடு.

## 162

புது டில்லி

இதைக் கொண்டுவரும் சேவக்ராம், ஹரிஜனத் தொண்டில் மிகுந்த ஈடுபாடு கொண்ட உண்மை ஊழியர். சிந்துவில் உள்ள ஹரிஜனங்கள் அனைவரும் இந்தியாவுக்குக் கொண்டுவரப்பட்டு பம்பாய் மாநிலம், கச்சு, சௌராஷ்டிரம், குஜரத், உதயபூர், ஜோத்பூர் போன்ற இடங்களில் குடியேற்றப்படவேண்டும். இதில் தம்மால் இயன்ற அளவு சர்தார் உதவட்டும்.

## 163

பேசா நோன்பு நாளில் எழுதியது,

*13*, ஜனவரி, *1948*

சர்தாருடன் நான் பேசினேன். ஆகவே இப்போதில்லை. பவல்பூரிலிருந்து வந்துள்ளவர்களை நான் காணவேண்டும். நான் உன்னைப் பிறகு அழைக்கின்றேன். தப்பெண்ணம் எப்படி எழுந்ததென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் நான் அதைத் திருத்திக் கொள்கிறேன்.

[சர்தார் பட்டேலின் குமாரர் ஸ்ரீ தயாபாய் பட்டேலுக்குக் காந்திஜி எழுதிய கடிதங்கள் இப்பகுதியில் கொடுக்கப்பட்டுள்ளன:]

## 1

எரவாடா மந்திர்,
*19*, நவம்பர், *1932*

உன் உடல் நலன்பற்றி எங்களுக்குத் தினமும் செய்தி வருகின்றது. நோய் நமக்கு ஒரு சோதனையாகத்தான் வருகிறது. அதை நீ பொறுமையாகத் தாங்கிக் கொள்கிறாயென்று பாய் கரம் சந்த் எழுதுகிறார். உன்னிடமிருந்து நான் எதிர்பார்த்ததும் அது தான். மணிபென் பற்றிக் கவலைப்படாதே.

நிச்சயமாக இறைவன்தான் உனக்கு வழிகாட்டியாக இருப்பார்.

## 2

எ. ம.
*22*, நவம்பர், *1932*

தேவதாஸ் உன்னைப்பற்றி செய்தி தருகிறான். தினமும் எங்களிடமிருந்து கடிதம் வந்தால் நீ மகிழ்ச்சி அடைவாயென்று அவன் கூறினான். உன்னைப்பற்றித் தினமும் மிகுந்த பரிவுடன் எண்ணத் தவறியதில்லை. எனினும், வேண்டுமென்றேதான் ஒவ்வொரு நாளும் எழுதாமலிருந்தேன். ஆனால் இனி, தினமும் எழுதவும் செய்வேன்.

## 3

எரவாடா சிறை,
*25*, நவம்பர், *1932*

ஸ்ரீ நடராஜன் பின்வருமாறு எழுதுகிறார் :

“சுரம் இன்னும் இருக்கக் கூடிய ஒரு சில நாட்களில் சிக்கல் எதுவும் நேரிடாமல், தயாபாய் தேறி விடுவாரென்று நம்புகிறேன் ; இறைவனை இறைஞ்சுகின்றேன். அவர் வயது, ஊக்கமான அவர் பழக்கவழக்கங்கள், இயல்பாகவே உறுதியாயுள்ள அவர் உடல்

ஆகியவை அவருக்கு உறுதுணையாக நிற்கும். அவர் தம் பெரியப்பா வுடன் தங்கியிருந்த போது, அனேகமாக முழு நேரமும் எங்களுட னேயே இருப்பார்; எங்கள் வீட்டில் அவர் மேல் அனைவருக்கும் பிரியம். காமகோடியை அவள் சகோதரர்களும் சகோதரியும் அழைப்பது போலவே, அவரும் அக்கா என்றுதான் அழைக்கின்றார். எங்கள் வீட்டில் அயலார் போல் உபசாரம் எதுவுமின்றி, எந்த நேரமும் அவர் தாராளமாக வருவதைப் பெரிதும் வரவேற்கிறோம்.''

நான் எழுதிய கடிதத்திற்கு ஸ்ரீ நடராசன் பதிலிலிருந்து ஒரு பகுதி இது. கரம் சந்த் கடிதம் நேற்று சற்று தாமதமாகவே கிடைத்தது. ஹரிஜனத் தொண்டு பற்றி ஒருவருடன் பேசிக்கொண்டிருந்ததால் நான் எழுத இயலவில்லை. நீ உன் சுரத்தைச் சிறிது சிறிதாகக் களைந்து வருகிறாய். உடலுக்கு ஒழுங்கான ஓய்வு கிடைத்து, உணவு, நீர் ஆகியவை பற்றிய விதிகள் ஒழுங்காகக் கடைப்பிடிக்கப்படும் வரை, விஷ சுரம் இறுதியில் நன்மையே பயக்கும்; ஏனென்றால் உடலிலிருந்து நச்சுச் சத்து அனைத்தையும் அது நீக்குகிறது.

நீ உற்சாகமாய் இருக்கிறாயென்று எதிர்பார்க்கின்றேன்.

## 4

எ. ம.

*26, நவம்பர், 1932*

மணிபென்னிடமிருந்து இப்பொழுது உனக்கு ஒழுங்காகக் கடிதங்கள் வந்து கொண்டிருக்குமென்று நம்புகிறேன். ஆகவே நீ படிப்பதற்கோ, மற்றவர்கள் படித்து உன்னிடம் சொல்வதற்கோ, இப்பொழுது நிறையக் கடிதங்கள் இருக்கும். இப்பொழுது நீ தாராளமாகப் படிக்க அனுமதிக்கப்படுகிறாய். விரைவில் படுக்கையிலிருந்து எழுந்து நடக்கவும் அனுமதிக்கப்படுவாய். அதற்குள் பொறுமை இழந்துவிடாதே. படுக்கையில் இருந்து கொண்டே பிறருக்குச் செய்யும் சேவையை நீ தொடர்ந்து செய்யலாமல்லவா?

## 5

எ. ம.

*27, நவம்பர், 1932*

இன்று உன் உடல்நலன் பற்றி வந்துள்ள செய்தி வழக்கமாக வரும் செய்தியைக் காட்டிலும் திருப்திகரமாக உள்ளது.

நான் நேற்றுச் சொன்னது போல், படுக்கையிலிருந்தே ஒரு நோயாளி மற்றவர்களுக்கு உதவி செய்ய முடியும்; இறைவனைப் பற்றித் தியானம் செய்வதில் நேரத்தை ஈடுபடுத்தித் தன்னைக்

கவனிப்பவர்களிடம் பொறுமை இழந்து ஆத்திரப்படுவதை அடக்கி, அன்பு நிலவும் ஒரு சூழ்நிலையை உருவாக்க முடியும்.

அத்தகைய இலட்சிய நோயாளிகள் இருவரை எனக்குத் தெரியும். ஒருவர் பிரான்சில் உள்ளார்; மற்றவர் இந்தியாவிலே உள்ளார். பிரான்சில் பதினெட்டு வயதுப் பெண் ஒருத்தி, மரணத்திற்குப் பீடிகையாய் இருந்த தன் நோயின் போது மிகுந்த பரிவுடன் நடந்து கொண்டதால், அவள் மரணத்திற்குப் பின் அவளைப் பரிசுத்தராகப் போற்றித் தொழுகின்றனர். போர்பந்தர் அருகே உள்ள லதா மகராஜ் தொழுநோயால் வருந்தினர். பிலேஸ்வரில் சிவன் ஆலயத்தில் அவர் குடி புகுந்து, இராம நாம பாராயணம் செய்து, இராமாயணத்தைப் படித்து வந்தார். இறுதியில் அவர் குணமடைந்த பின், மிகத் திறமையான சமயப் போதகராகத் திகழ்ந்தார். அவரைக் கண்டு, அவர் உரையாற்றுவதைக் கேட்கும் வாய்ப்பு எனக்குக் கிட்டியது.

இறைவனிடம் பக்தி கொண்டவர் நோயினுல் கூட நன்மை பெற முடியும்; அவர் எப்பொழுதும் உளச் சோர்வு அடைய மாட்டார்.

## 6

எ. ம.
*17, டிசம்பர், 1932*

நீ இன்னமும் முழுதும் குணமடையவில்லை; ஆனுல் மனச் சோர்வு அடைவது உன் இயல்பல்ல. குணமடைவது என்பது நோயாளியின் கையில் உள்ளது தான் என்பதை உணர வேண்டும். அவர் என்றுமே நம்பிக்கை இழப்பதில்லை; பொறுமையைக் கைவிடுவதில்லை. துன்பப்பட்டுப் போராடுவது தன் கதி என்றிருக்கும் வரை, அவர் துன்பத்தைத் துணிவுடன் தாங்கிக் கொள்வார். நீ முயற்சி செய்து பார்த்தால், உணவுகள், மருந்துகள் எல்லாவற்றையும் சேர்த்தாலும், அதை விட ஆற்றல் மிகுந்த அரு மருந்து இராமநாமம் என்பதை நீ உணர்வாய். அதன் முன், மின்சக்தி கூட ஒரு பொருட்டல்ல. அது உனக்கு அமைதியும் ஆற்றலும் தரும். நீ கடிதங்கள் எழுத விரும்புவது போல் தோன்றுகிறது. தற்போதைக்கு எழுதாதே. இப்பொழுது பூர்ண ஓய்வெடுப்பதே உன் கடமை. விரும்பினுல், எங்களையோ, உன் நண்பர்களையோ உற்சாகப்படுத்தும் முறையில் செய்தி எழுதி அனுப்பலாம். ஆனுல் அலுவலக வேலை செய்வது பற்றி இப்பொழுது சிந்திக்கவும் கூடாது. இப்புத்திமதியை நீ பின்பற்றுவாயென்று நம்புகிறேன். இறைவன் உனக்கு நலன் அருள்வார்.

## 7

எ. ம.
*20, டிசம்பர், 1932*

நீண்டதொரு கடிதம் எழுத எண்ணியிருந்தேன். ஆனுல் இப்பொழுது அதற்கு அவகாசமில்லை. விரைவில் குணமடை. பா,

வேலன்பென் [ஸ்ரீமதி லக்ஷ்மிதாஸ் புருஷோத்தம் ஆஷர்], பால் [கலேல்கார்] ஆகியோர் என் முன் அமர்ந்துள்ளனர்.

## 8

எ. ம.

*22*, டிசம்பர், *1932*

உன்னைப் பற்றிக் கிடைத்துள்ள செய்தி மிக நன்றாக உள்ள தால், நான் எதுவும் எழுதவே தேவையில்லை. நோய் பற்றியோ, அலுவலகப் பணி பற்றியோ, இப்பொழுது சிந்திக்காதே. இயன்றால் இறைவனை மட்டுமே மனத்திற் கொண்டு. அவன் கையில் உன்னை ஒப்படைத்துக்கொள். "இறைவா, நான் உன்னிடம் சரணடைந் தேன்; என்னைக் காத்தருள்", என்று தொடங்கும் கேசவலால் பட் துதிப்பாடல் உனக்கு நினைவில்லையா?

## 9

பர்ணகுடி, புனா,

*26*, ஆகஸ்ட், *1933*

உன்னிடமிருந்து கடிதமே வராதது வியப்பாக இருக்கிறது. நீ கடைசியாக நாசிக்குக்கு எப்பொழுது சென்றாய்? சர்தார் பற்றி விவரமாக எழுது. மணிபென் பற்றி என்ன செய்தி? சிறையில் அவளுடைய சகக் கைதிகள் யார்? அவள் எப்படி இருக்கிறாள்? அவளைப் பார்க்க யாரும் சென்றிருந்தனரா? நீ எப்படித் தேறி வரு கிறாய்? நாளுக்கு நாள் என் பலம் கூடி வருகிறது; ஆகவே அது குறித்துக் கவலைப்படுவதற்கு இடமில்லை.

## 10

சந்தா,

*14*, நவம்பர், *1933*

வித்தல்பாய் ஈமச்சடங்குக்கு நான் வராதது பற்றி நீ ஏமாற்றம் அடைந்தது எனக்கு விளங்குகிறது. ஆனால் அதில் வேறொன்றும் செய்ய வகையில்லாது போயிற்று. போர்வாள் இல்லாத படை வீர னால் பலன் எதுவும் இராதது போலவே, சட்ட மறுப்பு என்னும் ஆயுதம் இல்லாமல், என்னால் பலன் ஒன்றும் இராது; மேலும், உறுதிகளின் அடிப்படையில் அமைத்து எழுப்பப்பட்டது தான் என் வாழ்க்கை. ஆகவே தற்போதைக்கு நான் சிறையில் இருக்க வேண்டும்; அல்லது ஹரிஜனத் தொண்டில் ஈடுபட வேண்டும். வேறெதுவும் செய்ய என்னால் முடியாது.

வித்தல்பாயின் குணங்களில் சில குறைகளும் இருந்தன. ஆனால் அவர் மரணத்திற்குப் பின் அவற்றை நாம் நினைவில் கொள்ள வேண்டியதில்லை. அவருடைய பல நற்பண்புகளையே நாம் இப்பொழுது போற்றி மதிக்க வேண்டும். நான் அவருக்கு நீண்ட தொரு கடிதம் எழுதினேன் என்பதும், அதற்கு அவர் இனிய தொரு பதில் அனுப்பினார் என்பதும் உனக்கு ஒரு வேளை தெரியாமலிருக்கலாம். கடைசிக் காலம் வரை, அவருடன் என் சொந்த உறவும் தொடர்பும் நிலைத்தன; எங்கள் கருத்து வேறுபாடுகளால் அவை பாதிக்கப்படவில்லை. நான் வராததால் நீயும் இன்னும் சிலரும் சிறிது கோபமடைந்துள்ளீர்கள் என்று மணிபென் எழுதுகிறாள். ஆகவே தான் இக்கடிதம்.

அப்பா சிறையில் இருப்பதால்தான் இது குறித்துச் சஞ்சலமடைகிறேன். அவர் வெளியில் இருந்தால், இத்தகைய தப்பெண்ணங்களை அகற்றும் பொறுப்பை அவரிடம் ஒப்படைத்து விடுவேன். என் விளக்கம் உனக்குத் திருப்தி அளிக்காவிடில், நீ எனக்கு விவரமாகவும் வெளிப்படையாகவும் எழுதத் தயங்காதே. உனக்குத் திருப்தி ஏற்படவில்லையென்றால் என்னுடன் வாதாடுவது உன் கடமையாகும்.

## 11

எ. ம.

நவம்பர், *1933*

உன் கடிதம் கிடைத்தது. வேலையின் காரணமாக, உடனே பதில் அனுப்ப இயலவில்லை. தற்போதைக்கு நீ மணிபென்னைச் சிறையில் ஒவ்வொரு முறையும் போய்ப் பார்க்கவேண்டும். அவ்வாறு பார்க்கும்போது, நான் அவளைப் பற்றிச் சிந்திக்காத நாள் ஒன்று கூடக் கிடையாது என்று அவளிடம் கூறு. ஆனால் எதையும் தாங்கும் அவள் இதயத்திலும் மன உறுதியிலும் எனக்கு முழு நம்பிக்கை இருப்பதால், நான் கவலைப்படுவதில்லை.

நீ அப்பாவைப் பார்க்கும்போது, தவறாமல் ஒவ்வொரு வாரமும் அவருக்கு எழுதியுள்ளேன் என்று கூறு.

பெரியப்பாவின் [ஸ்ரீ வித்தல்பாய் பட்டேல்] உயிலை நான் படித்தேன். அதற்குப் பம்பாயில் மெய்ப்பித்த விருப்பாவணப் படி கிடைப்பதில் சிரமம் ஏற்படகூடும். ஆனால் நாம் இப்பொழுது ஒரு நடவடிக்கையும் எடுக்கக் கூடாதென்றும் அவர் விட்டுச் சென்றதனைத்தும் சுபாஷ் போஸின் கைக்கு வந்து சேரும் வரை காத்திருக்க வேண்டுமென்றும் தான் நான் கருதுகிறேன். சுபாஷ் பாபு அதைப் பொது நலனுக்காகத் தான் பயன்படுத்துவாரென்று நான் நம்புகிறேன்.

பாபுவின் உடல்நலன் பற்றி எனக்குச் செய்தி அனுப்பு. நான் நலமாக இருக்கின்றேன்.

## 12

கள்ளிக்கோட்டை,
*13, ஜனவரி, 1934*

உன் கடிதம் கிடைத்தது. ஏறக்குறைய ஒரே நேரத்தில் மூன்று கடிதங்கள் வந்து சேர்ந்தது, உன் உள்ளத்தை நான் என் மன ஆற்றலினுல் வசியம் செய்தது போல் தோன்றுகிறது.

மகாதேவ் கடுமையான சோதனையை அனுபவித்து வருகிருர். அவருக்கு சிறிது சுகக் குறைவு ஏற்படக்கூடும்; அவ்வளவுதான். ஜீவன்ஜிக்கு அவர் எழுதிய கடிதத்திற்குப் பதில் கூறு முகத்தான் நான் நீண்டதொரு செய்தி அனுப்பியிருந்தேன். மறுமுறை நீ அவருக்கு எழுதும்போது, பின் வருமாறு எழுது:

''மகாதேவிடமிருந்து எனக்குக் கடிதங்கள் வர வேண்டு மென்ற அவசியமில்லை; ஆனுல் அவற்றைப் படிக்க எனக்கு நேரம் கிடைக்காதென்று அவர் எண்ணிவிடக் கூடாது. கீதையைப் பற்றி அவர் எழுதியது நுட்ப அறிவு மிக்கதாய் இருந்தது; அதைப் பற்றி என் கருத்தைத் தெரிவிக்க உடனடியான அவசியமில்லை என்று கருதினேன். செய்யுள்களுக்கு நான் கண்டுள்ள உட் பொருள் பற்றி நானே பெரிதாகக் கருதவில்லை. அப்பொருள், நான் கண்டுள்ள பொது விளக்கத்துடன் பொருந்தாத போது, அதை நான் பரிசீலனை செய்ய வேண்டியது அவசியம்தான். ஆனுல் பொதுப்படையாகப் பார்த்தால் எந்தப் பொருளும் பொதுவாகப் பொருந்துமென்றே கருதுகிறேன். ஆகவே என் பொருளைக் காட் டிலும் மகாதேவ் ஆழ்ந்த ஆலோசனைக்குப் பின் கூறும் பொருளை நான் ஏற்றுக் கொள்ளத் தயாராக இருக்கின்றேன். மேலும் ஒரு குறிப்பிட்ட உரையாசிரியர் விளக்கத்தை அடிப்படையாகக் கொண்டுதான், நான் என் கருத்தை உருவாக்கியிருந்தேன். ஆகவே என் கருத்துக்களை எதிர்பார்க்காமல், அவர் தம் ஆராய்ச் சியைத் தொடர்ந்து நடத்தித் தம் மொழியாக்க வேலையை நிறைவு செய்ய வேண்டும். அது முடிந்தபின் அது முழுவதையும் படிக்க, ஆண்டவன் சித்தமிருந்தால், எனக்கு நிறைய அவகாசம் கிடைக்கும்.

''கடவுளை நாடிக் கறுப்புப் பெண்ணின் யாத்திரை' என்ற தலைப்பில் பெர்ஞட்ஷா எழுதியுள்ள புத்தகத்தை மகாதேவ் படித் திருப்பார். 'இறைவனை நாடி வெள்ளைப் பெண்ணின் யாத் திரை' என்ற தலைப்பில் மாக்ஸ்வெல் எழுதிய நூலை நான் அவருக்கு அனுப்புகின்றேன். அது அவருக்குப் பத்திரமாகக் கிடைத்தால், அடுத்த கடிதத்தில் வந்து சேர்ந்த விவரம் பற்றி எழுதுவார்.''

பெல்காம் போய்ச் சேர்ந்தவுடன் மணியையும் மகாதேவையும் காண நிச்சயம் முயற்சி செய்வேன்.

## 13

*கராச்சி,*
*11, ஜூலை, 1934*

வல்லபபாய் உடல் நலன் பற்றி உடனே கடிதம் எழுது. மணி பென்னையும் தன் உடல் நலன் பற்றி எழுதச் சொல். மகாதேவ் எல்லாச் செய்திகளையும் கொண்டு வருவாரென்று நம்புகிறேன்.

நீ நலமாக இருக்கிறாயென்று எதிர்பார்க்கின்றேன்.

## 14

*சேவாகிராமம், வார்தா,*
*9, மார்ச்சு, 1941*

இத்துடன் அனுப்பப்படும் கடிதத்தை சர்தாருக்குக் கொடு —அல்லது அனுப்பு—அவர் கடிதத்தைப் பெற அனுமதிக்கப்படுவா ரென்றால்.

[அனைத்திந்திய நூற்பாளர் சங்கத்திற்கு] இருபது இலட்ச ரூபாய் திரட்டுவீர்களென்று உன்னிடமிருந்தும் பாந்திகுமாரிட மிருந்தும் [நரோத்தம் மொரார்ஜி] எதிர்பார்க்கின்றேன் என் பதை நினைவிற் கொள்.

மணிபென்னை நீ சந்தித்தால், உடல் நலனை வளர்க்கத் தன்னால் இயன்றதனைத்தையும் செய்யவேண்டுமென்று அவளிடம் கூறு.

## 15

*சேவாகிராமம், வார்தா,*
*7, மே, 1941*

இத்துடன் வரும் கடிதங்களைப் பொறுத்தவரை, இயன்றால், எதைச் செய்யவேண்டுமோ, செய். கடிதத்தை அப்படியே மகா தேவுக்கு அனுப்பு; அல்லது ஒரு படியெடுத்து அதை மட்டும் அவருக்கு அனுப்பு.

ஓரிரு வரிகள் எழுதுமாறு பாபாவிடம் சொல்.

## 16

*சேவாகிராமம்,*
*15, ஆகஸ்ட், 1944*

உன்னுடன் தங்க வேண்டுமென்று வற்புறுத்தினார்கள்; ஆனால் நான் சம்மதிக்கவில்லை. நான் பிர்லா மாளிகையில் தங்கு

வது யாரோ ஒருவருக்குப் பிடிக்கவில்லை என்ற காரணத்திற்காக மட்டும், நான் அங்கு தங்குவதை நிறுத்த முடியாது. உன்னுடன் தங்குவதில் எனக்கு மகிழ்ச்சிதான். இதுவரை உன் வீட்டை நான் பார்த்தது கூட கிடையாது. ஆனல் எது எனக்குச் சரியென்று படுகிறதோ, அதைத்தானே நான் செய்யமுடியும்?

அடுத்த சனிக்கிழமை பம்பாய் சேர்ந்து, மறுநாள் திரும்பலாமென நம்புகிறேன்.

## 17

சேவாகிராமம்,
*19*, அக்டோபர், *1944*

உன் கடிதம் கிடைத்தது. சிறைக் கைதிகளைப் பேட்டிகாண வருபவர்களை முதலில் சோதனை போட்டுவிட்டுத்தான் அனுமதிக்க முடியுமென்று பெல்காம் சிறை அதிகாரிகள் கூறியுள்ளனரென்ருல், அங்கு அடைக்கப்பட்டுள்ள நண்பர்கள், உறவினர் ஆகியோரைச் சந்திக்கும் எண்ணத்தை நாம் கைவிடவேண்டும். ஆனல் அவர்கள் அவ்வாறு கூறவில்லையென்ருல், நாம் பேட்டி காணச்சென்று சோதனை எதற்கும் உடன்பட மறுக்கவேண்டும்.

இறைவன் மணிபென்னைக் காத்தருள்வான்.

மிகுந்த அவசரத்தில் இது எழுதப்படுகிறது.

# தயாபாய் பட்டேலின் மகனுக்கு (சிறுவன்) காந்திஜி எழுதிய கடிதங்கள்

## 1

வார்தா,
*7, அக்டோபர், 1933.*

உன் கடிதம் கிடைத்தது. நல்ல திருத்தமாக எழுத நீ பழக வேண்டும். சித்தியுடன் [மணிபென்] நீ இங்கு வரவேண்டும். உன்னைக் காண்பதில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி. உன் வயதில் உள்ள மற்றக் குழந்தைகளுடன் விளையாடவும் உனக்கு வாய்ப்பு கிடைக்கும். தாத்தாவுக்கு நீ எழுதுகிறாயா ?

## 2

போர்சாத்,
*31, மே, 1935.*

இன்று உன் பிறந்தநாள் என்று மணிபென் கூறுகிறாள். இந் நாளை நீ எப்படிக் கொண்டாடப் போகின்றாய்? நீ இன்று ஏதாவது ஒரு நல்ல காரியம் செய்யவேண்டாமா? அவ்வாறு செய்ய வேண்டுமானால் என்ன செய்வதென்று மணிபென்னைக் கேள். நீ மேலும் மேலும் பெரியவனாகவும் நிச்சயம் வளர்வாய்; மேலும் மேலும் நல்லவனாகவும் வளர வேண்டுமென்று நான் விரும்புகிறேன்.

## 3

சேகான், வார்தா;
*3, ஜூன், 1938.*

உன் கடிதம் இன்று கிடைத்தது. உனக்கு இப்பொழுது என்ன வயதாகிறது? அதைக் குறிப்பிட ஏன் மறந்துவிட்டாய்? நீ என் ஆசியைக் கோருகிறாய். அப்படியானால் பதிலுக்கு நீ எனக்கு ஏதாவது தரவேண்டாமா? என்ன தருவாய்? புத்தாண்டில் நீ எந்தப் புதுப்பணியைத் தொடங்கப் போகிறாய்?

## சமர்ப்பணம்

பாபுஜி எனக்கு எழுதிய இக்கடிதங்களை நான் அரும் செல்வ மாகவும் புனிதமாகவும் போற்றுகின்றேன். அவைதான் உண்மையில், எனக்குள்ள குடும்பச் சொத்து. ஓரளவு தயக்கத் துடன்தான் அவற்றை நான் வெளியிடுகின்றேன். ஆயினும் இக் கடிதங்களைப் பாபுஜியின் சொந்த நாட்டுச் சோதரருடன் மட்டு மல்ல, மற்ற நாடுகளில் உள்ள அவருடைய எண்ணற்ற நண்பர்க ளுடனும் பகிர்ந்து கொள்வது என் கடமையும் உரிமையும் ஆகு மென்று நான் உணர்கிறேன். பாபுஜியின் உயர்ந்த தன்மைபற்றியும் அவர் அரிய ஆளுமைபற்றியும் அவர்கள் நேரடியாக அறிந்து கொள்ள இக்கடிதங்கள் வாய்ப்பளிக்கும்.

தனி மனிதரிடம் அவர் கொண்ட அன்பு, சிறு குழந்தைகளிடம் அவர் காட்டிய அளவற்ற பரிவு கலந்த அனுதாபம், ஆழ்ந்த சமயப் பற்று தோய்ந்த அவர் உள்ளம், இவை அனைத்தும் இக்கடிதங்களி லிருந்து வெளிப்படுகின்றன.

ஆகவே இச்சிறு நூலை உலகுக்கு அறிமுகப்படுத்துவதன் மூலம், வாசகர்கள் பாபுஜியை இன்னும் தெளிவாக உணர்ந்து போற்றச் செய்யவும், அவருடைய அற்புதத் தொண்டுள்ளத்தையும் அன்பு இதயத்தையும் ஓரளவாகிலும் அறிந்து எட்டிப்பிடிக்கவும் வகைசெய்யுமென்று நம்புகிறோம்; இறைஞ்சுகின்றோம்.

இக் கடிதங்கள் அனைத்தையும் கவனமாகப் படித்துவிட்டுச் சீராகத் தொகுத்து உதவிய என் நண்பர் அலைஸ் எம். பார்னஸுக்கு நான் பெரிதும் கடமைப்பட்டிருக்கின்றேன். ஒவ்வொரு கடிதத் திற்கும் அவர் ஒரு தலைப்பு தந்து, கடிதத்தின் மையப்பொருளை எளிதில் உணர உதவியுள்ளார். கடிதத்தில் குறிப்பிடப்பட்டுள்ள நிகழ்ச்சிகளை விளங்கிக் கொள்ளவும் பல்வேறு பெயர்களையும் அடையாளம் கண்டு கொள்ளவும் உதவுவதற்கு அவர் விளக்கக் குறிப்புகளும் தந்துள்ளார். அவர் இதை மேற்கொண்டிராவிடில், இக் கடிதங்கள் பிரசுரமாகியிராது என்றே நான் கூறலாம். மோ. க. காந்தியின் சொந்த நாட்டிலும், மற்ற நாடுகளிலும் இக் கடி தங்கள் மதித்துப் போற்றப்பட்டால், அவருடைய அன்பான உழைப்புக்கு உரிய முழுப்பலனும் வெகுமதியும் கிடைத்ததாகும்.

*கோத்தகிரி, நீலகிரி, 1951.*

**எஸ்தர் மேனன், நீ ஃபேரிங்**

# முன்னுரை

1951 ஜூன் மாதத்தில்தான் நான் முதன் முறையாக ஸ்ரீமதி எஸ்தர் மேனனை, நீலகிரிமலையில் உள்ள கோத்தகிரியில் சந்தித்தேன். எங்கள் முதல் உரையாடலிலே, எங்கள் இருவருடைய பொதுவான ஈடுபாட்டை கவர்வதாய் இருந்தது, காந்திஜிபற்றியும் தேசிய, சர்வதேசிய பிரச்னைகளில் அவர் கொண்டிருந்த நோக்கு பற்றியும் பேச்சு என்பது தெளிவாயிற்று. சில நாட்களுக்குப்பின் நாங்கள் ஒரு கூட்டத்திலிருந்து திரும்புகையில், மீண்டும் அவரைப் பற்றிப் பேசாமல் இருக்க முடியவில்லை. அப்பொழுதுதான் இந்த நூலில் கண்டுள்ள கடிதங்கள்பற்றி முதன் முதலில் நான் அறிந்தேன். என்னை நம்பலாமா, கூடாதா என்ற மலைப்பில் தயக்கத்துடன் பேசுவதுபோல் ஸ்ரீமதி மேனன் சொன்னார்: ''பாபு என்னிடன் பிரியமாக இருந்தார். அவர் என்னை மகள் போல நடத்தினார். பல ஆண்டுகள் அவர் அடிக்கடி எனக்குக் கடிதம் எழுதி வந்தார். அக் கடிதங்களை நான் பாதுகாத்துப் போற்றி வருகின்றேன். அவற்றை அருஞ்செல்வமாக மதிக்கின்றேன்''. காந்திஜியுடன் இவ்வளவு நெருங்கிய நட்புக் கொண்டிருந்த ஒருவரைச் சந்தித்ததில் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி ஏற்பட்டது இயல்பே. "நாட்டின் பொறுப்பையே தம் தோள்களில் தாங்கிச் சுமந்த அவர், சாதாரணமான பெண்ணான எனக்கு அத்தனைமுறை கடிதம் எழுத நேரம் ஒதுக்கியதை அடிக்கடி நினைத்து நினைத்து வியப்புற்று அதிசயிக்கின்றேன். என்னிடம் அவர் இவ்வளவு பரிவுடனும் அன்புடனும் நடந்துகொண்டது ஏன் என்பது எனக்கு விளங்கவில்லை'' என்று அவர் மேலும் கூறினார். அவர் வீட்டு வாசலை நெருங்கியபோது, "அக் கடிதங்களைப் படிக்க விரும்புவீர்களா'' என்று கேட்டார். அவற்றைப் படிக்கும் வாய்ப்பு பெறுவதைப் பெரும் பேறாகக் கருதுவேன் என்று அவரிடம் நான் கூறினேன். ஓரிரண்டு நாட்களில் அவற்றை ஒழுங்கு படுத்தி எனக்குக் காட்டுவதாக உறுதி கூறினார். சில நாட்களுக்குப் பின் அவரை நான் மீண்டும் சந்தித்த போது, அவர் ஒரு கடிதக் கட்டை எடுத்துக்கொடுத்தார். அதில் ஏராளமான கடிதங்கள் இருந்ததால், அங்கேயே அப்பொழுதே அவற்றைப் படிப்பது இயலாதென்று தெரிந்தது. அந்த அருஞ்செல்வத்தை நான் எடுத்துச் சென்று, அவகாசம் கிடைக்கும்போது படிக்கலாம் என்று பெருமனதுடன் அவரே கூறினார். காந்திஜியின் கடிதங்கள் என் சட்டைப் பையில் இருக்கின்றன என்றெண்ணி நான் எவ்வளவு பெருமையும் பூரிப்பும் அடைந்தேன்!

அவற்றைப் படிப்பது அவ்வளவு எளிதானதல்ல என்று நான் கண்டேன். நாளானதால், சிலவற்றில் மை மங்கிப் போயிருந்தது, எழுத்து தெளிவாக இல்லை. கையால் செய்த காகிதத்தில் அவை எழுதப்பட்டிருந்ததால், சில கடிதங்கள் காலத்தால் நொடிந்து

தொட்டாலே நொறுங்கிவிடும் போலிருந்தது. எங்கோ ஒரு சிறு ஊரில் இரயில் நிலையத்தில் இரயிலுக்காகக் காத்திருந்த நேரத்திலும், இரவில் வெகு நேரத்துக்குப் பின்னே, விடி வெள்ளிக்கு வெகு நேரத்துக்கு முன்போ, சாதாரண மக்கள் உறங்கிக் கொண்டிருந்த வேளையிலும், பாபு பென்சிலில் அவசரமாக எழுதிய கடிதங்கள் சில. வேறு சிலவற்றைப் படிப்பது எளிதாகவே இருந்தது. வெகு சில தட்டெழுதப்பட்டிருந்தன. நான் பரவசமடைந்தேன். அவையெல்லாம் என் மனதை உருக்கின.

மூன்றும் நாள் நான் ஸ்ரீமதி மேனன் வீட்டுக்குச் சென்று, அவர் மேசையில் கடிதக் கட்டை வைத்தேன். "படித்தீர்களா? என்ன நினைக்கின்றீர்கள்?" என்று அவர் கேட்டார். "இவை பெரும் செல்வம்" என்று பெருமிதத்துடன் கூறினேன். மேலும் சொன்னேன்: "ஆனால் இவற்றை நீங்கள் உங்களுக்கு மட்டும் வைத்துக் கொள்ளக் கூடாது. மற்றவர்களுடனும் பகிர்ந்து கொள்ள வேண்டும். அவற்றைக் படிப்பதால் பலனடையக் கூடிய மிகப் பலர் இந்த நாட்டில் மட்டுமல்ல, இன்னும் அதிகமாக மேல் நாடுகளிலேயே இருக்கின்றார்கள்."

நான் இந்த முடிவுக்கு வருவதற்கு என் வாழ்க்கையில் ஒரு சொந்த அனுபவம் ஆதாரமாக இருந்தது. மைசூர் அரசியல் நிர்ணய சபையின் தொடக்க விழாவில், இந்திய விடுதலையில் காந்திஜியின் தொண்டு பற்றிச் சுருக்கமாகப் பேசுமாறு முதலமைச்சர் என்னைப் பணித்திருந்தார். திடீரென அந்த யோசனை என்னிடம் கூறப்பட்டதால், விரிவான ஆயத்தங்கள் செய்ய அவகாசம் கிடைக்கவில்லை. ஆகவே என் உள்ளத்தில் மேலோங்கி நின்ற கருத்துக்களை நான் வெளியிட்டேன். என்னையும் என் சொந்த நாட்டுச் சோதரரையும் சுதந்திரக் குடிமக்களாக உருவாக்கியதில் காந்திஜியின் அற்புத சேவைக்கு உளம் கனிந்த நன்றியைத் தெரிவித்ததுடன், வரலாற்றிலேயே முன்மாதிரி இல்லாத வகையிலும் நெறியிலும் இந்தச் சாதனையை அவர் நிறைவேற்றியதையும் எடுத்துக் காட்டினேன். என் பேச்சைக் கேட்ட ஓர் ஆங்கிலேயர் என்னைத் தேடி வந்து சொன்ன சொற்கள் எனக்கு மிகுந்த வியப்பை ஊட்டின. "காந்திஜியின் வாழ்க்கையில் புதியதோர் அம்சத்தை நீங்கள் இன்று எங்கள் முன் வைத்தீர்கள். அவர் ஆன்மிகப் பற்றுடையவர் என்பது எனக்குத் தெரியாது. அவர் மிகச் சாமர்த்தியமான அரசியல்வாதி, சர்க்கா, குடிசைக் கைத்தொழில், ஹரிஜனத் தொண்டு ஆகியவற்றை ஆதரித்தவர், என்று நாங்கள் கேள்விப்பட்டிருக்கின்றோம். ஆனால் அவர் ஆன்மிக உயர்வு பற்றியும், வழிகாட்டுவதற்கும் வல்லமை தருவதற்கும் ஆண்டவனை அவர் அடியோடு நம்பியிருந்தார் என்பது பற்றியும் நாங்கள் கேள்விப்பட்டதில்லை. அவர் அரசியல் மேதை என்பது மட்டுமல்ல; அவர் மிகச் சிறந்த ஞானியாகவும் இருந்திருக்க வேண்டும் என்பதை இப்பொழுது தான் உணர்கிறேன்" என்று அவர் கூறினர்; "அவர் தலைசிறந்த ஞானிதான். அவரது புனிதத் தன்மையினால் தான், ஆண்டவனிடம் அவர் அடைக்கலம் புகுந்ததால் தான், அவர் தம் குறிக்கோள்களில் வெற்றி

பெற்றார்; அது மட்டுமல்ல, தாம் உறுதியாக நம்பிய அகிம்சை நெறியிலேயே அவ்வெற்றியினைக் கண்டார்'' என்று நான் கூறினேன். காந்திஜியின் வாழ்வுக்கும் தொண்டுக்கும் ஆதாரமாக இருந்த ஆன்மிக அடிப்படையை அறிந்ததும், இந்த ஆங்கிலேய நண்பர் காந்திஜியிடம் கொண்டிருந்த மதிப்பும் மரியாதையும் அதிகரித்தன என்பது மட்டுமல்லாமல், அவர் உள்ளமும் உருகியது என்பதை நான் அறிய முடிந்தது.

குறிப்பிட்ட ஒரு சமயத் தத்துவ நெறிக்குள்ளாக அடங்கியவரல்ல காந்திஜி; ஆனால் ஆண்டவன் அவருக்கு மையமாகவும் மகத்தான மெய்ம்மையாகவும் விளங்கினார். ஆண்டவனை அடியோடு நம்பினார். ஆகவே இறைவனின் இணையற்ற சக்தி அவர் மூலம் பாய்வதற்கும், இறைவனின் சித்தம் அவர் மூலம் நிறைவேறுவதற்கும், அவர் தம்மைப் பக்குவப்படுத்திக் கொண்டார்.

சொந்த வாழ்க்கையிலும் குடும்பத்திலும் எழும் சிக்கல்கள் பற்றியும், தேசிய, சர்வதேசியப் பிரச்னைகள் பற்றியும், காந்திஜி, ஐரோப்பியப் பெண் ஒருவருக்கு எழுதிய இந்த 129 கடிதங்கள், அவருடைய ஆன்மிக வாழ்க்கை வளத்தை அறிந்து கொள்ள வாய்ப்பு அளிக்கின்றன. தம் மகளாகச் சுவீகரித்துக் கொண்ட பின்னர், அன்பு ததும்பும் இக்கடிதங்களை எழுத அவர் அவகாசம் கண்டார். இக் கடிதங்கள் காந்திஜியின் அற்புத ஆளுமையைப் படம் பிடித்துக் காட்டுகின்றன. நகைச்சுவை, பரிவு, பெருந்தன்மை ஆகியவை இவற்றில் குடிகொண்டுள்ளன. அனைத்துக்கும் மேலாக, தம் சொந்த வாழ்வுக்கு அவர் ஆதாரமாக அமைத்துக் கொண்டதும், மக்கள் அனைவர் வாழ்வுக்கும் நாடுகள் அனைத்தின் வரலாற்றுக்கும், அசைக்க முடியாத அடிப்படையாக அமைய வேண்டியதும், ஆண்டவனிடம் ஆழ்ந்த விசுவாசமும் பற்றுதலும் என்ற உணர்வு, இக் கடிதங்கள் அனைத்திலும் மேலோங்கி நிற்கின்றது. தம் மகள் மிகுந்த துன்பங்களையும் சோதனைகளையும் தாங்கி நின்ற வேளையில், அவர் ஆறுதல் கூறுகிறார்: "ஆண்டவனின் அந்தரங்க வழிகளை நாம் அறியோம்... நாம் மட்டும் அவருக்குக் கீழ்ப்படிந்தால், அவர் நம்மை அறியாமலேயே நாம் பல காரியங்களைச் செய்ய வைக்கின்றார். சோர்வு எனும் பள்ளத்தாக்கில் நீ ஒருபோதும் சிக்காமல் இருப்பதே எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தரும். ஒரு நிமிடம் கூட நீ சோர்வுற்றால், ஆண்டவனின் சர்வ வல்லமையில் உன் நம்பிக்கைக் குறைவுக்கே அது அறிகுறியாகும்'' என்று அவர் தெளிவாக்குகிறார். ''நாம் மட்டும் அவரை அனுமதித்தால், நம்மை வாட்டும் கவலைச் சுமைகளை அவர் தம் தோள்கள் மீதே தாங்கிக் கொள்வார் என்பதை நினைவில் கொள். நான் உனக்கு எழுதுகிறேன் என்பது எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மையானது ஆண்டவனின் உதவி. அவர் வழி நம் வழியிலிருந்து வேறுபட்டது; அவர் தோள்கள் நம் தோள்கள் போன்றவையல்ல. இதுதான் வேறுபாடு. ஆனால் இதில் தான் அழகு அனைத்தும் அடங்கியுள்ளது.'' காந்திஜியின் ஆழ்ந்த நம்பிக்கையும், அவர் வாழ்க்கையில் பெற்ற

வெற்றியின் இரகசியமும் இந்த இரு கூற்றுகளில் அடங்கியுள்ளன என்று எனக்குத் தோன்றுகிறது.

காந்திஜி, தம் வாழ்க்கையின் பிற்பகுதியில் வழிபாட்டை மேலும் மேலும் முக்கியமாக மதித்துப் போற்றினர். அரசியல் விடுதலை பெற இந்திய மக்களின் அபிலாஷைகளை ஆங்கிலேய அரசாங்கம் புறக்கணித்தது, பாமர மக்களின் செயலற்ற தன்மை, அவருடைய நண்பர்களிலும் ஆதரவாளரிலும் பலருக்கு அகிம்சைப் போராட்ட முறைகளில் உறுதியான நம்பிக்கை இல்லாத நிலை ஆகியவை அவரை அடிக்கடி ஏக்கத்தின் எல்லைக்கு உந்தின. அத்தகைய சோதனைக் கட்டங்களிலே அவர் ஆண்டவனின் உதவியையும் துணையும் வழியையும் நாடுவார். கூட்டுத் தொழுகை, திருமறைகளிலிருந்து செய்யுள்களின் பாராயணம், துதிப்பாடல்களின் பஜனை ஆகியவை ஆசிரம வாழ்வின் அன்றாட நியமமாயின. வார்தாவில், 1942-ல் ஆசிரம மாலை வழிபாட்டில் நான் கலந்துகொண்ட போது ஏற்பட்ட பரவச உணர்வை நான் என்றுமே மறக்கமுடியாது. அவர் வழிபாட்டில் ஈடுபட்டபோது, தெய்வ தரிசனம் அவருக்குக் கிட்டியது போன்ற பேரொளி வீசியது. அவருடைய பக்திப் பரவசம், வழிபாட்டில் ஈடுபட்ட மற்றவர்களையும் கவர்ந்து ஆட்கொண்டது.

இந்தியராகிய நாம் காந்திஜியின் ஆழ்ந்த ஆன்மிக சக்தியை உணர்ந்து போற்றியதன் பயனாகத்தான் மகாத்மா என்று அவர் பக்தியுடன் அழைக்கப்பட்டார். இது அவருக்குக் கசப்பாக இருந்தபோதிலும், நம் நாட்டு மக்களே மொத்தத்தில் தலைவனைத் தெய்வமாகவே ஏத்தி வணங்கும் தன்மை படைத்தவர்கள் என்பதை அவர் அறிந்திருந்ததால், அதைச் சகித்துக் கொண்டார். தொன்மை வாய்ந்த இந்த நாட்டிலே மற்ற மகாத்மாக்களும் வாழ்ந்துள்ளனர் என்பது உண்மையே. ஆனால் நாமறிந்த வரை, தேசிய, சர்வதேசிய அரசியலைத் தூய்மைப்படுத்த முயன்ற ஒரே மகாத்மா, காந்திஜிதான். மனித இயல்பை நன்கு அறிந்த அவர், அச்சமும் அவநம்பிக்கையும் பகைமையும் பொறாமையும் புரையோடும் இன்றைய அரசியல் வாழ்வின் சுமைகளையும் சோதனைகளையும் தாங்கிக் கொள்ள, வெறும் மானுட ஆற்றல் மட்டும் போதாதென்பதை உணர்ந்தார். அவர் ஆண்டவன் அடிகளில் வீழ்ந்து, தம் பணியை நிறைவேற்றும் வல்லமையையும் விவேகத்தையும் இறைவன் அருளால் பெற்றார்.

தெய்வமே நம் அனைவருக்கும் தந்தை என்பதையும், மக்கள் அனைவரும் சகோதரர்கள் என்பதையும் காந்திஜி உறுதியாக உணர்ந்ததால், சத்யாக்கிரகத்திலும் அகிம்சையிலும் அசைக்க முடியாத நம்பிக்கை கொண்டிருந்தார். உலகெங்கும் நல்லெண்ணம் கொண்டிருந்த மக்கள் அனைவரையும் இந்த நம்பிக்கை கவர்ந்து அவர்கள் ஆதரவையும் அனுதாபத்தையும் ஈர்த்தது. அகிம்சை வழியிலே இந்தியா விடுதலை பெற்றபோது, தனிப்பட்ட முறையில் காந்திஜிக்கும், தத்துவ அடிப்படையில் அகிம்சைக்கும், அது இணையற்ற வெற்றி என்று உலகெலாம் போற்றப்பட்டது. கிறிஸ்துவ சமயச்

சார்புள்ள நாடுகள் எப்பொழுதுமே ஏசுநாதரை சமாதானத்தின் காவலர் என்று ஏத்தித் தொழுதன; ஆனல் நடைமுறையிலோ, அவருடைய அன்புக் கொள்கை உலக விவகாரங்களுக்கு உகந்த தல்ல என்று உதாசீனம் செய்தன. இப்பொழுதோ, ஏசுநாதரின் சமாதான போதனையின் அழைப்பைக் காந்திஜி ஏற்று, அரசியல் உறவுகளிலும் அகிம்சைக் கொள்கையை வெற்றிகரமாகப் பின்பற்ற முடியுமென்பதை நம்பத் தயங்கிய உலகுக்கு, தமக்கே உரிய வழியில் மெய்ப்பித்தார்.

காந்திஜி இறந்தபோது இந்தியா துக்கம் கொண்டாடியது; உலகம் முழுவதும் இந்தியாவின் வருத்தத்தில் பங்குகொண்டது. அன்பையும், வாய்மையையும் போதித்த ஞானியான காந்தி, தொழுகை இடத்தில் புகுந்தபோது, கொலையாளியின் கையினல் மரணம் அடைந்தார். ஆனல் பகைமையைவிட அன்பு வல்லமை வாய்ந்தது என்பதையும் பொய்மையை வென்று வாய்மை நிலைக் கும் என்பதையும் உலக மக்கள் அனைவர்க்கும் உணர்த்தும் வரை வாழ்நாளை காந்திஜிக்கு அருளியிருந்தார் ஆண்டவன்.

பெரும்பாலும் 1917 முதல் 1932 வரை எழுதப்பட்டுள்ள இக் கடிதங்கள், காந்திஜி தமக்குரிய வழியில் வாய்மையுடனும் அகிம்சை யுடனும் சத்திய சோதனைகளைத் தம் வாழ்விலே நடத்தி, வாய்மை, அமைதி வடிவமான ஆண்டவனிடம் கொண்ட பக்தியால் உயர்ந்து மகாத்மாவாக உருமாறி வந்த காலத்தில், அவர் மன எழுச்சி களையும் அபிலாஷைகளையும் நாம் தெளிவாக உணரத் துணைசெய் கின்றன.

இக் கடிதங்களுக்கு முன்னுரை எழுதும் பேற்றினை ஸ்ரீமதி எஸ்தர் மேனன் எனக்கு அளித்ததற்காக நான் அவருக்குக் கட மைப்பட்டிருக்கின்றேன். வாய்மையையும் அமைதியையும் போற்று வோர் அனைவரும், இக் கடிதங்களைப் படித்துப் பலனடைவார்கள். அதிலும் குறிப்பாக, ஏசுநாதரைப் போற்றிப் பூசித்துப் பின்பற்றுவ தாகக் கூறும் மேனுட்டு நண்பர்கள் பலருக்கு, இக் கடிதங்கள் ஏசு நாதரையே நினைவூட்டும்.

D. S. இராமச்சந்திர ராவ்.

சென்னை,
ஜனவரி, 1952.

# அறிமுகம்

காந்திஜியால் எழுதப்பட்டு, அவற்றைப் பெற்ற எஸ்தர் ஃபேரிங்கால் உலகுக்கு இப்பொழுது அளிக்கப்படும் இக் கடிதங்களில் பலவற்றிற்கு விளக்கம் தேவையில்லை. ஆனால் இக் கடிதங்களின் பின்னணிச்சூழல் பற்றிய விவரங்கள், கடிதங்களின் சுவையைப் பெருக்குவதுடன் உட்பொருளை விளக்கவும் உதவும்.

1916ம் ஆண்டில், டென்மார்க்கு நாட்டைச்சேர்ந்த எஸ்தர் ஃபேரிங் என்ற இளம் பெண், டென்மார்க் மிஷனரி சங்கத்தின் பணியாளராகத் தென்னிந்தியாவுக்கு வந்தாள். அவள் வந்த சில நாட்களுக்குள் சென்னைக்கு வந்து என்னுடன் வசிக்கத் தொடங்கினாள். அப்பொழுது அவள் தமிழ் கற்றுக்கொள்ளும் கட்டத்தில் இருந்தாள். ஆங்கிலத்தில் அவள் ஏற்கெனவே அடைந்திருந்த தேர்ச்சியை மேலும் வளமாக்குவதிலும் ஈடுபட்டிருந்தாள். அப்பொழுது எங்களிடையே தோன்றிய நட்பு காலத்தால் கனிந்து வளர்ந்தது. இன்று பல நாடுகளில் பெருவாரியான மக்களுக்கு இக் கடிதங்களை அறிமுகப்படுத்தும் பெரும் கௌரவத்தை எனக்கு அவள் அளித்துள்ளதும், இந்த நட்பின் சின்னமே.

கல்வித் துறையில் உயர்ந்த தகுதி பெற்றிருந்த எஸ்தர் ஃபேரிங், டேனிஷ் மிஷன் சார்பில் பெண்களிடையே கல்வித் தொண்டில் ஈடுபட வேண்டுமென்று திட்டமிடப்பட்டிருந்தது. இவ் வேலைக்குத் தங்களை ஆயத்தம் செய்துகொள்ள, அவளும், மிஷனின் முது பணியாளரில் ஒருவருமான மிஸ் ஆன் மேரி பீட்டர் ஸனும், கல்வித்துறையில் பல புதிய முயற்சிகளையும் வெற்றிகரமான முறைகளையும் மேற்கொண்ட பல கல்வி நிலையங்களுக்கு—கிறிஸ்துவச் சார்புடைய நிலையங்களுக்கும் சார்பற்ற நிலையங்களுக்கும்—சென்று அவற்றைப் பார்வையிட, மிஷன் அதிகாரிகள் மிகுந்த விவேகத்துடனும் பெருந்தன்மையுடனும் அனுமதித்தனர். தாய் நாட்டுத் தொண்டில் தம் வாழ்வில் எஞ்சிய பகுதியை ஈடுபடுத்தும் பொருட்டுத் தென்னாப்பிரிக்காவிலிருந்து அண்மையில் திரும்பியிருந்த காந்திஜி, அப்பொழுதுதான் ஆமதாபாத் அருகில் சபர்மதியில் தம் ஆசிரமத்தை நிறுவி, வாய்மை, அன்பு ஆகிய தமது குறிக்கோள்களைச் சமுதாய வாழ்வில் நிலைநாட்டத் தமக்குத் துணைநிற்க ஒரு சில ஆண் பெண் தொண்டர்களைத் தம்மைச் சுற்றித்திரட்டியிருந்தார். மிஸ் பீட்டர்ஸன், எஸ்தர் ஃபேரிங், இருவரும் தங்கள் வருங்காலக் கல்வித் தொண்டு பற்றிக் கொண்டிருந்த எண்ணங்களும் நம்பிக்கைகளும் காந்திஜி கொண்டிருந்த கருத்துக்களையும் அபிலாஷைகளையும் பெரிதும் ஒத்திருந்தன. இந்தியாவில் வழங்கி வந்த கல்விமுறை நாட்டுக்கு அன்னியமுறை என்று இருவரும் அதிருப்தி கொண்டிருந்தனர். அந்நிலையில், தங்கள் சுற்றுப் பயணத்தில் பார்க்க வேண்டிய நிலையங்கள் பட்டியலில் சபர்மதியை அவர்கள் சேர்த்ததில் வியப்பில்லை.

சபர்மதிக்கு அவர்கள் சென்று திரும்பிய பின் நன்றி தெரிவித்து எழுதிய கடிதத்திற்குப் பதிலளித்துக் காந்திஜி அனுப்பிய அஞ்சலட்டைதான் இத்தொகுப்பில் காணப்படும் முதல் கடிதம். தாங்கள் தென்னிந்தியாவில் நடத்த விருக்கும் பள்ளி, தேசியப் பள்ளியாக, சபர்மதிப்பள்ளி அமைப்பைப் பின்பற்றி, எளிய வாழ்க்கை, உழைப்பின் உயர்வு, சமூகப்பணியில் ஒவ்வொருவரும் தம் நியாயமான பங்கை ஏற்றுக்கொள்ள முன்வரவேண்டிய கடமை ஆகியவற்றை வற்புறுத்தி இந்தியக் கலாசாரத்தில் வேரூன்றிய பள்ளியாக இருக்கவேண்டுமே ஒழிய, அக்காலத்தில் கிறிஸ்துவ மிஷன் பள்ளிகளிலும் அரசாங்கப் பள்ளிகளிலும் பெரும்பான்மையானவற்றைப்போல, தேசிய உணர்வு இழந்து சம்பிரதாயப் பள்ளியாக இருக்கக்கூடாது என்பதையும் ஆசிரமத்தில் இருவரும் கழித்த ஒரு சில நாட்களே அவர்களுக்கு நன்கு உணர்த்தின.

அச்சில நாட்களில் காந்திஜிக்கும் எஸ்தருக்கும் இடையே எழுந்த பரஸ்பர அன்பு தான் விரைவில் வளர்ந்து கனிந்து, இக்கடிதங்களில் சித்திரிக்கப்பட்டுள்ள தந்தை-மகள் உறவாக, ஆழ்ந்த, அருமையான பாசமாக உருவெடுத்தது. பல ஆண்டுகளுக்குப் பின் காந்திஜி எழுதினர்: "நான் பெற்றெடுத்த மகளை விட எஸ்தர் எனக்கு அருமையானவள்; ஏனென்ருல் தன் விருப்பத்தாலும், அன்பின் உரிமையாலும் என் மகளானவள் அவள்."

1917ம் ஆண்டு முதற்கொண்டு 1935ம் ஆண்டு வரையிலுமாவது இந்தியாவில் இருந்தவர்கள், அயல் நாட்டினர் எவரும் காந்திஜியின் நெருங்கிய நண்பராகக் கருதப்படுவது அப்பொழுது பெரிதும் ஆபத்தாக இருந்தது என்பதை அறிவார்கள். அதிலும் குறிப்பாக, முதல் உலகப் போரின் போதும், அதை அடுத்த சில ஆண்டுகளிலும், அவர் சக்தியும் செல்வாக்கும் பெருகி வந்ததைக் கண்டு ஆங்கிலேய அரசு அச்சம் கொண்டு, நாட்டில் புரட்சி எழுமோ என்று கவலை கொண்டது. ஆங்கிலேயரைத் தவிர, இந்தியாவில் குடியிருந்த மற்ற அயல் நாட்டினர் அனைவரும் மிகவும் எச்சரிக்கையாகக் கண்காணிக்கப்பட்டனர். ஜெர்மானிய அரசாங்கத்தின் கையாட்களோ, அல்லது இந்திய தேசிய இயக்கத்தின் ஆதரவாளரோ என்று அவர்கள் மீது சந்தேகம் மூண்டது. தொழிற் சங்கங்களில் அக்கரை கொண்டவர்கள் மீது கூடக் கடுமையான சந்தேகம் இருந்தது. பிரிட்டனில் தலைமையகம் கொண்டிருந்த மிஷன்களைத் தவிர மற்ற மிஷனரி சங்கங்கள் அனைத்தும், தங்கள் உறுப்பினர் அனைவரும் பிரிட்டிஷ் அரசாங்கத்திற்கு விசுவாசமாக இருப்பார்களென்றும், இந்திய அரசியலில் தலையிடாமல் கண்டிப்பாக ஒதுங்கி இருப்பார்களென்றும் அவர்கள் சார்பில் உறுதிமொழி அளிக்க வேண்டியிருந்தது. தங்கள் உறுப்பினரில் ஒருவர் அந்த வாக்குறுதியை மீறினலும் கூட, மிஷன் உறுப்பினர்கள் அனைவரும் நாட்டிலிருந்து வெளியேற்றப்படக்கூடுமென்ற அபாயம் இருந்தது.

ஆகவே தங்கள் மிஷனைச் சேர்ந்த இளம் தொண்டர் ஒருவர் "மிஸ்டர் காந்தி"யுடன் நெருங்கிய உறவு கொண்டிருந்தது, தென்னிந்தியாவிலும் டென்மார்க்கிலும் இருந்த டேனிஷ் மிஷன் அதிகாரிகளுக்குத் தர்மசங்கடமான நிலையை உண்டாக்கியது. சிறிது காலத்திற்கு எஸ்தர், சபர்மதிக்குச் செல்வதற்கும் காந்திஜிக்குக் கடிதம் எழுதுவதற்கும் தடை விதிக்கப்பட்டது. எஸ்தருக்கும் மிஷன் அதிகாரிகளுக்கும் இடையே எழுந்த இந்தப் போராட்டம் இத் தொகுப்பில் உள்ள கடிதங்கள் பலவற்றில் சித்திரிக்கப்பட்டுள்ளது. காந்திஜியின் விவேகம்,பொறுமை, மற்றவர்கள் மனநிலையை அறிந்து மதிக்கும் ஆற்றல், இறுதியில் நியாயமும் நிதானமுமே நின்று நிலைக்கும் என்பதில் அவருக்கிருந்த உறுதியான நம்பிக்கை ஆகியவற்றையும் இக் கடிதங்கள் படம் பிடித்துக் காட்டுகின்றன. பதட்டமாகச் செயல்படும் போக்கு இயல்பாகவே கொண்டிருந்த பெண்ணுக்கு, அவர் பொறுமையையும் நிதான புத்தியையும் போதித்தார். பொறுத்திருக்க வேண்டுமென்றும். தன் மனச் சான்றுக்கு துரோகம் செய்யாமல், மிஷன் அதிகாரிகளுக்கு விசுவாசமாகவும் கீழ்ப்படிந்தும் நடக்க வேண்டுமென்றும், இறைவனின் நல்வழியை எப்பொழுதும் நாட வேண்டுமென்றும் அவர் வலியுறுத்தினர்.

இதற்கிடையில், அன்றிருந்த சூழ்நிலையில், தானும் எஸ்தரும் விரும்பிய இலட்சியப் பள்ளியை, விதி வரம்புகளுடன் வேலை செய்யும் மிஷன் அமைப்பு முறைக்கு உட்பட்டு நிறுவ முடியாது என்பது தெளிவானதால், மிஸ் பீட்டர்ஸன் டேனிஷ் மிஷனிலிருந்து விலகிக் கொண்டார். அவரைப் பின்பற்றி எஸ்தரும் மிஷனிலிருந்து விலகினர். இந்தப் பித்துப் பிடிக்காத மற்ற மிஷன் தொண்டர்களுக்கு, அந்த நெருக்கடியான நாட்களில் எஸ்தர், உடலில் குத்திய முள் போல் தான் இருந்திருக்க முடியும். என்ற போதிலும் அவரிடம் அவர்கள் பொறுமையாகவும் அனுதாபத்துடனுமே நடந்து கொண்டனர். அவர்களை விட்டு விலகியதால், எஸ்தர் சபர்மதிக்கு வருவதற்குத் அத் தடை நீங்கியது. அவர் ஆசிரமவாசியானர். புதிதாகத் தம் குடும்பத்தில் சேர்ந்திருந்த இந்த இளம் தொண்டரிடம் பாபு காட்டிய பரிவும் அன்பும், அவர்தம் வேலை காரணமாகச் சபர்மதியிலிருந்து செல்ல வேண்டியிருந்த வேளைகளில், எஸ்தருக்கு எழுதிய கடிதங்களில் காணக் கிடக்கின்றன. எஸ்தர் அயல்நாட்டைச் சேர்ந்தவராதலால், அவருக்கு ஓரளவு சிரமம் இருந்ததோடு, அவர் ஆன்மப் பக்குவம் இன்னும் அடையவில்லை என்பதையும் காந்திஜி கண்டார். துரதிருஷ்டவசமாக, ஆசிரம வாழ்வின் கண்டிப்பான கட்டுப்பாட்டை ஏற்றுக்கொள்ள எஸ்தரின் உடல்நிலை இடம் கொடுக்காததால் சிறிது காலத்தில் அவர் தென்னிந்தியாவுக்குத் திரும்பி, தன் தாய்நாடான டென்மார்க்குக்குச் செல்ல ஆயத்தங்கள் செய்தார். அக்கட்டத்தில், ஓர் இளம் இந்திய டாக்டருக்கும் அவளுக்கும் திருமணம் நிச்சயமாயிற்று. இதனல் அவருக்கு மிகுந்த மகிழ்ச்சி உண்டாகிய போதிலும், அதன் விளைவாக எழுந்த பல தப்பெண்ணங்கள், கண்டனங்கள், முன்பு அவர் நண்பர்களாய்

இருந்தவர்களிடையேயும் மூண்ட பகைமை ஆகியவற்றால் அவர் மிகுந்த வேதனை அனுபவிக்க வேண்டியதாயிற்று. இந்த நேரத்தில் பாபுவின் விவேகமும் அனுதாபமும் நிறைந்த கடிதங்கள் அவருக்கு மிகுந்த ஆறுதல் அளித்து ஆதரவாயிருந்தன.

ஐரோப்பாவில் சில காலம் தங்கிய பின், எஸ்தர் மேனனும் அவர் கணவரும் இந்தியாவுக்குத் திரும்பி வர முடிந்தது. அடுத்து சில ஆண்டுகளுக்கு, அவர்கள், பள்ளியையும் ஆசிரமத்தையும் நடத்துவதில் ஆன் மேரி பீட்டர்ஸனுக்கு உதவியாக வேலை செய்து வந்தனர். அது மிகக் கடினமான வேலையாய் இருந்தது. இந்திய தேசிய எழுச்சிக்கும் ஆங்கிலேய அரசுக்கும் இடையே போராட்டம் நாளுக்கு நாள் வலுத்து வந்த நிலையில், தேசிய அடிப்படையில் இயங்கிய ஒரு கல்வி நிலையத்தின் மீது அரசாங்க அதிகாரிகள் மட்டு மல்ல, மிஷன் சமுதாயமும் சந்தேகம் கொண்டதில் வியப்பில்லை. இந்தியா சுதந்திரமாக உள்ள இந்த இன்ப நாட்களில், அன்று அவர்கள் அனுபவித்த சிரமங்களும் சோதனைகளும் கெட்ட கன வுகள் போல் நமக்குத் தோன்றலாம். ஆனால் துணிவுடன் புதிய முயற்சி மேற்கொண்ட பீட்டர்ஸன். அவர் இளம் சக ஊழியர்கள், எஸ்தர், ஈ. கே. மேனன் ஆகியோருக்கும் சரி, மறுபுறத்தில் இச் சிக்கல்களால் வாட்டப்பட்டுப் பதட்டமடைந்திருந்த அதிகாரிகளுக் கும் சரி, அந்த சிரமங்களும் சோதனைகளும் கனவாய் இராமல் மிகக் கடுமையாகத்தான் இருந்தன.

தங்கள் இரண்டாவது மகள் பிறந்தபின், மேனன் குடும்பத்தினர் இங்கிலாந்துக்குச் சென்று பர்மிங்ஹாம் அருகில் செல்லி ஓக் ஊரில் சுமார் எட்டு ஆண்டுகள் வாழ்ந்தனர். குவேக்கர் நிலையமான வுட்ப்ரூக்கைச் சுற்றித் தழைத்த வளமான, சர்வதேசச் சமுதாய வாழ்வில் அவர்கள் தீவிரமாகப் பங்கு கொண் டனர். காந்திஜி, வட்ட மேசை மாநாட்டிற்காக இங்கிலாந்து சென்றபோது, இங்குதான் தம் 'அன்புக் குழந்தை'யை மீண்டும் சந்தித்து, அவளுடைய இரு மகள்களான நான், தங்கை ஆகியோ ருடனும் பழகி மகிழ்ந்தார்.

காந்திஜி, இந்தியாவுக்குத் திரும்பி வந்ததும் கைது செய்யப் பட்டு, புனாவில் எரவாடா மத்திய சிறையில் இரண்டு ஆண்டுகளுக் குக் காவலில் வைக்கப்பட்டார். அப்பொழுதும் அவர் அன்புக் கடி தங்கள் எழுதுவதை நிறுத்தவில்லை. குழந்தைகளுக்கும் தங்கள் அன் புத் தாத்தாவிடமிருந்து கடிதங்கள் வந்தன. அவருக்குப் பதில் எழுதும் வயதையும் அவர்கள் அடைந்திருந்தனர்.

மேனன் குடும்பத்தினர் இந்தியாவுக்குத் திரும்பிய பின், அவர்கள் குடும்ப வாழ்க்கையில் பிரிவு ஏற்பட வேண்டியதாயிற்று. டென்மார்க்கிலும் இங்கிலாந்திலும் எட்டு ஆண்டுகள் வாழ்ந்து விட்டுத் தென்னிந்திய வெப்பத்தைத் தாங்க முடியாமல் வேதனைப் பட்ட குழந்தைகளுக்காக,—அவர்கள் உடல்நிலை முன்பே அவ்வளவு சீராக இல்லை—எஸ்தர் பழனி மலையில், கொடைக்கானலில் தங்க வேண்டியதாயிற்று. இந்த நிர்ப்பந்தத்தினால் ஏற்பட்ட பிரச்னை

களை காந்திஜி அனுதாபத்துடன் அணுகியதும், விவேகமிக்க, நடைமுறைக்கேற்ற ஆலோசனைகளை அவர் கூறியதும் அவர் கடிதங்களிலிருந்து அறியக் கிடக்கின்றன.

காந்திஜியின் வாழ்க்கை பற்றி ஏற்கெனவே அறிந்து அல்லது இப்பொழுது அதை அறிய முன்வந்து, அவ் வாழ்க்கையின் அதிசயிக்கத்தக்க முழுமையையும் வளத்தையும் உணர்ந்தால் தான், இக் கடிதங்களை முழுதும் சுவைக்க முடியும். சபர்மதி ஆசிரமத்தில் சமுதாயக் கூட்டு வாழ்க்கை முறையை நிலைநாட்டி அதற்கு அவ்வப்போது வழிகாட்டி நடத்திச் சென்றது; அவுரித் தொழிலாளரின் வாழ்க்கை நிலையையும் வேலை முறைகளையும் அறியப் பல மாதங்களாகப் பொறுமையாக ஆராய்ச்சி செய்தது; தீண்டாமைச் சாபத்தை ஒழிக்கவும், ஒதுக்கி வைக்கப்பட்ட இலட்சக் கணக்கான அம் மக்கள் பிரிவினருக்கு அரசியல், சமூக, சமயச் சுதந்திரம் அளிக்கவும் விசுவாசத்துடன் பல ஆண்டுகளாகத் தொண்டாற்றினது; சமூக அநீதிகளில் ஒவ்வொன்றையும் எதிர்த்துப் போராட்டத்துக்குப் பின் போராட்டம் நடத்தியது; சர்க்காவுக்காக இடைவிடாத பிரசாரம்; மலைபோல் குவிந்த கடிதங்கள்; ஓயாது வந்த பார்வையாளர் படை; அனைத்துக்கும் மேலாக நாட்டின் அரசியல், பொருளாதார விடுதலைக்காக நீண்ட நாள் உறுதியான அயராத உழைப்பு; அதையொட்டிச் சிறைவாசம், ஆங்கிலேய ஆட்சியாளருடன் ஆலோசனைகள்; அடக்கியாளப்படும் மக்களின் துன்பத்தில் தாமும் முழுதும் ஈடுபட்டுப் பங்கு கொள்ளும் ஒரே வழியென்ற முறையிலும், ஆண்டவனின் வேலைக்குப் பயன்பட இன்னும் சிறப்பான தூய்மையான கருவியாகத் தம்மை ஆயத்தம் செய்யும் வழியென்ற முறையிலும் மேற்கொண்ட உண்ணாவிரதங்கள்;—இந்த அதிசய மனிதரின் நடவடிக்கைகள் இன்னும் எத்தனை எத்தனையோ! தேசிய, சர்வதேசிய முக்கியத்துவம் வாய்ந்த எண்ணற்ற பணிகள் நிறைந்த இந்த வாழ்க்கையில், தனிமனிதனின் அருமையைக் காந்திஜி எப்பொழுதும் மறக்கவேயில்லை. இந்த உண்மைக்கு, இத் தொகுப்பில் உள்ள கடிதங்கள் மறக்க முடியாத, உருக்கமான சான்றாகும். அவர் உள்ளத்தின், உணர்ச்சிகளின் மென்மைக்கும், பரந்த மனத்திற்கும், பெருந்தன்மைக்கும் சான்று தேவையானால், அச் சான்றுகளையும் இக் கடிதத்தில் காணலாம். தம் குழந்தைக்கு எழுதும் இக்கடிதங்களில், இந்தியாவை ஆண்ட அன்னிய ஆட்சியாளர் மீது எதிர்ப்பு உணர்ச்சியை மூட்ட அவர் முயற்சிக்கவில்லை. தற்பெருமை, தனக்கு ஏற்பட்ட சோதனைகளால் தன் மீதே அளவு கடந்த இரக்கம், கசப்பு, பகைமை, எதுவும் இக் கடிதங்களில் காணமுடியாது. அதற்கு மாறாக, டாக்டர் இராமச்சந்திர ராவ் தம் முகவுரையில் எடுத்துக் காட்டியது போல், பாபுஜியின் வாழ்க்கை, தொண்டு முழுவதற்கும் மூலாதார சக்தியாக விளங்கியவற்றை இக்கடிதங்கள் சித்திரிக்கின்றன. வாய்மை, அன்பு ஆகியவற்றிற்கு அவர் தம்மை முழுதும் அர்ப்பணம் செய்துகொண்டதும், ஆண்டவனிடம் பூர்ணமாய் அடைக்கலம் புகுந்ததுமே, அந்த மூலாதார சக்தியின் சாரம்.

அலைஸ். எம். பார்னஸ்

## 1

## குடும்பத்தின் உறுப்பினர்கள்

அன்புள்ள எஸ்தர்,

பம்பாயிலிருந்து நீ எழுதிய சிறு கடிதம் எனக்கு மகிழ்ச்சி ஊட்டியது. நீங்கள் இருவரும் எங்களுடன் இல்லாதது எங்களுக்கு மிகுந்த வருத்தம் என்பதை நம்பு. உங்களை விருந்தாளிகளாக நாங்கள் மதிக்கவில்லை. நீங்கள் எங்கள் குடும்பத்தின் உறுப்பினர்களாகி விட்டீர்கள். மிஸ் பீட்டர்ஸன் மீண்டும் தன்னிலைக்கு வந்து விட்டார் என்று நம்புகிறேன். நேற்றும் இன்றும் வந்த கடிதக் கட்டுகளை உங்கள் முகவரிக்குத் திருப்பி அனுப்பியுள்ளேன்.

உங்கள் இருவருக்கும் என் மரியாதைகள்.

உன் அன்புள்ள,
**மோ. க. காந்தி**

ஆமதாபாத்,
*11—1—1917*

## 2

## ஆசிரமத்தில் அமைதி

ஆமதாபாத்,
*15, ஜனவரி, 1917*

அன்புள்ள எஸ்தர்,

உன் அருமையான கடிதம் கிடைத்தது. மிஸ் பீட்டர்ஸனின் நீர்க்கோப்பு அடியோடு நீங்கி விட்டதென்றறிய மகிழ்ச்சி.

ஆசிரமத்தில் நீங்கள் அமைதி கண்டது குறித்து மகிழ்ச்சி ஆம்; உங்கள் இருவரையும் குடும்பத்தின் உறுப்பினர்களாகவே மதித்தோம். நீங்கள் எப்பொழுது வர விரும்புகிறீர்களோ, உங்களால் எப்பொழுது வர இயல்கிறதோ, அப்பொழுது தாராளமாக வரலாம்.

ராம்தாஸ் உத்தமமான பையன். அவன்தான் தென்னுப்பிரிக்கா செல்கின்றான். அங்கு அவன் சிறந்த முறையில் நடந்து கொள்வானென்ற நம்பிக்கை எனக்குண்டு. அங்கு வேலைக்குத் தன்னை ஆயத்தம் செய்து கொள்ள, இங்கு ஓர் அச்சகத்தில் பயிற்சி பெற்று, அச்சுக் கோப்பு வேலையைப் பழகிக் கொண்டுள்ளான்.

உன்னை நான் அறிந்து கொண்டதிலிருந்து, நீ உன் படிப்பில் முழு மனதுடன் ஈடுபட்டு, உன் தேவைக்கு வேண்டிய அளவு தமிழ் நன்கு பேச விரைவில் கற்றுக் கொள்வாயென்று உறுதியாக நம்பு கிறேன்.

[சபர்மதி ஆசிரம] விதிகளை நீ எவ்வளவு நாட்கள் வேண்டுமோ வைத்துக் கொள். அதைத் திருப்பி அனுப்ப அவசரம் ஒன்று மில்லை.

உன்,
**மோ. க. காந்தி**

## 3

## போலக் குடும்பத்தினர் பற்றிக் கவலை

ஆமதாபாத்,
*20, மார்ச்சு, 1917*

அன்புள்ள எஸ்தர்,

இங்கு ஒரு ஆங்கிலேயப் பெண் நண்பரும் அவள் சகோதரியின் குழந்தைகளும் என்னுடன் தங்கியுள்ளனர். கோடையில் அவர்கள் மலைவாச ஊருக்குச் செல்ல வேண்டியவர்கள். நீயும் அது போன்ற ஊருக்குச் செல்லப் போகிறாய். நீ போகின்ற ஊருக்கே அவர்களும் வந்தால், அவர்களை நீ கவனித்துக்கொள்ள முடியுமா? தங்களுக்காகும் செலவைத் தாங்களே ஏற்றுக் கொள்வார்கள். நல்ல நட்பும் தோழமையும் தான் அவர்களுக்குத் தேவை. ஆகவே உன்னைப் பற்றி நான் நினைத்தேன். உனக்குச் சம்மதமானால், நீ எந்த ஊருக்குச் செல்கிறாய், எப்பொழுது புறப்படுகிறாய், எங்கு தங்குவாய், நீ தங்கும் இடத்திலேயே அவர்களும் தங்கலாமா, உணவருந்தலாமா என்பதைத் தயவு செய்து எனக்குத் தெரிவி. அங்கு என்ன செலவாகும் என்பதையும் நீ சொன்னால் நன்றாக இருக்கும். மிஸ்டர் போலக் பற்றி நீ கேள்விப்பட்டிருப்பாய். இந்த நண்பர் அவருடைய மைத்துனி. மிஸ்டர் போலக் அவர் மனைவியுடன் பொது வேலையாகப் பயணம் செய்யும் போது, தங்கள் குழந்தைகளை மலைவாச ஊர் ஒன்றுக்கு அனுப்ப அவர்கள் விரும்புகின்றனர். அவர்கள் மைத்துனிக்கு அந்த ஊரில் நல்ல நண்பர்கள் கிடைத்தால் நன்றாக இருக்குமென்றும் அவர்கள் எண்ணுகின்றனர். அவர் மைத்துனி, இந்தியாவுக்குப் புதியவர்.

எங்கள் அனைவரிடமிருந்தும் நிறைய அன்பு.

உன் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

போலக் குடும்பத்தினர் அனேகமாகத் திங்கட்கிழமை ஆமதாபாத்தை விட்டுப் புறப்படுவார்கள். ஆகவே எனக்கு நீ தந்தி அனுப்பினால் நன்றாக இருக்கும்.

காந்தி, ஆமதாபாத் என்று முகவரி எழுதினால், தந்தி எனக்குக் கிடைக்கும்.

**மோ. க. காந்தி**

## 4

## என்னைச் சோதரனாய் ஏற்றுள்ளாய்

ஆமதாபாத்,
*31, மார்ச்சு, 1917*

அன்புள்ள எஸ்தர்,

போலக் மனைவியின் சகோதரிக்காக நீ அதிக சிரமம் மேற்கொள்ளும்படி செய்துவிட்டேன். ஆனால் என்னைச் சகோதரனாக நீ விரும்பி ஏற்றுக் கொண்டுவிட்டாய். எனக்கு மிக நெருங்கியவர்களிடத்தும் மிகவும் அன்பார்ந்தவர்களிடத்தும் தான், நான் எப்பொழுதும் அதிகம் எதிர்பார்த்து, அவர்களுக்கு அதிகத் தொந்தரவு தருவதில் பேர் பெற்றுவிட்டேன். நீ என்னுடன் சேர முடிவு செய்தபின், என்னால் வரும் தொந்தரவை மகிழ்ச்சியுடன் ஏற்றுக் கொள்ளவேண்டும்.

மிஸ் கிரஹாம்-அதுதான் அந்தச் சோதரியின் பெயர்-உடனே ஊட்டிக்குப் புறப்பட முடியும். அவரும் போலக் மகனும் தாமதமின்றி மலைக்குச் செல்வது முக்கியம். ஏப்ரலில் நான் சென்னை வர இயலாதென்று அஞ்சுகிறேன். இந்த ஆண்டு வர முடிந்தால், மலையிலிருந்து நீ திரும்பிய பின் தான் வர முடியுமென்று எண்ணுகிறேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் உனக்கும் மிஸ் பீட்டர்ஸனுக்கும் அன்பு,

உன் உண்மையுள்ள,
**மோ. க. காந்தி**

## 5

### பாபு

மோதிஹரி,
சம்பாரண்,
*15, ஏப்ரல், 1917*

அன்புள்ள எஸ்தர்,

உன் இனிய கடிதம் நான் சென்ற இடமெல்லாம் என்னைப் பின் தொடர்ந்து, இங்கு வந்து கிடைத்தது. இங்கு இமாலயத்தின் பாதத்தில் நான் இருக்கின்றேன். அவுரிச் செடி தோட்ட முதலாளி களின் கீழ் வேலை பார்க்கும் தொழிலாளரின் நிலையை நான் இங்கு ஆராய்ந்து வருகிறேன். என் வேலை மிகக் கடினமாக உள்ளது. இறைவனிடம் பொறுப்பை ஒப்புவித்து விட்டு நான் பணியாற்று கின்றேன். பணியாற்றுவது நம் கடன்; பலன்பற்றி நாம் கவலைப் படக் கூடாது.

மிஸ் கிரஹாம் பற்றி நீ கவலைப்படாதே. அவர் ஊட்டியில் தங்கு வதற்கு ஏற்பாடுகள் செய்யப்பட்டுள்ளன.

நீ விரும்பினால் பாபு என்று என்னை அழைக்கலாம். 'அப்பா' என்று அதற்குப் பொருள். ஆசிரமத்தில் அன்புடன் அழைக்கும் சொல்லாக அது வழங்குகிறது. உன் அன்பை நான் பெரிதும் மதிக்கின்றேன். நீ ஆமதாபாத் முகவரிக்கே தொடர்ந்து எழுது.

அன்பு,

உன் அன்புள்ள,
**மோ. க. கா.**

## 6

### நான் கைதுசெய்யப்படுவேன்

மோதிஹரி,
*17, ஏப்ரல், 1917.*

என் அன்புள்ள எஸ்தர்,

நான் விரைவில் கைது செய்யப்பட விருக்கின்றேன் என்பதை நீ அறிய விரும்புவாய். தொழிலாளருக்குள்ள குறைகள் சிலவற் றைப் போக்க நான் இங்கு வந்துள்ளேன். அதிகாரிகள் நான் இங்கிருப்பதை விரும்பவில்லை. ஆகவேதான் நான் விரைவில் கைது செய்யப்படக்கூடும். ஆசிரமத்தில் M... இடம் சொல்லி,

உனக்குப் பத்திரிகைகள் அனுப்பச் சொல். அவற்றிலிருந்து நீ செய்தியை அறிந்துகொள்ளலாம். மனச்சாட்சியின் ஆக்கினையைப் பின்பற்றுவதால் கைது செய்யப்படுவேன் என்பதை அறிய எனக்கு எல்லையற்ற மகிழ்ச்சி.

உன்,

(உன் விருப்பப்படியே)

பாபு

## 7

## வழிபாடே வழி

மோதிஹரி,
சம்பாரண்,
2, மே, *1917*.

அன்புள்ள எஸ்தர்,

ஆமதாபாத்திலிருந்து உன் கடிதம் இப்பொழுதுதான் வந்தது. உனக்கு நன்றி சொல்வது, தேவையற்ற உபசாரச் சொல்லாகும். நீ உண்மையான அக்கறையும் ஈடுபாடும் கொண்டுள்ளாய். இங்கு என் அனுபவங்கள் எனக்குப் பெருமகிழ்ச்சி அளித்துள்ளன. அதற்கு ஈடாக, என்னைச் சுற்றிலும் நான் காணும் துன்பம் எனக்கு மிகுந்த வேதனை தருகின்றது. இச்சோதனைகளில் நீயும் பங்கு கொள்ள விரும்புவதால், என்னிடம் அனுதாபம் கொள்கிறாய் என்பதை அறிவேன். ஆனால் நீ செய்ய வேண்டிய வேலை உனக்குக் காத்திருக்கிறது. உன்னுடன் இராமல் தூரத்தில் இருப்பவர்களுக்காக, நீ வழிபாடு செய்வது தவிர வேறு வழி கிடையாது. அதைத்தான் நீ முழுமனதுடன் செய்து வருகிறாயே.

ஆறு மாதங்களுக்கு இந்த இடத்தைவிட்டு நான் வர இயலாது. நான் இங்கு செய்துவரும் வேலையை, அவகாசம் கிடைக்கும்போது, என்றாகிலும் உனக்குச் சித்திரித்துக் கூறுவேன்.

உனக்கு வசதிப்படும் போதெல்லாம் ஆசிரமத்திற்குச் செல். ஒருவருக்கு ஒன்றுக்கு மேற்பட்ட வீடுகள் இருக்கலாமென்றால், அதை உன் வீடுகளில் ஒன்றாய்க் கருதவேண்டும்.

மேலே குறித்துள்ள முகவரிக்கு நீ எழுதலாம்.

அன்புடன்,

உன்,

பாபு

# 8

## அன்பு நியதி

நாடியாட்,

*11, மே, 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

உன் கடிதம் கிடைத்தது. கிறிஸ்துமஸ் காலத்தில் ஆசிரமத்துக்கு வருவதை நான்—ஏன், நாங்கள் அனைவருமே—ஆவலுடன் எதிர்பார்க்கின்றோம். அதற்குள் மையக் கட்டிடம் கட்டி முடிந்திருக்கும். இயனிலையும் மிக இதமாக இருக்கும்.

வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதத்தையும், மிஸ்டர் P... பேச்சுக்குப் பதில் சொல்லும் முகத்தான் நான் எழுதிய கடிதத்தையும் நீ படித்துள்ளாய் என்று நம்புகிறேன். அரசுபற்றியும், பொதுவாக வாழ்க்கைத் தத்துவம் பற்றியும் என் கருத்துக்கள் சுருக்கமாக அதில் அடங்கியுள்ளன. அன்பையும் துன்பத்தையும் ஆளும் நியதி குறித்து நான் கொண்டுள்ள கருத்துக்களை, வைஸ்ராய்க்கு நான் எழுதிய கடிதம் தத்ரூபமாகச் சித்திரிக்கின்றது. சாத்விக எதிர்ப்பு என்ற சொல் அக்கருத்தை மெருகற்ற முறையில் குறிக்கிறது. உண்மையில் எனக்கு அச்சொல் பிடிக்கவில்லை. பலவீனமானவர் கையில் ஓர் ஆயுதம் என்று கருதுகையில், அது அன்பின் ஆட்சி நெறியை அவமதிப்பதாகும். அன்பு, வாளுருவான வலிமை. அச்சம் ஒரு சிறிதும் இராத இடத்தில்தான் அன்பு தடையின்றிப் பாய்கிறது. அன்புக்குரியவர் தரும் தண்டனை, ஆன்மாவுக்கு அரு மருந்தாகும்.

உன் ஈரற்குலையைக் குணப்படுத்த அடியோடு உணவைத் தவிர்த்துப் பார்ப்பாயா? கொதித்தாறிய குடிநீரை நீ தாராளமாகக் குடிக்கலாம். அது போதவில்லையானல், தண்ணீர் கலந்த ஆரஞ்சுச் சாறு குடிக்கலாம். பலவீனமாகவும் மயக்கமாகவும் இருந்தால், படுக்கையில் படுத்துக்கொள். ஒரு தொட்டியில், உன்கால்களும் உடம்பின் மேற்பாகமும் தொட்டிக்கு வெளியே இருக்கும்படி உட்கார்ந்து கொண்டு, குளிர்நீரில் இடுப்பைக் குளிப்பாட்டுவது இன்னும் நல்லது. அது மிகவும் உற்சாக மூட்டும். ஈரற்குலைத் தொந்தரவுகளுக்கு, உண்ணு நோன்புபோல் சிறந்த மருந்து வேறு கிடையாது.

உன்,

பாபு

# 9

## அன்புக்கு நான் அருகதையா?

பெட்டையா,
13, மே, 1917.

என் அன்புள்ள எஸ்தர்,

எனக்குக் கடிதம் எழுதுவதற்காக நீ சமாதானம் கூறத் தேவையில்லை. உன் கடிதங்கள் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி தருகின்றன.

'மிஷன்' உனக்குத் தந்துள்ள பொறுப்பை நீ முழுமனதுடன் நிறைவேற்றுவதே உன் கடமையாகும் என்பதில் எனக்கு ஐயமில்லை. அவர்கள் உன்னை விடுவித்தபின், சமூகத்துக்கு இன்னும் நிறைவான சேவை செய்ய முடியுமென்ற நம்பிக்கை உனக்குத் தெளிவாகவும் உறுதியாகவும் ஏற்படும்போது நீ ஆசிரமத்திற்கு வரலாம். அந்த நேரம் வரும்போது, ஆசிரமம், தனக்குச் சொந்தமான உறுப்பினரில் ஒருவராய் உன்னை மனமுவந்து ஏற்றுக் கொள்ளும். அதுவரை, நீ ஆசிரமத்திற்கு எப்பொழுது வேண்டுமானாலும் தாராளமாகச் சென்று, எவ்வளவு நாள் வேண்டுமாயினும் தங்கலாம்.

மற்றவர்களுக்கு எடுத்துக் காட்டாக அமைய ஆசிரமத்தில் இப்பொழுது ஒரு புதிய கல்வி முறையைப் பரீட்சித்து வருகின்றோம். நீ அங்கு செல்லும்போது, ஆசிரியர் குழாத்தைப் பார்த்தால் உனக்கு மிகவும் பிடித்திருக்குமென்று நம்புகிறேன். அவர்கள் அனைவரும் நல்லவர்கள்; நிதான புத்தி உடையவர்கள்.

இங்கு என் வேலை நாளுக்கு நாள் அதிக மகிழ்ச்சி அளிக்கின்றது. ஏழை விவசாயிகள், பாவம், என்னைச் சூழ்ந்து உட்கார்ந்து கொண்டிருப்பதிலேயே மகிழ்ச்சி கண்டு, நான் சரியானது எதுவோ அதைச் செய்வேன் என்று நம்பிக்கை கொண்டுள்ளனர். இத்துணை அன்புக்கு நான் அருகதையாக நடந்துகொள்ள வேண்டுமென்பதுதான் என் கவலை. தோட்ட முதலாளிகளை நான் அடிக்கடி காண்கிறேன். இத்தனை ஆண்டுகளாக அடக்குமுறைக்கு ஆளாகி வேதனைப்பட்டுள்ள விவசாயிகளுக்கு நியாயம் வழங்க முதலாளிகளின் நியாய உணர்வை ஈர்க்க முடியுமென்ற நம்பிக்கையை நான் இன்னமும் இழந்துவிடவில்லை. அரசுக்கு நான் அனுப்பியுள்ள கோரிக்கையின் படியொன்றை உனக்கு அனுப்பி வைப்பேன். அவற்றில் சில அம்சங்கள் உனக்கு விளங்காமல் இருக்கலாம்.

அவைபற்றி என்னைக் கேட்கத் தயங்காதே.

அன்புடன்,

உன்,

பாபு

## 10

## இறைவன் சந்நிதி தரும் நிதி

பெட்டையா,
*19, மே, 1917.*

என் அன்புள்ள எஸ்தர்,

உன் கடிதம் உன் உயர்ந்த இதயத்தைக் காட்டுகிறது. உண்மையில் அந்த 50 ரூபாய் தற்போது எனக்குத் தேவையில்லை. இப்போதைக்கு எங்கள் தேவைக்கு அதிகமாகவே எங்களிடம் பணம் உள்ளது. வேறெந்த நல்ல காரியத்திற்கும் அதைப் பயன்படுத்துவது பற்றிய யோசனை உனக்குத் தோன்ருவிடில், ஆசிரமத்திற்கு அனுப்பி, நெருக்கடி வேளையில் பயன்படும் நிதியாக வைத்திருக்கச் சொல். ஆசிரமத்திற்கும் தற்போதைக்குப் பணம் தேவையில்லை. என் வேலையில் எனக்கு வேண்டிய நிதி உதவி அனைத்தும், ஒரு வகையில் என் வழிபாட்டின் பயனாகக் கிடைத்துள்ளதுதான். நான் ஏற்றுக் கொண்டுள்ள பொறுப்புகளை நடத்த நான் பிச்சை கேட்க வேண்டி யிருந்ததில்லை. ஆனல் அது நீண்டதொரு கதை; அதை இப்பொழுது விவரிக்க வேண்டியதில்லை.

இங்கு வேலை வழக்கம்போல் தொடர்கிறது.

மிஸ் பீட்டர்சனுக்கு எழுதும்போது நான் அவரை மிகவும் கேட்டதாகச் சொல்லவும். அவர் எழுதுவதாக வாக்களித்த நீண்ட கடிதத்தை இன்னும் எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறேன் என்று சொல்.

அன்புடன்,

உன்,

பாபு

## 11

## மக்கள் எழுச்சிக்கே அரசு அசையும்

பெட்டையா,
*26, மே, 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

உன் கடிதம் மிக அருமையாக இருப்பதால், அதைப் போலக்குகள் படிப்பதற்கு அனுப்பியுள்ளேன். படித்தபின் ஆமதாபாத்துக்கு அனுப்பச் சொல்லியுள்ளேன். உன்னைக் கேட்காமல் இதைச் செய்ததற்காக வருத்தப்பட மாட்டாயென்று நம்புகிறேன்.

அவுரிச் செடி பயிர் செய்யாதவர்கள்கூட சட்ட விரோதமாக லாபம் அடைய விரும்புகின்றனர். ஆகவே அவர்களும் விவசாயி களை மிகக் குறைந்த ஊதியத்திற்கோ, சில சமயங்களில் ஊதியம் இல்லாமலோ, தங்கள் நிலத்தில் வேலை செய்ய வற்புறுத்து வதுடன், நிலக் குத்தகைக்கு மேலாகப் பல தொகைகளைச் செலுத் தவும் நிர்ப்பந்தம் செய்கின்றனர். ஆம்; ஏழை விவசாயிகள் நிலைமை அடிமைகள் நிலைமையை விட உயர்ந்ததாக இல்லை. உனக்கு நான் மேலும் சில அறிக்கைகளை அனுப்பியுள்ளேன்; அவை பிரச்னையை மேலும் தெளிவாக்கும். தோட்ட முதலாளிகள் மட்டும் தான் இந்தப் பழிக்குக் காரணமென்று சொல்லமாட்டேன். தோட்ட முதலாளிகள் ஆங்கிலேயராய் உள்ளனர். ஆனல் இந்திய முதலாளிகள் அவர்களை விட உயர்ந்தவர்களாய் இல்லை; சொல்லப்போனல், அவர்களைவிட மிக மோசமானவர்களும் சிலர் உள்ளனர். இது பற்றிய உண்மையைப் பொதுமக்கள் அறியாத தாலேயே, இந்த அநீதி இத்தனை நாள் தொடர்ந்து வந் துள்ளது என்பதில் ஐயமில்லை. பொதுமக்களிடையே எழுச்சி இருந்தால் ஒழிய, அரசாங்கங்கள் ஒருபோதும் அசைந்து கொடுப் பதில்லை.

உன்னைப் பொறுத்தவரை, மற்ற எல்லா மொழிகளையும் விடத் தமிழ் முக்கியத்துவம் பெறும். ஆனல் நீ தேவநாகரி லிபியில் தேர்ச்சி பெற்றல் மிகவும் உதவியாக இருக்கும். அது எளிதானது மட்டுமல்ல; ஒவ்வொரு எழுத்தும் ஒரே ஒலியைத் தான் குறிப் பதாலும், அநேகமாக எல்லா ஒலிகளும் இடம் பெற்றுள்ளன என்பதாலும், அது உலக லிபிகளிற் சிறந்ததாகும்.

உன்,

பாபு

## 12

## இந்தியாவில் ஐரோப்பியர்

பெட்டையா,
*9, ஜூன், 1917.*

என் அன்புள்ள எஸ்தர்,

நான் ராஞ்சிக்குச் சென்று நேற்றுத் தான் திரும்பினேன் என் பதை உனக்கு அனுப்பப்பட்ட பத்திரிகைகளிலிருந்து நீ பார்த் திருப்பாய். வந்தபின் தான் உன் கடிதங்களைப் பார்த்தேன்.

உன் கேள்விக்குப் பதில் சொல்வது கடினமானது. ஐரோப் பியரின் செயல்கள், மொத்தத்தில், இந்தியாவின் நலனுக்கு உகந்த தாயில்லை. இந்தியாவுக்கு வந்துள்ள ஐரோப்பியரில் பலர், கீழ்த்

திசை நாடுகளில் தங்கள் நற்பண்புகளைப் புகுத்தாமல், அந்த நாடுகளில் வழங்கும் தீய பழக்கங்களுக்கு அடிமையாகிவிட்டனர். வேறு வகையாக நடந்திருக்கவும் முடியாது. சமய உணர்வு அவர்கள் உள்ளத்தில் ஊன்றவில்லை என்பதற்கு இப்போது நடக்கும் போர் சான்றாகும். நவீன நாகரிகம், நிச்சயமாக கிறிஸ்துவத் தத்துவத்திற்கு முரண்பட்டதாகும் என்பது என் கருத்து. ஐரோப்பியர் இந்தியாவுக்குக் கொண்டு வந்துள்ளது அந்த நாகரிகத்தையே ஒழிய, ஏசுவின் வாழ்க்கையை அல்ல. நீயும், உன்னைப் போன்ற வெகு சிலரும் ஏசுவின் வாழ்க்கையை நிலை நிறுத்த முயல்கின்றீர்கள். இதனால் பலன் ஏற்படுவது உறுதி. ஆனால் இதற்குக் காலம் பிடிக்கும். "இறைவனின் ஆலை இயந்திரங்கள் மிக மெதுவாகவே இயங்குகின்றன." உங்களை எதிர் நோக்கி நிற்கும் தீய சக்திகளால் பாதிக்கப்படாமல், நீயும் உன் போன்றவர்களும் உழைத்து வருகின்றீர்கள்; அந்தத் தீமையையும் துருவி ஆராய்ந்து, அதன் அடித்தளத்தில் உள்ள நன்மையைக் கண்டு, அதை உங்கள் பண்புகளுடன் சேர்த்துக் கொண்டு, இரண்டையும் சிறந்த முறையில் இணைக்கின்றீர்கள். இதேபோல் மற்றவர்களும் நம்மிடம் உள்ள நன்மையைக் கண்டு அதை வளமாக்க முயல வேண்டும். ஆகவே தான் ஆசிரமத்திற்கு உன் வருகையை வரவேற்றேன். அது போலவே தங்கள் கலாச்சாரச் சிறப்புக்கு உண்மையாக இருந்து, அதே சமயத்தில் இந்த நாடு அளிக்க விருப்பதையும் ஏற்றுக்கொள்ளும் அளவிற்குப் பரந்த மனப்பான்மை கொண்ட ஐரோப்பிய நண்பர்கள் பலர் வருகையையும் வரவேற்பவன் நான். கூறுவது தெளிவாக இருக்கிறதா? இதை என்னுடன் நீ மேலும் ஒளிவு மறைவின்றி விவாதிக்க வேண்டும்.

அரசாங்கம் அமைக்கவிருக்கும் குழுவிலே நான் பொறுப்பேற்க உத்தேசித்துள்ளேன். நான் இப்பொழுது பொதுவான ஒரு குறிப்பு வரைந்து கொண்டிருக்கின்றேன். ராஞ்சிக்கு நான் சென்றதன் விவரங்களையும் அதில் காணலாம். நான் அங்கு சென்றது நல்லதாயிற்று.

ஸ்ரீமதி காந்தியும் தேவதாசும் இங்கிருக்கின்றார்கள்; போலக் கூட எங்களுடன் தான் இப்பொழுது இருக்கின்றார். நான் கைது செய்யப்பட்டிருந்தால், ஸ்ரீமதி காந்தியும் தேவதாசும் ஏழை விவசாயிகளிடையே பணியாற்றி, போராட்டத்தில் அவர்களை ஊக்குவித்திருப்பார்கள். நீ வெகுவிரைவில் ஸ்ரீமதி காந்தியைச் சந்திக்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

நான் தாங்க முடியாத வேலைச் சுமையால் வருந்திக் கொண்டிருக்கின்றேன் என்று எண்ணாதே.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

உன்,

பாபு

## 13

## வெறுப்பின் நடுவிலே அன்பு வாழ்க்கை

மோதிஹரி,
*11, ஜூன், 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

நான் இங்கு ஒரு நாள் தங்க வந்துள்ளேன். நீ அனுப்பிய சிறு புத்தகம் [கொரிந்தியர்—*13*வது அதிகாரம்] நான் இரயில் நிலையத்திற்குப் புறப்படுகையில் வந்தது. பல ஆண்டுகளுக்கு முன் நான் தென்னாப்பிரிக்காவில் கழித்த இன்ப நாட்களை அது என் நினைவிற்குக் கொண்டுவந்தது. எனக்கு மிகப் பிரியமான கிறிஸ்துவ நண்பர்கள் சிலருடன் நான் இருந்தபோது, பல ஆண்டுகளுக்கு முன் அப்புத்தகத்தைப் படித்திருக்கிறேன். இது போன்ற புனித நூலொன்றைப் பாராட்டி எழுதுவது அசம்பாவித மல்லவென்றால், இம்முறை நான் அதை படித்தபோது, அதன் அருமையை இன்னும் தெளிவாக உணர முடிந்தது என்று கூறுவேன்.

வாய்மையும் அன்பும், ஒன்றையொன்று குறிக்கும் சொற்கள் என்று நான் நம்புகிறேன். சாத்விக எதிர்ப்பு என்பதைக் குஜராத்தியில் குறிக்கும் சொல்லுக்கு வாய்மை சக்தி என்று பொருளுண்டு, வாய்மை சக்தி, அன்பு சக்தி, ஆன்ம சக்தி என்று பலவாறாக அதற்கு நான் பெயரிட்டுள்ளேன். ஆனால் உண்மையில் சொற்களில் எதுவுமில்லை. நம்மைச் சுற்றிலும் எங்கும் காணும் வெறுப்பின் நடுவே அன்பு வாழ்க்கை வாழ்வதே நம் கடமையாகும். அன்பின் இறுதி வலிமையில் நமக்குத் திடமான நம்பிக்கை இருந்தால் ஒழிய, நாம் அன்பு வாழ்க்கை நடத்த முடியாது. இருநூறு, முன்னூறு ஆண்டுகட்கு முன்னர், மீராபாய் என்றொரு மாண்புமிக்க அரசி வாழ்ந்தார். அவர் கணவனையும் அனைத்தையும் துறந்து, பரிசுத்த அன்பு வாழ்க்கை வாழ்ந்தார். அவள் கணவரே இறுதியில் அவள் பக்தனாக மாறினார். அவள் இயற்றிய சிறந்த துதிப்பாடல்கள் சிலவற்றை நாங்கள் ஆசிரமத்தில் பாடுகிறோம். நீ ஆசிரமத்திற்கு வரும் போது, அவற்றைக் கேட்க மட்டுமல்ல, பாடவும் வாய்ப்பு பெறுவாய்.

அந்த அரிய அன்பளிப்புக்கு மிகுந்த நன்றி. அந்நூலில் அடங்கியுள்ளது போன்ற சிந்தனைகள் எனக்குப் பெரிதும் தேவை.

அன்புடன்,

உன்,
பாபு

அன்பு பற்றிய செய்யுள்களைத் தினமும் மூன்று மாதங்களுக்குப் படிக்க வேண்டுமென்று டிரம்மாண்ட்* செய்துள்ள உபதேசத்தை நான் பின்பற்றப் போகின்றேன்.

---

* 'உலகில் மிகச் சிறந்த பொருள்'—என்ற தலைப்பில் ஹென்றி டிரம்மாண்டு எழுதிய நூல்.

## 14

## வாய்மையும் அன்பும் அனைத்தையும் வெல்லும்

மோதிஹரி,
*17, ஜூன், 1917*

நான் நான்கு நாட்களுக்கு ஆமதாபாத் செல்கிறேன். இம் மாதம் 28ந் தேதிக்குள் திரும்புவேன். என்னிடம் இரகசியம் எதுவும் கிடையாது. நீ கேட்பதற்கு முழு உரிமை உள்ளது. நான் உனக்கு இதை எழுதுவது எவ்வளவு உண்மையானதோ, அவ்வளவு உண்மையானது, தெளிவானது, வாய்மையிலும் அன்பிலும் எனக்குள்ள நம்பிக்கை. அவை இரண்டும் ஒன்றுக்கொன்று பொருந்தும் சொற்களே என்பது என் நம்பிக்கை. வாய்மையும் அன்பும் அனைத்தையும் வெல்லும்.

உன் உண்மையுள்ள,

பாபு

## 15

## அக வளர்ச்சி

மோதிஹரி,
*30, ஜூன், 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

உன் இரு கடிதங்களும் என்முன் இருக்கின்றன. ஆமதாபாத்திலிருந்து 28ந் தேதி நான் திரும்பினேன். அங்கு மிக மகிழ்ச்சியாக நாட்கள் கழிந்தன.

நகர வாழ்க்கை எப்பொழுதும் என் உணர்வை வற்றச் செய்கிறது; கிராம வாழ்க்கை சுதந்திரமாகவும், உற்சாக மூட்டுவதாகவும், தெய்வப் பற்றுள்ளதாகவும் இருப்பதைக் காண்கிறேன்.

"ஆண்டவன் ஏன் இத்தனை நலன்களும், ஆற்றல்களும், புதுமை படைக்கும் திறனும் நமக்கு நல்கியுள்ளார்—அவற்றை நாம் பயன்படுத்தாவிடில்?" நீ கேட்டுள்ள இக் கேள்வியை நானே பல முறை என்னைக் கேட்டுள்ளேன். ஆயிரக்கணக்கானவர் இதே கேள்வியை எப்பொழுதும் கேட்கின்றனர். நாம் ஆன்மிக உயர்வு அடைய எவ்வளவு ஆற்றல் அளித்திருக்கின்றாரோ, அதே அளவு வலிமையான இச்சைகளையும் சோதனைகளையும் கடவுள் நம் பாதையில் வைத்துள்ளார் என்பது என் பணிவான கருத்து. நம் படைப்பாற்றலை நாம் அக வளர்ச்சிக்கும் பயன்படுத்தலாம்; புற இச்சை

களை நிறைவு செய்வதிலும் ஈடுபடுத்தலாம். இமாலய நீர் வீழ்ச்சி களைப் பயன்படுத்துவதில் நான் என் திறமைகளைச் செலுத்தலாம். இதனால் மனிதர் இச்சைகளில் ஈடுபடும் வசதிகள் தான் பெருகும். என்னகத்தே உள்ள இமாலய நீர் வீழ்ச்சிகளைக் கட்டுப்படுத்தும் நியதியைக் கண்டறிய என் ஆற்றலை நான் பயன்படுத்தலாம். அதனால் நிலையான இன்பத்தைப் பெருக்கி எனக்கும் மனித சமூகத் திற்கும் நான் சேவை செய்தவனவேன். தற்கட்டுப்பாடு மூலம் வரக்கூடிய அகவளர்ச்சிக்கு மட்டுமே நம் ஆற்றல்கள் அனைத்தை யும் பயன்படுத்த வேண்டுமென்பதற்குப் பல்வேறு எடுத்துக் காட்டுகளை நீயே உனக்குச் சொல்ல முடியும்.

மிஸ்டர் பிட்மனுக்கு [1] என் மரியாதைகளைத் தெரிவி. உனக்கு அவகாசம் கிடைக்கும்போதெல்லாம் ஆசிரமத்திற்கு வருவதற்கு உன்னை அனுமதித்ததற்காக என் சார்பில் அவருக்கு நன்றி கூறு.

நீ கண்ட இளைஞனிடம் பெற்ற அனுபவம் புதிதொன்றுமில்லை. நீ சந்திக்கும் ஆண், பெண், அனைவரையும் சீர்திருத்த வேண்டு மென்று பதட்டம் கொள்ளாதே. நம்மை நாமே சீர்திருத்திக் கொள் வதுதான் முதலாவதாகவும் கடைசியாகவும் நாம் செய்யவேண்டிய கடமை. நாம் பிறரைச் சீர்திருத்தம் செய்யும்போது, பிறர்மீது தீர்ப்புக் கூறுவது போலாகின்றது. இத்தகைய இளைஞரை சீர் திருத்தப் போனல், அவர்கள் பெரும்பாலும் முன்னிலும் மோசமா கின்றனர். இத்தகையவர் தகுதிக் குறைவாய்க் காணப்படும் போது, அவர்கள் நம்மை விட்டுச்செல்ல அனுமதிப்பதுதான் அனைவருக்கும் நல்லது. நான் போதிய அளவு தெளிவாக விளக்க வில்லை. ஆனல் நீ புரிந்துகொள்வாய். இல்லாவிடில் என்னைக் கேள்.

உன்,

பாபு

## 16

## புதிய ஆண்டு, புதிய பொறுப்பு

மோதிஹரி,
*1, ஜூலை, 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

புதிய ஆண்டில் புகுந்துள்ளாய் என்று அறிவிக்கும் உன் கடிதம் இப்பொழுதுதான் வந்தது. எத்தனையாவது ஆண்டு என்று நீ குறிப்பிடவில்லை. ஆசிரமத்தில் நீ கொண்டுள்ள ஈடுபாட்டை மெச்சு கின்றேன். அது உன் தேவைகளை நிறைவு செய்து, உன் பெற் ரோர்கள் வீட்டில் நீ காண்பது போன்ற மகிழ்ச்சி, அமைதி, அன்பு ஆகியவற்றை அங்கும் பெறும் இடமாக அமைய வேண்டுமென்று

1. தென்னிந்திய டேனிஷ் மிஷனின் தலைமை உறுப்பினர். எஸ்தர் ஃபேரிங்கிடம் மிகுந்த பரிவும் மாருத அனுதாபமும் கொண்டவர்.

விரும்புகிறேன். நம் வாழ்வில் முடியும் ஒவ்வொரு ஆண்டும், நாம் நல்ல வழியில் பயன்படுத்தியிருந்தால் நமக்கு லாபமாகவும், தவருன வழியில் வீணுக்கியிருந்தால் பெரு நட்டமாகவும் அமைகிறது. பகவானுக்குப் பயந்து நடக்க விழையும் நம் போன்றவர்களுக்கு, ஒவ்வொரு புதிய ஆண்டும் மேலும் புதிய பொறுப்பாகும்.

தமிழ்த் தேர்வுக்காக என்ன நூல்கள் படிக்கிருயென்று எனக்குச் சொல். ஆசிரியர் எவரையும் அமர்த்தியிருந்தால், அவருக்கு எவ்வளவு சம்பளம் தருகிருய் என்பதையும் தயவு செய்து சொல்.

என்றும் உன்,

பாபு

## 17

### உலகில் தலை சிறந்த பொருள்

ராஞ்சி,
*8, ஜூலை 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

குழுவின் வேலையை ஒட்டி நான் இங்கு வந்துள்ளேன். 11ந் தேதி இங்கிருந்து மோதிஹரிக்குப் புறப்படுகின்றேன். மேட்டு நிலத்தில் இந்த ஊர் இருப்பதால், ஆரோக்கியத்திற்கு உகந்த இடம் என்று இது கருதப்படுகிறது.

'பயனீர்' பத்திரிகைக்கு நான் எழுதிய கடிதத்தின் படி ஒன்றை இத்துடன் அனுப்புகின்றேன். உனக்கு அது பிடிக்குமென்று நான் அறிவேன். அக்கடிதத்தினுல் இங்கு அதிக பரபரப்பு ஏற்பட்டுள்ளது. இதுவரை, அதற்குச் சாதகமான வரவேற்புதான் கிடைத்துள்ளது.

"உலகில் தலைசிறந்த பொருள்" என்ற நூலின் படி ஒன்றை போலக்குக்கு அனுப்ப முடியுமா? இங்கு அது எனக்குக் கிடைக்கவில்லை. அதில் உள்ள செய்யுள்களைப் படியெடுத்து அவருக்கு அனுப்பினேன். அதைப் பார்த்துவிட்டு, இப்பொழுது புத்தகம் வேண்டுமென்று கேட்கிருர். என்னிடம் உள்ள புத்தகத்தை நாங்கள் பயன்படுத்துவதால் அனுப்புவதற்கில்லை.

உன்,

பாபு

## 18

## அனுவசியப் பொருட்கள்

மோதிஹரி,
*14, ஜூலை, 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

நான் ராஞ்சியிலிருந்து இப்பொழுதுதான் திரும்பினேன். உன் கடிதம் எனக்காகக் காத்திருந்தது.

நீ சைவ உணவை மேற்கொண்டதுபற்றி என்னிடம் சொல்லவே இல்லையே? சமய உணர்வுக்கு அது உகந்தது என்பதோடு, இந்நாட்டின் வெப்பநிலைக்கேற்ற உணவு அதுதான் என்று நான் உறுதியாக நம்புகிறேன். சைவ உணவுக்கு மாறியவர், அதிகப் பயறு வகைகள், வெண்ணெய், பால்கட்டி, பால் ஆகியவற்றை ஊனுணவு உண்ட காலத்தைவிட அதிகமாக உண்ண வேண்டுமென்று அடிக்கடி ஆலோசனை கூறப்படுகிறது. இது தவறாகும். பயறு வகைகளை அளவோடுதான் சாப்பிட வேண்டும். ஒருவர் போதிய அளவு பால் சாப்பிட்டால், வெண்ணெய் மிகக் குறைவாகவே தேவைப்படும்.

அனுவசிய உடைமைகள் வைத்திருப்பது தவறு என்பது என் கருத்து. அப்பொருட்களை இச்சிக்கின்றவர் அவற்றைப் பிறர் கவராமல் தடுக்கக் காவல் செய்யும் அவசியம் ஏற்படுகிறது. அவற்றிற்காக நாம் காட்டும் கவனமும் அக்கறையும், அவற்றைவிட முக்கியமான துறைகளில் செலுத்தப்பட்டால் மிகுந்த பலனளிக்கும். அவற்றில் நாம் எவ்வளவுதான் பற்றுக்கொள்ளாமலிருந்தாலும், அவற்றை இழக்க நேரிடும்போது நமக்குத் துன்பம் ஏற்படத்தான் செய்கிறது.

குழுவின் கூட்டங்கள் திங்கட்கிழமை தொடங்குகின்றன.

நீ பரிவுடன் ஸ்ரீமதி காந்திக்கு அனுப்பியிருந்த அன்பளிப்புப் பொருட்களைப் பார்த்து பெரு மகிழ்ச்சியடைந்தேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

உன்,

பாபு

## 19

## வழிபாடே வழிகாட்டும்

நாடியாட்,
*3, ஆகஸ்ட், 1917*

என் அன்புள்ள எஸ்தர்,

நீ மிக முக்கிய பிரச்னைகளை எழுப்பியுள்ளாய். ஏசுநாதரின் ஆக்கினை திட்டவட்டமானது என்று நான் கருதுகின்றேன். அன்பு

நிரம்பிய ஒருவனுக்குக் கொல்லுதல் அனைத்தும் தீங்கேயாகும். கொல்ல அவசியமே அவனுக்கு ஏற்படாது. ஆகவே அவன் கொல்ல மாட்டான். பாம்பிடம் பயம் கொள்ளாமல் பரிதாபப்படு பவன், பாம்பைக் கொல்ல மாட்டான்; பாம்பும் அவனுக்குத் தீங்கு செய்யாது. இத்தகைய கபடமற்ற நிலையைத் தான் நாம் எய்த வேண்டும். ஆனால் வெகு சிலரே அந் நிலையை எய்த இயலும். நாடுகள் அந்நிலையை எய்தவே இயலாதென்று எனக்குத் தோன்று கிறது. எல்லோரும் சமமான முன்னேற்றம் அடைவது சாத்திய மல்ல. ஆகவே நாடுகள் எப்பொழுதும் போராடிக் கொள்ளும். சண்டையிடும் இரு நாடுகளில், ஏதாவது ஒரு நாட்டின் பக்கம் தவறு குறைவாக இருக்கும். ஒரு நாடு நியாயத்திலேயே நிற்க வேண்டு மானால், ஆன்ம பலம் மட்டும் கொண்டே அது போராட வேண்டும். அத்தகைய நாடு இனிமேல் தான் பிறக்க வேண்டும். இந்தியா அந்த நாடு என்று நான் எதிர்பார்த்தேன். நான் எண்ணியது தவறு என்று அஞ்சுகிறேன். நான் இந்தியாவிடமிருந்து அதிகப்படியாக எதிர்பார்ப்பதென்றால், உறுதியான நிதான சக்தியாக அது இயங் கும் என்பது தான். ஆனால் உலகுக்கு அறிவுரை கூறும் அருகதை பெறுமுன் இந்தியா, போராடித் துன்பத்தைத் தாங்கக் கற்றுக் கொள்ள வேண்டும்.

தனி மனிதரென்ற முறையில் நம் கடமை என்ன என்பதே உனக்கும் எனக்கும் முக்கியமான கேள்வி. என்னைப் பொறுத்த வரையில் நான் செயல்படுத்தக் கூடிய ஒரு முடிவுக்கு வந்துள்ளேன். "எந்தக் குறிக்கோளுக்காயினும், நான் ஒருவரைக் கொல்ல மாட் டேன். அவர் ஆக்ஞையை எதிர்ப்பதால் நான் கொல்லப்படக் கூடிய நிலை எழுந்தால், அவரால் கொல்லப்படுவதையே விரும்பு வேன்" இதே ஆலோசனையை நான் அனைவருக்கும் கூறுவேன். ஆனால் மன உறுதியே இல்லாது போகுமிடத்து, மனத்தை உறுதிப் படுத்திக் கொண்டு அவன் போராட வேண்டுமென்றே நான் புத்தி மதி கூறுவேன். மன உறுதி இராத இடத்தில் அன்பும் இராது. இந்தியாவில் அன்பு இல்லை என்பது மட்டுமல்ல; ஆண்மை பறிக்கப் பட்டதால் வெறுப்பே மூண்டுள்ளது. ஒரு பக்கம் கதியற்ற இய லாமை; மற்றொரு பக்கம் போராடிக் கொல்ல வேண்டுமென்ற பல மான ஆசை. போராடும் வலிமையை மீட்டு, இந்த ஆசையை நிறைவு செய்ய வேண்டும். அதன் பின்பு தான் எந்த வழியைத் தேர்ந்தெடுப்பது என்ற பிரச்னை எழுகிறது.

ஆம்; பொறுத்தருளி, அன்பு காட்டும் செயலே, அதைச் செய் பவனின் உயர்வையும் சிறப்பையும் காட்டுகிறது. ஆனால் அவ்வாறு சொல்வது, யார் அன்பு காட்ட முடியுமென்ற கேள்விக்குப் பதில் சொல்வதாகாது. சுண்டெலி, சுண்டெலி என்ற முறையில் பூனை யிடம் அன்பு காட்ட முடியாது. சுண்டெலி, பூனைக்குத் தீங்கு செய் யாமல் பொறுத்து நின்றது என்று கூற முடியாது. எவரிடம் அச்சம் கொள்கிறோமோ, அவரிடம் அன்பு கொள்ள முடியாது. அச்சத்தைத் தவிர்த்த மறுகணமே, தாக்கலாமா, அல்லது பொறுத்திருக்கலாமா என்று முடிவு செய்யும் பிரச்னை எழுகிறது. பொறுத்திருப்பது

மனித னகத்தே ஆன்ம எழுச்சிக்கு அறிகுறி. தாக்குவது உடல் வலிமைக்குச் சான்று. ஆன்ம வலிமையை மெய்ப்பிக்கும்போது, தாக்குதற்குரிய ஆற்றலும் நம்மிடம் இருக்க வேண்டும். இதற்கு, எதிரியைவிட அதிக உடல் வலிமை பெற்றிருக்க வேண்டு மென்று பொருளில்லை.

இது அவ்வளவு திருப்திகரமான கடிதமல்ல என்று உணர் கிறேன்; ஆனால் என் வாதம் உனக்கு விளங்குகிறதென்று நம்பு கிறேன். எனினும் இது போன்ற கேள்விகளுக்கு, வழிபாடே வழி காட்டும்.

அன்புடன்,

பாபு

# 20

## அன்பு பொறுமை காட்ட வேண்டும்

பெட்டையா,
*12,* ஆகஸ்ட், *1917*

என் அன்புள்ள எஸ்தர்,

இன்று ஒரு நிமிட அவகாசம் கிடைத்துள்ளது. நீ எழுதும் சொற்களில் உண்மையும் நன்மையும் நிறைந்துள்ளன. நம்பிக்கையும் துணிவும் சிறப்பானவை. அவை வெற்றிக்கு இன்றியமையாதன. ஆனால் அன்பு அவற்றினும் சிறந்தது. இந்த அன்பு அதிக சோதனைக்கு உள்ளாக்கப்படுவதையும் நான் காண்கிறேன். இன்று காலைதான், பலமான உடற்கட்டு உடைய ஒரு மனிதர் என்னிடம் வந்து, என்னால் அளிக்க இயலாத ஓர் உதவியை அளிக்க வேண்டு மென வற்புறுத்தினர். அவர் என்னை விட்டுச் செல்ல மறுத்தார். நான் அவரிடம் கெஞ்சினேன். அவர் அழவும், நெஞ்சில் அடித்துக் கொள்ளவும் தொடங்கினர். அவர் சொன்னதில் நியாயம் எதுவு மில்லை. ஆனால் அவர் அன்புடனும் நம்பிக்கையுடனும் வந்திருந்தார். அவரிடம் அன்பு கொள்ள விரும்பிய நான் அவரை எப்படி நடத்த வேண்டும்? அவர் அழுதது பாசாங்கல்ல என்று வைத்துக் கொண் டாலும், நான் அவர் இருப்பதைப் பொறுத்துக்கொண்டு, அவரிடம் தொடர்ந்து பேசியிருக்க வேண்டுமா? இத்தகைய பிரச்னைகள் ஒவ் வொரு நாளும் எழுகின்றன. அன்பு, பொறுமை பேண வேண்டும். நான் குறிப்பிட்டுள்ளது போன்ற நிகழ்ச்சிகளில் இந்த நியதியை எவ்வாறு கடைப்பிடிப்பது? இவற்றில் உண்மையான வழிகாட்டி, நாம் தூய மனதும், நம் விசுவாசத்தில் நம்பிக்கையும் கொண்டிருந் தால், நம்மகத்தே உள்ள ஆணையாளர்தான். அடிக்கடி நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம்.

தற்போதைக்கு நீ ஆமதாபாத் முகவரிக்கு எழுதலாம். இன் னும் ஒரு வாரத்திற்குள் நான் அங்கு போய்ச் சேருவேன் என்று

எதிர்பார்க்கிறேன். இன்றிருந்து 3 நாட்களுக்குள் குழுவின் வேலை முடிந்துவிடும்.

பாம்புக் கடிக்கு நீ என்ன சிகிச்சை செய்து கொண்டாய்? நீ எப்படிப் பாம்புக் கடிக்கு உள்ளானாய்? உடலில் எங்கு அது உன்னைக் கடித்தது? பாம்பு பிடிபட்டுக் கொல்லப்பட்டதா? பாம்புக் கடிகள், பாம்புகள் ஆகிய பிரச்னையில் எனக்கு எப்பொழுதுமே அக்கறை உண்டு.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

உன்,

பாபு

## 21

### வயிற்று அளைச்சல்

ஆமதாபாத்,
*15*, செப்டம்பர், *1917*

என் அன்புள்ள எஸ்தர்,

உண்மையில் உன்னிரு கடிதங்களுக்கு நான் பதிலெழுத வேண்டும். உன் கடைசிக் கடிதம் மிக உருக்கமாக இருக்கின்றது. நான் அனுபவித்த கடும் வேதனைக்குக் காரணம் என்னகத்தே தான் உள்ளது. இருமுறை, நான் உணவருந்தியிருக்கக் கூடாத வேளையில் உணவருந்தினேன். அதன் விளைவாக மிகக் கடுமையான வயிற்று அளைச்சல் ஏற்பட்டது. இப்பொழுது உடல் சிறிது தேறியுள்ளது; நாளுக்கு நாள் குணமடைந்து வருகிறேன்; இன்னும் நான்கைந்து நாட்களிலே நான் படுக்கையிலிருந்து எழுந்து விடுவேன்.

அன்புடன்,

பாபு

## 22

### ஆசை

ஆமதாபாத்,
*6*, செப், *1917*

என் அன்புள்ள எஸ்தர்,

உன் கடிதக் குறிப்பு பெற்று மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன். *14* ந் தேதி, ஒரு நாளுக்கு மட்டுமே, நான் சென்னையில் இருப்பேன் என்று எதிர்பார்க்கிறேன். *15* ந் தேதி மாலையில் நான் புறப்பட வேண்டியிருக்கும்.

நான் இங்கு வந்ததிலிருந்து ஊர் ஊராகச் சென்று, வன்முறைகளைத் தவிர்த்து சத்யாக்கிரக நெறியை மேற்கொள்வதைப் பரப்ப முயன்று வருகின்றேன். அது மிகக் கடினமான பணி. சத்யாக்கிரகம் என்னும்போது நான் எதைக் குறிப்பிடுகிறேன் என்பது இத்துடன் இணைக்கப்பட்டுள்ள குறிப்பிலிருந்து விளங்கும்.

உடை பற்றி உன் கருத்துக்களை [யங் இந்தியாவில்] வெளியிட வேண்டுமென்று நான் எண்ணவில்லை. டாக்டர் M...இடம் அதைப்பற்றி எச்சரிக்க நான் மறந்துவிட்டேன். அவருக்கு உன் கருத்துக்கள் மிகவும் பிடித்திருந்ததால், அவற்றைப் பிரசுரிக்கும் ஆசையை அவரால் அடக்க முடியவில்லை. பலனளிக்குமென்று நான் கருதும் கடிதங்களை டாக்டர் M...இடம் நான் அனுப்புவதற்கு நீ தடை சொல்ல மாட்டாயென்று எதிர்பார்க்கிறேன். 'ஆசையிலிருந்து விடுபடுவது' என்பது ஒரு கலைச் சொற்றொடராகும். மிக உயர்ந்த நிலையில் உள்ளதைத் தவிர மற்ற உடைமைகளையும் ஆசைகளையும்தான் அது குறிக்கும். இறைவனிடம் அன்பு கொள்வது ஓர் ஆசை ஆகாது. அது இயல்பான ஏக்கம். ஆனால் நல்லது செய்ய வேண்டுமென்று விரும்பி, ஏராளமான சொத்தைச் சேர்ப்பது ஓர் ஆசையாகும்; அதை அடக்கவே வேண்டும். கண்ணிமைப்பது போல், நல்ல செயல்களும் நமக்கு இயல்பாக வர வேண்டும். ஆசைப்படாமலேயே. கண்கள் இயல்பாக இமைக்கின்றன. நல்லது செய்வதும் அது போலவே இயல்பாகவும் இயற்கையாகவும் நமக்கு வர வேண்டும்.

என்றும் உன்,

பாபு

## 23

## அன்புக்குப் பணிவும் பொறுமையும் வேண்டும்

ராஞ்சி,
*4, அக்டோபர், 1917*

அன்புள்ள எஸ்தர்,

நான் விரும்புவது போல் அடிக்கடி எழுத என்னால் இயலவில்லை. என் வாழ்வின் மிக வளமான அனுபவங்களில் ஒன்றை நான் உன்னுடன் பகிர்ந்துகொள்ள வேண்டும். நான் எதிர்பார்த்ததற்கு மாறாக, அதிக வேலைப் பளுவினால் மலேரியா சுரத்தினால் படுத்தேன். அந்த நேரத்தில் சுரம் வந்தது என் வேலைக்குப் பெரும் இடைஞ்சலாக இருந்தது. ஒவ்வொரு நாளும் குழுவின் வேலையைக் கவனிக்க வேண்டியிருந்தது. கொய்னா மருந்து சாப்பிடும்படி கூறியிருந்தார்கள். அதை நான் சாப்பிட மறுத்தேன். என் நம்பிக்கை என்னைக் காப்பாற்றியது. ஒரு கூட்டத்தைக் கூடத் தவறவிடாமல் அத்தனைக்கும் சென்றேன். நேற்று ஒரு மனதாக

நாங்கள் அனைவரும் அறிக்கையில் கையொப்பம் இட்டோம். நோயும் நீங்கிவிட்டதென நினைக்கின்றேன். இப்பொழுது மேலும் விவரமாக எழுத எனக்கு அவகாசமில்லை. ஆனால் நாம் சந்திக்கும் போது இந்த அனுபவங்கள் பற்றிய விவரங்களை என்னிடம் நீ கேட்டறியவேண்டும். இரயில்வே பற்றி நான் பத்திரிகைகளுக்கு எழுதிய கடிதத்தை நீ படித்திருப்பாயென்று எண்ணுகிறேன். அதைப் படிக்கத் தவறியிருந்தால், ஆசிரமத்திடமிருந்து பத்திரிகையைப் பெற்றுப் படித்துப் பார்.

நீ சென்னைக்கு வராதது சரியே[1]. அன்பு பொறுமையுடனும் பணிவுடனும் இருக்க வேண்டும். தங்கள் அன்பைப் பகட்டாக வெளியே காட்டிக் கொள்ளக்கூடியவர்கள், செல்வமும் ஓய்வு வசதியும் பெற்றவர்கள்தான். நம்மைப் போன்ற ஏழைகளுக்கு, அன்பைக் காட்டுவதற்கு அதைவிடச் சிறந்த வேறு வழி இருக்கின்றது. உரிய நேரத்தில் அன்பு தன் கடமையை ஆற்றும். அதற்கிடையே அது ஓசைப்படாமல், ஆனால் உறுதியாக, வளர்ந்து வரும். 7ந் தேதி முதல் 13ந் தேதி வரை மோதிஹாரியில் இருப்பேன். பிறகு ஆமதாபாத்.

உன்,

பாபு

## 24

## ஆண்டவன் சித்தமே

மோதிஹாரி,
சம்பாரண்,
*12*, டிசம்பர், *1917*

அன்புள்ள எஸ்தர்,

இப்போது தான் வந்த உன் கடிதம் எனக்கு வருத்தத்தை ஊட்டுகிறது.[2] ‘எதைப் பற்றியும் கவலைப்படாதே’ என்ற வாசகம் தான், இதை எழுதும்போது என் மனத்தில் தோன்றுகிறது. நீ ஏன் பதட்டமடைந்து கவலைப்பட வேண்டும்? உன்னைப் பெரும் சோதனைக்கு ஆளாக்கியுள்ளார்கள். அதிலிருந்து நீ தீங்கின்றி மீள்வாய் என்ற நம்பிக்கை எனக்கு உண்டு. நீ எவருடைய[3] அதிகாரத்தின் கீழ்ப் பணியாற்ற உடன்பட்டுள்ளாயோ, அவர்களுக்குக் கீழ்ப்படிந்து நடப்பதுதான் இப்பொழுது உன் தெளிவான கடமை. உன் ஆன்ம முன்னேற்றத்தில் அவர்கள் குறுக்கிடுகின்றனர்

---

1. எஸ்தர் ஃபேரிங் அப்பொழுது திருக்கோயிலூரில் பணியாற்றி வந்தார். காந்திஜி ஒரு சில மணிநேரம் சென்னையில் தங்கியிருந்தார்.

2. கிறிஸ்துமஸ் விடுமுறை நாட்களை ஆசிரமத்தில் கழிக்க விரும்பினர் எஸ்தர். ஆனால் மிஷன் அதிகாரிகள் அதற்கு அனுமதி மறுத்தனர்.

3. டேனிஷ் மிஷன் அதிகாரிகள்.

என்பது தெளிவாகும்போதுதான், நீ அவர்களை எதிர்க்கலாம். அது தெளிவாகாத வரை, அவர்களுக்குக் கட்டுப்பட்டே நடக்க வேண்டும். இந்த நேரத்தில் இயனிலை ஆமதாபாத்தில் இனிதாக இருக்கும் என்பதையும், அங்கு நீ அன்புடன் கவனிக்கப்படுவாய் என்பதையும் கவலை இல்லாமல் இருக்க முடியும் என்பதையும் அவர்களுக்கு நீ எடுத்துக்காட்டி வாதாடலாம். இடமாற்றமே உனக்கு நன்மை செய்யக்கூடும். நீ வாதாடிய பின்னும் அவர்கள் முடிவை மாற்றிக் கொள்ளாவிடில், அவர்கள் முடிவுக்குக் கீழ்ப்படிவதைத் தவிர வேறுவழியில்லை என்று உன் மனத்தைத் திடப்படுத்திக் கொள்ள வேண்டும். உன் தேர்வு பற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. அது ஒரு பொருட்டில்லை. நாம் புனிதமான நோக்கமென்று கருதுவதை நிறைவேற்றுவதிலேயே தடைகள் ஏற்படும் போதுதான் நம் உண்மைத் தகுதி வெளிப்படுகின்றது. ஆண்டவனின் வழிகள் அலாதியானவை; நாம் விளங்கிக் கொள்ள முடியாதவை. நம் விருப்பத்துக்கல்ல, அவருடைய சித்தத்திற்கே நாம் கீழ்ப்படிய வேண்டும்.

எனக்கு அடிக்கடி கடிதம் எழுது. ஆண்டு முடியும்வரை, உன் கடிதங்களை மோதிஹரிக்கு அனுப்பு. இக்கடிதம் உனக்குக் கிடைக்கும் போதாகிலும் நீ சஞ்சலமின்றி மன நிறைவுடன் இருக்கின்றாய் என்பதைத் தெரிவிக்க நீ தந்தி அனுப்ப வேண்டுமென்றுகூட நான் விரும்புகிறேன்.

அன்புடன்,

உன்,

பாபு

## 25

## அன்புகொள்ளும் ஆற்றல் விரிவடைய வேண்டும்

மோதிஹரி,
*13, ஜனவரி, 1918*

என் அன்புள்ள எஸ்தர்,

நான் ஊர் ஊராகச் சுற்றிக் கொண்டிருப்பதால் உன் கடிதங்களுக்குப் பதில் எழுத முடியவில்லை. நான் கல்கத்தாவிலிருந்து பம்பாய்க்கும், அதற்குப் பிறகு ஆசிரமத்திற்கும் சென்று விட்டு, நேற்றுத்தான் திரும்பினேன். எனக்கு ஏற்பட்ட பல தரப்பட்ட அனுபவங்களை விவரிக்க இப்பொழுது அவகாசமில்லை.

இந்த உலகில், களங்கமற்ற உத்தம நிலையை எய்த இயலாது என்று கூறுவது இறைவனை மறுதலிப்பதாகும். பாவத்தை அடியோடு களைவது சாத்தியமில்லை என்ற கூற்று வாழ்க்கையில் ஒரு

கட்டத்திற்குத் தான் பொருந்தும் என்பது தெளிவு. அதற்கு ஆதாரங்களைத் திருமறைகளில் தேடவேண்டிய தேவையில்லை. உறுதியாக முயற்சி செய்து கட்டுப்பாட்டை ஏற்றுக் கொள்வதன் மூலம் மனிதர் படிப்படியாக உயர்வதை நாம் காண்கின்றோம். இவ்வாறு சீர்திருத்தி முன்னேறுவதற்கு எல்லை எதுவும் கிடையாது. உலகில் களங்கமற்ற அன்பு நிலையை எய்த இயலாது என்று எண்ணினேனானால், எனக்கு வாழ்வே பொருளற்றதாகிவிடும். அன்பு பூணும் நம் ஆற்றல் ஓயாது விரிவடைய வேண்டும் என்பது தான் முக்கியமானது. அந்த வளர்ச்சி படிப்படியாகத் தான் ஏற்படும். நல்லது செய்வதில் நமக்குக் குறுக்கே நிற்பவர்களையும் நாம் எப்படி நேசிக்க முடியும்? ஆயினும் அதுதான் தலையாய சோதனை.

முன்பைவிட இப்பொழுது உனக்கு மன அமைதி ஏற்பட்டுள்ளதென்று நம்புகிறேன். நீ பணியாற்றும் இடத்திலேயே உன் தொண்டுக்குத் துணையாகவும் ஆதரவாகவும், ஆசிரமத்தின்மேல் நீ கொண்டுள்ள அன்பு அமையட்டும். நம்மிடம் ஒப்படைக்கப்பட்டுள்ள பணியை மிகுந்த ஈடுபாட்டுடனும் உற்சாகத்துடனும் நிறைவேற்றும் ஆற்றலை நமக்குப் புகட்டுவதே ஆசிரமத்தின் நோக்கம். நம் நோக்கங்கள், அவை எவ்வளவு தூய்மையாக இருந்த போதிலும், நிறைவேறாமல் இருப்பதிலும் ஒரு பொருள் இருக்கின்றது. நம் விருப்பமல்ல, அவன் சித்தமே நிறைவேறும்.

உன் தமிழ்ப் பயிற்சியில் நீ தேர்ச்சி பெற்று வருகிறாயென்று நம்புகிறேன்.

என் உரைகளையும் கட்டுரைகளையும் தொகுத்து நடேசன் நிறுவனத்தார் வெளியிட்டுள்ள புத்தகம் அவர்களிடமிருந்து உனக்குக் கிடைத்ததா? சமூக சேவை பற்றிக் கல்கத்தாவில் நான் நிகழ்த்திய உரையின் படியை உனக்கு அனுப்புகிறேன்.

அன்புடன்,

உன்,

பாபு

## 26

## காலத்தைத் தவிர வேறு மருந்தில்லை

2, ஏப்ரல் 1918

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. கவி [தாகூர்] இங்கு வந்துள்ளார். ஆகவே எனக்கு வேலை அதிகம். அவர் உன்னைப்பற்றி விசாரித்தார். ஆமதாபாத்தில் ஒரு பெரியவேலை நிறுத்தம் நடக்கவிருக்கிறது.[1]

1 பெரிய பருத்தி ஆலைகளில் தொழிலாளர் வேலை நிறுத்தம்.

அது எங்கு கொண்டுபோய் விடுமோ, அறியேன். அதனல் சிறிது காலத்திற்கு வேறு வேலையைக் கவனிக்க எனக்கு அவகாசம் கிடைக்காமல் போகக்கூடும். நீ எப்பொழுது உன் ஊருக்குத் திரும்புவாய்? நீ கோத்தகிரியில் இருப்பது நல்லதுதான். நிறைவான கடிதங்கள் எழுத உன்னல் இயலாதிருப்பது எனக்கு விளங்குகிறது. வாழ்க்கையில் சில சிக்கல்களுக்குக் காலத்தைத் தவிர வேறு மருந்து கிடையாது. காலத்தால் குணம் ஏற்படுவதற்கு நாம் இயற்கையை அனுமதிக்க வேண்டும்.

அன்பு,

என்றும் உன்,

பாபு

## 27

## அமைதி, ஆசி, ஆன்ம நிறைவு நிலவிய நாட்கள்

இரயிலில்,
*8, ஏப்ரல், 1918*

அன்புள்ள எஸ்தர்,

உனக்குக் கடிதம் எழுதாமல், நான் உன்னைப் புறக்கணித்துக் கொடுமை செய்துவிட்டேனென்று அஞ்சுகிறேன். ஒரு வரி மட்டும் உனக்கு எழுதுவதில் நான் திருப்தி அடைய மாட்டேன். நான் நீண்டதோர் அன்புக் கடிதம் எழுத விரும்பினேன். அத்தகைய கடிதத்தை உருவாக்க எனக்கு ஓய்வு கிடைக்கவில்லை.

என் நடவடிக்கைகளை நான் எப்படிச் சித்திரிப்பது என்பதே எனக்குத் தெரியவில்லை. அவற்றில் ஒன்று கூட நானகை விரும்பி ஏற்றுக் கொண்டதில்லை. அவை பிடிவாதமாக என்னிடம் வந்து பற்றிக் கொண்டன. அவற்றை எதிர்க்கும் துணிவு என்னிடம் இல்லை. ஒரு போர் வீரன் எல்லா மருங்கிலும் சூழ்ந்து வளைக்கப்பட்டால், அவனல் என்ன செய்ய இயலும்? ஒரு தாக்குதலைச் சமாளிப்பதில் மட்டுமே முழுக் கவனத்தையும் செலுத்தி, அதே நேரத்தில் ஏற்படும் மற்றத் தாக்குதல்களை அசட்டை செய்வதன் மூலம் அவன் தன் அழிவை நாடுவதா? தன்னல் இயன்றவரை எல்லாத் தாக்குதல்களையும் சமாளிக்க முயல்வதே தன்னைக் காக்க சிறந்த வழி என்பது தெளிவு. என் நிலை ஏறக்குறைய அதேபோல் தான் இருக்கின்றது. சுற்றுப் பக்கங்கள் அனைத்திலிருந்தும் துன்பம் என்னை நோக்கி இறைஞ்சுகின்றது. பரிகாரம் எது என்று தெரிந்த பின்பும் அதைச் செய்து உதவியளிக்க நான் மறுக்க முடியுமா?

ஆமதாபாத் வேலை நிறுத்தம், வாழ்க்கையின் சிறந்த பாடங்களை உணர்த்தியது. கதவடைப்பின்போது அன்பின் வலிமை மிகச் சிறந்த முறையில் மெய்ப்பிக்கப்பட்டது என்பது என் கருத்து. உண்ணு நோன்பு அறிவிக்கப்பட்டவுடன், என் முன்னிருந்த திரளான மக்கள் இறைவனின் வலிமையை உணர்ந்தனர்.[1] உன் தந்தி எனக்கு வந்த எல்லாச் செய்திகளிலும் மிக உண்மையானதும் உருக்கமானதும் ஆகும். இந்த நான்கு நாட்கள், அமைதியும் ஆசியும், ஆன்ம உயர்வும் நிரம்பியிருந்தன. உணவு சாப்பிட வேண்டுமென்ற ஆசை அந்த நாட்களில் ஒரு சிறிதும் இருந்ததில்லை.

பத்திரிகைகளில் வெளிவந்த என் கடிதத்திலிருந்து கெய்ரா விவகாரம்[2] பற்றி நீ விளங்கிக் கொண்டிருப்பாய். உண்ணு நோன்பு பற்றிக் கூட ஒரு கடிதம் எழுதினேன். நீ அக்கடிதங்களைப் பார்க்கவில்லையானல் எனக்குத் தெரிவி.

நீ நலமாக இருக்கின்ருய் என்று நம்புகிறேன். குலை ஈரல் கோளாறுகளுக்கு உண்ணு நோன்பு போல் சிறந்த மருந்து கிடையாது.

உன் கடிதங்களை ஆமதாபாத் அல்லது சபர்மதி முகவரிக்கே தயவு செய்து அனுப்பவும்.

அன்புடன்,

உன்,

பாபு

## 28

## வழிகாட்டும் ஒளி நாடி வழிபடுகின்றேன்

நாடியாட்,
*30, ஜூன், 1918*

என் அன்புள்ள எஸ்தர்,

இதற்கு முன்பு உனக்கு எழுத எனக்கு நேரம் கிடைக்கவில்லை. இப்பொழுது என் பேச்சையும் எழுத்தையும் நீ படித்து வருகின்ருயோ, என்னவோ. கொல்ல வேண்டுமென்று விருப்பம் கொண்டு, ஆனல் உடல் ஊனத்தால் அந்த விருப்பத்தை நிறைவேற்ற இயலாத ஒருவனுக்கு நான் என்ன ஆலோசனை கூறமுடியும்? கொல்லாமை நல்லது என்று அவன் உணரச் செய்வதற்கு

---

1. வேலை நிறுத்தத்தின் போது, சிலநாட்கள் பாபு உண்ணு நோன்பிருந்தார்.

2. பயிர் சாவியானது. அரசாங்கம், நிலவரி விதிப்பதற்காக விளைச்சலை மதிப்பிட்டிருந்ததை, விவசாயிகள் எதிர்த்துக் கிளர்ச்சி செய்தனர்.

முன், அவன் இழந்துவிட்ட கையை அவனுக்கு நான் மீட்டுத் தர வேண்டும். இந்திய இளைஞர்கள் இராணுவத்தில் சேரவேண்டு மென்று நான் எப்பொழுதும் ஆலோசனை கூறியதுண்டு. ஆனால் அதைத் தீவிரமாகப் பிரசாரம் செய்யாததற்குக் காரணம் நாட்டின் அரசியல் வாழ்வில் மட்டும் தனியாகவோ, போரிலோ, எனக்கு அவ்வளவு அக்கறை இல்லை என்பதுதான். ஆனால் டில்லி யில் என்னை எதிர்நோக்கிய நிலைமை வேறு; சிக்கலானது. இராணுவத்தில் சேரும் பிரச்னையைத் தீவிரமாக நான் கருதாததன் காரணமாக, வாழ்க்கைப் பிரச்னைகளில் மிகச் சிக்கலானதுடன் நான் விளையாடிக்கொண்டிருந்த எண்ணம் எனக்கு ஏற்பட்டது. ஒன்று, அரசினால் நமக்குக் கிடைக்கும் நன்மைகளை நாம் துறக்க வேண்டும். அல்லது போரை நடத்த அரசுக்கு நம்மால் இயன்ற வரை உதவ வேண்டும். அரசின் நன்மைகளைத் துறக்க நாம் சித்த மாயில்லை. இந்தியர் ஆற்ற வேண்டிய கடமை இருவிதமானது. சமாதானத்தின் சிறப்பை நிலைநாட்ட அவர்கள் பிரசாரம் செய்ய வேண்டுமானால், முதலில் போரில் தங்கள் ஆற்றலை நிலைநாட்ட வேண்டும். இது பயங்கரமான கண்டுபிடிப்புதான்; ஆனால் உண் மையானது. போரிடத் தகுதியற்ற ஒரு நாடு, தன் அனுபவத்தைக் கொண்டு சமாதானத்தின் பெருமையை நிலைநாட்ட முடியாது. இந் தியா போராட வேண்டுமென்ற முடிவுக்கு நான் இதிலிருந்து வரவில்லை. ஆனால் போராடுவது எப்படி என்று இந்தியாவுக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்று நான் கூறுவேன். புண்படுத்தவும் கொல்லவும் உள்ள விருப்பத்தை அடியோடு அகற்றுவதே அகிம்சை. எல்லா வழிகளிலும் நமக்குத் தாழ்ந்தவரிடம்தான், நாம் அகிம்சையைக் கடைப்பிடிக்க முடியும். ஆகவே உண்மையான அகிம்சை வாதியாக விளங்க வேண்டுமானால், நாம் களங்கமற்ற நிறை நிலையை அடைய வேண்டுமென்பது தெளிவாகிறது. களங்க மற்ற அன்பு கொள்வதற்குமுன் நாம் அனைவரும் முதலில் சாண் டோக்களாக முயலவேண்டுமா? இது அவசியமென்று தோன்ற வில்லை. தயங்கிப் பின்வாங்காமல் உலகை எதிர்நோக்கி நாம் நிற்க முடிகிறது என்பதே போதும். போராட்டப் பயிற்சி பெற்றபின் தான், அந்த வீரத்தை சிலர் அடைவார்கள். நான் வாதத்தை எடுத் துரைத்துள்ள விதம் தெளிவும் மெருகும் அற்றது என்பதை ஒத்துக் கொள்கிறேன். நான் பல புதிய அனுபவங்களை அறிந்து வருகின் றேன். என் எண்ணங்களுக்கு உருக்கொடுக்க நான் போராடிக் கொண்டிருக்கின்றேன். சில விஷயங்கள் எனக்கு இன்னமும் தெளி வற்றதாகவே இருக்கின்றன. எனக்குத் தெளிவாக இருக்கும் ஒரு சில கருத்துக்களுக்குச் சொல் வடிவம் தர நான் முயன்று கொண் டிருக்கின்றேன். வழிகாட்டும் ஒளி நாடி இறைவனை நான் இறைஞ்சி மிகுந்த நிதானத்துடன் நடந்து வருகின்றேன். நீ பதில் எழுது. எந்த அம்சத்திலும் என் கருத்து உனக்குப் பொருத்த மற்றதாகத் தோன்றினால், அதைப்பற்றி நீ என்னிடம், விட்டுக்

கொடுக்காமல் வாதாடவேண்டும். சரியான பாதையைக் காண அது எனக்கு உதவும்.

அன்புடன்,

உன்,

பாபு

தேவதாஸ் சென்னையில் இப்பொழுது இருக்கின்றான். நீ சென்னைக்குச் சென்றால் அவனைச் சந்திக்கவேண்டும். அவன் முகவரி...... அவன் இந்தி படிக்கின்றான்.

## 29

## தொடர்ந்து பணியாற்று

நாடியாட்,
*9, ஜுலை, 1918.*

என் அன்புள்ள எஸ்தர்,

நீ என்னிடம் அக் கேள்வி கேட்டது நியாயமே. என் விளக்கம்பற்றி உன் பதிலை நான் ஆவலுடன் எதிர்பார்க்கின்றேன்.

கிராம வாழ்க்கையிலும், கிராமக் குழந்தைகளிடமும் நீ அன்பும் ஈடுபாடும் கொண்டிருப்பதை மெச்சுகின்றேன். களங்கம் குறைவாக இருப்பதால், அன்புக்கு அவர்கள் அதிகமாக உரியவர்கள்.

நீ செய்துகொண்ட ஒப்பந்தம் முடியும்வரை உன் பணியைத் தொடர்ந்து செய்வது உன் கடமையாகும். மாணவிகள் உன் தொடர்பினாலேயே பலனடைவார்கள் என்பதை நான் அறிவேன். அவர்களுக்கு அளிக்கப்படும் கல்விப் போதனையில் குறை இருந்தால்கூட, அதை நான் பொருட்படுத்த மாட்டேன்.

தேவதாஸ் இப்பொழுதுதான் நோய்ப் படுக்கையிலிருந்து எழுந்துள்ளான். உன்னைக் காணும் வாய்ப்பை அவன் வரவேற்பான். அவன் உன்னைக் கண்டு பிடிக்காவிடில், நீ அவனைத் தேடிக் கண்டுபிடிக்க வேண்டும். உனக்கு அவகாசம் கிடைத்தால், அவனை நீ அடிக்கடி சந்திக்க வேண்டுமென்று விரும்புவேன்.

அன்புடன்,

உன்,

பாபு

## 30

### பணிவதன் மூலம் உயர்வாய்

பம்பாய்,
*22, ஜூலை, 1918.*

என் அன்புக் குழந்தை,

உனக்கு எழுதுவதா, வேண்டாமா என்று என் மனத்திற்குள்ளாகவே நான் சர்ச்சை செய்து கொண்டிருந்தேன். உன் கடிதம் மிகுந்த வேதனை அளித்தது. நான் இன்று ஆசிரமத்தில் இருக்கின்றேன். நீ அனுப்பிய இரண்டாம் அங்கியை இப்பொழுதுதான் அணிந்தேன். அது சரியாகப் பொருந்தவில்லை. கை சிறிது குட்டையாய் உள்ளது. ஆனால் அதுபற்றிக் கவலையில்லை. அது கிழியும் வரை, அதைத் தொடர்ந்து அணிவேன்.

ஆசிரமத்திற்கு வருவதற்கும் எனக்குக் கடிதம் எழுதுவதற்கும் உன்மீது தடை விதிக்கப்பட்டாலும், நீ உன் ஒப்பந்த காலம் முடியும் வரை, அங்கு அமைதியாக வேலை செய்ய வேண்டும். இந்தத் தடைக்குப் பணிந்து, உன்னைக் கட்டுப்படுத்திக் கொள்வதன்மூலம், நீ மன உறுதியையும் இலட்சியத் தெளிவையும் வளர்த்து உயர்வாய்.

எனக்குக் கடிதம் எழுதவும் என்னிடமிருந்து கடிதங்கள் பெறவும் நீ அனுமதிக்கப்பட்டால், அது அரிய உரிமையாகும். இறுதியாக என்ன முடிவு செய்யப்பட்டுள்ளது என்பதைத் தெரிவி.

தற்காலிகமாக சட்ட மறுப்பு இயக்கத்தை நிறுத்தியுள்ளேன். பத்திரிகைகளில் என் கடிதத்தைப் பார்ப்பாய்.

அன்புடன்,

உன்,

பாபு

## 31

### பிரிவு உறவை உறுதிப்படுத்தும்

பம்பாய்,
*......1918.*

என் அன்புள்ள எஸ்தர்,

நோய் மீண்டும் வந்தபின் முதன் முறையாக எழுத முயல்வது இக் கடிதம்தான்.

உன் கடமை என்னவென்பது எனக்குத் தெளிவாகப் புலப்படவில்லை. ஆயினும் [சாந்திநிகேதனத்துக்குச் சென்று தொண்டாற்ற வேண்டுமென்று] ஆண்ட்ரூஸ் கூறிய யோசனையை நீ ஏற்றுக் கொண்டுள்ளது நல்லதே. என்னைப் பொறுத்தவரை, நீ அங்கு போவதால் பலன் ஏற்படும் என்ற நம்பிக்கை எனக்கில்லை. நீ இனி எழுதவிருக்கும் கடிதங்கள் இதைத் தெளிவாக்கும். இந்த நீண்ட விடுமுறையின்போது, நீ ஆசிரமத்தில் இல்லை என்பது குறித்து எனக்கு மிகுந்த வருத்தம். ஆனால் கட்டாயத்துக்குப் பணிந்து பிரிந்திருப்பதால், ஆசிரமத்துடன் உனக்கு இன்னும் நெருங்கிய உறவு ஏற்படுவது உறுதி.

நீ தயாரித்த அங்கிகளை நான் தினமும் அணிகின்றேன் என்பதை அறிய நீ மகிழ்ச்சி அடைவாய். உன் அன்பான பணிவிடைக்கு அது நிரந்தர நினைப்பூட்டாக நிற்கும்.

சென்ற இரண்டு நாட்களாக உடல்நிலை பரவாயில்லை. ஆனால் இதைப்போன்ற முன்னேற்றம் இரு வாரங்களாவது தொடர்ந்தால் ஒழிய, அதை உறுதியாக நம்ப முடியாது.

மற்ற விவரங்கள் மகா தேவிடமிருந்து.

அன்புடன்,

உன்,

பாபு

## 32

### சர்க்காவின் இசை

செக்கந்தராபாத்,
*1, ஏப்ரல், 1919*

என் அன்புக் குழந்தை,

என் கையில் இன்னும் சிறிது நடுக்கம் இருப்பதால், நிதானமாகவும் தொடர்ந்தும் என்னால் எழுத இயலவில்லை. ஆனால் என் கைப்பட உனக்குச் சிறிதாகிலும் எழுத முயல வேண்டுமென்ற ஆசை எழுந்தது. [சென்னை] இரயில் நிலையத்தில் நான் உன்னைப் பார்க்க முடியாததற்கு வருந்துகிறேன். உனக்காகவும், பாவம், மகாதேவுக்காகவும் நான் பெரிதும் வருந்தினேன். நீங்கள் இருவரும் மிக்க மென்மையானவர்கள்! இருவரும் ஒரே அச்சில் வார்க்கப்பட்டவர்கள் என்று கூடச் சொல்லலாம், இரயில் புறப்பட்ட போது, சாளரம் வழியாக நான் பார்க்கையில் அச்சத்தினால் நடுக்கமுற்றேன். இரயிலைப் பிடிக்க அவர் வேகமாக ஓடும் வெறியில், களைத்துக் கீழே விழுந்து விடுவாரென்று அஞ்சினேன். நேற்றிரவு அவரை பெஜவாடாவில் பார்த்ததும் எனக்கு நிம்மதி ஏற்பட்டது.

நீ எழுதுவதாகச் சம்மதித்ததற்கு இணங்க மாவட்ட ஆட்சித் தலைவருக்கு நீ எழுதினுயென்று நம்புகிறேன். அவர் பதில் எதுவும் கூறினுரா என்பதைத் தெரிவிக்கவும்.

உன் மாணவிகள் தயாரித்து அனுப்பியுள்ள கம்பளியை நான் தினமும் பயன்படுத்துவேன் என்று அவர்களிடம் கூறு. ஆனுல் கையால் நூற்ற நூலை நெசவு செய்யவும், அவர்களே நூல் நூற்கவும் விரைவில் கற்றுக் கொள்வார்கள் என்று எதிர்பார்க்கிறேன். இராட்டினத்தின் இசை எனக்குத் தெரிந்த இசை அனைத்தையும் விட மிக உயர்ந்தது. என்ருவது ஒரு நாள், இயந்திரங்களின் வெறி பிடித்த வேகத்தைக் கண்டு மக்கள் வெறுப்புக்கொள்வார்கள். அப்பொழுது இயந்திரங்கள் இயங்காமல் துருப்பிடித்திருக்கையில், அம்மணமாயிருக்கும் மனிதர்களுக்கு இராட்டினங்கள் தான் ஆடை அணிவிக்கும். வருங்கால சந்ததியாருக்கும் ஆடைகள் தேவையாக இருக்கும். கையால் நூற்ற நூலாடைகளை அணிவது அப்பொழுது நாகரிக பாணியாகி விடும். கையால் நூற்ற நூல் சிறிது உனக்கு அனுப்பும்படி மகாதேவிடம் நான் சொல்லியுள்ளேன்.

எங்கள் இரயில் தாமதமாக வந்ததால், மறு இரயிலைத் தவற விட்டோம். ஆகவே வேலையில்லாமல் இன்றைய நாளைக் கழிக்கின்ருேம். அதனுல் உனக்கு எழுத அவகாசம் கிடைத்தது.

உன் பள்ளிக் கூடத்தில் நீ இந்தியைப் புகுத்த வேண்டுமென்று விரும்புகிறேன். உன் மேலதிகாரியுடன் அதைப் பற்றிக் கலந்து பேசு. இந்தியின் அவசியத்தை வற்புறுத்தி நான் எழுதியுள்ளதை நீ படித்தாயா?

ஆழ்ந்த அன்புடன்,

உன்,

பாபு

## 33

## இன்றுதான் இன்ப நாள்

கைது செய்யப்பட்டு
பம்பாய்க்குச் செல்லும் வழியில்,
*10, ஏப்ரல், 1919*

என் அன்புக் குழந்தை,

உன் காசோலை கிடைத்தது. உனக்கு அவசியமான வசதிகளைக் குறைத்துக் கொண்டு இதை அனுப்பவில்லை என்று நம்புகிறேன். காசோலையை ஆசிரமத்திற்குக் கொடுத்துள்ளேன். இது சரிதானு?

நான் நேற்றிரவு டில்லிக்குச் சென்று கொண்டிருக்கையில், பாஞ்சாலத்திற்குள் செல்லக் கூடாதென்று என்மீது தடையுத்தரவு

விதிக்கப்பட்டது. அதை அங்கு நான் மீறியதால், கைது செய்யப் பட்டேன். அதன் பேரில் டில்லி மாநிலத்திற்குள் கால் வைக்கக் கூடாதென்றும், பம்பாயை விட்டு வெளியே செல்லக் கூடாதென் றும், மேலும் இரு உத்தரவுகள் பிறப்பிக்கப்பட்டன. இப்பொழுது பம்பாய்க்கு என்னை அழைத்துச் செல்கின்றனர். என்னை விடுதலை செய்தால், இத்தடையுத்தரவை நான் மீறுவேன். இன்று எனக் குள்ள மகிழ்ச்சி உலகிலே வேறு எவருக்கும் இராதென்று எண்ணு கிறேன். சென்ற இரண்டு மாதங்களாக எல்லையற்ற அன்பு என் னிடம் காட்டப்பட்டுள்ளது. இப்பொழுதோ, நான் எவர் மீதும் கசப்பு கொள்ளவில்லை என்ற போதிலும், வேறெவரையும் விட இந்தியாவில் அமைதியைக் காக்க நான் தொண்டாற்ற முடியு மென்ற போதிலும் நான் கைது செய்யப்பட்டுள்ளேன். நான் கைது செய்யப்பட்டுள்ளது, தவறு இழைப்பவரின் அநீதியை அம்பலப் படுத்துகிறது. நான் அமைதியாகவும் பதட்டமடையாமலும் இருப் பதால், அவர்கள் எனக்கு எவ்விதத் தீங்கும் இழைக்க முடியாது.

தன் பகைவர்கள் என்று சொல்லிக் கொள்பவர்களிடமும் அன்பு கொண்டு, துன்பத்தில் இன்பம் காணும் ஆற்றல் இறை வனால் அளிக்கப்பட்டுள்ள ஒருவனை நண்பனாகக் கொண்டுள்ளாய் என்பது குறித்து நீ மகிழ்ச்சி அடைவாயென்று நம்புகிறேன். நான் சிறைப்படவிருப்பதைக் குறித்து நீ வருத்தப்படக்கூடாது. என்னைக் கண்காணித்து வரும் அதிகாரி என்னிடம் மிகவும் அன் பாகவும் கவனமாகவும் இருக்கின்றார்.

மகாதேவ் கைது செய்யப்படாமல் இன்னும் சில நாட்களுக்கு வெளியே இருந்தால், அவர் உனக்கு மேலும் சில விவரங்கள் தரு வார்.

அன்புடன்,

என்றும் உன்,

பாபு

பெஜவாடாவிலிருந்தோ, சென்னையிலிருந்து பம்பாய்க்குச் செல்லும் வழியில் வேறெங்கிருந்தோ நான் எழுதிய கடிதம் உனக் குக் கிடைத்ததா?

## 34

## எந்த எண்ணமும் செயலும் வீணாவதில்லை

பம்பாய்,
புதன்கிழமை

என் அன்புக் குழந்தை,

தன் பிடிவாதத்தால் மகாதேவ் நோயை வருவித்துக் கொண் டுள்ளார். பிடிவாத மனப்பான்மை கொண்ட நண்பர், அல்லது

சகோதரர், மகன், அல்லது செயலர், நெருக்கடியான நேரத்தில் நம்மைக் கைவிட்டுவிடுவார். இந்த நான்கும் ஒருங்கே உருண்டு திரண்டவர் மகாதேவ். உண்ணு நோன்பு மேற்கொண்டு அவர் மேல் பழிவாங்க வேண்டுமென்று முதலில் நான் எண்ணினேன். அப்படி நான் செய்திருந்தால், "பழிவாங்குவது என் பொறுப்பு" என்ற விவில்யத்தில் உள்ள பொருள் செறிந்த வாசகத்தை எடுத்துக் காட்டி என்னிடம் இடித்துரைத்திருப்பாய். ஆகவே அதற்கு அடுத்தபடியான நடவடிக்கையை மேற்கொண்டு, நானே கடிதங்கள் எழுதத் தொடங்கியுள்ளேன். நீண்ட நேரம் தொடர்ந்து எழுத்து வேலை செய்வது எனக்கு இன்ப உணர்ச்சி ஊட்டுகிறது. என் கையும் ஓரளவு நிதானமாக வேலை செய்கிறது.

உன் அன்புக்குரியவர்களின் துன்பத்தில் நீ பங்கு கொள்ள வில்லையென்று உன்னை நீயே சித்திரவதை செய்துகொள்ளக் கூடாது. [மிஷனுடன்] உன் ஒப்பந்தத்தை நிறைவேற்றுவதே, உன் மீது நீ விதித்துக் கொள்ளும் கடுமையான கட்டுப்பாடு ஆகும். அது இன்றியமையாத தேவையாகும். உனக்கு உன்மையான அன்பு இருந்தால்—இருக்கின்றது என்று நான் அறிவேன்—அந்த அன்பின் செல்வாக்கு, உன்னைச் சார்ந்துள்ளவர்களை, மெதுவாக, ஆனால் உறுதியாகக் கவரும். எந்த எண்ணமும், எந்தச் செயலும், பலனளிக்காமல் வீணுகப் போகாதென்று பகவத்கீதை எடுத்துக் காட்டுகிறது. ஆகவே நீ இப்போது செய்துவரும் வேலையைப் பொறுமையுடனும் உறுதியுடனும், குறையின்றி நிறைவேற்றுவதன் மூலம் நீ உன் கடமையைச் செய்தவளாவாய். மலையில் தங்கி ஓய்வெடுத்து, நீ பெறுகின்ற உற்சாகமும் ஆற்றலும் கூட, உன் பணிக்கே பயன்படுத்தப்பட வேண்டும். பின் ஏன் நீ கவலைப்பட வேண்டும்?

நாம் பயன்படுத்தும் ஆடை சுதேசியாக இருக்க வேண்டுமென்பது தான் சுதேசி நோன்பின் பொருள். உனக்குப் பிரியமானவர்கள் டென்மார்க்கு நாட்டிலிருந்து அனுப்பும் அன்பளிப்புப் பொருட்களை நீ பயன்படுத்தக் கூடாதென்று கூற நான் துணிய மாட்டேன். இனிமேல் நீ சுதேசி ஆடையை வாங்கிக் கூடியவரை சுதேசிப் பொருட்களையே பயன்படுத்தினுல் போதும். இன்னும் பெரிய மாறுதல்கள் செய்வது பற்றி நாம் மறு முறை சந்திக்கும் போது கலந்து பேசலாம்.

மிஸ்டர் D... என்னுடன் சில நாட்கள் தங்கிச் சென்ருர். இப்பொழுது அவர் டில்லியில் இருக்கின்ருர். S...இடம் இதைப் பற்றிச் சொல்லவும். அவர் உடல் நலக் குறைவு பற்றிக் கேட்டு வருந்தினேன். அவர் உடலை நன்கு தேற்றி, பலமும் நலமும் பெற வேண்டும்.

அன்புடன், உன்,

பாபு

# 35

## ஆத்திரமும் அவசரமும் கூடாது

லாபர்னும் சாலை,
பம்பாய்,
*27, ஜூன், 1919*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் இப்பொழுது வந்தது. அது எனக்கு மிகுந்த வருத்தம் தந்தது. அதிகாரிகள் உன்னை நாடு கடத்துவார்கள் என்பதை என்னால் எண்ணிப் பார்க்கவே முடியவில்லை. ஆனால் அவர்கள் அவ்வாறு செய்தால், அதை நீ உற்சாகமாக ஏற்றுக் கொள்ள வேண்டும். நீ விரும்பினால், இது குறித்து நான் அரசாங் கத்துக்கு எழுத மிகுந்த மகிழ்ச்சியுடன் முன் வருவேன். என் முயற்சி தோல்வி அடையலாம். அதைப் பற்றிக் கவலையில்லை. நீ சில நிபந்தனைகளுக்கு உட்பட்டுத் தான் தங்க முடியுமென்று அவர்கள் விதித்தால், அந்த நிபந்தனைகளை ஏற்றுக்கொள்வது இழுக்காக இராதவரை, அவற்றை நீ ஏற்றுக் கொள்ள வேண்டு மென்றும் நான் ஆலோசனை கூறுவேன்.

நானே நேரடியாகச் சட்ட மறுப்பில் அடுத்தவாரம் ஈடுபடு வேன் என்று எண்ணுகிறேன். ஆகவே நாம் இப்போது சந்திக்க இயலாதென்றே எண்ணுகிறேன்.

சுதேசியைப்பொறுத்தவரை, நீ உன் நாட்டிலிருந்து கொண்டு வந்த பொருட்களைக் களையவேண்டு மென்ற அவசியமில்லை. இப் போது உனக்குத் தேவையான பொருட்களுக்குச் சுதேசியையே பயன்படுத்தினால் போதும். சொந்த ஆடையைத் தான் சுதேசி நோன்பு கட்டுப்படுத்தும்.

[டேனிஷ் மிஷன் கழக] செயற்குழு உடன்பட்டால், நீ உன் பள்ளிக்கூடத்தில் இராட்டினத்தைப் புகுத்த வேண்டும்.

உன்னைப் பொறுத்தவரை, நீ மிஸ்டர் பிட்மனுடன் கலந்து பேசி, அவர் ஆலோசனையை ஏற்று நடக்க வேண்டுமென்று கூறு வேன். அவருக்கு நான் எழுதட்டுமா? அவசரப்பட்டோ, ஆத்திரப் பட்டோ, நீ ஒரு சிறு நடவடிக்கை கூட எடுத்துவிடக் கூடாதென் பது தான் எனக்குக் கவலை. அதைக் கவனித்துக் கொண்டால், எது நடந்தாலும் இனிதே முடியும். எனக்கு அடிக்கடி எழுது.

ஆழ்ந்த அன்புடன்,

அவசரத்தில் எழுதித் திருத்தாமல் அனுப்புகிறேன்.

உன்,

பாபு

## 36

## பகவான் நமக்குப் பலமளிப்பார்

லாபர்னும் சாலே,
பம்பாய்,
*24*, ஆகஸ்ட், *1919*

என் அன்புக் குழந்தை,

உன்னைப் பற்றி சுந்தரம் எழுதியுள்ள கடிதம் எனக்கு மிகுந்த சோர்வு அளித்துள்ளது. உன் துயரத்தில் என் உள்ளம் பங்கு கொள்கிறது. ஆனால் நாம் மிகவும் பலவீனமாக இருக்கும்போது இறைவனிடம் நம்பிக்கை கொண்டால், அவர் எப்படியோ நமக்குப் பலம் அளித்து உறுதியாக்குவார் என்பதை நான் அறிவேன். ஆகவே உனக்கு என்ன நடந்தாலும் நீ நன்றாக இருப்பாயென்ற நம்பிக்கை என் உள்ளத்தில் ஆழப் பதிந்துள்ளது. ஆனால் அரசாங்கத்திற்குக் கடிதம் எழுதாமல் என்னால் இருக்க முடியவில்லை.[1] அதன் படியொன்றை இத்துடன் அனுப்புகின்றேன். உனக்கு அவகாசம் இருந்தால், நீ ஆசிரமத்திற்கு உடனே வரவேண்டும். மிஸ்டர் பிட்மனுக்கும் எழுத நான் விரும்புகிறேன்; ஆனால் இக் கடிதத்திற்குப் பதில் வரும்வரை காத்திருப்பேன். ஆளுநருக்கு நான் எழுதியுள்ள கடிதத்திலிருந்து நீ மற்ற விவரங்களைத் தெரிந்து கொள்வாய். அதில் நான் எழுதியுள்ளது எதுவும் பொருத்த மற்றதாய் இருந்தால், நீ தயவு செய்து எனக்குத் தெரிவிக்க வேண்டும். உன் பணக் கஷ்டம் பற்றி நீ எனக்குத் தெரிவிக்கத் தயங்கினால் நீ என் குழந்தையாக இருக்க அருகதை யற்றவள்.[2]

அன்புடன்,

உன்,

பாபு

## 37

## அன்பு, அடக்கம், அனுதாபம்

தேதியிடப்படாதது.

என் அன்புக் குழந்தை,

நீ அடிக்கடி எழுதிக் கொண்டிருக்கின்றாய். ஆனால் என்னால் அவ்வாறு ஒழுங்காக எழுத இயலவில்லை. காரணத்தை நீ அறிவாய்.

1. சென்னை மாகில ஆளுநருக்குக் காந்திஜி இது பற்றி எழுதிய கடிதம் இப்பொழுது கிடைக்கவில்லை.

2. மிஷனிலிருந்து எஸ்தர் பெற்று வந்த சம்பளம் நின்றுவிட்டது.

நான் அனுபவித்த துன்பம் உண்மையில் ஒரு பொருட்டல்ல. சோட்டேலால் அதை அளவுக்கு மீறி மிகைபடுத்திவிட்டார். உடலைத் தேவையான அளவு கவனித்தே வருகின்றேன்.

செயற்குழுவுக்கோ மிஸ்டர் பிட்மனுக்கோ, உன் இறுதியான பதிலைக் கூற அவசரப்படத் தேவையில்லை என்று கருதுகிறேன். உன் பிரச்னை சிக்கலானது. நீ செயற்குழுவுக்கு முற்றிலும் உண்மையாகவும் விசுவாசமாகவும் இருக்க வேண்டுமென்றும், நீ தகாத முறையில் நடந்து கொண்டதாக அவர்கள் எந்த விதத்திலும் எண்ணக்கூடாதென்றும் தான், எனக்கு மிகுந்த கவலை. மிஸ்டர் பிட்மனுக்கு—அவர் பெயரை நான் சரியாக எழுதியுள்ளேனா?—நான் எழுதட்டுமா? நான் ஆனுநருக்கு எழுதிய பொழுதும் உன் கடிதம் என் முன் இல்லை. டென்மார்க்கு நாட்டின் உண்மையான குடிமகள், கிறிஸ்துவர், என்ற முறையில் நீ இந்தியாவுக்குச் சேவை செய்ய வேண்டும். உன் கிறிஸ்துவ சமயம் சேவை செய்ய உன்னை உந்துவதால் நீ சேவை செய்கிறாய். அதை நீ உணர்வது மட்டும் போதாது. உன் அன்பு, பண்பு, பணிவு மூலம் மற்றவர்களும் அதை உணரச் செய்யவேண்டும். அதை எந்த முறையில் செய்வது சிறந்தது என்பது எனக்குத் தெரியவில்லை. எப்படியும் அவர்களுக்கு நீ எழுதும் கடிதங்கள் அன்பாகவும், அடக்கமாகவும், அனுதாபமாகவும் இருக்க வேண்டுமே ஒழிய, கடுமையாகவும், கசப்பாகவும், குற்றம் கண்டுபிடிக்கும் முறையிலும் எப்பொழுதுமே இருக்கக் கூடாது. நீ செய்வது ஒரு வகையில், அதிகாரத்தை எதிர்த்து நடத்தும் எழுச்சியாகும். டேனியல், பனியன் ஆகியோரின் எழுச்சி போல, உண்மையான சமய நோக்கில் பெறும் வெற்றி மூலம் தான் அதை நியாயமானதாக ஆக்க முடியும்.

நீ நலமாக இருப்பது குறித்து எனக்கு மகிழ்ச்சி. நீ வசதியாக இருக்கின்றாயா? உன் தேவைகளையும் குறைகளையும் நீ என்னிடம் சொல்லத் தவறினால், நீ கெட்ட குழந்தையாவாய். உனக்குப் பணம் தேவையென்றால் என்னிடம் சொல்லத் தயங்கக்கூடாது.

அனைவரும் ஆங்கிலம் கற்க விரும்புவது பொருத்தமற்ற ஒரு புதிர்.[1] அவர்கள் விருப்பத்தை நீ ஓரளவோடு தான் நிறைவு செய்ய வேண்டும். எவரெவர் அதை விரும்புகின்றனர் என்று சற்று விவரமாக எனக்குச் சொல்.

அன்புடன்,

உன்,

பாபு

---

1. தென்னிந்தியாவில் பெற்றோர்கள், தங்கள் குழந்தைகள் ஆங்கிலம் கற்க வேண்டுமென்று விரும்புவதை எஸ்தர் குறிப்பிட்டிருந்தார்.

# 38

## ஆசிரம வாழ்க்கை உன்னை முன்னிலும் சிறந்த கிறிஸ்துவராக்கட்டும்

டில்லி,
*...1919*

என் அன்புக் குழந்தை,

நீ வந்தவுடன் நான் ஆசிரமத்தை விட்டுச்செல்ல வேண்டியிருந்தது குறித்து வருந்துகிறேன்.[1] உன்னுடன் நீண்டநேரம் உரையாடி, நீ எதையும் பற்றிக் கவலைப்பட்டால் உனக்கு ஆறுதல் கூற நான் பெரிதும் விரும்பினேன். உன்னைப் போர்த்திக் கொள்ளக் கூடப் போதிய வசதி இல்லை என்று தேவதாஸ் என்னிடம் கூறியபோது நான் இன்னும் அதிகம் வருந்தினேன். உனக்குத் தேவையானதை நீ கேட்டுப் பெற்றிருப்பாயென்றும், உன் தேவைகளைக் குறிப்பாக உணர்ந்து எவராகிலும் வசதி செய்திருப்பார்கள் என்றும் நான் நம்புகிறேன்.

சமையல் பற்றிச் செய்யப்பட்டுள்ள மாறுதல்களை நீ அறிவாய். B. இனி சமையலறையில் இருக்கமாட்டார். A-க்குச் சமையலறையில் நீ உதவ வேண்டுமென்று விரும்புகிறேன். ஆனால் அது உன் பொறுமையை அதிகம் சோதிக்குமென்றால், நீ அதைச் செய்ய வேண்டாம். அவள் சில சமயங்களில் பதட்டமடைவதுண்டு. அவள் இனிமையாக இராத வேளைகளும் உண்டு. சிற்சில வேளைகளில் சிறுமைத்தனமாகவும் அவள் நடந்து கொள்வாள். தற்போது அவள் உடலிலும் பலவீனமாக இருக்கின்றாள். ஆகவே சிறுமைத்தனத்திற்குப் பெருந்தன்மையால் ஈடுகொடுக்க நீ உன் கிறிஸ்துவக் குறிக்கோளான அன்பையும் பரிவையும் பெரிதும் பயன்படுத்த வேண்டியிருக்கும். நாம் மகிழ்ச்சியுடன் பெருந்தன்மையாக இருப்பதுதான், பெருந்தன்மைக்கு அழகு. மிகுந்த மனக்கசப்புடன் பெருந்தன்மையாக நடந்து கொள்ளும் சில நண்பர்களை நான் அறிவேன். அவர்கள் பெருந்தன்மை, அவர்கள் சிரமப்பட்டுத் தாங்கிக் கொள்ளும் துன்பச் சுமையாகியுள்ளது. துன்பத்தில் இன்பம் கண்டு, நம்மை அவமதிப்பவரிடம் இரக்கம் காட்டி, அவர்கள் பலவீனத்தைக் கண்டு அவர்களிடம் மேலும் அன்பு காட்டுவது, உண்மையான பெருந்தன்மையாகும். நாம் அந்நிலையை எய்த முடியாமல் போகலாம். அவ்வாறாயின் அதை அரை மனதுடன் செய்து பார்க்கக்கூடாது. ஆகவே A உன் பொறுமையைச் சோதிக்கின்றாள் என்று நீ கண்டால், அவளுடன் நெருங்கிய தொடர்பு கொள்ள வேண்டுமென்று நான் கூறியுள்ள

---

1. *இறுதியில் எஸ்தர் சபர்மதிக்கு வர இயன்றது. இம்முறை அவர் பார்வையாளராக வரவில்லை; ஆசிரமவாசியாகவே வந்தார்.*

யோசனையை நீ தவிர்க்க வேண்டும். எக்காரணத்தைக் கொண்டும் நீ உன் அகநிறைவையும் மகிழ்வையும் இழக்கக் கூடாதென்பதே என் விருப்பம். ஆசிரமம் உனக்கு இன்பத்தையும், மகிழ்ச்சியையும், உண்மையை உணரும் ஆற்றலையும் மேலும் மேலும் அதிகரிக்கும் முறையில் நீ உன் வாழ்க்கையை அமைத்துக் கொள்ள வேண்டுமென விரும்புகிறேன். ஆசிரமத்தில் இருப்பதால் முன்னிலும் சிறந்த கிறிஸ்துவராக நீ வாழ வேண்டுமென்பதே என் ஆவல். நேற்று பகல் முழுவதும், இரவிலும் என்னுடன் நீ இருந்தாய். இறைவனின் சேவைக்கு உறுதியான கருவியாக நீ உடலிலும் உள்ளத்திலும் உணர்விலும் மேலும் உறுதி பெற்று நலனடைய வேண்டுமென நான் இறைவனை வழிபடுவேன்.

D...யிடம் நீ நட்பு கொள்ளவேண்டுமென்றும் நான் விரும்புகிறேன். அவர் யார் என்று மகாதேவ் உனக்குச் சொல்வார். மேலும் எழுதுவதற்கு எனக்கு அவகாசமில்லை.

நீ விரும்பினால் இக்கடிதத்தை மகாதேவுக்குக் காட்டலாம். என் வழிபாட்டின் பலனாக எனக்குத் தெளிவாகியுள்ளது இது. இன்று காலை உனக்கு ஆறுதல் மொழி ஒன்று கூற விரும்பினேன். பாவம், மகாதேவுக்காக இரங்குகின்றேன். அவர் பெரும் சுமையைத் தாங்க வேண்டியிருக்கிறது. தன்னிடம் சிறிதும் தாட்சண்யம் காட்டாத, கண்டிப்பான மனச்சான்றை அவர் பெற்றிருப்பது, ஆண்டவன் அவருக்கு அளித்துள்ள பரிசு. ஆனால் அவர் பதட்டமடைகின்றார். தம்மிடம் உள்ள தெய்விகத்தை அவர் இன்னும் பூர்ணமாக அனுபவிக்கவில்லை; ஆகவே தான் கவலைப் படுகின்றார்.

தயவு செய்து அவருக்கு நீ உதவி செய்து, அவரிடமிருந்து உதவி பெறு.

உன் சென்னைப் பயண அனுபவங்கள் பற்றி எனக்கு எழுதி, அவற்றை நீ எவ்வாறு ஏற்றுக் கொண்டாயென்று கூறு.

ஆழ்ந்த அன்புடன்,<br>
உன்,<br>
பாபு

## 39

## அன்பு அச்சம் அறியாதது

இரயிலில்,<br>
வியாழக்கிழமை,<br>
*1919*

என் அன்புக் குழந்தை,

ஆசிரமத்தில் இருப்பதை உன் சொந்த வீட்டில் இருப்பது போல நீ கருத வேண்டுமென நான் விரும்புகிறேன். பழக்க

மில்லாதவர்கள் நடுவே இருக்கும் உணர்வோ எண்ணமோ உனக்கு ஏற்படக்கூடாது. தினமும் ஒரு சில இந்துஸ்தானிச் சொற்களைக் கற்றுக்கொள்; மொழி வேலி மறைந்து விடும்.

ஆசிரமம் உன் வீடு என்று ஏற்பட்டபின், வீட்டில் உள்ள வசதிகளை நீ அங்கும் ஏற்பாடு செய்து கொள்ள வேண்டும். அவற்றை நீ கேட்டுப் பெறவேண்டும். தினம் எனக்கு ஒரு வரி எழுது.

அன்பு அச்சமே அறியாதது என்பதை நினைவிற்கொள். இரகசியங்களுக்கு அது இடம் தருவதில்லை. ஆகவே நீ ஒவ்வொருவரிடமும் மனம்விட்டுத் தாராளமாகப் பேசு. அப்பொழுது ஒவ்வொரு உள்ளத்திலும் உன்பால் பரிவு ஏற்படும் என்பதில் ஐயமில்லை. அன்பு எப்பொழுதும் பொறுமையானது; துன்பத்தைத் தாங்கிக் கொள்வது; ஆகவே அதை மறுதலிக்க முடியாது. சேவையே அன்பு; ஆகவே சேவையில் அது எப்பொழுதும் இன்பம் காணும்.

உன் உடல் நலனைக் காத்துக்கொள்.

பாபு

# 40

## குழந்தைகளுக்கு ஒழுக்கம் கற்றுக்கொடு

டில்லி,
வெள்ளிக்கிழமை,
*1919*

என் அன்புக் குழந்தை,

[ஆசிரமக்] குழந்தைகளுக்கு எழுதவும் படிக்கவும் சொல்லிக் கொடுப்பதைவிட முக்கியமாக ஒழுக்கத்தைப் பற்றியும் அதன் உட்கருத்து பற்றியும் சொல்லிக் கொடுக்க வேண்டும். ஆகவே தான் குழந்தைகளுடன் விரைவில் நீ நெருங்கிய தொடர்பு கொள்ளப் போகிறாய் என்பதை அறிந்து மிகுந்த மகிழ்ச்சி அடைகின்றேன்.

எனக்கும் K...M...ஆகியோருக்கும் எழுதும்படி S...இடம் சொல்.

நான் திரும்புவதற்கு அநேகமாக இரண்டு வாரங்களுக்கு மேலாகும்.

ஆண்ட்ரூஸ் என்னுடன் இருக்கின்றார். சமாதானம் உண்டாக்க நாங்கள் இருவரும் முயல்கின்றோம்.

குழந்தைகள் வந்துள்ளதால் இடநெருக்கடியும் இடைஞ்சலும் ஏற்பட்டுள்ளனவா?

உன்,

பாபு

# 41

## உன் வாழ்வே உரையாடட்டும்

லாகூர்,
[தேதியிடப்படாதது]

என் அன்புக் குழந்தை,

உன் இரு கடிதங்களும் கிடைத்தன. இன்று ஆண்ட்ரூஸுடன் டில்லியை விட்டுப் புறப்படுகின்றேன்.

நீ அங்கு மனநிறைவுடன் இருப்பது குறித்து மகிழ்ச்சி. உன் உடல்நலனைக் காத்துக்கொண்டு, இப்பொழுதிருப்பதைவிட இன்னும் வலிமையுடன் இருக்க வேண்டுமென விரும்புகிறேன். எதைப் பற்றியும் கவலைப்படாமல் இருப்பதே சிறந்த வழி. எதை நினைத்தும் அலட்டிக் கொள்ளாதே. உனக்கு ஏற்ற உணவைத் தயாரித்துக் கொள். 'பா'வை நீ நன்கு பார்த்துக் கொள்வதாக அவள் எழுதியிருந்தாள்.

இங்குள்ள வேலை பற்றி நான் எப்போதாவது உன்னிடம் விவரமாகக் கூறுவேன். கடினமான வேலைதான்; ஆனால் பலனுள்ள வேலை; மக்கள் இதனால் நன்மை பெறுகின்றனர்.

இப்போது 'யங் இந்தியா'விற்கு நீ எழுதவேண்டாம். கல்வி முறை பற்றி நீ எழுதுவதில் தவறு இராதென்ற போதிலும், அரசாங்கம் பதட்டமடையச் செய்ய நான் விரும்பவில்லை. தற்சமயத்திற்கு உன் வாழ்க்கையே உன்னைச் சார்ந்துள்ளவர்களுடன் உரையாடட்டும்.

அன்புடன்,

பாபு

## 42

## அரிய அனுபவங்கள்

லாகூர்,
திங்கட்கிழமை,
*1919*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது.

நான் அரிய அனுபவங்கள் பெற்று வருகிறேன். கடைசியில் பார்த்தால், நவம்பர் முற்பகுதியில் நான் அங்கு வர இயலாதென்றே எண்ணுகிறேன்.

ஆண்ட்ரூஸ் இங்கு இருக்கின்றார். நாங்கள் அடிக்கடி உன்னைப் பற்றிப் பேசுகின்றோம்.

தயவு செய்து உடல் நலனைக் காத்துக்கொள்.

அன்புடன்,
உன்,
பாபு

## 43

## சேவைக்குக் காணிக்கையாக்கு

லாகூர்

என் அன்புக் குழந்தை,

உன் இனிய கடிதங்கள் கிடைத்தன. தற்போதைக்கு நான் ஒழுங்காகப் பதில் எழுதுவேன் என்று நீ எதிர் பார்க்கக்கூடாது. வாழ்க்கையில் வளமான பல அனுபவங்களைப் பெற்று வருகின்றேன். மனமுவந்து சேவைக்கு நீ உன்னைக் காணிக்கையாக்கும் போது, சொல்லொணா இன்பம் வெகுமதியாகக் கிடைக்கிறது. இதைப்பற்றிப் பின்னர், அல்லது நாம் சந்திக்கும் போது மேலும் கூறுவேன்.

உன்,
பாபு

## 44

### என் சிந்தையில் உள்ளாய்

பார்வை, சரளாதேவி,
சந்திரம், லாகூர்,
*24*, அக்டோபர், *1919*

என் அன்புக் குழந்தை,

என் சிந்தையில் நீ என்னுடன் உள்ளாய் என்பதைச் சொல்லவே இதை எழுதுகிறேன். இங்கு மிக அற்புதமான அனுபவம் எனக்குக் கிட்டியுள்ளது.

அன்புடன்,

உன்,

பாபு

## 45

### உடல் வலிமைக்கு மீறிய பொறுப்பை ஏற்காதே

லாகூர்,
*4-12-1919*

என் அன்புக் குழந்தை,

நீ ஏன் உடல் நலன் இழந்துவிட்டாய்? உன் உடல் வலிமைக்கு மீறிய பொறுப்புக்களை நீ ஏற்றுக்கொள்ளக் கூடாது. பம்பாய்க்கு மூன்றும் வகுப்பில் பயணம் செய்வது உன்னல் இயலாதது. நீ பம்பாய்க்குச் சென்றிருக்கவே வேண்டாம். உனக்குத் தேவையான உதவி அனைத்தையும் கேட்டுப் பெற்று, விரைவில் குணமடைய வேண்டும். உன் உடம்புக்கு என்ன? **M...** அதைப் பற்றி ஓரளவு சொன்னர். விவரமாக நீ எனக்குச் சொல்ல வேண்டும்.

என் அன்பும் வழிபாடும்.

உன்,
பாபு

## 46

### இறைவனை எங்கும் காண முடியும்

லாகூர்,
*7-12-1919*

என் அன்புக் குழந்தை,

நீண்டதொரு கடிதம் உள்பட உன்னிரு கடிதங்களும் கிடைத்தன. நீ எழுதியது நல்லதே.

நான் ஏற்கெனவே உனக்குச் சொல்லியுள்ளது போல், நீ ஆசிரமத்திற்கு வந்துள்ளது உன் கிறிஸ்துவ சமயத் தன்மையை இழப்பதற்கல்ல, அதை மேலும் வளர்ப்பதற்கே.

வழிபாட்டுக் கூட்டங்களில் ஆண்டவன் நம்முடன் இருப்பதை உணர முடியவில்லை என்று நீ கருதினுல், ஏசுநாதர் என்ற பெயரில் நீ காணும் உய்வை, ராமா, கிருஷ்ணு என்ற பெயர்களிலும் காண முடியும் என்பதை நினைவிற் கொள்.

இக் கூட்டங்களுக்கு நீ கண்டிப்பாகப் போகக் கூடாது. உன் தனி அறைக்குச் சென்று, அங்கேயே வழிபாடு செய்து கொள். எவரையும் வலுக்கட்டாயமாக ஒரு நிலைக்குக் கொண்டு வருவது, வழிபாட்டுக் கூட்டத்தின் நோக்கமல்ல. சுதந்திரமாக இயங்குவோர்க்கே அக் கூட்டங்கள் நடக்கின்றன. குழந்தைகள் அவற்றில் கலந்து கொள்வது அவசியம். சோம்பலின் காரணமாக வராமல் இருப்பவர்களும் நிச்சயமாக அக் கூட்டங்களுக்கு வர வேண்டும். ஆனல் உன்னைப் பொறுத்தவரை, நீ அதில் கலந்து கொள்ளாததை எவரும் தவருக எடுத்துக் கொள்ள மாட்டார்கள். ஆகவே உனக்கு எது அதிக மன அமைதியைத் தருகின்றதோ, அதையே நீ செய்ய வேண்டும். நாளுக்கு நாள் மேலும் மேலும் நெருங்கி இறைவனை அறிய ஆசிரமம் உனக்கு உதவாவிடில், அதனல் பலனே இல்லை. ஞாயிற்றுக்கிழமையன்ருே, மற்ற நாட்களிலோ, நீ மாதா கோவிலுக்குச் செல்ல விரும்பினல், அவ்வாறே செய்யலாம்.

உன் உள்ளத்தில் நான் ஊடுருவ உதவிய அந்த நீண்ட அழகான கடிதத்தை நீ எழுதியதைக் குறித்து நான் மகிழ்கின்றேன். உன் வருகை எனக்கு மகிழ்ச்சி ஊட்டியுள்ளது. நீ அங்கு அமைதியும், ஆரோக்கியமும் உண்மையான இன்பமும் அடைய முடியும் என்பதை அனுபவத்தில் கண்டால் என் மகிழ்ச்சி மேலும் பெருகும். கிறிஸ்துவ அமைப்புகள் என்று பெயரிடப்படாதவற்றிலும் இறைவனையும் கிறிஸ்துவ சமயத்தையும் காண முடியும் என்பதையும், பட்டகை ஊடே செல்வதால் ஒளிக் கதிர்ச் சாய்வில் மாறுதல் ஏற்படுவது போல், பல்வேறு தோற்றங்களில் வெளிப்படுகின்ற போதிலும் எல்லாச் சமயங்களுக்கும் அடிப்படையான வாய்மை ஒன்றுதான் என்பதையும், மற்றக் கிறிஸ்துவர்கள் உணர உன் அனுபவம் உதவினல் நான் பெரு மகிழ்ச்சி எய்துவேன்.

மிஸ் பீட்டர்சனைப் பார்ப்பதற்குக் கூட சென்னைக்கு இவ்வளவு சீக்கிரம் செல்ல வேண்டாம் என்று நீ நினைப்பது போலவே நானும் நினைக்கின்றேன். அவர் ஆசிரமத்திற்கு வர மாட்டாரா? அவர் வர வேண்டும். அவர் வந்து, புதிய இருப்பிடத்தில் ஆசிரமம் இயங்குவதைப் பார்த்து, முன்னேற்றம் எதுவும் ஏற்பட்டிருந்தால் அதையும் அறிய வேண்டும்; அவருக்கு என் அன்பைத் தெரிவி.

இப்பொழுது நீ நன்கு குணமடைந்து விட்டாயென்று நம்புகிறேன். உடம்போடு விளையாடக் கூடாது. இம் மண்ணில் பிறந்தவர்கள் உடம்பிடம் காட்டும் கண்டிப்பை நீ காட்ட முடியாது.

ஆகவே உன் உடம்புக்குத் தேவையான வசதிகளை நீ வற்புறுத்திப் பெற வேண்டும்.

அன்புடன், உன்,
பாபு

## 47

### சேவையே தெய்விக வாழ்வுக்கு முதற்படி

லாகூர்,
*ஞாயிறு...1919*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. நீ அனுப்பிய அங்கியும் வந்து சேர்ந்தது. அதற்காக நான் உனக்கு நன்றி செலுத்தலாமா? அதைச் சலவை செய்யச் சொல்லியுள்ளேன்.

நீ நூற்கத் தொடங்கியுள்ளாயா? 'யங் இந்தியா'வில் சுதேசி பற்றி நான் எழுதிய கட்டுரையை நீ கூர்ந்து படிக்க வேண்டும். நீ நூற்கப் பழகித் தினமும் ஒரு மணி நேரம் பக்தியுடன் நூற்பாயா? நம் இருவர் முன்னோர்களும் கையால் நூற்று நெய்த துணியைப் பயன்படுத்தினர்கள். கல்யாணமாகாத பெண்ணுக்கு ஆங்கிலத்தில் spinster என்கிறோம். மனைவிக்கு wife என்கிறோம். அச் சொற்களுக்கும், நூற்பதைக் குறிக்கும் spinning என்ற சொல்லுக்கும், நெசவைக் குறிக்கும் weave என்ற சொல்லுக்கும் இடையே உள்ள நெருங்கிய உறவை நாம் ஆராய வேண்டும். ஒழுங்காக நூல் நூற்பதில் நீ ஆசிரமப் பெண்களுக்கு ஒரு முன் மாதிரியாக அமைய வேண்டும். F... நூல் நூற்கிருள்ா? அவளும் R... உம், அதைப் புறக்கணிக்கக் கூடாது என்று அவர்களிடம் சொல். அவர்கள் மட்டுமல்ல, எல்லாப் பெண்களுமே, ஒவ்வொரு நாளும் குறிப்பிட்ட சிறிது நேரமாவது நூற்க வேண்டும்.

நீ நோய்வாய்ப் பட்டிருந்த போது அவர்கள் அனைவரும் உனக்குப் பணிவிடை செய்தது குறித்து மகிழ்ச்சி. ஒருவருக்கொருவர் செய்யும் உதவியும் சேவையுமே உண்மையில் தெய்வபக்தி நிறைந்த வாழ்க்கைக்கு முதற்படியாகும்.

அன்புடன், உன்,
பாபு

## 48

### சேவை ஒரு சுமையாகக்கூடாது

லாகூர்,
*24, ஜனவரி, 1920*

என் அன்புக் குழந்தை,

நேற்று நான் லாகூருக்கு வந்தபோது உன் கடிதம் கிடைத்தது, எனக்கு மிகுந்த மகிழ்ச்சி ஊட்டியது.

நீ மனம் விட்டுப் பேசியுள்ளது குறித்து எனக்குத் திருப்தி. அதுவே உண்மையான நட்புக்கும் அன்புக்கும் அழகு. நீ மனம் திறந்து பேசும்போது, உனக்கு நான் உதவ உதவுகின்றாய். A...யின் சிறுமைத்தனத்தை அதற்குள் நீ கண்டிருப்பாயென்று நான் எண்ணவில்லை. அவளுடன் நெருங்கிப் பழக வேண்டுமென்று உனக்கு நான் சொல்லியிருந்ததால், உன்னை எச்சரிக்கவே விரும்பினேன். என் எச்சரிக்கை சரியான நேரத்தில் கிடைத்தது என்பது இப்பொழுது தெரிகிறது. சரியான நேரத்தில் சரியான முறையில் நடக்க, இறைவன் உனக்கு விவேகமும் துணிவும் அருள்வார். ஒன்று மட்டும் நீ நினைவிற் கொள்ளவேண்டும். உன்மீதோ, உன்னைச் சார்ந்துள்ளவர் மீதோ, மனக்கசப்பும் எரிச்சலும் உண்டாகும் அளவுக்கு உன் தியாக மனப்பான்மை செல்ல எப்பொழுதுமே இடம் கொடுக்காதே. ஊழியர்கள் இந்த ஆபத்தில்தான் அடிக்கடி சிக்கி விடுகின்றனர். தொண்டும் தியாகமும் செய்வதில் அவர்கள் ஈடுபட்டு, அவற்றிற்குப் போதிய ஆதரவு கிடைக்காத காரணத்தால், அனைவர் மீதும் அனைத்தின் மீதும் கசப்பு கொண்டுவிடுகின்றனர். ஆதரவும் பலனும் எதிர்பார்க்காமல் செய்யும் தியாகமே உண்மையான தியாகம். தியாகம் என்பதைக் குறிக்கும் ஆங்கிலச் சொல்லான 'Sacrifice' என்பதன் மூலப் பொருளை உணரவேண்டும். Sacred (புனிதமானது) என்பதிலிருந்து அது எழுந்தது என்பதை நீ அறிவாய். நாம் எரிச்சலும் ஆத்திரமும் கொள்ளும்போது, நம்மையோ மற்றவர்களையோ நாம் புனிதமாக்க முடியாது. பெருந் தியாகத்தைவிட சில சமயங்களில் ஒரு தெய்விகப் புன்சிரிப்பு கூட அதிகப் புனிதத்தன்மை பொருந்தியதாய் அமைகிறது. இதை நான் எழுதும்போது, மேரி, மகதலீன் ஆகியோர் வரலாறு என் நினைவிற்கு வருகின்றது.[1] அவர்கள் இருவருமே நல்லவர்கள். ஆனால் ஆர்ப்பாட்டம் எதுவுமின்றி, ஆண்டவனுக்குப் பணிவிடை புரிந்தவள் செய்த தியாகம் மற்றவள் தியாகத்தைவிடச் சிறந்ததாகும். அவ்வாறே நீ செயலாற்ற வேண்டும். A...அல்லது வேறெவரின் மனத்தை மாற்றி, அவர்கள் அன்பைக் கவரும் முயற்சியில், உன்னை நீயே அதிகம் சோதித்துச் சுமையால் அழுந்தாதே. அவளுடன் அனுசரித்துச் செல்ல இயலவில்லை என்பதைக் கண்டவுடன், நீ உனக்குத் தனியாக ஒரு சமையலறையை ஏற்பாடு செய்துகொள்ள வேண்டும். நீ தொடர்ந்து அவளுக்குச் சேவை செய்யலாம்; ஆனால் அவளுடன் அவ்வளவு இணக்கமாக இருக்க வேண்டிய அவசியமில்லை. நீ அங்கு செய்யும் எந்தச் செயலும் உன் ஆன்ம உணர்வுக்கோ, உடலுக்கோ சோதனையாகவும் சுமையாகவும் அமையக்கூடாது.

உணவையும் மற்ற வசதிகளையும் பொறுத்தவரை, உனக்குத் தேவையான வசதிகளை நீ கேட்டுப்பெற வேண்டும். M. அல்லது I. அல்லது வேறெவர் உன்னிடம் நெருங்கியவராய் உள்ளாரோ, அவரைக் கேட்டு ஏற்பாடு செய்துகொள்.

---

1. காந்திஜி உண்மையில் மேரியையும் மார்த்தாவையும் பற்றியே குறிப்பிடுகிறாரென்று கொள்ளவேண்டும்.

ஆம். D. உன் புகழுரை அத்தனைக்கும் ஏற்றவன்தான். அவனிடம் இதமாகப் பேசித் தன் பொறுப்பை உணர்ந்து, படிப்பில் கவனம் செலுத்தும்படி நீ செய்ய வேண்டுமென்று விரும்புகிறேன். ஒவ்வொரு நாளும் அவன், தன் அன்னைக்கு விவரமாகவும் சுத்தமாகவும் எழுதும்படி பார்த்துக்கொள்.

உன் துயரத்தில் நானும் பங்கு கொள்கிறேன். டென்மார்க்கில் உன் சகோதரருடன் இருக்க வேண்டுமென்று நீ விரும்புவது எனக்கு விளங்குகிறது. ஆனால் நீ உனக்கென்று ஒரு தனிப்பாதையைத் தேர்ந்தெடுத்துக் கொண்டுள்ளாய். அப்பாதையில் உன் சேவையை நீ ஒருமனதாக ஈடுபடுத்த வேண்டும். உன் பணியை நிறைவேற்ற இறைவன் உனக்கு வலிமை அருள்வாராக.

M—பற்றி நீ கொண்டுள்ள கருத்து சரியானதுதான். அவர் அவ்சியமில்லாமல் தம் உடல் நலன்பற்றிக் கவலைப்படுகிறார். அவர் மதிக்கப்படுவது, தம் உடல் வலிமைக்காக அல்ல; தம் உள்ளத்தின் உறுதிக்காக. அவர் உடல் நலம் குன்றியபோது, அவருக்குப் பணிவிடை செய்வதை நண்பர்கள் பெருமையாகக் கருதவேண்டும்.

அன்புடன்,

உன்,

பாபு

## 49

## அவசரத்தில் அன்பான ஒருவரி

லாகூர்,
*26, ஜனவரி, 1920*

என் அன்புக் குழந்தை,

உன் சிறு குறிப்பு கிடைத்தது. என் கடிதங்கள் உனக்கு ஒழுங்காகக் கிடைத்து வருகின்றன என்றெண்ணுகிறேன். அநேகமாக ஒரு நாள் கூடத் தவறாமல் நான் எழுதியுள்ளேன். இன்று அஞ்சல் எடுக்குமுன் அதிக நேரம் இல்லையாதலால், உனக்கு நான் அன்புக் கடிதம் எழுதுவதற்கில்லை.

D. எப்படித் தேர்ச்சி பெறுகின்றான்? அவன் அன்னைக்குச் சென்ற நான்கு நாட்களாக அவன் கடிதம் எழுதவில்லை என்று அவனிடம் எடுத்துச் சொல். கடிதம் எழுதுவதில் அவன் தவறக் கூடாது.

ஒவ்வொரு நாளும் ஓர் அஞ்சலட்டையாகிலும் அவன் எழுதும்படி பார்த்துக்கொள்.

உன்,

பாபு



காந்திஜியும் எஸ்தரின் அருமை மகளும்.



காந்திஜியுடன் மணிபென் பட்டேல்.

# 50

## தீமையை எதிர்க்காதே

ஞாயிறு,
—1920.

என் அன்புக் குழந்தை,

இப்பொழுது நீ I. யுடன் உணவருந்துகிருய் என்று M. கூறுகிருர். வேறெரு காரணம் இல்லாவிடினும், உன்னுடன் தொடர்ந்து ஆங்கிலத்தில் பேசுவதற்கு ஒருவர் இருப்பாரென்பதால், வேறெங்கும் விட அங்கு நீ வசதியாக இருப்பாயென்று எண்ணுகிறேன். உன் பண்பட்ட அன்பை F. மீது நீ பொழியலாம்; அதனுல் உடனடியாகப் பலனும் ஏற்படும்.

உன் உடல் நலனையும் மன அமைதியையும் நீ இழந்தால், நான் பெரிதும் வேதனைப்படுவேன். "தீமையை எதிர்த்துப் போராடாதே" என்ற வாசகத்திற்கு மேல்வாரியாகத் தோன்றுவதை விட ஆழ்ந்த உட்பொருள் உள்ளது. எடுத்துக்காட்டாக A. இடம் உள்ள தீமையை எதிர்க்கக்கூடாது; நீயோ, அல்லது நானே அதைப் பற்றி ஆத்திரப்பட்டு, "இவள் ஏன் உண்மையை உணர்ந்து நாம் வழங்கும் அன்புக்கு ஈடு செய்யக்கூடாது?" என்று நமக்கு நாமே சொல்லிக்கொள்ளக் கூடாது. சிறுத்தை தன் புள்ளிகளை மாற்றிக் கொள்ள முடியாது என்பது போலவே, அவளும் தன் இயல்பை மாற்றிக் கொள்வது அரிது. நீயோ, நானே, அன்பு பூண்டால், அது நம் இயல்புக்கேற்ற நடத்தை. அந்த அன்புக்கு அவள் ஈடு செய்யாவிடில், அது அவளுடைய இயல்பு. அதைப்பற்றி நாம் கவலைப்பட்டால், தீமையை எதிர்த்துப் போராடுபவர்களாவோம், இக் கருத்தை நீ ஏற்றுக்கொள்கிருயா? "தீமையை எதிர்த்துப் போராடாதே" என்ற வாசகத்தின் ஆழ்ந்த உட்பொருள் அதுதான் என்று நான் கருதுகிறேன். ஆகவே அனைவருடனும் பழகும் போது நீ உன் நிதானத்தை இழக்கக்கூடாது. இரண்டாவதாக, உன் உடல் நலனுக்கு வேண்டிய வசதி எதையும் நீ மறுக்க வேண்டிய அவசியமில்லை. வேறு எவரையும் கேட்காவிடினும் என்னிடம் தாராளமாகக் கேள்.

உன்னைப் பற்றி நான் சஞ்சலப்பட்டுக் கொண்டிருக்கும் போது, நீ ஒவ்வொரு நாளும் எனக்கு எழுத வேண்டுமென விரும்புகிறேன்.

அன்புடனும் வழிபாட்டுடனும்,

உன்,

பாபு

# 51

## இன்பமயமான வேதனை, துக்கம் தோய்ந்த மகிழ்ச்சி

லாகூர்,

செவ்வாய்க்கிழமை,......1920

என் அன்புக் குழந்தை,

உன் அருமைத் தந்தியும் இரு கடிதங்களும் ஒரே நாளில் எனக்குக் கிடைத்தன. உன் தந்தை பற்றிய கடிதம் எனக்குக் கிடைக்கு முன், உனக்கு நான் ஒரு தந்தி அனுப்பியிருந்தேன். [டென்மார்க்குக்கு] இயன்ற அளவு விரைவில் நீ செல்ல வேண்டும் என்பதில் எனக்குச் சிறிதும் ஐயமில்லை. நீ போகுமுன் உன்னுடன் பலமுறை உரையாட நான் விரும்புகிறேன். இன்று உடல் பலவீன மாக இருப்பது பற்றிக் கவலைப்படாதே. ஆசிரமத்தை உன் வீடாகக் கருதி எப்பொழுதும் அங்கு திரும்பலாமென்ற நம்பிக்கை உனக்கிருக்க வேண்டும். இப்பொழுது சென்னைக்குச் சென்று விட்டு, டென்மார்க்கு செல்லும் வழியில் இங்கு திரும்பிவர விரும்பி னாலும், அவ்வாறே நீ செய்யலாம். ஆனால் சென்னைக்குச் செல்லு முன் உன்னை நான் பார்க்க விரும்புகிறேன். எது நல்லதென்று நீ நினைக்கின்றாயோ, அவ்வாறே செய். இதமான வெந்நீரில் குளித் தால் தோல் படை நீங்கும். இடுப்புக் குளிப்பு உனக்கு நன்மை செய்யும்.

தேவதாஸ் உன்னுடன் செல்லவேண்டுமென விரும்புகிறேன். அதைப் பற்றி அவனுடனும் நாம் சந்திக்கும் போது உன்னுடனும் கலந்து பேசுவேன். அதைவிட மகாதேவ் சொல்லும் யோசனை நல்லதாக எனக்குத் தோன்றுகிறது.

'அகத்தின் ஆலயம்' என்ற சிறு நூல் ஒன்றைப் பாதிரிமார் ஒருவர் D...க்குக் கொடுத்துள்ளார். "இன்ப மயமான வேதனையும் துக்கம் தோய்ந்த மகிழ்ச்சியும் என் இதயத்தில் நிரம்பியுள்ளன" என்ற வரிகளைத் துதிப்பாடல் ஒன்றில் நான் படித்ததும், உன்னைப் பற்றிய எண்ணம்தான் எனக்கு வந்தது. இன்ப மயமான வேதனை, துக்கம் தோய்ந்த மகிழ்ச்சி என்பவை அற்புதமான சொற் றொடர்கள். ஆனால் இன்று இதற்கு மேல் எழுதுவதற்கில்லை.

அன்புடனும் வழிபாட்டுடனும்,

உன்,

பாபு

## 52

## உடல், இறைவனின் கருவி

என் அன்புக் குழந்தை,

உனக்கு எழுதாமல் இரண்டு நாட்கள் கழிந்து விட்டன; ஆனால் உன்னைப் பற்றி நான் எண்ணாமலில்லை; பேசாமலில்லை. உன் உடல் நலன் இருக்கவேண்டியபடி திருப்திகரமாக இல்லை. சப்பாத்தி உனக்குச் செரிக்காமல் போகலாம். அப்படியானால் உனக்குப் பழக்கப்பட்ட ரொட்டியைச் சாப்பிட வேண்டும் A. உனக்கு அதைக் கொண்டு தருவாள். I. சாஹிபிடம் அதைப் பற்றிக் கூறு. காலையில் பாலும், சிற்றுண்டிக்குக் கொஞ்சம் பழமும் ரொட்டியும் வேகவைத்த காய்கறிகளும் சாப்பிடலாம். கீரை வகைகள் உனக்கு ஒரு வேளை ஒத்துக் கொள்ளாமல் இருக்கலாம். அப்படியாயின், சிறிது ரொட்டி, சிறிது சாதம், கொஞ்சம் காய்கறி, தயிர் ஆகியவற்றைக் காலைச் சிற்றுண்டிக்குச் சாப்பிடலாம்; மாலையிலும் அதே உணவைச் சாப்பிடலாம். நடுப்பகலில் ஆரஞ்சு போன்ற பசும் பழம் சாப்பிடலாம்; இது நல்லதா அல்லது வேறெதுவும் நல்லதா என்பதை நீ தீர்மானித்துக் கொள்ளலாம். தன் தொழிற் கருவிகளை நல்ல முறையில் வைத்துக்கொள்வது கைவினைக் கலைஞனின் முதற் கடமை என்பது போலவே, நீயும் உன் உடம்பைச் சிறந்த முறையில் வைத்துக் கொள்ள வேண்டும். ஆண்டவன் தம் சேவையில் திறம்படப் பயன்படுத்துவதற்கு ஒரு சாதனமாக உடலை நமக்கு அளித்துள்ளார்; அதைச் செல்லம் கொடுத்துக் கெடுப்பதற்கோ, பொத்தி மூடிப் பயன்படுத்தாமல் வைப்பதற்கோ, அதைத் தவறான வழியில் கையாள்வதற்கோ, அசட்டை செய்து கெடுப்பதற்கோ அல்ல. இது பெரும் உபதேசமாக அமைந்து விட்டதற்கு வருந்துகிறேன்; ஆனால் மிகவும் தேவையான உபதேசமாகும்.

அன்புடன்,

உன்,
பாபு

## 53

## இறைவன் வழி காட்டுவார்

புதன் கிழமை,
*......1920*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதங்கள் கிடைத்தன. சிந்திச் சிதறிய பாலை நினைத்து வருந்துவதில் பலனில்லை. ஈஸ்டரின் போதோ, வேறெப்பொழுதோ நீ எங்கு விரும்புகின்றாயோ அங்கு தாராளமாகச் செல்லலாம்.

உன் அக, ஆன்மிக இன்பமே தலையாயது. நீ குறிப்பிடும் கோளாறுக்கு, L. K. கையாண்டு பார்த்த மிகச் சிறந்த சிகிச்சை முறை ஒன்றுள்ளது. இடுப்புக் குளிப்பு, சூட்டுக் குளிப்பு முதலியவை எடுப்பதுடன், உப்பும், வாசனைப் பொருட்களும் இல்லாத உணவு உண்பது தான் அந்த சிகிச்சை முறை. அதைப் பற்றிய புத்தகம் ஆசிரமத்தில் நம்மிடம் இருக்கிறது. அதைப் படித்துப்பார். S. K. ஆகியோருக்கும் மற்றவர்களுக்கும் அதைப் பற்றித் தெரியும். பாவும் இம்முறையைப் பல ஆண்டுகளாகக் கையாண்டு சிறந்த பலனடைந்துள்ளாள். நீ அங்கிருக்கும் போது, அதைக் கையாண்டு பார். ரொட்டி வாங்கிச் சாப்பிடத் தயங்காதே. அதைப் பெறுவதில் சிரமம் எதுவும் இருக்காது.

நீ அமைதியாக நேரத்தைக் கழித்து, ஆன்ம உறவிலும் தியானத்திலும் ஈடுபட வேண்டுமென்று நினைப்பதை நான் ஏற்றுக் கொள்கிறேன். ஆமதாபாத்தில் உள்ள மாதா கோயிலுக்கு நீ ஏன் செல்லக் கூடாது? கான்வென்டுக்குப் பதிலாக அங்கு செல்ல வேண்டுமென்று நான் கூறவில்லை. இறைவன் உனக்கு வழிகாட்டி, ஒளியும் உறுதியும் அளிப்பார்.

வழிபாட்டுடனும் அன்புடனும்,

உன்,
பாபு

## 54

## அன்பு, வாய்மை—ஒரு நாணயத்தின் இரு பக்கங்கள்

வியாழக்கிழமை,
*......1920*

என் அன்புள்ள எஸ்தர்,

வாயைக் கழுவிக் கொப்பளிக்கையில், உன்னையும் மகாதேவையும் பற்றித் தான் முக்கியமாக நினைத்தேன். ஆமதாபாத்தில் நீ தங்கும்படி செய்துவிட்டேன். ஆனால் நான் செய்தது சரியா? உன் உடல்நலன் கெட்டுவிட்டால் என்னவாகும்? உன் உடல்நலன் ஓரளவாகிலும் திருப்திகரமாக இருந்தால்தான், நீ எனக்காக அங்கு காத்திருக்க வேண்டும். இல்லாவிடில், நீ சென்னையிலிருந்து திரும்பியபின், நாம் சந்திக்க வேண்டும். நான் என் விருப்பத்தைத் தெரிவித்து விட்டதால், நீ அங்குதான் தங்கியிருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. பரிசுத்தமான அன்பை வெளிப்படுத்துவது வாளின் முனைமேல் நடப்பது போன்றது. 'நான் என்பது அறவே அற்று நீயே அனைத்துமாக' என்று பாடிவிடுவது எளிது; ஆனால் அதைக் கடைப்பிடித்து நடப்பது கடினம். நாம் அன்பைப் பேணுகின்றோம் என்றெண்ணும்போது கூட சுய நலனில் சிக்கவில்லையா

என்பதை நாம் அறியோம். அன்பு, வாய்மை, இவை இரண்டும் ஒரே நாணயத்தின் இரு பக்கங்கள் என்றும், அவற்றைக் கடைப் பிடிப்பது கடினமென்ற போதிலும், வாழ்வுக்கே பொருளும் நிறை வும் தருவன அவை தான் என்றும் அடிக்கடி கூறியுள்ளேன். நான் இதைப் பற்றி மேலும் மேலும் சிந்தனை செய்ய, இதன் உண்மை எனக்கு மேலும் தெளிவாகின்றது. இறைவன் படைப்புக்கள் அனைத்திடமும் ஒருவன் அன்பு கொள்ளாவிடில் அவன் உண்மை யாய் இருக்கமுடியாது. வாய்மையும் அன்பும் தான் பரிபூர்ணத் தியாகமாகும். ஆகவே நீ, நான், இருவரும் இதை நிறைவுடன் போற்றும் நிலையை எய்த வேண்டுமென இறைஞ்சுவேன்.

உன்,
பாபு

## 55

### உனக்கு என் வழிபாடும் அன்பும்

என் அன்புக் குழந்தை,

இன்று உன்னிடமிருந்து கடிதம் வரவில்லை. நிறையப் பேர் என்னைச் சூழ்ந்து கொண்டு என் கவனத்தைக் கோருகின்றனர். உனக்கு அன்புக் கடிதம் எழுத அவகாசமில்லை. ஆகவே என் வழிபாட்டையும் அன்பையும் அனுப்புகின்றேன்.

உன்,
பாபு

இயன்றால், உற்சாகமான, என்னை உற்சாகப்படுத்தக் கூடிய கடிதம் ஒன்றை எழுது.

மோ. க. கா.

வெள்ளிக்கிழமை

## 56

### திருமண விழாவுக்கு ஏன் சென்றாய்?

லாகூர்,
ஞாயிறு,
*1920*

என் அன்புக் குழந்தை,

இத்தனை நாட்களாக எனக்கு ஒரு வரி கூட எழுதாமல் விட்ட நீ கெட்ட குழந்தையே. எனினும், மற்றவர்களிடமிருந்து உன்னைப் பற்றிச் செய்தி கிடைத்து வருகிறது. நீ திருமண விழா ஒன்றுக்குச்

சென்றுள்ளாயென அறிகிறேன். இது பற்றி எனக்குச் சற்று கவலை ஏற்பட்டது. இதெல்லாம் என்ன? அறிமுகம் இல்லாத பலரிடை நீ எப்படி இருந்தாய்? கடமையென்று கருதி நீ அங்கு சென்றிருந்தால் அது தவறாகும். இத்தகைய விழாக்களுக்குச் செல்ல வேண்டுமென்று எந்தக் கடமையும் நிபந்தனை விதிக்க வில்லை. ஒரு மாற்றம் விரும்பி நீ அங்கு சென்றிருந்தால், அந்த மாற்றம் விரும்பத் தக்கதாக எனக்குத் தோன்றவில்லை. இந்த விழா எங்கு நடந்தது? கலந்து கொண்டவர்கள் யார்? அவர்களுக்கு ஆங்கிலம் தெரிந்திருந்ததா? நீ அங்கு என்ன உணவு சாப்பிட்டாய்? படுத்து உறங்க எங்கு வசதி செய்யப்பட்டிருந்தது? நீ அங்கு செல்லவேண்டுமென்று யோசனை கூறியது யார்? இது முழுதுமே எனக்குப் புதிராகத் தோன்றுகிறது. நீ ஆழம் தெரியாமல் காலை விடுவதை நான் விரும்பவில்லை. இன்று ஞாயிற்றுக்கிழமை அதி காலை. உன்னைப் பற்றிய கவலை என் உள்ளத்தில் குடி கொண் டுள்ளது. கவலைப்படுவது மடமை என்பதை உணர்கிறேன். தம் குழந்தைகளைக் காக்க, நம் அனைவருக்கும் மேலே இருக்கின்றார் இறைவன். ஆனால் 'என் குழந்தை' என்று உன்னை அழைக்கும் உரிமையை எனக்கு நீ அளித்துள்ளாய்.

ஆழ்ந்த அன்புடன்,

உன்,

பாபு

# 57

## சுக்கான் இல்லாத கப்பலால் பலனுண்டா?

லாகூர்

என் அன்புக் குழந்தை,

இத்துடன் அனுப்பப்படும் கடிதம் காலையில் எழுதியது. நீ பென்சிலில் எழுதியுள்ள கடிதம் இப்பொழுது தான் கிடைத்தது. அந்த அழைப்பை நீ ஏற்றது தவறென்று எனக்குத் தெளிவாகத் தெரிகிறது. நீ வயதில் சிறியவள்; அனுபவம் போதாது. உன் இதயம் தங்கமானது; ஆனால் அதை நிதானப்படுத்தி ஒரு நிலைப் படுத்த வேண்டும். சுக்கான் இல்லாத பெரிய கப்பலால் என்ன பலன்? அது எங்கு செல்கிறது? திக்கின்றி அது திரிவதில்லையா? இன்று உனக்காக இரங்கி என் உள்ளம் கண்ணீர் சிந்துகிறது. நீ ஒரு வகையாக வளர்ச்சி பெற்றுவந்த [மிஷன்] சூழ்நிலையையும் விட்டு வந்துள்ளாய். புதிதாக வந்திருக்கும் இடத்தில் [ஆசிரமத் தில்] சூழ்நிலையைக் கிரகித்துக் கொள்ள முடியுமானால், நீ இன்னும் அதிக வளர்ச்சி பெறமுடியும். சிறுபிள்ளைத்தனமாக நீயே உன்னைக் குத்திக் கொள்ளக் கூடாது. கட்டுப்பாடான மனச் சான்றுக்கு நாம் கீழ்ப்படிய வேண்டும். அது இறைவனின் குரல். கட்டுப்பாடற்ற மனச்சான்று நாசத்தில் தான் முடியும்; ஏனென்றால்

சைத்தான் அதன் மூலம் குரல் கொடுக்கிறது. நான் உன்னுடன் இருந்திருக்க வேண்டுமென விரும்புகிறேன். "பிரபோ, பிரபோ, என்று என்னை அழைப்பவர் அனைவரும் பரமண்டலத்திற்குள் புக முடிவதில்லை. பரமண்டலத்தில் இருக்கும் என் பிதாவின் சித்தப் படி நடக்கின்றவரே, அந்த இராச்சியத்தில் இடம் பெறுவார்." என் நினைவிலிருந்து இந்த மேற்கோளைத் தருகின்றேன்; ஆனால் தவறில்லை என்றெண்ணுகிறேன்.

நீ கட்டுப்பாட்டுக்குக் கீழ்ப்பட்டு நடக்கவேண்டும். மகா தேவைக் கலக்காமல் எப்பொழுதும் எதையும் செய்யாதே. அவரை உன் அண்ணனாகக் கருது. அவருடன் நெருங்கிப் பழகு. உனக்குத் தேவையான உணவைக் கேட்டுப் பெற்று, வேண்டிய ஓய்வை எடுத்துக்கொண்டு, உடலுக்கும் உள்ளத்துக்கும் நிம்மதி தேடிக் கொள்ள வேண்டும்.

தினமும் விவரமான கடிதம் எழுது.

உன் சிறுபிள்ளைத்தனத்தினால் உன்மீது எனக்கு அன்பு அதிகமாகத் தான் செய்யும்; உனக்காக நான் மேலும் வழிபடு கின்றேன்.

உன்,

பாபு

# 58

## யாக்கை, புனித ஆலயம்

என் அன்புக் குழந்தை,

S...க்கு நீ எழுதியுள்ள பரிதாபமான கடிதத்தைப் பார்த்தேன். அதில் நீ உன் உள்ளத்தைக் கொட்டியுள்ளது குறித்து மகிழ் கிறேன். உன்னால் அங்கு தங்குவது சாத்தியமென்றால், நான் அங்கு வந்து சேருவதற்கு முன் நீ புறப்படக் கூடாதென்று உனக்கு இன்று தந்தி அனுப்பியுள்ளேன். சில நாட்களாகிலும் விடிகாலை யில் உன்னுடன் நீண்ட நேரம் உரையாட விரும்புகிறேன். அந்த வாய்ப்பு ஆசிரமத்தில் தான் எனக்குக் கிட்டுகிறது. நான் சொன்னபடி குளிப்பு முறைகளைப் பின்பற்ற வேண்டு மென்றும் வற்புறுத்துவேன். தண்ணீரைக் கொண்டுவர ஏற்பாடு செய்.

நீ அருகதையற்ற குழந்தை என்று ஏன் எண்ணுகிறாய்? உன் அற்புத அன்பினால், விசுவாசத்தினால், எனக்கு மிகவும் பிரியமாகி உள்ளாய். உன் சிறுபிள்ளைத்தனத்தால், உன் அருமை பற்றி நான் கொண்டிருக்கும் உயர்வான கருத்தைக் குறைக்க முடியு

மென்று ஒரு கணமும் எண்ணுதே. நீ மேலும் உறுதிப்பட வேண்டியது எந்த அம்சத்தில் என்று எடுத்துக் காட்டுவது என் உரிமையாகும். இந்த யாக்கை, புனிதத் தன்மையின் ஆலயம் என்ருல், அதை மிகுந்த கவனத்துடன் காக்கவேண்டும்;—உடலுக்குச் செல்லம் கொடுக்க வேண்டிய அவசியமில்லை; அதே சமயத்தில் அதைப் புறக்கணிப்பதோ, பொருட்படுத்தாமலிருப்பதோ நல்லதில்லை.

எப்பொழுதும் வழிபாட்டுடன் இணைந்த ஆழ்ந்த அன்புடன்,

உன்,

பாபு

# 59

## புண்படுத்தியதற்குப் பொறுத்தருள்

என் அன்புக் குழந்தை,

நான் உன் மனத்தைப் புண்படுத்தி விட்டேன் என்பதைக் காண்கிறேன்; நீ என்னை மன்னிக்க வேண்டும். நான் 11ந் தேதி முதல் சுற்றுப் பயணம் செய்து கொண்டிருப்பேன். ஆகவே நீ இங்கு வந்தும் பலனில்லை. நீ வந்தாலும் நான் உன்னுடன் இருக்கமுடியாது. அதிகம் தள்ளிப் போனுல், 23ந் தேதியாகிலும் நான் உன்னுடன் இருக்க முடியுமென்று எதிர்பார்க்கிறேன். அப்பொழுது நாம் சிறிது நேரமாகிலும் ஒன்ருய் இருக்க முடியும். அதற்கிடையே, இடுப்புக் குளிப்பு, சூட்டுக் குளிப்பு முதலியவற்றைத் தொடர்ந்து செய். அங்கிருக்கும் மருத்துவர் உன்னைப் பரிசோதனை செய்வதற்கு ஏன் தடை சொல்கின்ருய்? உன் நிலையில் நான் இருந்தால், அதற்குத் தடை எதுவும் சொல்ல மாட்டேன். ஆனுல் நான் உன்னை வற்புறுத்த விரும்பவில்லை.

வழிபாட்டுடன் கலந்த அன்புடன்,

உன்,

பாபு

லாகூர்.
வியாழக்கிழமை.

## 60

# சேவைக்குக் கருவியாக ஆண்டவன் உன்னை ஆயத்தம் செய்வாராக

காசிக்குப் போகும் வழியில்,
ரயிலில்,
ஞாயிறு

என் அன்புக் குழந்தை,

நான் காசிக்குச் சென்று கொண்டிருக்கின்றேன். நாம் விரைவில் சந்திப்போம். நீ தேவதாஸ் போல் என்னுடன் இருந்து பணிவிடை செய்து கொண்டிருந்தால், எவ்வளவு நன்ருக இருக்கும்? உனக்கு அது மிகப் பிரியமாக இருக்கும் என்பதை அறிவேன். எனக்கும் அவ்வாறே இருக்கும். தந்தையின் இடத்தை யாராலும் நிறைவு செய்ய முடியாது. ஆனல் நீ சுவீகரித்துள்ள இந்நாட்டில், என் ஆற்றலுக்கேற்ப, உனக்குத் தந்தையாக இருக்க நான் விரும்புவேன். உன் உடம்பைத் தேற்றிக்கொள்ள நீ டென்மார்க் செல்லவேண்டி யுள்ளதை எண்ணி நான் தலைகுனிகின்றேன். உடல் நன்ருகக் குணமாகித் தேறியபின், பூர்ணமான கிறிஸ்துவராகவும் பூரணமான மகளாகவும் உன்னை டென்மார்க்குக்கு அனுப்புவதைவிட வேறெதுவும் எனக்கு மகிழ்ச்சி ஊட்டாது. இவ்வாழ்வில் முழு வளர்ச்சியும் நிறைவும் பெறுவதற்கான வாய்ப்புகள் அனைத்தும் உன்னிடம் உள்ளன. உன் மனத்திற்குப் பிரியமான விருப்பங்கள் அனைத்தையும் ஆண்டவன் நிறைவேற்றி மனித சமுதாயத்திற்குச் சிறந்த சேவைக்கான கருவியாக உன்னை ஆயத்தம் செய்வாராக. மானிட வர்க்கத்திடம் நீ கொண்டுள்ள அன்பின் அம்சமாகத் தான் நீ இந்தியாவிடம் கொண்டுள்ள அன்பு பொருந்தும். 'நான் என்பது அறவே அற்று நீயே அனைத்துமாக' என்பது ஒரு பெரிய வழிபாடு; அது போன்ற வழிபாடுகளில் அதுவே தலையாயது.

அது உனக்கும் எனக்கும் உண்மையாக இருக்கட்டும்.

நிறைய அன்புடன்,

உன்,

பாபு

**A.** யிடம் நீ உன் இதயம் அனைத்தையும் ஒப்படைப்பாய்.

# 61

## ஐயத்திலிருந்து விடுதலை காண்

ஆசிரமம்,
ஞாயிறு

என் அன்புக் குழந்தை,

இன்று நான் திரும்பியபோது, உன்னிடமிருந்து மூன்று அன்புக் கடிதங்கள் காத்துக்கொண்டிருந்தன. உற்சாகமும், அமைதியாக அணைத்தையும் ஏற்றுக்கொள்ளும் மன நிலையும், இறைவனிடம் நம்பிக்கையும், உன் கடிதங்களில் காணப்பட்டது குறித்து நான் மகிழ்ச்சியுற்றேன். இறைவனிடம் நம்பிக்கை உன்னிடம் எப்பொழுதும் இருந்தது. ஆனால் அந்த நம்பிக்கை இன்னும் ஆழ்ந்ததாகியுள்ளது என்பது உன கடிதங்களிலிருந்து தெரிகிறது. உன் நம்பிக்கை மேலும் மேலும் வளர்ந்து வளமாக வேண்டுமென்றும், அதன் பயனாக நீ ஐயப்படும் நிலையிலிருந்து இறுதியாக விடுதலை அடைந்து என்ன நேரிட்டாலும் இன்பம் காணும் நிலையை அடைய வேண்டுமென்றும் வாழ்த்துகின்றேன். ஏனென்றால், நாம் வாழ்க்கை யாத்திரையில் முன்னேறிச் செல்கையில், நம் தீர்வுக்காகப் பல பல பிரச்னைகள் எழுகின்றன. அவற்றில் இறைவன் குரல் போலவே சைத்தான் குரலும் ஒலிக்கத் தொடங்கும்போது, அவற்றிற்குத் தீர்வு காண்பது மிகக் கடினமாகிறது. பரிபூர்ண நம்பிக்கை, பரிசுத்த தூய்மை, எல்லையற்ற பணிவு ஆகியவற்றின் மூலம்தான் நாம் சரியான முடிவு காணமுடியும்.

நான் ஒரு வாரத்திற்காவது ஆசிரமத்தில் தங்கி, அதன் பின்பு இரு வாரங்கள் தனிமையை நாடி ஓய்வுபெற இயலுமென எதிர்பார்க்கின்றேன்.

இன்றிரவு உறங்கச் செல்லுமுன் நீ இல்லாதது எனக்கு வருத்தத்தையே தரும்.

அன்புடன்,

உன்,

பாபு

S—இன் தந்தை உன் கைக் கடிகாரத்தைத் திருப்பித் தந்துவிட்டாரென அறிய நீ மகிழ்வாயென்று கருதுகிறேன். திருப்பித் தரப்பட்ட கைக்கடிகாரம் முக்கியமல்ல; திருப்பித் தருவதற்குத் தூண்டுதலாக இருந்த எண்ணம்தான் முக்கியம். டென்மார்க்குக்குச் செல்லும் வழியில் நீ இங்கு திரும்புகையில் அதை எடுத்துக்கொள்வாய்.

பாபு

# 62

## இருளா, ஒளியா?

ஆசிரமம்,
*14*, மார்ச்சு, *1920*.

என் அன்புக் குழந்தை,

நான் உனக்காக வழிபாடு செய்வேன் என்பது நிச்சயம். அதற்குமேல் நான் வேறெதுவும் செய்யமுடியாது என்பதை அறிவேன். நீ இப்பொழுது அனுபவித்து வரும் சோதனையியில் நண்பர்கள் உனக்கு அதிகம் உதவமுடியாது. இறைவனே உன்னைக் காப்பாற்ற வேண்டும். "வாய்மைக்கும் பொய்மைக்கும் நடுவே நடக்கும் போராட்டத்தில், வாய்மையின் பக்கம் சார்வதா, தீமையின் பக்கம் சார்வதா என்று முடிவு செய்யவேண்டிய ஒரு கட்டம், தனி மனிதன் ஒவ்வொருவன் வாழ்விலும் ஒரு நாட்டின் வாழ்விலும் எழுகின்றது. மகத்தான ஒரு இலட்சியமோ, இறைவனின் புதிய இரட்சகரோ தோன்றி, ஒவ்வொருவருக்கும் ஒளிமயமான பாதையையும், அழிவுப் பாதையையும் தனியாகப் பிரித்துக் காட்டுகிறார். வெள்ளாடுகள் இடது கைப் பக்கமாகவும் செம்மறியாடுகள் வலது கைப் பக்கமாகவும் பிரிக்கப்படுகின்றன. ஒளியா, இருளா எதைத் தேர்ந்தெடுப்பதென்ற பிரச்னை நம்முன் எப்பொழுதும் நிற்கின்றது."

இன்று நான் அனுப்பியுள்ள இந்த மேற்கோள் லாவெல் எழுதியதிலிருந்து. அது போலவே என் வழிபாட்டுடன், ஒவ்வொரு நாளும் இதுபோன்ற உபதேசப் பொன்மொழி யொன்றைத் தேர்ந்தெடுக்க முடியுமென்று நம்புகிறேன்.

உன்,

பாபு

என் வழக்கு முடிந்துவிட்டது. எங்கள் இருவரிடமும் நீதிபதி குற்றம் கண்டு கடிந்து கொண்டார்; ஆனால் தண்டனை விதிக்கவில்லை.

---

குறிப்பு: 62 முதல் 72 வது கடிதம் வரை, எஸ்தருக்கும் டாக்டர் E. K. மேனன் அவர்களுக்கும் திருமணம் நிச்சயம் செய்யப்பட்டது அறிவிக்கப்பட்ட போது எழுதிய கடிதங்கள். இம் முடிவின் பலனாக, எஸ்தர் பலத்த கண்டனத்துக்கு ஆளானார்; கண்டனத்தில் பெரும்பகுதி அளவுக்கு மீறிக் கடுமையாகவும் நியாயமற்றதாகவும் இருந்தது.

## 63

### வழிபாட்டின் சாதனை

வையத்தின் கனவுகளையும் மெய்யாக மிஞ்சி
அற்புதங்கள் எத்தனையோ ஆற்றுவது வழிபாடு ;
ஊற்றெழுவது போல் அல்லும் பகலும்
உன் குரல் எனை நாடி உயரட்டும், ஓங்கட்டும் ;
ஆண்டவனை அறிந்தும் தமக்கும் அன்பு
பூண்ட நண்பர்க்கும் கைகூப்பித் தொழாமல்
அறிவில் சிறைபட்டு அந்தகாரத்தில் வாழ்வோர்
ஆட்டு மந்தையினும் மேலோர் ஆவரோ ?
பூவுலகு அனைத்தும் பொலிவான வகைதனிலே
பொற்சங்கிலியால் பிணைந்தது பரமன் பதந்தனிலே

டென்னிஸன்.

என் அன்புக்குழந்தை,

இந்த வாசகத்தை உனக்கு நினைவுபடுத்தி, இன்று உன் துயரிலே பங்கு கொள்கிறேன். உன் துயரச் சுமையை அது குறைக்கட்டும்.

உன்,

பாபு

பம்பாய்,
*16*, மார்ச்சு, *1920*.

## 64

### அனைத்திலும் நீயே

அனைத்திலும் உனையே காண எனக்கு
ஆண்டவனே, அரசே, வழிகாட்டுவாய் ;
ஆற்றுவது அனைத்தையும் உனக்காக ஆற்ற
காட்டுமையா வழி எனக்குக் கடவுளே நீ ;
அனைவரும் உன்னில் கலப்பர் இனிதே ;
உனக்காகச் செய்வதால் ஒளிவீசித் தூய்மையாய்த்
துலங்காத பொருளுண்டோ தெய்வமே கூறு.
பக்தியுடன் ஆற்றும் பணி பரமன் அருள்பெறும் ;
தாழ்வுற்ற பணியும் நின் தயையால் வாழ்வுற்றுயரும் ;
கூட்டி அறையைப் பெருக்குவதும் உனக்காக
நாட்டமுடன் செய்தால் நற்பணியாய் உயரும்.

பொருளெலாம் பொன்னுகும் அரும்சக்தி அதுவே ;
இறைவன் தொட்டதும் இனிது ஆட்கொண்டதும்
நிறை தங்கமாய் விளங்குமன்றோ.

ஜார்ஜ் ஹெர்பர்ட்.

என் அன்புக்குழந்தை,

உன் வருத்தத்தை ஏதாகிலும் ஒரு சொல், ஒரு வரி, ஒரு சிந்தனை தணிக்கட்டும்.

அன்புடன்,

உன்,

பாபு

பம்பாய்,
*17, மார்ச் 1920.*

## 65

### ஏசுவுடன் இருப்பதன்றி வேறென்ன வேண்டும்?

வாழ்வேனு, இறப்பேனு என வருந்துதல் என் கடனன்று.
பரமனே, நின்னைப் பூசித்துப் பணியாற்றிப்
பண்பட்ட இன்னருளில் பங்கு கொள்வதே என் பேறு.
நீண்ட நாள் நின்று வாழ்ந்தால் அது, நின் சித்தத்தால்;
பன்னெடுநாள் வாழ்தல் பகவனுக்குப் பணியவே.
ஒரு சில நாளேயாயின் விரைவில் ஒளியுறு நிலைக்கு
உயர்வது பற்றிக் குறையும் உண்டோ எனக்கு?
இருள் சூழ்ந்த அறைக்குள் நான் செல்கிறேனென்றால்,
அருள் நிறைந்த ஏசு அங்கு எனக்கு முன் ஏகினர்.
கடவுள் சாம்ராச்சியத்தில் காலெடுத்து வைப்பவன் இக்
கதவினைத் தாண்டியே களிப்புடன் உள் செல்வான்.
நேருக்கு நேர் நின்னருள் முகம் நான் காணும்
பேறு கிட்டும் வேளையில் பேரொளியே வருவாய்;
மண்ணுலகில் உன் பணி இனிதே ஆயின் நின்
மாண்புமிகு மாட்சியினை எண்ணவும் ஏலுமோ?
எல்லையற்ற பெருவாழ்வினை ஏழை நான் அறியேன்;
பக்தியின் கண்பார்வை சக்தியற்றதாயினும்
எல்லாம் அறிந்த ஏசுவுடன் இனிதிருப்பது
அல்லாமல் வேறெதுவும் அடியேனுக்கு வேண்டுமோ?

ரிச்சார்டு பாக்ஸ்டர்

என் அன்புக் குழந்தை,

மற்றுமொரு மாலை வந்து என் உள்ளத்தை உன் நினைவால் நிரப்பியுள்ளது. அச் சிந்தனைகளை நம் இருவரையும் படைத்த

வனிடம் ஒப்படைக்கின்றேன். உன் நன்மைக்காக அவர் அவற்றை எவ்வகையில் பயன்படுத்த விரும்புகிருரோ, அவ்வாறே செய்யட்டும்.

அன்புடன்,

உன்,

பாபு

# 66

## நானெனும் ஆணவம்

செய்வதிலும் சொல்வதிலும் செறுக்கிலே சிக்கி,
நானெனும் ஆணவத்தால் நலியாது நடந்தால்,
வாழ்வின் இன்னலிலும் வாட்டும் துயரிலும்
தாழ்வுருது தலை தூக்கிப் பாடியே மகிழ்வேன்.
இரவையும் பகலாக்கி இன்புற்று வாழ்வேன்.
சிந்தனை அனைத்தும் சுயநலனில் சிக்கி
சிறுமைத் தனத்திலே பெருங் கோட்டைகள் கட்டி,
அன்பு காட்டுவதும் அழகுக்குப் பூச்சாக்கி,
என் பெருமை பேசுவதும் வன்பழி ஏற்றுவதும்
இன்னுலகின் வேலையென எண்ணுகின்றேன், பாவம்;
என்னையே மையமாக்கி எழிலுலகம் சுற்றுதென
புன்மதியால் புலம்பும் பொறுப்பற்ற பேதை நான்.
பெரு மனதுடன் உலகு பெரிதும் புகழ்கையிலும்
சிறுமையாக என் புகழ் பறித்ததெனப் பழிக்கின்றேன்.
தானெனும் அவலம் தனிலிருந்து விடுதலை
காணுமளவு வேகம் காணேம் வாழ்விலே.
மந்தமாய்ச் சென்ருலும், வேகமாய்ப் பாய்ந்தாலும்
சந்ததம் அந்த ‘நான்’ அகலாது என்னுடன்
பயணத்தில் தொடர்ந்து படுக்கையிலும் தூங்குகிறது.
எனக்கெனச் சுயநல எண்ணம் எதுவுமின்றித்
தனக்கன்றிப் பிறர்க்கே உரியவனுய் வாழ்ந்து
உடன் பிறப்பு மக்களிடம் உயிரையே கொட்டினல்
கடவுளே என் வாழ்வு காலமெலாம் சிறக்கு மன்றே.

என் அன்புக் குழந்தை,

நீ உன் வாக்குறுதியை மறந்து விட்டாய். இத்தனை நாட்களாகக் கடிதம் எழுதாமல் என்னைத் தனியே விடாதே. மேலேயுள்ள செய்யுள் இன்று நான் உனக்காகத் தேர்ந்தெடுத்த வாசகம்.

அன்புடன்,

உன்,

பாபு

## 67

### தந்தையின் இல்லத்திலே தஞ்சம்

ஒன்று உனக்கு உரைத்திடுவேன், கேள்;
சாலையிலே, சந்திலே, சன நடமாட்ட வீதியிலே,
சந்திக்கும் முதல் மனிதரிடம் சாற்றிடுவாய் இதையே.

அவனும் நாமும் அனைத்து மனிதரும்
நீலவானினைப் போல் நிர்மலத் தூய்மையாம்
அன்பின் அரவணைப்பில் ஆளாவோம் என்றுரை.
துன்பமும் துயரமும் அச்சமும் ஐயமும்
இன்னலும் வேதனையும் இயம்பிடுவாய் வீணென்றே.

மரணம் நிலையாதென மனம்தெளிந்து சொல்லிடுவாய்;
வெறுமையின் பாலையிலே, வியர்த்திடும் குகைகளிலே,
கருமையிருள் சூழ்ந்த கடும்வழிப் பாதையிலே.
நடந்திடும் போதினிலே நமக்கெதுவும் துன்பமில்லை—,
நல்ல வழிகாட்டி, நாயகனைப் பின்பற்றி
தொல்லிருள் பாதையிலும் தொல்லை தரும் சாலையிலும்
செல்லுவோம் சீராக அல்லல் சிறிதுமின்றி;
தெய்வ ஒளி துலங்கி உய்யும் வழிகாட்டும்.

வெவ்வேறு கரைதனிலே வீசப்பட்ட மக்களும்
கவ்வும் சோதனை தாண்டிக் கரை சேர்ந்து;
தந்தையின் இல்லத்திலே தஞ்சம் புகுவர்கூடி.

டிரெஞ்ச்

என் அன்புக் குழந்தை,

நான் டில்லிக்கு இரயிலில் சென்று கொண்டிருக்கின்றேன். ஓய்வெடுக்க நான் செல்வதற்கில்லை. நேற்று உனக்கு என்னால் எழுத இயலவில்லை. அடுத்த சில நாட்களில் என்ன நடக்கும் என்பது தெரியாததால், இதுவே கொஞ்ச நாட்களுக்கு நான் எழுதும் கடைசிக் கடிதமாக இருக்கும். எனக்கு ஒரு வரி எழுது.

அன்புடன்,

ஞாயிறு,
*21-3-'20*

பாபு

## 68

*திங்கட்கிழமை,*
*1920*

என் அன்புக் குழந்தை,

இன்றைய வாசகம் ஈதோ :

"தாழ்ந்தவன் மேலும் வீழ்வானோ—அடக்கமாய்
வாழ்ந்தவனை ஆணவம் வருத்துமோ அச்சுறுத்துமோ?

பணிந்தவர்க்கு என்றும் பகவன் துணையுண்டு;
இருக்கும் பொருள் சிறிதோ பெரிதோ
திருப்தி கொண்டு நான் வாழ்வேன்;
இருப்பதில் திருப்தி, இறைவா நான் நாடுகிறேன்;
திருப்தி கொண்டவரைத் தெய்வம் காத்திடும்.
மடியில் கனமிருந்தால் வழியில் பயமுண்டு.
இவ்வுலகில் சிறுபொருள் அவ்வுலகில் பேரருள்,
பெறுவதே பேரின்பம்; பெருமானே அருள்வாய்.''

ஜான் பனியன்

அன்புடன்,

உன்

பாபு

## 69

## தீர்ப்புக்காகக் காத்திருக்கிறேன்

பம்பாய்,
புதன்கிழமை,
*1920*

என் அன்புக் குழந்தை,

வழக்கு நடந்து கொண்டிருக்கிறது. ஒரு சில நிமிடங்கள் அவகாசம் கிடைத்ததால், உனக்குச் சில வரிகள் எழுத எண்ணினேன்.

நீ எப்பொழுதும் என் சிந்தையில் உள்ளாய். நம் உரையாடல்களை நான் நினைவுபடுத்தி, நயமாகப் பேச விரும்பிய போதும் கடுமையாக இருந்து விட்டேன் என்பதை எண்ணிப்பார்க்கும் போது, நான் ஓரளவு சஞ்சலம் அடைகின்றேன். ஒருவர் பேச்சை, அவர் நோக்கத்தைக் கொண்டு தீர்மானிக்க முடியாது; அதைக் கேட்பவர்க்கு என்ன எண்ணம் ஏற்படுகிறது என்பதைக் கொண்டு தான் தீர்மானிக்க முடியும். நீ இப்பொழுது மகிழ்ச்சியுடனும் மனநிறைவுடனும் இருக்கின்றாயா? உடம்பு எப்படி இருக்கிறது?

B...யின் தகரப்பெட்டியை நீ அவரிடம் திருப்பிக் கொடுத்துவிடவேண்டும். உனக்கு வேறு பெட்டி தேவைப் பட்டால், சென்னையில் வாங்கிக் கொள்ளலாம். உன் பயணத் திட்டம் பற்றிய விவரத்தை எனக்குத் தெரிவி.

வழக்கு விசாரணை முடிந்து விட்டது. தீர்ப்பு ஒத்தி வைக்கப்பட்டுள்ளது. நான் உனக்குத் தந்தி அனுப்பியுள்ளேன்.

அன்புடன்,

உன்,

பாபு

## 70

### தெய்வ பக்தி இன்பம் தரும்

வியாழக்கிழமை

*......1920*

என் அன்புக் குழந்தை,

என் இதயமும் வழிபாடும் எப்பொழுதும் உன்னுடன் இருக்கின்றன. உன் கடிதம் எனக்குச் சொல்லொணு வருத்தத்தைத் தருகிறது. நீ ஏன் இவ்வளவு வேதனை அனுபவிக்க வேண்டும்? தெய்வ பக்தி உள்ளவர்களுக்கு உண்மையான இன்பம் கிட்டும். உன் தெய்வ பக்தியில் எனக்கு உறுதியான நம்பிக்கை இருப்பதால், இன்பம் நிறைந்த அமைதி உனக்குக் கிட்டுமென்று உறுதியாக நம்புகிறேன்.

உனக்கு விரைவில் கப்பல் கிடைக்க வேண்டுமென விரும்புகிறேன். பயணத்தின் போது உனக்குத் தேவையான தனிமை கிடைக்கும். உன் வீடும், உன் தந்தையும் உனக்கு வேண்டிய ஆறுதலையும் தோழமையையும் அளிப்பார்கள்.

ஸ்ரீ பி...யின் தகரப் பெட்டியை நீ இதுவரை திருப்பி அனுப்பவில்லையென்ருல், பார்சலில் அனுப்பாதே. நீ பம்பாய்க்குத் திரும்பி வந்ததும் அதை அனுப்பலாம். அதற்குச் சிறிதும் அவசரம் இல்லை.

அன்புடன்,

உன்,

பாபு

## 71

### நான்கு நாட்கள் நல்ல ஓய்வு

இரயிலில்,

*30, மார்ச்சு, 1920*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் இப்பொழுது தான் எனக்குக் கிடைத்தது. அதற்காக இறைவனுக்கு நன்றி செலுத்துகின்றேன். ஓய்விடத்திலிருந்து

ஆசிரமத்திற்குச் சென்று கொண்டிருக்கின்றேன். நான் டில்லியை விட்டுச் சென்ற பின், என்னால் உனக்கு எழுத முடியவில்லை. நான்கு நாட்கள் நல்ல ஓய்வு கிடைத்தது. ஏப்ரல் 13ந் தேதிக்குப் பின் திரும்புவேன் என்று எதிர்பார்க்கின்றேன். நீ எப்பொழுது டென்மார்க் செல்கிறாய்.

அன்புடன்,

பாபு

# 72

## கேட்பது இறைவன் குரல் தானா?

சபர்மதி,
*15, ஏப்ரல், 1920*

என் அன்புக் குழந்தை,

நான் பம்பாயிலிருந்து இப்பொழுது தான் திரும்பியுள்ளேன். உண்ணா நோன்பு, வழிபாட்டு வாரத்தைப் பம்பாயில் கழித்தேன். உனக்கு நான் எழுதவில்லை என்பது உண்மைதான்; ஆனால் அதற்கு உன்னைப் பற்றிச் சிந்திப்பதைக் குறைத்துக் கொண்டேனென்றோ, அன்புடன் உனக்காக வழிபாடு செய்வதை நிறுத்திக் கொண்டேனென்றோ பொருளில்லை. எனக்கு அவகாசம் கிடைக்கவில்லை. உனக்குச் சில நாட்களுக்குப் போதுமான செய்யுட்கள் அனுப்பியிருந்தேன் என்றெண்ணினேன். உன் மனநிலை தெரிந்தால் இன்னும் சில செய்யுட்கள் அனுப்பியிருப்பேன். ஆகவே தான் சில நாட்கள் உனக்கு எழுதாமல் இருந்து விட்டேன்.

இப்பொழுதோ உன் அரிய கடிதம் கிடைத்துள்ளது. உன் திருமணம் நடந்தே தீருமென்று ஏற்றுக் கொள்ளும் மன நிலைக்கு நான் வந்து விட்டேன். அதை எதிர்த்து நான் வாதாடமாட்டேன். இறைவன் உனக்குக் காட்டும் வழியிலே நீ செல்வாய். ஆனால் நீ கேட்பது இறைவன் குரல் தான் என்பதை எப்பொழுதும் முதலில் நிச்சயப்படுத்திக் கொள்.

நான் லண்டன் போவது பற்றி இன்னும் ஒன்றும் நிச்சயமாகவில்லை. இப்பொழுது வெறும் பேச்சுக் கட்டத்தில் தான் இருக்கிறது. நான் வைஸ்ராய்க்கு எழுதியுள்ளேன். அவர் பதிலைப் பொறுத்துத் தான் முடிவு செய்ய வேண்டியிருக்கும்.

உண்ணா நோன்பு வாரத்தின் போது பம்பாயில் எனக்கு வளமான அனுபவங்கள் பல ஏற்பட்டன. ஆனால் அவற்றைப் பற்றி

நாம் சந்திக்கும்போது கூறுவேன். நீ உன் நாட்டிற்கு எப்பொழுது புறப்படப் போகின்றாய்?

அன்புடன்,

உன்,
பாபு

## 73

## எழில் மிக்க இடம்

ஞாயிறு, மே, 1920

என் அன்புக் குழந்தை,

[சபர்மதிக்கு] நீ வந்து சேர்ந்து விட்டாயா என்பது தெரியவில்லை. அங்கு வந்து விட்டால், சிங்ககாருக்கு நீ வரவேண்டும் அது எழில் மிக்க இடம். புனாவிலிருந்து ஒரு டோங்காவில் வர வேண்டும். எனக்கு முன்கூட்டித் தெரிந்தால் நான் எல்லா ஏற்பாடுகளையும் எளிதில் செய்ய முடியும். ஆனால் நீயே இந்த ஏற்பாடுகளைச் செய்து கொள்வாய் என்பதை அறிவேன். சிங்ககார் புனாவிலிருந்து 13 மைல்கள் தூரத்தில் இருக்கின்றது. டோங்கா வாடகை குறைந்தது 5 ரூபாயாகும். சில சமயங்களில் அதிகமாகவும் இருக்கும்.

அன்புடன்,

பாபு

## 74

## டிரெஞ்சின் தெய்விகப் பாடல்

ஆசிரமம்,
9, மே, 1920

என் அன்புக் குழந்தை,

உன்னை விட்டுப் பிரிய எனக்கு விருப்பமே இல்லை. ஆனால் உன் உடல் நலனுக்கு இது நல்லதென்று உணர்ந்தேன். நான் எதிர்பார்த்த நன்மை முழுதும் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன். சிங்ககாரின் தட்ப வெப்பநிலை உனக்கு ஒத்துக் கொண்டதென்று எண்ணுகிறேன்.

நான் எதிர்பார்த்தது போல் அவ்வளவு சீக்கிரம் உன்னுடன் இருக்க முடியாதென்று அஞ்சுகிறேன். [ஆமதாபாத் பஞ்சாலைகளில்] பெரிய வேலை நிறுத்தம் இன்று தொடங்கியது. நீண்ட

நாட்கள் அது தொடராதென்று எண்ணுகிறேன். ஆலை முதலாளிகள் பக்கம் நியாயமில்லை. உறுதியுடன் போராடுபவர்களும் அவர்களிடையே இல்லை. நேற்றிரவு மாபெரும் கூட்டமொன்றில் நான் கலந்து கொண்டேன். துணிவுடனும் தீரத்துடனும் தொழிலாளர் உறுதியாய் இருந்தனர்.

டிரெஞ்ச் பாடிய தெய்விக வரிகளை மீண்டும் நாம் நினைவுபடுத்திக் கொள்வோமாக :

நல்ல வழிகாட்டி நாயகனைப் பின்பற்றி
தொல்லிருள் பாதையிலும் தொல்லைதரும் சாலையிலும்
செல்லுவோம் சீர்க அல்லல் சிறிதுமின்றி;
தெய்வ ஒளி துலங்கி உய்யும் வழிகாட்டும்.
வெவ்வேறு கரைதனிலே வீசப்பட்ட மக்களும்
கவ்வும் சோதனை கடந்து கரைசேர்ந்து
தந்தையின் இல்லத்திலே தஞ்சம் புகுவர் கூடி.

அன்புடன்,

உன்,
பாபு

## 75

## அனைவரும் ஆண்டவன் ஆதீனத்தில்

ஆசிரமம்
*16, மே, 1920*

என் அன்புக் குழந்தை,

சமாதான உடன்படிக்கை நிபந்தனைகள் இன்று வெளியாகியுள்ளதால், என் வேலை முறைப்படி நடக்கவில்லை. ஆகவே உனக்கு நீண்டதோர் அன்புக் கடிதம் எழுத அவகாசமில்லை. இவ்வளவு விரைவிலேயே, 19ந் தேதியன்றே, நீ புறப்பட முடிந்துள்ளது குறித்து மகிழ்கிறேன். நீ அனுப்பிய தந்திக்கு என் பதில் தந்தி கிடைத்ததென்று எண்ணுகிறேன். நாம் அனைவரும் ஆண்டவன் ஆதீனத்தில் உள்ளோம். அவருக்கு, அவருக்கு மட்டுமே நாம் பணிவிடை செய்தால், நடப்பது அனைத்தும் நம் நன்மைக்கே இருக்கும். துன்பங்களென சொல்லப்படுவதும் முடிவில் நமக்கு நன்மையாகவே அமைகின்றது. வீட்டில் நீ பூர்ண ஓய்வெடுத்துக் கொண்டு அமைதியாக இருக்க வேண்டும். இந்தியாவிற்கு வந்ததன் பயனாகவும், ஆசிரமத்துடன் தொடர்பு கொண்டதன் பயனாகவும், நீ முன்னைவிடச் சிறந்த கிறிஸ்துவராகியுள்ளாய் என்பதை உன் தந்தை உணரட்டும். பூர்ண அமைதி பெற்று, உடலிலும், உள்ளத்திலும், உணர்விலும் உறுதி பெற்றபின், நீ திரும்பி வரு

வாயாக. உன் பயணம் வசதியாக அமையட்டும்; நீ வீட்டில் தங்கும் நாட்கள் இன்பமாகக் கழியட்டும்; நீ பத்திரமாக இங்கு திரும்பி வருவாயாக. நீ ஒழுங்காக எனக்குக் கடிதம் எழுதத் தவறக் கூடாது. உன் வீட்டு முகவரியையும் கொடு.

உன்,
பாபு

# 76

## பகவான் பத்திரமாய் அழைத்து வருவார்

ஆசிரமம்,
*21, மே, 1920*

என் அன்புக் குழந்தை,

புதன்கிழமையன்று உன்னை முந்த வேண்டுமென முயன்றேன். ஆனால் அவ்வாறு நடப்பதற்கில்லை. நான் தொழிலாளர் தகராறைத் தீர்த்துவைக்க வேண்டியதாயிற்று. என்னைச் சந்திக்க நீ மிகவும் ஆவல் கொண்டிருந்தாயென்று அவர்கள் அனைவரும் என்னிடம் கூறினர். நீ ஆவலுடன் இருந்தாய் என்பதை நானும் உணர்கிறேன். இக் கடிதத்தை அஞ்சலில் சேர்க்க A. காத்துக் கொண்டிருக்கிறார். ஆகவே நான் சுருக்கமாக எழுதவேண்டும். நீ கடைசியாக எழுதிய அருமைக் கடிதம் கிடைத்தது. நீ எவ்வாறு இருப்பாயென்று சொல்கிறாயோ, அவ்வாறே இருப்பாய் என்பதை நான் அறிவேன். பகவான் உன்னைப் பத்திரமாகத் திருப்பிக் கொண்டு வந்து சேர்ப்பாராக. உடலிலும் உள்ளத்திலும் உணர்விலும் நீ உறுதியாகத் திரும்புவாயாக.

நான் அனுப்பிய குறிப்பு 'பெர்லினி'ல்[1] உனக்குக் கிடைத்ததென்று எண்ணுகிறேன்.

உன்,
பாபு

# 77

## கிலாபத் பிரச்னை

பம்பாய்,
*25, ஜூன், 1920*

என் அன்புக் குழந்தை,

நான் எண்ணியதுபோல் உனக்கு ஒழுங்காகக் கடிதம் எழுத இயலவில்லை. கிலாபத் பிரச்னையில் மும்முரமாக முனைந்துள்ளேன்.

---

1. டென்மார்க்குக்கு எஸ்தர் பயணமாகிய கப்பலின் பெயர்.

என் சார்பில் மகாதேவை உனக்கு எழுதச் சொன்னேன். 'யங் இந்தியா'வும் உனக்கு ஒழுங்காகக் கிடைக்கிறதென்று எண்ணுகிறேன்.

கப்பலில் செல்லுகையில் உன்னிடமிருந்து கடிதம் வருமென்று எதிர்பார்த்தேன். ஆனல் இதுவரை உன்னிடமிருந்து ஒன்றும் வரவில்லே. கப்பலில் உனக்குக் கிடைக்கும்படி ஒரு கடிதமும், லண்டனில் தாமஸ் குக் பார்வையில் உனக்குக் கிடைக்க இன்னெரு கடிதமும் அனுப்பியிருந்தேன். அந்த இரு கடிதங்களும் உனக்குக் கிடைத்தன என்றெண்ணுகின்றேன்.

தற்போதைக்கு நான் பம்பாயில் தங்கவேண்டியுள்ளது. வைஸ்ராய்க்கு எழுதிய கடிதங்களே இத்துடன் இணைத்துள்ளேன். என் நடவடிக்கைகள்பற்றி அவற்றிலிருந்து நீ ஓரளவு தெரிந்துகொள்ளலாம். தேவதாஸ் என்னுடன் இருக்கின்ருன்.

உன் தந்தையைச் சந்தித்தது பற்றியும், உன் உடல் நலன் பற்றியும் நான் அறிய ஆவலாக உள்ளேன். உன்னிடமிருந்து ஒழுங்காகக் கடிதங்கள் வருமென்று எதிர்பார்க்கின்றேன்.

அன்புடன்,

உன்,

பாபு.

## 78

## இந்தியா மீது அன்பைப் பரப்பு

கல்கத்தாவுக்குச் செல்லும் வழியில்,
2, ஆகஸ்ட், 1920

என் அன்புக் குழந்தை,

நீ உன் நாட்டிலிருந்து எழுதிய முதல் நீண்ட கடிதம் கிடைத்தது. எனக்குப் பெரு மகிழ்ச்சி.

அங்கு இந்தியாவின் மீது அன்பு பெருகும்படி நீ செய்து வருகிருய் என்பதை அறிவேன். இறைவன் உனக்கும் உன் பணிக்கும் ஆசி அருள்வாராக.

அன்புடன்,

உன்,

பாபு.

# 79

## சுயராஜ்யம் பெறுவதற்கும் பேணுவதற்கும் விடாமுயற்சி

சுற்றுப் பயணத்தின்போது,
*4*, செப்டம்பர், *1921*

என் அன்புள்ள எஸ்தர்,

கிழக்கு வங்காளச் சுற்றுப் பயணத்திலிருந்து நான் கல்கத்தாவுக்குத் திரும்பியபோது உன் கடிதம் எனக்காகக் காத்திருந்தது.

உனக்கும் உன்னைச் சார்ந்தவர்க்கும் நீண்ட, சேவை நிறைந்த வாழ்க்கை உரித்தாகுக. [1]

உன் கடிதத்தைக் காணவும் உன் நலன்பற்றிச் செய்தி அறியவும் நான் ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன்.

'யங் இந்தியா' உனக்கு ஏன் வந்து சேரவில்லை என்று விளங்கவில்லை. நான் விசாரித்துக் கொண்டிருக்கின்றேன்.

நீ இந்தியாவுக்குத் திரும்பும்போது, பஞ்சடித்தல், நூற்பு, நெய்தல் ஆகிய பணிகளில் ஆசிரமம் தன் ஆற்றலையும் அவகாசத்தையும் பயன்படுத்தி வருவதைக் காண்பாய். டென்மார்க் நாட்டிலும் கையால் நூற்றல், கை நெசவு போன்றவை இருந்தால், நீ அவற்றைக் கற்றுக்கொள்ள வேண்டுமென விரும்புகின்றேன்.

இறைவன் சர்வ வல்லமை பொருந்தியவன். இந்த ஆண்டு நாம் சுயராஜ்யம் பெறுவது சாத்தியமென்றால், அது நாம் செய்யும் முயற்சியின் பயனாக அல்ல, அவருடைய அருளால்தான். அதன் பின்பு நீ தடையின்றித் திரும்பலாம். [2] சுயராஜ்யம் அடைவதற்கு எவ்வளவு உறுதியும் விடாமுயற்சியும் தேவையோ, அவ்வளவு அதைச் செயலாற்றி நிலை நாட்டுவதற்கும் தேவைப்படும். அதை அடைவதற்கு ஆன் மேரி இங்கு பணியாற்றட்டும். அதை வெற்றியாக்க நீ அங்கு பணியாற்றுவாய்.

உங்கள் இருவருக்கும் அன்பு,

உன்,

பாபு

---

1. டென்மார்க்கில் எஸ்தருக்கும் மேனனுக்கும் திருமணம் நடைபெற்றது என்றறிந்தபின் இக் கடிதம் எழுதப்பட்டது.

2. சிறிது காலத்திற்கு எஸ்தர் இந்தியா திரும்புவதற்கு ஆங்கிலேய அரசாங்கம் அனுமதி மறுத்தது.

## 80

### பர்தோலி சத்யாக்கிரகம்

*5—2— 1922*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தது. நீ எடுத்த முடிவு பொருத்தமானது. அரசு, தான் விரும்புவதைச் செய்து கொள்ளட்டும். என்ன நடக்கிறது என்பதை எனக்குத் தெரிவி. இக் கட்டத்தில் நான் செய்தியைப் பிரசுரிக்க மாட்டேன். பர்தோலியில் சட்ட மறுப்பு இயக்கத்துக்கு ஆயத்தங்கள் செய்வதில் நான் இப்பொழுது ஈடுபட்டுள்ளேன். வைஸ்ராய்க்கு (லார்டு ரீடிங்) நான் எழுதிய கடிதத்தை நீ படித்திருப்பாய்.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

உன்,

பாபு

## 81

### நல்வரவு

தந்தி

உங்கள் இருவருக்கும் இறைவன் அருள்வாராக.

காந்தி

## 82

### அடைக்கலம் புகுவதே திருமணத்தின் பொருள்

ஆஜ்மீர்,
*8*, மார்ச்சு, *1923*

என் அன்புக் குழந்தை,

ஒரு நாள் இங்கு தங்கவந்த இடத்தில்தான், உனக்கு எழுத அவகாசம் கிடைத்துள்ளது. சுதந்திரமாக வானம்பாடிபோல் திரிந்த வாழ்க்கை இனி உனக்குச் சாத்தியமில்லை. ஆனால் உன் வாழ்க்கையை இன்னொருவருடன் பகிர்ந்து கொள்வதால் கிடைக்கும் மகிழ்ச்சி, சுதந்திரத்தின் இழப்புக்கு ஈடுசெய்து மிஞ்சும். நாம் அனைவருமே நம்மை அர்ப்பணம் செய்ய ஆயத்தமாக வேண்டும். அவ்வாறு தன்னைத் தியாகம் செய்வ

தற்குத் துணையாகவும் தூண்டுதலாகவும் அமைந்தால்தான், திருமணத்திற்குப் பொருளுண்டு. தோற்றத்தில் வெவ்வேறாக இருக்கும் இருவர், ஒருவரிடம் ஒருவர் அடைக்கலம் புகுவது உண்மையில் இன்னும் உயர்வான சுதந்திர நிலையாகும்; ஏனென்றால் அது உயர்ந்த பொறுப்பு நிறைவு பெறும் நிலையாகும். மிக உயர்ந்த பொறுப்புக்களை நிறைவேற்றுவதே, மிகச் சிறந்த சுதந்திரமாகும். ஆண்டவனிடம் அடியோடு அடைக்கலம் புகுவதன் மூலம் தான் இதை அடைய முடியும்.

நீ எப்பொழுது வர இயலுமோ, அப்பொழுது வருவாயென்று நான் அறிவேன். இன்னும் சிறிது காலத்திற்குக் கூர்ஜரத்தை விட்டு நான் செல்லப் போவதில்லை.—அதாவது நான் கைது செய்யப்படாமல் சுதந்திரமாக விடப்பட்டால். நான் கைது செய்யப்படுவது பற்றிப் பற்பல வதந்திகள் நிலவுகின்றன.

மிஸ் பீட்டர்சனிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் பாக்கி இருக்கிறதல்லவா?

உங்கள் அனைவருக்கும் என் அன்பு,

உன்,

பாபு

# 83

## வாய்மை, அகிம்சை இன்றி உயிர் வாழேன்

என் அன்புள்ள எஸ்தர்,

பீகார் சுற்றுப் பயணத்தின்போது, சேவ்கார் என்ற அழகான இடத்திலிருந்து இதை நான் எழுதுகிறேன். இன்று என் திங்கட்கிழமை. [பேசா நோன்பு நாள்]. உன் நீண்ட கடிதம் என் முன்னால் இருக்கிறது. உங்கள் அனைவர் பற்றியும் நான் எப்பொழுதும் சிந்தனை செய்து கொண்டிருக்கின்றேன். நீ முழுதும் குணமடைந்து விட்டாய் என்பதையும், இந்திய மருத்துவத்தின் பயனாய் இந்தக் குணம் ஏற்பட்டது என்பதையும் அறிய எனக்கு மிகுந்த நிம்மதி ஏற்பட்டுள்ளது. இப்பொழுது மீண்டும் பெற்ற உடல் நலனை இனியும் இழக்காமல் காத்துக் கொள்வாயென்று நம்புகிறேன்.

மிஸ். பீட்டர்சன் அடுத்த ஆண்டுத் தொடக்கத்தில் டென்மார்க் போக இருப்பது நல்லது. அவர் உழைப்புக்கு இந்த ஓய்வு ஏற்ற வெகுமதி. நல்ல வளர்ச்சி அடையும் நிலைக்கு அவர் பள்ளிக்கூடத்தைக் கொண்டு வந்துள்ளார் என்பதும் மகிழ்ச்சிக்குரியது. அது வெற்றி அடையும் என்பதில் எனக்குச் சந்தேகம் என்றும் இருந்ததில்லை. பொறுமை ஒன்று தான் தேவைப்பட்டது. பல

போலிப் பொருட்களும் சுயநலச் செயல்களும் பரவியிருக்கும் இந்த நாட்களில், வழக்கத்துக்கு மாறானதையும் புதுமையானதையும் சந்தேகக் கண் கொண்டு தான் மக்கள் பார்ப்பார்கள்.

நீங்கள் அனைவரும் நூற்பாளர் சங்கத்தில் சேரப் போகிறீர்கள். சங்கத்தின் விதிமுறைகளை நீ படித்தாயா?

ஓரிரண்டு மாதத்திற்கு முன் எனக்கு டென்மார்க்கு நாட்டில் ஓர் அம்மையாரிடமிருந்து இனியதொரு கடிதம் வந்தது. டென்மார்க்கு செல்ல நான் பெரிதும் விரும்புவேன். ஆனால் இப்பொழுதை விட உறுதியாக அஹிம்சை இந்நாட்டு மண்ணிலே வேரூன்றும் வரை, நான் இந்தியாவை விட்டுச் செல்ல விரும்பவில்லை. அதுவே வாய்மை என்பதை நான் அறிவேன். அதற்கு நான் சிறந்த எடுத்துக்காட்டாக இராமல் போகலாம். ஒன்று மட்டும் நான் அறிவேன். வாய்மை, அகிம்சை இன்றி, நான் உயிர் வாழ இயலாது.

என் வாழ்க்கை வரலாற்றை எழுத நீ முற்பட்டால், நீ ஆசிரமத்தில் பல மாதங்கள் தங்க வேண்டியிருக்கும்; தென்னாப்பிரிக்காவுக்குக் கூடச் செல்ல வேண்டியிருக்கும்; சம்பாரண், கேடா, பாஞ்சாலம் ஆகிய ஊர்களுக்கும் செல்ல வேண்டியிருக்கும். அதைச் செம்மையாகச் செய்வதென்றால், அது மிகக் கடினமான பொறுப்பாகும். நான் பொருள் கண்டு விளங்கிக் கொண்டுள்ளதற்கேற்ப, அகிம்சையை முதன் முதலில் செயல்படுத்த நான் முயன்றது இந்த ஊர்களில் தான்.

உங்கள் அனைவருக்கும் அன்பு; குழந்தைக்கு முத்தங்கள்.

உன்,

பாபு

*5-10-1925*

நவம்பர் தொடக்கத்தில் நான் ஆசிரமம் போய்ச் சேருவேன்.

## 84

## உண்ணா நோன்புக்குப் பின்

என் அன்புள்ள எஸ்தர்,

நீண்ட நாட்களாக உன்னிடமிருந்து கடிதம் எதிர்பார்த்துக் கொண்டிருந்தேன். ஆகவே உன் கடிதம் கண்டு மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன். உன் உடல் தேறி வருவது குறித்து மகிழ்ச்சி.

என் உண்ணா நோன்பு பற்றிய செய்தி அனைத்தும் உனக்குக் கிட்டியுள்ளதா? அதனால் எனக்குக் கெடுதல் ஒன்றும் ஏற்பட

வில்லை. பத்து நாட்களில் இழந்த எடையை அநேகமாக மீண்டும் பெற்று விட்டேன். J...உடன் வார்தாவில் இப்பொழுது ஓய்வெடுத்துக் கொண்டிருக்கின்றேன்.

நாங்கள் மீரா என்றழைக்கும் மிஸ் ஸ்லேட் என்னுடன் இருக்கிருள்; அவள் காங்கிரசுக்கும் வருகிருள். உன் கடிதத்தைக் கண்டு அவள் மகிழ்ச்சி அடைந்தாள். ஏற்கெனவே அவள் உனக்கு எழுதவில்லையெனில், இப்பொழுது உனக்கு எழுதுவாளென்று எதிர் பார்க்கின்றேன்.

புத்தாண்டு தினவாக்கில் நான் ஆசிரமத்துக்குத் திரும்புவேன் என்று எதிர்பார்க்கின்றேன்.

சேவை பற்றி மிக உயர்ந்த குறிக்கோள்கள் கொண்டுள்ளார் M... அவை அனைத்தும் ஈடேறுமாக!

பள்ளி வளர்ச்சி அடைந்துள்ளதா? உன்னுடன் எத்தனை குழந்தைகள்—சிறுவர், சிறுமியர்,-இருக்கின்றனர்? உங்கள் பாடத் திட்டம் என்ன?

உங்கள் அனைவர்க்கும் அன்பு.

வார்தா, உன்,
*11-12-1925* பாபு
*21 ந் தேதி வரை நான் இங்கிருப்பேன்.*

# 85

## நட்பின் இலக்கணம்

ஆசிரமம்,
சபர்மதி, *10-2-1926*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதமும் சிப்பமும் கிடைத்தன. மலச் சிக்கலைத் தீர்க்க ஒரு பஸ்பம் என்றும், புட்டி மருந்து மலேரியா நோய்க்கு என்றும், குறிப்பிட்டுள்ளதைத் தவிர, சிப்பத்தில் வேறு விளக்கக் குறிப்பு எதுவும் காணேம். என்னைப் பொறுத்தவரை, தற்போதைக்கு நான் குணமாகவே இருக்கின்றேன். மீண்டும் நோய் வந்தால், அந்த மருந்தை நான் சாப்பிட முடியுமோ என்னவோ. ஏனென்றால் மருந்துக்கோ உணவுக்கோ, 24 மணி நேரத்தில் 5 உணவுப் பொருட்களைத் தான் பயன்படுத்துவது என்ற ஒரு நிபந்தனையை நான் ஏற்றுள்ளேன். இந்த ஆயுர்வேத மருந்துகளில் பெரும்பாலும் பல பொருட்கள் சேர்ந்துள்ளன. ஆகவே அவை மிகவும் பலனுள்ளவையாய் இருந்த போதிலும், என்னைப் பொறுத்த வரை, அவற்ருல் சிறிதும் பலன் கிடையாது தான். ஆனல் இங்கு எத்தனையோ

பேருக்கு மலேரியா வருகிறது. ஆகவே அதைப் பயன்படுத்தும் முறைகளை நீ சொன்னால், அவர்களுக்கு இம் மருந்தைக் கொடுத்துப் பார்ப்பேன். ஆகவே எப்படிப் பயன்படுத்த வேண்டும் என்பதை விளக்குவதுடன், அதில் என்னென்ன பொருள்கள் சேர்ந்திருக்கின்றன என்பதும் தெரிந்தால், தெரிவி.

நட்பைப் பற்றி நீ குறிப்பிட்டுள்ளாய். நட்பு என்ற சொல்லை மூன்று வெவ்வேறான பொருள்களில் நீ பயன்படுத்தியுள்ளாய். நமக்கு ஆற்றல் இருந்தால், ஏசுநாதரைப் போல் அனைவரிடமும் நாம் நண்பர்களாய் இருக்கலாம். அங்கு அன்புடன் உதவி செய்பவரை, நண்பர் என்ற சொல் குறிக்கும். நமக்கும் நமக்கு மேல் நிலையில் உள்ளவர்க்கும் இடையேயுள்ள உறவு ஒரு தலையாயது. ஒரு தந்தை தன் குழந்தைகளுக்கு நண்பனாகத் தான் இருக்கின்றான்; இருக்க வேண்டும். அங்கு அது நன்மையுடன் தோழமையாகிறது; சமஸ்கிருதத்தில் இதைச் சத்சங்கம் என்பார்கள். இரகசியம் எதற்கும் இடம் தராமல் இரண்டு பேரோ, அதற்கு மேலோ கொள்ளும் நெருங்கிய உறவு பற்றித் தான் நான் குறிப்பிட்டேன். இந்த உறவில் பரஸ்பர உதவி, நட்பின் பயனாக எழுகிறதே ஒழிய, அந்த உதவி தான் நட்புக்கு மூல காரணமல்ல. விவரிக்க முடியாத ஒரு கவர்ச்சி தான், நட்பிற்கு மூலாதாரமாக இருக்கின்றது. ஒதுங்கி நின்று, தனித்து வளரும் இந்த உறவு நல்லதல்ல, இறைவனுடன் இரண்டறக் கலப்பதற்கு இடைஞ்சல் செய்யும் என்பது என் கருத்து. என் சுய சரிதையில் நான் குறிப்பிட்டவருக்கும் எனக்கும் இடையே வளர்ந்த நட்பு இத்தகையது தான்.

நூற்பதில் இயற்கையாகவே உனக்குக் கவர்ச்சி தோன்றவில்லையா? நீ நூற்பாயானால், அதில் அக்கறை கொண்டதால் நூற்கிறாய் என்று தான் எதிர்பார்ப்பேன். அக்கறை கொண்டிருந்தால், நீ இராட்டினத்தின் நுட்பத்தை அறிந்து கொண்டு, சமையலுக்கு அடுப்பை எப்படிச் சுத்தமாகவும் ஒழுங்காகவும் வைத்துக் கொள்வாயோ, அதுபோலவே நூற்பதற்குச் சர்க்காவை ஆயத்தமாக வைத்திருப்பாய்.

இந்நாட்டின் மிகத் தாழ்ந்த ஏழைகளுடன் கொள்ளும் தோழமையின் சின்னம், நூற்பு. அதைத் தினமும் செய்வது, நமக்கும் அவர்களுக்கும் இடையேயுள்ள தொடர்பைப் புதுப்பித்துப் பலப்படுத்துவதாகும். இவ்வாறு கருதினால், எனக்கு நிலையான இன்பமும் அழகும் ஊட்டும் பொருளாக, நூற்பு விளங்குகிறது. சர்க்கா இல்லாமல் இருப்பதைவிட ஒருவேளை சாப்பாட்டைத் தவிர்க்க நான் தயாராக இருப்பேன். இராட்டினத்தின் இந்த உயர்ந்த தத்துவத்தை நீ உணர வேண்டுமென விரும்புகிறேன். நீ நூற்க முற்படுவாயானால், நான் அதைச் சிபார்சு செய்கிறேன் என்பதனாலோ, காங்கிரஸ் அதைப் பரிந்துரை செய்கிறது என்பதாலோ, அல்லது அதனால் பொருளாதார நன்மை ஏற்படக்கூடும்

என்பதாலோ மட்டும் நீ நூற்க முற்படுவாய் என்று நான் எதிர் பார்க்கவில்லை.

சிறிது சிறிதாக என் உடல் பலம் பெருகிவருகிறது.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

உன்,

பாபு

## குழந்தைக்கு ஆசி

## 86

என் அன்புக் குழந்தை,

குடும்பத்தில் புதுமுகத்திற்கு என் ஆசி. நீயும் சேயும் நலம் தேறி வருகின்றீர்கள் என்று நம்புகிறேன். நீ சொன்ன பெயர் களில் எதுவும் நன்றாகத் தான் இருக்கிறது. பெயர் நீளமாயில்லா மல் சின்னதாய் இருக்கும் அளவுக்குச் சிறந்தது.

உன்,

பாபு

## 87

## குழந்தைக்கும் கதர்

ஆசிரமம்,
சபர்மதி,
*30—4—1926*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. உன் உடல் நலன் பற்றி எனக்குக் கவலை ஏற்பட்டுள்ளது. முன்பு உன்னிடமிருந்த இயற்கைப் பொலிவையும் பலத்தையும் நீ மீண்டும் பெற வேண்டும்.

மிஸ் பீட்டர்சன் பள்ளி கலைந்து விட்டதைக் கேட்டு வருந்து கிறேன். நீ குறிப்பிட்ட பெண்களிடமிருந்து எனக்கு நூல் எதுவும் வரவில்லை. [குழந்தையின் உபயோகத்திற்குக்] கிழிந்த கதர்த் துணியும், ஒருமுறை பயன்படுத்தப்பட்ட மிருதுவான துணி யும் வேண்டிய அளவு உனக்கு அனுப்பலாம். எந்த நீளத்தில் வேண்டுமென்று நீ கூறினால், அதை அனுப்புவதற்கு ஏற்பாடு செய்வேன். பழைய கதருக்கு விலை நிர்ணயிப்பது கடினம். ஆகவே நீ விரும்பும் விலையை அனுப்பலாம்; எதுவும் அனுப்பாமலும் இருக்கலாம். உனக்குத் தேவைப்படும் கதருக்கு விலை கொடுப்

பதற்காக நீ உனக்கு அவசியமான வசதி எதையும் குறைத்துக் கொள்ளக்கூடாது. அதற்காக உனக்குத் தேவைப் படும் துணியைக் கேட்டுப் பெற்றுக் கொள்ள நீ தயங்கவும் கூடாது.

K...ஏழை நோயாளிகளுக்கு உதவி செய்து வருவது குறித்து மகிழ்கின்றேன். வரவும் செலவும் சரிக்கட்டி வரும்வரை வேறெதை யும் பற்றி ஏன் கவலைப்பட வேண்டும்? சேவையுணர்வுடன் கூடிய தொண்டினைப் பொறுத்தவரை, வரவும் செலவும் சரிக்கட்டி வரா விட்டால்கூட, கவலைப்படத் தேவையில்லை.

ஆண்ட்ரூஸ் நாளை பம்பாய் போய்ச் சேருவார்.

உன்,

பாபு

## 88

## பின்லாந்து பயணத் திட்டம்

ஆசிரமம்,
சபர்மதி,
*23—6—1926*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. என் பின்லாந்து நாட்டுப் பயணம் பற்றி நிறைய பேசப்பட்டதே, அதைப் பற்றி இப்பொழுது அனைத் தையும் உனக்குச் சொல்லிவிட்டேன். அங்கு செல்வதற்குரிய நேரம் இன்னும் வரவில்லை என்று கருதினேன். பாதை எனக்குத் தெளிவாகப் புலப்படவில்லை. பின்லாந்து நாட்டிற்குச் சென்றிருந் தால், நிச்சயமாக டென்மார்க்குக்கும் சென்றிருப்பேன். ஆன்னி மேரிக்கு நான் முன்பே அது பற்றி உறுதியாக வாக்களித்திருந் தேன். உன் வீட்டைப் பார்க்கவும் நான் பெரிதும் விரும்பி யிருப்பேன். ஆனால் அதற்கெல்லாம் வாய்ப்பில்லாமல் போய் விட்டது.

மீராபென் நலமாகவே இருக்கின்றாள். வெப்பத்தை அவள் மிக நன்றாகத் தாங்கிக் கொண்டுள்ளாள். உனக்கு உதவியாளர் ஒருவர் கிடைத்துள்ளது குறித்து நான் மகிழ்கிறேன். பழைய கதர் எவ்வளவு, எந்த ரகத்தில் அனுப்ப வேண்டுமென்று நீ இன்னும் கூறவில்லை. M...ஒரு சிப்பம் தயாரித்துள்ளார். கிரெய்க் லியில் நீ கொடுத்துள்ள முகவரிக்கு அது இன்று அனுப்பப்படும். கிரெய்க்லீ என்பது கோத்தகிரியில் உள்ள வீட்டின் பெயர் என்றெண்ணுகிறேன். நோயாளிகளைப் பேணுவதில் K...ஈடு

பட்டுள்ளதில் வியப்பொன்றுமில்லை; அவர் இயல்புக் கேற்ற செயல். பத்து ரூபாய் பற்றி நீ குறிப்பிட்டுள்ளாய். இது வரை ஒன்றும் வரவில்லை. எதுவும் அனுப்பத் தேவை யில்லை.

உன்,

பாபு

# 89

## குழந்தையின் மும்மொழிப் பயிற்சி

ஆசிரமம்,
சபர்மதி,
*16—7—1926*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. அந்த 10 ரூபாய் பற்றி நீ ஏன் அவ்வளவு விளக்கம் தரவேண்டும்? எனக்கு 10 ரூபாயோ வேறு தொகையோ அனுப்புவதற்காக, நீ உன் செலவை இறுக்கிப் பிடித்தால், நான் மிகுந்த வேதனை அடைவேன். பணம் வந்து சேர்ந்ததா, இல்லையா என்பது பற்றிச் சந்தேகமும், வந்திருந்தால் தவறுதலாக எங்கும் வைக்கப்பட்டு விட்டதா என்ற அச்சமும் ஆசிரமத்தில் இருந்ததால், அதைப்பற்றி உனக்கு நான் கூறினேன். ஆனால் நீ கதர்த் துணியை வைத்துக்கொண்டு காசு எதுவும் அனுப்ப வேண்டியதில்லை என்பதே என் விருப்பம். உனக்கு அனுப்பப்பட்டுள்ளது, ஆசிரம உறுப்பினர்களுக்குச் சொந்தமான, ஒருமுறை பயன் படுத்தப் பட்ட பழைய கதர்த் துணிதானே? உனக்கு இன்னும் அதிகத் துணி தேவைப் பட்டால், கேட்கத் தயங்க வேண்டிய தில்லை.

குழந்தை 'நான்' [எஸ்தரின் முதற் குழந்தை] முன்னேற்றம் அறியப் பெரு மகிழ்ச்சி. வளர்ந்தபின், இது போலவே மூன்று மொழிகளில் திறம்படப் பேசினால் அது பெரிய சாதனையாகும். மனஉறுதி அவளுக்குத் தன் அன்னையிடமிருந்தும், மென்மை அவள் அப்பாவிடமிருந்தும் அவளுக்கு வந்துள்ளனவா? இல்லை, நேர் மாறாக நீ கூறுவாயா?

அடுத்த ஆண்டு என்ன செய்வேன் என்பதை இப்பொழுதே எண்ணிப் பார்க்கும் நிலையில் நானில்லை. ஆனால் நான் தெற்கே வந்தால், போர்ட்டோ நோவோவுக்கு நிச்சயம் வருவேன்.

உங்கள் அனைவருக்கும் அன்பு.

உன்,

பாபு

# 90

## நம் விமோசனத்தை நாமே தேட வேண்டும்

ஆசிரமம்,
சபர்மதி,
*8*, ஆகஸ்ட், *1926*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. இதில் மேலே என் கையால் சிறிது எழுதியிருக்கிறேன் என்று நீ திருப்தி அடைய வேண்டும்.[1] எனக்கும் தட்டெழுத்து இயந்திரம் விருப்பமில்லைதான். அதன் மேல் எனக்கு ஒருவித அச்சமும் அருவருப்பும் உண்டு. ஆனால் நிலையான தீங்கு செய்யாத பலவற்றை நான் சகித்துக் கொள்வது போல் இதையும் சகித்துக் காலம் தள்ளுகின்றேன். அந்தத் தட்டெழுத்து இயந்திரத்தை என்னிடமிருந்து எவரும் பறித்துக் கொண்டால், நான் ஒரு சொட்டுக் கண்ணீர்கூட சிந்த மாட்டேன். ஆனால் அது இருக்கும் வரை, அதைப் பயன்படுத்துகிறேன். அதனால் மிச்சமாகும் நேரத்தை இன்னும் பயனுள்ள வேலைக்குச் செலவு செய்யலாம் என்று எண்ணி என்னைத் திருப்தி செய்து கொள்கிறேன். ஆனால் என்னுடைய இந்த எண்ணம்கூட முற்றிலும் தவறாக இருக்கலாம். எப்பொழுதுமே சூழ்நிலையை வென்று மேம்படுவது கடினமானது தான்.

ஆன்னி மேரி, சிறந்த, உயர்ந்த தொண்டு ஆற்றி வருகிறாரென்று தோன்றுகிறது. துவேஷங்களும் தப்பெண்ணங்களும் விரைவில் அழிவதில்லை. ஆனால் உண்மையான ஆர்வம் இருந்தால், மிகக் கடுமையான துவேஷங்களையும் முறியடிப்பது கடினமல்ல.

ஆன்ம அனுபவம் பெறுவதற்காக 7 நாள் உண்ணா நோன்பு மேற்கொள்ள மீரா விரும்பினாள். இன்று காலைதான், ஆரஞ்சு ரசம் பருகி, நோன்பை முடித்தாள். ஏழு நாட்களில் பத்து பவுண்டு எடையை இழந்துள்ள போதும் உண்ணா நோன்பை நன்கு தாங்கிக் கொண்டாள். எடை இழப்பு பெரிதல்ல.

வைஸ்ராயிடமிருந்து நான் அதிகம் எதிர்பார்க்கவில்லை. அவருக்கு நல்லெண்ணம் இருக்கலாம்; ஆனால் வெறும் நல்லெண்ணம் மட்டும் அதிகம் சாதித்து விடாது. பலன் கிட்டுவது விரைவிலாயினும் நீண்ட நாட்களாயினும், நாமே தான் நமக்கு விமோசனத்தைத் தேடிக்கொள்ள முடியும் என்பதை மட்டும் வலியுறுத்த விரும்புவேன். இதை நீயே ஊகித்து உணர்ந்துள்ளது சரியானதுதான்.

உன்,

பாபு

---

1. தட்டெழுதிய ஒரு சில கடிதங்களில் இது ஒன்று.

# 91

## ஆசிரமங்களும் உண்ணு நோன்புகளும்

ஆசிரமம்,
சபர்மதி, 20-8-'26

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. தட்டெழுத்து இயந்திரம் பற்றி நீ சொன்னதைத் தப்பாக எடுத்துக் கொள்ளவில்லை. அதற்கு மாருக, நீ சொன்னது எனக்குப் பிடித்திருந்தது.

ஆசிரமம் என்ற சொல்லுக்கு நேரான பொருள், வீடு. ஆனல் ஓர் ஆசிரமத்திற்குச் சில இயல்புகள் உண்டு. அது எளிமையாய் இருக்க வேண்டும். அது வெறும் கல்வி நிலையமாக மட்டும் இருக்கக் கூடாது. புலனடக்கத்தை பேணும் உறுதி பூண்டவர்கள் அதில் பெரும்பான்மையோராக இருக்கவேண்டும். உலகிலிருந்து விடுபட்ட சந்நியாச உணர்வு அதில் ஓங்க வேண்டும். ஆகவே அது ஏழ்மை நிலையை விரும்பி ஏற்றுக் கொண்டதாய் இருக்க வேண்டும்; எளிய வாழ்வைக் கண்டிப்பாகப் பின்பற்ற வேண்டும். தன்னை அறிந்து நிறைவுபெறும் குறிக்கோளுடன் உயர்ந்த ஒழுக்க நெறியை வகுத்து மேற்கொள்வது அதன் நோக்கமாக இருக்க வேண்டும். ஆசிரமத்தில் உள்ள ஆண்கள் பெண்கள் அனைவரும் உடல் உழைப்பு செய்து, அனைவரும் சமமாக நடத்தப் படவேண்டும். ஒருவர் உயர்ந்தவர் என்ற எண்ணத்துக்கே அதில் இடமில்லை. ஆசிரமத் தலைவர் தந்தை நிலையில் இருக்க வேண்டியவர்; அவர் மற்ற ஆசிரம வாசிகளைத் தன் குழந்தைகளாகவே கருதவேண்டும். ஆசிரமத்தின் இயல்புகளை ஓரளவு சித்திரித்துக் காட்டியுள்ளேன் என்று எண்ணுகிறேன்.

மருத்துவர் ஒருவரே நோய்வாய்ப்பட்டு அல்லது பலவீனமாய் இருப்பதைக் கண்டால் எப்பொழுதுமே எனக்கு வருத்தம் உண்டாவதுண்டு. மருத்துவ இயல் இன்னும் நிறைவு பெருத நிலையில், முற்றிலும் நம்ப முடியாத நிலையில், அன்ருட அனுபவத்தை ஒட்டித் தான் கண்ட உண்மைகளைத் திருத்திக் கொள்ள வேண்டிய நிலையில் உள்ளது என்பதை, அது நமக்கு ஓயாது இடித்துரைக்கின்றது. அதை ஓரளவு பற்றற்ற நோக்குடன் ஆராய்ந்தால் இறுதியான, நிரந்தரமான சிகிச்சை என்று எதுவும் கிடையாது என்பதைக் கண்டு மருத்துவ இயலின் அடிப்படைப் பலவீனத்தை நாம் உணர்வோம். வல்லமை பெற்ற சிறந்த மருந்துகளும் எண்ணற்ற முறை பலனளிக்காமல் பொய்க்கின்றன. எவ்வளவு வெற்றிகரமான அறுவை சிகிச்சையும் உடலிலும் உள்ளத்திலும் ஒரு தழும்பை விட்டுச் செல்கிறது. நீ டென்மார்க்குக்குச் சீக்கிரமே புறப்பட ஏற்பாடு செய்து கொள்வது நல்லது. தட்ப வெப்ப நிலையில் மாறுதலே சிறந்த மருந்தாகும்.

உண்ணு நோன்பு பற்றி நீ சொல்வது உண்மைதான். அந்த ஒரு செயலால் மட்டும் தனித்து உயர்வு அடைய முடியாது. அதன் நோக்கம் ஆன்மிக உயர்வு பெற்றதாய் அமையாவிடில், அதனுல் எந்தவித ஆன்ம பலனும் ஏற்படாது. நோக்கத்தில் கலப்பு இருந் தால், உண்ணு நோன்பினுல் ஆன்மிக பலன் ஏற்படாமல், வெறும் லௌகீக நன்மைகளே ஏற்படும். ஆன்ம மலர்ச்சிக்காக உண்ணு நோன்பு மேற்கொள்வது, தனி மனிதன் வாழ்வில் ஏதாவது ஒரு கட்டத்தில் இன்றியமையாததான ஒரு கட்டுப்பாடு என்று நான் உறுதியாக நம்புகிறேன். புரோட்டஸ்தாந்து சமயம் இந்த அம்சத் தைப் புறக்கணித்துள்ளது பெருங்குறை என்று நான் எப்பொழு துமே கருதுபவன். உண்ணு நோன்பின் ஆன்மிகச் சிறப்பை முக்கியமான மற்ற எல்லாச் சமயங்களும் உணர்ந்துள்ளன. தானுக விரும்பிப் பட்டினியின் வேதனைகளை ஒருவர் அனுபவித்தால் ஒழிய, ஊனுடலைச் சிலுவையிலடித்தல் என்பதற்குப் பொருளே இல்லா மல் போகிறது. பட்டினியே அறியாமல், அதை அனுபவித்து உணராமல், பட்டினியால் உழலும் ஏழை மக்கள் துயரத்தில் பங்கு கொள்வது பற்றிப் பேசுவது அர்த்தமற்றது. ஆனுல் எண்பது நாள் உண்ணு நோன்பு மேற்கொண்டால் கூட, ஆணவம், சுயநலம், பேராசை போன்ற இயல்புகளைத் தன்னிடமிருந்து அகற்ற இயலா மல் போகலாம் என்பதையும் நான் தடையின்றி ஒப்புக் கொள் கிறேன். உண்ணு நோன்பு என்பது துணைநின்று பலப்படுத்தும் முட்டு. ஆட்டம் கொடுக்கும் அமைப்புக்கு முட்டு துணைசெய்து காப் பது போலவே, போராட்டத்தில் சிக்கித் தவிக்கும் ஆன்மாவுக்கு உண்ணு நோன்பு, மிகச் சிறந்த துணையாகவும் பலமாகவும் அமையும்.

அன்புடன்,

உன்,

பாபு

# 92

## அனைவரையும் சமமாக வணங்குகின்றேன்

ஆசிரமம்,
சபர்மதி, *17-9-1926*

என் அன்புக் குழந்தை,

நீ உன் கடிதத்தில் குறிப்பிட்டுள்ள ரோமன் கத்தோலிக்க உண்ணு நோன்பு, உண்மையில் உண்ணு நோன்பே அல்ல. ஆனுல் அவர்களிடையேயும் உண்மையான உண்ணு நோன்பு மேற் கொள்ளும் பழக்கம் முன்பு இருந்தது; இன்னமும் இருக்கக் கூடும். ஆனுல் அந்தப் பழக்கத்தை அவர்கள் முன்பு மேற்

கொண்டதுண்டா, இப்பொழுது மேற் கொள்வதுண்டா என்பது நமக்கு முக்கியமல்ல. உண்ணு நோன்பும் சரி, வேறெந்தக் கட்டுப்பாடும் சரி, வெளியிலிருந்து நம் மீது சுமத்தப் பட்டால், அதனால் உருவான பலன் எதுவும் கிடையாது. கிறிஸ்துவைப் பற்றி நீ குறிப்பிட்டுக் கேள்வி எழுப்பியுள்ளது பற்றி வருத்தப்படத் தேவையில்லை. புதிய ஆகமத்தில், ஏசுநாதர் கூறியுள்ளதாகக் காணப்படும் ஒவ்வொரு சொல்லையும் நான் மிகுந்த பக்தியுடனும் கவனத்துடனும் படித்துள்ளேன். ஏசுநாதர் பற்றி எழுதப் பட்டுள்ளதை மிகுந்த பணிவுடன் படித்துள்ளேன். ஆனால் நான் அறிந்து, போற்றி, விளக்கக் கூடியதாக, ஏசுநாதர் போதனைகளுக்கும் மற்ற ஆன்மிக வழிகாட்டிகளின் உபதேசங் களுக்கும் இடையே அடிப்படையான வேறுபாடு எதையும் நான் காணவில்லை. குழந்தைப் பருவத்திலிருந்து உனக்குச் செய்யப் பட்டுள்ள போதனையின் அடிப்படையில், உன்னை அறியாமலேயே உன் உள்ளத்தில் பதிந்துள்ள அந்த உணர்வுடன் தான் நீ மற்ற தனைத்தையும் படிப்பாய். வேறுபாடு காண என் குழந்தைப் பருவத்தில் எனக்கு யாரும் சொல்லிக் கொடுக்கவில்லை. ஆகவே எந்தப் பக்கமும் விருப்பு வெறுப்பு இல்லாமல், நான் வளர்ந்துள் ளேன். ஏசுநாதர், முகம்மது நபி, கிருஷ்ணர், புத்தர், சரதுஸ்திரர் மட்டுமல்ல, இன்னும் சொல்லக் கூடிய அனைவரையும் நான் சம மாகப் போற்றி வணங்கமுடியும். ஆனால் இது வாதத்திற்குரிய பிரச்னை அல்ல. ஒருவருடைய ஆழ்ந்த, புனிதமான நம்பிக்கையைப் பொறுத்தது இது. ஏசுநாதருக்கு மட்டுமே நீ செலுத்தும் சிறப் பான வழிபாட்டிலிருந்து உன்னை நான் மாற்றவோ, கலைக்கவோ சிறிதும் விரும்பவில்லை. ஆனால் அனைவரையும் தழுவி வணங்க முடியுமென்ற நிலையை நீ அறிந்து மதிக்க வேண்டுமென்று தான் விரும்புகிறேன்.

பணக் கஷ்டம் பற்றி மகாதேவ் கூறியுள்ளது உண்மையே. நீ சொல்வதும் பொருத்தமானது தான். இறைவன் உனக்கு வழி காட்டி வகை செய்தால், நீ இங்கு வருவாய்.

உன்,

பாபு

## 93

## அன்பும் ஆசியும்

என் அன்புக் குழந்தை,

உன் பரிதாபமான கடிதம் கிடைத்தது. இத்தனை நாட்களாக உன்னிடமிருந்து ஏன் கடிதமே வரவில்லை என்று எண்ணிக் கொண்டிருந்தேன். இப்பொழுது எனக்கு விளங்குகிறது. இவ் வளவு சீர்குலைந்த நிலையில் நீ இருப்பதைக் காண எனக்கு வேதனையாக இருக்கின்றது. என் கவனம் பல திக்குகளில் ஈர்க்கப்

படுவதற்கு இடையே இதை எழுதுகிறேன். எனக்கு ஒரு நிமிடம் கூட அவகாசமில்லை. ஆகவே என் அன்பையும் வழிபாடு கலந்த ஆசிகளையும் உனக்கு அனுப்புகின்றேன். ஏப்ரல் மாதத்தில் தெற்கே வருவேன். சுற்றுப் பயணத்தின் போது, எப்படியாவது உன்னைச் சந்திக்க முயல வேண்டும்.

மரியா திரும்பி வந்தபின், நூற்பு பற்றி என்ன செய்ய முடியும் என்பதைக் கவனிக்கவேண்டும்.

உங்கள் அனைவருக்கும் அன்புடன்,

உன்,

பாபு

# 94*

## நோய்வாய்ப்பட்ட ஆங்கிலேய சோதரி

என் அன்புக் குழந்தை,

நோய்வாய்ப் பட்டிருக்கும் சகோதரியைச்[2] சந்தித்ததை நீ சித்திரித்துள்ளது மிகவும் உருக்கமாக உள்ளது. அவளை நீ மறு முறை சந்திக்கும் போது, என் அன்பை அவளுக்குத் தெரிவி.

உன் மனம் இப்பொழுது ஒருநிலைப்பட்டு நிம்மதியாக இருக் கிறதென்று நம்புகிறேன். குழந்தைகள் நலமாக இருக்கிறார் களென்று எண்ணுகிறேன். நான் அவர்களை முத்தமிட அனுமதிப் பார்களென்றால், அவர்களுக்கு என் சார்பில் நீ முத்தமிடு.

மரியா என்னுடன் பம்பாயில் இருந்தாள். ஆனால் அவளுடன் பேசுவதற்குக் கூட எனக்கு நேரம் கிடைக்கவில்லை.

உட்ப்ருக் குடியிருப்பில் உள்ள அனைவருக்கும் என் அன்பைத் தெரிவி. மிஸ் ஹாரிஸனுக்கு என் அன்பைத் தெரிவி. அவர் எங்கு தங்கியிருக்கின்றார் என்பதை எனக்கு எழுது. மரியாவுக்கு நீ எழுது வது உண்டா?

அன்பு,

பாபு

எ. ம. சி.
*21-1-1932*

---

* 94 முதல் 109 வது கடிதங்கள் வரை எரவாடா மத்திய சிறையி லிருந்து எழுதப்பட்டவை. வட்ட மேசை மகாநாட்டிலிருந்து இந்தியாவுக்கு அவர் திரும்பியவுடன் கைது செய்யப்பட்டிருந்தார்.

மேனன் குடும்பத்தினர் அப்பொழுது இங்கிலாந்தில் பர்மிங்ஹாம் ஊரில் 'செல்லி ஒக்'கில் குடியிருந்தனர்.

2. நோய்வாய்ப்பட்டிருந்த ஏழை ஆங்கிலப் பெண் ஒருத்தி; அவளுக்குக் காந்திஜியிடம் ஆழ்ந்த பற்றுதல் இருந்தது.

# 95

## அன்பே அன்பின் வெகுமதி

என் அன்புக் குழந்தை,

மீண்டும் உன்னிடமிருந்து ஒரு கடிதம் வந்ததும், அதில், எதிர் பாராத விதமாகக் குழந்தை நான் சில வரிகள் கிறுக்கியிருந்ததும் எனக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்தன.

பல நாட்டு நண்பர்கள் அங்கு தங்கியுள்ளனர் என்று காண் கிறேன்.[1] உன் உடல் நலன் உள்ள நிலையில், உன்னால் தாங்கிக் கொள்ள முடியாத அளவுக்கு வேலைச் சுமை வளராமல் பார்த்துக் கொள்.

கீதை வேறு விதமாக உபதேசிக்கவில்லை. நம் செயல்கள் அனைத்தும் இயற்கையாக இருக்க வேண்டுமென்றும், மனதறியா மல் செய்வது கூட உள்ளத்திலிருந்து ஊற்றெடுக்க வேண்டுமென் றும் தான் கீதை உபதேசிக்கின்றது. நம் செயல்கள் அவ்வாறு அமையும் போது, பலன் பற்றியோ வெகுமதி பற்றியோ எண்ணம் எழுவதில்லை. ஆகவே தூய்மையான அன்பில், கொடுப்பது வாங்குவது என்ற பிரச்னைக்கு இடமில்லை. இதையே இன்னொரு விதமாகச் சொல்வதென்றால், பெற்றுக் கொள்ளாமல் கொடுப்பது என்பதற்கு உலகில் இடமே இல்லை. அன்பு, அளிக்கின்றது. அளிக் காமல் அது இருக்க முடியாது. அதுதான் அதன் இயல்பு. அப் பொழுது, அளிப்பதற்கு ஈடு தரும் அளவில் பலன் கிடைக்கிறதா என்று கணக்குப் போட்டுப் பார்ப்பதில்லை. கொடுப்பது பற்றியோ, இன்னும் முக்கியமாக வாங்குவது பற்றியோ அது மனதறிந்து ஆராய்வதில்லை. அன்பு தனக்குத் தானே வெகுமதியாக அமை கிறது. நீங்காத அந்த அன்பு நிலவுகின்ற போது, மற்ற புறச் சூழ் நிலைகளிலிருந்து நாம் அனுபவிப்பதாக எண்ணுகின்ற சுகங்களை விட மேம்பட்ட ஓர் இன்பம் நமக்குக் கிட்டுகின்றது. அந்த இன் பத்தை நீ அடைய வேண்டுமென்று தான் நான் விரும்புகின்றேன். அந்த இன்பத்தை நீ அடைந்துவிட்டாய் என்று நான் நினைத்த, நீ எண்ணிய, காலம் ஒன்றிருந்தது. ஆனால் அப்பொழுது நீ சோதனைத் தீக்கு ஆளாகவில்லை. அந்தத் தீயின் தூய்மையான சோதியி லிருந்து வரும் உண்மையான இன்பத்தை நீ ஒரு நாள் நிச்சயமாக அனுபவிப்பாய். அது வரும் போது, நீ அறியாமலே, அது உன்னை ஆட்கொள்ளும். அது விரைவில் உனக்குக் கிட்டுவதாக.

நாங்கள் இருவரும் நலமாக உள்ளோம்.

அன்பு,

பாபு

எ. ம. சி.
28-2-1932

---

1. மேனன் வீட்டில் எப்பொழுதும் சர்வதேச நண்பர்கள் குழு கூடி யிருப்பதுண்டு.

## 96

## கடவுள் கைவிடமாட்டார்

என் அன்புக் குழந்தை,

உன்னிடமிருந்து கடிதம் கிடைப்பது எனக்கு எப்பொழுதும் மகிழ்ச்சியைத் தருகிறது. உன் கடிதம் சுவையாக இருப்பதுடன், அதிலிருந்து பல உண்மைகளையும் அறிய முடிகிறது. நீ இன்னமும் சற்று பதட்டமாகவே உள்ளாய். அதை நீ வெல்ல வேண்டும். இறைவனிடம் நமக்கு நம்பிக்கை இருந்தால், நம்பகமான காவல் காரரோ, காப்பாளரோ இருக்கும் போது கவலைப்படாமல் இருப்பது போலவே, நாம் கவலைப்படாமல் இருக்க வேண்டும். எப்பொழுதுமே நம்மைக் கைவிடாத இறைவனை விடச் சிறந்த காவல் காரரோ, காப்பாளரோ வேறு யார் இருக்க முடியும்? இதைப் பற்றி நாம் துதிப்பாடல்கள் பாடுவதோ, அறிவால் உணர்வதோ மட்டும் போதாது. நம் அகத்தே இதை உணர வேண்டும். இந்த உணர்வை அனுபவிப்பது, இன்பத்தையோ துன்பத்தையோ அனுபவிப்பது போன்றது தான். இதைப் பற்றி வாதம் செய்ய இடமுமில்லை; தேவையுமில்லை. நம் அனுபவத்துக்கு மாறாக யார் நம்மிடம் வாதாட முடியும்? எல்லாக் கவலைகளிலிருந்தும், வருத்தத்திலிருந்தும் நீ விடுபட வேண்டுமென்று நான் விரும்புவதால் தான் இதை எழுதுகிறேன்.

பல்வேறு நாட்டு மக்களின் பொம்மைகளைக் குழந்தைகளுக்குக் கொடுத்தது நல்ல யோசனை. இந்திப் பெண்ணின் பெயரென்ன? அவள் எந்த மாநிலத்தைச் சேர்ந்தவள்?

மகாதேவ் என்னுடன் இருக்கின்றார் என்று நான் உனக்குச் சொன்னேனா?

குழந்தைகளுக்கு என் முத்தங்கள்.

அன்பு,

பாபு

எ. ம. சி.
*13-4-'32*

## 97

## புயல் நடுவே அமைதி

என் அன்புக் குழந்தை,

நீ செய்து வருவது அனைத்தும் எனக்கு விளங்குகிறது. வேலையிலிருந்து கவலையை வருவித்துக் கொள்வதை மட்டும் தவிர்க்க வேண்டும். இறைவனின் சித்தத்தைச் செயல்படுத்தும் கருவிகளாக நம்மை ஆக்கிக் கொண்டால், நாம் ஒரு நிமிடம் கூடக் கவலைப் படத் தேவையில்லை.

ஆம்; புயல் இல்லாமல் அமைதி கிட்டுவதில்லை; போராட்டம் இல்லாமல் சமாதானம் இல்லை. சமாதானத்திலேயே போராட்டம் பொதிந்து கிடக்கின்றது. அகத்தேயும் புறத்தேயும் உள்ள பூசல்களுடன் ஓயாத போராட்டம் தான் வாழ்க்கை. ஆகவே தான் பூசல்களுக்கும் இடையே நாம் அமைதி காண்பது அவசியமாகிறது. இந்த முறை புனாவில் வெப்பம் அதிகம். வழக்கமாகப் புனாவில் இவ்வளவு வெப்பம் இருப்பதில்லை. ஆனால் இப்பொழுது மழை பெய்யத் தொடங்கியுள்ளது. எழில் மிக்க கதிரவன் மறைவுக் காட்சிகளும், பறவைகளின் இனிய பாடல்களும் எங்களை மகிழ்விக்கின்றன,

நோயாளியைக் காண நீ மீண்டும் சென்றாயா?*

மகாதேவ் என்னுடன் இருக்கின்றார் என்று கூறினேன். தினமும் ஐந்து மணி நேரம் அவர் நூற்பதிலும் பஞ்சடிப்பதிலும் செலவு செய்கிறார். மிக நேர்த்தியான நூலை அவர் இப்பொழுது நூற்கிறார். என் கைகளின் பலவீனத்தால் என்னால் அதிகம் செய்ய இயலவில்லை. நீ நலமாக இருக்கிறாயென்று நம்புகிறேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

எ. ம. 22-5-'32

## 98

## ஊற்று மூலமே களங்கமடைந்தால்

என் அன்புக் குழந்தை,

இது பேசா நோன்பு நேரம். உன் நீண்ட கடிதம் கிடைத்தது. எவ்வளவு நீண்டதாயினும் எனக்கு மகிழ்ச்சிதான். நீ அனுப்பிய புத்தகம் எனக்குக் கிடைத்தது என்று சென்ற முறை சொல்ல மறந்து விட்டேன். எவ்வளவு சீக்கிரம் அதைப் படிக்க முடியுமோ, படிப்பேன். ஒவ்வொரு நிமிடமும் முன்னதாகவே அடகு வைத்ததாகி விடுகிறது. ஆகவே புதிதாகப் படிக்கும் வேலையோ, வேறெந்த வேலையோ வந்தால், மற்ற வேலைகளை முடித்துவிட்டு அதைக் கவனிக்கும் வரை காத்திருக்க வேண்டியதுதான்—மற்ற வேலைகளை ஒத்திப் போட்டு உடனடியாகக் கவனிக்க வேண்டிய அளவு அவசரமான, மிக முக்கியமான வேலை வந்தால் ஒழிய.

உணர்ச்சி, இதயத்தில் தோன்றுவது. நாம் இதயத்தைத் தூய்மையாக வைத்துக்கொண்டாலொழிய, உணர்ச்சி நம்மைத் தவறான வழியில் அழைத்துச் செல்லக் கூடும். வீட்டையும், அதில் உள்ள தனைத்தையும் தூய்மையாக வைத்துக் கொள்வது போன்றது அது. இதயமே ஆண்டவனைப் பற்றிய உணர்வின் ஊற்று மூலம்.

* 94வது கடிதத்தில் குறிப்பிடப்பட்ட நொண்டிப் பெண்.

அந்த ஊற்று மூலமே களங்கமடைந்து விட்டால் வேறெந்தப் பரிகாரமும் பலனளிக்காது. அது பரிசுத்தமாக இருப்பது உறுதிப்பட்டு விட்டால், வேறெதுவும் தேவைப்படாது.

இது வலது கையால் எழுதப்படுகிறது. இடது கை, வலது கையை விட மோசமாகி விட்டது. கவலைப்படுவதற்கு எதுவுமில்லை. ஆனால் அதற்குப் பூர்ண ஓய்வு தருவது அவசியம். ஆகவே காலால் மிதித்து இயக்கும் சர்க்காவில் நூற்று, வலது கையால் நூலை இழுக்கின்றேன்.

நாங்கள் இப்பொழுது மூவர்-அனைவரும் நலம்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

எ. ம. சி.
29-5-'32.

# 99

## ஆணுக்கும் பெண்ணுக்கும் பொறுப்பில் பங்கீடு

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. எதிர்பார்க்கும் நேரத்தில் என் கடிதம் கிடைக்காவிடில் பதட்டமடையாதே. நான் கடிதங்கள் எழுதுவதில் சில தடைகள் ஏற்பட்டுள்ளன. விரைவில் சீராகி விடுமென்று நம்புகிறேன். எனினும் ஒரு கைதி, தன் நியாயமான தேவைகளை இயல்பாக நிறைவு செய்வதற்கு அளிக்கப்படும் வசதிகளுடன் திருப்தி அடைய வேண்டும்.

நோய்வாய்ப்பட்ட சகோதரியைக் காணும்போது, அவளை நான் அடிக்கடி எண்ணுகிறேன் என்று கூறு. உன் வீட்டுக்கு அருகாமையில் உள்ள ஊனமுற்ற குழந்தைகள் பள்ளிக்கு நீ எப்பொழுதாவது செல்கின்றாயா? ஆர்வம் மிக்க ஊழியர் பலர் அங்கு தொண்டாற்றுகின்றனர் என்று எண்ணுகிறேன். உனக்கு அவகாசம் கிடைததால், அந்தப் பள்ளிபற்றியும் அதன் மேற்பார்வையாளர் பற்றியும் மேலும் விவரங்கள் அறிந்து அதன் முன்னேற்றம் பற்றி எனக்குச் சொல்ல வேண்டுமென விரும்புகிறேன்.

வீட்டில் ஒரு பெண் இல்லாததால் B—யின் வீடு களை இழந்து காணப்பட்டது என்று கூறுகிறாய். ஆணுக்கும் பெண்ணுக்கும் உரிய வேலைகள்பற்றியும். பொறுப்புப் பங்கீடுபற்றியும் நமக்குள்ள போலி எண்ணங்களின் விளைவாக ஏற்பட்டது இந்நிலை என்று நான் எப்பொழுதுமே கருதி வந்துள்ளேன். அவர்களிடையே வேலைகளைப் பிரித்துக்கொள்வது அவசியம்தான். ஆனால் வீட்டை ஒழுங்

காகக் கவனித்துக்கொள்ள ஆணின் இயலாமையும், தன்னைக் கவனித்துக் கொள்ளப் பெண்ணின் இயலாமையும், மேனாடுகளை விட அதிகமாக இங்கு காணப்படுகிறது. இந் நிலை, நாம் தவறான முறையில் வளர்க்கப் பட்டதன் விளைவாகும். வீட்டில் பெண் இல்லாவிட்டால் வீட்டைச் சுத்தமாக வைத்துக்கொள்ள இயலாத அளவுக்கு ஆண் ஏன் அவ்வளவு சோம்பேறியாக இருக்கவேண்டும்? தனக்கு எப்பொழுதும் ஓர் ஆண்மகன் காவலாய் இருக்க வேண்டுமென்று ஒரு பெண் ஏன் நினைக்க வேண்டும்? வீட்டு வேலைக்குத்தான் பெண் முக்கியமாக லாயக்கானவள் என்றும், பலவீனமாகவும் எப்பொழுதும் துணை தேடும் அளவுக்கும் அவள் மென்மையாக இருக்க வேண்டுமென்றும் எண்ணும் பழக்கத்தினால்தான் இந்த முரண்பாடு உண்டாகிறது என்று எனக்குத் தோன்றுகிறது. ஆசிரமத்தில் இதற்குமாறான சூழ்நிலையை உருவாக்க முயன்று வருகின்றோம். அது கடினமான வேலைதான். ஆனால் முயற்சி செய்வது அவசியம்.

ஸ்ரீமதி W-க்கு எழுதும்போது, மகாதேவும் நானும் அவரை விசாரித்ததாகக் கூறு.

குழந்தைகளுக்கு என் முத்தங்கள்.

அன்பு,

பாபு

எ. ம. சி.
*18-7-1932*

# 100

## தீயின் மூலமே தெய்வம் வரும்

என் அன்புக் குழந்தை,

நான் உனக்கு வெகு தூரத்தில் இருந்த போதும் உன் வேதனையை உணர முடிகிறது,[1] தீயின் வழியாக அன்றி, தெய்வம் நம்மிடம் வருவதில்லை. வேதனையின் சோதனைமூலம் தூய்மைப் படுவதில், மனதறியாத ஆழ்ந்த இன்பம் அனுபவிக்கின்றோம். இந்த சோதனையின்போது அவ்வித இன்பத்தில் நீ பங்கு கொண்டாயென்று நம்புகிறேன். இங்கிலாந்திலிருந்து அன்புச் செய்தி அனுப்பிய நண்பர்களில் ஹொரேஸ் அலெக்சாந்தர், ஆண்ட்ரூஸ் ஆகியோருடன் உன் பெயரையும் பார்த்தேன்; சரியாகச் சொல்ல வேண்டுமென்றால் உன் பெயரைப் படிக்கக் கேட்டேன். நாளுக்கு நாள் நான் பலம்பெற்று வருகின்றேன்.

இன்று என்னிடமிருந்து நீண்டதொரு கடிதம் எதிர்பார்க்க மாட்டாய். எனக்கிருக்கும் பலத்தை, இங்கிலாந்தில் உள்ள நண்

---

1. காந்திஜி இந் நேரத்தில் மேற்கொண்ட நீண்ட உண்ணா நோன்பு பற்றி எஸ்தர் மிகுந்த கவலை கொண்டிருந்தார்.

பர்களுக்கு அன்புக் கடிதங்கள் எழுதுவதில் செலவு செய்து வருகிறேன்.

உனக்கு என் அன்பு, குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

எ. ம. சி.
*30—9—'32.*

## 101

### தீண்டாமைக்குப் பிராயச்சித்தம்

எரவாடா மத்தியசிறை,
(புனா)

என் அன்புக் குழந்தை,

செப். 4ந் தேதியன்று நீ எழுதிய நீண்ட கடிதம் கிடைத்தது. அது கடந்துவிட்ட காலம்.

உண்ணா நோன்புக்குப் பின் புதுப் பிறவி எடுத்ததுபோல் தோன்றுகிறது. இழந்த பலத்தை விரைவில் பெற்று வருகின்றேன். பழைய எடை அநேகமாகத் திரும்பி வந்துவிட்டது. பழைய பலம் வருவதற்கு இன்னும் சில நாட்கள் பிடிக்கும். வேதனை மிகுந்த அந்த நாட்களில் அகத்தே ஓரின்பமும் இருந்தது; இலட்சக்கணக்கான மக்கள் தங்கள் உடன் பிறந்தார்க்குச் செய்யும் மாபெரும் துரோகமான தீண்டாமைக்கு அது சிறு பிராயச்சித்தமாகும். ஆனால் இதற்குள் அதைப்பற்றிய எல்லா விவரங்களையும் அறிந்திருப்பாய்.

நீராவிக் குளிப்பு மூலமும், புரத, கொழுப்புச் சத்து அதிகம் சேராத உணவு உட்கொள்வதன் மூலமும், பசுங்கனிகள் நிறைய சாப்பிடுவதன் மூலமும், உன் பக்கவாதத்தைப் போக்க நீ முயல வேண்டும்.

நானும் தங்கையும் ஒரு பொதுப்பள்ளிக்குச் சென்று, [கலப்பு இனக்குழந்தைகள் மேலுள்ள] துவேஷ உணர்வைச் சகித்துச் சமாளித்துக் கொள்ளும்படி செய்யவேண்டும்—அவர்கள் பள்ளிக்கு வருவதை ஆசிரியர்களாவது வரவேற்றால்.

டென்மார்க்கிலிருந்து எனக்கு பிறந்த நாள் தந்தி ஒன்று வந்தது. தந்தி அனுப்பியவர் பெயர் அதில் இல்லை.

இன்று வேறொன்றுமில்லை.

எங்களிடமிருந்து அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

*4—10—'32.*

# 102

## உண்ணுநோன்பு வீணாகவில்லை

எரவாடா மத்தியசிறை,
(புனா)

என் அன்புக் குழந்தை.

பரவசத்தில்[1] தந்தி அனுப்ப நீ அஞ்சலகத்துக்கு ஓட விரும்பினாய் என்பதையும், ஆனால் வேறு ஒரு காரணத்திற்காக இல்லாவிடினும், நாம் ஏழைகள் என்பதாலும், நம்மிடம் ஒப்படைக் கப்பட்டுள்ள பணம் இறைவனின் சேவைக்கு நம்மிடம் ஒப்படைக் கப்பட்டது என்பதாலும், தந்திக்காகப் பணம் செலவு செய்வது தவறு என்பதைப் பின்னர் உணர்ந்தாய் என்பதையும் நீ உன் கடைசிக் கடிதத்தில் குறிப்பிட்டுள்ளாய். நீ ஆசிரம முகவரிக்கு அனுப்பிய நீண்ட அன்புக் கடிதமும் கிடைத்தது.

A. புகை பிடிக்கும் பழக்கத்தை நிறுத்த, என் உண்ணு நோன்பு உதவியதென்றால், நான் நோன்பு மேற்கொண்டது வீணாகவில்லை. அவரை ஆட்கொண்டு விட்ட ஒரு பழக்கத்தை அவர் கைவிடத் துணிந்தார் என்பது தான் முக்கியமானது. நான் உண்ணு நோன்பு மேற்கொண்டிருந்த வாரத்தில் பல ஆண்களும் பெண்களும், வயதானவர்களும் இளைஞர்களும் உணர்ச்சியால் உந்தப் பட்டுப் பல தவறான பழக்கங்களைக் கைவிட்டுப் புலனடக் கத்தால் தூய்மை பெறத் தாமாக விரும்பி முன்வந்தனர். உண்ணு நோன்பு ஆண்டவனின் ஆக்கினை என்பது இதிலிருந்து தெரி கிறது.

ஆண்ட்ரூஸும் நீங்களும் சேர்ந்து எடுத்த புகைப் படத்தை நான் பார்த்தேன்; அனைவரும் அதைப் பாராட்டினர். அது மிக நன்றாக இருந்தது. அங்கி அணியாமல் காட்சியளித்த தங்கை! அவள் எழிலின் சித்திரம்.

நோய்வாய்ப்பட்ட சோதரியை நீ பார்க்கச் சென்றதை அடுத்த கடிதத்தில் விவரமாக எழுதுவாயென்று எதிர்பார்க் கின்றேன்.

புதுக் கட்டிடங்கள் பற்றி விவரமாக எடுத்துக் கூறி, சன் பீல்ட் பள்ளி நிறுவனத்தாரிடமிருந்து நீண்ட கடிதம் வந்தது.

உடம்புக்கு ஒத்துக் கொள்ளாததை அதில் புகுத்தி, உன் உடம்போடு நீ விளையாடக் கூடாது. பயறுவகைகளைச் சாப்பிட்டு உடம்பை வளர்க்க முடியாது. அவை உனக்குத் தேவையே இல்லை. நீ முட்டைகளைச் சாப்பிடுகிறாய்; அதுவும் நல்லதே. ஆகவே பால், முட்டைகள், நிறைய ரொட்டி, பழங்கள்,

---

1. உண்ணு நோன்பு நிறைவுபெற்ற நல்ல செய்தி கேட்டு.

பச்சைக் காய்கறிகள், பச்சைக் காய்கறிப் பச்சடி, தக்காளி, பசலைக் கீரை, சுரைக்காய் போன்றவை உன் உணவில் இடம் பெற வேண்டும். ஒரு போர் வீரன் தன் போர்க் கருவிகளைச் சுத்தமாக வைத்துக்கொள்வது போலவே, நாமும் நமது போர்க் கருவிகளான, ஆண்டவனால் அளிக்கப்பட்ட உடம்பைச் சுத்தமாகவும் செம்மையாகவும் வைத்துக் கொள்ள வேண்டும்.

நான் இழந்த பலத்தை அநேகமாக மீண்டும் பெற்று விட்டேன். M. ஒழுங்காக ஒவ்வொரு வாரமும் எழுதுகிறார்; நலமாக இருக்கின்றார். தேவதாஸ் இப்பொழுது நன்கு தேறியுள்ளான்; ஆனால் அதிக வேலைச் சுமையை வருவித்துக் கொள்கிறான். P.யும் அவ்வாறே. மகாதேவ் என்னுடன் தான் இருக்கின்றார். T. ஆசிரமத்தில் இருக்கின்றார். அவர் சிறந்த இளைஞர்; ஆனால் உடலில் பலம் இல்லை.

டென்மார்க்கில் உள்ள இளைஞர் நண்பருக்கு ஒரு கடிதத்தை இத்துடன் அனுப்பியுள்ளேன். பா ஆசிரமத்தில் இருக்கின்றாள். என்னைவிட அவளுக்கு மூப்பு தட்டி விட்டதென்று எண்ணுகிறேன். ஆயினும் இன்னமும் மிகுந்த ஊக்கத்துடன் வேலை செய்கிறாள். அவள் உள்ளத்தில் சீக்கிரம் சோர்வு ஏற்பட்டு விடுகிறது. அவள் அதிகம் கவலைப்படுகிறாள்.

உங்கள் அனைவருக்கும் அன்பு. அதற்கு மேலாகக் குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

*11—11—'32*

## 103

### வாழ்க்கை, ஓயாத தியாகத் தொண்டு

எரவாடா மத்திய சிறை,
(புனா)

என் அன்புக் குழந்தை,

விரைவில் நான் மேற்கொள்ள விருக்கும் இரண்டாவது உண்ணாநோன்பு பற்றி நீ கவலைப்படக்கூடாது. அது நடக்காமலே போகக்கூடும். ஆனால் அதை நான் மேற்கொண்டால், அதில் நீ மகிழ்ச்சி அடையவேண்டும். வாழ்க்கை உண்மையானதாக இருக்க வேண்டுமானால், அது ஓயாத, தொடரும் தியாகத் தொண்டு ஆக அமையவேண்டும். மகிழ்ச்சி பின்னுக்குக் கிட்டுவதல்ல. தியாகமே மகிழ்ச்சிதான். நாம் பெற்றுக் கொள்வது அனைத்தும் மற்றவர்களுக்கு மேலும் வழங்குவதற்காகத் தான். இது எனக்கு மேலும் மேலும் தெளிவாகி வருகிறது. ஆகவே நடப்பதையும் நடக்கக் கூடியதையும், நீ பூர்ண அமைதியுடனும் மகிழ்ச்சியுடனும் வழிபாட்டுடனும் எதிர்கொள்ள வேண்டும்.

இன்று உனக்கு இன்னும் அதிக நேரம் தருவதற்கில்லை. தீண்டாமை ஒழிப்புத் தொண்டு, அன்புக் கடிதங்கள் எழுதுவதற்கு அவகாசம் அளிப்பதில்லை.

உங்கள் அனைவருக்கும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

*25—11—'32*

# 104

## புத்தாண்டு வாழ்த்துக்கள்

எரவாடா மத்திய சிறை,
5, ஜனவரி, *1933*

என் அன்புக் குழந்தை,

தீண்டாமை ஒழிப்புத் தொண்டில் ஈடுபட்டிருக்கும் போது, கடிதங்களுக்கும் பதில் எழுதுவதென்றால், பல கடிதங்களை நானே எழுதாமல் மற்றவர்களிடம் சொல்லி எழுத வைத்தால் தான் முடியும்; அப்பொழுதும் பதில் சுருக்கமாகத் தான் இருக்க முடியும். இதற்கான வசதி சிறையில் அனுமதிக்கப்பட்டுள்ளது குறித்து நான் மகிழ்ச்சி அடைய வேண்டும். V, M, ஆகியோர் எனக்குப் பெரிதும் உதவுகின்றனர் என்ற போதிலும், தீண்டாமை ஒழிப்புத் தொண்டு என் ஆற்றலுக்கு மீறி வளர்ந்து விட்டது. உன் நீண்ட அன்புக் கடிதத்திற்கு ஏற்ற பதில் எழுத வேண்டுமென்று தான் விரும்புகின்றேன். ஆனால் அதைப் போன்றதொரு கடிதம் என்னால் எழுத முடியாது. ஆண்ட்ரூஸை, உட்ப்ருக் குடியிருப்பில் தங்கும்படி செய்துள்ளாய் என்று காண்கிறேன். ஆகவே அவர் உன் பக்கத்திலேயே இருப்பார். தேவைப்படும் போது அவர் மேல் சார்ந்து, அவருடைய உறுதியான ஆதரவையும் துணையையும் நீ பெறலாம்.

ஆம்; நீ எனக்காக எழுதி அனுப்பியுள்ள ஷெல்லியின் அழகான கவிதையைப் பார்த்தேன். நீ நலமாக இருக்கிறாயென்று நம்புகிறேன். நீ முன்பு அனுபவித்ததை விட அதிக மன நிறைவையும் அமைதியையும் புத்தாண்டு உனக்கு அளிக்க வேண்டுமென்று வழிபடுகின்றேன்.

நோய்வாய்ப்பட்டுள்ள சோதரியிடமிருந்து வந்த கடிதம் கண்டு மகிழ்ச்சி அடைந்தேன். அவருக்கு நான் எழுதியுள்ள பதிலை இத்துடன் அனுப்பியுள்ளேன். அவர் தம் முகவரியை எழுதியுள்ள போதிலும், அவர் பெயர் சரியாக விளங்கவில்லை என்பதால், உன் மூலம் அக் கடிதத்தை அனுப்புகின்றேன்.

எங்கள் இருவரிடமிருந்தும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள். அவர்களுக்குத் தனியாக அஞ்சலட்டை ஒன்று எழுதியுள்ளேன்.

கிறிஸ்துமஸ் பரிசாகத் தங்கைக்கும் நானுக்கும் மகாதேவ் ஒரு புத்தகம் அனுப்பினர். அவர்களுக்கு அது கிடைத்தது என்றெண்ணுகிறேன்.

பாபு

## 105

### ஹரிஜன் வார இதழ்

எரவாடா மத்திய சிறை,
*10, பிப்ரவரி, 1933*

என் அன்புக் குழந்தை,

ஆம்; இம்முறை நீ சில வாரங்களாக எனக்குக் கடிதம் எழுதாமல் இருந்து விட்டாய். காரணம் அறியாமல் திகைத்துக் கொண்டிருந்தேன். வார இதழாகப் புதிதாக வெளிவரும் 'ஹரிஜன்', என் முழுக் கவனத்தையும் கவர்ந்து. வேறெதற்கும் அவகாசம் தரவில்லை. ஆகவே இம்முறை உனக்கு நீண்ட கடிதம் எழுதுவதற்கில்லை. பத்திரிகையின் இதழ், இக்கடிதத்துடனேயே உனக்கு வந்து சேரும்.

சார்லி [C. F. ஆண்ட்ரூஸ்] அங்கிருப்பது உனக்கும் குழந்தைகளுக்கும் எவ்வளவு மகிழ்ச்சியைத் தரும் என்பதை நான் அறிவேன். அவர் உன்னுடன் இருப்பதால், உன்னைப் பற்றிய என் கவலைச் சுமை குறைந்து விட்டது.

உங்கள் அனைவருக்கும் எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு.

பாபு

## 106

### ஆண்டவனின் அந்தரங்க வழிகள்

எரவாடா மத்திய சிறை,
*17, பிப்ரவரி, 1933*

என் அன்புக் குழந்தை,

இப்பொழுதெல்லாம் அதிக வேலை இருப்பதால் எனக்கு நேரமே கிடைப்பதில்லை. மற்றெல்லா வேலையையும் ஒதுக்கி விட்டு, இரண்டு நாள் முழுவதும் ஹரிஜன் வேலைக்கே தர வேண்டியிருக்

கிறது. ஆகவே என் அன்புக் கடிதங்கள் முன்பு சுருக்கமாக இருந்தனவென்ருல், இப்பொழுது அதைவிடச் சுருக்கமாக இருக்கவேண்டும். ஆனால் ஹரிஜனே உனக்கு எழுதும் ஒரு பொதுக் கடிதமாக அமைகின்றது என்பதில் ஓரளவு திருப்தி அடையலாம்.

லண்டனுக்கு என் வருகையை நீ வரவேற்றிருப்பாய் என்பதை நான் நன்கு அறிவேன். ஆண்டவனின் அந்தரங்க வழிகளை நாம் அறியோம். நாம் மட்டும் அவருக்குக் கீழ்ப்படிந்து நடந்தால், நம்மை அறியாமல் நமக்கே பல காரியங்களைச் செய்துகொள்ள வைக்கின்ருர். சோர்வெனும் பள்ளத்தாக்கில் நீ சிக்காமல் இருந்தால், நான் மகிழ்ச்சி அடைவேன்; ஒரு நிமிடம்கூட சோர்வு கொள்வது, ஆண்டவனின் சர்வ வல்லமையில் நம்பிக்கை இழப்பதாகும்.

ஜான் ஹாய்லாண்டுக்கு ஒரு கடிதம் இத்துடன் அனுப்பியுள்ளேன்.

தங்கையின் இனிய கடிதம் கண்டு மகாதேவ் பரவசம் அடைந்துள்ளார்.

அன்பு,

பாபு

## 107

## ‘ஹரிஜனி’ல் உள்ளத்தைக் கொட்டுகின்றேன்

எரவாடா மத்திய சிறை,
2, மார்ச்சு, 1933

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. மரியாவுக்கு அதை அனுப்புகின்றேன்; எனக்கு எழுதிய போதே அவளுக்கும் எழுதியிருப்பாயென்று எண்ணுகிறேன். இருந்த போதிலும், நீ விரைவில் அவளுடன் சேரப் போகும் செய்தியை இரு முறை படித்தாலும் அவள் மகிழ்ச்சியே கொள்வாள்.

சென்ற வாரம் தங்கைக்கு ஒரு கடிதம் எழுதிவிட்டு உனக்கு ஒரு வரி மட்டுமே எழுதினேன். தனக்கெனத் தனியாக ஒரு கடிதம் அவள் பெயரைத் தாங்கிய மேலுறையில் வந்தது, அவளுக்கு மிகப் பெருமையாக இருந்திருக்கும். அக் கடிதத்தைப் பெற்றபோது ஓராயிரம் முத்தங்கள் எனக்கு அனுப்பியிருப்பாளென்று எதிர் பார்க்கிறேன்.

ஹரிஜனில் என் உள்ளத்தைக் கொட்டுகிறேன். பெருகிவரும் என் குடும்பத்தின் உறுப்பினருக்கு அதில் காணப்படுவதற்கு மேல் தனியாக அதிகம் எழுதத் தேவையில்லை என்றெண்ணுகிறேன்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

## 108

## சிலுவையை ஆன்மிகக் கண்ணோடு காண வேண்டும்

எரவாடா மத்திய சிறை,
24, மார்ச்சு 1933

என் அன்புக் குழந்தை,

சில நாட்கள் தாமதத்துக்குப் பின் உன் நீண்ட கடிதம் கிடைத்தது. நீ பேசிய கூட்டத்தை நீ சித்திரித்துள்ளது சுவையானது. உன் பேச்சில் உண்மை ஆர்வமும் சொல் வன்மையும் இருக்கையில், உன் பேச்சு பலனளிக்காமல் போகும் என்று அஞ்சுவதற்கு இடமில்லை.

சாதாரணக் கூட்டங்களில் சிலுவைக்குக் குறுகிய பொருள் கொடுத்துப் பேசுகிறார்கள். அதற்குப் பதிலாக அனைத்தையும் தழுவும் விரிவான பொருள் கொடுத்துவிட்டால், அனைவரையும் கவர்ந்து ஆட்கொள்ளும் என்பதில் ஐயமில்லை. ஆனால் அதற்கு நீ சொல்வது போல், ஆன்மிகக் கண்களுடன் அதை நோக்கி அறிய வேண்டும்.

ஹைதராபாத்திலிருந்து வந்த முஸ்லிம் பெண்ணைத் தாய் போல் நீ கவனித்து வருவது பற்றி எனக்கு மிகுந்த மகிழ்ச்சி. அவளை நீ இன்னும் நன்கு அறிந்தபின், அவளைப் பற்றி எனக்கு மேலும் விவரங்கள் கூற வேண்டும்.

[இங்கிலாந்தில்] அங்கு மக்கள் தங்கள் தலையில் சுமையைத் தாங்கிச் செல்லும் வழக்கம் உண்டு என்பது எனக்குத் தெரியாது. இங்கிலாந்தில் நீ வசிக்கும் பகுதியில் அது பொதுவான வழக்கமா? எவ்வளவு கனமான சுமையைத் தூக்குகிறார்கள்? அதை வைக்கும் பெட்டி அல்லது கட்டு எதனால் செய்யப்பட்டது? எவ்வளவு தூரம் தூக்கிச் செல்வார்கள்? அவர்கள் தூக்கிச் செல்வது சாதாரணமாக வீட்டுக் குப்பையா?

ஹான்ஸ்,[1] வழிபாட்டின் பயனாக, தன் ஐயத்தைத் தீர்த்து வழியைக் கண்டுள்ளானா?

மரியாவிடமிருந்து சில நாட்களுக்கு முன் கடிதம் வந்தது. இத்தனை நாட்களுக்குப் பின் நீ வருவது அவளுக்கு மிகுந்த மகிழ்ச்சி அளித்துள்ளதைக் கண்டேன். அவள் உள்ளத்திலும் உடலிலும் களைப்புற்றுப் பலவீனமாக இருக்கின்றாள். உடல் நலன் முறியுந்தறுவாயில் அவள் உள்ளாள். அவள் உடல் நலன் சீராக

---

[1]செல்வி ஒக்கில் மேனன் தம்பதிகளுடன் வசித்து வந்த ஒரு ஜெர்மானியச் சிறுவன்.

இருக்கும் போதே, அவள் காஷ்மீருக்கு ஓடிப் போய், ஒரு சில மாதங்களுக்கு உள்ளத்திற்கும் உடலுக்கும் ஓய்வு பெற வேண்டும் என்று எனக்குக் கவலையாக இருக்கின்றது. அவளுக்கு அந்த ஓய்வு மிக இன்றியமையாதது.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

# 109

## ஆண்டவனின் வளமான பரிசு

*எரவாடா மத்திய சிறை,*
*7—5—1933*

என் அன்புக் குழந்தை,

நீ அனுபவித்து வரும் வேதனையை நான் அறிவேன். நான் மேற்கொள்ளவிருக்கும் உண்ணா நோன்பு, ஆண்டவன் எனக்கு அருளியுள்ள மிகச் சிறந்த அன்பளிப்பு என்று நான் கருதுகிறேன். இதற்கு மேல் நான் எழுதக்கூடாது. முடிவு எதுவாயினும் அது இனிதே என்பதை நீ உணரவேண்டும்.

உங்கள் இருவருக்கும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

# 110

## வேதனையில் இன்பம் காண்

என் அன்புக் குழந்தை,

உன் உருக்கமான கடிதம் கிடைத்தது. உள்ளத்திலும் உடலிலும் நீ வருந்துவதில் இன்பம் காண வேண்டும். உன் அகக் குரலை எது நிறைவு செய்கிறதோ, அதையே நீ செய்ய வேண்டும். முடிவு இனிதாக அமையும். ஆனால் நாம் அனைவரும் ஆண்டவன் ஆதீனத்தில் உள்ளோம். அவன் ஆக்கினையின்றி சிறு துரும்பும் அசைவதில்லை. நம் அனைவருடைய இச்சைப்படியே நடந்தால், உலகம் சீர்குலைந்து சின்னாபின்னமாகும். நம் விருப்பங்கள் சில நேரங்களில் தடைப்படுவதும் நமக்கு நல்லதே. நம் விருப்பங்களை நிறைவேற்ற இறைவன் மறுக்கின்ற போதிலும் அவரை நாம் நம்புகிறோமா என்பது தான் நம் விசுவாசத்திற்குச் சோதனை. ஆகவே எல்லாம் சீர்

குலைந்துபோவது போல் உனக்குத் தோன்றுகின்றபோதும், பூர்ண அமைதியுடனும் நிறைவுடனும் இருக்க வேண்டுமென்றே விரும்புகிறேன்.

என் வழிபாடு, என் எண்ணம், என் அன்பு அனைத்தும் உன்னுடன் இருக்கின்றன. மற்றவைக்கு ஹரிஜன் வார இதழையே உனக்கு மட்டுமல்ல, இன்னும் பல நண்பர்களுக்கும் தோழர்களுக்கும் நான் எழுதும் கடிதமாக நீ கொள்ள வேண்டும்.

பாபு

*15-12-'33*

## 111

### தேனும் பழமும்

என் அன்புக் குழந்தை,

தங்கையின் சுரம் முற்றிலும் குணமாகிவிட்டதென்று நம்புகிறேன். பாண்டிச்சேரியில் உனக்குத் தேன் கிடைக்காது. தேனும் பழங்களும் கொண்ட ஒரு கூடை நேற்று உனக்கு அனுப்பப்பட்டது. மிஸ் லெஸ்டர் என்னுடன் இப்பொழுது இருக்கின்றார். அகாதா ஹாரிஸன் மார்ச்சு 2ந் தேதி இங்கிருந்து செல்கின்றார்.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

*20-2-'34*

## 112

### மரியாவின் மனக்குறை

என் அன்புக் குழந்தை,

இரண்டு கூடைகளை உனக்கு அனுப்பினேம். முதல் கூடையில் தேனும், வழியில் எனக்குக் கிடைத்த தமிழ்-இந்திப் புத்தகங்களும் இருந்தன. புத்தகங்கள் அங்கு பயன்படலாம்.

தங்கை முற்றும் குணமடைந்து விட்டாளென நம்புகிறேன்.

மரியாவுக்கு உன் மீது ஒரு குறை உள்ளது. அதைப் பற்றி உன்னிடம் மனம் விட்டுப் பேசும்படி அவளிடம் சொல்லியுள்ளேன்.

குழந்தைகளுக்கு முத்தங்கள். உங்கள் அனைவருக்கும் அன்பு.

பாபு

*22-3-'34*

# 113

## என்மீது குறையை எடுத்துச் சொல்ல வேண்டும்

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. பழங்கள் உனக்குப் பத்திரமாகக் கிடைத்தது குறித்து மகிழ்ச்சி. இன்னுமொரு கூடை உனக்கு அனுப்பப்பட்டுள்ளது. இன்னும் வேண்டுமானால், கேட்கத் தயங்காதே.

நீ வாக்குறுதியை மீறினாயென்ற புகாருடன் M...என் பெயரையும் இழுத்தது கண்டு நான் வியப்படையவில்லை. என் மனச்சான்று தெளிவாக உள்ளது. குழந்தைகளுக்குத் துரோகம் செய்வதாயிருந்தால், நீ என்னுடன் இருப்பதை நான் அனுமதித்திருக்க மாட்டேன். ஆனால் M...இன் கடிதத்திலிருந்து அவளுக்கு என் மேல் உள்ள குறை இன்னும் ஆழமானது, விரிவானது என்பதைக் காண்கிறேன். இப் பிரச்னை முழுவதையும் அவள் உன்னுடன் விவாதித்தால் நன்றாக இருக்கும். அவள் அவ்வாறு செய்யாவிடினும் அதைப் பற்றி நீ கவலைப்பட வேண்டியதில்லை. அவளுக்கு நான் விரிவாகக் கடிதம் எழுதியுள்ளேன்; மனத்தில் இருப்பதை ஒளிவு மறைவின்றிக் கூற அவளை அழைத்துள்ளேன்.

தக்ஷிண ஹைதராபாத்திலிருந்து நான் மார்ச்சு 9ந் தேதி புனாவிற்குப் புறப்படுகின்றேன்.

அன்பு,

பாபு

# 114

## தன்னடக்கத்தில் இன்பம் காண வேண்டும்

என் அன்புக் குழந்தை,

உன் இரு கடிதங்களும் கிடைத்தன. விடி காலை 12-15 மணிக்கு இதை மோதிஹாரியில் எழுதுகிறேன். காலை மூன்று மணி என்று எண்ணி எழுந்த போது, நடுநிசி 12 மணி என்று கண்டேன். அத்தனை கடிதங்களுக்குப் பதில் எழுத வேண்டியிருக்கும்போது உறங்க விரும்பவில்லை.

குழந்தைகள் நலமாக இருக்கின்றனர் என்றெண்ணுகிறேன். ஆம்; கோடையில் நீ அவர்களை மலைக்கு அழைத்துச் செல்ல வேண்டும்.

வாக்குறுதி பற்றி நீ சொல்வது எனக்கு விளங்குகிறது. அதை மீறுவதா, இல்லையா என்பது பற்றி நீ மட்டுமே தீர்ப்புக் கூறமுடியும். நான் அங்கு செல்லாதது குறித்து M...கோபமடைந்ததற்காக வருந்துகிறேன். தான் விரும்புவதைத் தானே முன்வந்து விட்டுக் கொடுக்கும் தற்கட்டுப்பாட்டை, தான் கற்றுக்கொண்டதாக அவள் என்னிடம் கூறியிருந்தாள். அது அவளுக்கு இருந்தது போலவே எனக்கும்தான் இழப்பு ஆக இருந்தது. ஆனால் தற்கட்டுப்பாடு உண்மையாக இருக்கவேண்டுமானால் அது இன்பம் தரவேண்டுமே ஒழிய வருத்தம் தரக்கூடாது; எப்படியும் எப்பொழுதும் கோபம் மூட்டக் கூடாது.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

# 115

## ஓரடி எடுத்துவைத்தால் போதும்

*31, மார்ச்சு, 1934*

என் அன்புக் குழந்தை,

பல நாட்கள் என்னைக் காக்க வைத்தபின் நீ எழுதிய நீண்ட கடிதம் கிடைத்தது. ஆண்டவனின் அந்தரங்க நோக்கத்தை, வாய்மையை நாடும் ஆர்வம் போதிய அளவு உன் கடிதத்தில் காணப்படவில்லை. இரகசியங்களில் பெரிய இரகசியமாக இறைவன் உள்ளான் என்பதை அறிந்த பின், அவன் செய்யும் எதுவும் ஏன் நம்மைத் திகைக்க வைக்கவேண்டும்? நாம் விரும்புவதுபோல் அவன் நடந்தால் அல்லது நம்மைப்போல் நடந்தால் நாம் அவனுடைய படைப்புகளாகவோ, அவன் நம்மைப் படைத்தவனாகவோ, இருக்க முடியாது. நம்மைச் சூழ்ந்துள்ள, போக்க முடியாத இருள், ஒருசாபம் அல்ல; உண்மையில் வரப்பிரசாதமே ஆகும். நாம் பாதையில் எடுத்துவைக்க வேண்டிய அடியை அவன் நமக்குப் புலப்படுத்துகின்றான். அந்தப் படியைத் தெய்விக ஒளி நமக்குப் புலப்படுத்தினால், அதுவே போதும். "ஓரடி எடுத்துவைப்பதே எனக்குப் போதும்" என்று நியூமேனுடன் சேர்ந்து நாம் அப்பொழுது பாடலாம். அடுத்தபடி நமக்குத் தானாகப் புலனாகும் என்பதை நம் கடந்த கால அனுபவத்திலிருந்து உறுதியாக நம்பலாம். நாம் புகமுடியாத இருள், நாம் நினைப்பதுபோல் உண்மையில் அவ்வளவு கடுமையான கும்மிருட்டு அல்ல. முதல் அடிக்கு அப்பாலும் உடனடியாக நமக்குத் தெரிய வேண்டுமென்று பொறுமையின்றி நாம் அவசரப்படும்போதுதான், நீங்காத இருள் போலத் தோன்றுகிறது. ஆண்டவன் அன்பு உருவானவன் என்பதால், அவன் அவ்வப்போது நமக்கு அனுப்பும்

உடலை ஒட்டிய துன்பங்களும், சாபம்போல் தோன்றுகின்ற போதும், உண்மையில் நம் நன்மைக்கே என்று நாம் உறுதியாக நம்பலாம். நம் அகத்தே நோக்கிச் சோதித்துத் தூய்மை காண்ப தற்கான எச்சரிக்கை அவை என்று கருதுவோர், அவை நன் மைக்கே என்பதை உணர்வார்கள்.

குழந்தைகள்பற்றி நீ சொல்வது எனக்கு விளங்குகிறது. நீ குழந்தைகளுடன் கொடைக்கானலில் தங்கியிருப்பது குறித்து நான் மகிழ்ச்சி அடைகின்றேன். அகாதா ஹாரிஸன் என்னுடன் இருக் கின்றாள். இந்திய வாழ்க்கைக்குப் பழக்கப்படாத அவளுக்கு இது ஒரு சோதனைதான். ஆனல் மிகக் குறுகிய காலத்திற்குள் இயன்ற தனைத்தையும் கற்றுக்கொள்ள அவள் விரும்புவதால், இதைத் துணிவுடன் தாங்கிச் சமாளித்துக் கொள்கிறாள். முரியல் லெஸ் டரை பாட்னாவில் விட்டு வந்தேன். அவளுக்கு உடல் நலமாக இல்லை. 4ந் தேதி பாட்னாவுக்குத் திரும்பி, 7ந் தேதி அஸ்ஸாமிற்குப் புறப்படுகின்றேன். 25ந் தேதி வாக்கில் பீகாருக்குத் திரும்பி, ஒரு வாரம் தங்கிவிட்டுப் பிறகு ஒரிஸ்ஸாவிற்குச் சென்று, மீண்டும் பீகாருக்கு வருவேன். வார்தா முகவரிக்கே நீ எழுது.

உனக்கு அன்பு. குழந்தைகளுக்கு என் முத்தங்கள். அவர் களுக்கு இன்று நான் எழுத இயலாது.

பாபு

# 116

## பிறந்த நாள் வாழ்த்துக்கள்

என் அன்புக் குழந்தை,

நான் பல நாட்கள் காலை 2 மணிக்கே எழுகின்ற போதிலும், என் கடித வேலையை முடிக்க இயலவில்லை. உன் பிறந்த நாளன்று என் அன்பைத் தெரிவிக்க ஓர் அஞ்சலட்டை அனுப்பவே அவ காசம் இருக்கின்றது. குழந்தைகளுக்குப் பெட்டி இராட்டினத்தை நான் அனுப்பவேண்டும் என்பதை அறிவேன். அவர்களுக்கு என் அன்பும் முத்தங்களும். மீராவுக்குப் போக வேண்டுமென்று திடீரென எண்ணம் தோன்றினதால், அவள் புறப்பட்டுப்போனாள்.

அன்பு,

பாபு

*30-4-'34.*

# 117

## இறைவனின் ஆசிகள் எண்ணிலடங்கா

வார்தா,
6, செப்டம்பர், 1934

என் அன்புக் குழந்தை,

என் கையால் உனக்குப் பதில் எழுத வேண்டுமென்ற ஆசையில் இத்தனை நாள் உன் கடிதத்தை நிறுத்திவைத்தேன். ஆனால் அந்த ஆசையை விட்டுக் கொடுத்து இக்கடிதத்தைச் சொல்லி எழுத வைக்கின்றேன். இல்லாவிடில் இன்னும் பதில் எழுதாமல் குவிந்துள்ள கடிதங்களைத் தீர்க்க முடியாது.

ஆண்டவனின் பெருமைக்கும் அருளுக்கும் சான்றுகள் தேவையென்றால், ஒவ்வொரு நாளும் அவர் எனக்கு அவற்றை மெய்ப்பித்துக் கொண்டிருக்கிறார். "உனக்குக் கிட்டிய பல வரங்களை எண்ணிப்பார்" என்ற துதிப்பாடல் உனக்கு நினைவிருக்கும். மூடி, சாங்கி ஆகியோர் தொகுத்த துதிப்பாடல் புத்தகத்தில் அது இருக்கிறதென்று நினைக்கின்றேன். எனக்குக் கிடைத்துள்ள வரங்கள் கணக்கில் அடங்காதவை. அவர் அளிக்கின்ற துன்பங்களும் சோதனைகளும் என்று சொல்லப்படுபவைகூட, ஆசீர்வாதங்களாகவே மாறுகின்றன. அவர் அன்பை நாம் அறிந்தால், தம் படைப்புகளுக்கு அவர் ஒருபோதும் சாபங்கள் தராமல் ஆசிகளை அளிக்கின்றார் என்பதை நாம் உணர்வோம்.

தங்கை முற்றிலும் சுகமாக இருக்கிறாளென்றும் இரு குழந்தைகளும் தழைத்து ஓங்குகின்றனர் என்றும் நம்புகிறேன். இராட்டினம் இதற்குள் வந்து சேர்ந்திருக்கும்.

நான் மிகவும் சுகமாகவும் செழிப்பாகவும் உள்ளேன். 94 பவுண்டிலிருந்து 101க்கு என் எடை உயர்ந்துள்ளது. கணிசமான அளவு வேலை செய்கிறேன்; ஒழுங்காக உடற்பயிற்சி செய்கிறேன்.

மீரா லண்டனில் நல்ல தொண்டாற்றி வருகிறாள். அக்டோபரில் திரும்ப முடியுமென்று எதிர்பார்க்கின்றாள். ஆண்ட்ரூஸ் இங்கு வந்து ஒரு வாரத்துக்குமேல் தங்கி, இப்பொழுது சிம்லாவுக்குச் சென்றுள்ளார். அநேகமாக அக்டோபர் 6ந் தேதி லண்டனுக்குக் கப்பலில் திரும்புமுன் மீண்டும் ஒருமுறை அவர் வார்தாவுக்கு வருவார். அவர் நலமாகவே காணப்பட்டார். தென்னாப்பிரிக்காவிலிருந்து வேல்ஸ் நாட்டைச் சேர்ந்த ஒரு கருமானை அவர் அழைத்து வந்துள்ளார். அவர் பெயர் ஜோன்ஸ். அண்மையில் ஆக்ஸ்போர்டு இயக்கத்தைச் சேர்ந்துள்ள அவர், தாம் புதிய மனிதராகிவிட்டதாகக் கருதுகிறார். எங்கள் அனைவருக்கும் அவரைப் பெரிதும் பிடித்திருந்

தது. ஆண்ட்ரூஸ் இங்கிலாந்துக்குச் செல்லும்போது, அவர் தென் னாப்பிரிக்காவுக்குத் திரும்புவார்.

P, M, இருவரும் இங்கு உள்ளனர். ராம்தாசுடன் பா சபர் மதிக்குச் சென்றுள்ளாள். அங்கு ராம்தாஸ், தன் நோய்க்குச் சிகிச்சை பெற்று, ஓய்வு எடுத்துக்கொள்வான். D. இங்கு வந்து சில நாட்கள் தங்கியிருந்தார். நேற்று அவர் பம்பாய்க்குச் சென்றார். 8ம் தேதி நடக்கவிருக்கும் காரியக் கமிட்டிக் கூட்டத்திற்கு அவர் திரும்பக்கூடும். குடும்பச் செய்திகள் அனைத்தையும் விவரமாகக் கூறிவிட்டேன் என்றெண்ணுகிறேன். நீ இதுவரை எழுதியுள் ளதை விட ஒழுங்காக இனிக் கடிதம் எழுதவேண்டும். நான் சிறிது காலத்திற்கு வார்தாவைவிட்டு வேறெங்கும் செல்லமாட் டேன் என்று எதிர்பார்க்கின்றேன்.

உங்கள் அனைவருக்கும் அன்பு,

பாபு

# 118

## குடும்பச் செய்திகள்

வார்தா,
23, செப்டம்பர், 1932

என் அன்புக் குழந்தை,

உன் கடிதமும், இப்பொழுது குழந்தைகளிடமிருந்து கடிதங் களும் கிடைத்தன. அவர்களுக்கு அந்த இடம் பிடித்திருப்பது குறித்து மகிழ்ச்சி. உன் பங்களாவின் பெயரை நீ மாற்ற முடியாது. ‘தரிசன பங்களா’ என்பது நல்ல, பொருள் செறிந்த பெயர்.

ஆண்ட்ரூஸ் ஒரு வாரத்துக்கு முன் இங்கு வந்திருந்தார். வியாழக்கிழமை சாந்திநிகேதனத்திலிருந்து திரும்புவார். காங் கிரஸ் மாநாடு கூடும் நேரத்தில் பம்பாய்க்கு வர மீரா திட்ட மிட்டுள்ளாள்.

ராம்தாசுக்குச் சுரமும் பொதுவான பலவீனமும் ஏற்பட்டிருந் தன. இப்பொழுது அவன் தேறியுள்ளான்.

இராட்டினம் உனக்கு அனுப்பப்பட்டதாக அறிகின்றேன். இதற்குள் உனக்குக் கிடைத்திருக்குமென்று நம்புகிறேன். அதில் நூற்கக் கற்றுக் கொண்டீர்களா என்றறிய விரும்புகிறேன்

இந்த நேரத்தில் நீ இங்கிருந்தால், எவ்வளவு நன்றாக இருக் கும்? இயனிலை வெகு சிறப்பாக உள்ளது; குளிர் அதிகம்; சூரிய வெளிச்சம் அதிகமாக இல்லாமல், போதிய அளவு உள்ளது.

உங்கள் அனைவருக்கும் அன்பு. குழந்தைகளுக்கு முத்தங்கள்.

பாபு

## 119

## நண்பர்கள் பற்றிச் செய்திகள்

வார்தா,
*14*, நவம்பர், *1934*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. குழந்தை நான் நல்ல குணமடைந்துள்ளதையும், டென்மார்க்குக்குத் திரும்பிச் செல்ல விரும்பவில்லை என்பதையும் அறிந்து மகிழ்ச்சி. ஒரு குழந்தைக்குத் தாயின் மடியை விடச் சிறந்த இடம் வேறு எதுவும் கிடையாது. ஆனால் அது இலட்சிய நிலை. அதை அடைய நாம் தவறக்கூடும் என்ற போதிலும், நாம் அனைவரும் முயலவேண்டும்.

மரியா பற்றிய செய்தியைக் கேட்க வருத்தமாயிருக்கிறது. உன்னைத் தவிர வேறு யார், பள்ளியில் அவள் இடத்தை ஏற்றுக் கொள்ள முடியும்? தற்போது நீ அப்பொறுப்பை ஏற்றுக்கொள்வதென்ற பேச்சுக்கு இடமில்லை. அவள் டென்மார்க்குக்குச் சென்று, அவளுக்கு மிக அவசியமாகத் தேவைப்படும் மாறுதலைப் பெற ஏதாவது ஒரு வழி கண்டுபிடிக்க வேண்டுமென்று விரும்புகிறேன்.

ஆலய நுழைவு மசோதா பற்றி உன்னிடமிருந்து கடிதம் எதுவும் வந்ததாக எனக்கு நினைவில்லை. நான் வார்தாவுக்குத் திரும்பிய பின் அது அனுப்பப்பட்டதா? அதில் நீ எடுத்துச் சொன்ன வாதத்தை மீண்டும் சொல்ல முடியுமானால், நான் பதில் எழுத முயல்வேன்.

ஜாக் ஹாய்லண்டு மகனின் மரணம் பற்றிய செய்தியை நானும் கேள்விப் பட்டேன். அப்பொழுது ஆண்ட்ரூஸ் இங்கு இருந்தார். நாங்கள் இருவரும் சேர்ந்து, ஓர் அனுதாபத் தந்தி அனுப்பினோம். மரணம் பற்றிய முழு விவரங்களை ஹாய்லண்டு மூலம் அறிந்தேன். அது மிகவும் துன்பமானது.

லண்டனில் கல்வி பயின்று கொண்டிருந்த கான் சாகிப் மகளை அழைத்துக் கொண்டு மீரா 22ந் தேதி திரும்புகிறாள். கிராமத்தில் தம் வீட்டிலிருந்து மேரி பார் இங்கு வந்துள்ளாள். இங்கிலாந்திலிருந்து இப்பொழுதுதான் வந்துள்ள ஒரு நண்பரை அழைத்துக் கொண்டு அவள் வந்துள்ளாள். ஆசிரம வாழ்க்கை முறையை ஆர்வத்துடன் மேரி ஏற்றுள்ளாள். இப்பொழுது இயனிலை வெகு சிறப்பாக உள்ளது. நான்கைந்து நாட்களுக்குமுன் பாவுடன் ராம்தாஸ் திரும்பினான். அவன் மிகவும் பலவீனமாக இருக்கின்றான்; ஆனால் இங்கு உடலைத் தேற்றிக் கொள்வான் என்று நினைக்

கின்றேன். ஆண்ட்ரூஸ் டிசம்பரில் இங்கு வந்து இருவாரங்கள் தங்கக்கூடும்.

உங்கள் அனைவருக்கும் அன்பு.

பாபு

## 120

## ஹரிஜன ஆலய நுழைவு

என் அன்புக் குழந்தை,

விருப்பங்களை வலுவாக்கித் தெரிவிக்கும் ஆற்றல் இக்கடிதத்துக்கு இருந்தால், உன் விருப்பங்களை நானும் எதிரொலிக்கின்றேன் என்று கூறவே இதை எழுதுகிறேன். இங்கு கடுமையான குளிர். நான்கு மணி வழிபாட்டுக்கு மணி அடித்துள்ளது.

ஹரிஜனங்களின் ஆன்ம நிறைவுக்கு ஆலய நுழைவைவிட இன்னும் எவ்வளவோ தேவை என்பது உண்மைதான். ஆலய நுழைவு அவர்களுடைய ஆன்மத் தேவை என்பதைக் காட்டிலும் அந்த உரிமையை அளிப்பது, செறுக்கு மிச்க சாதி இந்துக்களின் ஆன்ம நிறைவுக்கு அவசியமாகும். தங்களுக்குக் கோரும் அதே வழிபாட்டு உரிமையைத் தங்கள் சோதரருக்கும் அளிக்க மறுக்கும் வரை, அவர்கள் ஆன்மிக உயர்வு அடைய முடியாது. இது மிகத் தெளிவாக இல்லையா?

உனக்கு அன்பும் குழந்தைகளுக்கு முத்தங்களும் சேர்த்து அனுப்புகின்றேன்.

உன்,

பாபு

*20ந் தேதிவரை நிச்சயமாகவும், ஒரு வேளை 28ந் தேதி வரையிலும் டில்லியில் தங்குவேன். அதற்குப் பின் வார்தா.*

## 121

## பகவானிடம் பாரத்தைப் போடு

டில்லி,

*17, ஜனவரி, 1935*

என் அன்புக் குழந்தை,

உன் கடிதமும் குழந்தைகள் கடிதமும் கிடைத்தன. தங்கை விவேகமான பெண்; ஆகவே தனக்கு வரும் துன்பங்களை அமைதி

யாக ஏற்றுக்கொள்ள அவள் பழகியுள்ளாள். நாம் தெரிந்து செய்யும் தவறுகளின் விளைவாய் துன்பங்கள் வரும்போது, அவற்றை ஏற்றுக்கொள்வதைத் தவிர வேறு வழியில்லை என்று அமைதியாக இருப்பது கெடுதல். ஆனால் நாம் அறியாத, அறிய முடியாத காரணங்களினால் துன்பங்கள் ஏற்படும் போது, ஆண்டவனிடம் பாரத்தைப் போட்டு அமைதியாக ஏற்றுக் கொள்வது தான் சரியான வழி. அயராத முயற்சியும், ஆண்டவனிடம் அடைக்கலமும் ஒன்றாக இணைந்து செல்லவேண்டும்.

போர்ட்டோ நோவோவுக்கு நீ சென்றதையும், மரியா தன் வேலையில் மூழ்கித் தன்னையே மறந்துள்ளதையும் நீ சித்திரித்தது மிகவும் சுவையாக இருந்தன.

நான் நடப்பதற்கு என் பாதங்கள் இடம் கொடுக்கவில்லை. நடக்க முயன்றால் மீண்டும் வெடிப்பு ஏற்படுகிறது.

ஆண்ட்ரூஸுக்கு அவகாசமே கிடைக்காததால்தான் உனக்கு எழுத இயலவில்லை. அவர் கப்பலைத் தவறவிடுவாரோ என்று கடைசிவரை சந்தேகமாகவே இருந்தது.

அனைத்திந்திய நூற்பாளர் சங்கம், அனைத்திந்திய கிராமக் கைத்தொழில் சங்கம், இரண்டும் அரசியல் சார்பற்ற நிறுவனங்கள்.

நீ வார்தாவுக்கு என்றைக்காவது வரவேண்டும். டில்லிக்கும் உன் ஊருக்கும் தூரம் அதிகம். இம்மாதம் 28ந் தேதியாகிலும் இங்கிருந்து புறப்படுவோம். சில நாட்களாக குளிர் தாங்க முடியாத அளவுக்கு மிகக் கடுமையாக இருந்தது.

அன்பு,

பாபு

## 122

### மீராவின் கார் விபத்து

என் அன்புக் குழந்தை,

உன் கடிதம் கிடைத்தது. அது நீண்டதாயிருந்ததற்கு நீ ஏன் வருத்தம் தெரிவிக்க வேண்டும்? நீ தான் அடிக்கடி எனக்கு எழுதுவதில்லையே?

ஸ்ரீமதி S. இங்கு ஒரு நாளைக்கு வந்திருந்தார். அவர் நல்லவர்; நல்லெண்ணம் கொண்டவர். அவர் உன்னுடன் இருந்ததாகக் கூறினார்.

ஆம்; குழந்தைகள், தங்கள் உடல் நலனுக்காகக் கொடையில் தான் இருக்க வேண்டும். மரியா தாய்நாட்டிற்குத் திரும்ப முடி

1. தங்கைக்கு அடிக்கடி உடல் நலனில்லாமல் இருந்தது.

யாமல் போய்விட்டதே. மனப் பூர்வமாக இந்தியாவிடம் அன்பு பேணுதல் மிகக் கடினமான வேலைதான்.

N...க்கு நீ எழுதும் போது என் அன்பைத் தெரிவி.

ஆண்ட்ரூஸ் தென்னுப்பிரிக்காவில் இருக்கின்றார். ஏப்ரலில் இந்தியாவுக்குத் திரும்ப முடியுமென்று எதிர்பார்க்கின்றார்,

மீரா, ஒரு கார் விபத்தில் மயிரிழையில் உயிர் தப்பினாள். இப்பொழுது நலமாக இருக்கின்றாள்.

எங்கள் அனைவரிடமிருந்தும் அன்பு,

பாபு

வார்தா,
*25—2—'35*

# 123

## திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை

என் அன்புக் குழந்தை,

உன் அருமையான கடிதத்தை இப்பொழுது தான் படித்து முடித்தேன். அதைப் படிக்கையில் என் உள்ளம் கண்ணீர் விட்டது. 'திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை,' என்ற தமிழ்ப் பழமொழி உனக்குத் தெரியுமா? கதியற்றவர்களுக்கு கடவுளே துணை செய்வார் என்பதை அது வலியுறுத்துகிறது. அவர் கருணையிலும், எந்தப் புண்ணையும் ஆற்றும் அந்த அரு மருந்தின் ஆற்றலிலும், நீ நம்பிக்கை இழக்கக்கூடாது.

நீ இதற்கு முன்பே, பல நாட்களுக்கு முன்பே எனக்குக் கடிதம் எழுதியிருக்கவேண்டும். ஆனால் எழுதாமலே இருப்பதை விடத் தாமதித்து எழுதியதே மேல்.

நீயும் குழந்தைகளும் என் பக்கத்தில் இருப்பதை நான் பெரிதும் விரும்புவேன். ஆனால் இந்த வெப்ப நிலையையும், இங்குள்ள சூழ்நிலையையும் கூட அவர்கள் தாங்கமாட்டார்கள். தேவைப்படும் போதெல்லாம் அடிக்கடி எனக்கு எழுதத் தயங்காதே. உன் கடிதங்களைக் கவனிக்க முடியாத அளவுக்கு என் உடல்நலம் கெட்டு விடவில்லை.

இறுதிப் பிரச்னை எதுவாயினும், நீ எது பற்றியும் கவலை கொள்ளக்கூடாது. நாம் மட்டும் அவரை அனுமதித்தால், நம் கவலைச் சுமைகளை ஆண்டவனே தம் அகன்ற தோள்களில் தாங்கிக் கொள்வார் என்பதை நினைவில் கொள். அது உண்மை; நான் உனக்கு எழுதுகிறேன் என்பது எவ்வளவு உண்மையோ, அவ்வளவு உண்மையானது. அவர் வழி வேறு, நம் வழி வேறு; அவர் தோள்

கள் நம் தோள்கள் போன்றவையல்ல என்பதுதான் வேறுபாடு. ஆனல் அவர் சித்தத்தைச் செயல்படுத்துவதில், எல்லையற்ற எழிலும் இன்பமும் உண்டு.

அன்பு,

பாபு

## 124

### சேகானில் குடியேறுவேன்

என் அன்புக் குழந்தை,

உன் நீண்ட கடிதம் கிடைத்தது. அதை ஆழ்ந்த அக்கறையுடன் படித்தேன். உன்னை எதிர்நோக்கியிருப்பது சிக்கலான பிரச்சனையே. இயன்ருல், என்னைப் பார்க்க நந்தி மலைக்கு நீ வர வேண்டும். ஆண்டவன் அருளினல், மே 10ந் தேதி அங்கு போய்ச் சேருவேன். இறைவன் உனக்கு வழிகாட்டுவார். நீ கவலைப்படக் கூடாது. உன்ஞல் நிகழ்ச்சிகளின் போக்கை மாற்ற முடியாத போது, வருகிறபடி அவற்றை நீ ஏற்றுக்கொள்ள வேண்டும்.

சேகான் கிராமத்திலிருந்து இதை நான் எழுதுகிறேன். இங்குதான் நான் குடியேற விரும்புகிறேன். மீராபாய் ஏற்கெனவே இங்கு வந்துள்ளாள். நான் இங்கு குடியேறினல், அவள் வேறு கிராமத்திற்குச் செல்வாள். முடியுமானல், என் பழைய சக ஊழியர்களில் எவரையும் என்னுடன் வைத்துக் கொள்ளாமல் இருக்க விரும்புகிறேன்.

அன்பு,

பாபு

## 125

### எது சிறந்தது? இறைவனே அறிவான்

என் அன்புக் குழந்தை,

நீ குறும்புக்காரி. உன் கடிதத்தில் எல்லா ஓரங்களிலும் எழுதுகிருய். ஓரத்தில் எழுதியுள்ளது எங்கிருந்து தொடங்குகிறது என்பதற்கு ஒருவித அறிகுறியும் இல்லாமல், நீ எழுதுகிருய். இன்னும் ஒரு பக்கத்தைச் சேர்த்துக் கொண்டு எழுதுவது தானே? ஆனல் இதற்கு மேல் முணுமுணுக்க விரும்பவில்லை. S, K, ஆகியோரை நீ பார்க்க விரும்புவாயென்று எண்ணினேன்; ஆகவே தான் அவர்களை அனுப்பினேன்.

என்ன ஆச்சரியம்! இவ்வாரம் மரியாவிடமிருந்து எனக்கு ஒரு கடிதம் வந்தது. உன்னைப் பற்றி அவள் அதிகம் கவலைப்படுகிறாள்.

எது செய்ய வேண்டுமென்று கருதுகிறாரோ அதைச் செய்ய முடியாத நிலையில், நிதி வசதி இல்லாத காரணத்தால் இருப்பது, K...க்குச் சித்திரவதையாக இருக்கும். சிறந்ததென்று நாம் கருதுவதை நாம் செய்ய இறைவன் எப்பொழுதும் நம்மை அனுமதிப்பதில்லை என்ற உண்மையில் நாம் ஆறுதல் காணவேண்டும். எது சிறந்தது என்பது நமக்கு விளங்காத வேளைகளும் இருக்குமல்லவா?

எனக்கு எழுதும்படி குழந்தைகளை வற்புறுத்தாதே. அவர்களே விரும்பி முன்வரும் போது எழுதட்டும்.

அண்மையில் உனக்கு ஏற்பட்ட உடல்நலக் குறைவிலிருந்து நீ முற்றிலும் குணமடைந்து விட்டாயென்று நம்புகிறேன். நாம் முதலில் சந்தித்தபோது நீ இருந்தது போல், ஆரோக்கியமாகவும் உற்சாகமாகவும் உன்னை மீண்டும் காண்பது எனக்கு எவ்வளவு இன்பம் தரும்! உடல்நலப் பொலிவுடனும் பூரிப்புடனும் நீ அன்று விளங்கியதைக் கண்டு, உனக்கு சுகக் குறைவு ஏற்படவே செய்யாதென்று நான் எண்ணியிருந்தேன்.

அன்பு,

பாபு

வார்தா,

......'*36*

## 126

## இழப்பையும் இலாபமாகக் கருது

என் அன்புக் குழந்தை,

உன் குறிக்கோளுக்கு உண்மையாக வாழும் உறுதி முழுவதையும் இறைவன் உனக்கு அளிப்பாராக. "இன்பத்திலும் துன்பத்திலும், இழப்பை இலாபமாகவே என்றும் மதிப்பது எளிதானதல்ல." எப்படியும், உன் வாழ்க்கை வீணானதல்ல என்று நான் அறிவேன். என்னிடம் நீ வராதது சரிதான். இறைவன் எப்பொழுது ஆணையிடுகிறாரோ, அப்பொழுது நீ வருவாய்.

தங்கை மீண்டும் நலமாகி விட்டாளென்று நம்புகிறேன். குழந்தைகளுக்கு என் முத்தங்கள். அவர்கள் எனக்கு எழுதுவார்களா என்று பார். அவர்களுக்கு இத்துடன் ஒரு சிறு குறிப்பு எழுதி அனுப்பியுள்ளேன்.

அவர்களுக்கு விருப்பமில்லையானால், அவர்களை எழுதும்படி தூண்டாதே.

அன்பு,

பாபு

நந்திமலை,
*14—5—'36*

# 127

## சோதனைக் காலம்

என் அன்புக் குழந்தை,

உனக்கு இது ஒரு சோதனைக் காலம். கொடைக்கானல் போன்ற குளிரான இடத்தில் கூட ப்ளு சுரம் ஏன் உனக்கு வர வேண்டும்? ஆனால் உன்னை வாட்டி வருத்தும் சோதனைகளுக்கு மிடையே நீ அமைதியாக இருந்து, உன் குறிக்கோளுக்கு உண்மை யாக இருப்பாய் என்பதை அறிவேன். குணமடைந்தவுடன் எனக்குத் தெரிவிப்பாய். என் வழிபாடும் என் அன்பும் என்றும் உன்னுடன் இருக்கும்.

பாபு

நந்திமலை,
*18—5—'36*

# 128

வார்தா,
*26—3—'40*

## கடவுளை நம்பு

என் அன்புக் குழந்தை,

உன்னிடமிருந்து கடிதம் வந்து ஓர் யுகம் ஆனது போல் தோன்றுகிறது. ஆகவே நீ சார்லிக்கு எழுதியுள்ள கடிதத்தைக் கண்டு மிகுந்த மகிழ்ச்சி அடைந்தேன். அதை அவர் எனக்கு அனுப்பியுள்ளார். நீ எனக்கு எழுதாதது ஏன்? என் நேரத்தைப் பற்றி நீ கவலைப் படுவதை அறிவேன். ஆனால் அவ்வப்போது உன்னிடமிருந்து ஒரு வரியை எதிர்பார்க்கின்றேன்.

உன் மகள்களால் உனக்குச் சிக்கலான, சிரமமான பிரச்சனை தான். ஆனால் அதிலும் உனக்கு வழிகாட்டுவதற்கு ஆண்டவனை நீ நம்ப வேண்டும். நம்மால் திருத்த முடியாதவை பற்றி நாம் பதட்ட மடைந்து பலனில்லை.

நீ எப்படி இருக்கின்றாய்?

சார்லி மயிரிழையில் உயிர் தப்பினர். இன்னமும் படுத்த படுக்கையாய் உள்ளார்; ஆனல் இனி ஆபத்து இல்லை. நான் கல்கத்தாவில் இருந்தபோது அடிக்கடி அவரைப் பார்த்தேன். அவர் நிலையில் நிதானமாக, ஆனல் தொடர்ந்து முன்னேற்றம் ஏற்பட்டு வருகிறதென்று கல்கத்தாவிலிருந்து இப்பொழுதுதான் திரும்பியுள்ள மகாதேவ் செய்தி கொண்டு வந்துள்ளார்.

இங்குள்ள குடும்பத்தைப் பொறுத்தவரை, நான் நலமாக இருக்கின்றேன்; பா ஓயாத இருமலினல் பலவீனமாக இருக்கின்ருள். மகாதேவ் இங்கு தங்கியுள்ளார். இங்கு இப்பொழுது நிறையப் பேர் கூடியுள்ளனர். தான் தேர்ந்தெடுத்த கிராமத்தில் தங்கிப் பல இடையூறுகளுக்கும் இடையே மேரி உறுதியுடன் தொண்டாற்றி வருகிருள்.

M. அவ்வப்பொழுது எனக்கு எழுதுகிருர்.

அன்பு,

பாபு

## 129

## ஐரோப்பாவில் நடக்கும் கொடுமை

என் அன்புக் குழந்தை,

நீ இறைவனை நம்பி உற்சாகமாக இருக்கவேண்டும். ஐரோப்பாவில் நடந்துவரும் பயங்கரக் கொடுமைக்கு முன், மற்றதனைத்தும் ஒரு பொருட்டல்ல.[1]

தங்கைக்கு எதுவும் செய்ய முடியாதா?

அன்பு,

பாபு

வார்தா

1. இரண்டாம் உலகப் போருக்குப் பின் இக் கடிதம் எழுதப் பட்டது.

# எஸ்தர் ஃபேரிங் குழந்தைகளுக்கு பாபு எழுதிய கடிதங்கள்

## 1

### ஆடுகளுடன் விளையாட அவகாசமில்லை

எரவாடா சிறையிலிருந்து

என் அன்புள்ள நான்,

நீ முயன்று எனக்கு எழுதியுள்ள கடிதம் மிக நன்றாக உள்ளது. எவ்வளவு அழகான கலைமான்களை நீ அனுப்பியுள்ளாய்! எவ்வளவு கவர்ச்சிகரமான கொம்புகள்? பால் கறக்கும் போது என் முன் தினமும் ஆடுகள் கொண்டு வரப்படுகின்ற போதிலும், நான் ஆடுகளுடன் விளையாடுவதில்லை என்று கூற வருந்துகிறேன். அவை வரும்போது, நான் வேறெதோ வேலை—நடுவில் நிறுத்த முடியாத வேலை—செய்து கொண்டிருப்பதால் அவற்றுடன் நான் விளையாடுவதில்லை. ஆம், ஒரு சில பூக்கள் இங்கு பூத்துள்ளன; ஆனால் பெரிதாகச் சொல்லும் அளவுக்கு ஒன்றுமில்லை. இங்கு பூமி கற்பாங்கானது. பூப் பாத்தி தயாரிக்கும் செலவை சிறைச் சாலைகளில் ஏற்றுக்கொள்ள முடியாது.

உங்கள் இருவருக்கும் முத்தங்கள்,

பாபு

28—2—'32.

## 2

### தாய்ப் பூனையின் அன்பு

என் அன்புள்ள நான், தங்கை,

நீங்கள் எனக்கு இனியதொரு கடிதம் அனுப்பியுள்ளீர்கள். இங்கு நாங்கள் ஒரு பூனையுடனும் அதன் குட்டிகளுடனும் நண்பர்களாகி உள்ளோம். குட்டிகளிடம் தாய்ப் பூனை காட்டும் அன்பைப் பார்ப்பது, நமக்குப் பரவசமூட்டுகிறது. தானே செய்து காட்டித் தன் குட்டிகளுக்குப் பலவற்றையும் சொல்லிக் கொடுக்கிறது தாய்ப் பூனை.

ஆண்டவன் உங்களுக்கு அருள் புரிவாராக. முத்தங்களுடன்,

22—5—'32

பாபு

## 3

## குழந்தைகளால் தான் போர்களை நிறுத்தமுடியும்

எரவாடா மத்திய சிறை,
புனா

என் அன்புள்ள குட்டி நண்பர்களான நான், அன்னா, கில்லியன், லிடியா.[1]

நீங்கள் வரைந்திருந்த கேலிச் சித்திரங்களுடன் அனுப்பிய அன்புக் குறிப்புகளைக் கண்டு பெரு மகிழ்ச்சி அடைந்தேன். உங்கள் அனைவருக்கும் சேர்ந்து பொதுவாக ஒரு கடிதம் அனுப்புவது குறித்து நீங்கள் வருத்தப்பட மாட்டீர்கள் என்றெண்ணுகிறேன். நீங்கள் அனைவரும் உடலில் வேறாயினும் உள்ளத்தால் ஒன்றுதானே? போர் அனைத்தையும் நிறுத்த வேண்டுமானால், அது உங்களைப் போன்ற சிறு குழந்தைகளால் தான் முடியும். ஆகவே நீங்கள் மற்றச் சிறுவர் சிறுமியருடனும், உங்களுக்கிடையேயும் சண்டையிட்டுக் கொள்ளாமல் இருக்கவேண்டும். நீங்களே சிறு சிறு போர்களை நடத்தினீர்களானால், பெரிய போர்களை உங்களால் நிறுத்த முடியாது.

'நான்,' அன்னா ஆகியோரின் பிறந்த நாளைக் கொண்டாட நானும் உங்களுடன் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்! ஆண்டவன், அவர்களுக்கும் உங்கள் அனைவருக்கும் அருள் புரிவாராக. உங்களை முத்தமிட நீங்கள் என்னை அனுமதிப்பீர்களானால், உங்களுக்கு என் முத்தங்கள். என் அன்பை எஸ்தருக்கு 'நான்' தெரிவிக்க வேண்டும். அவள் மாட்டாளா?

*24-8-1932*

பாபு

## 4

## ஏழைக் குழந்தைகளுடன் பகிர்ந்து கொள்ளுங்கள்

எரவாடா மத்திய சிறை,
*23, பிப்ரவரி, 1933*

என் அன்புள்ள தங்கை,

நீ எனக்கு அனுப்பியுள்ள கடிதம் உன் கையால் எழுதப் பட்டதல்ல. ஆகவே நானும், என் கையால் எழுதாமல், ஒரு கடிதம் உனக்கு அனுப்பினால் நீ குறைப்பட்டுக் கொள்ளக் கூடாது. [தட்டெழுதிய கடிதம்]

---

1 வட்ட மேசை மாநாட்டின் போது செல்லி ஓக்ஸில் பாபு சந்தித்த குழந்தைகள்.

சார்லி மாமா நிறைய உப்பு சாப்பிடுகிறார் என்பதை நான் அறிவேன். ஆனால் வயதானவர்களைப் பார்த்து, அவர்கள் கெட்ட குணங்களை கற்றுக்கொள்ளக் கூடாது. உப்பு அதிகம் சாப்பிடு வது கெட்ட பழக்கம் தான். உப்பு அதிகமாகி விட்டால், அது எந்தப் பொருள்களுடன் சேர்க்கப்படுகிறதோ, அவற்றின் மணமும் ருசியும் கெட்டுவிடும்.

சிறு குழந்தைகளுக்கு, அளவுக்கு மீறி இனிப்புப் பண்டங்கள் தந்து அவர்களைக் கெடுக்கும் கெட்ட பழக்கமும் சார்லி மாமாவுக்கு உண்டு. ஆகவே, உன் நிலையில் நான் இருந்தால், மிட்டாய்களை என்னைவிட ஏழைக் குழந்தைகள் பலருக்குக் கொடுத்துவிட்டு, நண்பர்களிடமிருந்து கிடைத்த அன்பளிப்புகளை அவர்களுடனும் பகிர்ந்து கொள்வதில் மகிழ்ச்சி காண்பேன்.

எங்கள் இருவரிடமிருந்தும் அன்பும் முத்தங்களும்,

பாபு

என் அன்புக் குழந்தை,

இக் கடிதத்தை நான் சொல்லித் தட்டெழுதியும் ஆகிவிட்டது. ஆகவே தங்கைக்கு இதை அனுப்பியாக வேண்டும். அதனால் ஹரிஜன இயக்கத்திற்கு $2\frac{1}{2}$ அணா நட்டம் என்றாலும் பரவாயில்லை. அந்த நட்டத்திற்குக் குழந்தை நானும் தங்கையும் ஆயிரம் மடங்கும் அதற்கும் மேலும் ஈடு செய்வார்கள் என்று எதிர்பார்ப் போமாக.

பாபு

## மலையாளம் கற்கிறீர்களா?

## 5

அன்புள்ள நான், தங்கை,

உங்களுக்கு அன்பும் முத்தங்களும். அங்கு[1] குளிர்ச்சியாகவும் இதமாகவும் இருக்கிறதென்றும், நீங்கள் இருவரும் மகிழ்ச்சியுடன் இருக்கின்றீர்களென்றும் நம்புகிறேன். மலையாளம் கற்றுக் கொள்கிறீர்களா? எனக்கு அடிக்கடி எழுதுங்கள்.

அன்பு,

பாபு

*15—1—'34*

[1] கொடைக்கானலில்

## 6

## ஆரோக்கியக் குறிப்புகள்

என் அன்புள்ள தங்கை,

நீ நலமாக இருக்கின்ருய் என்று நம்புகிறேன். கடும் வெய்யிலில் எப்பொழுதும் சுற்ருதே. நிறையப் பழங்கள் சாப்பிட்டு, மாவுச் சத்துப் பொருட்களைத் தவிர்க்க வேண்டும்.

அன்பும் முத்தங்களும்,

பாபு

*25—2—'34*

## 7

## செய்வதைச் செம்மையாகச் செய்

என் அன்புள்ள நான்,

உன் அருமையான கடிதம் கிடைத்தது. ஒவ்வொரு நாளும் நீ நூற்கிருய் என்றறிந்து மகிழ்கின்றேன். எதைச் செய்தாலும், அதைச் செம்மையாகச் செய்து முழு மனத்துடன் அதில் ஈடுபடவேண்டும் என்ற உத்தம நியதியை நீ அறிவாய் அல்லவா?

அன்பும் முத்தங்களும்,

பாபு

*25—2—'34*

## 8

## இராட்டினத்தில் நூற்றுப் பழகு

டில்லி,
*17, ஜனவரி, 1935*

என் அன்புள்ள நான்,

நீ அருமையான கடிதம் எழுதியுள்ளாய். கையெழுத்தும் நிதானமாக உள்ளது. நீ டிசம்பர் 27ந் தேதியன்று கடிதம் எழுதினதால், எனக்குப் புத்தாண்டு வாழ்த்துக்கள் அனுப்பியது

பொருத்தமே. ஆனல் நான் பதிலுக்கு வாழ்த்து இப்பொழுது அனுப்பிப் பலனில்லை. புத்தாண்டு பிறந்து பல நாட்களாகி விட்டனவே.

புது இராட்டினத்தில் நூற்றபோது உனக்கு எப்படி இருந்தது என்று நீ எனக்குச் சொல்ல வேண்டும். தக்ளியில் நூற்க உனக்குத் தெரியுமா?

அன்பும் முத்தங்களும்,

பாபு

## 9

### மருத்துவரின் பெண்ணுக்கு நோய் வரலாமா?

டில்லி,
*17, ஜனவரி, 1935*

என் அன்புள்ள தங்கை,

நீ மிகவும் தைரியசாலி; அவ்வப்போது உனக்கு ஏற்படும் உடல்நலக் குறைவை உற்சாகமாகத் தாங்கிக் கொள்கிருய். "நீங்களே வைத்தியராக இருக்கும் போது, எனக்கு ஏன் இந்தப் புண்கள் வருகின்றன? எனக்கு உதவ நீங்கள் ஒரு வழி கண்டு பிடிக்க வேண்டும்", என்று நீ அப்பாவிடம் கூறவேண்டும். இப்பொழுது உன் உடல் நன்கு தேறியுள்ளதென்று நம்புகிறேன்.

அன்பும் முத்தங்களும்,

பாபு

## 10

### பழங்காலம் நினைவிருக்கிறதா?

அன்புக் குழந்தைகளே,

ஒரு காலத்தில் நீங்கள் எனக்கு எழுதிக்கொண்டிருந்தீர்கள் என்பது உங்களுக்கு நினைவிருக்கிறதா? இப்பொழுது வயதிலும் அறிவிலும் வளர்ந்து விட்டதால், நீங்கள் எனக்கு எழுதக்கூடாதா? தங்கையின் நோய் பற்றிய செய்தி கேட்டு மிகவும் வருந்தினேன். உன்னைப் போன்ற மென்மையான குழந்தைகளுக்குத் தொப்பி இன்றியமையாதது.

பாபுவிடமிருந்து அன்பும் முத்தங்களும்.

நந்திமலை
*14—5—'36*

நான் இப்பொழுது எங்கு இருக்கின்றேன் என்பது பற்றிய முழு விவரங்களை எஸ்தர் உங்களுக்குக் கூறுவாள்.

## 11

## ஒரு போதும் உங்களை மறவேன்

என் அன்புள்ள நான்,

உனக்குச் செய்திகள் நிறைந்த நீண்டதொரு கடிதம் எழுத எண்ணியிருந்தேன். ஆனால் அவகாசமே கிடைக்கவில்லை. உங்களுக்குக் கடிதமே எழுதவில்லை என்று எஸ்தர் இப்பொழுது எனக்கு நினைவூட்டுகிறாள். ஆகவேதான், உங்களுக்கு எழுத இயலாமல் போனாலும் உங்களை ஒருபோதும் மறக்க இயலாது என்பதைத் தெரிவிக்கவே இக் குறிப்பை அனுப்புகிறேன். நீங்கள் இருவரும் முன்பு இருந்ததைவிட மகிழ்ச்சியுடனும் மன நிறைவுடனும் இருக்கின்றீர்கள் என்று நம்புகிறேன்.

உங்கள் இருவருக்கும் அன்பும் முத்தங்களும்,

பாபு

சேகான்,
*26—6—'36*

## 12

## உடல் ஊனமாயினும் உள்ளம் உயர்ந்தது

[94, 97, 99-வது கடிதங்களில் குறிப்பிடப்பட்டுள்ள, பர்மிங்ஹாமில் இருந்த ஊனமான பெண்ணுக்குப் பாபு எழுதிய கடிதம்.]

எரவாடா மத்திய சிறை,
5, ஜனவரி, *1933*

என் அன்புள்ள மகளே,

உன் கடிதம் பெற்று மிக்க மகிழ்ச்சியுற்றேன். நீ எனக்கு எழுதியுள்ளது மிகப் பொருத்தமானதே. ஆயிரக்கணக்கான மகள்களுக்குத் தந்தையாக இருக்கும் பேறும் பேரின்பமும் பெற்றுள்ளேன் நான். நாளுக்கு நாள் பெருகிவரும் இக் குடும்பத்தில் நீ சேர்ந்துள்ளது பெரிதும் வரவேற்கத்தக்கது. மெலிந்த

மானிடப் பிறவியான என்னால் இவ்வளவு பெரிய குடும்பத்தைப் போற்றிக் காக்க இயலாதென்பதால், சர்வ வல்லமை பெற்ற, அழிவற்ற தந்தையின் பாதுகாப்பில் உங்கள் அனைவரையும் ஒப்படைக்கின்றேன். ஆகவே பெரிய குடும்பம் எனக்குப் பாரமாகத் தோன்றுவதில்லை. அதற்கு மாறாக, இவ்வளவு அரிய உடைமையைப் பெற்ற பேரின்பத்தைத் தான் அனுபவிக்கின்றேன்.

உன் உடலில் ஊனம் உள்ளதெனினும், உனக்கு உறுதியான நம்பிக்கையும் உயர்ந்த இதயமும் உள்ளன. காலம் செல்லச் செல்ல உன் நம்பிக்கை வளரட்டும். துன்பத்திற்கும் துயரத்திற்கும் இடையே, நீ என்றும் அமைதி காண்பாயாக.

ஆம். நான் உண்ணா நோன்பு மேற்கொண்டிருந்த போது, உன்னைப் போலவே பல பரிசுத்த உள்ளங்களின் வழிபாடு எனக்கு ஆதரவாயிருந்ததை நான் உணர்ந்தேன். அந்த உணர்வு தான் எனக்கு உறுதுணையாய் இருந்து, காத்தது.

அன்புடன்,

உன்,

பாபு

(மோ. க. காந்தி)

# பொருட் குறிப்பு அகர வரிசை

(எண்-பக்கத்தைக் குறிக்கும்)

### கி



### ச

## த



## ந



## ப

ம



ய



ர

ல



வ



ஜ



ஸ



ஷ

## ஹ

